# கல்வி

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம்:
ந. ராமரத்தினம்

# பதிப்புரை

காந்தி அடிகள் தமது நீண்ட நாள் சேவையில் இந்திய வாழ்க்கையின் எல்லா அம்சங்களைப் பற்றியும் சிந்தனை செய்து, நம் நாட்டு மக்கள் சிறப்புற்று வாழ வழிகள் காண்பித்திருக்கிறார். ஒரு நாட்டை உருவாக்குவது அதன் கல்வி முறையேயாகும். எனவே அதைப் பற்றி அவர் கவனம் செலுத்தியதில் ஆச்சரியம் இல்லை.

இந்திய மக்களின் மிகத் தாழ்ந்த பொருளாதார நிலைமையும் வறுமையும் தான் முதலில் காந்திஜியின் கவனத்தைக் கவர்ந்தன. எனவே அவற்றைப் போக்கவே கதர், கைத்தொழில் திட்டங்கள் வகுக்கப்பட்டன. அதற்கடுத்தபடியாக, நம் சமூகத்தில் பல்லாயிரம் ஆண்டுகளாக பல கோடி மக்களுக்குக் கொடுமை இழைத்து வரும் தீண்டாமைப் பிரச்னை அவரது சிந்தனையைக் கிளறியது. அதற்காகவே ஹரிஜன சேவா சங்கம் உண்டாக்கப்பட்டது. இவற்றுடன் தேசீய மொழி, குஷ்ட நிவாரணம், ஆதி மக்கள் முன்னேற்றம் முதலிய பல முக்கியப் பிரச்னைகளையும் தீர்க்கும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். இவற்றையும் இவை அனைத்திற்கும் அடிப்படையாக இருந்த நம் ராஜீய அடிமைத் தனத்தையும் தீர்க்கவும், சுதந்திரம் வந்த பிறகு அதை நிரந்தரமாக நாம் வைத்துக் காப்பாற்றவும் ஒரு நல்ல கல்வி முறையை வகுத்து, அதைப் பின்பற்றுவது மிகவும் அத்தியாவசியம் என்ற முடிவுக்கு அவர் வந்தார். இவ்வாழ்ந்த சிந்தனையின் பலனாகவே ஆதாரக் கல்வித் திட்டம் உருவாயிற்று.

காந்தி அடிகளின் கல்வியைப்பற்றிய கருத்துகளைத் தொகுத்து, மக்கள் அதை ஒரே தொகுப்பில் சேர்ந்தாற்போல் படிக்க உதவுவதே இத்தொகுப்பின் முக்கிய நோக்கமாகும். இலக்கியக் கல்வி, தொழிற் கல்வி, சமயக் கல்வி, ராணுவக் கல்வி, தேசீய மொழி, முதியோர் கல்வி, பெற்றோர்களின் பொறுப்பு, ஆசிரியர்கள், மாணவர்கள் நடந்து கொள்ள வேண்டிய விதம் முதலிய எல்லா அம்சங்களைப் பற்றியும் காந்தி அடிகள் சொன்னவை அல்லது எழுதியவை இதில் சேகரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது, கல்வியின் முன்னேற்றத்திலும், நம் குழந்தைகளின் முன்னேற்றத்திலும் அக்கறை இருக்கும் அனைவரும் கவனமாய்ப் படிக்க வேண்டிய நூல் ஆகும்.

இதை முதலில் ஆங்கிலத்தில் தொகுத்துக் கொடுத்த ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலய ஆசிரியர் ஸ்ரீ க. குழந்தைவேலுவுக்கு நம் நன்றி உரியது. இதுவரை வந்த மற்றத் தொகுப்புகளை வரவேற்ற தமிழ் மக்கள் இதையும் அன்புடன் ஏற்று அருள்வார்களாக.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்,
கோவை, 5—12—64

தி. சு. அவினாசிலிங்கம்

# பொருளடக்கம்

பக்கம்

பகுதி ஒன்று

## கல்வியின் நோக்கங்கள்

பகுதி இரண்டு

## இலக்கியக் கல்வி



பகுதி மூன்று

## ஒத்துழையாமையும் தற்காலக் கல்வியும்

பகுதி நான்கு

## கல்வித் துறையில் சோதனைகள்



பகுதி ஐந்து

## தேசீயக் கல்விப் பாதையில்

பகுதி ஆறு

## பிரச்னை தீர வழி



பகுதி ஏழு

## புதிய கல்வி

பக்கம்

பகுதி பத்து

## மாணவர் உலகம்

## பின்சேர்க்கைப் பகுதி

பகுதி ஒன்று

# கல்வியின் நோக்கங்கள்

## 1

## கல்வி ஒரு கருவி

கல்வி என்பதன் அர்த்தம் என்ன? எழுத்தறிவு என்பதுதான் இதன் அர்த்தம். அது ஒரு வெறும் கருவிதான். ஒரு கருவியை நல்ல விதமாகவும் உபயோகித்துக் கொள்ளலாம், துஷ்பிரயோகமும் செய்யலாம். ஒரு நோயாளியை குணப்படுத்துவதற்கு உபயோகிக்கும் அதே கருவியை, அவருடைய உயிரை வாங்குவதற்கும் உபயோகிக்க முடியும். எழுத்தறிவும் அதே மாதிரி இருக்கக் கூடும். மனிதர்கள் பலர் அதை துஷ்பிரயோகம் செய்கிறார்கள்; வெகு சிலர்தான் அதை நல்ல முறையில் பயன் படுத்திக் கொள்ளுகிறார்கள். இதை அன்றாடம் பார்க்கிறோம். இது உண்மையென்றால், கல்வியினால் நன்மையைவிட அதிகத் தீமைதான் விளைந்திருக்கிறது என்பதை ருசுப்பித்ததாக ஆகும்.

சாதாரணமாக, கல்வி என்பதற்கு எழுத்தறிவு என்பதுதான் பொருள். பிள்ளைகளுக்கு படிக்கவும், எழுதவும், கணக்குப் போடவும் கற்றுக் கொடுப்பதற்கு ஆரம்பக் கல்வி என்று பெயர். ஒரு விவசாயி நாணயமாக வேலை செய்து தன் வயிற்றுக்கு வழி தேடிக் கொள்ளுகிறான். அவனுக்கு உலகத்தைப் பற்றிய சாதாரண அறிவு உண்டு. தன்னுடைய பெற்றோர்கள், மனைவி, குழந்தைகள், மற்றும் கிராமத்திலுள்ளவர்கள் முதலியோருடன் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஒழுக்க விதிகளை அவன் புரிந்து கொண்டு அவற்றைப் பின்பற்றுகிறான். ஆனால் தன்னுடைய பெயரைக் கூட அவனுக்கு எழுதத் தெரியாது. எழுத்தறிவிப்பின் மூலம் அவனுக்கு என்ன அளிக்கப்போகிறீர்கள்? நீங்கள், அவனுடைய சந்தோஷத்தை ஒரு துளியாவது அதிகமாக்குவீர்களா? தன்னுடைய குடிசையையும், வாழ்க்கையையும் பற்றி அவன் அதிருப்தியுறச் செய்ய விரும்புகிறீர்களா? நீங்கள் அதைத்தான் செய்ய விரும்புகிறீர்கள் என்றாலும், அதற்கு அம்மாதிரி கல்வி அவனுக்குத் தேவையில்லை. மேற்கத்தி சிந்தனை என்ற வெள்ளத்தினால் அடித்துத் தள்ளப் பட்ட நாம், சாதக பாதகங்களைச் சீர்தூக்கிப் பார்க்காமல், மக்களுக்கு இது போன்ற கல்வியைத்தான் அளிக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டோம்.

இப்போது நாம் உயர்தரக் கல்வியை எடுத்துக் கொள்ளு வோம். பூகோளம், வான சாஸ்திரம், அக்ஷர கணிதம், வரிகள், கோணங்கள் பற்றிய க்ஷேத்திர கணிதம் முதலியவற்றை நான் கற்றுக் கொண்டேன். இதனால் என்ன உபயோகம்? இதனால் எனக்கோ, என்னைச் சுற்றியுள்ளவர்களுக்கோ என்ன லாபம் ஏற்பட்டுள்ளது? இந்த விஷயங்களையெல்லாம் நான் எதற்காகக் கற்றுக் கொண்டேன்? பேராசிரியர் ஹக்ஸ்லி* பின் வருமாறு கல்விக்கு விளக்கம் கொடுத்திருக்கிறார் :

"மனிதனுடைய உடல் ஓர் யந்திரம் போன்றது. ஓர் யந்திரம் என்ன வேலைகளைச் செய்ய முடியுமோ அந்த வேலைகளை சுலபமாகவும், சந்தோஷத்துடனும் செய்வதற்குத் தகுதியாகத் தனது உடலை இளமையிலிருந்தே பழக்கி வைத்திருக்க வேண்டும். அத்தகைய ஒரு மனிதன் நல்ல கல்வி பெற்றவன் என்று நான் நினைக்கிறேன். அவனுடைய காரண, காரிய அறிவு, ஓர் யந்திரத்தைப்போன்று எல்லா உறுப்புகளும் சீராகச் செயல்படுவதாயிருக்க வேண்டும்......இயற்கையின் அடிப்படை உண்மைகளைப் பற்றிய அறிவு அவனிடம் நிறைந்திருக்க வேண்டும்......அவனுடைய உணர்ச்சிகள் அவனுடைய விருப்பத்திற்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும்; மெல்லுணர்ச்சியுள்ள மனச்சாட்சியின் பணியாளாக அது செயல்பட வேண்டும்......இழிவானவைகளையெல்லாம் வெறுக்க அவன் பழகியிருக்க வேண்டும். அத்தகையவன் தான் நல்ல கல்வி பெற்றவன் என்று நான் கருதுகிறேன். மற்றவர்கள் அப்படியல்ல. ஏனெனில், அத்தகையவன் இயற்கையுடன் ஒன்றியிருக்கிறான். இயற்கையை அவன் சிறந்த விதத்தில் பயன்படுத்திக் கொள்ளுவான்; இயற்கையும் அவனைப் பயன்படுத்திக் கொள்ளும்.''

இதுதான் உண்மையான கல்வி என்றால், நான் மேலே குறிப்பிட்ட கலைகளை, என்னுடைய புலன்களைக் கட்டுப்படுத்துவதற்கு நான் உபயோகிக்க முடிந்ததே இல்லை என்பதை அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறேன். ஆகையால், ஆரம்பக் கல்வியாக இருந்தாலும் உயர்தரக் கல்வியாக இருந்தாலும், முக்கிய நோக்கத்திற்கு அது தேவையில்லை. அது நம்மை மனிதர்களாக்கவில்லை. நாம் நம்முடைய கடமையைச் செய்வதற்கு அது துணை புரியவில்லை.

வாசகர் : அப்படியானால், உங்களிடம் நான் மற்றொரு கேள்வி கேட்கவேண்டியிருக்கும். இந்த விஷயங்களை யெல்லாம் நீங்கள் எனக்கு எப்படிச் சொல்ல முடிகிறது? நீங்கள் உயர்தரக்

* பேராசிரியர் ஹக்ஸ்லி (1825–1895) புகழ்பெற்ற பிரிட்டிஷ் விஞ்ஞான மேதையாக விளங்கினார். ஆழ்ந்த ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டு அவர் எழுதிய ஜீவ வர்க்க நூல்கள் மிகப் பிரபலமானவை. அவற்றுள் 'இயற்கையில் மனிதனின் ஸ்தானம்' என்ற அவரது நூல் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது.

கல்வி பெறவில்லையென்ருல், நீங்கள் எப்படி விஷயங்களை எனக்கு இப்படி விளக்கிக் கூறியிருக்க முடியும்?

ஆசிரியர் : நன்ருகக் கேட்டீர்கள். இதற்கு நான் அளிக்கும் பதில் இதுதான் : அதாவது, நான் உயர்தரக் கல்வியோ, அல்லது சாதாரணக் கல்வியோ பெருதிருந்தால், என் வாழ்க்கை வீணுகியிருக்கும் என்று நான் துளிக்கூட நினைக்கவில்லை. நான் பிரசங்கங்கள் செய்வதால், நிச்சயமாகச் சேவை செய்கிறேன் என்றும் நான் நினைக்கவில்லை. ஆனுல், நான் சேவை செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். அந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளும் போது, நான் பெற்ற கல்வியைப் பயன்படுத்திக் கொள்ளுகிறேன். அந்தக் கல்வியை நான் உங்களைப் போன்றவர்களிடம்தான் நன்கு பயன்படுத்திக் கொள்ள முடியும். லட்சக்கணக்கான பாமர மக்கள் விஷயத்தில் அதனுல் பலன் இல்லை. எனவே, என்னுடைய வாதத்தை இது ஊர்ஜிதம் செய்கிறது. நீங்களும், நானும் அந்த போலிக் கல்வியின் நச்சுத் தன்மைக்கு உட்பட்டிருக்கிருேம். அதனுடைய தீய விளைவுகளிலிருந்து விடுதலை பெற்றுவிட்டதாக நான் உரிமை கொண்டாடிக் கொள்ளுகிறேன். என்னுடைய அனுபவத்தின் பலனை உங்களுக்கு அளிக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். அதே சமயத்தில் இக் கல்வி எவ்வளவு படுமோசமானது என்பதையும் உங்களுக்கு எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கிறேன்.

மேலும், எல்லாப் படிப்புகளையும் நான் கண்டிக்கவில்லை. அதைப் பிரமாதமாக தடபுடல் செய்யக் கூடாதென்றே நான் சொல்லுகிறேன். நாம் விரும்புவதையெல்லாம் அது நமக்கு அளித்துவிடுவதில்லை. அதற்கும் சில சந்தர்ப்பங்களில் உபயோகம் இருக்கலாம். நமது புலன்களைக் கட்டுப்படுத்தி, நமது ஒழுக்கக் கோட்பாடுகளையும் உறுதியாக அமைத்துவிட்டால், பின்னர் அதற்கும் உபயோகம் இருக்கிறது. அந்தக் கல்வி பெறவேண்டுமென்று பின்னர் நமக்குத் தோன்றினுல், அதை நாம் நன்கு உபயோகித்துக் கொள்ள முடிவதாயிருக்கலாம். ஒரு ஆபரணமாகக் கருதுவதாலும், அது நமக்கு அழகாயிருக்கக் கூடும். எனினும், இதைக் கட்டாயக் கல்வியாகச் செய்யவேண்டிய அவசியமில்லை என்பது இப்போது தெளிவாகிறது. நமது புராதனமான பள்ளி முறை போதுமானது. நன்னடத்தையை வளர்ப்பதற்குத்தான் அதில் முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதுதான் ஆரம்பக் கல்வி. இந்த அஸ்திவாரத்தின் மீது எழுப்பப்படும் கட்டிடம் நிலைத்து நிற்கும்.

—'ஹிந்த் ஸ்வராஜ்'

# 2

# நமது கல்விப் பிரச்னையின் முக்கியமான சில அம்சங்கள்

[1917-ஆம் ஆண்டில் புரோச் நகரில் நடைபெற்ற இரண்டாவது குஜராத் கல்வி மகாநாட்டில் காந்திஜி நிகழ்த்திய தலைமை உரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

இந்த மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க என்னைத் தேர்ந்து எடுத்ததன் மூலம் நீங்கள் எனக்குப் பெரிய கௌரவம் அளித்திருக்கிறீர்கள். இந்தப் பணியை நிறைவேற்றுவதற்கு அவசியமான பாண்டித்தியம் எனக்கு இருப்பதாக நான் நினைக்கவில்லை. தேச சேவையின் இதர துறைகளில் நான் செய்துவரும் வேலைகள், இன்று நீங்கள் எனக்கு அளித்துள்ள கௌரவத்திற்கு என்னைத் தகுதி பெறச் செய்ய முடியாது. அப்படித் தகுதி பெறச் செய்யவும் இல்லை என்பது எனக்குத் தெரியும். குஜராத்தி மொழியில் எனக்கு மிகுந்த பற்றுதல் உண்டு. இந்தப் பணியை ஏற்றுக்கொள்ளுவதற்கு எனக்குள்ள ஒரே தகுதி இதுதான். அதனால் தான் இந்தப் பெரும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டேன். இந்தப் பணி என்னுடையது மட்டுமல்ல; என்னைப் போலவே உங்களுக்கும் இதில் பொறுப்பு உண்டு. எனக்கு இவ்வளவு பெரிய கௌரவத்தை அளிப்பதற்குத் தூண்டுதலாக இருந்த உங்களுடைய அந்தப் பெருந்தன்மை, என்னுடைய குறைபாடுகளை மன்னித்து, இந்த வேலைகளில் எனக்கு உதவியாயிருப்பதற்குத் துணைசெய்யும் என்று நம்புகிறேன்.

சென்ற வருடத்தில் செய்த வேலைகளை மதிப்பிடுவதற்காக இந்த மகாநாடு கூட்டப்பட்டிருக்கிறது. 'விளையும் பயிர் முளையிலே' என்று சொல்லுவார்கள். இந்த மகாநாட்டின் விஷயமும் அப்படித்தான். சென்ற வருடத்தில் செய்த வேலைகளைப் பற்றிய அறிக்கையை நான் வாசித்தேன். அந்த அறிக்கை இந்த ஸ்தாபனத்திற்குப் பெருமையளிப்பதாக இருக்கிறது என்று நான் மனப்பூர்வமாகச் சொல்ல முடியும். சரியான சமயத்தில் இந்த அறிக்கையைத் தயாரித்துப் பிரசுரித்த காரியதரிசிகள் பாராட்டுக்கு உரியவர்கள். இவ்வளவு திறமைசாலிகளான காரியதரிசிகள் கிடைத்திருப்பது நமது அதிர்ஷ்டம்தான். இதுவரையில் இந்த அறிக்கையைப் படிக்காதவர்கள் யாராவது இருந்தால், அதைப் படித்துப் பார்த்து, சிந்தனை செய்ய வேண்டும் என்று சிபாரிசு செய்கிறேன்.

சென்ற வருடம் ஸ்ரீ ரணஜித்ராம் வாவாபாய் காலமானது நம் எல்லோருக்கும் பெரும் நஷ்டமாகும். அவரைப் போன்று கல்வி கேள்விகளில் சிறந்த, இளம் வயதுள்ள ஒருவரை நாம்

பறிகொடுக்க நேர்ந்தது ஆழ்ந்த வருத்தத்தைக் கொடுக்கின்றது. அவருடைய ஆன்மா சாந்தியடைய ஆண்டவன் அருள் புரிவாராக. அந்த துக்கத்தை நாம் எல்லோரும் பகிர்ந்து கொள்ளுகிறோம் என்பதை அறிந்து, அவருடைய குடும்பத்தினர் ஆறுதல் பெற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த மகாநாட்டைக் கூட்டியுள்ள ஸ்தாபனத்திற்கு மூன்று குறிக்கோள்கள் இருக்கின்றன:

(1) கல்வியைப் பற்றிய பிரச்னைகளில் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதும், அதை வெளிப்படுத்துவதும்.

(2) குஜராத்தில் உள்ள கல்விப் பிரச்னைகளைப்பற்றி தகுந்த முறைகளை மேற்கொண்டு பிரசாரம் நடத்துவது.

(3) குஜராத்தில் கல்வி வளர்ச்சிக்கான உருவான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வது.

இந்த நோக்கங்களைப் பற்றி நான் நன்கு சிந்தனை செய்து பார்த்தேன். அதன் பலனை நான் சில திட்டவட்டமான முடிவுகள் செய்திருக்கிறேன். அவற்றை இப்போது உங்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன். அவற்றை நீங்கள் ஏற்றுக்கொள்ளுவீர்கள் என்றும் நம்புகிறேன்.

போதன மொழியைப் பற்றி ஒரு கண்டிப்பான முடிவுக்கு வருவதுதான் இந்த விஷயத்தில் நாம் செய்ய வேண்டிய முதல் காரியம் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். அதைச் செய்தாலொழிய, மற்ற முயற்சிகளெல்லாம் அநேகமாகப் பயனற்றுப் போகும் என்றே நான் அஞ்சுகிறேன். போதன மொழியைப் பற்றி முதலில் யோசிக்காமல் கல்வி போதிப்பது, அஸ்திவாரம் இல்லாமல் மேல் கட்டிடத்தை எழுப்புவது போல் இருக்கும்.

இந்த விஷயத்தைப் பற்றி கல்வித் துறையில் உள்ளவர்களிடையே இருவிதமான கருத்துகள் நிலவி வருகின்றன. தாய் மொழியின் மூலம், அதாவது குஜராத்தி மொழியின் மூலம் கல்வி போதிக்கப்பட வேண்டும் என்று சிலர் கருதுகிறார்கள். ஆங்கிலத்தின் மூலமே போதிக்கப்பட வேண்டும் என்று மற்றும் சிலர் வாதிக்கிறார்கள். இரு சாராரும் தங்களுடைய கருத்து தான் சரியானது என்று உண்மையாகவே நம்புகிறார்கள். ஏனெனில், இரு தரப்பினருமே நாட்டின் நலனில் அக்கறை உள்ளவர்கள். ஆனால், நம்முடைய நோக்கத்திற்கு வெறும் நல்லெண்ணம் மட்டும் போதாது. சில சமயங்களில் நல்ல நோக்கம் நாம் விரும்பாத இடங்களுக்கும் நம்மைக் கொண்டுபோய் விடுகிறது என்பது உலகத்தின் அனுபவமாகும். ஆகையால். இந்த இரு கருத்துகளிலுமுள்ள நல்லது, கெட்டதைப் பூராவாகப் பரிசீலனை செய்து, முக்கியமானதும், மிகப் பெரியதுமான இந்தப் பிரச்னைக்குத் திருப்திகரமான தீர்வு காண முயற்சி செய்ய வேண்டும்; சாத்தியமானால், ஏகமனதாகத் தீர்வு காண வேண்டும். இது

மிகவும் முக்கியமான பிரச்னை என்பதில் சந்தேகம் இல்லை. இதைப் பற்றிய பரிசீலனைக்காக, நாம் எவ்வளவு சிந்தனையைச் செலவிட்டாலும் தகும்.

போதனு மொழி என்பது இந்தியா பூராவுக்கும் சம்பந்தமுள்ள விஷயமாகும். ஆனால், ஒவ்வொரு மாகாணமும் தானே இந்த விஷயத்தை முடிவு செய்து கொள்ளலாம். இது சம்பந்தமாக ஒரு ஏகோபித்த அபிப்பிராயம் உருவாகும் வரையில், குஜராத் தனியாகத் தனக்கென்று ஒரு முடிவு செய்து கொண்டு, முன்னேறிச் செல்ல முடியாது என்று நினைப்பது தவருகும்.

ஆயினும், இதைப் பற்றி மற்ற மாகாணங்களில் என்ன செய்திருக்கிருர்கள் என்பதைக் கவனித்து, நமது சங்கடங்களில் சிலவற்றைத் தீர்த்துக் கொள்ளலாம். வங்காளப் பிரிவினை காலத்தில், அங்கு சுதேசி இயக்கம் உச்ச நிலையில் இருந்தது. அப்போது வங்காளி மொழியின் மூலம் கல்வி போதிக்க வங்காளத்தில் முயற்சி செய்யப்பட்டது. தேசீயப் பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும் அங்கு ஆரம்பிக்கப்பட்டன. பணத்துக்கு பஞ்சமில்லை ; தேவைக்கு அதிகமாகவே பணம் வந்து கொண்டிருந்தது. ஆனல், அந்தப் பரீட்சை தோல்வியடைந்துவிட்டது. அந்தச் சோதனையை நடத்தியவர்களுக்கே அதில் நம்பிக்கை இல்லை என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். அதில் பங்கு கொண்ட ஆசிரியர்கள் விஷயமும் அப்படித்தான். வங்காளத்தில் உள்ள படித்த வகுப்பினருக்கு ஆங்கில பாஷையில் மிகுந்த மோகம் இருக்கிறது. வங்காளிகளுக்கு ஆங்கில மொழியிலும், இலக்கியத்திலும் உள்ள ஆழ்ந்த புலமைதான், சமீப காலத்தில் வங்காளி இலக்கியம் இவ்வளவு முன்னேற்றம் அடைந்ததற்கு முக்கிய காரணம் என்று கூறப்படுகிறது. ஆனல், எளிதாகச் சொல்லப்படும் இந்தக் கூற்றுக்கு உண்மை நிலவரங்கள் முரணுக இருக்கின்றன. நமது அன்புக்குப் பாத்திரமான கவி ரவீந்திரநாத் தாகூரின் வசீகரமான இலக்கிய நடையின் உயர்வுக்குக் காரணம், ஆங்கிலத்தில் அவருக்கு உள்ள ஞானம் அல்ல. தம்முடைய மொழியில் அவருக்குள்ள பற்றுதல்தான் அந்த உயர்வுக்குக் காரணம் என்று சொல்ல வேண்டும். **கீதாஞ்சலி** முதலில் வங்காளி மொழியில்தான் எழுதப்பட்டது. வங்காளத்தில் எப்போதும் அவர் தமது தாய் மொழியைத்தான் உபயோகிக்கிருர். இன்றைய இந்தியாவின் நிலைமையைப் பற்றி சமீபத்தில் அவர் கல்கத்தாவில் செய்த பிரசங்கம், வங்காளி மொழியில்தான் இருந்தது. அப்பகுதியிலுள்ள மிகப் பிரபலமான ஆண், பெண்களில் சிலர் அந்தப் பிரசங்கத்தைக் கேட்கப் போயிருந்தார்கள். தேன்மாரி பொழிந்தாற்போல் சுமார் ஒன்றரை மணி நேரம் அவர் கூட்டத்தினரின் கவனத்தைக் கவர்ந்தார் என்று அந்தப் பிரசங்கத்தைக் கேட்டவர்களில் சிலர் என்னிடம் கூறியிருக்கிருர்கள். ஆங்கில இலக்கியத்திலிருந்து தம்முடைய கருத்துக்களை அவர் கடன் வாங்கிக்கொள்ளவில்லை. இந்த நாட்டின் சூழ் நிலையிலிருந்தே அவற்றைத் தாம் பெற்றதாக அவர் கூறுகிருர். மகத்

துவம் பொருந்திய நமது இந்தியாவின் சூழ்நிலைதான் அவரை ஊக்குவித்திருக்கிறது. மற்ற வங்காளி ஆசிரியர்களின் விஷயமும் இப்படித்தான் என்று நம்புகிறேன். உபநிடதங்களும் தாகூருக்கு ஊக்கம் அளித்திருக்கின்றன.

இமய மலையைப் போல் கம்பீரமும் சாந்தமும் உள்ள மகாத்மா முன்ஷிராம் இந்தியில் பேசும் போதும் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் யாவருமே மிகுந்த கவனத்துடன் அவர் பேசுவதை அனுபவித்துக் கேட்கிறார்கள். தம்முடைய ஆங்கிலத்தை ஆங்கில நண்பர்களுக்காக மட்டுமே அவர் ஒதுக்கி வைத்திருக்கிறார். அவர் ஆங்கில வார்த்தைகளை இந்தியில் மொழிபெயர்ப்பதன் மூலம் இந்தியை உருத்தெரியாமல் திரிப்பதில்லை, கெடுப்பதும் இல்லை.

நாட்டின் சேவைக்காகவே தம்மை அர்ப்பணம் செய்து கொண்டுள்ள, உயர்ந்த மனம் படைத்த மதன் மோகன் மாளவியாஜியின் ஆங்கிலம் வெள்ளியைப் போல் ஒளி வீசுகிறது என்று சொல்லுவார்கள். மாளவியாஜி சொல்லும் ஒவ்வொன்றிலும் ஆழ்ந்த கருத்து இருக்குமாதலின், வைஸ்ராய் கூட அவர் கூறும் விஷயங்களைக் கவனமாகச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. ஆனால், அவருடைய ஆங்கிலம் பளபளப்பான வெள்ளியைப் போல் இருக்கிறதென்றால், அவருடைய இந்தி கலப்பற்ற தூய்மையான தங்கத்தைப் போல் இருக்கிறது. மானஸரோவரிலிருந்து கங்கா நதி கீழே இறங்கும்போது தங்கத்தைப் போல் ஒளி வீசுமாம். அதைப்போலவே, மாளவியாஜியின் பிரசங்கங்களும் சிறிதும் குற்றம் குறையின்றி பளபளவென்று ஒளி வீசுகின்றன.

இந்த மூன்று பெரிய பேச்சாளர்களும் தங்களுடைய நாவன்மையை, தங்கள் தங்கள் தாய்மொழியில் உள்ள பற்றுதலிலிருந்துதான் பெற்றார்கள்; ஆங்கிலத்தில் தங்களுக்குள்ள அறிவிலிருந்து பெறவில்லை. ஸ்வாமி தயானந்தர் இந்திக்கு மகத்தான தொண்டு புரிந்ததற்குக் காரணம் அவருக்கு இருந்த ஆங்கில அறிவு அல்ல; இந்தியில் அவருக்குள்ள பற்றுதலே ஆகும். மராத்தி மொழி ஒளிவீசும்படி செய்த துகாராம், ராமதாஸ் ஆகியவர்களுக்கும் ஆங்கில மொழிக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. நம்முடைய காலத்தில் பிரேமானந்த், ச்யாமள பட்டர், தளபத்ராம் ஆகியோர் குஜராத்தி இலக்கியத்தைப் பெரிதும் வளமுறச் செய்திருக்கிறார்கள். ஆங்கில அறிவுதான் அவர்களுடைய மகத்தான வெற்றிக்குக் காரணம் என்று சொல்ல முடியாது.

தாய்மொழியை வளமுறச் செய்வதற்குத் தேவையானது, தங்கள் மொழியில் உள்ள அன்பும் மதிப்பும்தானேயொழிய, ஆங்கில அறிவு அல்ல என்பதை மேலே காட்டிய உதாரணங்கள் ஐயமின்றி ருசுப்பிக்கின்றன.

பல்வேறு மொழிகளின் வளர்ச்சியையும் அபிவிருத்தியையும் பரிசீலனை செய்து பார்ப்போமாயின், இதே முடிவுக்குத்தான்

வருவோம். மொழிகள், அவற்றை உபயோகிக்கும் மக்களின் தன்மையைப் பிரதிபலிக்கின்றன. தென்னாப்பிரிக்காவிலுள்ள ஸிதீ வகுப்பினரின் தாய் மொழியைப் பரிசீலனை செய்து பார்த்தால், அவர்களுடைய நடத்தை, பழக்க வழக்கங்கள் பற்றிய தகவல்கள் கிடைக்கின்றன. ஒரு குறிப்பிட்ட மொழியைப் பேசுபவர்களின் தன்மைகள், செய்கைகளுக்கேற்ப அந்த மொழி உருப்பெறு கிறது. வீரம், நாணயம், அன்பு ஆகிய தன்மைகள் ஒரு மொழி யில் காணப்படுவதில்லையென்றால், அந்த மொழியைப் பேசும் மக்களிடம் அந்தத் தன்மைகள் இரா என்று தயக்கமின்றிக் கூற முடியும். வீரம், அல்லது அன்பைக் குறிக்கும் வார்த்தைகளைப் பிற மொழிகளிலிருந்து கொண்டுவந்து சேர்ப்பதன் மூலம் ஒரு மொழி வளம் பெற்று விடாது; அதன் கருத்துச் செறிவும் பெருகி விடாது ; அல்லது அந்த மொழி பேசுபவர்களை வீரம் செறிந்தவர் களாகவோ அன்பு நிறைந்தவர்களாகவோ செய்துவிடாது. வீரத்தை யார் மீதும் திணித்துவிட முடியாது ; அது இயற்கை யாக உள்ளிருந்தே வரவேண்டும். ஏற்கனவே இருந்த அந்தத் தன்மை துருவின் மூட்டத்தினால் மறைந்திருக்கிறதென்றால், அந்தத் துருவை நீக்கிவிட்ட உடனேயே அது ஒளி வீச ஆரம் பித்துவிடும். நம்முடைய சொந்த தாய் மொழியில் பணிந்து போகும் தன்மையைக் குறிக்கும் வார்த்தைகளை அதிகமாகக் காண் கிறோம். பல ஆண்டுகளாக நாம் அடிமைத்தனத்தில் வாழ்ந்து வந்திருப்பதுதான் அதற்குக் காரணம். அதைப் போலவே, கப்பல் அல்லது கப்பலைப்பற்றிய விஷயங்களைக் குறிப்பிடும் வார்த்தைகள் மிகவும் அதிகமாக உள்ள மொழி உலகத்தில் ஆங்கிலத்தைத் தவிர வேறு எதுவுமில்லை. துணிவும், ஊக்கமும் உள்ள ஒரு குஜராத்தி எழுத்தாளர், கப்பல்களைப் பற்றி ஆங்கி லத்தில் உள்ள நூல்களை குஜராத்தியில் மொழிபெயர்த்திருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். இதனால் அவரது மொழியின் பரப்போ அல்லது சக்தியோ துளிக்கூட அதிகமாகிவிடாது. அதனால் கப்பல்களைப் பற்றி நமக்குள்ள அறிவும் கொஞ்சம்கூட அதிகமாகிவிடாது. ஆனால், நாமே கப்பல்கள் கட்டி கடற் படையை உருவாக்க ஆரம்பித்தவுடன் அதற்குத் தேவையான தொழில் நுட்ப வார்த்தைகள் தாமாகவே தோன்றிவிடும். குஜராத்தி இலக்கணம்பற்றி காலம் சென்ற ரெவரண்ட் டெய்லர் எழுதியுள்ள நூலிலும் இதே கருத்தைத் தெரிவித்திருக்கிறார். அவர் கூறுகிறார் :

"குஜராத்தி மொழி குற்றம் குறையற்றதுதானா, இல்லையா என்று விவாதிக்கப்படுவதைப் பற்றி அடிக்கடி கேள்விப்படுகிறோம். 'மன்னன் எப்படியோ அப்படித்தான் பிரஜைகளும்' என்று ஒரு பழமொழி உண்டு. 'ஆசிரியர் எப்படியோ அப்படித்தான் மாணவனும்' என்றும் ஒரு பழமொழி உண்டு. அதுபோலவே, 'பேசுபவன் எப்படியோ அப்படித்தான் மொழியும்' என்று நாம் சொல்லலாம். குஜராத்தி மொழியில் உள்ள குறைபாடுகள் காரண மாக சியாமள பட்டர் போன்ற மற்றக் கவிஞர்கள் தங்கள் சிந்தனைகளையும், உணர்ச்சிகளையும் தெரிவிப்பதற்குக் கஷ்டப்பட்டார்கள் என்று தெரியவில்லை.

உண்மையில், புதிய வார்த்தைகளையும் பழைய வார்த்தைகளையும் அவர்கள் நன்கு தராதரம் பார்த்து உபயோகித்தார்கள். இதன் பலனாக அவர்கள் என்ன சொன்னாலும், எழுதினாலும் அது வழக்குக்கு வந்து, மக்களின் பேச்சில் சேர்ந்து விட்டது.

"சில அம்சங்களில், உலகத்தில் உள்ள எல்லா மொழிகளுமே நிறை வில்லாதவைதான். மனிதனுடைய அறிவும், வர்ணிக்கும் சக்தியும் ஒரு அளவுக்கு உட்பட்டவைதான்; அவற்றை மீறிய சில விஷயங்களும் இருக்கின்றன. 'கடவுள்', 'முடிவில்லாதது' ஆகியவற்றை உதாரணங்களாகக் கூறலாம். மொழியின் வளர்ச்சி மனிதனுடைய அறிவாற்றலையும், சக்தியையும் பொறுத்திருக்கிறது. ஆகையால், எந்த ஒரு விஷயத்தையும் பூராவாகப் புரிந்து கொள்ள முடியவில்லையென்றால், அந்தத் தோல்வி மொழியையே சார்ந்தது. அந்த அளவுக்கு மொழி நிறைவற்றதாகவே இருக்கிறது. ஒரு மொழியை உபயோகிப்பவர்களின் மனத்தில் நிலவும் எண்ணங்கள் அந்த மொழியில் இடம் பெற்றிருக்கவேண்டும். பொதுவாக, மொழியின் அடிப்படைத் தத்துவம் இதுதான்.

"ஆகையால், மொழியின் தன்மை, மக்களின் தன்மையைப் பொறுத்திருப்பது இயற்கையே ஆகும். மக்கள் விவேகம் உள்ளவர்களாக இருந்தால், அவர்களுடைய மொழியும் அவ்வண்ணமே இருக்கிறது. 'வேலை தெரியாத தொழிலாளி தன் கருவிகளின்மீது சீற்றம் கொண்டானும்' என்று ஒரு ஆங்கிலப் பழமொழி உண்டு. தங்களுடைய மொழி நிறைவு பெற்றதாக இல்லை என்று புகார் சொல்பவர்கள் இந்தத் தொழிலாளியைப் போன்றவர்களேயாவர். மேலெழுந்தவாரியாக ஆங்கிலம் கற்றுக் கொண்ட ஒரு மாணவனுக்கு, குஜராத்தி நிறைவற்ற மொழி என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆங்கிலத்திலிருந்து ஒருவருடைய தாய்மொழியில் சரியாக மொழி பெயர்ப்பது கஷ்டம் என்பதுதான் இதற்குக் காரணம். குறைபாடு, மொழியை உபயோகிப்பவர்களிடம்தான் இருக்கிறதேயன்றி மொழியில் இல்லை. புதிய வார்த்தைகள், புதிய விஷயங்கள், புதிய நடைகள் முதலியவற்றைப் புரிந்து கொள்ள முயற்சிக்கும் பழக்கம் இன்னும் நமது மக்களுக்கு ஏற்படவில்லை. ஆகையால், தம்முடைய முயற்சி வீணாகிவிடுமோ என்று எழுத்தாளர் அவற்றை உபயோகிக்கத் தயங்குகிறார். நல்லது, கெட்டது அல்லது புதியது, பழையது என்று தரம் பிரித்துப் பார்க்கவோ அல்லது தம்முடைய முயற்சிகளைப் பாராட்டி அங்கீகரிக்கவோ வாசகர்களாகிய மக்கள் தயாராக இல்லாத வரையில், எழுதவேண்டும் என்ற உற்சாகம் எழுத்தாளருக்கு நிச்சயமாக ஏற்படாது.

"ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்ப்பு செய்பவர்களில் சிலர், தாய்ப் பாலுடன் தாங்கள் குஜராத்தியைச் சேர்த்துக் குடித்துவிட்டதாகவும், நன்றாகப் படித்து ஆங்கிலத்தைக் கற்றுக் கொண்டுவிட்டதாகவும், ஆகையால் தாங்கள் இரு மொழிகளிலும் சிறந்த மேதைகள் என்றும் நினைக்கிறார்கள். குஜராத்தியைத் தாங்கள் ஆய்வு உணர்ச்சியுடன் படிக்கவேண்டிய அவசியம் இல்லை என்றும் நினைக்கிறார்கள். ஒரு அந்நிய மொழியில் சிறந்த பாண்டித்தியம் பெறுவதற்குச் செலவிடும் முயற்சியைவிட, ஒருவருடைய தாய்மொழியில் நல்ல தேர்ச்சி பெறுவதே முக்கியமாகும். சியாமள் போன்ற கவிஞர்களின் சிருஷ்டிகளைப் பாருங்கள். தங்களுடைய தாய் மொழியில் தேர்ச்சி பெறுவதற்கு அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு உழைத்திருக்கிறார்கள் என்பதைக் காணலாம்.

நமது மொழியின் நுணுக்கத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யாதவர்களுக்கு, குஜராத்தி நிறைவற்ற மொழியாகவே தோன்றும். ஆனால், அதை நன்கு புரிந்து கொண்டு உபயோகிக்கத் தேர்ச்சி பெற்றுவிட்டால், அது நிறைவுள்ளதாகிவிடும். அரைகுறை மனத்துடன் இந்த முயற்சிகள் செய்யப்பட்டால், மொழியில் ஏற்படும் தேர்ச்சி நிறைவற்றதாக இருக்கும். முயற்சிகள் செம்மையாக இருந்தால், தேர்ச்சியும் பூரணமானதாக இருக்கும்—ஏன், மொழிக்கே ஒரு அழகு கூட ஏற்படும். குஜராத்தி மொழி ஆரிய மொழிகளின் குடும்பத்தைச் சேர்ந்தது. ஸம்ஸ்கிருதத்தின் புதல்வியே குஜராத்தி மொழி ஆகும். அதை, நன்கு வளர்ச்சிபெற்ற மற்றும் பல மொழிகளின் சகோதரி என்று கூறவேண்டும்! இத்தகைய மொழியை மட்டமான மொழி என்று சொல்ல யார் துணிவர்?

"ஆண்டவன் அம்மொழிக்கு அருள் புரிவாராக. உண்மையான மதத்திற்கும், உண்மையான அறிவுக்கும் அது என்றென்றைக்கும் தகுதியுள்ள ஒரு கருவியாக இருந்துவருமாக."

ஆகவே, வங்காளத்தில் வங்காளி மொழி மூலம் கல்வி போதிப்பதற்கான இயக்கம் தோல்வியடைந்ததற்குக் காரணம், அந்த மொழி இயற்கையாகவே குறைகள் உள்ளதாக இருந்ததோ அல்லது அந்த முயற்சி வீண் என்பதோ அல்ல என்பதை நாம் காண்கிறோம். அந்தத் தோல்வி எதைக் காட்டுகிறது எனில், முயற்சி செய்தவர்களின் திறமையின்மையையே, அல்லது அந்த முயற்சியில் அவருக்குள்ள நம்பிக்கையின்மையையே காட்டுகிறது.

வடக்கே இந்தி மிகவும் முன்னேற்றம் அடைந்து வருகிறது என்பது நிச்சயம். ஆனால், அதை போதனா மொழியாக்க வேண்டும் என்பதில் ஆரிய சமாஜிகள் மட்டுமே பிடிவாதமாக முயற்சி செய்துவருகிறார்கள். இந்த முயற்சி குருகுலங்களில் தொடர்ந்து நடந்து வருகிறது.

சென்னையில், தாய்மொழியை உபயோகிப்பதற்கான இயக்கம் சில வருடங்களுக்கு முன்புதான் ஆரம்பமாகியது. இந்த விஷயத்தில் தமிழர்களைவிடத் தெலுங்கர்கள் இன்னும் அதிக விழிப்புடன் இருக்கிறார்கள். தமிழர்கள் ஆங்கிலத்தின் செல்வாக்குக்கே பெரும்பாலும் உட்பட்டிருப்பதால், தமிழைப் போதனா மொழியாக்குவதற்கான முயற்சிகளைச் செய்ய அவர்களுக்கு ஊக்கம் இல்லாமற் போய்விட்டது. தெலுங்கு பேசும் பகுதிகளில், தமிழ்ப் பகுதிகளில் இருப்பதைப் போல் ஆங்கிலம் இன்னும் அவ்வளவு பரவலாக ஊடுருவவில்லை. ஆகையால், அந்தப் பகுதிகளில் உள்ள மக்கள் தமிழர்களை விட அதிகமாகத் தாய்மொழியை உபயோகிக்கிறார்கள். தங்களுடைய தாய்மொழியிலேயே கல்வி போதிப்பதற்கான முறைகளைத் தெலுங்கு மக்கள் பரிசோதனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பது மட்டுமில்லை; மொழியின் அடிப்படையில் இந்தியாவிலுள்ள மாகாணங்களை மாற்றி அமைக்க வேண்டும் என்றும் ஒரு இயக்கம் ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த இயக்கம் சமீபத்தில்

தோன்றியது தான்; இன்னமும் அது ஆரம்ப கட்டத்திலேயே இருக்கிறது. ஆனால், அவர்களுடைய முயற்சி குறிப்பிடத்தக்கதாகும். கூடிய சீக்கிரத்தில் இது அனுபவசாத்தியமான உருப் பெறவும் கூடும். இதில் சங்கடங்கள் இருக்கின்றன. ஆனால், அந்தச் சங்கடங்களைச் சமாளித்து வெற்றி பெறக் கூடிய ஆற்றல் அவர்களுடைய தலைவர்களுக்கு இருக்கிறது என்றே எனக்குத் தோன்றுகிறது.

இந்த விஷயத்தில் மகாராஷ்டிரமும் காலத்தையொட்டிப் போய்க் கொண்டிருக்கிறது. உயர்நோக்குள்ள, பெரிய மனிதரான பேராசிரியர் கார்வேயும் ஸ்ரீ நாயக்கும் இதை ஆதரிக்கிறார்கள். தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் பல பள்ளிக்கூடங்கள், தாய்மொழியைப் போதனை மொழியாக உபயோகிக்க ஆரம்பித்திருக்கின்றன. இத்துறையில் தாம் செய்த முயற்சிகளுக்காக எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்துள்ள பேராசிரியர் விஜபுர்க்கார் மீண்டும் இதில் உற்சாகம் காட்ட ஆரம்பித்திருக்கிறார். எனவே, விரைவில் இவருடைய பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்படுவதை நாம் காண்போம். பாட புத்தகங்கள் தயாரிப்பதற்கும் அவர் ஏற்கனவே ஒரு திட்டம் வகுத்திருக்கிறார். இந்தப் புத்தகங்களில் சில ஏற்கனவே அச்சாகிவிட்டன; மற்றவை அச்சுக்குத் தயாராக இருக்கின்றன. இந்தப் பள்ளியிலுள்ள ஆசிரியர்களின் நம்பிக்கை எந்தக் காலத்திலும் தளர்ந்ததில்லை. துரதிருஷ்டவசமாக அவர்களுடைய பள்ளிக்கூடம் மூடப்பட்டு விட்டது. இல்லாவிட்டால், மிகவும் உயர்தரக் கல்விக்கும் மராத்தி போதனை மொழியாக இருக்க முடியுமா, முடியாதா என்ற சர்ச்சைக்கு இதற்குள்ளாக ஒரு முடிவு ஏற்பட்டிருக்கும்.

குஜராத்திலும் இந்த இயக்கம் ஆரம்பமாகிவிட்டது. ராவ் பகதூர் ஹரிகோவிந்ததாஸ் காந்தவாலாவின் கட்டுரைகளிலிருந்து இதைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளலாம். பேராசிரியர் கஜ்ஜார், காலஞ்சென்ற பகதூர் மணிபாய் ஜாஸ்பாய் இருவரையும் இந்த இயக்கத்தின் தலைவர்களாகக் கருதலாம். இவர்கள் எல்லாம் விதை போட்டுவிட்டார்கள்; இது முளைத்து வளருவதற்கு நாம் உதவிசெய்ய வேண்டுமா, வேண்டாமா என்பதை இப்போது நாம்தான் முடிவு செய்ய வேண்டும். இந்த விஷயத்தில் நாம் எவ்வளவுக்கெவ்வளவு தாமதம் செய்கிறோமோ, அவ்வளவுக்கு நம்முடைய நஷ்டம் அதிகமாக இருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

ஆங்கிலத்தை போதனை மொழியாகக் கொண்ட உயர்நிலைப் பள்ளிகளில் படிப்பு முடிவடைவதற்கு 12 முதல் 13 வருடங்கள் வரையில் தேவையாக இருக்கின்றன. இதே பாடங்கள் தாய்மொழியின் மூலம் சொல்லிக் கொடுக்கப்பட்டால், பத்து வருடங்கள்தான் ஆகும். நல்ல அனுபவம் உள்ள பல ஆசிரியர்களும் அவ்விதம்தான் நினைக்கிறார்கள். ஆயிரக்கணக்கான குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் படிக்கிறார்கள். இவர்கள் ஒவ்வொரு

வருடைய பள்ளிப் படிப்பு காலத்திலும் இரண்டு அல்லது மூன்று வருடங்கள் மிச்சப்படுகின்றன என்றால், காலம், பணம், முயற்சி ஆகிய யாவுமே நாட்டுக்கு மிச்சம் என்றே அர்த்தம்.

ஒரு அந்நிய மொழியின் மூலம் கல்வி போதிப்பதில் ஒரு அளவுக்குக் கஷ்டம் இருக்கிறது; நமது பிள்ளைகளும் அதனால் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. பின்னர் எந்தப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ளும் சக்தியை அவர்கள் பெரும் அளவுக்கு இழந்துவிடுகிறார்கள். ஏனெனில், உடல் நலம் அற்றவர்களாகவும், வேலை செய்வதற்கு ஆர்வமற்றவர்களாகவும், மேல் நாட்டினரையே 'காப்பி' அடிப்பவர்களாகவும் அவர்கள் பயனற்றவர்களாகிவிடுகிறார்கள். தாமே முன்னின்று ஆராய்ச்சி செய்வதிலோ அல்லது ஆழ்ந்து சிந்தனை செய்வதிலோ அவர்களுக்கு அக்கறை இருப்பதில்லை. தைரியம், விடாமுயற்சி, வீரம், அச்சமின்மை ஆகிய குணங்களும் அவர்களுக்கு இருப்பதில்லை. அதனால்தான் நமது பிரச்னைகளைச் சமாளிக்கப் புதிய திட்டங்களை வகுப்பதற்கோ, திட்டங்களை நிறைவேற்றுவதற்கோ நம்மால் முடியாமற் போய்விடுகிறது. நாம் திட்டங்கள் வகுத்தால் கூட அவற்றை நிறைவேற்றத் தவறிவிடுகிறோம். முன்னுக்கு வரக் கூடியவர்கள் என்று தோன்றும் சிலரும் சாதாரணமாக இளமையிலேயே இறந்துவிடுகிறார்கள்.

ஒரு காகிதத்தில் எழுதும் எழுத்துக்கும், மை ஒற்றும் காகிதத்தில் அதை ஒற்றி எடுத்தால் அதில் காணப்படும் எழுத்துக்கும் என்ன வேற்றுமை இருக்குமோ அதே வேற்றுமை ஐரோப்பியர்களுக்கும், மற்ற நாட்டினருக்குமிடையே இருக்கிறது என்று ஓர் ஆங்கிலேயர் எழுதியிருக்கிறார். இதில் உண்மையும் இருக்கிறது. ஆனால், அந்த வித்தியாசத்திற்குக் காரணம், ஆசிரியர்களிடையே இயற்கையாகவே திறமையின்மை இருக்கிறது என்பதல்ல; பொருத்தமில்லாத போதனை மொழிதான் பெரும் அளவு இதற்குக் காரணமாகும். தென்னாப்பிரிக்காவிலுள்ள நீக்ரோக்களுக்கு தைரியமும், உடல் வலிமையும், நன்னடத்தையும் இருக்கின்றன. நம்மிடையே உள்ள குழந்தை மணம் போன்ற கெட்ட பழக்கங்கள் அவர்களிடையே இல்லை. ஆயினும் அவர்களுடைய நிலைமையும் நம்மைப் போன்றதாகவே இருக்கிறது. ஏன்? ஏனெனில், அவர்களுக்கு டச்சு மொழி மூலம் கல்வி அளிக்கப்படுகிறது. நம்மைப் போலவே அவர்களும் ஒரு குறுகிய காலத்திற்குள் போதிய தேர்ச்சி பெற முடிகிறது; நம்மைப் போலவே அவர்களும் பள்ளிக்கூட காலம் முடியும் போது உடல் வலிமையோ மன வலிமையோ அற்று இருக்கிறார்கள். பலர் தங்களுடைய அந்நிய எஜமானர்களைப் பார்த்து அப்படியே 'காப்பி' யடிப்பவர்களாக இருக்கிறார்கள். அவர்களும் வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளை இழந்துவிடுகிறார்கள். ஏனெனில், ஒரு அந்நிய மொழியின் மூலம் அவர்களுக்குக் கல்வி அளிக்கப்படுகிறது. இதனால் எவ்வளவு பெரிய நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்பதை, ஆங்கிலக் கல்வி பயின்ற நாம் மட்டும்தான் மதிப்பிட முடிவதில்லை.

நம்மால் பாமர மக்கள் எவ்வளவு அற்பமான பலனை அடைந்திருக்கிறார்கள் என்பதை நாம் மதிப்பிட முடிந்தால், நஷ்டம் எவ்வளவு பெரியது என்பதை நாம் ஒருவாறு தெரிந்து கொள்ள முடியும். நம்முடைய கல்வி எவ்வளவு உதவாக்கரையானது என்பதைப் பற்றி எப்போதாவது நமது பெற்றோர்கள் ஏதாவது சொல்ல நேருகிறது. இந்தக் கண்ணோட்டத்துடன் அவர்கள் கூறுவதைப் பரிசிலனை செய்வது நல்லது. போஸ், ராய்* போன்றவர்களுடைய சாதனைகளைப் பற்றி நாம் ஆனந்த பரவசம் அடைகிறோம். ஆனால், தாய்மொழி மூலம் நமக்குக் கல்வி அளிக்கப்பட்டிருந்தால், நம்மிடையே பல போஸ்களும், ராய்களும் இருந்திருப்பார்கள் என்று நான் நிச்சயமாகக் கூறுகிறேன்.

இப்போது ஜப்பானியர்களிடம் காணப்படும் புதிய ஆர்வமும், விறுவிறுப்பும் சரியான பாதையில் செலுத்தப் படுகிறதா, இல்லையா என்ற கேள்வியை ஒதுக்கிவைத்துவிட்டுப் பார்த்தால், அவர்களுடைய ஆர்வமும், விறுவிறுப்பும் உண்மையாகவே மிகவும் ஆச்சரியப்படத்தக்கவைதான். தாய் மொழியை உபயோகிப்பதன் மூலம் அவர்கள் தம் நாட்டு மக்களுக்கு விழிப் பூட்டியிருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் அவர்களுடைய தனித் தன்மையை எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. தங்களுடைய மேல்நாட்டு ஆசிரியர்களுக்கே சொல்லிக் கொடுக்கக் கூடிய அளவுக்கு அவர்கள் அவ்வளவு பிரமாதமான முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் ஐரோப்பியரல்லாத மக்கள், மை ஒத்தும் காகிதத்தைப் போன்றவர்கள் என்ற கூற்றை அவர்கள் பொய்யாக்கிவிட்டார்கள். ஜப்பானிய மக்களின் வாழ்க்கையில் ஓயாத ஆராய்ச்சியும், சுறுசுறுப்பும் பொங்கி வழிந்துகொண்டிருக்கின்றன; அதைக், கண்டு உலகம் வியப்படைந்து நிற்கிறது. ஒரு அந்நிய மொழியின் மூலம் கல்வி போதிப்பது கணக்கிட முடியாத தீங்கை விளைவிக்கிறது.

---

* மேலே காந்திஜி, ஜகதீச சந்திர போஸையும் (1858–1936), டாக்டர் பி. ஸி. ராயையும் (1861-1944) பற்றியே குறிப்பிட்டிருக்கிறார். ஜகதீச சந்திர போஸ் உலகப் புகழ் பெற்ற விஞ்ஞான மேதையாகத் திகழ்ந்தார். அவர் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் படித்து ரசாயனக் கல்வியிலும், தாவர வர்க்க ஆராய்ச்சிக் கல்வியிலும் பட்டம் பெற்றவர். விஞ்ஞான மேதையான ஜே. ஸி. போஸ் சிறந்த தேச பக்தராகவும் விளங்கினார். மிருகங்களைப் போல் தாவர வர்க்கங்களுக்கும், இரும்பு, கல் ஆகியவற்றிற்கும் கூட உணர்ச்சி உண்டு என்பதை ஐரோப்பிய சர்வகலாசாலைகளுக்கெல்லாம் சென்று நிருபித்து, ஸ்ரீ போஸ் உலகப் புகழ் பெற்றார்.

டாக்டர் ப்ரொபுல்ல சந்திர ராயும் உலக விஞ்ஞான மேதைகளில் ஒருவராக விளங்கினார். இந்தியாவுக்கு அடிமைத்தனத்தைக் காட்டிலும் கொடிய சாபக் கேடு வேறு எதுவும் இல்லை என்று அவர் அடிக்கடி கூறுவது வழக்கம். கல்கத்தாவில் அவர் நிறுவிய வங்காள ரசாயன ஆராய்ச்சி சாலை மிக்க புகழ் பெற்றது. டாக்டர் ராய், விஞ்ஞானத்தைப்போல் ராட்டினத்தின் வளர்ச்சியிலும் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தார். 1931-இல் நடந்த தேசீய இயக்கத்தில் கலந்து கொண்டு இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் போராடிய முன்னணி வீரர்களில் ஸ்ரீ ராயும் ஒருவர்.

பள்ளிக்கூடம் என்பது, வீட்டைப் போலவே மற்றொரு வீடாக இருக்கவேண்டும். ஒரு குழந்தைக்கு வீட்டில் தோன்றும் எண்ணங்களுக்கும், பள்ளிக்கூடத்தில் ஏற்படும் எண்ணங்களுக்கும் இடையே நெருங்கிய இணக்கம் இருக்கவேண்டும். சிறந்த பலன் ஏற்படவேண்டுமாயின் அத்தகைய இணக்கம் அவசியம் ஆகும். அறிமுகமில்லாத ஒரு மொழியின் மூலம் கல்வி போதிப்பது, இந்த இணக்கத்தைக் குலைத்து விடுகிறது. இந்த இணக்கமான உறவைக் குலைப்பவர்கள் நல்லெண்ணத்துடன் காரியங்களைச் செய்பவர்களாக இருந்தாலும், அவர்கள் மக்களுடைய விரோதிகளே ஆவர். தன்னிச்சையாக இந்தக் கல்வி முறைக்கு உட்படுவது, நமது அன்னைமார்களுக்கு நாம் செய்யவேண்டிய கடமையைச் செய்யாமல் துரோகம் செய்வது போல் ஆகும். அந்த அன்னிய முறைக் கல்வியினால் ஏற்படும் தீங்கு இத்துடன் நின்று விடவில்லை. அதன் விளைவு மேற்கொண்டு விபரீதமாகியிருக்கிறது. படித்தவர்களுக்கும் பாமர மக்களுக்கும் இடையே இது ஒரு பிளவை உண்டாக்கிவிட்டது. நாம் எல்லோரும் தங்களுடன் தொடர்பற்ற ஏதோ வேற்று மனிதர்கள் என்று மக்கள் நம்மைப் பற்றி நினைக்கிறார்கள். அவர்கள் நம்மை நம்புவதில்லை. நாம் எஜமானர்களென்றும், நம்மைக் கண்டு பயப்பட வேண்டும் என்றும் நினைக்கிறார்கள். இந்த நிலைமை இன்னும் அதிக காலம் தொடர்ந்து வருமாயின், படித்தவர்கள் பாமர மக்களின் பிரதிநிதிகள் அல்ல என்ற லார்டு கர்ஸானின்* குற்றச் சாட்டு மெய்யாகி விடக்கூடிய காலமும் வந்துவிடலாம்.

அதிருஷ்டவசமாக, நம்மிடையே உள்ள படித்த வகுப்பினர் தங்களுடைய உறக்கத்திலிருந்து விழுப்படைந்து வருவது போல் தோன்றுகிறது. அவர்களே இப்போது மக்களுடன் தொடர்பு கொள்ள ஆரம்பித்திருப்பதால், மேலே குறிப்பிட்டுள்ள தவறுகளை அவர்களே உணருகிறார்கள். படித்தவர்களிடையே காணப்படும் விழிப்பையும், ஆர்வத்தையும் மக்களுக்குப் பயன்படுமாறு எப்படிச் செய்வது? இந்த மகத்தான பணியை குஜராத்தி மூலம் நிறைவேற்றுவதற்கு வேண்டிய பயிற்சியும், திறமையும் நம்மிடம் இல்லாமலிருக்கும்போது, ஆங்கிலம் நமக்கு உதவி செய்ய முடியாது. தங்களுடைய சிந்தனைகளை மக்களுக்குத் தாய்மொழியில் எடுத்துச் சொல்லுவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இந்தக் கஷ்டம் முன்னேற்றத்திற்கே முட்டுக்கட்டையாக இருக்கிறது. மெக்காலே,† நல்ல நோக்கத்துடன்

---

*லார்டு கர்ஸான் (1859–1925) நிர்வாக நிபுணர் என்றும் ராஜதந்திரி என்றும் புகழ் பெற்றவர். 1899–1905–இல் இந்தியா வைஸ்ராயாக இருந்தார். 1919–1924–இல் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரியாக பதவி வகித்தார்.

† மெக்காலே (1800–1859) மிகவும் கீர்த்தி வாய்ந்த நூலாசிரியரும் சரித்திராசிரியரும் ஆவார். இந்தியாவில் புகுத்தப்பட்ட ஆங்கிலக் கல்வி முறைக்கு மெக்கா

தான் ஆங்கிலக் கல்வியைப் புகுத்தினர். நம்முடைய இலக்கியங்களை அவர் உண்மையாகவே வெறுத்தார். துரதிருஷ்டவசமாக, அவரைப் பிடித்திருந்த தொத்துநோய் விஷம் நம்மிடையேயும் பரவிவிட்டது. நமது இலக்கியங்களையே நாமும் அலட்சியம் செய்கிறோம். பார்க்கப்போனால், இந்த விஷயத்தில் நம்முடைய எஜமானர்களான ஆங்கிலேயர்களையும் நாம் மிஞ்சிவிட்டோம். நம் மக்களிடையே மேற்கத்திய நாகரிகத்தைப் பரப்புவர்களாக நாம் இருக்கவேண்டும் என்று மெக்காலே விரும்பினர். ஒழுக்கத்தை வளர்ப்பதற்கு ஆங்கிலக் கல்வி நமக்கு உதவி செய்யும் என்றும், பின்னர் நம்மில் சிலர் மக்களிடையே புதிய கருத்துகளைப் பரப்புவோம் என்றும் அவர் நம்பினர். அந்தக் கருத்துகள் மக்களுக்கு அளிக்கப்படுவதற்குத் தகுதியுள்ளவவைகளா, இல்லையா என்பதைப் பற்றி இங்கு கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை. போதனை மொழியைப் பற்றி மட்டுமேதான் நாம் கவனிக்கவேண்டும். ஆங்கிலக் கல்வி பெற்றால் பணம் சம்பாதிப்பதற்கு வாய்ப்பு என்று கண்டோம். ஆகையால், அதற்கு முக்கியமான இடம் கொடுத்தோம். இந்தக் கல்வி, சிலருக்குத் தாய் நாட்டினிடம் தேசபக்தி உணர்ச்சியை ஊட்டத்தான் செய்தது. ஆனால் மொத்தத்தில் ஆரம்ப நோக்கம் இரண்டாவது பட்சமாகத்தான் இருந்தது; ஆங்கிலத்தைப் பிரசாரம் செய்வது, மெக்காலேயின் ஆரம்ப நோக்கத்தையும் கடந்து சென்றுவிட்டது. இதன் விளைவாக நமக்குப் பெரும் தீங்கே ஏற்பட்டது.

அரசாங்க நிர்வாகம் நம்மிடம் இருந்திருந்தால், இந்தத் தவறை முன்னதாகவே கண்டுகொண்டிருப்போம். நமது தாய் மொழியை இப்படிப் புறக்கணித்திருக்க மாட்டோம்; இன்னும் புறக்கணித்துக் கொண்டும் இருக்க மாட்டோம். ஆனால், அரசாங்க அதிகாரிகள் அதைப் புறக்கணிக்கவில்லை. நமது கோர்ட் மொழி குஜராத்தி என்றே நம்பப்படுகிறது என்பது நம்மில் பலருக்குத் தெரியாது. அதிகாரிகள் சட்டங்களை குஜராத்தியிலும் மொழி பெயர்க்கச் செய்கிறார்கள். தர்பார்களில் செய்யப்படும் பிரசங்கங்கள் ஆங்கிலத்தில் இருக்கின்றன. அதைத் தொடர்ந்து அவற்றின் குஜராத்தி மொழி பெயர்ப்பும் வாசிக்கப்படுகிறது. கரன்ஸி நோட்டுகளில் ஆங்கிலத்துடன் குஜராத்தியும் உபயோகிக்கப்படுகிறது என்பதை நாம் அறிவோம். நிலங்களை அளவையிடும் சர்வேயர்கள் சில கஷ்டமான கணக்கு வழக்குகளைக் கற்றுக்கொள்ளவேண்டியவர்களாக இருக்கிறார்கள். இந்த வேலை ஆங்கிலத்தில் நடத்தப்பட்டால், ரெவினியூ இலாக்காவுக்கான செலவு மிகவும் அதிகமாகியிருக்கும். ஆகையால், சர்வேயர்களின் உபயோகத்திற்காக குஜராத்தி

லேயை மூலகர்த்தா எனலாம். அவர் சில ஆண்டுகள் கல்கத்தா சுப்ரீம் கௌன்சிலில் அங்கத்தினராக இருந்தார். மெக்காலே பல ஆண்டுகள் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கத்தினராக இருந்ததுடன், சிறிது காலம் யுத்த மந்திரியாகவும் பதவி வகித்தார்.

சொல் வரிசைகளை அமைத்தார்கள். இந்தச் சொற்கள் நமக்கு ஆச்சரியத்தையும், மகிழ்ச்சியையும் அளிக்கும். நம்முடைய மொழியினிடம் நமக்கு உண்மையான பற்றுதல் இருந்தால், நம்மிடம் உள்ள வாய்ப்புகளை நாம் பயன்படுத்திக் கொள்ள முடியும். வக்கீல்கள் தங்களுடைய அலுவல்களை குஜராத்தியின் மூலமே நடத்தினால், கட்சிக்காரர்களின் பணம் பெரிதும் மிச்சப்படும்; கட்சிக்காரர்களுக்கும் அவசியமான சட்ட அறிவு ஏற்படும்; தங்களுடைய உரிமைகளையும் அவர்கள் தெரிந்துகொள்ள ஆரம்பிப்பார்கள். மொழிபெயர்ப்பாளர்களுக்காக இப்போது ஆகும் செலவும் இதனால் மிச்சப்படும். சட்ட சம்பந்தமான சொற்கள் வழக்கத்தில் வந்து, நமது மொழியையும் வளப்படுத்தும்.

இதற்கு வக்கீல்கள் கொஞ்சம் முயற்சி எடுத்துக் கொண்டாக வேண்டும். இது கட்சிக்காரர்களின் நலன்களைப் பாதிக்காது என்றும், நாளடைவில் இது அவர்களுக்கு நன்மையே அளிக்கும் என்றும் நம்புகிறேன். என்னுடைய இந்த நம்பிக்கை அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டதாகும். வாதங்களை குஜராத்தி மொழியில் எடுத்துச் சொன்னால், ஆங்கிலத்தைப் போல் கோர்ட்டில் அதற்கு அவ்வளவு மதிப்பு இராது என்ற அச்சத்திற்குக் காரணம் இல்லை. கலெக்டர்களுக்கும், மற்ற அரசாங்க அதிகாரிகளுக்கும் கட்டாயமாக குஜராத்தி தெரிந்திருக்க வேண்டும். ஆனால், ஆங்கிலத்தினிடம் நமக்குள்ள நியாயமற்ற மோகத்தினால் அதை அவர்கள் மறக்கும்படி செய்துவிடுகிறோம்.

நமது மக்கள் ஆங்கிலம் கற்றுக்கொண்டு, பணம் சம்பாதிப்பதற்காக அதை உபயோகித்துக் கொள்ளுவதில் தவறு ஒன்றுமில்லை. முக்கியமாக, நம் நாட்டினரில் சிலரிடம் தேசபக்தியும், தாய்நாட்டைக் குறித்துப் பெருமையும் வளருவதற்கு அது உதவி செய்கிறது என்று சிலர் சொல்லுகிறார்கள். எனினும், கல்விக்கு ஆங்கிலத்தை போதனை மொழியாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு இது ஒரு காரணமாகாது. பணம் சம்பாதிப்பதற்காகவோ, அல்லது நாட்டுக்கு நன்மை செய்வதற்காகவோ ஒருவர் ஆங்கிலம் கற்றுக்கொண்டால், அது சரிதான். ஆனால், அதற்காக ஆங்கிலத்தை போதனை மொழியாக உபயோகித்தாக வேண்டும் என்ற அவசியத்தை அது ருசுப்பிக்கவில்லை. துரதிருஷ்டவசமாக, ஆங்கிலம் போதனை மொழியாக நிலைபெற்றுவிட்டதற்கு மேற் கூறிய இரண்டுமே காரணங்களாகும். ஆங்கிலம் தெரிந்தவர்கள் மட்டுமேதான் தேசபக்தர்களாக இருந்திருக்கிறார்கள் என்று நினைக்கும் சிலர் இருக்கிறார்கள். ஆனால், சென்ற சில மாதங்களாக அதற்கு முற்றிலும் மாறான நிலையை நாம் கண்டுவருகிறோம். ஒரு திருத்தத்துடன் இதை நாம் ஏற்றுக்கொள்ளலாம். அதாவது, ஆங்கிலம் அறிந்தவர்களுக்கு இருந்த வாய்ப்புகள் மற்றவர்களுக்கு இருந்ததே கிடையாது. ஆங்கிலத்தின் மூலம் தோன்றிய தேசபக்தி ஒட்டுவாரொட்டியைப்போல் பரவவில்லை. உண்மையான தேசபக்தி

என்பது விரிவடைந்து கொண்டேயிருக்கும் ஒரு சக்தியாகும். இது பரவலாக வியாபித்துக் கொண்டே இருக்கும். ஆங்கிலத்தின் மூலம் ஏற்படும் தேசபக்தியில் இந்தத் தன்மை இல்லை.

மேலே கொடுக்கப்பட்டுள்ள வாதங்கள் எவ்வளவுதான் சரியானவையாக இருந்தாலும், இன்றைக்கு அவை அனுபவ சாத்தியமற்றவை என்று கூறப்படுகிறது.

"ஆங்கிலத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள அளவுக்கு மீறிய முக்கியத்துவம் காரணமாக, மற்றப் பாடங்களைப் படிப்பது பாதிக்கப்படுகிறது. இத்தகைய நிலை பரிதாபமானதாகும். இதில் நல்ல தேர்ச்சி பெறுவதிலேயே நம் மூளையைச் செலவிட வேண்டியிருக்கிறது என்பதும் வருந்தத்தக்கது. ஆனால், ஆங்கிலத்தைப் பொறுத்தவரையில், இன்று நாம் உள்ள நிலைமையில், அந்த ஏற்பாட்டை ஏற்றுக் கொண்டு, பிறகு அதிலிருந்து வெளியே வருவதற்கு ஒரு வழி கண்டு பிடிப்பதைத் தவிர நமக்கு வேறு மாற்று முறை எதுவும் இல்லை என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்."

மேற்கண்ட கருத்து, ஒரு சாதாரணமான எழுத்தாளருடைய அபிப்பிராயம் அல்ல; நம்முடைய தாய்மொழியில் மிகுந்த பற்றுதல் உடையவரும், குஜராத்தில் உள்ள மிகப் பிரபல அறிஞருமான ஒருவருடைய அபிப்பிராயமாகும். ஆச்சாரிய துருவாவைப் போன்ற புகழ் பெற்ற ஒருவர் கூறுவதையும் எழுதுவதையும் நாம் புறக்கணிக்க முடியாது. அவருக்கு உள்ள அனுபவம் வெகு சிலருக்குக் கூட இருக்க முடியாது. கல்வித் துறைக்கும், சிறந்த இலக்கியத்திற்கும் அவர் பெரும் சேவை செய்திருக்கிறார். யோசனைகள் கூறுவதற்கும், குறை கூறுவதற்கும் அவருக்கு முழு உரிமை இருக்கிறது. ஆகையால், மாறுபட்ட ஒரு கருத்தைத் தெரிவிப்பதற்கு முன்பு நான் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக யோசிக்க வேண்டியிருக்கிறது. ஆங்கிலத்தை ஆதரிப்பவர்கள் எல்லோருடைய சார்பிலும் ஸ்ரீ ஆனந்த சங்கர பாய் கவர்ச்சியான பாஷையில் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார். ஆகையால், இந்தக் கருத்துக்கும் உரிய மதிப்பு கொடுக்க வேண்டியது நமது கடமையாகும். மேலும். இந்த விஷயத்தில் என்னுடைய நிலைமை ஓரளவு தரும சங்கடமானது. அவருடைய யோசனைப்படியும், மேல் பார்வையிலும் தேசீயக் கல்வியில் நான் ஒரு சோதனை நடத்திக் கொண்டிருக்கிறேன். இந்தச் சோதனையில் நாங்கள் தாய் மொழியையே போதனை மொழியாக உபயோகித்துக் கொண்டிருக்கிறோம். எங்களிடையே இவ்வளவு நெருங்கிய உறவுகள் இருப்பதால், அவருடைய அபிப்பிராயத்தைக் குறை கூறி எதையும் நான் எழுதத் தயங்குவது இயற்கையே. நல்ல வேளையாக தாய்மொழி மூலம் மட்டுமின்றி, ஆங்கிலத்தின் மூலமும் கல்வி போதித்து ஆச்சாரிய துருவா அனுபவம் பெற்றிருக்கிறார். இரண்டில் எது உயர்ந்தது என்பதைப் பற்றி இதுவரையில் அவர் முடிவானதும், திட்டவட்டமானதுமான அபிப்

பிராயம் எதையும் தெரிவிக்கவில்லை. ஆகையால், என்னுடைய ஆட்சேபணையைத் தெரிவிக்க நான் அவ்வளவாகத் தயங்கவில்லை.

ஆங்கிலம் பற்றி நம்முடைய நிலையை நாம் மிகவும் அதிகமாக வற்புறுத்துகிறோம். இந்த மகாநாட்டில் இந்த விஷயத்தைப் பற்றி எந்த விதமான கட்டுப்பாடும் இல்லாமல் முழு சுதந்திரத்துடன் நாம் விவாதிக்க முடியாது என்பதை நான் அறிவேன். ஆனால், அரசியல் விவகாரங்களில் கலந்து கொள்ள முடியாதவர்கள் கூட, இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் ஆட்சி நாட்டின் நலனைக் கருதியதாக இருக்கவேண்டும் என்று சிந்திப்பதும், சொல்லுவதும் முறை தவறியதாக இருக்க முடியாது. இதற்கு வேறு எந்த நியாயமும் இருக்க முடியாது. ஒரு நாடு மற்றொரு நாட்டில் ஆட்சி செலுத்துவது தவறானதுதான் என்பதை, பிரிட்டிஷ் ஆட்சியாளர்களே ஒப்புக் கொள்ளுகிறார்கள். இது இருவருக்குமே தீங்கு விளைவிக்கிறது. மற்றவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற கருத்துடையவர்கள் யாவரும் இக்கொள்கையை ஏற்றுக் கொள்ளுகிறார்கள். ஆகையால், ஆங்கிலத்தின் மூலம் கல்வி போதிப்பது நமது மக்களின் மன சக்தியை உறிஞ்சிவிடுகிறதென்று ஆள்வோர், ஆளப்படுவோர் இருவருக்கும் நிரூபித்துக் காட்டிவிட்டால், பின்னர் போதனை மொழியை மாற்றுவதில் எந்தக் காலதாமதமும் இருப்பதற்கில்லை. அந்த இலக்கை நாம் அடைவதற்குக் குறுக்கே நிற்கும் இடையூறுகளை அகற்றுவதே பாராட்டுக்கு உரியதாக இருக்கும். இந்தக் குறிக்கோள் ஏற்றுக் கொள்ளப்பட்டால், பிரிட்டிஷ் பாணியில் உள்ளதும், ஆங்கிலத்தை போதனை மொழியாகக் கொண்டதுமான இன்றைய கல்வி முறை, மக்களின் மன சக்தியை அளவுக்கு மீறி வீணடித்து விடுகிறது என்பதை ஒப்புக் கொள்ளும் ஆச்சாரிய துருவா போன்றவர்களைத் திருப்தி செய்வதற்கு மேற்கொண்டு வாதங்கள் தேவையாக இரா.

தாய் மொழியை போதனை மொழியாக வைத்துக் கொண்டால், அதனால் ஆங்கிலத்தில் அறிவைப் பெறுவது பாதிக்கப்படுமா, இல்லையா என்பதைப் பற்றி பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமில்லை என்றே நினைக்கிறேன். படித்த இந்தியர்கள் யாவருக்கும் இந்த அந்நிய மொழியில் தேர்ச்சி இருக்க வேண்டும் என்ற அத்தியாவசியம் எதுவும் இல்லை. அதுமட்டுமல்ல; இந்த அந்நிய மொழியினிடம் ஒரு பற்றுதலைத் தோற்றுவிப்பதோ, அதற்கு ஊக்கம் அளிப்பதோ அவசியமற்றது என்றும் நான் கருதுகிறேன்!

சில இந்தியர்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்ள வேண்டியிருக்கும் என்பது உண்மைதான். கல்வித் துறையில் தாராள நோக்கத்துடன் மட்டுமே ஆச்சாரிய துருவா இந்தப் பிரச்னையை அணுகியிருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால், எல்லாக் கோணங்களிலிருந்தும் இதை நாம் பரிசீலனை செய்துபார்த்தால்,

இரு பிரிவினர்தான் ஆங்கிலம் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கும் என்பது புலனாகும்.

1. நாட்டுப்பற்றும், பொதுத் தொண்டில் ஆர்வமும் உள்ளவர்கள்; அத்துடன், பல மொழிகளைக் கற்பதில் விசேஷத் திறமை பெற்றவர்கள்; தங்களுடைய படிப்பின் பலனை மக்களுக்காகப் பயன்படுத்த வேண்டும் அல்லது ஆள்வோருடன் நமக்குள்ள உறவுகளை அபிவிருத்தி செய்வதற்கு அதைப் பயன்படுத்த வேண்டும் என்பதற்காக ஆங்கில இலக்கியத்தைப் படிக்கவேண்டும் என்று நினைப்பவர்கள்.

2. அரசாங்க உத்தியோகங்கள் அல்லது நல்ல சம்பளம் கிடைக்கக் கூடிய உத்தியோகங்கள் பெறுவதற்காகத் தங்களது ஆங்கில அறிவை உபயோகித்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறவர்கள்.

இந்த இரு பிரிவினருக்கும் ஆங்கிலத்தை இஷ்ட பாடமாகக் கொடுத்து, ஆங்கிலத்தில் முழுப் பயிற்சியளிப்பதில் தீங்கு ஒன்றும் இல்லை. இதற்கு வேண்டிய வசதிகளைக் கூட நாம் செய்து கொடுக்கலாம். ஆனால், போதனா மொழி தாய்மொழியாகத் தான் இருக்க வேண்டும். ஆங்கிலத்தை போதனா மொழியாக வைத்துக் கொள்ளாமல் அதை ஒரு அந்நிய மொழியாக மட்டும் கற்றுக் கொண்டால், பாரசீகம், சமஸ்கிருதம் போன்ற மொழிகளின் தரம் குறைந்து போனதைப் போலவே, ஆங்கிலத்தின் தரமும் குறைந்துவிடும் என்று ஆச்சாரிய துருவா அஞ்சுகிறார். ஆச்சாரிய துருவாவிடம் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. ஆயினும், இந்தக் கருத்து சரியானதல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். பிரெஞ்சு மொழியை நன்கு அறிந்த ஆங்கிலேயர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் கல்வி பயின்றது ஆங்கிலத்தின் மூலம் தான் என்றாலும், தங்களுடைய அலுவல்களுக்கு அவர்கள் பிரெஞ்சு மொழியைத் திருப்திகரமாக உபயோகிக்க முடிகிறது. இந்தியாவில் கூட, பிரஞ்சு மொழியை நன்கு அறிந்த இந்தியர்கள் பலர் இருக்கிறார்கள் ; அவர்களும் ஆங்கிலத்தின் மூலம் தான் அதைக் கற்றனர். கல்வியமைப்பில் ஆங்கிலத்திற்கு இரண்டாவது இடம் கொடுக்கப்பட்டு, தாய் மொழி தனக்குரிய நியாயமான இடத்தைப் பெற்றுவிட்டால், தேவையற்ற விஷயங்களால் அளவுக்கு மீறி பளுவைச் சுமக்க வேண்டியிருக்கும் நமது புத்திக்கு, இன்னும் அத்தியாவசியமான அறிவைப் பெறுவதற்கு வசதியாக விடுதலை ஏற்படும். அப்போது ஆங்கிலத்தைக் கற்பது கூட நமக்கு அவ்வளவு கடினமாக இராது. அந்தச் சூழ்நிலையில் நாம் கற்கும் ஆங்கிலம் இன்னும் நல்ல தரம் உள்ளதாக இருக்கும். இப்போது நமக்குள்ள ஆங்கில அறிவைவிட அது பெருமைப்படக் கூடியதாகவும் இருக்கும் என்று நான் கருதுகிறேன். அது மாத்திரமல்ல, அந்த நிலைமையில் நம்முடைய புத்தி இன்னும் கூர்மையானதாகவும், சுறுசுறுப்புள்ளதாகவும் இருக்குமாகையால், அந்த அறிவை நாம் இன்னும் நல்ல முறை

யில் பயன்படுத்திக் கொள்ளவும் முடியும். ஆகையால் லாப நஷ்டம் என்ற கோணத்தில் பார்த்தால்கூட, தாய் மொழியை உபயோகிப்பதென்ற முடிவு, நமது விருப்பங்கள் எல்லாம் நிறைவேறுவதற்கு உதவியாக இருக்கும் என்பது புலனாகும்.

நமது சொந்த மொழியின் மூலம் நாம் கல்வி பெறும் போது, நம் வீட்டில் உள்ளவர்களுடன் நமக்குள்ள தொடர்பே வேறுவிதமாக இருக்கும். இன்றுள்ள நிலைமையில், நமது மனைவிமார்களை நாம் உண்மையான வாழ்க்கைத் துணைவிகளாக நடத்த முடிவதில்லை. வெளியே நாம் என்ன செய்கிறோம் என்பதைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரிவதில்லை. அது போலவே, பள்ளிக்கூடத்தில் நாம் என்ன கற்றுக்கொள்ளுகிறோம் என்பதைப் பற்றி நமது பெற்றோர்களுக்கும் ஒன்றும் தெரிவதில்லை. ஆனால், நம்முடைய தாய் மொழியின் மூலம் நாம் கல்வி பெற்றால், பள்ளிக்கூடத்தில் நாம் கற்றுக்கொள்ளுபவைகளையெல்லாம் நமது வேலைக்காரர்களுக்கும், சலவை செய்பவர்கள், நாவிதர்கள், தோட்டிகள் முதலிய மற்றவர்களுக்கும் எளிதில் கற்றுக்கொடுத்து, அவர்களுக்கும் அறிவூட்ட முடியும். இங்கிலாந்தில் நாவிதர்கள் நமது தலைமுடியை வெட்டிக் கொண்டிருக்கும்போது, அவர்களுடன் அரசியலைப் பற்றி நாம் விவாதிக்க முடியும். இங்கு, நமது குடும்பத்திலுள்ளவர்களுடன் கூட நாம் அப்படிச் செய்ய முடியாது. அவர்கள் விஷயம் தெரியாதவர்கள் என்பதனால் அல்ல; அவர்களுக்கும் பல விஷயங்களைப் பற்றித் தெரியும். ஆனால், அவை வேறு விஷயங்களைப் பற்றி இருக்கலாம். மகாபாரதம், ராமாயணம், புண்ய ஸ்தலங்கள், யாத்திரை முதலியவைகளைப் பற்றி அவர்களுடன் பேசுகிறோம். ஏனெனில், நமது ஜனங்கள் இந்த விஷயங்களைப் பற்றித்தான் கேள்விப்படுகிறார்கள், அவற்றைத்தான் தெரிந்து கொள்ளுகிறார்கள். ஆனால், பள்ளிக்கூடத்தில் நாம் பெறும் அறிவு மற்றவர்களுக்கு, நம் குடும்பங்களில் உள்ளவர்களுக்குக் கூடப் பயன்படுவதில்லை. ஏனெனில், நாம் ஆங்கிலத்தில் கற்றுக்கொள்ளுவதை அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க முடிவதில்லை.

இப்போது, நம்முடைய சட்ட சபைகளில் எல்லா அலுவல்களுமே ஆங்கிலத்தின் மூலம்தான் நடைபெறுகின்றன. பொது வாழ்வின் மற்றத் துறைகளிலும் இப்படித்தான் இருக்கிறது. இதன் பலனாக, மக்கள் எளிதில் தெரிந்து கொள்ளக் கூடிய பல விஷயங்கள், கருமியின் செல்வம் பூமிக்கடியில் புதைந்து வீணாவதைப் போல், பலனற்றுப் போகின்றன. கோர்ட்டுகளிலும் இப்படித்தான் நடக்கிறது. தங்கள் முன்னிலையில் வரும் வழக்குகளில் நீதிபதிகள் உபயோகமான யோசனைகளையும் நல்ல புத்திமதிகளையும் கூறுகிறார்கள். கோர்ட்டுக்குப் போகிறவர்கள், நீதிபதிகள் என்ன சொல்லுகிறார்கள் என்பதை அறிய மிகுந்த ஆவலுடன் இருக்கிறார்கள். ஆனால், நடவடிக்கைகள் ஆங்கிலத்தில் நடத்தப்படுவதால், இறுதியில் கூறப்படும் வெறும் தீர்ப்பைத் தவிர, வேறு எதையும் அவர்கள் தெரிந்து கொள்ள முடிவதில்லை.

வைத்தியர்கள் விஷயமும் இப்படித்தான். அவர்கள் தங்களுடைய வைத்திய முறைகளை ஆங்கிலத்தின் மூலம் கற்றிருப்பதால், நோயாளிகளுக்குச் சரியான யோசனைகளும், விவரங்களும் கூற முடிவதில்லை. உடலில் உள்ள உறுப்புகளின் குஜராத்தி பெயர்கள் கூட அவர்களுக்குத் தெரியாது. ஆகையால், நோயாளிகளுக்கு மருந்துச் சீட்டுகள் எழுதிக் கொடுப்பதைத் தவிர, அவர்களுக்கு நோயாளிகளுடன் உண்மையான தொடர்பு அதிகம் இருப்பதில்லை.

நம்முடைய அறியாமை காரணமாக, மழை ஜலத்தையோ, மலை உச்சிகளிலிருந்து வரும் சுத்தமான தண்ணீரையோ நாம் சரிவரப் பயன் படுத்திக் கொள்ளுவதில்லை என்று சொல்லப்படுகிறது. அதுபோலவே, லட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள நல்ல உரங்களை நாம் உற்பத்தி செய்கிறோம். ஆனல், பலன் தரத்தக்க விதத்தில் அதை எப்படி உபயோகித்துக் கொள்ளுவது என்ற விவரம் நமக்குத் தெரியாததால், அந்த உரங்களிலிருந்து பல வியாதிக் கிருமிகள் தோன்றுவதுதான் கண்ட பலனாக இருக்கிறது. இந்த நோய்கள் பலரையும் பலி வாங்கிவிடுகின்றன.

ஆங்கிலம் என்ற சுமையின் கீழ் மக்கள் அகப்பட்டுக் கொண்டு நசுங்கியிருப்பதால், அவர்கள் பெறுவதற்கு உரிமையுள்ள பலவற்றையும் அவர்களுக்கு நாம் அளிக்கத் தவறி விடுகிறோம். முன்யோசனை இல்லாததே இதற்குக் காரணம். இது மிகைப்படுத்திக் கூறுவதாகாது. இந்த விஷயத்தில் என்னுடைய ஆழ்ந்த உணர்ச்சிகளையே இது வெளிப்படுத்துகிறது. தாய் மொழி விஷயத்தில் நாம் காட்டும் அலட்சியத்திற்கு நாம் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கும் என்று எச்சரிக்கை செய்கிறேன். ஏற்கனவே இது நமக்குப் பெரும் தீங்கை விளைவித்து விட்டது. இதனல் நமது மக்கள் மேற்கொண்டு துன்பங்களை அனுபவிக்க விடாமல் காப்பாற்ற வேண்டியது, படித்தவர்களின் முதல் கடமை என்று நான் கருதுகிறேன்.

குஜராத்தி ஒரு மகத்தான மொழி. சென்ற காலத்தில் அதற்கு நல்ல பெயர் இருந்தது; இன்னும் அதற்கு நல்ல எதிர்காலமும் இருக்கிறது. பெரிய பக்தரான நரஸிம்ம மேத்தாவின் மொழி அது. ஒருவர் பின் ஒருவராகப் பல பிரபல எழுத்தாளர்கள் அதை வளமுறச் செய்திருக்கிறார்கள். 'கரன் கெலோ' என்ற தம்முடைய நாவலை நந்த சங்கர் குஜராத்தியில்தான் எழுதினர். நாவல்ராம், நர்மதா சங்கர், மணிலால், மலபாரி முதலியவர்களும் அதே மொழியில் எழுதி, அதன் இலக்கியத்தைப் பெருக்கினர்கள். அமுதம் போன்ற தம்முடைய உபதேசங்களை கவி ராஜசந்திரர் இந்த மொழியில்தான் உருவாக்கினர். அதற்குச் சேவை செய்வதற்கு ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள் போன்ற பெரிய வகுப்பினர்கள் இருக்கிறார்கள். ஆண்டவனின் ஊழியர்களான ஸாதுக்கள் அதைப் புனிதப் படுத்தியிருக்கிறார்கள்.

பணக்காரர்கள், வியாபாரிகள், கடல் கடந்து தொலைவிலுள்ள நாடுகளுக்குச் சென்று வாணிபம் செய்பவர்கள் ஆகியோரும் இந்த மொழியைப் பேசுகிறார்கள். கத்தியவாட் மலைப் பகுதிகளில் முலு மாணிக்கும், ஜோதா மாணிக்கும் புரிந்த வீரச்செயல்களைப் பற்றிய கதைகளும், கவிதைகளும் ஒலிப்பது இந்த மொழியில்தான். இத்தகைய ஒரு மொழி எவ்வளவு தூரம் விரிவடையலாம் என்பதற்கு ஒரு எல்லையே கிடையாது. இவ்வளவு அழகான ஒரு மொழியை போதனா மொழியாக உபயோகிக்காவிட்டால், குஜராத்தி மக்களிடமிருந்து என்ன எதிர்பார்க்க முடியும்? அதை உபயோகிப்பது நியாயமானதுதான் என்பதை ருசுப்பிக்க வேண்டிய நிர்ப்பந்தம் நமக்கு ஏற்பட்டிருப்பதுதான் இதில் உள்ள பரிதாபமாகும்.

இந்த விஷயத்தை முடிப்பதற்கு முன்பு, இது சம்பந்தமாக டாக்டர் பிராணஜீவன்தாஸ் எழுதியுள்ள கட்டுரைகளை இறுதியாக உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இந்தக் கட்டுரைகளின் குஜராத்தி மொழி பெயர்ப்பும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அவற்றை நீங்கள் படிக்க வேண்டுமென்று நான் சிபாரிசு செய்கிறேன். மேலே குறிப்பிட்டுள்ள கருத்துகளுக்கு ஆதரவாக அக்கட்டுரைகளில் பல நல்ல ஆதாரங்கள் இருப்பதைக் காண்பீர்கள்.

தாய் மொழியைப் போதனா மொழியாக்குவது நல்லதுதான் என்று நமக்கு நிச்சயமாகத் தோன்றினால், அந்த முடிவை நிறைவேற்றுவதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதைப் பரிசீலனை செய்வதே அடுத்த வேலையாகும். வாதங்கள் எதிலும் இறங்காமல், இந்த நடவடிக்கைகள் எப்படி இருக்க வேண்டும் என்பதைக் கூறுகிறேன். என் மனத்தில் தோன்றியதை அப்படியே உங்களுக்கு எடுத்துக் கூறுகிறேன் :

1. ஆங்கிலம் தெரிந்த குஜராத்திகள் ஒருவரோடொருவர் பேசும் போதும், எழுதும் போதும் ஆங்கில மொழியை உபயோகிப்பதை நிறுத்திவிட வேண்டும்.

2. ஆங்கிலம், குஜராத்தி இரண்டும் நன்றாகத் தெரிந்தவர்கள், ஆங்கிலத்திலுள்ள நல்ல புத்தகங்களையும், கருத்துக்களையும் குஜராத்தியில் மொழி பெயர்த்து, அவைகள் மக்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

3. கல்வித் துறையில் அனுபவமுள்ள நிபுணர்கள் சேர்ந்து, நல்ல பாட புத்தகங்களை குஜராத்தியில் தயாரித்து, பிரசுரிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

4. நம்மிடையே உள்ள பணக்காரர்கள், குஜராத்தியின் மூலம் கல்வி போதிக்கும் பள்ளிக்கூடங்களைப் பல்வேறு இடங்களிலும் ஆரம்பிக்க வேண்டும்.

5. தாய் மொழியை போதனா மொழியாக வைக்க வேண்டும் என்று கல்வி மகாநாடுகளும், கழகங்களும் அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டும். கோர்ட்டுகளும், சட்டசபைகளும் தமது நடவடிக்கைகளை குஜராத்தியில் நடத்த வேண்டும்; மக்களும் தமது அலுவல்களில் குஜராத்தியை உபயோகிக்க ஆரம்பிக்க வேண்டும். ஆங்கிலம் தெரிந்தவர்களைத்தான் நல்ல சம்பளம் உள்ள உத்தியோகங்களுக்குத் தேர்ந்து எடுப்பதென்ற இப்போதுள்ள வழக்கத்தை மாற்றி, ஆங்கிலம் தெரிந்தாலும், தெரியாவிட்டாலும், மனுச் . செய்பவர்களின் யோக்கியதாம்சத்தைக் கவனித்துத் தேர்ந்து எடுக்க வேண்டும். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் குஜராத்தியில் தேவையான தேர்ச்சி பெறுவதற்குப் பள்ளிக்கூடங்களை ஆரம்பிக்குமாறு சர்க்காரைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

மேலே விவரிக்கப்பட்டுள்ள திட்டத்திற்கு ஆட்சேபணைகள் எழுப்பப்படலாம். சட்ட சபையில் மராத்தி, ஸிந்தி, குஜராத்தி அங்கத்தினர்கள் இருக்கிறார்கள் என்றும், பின்னர் ஒரு காலத்தில் கர்னாடகத்திலிருந்தும் அங்கத்தினர்கள் வரக்கூடும் என்றும் சொல்லுவார்கள். இந்த ஆட்சேபணைக்கு நிச்சயமாக ஆதாரம் இருக்கிறது. ஆனால், அதற்குப் பரிகாரமும் இருக்கிறது. தெலுங்கு பேசும் மக்கள் ஏற்கனவே இந்தப் பிரச்னையை எழுப்பியிருக்கிறார்கள். என்றைக்காவது ஒருநாள் மொழியின் அடிப்படையில் மாகாணங்களை மாற்றியமைக்க வேண்டியிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அதற்கிடையே சட்ட சபை அங்கத்தினர்கள் இந்தியிலோ அல்லது தங்களுடைய தாய் மொழியிலோ பேசுவதற்கு உரிமை இருக்க வேண்டும்.

இந்த யோசனை பரிகசிக்கத்தக்கதென்று இன்று உங்களுக்குத் தோன்றலாம். எந்தத் தீவிரமான யோசனையுமே ஆரம்பத்தில் பரிகசிக்கத்தக்கதாகத்தான் தோன்றும் என்பதை மட்டும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம்முடைய நாட்டின் முன்னேற்றம், எந்த மொழியில் கல்வி போதிப்பது என்ற விஷயத்தில் சரியான ஒரு முடிவு செய்யப்படுவதையே பெரும்பாலும் பொறுத்திருக்கும் என்று நான் கருதுகிறேன். ஆகையால், என்னுடைய யோசனையில் ஆழ்ந்த உட்கருத்து இருப்பதாக நான் நினைக்கிறேன். இவ்வாறாக, தாய் மொழிக்கு மதிப்புக் கொடுத்து, ஆட்சி மொழி என்ற அதற்குரிய நியாயமான அந்தஸ்தையும் அதற்கு மீண்டும் அளித்துவிட்டால், இப்போது நமக்குப் புலப்படாமலிருக்கும் பல சக்திகளையும், மேம்பாடுகளையும் அதில் காணலாம் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

இனி தேசீய மொழியைப் பற்றி கவனிப்போம். ஆங்கிலம் நமது தேசீய மொழியாக வேண்டுமானால், நமது பள்ளிக்கூடங்களில் அதைக் கட்டாய பாடமாக்க வேண்டும்.

ஆனால், ஆங்கிலம் நமது தேசீய மொழியாக முடியுமா என்பதை முதலில் கவனிப்போம். நம்மிடையே உள்ள அறிவாளிகளில் சிலர்-அவர்கள் நல்ல தேச பக்தர்களும் கூட-இந்தக் கேள்வியை எழுப்புவதே அறியாமையைக் குறிக்கிறதென்று வாதம் செய்கிறார்கள். ஏற்கனவே அது அந்த ஸ்தானத்தை வகித்து வருவதாக அவர்கள் கருதுகிறார்கள். சமீபத்தில் வைஸ்ராய் செய்த பிரசங்கத்தில், அந்த ஸ்தானத்தை அது பெறும் என்ற தன் விருப்பத்தை மட்டுமே தெரிவித்தார். ஆனால், ஏற்கனவே அது நமது தேசீய மொழியாகிவிட்டது என்றும், இனி அதைப்பற்றிய பேச்சுக்கே இடம் இருக்க முடியாது என்றும் சொல்லும் அளவுக்கு அவருடைய உற்சாகம் போய் விடவில்லை. ஆயினும், நாளுக்கு நாள் நாட்டில் ஆங்கிலம் பரவும் என்றும், நமது இல்லங்களிலும் அது பரவி, இறுதியில் ஒரு தேசீய மொழி என்ற உயர்ந்த அந்தஸ்தை அது பெறும் என்றும் அவர் நம்புகிறார். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது, இந்த அபிப்பிராயம் சரியானதாகவே தோன்றுகிறது. நம்மிடையே உள்ள படித்த பிரிவினரைப் பார்க்கும்போது, ஆங்கிலம் இல்லாவிட்டால், நம்முடைய வேலைகள் யாவும் நடைபெறாமல் நின்றுபோய்விடும் என்றுதான் நினைக்கத் தோன்றும். ஆனால், ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால், ஆங்கிலம் நமது தேசீய மொழியாக முடியாது, தேசீய மொழியாகக் கூடாது என்பது தெரியும்.

ஒரு மொழி தேசீய மொழியாவதற்கு என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும் என்பதைக் கவனிப்போம்.

1. அது அரசாங்க அதிகாரிகள் சுலபமாகக் கற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும்.

2. இந்தியா பூராவிலும் மதம், பொருளாதாரம், அரசியல் ஆகிய துறைகளில் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளுவதற்குத் தகுதியுள்ளதாக இருக்க வேண்டும்.

3. இந்தியாவில் உள்ள பெரும்பான்மையினர் பேசும் மொழியாகவும் இருக்க வேண்டும்.

4. எல்லோருமே அதைச் சுலபமாகக் கற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்க வேண்டும்.

5. அத்தகைய ஒரு மொழியைத் தேர்ந்தெடுக்கும்போது, தாற்காலிகமான அல்லது நிலையற்ற நலன்களைப் பொருட்படுத்தக்கூடாது.

ஆங்கிலம் இந்தத் தகுதிகளில் எதையும் பூர்த்தி செய்யவில்லை.

முதலில் சொன்ன தகுதியைக் கடைசியாகக் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆனால், வேண்டுமென்றேதான் நான் அவ்

விதம் மாற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். ஏனெனில், ஆங்கிலம் அதைப் பூர்த்தி செய்வதுபோல் தோன்றுகிறது. இதை இன்னும் நன்கு பரிசீலனை செய்து பார்த்தால், இப்போதே கூட, அதிகாரிகள் கற்றுக் கொள்ளுவதற்கோ, கையாளுவதற்கோ அது சுலபமான மொழியல்ல என்பது தெரியும். பிரிட்டிஷ் அதிகாரிகளின் எண்ணிக்கை வரவரக் குறைந்து, இறுதியில் வைஸ்ராயும், மற்றும் சிலரும் மட்டுமே இங்கிருப்பார்கள் என்பதுதான் இப்போதுள்ள அரசியல் அமைப்பின் ஏற்பாடு. இன்றைக்குக் கூட அரசாங்க உத்தியோகங்களில் உள்ளவர்களில் பெரும்பாலோர் இந்தியர்கள்தான். நாளடைவில் இவர்களுடைய எண்ணிக்கை அதிகமாகும். இவர்களுக்கு மற்ற எந்த மொழியையும் விட ஆங்கிலம் இன்னும் அதிகக் கடினமானது என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள்.

இரண்டாவது தகுதி சம்பந்தப்பட்ட வரையில், நாடு பூராவிலும் உள்ள நமது மக்கள் யாவரும் ஆங்கிலம் பேச ஆரம்பித்தாலொழிய, ஆங்கிலத்தின் மூலம் மதம் பற்றிய கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளுவதென்பது சாத்தியமற்றது என்றே நான் நினைக்கிறேன். மக்களிடையே அந்த அளவுக்கு ஆங்கிலத்தைப் பரப்புவது நிச்சயமாக அசாத்தியமாகும்.

இந்தியாவிலுள்ள பெரும்பான்மையினர் ஆங்கிலம் பேசவில்லையாகையால், மூன்றாவது தகுதியை ஆங்கிலம் நிச்சயமாகப் பூர்த்தி செய்ய முடியாது.

நம் மக்கள் யாவரும் அதை எளிதில் கற்றுக்கொள்ள முடியாதாகையால், நாலாவது தகுதியையும் ஆங்கிலம் பூர்த்தி செய்ய முடியாது.

ஐந்தாவது அம்சத்தைக் கவனித்தால், இன்று ஆங்கிலத்திற்குள்ள அந்தஸ்து தற்காலிகமானதுதான் என்பதைப பார்க்கிறோம். எதிர்கால இந்தியாவில் தேசீய விவகாரங்களில் ஆங்கிலத்திற்குத் தேவை இராது. அப்படி தேவையிருந்தாலும் அது சொற்பமாகத்தான் இருக்கும். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் தொடர்பு வைத்துக் கொள்ளுவதற்கு நிச்சயமாக அது வேண்டியிருக்கும். சாம்ராஜ்யத்திற்குள் உள்ள பல்வேறு நாடுகளிடையே ராஜதந்திரத் தொடர்புகளுக்கான மொழியாகவும் அது தொடர்ந்து நீடிக்கும். அதுபோன்ற காரியங்களுக்கு ஆங்கிலம் அவசியமாயிருக்கும். ஆங்கிலத்தை நாம் வெறுக்கவில்லை. அதனுடைய உரிய எல்லையைத் தாண்டி அதைப் போக விடக்கூடாது என்றுதான் விரும்புகிறோம். ஆங்கிலம் ஏகாதிபத்தியத்தின் மொழியாகத் தொடந்து நீடிக்குமாகையால், அதைக் கற்றுக் கொள்ளும்படி நமது மாளவியாக்களையும், நமது சாஸ்திரிகளையும், நமது பானர்ஜிகளையும், நாம் கட்டாயப்படுத்துவோம். அவர்கள் போகுமிடங்களிலெல்லாம் நமது நாட்டின் புகழைப் பெருக்க வேண்டும் என்றும் எதிர்பார்ப்போம். ஆனால், ஆங்கிலம் இந்தியாவின் தேசீய மொழியாக்

முடியாது. அதற்கு அந்த அந்தஸ்தை அளிப்பது நம் நாட்டில் 'எஸ்பரான்டோ'* மொழியைப் புகுத்துவது போல் ஆகும். ஆங்கிலம் நமது தேசீய மொழியாக முடியுமா என்று நினைப்பது பலவீனத்திற்கு அடையாளம்; அறியாமையைக் குறிப்பதுமாகும்.

அப்படியானால், இந்த ஐந்து தகுதிகளையும் பூர்த்தி செய்யும் மொழி எது? அந்த மொழி ஹிந்திதான் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும்.

வடக்கே ஹிந்துக்களும், முஸ்லிம்களும் பேசுவதும், தேவநாகரி அல்லது உருது லிபியில் எழுதப்படுவதுமான மொழியையே ஹிந்தி என்று நான் குறிப்பிடுகிறேன். இந்த விளக்கத்திற்கு சில ஆட்சேபணைகளும் கூறப்பட்டிருக்கின்றன.

ஹிந்தியும் உருதுவும் வெவ்வேறு மொழிகள் என்று வாதிக்கப்படுகிறது. ஆனால், இது தவறாகும். வட இந்தியாவில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள் இருவருமே ஒரே மொழியைத்தான் பேசுகிறார்கள். படித்த வகுப்பினர்தான் வேற்றுமையைத் தோற்றுவித்தார்கள். படித்த ஹிந்துக்கள், தாங்கள் பேசும் ஹிந்தியில் சமஸ்கிருதத்தைப் புகுத்திவிடுகிறார்கள். இதனால் முஸ்லிம்கள் அதைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அதுபோலவே, லக்ஷ்மணபுரியில் உள்ள முஸ்லிம்கள் தங்களுடைய உருதுவில் பாரசீகச் சொற்களைப் புகுத்தி, ஹிந்துக்களுக்குப் புரியாமற் செய்துவிடுகிறார்கள். பாமர மக்களுக்கு இவ்விரண்டுமே வேற்று மொழிகளாக இருக்கின்றன; ஆகையால், இம்மொழிகளால் அவர்களுக்குப் பிரயோசனமில்லை,

நான் வடக்கே வசித்திருக்கிறேன். ஹிந்துக்கள், முஸ்லிம்கள் இருவருடனும் நெருங்கிப் பழகியிருக்கிறேன். ஹிந்தியில் எனக்குள்ள தேர்ச்சி ஒரு அளவுக்குட்பட்டதுதான் என்றாலும், அதன் மூலம் அவர்களுடன் பேசுவதற்கு எனக்கு எந்தக் கஷ்டமும் ஏற்பட்டதேயில்லை. ஆகையால், அதை ஹிந்தி என்று அழைத்தாலும், உருது என்று அழைத்தாலும், வட இந்தியாவில் மக்கள் பேசும் பாஷை அடிப்படையில் ஒன்றேதான். உருது லிபியில் எழுதி அதை உருது என்று சொல்லுங்கள்; அல்லது அதையே தேவநாகரி லிபியில் எழுதி ஹிந்தி என்று சொல்லுங்கள்.

இனி, அதை எந்த லிபியில் எழுதுவது என்ற பிரச்னை இருக்கிறது. இப்போதைக்கு முஸ்லிம்கள் நிச்சயமாக உருது லிபியைத்

* உலகத்தில் உள்ள எல்லா நாட்டினரும் பேசுவதற்காக தோற்றுவிக்கப்பட்ட ஒரு செயற்கை மொழியே 'எஸ்பரான்டோ' என்று குறிப்பிடப்படுகிறது. போலந்தைச் சேர்ந்த ஜாமன்ஹாப் என்ற பிரமுகரே அந்த மொழியின் சிருஷ்டிகர்த்தா ஆவார். அம்மொழி முதன் முதலாக 1887-இல் வெளியிடப்பட்டது. அந்த மொழி சர்வதேச விவகாரங்களுக்கு இரண்டாவது மொழியாக இருந்து வரவேண்டும் என்பதே அதைச் சிருஷ்டித்தவரின் நோக்கமாகும். பல முக்கிய நவீன மொழிகளிலும் உள்ள பல சொற்கள் உலகம் முழுவதும் சாதாரணமாக உபயோகிக்கப்படுகின்றன. 'எஸ்பரான்டோ' அத்தகைய ஒரு முறையையே அடிப்படையாகக் கொண்டது.

தான் உபயோகிப்பார்கள். பெரும்பாலான ஹிந்துக்கள் தேவ நாகரி லிபியை உபயோகிப்பார்கள். "பெரும்பாலான" என்று தான் நான் சொல்லுகிறேன். ஏனெனில், இன்றைக்கும் கூட ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் உருது லிபியில்தான் எழுதுகிருர் கள். சிலருக்கு நாகரி லிபியே கூடத் தெரியாது. இறுதியாக, இரு வகுப்பினருக்குமிடையே எல்லா அவநம்பிக்கைகளும் அகற்றப்பட்ட பிறகு, அதிகமான வியாபகம் உள்ளதும் அதிக மான பேர்களுக்குப் பழக்கம் உள்ளதுமான லிபியே அதிகமாக உபயோகிக்கப்படும். பின்னர் அதுவே தேசீய லிபியாகவும் ஆகி விடும். இடைக்காலத்தில், உருது லிபியில் தங்கள் மனுக்களை எழுத விரும்பும் ஹிந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் அதற்கு உரிமை இருக்க வேண்டும். அவற்றை எல்லா அரசாங்கக் காரி யாலயங்களிலும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இந்த ஐந்து தகுதிகளையும் பூர்த்தி செய்வதில் வேறு எந்த மொழியும் ஹிந்தியுடன் போட்டி போட முடியாது. ஹிந்திக்கு அடுத்தபடியாக வங்காளி மொழி வருகிறது. ஆனல் வங்காளத் திற்கு வெளியே வங்காளிகளே ஹிந்தியை உபயோகிக்கிருர்கள். ஹிந்தி பேசும் மனிதன் எங்கு சென்ருலும் ஹிந்தியே பேசுகிருன். யாரும் இதைக் கண்டு ஆச்சரியப்படுவதில்லை. ஹிந்தி பேசும் ஹிந்து மதப் பிரசாரகர்களும், உருது பேசும் மௌல்விகளும் இந்தியா பூராவிலும் ஹிந்தி அல்லது உருதுவில்தான் தங்களு டைய மதப் பிரசங்கங்களைச் செய்கிருர்கள். எழுத்தறிவில்லாத பாமரமக்கள் கூட அவர்கள் பேசுவதைப் புரிந்து கொள்ளுகிருர் கள். எழுதப்படிக்கத் தெரியாத ஒரு குஜராத்தி கூட, வடக்கே போனல், ஹிந்தியில் சில வார்த்தைகள் பேச முயற்சி செய் கிருன். ஆனல், வடக்கேயிருந்து வந்து பம்பாயில் சேட் வீட்டில் வாசல் காப்பாளுக பணிபுரியும் 'பையா' குஜராத்தியில் பேச மறுக்கிருன். அவனை வேலைக்கு வைத்துக்கொண்டிருக்கும் சேட்தான் அவனுடன் அரை குறை ஹிந்தியில் பேச வேண்டி யிருக்கிறது. தொலைவில் உள்ள தென் மாகாணங்களில் கூட ஹிந்தி பேசப்படுவதை நான் கேட்டிருக்கிறேன். சென்னையில் ஆங்கிலம் தெரியாமல் ஒன்றும் செய்ய முடியாது என்று கூறுவது சரியல்ல. அங்கு என்னுடைய எல்லா வேலைகளுக்கும் நான் ஹிந்தியையே வெற்றிகரமாக உபயோகித்திருக்கிறேன். ரயில் வண்டிகளில் சென்னை வாசிகள் மற்ற பிரயாணிகளுடன் ஹிந்தி யில் பேசுவதை நான் கேட்டிருக்கிறேன். மேலும் ஹிந்தியை நன்ருக உபயோகிக்கக் கூடிய அளவுக்கு சென்னையிலுள்ள முஸ் லிம்களுக்கு ஹிந்தி தெரியும். இந்தியா பூராவிலும் உள்ள முஸ்லிம்கள் உருது பேசுகிருர்கள் என்பதையும், ஒவ்வொரு மாகாணத்திலும் அவர்கள் ஏராளமாக இருக்கிருர்கள் என்பதை யும் கவனிக்க வேண்டும்.

இவ்வாருக, ஹிந்தி ஏற்கனவே இந்தியாவின் தேசீய மொழி யாக ஸ்தாபிதமாகிவிட்டது. அவ்வாறே அதை வெகு காலமாக

நாம் உபயோகித்துக் கொண்டும் வந்திருக்கிறோம். உருதுவின் தோற்றத்திற்கே இதுதான் காரணம்.

முஸ்லிம் அரசர்கள் பாரசீக மொழியையோ, அரபு மொழியையோ தேசீய மொழியாக்க முடியவில்லை. அவர்கள் ஹிந்தி இலக்கணத்தை ஏற்றுக் கொண்டார்கள்; ஆனால், தங்களுடைய பேச்சில் அதிகமான பாரசீகச் சொற்களை உபயோகித்தார்கள்; எழுதுவதற்கு உருது லிபியை உபயோகித்தார்கள். ஒரு அந்நிய மொழியின் மூலம் சமூக, வர்த்தகத் தேவைகளுக்கு மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள முடியாது என்பதை அவர்கள் கண்டுகொண்டார்கள்.

ஆங்கில ஆட்சியாளர்கள் விஷயமும் இப்படித்தான். ராணுவத்தில் உள்ள சிப்பாய்களிடம் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதைக் கொஞ்சமாவது அறிந்தவர்கள், அதற்கு ஹிந்தி அல்லது உருது வார்த்தைகள் தங்களுக்கு அவசியம் என்பதை அறிவார்கள். இவற்றை இவர்கள் ஒப்புக்கொண்டு, ஆங்கில மொழியிலேயே அந்தச் சொற்களைச் சேர்த்துக்கொண்டும் இருக்கிறார்கள்.

ஹிந்திதான் தேசீய மொழியாக முடியும் என்று இதிலிருந்து புலனாகிறது. சென்னையிலுள்ள படித்த வகுப்பினருக்கு இதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், மகாராஷ்டிரர்கள், குஜராத்திகள், ஸிந்திகள், வங்காளிகள் முதலியவர்களுக்கு இது மிகவும் எளிதாக இருக்க வேண்டும். தேசீய அலுவல்களுக்காக ஹிந்தியை உபயோகிப்பதற்குத் தேவையான தேர்ச்சியைச் சில மாதங்களிலேயே அவர்கள் பெற்றுவிட முடியும். தமிழர்களுக்கு இது அவ்வளவு சுலபமல்ல. தெற்கே உள்ள தமிழும், மற்ற மொழிகளும் திராவிடப் பிரிவைச் சேர்ந்தவை. அவர்களுடைய மொழியின் அமைப்பும், இலக்கணமும் சமஸ்கிருதத்திலிருந்து மாறுபட்டவை. இவ்விரு பிரிவினருக்குமிடையே பொதுவாக உள்ளவை, அவர்களுடைய சமஸ்கிருதச் சொற்கள்தான். ஆனால், இப்போதுள்ள படித்த வகுப்பினருக்கு மட்டும்தான் ஹிந்தி கற்றுக்கொள்ளுவதில் கஷ்டம் இருக்கிறது. ஹிந்தியைக் கற்றுக்கொள்ளுவதற்கு விசேஷ முயற்சி எடுத்துக்கொள்ளும்படி அவர்களுடைய தேசபக்தி உணர்ச்சியின் பெயரால் அவர்களைக் கேட்டுக் கொள்ளுவதற்கு நமக்கு உரிமை இருக்கிறது. ஹிந்தி தனக்குரிய அந்தஸ்தைப் பெற்றுவிட்டால், பின்னர் சென்னையிலுள்ள எல்லாப் பள்ளிகளிலும் அது ஆரம்பிக்கப்படும். மற்ற மாகாணங்களுடன் சென்னையும் தனது தொடர்பை வளர்த்துக் கொள்ளக் கூடிய நிலைமையில் இருக்கும்.

ஆங்கில மொழி பாமர மக்களிடையே பரவவில்லை. ஆனால், ஹிந்தி வெகு சீக்கிரத்தில் பரவிவிடும். தெலுங்குப் பகுதியில் உள்ளவர்கள் ஏற்கனவே இந்தத் திசையில் போக ஆரம்பித்துவிட்டார்கள். எந்த மொழி நமது தேசீய மொழியாவ

தற்குத் தகுதியுள்ளது என்பது பற்றி இந்த மகாநாடு ஒரு முடிவுக்கு வர முடிந்தால், பின்னர் அந்த முடிவை நிறைவேற்றுவதற்கான வழிவகைகளைப் பற்றி யோசிக்கலாம். பொதுவாக, தாய் மொழியின் வளர்ச்சிக்கு கூறப்பட்டுள்ள முறையை, தேவையான மாறுதல்களுடன் தேசீய மொழிக்கும் பயன்படுத்திக்கொள்ளலாம். நமது மாகாணத்தில் குஜராத்தியை போதனு மொழியாக்கும் பொறுப்பை முக்கியமாக நாமேதான் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆனல், தேசீய மொழியைப் பரப்புவதற்கான இயக்கத்தில் நாடு பூராவுமே தனக்குரிய பங்கைச் செய்ய வேண்டும்.

போதனு மொழி, தேசீய மொழி, கல்வியமைப்பில் ஆங்கிலத்திற்குள்ள இடம் ஆகியவற்றைப் பற்றி விவாதித்து விட்டோம். இப்போது, பள்ளிக்கூடங்களில் அமலில் இருந்து வரும் கல்வி முறையில் ஏதாவது குறைபாடுகள் இருக்கின்றனவா என்பதைக் கவனிக்க வேண்டும்.

இந்த விஷயத்தில் கருத்து வேற்றுமை எதுவும் கிடையாது. இப்போதுள்ள முறையில் அடிப்படையான கோளாறு ஏதோ இருக்கிறது என்பதை அரசாங்கம், பொது மக்கள் எல்லோருமே ஒப்புக்கொள்ளுகின்றனர். ஆயினும், எந்த அம்சங்களை அப்படியே வைத்துக் கொள்ளவேண்டும், எந்த அம்சங்களைத் தள்ளிவிட வேண்டும் என்பது பற்றிக் கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. இந்த வேற்றுமைகளைப்பற்றி விவாதிக்க எனக்குத் தகுதியில்லை. ஆகையால். இவை சம்பந்தமாக நான் செய்துள்ள முடிவுகளை மட்டும் உங்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன் :

கல்வி என்பது என் அலுவல் திட்டத்தில் சேர்ந்ததல்ல. ஆகையால், அந்த விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்கு எனக்குத் தயக்கம் ஏற்படுகிறது. தனக்குச் சொந்த அனுபவம் இல்லாத ஒரு விஷயத்தைப்பற்றி ஒருவர் பேசுவதை நான் பார்க்கும்போது, அதை நான் ஆதரிப்பதில்லை. ஏனெனில், அது அவருக்குத் தெரியாத விஷயம். வைத்தியர் ஒருவர் வக்கீலைப்போல நடந்துகொள்ள முயற்சிப்பதைப் பார்த்து ஒரு வக்கீலுக்குக் கோபம் வருவது இயற்கையே. அதேமாதிரி கல்வித் துறையில் அனுபவம் இல்லாதவர்களுக்கு, அதைப்பற்றி குற்றம் குறைகள் கூற உரிமை கிடையாது என்றே நான் கருதுகிறேன். ஆகையால், இந்த விஷயத்தைப் பற்றிப் பேச நான் எப்படித் தகுதி உள்ளவன் என்பது பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

இந்தக் காலத்துக் கல்வி முறையைப் பற்றி இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு நான் சிந்தனை செய்ய ஆரம்பித்தேன். என்னுடைய குழந்தைகள், என்னுடைய சகோதரர்கள், சகோதரிகளின் குழந்தைகள் ஆகியோரின் கல்விப் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ளும்படி நேர்ந்தது. நம்முடைய பள்ளிக்கூடங்

களிலுள்ள குறைபாடுகளை நான் அறிவேன். ஆகையால், என்னுடைய குழந்தைகள் விஷத்தில் சோதனைகள் செய்து பார்த்தேன். இந்த முயற்சியில், அவர்கள் எங்கெங்கோ சுற்றி அலையும்படி செய்தேன் என்பது உண்மைதான். சிலரை வேறு இடங்களுக்கும் அனுப்பினேன். சிலருக்கு நானே பாடம் சொல்லிக்கொடுத்தேன். நான் தென்னாப்பிரிக்காவுக்குப் புறப்பட்ட போதுகூட, இப்போதுள்ள கல்வி முறையில் எனக்குள்ள அதிருப்தி அப்படியேதான் இருந்தது. அங்கே போன பிறகு, இந்த விஷயத்தைப் பற்றி மேற்கொண்டு சிந்திக்க வேண்டியிருந்தது.

"இந்தியர் கல்விக் கழகம்" என்ற ஸ்தாபனத்தின் நிர்வாகப் பொறுப்பு வெகு காலம் என்னிடம் இருந்தது. என்னுடைய பிள்ளைகளை நான் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவில்லை. கல்வியில் எனது சோதனைகளின் பல்வேறு கட்டங்களையும், அவற்றில் அடிக்கடி ஏற்பட்ட மாறுதல்களையும் எனது மூத்த மகன் கவனித்திருந்தான். இதெல்லாம் அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால், அவன் என்னிடமிருந்து விலகி, அகமதாபாத்திலுள்ள ஒரு பள்ளிக்கூடத்தில் கொஞ்சகாலம் படித்தான். எனினும், அதனால் அவனுக்கு விசேஷ நன்மை எதுவும் ஏற்படவில்லை. இதை அவன் பின்னர் உணர்ந்தான். என்னால் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்படாதவர்கள் அதனால் எந்த நஷ்டமும் அடையவில்லை. அவர்கள் போதுமான அளவுக்கு நல்ல கல்வி பெற்றிருக்கிறார்கள் என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். அவர்களிடம் உள்ள குறைபாடுகள் எனக்குத் தெரியும். ஆனால், அவர்கள் என்னுடைய சோதனைகளின் ஆரம்ப கட்டங்களில் சேர்ந்தவர்கள் என்பதுதான் அந்தக் குறைபாடுகளுக்குக் காரணம். ஆகையால், இந்தச் சோதனைகளெல்லாம் ஒரே சங்கிலியின் கரணைகள்தாம் என்றாலும், அவ்வப்போது செய்யப்பட வேண்டியிருந்த மாறுதல்களால் அவை பாதிக்கப்பட்டன.

தென்னாப்பிரிக்காவில் நடந்த சத்தியாக்கிரகப் போராட்டத்தின்போது, என்னுடைய பொறுப்பில் ஐம்பது பிள்ளைகள் கல்வி பயின்றுகொண்டிருந்தார்கள். அந்தப் பள்ளிக்கூடத்தின் போதனை முறை பெரிதும் என்னால் உருவாக்கப்பட்டிருந்தது. அரசாங்கப் பள்ளிகளிலும் மற்றப் பள்ளிகளிலும் நிலவிவந்த முறைக்கு அது முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. அதற்கும், இதற்கும் தொடர்பே இல்லாமலிருந்தது. அதுபோன்றதொரு முயற்சி இப்போது இங்கும் செய்யப்பட்டு வருகிறது. ஆச்சாரிய துருவா, மற்றும் இதர அறிஞர்களின் ஆசிகளுடன் அகமதாபாத்தில் ஒரு தேசீயப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இது ஆரம்பமாகி இப்போது ஐந்து மாதங்களாகின்றன. முன்பு குஜராத்தி கல்லூரியில் இருந்த பேராசிரியர் சங்கல்சந்த்ஷா அதன் தலைமை ஆசிரியர். பேராசிரியர் கஜ்ஜாரிடம் அவர் கல்வி பயின்றவர்; குஜராத்தி மொழியில் பற்

றுதல் உள்ள மற்றும் பலரும் அவருடன் சம்பந்தப்பட்டிருக்கி ருர்கள். இதை ஏற்பாடு செய்ததற்கு முக்கியமாக நான்தான் பொறுப்பாளி. ஆனல், அதனுடன் சம்பந்தப்பட்ட எல்லா ஆசி ரியர்களின் மனப்பூர்வமான ஆதரவு இதற்கு இருக்கிறது. இந்த வேலைக்கு அவர்கள் தங்களை அர்ப்பணம் செய்துகொண் டிருக்கிருர்கள். தங்களுடைய தேவைகளுக்குப் போதும் போதாததாக உள்ள மிகக் குறைந்த சம்பளத்தைக் கொண்டு அவர்கள் திருப்தியடைந்திருக்கிருர்கள். எனக்குப் பல அலு வல்கள் இருப்பதால், இந்தப் பள்ளிக்கூடத்தில் பாடம் சொல் லிக் கொடுக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளுவதற் கில்லை. இருந்தாலும், அது எப்போதுமே என் மனத்தில் இருந்து கொண்டுதான் இருக்கிறது. திட்டத்தை வகுத்தவன் என்பது தான் இந்தப் பள்ளிக்கூடத்திற்கு நான் செய்துள்ள உதவியா கும். ஆனல், அத்திட்டத்தை வகுக்கும் விஷயத்தில் நான் மிகுந்த சிந்தனை செய்திருக்கிறேன். இப்போதுள்ள கல்வி முறையின் குறைபாடுகளைப் பற்றி நான் சொல்லுவதை நீங்கள் பரிசீலனை செய்யும்போது, மேலே குறிப்பிட்ட விஷயங்களை நினைவில் வைத்துக்கொள்ளுவீர்கள் என்று நம்புகிறேன்.

இப்போதுள்ள முறையில், இந்தியக் குடும்பங்களில் நிலவும் சூழ்நிலையைப்பற்றி கவனம் செலுத்தப்படவில்லையென்றே எப் போதும் நான் கருதிவந்திருக்கிறேன். தங்களுடைய கல்வித் திட்டத்தை வகுக்கும்போது, பிரிட்டிஷார் நம்முடைய விசேஷ தேவைகளைப்பற்றி சிந்திக்கவில்லை. இது இயற்கையே!

மெக்காலே நமது இலக்கியத்தை இகழ்ச்சி செய்தார். மூட நம்பிக்கைகளுக்கு நாம் அளவுக்கு மீறி இடம் கொடுத்துள் ளோம் என்று அவர் நினைத்தார். இந்தத் திட்டத்தை வகுத்த வர்களில் பெரும்பாலோருக்கு நமது மதத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. நமது வேத சாஸ்திர நூல்கள் எல்லாம் வெறும் மூட நம்பிக்கைகளின் தொகுப்புகள் என்று கருதப்பட்டன. நமது நாகரிகம் தீமைகள் நிறைந்ததாக இருக்கிறதென்று அவர்களுக் குத் தோன்றியது. நாம் பலவீனமான, பின்தங்கிய ஒரு நாட் டைச் சேர்ந்தவர்களாகையால், நம்முடைய சமூகம் முதலிய மற்ற ஸ்தாபனங்களில் பல குறைபாடுகள் இருக்க வேண்டும் என்று கருதப்பட்டது. ஆகையால் அவர்களுடைய நோக்கம் நேர்மை யானதாக இருக்கலாம் என்ருலும், தவருன ஒரு திட்டத்தை அவர்கள் வகுத்தார்கள். தங்களைச் சுற்றியுள்ள உடனடியான தேவைகளில் மட்டுமே அவர்கள் கவனம் செலுத்தினர்கள். ஆகையால், இந்தப் பிரச்னையை அவர்கள் ஆழ்ந்து பரிசீலனை செய்யவில்லை. புதிய ஆட்சியாளர்களுக்கு உதவி செய்வதற்கு வக்கீல்கள், வைத்தியர்கள், குமாஸ்தாக்கள் முதலியவர்கள் வேண்டியிருக்கும் என்பதும், மக்களுக்கு இந்தப் புதிய விஷயங் களில் பயிற்சி அளிக்கவேண்டும் என்பதுமே அவர்களுடைய திட்டத்தின் நோக்கமாகும். இதன் விளைவாக, நம்முடைய தேவைகளையோ, சூழ்நிலையையோ கொஞ்சம்கூட கவனிக்

காமல் பாட புத்தகங்கள் எழுதப்பட்டன. ஒரு ஆங்கிலப் பழமொழி கூறுவது போல் "குதிரைக்கு முன்னால் வண்டி வைக்கப்பட்டது."

**சரித்திரமும் பூகோளமும்:** குழந்தைகளுக்கு சரித்திரமும், பூகோளமும் சொல்லிக் கொடுக்கும்போது, முதலில் அவர்களுடைய நாட்டின் சரித்திரத்தையும், பூகோளத்தையும் போதிக்க வேண்டும் என்று ஸ்ரீ மலபாரி கூறியிருக்கிறார். முதலில் எனக்கு பூகோளம் சொல்லிக் கொடுக்கப்பட்டபோது, இங்கிலாந்திலுள்ள ஜில்லாக்களின் பெயர்களை நான் உருப்போட வேண்டியிருந்தது எனக்கு நினைவில் இருக்கிறது. அதன் விளைவாக, பூகோளம் போன்ற ருசிகரமான ஒரு பாடம் எனக்கு விஷமாகி விட்டது. அதுபோலவே, சரித்திரமும் உற்சாகமற்றதாக இருந்தது. ஒருவருடைய நாட்டினிடம் பற்றுதலும், பெருமையும் ஏற்படச் செய்வதற்கு சரித்திரம் நல்ல ஒரு கருவியாகும். நான் பள்ளிக்கூடத்தில் படித்த காலத்தில், எனக்குத் தவறான வழியில் சரித்திரம் போதிக்கப்பட்டதால், என் நாட்டினிடம் 'அம்மாதிரி உணர்ச்சிகள் எனக்கு ஏற்படவில்லை. நாட்டுப் பற்று ஏற்படுவதற்கு, பள்ளிப் பாடமாக வைக்கப்படாத மற்ற புத்தகங்களை நான் படிக்கவேண்டியிருந்தது.

**கணக்கு:** கணக்கு முதலிய மற்றும் அதனுடன் சம்பந்தப்பட்ட பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதில் கூட, உள்ளூர் முறைகளுக்கு இடமே அளிக்கப்படவில்லை. கணக்கைப் பற்றிய புராதன முறைகள் நிராகரிக்கப்பட்டன. எனவே, பழைய தலைமுறையினரைப் போல், துரிதமாக கணக்குப் போடும் சக்தியை நாம் இழந்துவிட்டோம்.

**விஞ்ஞானம்:** இன்று பள்ளிக்கூடங்களில் சொல்லித் தரப்படும் விஞ்ஞானம் உப்பு சப்பில்லாமல் வறண்டதாக இருக்கிறது. இத்துறையில் போதிக்கப்படுபவைகளை நமது குழந்தைகள் அதிகமாகப் பயன்படுத்திக்கொள்ள முடியாது. வான சாத்திரம் போன்ற ஒரு பாடத்தை, திறந்த வெளியில் நின்றுகொண்டு, நட்சத்திரங்களைச் சுட்டிக்காட்டி போதிக்க வேண்டும். ஆனால், இதை புத்தகங்களின் மூலம் போதிக்கிறார்கள். தண்ணீரில் என்னென்ன துணைப் பொருட்கள் இருக்கின்றன என்பது, பள்ளிக்கூடத்தை விட்டு வெளியே வந்த பிறகு பல மாணவர்களுக்கு நினைவில் இருக்குமென நான் நினைக்கவில்லை.

**ஆரோக்கியம்:** தேக ஆரோக்கியம் பற்றிய அறிவு சம்பந்தப்பட்டவரையில், அதற்கான போதனையே அளிக்கப்படவில்லை என்று கூறுவது மிகையாகாது. 60 ஆண்டுகள் கல்வி பயின்ற பிறகும் கூட, காலரா, பிளேக் போன்ற கொள்ளை நோய்களிலிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்கு நாம் கற்றுக் கொள்ளவில்லை. இது வியப்பையே அளிப்பதாக இருக்கிறது. இந்த நோய்களை வைத்தியர்கள் ஒழித்துக் கட்ட முடியாமல்

இருப்பது, நமது ஆரோக்கியம் பற்றிய கல்வி போதனைக்கு ஒரு பெரிய இழுக்கு என்று நான் கருதுகிறேன். ஆயிரக்கணக்கான வீடுகளை நான் பார்த்திருக்கிறேன். ஆனால், தேக ஆரோக்கியம் பற்றிய அறிவு இந்த வீடுகளில் இடம் பெற்றிருப்பதற்கான அறி குறிகள் எதையும் நான் காணவில்லை. ஒருவரைப் பாம்பு கடித்து விட்டால் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி நமது பட்ட தாரிகளுக்குத் தெரியுமா? தெரியும் என்று நான் நிச்சயமாகக் கருதுவதற்கில்லை. சிறு வயது முதற்கொண்டே தேகாரோக் கியம் பற்றிய விதிகளைத் தெரிந்துகொள்வதற்கு நமது வைத்தியர் களுக்கு வாய்ப்புக் கிடைத்திருந்தால், இப்போதுள்ளதைப் போல் அவர்கள் இவ்வளவு மோசமாக இருக்கமாட்டார்கள். அந்நியக் கல்வி முறையின் விபரீதமான பலன்தான் இது. அநேகமாக, உலகத்தில் எல்லாப் பகுதிகளிலும் உள்ள மக்கள் கொள்ளை நோய்களை எப்படியோ ஒழித்துவிட்டார்கள். ஆனால், இங்கே அவை நிலைத்துவிட்டன என்றே தோன்றுகிறது. ஆயிரக் கணக்கான இந்தியர்கள் இளமையில் இறந்து விடுகிறார்கள். வறு மைதான் இதற்குக் காரணம் என்று சொல்லுகிறார்களா? அப்படி யானாலும் கூட, அறுபது வருஷங்களாகக் கல்வி போதித்தும் கூட, இந்தியாவில் ஏன் இவ்வளவு பரவலாக வறுமை நிலவுகிறது என்பதற்கு கல்வி இலாகா பதில் சொல்லித்தாக வேண்டும்.

சில பாடங்கள் நமக்கு போதிக்கப்படுவதே இல்லை. இனி அவற்றைக் கவனிப்போம். ஒழுக்கத்தை வளர்ப்பதுதான் கல்வி யின் நோக்கமாக இருக்கவேண்டும். மதம் இல்லாமல் எப்படி ஒழுக்கத்தை வளர்க்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. நம்மையறியாமலேயே நாம் " இங்குமில்லை, அங்குமில்லை " என்ற ஒரு அவல நிலைக்கு உட்படுத்தப்பட்டுவிட்டோம் என்பதைச் சீக் கிரத்தில் நாம் உணருவோம். இந்த அம்சத்தைப்பற்றி நான் அதிகம் சொல்லப் போவதில்லை. ஆனால், நான் ஆயிரக்கணக் கான ஆசிரியர்களைச் சந்தித்திருக்கிறேன். வேதனை நிறைந்த பெருமூச்சுடன் தங்களுடைய அனுபவங்களை அவர்கள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். இந்த மகாநாடு ஆழ்ந்து சிந்தனை செய்ய வேண்டிய அம்சம் இது. பள்ளிகளுக்குச் செல்லும் பையன்களும், பெண்களும் ஒழுக்க விதிகளைப் பற்றி அலட்சியமாக நினைக்கும் விதத்தில் வளர்க்கப்பட்டால், பின்னர் எல்லாம் மீட்சிக்கே இட மில்லாமல் போய்விடும்.

**விவசாயம்:** நமது நாட்டில் உள்ள மக்களில் 85 முதல் 90 சதவிகிதம் வரை விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்தக் குறிப்பிட்ட வேலையைப் பற்றி எவ்வளவு தெரிந்துகொண்டாலும் தகும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆயினும் இதில் உள்ள பரிதாபம் என்னவென்றால், உயர்தரப்பள்ளிக் கல்வி முடியும் வரையில், பள்ளிக்கூட பாட திட்டத்தில் இது இடம் பெறவேயில்லை. இந்தியாவில் மட்டும்தான் இத்தகைய அவல நிலை அனுமதிக்கப்படுகிறது.

**நெசவுத் தொழில் :** நமது நெசவுத் தொழிலும் கஷ்டத்திற்கு உள்ளாகியிருக்கிறது. இது முழுமையான ஒரு குடிசைத் தொழிலாக இருந்தது. அறுவடை முடிந்த பிறகு விவசாயிக்கு வேறு வேலை இல்லாமலிருந்த காலத்தில், விவசாயி சம்பாதிப்பதற்கு இது உதவியாக இருந்தது. பாட திட்டத்திலிருந்து நெசவுத் தொழிலும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நமது கல்வி, குமாஸ்தாக்களைத்தான் உற்பத்தி செய்ய முடியும். பொற்கொல்லர்கள், கருமான்கள், செருப்பு தைப்பவர்கள் போன்றோர் கூட, இதன் வலையில் சிக்கிக்கொண்டுவிட்டால் குமாஸ்தாக்களாகி விடுகிறார்கள். எல்லோரும் நல்ல கல்வி பெறுவதற்கு வாய்ப்பு இருக்க வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். தேசத்திலுள்ளவர்கள் யாவரும் குமாஸ்தாக்களாகிவிட்டால், அதனால் நமக்கு எப்படி பலன் ஏற்பட முடியும் ?

**ராணுவக் கலை :** நம்முடைய கல்வியமைப்பில் ராணுவக் கலைக்கு இடமில்லை. தனிப்பட்ட முறையில் இதைப் பற்றி நான் ஆட்சேபிக்கவில்லை. இது தற்செயலான ஒரு லாபம் என்றுகூட நான் நினைக்கிறேன். ஆனால், நம் மக்களில் சிலர் ஆயுதங்களை உபயோகிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினால், அதற்கு அவர்களுக்கு வாய்ப்பு இருக்க வேண்டும். நமது கல்வித் திட்டத்தில் இதுவும் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது.

**சங்கீதம் :** சங்கீதத்தின் விஷயமும் இப்படித்தான். இது நம்மைப் பெரிதும் பண்படுத்தவல்ல ஒரு சக்தியாகும். இந்த முக்கியமான உண்மையில் நாம் போதிய கவனம் செலுத்தவில்லை; அப்படி செலுத்தியிருந்தால் நமது பையன்களுக்கும், பெண்களுக்கும் சங்கீதம் கற்றுக்கொடுக்க நாம் வேண்டிய ஏற்பாடு செய்திருப்போம். வேதத்திலுள்ள சுலோகங்கள் சங்கீதத்தை அடிப்படையாகக் கொண்டே இயற்றப்பட்டுள்ளன. நல்ல இனிமையான சங்கீதம் உள்ளத்தின் வேதனையை ஆற்றக்கூடிய ஆற்றல் உள்ளது. சில சமயங்களில், பெரிய கூட்டங்களில் அதிகமான சலசலப்பு ஏற்படுவதைக் காண்கிறோம். எல்லாரும் சேர்ந்து ஒரு தேசீய கீதத்தைப் பாடினால், இதைத் தடுத்துவிட முடியும். ஏராளமான பேர்கள் ஒருமிக்கச் சேர்ந்து பாடும்போது, அது உற்சாகமளிப்பதாகவும், உள்ளத்தைத் தூண்டிவிடுவதாகவும் இருக்கிறது. வீர, தீர உணர்ச்சிகள் நிறைந்த ஒரு பாடலை நூற்றுக்கணக்கான பையன்கள் சேர்ந்து பாடுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். படகு தள்ளுபவர்களும், மற்றத் தொழிலாளர்களும் தமது வேலையைச் செய்துகொண்டே "ஹரி ஹர," "அல்லா பேலி" என்று குரல் எழுப்புவது மிகவும் சகஜமாக இருக்கிறது. தங்களுடைய வேலையை இன்னும் எளிதாக்கிக்கொள்வதற்காகவே அவர்கள் இப்படிச் செய்கிறார்கள். சங்கீதத்தின் சக்திக்கு இது ஒரு உதாரணமாகும். குளிராக இருக்கும்போது, அதை மறப்பதற்காக எனது ஆங்கில நண்பர்கள் பாடுவதை நான் பார்த்திருக்கிறேன். பிரபலமாக உள்ள நாடகங்களில் பாடும் பாட்டுகளை நமது

பையன்கள் சுலபமாகக் கற்றுக் கொண்டுவிடுகிறார்கள். ஹார்மோனியம் போன்ற சாதாரண சங்கீதக் கருவிகளிலும் அதை வாசிக்கப் பழகிவிடுகிறார்கள். இது நல்ல சங்கீதத்தில் ருசியை வளர்த்துக்கொள்ளுவதைத் தடுத்துவிடுகிறது. இதற்குப் பதிலாக, சாத்திரீயமான நல்ல சங்கீதத்தில் அவர்களுக்குப் பயிற்சியளித்தால், இப்போது பிரபலமாக இருக்கும் அர்த்தமில்லாத பாட்டுகளைப் பாடி அவர்களுடைய நேரம் வீணுவது நல்ல வழியில் செலவாகும். நல்ல பயிற்சி பெற்ற ஒரு பாடகர் சுருதி தவறியோ, தாளம் தவறியோ பாடமாட்டார். அதுபோலவே, சரியான சங்கீதத்தைக் கற்றுக்கொள்ளுபவர் ஆபாசமான பாட்டுகளைப் பாடமாட்டார். நம்முடைய கல்வி யமைப்பில் சங்கீதத்திற்கு இடம் கொடுக்க வேண்டும். மக்களின் கலாசார விழிப்புக்கு இது பெரிதும் உதவும் என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்த விஷயத்தைப் பற்றி, விஷய ஞானமுள்ள டாக்டர் ஆனந்த குமாரசுவாமியின் கருத்துகள் ஆழ்ந்த பரிசீலனைக்கு உரியவை.

**உடற்பயிற்சி:** உடற்பயிற்சிக்காக, பல்வேறு விளையாட்டுகளைச் சேர்த்திருக்கிறார்கள். ஆனால் இந்தத் துறையிலும் கூட, அவற்றின் உண்மையான அர்த்தமோ, நோக்கமோ உணரப்பட்டதாகத் தோன்றவில்லை. நமது உள்நாட்டு விளையாட்டுகள் புறக்கணிக்கப்பட்டிருக்கின்றன. டென்னிஸ், கிரிக்கெட், கால்பந்து ஆகிய விளையாட்டுகள் பிரபலமாகிவிட்டன. இந்த மூன்று ஆட்டங்களும் அனுபவிக்கத் தக்கவைதான். ஆனால், இந்த மேல்நாட்டு விளையாட்டுகளில் நமக்கு இவ்வளவு மோகம் இல்லாதிருந்தால், கயிறு இழுத்தல், சிலம்பம், வில்வித்தை போன்ற அதிகச் செலவில்லாத, ஆனால் சுவாரஸ்யமான நமது உள்நாட்டு விளையாட்டுகளைக் கைவிட்டிருக்கமாட்டோம். மல்யுத்தம், முஷ்டியுத்தம் முதலிய மற்றும் பல இந்திய உடற்பயிற்சிகளும் அளித்து வந்த பழைய சங்கங்கள் அநேகமாக மறைந்தே போய்விட்டன. அவற்றை யாரும் பயன்படுத்திக்கொள்ளாததே இதற்குக் காரணம். மேல் நாட்டு முறைகளில் நாம் ஏற்றுக்கொள்ளக் கூடியது "டிரில்' ஒன்றுதான் என்று நான் நினைக்கிறேன். எப்படி நடக்க வேண்டும் என்பது நமக்குத் தெரியவில்லையென்று ஒரு சமயம் ஒரு நண்பர் என்னிடம் சொன்னார். பலர் நடந்து செல்லவேண்டியிருக்கும்போது அடிபோட்டு நடக்க வேண்டியிருந்தால், அது நமக்குத் தெரிவதில்லை. அமைதியாகவும், சீராகவும் தாளத்திற்குச் சரியாகவும் நடந்து செல்வதற்கு நமக்குத் தெரியவே இல்லை; நூற்றுக்கணக்கில், ஆயிரக்கணக்கில் இருக்கும்போது இருவராகவோ, நாலுபேர்களாகவோ சேர்ந்து சரியாக நடக்க நமக்குத் தெரியவே இல்லை. இதுபோல் நடக்கும் பயிற்சி, யுத்தத்திற்குத்தான் பயன்படும் என்பதில்லை. வேறு பல சேவைகளுக்கும் இது மிகவும் உபயோகமாக இருக்கும். உதாரணமாக, தீயை அணைக்கும் போதும், நீரில் மூழ்கியவர்களை மீட்கும்போதும், 'டிரில்' பயிற்சி இருப்பது நல்ல துணையாய் இருக்கும். ஆகையால், நமது

பள்ளிக்கூடங்களில், உள்நாட்டு விளையாட்டுகள், உடற்பயிற்சி முறைகள், மேல் நாட்டு 'டிரில்' ஆகியவற்றில் பயிற்சியளிப்பது அவசியமாகும்.

**பெண்கள் கல்வி :** பெண்களுக்கு அளிக்கப்படும் கல்வியும், ஆண்கள் கல்வியைப் போலவே குறைபாடுகள் உள்ளதாகத்தான் இருக்கிறது. ஆண்களுக்கும், பெண்களுக்கும் இடையே உள்ள உறவுகளைப் பற்றியோ, இந்திய சமுதாயத்தில் பெண்கள் வகிக்கும் ஸ்தானத்தைப் பற்றியோ அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

சிறுவர்கள், சிறுமிகள் இரு சாராருக்குமே ஆரம்ப காலக் கல்வி பெரும் அளவுக்கு ஒரே விதமாகத்தான் இருக்கும் என்பதை ஒப்புக்கொள்ளலாம். அது ஒன்றைத் தவிர, மற்ற எல்லா அம்சங்களிலும் பெரும் மாறுபாடுகள் இருக்கின்றன. சிருஷ்டியிலேயே இயற்கை அன்னை, ஆடவர்களுக்கும், பெண்களுக்கும் இடையே வேறுபாடுகளை வைத்திருக்கிறாள். அதுபோலவே, ஆடவர்களுக்கும், பெண்களுக்கும் அளிக்கும் கல்வியிலும் வேறுபாடு இருக்க வேண்டும். இருவரும் சமமானவர்கள் என்பது உண்மைதான். ஆனால், அவர்கள் எம்மாதிரி வேலை செய்ய வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறதோ, அதில் வித்தியாசம் உண்டு. குடும்பத்தைக் கட்டியாள்வது பெண்ணின் உரிமை. அதற்கு வெளியே ஆடவன்தான் எஜமானன். ஆடவன் சம்பாதித்துப் போடுகிறான்; பெண் அதைச் செலவு செய்து, மிச்சம் பிடித்து வைக்கிறாள். பெண், குழந்தைகளை வளர்க்கிறாள். அவள் அவர்களுடைய அன்னை. அவர்களுடைய ஒழுக்கத்தை வளர்ப்பது அவளுடைய பொறுப்பு. அவர்களுக்கு விஷயங்களைப் புகட்டுவதும் அவள்தான். எனவே, அவள் மனித இனத்தின் அன்னையாக இருக்கிறாள். அந்த அர்த்தத்தில் பார்க்கும்போது, ஆடவனை மனித இனத்தின் தந்தை என்று சொல்ல முடியாது. ஒரு தந்தைக்குத் தன் மகன் மீது குறிப்பிட்ட வயதுக்குப் பிறகு செல்வாக்கு இருப்பதில்லை; ஆனால், தாயின் விஷயம் அப்படியல்ல. பிள்ளை பருவத்தை அடைந்த பிறகு கூட, அன்னையினிடம் குழந்தையைப் போலவே நடந்து கொள்ளுகிறான். ஆனால், தகப்பனிடம் அவ்விதம் நடந்துகொள்ள முடியாது.

இந்த ஏற்பாடு இயற்கையானது, சரியானது என்று கருதப்பட்டால், ஒரு பெண் தன் ஜீவனத்திற்குச் சம்பாதிக்க வேண்டிய அவசியம் இருக்கக் கூடாது. பெண்கள் தந்தி குமாஸ்தாக்களாகவும், டைப் அடிப்பவர்களாகவும், அச்சு கோர்ப்பவர்களாகவும் வேலை செய்ய வேண்டியிருக்கும் ஒரு சமுதாயம், சீராக அமைக்கப்பட்ட ஒரு சமுதாயம் அல்ல என்றே நான் நினைக்கிறேன். தார்மிக, பொருளாதாரத் துறையில் அந்த சமுதாயம் சூன்ய நிலையில் இருக்கிறது என்பதற்கு அது ஓர் அடையாளமாகும். அந்தச் சமுதாயத்தில் உள்ள மனிதர்கள், தங்களுடைய மூலதனத்தையே

எடுத்துச் சாப்பிட ஆரம்பித்துவிட்டார்கள் என்பதற்கும் அது ஒரு அறிகுறியாகும்.

ஆகையால், பெண்களை அறிவிலிகளாக அடக்கிவைத்திருப்பது எவ்வளவு தவறனதோ அதுபோலவே, சாதாரணமாக ஆடவர்கள் செய்ய வேண்டிய காரியங்களை அவர்களிடம் ஒப்படைப்பதும் தவறாகும். ஏனெனில், அது பலவீனத்திற்கு அடையாளம், அடக்கியாளுவதற்கும் சமம் ஆகும்.

எனவே, ஒரு குறிப்பிட்ட வயதுக்குப் பிறகு, ஆடவர்களுக்கு அளிக்கப்படும் கல்வியிலிருந்து மாறுபட்ட ஒரு கல்வியைப் பெண்களுக்கு அளிக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும். குடும்பத்தை நிர்வகிக்கும் விதத்தை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். கர்ப்பமாயிருக்கும் போது என்ன செய்யலாம், என்ன செய்யக் கூடாது என்பதையும், குழந்தைகளை எப்படிப் பராமரித்து வளர்ப்பது என்பதையும் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். இது புதிய கருத்தாகையால், இதற்கான ஏற்பாடுகளைச் செய்வது கஷ்டம்தான். நல்ல விஷய அறிவும், அனுபவமும், ஒழுக்கமும் உள்ள ஆடவர்களும், பெண்களும் அடங்கிய ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும். அந்தக் கமிட்டி இந்தப் பிரச்னையைப் பரிசீலனை செய்து, ஒரு சரியான முடிவுக்கு வந்து, அதற்கு ஏற்ற ஒரு திட்டத்தையும் தயாரிக்கும். இப்போதுள்ள நிலைமையில் இதுதான் சரியான வழியாக இருக்கும்.

பெண்கள் குழந்தைப் பருவத்தைத்தாண்டி, பருவ வயதை அடையும் போது, அவர்களுக்குத் தேவையான கல்வியை எப்படி அளிப்பது என்பதை இந்தக் கமிட்டி கண்டு பிடிக்க வேண்டும். ஆனல், துரதிர்ஷ்டவசமாக, குழந்தைப் பிராயத்திலிருக்கும் போதே நம் நாட்டில் பல பெண்களுக்கு மணமாகிவிடுகிறது. மேலும் இவர்களுடைய எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போகிறது. மணமான உடனேயே அவர்கள் சமூக வாழ்விலிருந்து மறைந்து விடுகிறர்கள். "பகினி புஸ்தக் மாலா" என்ற தொகுப்பின் முதல் புத்தகத்திற்கு நான் எழுதியுள்ள முகவுரையில் இது சம்பந்தமான என்னுடைய கருத்துகளை விரிவாகக் கூறியிருக்கிறேன். அவற்றைக் கீழே தருகிறேன்:

'பெண்களுக்கு எழுதப் படிக்க மாத்திரம் கற்பிப்பதன் மூலம், பெண்கள் கல்விப் பிரச்னையில் நாம் வெற்றிபெற்று விட முடியாது. குழந்தை மணம் என்ற பூதத்திற்கு ஆயிரக்கணக்கான பெண்கள் பலியாகி, பன்னிரண்டாவது வயதிலேயே அவர்கள் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து விடுகிறர்கள். சிறு பெண்களாக இருப்பவர்கள் திடீரென்று குடும்பத் தலைவிகளாகி விடுகிறர்கள். இந்தக் கொடிய வழக்கம் நீடிக்கும்வரையில், ஆடவர்கள் பெண்களுக்கு ஆசிரியர்களாக இருக்கக் கற்றுக் கொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை. பெண்கள் கல்வியைப்பற்றி நாம் வைத்திருக்கும் நம்பிக்கைகளில் பல, இந்த விஷயத்தில் ஆடவர்கள்

தங்களுடைய கடமையை எப்படி நிறைவேற்றுகிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கின்றன.

இப்போது பெண்கள் நமது பணியாட்களாகவும், சுகானுபவப் பொருள்களாகவும் இருப்பது மாறவேண்டும்; அதற்குப் பதிலாக அவர்கள் நமது வாழ்க்கைத் துணைவிகளாகவும், வாழ்க்கைப் போராட்டத்தில் சம உரிமைகள் உள்ள கூட்டாளிகளாகவும், நம்முடைய சுகதுக்கங்களில் பங்கு கொள்ளுபவர்களாகவும் மாற வேண்டும். இதில் நாம் வெற்றி பெறுதவரையில், நம்முடைய முயற்சிகள் யாவும் முற்றிலும் வீண் என்றே தோன்றுகிறது. பெண் இனத்தை மிருகங்களாகக் கருதும் மனிதர்கள் சிலர் இருக்கிறார்கள். இந்த வருந்தத்தக்க நிலைமைக்கு, சமஸ்கிருத சுலோகங்களும், துளஸிதாசரின் வாக்கியமுமே காரணம் என்று சொல்லலாம். தம்முடைய ராமாயணத்தில் ஒரு இடத்தில் துளஸிதாசர் பின்வருமாறு கூறுகிறார்: "பேரிகை, முட்டாள், சூத்திரன், பெண் ஆகியவைகளெல்லாம் அடிப்பதற்கு ஏற்ற பொருள்கள் ஆகும்". துளஸிதாசரிடம் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு; ஆனால், என்னுடைய பக்தி கண்மூடித்தனமானது அல்ல. ஒன்று, இந்த வாக்கியம் இடைச் செருகலாக இருக்க வேண்டும்; அல்லது அவர்தான் அதை எழுதினார் என்றால், போதிய சிந்தனையின்றி அவர் அதை எழுதியிருக்க வேண்டும்; அக்காலத்தில் இருந்த சமூகத்தின் அபிப்பிராயத்தைப் பிரதிபலிப்பதாகக் கருதி எழுதியிருக்க வேண்டும். சமஸ்கிருத சுலோகங்கள் சம்பந்தப்பட்டவரையில், எழுத்தில் உள்ள ஒவ்வொரு சுலோகமுமே, சாத்திரங்களிலுள்ள தரும நியாயத்திற்கு சமமானது என்று சிலர் தவறாக எண்ணுவது போல் தோன்றுகிறது. இந்தத் தவறான எண்ணத்தை எதிர்த்து நாம் போராட வேண்டும். பெண்களை மட்டரகமானவர்களாகக் கருதும் பழக்கத்தை வேருடன் களைந்தெறிய வேண்டும். மற்றொரு புறம் பார்த்தால், நம்மில் பலர் காம உணர்ச்சிகளுக்கு வசப்பட்டு பெண்களைப் பிரமாதமாகப் போற்றுகிறோம்; விக்கிரகங்களுக்கு அலங்காரம் செய்வதைப் போலவே அவர்களையும் நகைகளால் அலங்காரம் செய்கிறோம். இந்தத் தீமையிலிருந்தும் நாம் விடுபட வேண்டும். மகாதேவனுக்கு பார்வதியும், ராமனுக்கு சீதையும், நளனுக்கு தமயந்தியும் எப்படி இருந்தார்களோ, அதுபோலவே பெண்களுக்கும் நமக்குமிடையே உள்ள உறவுகள் உருவாகும் வரையில், நாம் நமது இறுதி லட்சியத்தில் வெற்றி பெற்றவர்களாக மாட்டோம். அந்த நிலைமையில் அவர்கள் நம்முடைய வாதங்களில் கலந்து கொள்ளுவார்கள்; சம அந்தஸ்துடன் நம்முடன் வாதப் பிரதிவாதம் செய்வார்கள்; நமது கருத்துகளைப் புரிந்து கொண்டு அவற்றிற்கு ஆக்கம் அளிப்பார்கள்; இரக்கத்தை அடிப்படையாகக் கொண்ட அருமையான அவர்களுடைய உள்ளுணர்வைக் கொண்டு நம்முடைய கஷ்டங்களைப் புரிந்து கொள்ளுவார்கள்; நம்முடைய கூட்டாளிகளாக இருந்து அவற்றைத் தீர்ப்பதற்கு உதவி செய்வார்கள்; தேவை ஏற்படும்போது, நமது

மனத்திற்கு மிகுந்த சாந்தியையும் ஆறுதலையும் அளிப்பவர்களாகவும் இருப்பார்கள். பெண்களுக்காகப் பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பதால் மட்டும், இந்த லட்சியத்தை எட்டி விட முடியாது. குழந்தை மணம் என்ற சுருக்குக் கயிறு நம் கழுத்தைச் சுற்றிக் கொண்டிருக்கும் வரையில், ஆடவர்களே பெண் இனத்திற்கு ஆசிரியர்களாக இருக்க வேண்டும். ஆடவர்கள் பெண்களுக்கு அளிக்கும் இந்தக் கல்வி, எழுத்தறிவிப்பாய் மட்டும் இராது; சமூக சீர்திருத்தமும், அரசியலும் கூட அதில் சேர்ந்திருக்கும்.

எழுத்தறிவு என்பது, மேலே குறிப்பிட்ட விஷயங்களை போதிப்பதற்கு ஒரு பூர்வாங்கமாகவே இருக்கவேண்டும். எழுத்தறிவு இல்லாமலே கூட இவற்றைப் போதிக்கலாம். இந்த முறையில் தமது மனைவிக்குக் கல்வி போதிக்க விரும்பும் ஒருவர், மனைவியைப்பற்றித் தம்முடைய மனப் போக்கையே மாற்றிக் கொள்ள வேண்டும். மனைவியுடன் சேர்ந்து கணவனும் மாணவனாக இருப்பான்; கல்வியில் அவள் முதிர்ச்சியடையும் வரையில் முழு பிரம்மச்சரியத்தையும் அனுஷ்டிப்பான்; 12 முதல் 15 வயது வரையில் உள்ள சிறுமியைக் குழந்தை பெறும் வேதனைக்கு உட்படுத்தவே மாட்டான். இதை நினைத்தால் ஒருவருக்கு நடுக்கம் ஏற்பட வேண்டும். இப்படிச் செய்தால், நாம் இப்போதிருப்பதைப்போல் செயலின்மை என்ற சுமையின் கீழ் நசுக்குண்டவர்களாக இருக்க மாட்டோம்.

மணமான பெண்களுக்காக வகுப்புகள் ஆரம்பிக்கப்படுகின்றன; அவர்களுக்குப் பாட போதனை அளிப்பதற்காக விரிவுரைகளும் ஏற்பாடு செய்யப்படுகின்றன. ஓரளவுக்கு இவையெல்லாம் நன்மை பயக்கக்கூடியவையே. இந்த வேலையில் ஈடுபட்டிருப்பவர்கள் ஒரு நல்ல காரியத்திற்காகத் தங்களுடைய நேரத்தையும் சக்தியையும் தியாகம் செய்து வருகிறார்கள். இது பாராட்டத்தக்கதுதான். ஆனால், தங்களுடைய கடமையை நிறைவேற்றவும் ஆடவர்கள் முன்வர வேண்டும். ஏனெனில், அப்படிச் செய்யாவிடில், இந்த முயற்சியெல்லாம் அதிகமான பலனை அளிக்காது. ஆழ்ந்து சிந்தனை செய்து பார்த்தால், நான் கூறுவது உண்மைதான் என்பது தெளிவாகும்.

**ஆரம்பக் கல்வி:** எங்கு திரும்பினாலும், பலவீனமான அஸ்திவாரங்களின் மீது மிகப் பெரிய கட்டிடங்கள் எழுப்பப்படுவதைக் காண்கிறோம். ஆரம்பக் கல்விக்காகத் தேர்ந்து எடுக்கப்படும் ஆசிரியர்களை, மரியாதைக்காக வேண்டுமானால் ஆசிரியர்கள் என்று அழைக்கலாம். உண்மையில், இவர்களை ஆசிரியர்கள் என்று அழைப்பது அந்த வார்த்தையை துஷ்பிரயோகம் செய்வதாகும். ஒருவருடைய வாழ்க்கையிலே குழந்தைப் பருவம்தான் மிக முக்கியமான காலம். இந்தக் காலத்தில் பெறும் அறிவு எந்தக் காலத்திலும் மறக்கப்படுவதில்லை. ஆனால் இந்தக் காலத்தில் குழந்தைக்கு அறிவு போதிக்கப்படுவதில்லை. பள்ளிக்கூடம் என்று பெயருள்ள எதிலாவது அவர்களைச் சேர்த்துவிடுகிறார்கள்.

உயர்நிலைப் பள்ளிகளையும், கல்லூரிகளையும் அலங்கரிப்பதற்காகவும், அந்த ஸ்தாபனங்களுக்கு சாதனங்களை வாங்குவதற்காகவும் ஏராளமான பணம் செலவிடப்படுகிறது. ஏழ்மையான நம் நாடு அவ்வளவு பெரிய சுமையைத் தாங்க முடியாது என்று நான் கருதுகிறேன். இதற்குப் பதிலாக, நல்ல கல்வியறிவும், அனுபவமும், ஒழுக்கமும் உள்ள ஆசிரியர்கள், பிள்ளைகளுக்கு தேகாரோக்கியமான, இயற்கை காட்சிகள் நிறைந்துள்ள இடங்களில் ஆரம்பக் கல்வியை போதித்தால், சீக்கிரத்திலேயே நல்ல பலனைக் காண்போம். இந்த மாறுதலை ஏற்படுத்துவதற்காக, இப்போது ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்படும் மாதச் சம்பளத்தை இரட்டித்தால் கூட, நமது நோக்கம் நிறைவேறாது. இத்தகைய சிறிய மாறுதல் மூலம் அவ்வளவு பெரிய மாறுதல்களைச் சாதிக்க முடியாது. ஆரம்பக் கல்வியின் தன்மையே அடியோடு மாற்றப்பட வேண்டும். இது கடினமான காரியம் என்பதையும், இதற்குப் பல இடையூறுகள் இருக்கின்றன என்பதையும் நான் அறிவேன். ஆயினும், இதற்கு ஒரு வழி கண்டுபிடிப்பது, "குஜராத் கலாவாணி மண்டல்" போன்ற ஒரு ஸ்தாபனத்தின் சக்தியை மீறியதாக இருக்க முடியாது.

நம்முடைய ஆரம்பப் பள்ளிகளில் இருக்கும் ஆசிரியர்களின் குறைபாடுகளை எடுத்துக் காட்டுவது என்னுடைய நோக்கம் அல்ல என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். எவ்வளவோ அசௌகரியங்களுக்கிடையே அவர்கள் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அப்படியிருந்தும், சில சமயங்களில் எதிர்பார்ப்பதைவிட அதிகமான பலன்களையும் அவர்கள் காட்டுகிறார்கள். நம்முடைய உன்னதமான கலாசாரமும், பாரம்பரியமுமே இதற்குக் காரணம் என்று நான் கருதுகிறேன். போதிய ஊக்கமளிக்கப்பட்டால், இப்போது நாம் மனதில்கூட நினைக்க முடியாத அளவுக்கு அவர்கள் பலன்களைக் காட்டுவார்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

**கல்வி இலவசமானதாகவும் கட்டாயமாகவும்** இருக்க வேண்டுமா, இல்லையா என்பது பெரிய சர்ச்சைக்குள்ளாகியிருக்கும் விஷயம். அதைப் பற்றி நான் எதுவும் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். என்னுடைய அனுபவம் மிகவும் குறைவானதுதான். மேலும், நம் மக்கள் மீது எதையும் பலவந்தமாகத் திணிப்பதை நான் விரும்பவில்லை. ஆகையால் இந்த அதிகப்படியான பளுவை அவர்களுடைய தலையில் சுமத்துவது எனக்கு நியாயமாகத் தோன்றவில்லை. இப்போதைக்கு, விருப்பம் உள்ளவர்கள் இலவசமாகக் கல்வி பெறலாம் என்று வைப்பது இன்னும் பொருத்தமானதாக இருக்கும். முதலில் இதைச் சோதனை செய்து பார்ப்போம். அதிகாரிகளின் கட்டளைகளுக்கு அடிமைகளைப் போல் பணிவதுதான் இன்று நம் நாட்டில் நிலவிவரும் பழக்கமாக இருக்கிறது. இந்தக் கட்டத்தை நாம் தாண்டும் வரையில், கல்வியைக் கட்டாயமானதாக்குவதில் பல சங்கடங்கள் ஏற்படக்கூடும் என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்த விஷயத்தில் ஒரு முடிவு செய்வதற்கு, பரோடா அரசாங்கத்தின் அனுபவம் நமக்கு மிகுந்த உதவியளிக்க முடியும். இந்தப் பிரச்னையை நான் ஆராய்ச்சி செய்ததன் பலனாக, இதில் கட்டாயம் கூடாதென்ற முடிவுக்கே நான் வந்திருக்கிறேன். ஆனால், என்னுடைய பரிசீலனை அரைகுறையேயானதால், என் முடிவை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும் என்று நான் வற்புறுத்த முடியாது. இந்த மகாநாட்டுக்கு வந்துள்ள பிரதிநிதிகள் இந்த விஷயத்தில் நமக்கு நல்ல யோசனைகள் கூறி, நாம் சரியான ஒரு முடிவுக்கு வர உதவி செய்வார்கள் என்று நம்புகிறேன்.

கடைசியாக, இந்தத் தீமைகளையெல்லாம் அகற்ற அரசாங்கத்திற்கு விண்ணப்பம் செய்துகொள்வது ஏற்ற வழியாக இராது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். முக்கியமான தீவிர மாறுதல்களை ஆட்சியாளர்கள் செய்துவிட முடியாது. இந்த முன்னோடியான காரியங்களை ஏற்றுக்கொள்ளுவது மக்களுடைய தலைவர்களின் கடமையாகும். மக்கள் இம்மாதிரி முயற்சிகளில் ஈடுபடுவதற்கு பிரிட்டிஷ் அரசியல் அமைப்பில் விசேஷ வாய்ப்பு இருக்கிறது. அரசாங்கம்தான் இந்த காரியங்களைச் செய்ய வேண்டும் என்று நாம் நினைத்தால், நமது நோக்கம் வெகு காலத்திற்கு நிறைவேறாமற் போகலாம். அரசாங்கம் புதிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்பதற்கு முன்பு, இங்கிலாந்தில் செய்வது போலவே இங்கும் நாம் முதலில் சோதனைகள் செய்து, பலன்களைக் காட்ட வேண்டும். எந்த விஷயத்திலாவது, யாருக்காவது, ஏதாவது குறைபாடுகள் தென்பட்டால், தன்னுடைய முயற்சியின் மூலமே அதை அகற்றப் பார்க்கலாம் அதில் அவர் வெற்றி பெற்றால், அரசாங்க முறையில் உரிய மாறுதல்களைச் செய்யும்படி பின்னர் அரசாங்கத்தைக் கேட்கலாம். முன்னோடியான வழிகளில் நமது சோதனைகளை நடத்திப் பார்ப்பதற்கு, நாட்டில் பல விசேஷக் கல்வி ஸ்தாபனங்களை ஏற்படுத்த வேண்டியது அவசியமாகும்.

பட்டப் படிப்பில் உள்ள கவர்ச்சி இதற்கு ஒரு பெரிய இடையூறாக இருக்கும். நம்முடைய ஜீவனோபாயத்திற்கு சம்பாதிக்க, பரீட்சைகளில் தேர்ச்சி பெறுவதையே நாம் நம்பியிருக்கிறோம். இதனால் மக்களுக்கு மிகுந்த தீமை ஏற்படுகிறது. அரசாங்க உத்தியோகத்திற்குப் போக விரும்புகிறவர்களுக்குத் தான் பட்டப் படிப்பு உபயோகமாக இருக்கும் என்பதை நாம் மறந்துவிடுகிறோம். ஆனால், மக்களின் வாழ்வு என்ற கட்டிடம், அரசாங்க உத்தியோகத்தை நாடிச் செல்லும் சில்லரை அஸ்திவாரமாகக் கொண்டு எழுப்பப்படப் போவதில்லை. அரசாங்க உத்தியோகங்களுக்குப் போகாமலேயே மக்கள் நன்றாக பணம் சம்பாதிக்க முடிகிறது என்பதைப் பார்க்கிறோம். எழுத்தறிவேகூட இல்லாதவர்கள் தங்களது புத்திக் கூர்மையினாலும் திறமையினாலும் லட்சாதிபதிகளாகிவிட முடியும் என்றால், படித்தவர்களும் ஏன் அப்படிச் செய்ய முடியாது என்பதற்கு ஒரு காரணமும் இல்லை. படித்தவர்கள்மட்டும் தங்களுடைய பயத்தைத் துறந்துவிட்டால்,

படிக்காதவர்களுடைய அளவுக்குத் தாங்களும் திறமைசாலிகளே என்பதை நிச்சயமாகக் காட்டிக்கொள்ள முடியும்.

இந்தப் பட்டப் படிப்பு மோகத்தைப் போக்கிவிட இயலுமாயின், நாம் திட்டமிட்டுள்ளபடி எத்தனையோ தனிப்பட்ட பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து நடத்தலாம். மக்களுக்குத் தேவையான கல்வி பூராவுக்கும் எந்த அரசாங்கமும் ஏற்பாடு செய்ய முடியாது. அமெரிக்காவில் கல்வி என்பது பெரும்பாலும் உத்தியோகச் சார்பற்றவர்களின் முயற்சியாகவே இருக்கிறது. இங்கிலாந்தில்கூட தனி நபர்களால் ஏராளமான கல்வி ஸ்தாபனங்கள் நடத்தப்படுகின்றன. அந்தப் பள்ளிக்கூடங்களே அத்தாட்சிப் பத்திரங்களையும் வழங்குகின்றன.

நம்முடைய கல்விக்கு பலமான அஸ்திவாரம் அமைப்பது கஷ்டமான காரியம்தான். அதற்கு பகீரதப் பிரயத்தனம் செய்தாக வேண்டும். நமது உடல், உள்ளம், ஆன்மா, முக்கியமாக பணம் ஆகிய எல்லாவற்றையும் இதற்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

அமெரிக்காவிலிருந்து நாம் கற்றுக்கொள்ளக் கூடியது அதிகம் இல்லை என்றே நினைக்கிறேன். ஆனல், ஒரு விஷயத்தில் அவர்களை நாம் பின்பற்றலாம். அங்குள்ள மிகப் பெரிய கல்வி ஸ்தாபனங்கள் சில பெரிய 'டிரஸ்டு'களால் நடத்தப்படுகின்றன. அமெரிக்க சீமான்கள், கல்வியின் அபிவிருத்திக்காக லட்சக்கணக்கான டாலர்களை நன்கொடைகளாக அளித்திருக்கிறார்கள். இந்த 'டிரஸ்டு'கள் உத்தியோகச் சார்பற்ற பல பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் நடத்துகின்றன. பணக்காரர்கள் தங்களிடமுள்ள பணத்தை இதற்காக நன்கொடை யளித்திருப்பதைப் போலவே, நாட்டுப் பற்றுள்ள அறிவாளிகள் தங்களுடைய சேவைகளை இந்த ஸ்தாபனங்களுக்கு அளித்திருக்கிறார்கள். இந்த ஸ்தாபனங்களை யெல்லாம் அவர்கள் பரிசோதனை செய்து, கல்வியின் தரம் காப்பாற்றப்படுவதற்கு உதவி செய்கிறார்கள். ஒவ்வொரு ஸ்தாபனத்திற்கும் எவ்வளவு உதவி தேவையென்று அவர்கள் நினைக்கிறார்களோ அதை அளிக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட டிரஸ்டின் விதி முறைகளை ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கும் எந்த ஸ்தாபனமும், அந்த டிரஸ்டின் உதவிக்கு சுலபமாக விண்ணப்பம் செய்துகொள்ளலாம். இது போன்ற ஒரு டிரஸ்ட் ஆரம்பித்த பிரசாரத்தின் பலனுகத்தான் விவசாயத் துறையில் புதிய ஆராய்ச்சிகளின் பலன்கள் விவசாயிகளுக்குக் கிடைத்தன. குஜராத்திலும் கூட நாம் இதேபோல் திட்டமிட்டுக் காரியங்களைச் செய்யலாம். இங்கு செல்வம் இருக்கிறது; புலமையும் இருக்கிறது; மதப் பற்றும் இன்னும் மறைந்துவிடவில்லை. நமது குழந்தைகள் கல்வி கற்கக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த முயற்சியை நாம் தீவிரமாக ஆரம்பித்தால், நம்முடைய முயற்சி சரியான பாதையில்தான் போய்க் கொண்டிருக்கிறது என்பதை, சில வருடங்களுக்குள்ளாகவே நாம் அரசாங்கத்திற்

குக் காட்டலாம். அப்போது அரசாங்க அதிகாரிகள் அதை ஏற்றுக்கொண்டு அமலாக்கத் தவறமாட்டார்கள் என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். ஆயிரம் விண்ணப்பங்களை விட நாம் செய்யும் காரியங்கள் இன்னும் உரத்த குரலில் பேசும்; இன்னும் அதிக ஒளியுடன் பிரகாசிக்கும்!

'குஜராத் கலாவாணி மண்டலி'ன் வேறு இரு நோக்கங்களும் மேலே கூறிய யோசனையில் சேர்ந்திருக்கின்றன. இம்மாதிரி ஒரு டிரஸ்ட் ஏற்படுத்துவது, கல்வியைப் பரப்புவதற்கு தொடர்ச்சியான ஒரு இயக்கம் நடத்தவும், அத்துறையில் அனுபவசாத்தியமான வேலை செய்யவும் உதவியாக இருக்கும்.

ஆனால், இதைச் செய்துவிட்டால், நம்முடைய வேலையில் பெரும் பகுதியைச் செய்து முடித்துவிட்டதாக இருக்கும். ஆகையால், இந்த வேலை எளிதாகச் செய்துவிடக் கூடியதல்ல என்பது தெளிவாகும். அரசாங்கத்தைப் போலவே பணக்காரர்களும் எழுப்பிவிட்டால்தான் விழித்துக் கொள்ளுகிறார்கள். அவர்களை எழுப்பிவிடுவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. **தபஸ்,** அதாவது, தியாக வாழ்க்கை. **தருமத்தின்** முதல் படியும், கடைசிப் படியும் இந்தத் தியாக வாழ்க்கைதான். 'குஜராத் கலாவாணி மண்டல்' இந்தத் தியாகத்தின் உருவம்தான் என்றும், இந்த அம்சம் அதில் வேண்டிய அளவுக்கு இருக்கிறது என்றும் நம்புகிறேன். மற்றவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற ஆர்வம் அதன் காரியதரிசிகளுக்கும் அங்கத்தினர்களுக்கும் இருந்தால், அத்துடன் மிகுந்த கல்விச் சிறப்பும் இருந்தால், தானகவே அவர்களுக்குப் பணம் வந்து சேரும். பணமுள்ளவர்கள் எப்போதுமே சந்தேகப் பேர்வழிகள். சந்தேகத்திற்குக் காரணங்கள் இருக்கின்றன. ஆகையால், செல்வ தேவதையைத் திருப்தி செய்ய வேண்டுமானல், நம்முடைய தகுதியை முதலில் ருசுப்பிக்க வேண்டும்.

இந்த வேலைக்கு நமக்கு ஏராளமாகப் பணம் தேவைப்படும் என்ருலும், அதைப் பற்றி நாம் அளவுக்கு மீறி கவலைப்பட வேண்டியதில்லை. தேசீயக் கல்வியைப் பரப்ப வேண்டும் என்ற உறுதி கொண்டுள்ளவன் படிக்காதவனுயிருந்தால், ஒரு தொழிலாளியின் வாழ்க்கையை மேற்கொண்டு, இடையில் கல்வி பெறுவான். அவன் போதிய அளவு கல்வி பெற்றவுடன் ஒரு மரத்தடியில் சிறிய பள்ளிக்கூடம் ஒன்றை ஆரம்பித்து, தன்னிடம் வருபவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பான். தேசீயக் கல்வி என்ற லட்சியத்திற்குத் தன்னை அர்ப்பணித்துக்கொள்ள வேண்டும் என்று அவன் உறுதி கொண்டிருந்தால், பணம் இல்லை என்ற குறைபாடு அவனுடைய உறுதிக்குக் குறுக்கே நிற்காது, நிற்கவும் கூடாது. கல்வி போதிப்பதென்பது, பிராம்மணர்களுக்குக் கொடுக்கப்பட்ட கடமையாகும். ஒரு பிராம்மணனின் வாழ்க்கையை நடத்தத் தயாராக இருக்கும் யாரும் அதைச் செய்ய

லாம். அத்தகைய பிராம்மணர்கள் அகப்பட்டால், செல்வமும் அதிகாரமும் அவர்களின் முன்னிலையில் தலை வணங்கும்.

இவ்வளவு நல்லதொரு லட்சியத்தில் 'குஜராத் கலாவாணி மண்டலு'க்கு அசைக்க முடியாத நம்பிக்கையை அருள வேண்டும் என்று கருணைக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

கல்விதான் சுயராஜ்யத்தின் திறவுகோல். வேண்டுமானால் அரசியல் தலைவர்கள் ஸ்ரீ மாண்டேகுவினிடம்* போகட்டும். அது, இந்த மகாநாட்டின் வரம்புக்குட்பட்ட விஷயம் அல்ல. ஆனால், சரியான கல்விமுறை இல்லாவிட்டால், எல்லா முயற்சிகளும் வீண்தான் என்பது என்னவோ உண்மை. சரியான கல்வி முறையைப் பற்றி யோசிப்பதுதான் இந்த மகாநாட்டின் விசேஷப் பொறுப்பு. இங்கு நாம் வெற்றி பெற்றுவிட்டால், நாம் மேற்கொள்ளும் மற்ற எந்த உயர்ந்த முயற்சியிலும் வெற்றி பெறுவோம் என்பது நிச்சயம்.

(குஜராத்தியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது)

— 'விசார்சிருஷ்டி'

# 3

# உண்மையான தேசீயக் கல்வி

## 1

உண்மையில் கல்வி என்பது என்ன என்று மக்களுக்குத் தெரியவில்லை. இந்த நிலைதான் உண்மையான சங்கடமாகும். நிலத்தின் விலையையோ, பங்கு மார்க்கெட்டில் பங்குகளின் விலையையோ மதிப்பிடுவதைப் போலவே, கல்வியைப் பற்றியும் மதிப்பிடுகிறோம். மாணவன் இன்னும் அதிகமாகச் சம்பாதிப்பதற்கு உதவி செய்யக் கூடிய விதத்தில் உள்ள கல்வியையே அளிக்க விரும்புகிறோம். படித்தவர்களின் ஒழுக்கத்தை அபிவிருத்தி செய்வதைப் பற்றி அநேகமாக நாம் சிந்திப்பதேயில்லை. பெண்கள் சம்பாதிக்க வேண்டிய அவசியம் இல்லையென்று சொல்லுகிறோம்; ஆகையால், அவர்கள் எதற்காகப் படிக்க வேண்டும்? இம்மாதிரியான எண்ணங்கள் இருந்துகொண்டிருக்கும் வரையில்

---

* ஸ்ரீ மாண்டேகு 1917-ஆம் ஆண்டிலிருந்து சில வருடங்கள் வரையில் இந்தியா மந்திரி பதவி வகித்தவர். அப்போதுதான் அவர் இந்தியாவுக்கு படிப்படியாக பொறுப்பாட்சி அளிப்பதே பிரிட்டனின் கொள்கை என்று பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அறிவித்தார். பிறகு அவர் இந்தியாவுக்கு விஜயம் செய்தார். அதன் பின்தான் இந்திய அரசியல் சீர்திருத்தங்கள் அடங்கிய மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை வெளியாயிற்று. அப்போது செம்ஸ்போர்டு இந்தியா வைஸ்ராயாக இருந்தார்.

கல்வியின் உண்மையான மதிப்பைப் பற்றி நாம் எந்தக் காலத்திலும் அறிந்துகொள்வோம் என்ற நம்பிக்கைக்கே இடமில்லை.

(ஹிந்தியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது)

—'இந்தியன் ஒபீனியன்'

## 2

நமது ஆசிரியர்கள் மிகவும் உயர்ந்த தார்மிக ஒழுக்கம் உள்ளவர்களாக இருக்க வேண்டும். மிகவும் ஏழையான இந்தியன்கூட, மிகச் சிறந்த கல்வி பெறுவதற்கான நிலைமையைத் தோற்றுவிக்க வேண்டும். இலக்கிய அறிவும், தருமமும் ஒன்று சேர்ந்து திருப்திகரமாக இருக்க வேண்டும். கல்வி என்பது நம் நாட்டில் உள்ள வாழ்க்கை நிலைமைகளுடன் தொடர்பு உள்ளதாக இருக்க வேண்டும். ஓர் அந்நிய மொழியை போதனு மொழியாக வைத்துக் கொண்டிருப்பதால், நமது இளைஞர்கள் மீது ஒரு பெரும் பாரம் சுமத்தப்பட்டிருக்கிறது. எனவே, அந்த பாரத்தை அகற்ற வேண்டும். இதை நிறைவேற்றும் விதத்தில் நமது கல்வியை மாற்றி அமைத்தாலொழிய, நமது மக்களுடைய வாழ்வின் தரத்தை உயர்த்த முடியாது.

ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள மொழியின் மூலம் உண்மையான தேசீயக் கல்வி போதிக்கப்பட வேண்டும். ஆசிரியர்கள் நல்ல திறமைசாலிகளாக இருக்க வேண்டும். மாணவர்களுக்கு நல்ல குடிதண்ணீர், சுத்தமான காற்று, அமைதியான சூழ்நிலை உள்ள இடங்களில் பள்ளிக்கூடம் இருக்க வேண்டும். சுற்றுப்புறங்கள் ஆரோக்கியமானவையாக இருக்கவேண்டும். மாணவர்கள் இந்தியாவிலுள்ள மதங்களைப் பற்றியும், முக்கியமான தொழில்களைப் பற்றியும் விவரங்கள் தெரிந்துகொள்ளுவதற்கு கல்வித் திட்டத்தில் ஏற்பாடு செய்ய வேண்டும்.

இதுபோன்ற ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பிப்பதற்குத் தேவையான செலவு பூராவையும் ஏற்றுக் கொள்ள ஒரு நண்பர் முன் வந்திருக்கிறார். ஆமதாபாத்திலுள்ள குழந்தைகள் இந்தப் பள்ளிக்கூடத்தில் இலவசமாக ஆரம்பக் கல்வி பெறவேண்டும் என்று அவர் விரும்புகிறார். ஆமதாபாத்தில் இதுபோன்ற பல பள்ளிக் கூடங்கள் ஏற்பட வேண்டும் என்றும் அவர் ஆசைப்படுகிறார். ஆமதாபாத்தில் இதற்காக நிலம் பெறுவதிலோ, பள்ளிக்கூடத்திற்குக் கட்டிடங்கள் கட்டுவதிலோ கஷ்டமில்லாமல் இருக்கலாம். ஆனல், நல்ல கல்வியறிவும், அத்துடன் உயர்ந்த ஒழுக்கமும் உள்ள ஆசிரியர்கள் கிடைப்பது அவ்வளவு சுலபமல்ல என்பதை நாம் அறிவோம். முக்கியமான இந்த வேலையில் குஜராத்திகளிடையே உள்ள படித்தவர்கள் தங்கள் கவனத்தைத் திருப்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேம். மகாராஷ்டிரத்தில் உள்ள படித்தவர்கள் செய்யும் தியாகத்தில் நாலில் ஒரு பங்கைக் கூட, குஜராத்தில் உள்ள படித்தவர்கள் செய்யவில்லை.

நமது நண்பரின் திட்டத்தில் ஆசிரியர்களுக்கு ஒன்றுமே கிடைக்காது என்று சொல்லப்படவில்லை. ஆசிரியர்களுக்கு, அவர்களுடைய வாழ்க்கைக்குப் போதுமான அளவு நிச்சயமாகக் கிடைக்கும். ஆனால், ஆசிரியர்கள் தங்களுடைய தேவைகளுக்கு ஒரு வரம்பு ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கப் படுவார்கள். அப்படிச் செய்ய முடியாதவர்கள், இம்மாதிரி ஒரு ஸ்தாபனத்தில் பணியாற்ற முடியாதென்பது தெளிவாகும்.

— 'நவஜீவன்' - 21—9—1919

## 3

சுயராஜ்யம் வேண்டும் என்ற கோஷம் இன்று நம் நாட்டில் எழுந்திருக்கிறது. வெறும் கோஷத்தை எழுப்புவதால் மட்டும் வெற்றி கிடைத்துவிடும் என்றால், வெகு காலத்திற்கு முன்பே நாம் சுதந்திரம் பெற்றிருப்போம். ஆகையால், கோஷம் எழுப்புவது அவசியமாக இருக்கலாம். என்றாலும், அது மாத்திரம் நமது நோக்கத்திற்குப் போதுமானதாகாது. உலகத்தில் எந்த நாட்டில் மக்கள் சுதந்திரம் பெற்றிருந்தாலும், அதற்கு முன்பு அவர்கள் குறிப்பிட்ட காலம் வரையில் தங்களை அதற்குத் தயார் செய்து கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது கவனிக்கத்தக்கது. முதலில் அவர்கள் சுதந்திரமாகச் சிந்திக்கக் கற்றுக் கொண்டார்கள்; சுதந்திரமாக வாழவும், நடந்து கொள்ளவும் கற்றுக் கொண்டார்கள். அந்த நாடுகளின் மக்களுக்கு விஷய அறிவூட்டும் பொறுப்பை மக்கள் தாங்களே ஏற்றுக் கொண்டு, நிறைவேற்றியிருக்கிறார்கள் என்பதைக் காண்கிறோம். ஆனால், நம் நாட்டில் நாம் நேர் எதிர்த் திசையில் சென்று கொண்டிருக்கிறோம். நமது மக்கள் சுயராஜ்ய கோஷத்தை எழுப்பினாலும், நம்மிடையே சுதந்திரமான சிந்தனை இருப்பதற்கான அறிகுறிகள் காணப்படவில்லை; சுதந்திரமாக வாழ்வதற்கான முயற்சிகளும் தென்படவில்லை. நமது கல்வி முற்றிலும் அந்நியக் கல்வியாக இருக்கிறது. இந்த அந்நியக் கல்வியினால் ஏற்பட்டுள்ள விளைவுகள், அதனால் எழுந்துள்ள பிரச்னைகள் ஆகியவற்றைப் பற்றியே முக்கியமாக இந்தக் கட்டுரையில் விவாதிக்க விரும்புகிறேன். தேசீயக் கல்வி முறையொன்று இல்லாவிடில் நமது முயற்சிகள் எல்லாம் பயனற்றதாகிவிடும். இன்றைக்கோ, சிறிது காலம் பொறுத்தோ, நாம் எப்போது சுயராஜ்யம் பெற்றாலும், தேசீயக் கல்வி இல்லாவிடில் அது நீண்ட காலம் நிலைத்திருக்காது என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு குழந்தையினுடைய வாழ்க்கையின் முதல் ஐந்து வருஷங்களைத் தவிர, மீதமுள்ள அவனுடைய கல்வி பூராவும் அந்நிய மொழியிலேயே அளிக்கப்படுகிறது. மேலும் சில அம்சங்களில் முதல் ஐந்து வருஷங்களே மிகவும் முக்கியமானதும், உபயோகமானதுமான காலமாகும். ஆனால், இந்தக் காலத்தில் மிகவும் சாதாரண ரகமான ஆசிரியர்களின் மூலமே கல்வி போதிக்

கப்படுவது வழக்கமாக இருக்கிறது. பின்னர் ஆங்கிலம் ஆரம்ப மாகிறது.

இந்தக் கட்டத்தில் பிள்ளைகள் முற்றிலும் வேறுவிதமான ஒரு உலகத்திற்கே போவது போல் இருக்கிறது. அவர்களுக்கு அளிக்கப்படும் கல்விக்கும், வீட்டில் நடக்கும் வாழ்க்கைக்கும் சம் பந்தமே இல்லாமலிருக்கிறது. தரையில் உட்கார்ந்து கொண்டு சந்தோஷமாகத் தங்களுடைய பாடங்களைக் கற்றுக் கொண் டிருந்த பிள்ளைகளுக்கு, இப்போது உட்காருவதற்கு பெஞ்சுகள் கிடைக்கின்றன. இன்றைக்கும் கூட, பெரும்பாலான வீடுகளில், தரையில் உட்காருவதுதான் வழக்கமாக இருக்கிறது. இதுவரை யில், பையன்கள் ஹிந்துக்களாயிருந்தால், ஒரு வேஷ்டி, ஒரு சொக்காய், ஒரு மேல் வேஷ்டியுடன் திருப்தியடைந்தார்கள். முஸ் லிம் பிள்ளைகளாயிருந்தால், வேஷ்டிக்குப் பதிலாக கால்சட்டை அணிவார்கள். ஆனால் இப்போது கோட்டும், கால் சட்டையும் அணிகிறார்கள். இதுவரையில் வீட்டிலேயே தயார் செய்த இறகு பேனாவை உபயோகித்துக் கொண்டிருந்தவர்களுக்கு, இப்போது இரும்பு முள் வைத்த பேனா வேண்டியிருக்கிறது. இவ்வாறாக, அவர்களுடைய வெளி வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க பல மாறு தல்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. வீட்டு வாழ்க்கைக்கும், பள்ளிக் கூடத்திற்கும் இடையே பெரும் வேற்றுமை இருக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாக, ஆனால் நிச்சயமாக, இந்த மாறுதல் அவர்களுடைய உள் வாழ்க்கையிலும் புக ஆரம்பித்துவருகிறது. மாணவனின் வெளி வாழ்க்கையிலும், மனோபாவத்திலும் ஏற்படும் இந்த மாறுதல்கள், அவனுடைய வீட்டையும் வீட்டில் அவனு டைய பெற்றோர்கள் வாழ்க்கை நடத்தும் விதத்தையும் எப்படி பாதிக்கப் போகின்றன? தங்களுடைய பிள்ளை எந்த விதமான கல்வி பெற்றுவருகின்றான்?—இவற்றைப் பற்றிப் பெற்றோர் களுக்கு ஒன்றுமே தெரியாது; அந்தக் கல்வியிலும் அவர்களுக்கு அதிக நம்பிக்கை இல்லை.

பையன் பணம் சம்பாதிப்பதற்கு அந்தக் கல்வி உதவியாக இருக்கும் என்பது மட்டும்தான் பெற்றோர்களுக்குத் தெரியும். அதுவே அவர்களுக்குத் திருப்தியளிக்கிறது. இந்த நிலைமை அதிக காலம் நீடித்தால், நாம் எல்லோருமே அந்நியர்களாகி விடக் கூடும்! நாம் போராடும் சுயராஜ்யமும் கடைசியாக நமக்குக் கிடைக்கும்போது, அதன் தன்மையும் அந்நிய மணம் உள்ள தாகிவிடக் கூடும். இன்று நாம் எந்தச் சுமையின் கீழ் நசுக் குண்டிருக்கிறோமோ அது, சுயராஜ்யம் கிடைத்த பிறகும் நீடிப் பதே பலனாக இருக்கக்கூடும். அதிலுள்ள மிக மோசமான அம்சம் இதுதான். இந்த அபாயத்திலிருந்து தப்புவதற்கு ஒரே ஒரு வழி தான் இருக்கிறது. நமது கல்வி முறையை அடியோடு மாற்றி அமைப்பதுதான் அந்த வழி. நாம் வகுக்கும் தேசீயக் கல்வியில்:

1. கல்வி தாய்மொழியில் போதிக்கப்பட வேண்டும்.

2. ஒரு குழந்தை பள்ளிக்கூடத்தில் பெறும் கல்விக்கும், வீட்டின் சூழ்நிலைக்கும் இணக்கமான தொடர்பு இருக்க வேண்டும்.

3. பெரும்பாலான மக்களின் தேவைகளைச் சமாளிக்கக் கூடிய விதத்தில் அது அமைக்கப்படவேண்டும்.

4. ஆரம்ப வகுப்புகளுக்கு நியமிக்கப்படும் ஆசிரியர்கள் முதல் வகுப்பிலிருந்தே திறமைசாலிகளாகவும், நல்ல ஒழுக்கம் உள்ளவர்களாகவும் இருக்கவேண்டும்.

5. கல்வி இலவசமானதாக இருக்க வேண்டும்.

6. இறுதியான மேல் நிர்வாகம் மக்களிடம் இருக்க வேண்டும்.

**கல்வி தாய் மொழிமூலம் போதிக்கப்படவேண்டும்.** கண் முன்பு தெரியும் இந்த உண்மையை நாம் ருசுப்பிக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். இது பரிதாபகரமானது. ஆங்கில மோகத்தின் கவர்ச்சியில் நாம் சிக்காமல் இருந்திருந்தால், மிகவும் அப்பட்டமான இந்த உண்மையை ருசுப்பிப்பதற்கான அவசியமே ஏற்பட்டிருக்க முடியாது.

ஆங்கிலத்தை ஆதரிப்பவர்கள் பின் வருமாறு கூறுகிறார்கள்:

1. ஆங்கிலத்தின் மூலம்தான் நாட்டில் ஒரு விழிப்பு ஏற்பட்டது.

2. ஆங்கில இலக்கியம் மிகவும் வளம் பொருந்தியது, விரிவானது. அதைக் கைவிடுவதென்பது பெரிய துரதிர்ஷ்டமாக முடியும். அது பூராவையும் நமது மொழியில் மொழி பெயர்ப்பதும் சாத்தியம் அல்ல.

3. ஆங்கிலத்தின் மூலம்தான் நாம் ஒற்றுமையை உண்டாக்க முடியும். இந்தியாவிலுள்ள பல்வேறு மொழிகளும் வளர்ச்சி பெற ஆக்கமளிப்பது, ஐக்கியத்தைக் குலைத்து, நாம் ஒரு சமுதாயத்தினர் என்ற உணர்ச்சி பெருகிவருவதைத் தடைப்படுத்துவதாகும்.

4. ஆங்கிலம் ஆட்சி புரிவோரின் மொழி.

இவைதாம் ஆங்கிலத்தை ஆதரிப்பவர்களுடைய முக்கிய வாதங்களாகும். அவர்கள் இன்னும் எவ்வளவோ சொல்லுகிறார்கள். ஆனால், மேலே குறிப்பிடப்பட்டுள்ள வாதங்களில் உள்ளதை விட அவற்றில் அதிக முக்கியத்துவமோ, சாரமோ இல்லை.

நாட்டில் நாம் காணும் விழிப்பு பூராவும் ஆங்கிலத்தின் மூலம் தான் ஏற்பட்டது என்று சொல்லுவது, அரைகுறை உண்மையேயாகும். இந்த நாட்டில் கல்வி பூராவும் ஆங்கிலத்தில் போதிக்கப்படுகிறது என்பதுதான் உண்மை. ஹிந்துக்கள் முழு மூடர்கள்

அல்லவாகையால், அதில் உள்ள நல்ல அம்சங்களைப் பிடித்துக் கொண்டு, பயன் படுத்திக்கொண்டிருக்கிறார்கள். ஆனாலும், மொத்தத்தில் இந்தக் கல்வியினால் கிடைத்துள்ள பலன் அதிருப்தியளிப்பதாகவே இருக்கிறது. இப்போதுள்ள கல்வி முறையில் சில பெரிய குறைபாடுகள் இருக்கின்றன என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகவே அமலில் இருந்துவரும் ஒரு கல்வி முறையில் நாம் என்ன பலன்களை எதிர்பார்க்க உரிமையுண்டோ, அந்தப் பலன்களைப் பெறவில்லை. ஏன் அப்படி இருக்கிறது? ஆரம்பம் முதலே தாய் மொழியில் கல்வி போதிக்கப்பட்டிருந்தால், இதற்குள் அது நல்ல பலன்களை அளித்திருக்கும். இப்போது ஆங்கிலம் அறிந்த சிலருக்கு மட்டுமே தெரிந்திருப்பவை, கோடிக்கணக்கான நமது மக்களுக்கும் எட்டியிருக்கும். இப்போது ஆங்கிலம் தெரிந்த ஒரு சிலர் காட்டும் உணர்ச்சியையும், உறுதியையும் இவர்களும் காட்டியிருப்பார்கள். இப்போது, நமது இளைஞர்கள் கல்லூரிகளில் தேர்ச்சி பெற்று வெளியேவரும்போது ஊக்கமற்றிருப்பதுபோலவே தோன்றுகிறார்கள்; வேலை தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள். அதற்குப் பதிலாக அவர்கள் தாய் மொழியில் கல்வி பெற்றிருந்தால், உருப்போட வேண்டிய சிரமம் இல்லாமல், உடலிலும் உள்ளத்திலும் அவர்கள் இன்னும் அதிக உறுதியுடன் இருந்திருப்பார்கள். அதன் பலனாக, அரசாங்க உத்தியோகங்களை மட்டமானவை என்று உதறித் தள்ளியிருப்பார்கள்.

ஆங்கில இலக்கியத்தைக் கைவிட்டுவிட வேண்டும் என்று யாரும் சொல்லவில்லை. அதில் உள்ள மிகவும் உயர்ந்தவற்றை நம்முடைய பல்வேறு மொழிகளிலும் மொழி பெயர்த்திருக்க வேண்டும். ஜப்பானிலும், தென்னாப்பிரிக்காவிலும் அப்படிச் செய்திருக்கிறார்கள். ஜப்பானில் சிலருக்கு ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளைக் கற்றுக் கொடுத்தனர். பின்னர் அவர்கள் ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளில் உள்ள நல்ல நூல்களை ஜப்பானிய மொழியில் மொழி பெயர்த்தனர். ஆங்கிலத்திலிருந்து ஜெர்மன் மொழி கற்றுக் கொள்ள வேண்டியது எதுவும் கிடையாது என்று அர்த்தமில்லை. அப்படியிருந்தும், எல்லா ஜெர்மானியர்களுமே ஆங்கிலம் கற்றுக் கொண்டுவிடுவதில்லை. எந்த ஜெர்மானியரும் ஆங்கிலத்தின் மூலம் கல்வி பெறுவதில்லை. ஒரு சில ஜெர்மானியர்களே ஆங்கிலம் கற்றுக் கொள்ளுகிறார்கள். பின்னர், தங்களுடைய நாட்டுக்குப் பலன்தரத்தக்கதாக இருக்கக் கூடும் என்று அவர்கள் கருதுவதை ஜெர்மன் பாஷையில் மொழி பெயர்க்கிறார்கள். அதன் மூலம் தங்களுடைய தாய் மொழிக்குத் தொண்டு செய்கிறார்கள். நாமும் அதைப் போலவே செய்ய வேண்டும்.

ஆங்கிலத்தை உபயோகிப்பதன் மூலம் நாம் ஒற்றுமை உணர்ச்சி பெற்றிருக்கிறோம் என்ற எண்ணம் இருந்து வருகிறது. இந்த அந்நிய மொழி நம் நாட்டில் புகுத்தப்பட்ட பிறகுதான், நாம் ஒவ்வொருவரும் மாறுபட்டவர்கள் என்ற மாயத் தோற்றம்

நமக்குத் தீவிரமாகத் தென்படத் தொடங்கியது. ஆனால், அந்த மாயையை நாம் புரிந்து கொண்ட பிறகு, அதை உதறித் தள்ளி விட்டு, நமது தேசீய ஐக்கியத்தை மீண்டும் பெற முயற்சி செய் தோம் என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். பல நாடுகளில் மக்களிடையே உள்ள ஒருமைப்பாடு, ஒரே மொழி பேசுவதால் ஏற்பட்டது அல்ல என்பதைக் காண்கிறோம். தென்னாப்பிரிக்கா வில் இரண்டு மொழிகள் இருக்கின்றன. ஆனால், மக்களின் நலன் கள் ஒன்றேயாகையால் அவர்கள் ஒருமைப்பாடு அடைய முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள், கானடாவிலும் அப்படித்தான். இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, வேல்ஸ் ஆகிய பகுதிகளில் இன் னமும் மூன்று வெவ்வேறு மொழிகளைத்தான் பேசுகிறார்கள். வேல் ஸின் பாஷையான வெல்ஷ் மொழியை மீண்டும் வழக்கிற்குக் கொண்டுவர, ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் பெரும் முயற்சிகள் செய்துவரு கிறார். இருந்தாலும், பிரிட்டனின் மூன்று பகுதிகளிலும், தாங்கள் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்ச்சி பலமாக இருக்கிறது. நம் நாட்டில் உள்ள பிரதேச மொழிகள் வளர்ச்சி அடைவது, நம்முடைய மக்களிடையே சமூக, அரசியல், பொருளா தார விழிப்பை உண்டுபண்ணும். நாடு என்ற முழுமையான சித் திரத்தில் தங்களுடைய நிலைமை என்ன என்பதை அவர்கள் இன் னும் நன்றாக உணருவார்கள்; வெவ்வேறு மாகாணங்களைச் சேர்ந் தவர்களாயிருந்தாலும் எல்லோரும் ஒரே படகில் செல்லுபவர்கள் தான் என்பதைத் தெரிந்து கொள்ளுவார்கள். இவ்வாறாக, அவர் கள் மொழி வேற்றுமைகளை மறந்து, தங்களுடைய நலன்களை உணர்ந்து, அதற்காகப் போராடவும், ஆபத்துகளிலிருந்து அதைக் காப்பாற்றவும் தயாராக இருப்பார்கள். மேலும், நம் மிடையே அதிகக் கல்வி பெற்றவர்கள் பொது மொழியாக ஹிந் தியைக் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கும். ஆங்கிலம் கற்றுக் கொள்ளுவதற்குத் தேவையான முயற்சியுடன் ஒப்பிட்டுப் பார்க் கும் போது, ஹிந்தி கற்றுக்கொள்ளுவதற்குத் தேவையான முயற்சி ஒன்றுமே இல்லை என்று சொல்லலாம்.

ஆங்கிலம் ஆட்சி புரிபவர்களின் மொழி என்பது, நம்மில் சிலர் இந்த அந்நிய மொழியில் சிறந்த தேர்ச்சி பெறவேண்டி யிருக்கிறது என்பதற்கு அதிகமாக எதையும் ருசுப்பிக்கவில்லை. ஆங்கிலத்தை நான் வெறுக்கவில்லை. அது அதற்கு உரிய ஸ்தானத் தில் இருக்கவேண்டும் என்றே கோருகிறேன். அப்போது அதன் தகுதியை உண்மையாக நாம் புரிந்து கொள்ள முடியும்; நம்மால் இயன்ற வரையில் இதன் மூலம் பலன் பெறவும் முடியும். ஆனால், நமது கல்விக்கு அது தொடர்ந்து போதனா மொழியாக இருக்க முடியாது; மாகாணங்களுக்கிடையே தொடர்பு வைத்துக்கொள்ளு வதற்கான மொழியாகவும் இருக்க முடியாது. நம்முடைய பள்ளிக் கூடங்களிலும், கல்லூரிகளிலும் மிகவும் உயர்தரக் கல்வியைக் கூட தாய் மொழியிலேயே போதிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

பள்ளிக் கூடத்தில் அளிக்கப்படும் கல்விக்கும், வீட்டு வாழ்க்கைக்கும் இடையே இணக்கம் இருக்க வேண்டும். இதன் காரணம் என்ன என்பது வெளிப்படையாகும். இன்று அவ்விரண்டுக்குமிடையே அத்தகைய சுமுகமான தொடர்பு இல்லாமலிருக்கிறது. தேசீயக் கல்வியில் அம்மாதிரி இணக்கம் ஏற்பட்டு, அது என்றும் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

இனி தேசீயக் கல்வியின் மூன்ருவது அம்சத்தைக் கவனிப்போம். அதாவது, பெரும்பாலான மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் விதத்தில் அது அமைக்கப்பட்டிருக்க வேண்டும். நம்முடைய மக்களில் பெரும்பான்மையோர் விவசாயிகள். ஆரம்பம் முதலே நமது பிள்ளைகளுக்கு விவசாயம், நெசவு ஆகியவை கற்பிக்கப்பட்டிருந்தால், இந்த இரு வகுப்பினரின் தேவைகளைப் புரிந்துகொள்ள அவர்கள் கற்றுக்கொண்டிருந்தால், இத்தொழில்களில் சாத்திரீயமான அறிவை அந்த வகுப்பினர் பெற்றிருந்தால், இன்று நமது விவசாயிகள் சுபிட்சமாகவும், சந்தோஷத்துடனும் இருப்பார்கள். நமது கால்நடைகள் இன்றிருப்பதைப் போல் பலவீனமாகவும், நோயுற்றவையாகவும் இரா. நமது விவசாயிகள் வறுமையின் விளைவாக ஏற்பட்ட கடன்களின் சுமையால் நசுக்குண்டிருக்க மாட்டார்கள். நமது உற்பத்திகள் மூலப் பொருள்களாக முதலில் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டு, பிறகு நமது செல்வத்தைச் சுரண்டிச் செல்வதற்கான உருவான பண்டங்களாக இங்கு திரும்பி வந்திரா. இன்று இத்தகைய நிலைமையைக் கண்டு வெட்கப்பட வேண்டியிருக்கிறது. பருத்தி ஜவுளிகளுக்காக இங்கிலாந்துக்கு நாம் வருஷத்தில் ரூ. 85 கோடி கொடுக்கும்படி நேர்ந்திராது. இப்போதுள்ள கல்விமுறை, நம்மை எஜமானர்களாக்குவதற்குப் பதிலாக அடிமைகளாக்கியிருக்கிறது.

ஆரம்பக் கல்வியின் கீழ் வகுப்புகளில் உள்ள ஆசிரியர்கள் உயர்ந்த ஒழுக்கமுள்ளவர்களாக இருக்க வேண்டும். "விளையும் பயிர் முளையிலே" என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருக்கிறது. நம்மிடையேயும் அது போன்ற ஒரு பழமொழி இருக்கிறது. குழந்தைகளுக்கு விஷயங்கள் உடனடியாகப் பதியக் கூடிய பருவத்தில், அவர்களைத் திறமையற்ற ஆசிரியர்களிடம் ஒப்படைத்தோமானல், அவர்கள் (குழந்தைகள்) சிறந்த ஒழுக்கமுள்ள மனிதர்களாக வளருவார்கள் என்று எதிர்பார்க்க நமக்கு உரிமை கிடையாது. அப்படி எதிர்பார்ப்பது ஏதோ ஒன்றின் விதைகளை விதைத்துவிட்டு, அதிலிருந்து நல்ல ஒரு மலரை எதிர்பார்ப்பது போலவே மூடத்தனமாக இருக்கும். என்ன செலவானலும், நமது குழந்தைகளுக்கு மிகச் சிறந்த ஆசிரியர்களையே தேடிப் பிடிக்கவேண்டும். புராதன காலங்களில் நமது குழந்தைகள் விவேகமும், நல்ல அறிவும் உள்ள ரிஷிகளிடமிருந்தும் முனிவர்களிடமிருந்தும் கல்வி பெற்ருர்கள்.

கல்வி இலவசமானதாக இருக்க வேண்டும் என்பது தேசீயக் கல்வியின் ஐந்தாவது தேவையாகும். கல்வி என்பது பணத்தைப் பொறுத்ததாக இருக்கக் கூடாது. சூரியன் எல்லாருக்கும் பொதுவாக ஒளி வீசுகிறது; மழை எல்லாருக்கும் பெய்கிறது; அது போலவே கல்வியும் யாவருக்கும் கிடைக்கும்படியாகச் செய்ய வேண்டும்.

கடைசியாக, கல்வித் திட்டத்தை வகுப்பது, அதை நிறைவேற்றுவது ஆகிய இரண்டுமே மக்களின் நிர்வாகத்தில் இருக்க வேண்டும். இந்தப் பொறுப்பை நிறைவேற்றுவதே கல்வியாகும். அந்த நிலைமையில், தங்களுடைய குழந்தைகளுக்கு அளிக்கப்படும் கல்வியில் மக்களுக்கு நம்பிக்கை இருக்கும்; அதில் தங்களுக்குள்ள பொறுப்பையும் உணருவார்கள். இந்தக் கட்டத்தை அடைந்து, நமது மக்களின் வாழ்க்கையில் கல்வி ஒரு முக்கியமான ஸ்தானத்தை வகிக்க ஆரம்பித்துவிட்டால், எந்த விதமான கஷ்டமுமின்றி நாம் சுயராஜ்யம் பெறுவது சாத்தியமாக இருக்கும். ஆகையால், அத்தகைய கல்விக்கு ஏற்பாடு செய்வது நம்முடைய கடமையாகும். அப்படிச் செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்பதும் நமது உரிமையாகும். ஆனால், இந்த விஷயத்தில் முதலில் நாமே காரியங்களைச் செய்ய ஆரம்பித்த பிறகுதான், அரசாங்கத்தை அணுக முடியும். ஆயினும், அத்தகைய ஒரு தேசீயக் கல்வித் திட்டத்தை வகுப்பதற்கு நாம் என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி விவாதிப்பது, இந்தக் கட்டுரையின் வரம்புக்கு உட்பட்டதல்ல.

('ஆத்மதார்' என்ற மராத்தி மாதப் பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டது.)

## 4

# தொழிலில் கல்வியின் முக்கியத்துவம்

நமது குழந்தைகள் பிறரை நம்பாமல், தங்களைத் தாங்களே நம்பி வாழ வேண்டும் என்று நாம் விரும்பினால், அவர்களுக்கு சரியான தொழிற் கல்வி அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். நம் நாட்டில் 100-க்கு 85 பேர் விவசாயத்திலும், 10 பேர் விவசாயிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வேலைகளிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆகையால், ஒவ்வொரு பையனுக்கும் அளிக்கும் அனுபவப் பயிற்சியில் விவசாயமும், நெசவும் சேர்க்கப்பட வேண்டும். இத்தகைய பயிற்சி பெற்ற ஒரு மாணவன், வாழ்க்கைப் போராட்டத்தில் என்ன செய்வதென்று ஒரு நாளும் கலங்க மாட்டான்; அவன் எந்தக் காலத்திலும் வேலையில்லாமலும் இருக்கமாட்டான். மேலும், சுத்தமான வாழ்க்கை, தேகாரோக்

கியக் கலை, குழந்தைகள் பராமரிப்பு ஆகியவைகளைப் பற்றியும் அவனுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும்.

'ஆத்மதார்'

# 5

# கல்வியின் உயிர் நாடி

கல்வியில் ஒழுக்கத்தை வளர்ப்பதைவிட, எழுத்தறிவுதான் முக்கியம் என்று வற்புறுத்தப்பட்டு வரும் இந்தக் காலத்தில், "ஸண்டே ஸ்கூல்" என்ற சஞ்சிகையில் தலைமை ஆசிரியர் ஜாக்ஸ் எழுதியுள்ள கட்டுரையின் பின்கண்ட பகுதி பலன்தரத் தக்க தாக இருக்கும் :

"நமது வாழ்க்கை முடிவில்லாமல் நகர்ந்துகொண்டே இருக்கிறது. விஞ்ஞானத்தின் முன்னேற்றத்தினால் ஒரு போதும் இறுதிப் பிரச்னையைத் தீர்க்க முடிவதில்லை. விஞ்ஞானத்தின் முன்னேற்றம் கடைசியாக எந்தக் கட்டத்தில் இருந்திருக்கிறதோ அதற்கு ஒருபடி முன்னதாகவே நம் எல்லோருடைய பொறுப்பும் இருக்கிறது. துரத்திச் செல்லுபவன் எவ்வளவுக் கெவ்வளவு வேகமாக ஓடுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு வேகமாக விரட்டப்படுபவனும் ஓட ஆரம்பிக்கிறான். விஞ்ஞானம், அதற்குள்ள எல்லைகள் காரணமாக, பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கிறது. செயல்முறை விஞ்ஞானம் துப்பாக்கி எப்படிச் செய்ய வேண்டும் என்பதைச் சொல்லும்; ஆனால், எப்போது சுடவேண்டும், யாரைச் சுடவேண்டும் என்பதை அது சொல்லாது. தார்மிக நியதிகள் அதை கவனித்துக் கொள்ளும் என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். என்னுடைய துப்பாக்கியை சரியான வழியில் உபயோகிப்பதற்கு வழி காட்டும் தார்மிக நியதி, தவறான வழியையும் காட்டுவது தவிர்க்க முடியாத தாகும் என்பதே என்னுடைய பதிலாகும். சரியான வழியைவிட தவறான வழிதான் என்னுடைய சுயநலனை நிறைவேற்றுவதற்கு உகந்ததாக இருக்கும். ஆகையால், எனது அண்டை வீட்டுக்காரர்கள் சுடப்படலாம், கொள்ளை அடிக்கப்படலாம் என்ற ஒரு புது அபாயம் அவர்களுக்கு ஏற்படுகிறது. தார்மிகம் பேசும் ஒரு கெட்டவனுக்கு மறு பெயர்தான் சைத்தான் என்பதாகும். மெபிஸ்டாபிலிஸுக்கு* தார்மிக நியதிகள் பற்றி லண்டன் சர்வகலாசாலையில் பரீட்சை நடத்தியிருந்தால், எல்லாப் பரிசுகளையும் அவனே தட்டிக்கொண்டு போயிருப்பான். அந்தக் கட்டத்தில் தார்மிக விஞ்ஞானம், இயற்கை விஞ்ஞானம் இரண்டும் ஒரே நிலையில்தான் இருக்கின்றன. விஞ்ஞானத்தினால் எந்தக் காலத்திலுமே பிடிக்க முடியாத இதற்கு என்ன பெயர் அளிப்பது? அதை நான் உயிர் என்று சொல்லுகிறேன். வேறு சிலர் ஆன்மா, உணர்ச்சி, புலன்

---

*உலகப் புகழ் பெற்ற ஜெர்மன் கவிஞரான கத்தே (1749–1832) எழுதியுள்ள 'பாஸ்ட்' என்ற கவிதை நாடகத்தில் மெபிஸ்டாபிலிஸ் என்ற சைத்தான் ஒரு பிரபல பாத்திரமாக விளங்குகிறது. படிப்பது ராமாயணம், இடிப்பது பெருமாள் கோயில் என்ற தமிழ்ப் பழமொழிக்கு இணங்க, மெபிஸ்டாபிலிஸின் பேச்சிற்கும் செயலுக்கும் சம்பந்தமே இருப்பதில்லை!

அல்லது மன உறுதி என்று சொல்லுகிறார்கள். அதை என்ன பெயரிட்டு அழைக்கிறோம் என்பது அவ்வளவு முக்கியமல்ல. அப்படி ஒன்று இருக்கிறது என்பதையும், மனித வர்க்கத்தின் சுக துக்கங்கள் அதனிடம்தான் இருக்கின்றன என்பதையும் தெரிந்துகொண்டால் போதும். கல்வி அதை கவனித்துக் கொள்ளட்டும். பொறுப்பு என்ற அந்தக் கட்டத்தில்தான் கல்வி, மதம் ஆகியவற்றின் எல்லா நடவடிக்கைகளும் முக்கியத்துவம் பெறுகின்றன. மற்றக் கட்டங்களிலெல்லாம் அதைச் செய்து விட்டு, பொறுப்பு என்ற கட்டத்தில் அதைச் செய்யாமல் விட்டுவிட்டோமானால், நாம் துக்கத்திற்கு உள்ளாகவே நேரும்.

—'எங் இந்தியா' – 30—9—1926

# 6

# சத்தியாக்கிரக ஆசிரமம் *

என்னைச் சந்தித்துப் பேசுவதற்காக சென்ற வருஷம் பல மாணவர்கள் இங்கு வந்தார்கள். இந்தியாவில், ஏதாவது ஓரிடத்தில் ஆசிரமம் ஒன்றை ஸ்தாபிக்கப் போவதாக அவர்களிடம் நான் சொன்னேன். அந்த இடத்தைப் பற்றித்தான் இன்று உங்களிடையே நான் பேசப் போகிறேன். ஒழுக்கத்தை உருவாக்கிக் கொள்வது ஒன்றுதான் இன்று உலகத்தில் எந்த நாட்டுக்குமே தேவையாகும்; அதிலும், மற்றவர்களைவிட நமக்குத்தான் இந்தத் தேவை அதிகம். என்னுடைய பொது வாழ்வு பூராவுமே இப்படித்தான் நான் நினைத்திருக்கிறேன், இன்னமும் அப்படித்தான் நினைக்கிறேன். பெரிய தேசபக்தரான ஸ்ரீ கோகலேயின் அபிப்பிராயமும் இதுதான். (கரகோஷம்) நாம் எதை விரும்பினாலும், நம்மிடம் ஒழுக்கம் இல்லையென்றால் நாம் எதையும் பெற மாட்டோம், பெறத் தகுதியுள்ளவர்களும் ஆகமாட்டோம் என்று அவர் தம்முடைய பிரசங்கங்கள் பலவற்றில் கூறிவந்திருக்கிறார் என்பதை நீங்கள் அறிவீர்கள். அதனால்தான், இந்திய ஊழியர் சங்கம் என்ற தம்முடைய மகத்தான ஸ்தாபனத்தை அவர் நிறுவினார். அந்தச் சங்கம் சம்பந்தமாக அவர் வெளியிட்ட அறிக்கையில், நாட்டின் அரசியல் வாழ்க்கையை ஆன்மிகப் பெருமை வாய்ந்ததாகச் செய்யவேண்டும் என்று அவர் குறிப்பாக வற்புறுத்தியிருக்கிறார் என்பதையும் நீங்கள் அறிவீர்கள். பல ஐரோப்பிய நாடுகளின் சராசரி நிலையைவிட நம்முடைய சராசரி நிலை குறைவானதாக இருக்கிறது என்று அவர் அடிக்கடி சொல்லுவது உண்டு. அவரை என்னுடைய அரசியல் குருவாக நான் பெருமையுடன் கருதுகிறேன். அத்தகைய ஒருவரின் அந்தக் கருத்துக்கு உண்மையில் ஆதாரம் உண்டா, இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், படித்த இந்தியா சம்பந்தப்பட்டவரையில்

* 1917 பிப்ரவரி 16–ம் தேதியன்று சென்னை ஒய். எம். ஸி. ஏ., அரங்கத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கமே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

அதற்குப் போதிய நியாயம் இருக்கிறது என்றே நான் நம்புகிறேன். சமூகத்திலுள்ள படித்த பகுதியினர் தவறு செய்துவிட்டார்கள் என்பதால் அல்ல; சந்தர்ப்பங்களுக்கு நாம் அடிமைகளாகிவிட்டோம் என்பதனுல்தான். அது எப்படி இருந்தாலும், வாழ்க்கையில் நான் ஏற்றுக் கொண்டுள்ள கொள்கை இதுதான்: அதாவது, ஒருவன் எவ்வளவு பெரிய மனிதனுக இருந்தாலும், அவன் எந்த வேலையைச் செய்தாலும், அவனுக்கு மதப் பற்றுதல் இருந்தாலொழிய அது சிறந்து விளங்க முடியாது.

ஆனுல், மதம் என்பது என்ன? இந்தக் கேள்வி உடனடியாக எழுந்துவிடும். அந்தக் கேள்விக்கு பதில் இதுதான்: மதம் என்பது, உலகத்தில் உள்ள எல்லா வேத புத்தகங்களையும் படித்த பிறகு உங்களுக்குக் கிடைக்கக்கூடிய மதம் அல்ல; அது மூளையினுல் கிரகிக்கக் கூடிய ஒன்றல்ல; உள்ளத்தினுல் கிரகித்துக் கொள்ள வேண்டிய ஒன்ருகும். அது நமக்குப் புறம்பானதல்ல. ஆயினும், நம்மிடமிருந்தே நாமேதான் அதை உருவாக்க வேண்டும். அது எப்போதும் நம்முள் இருக்கிறது. சிலர் அதை அறிய முடிகிறது; சிலருக்கு அவர்கள் அறியாமலேயே அது இருக்கிறது. ஆனுல், அது இருப்பது என்னவோ உண்மைதான். இந்த மத உணர்ச்சியை வெளி உதவியினுலோ அல்லது உள் வளர்ச்சியினுலோ எப்படி நாம் விழிப்புறச் செய்தாலும், அது ஒரு பெரிய விஷயம் அல்ல. சரியான விதத்தில் நிலையான எதையும் நாம் செய்ய விரும்பினுல், அதை விழிப்புறச் செய்ய வேண்டியது அத்தியாவசியமாகும்.

நமது சாத்திரங்கள் நம்முடைய வாழ்க்கைக்குச் சில நியதிகளை விதித்திருக்கின்றன. இவற்றை, ருசுபிக்கப்பட்ட உண்மைகளாகவே நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும். இந்த நியதிகளின்படி வாழ்க்கையை நடத்தாவிட்டால், ஒரு நியாயமான அளவுக்குக் கூட மதத்தைப்பற்றி நாம் உணர்ந்து கொள்ள முடியாது என்று நமது சாத்திரங்கள் கூறுகின்றன. இத்தனை வருடங்களாக இவற்றை நான் அப்படியே நம்பி வந்திருக்கிறேன்; சாத்திரங்களின் இந்த விதிகளை நடைமுறையில் பின்பற்றவும் முயற்சி செய்து வந்திருக்கிறேன். ஆகையால், இந்த ஸ்தாபனத்தை அமைப்பதற்கு என்னைப் போன்ற அபிப்பிராயமுடையவர்களின் கூட்டுறவைப் பெற வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன். ஆசிரமத்தில் சேர விரும்புவோர் பின்பற்ற வேண்டிய விதிகள் என்னென்ன என்பதை இன்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

இவற்றில், ஐந்திற்கு யமங்கள் என்று பெயர். இந்த ஐந்தில் முதலாவதும், முதன்மையானதும்

## சத்திய விரதம்

சாத்தியமான வரையில் நாம் பொய் சொல்லக் கூடாது என்ற, அதாவது, “நேர்மையே சிறந்த கொள்கை” என்னும்

ஆங்கிலப் பழமொழிக்கு இணங்க நடந்து கொள்ள வேண்டும் என்ற சாதாரண உண்மையல்ல. இது சிறந்த கொள்கையாக இராவிடில், அதிலிருந்து நாம் பிறழலாம் என்ற உள் அர்த்தம் அதில் அடங்கியிருக்கிறது. இதுதான் உண்மையைப் பற்றி நாம் சாதாரணமாகக் கொண்டுள்ள கருத்து. அத்தகைய உண்மையை நான் சொல்லவில்லை. என்ன நேர்ந்தாலும், இந்த சத்திய விதியையே வாழ்க்கையின் நியதியாகக் கொள்ள வேண்டும் என்ற கருத்திலேயே இங்கு அது கூறப்படுகிறது. என்னுடைய இந்த வியாக்கியானத்திற்காக, மிகச் சிறந்த உதாரணமாகத் திகழும் பிரஹ்லாதனின் வாழ்க்கையைக் குறிப்பிட்டிருக்கிறேன். சத்தியத்திற்காக அவன் தனது தந்தையையே எதிர்க்கத் துணிந்தான். தகப்பனர் செய்ததைப் போலவே அவன் திருப்பிச் செய்யவில்லை. ஆனால், சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காக, தன் தகப்பனரிடமிருந்தோ அல்லது தகப்பனரின் கட்டளைகளைப் பெற்றவர்களிடமிருந்தோ கிடைத்த அடிகளைத் திருப்பிக் கொடுக்காமல் தன் உயிரையே கொடுக்கத் தயாராக இருந்தான். அத்துடன் மட்டுமில்லை; அந்த அடிகளை அவன் தடுக்கக் கூட முயற்சி செய்யவில்லை. அதற்கு மாருக, உதட்டில் புன்னகையுடன், எவ்வளவோ சித்திரவதைகளுக்குப் பொறுமையுடன் உட்பட்டான். அதன் பலனக, சத்தியம் வெற்றி பெற்றது. தன்னுடைய வாழ்நாளிலேயே என்றைக்காவது ஒருநாள், சத்தியம் தோல்வியடைய முடியாதது என்பதை ருசுப்பித்துக் காட்டிவிட முடியும் என்பது அவனுக்குத் தெரியுமாதலால், பிரஹ்லாதன் சித்திரவதைகளை அனுபவித்தான் என்று அர்த்தமில்லை. அது உண்மையே ஆயினும், சித்திரவதைகளினல் அவன் இறந்திருந்தால் கூட, அப்போதும் கூட அவன் சத்தியத்தையே உறுதியாகக் கடைப்பிடித்திருப்பான். நான் பின்பற்ற வேண்டுமென்று விரும்புவது அத்தகைய சத்தியத்தைத்தான். நேற்று நான் ஒரு சம்பவத்தைக் கவனித்தேன். அது ஒரு அற்ப விஷயம்தான். ஆனல், இந்த அற்ப விஷயங்கள்தான், காற்று எந்தப் பக்கம் அடிக்கிறது என்பதைக் காட்டும் துரும்புகள் என்று நான் நினைக்கிறேன். நடந்தது இதுதான்: என்னிடம் ஒரு நண்பர் தனித்துப் பேச விரும்பினர். நாங்கள் இருவரும் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது மற்றொரு நண்பர் வந்தார். "நான் வருவது உங்கள் பேச்சுக்கு இடையூருக இருக்குமோ?" என்று மரியாதையாகக் கேட்டார். "இல்லை, இங்கு அப்படியொன்றும் ரகசியம் எதுவும் இல்லை" என்று நான் முதலில் பேசிக்கொண்டிருந்த நண்பர் சொன்னர். எனக்குச் சற்று தூக்கிவாரிப் போட்டது. ஏனெனில், நான் தனியாக அழைத்துச் செல்லப் பட்டபோது, இந்த நண்பர் சம்பந்தப்பட்டவரையில், எங்கள் பேச்சு அந்தரங்கமானதுதான் என்பது எனக்குத் தெரியும். ஆனல், மரியாதைக்காக,-அளவுக்கு மீறிய மரியாதை என்றுகூடச் சொல்லலாம்—அந்தரங்க சம்பாஷணை ஒன்றும் இல்லையென்றும், வேண்டுமானல் அவரும் (மற்றொரு நண்பரும்) கலந்து கொள்ளலாம் என்றும் உடனே அவர் சொல்லிவிட்டார். சத்தியத்தைப்

பற்றி நான் கூறும் வியாக்கியானத்திற்கு இது மாறுபட்டதாகும். "ஆம், இப்போது நீங்கள் வருவது, நீங்கள் சொல்லுவதுபோல் எங்கள் பேச்சுக்கு இடையூறுதான்" என்று அவர் மிகவும் நளினமாகவும், ஆனால் அப்பட்டமாகவும் மனம் விட்டுச் சொல்லியிருக்க வேண்டும். வந்த நண்பர் ஒரு கனவானாக இருந்தால், இதனால் அவருக்குச் சிறிதும் மனத்தாங்கல் ஏற்படாது. வேறுவிதமாக நுரூபிக்கப்பட்டாலொழிய, ஒவ்வொருவரையும் நாம் கனவான் என்றே கருத வேண்டும். நம்முடைய நாட்டு மக்கள் எவ்வளவு சாந்தமானவர்கள் என்பதைத்தானே இது காட்டுகிறது என்று சொல்லலாம். ஆனால், இது மிகைபடுத்துவதாகும் என்று நினைக்கிறேன்.

மரியாதைக்காக இப்படியே நாம் சொல்லிக் கொண்டிருந்தோமானால், தேசத்திலுள்ள நாம் யாவரும் வேஷக்காரர்களாகி விடுவோம். ஓர் ஆங்கில நண்பருடன் நான் பேசிக்கொண்டிருந்தது இப்போது என் நினைவுக்கு வருகிறது. நாங்கள் இருவரும் எங்கள் அனுபவங்களைப் பரிமாறிக்கொண்டிருந்தோம். ஒரு விஷயத்தைப் பற்றி "இல்லை" என்று சொல்லவேண்டுமானால், பெரும்பாலான ஆங்கிலேயர்களும் அப்படிச் சொல்ல மாட்டார்கள் என்றும், "இல்லை" என்று சொல்ல நாம் துணிவோமா என்றும் அவர் கேட்டார். "துணிய மாட்டோம்" என்று உடனடியாகச் சொல்லிவிட்டேன் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அவர் சொன்னதை நான் ஒப்புக்கொண்டேன். நாம் யாருடன் பேசிக் கொண்டிருக்கிறோமோ, அவருடைய உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று விரும்பும்போது, தைரியமாகவும், பச்சையாகவும், "இல்லை" என்று சொல்லுவதற்கு நாம் தயங்குகிறோம். "இல்லை" என்று சொல்ல வேண்டிய இடத்தில் விளைவுகள் என்னவாயிருக்கும் என்பதைப் பொருட்படுத்தாமல் "இல்லை" என்றுதான் பதிலளிக்க வேண்டும் என்று இந்த ஆசிரமத்தில் கண்டிப்பாக விதித்திருக்கிறோம். இதுதான் முதலாவது விதி. அடுத்தபடியாக,

## அஹிம்சைக் கொள்கை

அகிம்சை என்பதற்குச் சரியான அர்த்தம் கொல்லாமை என்பதுதான். ஆனால், என்னைப் பொறுத்தவரையில் இதில் நான் இன்னும் ஆழ்ந்த பொருளைக் காண்கிறேன். அகிம்சை என்றால் வெறும் கொல்லாமைதான் என்று மட்டும் நினைத்தால் நான் எந்த உலகில் சஞ்சரிப்பேனோ, அதைவிட இன்னும் உயர்வான, மிக மிக உயர்வான உலகத்திற்கு அது என்னை அழைத்துச் சென்றுவிடுகிறது. அகிம்சை என்பதன் உண்மையான அர்த்தம் என்ன? யாருடைய மனமும் நோகும்படி செய்யக் கூடாது. தன்னை உங்களுடைய விரோதியாகக் கருதுபவன் விஷயத்தில் கூட கெட்ட எண்ணம் கொள்ளக் கூடாது. இதை நான் எவ்வளவு ஜாக்கிரதையாகச் சொல்லுகிறேன் என்பதைக்

கவனியுங்கள். ''உங்களுடைய விரோதியாக நீங்கள் கருதுபவன் விஷயத்தில்'' என்று நான் சொல்லவில்லை. ''தன்னை உங்களுடைய விரோதியாகக் கருதுபவன் விஷயத்தில் கூட'' என்றே கூறுகிறேன். அகிம்சைத் தத்துவத்தைப் பின்பற்றுபவனுக்கு விரோதிகள் இருப்பதற்கு இடமில்லை; தனக்கு விரோதி இருக்கிறான் என்பதையே அவன் மறுக்கிறான். ஆனால், அவனுடைய விரோதியாகத் தங்களை நினைத்துக் கொள்ளுபவர்களும் இருக்கிறார்கள். அதற்கு அவன் என்ன செய்ய முடியும்? ஆகவே அவன் அத்தகையோர் விஷயத்தில் கூட கெட்ட எண்ணம் கொள்ளக் கூடாது. அடிக்கு அடி திருப்பிக் கொடுத்தால், அகிம்சைக் கொள்கையிலிருந்து தவறியவர்களாகிறோம். ஆனால், நான் இன்னும் மேலே போகிறேன். ஒரு நண்பனின் செய்கையையோ அல்லது விரோதி என்று சொல்லப்படுபவனுடைய செய்கையையோ நாம் ஆட்சேபித்தாலும், இந்தக் கொள்கையைப் பின்பற்றியவர்களாக மாட்டோம். ஆனால் ஆட்சேபிக்கக் கூடாது என்று நான் சொல்லும்போது, அதற்கு நாம் சம்மதிக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. ஆட்சேபிக்கக்கூடாது என்று சொல்லுவதன் அர்த்தம் இதுதான்: அதாவது, விரோதிக்கு ஏதாவது தீங்கு நேரிடவேண்டும் என்று நினைப்பது அல்லது அவனை ஒழித்து விடவேண்டும் என்று நினைப்பது போன்ற எண்ணங்கள் கூடாது. நம்முடைய செய்கைகளால் இல்லாவிட்டாலும், மற்றவர்கள் மூலமாகவோ, தெய்வாதீனமாகவோ கூட அவனுக்கு ஏதாவது ஏற்படவேண்டும் என்றும் நாம் நினைக்கக் கூடாது. இம்மாதிரி எண்ணம் நமக்குத் தோன்றினால் கூட இந்த அகிம்சைக் கொள்கையிலிருந்து நாம் தவறியவர்களாகிவிடுகிறோம். ஆசிரமத்தில் சேருபவர்கள் இந்த அர்த்தத்தை அப்படியே ஒப்புக்கொள்ளவேண்டும். இதனால் அந்தத் தத்துவத்தை நாம் முழுமையாகப் பின்பற்றுகிறோம் என்று அர்த்தமில்லை. அது நாம் நிறைவேற்றவேண்டிய ஒரு லட்சியம். நமக்கு ஆற்றலிருந்தால், அது இப்போதே கூட நிறைவேற்ற வேண்டிய லட்சியமாகும். ஆனால், இது மனப்பாடம் செய்யக் கூடிய ஒரு கணக்கு அல்ல; உயர்தர கணிதத்தில் உள்ள கணக்குகளுக்கு விடை கண்டு பிடிப்பது போன்றதும் அல்ல; அந்தக் கணக்குகளைப் போடுவதில் உள்ள கஷ்டத்தைவிட இது இன்னும் அதிகக் கடினமானது. இந்தக் கணக்குகளுக்கு விடை கண்டு பிடிப்பதற்கு, உங்களில் பலர் இரவெல்லாம் கண் விழித்திருக்கிறீர்கள். இந்தத் தத்துவத்தை நீங்கள் பின்பற்ற விரும்பினால், இரவில் கண்விழிப்பது மட்டும் போதாது. அதைவிட அதிகம் செய்யவேண்டும். பல இரவுகளைத் தூக்கமின்றிக் கழிக்கவேண்டியிருக்கும்; இந்த லட்சியத்தின் அருகாமையில்கூடப் போவதற்கு முன்பு எவ்வளவோ மன வேதனைகளை அனுபவிக்கவேண்டியிருக்கும். மதப்பற்றுள்ள வாழ்க்கை என்ன என்பதை நாம் புரிந்து கொள்ளவேண்டுமானால், இந்த லட்சியத்தை அடைந்தே தீர வேண்டும். அதற்குக் குறைவானது எதுவும் போதாது. இந்தத் தத்துவத்தின் மேன்மையில் நம்பிக்கை உள்ளவன், தன் லட்சி

யத்தை அடையும் இறுதிக் கட்டத்தில் இருக்கும்போது, உலகமே தன் காலடியில் இருப்பதைக் காண்பான். உலகம் பூராவும் தன் காலடியில் இருக்கவேண்டும் என்று அவன் விரும்பவில்லை. அவன் விரும்பாவிட்டாலும், உலகம் அவனுக்கு அவ்வளவு மதிப்புக் கொடுத்தாகவேண்டும்.

இந்தத் தத்துவத்தைப் பற்றி இதைவிட அதிகமாக நான் எதுவும் சொல்லப்போவதில்லை. உங்களுடைய அன்பை, அகிம்சையை மறக்க முடியாத விதத்தில் விரோதியின் மனத்தில் நீங்கள் பதியவைத்தால், அவன் அந்த அன்பைத் திருப்பிச் செலுத்தத்தான் வேண்டும். மற்றொன்றும் இருக்கிறது. இந்த விதியின் கீழ், கட்டுப்பாடாக ஏற்பாடு செய்யப்படும் கொலைகளுக்கு இடமில்லை; பகிரங்கமான கொலைகளுக்கு இடமில்லை; நாட்டின் நலன்களை முன்னிட்டுக்கூட பலாத்காரத்தில் ஈடுபடுவதற்கு இடமில்லை. உங்களுடைய பொறுப்பில் உள்ளவர்களின் மானத்தைக் காப்பாற்றுவதற்காகக்கூட பலாத்காரத்தில் ஈடுபடுவதற்கு இடமில்லை. அத்தகைய பலாத்காரச் செய்கை, உண்மையில் மானத்தைக் காப்பாற்றுவதாகாது. இழி செயல் புரிபவனிடம் நம்மையே ஒப்படைத்துக் கொடுப்பதன்மூலம், நமது பொறுப்பில் உள்ளவர்களின் மானத்தைக் காப்பாற்றலாம் என்று இந்த அகிம்சைத் தத்துவம் கூறுகிறது. ஒருவனை அடிப்பதைவிட இதற்கு இன்னும் அதிகமான மன உறுதியும், உடல் உறுதியும் வேண்டியிருக்கும். உங்களுக்கு ஓர் அளவுக்கு உடல் வலி இருக்கலாம்–தைரியம் என்று நான் சொல்லவில்லை–அந்த வலிமையை நீங்கள் உபயோகிக்கலாம். ஆனால், அது தீர்ந்த பிறகு என்ன நடக்கிறது? மற்றவனுக்குக் கோபமும், ஆத்திரமும் ஏற்படுகின்றன; அவனுடைய பலாத்காரத்திற்கு எதிராக உங்களுடைய பலாத்காரத்தை உபயோகிப்பதன் மூலம் அவனுடைய கோபத்தை இன்னும் அதிகமாக்கி விட்டீர்கள்; அவன் உங்களை அடித்துக் கொன்ற பிறகு, அவனிடம் எஞ்சியுள்ள கோபம் உங்களுடைய பொறுப்பில் உள்ளவர்கள் மீது பாய்கின்றது. ஆனால், நீங்கள் பதிலுக்குப் பதில் செய்யாமல், உங்களுடைய பொறுப்பில் உள்ளவர்களுக்கும், அந்த எதிரிக்கு மிடையே ஒரு காவலனைப் போல் நின்று கொண்டு, திருப்பியடிக்காமல், அவன் கொடுக்கும் அடிகளை மட்டும் வாங்கிக் கொண்டிருந்தால், என்ன நடக்கும்? அந்த பலாத்காரம் பூராவும் உங்கள் மீதே பாய்ந்து ஓய்ந்து விடும். உங்களுடைய பொறுப்பில் உள்ளவர்கள் துன்புறுத்தப் படாமல் தப்பிவிடுவார்கள் என்று நான் உறுதி கூறுகிறேன். இந்த வாழ்க்கைத் திட்டத்தில், இப்போது ஐரோப்பாவில் நீங்கள் பார்ப்பது போன்ற யுத்தங்களை நீதியானவை என்று சாதிக்கும் தேசபக்தி உணர்ச்சிக்கு இடமில்லை. அடுத்தபடியாக,

## பிரம்மச்சரிய விரதம்

தேசீயத் தொண்டு புரிய விரும்புகிறவர்கள் அல்லது உண்மையான மதப்பற்றுள்ள வாழ்க்கை என்ன என்பதை அறிய

விரும்புகிறவர்கள், மணமானவர்களாக இருந்தாலும், மணமாகாதவர்களாக இருந்தாலும் பிரம்மச்சரிய வாழ்க்கையையே நடத்த வேண்டும். மணம் என்பது ஓர் ஆடவரையும், பெண்ணையும் அதிக நெருக்கமாகக் கொண்டுவரும் ஒன்றுதான்; அதாவது ஒரு விசேஷ அர்த்தத்தில் அவர்கள் நண்பர்களாகிறார்கள்; இந்த ஜன்மத்திலோ, இனிவரப் போகும் ஜன்மங்களிலோ இருவரும் இணை பிரியாதவர்களாகிறார்கள். ஆனால், மணத்தைப் பற்றி நம்முடைய சிந்தனையில், நம்முடைய காம இச்சைகள் இடம் பெற்றுத்தான் ஆகவேண்டும் என்று நான் நினைக்கவில்லை. அது எப்படி இருந்தபோதிலும், ஆசிரமத்திற்கு வர விரும்புகிறவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள விதி இதுதான். இதற்குமேல் அதைப் பற்றி நான் அதிகமாக எதுவும் கூற விரும்பவில்லை. பின்னர்,

## நாவின் ருசியை அடக்கும் விரதம்

தன்னுடைய மிருக இச்சையை அடக்க விரும்பும் ஒருவன் தன்னுடைய நாவின் ருசியை அடக்கிவிட்டால், எளிதாக மிருக இச்சையை அடக்கிவிட முடியும். இந்த விரதத்தை நிறைவேற்றுவது கடினம் என்று அஞ்சுகிறேன். விக்டோரியா ஹாஸ்டலைப் பார்வையிட்டுவிட்டு இப்போதுதான் வருகிறேன். அங்கு நான் பார்த்தது எனக்கு வியப்பை அளிக்கவில்லை. அது வியப்பை அளிக்கக்கூடிய விஷயமேயாயினும், இப்போது அது எனக்கு பழக்கமாகிவிட்டது. அங்கு பல சமையல் அறைகள் இருக்கின்றன. அவரவர்கள் சொந்த ஊர்களில் பழக்கமான மசாலைச் சரக்குகளைப் போட்டுச் சமைப்பதற்காகத்தான் இந்தச் சமையல் அறைகள்; ஜாதிக் கட்டுப்பாட்டுக்காக அல்ல. பிராம்மணர்களுக்கேகூட பல்வேறு சாப்பிடுமிடங்களும், சமையல் அறைகளும் இருக்கின்றன. அவரவர்களுடைய ருசிக்கு ஏற்றவாறு பக்குவங்கள் செய்யப்படுகின்றன. இது ருசியை அடக்குவதல்ல; ருசிக்கு அடிமையாவதேயாகும் என்று நான் கூறுகிறேன். இந்த வழக்கத்தை நாம் மாற்றிக் கொண்டாலொழிய, தேநீர் கடைகள், காப்பி ஹோட்டல்கள், சமையல் அறைகள் முதலியவைகளைக் கண்ணெடுத்தும் பார்க்காமல் இருக்க நாம் பழகிக் கொண்டாலொழிய, நமது தேக சுகாதாரத்திற்குத் தேவையான உணவு பதார்த்தங்களுடன் மட்டும் நாம் திருப்தியடைந்தாலொழிய, நமது உணவு பதார்த்தங்களில் விறு விறுப்பளிக்கும், காரமான பொருள்களைக் கலப்பதை நாம் நிறுத்தினாலொழிய, அளவுக்கு மீறிய, அனாவசியமான, விறு விறுப்பளிக்கும் ருசியை நாம் கட்டுப்படுத்த முடியாது. இப்படி நாம் செய்யாவிட்டால், நம்மை நாமே துஷ்பிரயோகம் செய்து கொள்ளுகிறோம் என்பதுடன், நமக்கு அளிக்கப்பட்டுள்ள புனிதமான பொறுப்பையும் துஷ்பிரயோகம் செய்து, மிருகங்களுக்கும், காட்டுமிராண்டிகளுக்கும் கீழானவர்களாகிவிடுகிறோம். உண்பது, குடிப்பது, காம இச்சைகளில் ஈடுபடுவது ஆகியவற்றில் நாமும் மிருகங்களைப் போலாகிவிடுகிறோம். ஆனால், ஒரு குதிரையோ அல்லது ஒரு பசுவோ நம்

மைப் போல் நாவின் ருசியை இப்படி துஷ்பிரயோகம் செய்வதைப் பார்த்திருக்கிறீர்களா? நாம் எங்கு இருக்கிறோம் என்று கூடத் தெரியாத அளவுக்கு நமது உணவு பதார்த்தங்களைப் பெருக்கிக் கொண்டே போவது, புதிது புதிதான சமையல் பக்குவங்களைத் தேடி அலைவது, கடைசியில் இதே பைத்தியமாக இந்த சமையல் பாகங்களை விளம்பரப்படுத்தும் பத்திரிகைகளைத் தேடியலைவது ஆகியவையெல்லாம் நாகரிகத்திற்கோ அல்லது உண்மையான வாழ்க்கைக்கோ அறிகுறி என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

## திருடாமை விரதம்

ஒரு விதத்தில் நாம் எல்லோருமே திருடர்கள் என்று நான் கூறுகிறேன். என்னுடைய உடனடியான தேவைக்கு அவசியமில்லாத ஒன்றை எடுத்துக் கொண்டு, அதை வைத்துக்கொண்டும் இருந்தால், அதை வேறு யாரிடமிருந்தோ திருடியவனுவேன். அன்றாடம் நம்முடைய தேவைகளுக்குப் போதுமானவற்றை இயற்கையே உற்பத்தி செய்கிறது. இயற்கையின் அடிப்படையான விதி இது. இதற்கு விதி விலக்கே கிடையாது. தனக்கு வேண்டியதற்கு அதிகமாக யாரும் எடுத்துக் கொள்ளாமலிருந்தால், உலகத்தில் ஏழ்மையே இராது; உலகில் எந்த மனிதனும் பட்டினியால் சாகிறான் என்பது இராது. ஆனால், நம்மிடையே இந்த ஏற்றத் தாழ்வு இருக்கும் வரையில், நாம் திருடிக்கொண்டு தான் இருக்கிறோம் என்று கூற வேண்டும். நான் சோஷலிஸ்டு அல்ல. உடைமைகளை வைத்திருப்பவர்களிடமிருந்து அவற்றை நான் பறிக்க விரும்பவில்லை. ஆனால், இருளிலிருந்து நாம் ஒளியைப் பார்க்க விரும்பினால், இந்த விதியைப் பின்பற்றித் தானாக வேண்டுமென்று சொல்லுகிறேன். யாருடைய உடைமையையும் பறிப்பது, அகிம்சை விதியிலிருந்து தவறுவதாகும். என்னிடமிருப்பதை விட யாரிடமாவது இன்னும் அதிகமிருந்தால், அதை அவர் தாராளமாக வைத்துக் கொள்ளட்டும். ஆனால், என்னுடைய வாழ்க்கை சம்பந்தப்பட்ட வரையில், எனக்குத் தேவையில்லாத எதையும் நான் வைத்துக்கொள்ள மாட்டேன். இந்தியாவில் ஒரு நாளைக்கு ஒரே வேளை உணவுடன் திருப்தியடைய வேண்டியவர்கள் 30 லட்சம் பேர் இருக்கிறார்கள். அந்தச் சாப்பாடுகூட கொழுப்பு சத்து இல்லாத ஒரு சப்பாத்தியும், சிறிதளவு உப்பும்தான். இந்த 30 லட்சம் பேருக்கு இன்னும் நல்ல உணவும் உடையும் கிடைக்கும் வரை, நம்மிடம் உள்ளவற்றை அனுபவிக்க உங்களுக்கோ, எனக்கோ உண்மையாகவே உரிமை கிடையாது. நீங்களும், நானும் விஷயமறிந்தவர்கள். அவர்களைப் பேணிக் காத்து அவர்களுக்கு இன்னும் அதிக உணவும் உடையும் கிடைப்பதற்காக, நமது தேவைகளை நாம் சீர்படுத்திக் கொள்ள வேண்டும். நாமாகவே மனமுவந்து பட்டினி கிடக்கவும் முன் வர வேண்டும்.

அடுத்தபடியாக, உடைமையின்மை விரதம் இருக்கிறது. இது, இயற்கையான அடுத்தபடியாகும். பின்னர்,

## சுதேசி விரதம்

சுதேசி விரதம் அவசியமானதொன்றாகும். சுதேசி வாழ்க்கை, சுதேசி உணர்ச்சி ஆகியவற்றை நீங்கள் அறிவீர்கள். நமது தேவைகளைத் திருப்தி செய்து கொள்வதற்கு அண்டையில் இருப்பவனை விட்டுவிட்டு வேறு எங்கேயாவது சென்றோமானால், வாழ்க்கையில் மிகப் புனிதமான நியதிகளில் ஒன்றை மீறியவர்களாவோம். பம்பாயிலிருந்து ஒருவர் இங்கு வந்து தன்னிடமுள்ள பொருட்களை உங்களிடம் விற்க வருகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். சென்னையிலேயே பிறந்து, சென்னையிலேயே வளர்ந்த ஒரு வியாபாரி உங்கள் வீட்டு வாசலிலேயே இருக்கும் போது, பம்பாய் வியாபாரிக்கு நீங்கள் ஆதரவு தருவது நியாயமல்ல. சுதேசியைப் பற்றி என்னுடைய கருத்து இதுதான். உங்களுடைய கிராமத்தில் கிராமத்துக்குப் பொதுவான நாவிதர் இருந்தால், சென்னையிலிருந்து வரும் தேர்ச்சி பெற்ற முடியலங்கார நிபுணரை நீங்கள் விலக்கிவிட்டு, உங்கள் ஊர் நாவிதரையேதான் ஆதரிக்க வேண்டும். சென்னையிலிருந்து வரும் நாவிதரைப் போல் உங்கள் கிராம நாவிதரும் அவ்வளவு தேர்ச்சி பெற வேண்டுமென்று நீங்கள் விரும்பினால், அவருக்கு நீங்கள் அதற்கான பயிற்சியை அளிக்கலாம். வேண்டுமானால் அவரைச் சென்னைக்கு அனுப்புங்கள். அந்தத் தொழிலை அவர் நன்றாகக் கற்றுக் கொள்ளட்டும். அப்படி நீங்கள் செய்யும் வரையில் மற்றொரு நாவிதரிடம் நீங்கள் போவது நியாயமல்ல. அதுதான் சுதேசி.

இந்தியாவில் பல சாமான்கள் கிடைக்காமலிருக்கலாம். அப்படியானால், அவை இல்லாமலே காலந்தள்ள முயற்சி செய்ய வேண்டும், நாம் அவசியமென்று கருதக் கூடிய பல சாமான்கள் இல்லாமலேயே வாழ்க்கையை நடத்த முயற்சிக்க வேண்டும்; அத்தகைய மனப்பான்மை உங்களுக்கு ஏற்பட்டுவிட்டால், ''யாத்திரீகனின் முன்னேற்றம்''* என்ற ஒப்பற்ற நூலில் அந்த யாத்திரீகன் செய்ததைப் போலவே, ஒரு பெரிய சுமை இறக்கப்பட்டு விட்டது என்பதைக் காண்பீர்கள். அந்த யாத்திரீகன் போய்க் கொண்டே இருந்த போது, அவன் தோளிலிருந்த பெரும் சுமை அவன் அறியாமலேயே நழுவி விழுந்துவிட்டது; யாத்திரையை ஆரம்பிக்கும் போது, இருந்ததை விட அதிகமான சுதந்திர உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. அதுபோலவே, இந்த சுதேசி வாழ்க்கையை நீங்கள் மேற்கொள்ள ஆரம்பித்த உட

* பிரபல பிரிட்டிஷ் கவிஞரான ஜான் பன்யன் (1628-1688) எழுதியுள்ள அற்புதமான கவிதைகளில் ஒன்றே ''யாத்திரீகனின் முன்னேற்றம்'' ஆகும். அரசியல் காரணமாக அவர் சிறையில் இருந்தபோது மேற்கண்ட உலகப் புகழ் பெற்ற கவிதையை எழுதினார். இந்தக் கவிதை நூலில் உள்ள சம்பவத்தையே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

னேயே இப்போதுள்ள உணர்ச்சி மாறி, பாரம் குறைந்தது போன்ற உணர்ச்சி உங்களுக்கும் ஏற்படும். அடுத்தபடியாக,

## அஞ்சாமை விரதம்

இந்தியாவில் பற்பல இடங்களில் நான் சுற்றி அலேந்து கொண்டிருந்த போது, இந்தியாவை, குறிப்பாக படித்தவர்கள் வாழும் இந்தியாவை முடக்கிவைக்கும் தன்மை வாய்ந்த பயம் ஒன்று பீடித்திருப்பதைக் கண்டேன். நாம் பகிரங்கமாக நமது வாயைத் திறக்க முடியவில்லே. நம்முடைய திடமான அபிப்பிராயங்களேப் பகிரங்கமாகச் சொல்ல முடியவில்லே. அத்தகைய அபிப்பிராயங்களே நாம் கொண்டிருக்கலாம்; அவற்றைப் பற்றி ரகசியமாகப் பேசவும் செய்யலாம்; நம் வீட்டுக்குள்ளிருந்து கொண்டு நாம் என்ன வேண்டுமானுலும் செய்யலாம்; ஆனுல், அவை வெளியில் தெரியக்கூடாது. நாம் ஒரு மௌன விரதம் எடுத்துக் கொண்டிருந்தால், நாம் சொல்வதற்கு ஒன்றும் இராது. பகிரங்கமாக நாம் வாயைத் திறந்து பேசும் போது, உண்மையில் நமக்கு நம்பிக்கையில்லாத விஷயங்களேயே சொல்கிறேம். இந்தியாவில் பொது மேடைகளில் பேசும் ஒவ்வொருவருடைய அனுபவமும் இதுதான என்று எனக்குத் தெரியாது. நாம் பயபக்தி காட்ட வேண்டிய ஒன்று உண்டு என்ருல், அது கடவுள்தான். கடவுளுக்குப் பயந்து நாம் நடந்தால், எவ்வளவு உயர் பதவியிலிருக்கும் மனிதனேயும் கண்டு நாம் பயப்பட வேண்டாம். எந்த உருவத்திலும், அல்லது விதத்திலும் நீங்கள் சத்திய விரதத்தைப் பின்பற்ற விரும்பினல், அஞ்சாமை என்பது அதனுடைய இயற்கையான ஓர் அம்சமாகும். இதனுல் தான் ஸ்ரீ பகவத் கீதையில், அஞ்சாமையே ஒரு பிராம்மணனின் அத்தியாவசியமான முதல் குணுதிசயம் என்று கூறப்பட்டிருக்கிறது. விளேவுகள் எப்படி இருக்குமோ என்று நாம் அஞ்சுவதால், உண்மையைப் பேச பயப்படுகிறேம். கடவுளுக்கு அஞ்சி நடக்கும் ஒருவன், இந்த பூமியில் என்ன விளேவுகள் ஏற்படுமோ என்று நிச்சயமாகப் பயப்பட மாட்டான். மதம் என்ருல் என்ன என்பதை அறியும் நிலேமைக்கு வருவதற்கு முன்பு, இந்தியாவின் கதியை நிர்ணயிப்பதற்கு வழி காட்டும் நிலேமையைப் பெறுவதற்கான தகுதியை அடைவதற்கு முன்பு, இந்த அஞ்சாமைப் பழக்கத்தை நாம் கடைப்பிடிக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியவில்லேயா? அல்லது நாம் பயத்திற்கு உள்ளாகியிருப்பதைப் போல் நமது நாட்டு மக்களேயும் பயத்திற்கு உள்ளாகும்படி செய்யப் போகிறேமா? இதிலிருந்து இந்த அஞ்சாமை விரதம் எவ்வளவு முக்கியமானது என்பதை நாம் காண்கிறேம். அடுத்தபடியாக :

## தீண்டாதார் பற்றிய விரதம்

இன்று ஹிந்து மதத்தில் அழிக்க முடியாத இழுக்கு ஒன்று இருந்து வருகிறது. இது தொன்று தொட்டு நம்மிடையே

இருந்து வருகிறது என்பதை நான் நம்பவில்லை. தீண்டாமை என்ற இந்த மோசமான, வெறுக்கத்தக்க, அடிமைப் படுத்தும் உணர்ச்சி, நம்முடைய வாழ்க்கைச் சக்கரத்தில் மிகவும் கீழான கட்டத்தில் நாம் இருந்தபோது நமக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அந்தத் தீமை இன்னும் நம்மை ஒட்டிக் கொண்டு நம்மிடமே இருந்து வருகிறது. இது நமக்கு ஏற்பட்ட ஒரு சாபம் என்றே எனக்குத் தோன்றுகிறது. இந்தச் சாபம் நம்மிடம் இருந்து வரும் வரையில், புனிதமான இந்தப் பூமியில் நமக்கு ஏற்படும் ஒவ்வொரு கஷ்டமும், நாம் புரியும் படுமோசமானதும், அழிக்க முடியாததுமான இந்தக் குற்றத்திற்கு மிகச் சரியான தண்டனை என்றே நாம் கருதியாக வேண்டும். ஒருவன் செய்யும் வேலை காரணமாக அவன் தீண்டத் தகாதவனாக கருதப் படுவது என்பது நம்பமுடியாததாக இருக்கிறது. இவ்வளவு நவீனக் கல்வி பெறும் மாணவர்களாகிய நீங்கள் இந்தக் குற்றத்திற்கு உடந்தையாக இருந்தால், நீங்கள் எந்த விதமான கல்வியுமே பெருதிருப்பது நல்லது.

நமக்கு ஒரு பெரிய இடையூறு இருந்து வருகிறது என்பது உண்மைதான். தீண்டத் தகாதவன் என கருதப்படக் கூடிய ஒரு மனிதப் பிறவி இந்த உலகத்தில் இருக்க முடியாது என்பதை நீங்கள் உணரலாம். ஆனல், இது பற்றி உங்களுடைய குடும்பத்தின் நிலையையோ, உங்கள் சுற்றுப் புறத்தின் நிலையையோ நீங்கள் ஒன்றும் மாற்றிவிட முடியாது. ஏனெனில், உங்களுடைய சிந்தனை பூராவும் ஒரு அந்நிய மொழியில் உருவாகிறது. உங்களுடைய சக்தி பூராவும் அதற்கே செலவிடப்படுகிறது. ஆகையால், இந்த ஆசிரமத்தில் இன்னெரு விதியையும் வைத்திருக்கிறேம். அதாவது,

## நாட்டு மொழிகள் மூலம் கல்வி

ஐரோப்பாவில் பண்பாடுள்ள ஒவ்வொருவரும் தம்முடைய மொழியை மட்டுமின்றி, மற்ற மொழிகளையும் கற்றுக் கொள்கிருர்கள்; நிச்சயமாக மூன்று அல்லது நான்கு மொழிகளைக் கற்றுக் கொள்கிருர்கள். ஐரோப்பாவில் அவர்கள் செய்வதைப் போலவே, இந்தியாவிலுள்ள மொழிப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக, இந்த ஆசிரமத்தில் உள்ள நாங்கள், சாத்தியமான அளவுக்கு இந்திய மொழிகளைக் கற்றுக் கொள்வதென்று முடிவு செய்திருக்கிறேம். ஆங்கில மொழியில் தேர்ச்சி பெறுவதற்காக மேற்கொள்ளும் கஷ்டங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, இம் மொழிகளைக் கற்றுக் கொள்வதில் கஷ்டமே இல்லை என்று நான் உறுதி கூறுகிறேன். ஆங்கில மொழியில் நாம் எப்போதுமே முழுப் புலமை பெற்றுவிடுவதில்லை. ஒரு சிலரைத் தவிர மற்றவர்களுக்கு இது சாத்தியமாவதில்லை. நமது தாய் மொழியில் கூறுவதைப் போல். நமது கருத்துகளை அவ்வளவு தெளிவாக நாம் ஆங்கிலத்தில் எடுத்துச் சொல்லவே முடியாது. நம்முடைய

குழந்தைப் பருவத்தின் நினைவுகளையெல்லாம் நாம் அழித்துவிட முடியுமா? ஆனால், ஒரு அந்நிய மொழியின்மூலம் நம்முடைய உயர்தர வாழ்க்கை என்று நாம் கூறும் வாழ்க்கையை ஆரம்பிக்கும் போது, இதைத்தான் செய்கிறோம். இதனால் நமது வாழ்வில் ஒரு சீர்குலைவு ஏற்பட்டு விடுகிறது. இதற்கு நாம் பின்னர் மிகுந்த கஷ்டங்களை அனுபவித்தாக வேண்டும். கல்விக்கும், தீண்டாமைக்கும் உள்ள சம்பந்தத்தை நீங்கள் இப்போது பார்க்கலாம். அறிவும் கல்வியும் பரவியுள்ள இந்தக் காலத்தில் கூட, தீண்டாமை உணர்ச்சி இன்னும் அப்படியே இருக்கிறது. இது கொடிய குற்றம் என்பதைக் கல்வியின் மூலம் நாம் தெரிந்து கொள்வது சாத்தியமாகியிருக்கிறது. ஆனால், பயமும் நம்மைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. இதனால், இந்தத் தத்துவத்தை நமது இல்லங்களுக்குக் கொண்டு செல்ல முடிவதில்லை. நம்முடைய குடும்பப் பழக்க வழக்கங்களிலும், நம்முடைய குடும்பங்களில் உள்ளவர்களிடமும் மூட நம்பிக்கைக்கு சமமான ஒரு மரியாதை நமக்கு இருக்கிறது. "என்னைப் பொறுத்தவரையிலாது இனிமேல் இந்தக் குற்றத்திற்கு நான் உடந்தையாயிருக்க முடியாது என்று என் பெற்றோர்களிடம் நான் சொன்னால், அவர்கள் இறந்துவிடுவார்கள்'' என்று நீங்கள் கூறுகிறீர்கள். விஷ்ணுவின் புனிதமான பெயரைச் சொன்னால், தன்னுடைய தந்தை இறந்து விடுவார் என்று பிரஹ்லாதன் நினைக்கவே இல்லை. அதற்கு மாறாக, அந்த வீடு பூராவிலும், ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைவரையில் தன்னுடைய தகப்பனாரின் முன்னிலையிலேயே அந்தப் பெயர் முழங்கும்படி பிரஹ்லாதன் செய்தான். அது போலவே, நீங்களும் நானும் கூட, நமது பெற்றோர்களின் முன்னிலையில் அப்படிச் செய்யலாம். இந்த அதிர்ச்சியின் பலனாக அவர்களில் சிலர் உயிர் துறந்தால், அது ஒரு விபரீதமாக முடியும் என்று நான் நினைக்கவில்லை. இத்தகைய சில அதிர்ச்சிகளை நாம் தாங்கும்படி நேரலாம். தலை முறை தலை முறையாக நம்மிடையே இருந்துவரும் இத்தகைய விஷயங்களை நாம் விடாமல் பிடித்துக் கொண்டிருக்கும் வரையில், அவை போன்ற சம்பவங்கள் ஏற்படக்கூடும். ஆனால், எல்லா வற்றிற்கும் மேலான இயற்கையின் சட்டம் என்று ஒன்றிருக் கிறது. அந்த உயர்தர சட்டத்திற்கு உட்பட்டு, எனது பெற்றோர்களும், நானும் அந்தத் தியாகத்தைச் செய்தாக வேண்டும். அடுத்தபடியாக,

## கை நெசவு

"நாம் எதற்காக நமது கைகளை உபயோகிக்க வேண்டும்?'' என்று நீங்கள் கேட்கக் கூடும். "எழுத்தறிவு இல்லாதவர்கள் தான் உடல் உழைப்பை மேற் கொள்ள வேண்டும். இலக்கியம், அரசியல் வியாசங்கள் முதலியவற்றைப் படிப்பதில்தான் நான் என் பொழுதைச் செலவிட முடியும்'' என்று நீங்கள்

சொல்லலாம். வேலை செய்வது கண்ணியமானது என்பதை நாம் உணரவேண்டுமென்று நான் நினைக்கிறேன். ஒரு நாவிதரோ, செருப்பு தைப்பவரோ கல்லூரிக்குச் சென்று படித்தால், தம்முடைய தொழிலை விட்டுவிடக் கூடாது. வைத்தியம் செய்யும் தொழிலைப் போலவே, நாவிதரின் தொழிலும் நல்ல தொழில்தான் என்றே நான் நினைக்கிறேன்.

## அரசியல்

கடைசியாக, இவ்வளவு விதிகளையும் பின்பற்றிய பிறகு தான் நீங்கள் அரசியலுக்கு வரலாம்; அதுவரையில் அரசியலுக்கு வரக் கூடாது. பின்னர், நீங்கள் உங்கள் மனதுக்கு திருப்தி ஏற்படும் வரையில் அரசியலில் புகுந்து வேலை செய்யலாம். அப்போது நிச்சயமாக நீங்கள் தவறு செய்யவே முடியாது. மதச் சார்பற்ற அரசியலுக்கு அர்த்தமே கிடையாது. இந் நாட்டிலுள்ள மாணவர்கள் அரசியல் மேடைகளுக்கு வந்து விடுகிறார்கள் என்றால், அது நல்ல தேசீய வளர்ச்சியின் அறிகுறியைத்தான் காட்டுகிறது என்று நான் நினைக்கவில்லை. இதனால், நீங்கள் மாணவர்களாயிருக்கும் காலத்தில் அரசியலைப் பற்றிப் படிக்கக்கூடாது என்று அர்த்தமில்லை. அரசியல் என்பது நமது வாழ்க்கையுடன் சேர்ந்த ஒன்றாகும். நமது தேசீய ஸ்தாபனங்களையும், நமது தேசீய வளர்ச்சி போன்ற விஷயங்களையும் நாம் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும். குழந்தைப் பருவத்திலிருந்தே இதை நாம் செய்யலாம். ஆகவே, எங்களுடைய ஆசிரமத்தில், நமது நாட்டிலுள்ள அரசியல் ஸ்தாபனங்களைப் பற்றி ஒவ்வொரு குழந்தைக்கும் சொல்லித் தரப்படுகிறது. நமது நாடு எப்படி புதிய உணர்ச்சிகள், புதிய அபிலாஷைகள், புதிய வாழ்க்கை ஆகியவற்றினால் உந்தப் பட்டு, துடித்துக் கொண்டிருக்கிறது என்பது பற்றியும் ஒவ்வொரு குழந்தைக்கும் சொல்லித் தரப்படுகிறது. ஆனால், தவறாகப் போக முடியாததும், ஒரே சீரானதுமான மத நம்பிக்கை என்ற ஒளியையும் பெறவேண்டும் என்று விரும்புகிறோம். காரிய காரண அறிவைத் திருப்தி செய்யும் நம்பிக்கையல்ல; உள்ளத்தில் அழியாத இடம் பெற்ற நம்பிக்கை. முதலில், அந்த மத உணர்வைப் பெற விரும்புகிறோம். அதைப் பெற்ற உடனேயே, வாழ்க்கை பூராவும் நம் முன்பு தோன்றுகிறது. அந்த நிலைமையில், முழுமையான அந்த வாழ்க்கையில் பங்கு கொள்ளுவது மாணவர்கள், மற்றும் இதரர்களின் புனிதமான உரிமையாக இருக்கும். அவர்கள் வயது வந்தவர்களாகி, கல்லூரிகளிலிருந்து வெளியே வரும்போது, வாழ்க்கைப் போராட்டத்தைச் சமாளிப்பதற்குத் தகுதியான பயிற்சி பெற்றவர்களாக வருவார்கள்.

இன்று நடப்பது இதுதான்: அரசியல் வாழ்வின் பெரும் பகுதி மாணவர் உலகத்திலேயே இருக்கிறது. மாணவர்கள் படிப்பை முடித்துக் கொண்டு, கல்லூரிகளிலிருந்து வெளியே

வந்தவுடன், இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகிறார்கள். ஏதாவது சொற்ப சம்பளம் உள்ள அற்ப உத்தியோகங்களுக்கு அலைகிறார்கள்; உயர்ந்த குறிக்கோள் அற்றவர்களாகிவிடுகிறார்கள்; கடவுளைப் பற்றியும் சுத்தமான காற்று, பிரகாசமான வெளிச்சம் ஆகியவைகளைப் பற்றியும், நான் உங்களிடம் எடுத்துக் கூறிய இயற்கை விதிகளைப் பின்பற்றுவதன் மூலம் ஏற்படக் கூடிய உறுதியான சுதந்திர உணர்ச்சியைப் பற்றியும் ஒன்றும் அறியாதவர்களாக இருக்கிறார்கள்.

# 7

# இயற்கைக்கு மாறான கட்டுப்பாடுகள்

தெற்கே உள்ள ஓர் உயர்தரப் பள்ளியின் ஆசிரியர், மாணவர்கள் உட்பட வேண்டியிருக்கும் சில நிர்ப்பந்தங்களை எடுத்துக் காட்டும் விவரங்களை எனக்கு அனுப்பியிருக்கிறார் :*

ஒரு விநாடிகூடத் தாமதிக்காமல் இந்த நிர்ப்பந்தங்களில் பெரும்பாலானவற்றை அகற்றிவிட வேண்டும். மாணவர்களின் மனத்தையோ, ஆசிரியர்களின் மனத்தையோ சிறைப்படுத்தி வைக்கக் கூடாது. தாமோ அல்லது அரசாங்கமோ சிறந்த வழி என்று கருதுவதை ஆசிரியர்கள் தங்களுடைய மாணவர்களுக்கு எடுத்துக் காட்டத்தான் முடியும். அப்படிச் செய்த பிறகு மாணவர்களின் சிந்தனைகளையும், உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்த அவர்களுக்கு உரிமையில்லை. இதனால், அவர்கள் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் உட்பட வேண்டியதில்லை என்று அர்த்தமில்லை. கட்டுப்பாடு இல்லாமல் எந்தப் பள்ளிக்கூடத்தையும் நடத்த முடியாது. ஆனால், மாணவர்கள் எல்லாத் துறைகளிலும் வளர்ச்சி பெறுவதற்குத் தடையாயிருக்கும் இயற்கைக்கு மாறான நிர்ப்பந்தங்களுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் ஒரு தொடர்பும் இல்லை. மாணவர்கள் என்ன செய்கிறார்கள் என்று வேவு பார்க்கும் சூழ்நிலையில் இது சாத்தியமாக இராது. இதுவரையில் பகிரங்கமாக இல்லாவிடினும் உள்ளூற தேசீய விரோதமான ஒரு சூழ்நிலையில் அவர்கள் இருந்து வந்திருக்கிறார்கள். இப்போது இதை மாற்ற வேண்டும். தேசீயத்தை வளர்ப்பது ஒரு நல்ல காரியமேயொழிய, அது ஒரு குற்றமல்ல என்பதை மாணவர்கள் அறிய வேண்டும்.

—'ஹரிஜன்' – 18—9—1937

* இங்கே கொடுக்கப்பட்டுள்ள கருத்துக்களை விளக்குவதற்கு அந்த விவரங்கள் தேவையில்லையாகையால், அவை இதில் சேர்க்கப்படவில்லை.

# 8

# வளர்ப்பதா, உருக்குலைப்பதா?

சமீபத்தில் நான் திருவாங்கூரிலும், சென்னையிலும் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது; என்னைக் காணவந்த பெரும்பாலான மாணவர்களும், "அறிவாளிகளும்," அறிவு வளர்ச்சியைக் காட்டுபவர்களாக இல்லாமல், அதை வீணடித்தவர்களாக இருந்ததைக் கண்டேன். இன்றைய கல்வி முறைதான் இந்த மோசமான போக்குக்கு ஆக்கம் அளிக்கிறது; மனத்தைத் தவருன வழியில் திருப்பிவிடுகிறது; அறிவு வளருவதற்குப் பதிலாக அது தடைபடச் செய்துவிடுகிறது. சேவா கிராமத்தில் நான் நடத்திய சோதனைகள், இந்தக் கருத்தை ஊர்ஜிதம்தான் செய்திருக்கின்றன. ஆனல், இந்தச் சோதனைகள் இன்னும் பூர்த்திபெறவில்லை யாகையால், அவற்றை ஆதாரங்களாக எடுத்துக் காட்ட முடியாது. *1904*-ஆம் வருடத்தில் தென்னுப்பிரிக்காவில் நான் பீனிக்ஸ் குடியிருப்புத் திட்டத்தை ஸ்தாபித்தேன். கல்வியைப் பற்றி அந்தக் காலத்திலிருந்து நான் கொண்டுள்ள அபிப்பிராயங்களைத்தான் இன்று கூறப்போகிறேன்.

கைகள், கால்கள், கண்கள், காதுகள், மூக்கு முதலிய உடல் உறுப்புகளுக்குச் சரியான தேர்ச்சியும் பயிற்சியும் கொடுப்பதன் மூலம்தான், அறிவுக்கு உண்மையான பயிற்சி கொடுக்க முடியும் என்று நான் கருதுகிறேன். அதாவது, ஒரு குழந்தையின் உடல் உறுப்புகளை புத்திசாலித்தனமான விதத்தில் உபயோகிப்பது, அந்தக் குழந்தையின் அறிவு எளிதாகவும், சீக்கிரமாகவும் வளர்ச்சி பெறுவதற்குச் சிறந்த வழியாகும். புத்தியும், உடலும் சேர்ந்து வளர்ச்சி பெறவேண்டும். அதே சமயத்தில் உள்ளத்திலும் அதேமாதிரி விழிப்பு ஏற்பட வேண்டும். இல்லாவிடில், அறிவு மாத்திரம் வளர்ச்சி பெறுவது சீரானதாக இல்லாமல் அரைகுறையானதாக இருக்கும். ஆன்மிகப் பயிற்சி என்ருல் உள்ளத்தின் பயிற்சியையே நான் குறிப்பிடுகிறேன். எல்லாத் துறைகளிலும், சரியான விதத்தில் மனம் வளர்ச்சி பெறுவது, குழந்தையின் உடற் கல்வியையும், ஆன்மிக சக்திகளையும் பொறுத்திருக்கிறது. அவ்விரண்டும் பிரிக்க முடியாத ஒன்ருகும். ஆகையால், இந்தத் தத்துவத்தின்படி, இவற்றைத் தனித்தனியாகவோ அல்லது ஒன்றில்லாமல் மற்றொன்றையோ வளர்க்க முடியும் என்று நினைப்பது முற்றிலும் தவருகும்.

உடல், மனம், ஆன்மா ஆகியவற்றிலுள்ள பல்வேறு தன்மைகள் இணக்கமாக ஒன்றி இயங்காமலிருப்பதனல் ஏற்படும் தீய விளைவுகள் எல்லோரும் அறிந்ததே. அவை யாவும் நம்மைச் சுற்றி இருக்கின்றன. இப்போதுள்ள நம்முடைய விபரீதமான தொடர்புகளால் அவற்றை அறியும் திறனை நாம் இழந்துவிட்டோம். நமது கிராமங்களில் உள்ளவர்களை எடுத்துக் கொள்

ளுங்கள். அவர்கள் தங்களுடைய குழந்தைப் பருவத்திலிருந்து, எந்தக் கால்நடைகளின் மத்தியில் வாழ்கிறார்களோ அவற்றைப் போலவே காலையிலிருந்து இரவுவரையில் தங்களுடைய வயல் களில் உழைத்துப் பாடுபடுகிறார்கள். அவர்களுடைய வாழ்க்கை சலிப்பை உண்டாக்குவதாகவும் முடிவற்றதாகவும் இருக்கிறது; ஒரு துளி விவேகமோ, உயர்தரப் பண்புகளோ இல்லாத யந்திரம் போன்ற ஒரே மாதிரியான வாழ்க்கையாக இருக்கிறது. மனத்தையோ, ஆன்மாவையோ அபிவிருத்தி செய்துகொள்ளுவதற்கான எல்லா வாய்ப்புகளும் பறிக்கப்பட்டுவிட்டதால், மிருகத்தைப் போன்ற நிலைக்கு அவர்கள் தாழ்ந்துவிட்டார்கள். வாழ்க்கை என்பது அவர்களுக்கு சோகம் நிறைந்த ஒரு குளறுபடியாகிவிட்டது. அவர்கள் எப்படியோ தட்டுத் தடுமாறி வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், நகரங்களிலும், பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும், இன்று கல்வி என்ற பெயரில் அளிக்கப்படுவது, அறிவைச் சிதைப்பதாகவே இருக்கிறது. அறிவை வளர்ப்பது, உடல் உழைப்புடன் எவ்விதத் தொடர்பும் இல்லாத ஒன்று என்று அங்கே கருதப்படுகிறது. ஆனால், உடல் ஆரோக்கியத்துடன் இருக்க வேண்டுமானால் அதற்கு ஏதாவது தேகப் பயிற்சி வேண்டும்; ஆகையால், இயற்கைக்கு முரணானதும், வறட்டுத் தன்மையுள்ளதுமான ஏதோ ஒரு தேகப் பயிற்சியின் மூலம் அதைச் செய்வதற்கு வீணில் முயற்சி செய்கிறார்கள். பலன் இவ்வளவு விபரீதமானதாக இல்லையென்றால், அது விவரிக்க முடியாத அளவுக்கு நகைக்கத் தக்கதாக இருக்கும். இந்த முறையில் பயிற்சி பெற்று வரும் இளைஞன், உடல் உறுதியில் ஒரு சாதாரணத் தொழிலாளியுடன் போட்டி போட முடியாது. உடலைச் சற்று வருத்திக் கொண்டால் கூட அவனுக்குத் தலைவலி ஏற்பட்டுவிடுகிறது; சற்று வெய்யிலில் நின்றாலும், தலை சுற்ற ஆரம்பித்துவிடுகிறது. இதெல்லாம் மிகவும் "இயற்கையானது" என்று கருதப்படுவது தான் ஆச்சரியம். உள்ளத்தின் தன்மைகள் சம்பந்தப்பட்டவரையில், அவை தாறுமாறான வழியில் செல்ல அனுமதிக்கப்படுகின்றன; அல்லது எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லாமல் நினைத்தபடி போகும்படி விட்டுவிடப்படுகின்றன. தார்மிக, ஆன்மிக அராஜகம்தான் இதன் பலன். இந்த லட்சணத்தில், இது பாராட்டத்தக்க ஒன்றாகவும் கருதப்படுகிறது !!

இதற்கு மாறாக, அகக் கல்வி அளிக்கும் விஷயமாக ஆரம்பத்திலிருந்தே கவனிக்கப்பட்டுவரும் ஒரு குழந்தையை எடுத்துக் கொள்ளுங்கள். அவன் கல்வி பெறுவதற்காக நூற்றல், தச்சு வேலை, விவசாயம் போன்ற உபயோகமான ஒரு வேலை அவனுக்கு அளிக்கப்படுவதாக வைத்துக் கொள்ளுவோம். இந்த வேலைகளை எப்படிச் செய்ய வேண்டும், இவற்றிற்கான கருவிகளை எப்படி உபயோகிக்க வேண்டும், அந்தக் கருவிகளை எப்படிச் செய்ய வேண்டும் என்ற பூராவிவரங்களும் அவனுக்குப் போதிக்கப்படுகின்றன என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்போது அவன்

உடல் கட்டுடன் வளருவான் என்பது மட்டுமல்ல; வெறும் புத்தகப் படிப்பாக இல்லாமல், அன்றாட சோதனை என்ற அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட நல்ல உறுதியான அறிவையும் அவன் பெறுவான். அவனுடைய அறிவு வளர்ச்சியில் கணிதமும், தன்னுடைய தொழிலை புத்திசாலித்தனமாகவும், திறமையாகவும் செய்வதற்கு வேண்டிய பல விஷயங்களும் சேர்ந்திருக்கும். இத்துடன், பொழுது போக்குக்காக இலக்கியமும் சேர்க்கப்பட்டால், பல துறைகளிலும் சீரான ஒரு கல்வியை அவன் பெறுவான்; அறிவு, உடல், ஆன்மா ஆகிய யாவும் தமது முழுப் பங்கைப் பெறும்; இவை இயற்கையான, சீரான முறையில் பூரணமாக வளர்ச்சி பெறும். மனிதன் என்பது வெறும் அறிவுப் பிண்டமல்ல, அல்லது மிருகத்தைப் போன்ற உடல் மாத்திரமல்ல, அல்லது உள்ளமும் ஆன்மாவும் மட்டும் மனிதனாகிவிடுவதில்லை. பூரண நிலையை அடைவதற்கு இம்மூன்றும் இணக்கமாகவும், சீராகவும் ஒன்றுபட வேண்டும். கல்வியின் உண்மையான லாப நஷ்டத்திற்கு இதுதான் அளவு கோலாக இருக்கும். நாம் சுதந்திரம் பெற்ற பிறகுதான் இம்மாதிரியான கல்வியை அளிக்க முடியும் என்று சொல்லுவது, குதிரைக்கு முன்னால் வண்டியைக் கொண்டுபோய் நிறுத்துவது போலாகும். லட்சக் கணக்கான நமது மக்கள் தங்களுடைய தொழில்களை புத்திசாலித்தனமாகச் செய்வதற்குக் கற்றுக் கொடுத்து, எல்லோருடைய பொது நன்மைக்காகவும்தான் வாழ்கிறோம் என்பதையும் அவர்கள் உணரும்படி செய்தால், சுதந்திரம் நம்ப முடியாதபடி அவ்வளவு சீக்கிரத்தில் வந்து விடும்.

—'ஹரிஜன்'–8—5—1937

# 9

# உண்மையான கல்வி

ஆமதாபாத்திலிருந்து பேராசிரியர் மல்கானி பின் கண்ட தந்தியை அனுப்பியிருக்கிறார் :

" வித்தியா பீடத் தொண்டர்கள் ஸிந்துவுக்குப் போவதாக கிருபளானி கூறுகிறார்."

3-ஆம் தேதியன்று புனாவில் நடைபெற்ற அகில இந்திய சுதேசிக் கடைகள், கைத்தொழில் கண்காட்சியில் சர் எம். விசுவேசுவரய்யா பின் வருமாறு பேசியதாக வெளியிடப்பட்டிருக்கிறது :

" என்னுடைய வார்த்தைகளுக்கு சர்வகலாசாலைகள் செவி சாய்க்குமானால், நம்முடைய பொருளாதாரத் திறமையின்மை நீடிக்கும்வரையில், இலக்கிய, தத்துவ வகுப்புகளுக்கு மாணவர்

களைச் சேர்ப்பதைக் கட்டுப்படுத்தி, விவசாயம், இஞ்சினீரிங், தொழில் நுட்பம், வர்த்தகம் ஆகிய துறைகளில் பட்டப்படிப்பை எடுத்துக் கொள்ளுமாறு மாணவர்களைத் தூண்ட வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்."

இலக்கியத் தகுதி பெறுவது ஒன்றுதான் முக்கியம் என்ற நம்முடைய கல்வியில் காணப்படும் இன்றைய பெரும் குறைபாட்டை சர் விசுவேசுவரய்யா வற்புறுத்தியிருக்கிறார்; அதைவிட ஒரு பெரிய குறைபாட்டையும் நான் சொல்ல விரும்புகிறேன். மாணவர்கள் தங்கள் இலக்கியங்களைப் படித்துக் கொண்டிருக்கும் போது, தங்களுடைய பாடங்களை நிறுத்தி வைத்துவிட்டு, மிகச் சிறிய அல்லது தற்காலிகமான தொண்டுகளில் கூட ஈடுபடக் கூடாதென்று எண்ணும்படி கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். குஜராத்தில் சிலர் செய்வது போன்ற நிவாரண வேலைகளைச் செய்வதற்காக, மாணவர்கள் தங்களுடைய இலக்கியக் கல்வியையோ அல்லது தொழில் கல்வியையோ நிறுத்தி வைத்தால், அதனால் அவர்களுக்கு லாபமேயொழிய நஷ்டம் ஒன்றுமில்லை. எந்தக் கல்வியின் இறுதி நோக்கமும் தொண்டாகத்தான் இருக்கவேண்டும். படித்துக் கொண்டிருக்கும்போதே கூடத் தொண்டு செய்யும் வாய்ப்பு ஒரு மாணவனுக்குக் கிடைத்தால், அதை அவன் ஓர் அரிய வாய்ப்பாகக் கருத வேண்டும்; படிப்பு உண்மையில் நிறுத்தி வைக்கப்படுவதாக நினைக்காமல், அது படிப்புக்கு உதவி என்றே நினைக்கவேண்டும். ஆகையால், குஜராத்தி தேசீயக் கல்லூரி மாணவர்கள் தங்கள் தொண்டுகளை குஜராத் எல்லைகளுக்கு அப்பால் விஸ்தரிக்கும் யோசனையை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். நாம் குறுகிய மாகாண உணர்ச்சி கொண்டவர்களாகி விடக் கூடாது என்று சில நாட்களுக்கு முன்புதான் சொன்னேன். நிவாரண வேலைகள் செய்வதற்கான ஏராளமான தொண்டர்களைக் கொடுப்பதற்கு குஜராத்தைப் போல் சிந்து மாகாணம் அவ்வளவு தூரம் தயாராக இல்லை. ஆகையால், சிந்துவுக்கோ அல்லது அவர்களுடைய சேவை தேவைப்படும் வேறெந்த மாகாணத்திற்கோ குஜராத் தொண்டர்களை அனுப்பவேண்டும் என்றே எதிர்பார்க்கப்படுகிறது. பொதுவாக குஜராத்தும், குறிப்பாக குஜராத் மாணவர்களும் சிந்து மாகாணத்திற்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஒத்துழையாமை இயக்கத்தின்போது கல்வித் துறையில் பிரபலமானவர்களான ஆச்சாரிய கித்வானி, ஆச்சாரிய கிருபளானி, அத்யாபகர் மல்கானி ஆகிய மூவரையும் சிந்து மாகாணம் அளித்தது. ஆகையால், குஜராத் மாணவர்கள் சிந்து மாகாணத்திற்குச் செல்லுவது, தங்களுடைய கடமையைத் தவிர வேறு எதுவும் செய்வதாகாது.

தன்னுடைய கஷ்ட காலத்தில் உதவி கோரி குஜராத் விடுத்த வேண்டுகோளுக்குக் கிடைத்துள்ள பதில் மிகவும் திருப்தியளிப்பதாக இருக்கிறது. ஆரம்ப காலத்தில் உதவி செய்தவர்களில், குருகுல கங்ரி, சாந்தி நிகேதனம் ஆகிய இரு

ஸ்தாபனங்களையும் குறிப்பிட விரும்புகிறேன். தங்களுடைய நன்கொடைகள் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியளிக்கும் என்பதை அறிந்த அவர்கள், அதைப் பற்றி எனக்குத் தந்தி மூலம் தகவலும் அனுப்பினார்கள். நன்கொடைகள் நேரில் ஸ்ரீ வல்லபபாய் பட்டேலுக்கு அனுப்பப்பட்டன. குருகுலத்தின் சார்பில் நாலு தவணைகளில் அனுப்பப்பட்ட நன்கொடைகள் பற்றி ஆச்சாரிய ராமதேவ்ஜி எனக்கு விவரங்கள் கொடுத்திருக்கிறார். மேற்கொண்டும் எதிர் பார்க்கலாமென்று அவர் எழுதியிருக்கிறார். அவர் மேலும் கூறுகிறார் :

"ஆசிரியர்கள் தங்களுடைய சம்பளங்களில் ஒரு பகுதியை அனுப்பியிருக்கிறார்கள். துணிமணிகளைச் சலவைக்குப் போடுவதுதான் வழக்கம். பிரம்மச்சாரிகள் அப்படி சலவைக்கு போடாமல் தங்களுடைய துணிகளைத் தாங்களே வெளுத்துக் கொண்டு, பணத்தை மிச்சப் படுத்தி அனுப்பியிருக்கிறார்கள் ; பெண்கள் பள்ளியிலுள்ள பிரம்மச்சாரிணிகள் கொஞ்ச காலத்திற்கு பாலும், நெய்யும் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு மிச்சப்படுத்தியிருக்கிறார்கள்."

நமக்கு நன்கொடை அனுப்பியுள்ளவர்களில் சிலருடைய தன்னல மறுப்பை குஜராத்தில் நன்கொடை பெறுபவர்களும், அவற்றை விநியோகம் செய்பவர்களும் நினைவில் வைத்துக் கொள்ளட்டும். காலஞ்சென்ற சுவாமி சிரத்தானந்தர் குருகுலத்தின் தலைவராக இருந்த காலத்தில், தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகம் நடந்து கொண்டிருந்தபோது, அங்குள்ள நமது நாட்டினருக்கு உதவி செய்வதற்காக முதலில் இந்தத் தன்னல மறுப்பை ஆரம்பித்துவைத்தார். குருகுலத்திலுள்ள பையன்களும், பெண்களும் இப்போது செய்துள்ள தன்னல மறுப்பு எனக்கு அந்தச் சம்பவத்தை நினைவூட்டுகிறது. குருகுலத்தின் பழக்க வழக்கங்களில் பயிற்சி பெற்ற பையன்கள், பெண்களிடமிருந்து குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் இத்தகைய தியாகம் எதிர் பார்க்கக் கூடியதே யாகும்.

—'எங் இந்தியா' – 13—10—1927

# 10

# தொண்டு புரியும் கலை

[பெங்களூரில் உள்ள யுனைடெட் தியலாஜிகல் கல்லூரி மாணவர்களின் கூட்டம் ஒன்றில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]

"நம்மை ஆங்கில போதனா மொழிக்கு உட்படும்படி செய்தது, சென்ற தலைமுறையினரின் தவறு என்பதை, நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால், விந்திய மலைக்கு அப்பாலுள்ள மக்களுடன் நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டு

மானால், அந்த முட்டுக்கட்டையை நீங்கள் அகற்ற வேண்டும். நீங்கள் செய்யக் கூடிய அல்லது செய்ய வேண்டிய தொண்டுகள் சம்பந்தப்பட்டவரையில், நான் அதிகம் பேச வேண்டியதில்லை என்று நினைக்கிறேன். ஏனெனில், என்னுடைய ராட்டினத் திட்டத்தை ஆதரித்ததன் மூலம் என்னுடைய வேலையை நீங்கள் எளிதாக்கி விட்டீர்கள். ஒடுக்கப்பட்ட வகுப்பினரைப் பற்றி நீங்கள் குறிப்பிட்டீர்கள். ஆனால், ஒடுக்கப்பட்ட வகுப்பினர் என்று கூறப்படுபவர்களைவிட இன்னும் அதிகக் கஷ்டத்தில் வாழும் மக்கள் மிகவும் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்கள்தான் உண்மையான இந்தியாவின் மக்கள் ஆவர். பின்னர் கோர்வை போன்ற ரயில்வே பாதைகள், இந்த மக்கள் வசிக்கும் இடங்களின் ஒரு ஓரத்தைத் தான் தொடுகின்றன. ரயில்கள் போகாத இடங்களில் நீங்கள் பிரயாணம் செய்தால், இதைப் பார்க்கமுடியும். வடக்கேயிருந்து தெற்கேயும், கிழக்கேயிருந்து மேற்கேயும் போகும் இந்த ரயில் பாதைகள், மக்களின் செல்வத்தை அடித்துக்கொண்டு செல்லும் பெரும் குழாய்களாக இருக்கின்றன. ரத்தத்தை 'உறிஞ்சிக் கொண்டு' செல்லுகின்றன என்ற வார்த்தையை லார்டு ஸாலிஸ் பரி உபயோகித்தார். அதற்குப் பதிலாக மக்களுக்கு எதுவும் அளிக்கப்படுவதில்லை. நகரங்களில் வசிக்கும் நாம் இந்த ரத்தத்தை உறிஞ்சும் வேலையில் கூட்டாளிகளாக இருக்கிறோம். 'ரத்தத்தை உறிஞ்சுவது' என்ற வார்த்தை எவ்வளவு மோசமானதாக இருப்பினும். அதுதான் உண்மையான நிலையை எடுத்துக் காட்டுகிறது. இந்த வகுப்பினரைப்பற்றி எனக்குக் கொஞ்சம் தெரியும். அவர்களுடைய தேவைகளைப்பற்றி நான் சிந்தித்துப் பார்த்திருக்கிறேன். நான் ஒரு ஓவியனாக இருந்தால், ஒளியோ. உயிரோ, பளபளப்போ ஒரு துளிகூட இல்லாத அவர்களுடைய வறட்டுக் கண்களை நான் சித்திரம் வரைந்து காட்டமுடியும். அவர்களுக்கு நாம் எப்படித் தொண்டு புரிவது? ''அண்டை வீட்டுக்காரர்களின் தோள்களிலிருந்து நாம் இறங்குவோமாக'' என்ற அழகான சொற்றொடரை டால்ஸ்டாய் உபயோகித்தார். ஒவ்வொருவரும் அந்த ஒரு வேலையைச் செய்துவிட்டால், அவர்களிடமிருந்து கடவுள் எதிர்பார்க்கும் எல்லா வேலைகளையும் செய்தவர்களாகிவிடுவார்கள். இப்படி நான் சொல்வது திடுக்கிடத்தக்கதாகத்தான் இருக்கும். தொண்டு புரியும் கலையை நீங்கள் கற்றுக்கொண்டுள்ள ஒரு இடத்தில் இருப்பதால் இதற்கு என்ன வழி என்று நீங்கள்தான் கண்டுபிடிக்கவேண்டும். இதையெல்லாம் ஒவ்வொன்றாகச் சிந்தித்து என்ன முடிவுக்கு வருகிறீர்கள் என்பதைப் பாருங்கள். இந்த ஏழை மக்களின் முதுகுகளிலிருந்து இறங்குவதற்கு, நான் சொன்னதைத் தவிர வேறு வழி ஏதாவது நீங்கள் கண்டுபிடித்தால், எனக்குத் தெரிவியுங்கள். நானே கற்றுக்கொள்ளும் நிலையில்தான் இருக்கிறேன். எனக்கு, சொந்த நலன் எதுவுமில்லை; உண்மையை எங்கு கண்டாலும், அதை ஏற்றுக்கொண்டு, அதன்படி நடக்க முயற்சிக்கிறேன்.

"ராட்டினத்திற்குப் பதிலாக மக்களுக்கு இலக்கியக் கல்வி அளிக்கலாம் என்று யோசனை கூறி அமெரிக்காவிலுள்ள பாதிரி நண்பர் ஒருவர் எனக்கு எழுதினார். அவர் மனப்பூர்வமாக அதை எழுதியிருந்தார். ஆகையால், இப்படி எழுதியிருக்கிறாரே என்று வருத்தப்பட்டேன். ஏசுநாதருக்குக்கூட அதிகமாக எழுதப் படிக்கத் தெரியும் என்று நான் நினைக்கவில்லை. ஆரம்பகால கிறிஸ்தவர்கள் தங்களுடைய இலக்கிய அறிவை வளர்த்துக் கொண்டார்கள் என்றால், தங்களுடைய வேலைகளை இன்னும் நன்றாகச் செய்வதற்காகத்தான் அப்படிச் செய்தார்கள். மக்கள் தங்களைத் தாங்களே உணர்ந்துகொள்ளுவதற்கு வெறும் இலக்கியக் கல்விதான் முதல் தேவை என்று புது ஏற்பாட்டில் ஒரு துளியாவது வற்புறுத்தப்பட்டிருக்கிறதென்று நான் நினைக்கவில்லை. எழுத்தறிவு அவசியமில்லையென்று நான் சொல்லுவதாக அர்த்தமில்லை. எதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதுதான் கேள்வி. ஒரு பொருளை சரியான இடத்தில் வைக்கவில்லையென்றால், அது குப்பையாகிவிடுவதைப்போல், ஒரு நல்ல பொருளைத் தவறான இடத்தில் வைப்பதுபோன்றதுதான் இது. ஒரு நல்ல காரியம் தவறான விதத்தில் வற்புறுத்தப்படுவதைப் பார்க்கும்போதெல்லாம், என் மனம் கொதிப்படைகிறது. ஒரு குழந்தை எழுத்தறிவு பெறுவதற்கு முன்பு, அதற்குச் சாதம் ஊட்டவேண்டும், ஆடை அணிவிக்கவேண்டும், பிறகு அது தானாகச் சாப்பிடுவதற்கும் கற்றுக்கொடுக்கவேண்டும். குழந்தைக்கு எல்லாம் நாமே செய்துகொண்டிருக்கக்கூடாது. அது தானாகவே வேண்டியதைச் செய்யக் கற்றுக்கொள்ளவேண்டும். நமது குழந்தைகள் தங்கள் கைகளையும், கால்களையும் உபயோகிக்க முதலில் கற்றுக்கொள்ளட்டும். அதனால்தான் முதலில் அவர்கள் ராட்டினத்தைப்பற்றி அறிந்துகொள்ளவேண்டும் என்று கூறுகிறேன்.

"கதருக்கு 'ஆதரவளிப்பது' என்று நீங்கள் உபயோகித்துள்ள வார்த்தையை நான் விரும்பவில்லை. அது தவறான கருத்தை வெளியிடுவதாக இருக்கிறது. நீங்கள் போஷகர்களாக இருக்க விரும்புவீர்களா அல்லது தொண்டர்களாக இருக்க விரும்புவீர்களா? பெரிய மனதுபண்ணி கதருக்கு ஆதரவு கொடுப்பது என்ற நிலை இருந்துவரும் வரையில், அது ஒரு அர்த்தமற்ற நாகரிகமாகத்தான் இருந்துவரும். ஆனால் அதைத்தான் உபயோகிப்பது என்று திட உறுதி செய்துகொண்டுவிட்டால், பின்னர் அது சேவையின் சின்னமாகத் திகழும். கதர் அணிய ஆரம்பித்தவுடனேயே நீங்கள் தொண்டு செய்ய ஆரம்பித்துவிடுகிறீர்கள். 35 வருடங்களாக ஏழை மக்களுடன் எனக்கு இடைவிடாது தொடர்பு இருந்துவந்திருக்கிறது. சேவை புரியும் கலை மிக எளிதானது என்பதை அந்த அனுபவத்தின் பலனாக நான் கண்டிருக்கிறேன், இதைக் கல்லூரிகளிலோ பள்ளிக்கூடங்களிலோ கற்றுக்கொள்ளமுடியாது. சேவை செய்யும் உணர்ச்சியை எங்கு வேண்டுமானாலும் கற்றுக்கொள்ளலாம். இதிலும்

கூட எது முக்கியம் என்பதுதான் கேள்வி. மனமாற்றம் ஏற்பட்ட உடனேயே நீங்கள் தொண்டர்களாகிவிடுவீர்கள். இது உங்களுக்குத் தெளிவாக விளங்குவதற்குக் கடவுள் துணை புரிவாராக''

—'எங் இந்தியா' – 11—8—1927

# 11

# பிரம்மச்சரியம்

*(குஜராத்தைச் சேர்ந்த பதரான் என்னுமிடத்திலிருக்கும் சேவா ஸமாஜத்தினர் காந்திஜிக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தனர். சங்கத்திலுள்ள இளைஞர்கள் குறிப்பாக கேட்டுக் கொண்டதற்கிணங்க, அப்போது காந்திஜி செய்த பிரசங்கத்தின் சாரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.)*

பிரம்மச்சரியத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் பேசும்படி என்னைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவசியம் ஏற்படும் போது சில விஷயங்களைப்பற்றி 'நவஜீவன்' பத்திரிகையில் நான் எழுதுகிறேன். ஆனால், அவற்றைப்பற்றி நான் பேசுவது மிகவும் அரிது. பிரம்மச்சரியம் அத்தகைய விஷயங்களில் ஒன்று. இது மிகவும் கடினமான ஒரு விஷயம் ஆகும் வெறும் வார்த்தைகளால் இதை விளக்கிக் கூறமுடியாது, அது ஒரு வாழ்க்கை முறையே. அதை நடைமுறையில் அனுசரிப்பது மிகவும் கடினமானது. ஆனால் நீங்கள் கேட்க விரும்பும் பிரம்மச்சரியம் சாதாரண பிரம்மச்சரியமே. இன்னும் அதிகக் கடினமான பிரம்மச்சரியமும் ஒன்று இருக்கிறது. நம்முடைய எல்லாப் புலன்களையும் அடக்கி ஆளுவதுதான் அந்த பிரம்மச்சரியம் என்று விளக்கப்பட்டிருக்கிறது.

சாதாரண பிரம்மச்சரியத்தை நடைமுறையில் அனுசரிப்பதே கஷ்டமானது என்று நமது சாத்திரங்கள் கூறுகின்றன. இது 99 சதவிகிதம் உண்மையானது. ஆனால், இது முழு உண்மைக்கு ஒரு சதவிகிதம் குறைவாக இருக்கிறது என்பதையும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன், மற்றப் புலன்களை, குறிப்பாக, நாவின் ருசியை அடக்கியாள நாம் பயிற்சி செய்வதில்லையாகையால்,அது கடினமானதுபோல் தோன்றுகிறது. நாவின் ருசியை அடக்கியாள முடிந்தவர்களுக்கு, பிரம்மச்சரியத்தை அனுசரிப்பது சுலபமாக இருக்கும். மிருகங்களின் அளவுக்குக்கூட மனிதர்கள் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பதில்லை என்று உயிரியல் நிபுணர்கள் கூறுகிறார்கள். இது உண்மைதான். மிருகங்கள் தங்களுடைய நாவை அடக்கியாள முடிகிறது என்பதுதான் இதற்குக் காரணம். மிருகங்கள் மனமறிந்து இந்தக் கட்டுப்பாட்டைச் செய்யவில்லை. இது அவற்றின் இயற்கையான அமைப்பின் ஓர் அம்சமாக இருக்-

கிறது. கால்நடைகள் முக்கியமாக புல்லையே தின்கின்றன, தங்கள் பசியின் அளவுக்கு ஏற்றாற்போல் தின்கின்றன. அவை உயிர் வாழ்வதற்காக உண்கின்றன, உண்பதற்காக உயிர் வாழவில்லை. ஆனால், நாமோ நேர்மாறாகச் செய்கிறோம். குழந்தை பல்வேறு ருசிகளை அனுபவிக்க வேண்டும் என்பதற்காக ஒரு தாயார் தன் குழந்தைக்குப் பல்வேறு விதமான தின்பண்டங்களைக் கொடுக்கிறாள். தன்னுடைய குழந்தை முடிந்த அளவுக்குச் சாப்பிட்டு, அனுபவிப்பதற்கு நிறையக் கொடுப்பதுதான், தன் குழந்தையினிடம் தனக்குள்ள அன்பைக் காட்டுவதற்குச் சிறந்த வழி என்று அவள் நினைக்கிறாள். உண்மையில், அப்படிச் செய்வதன் மூலம் ருசி உணர்ச்சி மழுங்கும்படி செய்து விடுகிறோம். ஏனெனில், பசித்தால் தான் ருசி இருக்கும். ஏற்கனவே வேண்டிய அளவுக்குச் சாப்பிட்டுவிட்டு ஒருவனுக்கு லட்டுவில் இருக்கும் ருசியை விட, பசியுடன் உள்ள ஒருவனுக்கு ஒரு சாதாரண ரொட்டித் துண்டு இன்னும் அதிக ருசியானதாக இருக்கும். நமது ருசியையும், உணர்ச்சிகளையும் தூண்டிவிடுவதற்காக நமது உணவு பதார்த்தங்களில் பலவிதமான மசாலைப் பொருட்களை உபயோகிக்கிறோம். பின்னர், பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதில் உள்ள கஷ்டத்தைப் பற்றிப் புகார் செய்கிறோம். கடவுள், நாம் பார்ப்பதற்குக் கண்களைக் கொடுத்திருக்கிறார். ஆனால், பார்க்கக் கூடாதவைகளைப் பார்த்து அந்தக் கண்களை அசுத்தமாக்கிக் கொள்கிறோம். ஒரு தாயார், காயத்ரி மந்திரத்தைத் தெரிந்து கொண்டு ஏன் அதைத் தன் குழந்தைக்குக் கற்றுக் கொடுக்கக் கூடாது? அந்த மந்திரத்தின் உள் அர்த்தத்தை அவள் புரிந்து கொள்ளாவிட்டாலும், உயிர் அளிக்கும் சூரியனை வணங்குவதற்கு அவள் தன் குழந்தைக்குச் சொல்லித்தரலாம். ஆரிய சமாஜிகள், சனாதனிகள் இருவருமே சூரியனை வணங்குகிறார்கள். சூரியனை வணங்குவது மட்டும் காயத்ரியின் உண்மையான அர்த்தத்தின் ஓர் அம்சமேயாகும். சூரியனை வணங்குவதன் அர்த்தம் என்ன? நாம் தலை நிமிர்ந்து நின்று, சூரியனைப் பார்த்து, நமது கண்களை சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே அதன் அர்த்தம். இந்த மந்திரத்தை ஜபித்தவர்கள் ரிஷிகள். சூரியோதயத்தில் உள்ளது போன்ற நாடகத்தையும், மகிழ்ச்சியையும், அழகையும் வேறு எதிலும் காணமுடியாது என்பதை சூரிய நமஸ்காரத்தின் மூலம் அவர்கள் காட்டினார்கள். வானத்தை விட உயர்ந்த அரங்கமோ, கடவுளைவிடத் திறமைசாலியான நாடக டைரக்டரோ இருக்க முடியாது. ஆனால் தங்களுடைய குழந்தைகளின் முகத்தைக் கழுவி சுத்தம் செய்த பின், அவர்களுக்குக் காலை வானத்தைக் காட்டும் தாய்மார் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள்?

பையன் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்ளுவது, ஒரு வேளை நாளடைவில் அவன் ஒரு பெரிய அரசாங்க அதிகாரியாவதற்கு உதவியாக இருக்கலாம். ஆனால், பையன் தெரிந்தும் தெரியாமலும் வீட்டில் கற்றுக் கொள்ளுவதன் மதிப்பு என்ன என்பதை

யார் கணக்கிட்டிருக்கிறார்கள்? குழந்தைகள் இன்னும் அதிக அழகாகத் தோற்றம் அளிக்க வேண்டும் என்பதற்காக, நமது பெற்றோர்கள் குழந்தைகளின் உடல்களை அனாவசியமான அளவுக்கு ஆடைகளால் மூடிவிடுகிறார்கள். ஆனால், அது உண்மையிலேயே குழந்தைகளின் அழகை அதிகப்படுத்துகிறதா? உடலை வெய்யிலிலிருந்தும், குளிரிலிருந்தும் காப்பாற்றுவதற்காகத்தான் ஆடைகளேயொழிய, அழகை அதிகப்படுத்துவதற்காக அல்ல. பிரம்மச்சரியத்தை அனுசரிப்பவனின் உடல், எஃகைப் போல் அவ்வளவு உறுதியானதாகவும், வலுவுள்ளதாகவும் இருக்கும். குழந்தைகளுக்குச் செல்லம் கொடுத்து வளர்ப்பதன் மூலம் அவர்களுடைய உடற்கட்டைப் பாழாக்கிவிடுகிறோம். வீட்டிற்குள்ளேயே அவர்களை வைத்துக்கொண்டிருந்தால் உடலின் தணதணப்பு அப்படியே இருக்கும் என்று நினைக்கிறோம். ஆனால், இப்படியாக உண்டாக்கப்படும் தணதணப்பை அரிப்பெடுக்கும் ஒரு சிரங்குக்குச் சமமாகச் சொல்லலாம். அளவுக்கு மீறிய ஜாக்கிரதையினால் நமது உடல்களை மிகவும் பலவீனப்படுத்தி, கடும் உழைப்புக்குத் தகுதியற்றவையாகச் செய்துள்ளோம். ஆடைகளைப் பற்றி நான் கூற வேண்டியது அவ்வளவுதான்.

முன்யோசனையில்லாமல் நம்முடைய வீடுகளில் நாம் நடத்தும் சம்பாஷணைகளினால் குழந்தையின் மனத்தில் விரும்பத்தகாத எண்ணங்களையும் உண்டாக்கி விடுகிறோம். அவனுடைய கல்யாணத்தைப் பற்றிப் பேசுகிறோம். அதைப் பற்றியும், அதனுடைய முழு அர்த்தத்தைப் பற்றியும் அவனைச் சிந்திக்க வைக்கக் கூடிய விஷயங்களை அவன் பார்க்க அனுமதிக்கிறோம். இந்நிலையில், நாம் ஏன் காட்டுமிராண்டிகளாகிவிடவில்லை என்பது தான் ஆச்சரியமாக இருக்கிறது. தார்மிக ஒழுக்கக் கட்டுப்பாடுகளை மீறுவதற்கு இவ்வளவு வாய்ப்புகள் இருந்த போதிலும், நமது சமூகத்தில் அந்தக் கட்டுப்பாடுகள் இன்னமும் அப்படியே இருக்கின்றன. மனிதன் தன்னைத்தானே கெடுத்துப் பாழாக்கிக் கொள்ளுவதற்குப் பல வாய்ப்புகள் இருந்த போதிலும், அவன் கெட்டுவிடுவதில்லை. சமூகத்தில் அவனது நிலை அப்படி இருக்கிறது. பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதற்கு இடையூறாக உள்ள இந்தத் தடைகளை அகற்றிவிட்டால், அது இன்னும் எளிதாகி விடும்.

இந்த நிலையில் கூட, உடல் வலிமை, தகுதி ஆகிய விஷயங்களில் நாம் மற்றவர்களுடன் போட்டி போட விரும்புகிறோம். இதைச் செய்வதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று தெய்விகமானது, மற்றொன்று சைத்தான் வழி. சைத்தான் வழியின் கீழ், உடல் வலிமையை வளர்ப்பதற்கு மாட்டிறைச்சி உண்பது உட்பட, சரியாக இருந்தாலும் தவறாக இருந்தாலும், எல்லா வழிகளையும் உபயோகித்துக் கொள்ளலாம். நாம் இறைச்சி சாப்பிட வேண்டும் என்றும், இல்லாவிட்டால் ஆங்கிலேயர்களைப் போல் அவ்வளவு உடல் வலிமையும், தசைக் கட்டும் பெற முடியாது என்றும் என்னுடைய இளமைப் பருவத்தில் என் நண்பர்

ஒருவர் சொல்லுவது உண்டு. கவிஞர் நர்மதா சங்கரும் தம்முடைய கவிதைகளில் ஒன்றில் இதே யோசனையைத்தான் கூறியிருக்கிறார்: "ஆங்கிலேயர்கள் நாட்டை ஆளுகிறார்கள்; இந்தியர்கள் கோழைகளைப் போல் அவர்களுக்குப் பணிந்துவிட்டார்கள். ஆங்கிலேயர்கள் அதிக உடல் வலிமையுள்ளவர்கள் என்பதே இதற்குக் காரணம்". இந்த வரிகளில் அதே யோசனைதான் இருக்கிறது. நர்மதா சங்கர் குஜராத்துக்கு மிகுந்த நன்மை செய்திருக்கிறார். ஆனால், அவருடைய வாழ்வில் தெளிவான இரண்டு கட்டங்கள் இருந்தன. ஒன்று, கட்டுப்பாடில்லாத போக வாழ்வு, மற்றொன்று தன்னடக்க வாழ்வு. நான் மேற்கோள் காட்டிய கவிதை அந்த முதல் கட்டத்தில் எழுதப்பட்டது. ஜப்பானில் கூட, மற்ற நாடுகளுடன் பலப் பரிட்சை செய்து பார்த்தாக வேண்டும் என்ற காலம் வந்தபோது, அந்நாட்டு மக்கள் மாட்டிறைச்சி சாபபிட ஆரம்பித்தார்கள். ஒருவர் தம்முடைய உடலை சைத்தானைப்போல் கட்டி வளர்க்க விரும்பினால், விலக்கப்பட்ட இத்தகைய ஆகாரங்களை உட்கொள்ளத்தான் வேண்டும்.

ஆனால், தெய்வ சம்மதமான பாதையில் உடலைக் கட்டி வளர்க்க விரும்பினால், பிரம்மச்சரியம் ஒன்றுதான் அதற்கான வழியாகும். எனக்கு அளிக்கப்பட்ட வரவேற்புப் பத்திரத்தில், என்னை ஒரு "நைஷ்டிக"* பிரம்மச்சாரி என்று வர்ணித்திருக்கிறார்கள். இந்த வரவேற்பை எழுதியவருக்கு, அந்த வார்த்தையின் உண்மையான அர்த்தம் தெரியாது என்று மட்டும் சொல்லிக் கொண்டு நிறுத்திக் கொள்ளுகிறேன். இல்லாவிடில், மணமாகி, குழந்தைகள் பெற்றெடுத்துள்ள ஒருவர் நைஷ்டிக பிரம்மச்சாரியாக இருப்பது சாத்தியமில்லை என்பது அவருக்கு எப்படித் தோன்றாமலிருக்கும்? நைஷ்டிக பிரம்மச்சாரிக்கு தலைவலியோ, ஜுரமோ வருவதேயில்லை; இருமலும், குடல் நோயும் வருவதில்லை. ஆரஞ்சுப் பழத்தின் விதைகள் குடலுக்குள் போய்விட்டால், குடல் நோய் வரும் என்று வைத்தியர்கள் சொல்லுகிறார்கள். ஆனால், உடலைச் சுத்தமாகவும், ஆரோக்கியமாகவும் வைத்துக் கொண்டிருக்கும் ஒருவருடைய குடலில் விதை சிக்கிக் கொள்ளாது. ஆனால், குடல் சோர்வுற்று, பலவீனமடைந்து விட்டால் அனாவசியமான பொருள்களை அது வெளியேற்ற முடிவதில்லை. என்னுடைய குடலும் அம்மாதிரி சோர்வுற்று, பலவீன மடைந்திருக்க வேண்டும். அவைபோன்ற சில பொருட்களை நான் ஜீரணிக்க முடியவில்லையோ, என்னவோ. பையன்கள் கண்டவற்றை நிறையச் சாப்பிடுகிறார்கள். ஆனால், தாய்மார்கள் இதைப்பற்றி கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. ஏனெனில், இளம் வயதினரின் குடல்கள் கழிவுப் பொருள்களை வெளியேற்றக் கூடிய அளவுக்கு இயற்கையாகவே உறுதியாக இருக்கின்றன. ஆகையால், யாரும் என்னை நைஷ்டிக பிரம்மச்சாரி என்று வர்ணித்து, பொய் சொன்ன குற்றத்திற்கு ஆளாகக் கூடாது.

* நைஷ்டிக பிரம்மச்சாரி என்றால், பிஷ்மரைப் போல் ஆயுள் முழுவதும் அப்பழுக்கற்ற பிரம்மச்சரியத்தை மேற்கொண்டவர் என்பதே பொருள்.

மேலும், நைஷ்டிக பிரம்மச்சரியத்தினால் ஏற்படும் உணர்ச்சி வேகம், எனக்கிருப்பதைவிடப் பன்மடங்கு அதிகமானதாக இருக்கும். நான் முழுமையான ஒரு பிரம்மச்சாரியாக விரும்புகிறேன் என்பது உண்மைதான் என்றாலும், இன்னும் அந்த நிலையை நான் அடையவில்லை. பிரம்மச்சரியத்தின் தனித்தன்மைகளைப் பற்றி என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்தே சில உதாரணங்களை உங்கள் முன்பு சமர்ப்பித்திருக்கிறேன். பிரம்மச்சாரியாக இருப்பதென்றால், எந்தப் பெண்ணையும், என் சகோதரியைக் கூட நான் தொடக் கூடாது என்று அர்த்தமில்லை. ஆனால், ஒரு காகிதத் துண்டை தொட்டால் என் மனத்தில் எப்படி கெட்ட எண்ணங்களோ, செய்கைகளோ தோன்றுவதில்லையோ, அதே மாதிரி, ஒரு பெண்ணைத் தொட்டாலும் கெட்ட எண்ணங்களோ, செய்கைகளோ உதிக்கக் கூடாது. நோய்வாய்ப் பட்டிருக்கும் என்னுடைய சகோதரியைத் தொட முடியாமலோ, அவளுக்கு வேண்டிய சிச்ருஷைகளைச் செய்ய முடியாமலோ பிரம்மச்சரியம் எனக்குத் தடையாக இருந்தால், அம்மாதிரியான பிரம்மச்சரியம் முற்றிலும் உதவாக்கரையானதாகும். மிகவும் அழகான ஒரு பெண் தொட்டால் கூட மனம் சஞ்சலமடையாமல் இருந்தால் தான் நம்மை பிரம்மச்சாரிகள் என்று சொல்லிக் கொள்ள முடியும். உங்களுடைய பையன்களும் பெண்களும் உண்மையான பிரம்மச்சாரிகளாக வளர வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அவர்களுக்குச் சரியான முறையில் கல்வியளிக்க வேண்டும். அந்தக் கல்வியை நீங்கள் அளிக்கக் கூடாது; எவ்வளவு குறைபாடுகள் இருந்தாலும், என்னைப் போன்ற ஒரு பிரம்மச்சாரிதான் அத்தகைய கல்விக்கு ஒரு திட்டம் வகுக்கலாம்.

பிரம்மச்சாரியாக இருப்பவன் இயற்கையாகவே சந்நியாசியாக இருப்பான். வாழ்க்கையில் பிரம்மச்சரிய கட்டம், சந்நியாச கட்டத்தை விட அதிக முக்கியமானதாகும். ஆனால், அதனுடைய பரிசுத்தத்தை நாம் கெடுத்து அழித்துவிட்டதால், நம்முடைய கிருகஸ்த வாழ்க்கை கெட்டுவிட்டது. அதுபோலவே, வானப்பிரஸ்த ஆசிரமும் கெட்டுவிட்டது. சந்நியாச ஆசிரமம் சம்பந்தப் பட்டவரையில், அநேகமாக அது மறைந்தே போய்விட்டது. பரிதாபப் படத்தக்க இத்தகைய நிலைக்கு நாம் வந்துவிட்டோம்.

மேலே குறிப்பிட்ட வலிமை, தைரியம் ஆகியவற்றைப் பெறுவதற்கு வழி என்ன? சைத்தான் வழியில் நமது உடல்களைக் கட்டி வளர்ப்பது சம்பந்தப்பட்டவரையில், இந்த வழியைப் பின்பற்றுவது 500 வருஷங்கள் ஆன பிறகும் கூட, நம்மைப் பட்டாணியர்களுக்குச் சமமானவர்களாக்கி விடாது என்று எடுத்துக் காட்ட விரும்புகிறேன். ஆனால், தெய்வ சம்மதமான வழியைப் பின்பற்றினால், வெகு சீக்கிரத்திலேயே நாம் அவர்களுக்குச் சமமானவர்களாகி விடுவோம். உடலைக் கட்டி வளர்ப்பதற்குப் பல வருடங்கள் ஆகும்; ஆனால், இந்த தெய்வ சம்மதமான வழியைப் பின்பற்றுவதன் மூலம் சீக்கிரத்திலேயே மனமாற்றத்தை உண்டாக்கிவிட முடியும். எனினும், முன்

ஜன்மத்தில் நாம் புண்ணியம் செய்தவர்களாக இருக்கவேண்டும்; நமது பெற்ரேர்களும், நம்மைச் சரியான வழியில் வளர்த்து நம்மை அதற்குத் தயார் செய்திருக்க வேண்டும். அப்போது தான் அதில் நமக்குப் பற்றுதலும் இருக்கும், அதை நாம் பின்பற்றவும் முடியும்.

'நவஜீவன்'–26—2—1925

# 12
# பெற்ரேர்களின் பொறுப்பு

தங்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களுக்கோ, ஆசிரமங்களுக்கோ அனுப்பும் பெற்ரேர்கள் சில பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிருர்கள். இந்தப் பொறுப்புகள் நிறைவேற்றப்படாவிட்டால், குழந்தைகள், அவர்கள் அனுப்பப்படும் ஸ்தாபனங்கள், பெற்ரேர்கள் ஆகிய மூவருக்குமே நஷ்டம்தான். முதலில், தங்களுடைய குழந்தைகளை எந்த ஸ்தாபனத்திற்கு அனுப்ப உத்தேசித்திருக்கிருர்களோ அந்த ஸ்தாபனத்தின் விதிகளை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். தங்களுடைய குழந்தைகளின் பழக்க வழக்கங்கள், தேவைகளை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு முறை ஒரு முடிவு செய்து விட்டால், அதை மாற்றக் கூடாது. குழந்தைகளை ஒரு ஸ்தாபனத்தில் சேர்த்துவிட்டால், அங்கு அவர்களுடைய படிப்பு காலம் முடியும் வரையில், சாதாரணமாக அவர்களை அங்கிருந்து வேறு இடத்திற்கு மாற்றக் கூடாது. தகுதியான ஒரு வேலையில் அவர்களை அமர்த்துவதற்கான சந்தர்ப்பம் கிடைக்கும் போது, பெற்ரேர்கள் அந்த ஸ்தாபனத்திலிருந்து பிள்ளைகளை வாபஸ் பெற்று விடுகிருர்கள். அவ்விதம் செய்யக் கூடாது. கல்யாணத்திலோ, இதர பண்டிகைக் கொண்டாட்டங்களிலோ கலந்து கொள்வதற்காகப் பிள்ளைகள் ரஜா எடுத்துக் கொண்டு வரவேண்டும் என்றும் சொல்லக் கூடாது. தங்களுடைய மற்ற நடவடிக்கைகளில் கலந்து கொள்ளுவதற்காகப் பெற்ரேர்கள் தங்களுடைய குழந்தைகளை இழுத்துச் செல்வதில்லை. அதே மாதிரி, திருமணம் போன்ற காரியங்களுக்கும் அவர்களை இழுத்துச் செல்லக் கூடாது. குழந்தைகள் தங்களுடைய கல்வியிலேயே முழு கவனத்தையும் செலுத்த அனுமதிக்க வேண்டும். மேலும் பையன்கள், கல்வி பயிலும் காலத்தில் முழு பிரம்மச்சாரிகளாக இருப்பதற்கும் கற்றுக் கொடுக்க வேண்டும். திருமணங்களையும், மற்றும் இதர கொண்டாட்டங்களையும் பார்ப்பதில் அவர்களுக்கு ஆசையை வளர்த்து விட்டால், அவர்கள் தங்களுடைய படிப்பில் கவனம் செலுத்துவதற்கும், பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பதற்கும் அது பெரிய இடையூருக இருக்கக்

கூடும். ஆகையால், இம்மாதிரியான காரியங்களுக்கு அவர்கள் வரவொட்டாமல் வைத்திருப்பது நல்லது.

மேலும், திருமணத்தைப் பற்றி நினைத்துக்கூடப் பார்க்க முடியாத காலம் இது. அதில் கலந்து கொள்ளாமல் விலகி நிற்க விரும்பும் ஒரு பையனுக்கு எந்த விதத்திலும் சபலம் ஏற்படும்படி செய்வது பெரிய அநீதியாகும். இப்போது மக்கள் உறுதியற்றவர்களாக இருக்கிறார்கள். சபலங்களை எதிர்த்து சமாளிக்கக் கூடிய அவர்களுடைய ஆற்றல் பெரிதும் குறைந்து விட்டது. இந்த நிலைமையில், ஒரு தார்மிக பிரதிக்ஞையை யாரும் நிறைவேற்ற விரும்பினால், அவனுடைய விருப்பத்தை பலப்படுத்தவும், அதை அவன் நிறைவேற்றவும் நாம் உதவி செய்ய வேண்டும். அதற்கு மாறாக, அந்தப் பிரதிக்ஞைகளை மீறுவதற்கு நாமே உதவி செய்தால், இப்போது நம்மிடமுள்ள பலவீனங்களை அதிகரித்துக் கொண்டவர்களாவோம். திருமணத்தைப் பற்றி இங்கு கூறியிருப்பது, மற்ற விஷயங்களுக்கும் கூடப் பொருந்தும். தங்களுடைய குழந்தைகளை புத்திசாலித்தனமாகவும், நல்ல முறையிலும் வளர்க்க விரும்பும் பெற்றோர்கள், பல சமயங்களில் குழந்தைகளின் வளர்ச்சிக்கு உதவி செய்வதற்குப் பதிலாக, நம்மையறியாமலே கூட, அதைப் பெரிதும் தடை செய்துவிட்டோம் என்பதைக் கண்டு கொள்ளுவார்கள்.

—' நவஜீவன் '–15—12—1921

## 2

தாம் என்ன எழுதுகிறோம் என்பதை நன்கு உணர்ந்து கொண்டுள்ள ஒரு சகோதரி பின்வருமாறு கூறுகிறார்:

''நமது பையன்கள் தங்களுடைய ஜீவதாதுக்களை வீணடிக்காமல் காப்பாற்றி வைத்துக் கொள்ளக் கற்றுக்கொள்ளும் வரையில், இந்தியாவுக்கு எந்த மாதிரியான மனிதர்கள் வேண்டுமோ, அந்த மாதிரியான மனிதர்கள் கிடைக்கப்போவதேயில்லை. சுமார் 17 வருடங்களாக இந்தியாவில் சிறுவர் பள்ளிகளை நான் நிர்வகித்து வந்திருக்கிறேன். பல ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்தவ மாணவர்கள் விறுவிறுப்புடனும், உற்சாகத்துடனும், நம்பிக்கையுடனும் தங்கள் பள்ளிக்கூட வாழ்வை ஆரம்பிக்கிறார்கள்; ஆனால், உடல் நிலை சீரழிந்தவர்களாகப் படிப்பை முடிக்கிறார்கள். நூற்றுக்கணக்கான பையன்கள் விஷயத்திலும் இயற்கைக்கு விரோதமான தீய பழக்கம், இச்சையைத் தீர்த்துக் கொள்வது, இளம் வயதில் திருமணம் ஆகியவையே இதற்கு நேர் காரணம் என்பதை நான் கண்டுகொண்டுள்ளேன். இயற்கைக்கு விரோதமான அந்தத் தீய பழக்கத்தை மேற்கொண்ட 42 பையன்களின் பெயர்கள் இன்று என்னிடம் இருக்கின்றன. இந்தப் பையன்களில் ஒருவனுக்காவது வயது 13-க்கு மேல் ஆகவில்லை. இம்மாதிரி நிலைமை கிடையாது என்று ஆசிரியர்களும், தகப்பன்மாரும் மறுப்பார்கள். ஆனால் சரியான முறைகளை உபயோகித்தால் இந்த உபத்திரவத்தைக் கண்டுபிடித்துவிடலாம். அநேகமாக

எப்போதுமே பிள்ளைகள் தங்களுடைய குற்றத்தை ஒப்புக்கொண்டுவிடுவார்கள். இந்தப் பழக்கத்தைப் பெரியவர்கள்தான் தங்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள் என்று பெரும்பாலான மாணவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். பல சமயங்களிலும் அவர்களுடைய உறவினர்களே அப்படிக் கற்றுக்கொடுத்திருக்கிறார்கள்.''

இது கற்பனைச் சித்திரமல்ல. இந்த உண்மை பல பள்ளி ஆசிரியர்களுக்குத் தெரியும், ஆனால், இதை அவர்கள் வெளியே விடாமல் அமுக்கிவைத்திருக்கிறார்கள். இதைப்பற்றி முன்பே நான் அறிவேன். முதலில், சுமார் எட்டு வருடங்களுக்கு முன்பு டில்லியிலுள்ள பள்ளி ஆசிரியர் ஒருவர் இதை என் கவனத்திற்குக் கொண்டுவந்தார். ஆனால், நான் மௌனம் சாதித்து வந்திருக்கிறேன். இதற்குப் பரிகாரம் என்ன என்பதைத் தனி நபர்களிடம் மட்டும் விவாதித்திருக்கிறேன். இந்த விஷயம் இந்தியாவில் மட்டும்தான் இருக்கிறது என்பதில்லை. ஆனால், குழந்தை மணம் என்ற சாபம் இந்தியாவில் இருப்பதால் இங்கு இதன் விளைவு அதிக விபரீதமானதாக இருக்கிறது. சில வருடங்களுக்கு முன்பு, காம இச்சையைப்பற்றிய விஷயங்களைப் பத்திரிகைகளில் பார்க்கமுடியாது. ஆனால், இப்போது கௌரவமான பத்திரிகைகளில்கூட இந்த விஷயம் கட்டுப்பாடின்றி விவாதிக்கப்படுகிறது. ஆகையால், கடினமானதும், தரும சங்கடமானதுமான இந்த விஷயத்தைப் பகிரங்கமாக விவாதிக்க வேண்டியது அவசியமாகி விட்டது.

ஆண்-பெண் சேர்க்கை இயற்கையானது, அவசியமானது, ஒழுக்கத்தை அனுசரித்தது. மன அமைதியையும், தேக சுகத்தையும் அளிக்கக்கூடியது என்று கருதுவது ஒரு நாகரிகமாகியிருக்கிறது. இதுதான் இந்தத் தீமையை மேலும் அதிகமாக வளர்த்திருக்கிறது. கருத்தடைக் கருவிகளை தாராளமாக உபயோகிக்கலாம் என்பதற்கு நல்ல பண்பாடு உடையவர்கள்கூட ஆதரவு தருவது, காம இச்சை வளருவதற்கான ஒரு சூழ்நிலையை உண்டாக்கிவிட்டது. இதனால், எதையும் ஏற்றுக்கொள்ளும் பருவத்திலுள்ள அந்தப் பிஞ்சுமனங்கள், சட்ட விரோதமானதும், நாசகரமானதுமான தங்களுடைய இச்சைகளுக்கு ஆதரவாகவும், அவற்றை நியாயமாக்குவதற்காகவும் இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு அவசரப்பட்டு முடிவுகள் செய்துவிடுகிறார்கள். இந்தக் கொடிய கெட்ட பழக்கம் சம்பந்தப்பட்ட வரையில், ஆசிரியர்களும் பெற்றோர்களும் காட்டும் அலட்சியமும், சகிப்புத்தன்மையும் துக்ககரமானவையாக இருக்கின்றன. அவர்களுடைய அலட்சியத்தை ஒரு குற்றம் என்றுகூடச் சொல்லலாம். சமூக சூழ்நிலை அடியோடு பரிசுத்தப்படுத்தப்பட்டாலொழிய, எவ்விதத்திலும் இந்தத் தீமையை ஒழிக்கமுடியாது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். காம இச்சைகள் நிறைந்த ஒரு சூழ்நிலையின் பலன், அவர்களை அறியாமலே நம் நாட்டிலுள்ள பள்ளிப் பிள்ளைகளின் மனங்களை நுட்பமான முறையில் பாதிக்காமல் இருக்கமுடியாது. நகர வாழ்க்கையிலுள்ள

சூழ்நிலைகள், இலக்கியம், நாடகம், சினிமா, வீட்டிலுள்ள நிலைமை, பல்வேறு சமூகக் கொண்டாட்டங்கள் ஆகியவைகள் எல்லாம் ஒன்றே ஒன்றைத்தான், அதாவது காம இச்சையைத் தூண்டி விடுவது ஒன்றைத்தான் குறிக்கின்றன. தம்முள்ளே இருக்கும் மிருக உணர்ச்சியை ஏற்கனவே அறிந்துள்ள சிறு குழந்தைகள், இந்த நிலைமைகளினால் ஏற்படும் நிர்ப்பந்தங்களை எதிர்த்துச் சமாளிப்பதென்பது அசாத்தியமாகும். இதற்கு, தற்காலிகமான பரிகாரங்கள் போதா. இளம் தலைமுறையினருக்குத் தாங்கள் செய்யவேண்டிய கடமையைப் பெரியவர்கள் நிறைவேற்ற வேண்டுமானால், சீர்திருத்தம் முதலில் பெரியவர்களிடமிருந்து ஆரம்பமாகவேண்டும்.

—'எங் இந்தியா'-12—9—1926

## 3

ஓர் ஆசிரியர் எழுதுகிறார்:

"நமது இளைஞர்களிடையே காணப்படும் கெட்ட பழக்கங்களைப் பற்றி நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். இதற்குப் பெற்றோர்களேதான் பொறுப்பாளிகள் என்று எனக்குத் தோன்றுகிறது. வயது வந்த பிள்ளைகளும், பெண்களும் உள்ள பெற்றோர்கள் தொடர்ந்து பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டே யிருந்தால், வேறு எதைத்தான் எதிர்பார்க்க முடியும்? அத்தகைய ஒரு மணத்தை விபசாரம் என்று கூறுவதுதான் சரியாக இருக்கும்? ஓர் உதாரணம் கூறுகிறேன். தன்னுடைய தாயார் இறந்த பிறகு ஒரு பையன் தன் தகப்பனுருடன் படுத்துத் தூங்குவது வழக்கம். தகப்பனார் மறு மணம் செய்துகொண்டார். பின்னர் அவர் கதவை மூடிக்கொண்டு தனி அறையில் படுக்க ஆரம்பித்தார். தகப்பனார் தன்னுடன் சேர்ந்து படுத்துக்கொள்ளுவதை ஏன் நிறுத்திவிட்டார் என்று பையனுக்குப் புரியவில்லை. 'தாயார் உயிருடனிருந்தபோது மூன்று பேரும் சேர்ந்துதானே படுத்துக்கொண்டோம். புதிய தாயார் வந்த பிறகு ஏன் அவர் என்னைத் தன்னுடன் படுக்க அனுமதிப்பதில்லை' என்று பையன் தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். இதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற அவனுடைய ஆவல் அதிகமாயிற்று. கதவிலுள்ள இடுக்கின் வழியாக உள்ளே பார்க்க வேண்டுமென்று நினைத்தான். அப்படி அவன் பார்த்தபோது, அங்கு அவன் கண்ட காட்சி, அவனை எப்படி பீதியும் அதிர்ச்சியும் அடையும்படி செய்திருக்கும் என்பதை யோசித்துப் பாருங்கள்.

"நமது சமூகத்தில் இந்த மாதிரி சம்பவங்கள் அநேகமாக ஒவ்வொரு நாளுமே நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. நான் மேலே கொடுத்துள்ள சம்பவம் என்னுடைய கற்பனைச் சித்திரமல்ல. 13, 14 வயதுள்ள ஒரு பையன் என்னிடம் இதைச் சொன்னான். தங்களுடைய இளம் வயதிலேயே இம்மாதிரியான அழிவுப் பாதையில் செலுத்தப்படும் பையன்களும், பெண்களும் எப்படி சுயராஜ்யத்திற்காக போராட முடியும்? இத்தகைய துரதிருஷ்ட வசமான அனுபவங்கள் ஏற்படாமல் குழந்தைகளைப் பாதுகாக்க வேண்டியது பெற்றோர்கள், ஆசிரியர்கள், ஹாஸ்டல் மேற்பார்வையாளர்கள், சாரணப் படைத் தலைவர்கள் ஆகியோரின் கடமையாகும். பிரம்மச்சரியம் என்ற வார்த்தை

யின் அர்த்தத்தை இளைஞர்கள் புரிந்து கொள்ளுவது கடினமாகும். பல பையன்களை ஒன்ருகச் சேர்த்து, பிரம்மச்சரியத்தைப் பற்றி அவர்களிடையே பிரசங்கங்கள் செய்வதற்குப் பதிலாக, ஆசிரியர்கள் தனித்தனியாக அவர்களை சிநேகம் பிடித்துக்கொண்டு, விஷயங்களை விளக்கிக் கூறி, இளம் வயதிலிருந்தே அவர்களுக்கு ஒழுக்கத்தில் ஒரு மதிப்பும் பற்றுதலும் உண்டாகும்படி செய்வது இன்னும் நல்ல வழியாக இருக்கும் என்று தோன்றுகிறது.

"வயது வந்த ஆடவர்கள், பெண்கள் விஷயத்தைப் பார்ப்போம். மற்ற ஜாதிப் பெண்கள் அளிக்கும் உணவைச் சாப்பிடுகிறவர்களை ஜாதிப் பிரஷ்டம் செய்யத் தயாராயிருக்கும் ஒரு சமூகம் அல்லது வகுப்பு, தங்களுடைய மனைவியரல்லாத மற்றப் பெண்களுடன் கள்ள நட்பு வைத்துக் கொள்ளும் குற்றம் புரிபவர்களை ஏன் ஜாதிப்பிரஷ்டம் செய்வதில்லை? அரசியல் மகாநாடுகளில் தீண்டத்தகாதவர்களுடன் சேர்ந்து இருப்பவர்களைத் தண்டிக்கும் ஒரு சமூகம், மணமான பெண்களுடன் கள்ள நட்பு கொள்ளுபவர்களை ஏன் தண்டிப்பதில்லை? ஒரு வகுப்பினர் இம்மாதிரியான பிராயச்சித்தத்தை வற்புறுத்திஞல், அந்த வகுப்பிலுள்ளவர்களின் எண்ணிக்கை குறைந்து, அது பலவீனம் அடைந்துவிடும் என்பதே இத்தகைய முன்னுக்குப்பின் முரண்பாடான நிலைமைகளுக்குக் காரணம் என்று தோன்றுகிறது. ஆனல், ஒரு விஷயத்தை அவர்கள் மறந்துவிடுகிருர்கள். அதாவது, பலவீனமான ஓர் உடலில் உறுதியான உள்ளம் இருக்கலாம். பல வகுப்புகளிலுள்ள முதியவர்கள் கூட குடிமணமான பெண்களுடன் விபசாரம் செய்தல் முதலிய தீமைகளுக்கு அடிமைப்பட்டிருக்கிருர்கள். ஆகையால், மற்றவர்களிடம் காணப்படும் இக் குற்றங்களை அவர்கள் கவனிக்காமல் விட்டு விடுகிருர்கள்; இல்லாவிடில் அது அவர்கள் தங்களுக்குத் தாங்களே குழி பறித்துக் கொண்டதாகும் அல்லவா? மற்றவர்களை ஜாதிப் பிரஷ்டம் செய்வதற்கு அவர்கள் எப்போதுமே தயாராக இருக்கிருர்கள். நமது இந்த சமூகம் எப்போதுதான் தன்னைத் தானே திருத்திக்கொண்டு, முன்னேற்றத்தை நோக்கிப் போகப் போகிறதோ? அரசியல் முன்னேற்றம் அடைய விரும்பும் ஒரு நாடு முதலில் சமூகத் துறையில் முன்னேற்றம் அடைந்தாக வேண்டும்; சமூக முன்னேற்றம் இல்லாமல், அரசியல் முன்னேற்றம் பெறப் பார்ப்பது அஸ்திவாரமில்லாமல் வீடு கட்டுவது போலாகும்."

இவர் கூறியிருப்பதில் நிறைய உண்மையிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். ஒருவர் தமது குழந்தைக்கு வயது வந்த பிறகு மேலும் மேலும் குழந்தைகளைப் பெற்றுக்கொண்டேயிருப்பது நன்மை அல்ல. ஏனெனில், வயதுவந்த குழந்தைகளின் மனத்தில் இதனல் தீய எண்ணம் தோன்ற இடம் ஏற்படுகிறது. ஆனல், தன்னடக்கத்தை அனுஷ்டிப்பது சாத்தியமாயில்லையென்ருல், ஒரு தகப்பனர் தம்முடைய வயதுவந்த குழந்தைகளைத் தனியாக ஒரு வீட்டில் வைக்கவேண்டும் அல்லது அவராவது ஒரு தனியறையில் இருக்கவேண்டும். அப்போது குழந்தைகள் எதையும் பார்ப்பதற்கோ, கேட்பதற்கோ சந்தர்ப்பம் ஏற்படாது. ஒரு அளவுக்காவது ஒரு கண்ணியம் இருப்பதற்கு இது உதவி செய்யும். குழந்தைப் பருவம் களங்கமற்றதாக இருக்கவேண்டும். ஆனல், போகத்தில் நாட்டம்கொண்ட பெற்ருேர்கள் தங்களுடைய குழந்தைகளின் மனத்தைக் கெடுத்துவிடுகிருர்கள். குழந்தைகளுக்கு ஒழுக்க உணர்ச்சியை வளர்ப்பதற்

கும்; அவர்களைச் சுதந்திரமானவர்களாகவும், நம்பிக்கையுள்ளவர்களாகவும் செய்வதற்கும் வானப்பிரஸ்த ஆசிரமம் சிறந்ததாகும்.

ஆசிரியர்களுக்கு இவர் கூறியுள்ள யோசனை கொள்கையளவில் நன்ருக இருக்கிறது. ஆனுல், ஒரு வகுப்பில் நாற்பது, ஐம்பது குழந்தைகள் இருந்தால், பாடம் சொல்லிக்கொடுப்பதுடன், மட்டும் ஆசிரியர்-மாணவர் தொடர்பு நின்றுவிடுகிறதென்ருல், ஆசிரியர் விரும்பிஞலும்கூட, பிள்ளைகளுடன் ஆன்மிகத் தொடர்பு வைத்துக்கொள்வது எப்படி சாத்தியமாகும்? வெவ்வேறு உபாத்தியாயர்கள் வெவ்வேறு பாடங்களைச் சொல்லிக்கொடுக்கிருர்கள். இவர்களில் மாணவர்களுக்கு நன்னடத்தையை போதிக்கும் பொறுப்பை யாரிடம் ஒப்படைப்பது? கடைசியாக, இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு பிள்ளைகளை ஒழுக்கப் பாதையில் செலுத்துவதற்கும், அந்த மாணவர்களின் நம்பிக்கையைப் பெறுவதற்கும் எவ்வளவு ஆசிரியர்களுக்கு உண்மையாகவே தகுதி இருக்கிறது? இதிலிருந்து நமது கல்வி முறை பூராவுமே எப்படி அமைக்கப்படவேண்டும் என்ற கேள்வி எழுகிறது. இது மிக நீண்ட விஷயமாகையால், அதைப்பற்றிய விவாதத்தை இங்கு எடுத்துக்கொள்ளமுடியாது.

நமது சமூகத்தில் உள்ள மக்கள் ஆடுகளைப்போல் ஒருவர் பின் மற்ருெருவராகப் போகிருர்கள். அதை முன்னேற்றம் என்றும் கருதுகிருர்கள். ஆனுல், ஏக்கமளிக்கும் இந்த நிலைமையில் கூட, தனிப்பட்ட முறையில் நாம் ஒவ்வொருவரும் சரியான பாதையைப் பின்பற்றுவது எளிதேயாகும். விஷயமறிந்தவர்கள் தாங்கள் வேலை செய்யும் துறைகளில் ஒரு நல்லொழுக்கச் சூழ்நிலையைத் தோற்றுவித்து, இதைப் பரப்பவேண்டியது கடமையாகும். முதன்முதலாக, அவர்கள் தங்களைத் தாங்களே திருத்திக்கொள்ள ஆரம்பிக்கவேண்டும். மற்றவர்களுடைய குறைபாடுகளை நாம் பார்க்கும்போது, நம்மிடம் குறைபாடுகளே இல்லையென்று நாம் நினைத்துக்கொள்கிருேம். ஆனுல், நம்மை நாமே சோதித்துப் பார்த்துக்கொண்டால், நம்மிடம் எவ்வளவு கெட்ட பழக்கங்கள் இருக்கின்றன என்பது நமக்குப் புலப்படும். மற்றவர்கள்மீது தீர்ப்புக் கூறுவதற்குப் பதிலாக, நம்மைப்பற்றி நாமே மதிப்பிட்டுக்கொள்ளுவது நல்லது. மேலும் மற்றவர்கள் தங்களைத் திருத்திக்கொள்ளுவதற்கான வழியையும் இது திறந்துவிடுகிறது. இந்தியாவில் ஒரு பழமொழி இருக்கிறது. "நீங்கள் நல்லவர்களாக இருந்தால், உலகமும் தாஞக நல்லதாகிவிடும்" என்பது அந்தப் பழமொழியின் அர்த்தமாகும். துளஸிதாஸர் ஒரு இடத்தில் முனிவர்களை *'பரசமணி'க்கு ஒப்பிட்டிருக்கிருர். அவர் சொன்னது முற்றிலும் சரிதான். நல்லவன் என்று பெயரெடுப்பது ஏதோ தான்தோன்றித்தனமுள்ள

* மேலே குறிப்பிட்டுள்ள மணிக் கல்லிஞல் இரும்பைத் தொட்டால் அது உடனே தங்கமாகி விடுமாம்.

ஒரு கடவுளிடமிருந்து நமக்குக் கிடைக்கும் ஒரு பரிசு அல்ல; நம்மிடையே உள்ள அசாதாரணமான சிலருக்குத் தான் அது கிட்டும் என்பதும் இல்லை. அது நம் ஒவ்வொருவருடைய கடமையுமாகும். ஒரு மனிதனுடைய வாழ்க்கையின் அர்த்தமே இதுதான்.

—' நவஜீவன் '— 26–9–1926

# 13

# இயற்கைக்கு முரணான கெட்ட பழக்கம்

அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் உள்ள இயற்கைக்கு முரணான தீய பழக்கங்களைப் பற்றி விசாரணை நடத்துவதற்காகச் சில ஆண்டுகளுக்கு முன்பு பீகார் அரசாங்கக் கல்வி இலாகா ஒரு கமிட்டியை நியமித்தது. இந்தத் தீமை ஆசிரியர்களிடையேயும் இருப்பதையும், தங்களுடைய இயற்கைக்கு விரோதமான காம வெறியைத் திருப்தி செய்து கொள்ளுவதற்காக ஆசிரியர்கள் தங்கள் பதவிகளைத் துஷ்பிரயோகம் செய்வதையும் இந்தக் கமிட்டி கண்டறிந்தது. எந்த ஆசிரியரிடமாவது இக்கெட்ட பழக்கம் இருப்பதாகக் காணப்பட்டால் அவர் மீது என்ன மாதிரி நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதைக் குறிப்பிட்டு கல்வி இலாகா டைரக்டர் ஒரு சுற்றறிக்கை அனுப்பினார். இந்தச் சுற்றறிக்கையினால், ஏதாவது பலன் ஏற்பட்டதா, என்ன பலன் ஏற்பட்டது என்பது தெரிந்தால் சுவாரஸ்யமாக இருக்கும்.

இத்தகைய தீமையைப் பற்றிய விவரங்கள் மற்ற மாகாணங்களிலிருந்தும் எனக்கு அனுப்பப்பட்டுள்ளன. அநேகமாக இந்தியா பூராவிலுமே, அரசாங்கப் பள்ளிக் கூடங்களில் மட்டுமன்றி, தனியார் பள்ளிக்கூடங்களிலும் கூட இந்தக் கெட்ட பழக்கம் அதிகமாகிக் கொண்டு வருவதை அந்த விவரங்கள் எடுத்துக் காட்டுகின்றன. பையன்களே நேரில் அனுப்பியுள்ள கடிதங்களும் இத் தகவல்களை ஊர்ஜிதம் செய்கின்றன.

இந்தத் தீமை இயற்கைக்கு முரணானது தான் என்றாலும், அநாதி காலம் தொட்டு இது இருந்து வந்திருக்கிறது. ரகசியமாக வைத்துக் கொள்ளப்படும் இந்தத் தீமைக்குப் பரிகாரம் கண்டு பிடிப்பது மிகமிகக் கஷ்டமான காரியம். பையன்களை கவனித்துக் கொள்ளவேண்டிய பொறுப்புள்ள ஆசிரியர்களே இதனால் பாதிக்கப்படும்போது, இந்தக் கஷ்டம் இன்னும் மோசமாகிறது. வேலியே பயிரை மேய்ந்தால் என்ன செய்ய முடியும்? இந்தக் கெட்ட பழக்கம் யாரிடமாவது இருக்கிறதென்று கண்டு பிடிக்கப்பட்டால், அன்னார் மீது இலாகா அதிகாரிகள் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியம்தான். ஆயினும், இதனால் நிலைமை சீர்பட்டுவிடும் என்று எனக்குத்

தோன்றவில்லை. ஒரு முகமான பொதுஜன அபிப்பிராயமே இத் தீமையைச் சமாளிக்க முடியும். ஆனால், பெரும்பாலான பிரச்னை களிலும் பலன் தரத்தக்க பொதுஜன அபிப்பிராயம் என்று எதுவும் இந்த நாட்டில் இல்லை. அரசியல் துறையில் இருப் பதைப் போலவே, நம்மால் எதுவும் செய்ய முடியாது என்ற ஏக்க உணர்ச்சி மற்ற துறைகளிலும் பரவி விட்டது. ஆகையால், நம் கண் முன்பே இழைக்கப்படும் பல தவறுகளைப் பார்த்துக் கொண்டே நாம் சும்மா இருந்துவிடுகிறோம்.

எழுத்தறிவுக்கு மட்டும் ஒரு பிரத்தியேகமான முக்கியத் துவம் அளிக்கும் ஒரு கல்வி முறை, இந்தத் தீமையை ஒழிப் பதற்கு ஏற்றதாகாது என்பதோடு மட்டுமில்லை; இந்தத் தீமை வளருவதற்கும் அது உதவியாக இருக்கிறது. பள்ளிக்கூடம் போவதற்கு முன்பு தூய்மையாக இருந்த பையன்கள், பள்ளிக் காலத்தின் முடிவில் அசுத்தமானவர்களாகவும், திறனற்றவர் களாகவும் ஆகிவிடுகிறார்கள். "பையன்களுடைய மனத்தில் மதத்தில் பக்தி ஏற்படும்படி செய்ய வேண்டும்" என்று பீகார் கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. ஆனால், பூனையின் கழுத்தில் யார் மணியைக் கட்டுவது? பையன்களின் மனத்தில் மதத்திடம் பக்தி ஏற்படும்படி செய்யக் கூடியவர்கள் ஆசிரியர்களே. ஆனால், அவர்களிடமே அத்தகைய பக்தி இல்லை. எனவே, சரியான ஆசிரி யர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதே பிரச்னையாகும். சரியான ஆசிரியர்களைத் தேர்ந்து எடுக்க வேண்டுமென்றால், ஒன்று இப்போது கொடுப்பதைவிட அதிகமான சம்பளம் கொடுக்க வேண்டும் அல்லது அப்பதவிகளை மேற்கொள்வோர் ஆசிரியராக இருப்பதை ஒரு தொழிலாகக் கருதாமல், வாழ்நாள் பூராவும் செய்ய வேண்டிய ஒரு புனிதமான கடமை என்று தங் களை அர்ப்பணம் செய்து கொள்ள வேண்டும். ரோமன் கத்தோலிக் கர்களிடையே இன்னமும் கூட இந்த வழக்கம் இருந்து வரு கிறது. நம் நாட்டைப் போன்ற ஒரு ஏழை நாட்டில், அதிகச் சம்பளம் கொடுப்பதென்பது சாத்தியமல்ல. ஆகையால், இரண் டாவது வழி ஒன்றுதான் இருக்கிறது என்று எனக்குத் தோன்று கிறது. ஆனால், ஒவ்வொன்றுக்கும் ஒரு விலையை நிர்ணயித் துள்ள, உலகிலேயே அதிகச் செலவு செய்யும் ஓர் அரசாங்க அமைப்பில் அந்த வழியும் நமக்குச் சாத்தியமில்லை.

பொதுவாகப் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளின் ஒழுக்கங்களில் அதிக அக்கறை எடுத்துக் கொள்ளுவதில்லை யாகையால், இத்தீமையைச் சமாளிப்பதில் உள்ள கஷ்டம் மேலும் அதிகமாகிறது. குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதுடன் தங்களுடைய கடமை தீர்ந்துவிட்டதாக அவர்கள் நினைக்கிறார்கள். இவ்வாறாக, எதிர் காலம் இருள் சூழ்ந்ததாக இருக்கிறது. பொதுவாக எல்லோரையுமே பரிசுத்தம் செய்யவேண்டும் என்பதுதான் எல்லாத் தீமை களுக்கும் உள்ள பரிகாரம். இதுதான் நம்பிக்கையளிக்கும் ஒரு முறையாகும். தீமை இவ்வளவு பெரிதாக இருக்கிறதே என்று

மலைத்துவிடாமல், நம்மில் ஒவ்வொருவரும் தம்மால் இயன்றதைச் செய்யவேண்டும். நம்மைச் சுற்றியுள்ளவர்கள் விஷயத்தில் கவனமாயிருக்க வேண்டும்; முதலில் நம்மை நாமே சீர்படுத்திக் கொள்ள வேண்டும். நாம் மற்ற மனிதர்களைப் போல் அல்ல என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு பேசாமல் இருக்கக் கூடாது. இயற்கைக்கு முரணான தீய பழக்கம் எங்கேயோ காணப்படும் தனிப்பட்ட ஒரு நிகழ்ச்சியல்ல. அதே வியாதி எங்கும் வியாபித்திருக்கிறது என்பதையே அது காட்டுகிறது. நம்முள் அசுத்தம் இருந்தால், ஆண்-பெண் உறவுகள் பற்றிய விஷயத்தில் நாம் ஒழுக்கம் கெட்டிருந்தால், பக்கத்தில் உள்ளவர்களைத் திருத்த முற்படுவதற்கு முன்பு நம்மை நாமே சீர்படுத்திக் கொள்ளவேண்டும். மற்றவர்களின் மீது தீர்ப்புச் சொல்லும் போக்கு அதிகமாகக் காணப்படுகிறது; தன் விஷயத்தில் மட்டும் சலுகை காட்டிக் கொள்ளுவதும் அதிகமாக இருக்கிறது. இதன் பலனாக முடிவற்ற தீய சுழல் உருவாகிறது. இந்த உண்மையை உணருபவர்கள், அதிலிருந்து விடுபட வேண்டும். முன்னேற்றம் என்பது எளிதாக இல்லாவிட்டாலும், சாத்தியமானதாக இருக்கிறது என்பதை அவர்கள் அப்போதுதான் அறிவார்கள்.

—'எங் இந்தியா'-27—6—1927

## 2

லாகூர் சனாதன தருமக் கல்லூரியின் தலைமை ஆசிரியர் பின்வருமாறு எழுதுகிறார்:

"நான் இத்துடன் அனுப்பியுள்ள பத்திரிகைச் செய்தி, குறிப்புகள் முதலியவற்றைப் படித்துப் பார்க்கும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். விஷயம் என்ன என்பதை அவைகளே விளக்கும். பஞ்சாபில் உள்ள இளைஞர்கள் க்ஷேமநல சங்கம் நல்ல பயனுள்ள பணியைச் செய்துகொண்டிருக்கிறது. அறிஞர்கள், நிர்வாகிகளின் கவனத்தையும் இது கவர்ந்திருக்கிறது. அத்துடன் விஷய அறிவுள்ள கார்டியன்களும் இதில் தீவிர அக்கறை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். பீகாரைச் சேர்ந்த பண்டித சீதாராம தாஸ் என்பவர் தான் முன்னின்று இந்த இயக்கத்தை நடத்திவருகிறார். இங்குள்ள முக்கியஸ்தர்களில் பலர் அதன் போஷகர்களாக இருக்கிறார்கள்.

"இந்தியாவில் வேறு எந்தப் பகுதியிலும் இருப்பதைவிட, பஞ்சாபிலும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும்தான் இளைஞர்களைக் கெடுக்கும் தீமை அதிகமாக நிலவிவருகிறதென்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம்.

"ஹரிஜன் பத்திரிகை மூலமாகவோ, வேறு பத்திரிகைகளின் மூலமாகவோ ஒரு குறிப்பு அல்லது கடிதம் எழுதி இத்தீமையை தேச மக்களின் கவனத்திற்குக் கொண்டுவருவீர்களா?"

மிகவும் எக்கச்சக்கமான இந்த விஷயத்தைப்பற்றி வெகு நாட்களுக்கு முன்பே இளைஞர் சங்கத்தின் காரியதரிசி எனக்கு எழுதியிருந்தார். அவருடைய கடிதம் கிடைத்தவுடன் அதைப் பற்றி டாக்டர் கோபிசந்துக்கு எழுதினேன். காரியதரிசியின் கடிதத்தில் கூறப்பட்டிருந்த விஷயங்களை அவரும் ஊர்ஜிதம் செய்தார். ஆனால், இந்த விஷயத்தைப்பற்றி இந்தப் பத்திரிகையிலோ, வேறு பத்திரிகைகளிலோ எப்படி விவாதிப்பது என்பது எனக்குப் புரியவில்லை. இத்தீமை இருப்பது எனக்குத் தெரிந்த விஷயம்தான். ஆனால், இந்தக் கல்லூரித் தலைமை ஆசிரியரின் வேண்டுகோளை நான் மறுப்பதற்கில்லை.

இந்தத் தீமை புதிதல்ல. இது மிகுந்த அளவில் பரவியிருக்கிறது. இது மிக ரகசியமாக வைத்துக்கொள்ளப்படுவதால், இதைக் கண்டுபிடிப்பதும் எளிதல்ல. மனம்போனபடி சோம்பேறி வாழ்க்கை நடத்துவதால்தான் இப்படி ஏற்படுகிறது. தலைமை ஆசிரியர் குறிப்பிட்டுள்ள சம்பவத்தில், ஆசிரியர்களே தங்கள் பொறுப்பிலுள்ள மாணவர்களைக் கெடுப்பதாகச் சொல்லப்படுகிறது. இது, வேலியே பயிரை மேய்வதுபோல் இருக்கிறது.

எந்த ஒரு கமிஷனோ அல்லது அரசாங்கமோ வெற்றிகரமாகச் சமாளிக்கமுடியாத ஒரு விஷயம் இது. இது தார்மீகச் சீர்திருத்தக்காரர்களின் வேலையாகும். தங்களுடைய பொறுப்புகள் விஷயத்தில் பெற்றோர்களையும் விழிப்புறச் செய்யவேண்டும். தூய்மையான வாழ்க்கையுடன் மாணவர்களுக்கு நெருங்கிய தொடர்பு ஏற்படும்படி செய்யவேண்டும். சுத்தமான வாழ்க்கையும், ஒழுக்கமும்தான் உண்மையான கல்வியின் அஸ்திவாரம் என்ற கருத்தை மாணவர்களிடையே தீவிரமாகப் பரப்பவேண்டும். ஆசிரியர்களை நியமிக்கும் விஷயத்தில் கல்வி ஸ்தாபனங்களின் ஆசிரியர்கள் மிகுந்த ஜாக்கிரதையுடன் நடந்துகொள்ள வேண்டும். தேர்ந்தெடுத்து நியமனம் செய்த பிறகு அவர்கள் ஒழுங்காக இருக்கிறார்களா என்றும் கவனித்துக்கொள்ளவேண்டும். பயங்கரமான இந்தத் தீமையை அடியோடு ஒழிக்க முடியாவிட்டாலும், இதைக் கட்டுப்படுத்துவதற்கு இவையெல்லாம் சில வழிகளாகும்.

—'ஹரிஜன்' 27—4—1935

## 3

தங்களிடம் கல்வி பயிலும் மாணவிகளிடம் ஆசிரியர்கள் ரகசிய உறவுகள் வைத்துக்கொண்டு, பின்னர் அத்தகைய உறவுகளை ரகசியமாக வைத்துக்கொள்ள முடியாத நிலைமை ஏற்படும்போது திருமணத்தின் மூலம் அதைச் சட்டபூர்வமானதாகச் செய்துவிடுகிறார்கள். இவ்வாறு செய்வதால், அந்த உறவு புனிதமடைந்துவிட்டதாக ஆகாது. ஒரு சகோதரனுக்கும், சகோதரிக்கும் இடையே கணவன்-மனைவி உறவு இருக்கமுடியாது. அது போலவே, ஓர் ஆசிரியருக்கும், மாணவிக்குமிடையேகூட கணவன்-மனைவி உறவு இருக்கமுடியாது என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். இது பொன்னான ஒரு விதி. இதைப் பின்பற்றாமலிருப்பது, அந்த ஸ்தாபனத்தையே அழித்துவிடும். ஆசிரியர்களிடமிருந்து பெண்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்கு இந்த விதி ஓர் உத்திரவாதமாக இருக்கிறது. ஆசிரியர் ஓர் உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கிறார். அவருடைய பொறுப்பில் உள்ள பையன்கள், பெண்கள் மீது அவருக்கு மிகுந்த செல்வாக்கு இருக்கிறது. அவர் கூறுவதை அவர்கள் வேத வாக்காக எடுத்துக்கொள்ளுகிறார்கள். அவரிடம் தகாத நோக்கம் எதுவும் இருக்குமென்று அவர்களுக்கு சந்தேகம் ஏற்படப்போவதில்லை. ஆகையால், அவர் அத்தியாவசியமான இந்த விதிகளைப் பின்பற்றியாகவேண்டும். உடல் வளர்ச்சியைவிட, ஆன்மிக நலனே அதிக முக்கியமானது என்ற நிலைமையில், இத்தகைய உறவுகள் (ஆசிரியர்-மாணவி திருமணம்) அனுமதிக்கத்தகாதவை என்றே கருதப்படவேண்டும்.

— 'ஹரிஜன்'-29—11—1936

# 14

# ஆண்-பெண் உறவு பற்றிய கல்வி

## 1

எம். ஏ. பட்டத்திற்குச் சமமான ஒரு பட்டத்தை, குஜராத் வித்யா பீடத்திலிருந்து சில நாட்களுக்கு முன்பு பெற்ற ஸ்ரீ மகன் பாய் தேசாய், அக்டோபர் 7-ஆம் தேதியிட்டு எனக்கு குஜராத்தியில் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதிலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிறேன்:

"இதுவரையில் நீங்கள் அநேகமாக விவாதிக்காமலே விட்டு விட்ட ஒரு விஷயத்தைப் பற்றி 'ஹரிஜன் பந்து' பத்திரிகையில் நீங்கள் எழுத வேண்டும் என்று விரும்புகிறேன். இளைஞர்களுக்கு ஆண்—பெண் உறவுகள் பற்றி போதிப்பதையே நான் குறிப்பிடுகிறேன். குஜராத்தில் ஸ்ரீ............இதைப் பெரிதும் ஆதரிப்பவர் என்பது உங்களுக்குத் தெரியும். என்னைப் பொறுத்த

வரையில், இந்த விஷயத்தில் எனக்கு எப்போதுமே சந்தேகங்கள் உண்டு. அவை ஒரு புறமிருக்க, இந்தக் கனவான் இவ் வேலைக்குத் தகுதியானவர் தானு என்று எனக்குத் தெரியவில்லை. அது எப்படியிருந்தாலும், பலன்கள் திருப்திகரமாக இல்லை. ஆண்—பெண் உறவுகள் பற்றிய போதனை இல்லாததுதான் நம்முடைய சமூக இன்னல்கள், கல்விப் பிரச்னைகள் ஆகியவற்றிற்கு மூலகாரணம் என்று அவர் கூறுகிருர். அவரும், அவரைப் போன்றவர்களும், நவீன மனோதத்துவ கருத்துகளைப் பற்றிக் கொண்டு, உறங்கிக் கிடக்கும் காம வேட்கையே மனிதனின் எல்லா நடவடிக்கைகளுக்கும் ஊற்று என்கிருர்கள். உடனே அதற்கு தெய்வ அம்சத்தைக் கற்பித்து உயர்த்திப் பேசவும் ஆரம்பித்து விடுகிருர்கள். "ஒவ்வொருவர் உள்ளத்திலும் உள்ள காம இச்சை என்ற பூதத்தைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?" என்று நமது ஆசிரமத்திலுள்ள.........அந்தக் குறும்புக்காரர் என்னைக் கேட்டார். அவருடைய ஒழுக்க உணர்வு மங்கியிருக்கிறதேயொழிய, விழிப்புடன் இல்லை என்பதையே அந்தக் கேள்வி எடுத்துக் காட்டுவது போல் இருக்கிறது. ஆண்—பெண் உறவுகள் பற்றிய கல்வி என்ற பெயரில் இன்று நம்மையறியாமலேயே நடந்து வரும் விபரீதங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. இது சம்பந்தமாகப் புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. முதல் பதிப்பைத் தொடர்ந்து அடுத்த பதிப்புகளும் வந்து கொண்டேயிருக்கின்றன. ஒவ்வொரு பதிப்பும் பல்லாயிரக்கணக்கில் விற்பனையாகின்றன. இந்த விஷயத்தை வெற்றியுடன் பயன்படுத்திக் கொள்ளுவதன் மூலமே சில வாரப் பத்திரிகைகள் உயிர் வாழ்வது சாத்தியமாக இருக்கிறது. அவை வெளியான உடனேயே விற்பனையாகிவிடுகின்றன. இதனுல் ஏற்படும் விபரீதத்தைச் சுலபமாக ஊகித்துக் கொள்ளலாம். சமூகம் எதை விரும்புகிறதோ, அதற்கு எது தகுதியுள்ளதோ அதையே அது பெறுகிறது என்று சொல்லலாம். ஆனுல், சீர்திருத்தவாதிக்கு அது ஒரு ஆறுதலாக இருக்க முடியாது. ஆண்—பெண் உறவு சாத்திரம் என்ற வேஷத்துடன், காம உணர்ச்சிகளைத் தூண்டிவிடும் புத்தகங்கள் பெருகியிருப்பது, சீர்திருத்தவாதியின் வேலையை மிகவும் கடினமானதாகச் செய்து விடுகிறது.

"ஆகையால், இந்த விஷயத்தைப் பற்றி நீங்கள் பகிரங்கமாக விவாதிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். நமது குழந்தைகளின் பாடபோதனைத் திட்டத்தில் ஆண்—பெண் உறவு பற்றிய போதனையும் சேர்க்கப்பட வேணடுமா? இதை யார் கற்பிக்க வேண்டும்? இந்த வேலைக்குத் தேவையான யோக்கியதாம்சங்கள் என்ன? பூகோளம் அல்லது கணிதத்தைப் போலவே எல்லோருக்கும் இதைச் சொல்லிக் கொடுக்க வேண்டுமா?' அல்லது இதற்கு ஏதாவது எல்லை உண்டா? உண்டு என்ருல், எல்லையை வகுப்பது யார்? இத்துடன் நிறுத்திக் கொண்டுவிட வேண்டுமென்று நிர்ணயிப்பது யார்? இச்சைகள் தூண்டிவிடப் படுவதை எதிர்த்துச் சமாளிப்பதே இந்த போதனையின் நோக்கமாக இருக்க வேண்டுமா? அல்லது, அது இயற்கையின் தவிர்க்க முடியாத ஒரு உண்மை என்று ஏற்றுக்கொண்டு, அதற்குப் பணிவதுதான் இதன் நோக்கமா?

"இது சம்பந்தமாக ஒரு விசேஷ வேண்டுகோள். இந்த விஷயத்தைப் பற்றி நீங்கள் ஆங்கிலத்தில் ஏதாவது எழுதக்கூடும். அதைத் தவிர, குஜராத்தி வாசகர்களின் நன்மைக்காக, குஜராத்தி மொழியிலேயே ஏதாவது எழுத மாட்டீர்களா? உங்களுடைய அசல் கட்டுரைகளை குஜராத்தியில் எழுதுவதை நிறுத்தி விட்டீர்கள் என்பது எங்களிடையே நீண்ட கால

மாக உள்ள ஒரு குறை என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்த விஷயத்தைப் பற்றி எல். பி. ஜாக்ஸ் எழுதியுள்ளவற்றிலிருந்து சில பகுதிகளை* இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அவருடைய அனுபவத்தையும், தீவிர ஆராய்ச்சியையும் அவை நன்கு விளக்குகின்றன."

இந்தியாவிலுள்ள மற்ற பாகங்களைப்போலவே குஜராத்திலும் ஆண்-பெண் உறவு உணர்ச்சிகள் வரவரப் பெருகிக்கொண்டு வருகின்றன. அதுமட்டுமல்ல; இதில் சிக்கிக்கொள்ளுபவர்கள், இதில் கௌரவமான அம்சம் ஏதோ இருப்பதுபோல் நினைத்துக் கொள்ளுகிறார்கள். அடிமையாய் இருக்கும் ஒருவன், தன்னுடைய விலங்குகளை விலையுயர்ந்த ஆபரணங்களாக மதிக்க ஆரம்பித்துவிட்டால்,அந்த அடிமையை வைத்துக்கொண்டிருக்கும் எஜமானனின் வெற்றி பரிபூரணமானதாகிவிடுகிறது. ஆனால், இச்சையின் இந்த வெற்றி, பார்வைக்கு ஆடம்பரமானதாகத் தோன்றிய போதிலும், அது நிலைத்து நிற்காது என்றும், விஷத்தை இழந்த தேளைப்போல் இது முடிவில் செயலற்றுப் போய்விடும் என்றும் நான் உறுதியாக நம்புகிறேன். ஆனால், அதற்கிடையே நாம் கையைக் கட்டிக்கொண்டு செயலற்று உட்கார்ந்திருக்கலாம் என்று அர்த்தமில்லை. இது தோல்வியடையத்தான் போகிறது என்ற நிச்சயத்தில் நாம் அலட்சியமாக இருந்துவிடமுடியாது. அப்படி இருக்கவும் கூடாது. காம இச்சையை அடக்கி வெற்றி பெறுவதே, ஒரு ஆண் அல்லது பெண்ணினுடைய வாழ்க்கையின் பெருமுயற்சியாக இருக்கவேண்டும். இச்சையை அடக்கியாளாமல் மனிதன் தன்னைத்தானே அடக்கியாள முடியாது. தன்னைத் தானே அடக்கியாளாவிட்டால், சுயராஜ்யமோ, ராம ராஜ்யமோ ஏற்படமுடியாது. நன்கு வர்ணம் தீட்டப்பட்ட மாம்பழப் பொம்மை வெளியில் பார்ப்பதற்கு வெகு அழகாகத்தான் இருக்கிறது. ஆனால், அதில் உள்ளே ஒன்றுமில்லை. அதேபோல், தன்னை அடக்கியாளாமல் மற்றெல்லோரையும் ஆளுவதும் இந்த மாம்பழப் பொம்மையைப்போல் ஏமாற்றமளிப்பதாகவேதான் இருக்கிறது. இச்சையை அடக்கியாளாத எந்த ஊழியரும், ஹரிஜனங்கள், வகுப்பு ஒற்றுமை, கதர், பசுப் பாதுகாப்பு, கிராமச் சீரமைப்பு போன்ற லட்சியங்களையொட்டி உண்மையான தொண்டாற்ற முடியாது. அறிவினால் மட்டும் இத்தகைய பெரிய காரியங்களைச் செய்துவிட முடியாது; ஆன்மிக முயற்சி அல்லது ஆன்மிக பலமும் இவற்றிற்கு அவசியமாகும். ஆன்மிக பலம் என்பது கடவுளின் அருளினால்தான் கிட்டும்; இச்சைக்கு அடிமையான ஒருவனுக்கு ஒரு நாளும் கடவுளின் அருள் கிடைக்காது.

நம்முடைய கல்வி முறையில் ஆண்-பெண் உறவு பற்றிய போதனைக்கு என்ன இடம் கொடுக்க வேண்டும்? அல்லது அதற்கு இடமே உண்டா? இந்த போதனை இரண்டு விதமானது: ஒன்று இச்சையை அடக்குவது; மற்றொன்று, இச்சையைத்தூண்டிவிட்டு வளர்ப்பது. முதலில் சொன்னது போன்ற போதனை,

* இந்த விவரங்கள் இந்தக் கட்டுரையைத் தொடர்ந்து கொடுக்கப்பட்டுள்ளன.

குழந்தைக் கல்வியின் அவசியமான ஓர் அம்சமாகும். ஆனால் இரண்டாவது விதமான போதனை தீங்கையும், அபாயத்தையும் விளைவிப்பதாகும். ஆகையால், அதைத் தடுக்க வேண்டும். காமம் தான் மனிதனுடைய பரம விரோதி என்று எல்லா மதங்களும் சரியாகவே மதிப்பிட்டிருக்கின்றன. கோபம் அல்லது துவேஷத்திற்கு இரண்டாவது இடம்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. காமத்திலிருந்துதான் குரோதம் பிறக்கிறது என்று கீதை கூறுகிறது. கீதையில் காமம் என்ற வார்த்தை விரிவான அர்த்தத்தில் உபயோகிக்கப்பட்டுள்ளது. ஆனால், இங்கு உபயோகிக்கப்பட்டுள்ள குறுகிய அர்த்தத்திற்கும் அது பொருந்தும்.

ஆனால், சிறுவயதுள்ள மாணவர்களுக்கு ஜனனேந்திரியங்களின் உபயோகம், தொழில் ஆகியவை பற்றிய விஷயங்களைப் போதிப்பது விரும்பத்தக்கதுதானா என்ற கேள்விக்கு இன்னும் பதில் அளிக்கப்படவில்லை. ஓர் அளவிற்கு இது அவசியமானது என்றே நான் கருதுகின்றேன். அவர்கள் எப்படியாவது, எங்கிருந்தாவது இந்த விஷயங்களைத் தெரிந்து கொள்ளட்டும் என்று இப்பொழுது விட்டுவிடுகிறோம். இதன் பலனாக அவர்கள் கெட்ட பழக்கங்களுக்கு இழுத்துச் செல்லப்பட்டு விடுகிறார்கள். கண்ணை மூடிக்கொண்டிருந்துவிட்டால், சரீர இச்சையை நாம் சரியாகக் கட்டுப்படுத்தவோ, அடக்கிவிடவோ முடியாது. ஆகையால், நம்முடைய ஜனனேந்திரியங்களின் முக்கியத்துவத்தையும், அவற்றின் சரியான உபயோகத்தையும், இளம் பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் போதிப்பதை நான் பலமாக ஆதரிக்கிறேன். நான் பொறுப்பேற்றுக்கொண்டுள்ள பையன்களுக்கும் பெண்களுக்கும் எனக்குத் தெரிந்த முறையில் இந்த விஷயத்தைப் பற்றி சொல்லிக் கொடுக்கவும் முயன்றிருக்கிறேன்.

ஆனால், நான் ஆதரிக்கும் ஆண்-பெண் உறவு பற்றிய இந்தப் போதனை சரீர உணர்ச்சியை அடக்கி ஆண்டு, அதை உன்னதமானதாக்குவதையே நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். மனிதனுக்கும் மிருகத்திற்குமிடையே உள்ள அடிப்படையான வித்தியாசத்தை, இந்தப் போதனை குழந்தைகளுக்கு உணர்த்துவதாக இருக்க வேண்டும். சிந்தனை, உள்ளம் ஆகிய இரு விசேஷப் பேறுகளையும் பெற்றிருப்பது மனிதனின் தனிப் பெரும் பாக்கியம் என்பதை அவர்கள் உணரும்படி செய்ய வேண்டும். 'மனுஷ்யன்' என்ற வார்த்தையே சிந்தனையைக் குறிக்கிறது. மிருகங்களுக்கு உணர்ச்சி இருக்கிறதென்றால், தனக்கு சிந்தனை இருக்கிறது என்பதை மனிதன் உணர வேண்டும். ஆகவே, கண்மூடித்தனமான உணர்ச்சிகளைவிட பகுத்தறிவுதான் உயர்வானது என்ற உண்மையைக் கைவிடுவது, மனித இனத்தின் பெருமையைக் கைவிடுவதாகும் என்பதையும் உணர வேண்டும். மனிதர்களிடம் சிந்தனை துரிதமாகச் செயல்பட்டு உணர்ச்சிகளுக்கு வழிகாட்டுகிறது. மிருகங்களிடமோ, ஆன்மா எப்பொழுதும் உறங்கிக்கிடக்கிறது. உள்ளத்தை விழிப்படையச் செய்வது என்பது, உறங்கிக் கொண்டிருக்கும் ஆன்மா

வையும், பகுத்தறிவையும் விழிப்புறச் செய்து, நன்மை, தீமை ஆகிய இரண்டிற்குமிடையே உள்ள வேற்றுமையை உணர்த்துவதாகும்.

ஆண்-பெண் உறவு பற்றிய இந்த உண்மையான சாத்திரத்தை யார் போதிப்பது? தங்களுடைய இச்சைகளை வென்றவர்களே இதைப் போதிக்கலாம் என்பது தெளிவாகும். வான சாத்திரம் போன்ற விஷயங்களைப் போதிப்பதிற்கு, அதில் பயிற்சி பெற்று, நல்ல தேர்ச்சியடைந்த ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அதைப்போலவே ஆண்-பெண் உறவுகள் பற்றிய சாத்திரத்தில் தேர்ச்சி பெற்றவர்கள் ஆசிரியர்களாக வரவேண்டும். அதாவது, உணர்ச்சிகளை அடக்கியாளும் வித்தையைப் பயின்று அதில் வெற்றி பெற்றவர்களே வரவேண்டும். ஒரு உபதேசம் உயர்தரமானதாக இருக்கலாம். ஆனால், உண்மை, அனுபவம் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டிராவிட்டால் அது செயலற்றதாகவும் உயிரற்றதாகவும் இருக்கும்; அது மனிதர்களின் உள்ளத்தைத் தொட்டுத் தூண்டிவிடும் தன்மை பெற்றதாக இராது. ஆனால், சுயமாக உணர்ந்தும், உண்மையான அனுபவத்தின் மீதும் கூறப்படும் விஷயங்களே எப்பொழுதுமே பலன் அளிப்பவையாக இருக்கும்.

இன்று நம்முடைய படிப்பு, சிந்தனை, சமூக நடத்தை போன்ற சூழ்நிலைகள், பொதுவாக இச்சைகளைத் தூண்டி விடுபவைகளாகவே அமைந்திருக்கின்றன. இந்தச் சூழ்நிலையில் இந்தச் சிக்கல்களிலிருந்து விடுபடுவது என்பது சுலபமான காரியமல்ல. புலனடக்கத்தை எய்துவது மனிதனின் மிக உயர்ந்த கடமை என்று ஒப்புக் கொள்பவர்களும், தங்களுடைய லட்சியத்தில் தளராத நம்பிக்கை கொண்டவர்களும், சற்றும் சோர்வின்றி எப்போதுமே கண்காணிப்புடன் இருப்பவர்களும், சொந்த அனுபவம் உள்ளவர்களுமான ஒரு சிலரே ஆசிரியர்களாகக் கிடைத்தாலும் கூட, குஜராத்தி குழந்தைகளுக்கு அவர்கள் நல்ல வழி காட்டுவார்கள்; அஜாக்கிரதையினால் சரீர இச்சையென்ற சேற்றில் விழுபவர்களையும், ஏற்கனவே அதில் மூழ்கி விட்டவர்களையும் கூடக் காப்பாற்றுவார்கள்.

(குஜராத்தி மூலத்திலிருந்து ஸ்ரீ பியாரிலால் மொழிபெயர்த்தது.)

## 2

[முந்திய கட்டுரையில் ஸ்ரீ எல். பி. ஜாக்ஸின் புத்தகத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருந்தது அல்லவா? 'முழுமையான மனிதனின் கல்வி' என்ற அவருடைய புத்தகத்திலிருந்து சில பகுதிகள் கீழே தரப்படுகின்றன:]

"ஆண்-பெண் உறவுகள் பற்றிப் பூராவாகவும், ஒளிவு மறைவு இல்லாமலும் விவாதித்தால், இளம் வயதினர் காம விகாரங்களிலிருந்து காப்பாற்றப்பட்டு விடுவார்கள் என்று நினைப்பது,

மிகவும் ஆபத்தான ஒரு கனவு என்றே எனக்குத் தோன்றுகிறது. இம்மாதிரி 'பூராவாகவும்,' 'ஒளிவு மறைவில்லாமலும்' ஆண்-பெண் உறவுகள்பற்றிப் போதிக்கும் பொறுப்பையும் நான் ஏற்றுக் கொள்ள விரும்ப மாட்டேன். அந்த விஷயத்தைப் பற்றி விவாதிப்பதே, குறிப்பாக இளம் வயதினருடன் விவாதிப்பதே அவர்களுக்கு ஒரு தூண்டுதலாக இருக்கும். அந்த விஷயத்தின் தன்மை அத்தகையது. அதனுடைய மர்மமே ஓர் அளவுக்கு அதில்தான் இருக்கிறது. அந்த விஷயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை, ஒரு விதத்தில் விவாதத்தின் மூலம் தணிகிறதென்ருல், மற்ருெரு விதத்தில் அந்த ஆசையை அது தூண்டிவிட்டு விடுகிறது. ஆசிரியர்களின் போதனையைக் கேட்டு ஒரு இளைஞன் ஆண்-பெண் உறவு பற்றிய அறிவில் தேர்ச்சி பெற்று விடுகிருன். (போதிப்பவர்களே அபாயத்திற்கு விலக்கானவர்கள் என்று சொல்லிவிட முடியாது.) இந்த விஷயம் பூராவையும் மனப்பாடம் பண்ணி விடுகிருன். செடியை முளைக்க வைக்கச் செய்வதிலிருந்து எல்லாவற்றையும் தெரிந்து கொண்டுவிடுகிருன். இவ்வளவையும் பற்றிய அறிவை அவன் பெற்றிருந்தால் கூட, அதையெல்லாம் சோதனை செய்து பார்க்கும் கட்டத்திற்கு வந்தாலொழிய தன்னுடைய அறிவெல்லாம் வெறும் அரைகுறையானது என்பதையும் தெரிந்து கொள்ளுகிருன். வெகு காலத்திற்கு அப்படி அவன் சோதனை செய்து பார்க்காமல் இருப்பான் என்றும் நினைப்பதற்கில்லை. அந்த விஷயத்தைப் பற்றித் தன்னுடைய ஆசிரியர்கள் முழு உண்மைகளையும் சொல்லிக் கொடுத்திருக்கிருர்களா என்ற சந்தேகம் கூட அவனுக்கு ஏற்படலாம். தார்மிக அம்சம் பலமாக வற்புறுத்திக் கூறப்படும் விஷயங்களில் இளைஞர்களுக்கு எப்போதும் சந்தேகம்தான் ஏற்படும். அப்படியானல், தனக்கு உண்மையாகவே விஷயங்களைச் சொல்லிக் கொடுத்திருக்கிருர்களா அல்லது ஏமாற்றி விட்டார்களா என்று கண்டு பிடிப்பதற்காக அவன் சீக்கிரமாகவே சோதனைக் கட்டத்தில் இறங்கி விடுவான். ஐரோப்பாவிலுள்ள லத்தீன் நாடுகளில் விஷய அறிவு பெறுவதிலிருந்து சோதனையில் இறங்கும் கட்டத்திற்கு, ஆண்-பெண் உறவு பற்றிய விஷயங்களை அறிந்து கொள்ளுவதிலிருந்து அதை அனுபவிக்கும் கட்டத்திற்குப் போவது, அவ்வளவு பெரிய தீமையாகக் கருதப்படாமலிருக்கலாம்; அல்லது அந்த போதனையின் நோக்கமே அதுவாகவும் இருக்கலாம். ஆனல், இன்னும் அதிகக் குளிர் மிகுந்த நாடுகளில் இளைஞர்களுக்கு நேரடியாக ஆண்-பெண் உறவு பற்றிய விஷயங்களைச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று சீர்திருத்தக்காரர்கள் கூறுவது இம்மாதிரியானதல்ல. விஞ்ஞான ரீதியான விஷயங்களை முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானல், அதற்குச் சோதனைகள் நடத்திப் பார்க்க வேண்டியது அவசியமென்று ஒப்புக்கொள்ளப்படுகிறது. அப்போதுதான் அது நன்ருக மனத்தில் பதியும் என்று கருதப்படுகிறது. கணக்குப் போடும் விதம் மாணவனுக்குச் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. அதை உபயோகித்து அவன் கணக்குப் போடவேண்டும்; அவனுக்கு விளக்

கப்பட்டுள்ள பொருள்களைப் பார்த்து, அவற்றைப் போலவே மாதிரிகள் செய்ய வேண்டும்; வகுப்புகளில் சொல்லிக் கொடுக்கப்படுவதை ஆராய்ச்சி சாலையில் சோதனை செய்து பார்க்க வேண்டும். ஒரு காரியத்தைச் செய்து பார்த்தே தன்னுடைய விஷய அறிவைச் சோதனை செய்ய வேண்டும். ஆனால், ஆண்-பெண் உறவுகள் சம்பந்தப்பட்டவரையில், சோதனைக் கட்டத்தில்தான் ஆசிரியர் நிறுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஏனெனில், அவருடைய நோக்கம் சோதனையைக் கட்டுப்படுத்துவதே யொழிய, அதற்கு ஊக்கமளிப்பதல்ல. இதில் ஒரு அபாயம் இருக்கிறது. அதாவது, அவர் எதிர்பார்ப்பதை விட சீக்கிரமாகவும், அவர் விரும்பாத விதத்திலும் அந்தச் சோதனை நடைபெற்று விடும். பிராணவாயு, அல்லது ஜீரண சக்தி போன்ற விஷயங்களை விளக்கிக் கூறுவது போன்றதல்ல இது. சோதனைக்குத் தயாராக இருக்கும் துடிப்புள்ள இளைஞர்களுக்கு இந்த விஷயத்தைச் சொல்லிக் கொடுப்பது, நெருப்புடன் விளையாடுவதாகும்.

"ஆசிரியருக்கு உள்ள அபாயத்தைப் பற்றி அதிகமாக விவரிக்க வேண்டியதில்லை. ஒரே ஒரு விஷயத்தை மாத்திரம் சொல்லுவதே போதுமானது. ஆண்-பெண் உறவு பற்றிய விஷயங்களில் உண்மையாக இருப்பது கஷ்டம். ஆயினும், இந்த விஷயத்தில் துளி சந்தேகம் ஏற்பட்டால் கூடப் போதும்; இளைஞர்கள் வெகு சீக்கிரமாக அதைக் கண்டுபிடித்து விடுவார்கள். அப்படி சந்தேகம் ஏற்பட்டால் நல்ல பலனே கிடைக்காது. மத விஷயத்தில் இருப்பதைப் போலவேதான் இதிலும் சந்தேகத்திற்கு இடம் கொடுக்கக் கூடாது.

"ஆகையால், ஆண்-பெண் உறவுகள் பற்றிய பிரச்னைக்கு ஆசிரியர் தீர்வு கண்டுபிடிக்க முடியுமா என்ற கேள்வி சம்பந்தப்பட்டவரையில், என்னுடைய நிலைமை இதுதான்: அதாவது, விஷய அறிவு பெறுவது தான் கல்வியின் நோக்கம் என்றிருப்பதை, ஆக்க முறையில் திருப்பி விடும் விதத்தில் விரிவு படுத்த வேண்டும். இதைத் தெளிவான பாஷையில் சொல்லுகிறேன். (எதற்குமே இதுதான் மிகச் சிறந்த முறை. கல்வியமைப்பில், கலைக்கு இன்னும் அதிக முக்கியமான ஸ்தானம் கொடுக்க வேண்டும்.

"இந்த விஷயத்தில் பெற்றோர்களின் கடமையைக் கவனிப்போம். இதைப்பற்றி நான் கூறியுள்ளவைகளில் பல மாறுதல்களைச் செய்து கொள்ள வேண்டியிருக்கும். ஆண்-பெண் உறவு பற்றிய கல்வி அளிக்க வேண்டுமானால், பெற்றோர் தான் அதற்குச் சிறந்த ஆசிரியர் என்பதில் சந்தேகமில்லை; அல்லது பெற்றோரேதான் சிறந்த ஆசியராக இருக்க வேண்டும். குடும்ப வாழ்க்கையின் பொதுவான சூழ் நிலை எப்படி யிருக்கிறதென்பதையே எல்லாம் பொறுத்திருக்கிறது. குடும்பச் சூழ்நிலை திருப்திகரமானதாக இல்லையென்றால், வீட்டில் இந்த அறிவைப் போதிப்பது மற்ற இடங்களில் போதிப்பதைப் போலவே அபாயகரமானதாகத்தான் இருக்கும்."

—'ஹரிஜன்,'-21—11—1936

# 15

# ஓய்வு நேரத்தின் கவர்ச்சி*

மதிப்பிற்குரிய நண்பர் ஒருவர் காந்திஜியுடன் பேசிக் கொண்டிருக்கும்போது, ஓய்வு நேரத்தில் என்ன செய்வதென் பது உண்மையிலேயே அவ்வளவு கஷ்டமான ஒரு பிரச்னையா என்று கேட்டார். "தினசரி எட்டு மணி நேரம் உடலுழைப்பில் ஈடுபட வேண்டும் என்று ஏன் நீங்கள் வற்புறுத்துகிறீர்கள்? நன்கு சீரமைக்கப்பட்ட ஒரு சமூகத்தில் வேலை செய்யும் நேரத்தை இரண்டு மணியாகக் குறைத்து, பிரஜைகளின் அறிவு, கலை சம்பந் தமான துறைகளில் அபிவிருத்தி செய்து கொள்ளுவதற்கு நிறைய அவகாசம் கொடுப்பது சாத்தியமில்லையா?" என்றும் அவர் கேட் டார்.

"அவ்வளவு ஓய்வு நேரம் பெறுபவர்கள் யாவரும்-தொழிலா ளர்களும் சரி, படித்தவர்களும் சரி - அந்த நேரத்தை நல்ல விதத் தில் பயன்படுத்திக் கொள்ளுவதில்லை என்பதை நாம் அறிவோம். வேலையில்லாமல் சோம்பி இருப்பது பல சமயங்களில் மனத்தைத் தீய சிந்தனைகளில் திருப்பிவிடுகிறது."

"இல்லை; அவன் அப்படிச் சோம்பேறியாக இருக்கமாட் டான். ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரம் உடலுழைப்பு, ஆறு மணி நேரம் அறிவு வளர்ச்சிக்கான உழைப்பு என்று பிரித்தால், அது தேசத்திற்கு நன்மையளிப்பதாக இராதா?"

"அது சாத்தியமாக இருக்குமா என்று எனக்குத் தெரியாது. அதை நான் கணக்குப் போட்டுப் பார்க்கவில்லை. ஆனால், ஒருவன் தன்னுடைய அறிவு வளர்ச்சி உழைப்பை லாபத்திற்காகவன்றி, தேச நலன்களுக்காகக் கொடுக்க மாட்டான் என்றால், அந்த திட்டம் நிச்சயமாக உருப்படாது. அதாவது, அவனுடைய இரண்டு மணி நேர உடலுழைப்புக்கு அரசாங்கம் நிறைய ஊதியம் கொடுத்து, எந்த விதமான ஊதியமும் இல்லாமல் அறிவு வளர்ச்சி உழைப்பையும் கொடுக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்தின லொழிய, அது உருப்படாது. அது நல்ல ஏற்பாடுதான்; ஆனால், அரசாங்கம் ஒரு விதமான கட்டாய சேவைத் திட்டத்தை அமு லுக்குக் கொண்டுவருவதாக இருந்தாலொழிய அது சாத்திய மாக இராது."

"உங்கள் விஷயத்தையே எடுத்துக் கொள்ளுவோம். நீங்கள் எட்டு மணி நேரம் உடலுழைப்பு செய்ய முடியாது என்பது தெளி வாகும். எட்டு மணிக்கும், அதற்கு அதிகமாகவும் கூட நீங்கள் மூளையை உபயோகித்து வேலை செய்ய வேண்டியிருக்கிறது. உங் களுடைய ஓய்வை நீங்கள் துஷ்பிரயோகம் செய்யவில்லையே?"

---

* மகாதேவ தேசாயின் (எம். டி.) வாராந்திரக் கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டது.

"அது கட்டாய வேலை, ஓய்வுக்கு இடமேயில்லை. உதாரணமாக, நான் டென்னிஸ் ஆடப்போனால் கிடைக்கக் கூடியது போன்ற ஓய்வு அல்ல அது. என்னையேதான் எடுத்துக் கொள்ளுங்கள். நாம் எட்டு மணிநேரம் நமது கைகளை உபயோகித்து உழைத்தால், நமது மனம் இன்னும் எவ்வளவோ மேலானதாக இருக்கும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். ஒரு வீணான சிந்தனை கூட நமக்கு ஏற்படாது. என் மனத்தில் அத்தகைய வீணான சிந்தனைகளே இல்லை என்று நான் சொல்லிக் கொள்ள முடியாது. என்னுடைய வாழ்வில் மிகவும் இளமைப் பருவத்திலேயே உடலுழைப்பின் மதிப்பை நான் உணர்ந்து விட்டதால்தான் இன்று நான் இப்படி இருக்கிறேன்."

"உடலுழைப்பில் இயற்கையாகவே அவ்வளவு நன்மையிருக்கிறது என்றால், நமது மக்கள் ஒரு நாளைக்கு எட்டு மணி நேரத்திற்கு அதிகமாகவே வேலை செய்து வந்திருந்தும் கூட, அவர்களுடைய மனத்தில் குறிப்பிடத்தக்க அளவுக்கு தூய்மையோ, உறுதியோ இல்லையே?"

"மூளையைச் செலவிடுவது என்பது உழைப்பு அல்ல; அது போலவே, உடலுழைப்பு மட்டும் கல்வியாகிவிடாது. இது நமது மக்களுக்கு அவர்களை யறியாமலே ஒரு பெரிய அலுப்புத் தட்டும் அனுபவமாக இருந்து வந்திருக்கிறது. அது ஒருவருடைய உயர்ந்த உணர்ச்சிகளை மழுங்கவைத்துவிடுகிறது. ஸவர்ண ஹிந்துக்களிடம் (சாதி ஹிந்துக்கள்) எனக்குள்ள மிகப் பெரிய குறை அதுதான். பாட்டாளி மக்களின் வேலையை அவர்கள் உயிரற்ற ஒரு மோசமான அனுபவமாகச் செய்து விட்டார்கள். அதில் அவர்களுக்கு சந்தோஷமும் இல்லை, அக்கறையும் இல்லை அவர்களும் சமூகத்தில் மற்றவர்களைப் போலவே சம அந்தஸ்தை அனுபவிக்கும் உறுப்பினர்களாகக் கருதப்பட்டிருந்தால், வாழ்க்கையில் அவர்களுடைய ஸ்தானம் மிகப் பெருமைப்படத்தக்கதாக இருந்திருக்கும். ஆனால், இது கலியுகம். பொன்யுகம் என்று கூறப்படும் சத்திய யுகத்தில்–அது எப்போது இருந்திருந்தாலும் – சமூக அமைப்பு இன்றிருப்பதைவிட இன்னும் நல்ல முறையில் இருந்திருக்கும் என்று நான் துணிந்து கூறுவேன். நம் நாடு புராதனமான நாடு. எவ்வளவோ நாகரிகங்கள் தோன்றி மறைந்துவிட்டன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் நாம் எப்படியிருந்தோம் என்பதைக் கூறுவது கஷ்டம். ஆனால், சூத்திரர்களை நாம் வெகு காலமாகப் புறக்கணித்து வந்திருப்பதால்தான் இன்றுள்ள நிலைமையில் நாம் இருக்கிறோம் என்பதில் சந்தேகமில்லை. இன்று கிராமங்களில் நிலவும் பண்பாடு—அதைப் பண்பாடு என்று கூறலாமென்றால்—சகிக்க முடியாததாகும். கிராமவாசிகள் மிருகங்களைவிட மோசமாக வாழ்கிறார்கள். நமது தொழிலாளர்கள் இயற்கையான முறையில் வேலை செய்து, வாழ முடியாதபடி அவர்களை அவ்வளவு மட்டமானவர்களாக்கி விட்டோம். நமது மக்கள் புத்திசாலித்தனத்துடனும், சந்தோஷத்

துடனும் உழைத்திருந்தால், இன்று நாம் முற்றிலும் வேறு விதமாக இருந்திருப்போம்."

" அப்படியானால், உழைப்பையும், பண்பாட்டையும் பிரிக்க முடியாதா ? "

" முடியாது. புராதன ரோமாபுரியில் அப்படிச் செய்ய முயன்று படுதோல்வி யடைந்தார்கள். உழைப்பு இல்லாத பண்பாடு அல்லது உழைப்பின் பலனாக இல்லாத பண்பாடு, ஒரு ரோமன் கத்தோலிக்க எழுத்தாளர் கூறுவது போல் " வாந்தி எடுத்தது " போல் இருக்கும். ரோமாபுரி வாசிகள் சுகானுபவத்தை ஒரு பழக்கமாக்கிக் கொண்டு, அழிந்து போனார்கள். எழுதுவதாலோ, படிப்பதாலோ அல்லது நாள் பூராவும் பிரசங்கங்கள் செய்து கொண்டிருப்பதாலோ மனிதன் தன்னுடைய புத்தியை வளர்த்துக் கொள்ள முடியாது. நான் படித்ததெல்லாம் சிறைச்சாலைகளில் எனக்குக் கிடைத்த ஓய்வு நேரங்களில்தான். அந்தப் படிப்பு மனம் போனபடி இல்லாமல் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் இருந்ததால், அதனால் நான் பயன்பெற்றேன். தினசரி எட்டுமணி நேரம் வீதம் நாள் கணக்கில், மாதக் கணக்கில், நான் உடலுழைப்பில் ஈடுபட்டிருக்கிறேன். அதனால் எனக்கு புத்தி மந்தம் ஏற்பட்டதாக நான் நினைக்கவில்லை. ஒரு நாளில் நாற்பது மைல் தூரம் கூட நடந்திருக்கிறேன். எனினும் அதனால் எனக்கு அலுப்பு ஏற்பட்டதே இல்லை."

" ஆனால், அதற்கு வேண்டிய விஷய அறிவு உங்களுக்கு இருந்தது."

" அப்படியொன்றுமில்லை. பள்ளிக் கூடத்திலும், இங்கிலாந்திலும் நான் எவ்வளவு சாதாரணமானவனாக இருந்தேன் என்பது உங்களுக்குத் தெரியாது. வாதப் பிரதிவாத சங்கக் கூட்டங்களிலோ, மரக்கறி உண்போர் கூட்டங்களிலோ கூட எழுந்து பேசுவதற்கு எனக்கு தைரியமே வந்ததில்லை. என்னிடம் ஏதோ அசாதாரணமான சக்திகள் இருப்பதாக நினைத்துக் கொண்டு விடாதீர்கள். கடவுள் வேண்டுமென்றேதான் எனக்கு பேசும் திறமையை அளிக்கவில்லை என்று நினைக்கிறேன். எங்களிடையே, மிகவும் குறைவாகப் படித்தவன் நான்தான் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்."

—'ஹரிஜன்' – 1—8—1936

# 16

# என்னுடைய "காமதேனு"

ராட்டினத்தை நான் என்னுடைய விமோசனத்திற்கு ஒரு தலைவாயில் என்று வர்ணித்திருப்பதைப் பற்றிச் சிலர் என்னைக் கேலி செய்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். களி மண்ணினால் ஒரு சிறிய உருண்டை செய்து வைத்துக் கொள்ளுபவன் கூட, அதற்கு 'பார்த்திவேசுவர் சிந்தாமணி' என்று பிரமாதமாகப் பெயர் கொடுத்து, அதன் மூலம் "கடவுளை நேருக்கு நேர் பார்க்கலாம்" என்ற நம்பிக்கையில் தன்னுடைய சக்தி பூராவையும் அதிலேயே செலவிடுகிறான் என்று வைத்துக் கொள்ளுவோம். அந்த பிம்பம் உயிர் கொடுக்கும் சக்தி வாய்ந்தது என்று அவன் நம்புகிறான். ஆனால், அவனைப்போல் அந்த நம்பிக்கை இல்லாதவர்கள் அவனையும் கேலி செய்யக் கூடும். எனினும் அதற்காக, தன்னைத்தானே அறிய வேண்டும் என்ற வெறிபிடித்த அவன் தன் வழிபாட்டை விட்டுவிடுவானா? விடமாட்டான். அதற்கு மாறாக, தனது முயற்சி வெற்றி பெறும் வரையில், சோர்வின்றி அவன் அதைச் செய்து கொண்டேதான் இருப்பான். கடைசியில் அவனுக்கு வெற்றி கிட்டத்தான் வேண்டும். ஆனால், அவனைக் கேலி செய்தவர்கள்தான் நஷ்டமடைவார்கள். அதுபோலவே, ராட்டினத்தைப் பற்றிய என்னுடைய கருத்து, தூய்மையான உள்ளத்திலிருந்து வருவதாக இருந்தால், அது என்னுடைய விமோசனத்திற்கு வழியாகவே இருக்கும். உண்மையான ஒரு ஹிந்துவாக இருப்பவன் எங்கு ராம நாமம் கேட்டாலும், தன்னையறியாமலேயே அந்தப் பக்கம் திரும்புவான். அந்த ஒலி இருக்கும் வரையில், தற்காலிகமாக அவனிடமுள்ள தீமைகளெல்லாம் அமுங்கிவிடும். தெய்விகமான அந்தத் திருநாமம் மற்றவர்களின் மனதில் எந்த உணர்ச்சியையும் உண்டுபண்ணவிட்டால் என்ன நஷ்டம் ஏற்பட்டுவிடப் போகிறது? 'அல்லா ஹோ அக்பர்' என்ற கோஷம் ஓர் ஹிந்துவுக்கு எத்தகைய உணர்ச்சியையும் உண்டுபண்ணாமலிருக்கலாம்; ஆனால் ஒரு முஸ்லிமுக்கு அந்த கோஷம் பரவசத்தை உண்டாக்குகிறது. அதுபோல, தெய்வ பக்தியுள்ள ஒரு ஆங்கிலேயரிடம் அவருக்குள்ளேயே கடவுள் இருக்கிறார் என்பதை ஞாபகப்படுத்தினால், உடனே அவர் குரோத உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டு, அப்போதைக்காவது நிதானம் பெற முடியும். எந்த உணர்ச்சியுடன் வழிபாடு செய்யப்படுகிறதோ, அதற்குத் தகுந்தாற்போல் அதன் பலனும் இருக்கும்.

ஆகவே, ராட்டினத்தில் ஒன்றுமே இல்லை என்றாலும், அதனுடைய பெருமைகளைப் பற்றி நான் கூறுவதெல்லாம் என்னுடைய கற்பனையில் தான் இருக்கின்றன என்றாலும் கூட, என்னை பொறுத்தவரையிலாவது அது என்னுடைய காமதேனுவாக, விரும்பியதைக் கொடுக்கும் பசுவாக இருக்கும். ராட்டினத்தில்

நான் ஒவ்வொரு இழை நூற்கும் போதும், இந்தியாவிலுள்ள ஏழை மக்களைப்பற்றி நினைத்துக் கொள்ளுகிறேன். இன்று இந்தியாவிலுள்ள ஏழைகள் கடவுளிடம் நம்பிக்கை இழந்து விட்டார்கள்; மத்தியதர வகுப்பினர் அல்லது பணக்காரர்களிடமும் அவர்களுக்கு நம்பிக்கையே இல்லை. பசிப் பிணியால் வருந்தும் ஒருவன், தன் பசியைத் தீர்த்துக்கொள்ளுவதைத் தவிர வேறு எதையும் விரும்பவில்லையென்றால், அப்போது அவனுடைய வயிறுதான் அவனுக்குக் கடவுள். பசிக்கு உணவு கொடுப்பவர் யாராயிருந்தாலும் அவர்தான் அவனுடைய எஜமானர். அவர் மூலம் அவன் கடவுளைக்கூடக் காணக் கூடும். அங்கவீனம் எதுவுமில்லாமல் திடகாத்திரர்களாக இருப்பவர்களுக்குப் பிச்சை கொடுப்பது, கொடுப்பவர், வாங்கிக் கொள்ளுபவர் இருவரையுமே இழிவுபடுத்திக் கொள்ளுவதாகும். ஏதாவது வேலைதான் அவர்களுடைய தேவை; லட்சக்கணக்கானவர்களுக்கு அம்மாதிரி வேலை கொடுக்கக் கூடியது ராட்டினமாகத்தான் இருக்க முடியும். இந்தியாவிலுள்ள பாட்டாளிகளுக்கு கைராட்டையில் நூற்பதன் சக்தியை உணர்த்த வேண்டுமானால், நான் பிரசங்கங்கள் செய்து கொண்டிருந்தால் முடியாது; நானே நூற்க வேண்டும். அதனால்தான் என்னுடைய நூற்பை, பிராயச்சித்தம் அல்லது விரதம் என்று சொல்லுகிறேன். ஏழைகள் விஷயத்தில் பரிசுத்தமானதும், உயிருள்ளதுமான அன்பு எங்கே இருக்கிறதோ, அங்கே கடவுள் இருக்கிறார் என்று நான் நம்புவதால் கைராட்டினத்தில் நான் இழுக்கும் ஒவ்வொரு இழை நூலிலும் கடவுளைக் காண்கிறேன்.

## நீங்கள் ஏன் நூற்க வேண்டும்?

கைராட்டினத்தைப் பற்றிய என்னுடைய கருத்து என்ன என்பதைச் சொல்லிவிட்டேன். என்னுடைய கருத்தை நீங்கள் ஏற்றுக் கொள்ள முடிந்தால், பின்னர் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. ஆனால், அது உங்களுக்குப் பிடித்தமில்லாமல் இருக்கக் கூடும். அப்போதும் கூட, நீங்கள் ஏன் நூற்க வேண்டும் என்பதற்கு எவ்வளவோ காரணங்கள் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றை மட்டும் கீழே தருகிறேன்:

1. நீங்கள் நூற்றால்தான் மற்றவர்களை நூற்க வைக்க முடியும்.

2. நீங்களே நூற்று, நூலை அகில இந்திய நூற்போர் சங்கத்தினிடம் கொடுப்பதன் மூலம், இறுதியில் கதரின் விலையைக் குறைப்பதைச் சாத்தியமானதாக்குவீர்கள்.

3. நூற்கக் கற்றுக் கொண்டால், இப்போதோ, அல்லது பின்னர் நீங்கள் விரும்பும் சமயத்திலோ, நூற்புப் பிரசாரத்திற்கு உதவி செய்யலாம். நூற்கும் கலையின் அரிச்சுவடி கூடத் தெரியாதவர்கள், இந்த வேலைக்குப் பலனில்லை என்பது அனுபவத்தில் தெரிந்திருக்கிறது.

4. நீங்களே நூற்றால், அதன் தரம் உயரும். ஊதியத்திற்காக நூற்பவர்கள் பொறுமையற்றவர்களாக இருப்பது இயற்கையே. அவர்களுக்குப் பழக்கமான நம்பர் நூலைத்தான் அவர்கள் தொடர்ந்து நூற்றுக் கொண்டிருப்பார்கள். நூலின் நம்பரை அபிவிருத்தி செய்யும் வேலை முக்கியமாக ஆராய்ச்சியாளரையும், கைராட்டை அபிமானிகளையுமே சார்ந்ததாகும். இது அனுபவத்தில் ருசுவாகியிருக்கிறது. முற்றிலும் தொண்டு செய்யும் உணர்ச்சியுடன் நூற்கும் ஒரு கோஷ்டியினர் – ஆடவர்கள் பெண்கள் உட்பட – தோன்றியிருக்க வில்லையென்றால், நூலின் தரத்தில் ஏற்பட்டுள்ள வியக்கத்தக்க அபிவிருத்தி சாத்தியமாக இருந்திராது.

5. நீங்கள் நூற்றால், கைராட்டினத்தின் அமைப்பில் முன்னேற்றமான மாறுதல்கள் செய்வதற்கு உங்களுடைய திறமையைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கைராட்டினத்தின் அமைப்பில் செய்யப்பட்டுள்ள அபிவிருத்திகளும், நூற்கும் வேகமும், தியாக உணர்ச்சியுடன் நூற்கும் ஊழியர்களின் முயற்சியினாலேயேதான் சாத்தியமாக இருந்தன.

6. இந்தியாவின் புராதனக் கலை கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து கொண்டு வருகிறது. அந்தக் கலைக்கு மீண்டும் உயிர் ஏற்படுவது, பெரிதும் கை ராட்டினத்தில் நூற்பதன் புனருத்தாரணத்தையே பொறுத்திருக்கிறது. நூற்பதில் கலை இருக்கிறதென்பது, அதை ஒரு விரதமாகக் கொண்டிருப்பவர்களுக்கு நன்கு தெரியும். சத்தியாக்கிரக வாரத்தின் போது நூற்பவர்கள், நூற்பதற்குச் சளைப்பதே இல்லை. நூற்பதில் அவர்களுக்குள்ள உணர்ச்சிதான் அவர்கள் சலிப்படையாதிருப்பதன் காரணங்களில் ஒன்று என்பது உண்மைதான். ஆனால், நூற்பதில் கலை இல்லையென்றால், 24 மணி நேரம் நூற்ற அந்த இளைஞர்களுக்கு அது அசாத்தியமானதாக இருந்திருக்கும். ஏதாவது பரிசு பெறலாம் என்ற ஆசையால் அவர்கள் அதில் ஈடுபடவில்லை என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நூற்றதுதான் அதற்குப் பரிசு.

7. நமது நாட்டில் உடலுழைப்பு மட்டமான ஒரு வேலை என்று கருதப்படுகிறது. பணத்தில் மிதக்கும் பாக்கியசாலிகள், எல்லாவற்றிற்கும் தாய் போன்ற பூமியைத் தொட வேண்டிய அவசியமே இல்லையாதலால், அவர்களுடைய உள்ளங் கால்களில் ரோமம் வளர்ந்து விடுகிறது என்று கூட நமது கவிஞர்கள் வர்ணித்திருக்கிறார்கள். உடலுழைப்புதான் மனிதனைப் பிறந்தவனின் மிக்க உயர்வான பணி. பிரம்மா, நம்மை உழைப்புடனேயேதான் சிருஷ்டித்தார் என்று ரிஷிகள் சொல்லுகிறார்கள். ஆனால், அந்த உன்னதமான பணியை ஏதோ கீழ்த்தரமானதாகவும், கேவலமானதாகவும், நாம் கருதி வந்திருக்கிறோம். உடலுழைப்பு செய்பவர்கள் சமூக அந்தஸ்தில் கீழானவர்கள் என்ற கொடிய மனப்பான்மையிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகவாவது நாம் நூற்க வேண்டும். ஆகையால், அரசனுக்கும் சரி, ஆண்டிக்கும் சரி, நூற்பது ஒரு கடமையாகும்.

## அறியாப் பருவத்தினருக்கு

மேலே குறிப்பிட்ட காரணங்களெல்லாம் ஆண்கள், பெண்கள் ஆகிய இரு பாலாருக்கும் பொருந்தும். ஆனால், நீங்கள் ஏன் நூற்க வேண்டும் என்பதற்கு மேற்கொண்டு சில காரணங்களும் இருக்கின்றன. அவற்றை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்:

1. சிறு பிராயத்திலிருந்தே ஏழைகளின் நலன்களுக்காக நீங்கள் பாடுபடுவது எவ்வளவு நன்றாயிருக்கும்! நூற்பது உங்களுடைய பரோபகார உணர்ச்சியை சரியான வழியில் வளர்க்கும்.

2. ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் நூற்பது என்று நீங்கள் வைத்துக் கொண்டால், எந்தக் காரியத்தையும் ஒழுங்காகச் செய்யும் பழக்கம் ஏற்படும். ஏனெனில், நூற்பதில் நீங்கள் ஒழுங்காக இருந்தால், மற்ற விஷயங்களிலும் ஒழுங்காக இருக்க முயற்சி செய்வீர்கள். ஒழுங்கான பழக்க வழக்கங்கள் உள்ள ஒரு பையன், ஒழுங்கில்லாமல் இருக்கும் பையனை விட இரு மடங்கு அதிக வேலை செய்கிறான் என்பது உலகம் பூராவிலுமே உள்ள அனுபவமாகும்.

3. எதையும் சீராகவும், ஒழுங்காகவும் வைத்துக் கொள்ளும் பழக்கமும் அதனால் ஏற்படும். அப்படி இல்லையென்றால், நல்ல நூல் நூற்கவே முடியாது. உங்களுடைய பஞ்சு பட்டைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்; கைகளும் சுத்தமாக வியர்வை இல்லாமல் இருக்க வேண்டும்; உங்களைச் சுற்றியுள்ள இடம் தூசி இல்லாமல் இருக்கிறதா என்றும் பார்த்துக் கொள்ள வேண்டும்; நூற்று முடிந்த பிறகு அதை ஒழுங்காக வீசாணத்தில் சுற்றி, பிறகு அதைச் சிட்டமாக்க வேண்டும்.

4. ஒரு சாதாரண யந்திரத்தை எப்படிச் செப்பனிடுவது என்பதை நீங்கள் கற்றுக் கொள்ள முடியும். சாதாரணமாக, இந்தியாவிலுள்ள சிறுவர் சிறுமிகளுக்கு இத்தகைய பயிற்சி கொடுக்கப்படுவதில்லை. நீங்கள் சோம்பேறித்தனத்தினால் ராட்டினத்தைச் சுத்தம் செய்யும் வேலையை வேலைக்காரனிடமோ, அல்லது வயது வந்த ஓர் உறவினரிடமோ கொடுத்துவிட்டால், அந்தப் பயிற்சி உங்களுக்குக் கிடைக்காமற் போய்விடும். ஆனால், தன்னுடைய நூலை அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு அனுப்பும் அல்லது அனுப்பப் போகும் ஒவ்வொரு குழந்தைக்கும் தன்னுடைய ராட்டினத்தில் ஆசை இருக்கும் என்ற நம்பிக்கையில் நான் பேசுகிறேன். மேலும், அக்கறையுடன் நூற்கும் ஒரு பையன், தன்னுடைய ராட்டினத்திலுள்ள பல்வேறு உறுப்புகளையும் பற்றிய விவரங்களை நன்கு தெரிந்து கொண்டு விடுவான். ஒரு தச்சன் தன்னுடைய கருவிகளைத் தானே சுத்தம் செய்கிறான். தன்னுடைய மாலைக் கயிற்றையும், மெழுகையும் தானே

தயாரித்துக் கொள்ள முடியாத ஒரு பையனை நூற்பவன் என்று சொல்லுவதற்கில்லை; நூற்பவனுக்கு நேர் மாறானவன் அவன்.

—'எங் இந்தியா'—20—5—1926

# 17
# "மகாத்மாஜியின் கட்டளை"

ஓர் ஆசிரியர் பின்வருமாறு எழுதுகிறார் :

".........இல் உள்ள எங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்கும் சில மாணவர்கள் சில மாதங்களாகத் தாங்கள் நூற்கும் 1000 கஜம் நூலை ஒழுங்காக அகில இந்திய நூற்போர் சங்கத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். உங்களிடம் உள்ள ஆழ்ந்த அன்பினால்தான் அவர்கள் இந்தச் சிறிய சேவையைச் செய்து கொண்டு வந்திருக்கிறார்கள். 'எதற்காக நூற்கிறீர்கள்' என்று யாராவது கேட்டால், 'அது மகாத்மாஜியின் கட்டளை. அதற்குக் கீழ்ப்படிந்தாக வேண்டும்' என்று அவர்கள் பதில் சொல்லுகிறார்கள். சிறு பிள்ளைகளிடம் இத்தகைய மனப்பான்மை வளருவதை எல்லா வழிகளிலும் ஊக்கிவிட வேண்டும் என்றே நான் நினைக்கிறேன். அடிமை மனப்பான்மை வேறு; ஒருவரை லட்சிய புருஷனாகக் கொண்டு போற்றுவது அல்லது கண்ணை மூடிக் கொண்டு கீழ்ப்படிவது வேறு. தங்களுக்கு உற்சாகமளிப்பதற்காக, உங்கள் கைப்பட அவர்களுக்கு ஏதாவது ஒரு செய்தி எழுதியனுப்ப வேண்டும் என்று அந்த மாணவர்கள் மிகவும் ஆசைப்படுகிறார்கள். அவர்களுடைய ஆசையை நிறைவேற்றுவீர்கள் என்றே நம்புகிறேன்."

இந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பக்தி, ஒருவரை லட்சிய புருஷராகக் கொண்டு போற்றும் தன்மை வாய்ந்ததா அல்லது கண்மூடித்தனமான பக்தியா என்று எனக்குத் தெரியாது. காரண காரியங்களை அலசிப் பார்ப்பதற்குக் காத்துக் கொண்டிராமல், மறுபேச்சில்லாமல் கீழ்ப்படிவதற்கான அவசியம் ஏற்படலாம் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இது ஒரு போர் வீரனின் முக்கியமான குணங்களில் ஒன்று. ஏராளமான மக்களிடம் அத்தகைய குணம் இல்லாமல் எந்த நாடும் நன்கு முன்னேற முடியாது. ஆனால், நல்ல முறையில் சீராக அமைக்கப்பட்ட எந்த சமுதாயத்திலும் அத்தகைய சந்தர்ப்பங்கள் அரிதாகத்தான் இருக்கும், அரிதாகத்தான் இருக்க வேண்டும். ஒரு பள்ளிக்கூடத்தில் உள்ள மாணவர்கள், ஆசிரியர்கள் என்ன சொன்னாலும் கண்ணை மூடிக்கொண்டு அதற்குக் கீழ்ப்படிய வேண்டும் என்றிருப்பதுதான் அவர்களுக்கு ஏற்படக் கூடிய மிகவும் மோசமான அனுபவம். அதற்கு மாறாக, தங்கள் பொறுப்பிலுள்ள சிறுவர், சிறுமிகளுடைய சீர்தூக்கிப் பார்க்கும் சக்திக்கு ஆசிரியர்கள் ஊக்கமளித்தால், அவர்கள் தொடர்ந்து அதைப் பிரயோகித்து, தாங்களே சிந்தனை செய்து பார்க்க ஆரம்பிப்பார்கள். காரண காரிய அறிவு எங்கு முடிவடைகிறதோ அங்கு

நம்பிக்கை ஆரம்பமாகிறது. ஆனால், உலகில் நியாயமான காரணங்கள் காட்ட முடியாத செய்கைகள் வெகு சிலவேதான் உண்டு. ஒரு இடத்திலுள்ள கிணற்று ஜலம் சுத்தமாக இல்லை என்பதற்காக, மாணவர்கள் கொதிக்கவைத்து வடிகட்டிய ஜலத்தைச் சாப்பிட வேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவர்கள் அந்த ஜலத்தைச் சாப்பிடுகிறார்கள். 'ஏன் அப்படிச் சாப்பிட்டீர்கள்' என்று ஆசிரியர் கேட்கிறார். 'அது ஒரு மகாத்மாவின் உத்தரவு' என்று மாணவர்கள் பதில் அளித்தால், ஆசிரியர் அதை அனுமதிக்க மாட்டார். இந்த விஷயத்தில் மாணவர்கள் அளித்த பதில் தவறானதுதான் என்பதை ஒப்புக் கொண்டால், நூற்றும் விஷயத்திலும் அவர்களுடைய நிலை தவறுதான். எனக்குத் தெரிந்து பல வீடுகளில் என்னை மகாத்மா பீடத்திலிருந்து இறக்கிவிட்டார்கள். (தங்களுடைய அன்பு மாறி விட்டது என்பதை என்னுடைய நிருபர்களில் சிலர் மனமுவந்து எனக்குத் தெரிவித்திருக்கிறார்கள்). அதே மாதிரி அந்தப் பள்ளிக்கூடத்திலும் என்னுடைய மகாத்மா பதவி போனவுடன், கைராட்டினமும் அழிக்கப்பட்டுவிடும் என்றே அஞ்சுகிறேன். மனிதனை விட ஒரு லட்சியம் முக்கியமானதல்லவா? கைராட்டினம் என்னைவிட அதிக முக்கியமானது என்பது நிச்சயம். நான் செய்யக் கூடிய ஏதாவது ஒரு தவறுக்காக அல்லது ஏதோ ஒரு காரணத்தினால் மக்கள் என்மீது ஆத்திரமடைகிறார்கள் என்பதனால், என்னை லட்சிய புருஷனாகக் கொண்டாடுவது அழிந்து விட்டால் கூட நான் வருந்த மாட்டேன். ஆனால், நல்ல லட்சியமான கைராட்டினம் பாதிக்கப்பட்டுவிட்டால், மிகவும் வருத்தமடைவேன். ஆகையால், பகுத்தறிவைக் கொண்டு அலசிப் பார்க்கக் கூடிய எல்லா விஷயங்களையும் மக்கள் அலசிப் பார்ப்பதுதான் மிகச் சிறந்ததாகும். கைராட்டினம் என்பது அப்படி அலசிப் பார்க்க வேண்டிய விஷயங்களில் ஒன்றாகும். அத்துடன், இந்தியாவிலுள்ள மக்கள் எல்லோருடைய நலனும் அதில் கலந்திருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயமாகும். ஆகையால், பாமர மக்கள் எவ்வளவு ஆழ்ந்த வறுமையில் இருக்கிறார்கள் என்பதைப் பற்றி மாணவர்கள் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும். சீரழிந்து வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கும் சில கிராமங்களை அவர்கள் நேரில் பார்க்க வேண்டும். இந்தியாவிலுள்ள மக்களை அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தப் பரந்த தீபகற்பத்தையும், அதனுடைய சொற்பமான வசதிகளைப் பெருக்குவதற்கு அதிலுள்ள லட்சக்கணக்கான மக்கள் என்ன செய்யலாம் என்பதையும்அவர்கள் அறியவேண்டும். நாட்டிலுள்ள ஏழைகளும், ஒடுக்கப்பட்டோரும், தாங்களும் ஒன்றே என்று கருத அவர்கள் கற்றுக் கொள்ளவேண்டும். மிகுந்த ஏழைகளாக இருப்பவர்களுக்குக் கிடைக்க முடியாததைத் தாங்களும் அனுபவிப்பதில்லை என்று தியாகம் செய்வதற்கு அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். அப்பொழுது அவர்கள் நூற்பதன் பெருமையைத் தெரிந்து கொள்ளுவார்கள். அந்த நிலைமையில், என்னைப் பற்றிய

மாயை தெளிவது உட்பட எந்த விதமான அதிர்ச்சி ஏற்பட்டாலும், கைராட்டினம் அதைத் தாங்கிக் கொள்ளும். கைராட்டினம் என்பது மிகவும் பெரியதும், நல்லதுமான ஒரு லட்சியம். ஒருவரை லட்சிய புருஷனாகக் கொண்டாடுவதைப் பொறுத்து அதன் ஆயுள் இருக்கக் கூடாது. விஞ்ஞான, பொருளாதார ரீதியிலும் அது நிலைத்து நிற்க வேண்டும்.

இந்த நிருபர் கூறியிருப்பது போல், ஒருவரைத் தூக்கி வைத்துக் கொண்டாடும் வழக்கம் நம்மிடையே பெரும் அளவில் இருக்கிறது என்பதை நான் அறிவேன். தேசீயப் பள்ளிகளின் ஆசிரியர்கள் நான் விடுத்துள்ள எச்சரிக்கையைக் கவனித்து பெரிய மனிதர்கள் என்று புகழ் பெற்றவர்கள் கூறும் அபிப்பிராயங்களைச் சோதனை செய்து பார்க்காமல், மாணவர்கள் சோம்பேறித்தனமாக அவற்றை ஏற்றுக் கொண்டு காரியங்கள் செய்வதைத் தடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

—'எங் இந்தியா'—24—6—1925

# 18

# கதர் என்பது என்ன?

பொருளாதார ரீதியில் கதர் ஏற்றுக் கொள்ளக் கூடியது தான் என்றால், அது பரபரப்பளிக்கும் ஒரு அனுபவமும் ஆகும் என்று நான் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். 'பருத்தியின் அதிசய வரலாறு' என்று ஒரு புத்தகம் இருக்கிறதென்று நினைக்கிறேன். அதில் பருத்தி எப்படித் தோன்றியது என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. பருத்தியினால் நாகரிகத்தின் போக்கு எப்படி மாறியது என்பதை விளக்கவும் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. எல்லாவற்றையுமே, அவற்றை அணுகுவோருக்கு அத்தகைய உணர்ச்சி இருக்குமாயின், ஒரு விஞ்ஞான ரீதியான கலையாகவோ, அதிசய அனுபவமாகவோ மாற்றிவிட முடியும். சிலர் கதரைப் பற்றி கேலி செய்கிறார்கள்; கைராட்டினத்தில் நூற்பதைப் பற்றிப் பேசினால் அலுத்துக் கொள்ளுகிறார்கள் அல்லது வெறுப்படைகிறார்கள். இந்தியா பூராவிலும் உள்ள சோம்பேறித்தனம், வேலையில்லாமை, அதன் பலனாக ஏற்படும் பரம ஏழ்மை ஆகியவற்றை ஒழிக்கும் சக்தி அதற்கு இருக்கிறது என்பதை நினைத்துப் பார்த்தால் கேலிக்கோ, வெறுப்புக்கோ அதில் இடமிராது. உண்மையில், மேலே குறிப்பிட்ட மூன்று தொல்லைகளுக்கும் அது பரிகாரமாக இருக்க வேண்டும் என்பதுகூட இல்லை. அது மிகவும் ஆர்வத்தைக் கொடுப்பதற்கு, மேலே குறிப்பிட்ட சக்தி அதற்கு இருக்கிறது என்று நினைத்துக்கொண்டாலே போதும்! ஆனால், ஒன்றும் விஷயமறியாத ஒரு தொழிலாளி, தன் சாப்பாட்டுக்கு சம்பாதிக்க வேண்டுமே என்பதற்காகப் பருத்தியைக் கொட்டை அடித்து நெய்வதுபோல் நீங்களும் செய்வதாக இருந்

தால், கதருக்கு அத்தகைய சக்தி இருப்பதாக நினைக்கமுடியாது. அதனுடைய சக்தியில் நம்பிக்கை உள்ளவர் ஒழுங்காகவும், புத்தி சாலித்தனமாகவும், விஷய உணர்வுடனும் அலுவல்களைச் செய்ய வேண்டும். எதையும் அப்படியே ஏற்றுக் கொண்டுவிடக் கூடாது. ஒவ்வொன்றையும் சோதனை செய்து பார்க்க வேண்டும். புள்ளி விவரங்கள் சரியாக இருக்கின்றனவா என்று ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். தோல்விகளால் சோர்வடையாமலும், சில்லறை வெற்றிகளால் மகிழ்ந்துவிடாமலும், இறுதி வெற்றி பெறும்வரை யில் திருப்தியடையாமலும் வேலை செய்து கொண்டிருக்க வேண்டும். காலஞ்சென்ற மகன்லால் காந்திக்குக் கதரின் சக்தியில் எல்லையற்ற நம்பிக்கை இருந்தது. கதர் என்பது, அவருக்குப் பரபரப்பளிக்கும் ஒரு அற்புத அனுபவமாக இருந்தது. அவர் எந்தச் சிறிய விவரத்தையும் அற்பமாக நினைக்கமாட்டார்;எந்தப் பெரிய திட்டத்தையும் கண்டு மலைக்கமாட்டார். ரிச்சர்ட் கிரெக்குக்கும் அதுபோன்ற உத்வேகம் இருந்தது, இன்னமும் இருக்கிறது. அவர் அதற்கு, எல்லாருக்கும் உகந்த ஒரு வியாக்கியானம் கொடுத்திருக்கிறார். "இந்தியப் பொருளாதார அபிவிருத்தி பற்றிய சித்தாந்தம்"* என்ற அவரது நூல் இயக்கத்திற்கு மிகவும் உதவியாக இருக்கக்கூடிய ஒன்றாகும். கைராட்டினத்தை அகிம்சையின் மிக உயர்ந்த சின்னமாக அவர் ஒப்புக்கொள்ளுகிறார். அவர்களுடைய நம்பிக்கை, எந்த ஒரு கவர்ச்சிகரமான திட்டத்தினாலும் ஒருவருக்குக் கிடைக்கக் கூடிய மகிழ்ச்சியை மகன்லால் காந்திக்கு அளித்தது; ரிச்சர்ட் கிரெக்குக்கும் அளித்துக் கொண்டிருக்கிறது. ஒரு கலை உண்மையான கலையாக இருக்க வேண்டுமானால் உடல், மனம், உள்ளம் மூன்றின் பசியையும் அது தணிப்பதாக இருக்க வேண்டும். கதர் அது போன்ற திருப்தியை எப்படி அளிக்க முடியும் என்று, அதில் நம்பிக்கையில்லாதவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். கதர் ஊழியர் ஒருவர் தன்னைப் பரிசோதனை செய்யும்படி என்னிடம் வந்தார். அவருக்காகச் சில கேள்விகளையே அவசரமாக நான் தயாரித்தேன். அந்தக் கேள்விகளையே இங்கு திருப்பிக் கொடுப்பதைவிட சிறந்த பதில் இருக்க முடியாது. கேள்விகள் ஒன்றை யடுத்து மற்றொன்றாக வரிசைக் கிரமப்படி தயாரிக்கப்பட வில்லை; எல்லா அம்சங்களும் அக் கேள்விகளில் இருக்கின்றன என்றும் சொல்ல முடியாது. ஆயினும், நான் ஹிந்தியில் எழுதிய அக் கேள்விகளை ஒரு நண்பர் மொழி பெயர்த்துக் கொடுத்திருக்கிறார். அதைக் கீழே தருகிறேன்:

## முதல் பாகம்

1. இந்தியாவில் எவ்வளவு பருத்தி, எங்கு உற்பத்தி செய்யப்படுகிறது? என்னென்ன ரகங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன? ஏற்றுமதி போக இந்தியாவில் எவ்வளவு மீதம் இருக்கிறது? கையினால் நூற்பதற்கு எவ்வளவு பருத்தி உபயோகிக்-

---

* ஆமதாபாத் நவஜீவன் டிரஸ்டினால் பிரசுரிக்கப்பட்டது.

கப்படுகிறது? இங்கிலாந்துக்கும், மற்ற நாடுகளுக்கும் எவ்வளவு போகிறது?

2. (அ) இந்தியப் பஞ்சாலைகளில் எவ்வளவு துணி உற்பத்தி செய்யப்படுகிறது? அதில், இந்தியாவில் எவ்வளவு உபயோகிக்கப்படுகிறது, எவ்வளவு ஏற்றுமதி செய்யப்படுகிறது?

(ஆ) மேலே குறிப்பிட்ட உற்பத்தியில், சுதேசி மில் நூலினால் உற்பத்தி செய்யப்படுவது எவ்வளவு? அந்நிய மில் நூலினால் உற்பத்தி செய்யப்படுவது எவ்வளவு?

(இ) எவ்வளவு துணி இறக்குமதி செய்யப்படுகிறது?

(ஈ) இந்தியாவில் எவ்வளவு கதர் உற்பத்தி செய்யப்படுகிறது?

**குறிப்பு:** பதில்கள் சதுர கஜங்கள், ரூபாய்களில் இருக்க வேண்டும்.

3. மேலே குறிப்பிட்ட மூன்று ரகமான துணிகளின் சாதக, பாதகங்களைப் பற்றிக் கூறுக.

4. கதர் விலை அதிகமாக இருக்கிறதென்றும், கரடுமுரடாக இருக்கிறதென்றும், நீடித்து உழைப்பதில்லை யென்றும் சிலர் கூறுகிறார்கள். இந்தப் புகார்களுக்கு பதில் அளியுங்கள். எந்தப் புகாருக்காவது ஆதாரமிருந்தால், அதற்கு உங்களுடைய பரிகாரம் என்ன?

5. அகில இந்திய சர்க்கா சங்கத்தின் கதர் வேலையில் எவ்வளவு நூற்பாளர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்? இத்தனை வருடங்களாக அவர்கள் எவ்வளவு சம்பாதித்திருக்கிறார்கள்? மில்களில் எத்தனை பேர் வேலை செய்கிறார்கள்? அவர்களுடைய வருடாந்திர சம்பாத்தியம் எவ்வளவு?

6. (அ) அகில இந்திய நூற்போர் சங்கத்தின் நிர்வாகம் எப்படி நடக்கிறது? நிர்வாகத்திற்காக அவர்கள் எவ்வளவு செலவிடுகிறார்கள்?

(ஆ) ஒரு சுதேசி மில்லை நடத்துவதற்கு எத்தனை சிப்பந்திகள் அமர்த்தப்படுகிறார்கள்? மில்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் போது, சிப்பந்திகள் பெறும் சம்பளத்தின் விகிதாசாரம் என்ன?

7. (அ) வாழ்க்கையின் அவசியப் பொருள்களில் ஆடையின் ஸ்தானம் என்ன என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

(ஆ) வாழ்க்கையின் முக்கியமான தேவைப் பொருள்கள் என்ன? அவற்றின் விகிதாசாரம் என்ன?

8. இந்தியாவில் உள்ள ஒவ்வொருவரும் மில் துணி அணிவதை நிறுத்திவிட்டால்—இந்திய மில்லாயிருந்தாலும், அந்நிய மில்லாயிருந்தாலும்-இந்தியாவில் எவ்வளவு பணம் மிச்சப்படும்? அந்தப் பணம் யாருக்குப் போகும்?

9. இந்தியா இறக்குமதி செய்யும் துணிக்கு பதிலாக என்ன பொருள்களை ஏற்றுமதி செய்கிறது? இந்தப் பரிவர்த்தனையினால் இந்தியாவுக்கு நஷ்டம் ஏற்படுகிறதா? எவ்வளவு நஷ்டம்?

10. ஜனத்தொகையில் எவ்வளவு விகிதாசாரத்தினருக்கு துணி வாங்கும் சக்தி இருக்கிறது?

11. தங்களுடைய துணியைத் தாங்களே உற்பத்தி செய்து கொள்ளுவதற்கு வேண்டிய ஓய்வு நேரம் உள்ளவர்களின் விகிதாசாரம் என்ன? எப்படி?

12. "கதரின் மூலம் ஏற்றத் தாழ்வில்லாத சீரான நிலை ஏற்படும்." இப்படிக் கூறினால் அது உண்மையில் சரிதானா? உங்களுடைய பதிலுக்குக் காரணங்கள் கூறுக.

13. எல்லோரும் கதர் அணிய ஆரம்பித்தால் வர்த்தகம், தொழில், போக்குவரத்து முதலிய துறைகளில் ஏற்படக்கூடிய விளைவு என்ன? எம்மாதிரியான விளைவுகள்?

14. இன்னும் ஐம்பது வருடங்களுக்கு கதர் எல்லோராலும் அணியப்படும் துணி என்ற ஸ்தானத்தைப் பெறவில்லை யென்று வைத்துக்கொள்ளுவோம். அதனால் நமது மக்களின் பொருளாதார நிலைமை எப்படி பாதிக்கப்படலாம்?

## இரண்டாவது பாகம்

1. இப்போது இந்தியாவிலுள்ள கைராட்டினங்களைப் பற்றிய விவரங்களைக் கூறுக. அவற்றில் சிறந்தது எது? ஏதாவது நாலு கைராட்டினங்களை வரைந்து காட்டுக. அவற்றிலுள்ள ஒவ்வொரு உறுப்பின் சரியான அளவுகளையும் கொடுக்கவும். எந்த மரத்தில் ராட்டினம் செய்யப்பட்டிருக்கிறது? கதிரின் நீளம், சுற்றளவு என்ன? மாலைக்கயிற்றின் கனம் என்ன?

2. நூற்கும் வேகம், விலை, பொது அனுகூலம் ஆகியவை சம்பந்தமாக இப்போதுள்ள ராட்டினங்களை எராவ்டா சர்க்காவுடன் ஒப்பிட்டுக் கூறுக.

3. பஞ்சின் ரகம், நூலின் முறுக்கு, நூலின் நம்பர் ஆகியவற்றை எப்படிக் கண்டு பிடிப்பீர்கள்?

4. நீங்கள் நூற்கும் நூலின் நம்பர், முறுக்கு என்ன? தக்ளி, ராட்டினம் இரண்டிலும் உங்களுடைய நூற்கும் வேகம் என்ன? சாதாரணமாக, நீங்கள் எந்த ராட்டினத்தில் நூற்கிறீர்கள்?

5. ஒரு ஆணுக்கும், பெண்ணுக்கும் தலா எவ்வளவு துணி தேவைப்படும்? அதற்கு எவ்வளவு நூல் வேண்டும்? அதை நூற்பதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும்?

6. ஒரு குடும்பத்திற்குத் தேவையான ஆடைகளுக்கு எவ்வளவு நூல் வேண்டும்? அதற்கு எவ்வளவு பருத்தி வேண்டும்? அந்தப் பருத்தியை உற்பத்தி செய்வதற்கு எவ்வளவு நிலம் தேவைப்படும்?

(ஒரு குடும்பம் என்பது தாயார், தகப்பனார், மூன்று குழந்தைகள்-ஒரு பெண், இரண்டு பிள்ளைகள். வயது 7, 5, 3)

7. இப்போதுள்ள பஞ்சடிக்கும் வில்லுக்கும், புதிய வில்லுக்கும் உள்ள வேற்றுமையைக் கூறுக. பஞ்சு சரியாகப் பட்டை போடப்பட்டிருக்கிறதா, இல்லையா என்பதை எப்படிக் கண்டு பிடிப்பது? ஒரு ராத்தல் பட்டை போடுவதற்கு உங்களுக்கு எவ்வளவு நேரம் பிடிக்கிறது? ஒரு தோலா பஞ்சில் நீங்கள் எவ்வளவு பட்டை போடுகிறீர்கள்?

8. ஒருமணி நேரத்தில் நீங்கள் எவ்வளவு பஞ்சு கொட்டை எடுக்க முடியும்? கையினால் கொட்டை எடுப்பதற்கும், யந்திரத்தினால் எடுப்பதற்கும் உள்ள வித்தியாசம் என்ன? இரண்டின் சாதக, பாதகங்களையும் கூறுக. இப்போதுள்ள கொட்டையடிக்கும் யந்திரத்தை வரைந்து காட்டுக.

9. 36" அகலமுள்ள ஒரு கஜம் துணி நெய்வதற்கு 20-ஆம் நம்பர் நூல் எவ்வளவு வேண்டும்?

—'ஹரிஜன்'-16—1—1937

# 19

# ஒரு பள்ளிக்கூடத்தில் கதர் வேலை

காலஞ் சென்ற ரேவாசங்கர் ஜகஜீவன் ஜாவேரியின் பெருமுயற்சியினாலும், ஸ்ரீ ஜம்னாதாஸ் காந்தி அளித்த உதவியினாலும் பதினாறு வருஷங்களுக்கு முன்பு ராஜ்கோட்டில் ஒரு தேசீயப் பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்பட்டது. அதனுடைய 16-ஆவது ஆண்டு விழா சென்ற மாதம் ஸ்ரீ நரஹரி பரீக்கின் தலைமையில் கொண்டாடப்பட்டது. வினய மந்திரம், குமார மந்திரம், பால மந்திரம் என்று இப்பள்ளிக்கூடம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இப்பள்ளியில் 110 சிறுவர்களும், 80 சிறுமிகளுமாக 190 குழந்தைகள் படிக்கிறார்கள். ஸ்ரீ நாராயணதாஸ் காந்தியின் அறிக்கையிலிருந்து அந்தப் பள்ளிக்கூடத்தைப் பற்றிய முக்கியமான பகுதிகள் கீழே தரப்படுகின்றன:

"கோடிக் கணக்கான நமது மக்களுக்கு ஜீவனோபாயத்திற்கு உதவி செய்யக்கூடிய ஒரு கைத்தொழில் கதர்தான். பள்ளிக் கூடத்தில் பையன்களுக்கு இதை ஒரு முக்கிய பயிற்சியாக அளிப் பது, நம் நாட்டிலுள்ள கோடிக் கணக்கான ஏழைகளைப் பற்றிப் பையன்கள் நினைத்துப் பார்ப்பதற்கு ஒரு தூண்டுதலாக இருக் கும். பின்னர் அவர்களுடைய நலனில் பையன்கள் அக் கறை காட்டுவதற்கும் உதவியாக இருக்கும். இதுவே மதிப்பு வாய்ந்த சிறந்த கல்வியாக இருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

"இந்த வேலையில் பிள்ளைகள் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். கோடை விடுமுறையின் போது ஒரு பையன் நாற்பது சதுர கெஜம் கதர்த் துணிக்குப் போதுமான அளவு நூல் நூற்றான். அதே பையன் சர்க்கா துவாதசி* தினத் தன்று 67 சதுர கெஜம் கதர்த் துணிக்குப்போதுமான நூல் நூற்றான். ஒரு வருடத்தில் இந்தப் பையன் 150 சதுர கெஜம் துணிக்குப் போதுமான நூலை நூற்றிருக்கிறான். இது பிரமாதமான சாதனை என்றே நிச்சயம் கருதப்படும். மற்றப் பையன்கள் அவ்வ ளவு அதிகமாக நூற்கவில்லை. ஆயினும், மொத்தத்தில் இதுவரை அவர்களின் சாதனை திருப்திகரமாகவே இருக்கிறது.

"கதரைத் தவிர வேறு நடவடிக்கைகளும் பள்ளியில் இருக் கின்றன:

**தையல் வகுப்பு:** முக்கியமாக பள்ளியில் வாசிக்கும் மாணவர் களுக்கென்றே இது நடத்தப்பட்டாலும், வெளியார்களும் அனு மதிக்கப்படுகிறார்கள். ஏற்கனவே இரண்டு மாணவர்கள் இந்தப் பயிற்சியை முடித்துக் கொண்டு தையலைத் தொழிலாக மேற் கொண்டுவிட்டார்கள். ஆசிரியர்களில் ஒருவர் இதில் விசேஷப் பயிற்சி பெற்றிருக்கிறார்.

**நெய்தல் பகுதி:** நெய்யக் கற்றுக் கொடுப்பதற்காக தறியா ளர் குடும்பம் ஒன்று பள்ளிக்கூடத்தில் குடியமர்த்தப்பட்டு இருக் கிறது. சென்ற இரண்டரை வருடங்களில் 2,600 சதுர கெஜம் கதர்த் துணி நெய்யப்பட்டிருக்கிறது.

**விவசாயம்:** பள்ளிக்கூட நிலத்தில் பருத்தி பயிரிடப்பட்டது. பையன்களே அதைப் பறித்து உபயோகப்படுத்திக் கொண்டார் கள். பள்ளிக்கூடத்தில் 13 ஹரிஜன் பையன்கள் படிக்கிறார்கள். அவர்களைத் தவிர நகர சபையில் வேலை செய்யும் 5 ஹரிஜன்கள் காலையில் தங்களுடைய நகர சபை வேலையை முடித்தபிறகு, நடுப் பகலில் பள்ளிக்கூடத்திற்கு வந்து 6 மணி நேரம் நூற்கிறார்கள். இதனால் அவர்களுக்கு அதிகப்படி வருமானம் கிடைக்கிறது. மட்ட ரகமான பஞ்சிலிருந்து அவர்கள் 12-ஆம் நம்பர் நூல் நூற்க ஆரம்

* மகாத்மா காந்தி ஜெயந்தி கொண்டாடப்படும் தினம், ஹிந்து பஞ்சாங்கத்தின் படி துவாதசியே ஆகும்.

பித்து விட்டார்கள். கதர் வேலையில் இது ஒரு நல்ல பரிசோதனை யாகவே கருதப்படும். பள்ளிக்கூடத்தில் உள்ள ஹரிஜனங்களுக் காக ஒரு தானியக் கடையையும் ஆரம்பித்திருக்கிறோம்.

**கிராம உற்பத்திப் பொருட்கள் கடை:** கையினால் அரைக்கப் பட்ட மாவு, கைக்குத்தல் அரிசி, பருப்பு வகைகள், சுத்தமான செக் கில் ஆட்டிய எண்ணெ போன்ற சத்துள்ள உணவுப் பொருள்களை விற்பனை செய்வதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறோம். நல்ல எண்ணெ ஆட்டுவதற்காக, பள்ளிக்கூடத்தில் இரண்டு செக்குகள் போட்டிருக்கிறோம்.

**பால் பண்ணை:-** எங்களுடைய ஜெயந்தி பால் பண்ணையை, சமீபத்தில் எங்கள் பள்ளிக்கூடக் கட்டிடத்திற்கே மாற்றிவிட் டோம். அகில இந்திய பசுக்கள் பாதுகாப்பு சங்கத்தின் கொள் கைக்கு இணங்க அதை நடத்துவதற்கு முயற்சிகள் செய்யப் படும்.''

பையன்களுக்கு கதரில் அக்கறை உண்டாகும்படி செய்வ தில் இந்தப் பள்ளிக்கூடம் வெற்றி பெற்றிருப்பது மகிழ்ச்சிக் குரியதாகும். அங்கேயே பருத்தி பயிரிடபபடுகிறது; பால் பண்ணை நடத்தப்படுகிறது; சீரான உணவுக்கான பொருள்கள் விற்பனை செய்வதற்கும் ஏற்பாடு செய்யப்படுகிறது என்பவையெல்லாம் முக்கியமான விஷயங்களேயாகும். இந்த நடவடிக்கைகள் சரி யான முறையில் அபிவிருத்தி செய்யப்பட்டு அவற்றின் தன்மை யும் பையன்களுக்கும் பூராவாக விளக்கிக் கூறப்பட்டால், மாணவர்களின் அறிவு உண்மையிலேயே வளர்ச்சி பெறும். வாழ்க் கைக்கு உதவாத விஷயங்களை பலவந்தமாகப் பையன்கள் மீது திணிப்பது, அவர்களுடைய அறிவை வளர்க்கிறது என்று நினைப் பது வெறும் பிரமையே ஆகும். அது தேவையில்லாத விஷயத்தில் வீணாக அறிவைச் செலுத்துவதாக இருக்குமேயொழிய, அறிவு வளர்ச்சியாகாது. ஏனெனில் அது, பாகுபாடு செய்து பார்க்கும் சக்தியை உபயோகிப்பதற்கு, பையன்களுக்கு வாய்ப்பை அளிக் காது. ஆனால், ஒரு பையனோ அல்லது பெண்ணோ ஏதாவது உட லுழைப்பு செய்ய வேண்டியிருக்கும் போது, அதை யந்திரம் போலல்லாமல், விஞ்ஞான ரீதியில் கற்றுக் கொடுத்தால், அவர் களுடைய அறிவு தானாகவே வளர்ச்சி பெறுகிறது; குழந்தை தன் னுடைய சக்திகளைப் பற்றிய உணர்வு பெறச் செய்கிறது; அவன் சுய மதிப்பையும் கற்றுக் கொள்ளுகிறான்; தன்னம்பிக்கையையும் பெறுகிறான்.

—'ஹரிஜன பந்து'-21—4—1937

# 20

# ஒரு மந்திரியின் கனவு

"எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் நூற்பது, நெய்வது இரண்டையும் கட்டாயமாக்கவேண்டுமென்று மாகாண சர்க்காருக்கும், மக்களுக்கும் நீங்கள் ஒரு செய்தி அல்லது கட்டளை அனுப்ப முடிந்தால், சிறிது காலத்திற்குள்ளாகவே, பள்ளிகளில் படிக்கும் குழந்தைகள் தாங்களே உற்பத்தி செய்த துணிகளை அணிந்துகொள்ளுவார்கள் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. இது முதற்படியாக இருக்கும். உங்களுடைய லட்சியங்களில் நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. உங்களுடைய கிராமக் கைத்தொழில்கள், கல்வித் திட்டங்களின் கீழ் ஒவ்வொரு குடும்பமும் தனக்கு வேண்டிய துணியைத் தானே உற்பத்தி செய்துகொள்ளும் என்றும், ஒவ்வொரு கிராமமும் துணி விஷயத்தில் மட்டுமில்லாமல் ஒவ்வொரு அவசியப் பொருளின் விஷயத்திலும் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளும் என்றும் நம்புகிறேன் கிராமவாசியின் வரவு, செலவு, மாகாண சர்க்கார் அல்லது இந்திய சர்க்காரின் வரவு செலவுடன் சரிக்கட்டிக் கொள்ளும்படியான நிலைமை வரும். அப்போதுதான் இந்த நாட்டில் உண்மையான சுயராஜ்யத்தை ஏற்படுத்த முடியும் என்று உங்களைப் போலவே நானும் கருதுகிறேன். இந்த வரவு செலவுகள் பொதுவாக இப்போது கணக்குகளில் செயற்கையான முறைகளைக் கைக்கொண்டும் தில்லுமல்லுகள் செய்துமே சரிக்கட்டப்படுகின்றன."

காங்கிரஸ் மந்திரி ஒருவர் இவ்வாறு எழுதியிருக்கிறார். ஒரு ஏதேச்சாதிகாரியின் அதிகாரங்கள் எனக்கு இருந்தால், ஆரம்பப் பள்ளிகளாவது ராட்டினத்தில் நூற்பதை நிச்சயமாகக் கட்டாயமாக்கியிருப்பேன். நம்பிக்கை உள்ள ஒரு மந்திரியும் அப்படித்தான் செய்ய வேண்டும். நமது பள்ளிகளில் பலனற்ற பல விஷயங்கள் கட்டாய பாடங்களாக வைக்கப்படுகின்றன. மிகவும் உபயோகமான இந்தக் கலையை ஏன் கட்டாயமானதாக்கக் கூடாது? ஆனால், பரவலான பொதுஜன சம்பந்தம் பெற்றிருந்தால் ஒழிய, ஒரு ஜனநாயக அமைப்பில் எதையும் கட்டாயமானதாக்க முடியாது. ஆகையால், ஜனநாயகத்தில் கட்டாயம் என்பது பெயருக்குத்தான். அது சோம்பலை அகற்றுகிறது; ஆனால், மனத்தைத் திருப்பவில்லை. அத்தகைய கட்டாயம் கல்வி புகட்டும் தன்மை வாய்ந்தது. பூர்வாங்கமாக இன்னும் சற்று லேசான வழி ஒன்றை நான் கூறுகிறேன். சிறந்த நூற்பாளருக்கு பரிசுகள் கொடுக்கப்படும் என்று வைக்கட்டும். எல்லோரும் வராவிட்டாலும், பலர் இப் போட்டியில் கலந்துகொள்வதற்கு இது தூண்டுதலாக இருக்கும். ஆசிரியர்களுக்கே நம்பிக்கையிருந்தால் ஒழிய, எந்தத் திட்டமும் வெற்றி பெறாது. ஆதாரக் கல்வியை மாகாண சர்க்கார்கள் ஏற்றுக்கொண்டால், ராட்டினத்தில் நூற்பது போன்றவை பாடத் திட்டத்தின் ஒரு அம்சம் மட்டுமல்ல; அது கல்விக்கான கருவியாகவே இருக்கும். ஆதாரக் கல்வி வேறுன்றினால், வேதனையில் ஆழ்ந்துள்ள இந்த நாட்டில் கதரை நிச்சய

மாக எல்லோரும் உபயோகிக்க ஆரம்பிப்பார்கள். மற்றத் துணிகளைவிட அது மலிவானதாகவும் இருக்கும்.

—'ஹரிஜன்' – 14—10—1939

# 21
# ஒரு மாணவரின் கேள்விகள்

பட்டம் பெற்று, அமெரிக்காவில் மேற்கொண்டு ஆராய்ச்சிப் படிப்பில் ஈடுபட்டுள்ள மாணவர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"இந்தியாவின் வறுமையைப் போக்குவதற்கு, இந்தியாவிலுள்ள வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளும் முறைகளில் தீவிர அக்கறை கொண்டுள்ளவர்களில் நானும் ஒருவன். இந்நாட்டுக்கு நான் வந்து ஆறு வருடங்கள் ஆகின்றன. மர ரசாயணம் பற்றி நான் விசேஷ ஆராய்ச்சி செய்துகொண்டிருந்கிறேன். இந்தியா கைத்தொழில் துறையில் அபிவிருத்தி அடைய வேண்டியது எவ்வளவு முக்கியமானது என்பதை நான் அவ்வளவு நிச்சயமாக உணர்ந்திராவிட்டால், நிர்வாக சம்பந்தமான ஏதாவது உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டிருப்பேன், அல்லது வைத்தியப் படிப்பை மேற்கொண்டிருப்பேன். காகித உற்பத்தித் தொழிலில் நான் ஈடுபடுவதை நீங்கள் அங்கீகரிப்பீர்களா? இந்தியாவுக்கு நிதானமானதும், மனிதாபிமானமுள்ளதுமான ஒரு கைத்தொழில் கொள்கையை வகுப்பது பற்றிப் பொதுவாக உங்களுடைய மன நிலை என்ன? விஞ்ஞான அபிவிருத்தியை நீங்கள் ஆதரிக்கிறீர்களா? பிரான்ஸில் பாஸ்டியரும்,* டோரன்டோவில் டாக்டர் பெண்டிங்கும் செய்தது போன்ற, மனித வர்க்கத்திற்கு நன்மையளிக்க வல்ல முன்னேற்றத்தையே நான் குறிப்பிடுகிறேன்."

பற்பல இடங்களிலுள்ள மாணவர்களிடமிருந்தும் எனக்குப் பல கடிதங்கள் வருகின்றன. அத்துடன், விஞ்ஞானம் சம்பந்தமாக என்னுடைய கருத்து என்ன என்பதைப் பற்றிப் பெரும் அளவில் தப்பெண்ணங்களும் இருக்கின்றன. ஆகையால், இந்தக் கேள்விக்கு பகிரங்கமாகவே பதில் அளிக்கிறேன். இந்த மாணவர் குறிப்பிடுவது போன்ற கைத்தொழில் முயற்சிகளையொட்டி எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. ஆனால், இவை மனிதாபிமானத் தன்மை வாய்ந்தவையாகத்தான் இருக்கும் என்று நான் சொல்லமாட்டேன். இந்தியாவுக்கு மனிதாபிமானத் தன்மை வாய்ந்த கைத்தொழில் கொள்கை என்றால் அதற்கு, கைராட்டி

* லூயி பாஸ்டியர் (1822—1895) பிரான்ஸில் பிரபல ரசாயன ஆராய்ச்சி நிபுணராக விளங்கினர். அவர், மனித வர்க்கத்திற்காகச் செய்த தொண்டில் பெரும் பகுதியும், மிருகங்களை வெட்டிப் பரிசோதனை செய்வதிலேயே கழிந்தது. தொத்து நோய்களைத் தடுப்பதற்கான பல முறைகளை அவர் கண்டுபிடித்தார். அவரது பெயரில் 1888—ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட விஞ்ஞான ஆராய்ச்சி நிலையம் பிரான்ஸில் மாத்திரமல்ல, உலக நாடுகளிலும் மிக்க புகழ் பெற்றது.

னத்தில் நூற்பது மீண்டும் புகழுடன் உயிர் பெறவேண்டும் என்பதே நான் கொடுக்கும் அர்த்தமாகும். இந்த நாட்டில் லட்சக்கணக்கான மக்களின் வாழ்க்கையை அவர்களது குடிசைகளிலேயே சீரழித்துக்கொள்ளும் நிர்க்கதியான வறுமையை உடனடியாகப் போக்க வேண்டுமானால், கைராட்டினத்தில் நூற்பது ஒன்றுதான் வழி. நாட்டின் உற்பத்தி சக்தியைப் பெருக்குவதற்காக, அதற்குப் பிறகு மற்ற எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ளலாம். ஆகையால், விஞ்ஞானப் பயிற்சி பெற்ற ஒவ்வொரு இளைஞரும், சாத்தியமானால், இந்தியாவின் குடிசைகளில் உற்பத்திப் பெருக்கத்திற்கு இன்னும் திறமையான ஒரு கருவியாக கைராட்டினத்தைத் திருத்தி யமைப்பதற்கு தமது திறமையைப் பயன்படுத்த வேண்டும் என்று விரும்புகிறேன். விஞ்ஞானத்தின் அபிவிருத்திக்கு நான் எதிரியல்ல. அதற்கு மாறாக, மேல்நாடுகளிலுள்ள விஞ்ஞான உணர்ச்சியை நான் போற்றுகிறேன். ஆனால், அந்தப் பாராட்டு அரைகுறையானதாக இருக்கிறதெனில், அதற்குக் காரணம் மேல் நாடுகளிலுள்ள விஞ்ஞானிகள் கடவுளின் கீழ் மட்டத்தில் உள்ள சிருஷ்டிகளைப் பொருட்படுத்தவில்லை என்பதுதான். ஆராய்ச்சிக்காக, உயிருள்ள பிராணிகளைத் துண்டாடுவதை நான் அறவே வெறுக்கிறேன். விஞ்ஞானம், மனித வர்க்கத்தின் வளர்ச்சி என்ற பெயரில் குற்றமற்ற உயிர்கள் வதைக்கப்படும் மன்னிக்க முடியாத செய்கையை என்னால் சகிக்க முடியவில்லை. ஒரு குற்றமும் செய்யாத உயிர்ப் பிராணிகளின் ரத்தக் கறை படிந்த விஞ்ஞான ரீதியான கண்டு பிடிப்புகளினால் ஒரு பலனும் இல்லை என்று நான் கருதுகிறேன். உயிர்ப் பிராணிகளை வெட்டிப் பார்க்காமல் ரத்த ஓட்டத்தைப் பற்றிய விவரங்களைக் கண்டுபிடிக்க முடியாதென்றால், மனிதர்களுக்கு அந்த விஷயம் தெரியாமலே இருந்துவிட்டால் கூட ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது. அறிவைப் பெருக்கிக் கொள்ளுவதற்கு இப்போது கையாளப்படும் முறைகளை மேற்கத்தி விஞ்ஞானிகள் கட்டுப்படுத்தும் நாள் வரத்தான் போகிறதென்று எனக்குத் தோன்றுகிறது. எதிர்கால சரித்திரம் மனித குடும்பத்தில் என்ன நடந்தது என்பதை மட்டும் கவனிக்கப் போவதில்லை; எல்லா உயிரினங்களையும் பற்றியுமே கவனிக்கும். தங்களில் ஐந்தில் ஒரு பகுதி மக்களைச் சிறுமைப்படுத்தி வைத்து விட்டுத் தாங்கள் சுகமாக வாழலாம் என்று நினைப்பது தவறு என்பதை ஹிந்து சமூகம் மெதுவாக, ஆனால் நிச்சயமாக உணர ஆரம்பித்திருக்கிறது. கீழ்த்திசை நாடுகளிலும் ஆப்பிரிக்க நாடுகளிலும் உள்ள மக்களைச் சிறுமைப்படுத்தியும், சுரண்டியும் தாங்கள் வாழலாம் அல்லது முன்னேறலாம் என்று நினைப்பது தவறு என்பதை மேற்கத்தி நாடுகளும் உணர்ந்து வருகின்றன. அதே மாதிரி, காலம் வரும்போது, சிருஷ்டியின் கீழ் மட்டத்திலுள்ள பிராணிகளின் மீது நமக்குள்ள ஆதிக்கம், அவற்றை வதைப்பதற்காக அல்ல என்பதையும், நம்முடைய நன்மைகளை நாம் கவனித்துக்கொள்ளுவது போல் அவற்றின் நன்மைகளையும் கவனித்துக்கொள்ள வேண்டும்

என்பதையும் நாம் உணருவோம். நம்மைப்போலவே அந்த சிருஷ்டிகளுக்கும் ஆன்மா இருக்கிறது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

அந்த மாணவரின் மூன்ருவது கேள்வி பின்வருமாறு:

''நமது ஐக்கிய இந்தியாவில் இப்போதுள்ள இந்திய சமஸ்தானங்களை அப்படியே விட்டுவைக்கப் போகிருேமா? அல்லது அங்கு ஜனநாயக முறையை ஏற்படுத்தப் போகிருேமா? நம்மிடையே அரசியல் ஒருமைப்பாடு ஏற்படுவதற்கு நமது பொதுமொழி எதுவாக இருக்க வேண்டும்? ஆங்கிலத்தையே பொது மொழியாக்கிளுல் என்ன?''

வெளிப்படையாகக் கண்களுக்குப் புலப்படாமலிருந்த போதிலும், இந்திய சமஸ்தானங்களின் தன்மை இப்போதே மாறுதலடைந்து கொண்டுதான் வருகிறது. இந்தியாவின் பெரும் பகுதியில் ஜனநாயகம் ஏற்படும்போது சமஸ்தானங்களில் எதேச்சாதிகாரம் இருக்க முடியாது. ஆனுல், இந்திய ஜனநாயகம் எப்படியிருக்கும் என்று யாரும் சொல்ல முடியாது. ஆங்கிலம் நமது பொது மொழியாக இருக்கும் என்ருல், நமது எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதைச் சுலபமாக ஊகித்துக் கொள்ளலாம். ஏனெனில், அப்போது அந்த ஜனநாயகம் ஒரு சிலரின் ஜனநாயகமாகத்தான் இருக்கும். அரசியல் ஒருமைப்பாடு ஏற்படத்தான் வேண்டும். ஆயினும், அதில் நாம் வெற்றி பெற விரும்பிளுல், எதிர் காலம் எப்படியிருக்கும் என்பதை முக்காலமும் அறிந்த ஒரு தீர்க்கதரிசியிளுல்தான் கூறமுடியும்.

பெரும்பாலான பாமர மக்களின் பொது மொழி ஒருபோதும் ஆங்கிலமாக இருக்க முடியாது. ஹிந்தியும், உருதுவும் இணைந்த ஒன்றுதான் பொதுமொழியாக இருக்க வேண்டும். இதை நான் ஹிந்துஸ்தானி என்று கூறுகிறேன். நாம் ஆங்கிலத்தில் பேசுவது, நம் நாட்டிலுள்ள லட்சக்கணக்கான மக்களிடமிருந்து நம்மைப் பிரித்துவிட்டது. நமது நாட்டிலேயே நாம் அந்நியர்களாகிவிட்டோம். இந்தியாவில் அரசியலில் ஈடுபட்டவர்களிடையே ஆங்கிலம் பரவியுள்ள விதம் நாட்டுக்கும், மனித வர்க்கத்திற்கே கூட எதிரான ஒரு குற்றம் என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். ஏனெனில், நம் நாட்டின் முன்னேற்றத்திற்கே நாம் முட்டுக் கட்டையாக இருக்கிருேம்; சற்றேறக் குறைய ஒரு கண்டம் போன்ற அவ்வளவு பெரிய ஒரு நாட்டின் முன்னேற்றம் என்பது மனித வர்க்கத்தின் முன்னேற்றமாகவே இருக்கும். இந்தப் பெரும் உண்மையை நான் உணர்ந்திருப்பதைப்போலவே, கிராமங்களுக்குச் சென்று பழகியுள்ள ஒவ்வொரு படித்த இந்தியரும் உணர்ந்திருக்கிருர். ஆங்கில மொழியினிடமும், ஆங்கிலேயர்களின் பல உத்தம குணங்களிலும் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. ஆளுல், நமது வாழ்க்கையில் ஆங்கில மொழியும், ஆங்கிலேயர்களும் வகிக்கும் ஸ்தானம் நமது முன்னேற்றத்தை மட்டுமின்றி, அவர்களுடைய முன்னேற்றத்தையும் கூடத் தடைப்படுத்துகிறது என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

'யங் இந்தியா' – 17—12—1925

# 22
# பல்வேறு கேள்விகள்

## 1

கட்சிலிருந்து* ஒரு ஆசிரியர் எனக்குச் சில கேள்விகளை அனுப்பியிருக்கிறார். அக்கேள்விகளுக்கு இங்கே நான் பதிலளிக்கலாம் என்று கருதுகிறேன். அவரது கேள்விகளும், எனது பதில்களும் பின்வருமாறு:

''நான் ஒரு பள்ளிக் கூடத்தில் ஆசிரியராக இருக்கிறேன். ஒரு ஆசிரியருக்கு இருக்க வேண்டிய ஒழுக்கமும், சத்தியத்தில் உறுதியும், பிரம்மச்சரியமும் எனக்கு இல்லை. ஆயினும், அவற்றைப் பெற நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். மேலும், என் தகப்பனார் கடன் பட்டிருக்கிறார். இந்த நிலைமையில், நான் ராஜிநாமாச் செய்வதை நீங்கள் ஒப்புக் கொள்ளுவீர்களா?''

போதிய அளவு ஒழுக்கம் இல்லையென்றால், உங்களுடைய ஆசிரியர் பதவியை நீங்கள் ராஜினாமா செய்வது நல்லதுதான். எனினும், பகுத்தறிவை உபயோகித்து இதைச் செய்ய வேண்டியது அவசியமாகும். இந்தக் குறைபாடுகளைப் போக்கிக் கொண்டுவிட முடியும் என்றால், ராஜிநாமா செய்ய வேண்டிய அவசியமில்லை. குறைபாடுகளே இல்லாதவர்கள் யாருமில்லை. ஆசிரியர்களிடையே ஒழுக்கம் என்பது இன்று அதிகமாகத் தென்படவில்லை. ஒருவர் தம்முடைய வேலையில் கவனமாயிருந்து, தம்மை மேற்கொண்டு அபிவிருத்தி செய்து கொள்ளுவதற்குத் தொடர்ந்து முயற்சி செய்து கொண்டேயிருந்தால், அதுவே போதுமானது. ஆனால், எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் பொருத்தமாயிருக்கக் கூடிய பொதுவான விதி ஒன்று இருக்க முடியாது. ஒவ்வொருவரும் தமக்குத் தாமே சிந்தித்துப் பார்த்து தமக்கு எது சிறந்தது என்று தோன்றுகிறதோ அதைச் செய்யவேண்டும்.

உங்களுடைய தகப்பனார் கடன் பட்டிருப்பதைச் சமாளிப்பது கஷ்டமல்ல. நியாயமாக பட்ட கடனை அடைக்கத்தான் வேண்டும். ஆசிரியராக வேலை செய்து கொண்டிருக்கும்போது அதைத் தீர்ப்பது சாத்தியமில்லை என்றால் இன்னும் அதிக வருமானம் அளிக்கக்கூடிய ஒரு வேலைக்குப் போக வேண்டும், அல்லது ஏதாவது ஒரு வியாபாரத்தில் ஈடுபட்டு அக்கடனை அடைக்க வேண்டும்.

''பையன்களை அடிப்பதினால் அவர்கள் திருந்திவிடுவார்கள் என்று நான் நம்பவில்லை. அத்தகைய நம்பிக்கை எனக்கு இருந்தும் கூட, என் வகுப்பிலுள்ள மாணவர்களை நான் அடித்தால், அது பலாத்காரமாகக் கருதப்படுமா, இல்லையா? அவர்களை நானே தண்டிக்காமல், குறும்புத்தனமாகவோ, மந்தமா

---

* கட்ச், வடமேற்கு இந்தியாவைச் சேர்ந்த கடற்கரைப் பிரதேசமாகும்.

கவோ இருக்கும் ஒரு பையனை, தலைமை ஆசிரியர் அடிப்பார் என்று தெரிந்தும்கூட அவரிடம் அனுப்பினால், நான் பலாத்காரக் குற்றத்தைப் புரிந்தவனாக கருதப்படுவேனா, இல்லையா?''

மாணவர்களை ஆசிரியரே தண்டித்தாலும், அல்லது தண்டனைக்காக அவர்களைத் தலைமை ஆசிரியர்களிடம் அனுப்பினாலும் அதில் பலாத்காரம் இருக்கத்தான் செய்கிறது. எந்த மாணவனையும் தண்டிக்க ஒரு ஆசிரியருக்கு உரிமை இருக்கிறதா என்று நேரடியாகக் கேட்கப் படவில்லை. ஆனால், அசல் கேள்வியிலேயே அது தொக்கி நிற்கிறது. ஒரு சிறு பையன் ஒரு தவறு செய்து, அது தவறுதான் என்பதை அவனும் உணர்ந்திருந்தால், அவனை தண்டிக்க வேண்டியது ஒரு கடமையாகிவிடக் கூடும். என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை ஒவ்வொரு ஆசிரியரும் தமக்குத்தாமே தான் முடிவு செய்து கொள்ள வேண்டும். ஆனால், ஒரு ஆசிரியர் மாணவர்களை அடிக்கக் கூடாது என்பதையே பொது விதியாகக் கொள்ள வேண்டும். அவர்களைத் தண்டிக்கும் உரிமை யாருக்காவது இருக்கிறதென்றால், அந்த உரிமை அவர்களுடைய பெற்றோர்களுக்குத்தான் உண்டு. தண்டனையை மாணவன் ஏற்றுக் கொண்டால்தான் அது நியாயமானதாக இருக்கும். ஆனால், அம்மாதிரி சந்தர்ப்பங்கள் அடிக்கடி ஏற்படுவதில்லை. அப்படி ஏற்படும் போதுகூட, தண்டனை கொடுப்பது நியாயம்தானா என்பது பற்றி ஏதாவது சந்தேகம் எழுந்தால், தண்டனையே கொடுக்கக் கூடாது. கடைசியாக, கோபம் காரணமாக எத்தகைய தண்டனையும் கொடுக்கக் கூடாது.

இந்த நிருபரின் மற்றக் கேள்விகள் இங்கு கொடுக்கப்படவில்லை. கீழே கொடுக்கப்பட்டுள்ள பதில்களிலிருந்தே அந்தக் கேள்விகளை ஊகித்துக் கொள்ளலாம்:

1. தேகப்பயிற்சி செய்பவர்கள் அவசியம் 'லங்கோடு' அணிந்து கொள்ள வேண்டும். மேல் நாடுகளில் உள்ள உடற்பயிற்சி நிபுணர்கள் கூட இதன் அவசியத்தையும், உபயோகத்தையும் இப்போது ஒப்புக் கொள்கிறார்கள்.

2. காலையில் பல் துலக்கிய பிறகு சூடான ஜலம் சாப்பிடுவது மலம் கழிப்பதற்கு நல்லது. பலர் குளிர்ந்த ஜலம் சாப்பிடுகிறார்கள். வென்னீராக இருந்தாலும், குளிர்ந்த தண்ணீராக இருந்தாலும் அது சுத்தமானதாக இருக்க வேண்டும். எந்தத் தண்ணீராயினும் சுத்தமாக இருந்துவிட்டால் அதில் தீங்கு எதுவும் இல்லை.

3. குடும்பங்களில் உள்ளவர்கள் தலைமயிரை நீளமாக வளர்த்துக் கொள்வது நல்லதல்ல; அதனால் அழுக்கு சேரும். நீளமாக இருக்கும் தலைமயிரைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு நேரத்தை வீணடிக்க வேண்டியிருக்கிறது. தலை மயிரை குட்டையாக வைத்துக் கொள்வதுதான் சரியானதாகும். மத்தி

யில் ஒரு சிறு குடுமி வேண்டுமானால் வைத்துக் கொள்ளலாம். என் வழியே விட்டால் பெண்களின் தலை மயிரைக் கூட குட்டை யாக வெட்டிவிடலாம் என்று சொல்வேன். தலைமயிரை நீளமாக வைத்துக் கொள்வது நமக்குப் பழக்கமாகிவிட்டது; இதனால், அதில் ஏதோ அழகு இருப்பதாக நினைக்கிறோம். நல்லொழுக்கத் தில் தான் உண்மையான அழகு இருக்கிறதே ஒழிய வெளிப்பகட் டில் அல்ல. தலைமயிர் இயற்கையாகவே நீளமாக வளர்வதால் அதை வெட்டக் கூடாது, அதை கத்தரிக்கக் கூடாது என்று நினைப்பது ஒரு மூட நம்பிக்கையாகும். நமது நகங்களை வெட்டு கிறோம்; அப்படி வெட்டாவிட்டால் ஒன்று அவற்றில் அழுக்குப் படிந்துவிடும், அல்லது அடிக்கடி நகங்களைச் சுத்தம் செய்ய வேண்டியிருக்கும். அதே மாதிரி, நமது தேகத்தைச் சுத்தம் செய்து கொள்வதற்காக தினசரி குளிக்கிறோம். காடுகளில் வசிப்பவர்களின் விதி அல்லது விதிகள் என்ன என்பதைப் பற்றி இங்கு நாம் சிந்திக்க வேண்டிய அவசியம் இல்லை. அவர் களுடைய வாழ்க்கை வேறு, நம்முடைய வாழ்க்கை வேறு.

'நவஜீவன்'—27—9—1925.

## 2

ஒரு வினய மந்திரத்தில் (தேசீய உயர்நிலைப் பள்ளி) உள்ள ஆசிரியர் ஒருவர் பின்வரும் கேள்விகள் கேட்டுள்ளார்:

"1. பள்ளிக்கூடங்களில், முக்கியமாக தேசீயப் பள்ளிக்கூடங்களில் பையன்களை அடிப்பதற்கு ஏதாவது நியாயம் உண்டா?

"2. கொடுத்த வேலைகளைச் செய்யத் தவறும் மாணவர்களை நாம் தண்டிக்காமலிருக்கலாம்; ஆனால், அவர்கள் விஷமம் செய்தால் அல்லது ஒழுக்கக் குறைவான காரியங்கள் ஏதாவது செய்தால், அவர்களைத் தண்டிப்ப தில் தவறு ஒன்றும் இல்லை என்று சிலர் கருதுகிறார்கள். இந்தக் கருத்து சரிதானா?

"3. பையன்களைத் திருத்துவதற்காக சில சமயங்களில் அவர்களைத் தண்டிப்பதாக சில நண்பர்கள் கூறுகிறார்கள். ஆனால், பின்னர் அப்படிச் செய்ததைக் குறித்து வருந்துகிறார்கள். ஆகையால், அவர்கள் மீது ஒன்றும் குற்றமில்லை. தமது பொறுப்பிலுள்ள மாணவர்களைத் தண்டித்துவிட்டு, பின்னர் இதே சமாதானத்தைக் கூறும் ஆசிரியரை மன்னிக்கலாமா?

"4. தேசீயப் பள்ளிக்கூடங்களில், அடிப்பதைத் தவிர. வேறு என்ன விதமான தண்டனைகளைத் தடை செய்ய வேண்டும்?

"5. ஒரு தேசீயப் பள்ளியில் உள்ள ஆசிரியர் அகிம்சைப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்கிறார். எத்தகைய தண்டனைகளை அளித்தால், அவர் அந்த பிரதிக்ஞையை மீறியவராவார்?

"மேலே உள்ள கேள்விகள் காரணமில்லாமல் வெறுமனே கேட்கப்பட வில்லை. சில காலமாக இந்தப் பள்ளிக்கூடத்தில் உள்ள ஆசிரியர்கள் இவற்றைப் பற்றி விவாதித்து வந்திருக்கிறார்கள். நான் மேலே குறிப்பிட்ட வாதங்களில் சில அவர்களாலேயே கூறப்பட்டவை. இவை நடைமுறைக்கு முக்கியமானவையாதலால், நன்கு யோசித்து நீங்கள் கூறும் அபிப்பிராயம் பல

ஆசிரியர்களுக்கு வழிகாட்டியாக இருக்கும். தயவு செய்து நீங்கள் ஹரிஜன் பத்திரிகையிலேயே பதில் அளிக்கலாம்."

பையன்களுக்கு எந்தவிதமான தண்டனையும் அளிப்பது தவறு என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இதனால் தங்களுடைய மாணவர்களிடம் ஆசிரியர்களுக்கு இருக்க வேண்டிய அன்பும், பெருமையுணர்ச்சியும் குறைந்துவிடுகின்றன. மாணவர்களுக்கு பாடம் சொல்லிக் கொடுப்பதற்காக அவர்களைத் தண்டிப்பது என்ற பழைய வழக்கம் நவீனக் கல்வி முறையில் வேகமாக மறைந்து வருகிறது. மிகவும் சிறந்த ஆசிரியர்கள்கூட, தவறு செய்யும் மாணவர்களைத் தண்டிக்காமலிருக்க முடியாது என்ற நிலைமை ஏற்படுகிறது என்று எனக்குத் தெரியும். ஆனால் அதிருஷ்டவசமாக, அம்மாதிரி சந்தர்ப்பங்கள் மிகக் குறைவே. அது எப்படியிருந்தாலும், அதை நியாயம் என்று வாதிக்க முற்படுவது சரியாகாது. ஓர் ஆசிரியர் தண்டனை கொடுக்கத்தான் வேண்டும் என்று நினைத்தால், அந்த அளவுக்கு அவருடைய தொழில் திறமையில் குறைபாடு இருப்பதாகவே எடுத்துக் கொள்ள வேண்டும். எந்தத் தண்டனையுமே முறையற்றது என்று ஸ்பென்சர் போன்ற கல்வித் துறை நிபுணர்கள் கூறியுள்ளனர். எனினும், தாம் சொன்னபடியே எப்போதும் அவரால் நடந்து கொள்ள முடியவில்லை என்பது உண்மைதான்.

மேற்கண்ட பதிலுக்குப் பிறகு, மற்றக் கேள்விகளுக்கு விரிவாக பதில் அளிக்க வேண்டிய அவசியமில்லை என்றே தோன்றுகிறது.

அகிம்சையும், தண்டனையும் ஒன்றுக்கொன்று முரணானவை என்பதே பொதுவிதி. தண்டனை அளிப்பது, தண்டனையாகக் கருதப்பட முடியாத சந்தர்ப்பங்களும் நிச்சயமாக ஏற்படக் கூடும். ஆனால் அத்தகைய உதாரணங்கள் ஆசிரியருக்கு உதவியாக இரா. உதாரணமாக, ஒரு தகப்பனார் தம்முடைய மகனின் தவறான நடத்தை பற்றி மிகவும் வருந்துகிறார். அந்த வருத்தத்தைத் தாங்க முடியாமல் அவனை அடிக்கிறார். அப்படி அவர் அவனை அடிப்பதை அன்பினால் கொடுக்கப்படும் தண்டனை என்று எடுத்துக் கொள்ளலாம். பையனும், அதைப் பலாத்காரமாகக் கருதமாட்டான். நோயாளிகள் சித்த சுவாதீனமின்றி ஏதாவது செய்தால், அவர்களுக்கு சிசுரூஷை செய்பவர்கள் அவரைக் கட்டுப்படுத்தி வைப்பதற்காக சில சமயம் அவரை அடிக்க வேண்டியிருக்கிறது. இதுவும் அகிம்சையே ஒழிய பலாத்காரமாகாது. ஆனால், இம்மாதிரி உதாரணங்கள் ஆசிரியர்களுக்குப் பொருந்தாது. மாணவர்களை அடிக்காமலே அவர்களைக் கட்டுப்படுத்தி வைக்கவும், பாடம் சொல்லிக் கொடுக்கவும் ஆசிரியர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். தண்டனையையே உபயோகிக்காத ஆசிரியர்களும் இருக்கிறார்கள். அடிப்பதைத் தவிர மற்ற தண்டனைகள் பின்வருமாறு: மாணவர்களை தம்மிடங்களிலிருந்து இறங்கி வெளியே நிற்கச் செய்வது, எழுந்தும், உட்கார்ந்தும்



காந்திஜியையும் அன்னை கஸ்தூரிபாயையும் கலாபவன் மாணவர்கள் வரவேற்கிருர்கள்.



1924-இல் காந்திஜியும், குடல் நோய் காரணமாக அவருக்கு அறுவை சிகிச்சை செய்து நோயைக் குணப்படுத்திய டாக்டர் கர்னல் மாடாக்கும்

தோப்புக்கரணம் போடும்படி செய்வது, அவர்களைத் திட்டுவது முதலியன. ஆசிரியர்கள் மாணவர்களைத் தண்டிக்கவே கூடாது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம்.

திருத்துவதற்காக முதலில் பையன்களைத் தண்டிப்பதும், பிறகு அதற்காக வருத்தப்படுவதும் உண்மையான வருத்த மாகாது. மேலும், ஆசிரியர்கள் இந்தப் பழக்கத்தைக் கையாள ஆரம்பித்தால், இறுதியில் நமது சமூகத்தில் உள்ள மக்களுக்கும் அது போன்ற பழக்கம் ஏற்பட்டுவிடும். தண்டிக்கும் பழக்கம் காரணமாக, பலாத்காரத்தினால் திருத்தமுடியும் என்ற ஒரு தவறான நம்பிக்கை நமக்கு ஏற்பட்டுவிட்டது. வேண்டும் என்றே தண்டனை அளிக்கும் ஒரு ஆசிரியர், தம்முடைய அகிம்சைப் பிரதிக்ஞையை மீறியவராகிறார் என்பதே எனது கருத்தாகும்.

'நவஜீவன்' – 21—10—1928

# 23

# உடற்பயிற்சிக் கல்வி

நமது மாணவர்களுக்கு உடற்பயிற்சிக் கல்வி அளிக்கும் விஷயத்தில் பழைய இந்திய முறையையே பின்பற்றலாம் என் பதே என்னுடைய அபிப்பிராயம். அதாவது, பிராணயாமம், ஆஸனங்கள் முதலியவற்றையே குறிப்பிடுகிறேன். மேல் நாட் டில் முல்லரும், மற்றவர்களும் இந்த விஷயத்தைப் பற்றி எழுதி யிருக்கிறார்கள். தங்களுடைய முறை சிறந்தது என்பதை அவர் கள் அனுபவத்திலும் காட்டியிருக்கிறார்கள். எனினும் அவர்கள் குறிப்பிட்டுள்ள முறை, பழைய இந்திய முறையில் வேரூன்றியது என்றே நான் நினைக்கிறேன். தற்கால விஞ்ஞான ரீதியான பாஷையில், சிற்சில இடங்களில் அபிவிருத்திகள் செய்து அதை எழுதியிருக்கிறார்கள். இந்தத் துறையில் நாம் ஒன்றுமே செய்ய வில்லை என்பதை நான் அறிவேன். இந்தப் பழைய முறையின் கீழ் பயிற்சி பெற்ற பிறகு, இன்றைய மல் யுத்தம் போன்றவை களை மேற்கொண்டு கற்றுக்கொள்ள விரும்புகிறவர்களுக்கு அதற் கான வசதிகளை அளிக்கலாம். ஆனால், சிலம்பம், கத்தி விளை யாட்டு முதலியவைகளில் பயிற்சி பெறுவது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. உடலை வலுப்படுத்துவதற்கோ, அல்லது பல்வேறு உடல் உறுப்புகளின் வளர்ச்சிக்கோ சிலம்பப் பயிற்சி யினால் பலன் ஏற்படுமென்று தெரியவில்லை. ஆகையால், அது ஒருவருடைய உடற்பயிற்சியின் ஓர் அம்சமாகாது. எனினும், தற்காப்பு போன்ற முறைகளுக்கு அந்தப் பயிற்சி உபயோகமாக இருக்கலாம்.

உடற்பயிற்சியும், விளையாட்டுகளும் கட்டாயமாக்கப்பட்டிருக்கின்றன என்பதை அறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன். நல்லவை யாவற்றையுமே நமக்குக் கட்டாயமாக்கிக் கொள்ளுவோமாக. குஜராத்தி, சமஸ்கிருதம் முதலியவை நல்லவை என்று நாம் கருதுவதால், அவற்றைக் கட்டாய பாடங்களாக்கி யிருக்கிறோம். உடற்பயிற்சியும், விளையாட்டுகளும் அதே மாதிரி அவசியம் என்று நாம் கருதாததால், அதை மாணவர்களின் விருப்பத்திற்கு விட்டுவிட்டோம். இப்போது அவற்றையும் கட்டாயமாக்கி விட்டதால், குஜராத்தியைப் போலவே அவற்றையும் அவசியமாகக் கருதுகிறோம் என்று ஏற்படுகிறது. நமது விருப்பத்திற்கு மாறாக நம்மீது சுமத்தப்படும் கட்டுப்பாடுகள் நம்மை அடிமைகளாக்கிவிடுகின்றன. ஆனால், நாமாக மனமுவந்து ஏற்றுக் கொள்ளும் கட்டுப்பாடுகள், நமது உண்மையான சுதந்திரத்தை மேற்கொண்டு அதிகமாக்குகின்றன.

(காந்திஜி எழுதிய ஒரு கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டது.)

# 24

# உடற்பயிற்சியின் அவசியம்*

"என்னால் என்ன முடியும் என்பது எனக்குத் தெரியும்; என்னால் கவனிக்க முடிந்ததற்கு அதிகமான விஷயங்களை மேற்கொள்வது என் சுபாவமல்ல. ஆனால், டாக்டர் பட்டவர்த்தனின் வேண்டுகோளை' என்னால் மறுக்க முடியவில்லை. இந்த உடற்பயிற்சிசாலை ஹிந்துக்கள், முஸ்லிம்கள் இருவருக்குமே பொதுவானது என்றும், முஸ்லிம்கள் மட்டுமன்றி, "தீண்டத்தகாத" இளைஞர்கள் கூட இதில் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள் என்றும் கேட்டபோது எனக்கு சந்தோஷமாக இருந்தது. இந்த ஸ்தாபனத்தில் எந்த விதமான வகுப்புவாதமும் இல்லாதது பற்றி நான் மகிழ்ச்சி யடைகிறேன்.

"தனது உடலை வலுவுள்ளதாகவும், தகுதியுள்ளதாகவும் வைத்துக்கொண்டு, அதைச் சிறந்த முறையில் உபயோகித்துக் கொள்ள விரும்பும் ஒரு பையன் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று நமது சாத்திரங்கள் கூறுகின்றன. நாடு பூராவிலும் நான் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறேன். இளம் வயதுள்ளவர்களின் நோஞ்சலான உடல்கள்தான் நான் கண்டவற்றில் மிகவும் வருந்தத்தக்க ஒரு காட்சியாகும். குழந்தை மணம் என்ற சாபத்திற்கு நாம் உட்பட்டிருக்கும் வரையில், நமது சமூகத்திலுள்ள பலர் அத்தகைய குழந்தை மணத்தின் பிறப்புகளாக இருக்கும் வரையில், தேகப் பயிற்சி என்பது அசாத்திய

* அமராவதியிலுள்ள வியாயாம மந்திரத்தில் காந்திஜி செய்த பிரசங்கத்தின் விவரங்களே மேலே கொடுக்கப்பட்டுள்ளன.

மான ஒன்றுயிருக்கும். காச நோய் உள்ளவர்களுக்கு யார் தேகப் பயிற்சியைச் சிபார்சு செய்வார்கள்? ஆகையால், இந்தச் சாபத்தின் ஆணி வேரையே நாம் வெட்ட வேண்டும். அப்போது தான் நமது ஆண்களும், பெண்களும் தேகாரோக்கியத்துடன் இருப்பதைக் காண முடியும்; அப்போதுதான் இந்தியா நல்ல முறையில் தீவிர வளர்ச்சி பெறுவதையும் காணலாம். 25 வயது வரையிலாவது ஒரு மாணவன் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்று மனு விதித்திருக்கிறுர். இந்த நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டாலொழிய, எவ்வளவு தேகப் பயிற்சி செய்தா லும் பலனற்றதாகவே இருக்கும்.

''மற்றொரு விஷயத்தையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். பலாத்காரத்துடன் எந்த விதத்திலும் தொடர்புள்ள எந்த விஷயத்திலும் சம்பந்தம் வைத்துக்கொள்ளு வதில்லே யென நான் விரதம் கொண்டிருக்கிறேன் என்பது உங்க ளுக்குத் தெரியும். மற்றவர்கள் என்ன சொன்னுலும், என்னைப் பொறுத்தவரையில் அகிம்சை ஒன்றுதான் என்னுடைய வழி. எனக்கு மிகவும் உயர்வானதும், நிரந்தரமானதுமான மதமும் அதுதான். அப்படியாளுல், அகிம்சைப் பிரதிக்ஞை கொண் டுள்ள நான் இம்மாதிரி ஒரு ஸ்தாபனத்துடன் எப்படி தொடர்பு வைத்துக்கொள்ளலாம் என்று கேட்கலாம். இதன் காரணம் தெளிவானது. அகிம்சை அல்லது பலாத்காரமின்மை என்றுல், பலாத்காரத்தை உபயோகிக்கும் சக்தியைத் துறப்பது என்பதே யாகும். ஆகையால், அந்த சக்தியில்லாதவர் அகிம்சையைப் பிரயோகிக்க முடியாது. அகிம்சை என்பது மிகவும் பலம் பொருந்திய ஒரு ஆன்மிக சக்தியாகும். ஆனுல், அகிம்சை வாதிக்கு பலாத்காரத்தை உபயோகிக்கும் சக்தி இருக்க வேண் டும். ஆயினும், மனமார, வேண்டுமென்றே உபயோகிக்க மறுக்க வேண்டும். பலாத்காரத்தை அதை உபயோகிப்பதற்கு உடற் பயிற்சி இருந்துதாளுக வேண்டும் என்பதில்லை. ஆனுல், நமது இளைஞர்கள் அகிம்சைவாதிகளாக இருக்கவேண்டும் என்பதற் காக, அவர்கள் பலவீனர்களாக இருப்பதற்கு இடம் கொடுக்கக் கூடாது. ஒருவனுக்கு ஆயுதங்கள் கொடுக்காமல் மறுப்பதன் மூலம் அவனை அகிம்சைவாதியாக்கிவிட முடியாது. நம்மிடம் ஆயுதங்கள் இல்லாமல் பலவந்தமாகப் பறிக்கப்பட்டிருப்பது, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் பல குற்றங்களில் ஒன்றுகும். நம்மை அகிம்சைவாதிகளாக்குவதற்காக அவர்கள் அப்படிச் செய்யவில்லை; நம்மை பலவீனமானவர்களாக்குவதற்காகவே அப்படிச் செய்திருக்கிறுர்கள். தன்னுடைய பலத்தைப் பிர யோகிக்கவும், அதே சமயத்தில் அதைக் கைவிடவும் இந்தியா பலமுள்ளதாகவும், சுதந்திரமானதாகவும் இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

''உடற் பயிற்சிக்கான இம்மாதிரி ஸ்தாபனங்கள் எனக்குப் பிடித்தமானவைகளே. ஆனுல், ஓர் எச்சரிக்கையும் செய்ய விரும்

புகிறேன். ஹிந்து, முஸ்லிம், பார்சி, கிறிஸ்தவர் ஆகிய எந்த வகுப்பினரையும் அடக்கி வைக்கும் நோக்கம் கொண்ட எந்த ஸ்தாபனமும் என்னுடைய ஆசிகளைப் பெற முடியாது. எல்லா வகுப்பினரின், நாட்டிலுள்ள எல்லா இளைஞர்களின்—அவர்கள் எந்த ஜாதி, வகுப்பைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் -உடல் வலிமையையும் பெருக்குவதை நோக்கமாகக் கொண்ட ஸ்தாபனங்களே என் ஆசிகளைப் பெற முடியும். இந்த உடற் பயிற்சிசாலை இரண்டாவதான ரகத்தைச் சேர்ந்தது என்பது எனக்குத் தெரியும். இல்லாவிட்டால், இங்கு நான் வந்திருக்கமாட்டேன். நீங்கள் உண்மையுள்ளவர்களாகவும், தூய்மையுள்ளவர்களாகவும் இருக்க வேண்டுமென்றும், உங்களுடைய வாழ்க்கை இந்த நாட்டின் சேவைக்கும், நமது மதங்களின் சேவைக்கும் அர்ப்பணிக்கப்பட வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறேன். மீண்டும் உங்களுக்கு என்னுடைய ஆசிகள்.''

—'எங் இந்தியா '- 30—12—1926

# 25

# அணிவகுப்புக் கட்டளைகளுக்கு இந்திய வார்த்தைகள்

உடற்பயிற்சிக் கல்வியைப் பரப்புவதற்காக பேராசிரியர் மாணிக்கராவ் மிகுந்த உற்சாகத்துடனும், ஆர்வத்துடனும் வேலை செய்து வருகிறார். இந்த லட்சியத்தில் அவரைப் போல் அதே அளவு ஆர்வம் காட்டும் யாரையும் நான் பார்த்ததில்லை. அணி வகுப்புப் பயிற்சியில் கட்டளைகளுக்காக உபயோகிக்கப்படும் வார்த்தைகள் இந்தியா பூராவிலும் ஒரேமாதிரியாக இருக்க வேண்டுமென்றே அவர் எப்போதும் கருதி வந்திருக்கிறார். இதற்காகப் பலர் தவறான விதத்தில் ஆங்கிலச் சொற்களை உபயோகிக்கிறார்கள். ஆங்கில வார்த்தைகளுக்குப் பதிலாக ஸ்ரீ மாணிக்கராவ் சரியான இந்தியச் சொற்களைக் கண்டுபிடித்திருக்கிறார். இந்தச் சொற்களையும், அவற்றின் அர்த்தங்களையும் விளக்கி அவர் குஜராத்தியில் ஒரு சிறு புத்தகம் வெளியிட்டிருக்கிறார். இந்த விஷயத்தில் அக்கறையுள்ளவர்கள் அதைப்படிக்க வேண்டும். அந்தப் புத்தகத்தின் விலை நாலணாதான்.

—'ஹரிஜன்'-24—12—1939

# 26

# வலது கையும் இடது கையும்

வலது கைக்கும் இடது கைக்கும் இடையே வேற்றுமை எப்படி ஆரம்பமாயிற்று? சில அலுவல்களை வலது கையினால்தான் செய்யவேண்டும், இடது கையினால் செய்யக் கூடாது என்ற பழக்கம் எப்போது மேற்கொள்ளப்பட்டது? இதையெல்லாம் பற்றி யாருக்கும் தெரியாது. ஆனால், அதன் பலன் என்ன என்பது நமக்குத் தெரியும். அதாவது, பல அலுவல்களைச் செய்யக்கூடாதென்று விலக்கப்பட்டிருக்கும் இடது கை, அநேகமாக பிரயோசனமில்லாமல் போய்விடுகிறதென்றும், வலது கையை விட அது பலவீனமாக இருக்கிறதென்றும் நமக்குத் தெரியும்.

ஜப்பானில் அப்படியில்லை. அங்கு இரு கைகளையுமே சமமாக உபயோகிக்கும்படி மாணவர்களுக்கு போதிக்கப்படுகிறது. அதனால் நம்மை விட அவர்களுடைய உடல்கள் இன்னும் அதிக உபயோகமுள்ளவைகளாக இருக்கின்றன.

வாசகர்களின் நன்மைக்காக நான் கீழ்க்கண்ட யோசனைகளைக் கூற விரும்புகிறேன்: இரண்டு கைகளையும் உபயோகிக்கும் இந்தப் பழக்கம் ஜப்பானில் இருக்கிறதென்பதை, இருபது வருடங்களுக்கு முன்பு நான் கேள்விப்பட்டேன். உடனே நானும் அந்தப் பழக்கத்தை மேற்கொண்டு அதில் ஒரு அளவுக்கு வெற்றியும் பெற்றிருக்கிறேன். இந்தக் கலையில் முழுத் தேர்ச்சி பெறுவதற்கு எனக்கு அவகாசமில்லையென்று நான் நினைத்தேன்; ஆகையால், வலது கையைப்போல் இடது கையை அவ்வளவு வேகமாக உபயோகிக்க நான் முயற்சி செய்யவில்லை. அது தவறு என்பதை இப்போது உணருகிறேன். அதற்காக வருந்தவும் செய்கிறேன். என்னுடைய வலது கை நான் விரும்பும் அளவுக்கு மேல் வேலை செய்ய வேண்டியிருந்தால் கைவலிக்கின்றது. முடிந்த வரையில் எழுதும் சக்தியை விடாமல் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன். வலதுகையால் எழுதுவதைப் போல் அவ்வளவு வேகமாக இடது கையினாலும் எழுதப் பழக்கம் பெறுவதற்கு, நான் எழுத வேண்டியதையெல்லாம் இடது கையினாலேயே எழுதுவதற்கு இப்போது எனக்குப் போதிய அவகாசம் இல்லை. ஆயினும், சங்கடமான ஒரு சமயத்தில் அது எனக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. ஆகையால், என்னுடைய சொந்த அனுபவத்தை வாசகர்கள் முன்பும் சமர்ப்பிக்கிறேன். அவகாசமும், உறுதியும் உள்ளவர்கள் இடது கையையும் பழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். கொஞ்ச காலத்திற்குப் பிறகு, விடாமல் முயற்சி செய்பவர்கள் அதைப் போதிய அளவு உபயோகமானதாக ஆக்கிக் கொள்ளலாம். எழுதுவதுடன் மட்டுமில்லாமல், மற்ற அலுவல்களுக்கும் அதைப்பழக்கிக் கொள்

ளுவது நல்லது. ஒரு விபத்து ஏற்பட்டால், அல்லது நோயுற்றிருந்தால் அல்லது வேறு காரணங்களினால் வலது கை செயலற்றுப் போகும்போது இடது கையினால் சரியாகச் சாப்பிடக் கூட முடிவதில்லை என்பதை நம்மில் பலர் அனுபவத்தில் கண்டதில்லையா? இதனால் ஒருவர் தமது இடது கையையும் வலது கையைப் போலவே அவ்வளவு பழக்கிக் கொள்ளத்தான் வேண்டும் என்று வாசகர்கள் நினைத்துக் கொண்டுவிடக் கூடாது. வலது கையைப் போலவே இடது கையையும் பழக்கிக் கொள்ள மக்கள் முயற்சி செய்ய வேண்டும் என்று யோசனை கூறுவதற்காகவே இந்தக் குறிப்பு எழுதப்பட்டது. ஏனெனில், இதனால் அவர்கள் இன்னும் திறம்பட அலுவல்களைச் செய்ய முடியும். இது அவரவர்களுடைய சௌகரியத்திற்குத் தகுந்தாற்போல் செய்யப்பட வேண்டும். ஆசிரியர்கள் தங்கள் பொறுப்பில் உள்ள மாணவர்கள் விஷயத்தில் இந்த யோசனையைப் பயன்படுத்தினால் நல்லது.

—'நவஜீவன்' – 19—7—1925

# 27

# வாழ்க்கையில் சங்கீதம்

"சங்கீதத்தை அனுபவிக்க முடியாதவன் ஒன்று துறவியாக இருக்க வேண்டும் அல்லது மிருகமாக இருக்க வேண்டும்" என்று பிரபல இலக்கிய மேதாவி ஒருவர் கூறினார். இப்போது இது ஒரு பழமொழியாகிவிட்டது. நாம் துறவிகள் அல்ல; ஆனால் எந்த அளவுக்கு நம்மிடம் சங்கீதம் இல்லையோ, அந்த அளவுக்கு நாம் மிருகங்களை நெருங்கியவர்களாகிறோம். சங்கீதத்தை அறிவதென்பது, அதை வாழ்க்கைக்குப் பயன்படுத்துவதாகும். இன்று நம்மிடையே காணப்படும் வேற்றுமைகள், நம்முடைய வருந்தத்தக்க நிலைமைக்கு ஒரு அறிகுறியாக இருக்கின்றன. ஒற்றுமை இல்லாவிடில், சங்கீதம் இல்லாவிடில், சுயராஜ்யம் ஏற்பட முடியாது.

எங்கே வேற்றுமை நிலவுகிறதோ, எங்கே ஒவ்வொருவரும் தமக்குத் தோன்றிய விதத்தில் நடந்து கொள்ளுகிறார்களோ, அங்கே நல்ல நிர்வாகம் இல்லை அல்லது அராஜகம் நிலவுகிறது என்றுதான் அர்த்தம். நம்மிடம் சங்கீதம் இல்லாததால், சுயராஜ்யத்திற்காகப் பாடுபடும் அலுவல்கள் நம் மனத்தைக் கவரவில்லை. லட்சக்கணக்கான மக்கள் ஒருமித்துப் பாடும்போது அல்லது கோஷ்டியாகக் கடவுளின் திரு நாமத்தை இசைக்கும் போது, அந்த ஒருமித்த சங்கீதத்தின் மூலம், சுயராஜ்யத்திற்கான முதல் படியை அடைந்தவர்களாகிவிடுவோம். இந்த சாதாரண விஷ

* ஆமதாபாத் தேசீய சங்கீத சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழாவில் காந்திஜி நிகழ்த்திய உரையே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

யத்தை நாம் செய்ய முடியவில்லையென்றால், நாம் எப்படி சுய ராஜ்யம் பெற முடியும்?

அழுக்கும், அசுத்தமும், துன்பமும் உள்ள இடத்தில் சங்கீதம் இருக்க முடியாது. ஏனெனில், அது சங்கீதத்திற்கு முற்றிலும் முரணான ஒரு சூழ்நிலையாகும். சங்கீதத்திற்கு நாம் விரிவான அடிப்படையில் ஒரு வியாக்கியானம் கொடுத்தால், அதாவது, ஒற்றுமை, ஐக்கியம், பரஸ்பர உதவி ஆகியவைதான் சங்கீதம் என்று வியாக்கியானம் செய்தால், வாழ்க்கையின் எந்த அம்சத்திலும் சங்கீதம் இல்லாமல் முடியாது என்று சொல்லலாம்.

சங்கீதம் என்பது, ஒரு பாடகி தன் வாயைத் திறந்து சப்தத்தை வெளிப்படுத்தும் ஒரு முயற்சி என்ற மட்டமான அளவுக்கு இன்று சங்கீதம் தாழ்த்தப்பட்டுவிட்டது. நமது சகோதரிகளையும், பெண்களையும் சங்கீதப் பள்ளிகளுக்கு அனுப்பக் கூச்சப்படுகிறோம். இனிமை அல்லாத குரல்தான் சிறந்தது என்று ஒரு மூட நம்பிக்கை இருப்பதுபோல் தோன்றுகிறது. அதனால் தான், பத்து மாணவர்களாவது சங்கீத வகுப்புக்கு வந்தார்களே என்று டாக்டர் ஹரி பிரஸாத் திருப்தியடைய வேண்டியிருந்தது!

உண்மையில் பார்க்கப்போனால், சங்கீதம் என்பது புராதனமானதும், புனிதமானதுமான ஒரு கலை. ஸாம வேதத்திலுள்ள சுலோகங்கள் சங்கீதச் சுரங்கமாக இருக்கின்றன. குரானிலுள்ள வாக்கியங்களை சங்கீதமின்றிக் கூற முடியாது. டேவிடின் கீதங்கள் (பைபிள்) நம்மைப் பரவசப்படுத்தி, ஸாம வேதத்திலுள்ள சுலோகங்களை ஞாபகப்படுத்துகின்றன. எனவே இந்தக் கலையைப் புனருத்தாரணம் செய்து, சங்கீதப் பள்ளிக்கு ஆதரவு அளிப்போமாக.

சங்கீதக் கச்சேரிகளில் ஹிந்து, முஸ்லிம் சங்கீத வித்வான்கள் ஒருவர் பக்கத்தில் மற்றொருவராக அமர்ந்து கொண்டு பாடுவதைப் பார்க்கின்றோம். நம் வாழ்க்கையின் இதர துறைகளிலும் இதே சகோதர பாவத்தை எப்போது காணப்போகிறோமோ? அந்த நிலைமை ஏற்படும்போது, ராமன், ரஹிமான் ஆகிய இரு திருநாமங்களையும் ஏக காலத்தில் பூஜிப்போம்.

இங்குள்ளவர்களில் சிலர் சங்கீதத்திற்கு ஆதரவு அளிப்பது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். இன்னும் பலர் தங்களுடைய குழந்தைகளை சங்கீத வகுப்புகளுக்கு அனுப்பினால், அது தேசீய அபிவிருத்திக்கு அவர்கள் செய்யும் பங்காக இருக்கும்.

இன்னும் ஒரு படி மேலே போவோம். லட்சக்கணக்கான வீடுகளில் சங்கீதம் முழங்குவதைக் கேட்கவேண்டுமானால், நாமெல்லோரும் கதர் அணியவேண்டும். ராட்டினத்தில் நூற்க வேண்டும். இன்று நாம் கேட்ட சங்கீதம் இனிமையாகத்தான் இருந்தது; ஆனால், ஒரு சிலர்தான் அதை அனுபவிக்கக் கூடிய பாக்கியம் பெற்றிருக்கிறார்கள். கை ராட்டினத்தின் சங்கீதத்தை

எல்லோருக்கும் வெகுமதியாகக் கொடுக்க முடியுமாகையால், அது இன்னும் அதிக இனிமையானதாக இருக்கும். லட்சக் கணக்கான மக்களுக்கு அது ஆறுதல் அளிப்பதாகவும், உயிர் நாடியாகவும் இருக்கிறது. ஆகையால், எனக்கு அது உண்மை யான நல்ல சங்கீதமாகவே இருக்கிறது.

'எங் இந்தியா' – 15—4—1926

## 2

குஜராத் வித்யா பீட மாணவர் ஒருவர் பின்வருமாறு கேட் கிறார் :

''உங்களுடைய வாழ்க்கையில் சங்கீதத்தின் செல்வாக்கு எந்த அளவுக்கு இருக்கிறது?''

சங்கீதம் எனக்கு சாந்தியை அளித்திருக்கிறது. எதையா வது பற்றி நான் மிகவும் பரபரப்படைந்திருந்த சமயத்தில், சங் கீதம் உடனடியாக எனக்கு மன நிம்மதியை அளித்த பல சந்தர்ப்பங்கள் எனக்கு நினைவில் இருக்கின்றன. கோபத்தைத் தணித்துக் கொள்ளுவதற்கு சங்கீதம் எனக்கு உதவியளித்திருக் கிறது. இன்னிசையுடன் ஒரு சுலோகத்தைக் கேட்டபோது அது என் மனத்தில் ஆழப் பதிந்தது. ஆனால், அதையே வசன நடையில் சொன்னபோது அது என் உள்ளத்தைத் தொடவில்லை. அபஸ்வரத்துடன் கூறப்படும் சுலோகங்களின் அர்த்தம் எனக் குப் புரிவதில்லை; ஆனால், அதையே சுருதி சுத்தமாகப் பாடும் போது, என் மனத்தில் நன்கு பதிகின்றது. கீதையின் சுலோ கங்கள் இனிமையான குரலில் பாடப்படுவதைக் கேட்டுக் கொண்டே இருப்பதில் எனக்கு அலுப்புத் தட்டுவதே இல்லை. அதை எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் கேட்கிறேனோ அவ்வள வுக்கவ்வளவு அதிகமாக அதன் அர்த்தம் என் மனத்தில் ஆழ்ந்து பதிகிறது. என்னுடைய குழந்தைப் பருவத்தில் நான் கேட்ட இனிமையான ராமாயணப் பிரசங்கத்தின் நினைவு இவ்வளவு வருஷங்களாகியும் என் மனத்தைவிட்டு அகலவில்லை. ''கடவு ளின் பாதை வீரனுக்கேயன்றி, கோழைக்கு அல்ல'' என்ற சுலோகத்தை ஒருவர் மிகவும் இனிய குரலில் என்னிடம் பாடிக் காட்டிய போது, என் மனம் உருகியதைப் போன்ற அனுபவம் எனக்கு அதற்கு முன்பு ஏற்பட்டதே இல்லை. இந்தச் சம்பவம் எனக்கு நன்றாக நினைவில் இருக்கிறது: 1907–ஆம் வருஷத்தில் நான் திரான்ஸ்வாலில் இருந்தபோது, இறந்துவிடுவேனோ என்று அஞ்சக்கூடிய அளவுக்கு அவ்வளவு கடுமையாக நான் தாக்கப் பட்டேன். என்னுடைய விருப்பத்திற்கிணங்க ''ஒளி விளக்கே, வழிகாட்டு'' என்ற கீதத்தை ஆலிவ் டோக் இனிய குரலில் எனக் குப் பாடிக் காட்டியபோது, காயங்களின் வலிக்கு இதமாக இருந்தது.

இதனால் எனக்கு சங்கீதம் தெரியுமென்று யாரும் நினைத்து விட வேண்டாம். அதற்கு மாறாக, சங்கீதத்தில் எனக்குள்ள அறிவு மிகவும் சாதாரணமானது என்று சொல்லுவதுதான் பொருத்தமாக இருக்கும். சங்கீதத்தை என்னால் விமர்சனம் செய்ய முடியாது. நல்ல சங்கீதத்தை இயற்கையாகவே நான் ரஸிக்க முடியும் என்று மட்டும்தான் நான் சொல்லிக்கொள்ள லாம்.

சங்கீதம் எப்போதுமே எனக்கு நன்மையளித்திருக்கிறது என்ற காரணத்தினால், எல்லோருக்குமே அதுமாதிரிதான் இருக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. தம்முடைய காம இச்சைகளைத் தூண்டி விடுவதற்காகப் பலர் சங்கீதத்தைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்களென்று எனக்குத் தெரியும். சுருங்கக் கூறுமிடத்து, அவரவர்களுடைய மனோபாவத்திற்குத் தகுந்தாற்போல் சங்கீதம் வெவ்வேறு விதமான பலன்களை அளிக்கும் என்று சொல்லலாம். துளஸிதாசர் பின்வருமாறு பாடியுள்ளார் :

''நன்மை, தீமை இரண்டையும் கலந்தே சிருஷ்டி கர்த்தா இந்த உலகத்தில் எல்லாவற்றையும் சிருஷ்டித்தார். ஆனால், அன்ன பட்சியானது, பாலிலுள்ள நீரை ஒதுக்கிவிட்டு பாலை மட்டும் உட்கொள்ளுவது போல், நல்ல மனிதன் நல்லதை மாத்திரம் எடுத்துக் கொண்டு கெட்டதைத் தள்ளிவிடுகிறான்.''

—'எங் இந்தியா'-10—1—1929

# 28

# பள்ளிகளில் சங்கீதம்

சிறுவர், சிறுமிகளிடையே சுத்தமான சங்கீதத்தைப் பரப்புவதற்காக கந்தர்வ மகா வித்யாலயத்தைச் சேர்ந்த பண்டிதகேர் தம்முடைய வாழ்க்கையையே அர்ப்பணம் செய்துள்ளார். பொதுவாக குஜராத்திலும், குறிப்பாக ஆமதாபாத்திலும் சங்கீதத் துறையில் ஏற்பட்டுள்ள பெரும் முன்னேற்றத்தைப் பற்றி அவர் தகவல் கொடுத்திருக்கிறார். பள்ளிக்கூட பாட திட்டத்தில் சங்கீதத்தைச் சேர்ப்பதற்குக் கல்வி அதிகாரிகள் ஆதரவு தரவில்லை என்று தோன்றுகிறது என அவர் வருந்துகிறார். ஆரம்பக் கல்வி பாட திட்டத்தில் சங்கீதம் ஒரு பகுதியாக இருக்க வேண்டுமென்று தம்முடைய பரந்த அனுபவத்தைக் கொண்டு அவர் கருதுகிறார். இந்த யோசனையை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன்.

கைகளுக்குப் பயிற்சி யளிப்பது எவ்வளவு அவசியமோ, அதே மாதிரி குரலுக்கும் பயிற்சி யளிக்க வேண்டியது அவசிய

மாகும். தேகப் பயிற்சி, கைவினைத் தொழில்கள், சித்திரம் வரைதல், சங்கீதம் ஆகியவையெல்லாம் சேர்ந்து போதிக்கப்பட வேண்டும். சிறுவர், சிறுமிகளின் சிறந்த தன்மைகளை வெளிக்குக் கொண்டு வந்து, தங்களுடைய படிப்பில் அவர்களுக்கு உண்மையான அக்கறை ஏற்படச் செய்வதற்கு இது உதவியாக இருக்கும்.

இதற்கு, பயிற்சியில் புரட்சிகரமான மாறுதல்கள் செய்யப்பட வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும். நாட்டின் எதிர்காலப் பிரஜைகள் வாழ்க்கையின் பணிகளுக்கு உறுதியான அஸ்திவாரம் எழுப்ப வேண்டுமானால், இந்த நான்கும் அவசியமாகும். எந்த ஆரம்பப் பள்ளியில் போய்ப் பார்த்தாலும் சோம்பேறித்தனமும், ஒழுங்கு முறையின்மையும், முரண்பாடான பேச்சுகளுமே காணப்படுகின்றன. ஆகையால், பல்வேறு மாகாணங்களிலுமுள்ள கல்வி மந்திரிகள் கல்வி முறையை மாற்றியமைத்து, தேசத்தின் தேவைகளுக்கேற்ப அதை உருவாக்கினால், நான் குறிப்பிட்டுள்ள இந்த அவசியமான அம்சங்களை அதில் சேர்க்கத் தவறமாட்டார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். என்னுடைய ஆரம்பக் கல்வித் திட்டத்தில் இந்த அம்சங்களுக்கு நிச்சயமாக இடம் உண்டு. கடினமான ஒரு அந்நிய மொழியில் தேர்ச்சி பெற வேண்டிய சுமையை மாணவர்களிடமிருந்து அகற்றிவிட்டால், இவையெல்லாம் எளிதாகிவிடும்.

புதிய திட்டத்தை போதிப்பதற்கு வேண்டிய ஆசிரியர்கள் நம்மிடமில்லை என்பது உண்மைதான். ஆனால், அந்தச் சங்கடம் எந்தப் புதிய முயற்சிக்கும்தான் இருக்கிறது. இப்போதுள்ள ஆசிரியர்கள், கற்றுக்கொள்ள சம்மதப்பட்டால், அதற்கு அவர்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டும். அவசியமான பாடங்களில் அவர்கள் பயிற்சி பெற்ற பிறகு, அவர்களுடைய ஊதியங்களில் உடனடியாக கணிசமான உயர்வு அளிப்பதற்கான சாத்தியக் கூறுகளும் இருக்க வேண்டும். ஆரம்பக் கல்வித் திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டிய எல்லாப் பாடங்களுக்கும் தனித்தனியாக ஆசிரியர்களை நியமிப்பதென்பது நினைத்துக்கூடப் பார்க்க முடியாததாகும். அதற்கு ஏராளமான செலவும் ஆகும். அவ்விதம் செலவு செய்ய வேண்டிய அவசியமே இல்லை. ஆரம்ப ஆசிரியர்களில் சிலர் போதிய யோக்கியதாம்சங்கள் இல்லாத காரணத்தினால், சொற்ப காலத்திற்குள் இந்தப் புதிய பாடங்களைக் கற்றுக்கொள்ள முடியாமலிருக்கலாம். ஆனால், மெட்ரிகுலேஷன் வகுப்புவரையில் படித்த ஒரு மாணவனுக்கு, சங்கீதம், உடற்பயிற்சி, சித்திரம் வரைதல், ஒரு கைவினைத் தொழில் ஆகியவற்றில் ஓர் அளவுக்காவது பயிற்சி பெறுவதற்கு மூன்று மாதங்களுக்கு மேல் ஆகக்கூடாது. இவற்றில் ஓர் அளவுக்குப் பயிற்சி பெற்றால், பையன்களுக்கு இவற்றைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கும் காலத்திலேயே மேற்கொண்டு அபிவிருத்தி செய்து கொள்ள முடியும். தேசீயப் புனருத்தார

ணம் என்ற பணிக்குக் கொஞ்சம் கொஞ்சமாக தங்களைத் தயார் செய்துகொள்ள ஆசிரியர்களுக்கு ஆர்வம் இருந்தால்தான் இது சாத்தியமாகும்.

—'ஹரிஜன்'–11–9 1937

# 29
# கடினமான ஒரு கேள்வி

ஓர் ஆசிரியர் பின்வருமாறு கேட்கிறார் :

"நமது புராணங்களில் உள்ள கதைகளில் நமது தெய்வங்களையும் அம்பிகைகளையும் பற்றி நம்ப முடியாத வர்ணனைகள் காணப்படுகின்றன; அவர்களைப்பற்றி பற்பலவிதமான கட்டுக்கதைகளும் இருக்கின்றன. அவை இயற்கை அல்லது மனத்தின் சக்திகளுடைய சின்னங்கள் என்று நம்புகிறோம். உண்மையிலேயே அவர்களுக்கு அந்த உருவங்கள் இருக்கின்றனவா, அவர்கள் சொர்க்கம், கைலாசம் அல்லது வைகுண்டத்தில் வசிக்கிறார்களா என்று நாம் சந்தேகப்பட்டாலும் கூட, அவர்களைப் போற்றி வணங்கி வழிபடுகிறோம். இந்தக் கதைகளை ஒப்புக் கொள்ளுகிறோம்; அவற்றை உபயோகிக்கிறோம்; இவை மத போதனைகள் அல்லது ருசிகரமான கவிதைகள் என்று நினைக்கிறோம். இவற்றைப் பையன்களுக்கு எப்படிச் சொல்லிக் கொடுப்பது? சாராம்சத்தை அல்லது உள் அர்த்தத்தை மட்டும் வைத்துக் கொண்டு, அந்தக் கதைகள் சொல்லப்பட்டுள்ள விதத்தை மாற்றினால், பல கதைகளைக் கைவிட வேண்டியிருக்கும். மேலும், இவற்றில் பல, கட்டுக் கதைகள் என்றும் குழந்தைகளிடம் சொல்ல வேண்டியிருக்கும். (உதாரணமாக, ராகுவானவன் சந்திரனையும், சூரியனையும் விழுங்குவது பற்றிய கதை). மற்றும் பல கதைகளில் (சங்கரர்-பார்வதி, பாற்கடலைக் கடைதல் போன்றவை) தெய்வங்கள், அம்பிகைகளின் உருவங்களைப் பற்றிய வர்ணனைகளை விட்டுவிட்டால், கதைகளின் அழகே போய்விடும். அப்படியானால், நம்முடைய புராணக் கதைகளில் பெரும்பாலானவை வெறும் கற்பனைகளே என்று நாம் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமா? அல்லது அவை பூராவையும் உடனடியாக நிராகரித்துவிட வேண்டுமா? சின்னங்கள் குழந்தைகளின் மனத்தில் நன்றாகப் பதிகின்றன. மேலும், இவற்றில் நல்ல கவிதைகள் இருக்கின்றன. இவற்றைக் கைவிட்டுவிடுவது கல்வி முறையிலிருந்து சின்னங்களின் முக்கியத்துவத்தையே நிராகரிப்பதாக ஆகிவிடாதா? இதுதான் இப்போது கேள்வி. தெய்வங்களைப் பற்றிய கதைகளைச் சொல்லும் போது பக்தி பூர்வமான சூழ்நிலை இருக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது. குற்றம் குறைகளை விமர்சனம் செய்பவருக்கு அங்கே இடமில்லை. அல்லது இப்போது செய்வதைப் போலவே செய்து கொண்டிருக்க வேண்டுமா? அதாவது, தெய்வங்கள், அம்பிகைகளின் விக்கிரகங்களை ஆராதிப்பதில் தவறு ஒன்றுமில்லை; ஆனால், நிச்சயமான உண்மையைத் தெரிந்து கொள்ளுவதற்கு அவர்களுக்கு வயது வரும்வரையில், இது தற்காலிகமான ஒரு காரியத்திற்குப் பயன்படும் ஒரு மட்டரகமான உண்மை என்று வைத்துக் கொள்ளலாமா? இது சத்தியத்தை மீறுவதாகுமா,

இல்லையா? வகுப்புகளில் கதை சொல்லும்போது இந்தப் பிரச்னை எழுவ தால் இது மிகவும் முக்கியமானதாகியிருக்கிறது. சுருங்கக் கூறுமிடத்து, ஹிந்துக்கள் என்ற முறையிலும், நம்முடைய புராணக் கதைகளைப் பற்றி நம்முடைய நிலை எப்படி இருக்கவேண்டும்?''

நானும் ஒரு விதத்தில் ஆசிரியர்தான். இத்துறையில் நான் சோதனைகள் நடத்தியிருக்கிறேன், இன்னமும் நடத்திக் கொண் டிருக்கிறேன். ஆகையால், இந்தக் கேள்விக்கு பதில் அளிக்கி றேன். இந்தக் கேள்வியை ஒரு நண்பர் எழுப்பியிருக்கிறார். இதுவும், இம்மாதிரியான வேறு சில கேள்விகளும், விடையளிக் கப்படாமல் கொஞ்சகாலமாக என்னிடம் இருந்துகொண்டிருக் கின்றன. இந்த நண்பர் தம்முடைய கேள்விக்கு 'நவஜீவனில்' பதிலளிக்க வேண்டும் என்று விரும்பவில்லை. தம்முடைய சங்கடங்களைத் தீர்த்துக் கொள்ளுவதற்குப் பல ஆசிரியர்கள் என் உதவியை நாடுகிறார்கள். இந்த விஷயமாக என்னுடைய கருத்துகள் சிலருக்கு வழிகாட்டியாக இருக்கலாம் ஆகையால், 'நவஜீவன்' மூலம் இதற்கு பதிலளிப்பதுதான் சரி என்று நான் கருதுகிறேன்.

என்னைப் பொறுத்தவரையில், புராணங்களை மத நூல்களாக நான் நம்புகிறேன். நம்முடைய தெய்வங்கள், அம்பிகைகளிடமும் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால், புராணிகர்கள் இதற்குச் சில வியாக்கியானங்கள் கூறுகிறார்கள்; மற்றவர்களும் அப்படிச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறார்கள். ஆனால், அம்மாதிரி நம்பிக்கை எனக்கில்லை. இப்போது பொதுவாக சமூகம் அதை எந்த விதத்தில் நம்புகிறதோ அந்த மாதிரி நம்பிக்கை எனக் கில்லை என்பதும் எனக்குத் தெரியும். இந்திரன், வருணன் போன்ற தேவதைகள் வானத்தில் வசிக்கிறார்கள் என்றோ, அவர் கள் வெவ்வேறானவர்கள் என்றோ நான் நம்பவில்லை. அல்லது சரஸ்வதி போன்ற பெண் தெய்வங்கள் தனித்தனியானவர்கள் என்றும் நான் நம்பவில்லை. ஆனால், தெய்வங்களும் தேவதை களும் வெவ்வேறு விதமான சக்திகளைப் பிரதிபலிக்கின்றன என்று நான் நம்புகிறேன். இந்த வர்ணனைகளில் கவிதை இருக்கிறது. மதத்தில் கவிதைக்கு இடமுண்டு. நாம் நம்பும் எல்லாவற்றையும் ஹிந்து மதம் சாத்திர ரூபமாகச் செய்திருக் கிறது. கடவுளுக்கு எவ்வளவோ விதமான சக்திகள் இருக் கின்றன என்று நம்புகிறவர்கள் யாவரும், ஒரு விதத்தில் தெய்வங் களை நம்புகிறவர்கள் என்று சொல்லலாம். கடவுளுக்கு எவ்வளவோ சக்திகள் இருப்பதைப்பெலாலவே, எவ்வளவோ உருவங்களும் இருக்கின்றன. எந்தப் பெயரில், எந்த உருவத்தில் ஒருவர் கடவுளை வழிபட விரும்புகிறாரோ அந்தப் பெய ரில், அந்த உருவத்தில் அவர் வழிபடுவதற்கு உரிமை இருக்க வேண்டும். இதில் தவறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. எப்போது, எங்கு அவசியம் ஏற்படுகிறதோ அங்கு சின்னங்களை விளக்கிக் கூறலாம்; அவற்றின் உள்

அர்த்தங்களையும் பையன்களுக்குத் தெளிவாக்கலாம். இப்படிச் செய்வதற்கு நான் தயங்கமாட்டேன். என்னுடைய சொந்த அனுபவத்தைக் கொண்டு பார்க்கும் போது, இதனால் தீய பலன் எதுவும் ஏற்பட்டிருப்பதாகவும் நான் சொல்ல முடியாது. பையன்களைத் தவறான பாதையில் இட்டுச் செல்ல வேண்டும் என்பது என்னுடைய விருப்பமல்ல. ஹிமய மலைதான் சிவபெருமான் என்பதையும், பார்வதி என்ற உருவத்தில் கங்கை அவருடைய ஜடையிலிருந்து தோன்றிப் பாய்கிற தென்பதையும் ஒப்புக் கொள்ளுவதில் எனக்கு ஒரு கஷ்டமும் தோன்றவில்லை. அது மட்டுமல்ல; இந்தக் கருத்துகள், கடவுளிடம் எனக்குள்ள பக்தியை மேலும் வலுப்படுத்துகின்றன. எல்லாவற்றிலும் கடவுள் இருக்கிறார் என்பதை நான் இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்ளுவதற்கு இது உதவி செய்கிறது. பாற்கடலைக் கடைந்தது போன்ற கதைகளை அவரவர் இஷ்டப்படி வியாக்கியானம் செய்து கொள்ளலாம். ஆனால், இந்த வியாக்கியானம் நல்லொழுக்கங்களையும், நன்னடத்தையையும் ஊட்டுவதற்குத் துணையாக இருக்கின்றனவா என்று பார்த்துக் கொள்ளவேண்டும். அறிஞர்கள் தங்கள் அறிவுக்குத் தகுந்தாற்போல் அத்தகைய வியாக்கியானங்களைச் செய்துமிருக்கிறார்கள். ஆனால், அறிஞர்கள்தான் உள் அர்த்தங்களை வியாக்கியானம் செய்யலாம் என்று நினைத்துக் கொண்டு விடக் கூடாது. மனிதனின் வளர்ச்சியில் ஒரு முறை இருப்பதைப் போலவே, வார்த்தைகள், வாக்கியங்களின் அர்த்தத்திற்கும் ஒரு முறை இருக்கிறது. நமது புத்தியும், உள்ளமும் வளர்ச்சி பெற்றுக் கொண்டு போகும் போது, வார்த்தைகளும், வாக்கியங்களின் அர்த்தங்களும் தெளிவு பட வேண்டும்; அப்படித் தெளிவு படவும் செய்கின்றன. அர்த்தங்களைக் குறுகிய வேலிபோட்டு அடைத்து விட்டால், அது க்ஷீணிக்காமல் இருக்க முடியாது. அர்த்தமும், அந்த அர்த்தத்திற்கு விளக்கம் கூறுபவரும் சேர்ந்தேதான் வளர்ச்சி பெறுகிறார்கள். சாத்திரங்களில் தாம் படிப்பவற்றை, அவரவர்கள் தம் விருப்பத்திற்கும், கருத்துக்கும் ஏற்ற விதத்தில் அர்த்தத்தைத் திரித்தும், மாற்றியும் கூறிக்கொண்டுதான் இருப்பார்கள். மனத்தில் தூய்மை இல்லாதவர்களுக்கு பாகவதத்தில் வரன் முறையற்ற காம இச்சை வருணிக்கப்பட்டிருப்பதாகத்தான் தோன்றும்; ஆனால், ஏகநாதர் அதன் மூலம்தான் ஆத்மதரிசனம் பெற முடிந்தது. வரன் முறையற்ற காமக் களியாட்டங்களுக்கு ஊக்கமளிக்க வேண்டும் என்பது பாகவதத்தை எழுதியவரின் நோக்கம் அல்லவென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். ஆனால், இன்று அதை வாசிப்பவர்களுக்கு, அதில் ஒழுக்கக் கேடானது ஏதாவது இருப்பதாகத் தோன்றினால், அவர்கள் தாராளமாக அதை நிராகரித்து விடலாம். அச்சில் காணப்படுவதெல்லாம்—முக்கியமாக, அது சமஸ்கிருதத்தில் இருந்தால்—அது உண்மையான மதம் என்று நினைப்பது கண்மூடித்தனமான மூட நம்பிக்கையாகும், மிகவும் மூடத் தனமுமாகும்.

ஆகையால், இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு எனக்கு ஒரே ஒரு நல்ல வழிதான் தெரியும். எனவே, ஆசிரியர்களாக இருப்பவர்களுக்கு அதை நான் சமர்ப்பிக்கிறேன். உண்மைக்கு முரணுனதாகவோ தீயவற்றிற்கு ஊக்கமளிப்பதாகவோ உள்ள எதையும், அது வேதங்களிலிருந்தாலும், புராணங்களிலிருந்தாலும், வேறு மத நூல்களிலிருந்தாலும், நாம் நிராகரித்து விட வேண்டும். சிறையில் இருந்த காலத்தில் எனக்கு ஏற்பட்ட ஒரு அனுபவத்தை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ஜெயதேவர் இயற்றிய கீத கோவிந்தத்தைப் பற்றிப் பலர் புகழ்ச்சியாகப் பேசுவதை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன். ஆகையால், சந்தர்ப்பம் கிடைத்தபோது அதை வாசிக்க விரும்பினேன். இந்த நூல் பலருக்கு இன்பம் அளித்திருக்கலாம். அதைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனுல், என்னைப் பொறுத்தவரையில் அதைப் படிப்பது எனக்கு சித்திரவதையாகவே இருந்தது. அதை நான் படித்தேன்; ஆனுல் அதிலுள்ள வர்ணனைகள் எனக்கு வேதனையளித்தன. குற்றம் என்னிடம்தான் இருந்திருக்கக் கூடும் என்பதைத் தயக்கமின்றி ஒப்புக் கொள்ளுகிறேன். தன்னுடைய ஒழுக்க உணர்ச்சிக்கு முரணுக இருப்பவைகளை நிராகரிக்க வாசகர்களுக்கு உரிமை இருக்கிறது என்பதைக் காட்டுவதற்காகவே என்னுடைய இந்த அனுபவத்தைச் சொல்லுகிறேன். கீத கோவிந்தம் என் மனத்தில் நல்ல உணர்ச்சிகளைத் தூண்டிவிடவில்லையாகையால், அதை என்னுல் படிக்க முடியவில்லை. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி நான் தனியாக சில விதிகள் வைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகையால், அதை நான் நிராகரிக்க முடிந்தது. தீய எண்ணங்களை அகற்றவும், கண்மூடித்தனமான விருப்பு வெறுப்புகளைக் குறைக்கவும் உதவியாக உள்ளவற்றை மட்டும் தான் மதபோதனைகளாகக் கருத வேண்டும். தூக்கு மேடை ஏறும் போது கூட, சத்தியமே பேச வேண்டும் என்று மனத்தை உறுதிப்படுத்தக் கூடிய தன்மை வாய்ந்தவைகளும் ஏற்பதற்குத் தகுதியுள்ளவையே. கீத கோவிந்தம் இந்தச் சோதனையில் வெற்றி பெறவில்லை. ஆகையால், என்னுல் அதைப் படிக்க முடியவில்லை.

சாத்திரங்களில் ஒரு விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது என்ற காரணத்திஞல் மட்டுமே அது செய்யத் தகுதியுள்ளது என்று கருதும் பல வயோதிகர்களும், சில இளைஞர்களும் கூட நம்மிடையே இருக்கிருர்கள். இந்த நம்பிக்கை மிகவும் கேடு விளைவிக்கக் கூடியது. இதஞல் நமது ஒழுக்கம் கெடும் என்பது நிச்சயம். சாத்திரம் என்ருல் என்ன என்று நமக்கு சரியாகத் தெரியாது. சாத்திரம் என்ற பெயரில் கூறப்படுவதெல்லாம் தருமம் என்று நினைத்துக் கொண்டு, அதன்படி நடப்பதென்று ஆரம்பித்தால், விரும்பத்தகாத விளைவுகள்தான் ஏற்படும். உதாரணமாக, மனு ஸ்மிருதியை எடுத்துக் கொள்ளுவோம். அதிலுள்ள சுலோகங்களில் எவை உண்மையானவை, எவை இடைச் செரு

கல்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால், அதிலுள்ள சில சுலோகங்கள் நிச்சயமாக மதத் தன்மை வாய்ந்தவை என்று சொல்ல முடியாது. அம்மாதிரி சுலோகங்களை நாம் நிராகரித்து விட வேண்டும். துளஸிதாசரிடம் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. கவிதைகளிலேயே மிகச் சிறந்தது ராமாயணம்தான் என்று நான் நினைக்கிறேன். ஆனால், அதில் ஒரு சுலோகத்தி லுள்ள பின் கண்ட கருத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாது: "டமாரம், கிராமத்திலுள்ள முட்டாள், சூத்திரர்கள், மிருகங்கள், பெண்கள்—இவர்கள், அடிப்பதற்குத்தான் தகுதியுள்ளவர்கள்." தம்முடைய காலத்தில் நிலவிய கருத்துகளுக்கு ஏற்ற முறையில் துளஸிதாசர் இந்தக் கருத்தைத் தெரிவித்திருக்கிறார் என்பதற் காக, நான் சொன்னபடி கேட்காதபோது சூத்திரர்கள் என்று சொல்லப்படுபவர்களையோ, என் மனைவியையோ அல்லது மிருகங்களையோ கூட நான் அடிக்க ஆரம்பிப்பது நியாய மாகாது.

அந்த ஆசிரியர் எழுப்பிய கேள்விகளுக்கு இந்தப் பதில் தெளிவாக இருக்கும் என்று நினைக்கிறேன். நல்லொழுக்கத்திற்கு ஆக்கம் அளிக்கும் அளவுக்கு தெய்வங்களையும், தேவிகளையும் ஏற்றுக் கொள்ளுவதற்கு எனக்கு ஒரு கஷ்டமுமில்லை. சின்னங் களையும், உள் அர்த்தங்களையும் விளக்கிக் கூறிவிட்டால், இந்தக் கதைகளில் பையன்களுக்கு அக்கறை குறைந்து விடுகிற தென்பதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. அப்படியே அவர் களுக்கு அக்கறை குறைவதாக வைத்துக் கொண்டாலும், சத்தி யத்தை பலிகொடுத்தாவது, பையன்கள் விரும்புவதைச் சொல்லிக் கொடுப்பது என்ற பழக்கத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. சத்தியத்தில் என்ன ரஸம் இருக்கிறதோ அதையே மாணவர்களுக்கு அளிக்க வேண்டும். இந்த ரஸத்தை மாணவர் களுக்குப் புரியும் விதத்தில் சொல்லிக் கொடுக்க முடியும் என்பதே என்னுடைய அனுபவமாகும். பத்து தலை ராட்சதன் என்பது அசாத்தியமானது என்பதை முதலில் அவர்களுக்குச் சொல்ல வேண்டும். அது மாதிரி முன்பும் இருந்ததில்லை, இனியும் இருக்கப் போவதில்லை. இதைத் தெளிவாக்கிய பிறகு, ராவணன் என்று நிஜமாகவே ஒருவன் இருந்ததாக இந்தக் கதையைச் சொன்னால் அது உண்மையை மறுப்பதாகாது; அதில் ரஸக் குறைவும் இராது. பத்து தலை ராட்சதனை ராவணன் நம்முள்ளிருக்கும் தீமையைத் தவிர வேறு எதுவுமில்லை; இதற்கு பத்து தலைகள் மட்டுமில்லை, ஆயிரம் தலைகள் கூட இருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளக் கூடிய புத்திசாலித்தனம் குழந்தை களுக்கு இருக்கிறது. ஈசாப்பின் கட்டுக் கதைகளில், பறவை களும், விலங்குகளும் மனிதர்களைப் போலவே பேசுகின்றன. பறவைகளும், விலங்குகளும் பேசுவதில்லை என்பது பையன் களுக்கும் பெண்களுக்கும் தெரியும். இருந்தாலும், அதனால் அந்தக் கதைகளில் அவர்களுக்குள்ள சுவை துளிக்கூடக் குறைவ தில்லை.

'நவஜீவன்'—18—7—1926

# 30

# உண்மையைத் திரித்தல்

ஓர் உயர்தரப் பள்ளித் தலைமை ஆசிரியரின் உதவியுடன் பள்ளிக்கூட மாணவர்களுக்கு கீதை வகுப்புகள் நடத்த ஒரு பிரமுகர் முயற்சித்துவருகிறார். ஆனால், கீதை வகுப்புகளை ஆரம்பிப்பதற்காக சமீபத்தில் கூட்டப்பட்ட ஒரு கூட்டத்தில் ஒரு பாங்கியின் மானேஜர் எழுந்திருந்து, நடவடிக்கைகள் சீராக நடப்பதைத் தடுத்துக் குழப்பி விட்டார். கீதை படிப்பதற்கு மாணவர்களுக்கு அதிகாரம் (தகுதி) இல்லை என்றும், அது மாணவர்களிடம் கொடுக்கப்படக் கூடிய ஒரு விளையாட்டு சாமான் அல்ல என்றும் அவர் கூறினார். இந்தச் சம்பவத்தைப் பற்றி பல வாதங்களுடன் ஒரு நீண்ட கடிதத்தை அந்த பிரமுகர் எனக்கு அனுப்பியிருக்கிறார். தமக்கு ஆதாரமாக ராமகிருஷ்ண பரமஹம்சரின் உபதேசங்களிலிருந்து சில மேற்கோள்களையும் அவர் கொடுத்திருக்கிறார். அவற்றிலிருந்து சிலவற்றைக் கீழே தருகிறேன் :

"பையன்களும், யுவர்களும் கடவுளிடம் நாட்டம் செலுத்துவதற்கு ஊக்கம் அளிக்கப்பட வேண்டும். அவர்கள் சுவைக்கப்படாத பழங்களைப் போன்றவர்கள் ; உலக ஆசைகளினால் கொஞ்சமும் மாசுபடாதவர்கள். அந்த ஆசைகள் அவர்கள் மனத்தில் புகுந்து விட்டால், விமோசனப் பாதையில் அவர்களை இட்டுச் செல்வது மிகவும் கஷ்டமாக இருக்கும்.

"இளைஞர்களிடம் நான் ஏன் இவ்வளவு அன்பு காட்டுகிறேன்? அவர்கள் தங்கள் மனத்தின் முழு எஜமானர்கள். அவர்களுக்கு வயது அதிகமாக ஆக இது பல பிரிவுகளாகவும் உட்பிரிவுகளாகவும் கூறு போடப்பட்டு விடுகிறது. மணமான ஒருவனின் மனத்தில் ஒரு பாதி அவனுடைய மனைவியை நாடுகிறது. ஒரு குழந்தை பிறந்து விட்டால் மற்றொரு கால் பாகம் போய்விடுகிறது. மீதமுள்ள கால் பாகம் பெற்றோர்கள், உலக கௌரவங்கள், ஆடைகள் முதலியவைகளுக்குப் போய்விடுகிறது. ஆகையால் ஓர் இளம் உள்ளம் சுலபமாகக் கடவுளை அறிய முடியும். வயதானவர்களுக்கு அது மிகவும் கஷ்டமாக இருக்கும்.

"ஒரு கிளியின் தொண்டையிலுள்ள தசைநார்கள் வயது காரணமாக இறுகிவிட்டால் அதற்குப் பாடக் கற்றுக் கொடுக்க முடியாது. இளமையிலேயே அதற்குக் கற்றுக் கொடுத்திருக்க வேண்டும். அதே மாதிரி வயதான காலத்தில் கடவுளிடம் மனத்தைச் செலுத்துவது கடினமாகும். இளமையில் அதைச் சுலபமாகச் செய்ய முடியும்.

"ஒரு சேர் பாலில் வீசம் சேர் தண்ணீர் கலந்திருந்தால் அதிக உழைப்பில்லாமலும் விறகு செலவில்லாமலும் அதை கோவாவாக ஆக்கிவிட முடியும். ஆனால், ஒரு சேர் பாலில் கால் சேர் தண்ணீர் இருந்தால் அதை சுலபமாகக் கெட்டிப் படுத்த முடியாது. அதற்கு நிறைய விறகு வேண்டியிருக்கும். இளம் உள்ளத்தில் உலக ஆசைகள் அற்பமாகத்தான் இருக்கு

மாதலால், சுலபமாக அதைக் கடவுளிடம் திருப்பி விட முடியும். வயதானவர்களின் உள்ளங்களில் அத்தகைய ஆசைகள் நிறைய இருக்குமாதலால் அப்படிச் செய்ய முடியாது.

"குருத்து மூங்கிலை எளிதில் வளைத்துவிட முடியும். ஆனால், நன்கு முற்றிய மூங்கிலை வளைத்தால் அது முறிந்துவிடுகிறது. இளம் உள்ளங்களை கடவுள் பக்கம் திருப்புவது சுலபம்: ஆனால், வயதானவர்களின் உள்ளம் நம் பிடியிலிருந்து நழுவி விடும்.

"மனிதனுடைய மனம் ஒரு கடுகுப் பொட்டலம் போன்றது. ஒரு கடுகுப் பொட்டலம் அவிழ்ந்து போய் நாலாபக்கங்களிலும் சிதறி ஓடிவிட்டால், அதைத் திரட்டிச் சேர்ப்பது மிகக் கடினம். அதுபோலவே மனிதனுடைய மனம் பல உலக ஆசைகளுக்கு உட்பட்டு பல்வேறு திசைகளில் அலைந்து கொண்டிருக்கும்போது அதைத் திரட்டி ஒரு இடத்திற்குக் கொண்டுவருவது எளிதல்ல. பல்வேறு திசைகளில் ஓடி அலையாத ஒரு இளைஞனின் மனத்தை எந்த ஒன்றின் மீதும் சுலபமாக நிலைக்க வைத்துவிட முடியும்; ஆனால் வயதான ஒரு மனிதனின் மனம் முற்றிலும் உலக விவகாரங்களால் ஆட்கொள்ளப்பட்டிருப்பதால், தன் மனத்தை அவற்றிலிருந்து திருப்பி கடவுளிடம் செலுத்துவது அவனுக்கு மிகக் கஷ்டமாக இருக்கும்."

வேதங்களைப் படிப்பதற்கு அதிகாரம் வேண்டும் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், கீதை படிப்பதற்கு அந்த பாங்கி மானேஜர் கூறிய தகுதி வேண்டும் என்பது எனக்குத் தெரியவே தெரியாது. எந்த மாதிரி தகுதி வேண்டும் என்று அவர் விவரங்கள் கொடுத்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். நம்பிக்கையில்லாமல் கேலி செய்பவர்களைத் தவிர, மற்ற யாவருக்கும் அது பொதுவானது என்று கீதை தெளிவாகக் கூறுகிறது. ஹிந்து மாணவர்கள் கீதையைப் படிக்கக் கூடாதென்றால், எந்த மத நூல்களையுமே அவர்கள் படிக்கக் கூடாது. ஹிந்து மதத்தில் மாணவனுடைய வாழ்க்கை ஒரு பிரம்மச்சாரியினுடைய வாழ்க்கையாக இருக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. அந்த வாழ்க்கையை அவன் அனுபவ பூர்வமான மத அறிவுடன் ஆரம்பிக்க வேண்டும். அப்பொழுதுதான் தான் படித்தவைகளை அவன் நன்கு புரிந்துகொண்டு, தன்னுடைய வாழ்க்கையை மதக் கோட்பாடுகளுக்கிணங்க அமைத்துக் கொள்ள முடியும். முன் காலத்தில் ஒரு மாணவன் மதம் என்ன என்பதைத் தெரிந்து கொள்வதற்கு முன்னதாகவே, தன் மதக் கோட்பாடுகளுக்கிணங்க வாழ ஆரம்பித்துவிடுவான். பின்னர், தன்னுடைய நடத்தைக்கு விதிக்கப்பட்டுள்ள கோட்பாடுகளின் காரணத்தை அறிந்து கொள்வதற்காக அவனுக்கு உரிய உபதேசங்கள் செய்யப்படுவது வழக்கம்.

அப்பொழுதும் அதிகாரம் என்பது இருக்கத்தான் இருந்தது. ஆனால், அந்த அதிகாரம் என்பது ஐந்து யமங்கள் என்ற நன்னடத்தையாகும். அகிம்சை (சாத்விகம்), சத்தியம் (உண்மை), அஸ்தேயம் (திருடாமை), அபரிக்ரகம் (உடைமையின்மை), பிரும்மச்சர்யம் (புலனடக்கம்) ஆகியவையே ஐந்து

யமங்களாகும். மதத்தைப்பற்றி படிக்க விரும்பிய யாரும் இந்த விதிகளைப் பின்பற்றி ஆக வேண்டும். மதத்தின் இந்த அடிப்படைகளின் அவசியத்தை ருசுப்பிப்பதற்கு எந்த மத நூல்களிலிருந்தும் அவர் ஆதாரம் தேட வேண்டியதில்லை.

ஆனால், ஆழ்ந்த கருத்துள்ள மற்றும் பல சொற்களைப் போலவே அதிகாரம் என்ற சொல்லின் அர்த்தமும் திரிக்கப்பட்டுவிட்டது. ஒழுக்கமே இல்லாத ஒரு மனிதன், பிராம்மணன் என்று அழைக்கப்படுகிறான் என்ற ஒரே காரணத்தினால், நமக்கு சாத்திரங்களை வாசித்துக் காட்டி வியாக்கியானங்கள் செய்வதற்கும் அதிகாரம் உள்ளவனாக இருக்கிறான். ஆனால், மற்றொருவன் ஒரு குறிப்பிட்ட பிரிவில் பிறந்ததால் தீண்டத்தகாதவன் என்று முத்திரையிடப்பட்டு விடுகிறான். அதன் காரணமாக, அவன் எவ்வளவு ஒழுக்கமுள்ளவனாக இருந்தாலும், இந்த சாத்திரங்களைப் படித்துச் சொல்ல அவன் தகுதியற்றவன் ஆகிவிடுகிறான்.

மகாபாரதத்தின் ஒரு பகுதிதான் பகவத்கீதை. அந்த மகா காவியத்தின் ஆசிரியர் பைத்தியக்காரத்தனமான இந்த ஆக்ஷேபணையைச் சமாளிப்பதற்காகவே அதை எழுதினார். நான் குறிப்பிட்டுள்ள விதிகளைப் பின்பற்றுபவர், அவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், அதைப் படிக்கலாம் என்று விதித்தார். மத நூல்களைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டுமானால், தூய்மையும் பக்தியும் அவசியம் என்பது அனுபவத்தில் தெரிந்திருக்கிறது.

இந்த அச்சு யந்திர யுகத்தில் எல்லாத் தடைகளும் அகற்றப்பட்டுவிட்டன. மத நம்பிக்கையுள்ளவர்களைப் போல் அதே சுதந்திரத்துடன் நம்பிக்கையில்லாதவர்களும் மத நூல்களை வாசிக்கிறார்கள். ஆனால், மத போதனை, பக்தி மார்க்கம், இவற்றின் ஒரு பகுதியாக மாணவர்கள் கீதையை வாசிப்பது சரியானதுதானா என்பதைப்பற்றியே இங்கு நாம் விவாதிக்கிறோம். இத்தகைய போதனைக்கு, கட்டுப்பாடுகளுக்கு உட்படக் கூடியவர்களும், தகுதியானவர்களும் மாணவர்களைத் தவிர வேறு யாரும் இருக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. துரதிருஷ்டவசமாக மாணவர்களோ, பெரும்பாலான ஆசிரியர்களோ, நான் குறிப்பிட்ட ஐந்து நல்லொழுக்க விதிகளில்தான் உண்மையான அதிகாரம் இருக்கிறது என்பதைக் கவனிப்பதில்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

—'எங் இந்தியா'–8–12–1927

# 31

# தேசீயப் பள்ளிகளில் கீதை

தேசீயப் பள்ளிக்கூடங்களில் ஹிந்துக்கள், ஹிந்துக்களல்லாதார் என்ற வேற்றுமையின்றி எல்லாப் பையன்களுக்கும் கட்டாயமாக கீதை சொல்லிக் கொடுக்கலாமா என்று ஒரு நிருபர் கேட்கிறார். இரண்டு வருடங்களுக்கு முன்பு நான் மைசூரில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது, ஓர் உயர்தரப் பள்ளியிலுள்ள ஹிந்து மாணவர்களுக்கு கீதை தெரியவில்லை என்பதைப் பற்றி என்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டேன். தேசீயப் பள்ளிகளில் மட்டுமின்றி, எல்லாப் பள்ளிகளிலுமே கீதை போதிக்கப்பட வேண்டும் என்பதே என்னுடைய ஆசை. ஒரு ஹிந்து பையனுக்கோ, பெண்ணுக்கோ கீதை தெரியவில்லையென்றால், அதை வெட்கப்படவேண்டிய ஒரு விஷயமாகவே கருத வேண்டும். ஆனால், இதைக் கட்டாயமாக போதிப்பதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. முக்கியமாக, தேசீயப் பள்ளிகளில் இதைக் கட்டாயமாக்குவதை நான் விரும்பவில்லை. கீதை என்பது எல்லோருக்கும் பொதுவான ஒரு நூல் என்பது உண்மைதான். ஆனால், இதை யார்மீதும் பலவந்தமாகத் திணிக்க முடியாது. ஒரு கிறிஸ்தவர் அல்லது முஸ்லிம் அல்லது பார்ஸி, கீதை எல்லோருக்கும் பொதுவான நூல் என்று கூறப்படுவதை மறுக்கலாம். பைபிள் அல்லது குரான் அல்லது அவெஸ்தா தான் அத்தகைய நூல் என்று முறையே கிறிஸ்தவர்களும், முஸ்லிம்களும், பார்சிகளும், உரிமை கொண்டாடலாம். ஹிந்துக்கள் என்று கூறிக் கொள்வோர் எல்லோருக்கும் கூட கீதையின் உபதேசங்களைக் கட்டாய பாடமாக்க முடியாது என்றே நான் அஞ்சுகிறேன். பல சீக்கியர்களும், ஜைனர்களும் தங்களை ஹிந்துக்களாகவே கருதுகிறார்கள். ஆனால், தங்களுடைய பையன்களுக்கும், பெண்களுக்கும் கீதையைக் கட்டாய பாடமாக வைப்பதை அவர்கள் ஆட்சேபிக்கக் கூடும். மதச் சார்புள்ள பள்ளிகளின் விஷயம் வேறு. உதாரணமாக, பாடத்தின் ஒரு பகுதியாக கீதை சேர்க்கப்படுவது முற்றிலும் சரியானது என்றே நான் கருதுவேன். தனக்கென்று தனியாக ஒரு பாட முறையை நிர்ணயித்துக் கொள்ள ஒவ்வொரு தனியார் பள்ளிக்கும் உரிமையுண்டு. ஆனால், ஒரு தேசீயப் பள்ளி நன்கு வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் தான் செயல்பட முடியும். உரிமையில் தலையீடு இல்லை யென்றால், அங்கு கட்டாயம் என்பதும் இல்லை. குறிப்பிட்ட ஒரு தனியார் பள்ளியில்தான் சேருவேன் என்று பாத்தியதை கொண்டாட யாருக்கும் உரிமையில்லை ; ஆனால், ஒரு தேசீயப் பள்ளியில் சேருவதற்கு, நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. ஆகையால், ஒன்றில் சேருவதற்கு நிபந்தனையாக இருப்பது, மன்றொன்றில் கட்டாயமாக இருக்கும். வெளியிலிருந்து கட்டா

யப்படுத்தி கீதையை எல்லோரும் கற்றுக் கொள்ளும்படி செய்து விடவே முடியாது. கீதையில் மதிப்பு வைத்திருப்பவர்கள், அதை மற்றவர்கள் மீது திணிக்க முயற்சி செய்யாமல் இருக்க வேண்டும். அதனுடைய உபதேசங்களைத் தங்களுடைய வாழ்க்கையிலேயே நடத்திக் காட்ட வேண்டும். அப்போது கீதை பொதுவானதாகிவிடும்.

—'எங் இந்தியா' – 20—6—1929

# 32

# சிறுவர்கள் புரிந்துகொள்ள முடியுமா?

குஜராத் வித்யாபீடத்தைச் சேர்ந்த ஒரு மாணவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"மதக் கல்வி பற்றி சிறுவர்களுக்கு நீங்கள் எழுதிய சில கட்டுரைகளிலிருந்து என் மனத்தில் எழுந்துள்ள ஒரு சந்தேகத்தை உங்களிடம் கூற விரும்புகிறேன். அவற்றைப் படிக்கும்போது, பையன்களைப்பற்றி நீங்கள் சில விசித்திரமான எண்ணங்கள் கொண்டுள்ளீர்கள் என்றே எனக்குத் தோன்றியது. நாங்கள் எவ்வளவு தூரம் விஷயங்களைப் புரிந்து கொள்ள முடியும் என்பது பற்றி நீங்கள் கொண்டுள்ள எண்ணமும், தன்னைத்தானே அறிந்து கொள்ளும் சக்தி எங்களுக்கு இருக்கிறது என்ற உங்களுடைய நம்பிக்கையும் அர்த்தமற்றவை போல் எனக்குத் தோன்றுகிறது. ஹிந்தியில் நீங்கள் எழுதியுள்ள கட்டுரையொன்றில் பின்வருமாறு கூறியிருக்கிறீர்கள் :

"'ஒரு பையன் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்பு, உலக அறிவு பெறுவதற்கு முன்பு, ஆன்மா, சத்தியம், அன்பு முதலியவைகளைப் பற்றியும், ஆன்மாவில் எந்தெந்த சக்திகள் மறைந்திருக்கின்றன என்றும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்'.

"எங்களுடைய பாடமாலையில் உள்ள பாடங்களில் ஒன்றில் மேற்கண்ட வாக்கியம் காணப்படுகிறது. உலகத்தை அறிவதற்கு முன்பு ஒரு பையன் ஆன்மா, அன்பு, சத்தியம் முதலியவைகள் என்ன என்று எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? எனக்குப் புரிந்தவரையில் இவை ஆழ்ந்த தத்துவங்களைப் பற்றியவை; இவை சிக்கலான சிந்தனைகளுக்கு உரியவை. மேலும், ஒரு சிறு பையன் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்பு இவைகளைத் தெரிந்து கொள்ளுவதென்பது அசாத்தியமானது. ஏனெனில், அந்த இளம் வயதில் விஷயங்களைப் புரிந்து கொள்ளும் சக்தி வளர்ச்சி பெற்றிருக்காது. ஆகையால், இந்த விஷயத்தில் நீங்கள் கூறுவதை நான் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

"'கடினமான ஒரு கேள்வி' என்ற கட்டுரையிலும் இந்த விஷயத்தைப் பற்றி மீண்டும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக் கட்டுரை 18—7—1926 தேதியிட்ட 'நவஜீவன்' பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. அதில் நீங்கள் பின்வருமாறு கூறுகிறீர்கள் :

"'பத்து தலை ராட்சதனை ராவணன் நம்முள்ளிருக்கும் தீமையைத் தவிர வேறு எதுவுமில்லை; இதற்குப் பத்து தலைகள் மட்டுமில்லை, ஆயிரம் தலைகள் கூட இருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளக் கூடிய புத்திசாலித் தனம் சிறுவர்களுக்கு இருக்கிறது'.

"அந்த அளவு புத்திசாலித்தனம் பையன்களுக்கு இருக்கிறது என்று நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்கள்? ராவணனுடைய கதையைக் கேட்கும் ஒரு பையனுக்கு அம்மாதிரி எண்ணம் ஏற்படுமென்று நான் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை.

"பத்தல்ல, ஆயிரம் தலைகள் உள்ள தீமை நம்முள் இருக்கிறது என்ற எண்ணம், படித்தவருக்குக் கூட ஏற்படாது. உண்மையைத் தேடுவோர் அல்லது ஆன்மிக மனப்பான்மையுள்ள ஒருவருக்குத்தான் அது புலப்படும். சாதாரணமாக, இந்த எண்ணம் வயது வந்தவருக்குக் கூட ஏற்படாது. அப்படியிருக்க, பையன்கள் விஷயத்தில் அதை நீங்கள் எப்படிச் சொல்லு கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை. எந்தப் பையனுக்கும் அம்மாதிரி எண்ணம் ஏற்படவே ஏற்படாது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

"ஆசிரமப் பிரார்த்தனையின்போது பையன்களுக்கு கீதையும், ராமாய ணமும் சொல்லிக் கொடுக்கப்படுவதை, உங்களுடைய ஆதாரமற்ற கருத்து களுக்கு நல்ல உதாரணமாகக் கூறலாம்.

"மாணவர்களின் சொல்வளத்தைப் பெருக்குவதற்காகவோ, மொழியில் அவர்கள் இன்னும் அதிகத் தேர்ச்சி பெறுவதற்காகவோ நீங்கள் அவர்களுக்கு அவற்றைப் போதிக்கிறீர்கள் என்று நான் நினைக்கவில்லை. சில சமயங்களில் ஆழ்ந்த தத்துவப் பிரச்னைகளைப்பற்றிப் பையன்களிடையே நீங்கள் விவா தித்து, விளக்க ஆரம்பிக்கும்போது, அவர்களுக்கு அது புரியாமல் தூங்கத் தொடங்கிவிடுகிறார்கள். இதில் மற்றொரு நிச்சயமான கேள்வியும் எழுகிறது. விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தைகளை பாபுஜி இழுத்துவந்து, 'ஸ்திதப் பிரக்ஞன் எப்படியிருப்பான்', 'கர்மம் என்றால் என்ன', 'தியாகம் என்றால் என்ன' என்பன போன்ற குழந்தைகளுக்கு ஒரு கடுகத்தனைகூடப் புரிய முடியாத சிக்கலான விஷயங்களைப்பற்றி, ஏன் சிந்தனை செய்யச் சொல்லுகிறார் என்ற கேள்வி எழுகிறது."

இந்த நிருபர் மேற்கோள் கொடுத்துள்ள கட்டுரைகளைத் திரும்பவும் படித்துப் பார்க்க எனக்கு அவகாசம் கிடைக்க வில்லை. ஒரு கட்டுரையைப் பூராவாகப் பார்த்தாலொழிய, அல்லது எந்த சந்தர்ப்பத்தில் ஒரு வாக்கியம் எழுதப்பட்டது என்பதையும் சரியாகப் பார்த்தாலொழிய, ஒரு கட்டுரையிலுள்ள ஒரு தனிப்பட்ட வாக்கியத்தின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளு வது சாத்தியமில்லை. ஆயினும், அசல் கட்டுரையை வாசிக்காமல் இந்த மாணவர் எழுப்பியுள்ள கேள்விக்கு நான் பதிலளிக்க முடியும். ஏனெனில், அந்த வாக்கியத்தில் தொக்கி நிற்கும் அர்த்தம் என்னுடைய அனுபவத்திலிருந்து ஏற்பட்டதாகும். பையன் என்றால் இரண்டு வயதுக் குழந்தை என்று நினைக்கக் கூடாது. பையன் என்றால், சாதாரணமாகப் பள்ளிக்கூடத் திற்கு அனுப்பப்படும் வயதுள்ள பையன் என்றே அர்த்தம்.

நான் கீதை சொல்லிக் கொடுக்கும்போது பிள்ளைகள் தூங்குகிருர்கள் என்ருல், அவர்களுக்கு அது புரியவில்லை என்று அர்த்தமில்லை.

கீதையில் போதிய அளவு அவர்களுக்கு அக்கறை ஏற்படும்படி நான் செய்ய முடியவில்லை என்று கூறலாம். அல்லது அந்த சமயத்தில் பையன்கள் களைப்புற்றிருக்கலாம். கணக்குப் பாடத்தின் போது, அல்லது சுவாரஸ்யமான ஒரு பேச்சைக் கேட்கும் போது அல்லது ஒரு நாடகத்தைப் பார்க்கும்போது கூட பையன்கள் தூங்கிவிடுவதை நான் பார்த்திருக்கிறேன். கீதை பாராயணத்தின் போது வயதானவர்கள் கூட கண் அயர்வதை நான் பார்த்திருக்கிறேன். ஆகையால், இங்கு எழுப்பப்பட்டுள்ள கேள்வியைப் பரிசீலனை செய்யும்போது, தூக்கம், அலுப்பு என்ற வாதங்களை சம்பந்தமில்லாதவை என்று புறக்கணித்துவிடவேண்டும்.

குழந்தை பிறப்பதற்கு முன்பே ஆன்மா இருந்திருக்கிறது; அதற்கு ஆரம்பம் கிடையாது. இளமை, மூப்பு ஆகியவைகளாலும் குழந்தைப் பருவம் பாதிக்கப்படுவதில்லை. இந்த உண்மையைத் தெளிவாக உணர்ந்தவர்களுக்கு, இப்போது எழுப்பப்பட்டுள்ள பிரச்னை எழாது. நம்முடைய உடலில் உள்ள உணர்ச்சிகளின் ஆளுகைக்கு உட்பட்டு, மேலெழுந்தவாரியாகத் தோன்றுவதை நம்பியிருப்பதாலும், ஆழ்ந்த சிந்தனைக்கு இடையூருக இருக்கும் அசட்டை காரணமாகவும், விளையாடுவது அல்லது அகரவரிசையை மனப்பாடம் செய்வதைத்தவிர பையன்களால் வேறு எதுவும் செய்ய முடியாது என்று நாம் நினைக்கிரோம்; அல்லது, ஐரோப்பா, அமெரிக்காவில் உள்ள ஏதேதோ நதிகளின் பெயர்கள், அல்லது அந்த நாடுகளின் மன்னர்கள், கொள்ளைக்காரர்கள், கொலைகாரர்கள் முதலியவர்களின் சரித்திரத்தைத் தெரிந்து கொள்ளுவதைத் தவிர பையன்களுக்கு வேறு எதுவும் சாத்தியமில்லை என்றும் நினைக்கிரோம்.

ஆனல், என்னுடைய சொந்த அனுபவம் இதற்கு மாருனது-பையன்களுக்குப் புரியக் கூடிய விதத்தில் நாம் சொல்லிக் கொடுக்க முடியும் என்ருல், ஆன்மா, சத்தியம், அன்பு முதலியவைகளைப் பற்றிப் பையன்களுக்கு போதிக்கலாம். ஒரு பிணத்தைப் பார்த்தவுடன், "இந்த உடலின் ஜீவன் (உயிர்) எங்கு போய்விட்டது?" என்று சிறு பையன்கள் கேட்பதை வாசகர்கள் பார்த்திருப்பார்கள். இந்தக் கேள்வியைக் கேட்கக் கூடிய ஒரு பையனுக்கு, ஆன்மாவைப்பற்றிச் சொன்னல் புரிந்துகொள்ளும் சக்தி இருக்குமென்றே நினைக்கவேண்டும். விஷயங்களைப் புரிந்து கொள்ளும் பருவம் பெற்றவுடன், எழுத்து வாசனையில்லாத கோடிக்கணக்கான நமது குழந்தைகள் உண்மை, பொய் இரண்டையும் புரிந்துகொள்ள முடிகிறது. தன்னுடைய பெற்ரோர்களின் கண்களைப் பார்த்தவுடனேயே அவர்கள் கோபமாக இருக்கிருர்களா, சாதாரணமாக இருக்கிருர்களா என்று புரிந்து

கொள்ளாத பையன் யாராவது இருக்கிருனு ? இந்தக் கேள்வியை அனுப்பியவர் தன்னுடைய குழந்தைப் பருவத்தையே மறந்துவிட்டார்போல் தோன்றுகிறது. அவர் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்வதற்கு முன்பாகவே தன்னுடைய பெற்ருேர்களின் அன்பை அவர் அனுபவித்திருக்கிருர், அறிந்திருக்கிருர் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அன்பு, சத்தியம், ஆன்மாவின் நிரந்தரத் தன்மை ஆகியவற்றை மொழியின் மூலமாக வன்றி வேறு எதன் மூலமும் சொல்லிக் கொடுத்திருக்க முடியாதென்ருல், அவையெல்லாம் வெகு காலத்திற்கு முன்பே மறைந்து போயிருக்கும்.

அந்த மாணவர் எடுத்துக் காட்டியுள்ள வாசகத்தில், தத்துவ உண்மைகளைப் பற்றி உயிரற்ற, வறட்டு வாதம் செய்ய வேண்டுமென்று கூறப்படவில்லை ; சத்தியம் போன்ற நிலையான குணங்களின் மேன்மையை நம்முடைய நடத்தையின் மூலமே செயலில் காட்டி, அவர்களுக்கும் அந்த குணங்கள் இருக்கின்றன என்று பையன்களுக்கு ருசுப்பித்துக் காட்டவேண்டுமென்றே கூறப்பட்டிருக்கிறது. விஷய அறிவு பெறுவது முக்கியம்தான்; ஆனுல், நல்ல ஒழுக்கத்தை வளர்ப்பது இன்னும் முக்கியமானதாகும், டார்வினின் காலத்தில் வாழ்ந்த வாலஸ் என்ற ஒரு விஞ்ஞானி. தமது 90-ஆவது வயதில் ஒரு அபிப்பிராயம் தெரிவித்தார். படித்தவர்கள், முன்னேற்றம் அடைந்தவர்கள் என்று சொல்லப்படும் வர்க்கத்தினரின் நடத்தையைப் பார்க்கும்போது, நாகரிகமற்றவர்கள் என்று சொல்லப்படும் நீக்ரோக்களுக்கும், அவர்களுக்குமிடையே வித்தியாசம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை என்று அவர் சொன்னுர். இன்று மலிந்துகிடக்கும் மேலெழுந்தவாரியான கவர்ச்சிகளால் நம் கண்கள் மறைக்கப்படவில்லையென்ருல், வாலஸ் கூறியதன் உண்மையை நாம் உணர்ந்து, நமது கல்வி முறையை வேறு விதத்தில் திட்டமிட்டு, மாற்றியமைப்போம்.

பத்து தலை ராவணனைப் பற்றிய கேள்விக்கு நான் ஒரு பதில் கேள்வி போடுகிறேன். மாணவர்கள் எதை ஏற்றுக் கொள்ளுவது சுலபமாயிருக்கும் ? ராவணன் என்ற ஒரு பத்து தலை மனிதன் இருந்தான்—இது அர்த்தமற்றது என்று சொல்லுவதையா? அல்லது தீமை என்ற பத்து தலை பூதம் ஒன்று திருடனைப்போல் மனிதனுக்குள் ஒளிந்து கொண்டிருக்கிறது என்று சொல்லுவதையா ? பையன்களுக்குக் கற்பனையோ, புத்திசாலித்தனமோ இல்லையென்று நினைப்பதன் மூலம் அவர்களுக்கு நாம் பெரும் அநீதியை இழைக்கிருேம். அதுமட்டுமில்லை ; அதனுல் நமது புத்திசாலித்தனத்தையே கூடக் குறைத்து மதிப்பிட்டுக்கொள்ளுகிருேம்.

'புரிந்து கொள்ளக் கூடிய அளவுக்கு பையன்களுக்கு புத்திசாலித்தனம் இருக்கிறது' என்று கூறியிருப்பதை, சொல்லிக் கொடுக்காமலே அவர்கள் புரிந்து கொள்ள முடியும் என்று கூறுவதாக அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

நீங்கள் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும், பத்து தலை மனிதன் ஒருவன் இருக்க முடியும் என்பதைப் பையன்கள் மனத்தில் பதியவைக்க முடியாது ; ஆனால், பத்து தலை ராவணன் நம்முள் ஒளிந்து கொண்டிருக்கிறான் என்று சொன்னால், உடனே அவர்கள் புரிந்து கொள்ளுவார்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

துளஸிதாசரின் ராமாயணத்தையும், வியாசரின் மகாபாரதத்தையும் பையன்களிடையே வாசிக்க நான் ஏன் தயங்குவதில்லை என்பதை அந்த மாணவர் இப்போது புரிந்து கொள்ளுவாரென்று நம்புகிறேன். கர்மம், தியாகம், ஸ்திதப் பிரக்ஞை போன்ற தத்துவங்களை அவர்களுக்கு போதிக்கும் உத்தேசம் எனக்குக் கிடையாது. அதை நானே பூராவாகப் புரிந்துகொண்டிருக்கிறேனா என்று எனக்குத் தெரியாது. கர்மம் போன்றவைகளைப் பற்றி நான் ஒரு உயர்தரமான நூலை வாசித்தால், ஒருக்கால் நான் அதை இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளலாம் ; அது கூட நிச்சயமில்லை. இறுதியில் அதை நான் புரிந்து கொண்டுவிட்டேனால், ஒருக்கால் எனக்கு அலுப்புத்தட்டி நான் தூங்கவும் ஆரம்பித்துவிடக் கூடும். என் நாட்டிலுள்ள லட்சக்கணக்கான வாயில்லாப் பூச்சிகளுக்கான ஒரு தியாகமாக நூற்பதைப்பற்றி நினைத்து, அதற்காக சுகங்களைத் தியாகம் செய்யும்போது, தூக்கம் எவ்வளவு வசீகரமானதாக இருந்தாலும், ஒரு விஷப் பாம்பின் சீறலைப்போல் இருக்கிறது. எனவே, நான் விழிப்புடனேயே இருக்கிறேன். குழந்தைப் பருவத்தில், எளிய முறையில் சொல்லிக் கொடுத்தால், எதிர் காலத்தில் பையனின் வாழ்க்கையில் அது ஏதாவது நல்ல பலனைக் காட்டுகிறது என்பதும், ஆகவே, அது சொல்லிக் கொடுக்கத்தக்கதுதான் என்பதுமே என்னுடைய உறுதியான நம்பிக்கையாகும்.

—'நவஜீவன்'– 9—9—1923

# 33

# தேசீயப் பள்ளி ஹாஸ்டல்களில் சாதி வேற்றுமை

காகா சாகிபுக்குப் பற்பல கடிதங்கள் வருகின்றன. எல்லா விதமான கேள்விகளுக்கும் அவரிடம் பதில் கேட்கப்படுகிறது. தேசீயப் பள்ளிக் கூடங்களின் ஹாஸ்டல்களில் உள்ள உணவுக் கூடங்களில் சாதி வேற்றுமை பாராட்டப்படுகிறதா என்பது அந்தக் கேள்விகளில் ஒன்றாகும். அந்த நிருபருக்கு எழுதிய பதிலின் நகல் ஒன்றை அவர் எனக்கு அனுப்பியிருக்கிறார். இந்த விஷயத்தில் அவருடைய கருத்துகள் அத்தகைய ஹாஸ்டல்களின் நிர்வாகிகளுக்கு வழிகாட்டியாக இருக்கலாம். ஆகையால், எந்த விதமான மாறுதலும் இல்லாமல் அதை அப்படியே கீழே தருகிறேன்:

"வித்யா பீட ஹாஸ்டலில் சாப்பிடும்போது சாதி வேற்றுமைகள் நிலவுகின்றனவா என்று நீங்கள் கேட்டது நல்லதுதான். வித்யா பீடத்தின் நோக்கங்களில் பின் கண்ட ஒரு ஷரத்து இருப்பதை நீங்கள் அறிவீர்கள் என்று நம்புகிறேன் :

"'அதனுடைய நிர்வாகத்தில் நடத்தப்படும் ஸ்தாபனங்களில் இப்போதுள்ள எல்லா மதங்களுக்கும் உரிய மதிப்பு கொடுக்கப்படும் ; மாணவர்களின் ஆன்மிக வளர்ச்சிக்காக சத்தியம், அகிம்சை என்ற முக்கியமான கொள்கைகளைக் கருத்தில் கொண்டு, அந்த மதங்களைப் பற்றி மாணவர்களுக்கு போதிக்கப்படும்.'

"தீண்டாமை ஹிந்து மதத்திற்கு ஒரு இழுக்கு என்றும், அது ஒரு பாவம் என்றும் வித்யா பீடம் கருதுகிறது என்பதையும் நீங்கள் அறிவீர்கள். இங்கு அளிக்கப்படும் கல்வியைப் பெற விரும்பும் மாணவர்கள் யாரும் வித்யா பீடத்தில் சேரலாம். சாதி, வகுப்பு வேற்றுமைகளை நாங்கள் அனுசரிப்பதில்லை. மாணவர்களை நாங்கள் ஒத்துழையாமைப் போராட்டத்திற்குத் தயார் செய்து கொண்டிருக்கிறோம். நூற்பதற்கும், கதர் நெய்வதற்கும் கூட அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கிறோம். ஏனெனில், நமது தேசீயப் புனருத்தாரணத்திற்கு இது உதவியாக இருக்கும் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம். பொதுவாக நமது மக்களிடையே பழக்கத்திலிருக்கும் ஆசார தருமத்தை (முக்கியமாக, உடலைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுவதற்கான விதிகள்) எதிர்க்க வேண்டும் என்பது வித்யா பீடத்தின் நோக்கமல்ல. ஆகையால், ஹாஸ்டலில் ஒரு பிராம்மணர் சமையல்காரராக இருக்கிறார். சமையல் சம்பந்தப்பட்டவரையில் பொதுவாக உள்ள பழக்கத்தைப் பின்பற்றுகிறோம். ஆனால், சாப்பிடுபவர்களை சாதிவாரியாக உட்கார வைப்பது சுத்தமாயிருப்பதற்கான விதிகளில் ஒன்றல்ல, அது சாதி வேற்றுமையையும். அதில் உள்ள சமூக ஏற்றத்தாழ்வுகளையும் அனுசரிப்பதேயாகும். நான் சாப்பிடும்போது, என்ன விதமான உணவு எனக்குப் போடப்படுகிறது, அதைத் தயாரிக்கும்போது சுத்தமாக இருந்தார்களா என்பதை நிச்சயம் கவனிக்கிறேன். ஆனால், என்னுடன் சேர்ந்து சாப்பிடுபவர்களின் மதக் கருத்துகளைப்பற்றி நான் அதிகம் யோசிப்பதில்லை. சாதி வேற்றுமையில் உள்ள உயர்ந்தவன் என்ற உணர்ச்சியில் எனக்கு நம்பிக்கை இல்லை என்பதே இதற்குக் காரணமாகும். உயர்ந்தவன் என்ற இந்தத் தவறான எண்ணத்தை மேற்கொள்ளுவதிலோ அல்லது அதற்கு ஊக்கம் அளிப்பதிலோ மத அம்சம் எதுவும் கிடையாது. அமெரிக்காவில், தன் பக்கத்தில் ஒரு நீக்ரோ உட்கார்ந்தால் அது கௌரவக் குறைவு என்று ஒரு வெள்ளையர் நினைப்பார். நாமும் ஒருவரைப்பற்றி யொருவர் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பேதங்களை வளர்ப்பதன் மூலம், நம்மிடையே அதே மாதிரியான உணர்ச்சிகளை உண்டாக்கிக் கொள்ளுகிறோம். அது அவ்வளவு பரிதாபகரமானதல்லவென்றால், நகைக்கத்தக்கதாகவே இருக்கும்.

"பையன்கள் எப்படி, எந்த வரிசையில் சாப்பிட உட்காருகிறார்கள் என்பதைப் பற்றி எந்த விதமான விதியும் கிடையாது. யாரும் எதையும் சொல்லாமலே அவர்கள் சேர்ந்து உட்காருகிறார்கள். ஆசிரியர்களுக்கும் இம் மாதிரி பேதங்களில் நம்பிக்கை கிடையாது. ஆனால், சமையற்காரர்கள் சாப்பிடும் இடத்தில் உணவருந்தும் மாணவர்கள் இரண்டு, மூன்று பேர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய பெற்றோர்கள் வைதிகமானவர்கள் ; அவர்களுடைய

விருப்பத்திற்கிணங்க அப்படிச் செய்யப்படுகிறது. ஆனால், இனிமேல் இந்தப் பழக்கத்திற்கு இடம் கொடுப்பதில்லையென்று வித்யா பீடம் உத்தேசித்திருக்கிறது. உணவு சுத்தமாயிக்கும் விஷயத்தில், இப்போது காட்டப்படுவதைவிட இன்னும் அதிக கவனம் செலுத்தவும் உத்தேசித்திருக்கிறோம். சாப்பிட உட்காருவதில் பேதங்கள் காட்டுவதை அனுமதிக்க முடியாது. ஏனெனில், உயர்ந்தவன் என்ற தவறான எண்ணம்தான் இந்த வேற்றுமைகளுக்குக் காரணம் என்று வித்யா பீடம் கருதுகிறது. மத விஷயத்தில் பரிசுத்தமான சூழ்நிலை நிலவ வித்யா பீடம் எப்போதும் முற்சி செய்யும்."

காகா சாகிப் அனாவசியமாக மாணவர்கள் அல்லது பெற்றோர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்த விரும்பவில்லை. ஆகையால்தான் தாம் கூறும் விஷயங்களில் அவர் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கிறார். அதனால்தான் அவர் இவ்விதம் கூறுகிறார்: "......ஹாஸ்டலில் ஒரு பிராம்மணர் சமையல் செய்கிறார். சமையல் சம்பந்தப்பட்டவரையில், பொதுவாக உள்ள பழக்கத்தைப் பின்பற்றுகிறோம்". ஒரு பிராம்மண சமையற்காரரை வைத்துக் கொள்ளும் இந்தப் பழக்கம் அதிக காலம் நீடிக்க முடியாதென்று நான் நினைக்கிறேன். பிராம்மணர்கள் மட்டும்தான் சுத்தமாக இருக்கும் விதிகளைப் பின்பற்றுகிறார்கள் என்பது உண்மையல்ல; எப்போதும் அவர்கள் அதைப் பின்பற்றுகிறார்கள் என்பதுமில்லை. உச்சந் தலைமுதல் உள்ளங்கால் வரையில் அசுத்தமாகவும் எல்லா சுகாதார விதிகளுக்கும் முரணாகவும் உள்ள பல பிராம்மண சமையற்காரர்களை நான் பார்த்திருக்கிறேன். கண்கள் உள்ளவர்கள் இந்த உண்மையைப் பார்த்திருப்பார்கள். அதே மாதிரி, பல பிராம்மணரல்லாத சமையற்காரர்கள் சுத்தமாக இருப்பதையும் பார்த்திருக்கிறேன்; சுகாதார விதிகளை அவர்கள் அறிந்தவர்களாகவும் பின்பற்றுபவர்களாகவும் இருக்கிறார்கள். ஆகையால்,பிராம்மணன் என்ற வார்த்தையின் அடிப்படையான அர்த்தத்தை நாம் நினைவில் வைத்துக் கொண்டால், சுத்தமாக இருக்கும் விதிகளைப் பின்பற்றுபவர்களையெல்லாம் பிராம்மணர்கள் என்று ஏற்றுக் கொண்டால், காகா சாகிப் பின்பற்றும் கொள்கையை எல்லா தேசீயப் பள்ளி ஹாஸ்டல்களுமே பின்பற்றுவது எளிதாக இருக்கும். ஆனால், பிராம்மணர்களாகப் பிறந்தவர்கள்தான் பிராம்மணர்கள் என்று அர்த்தப்படுத்திக் கொள்ளுவதாயிருந்தால், நல்ல பிராம்மண சமையற்காரர்கள் அதிகமாக நமக்குக் கிடைக்க மாட்டார்கள். அப்படிக் கிடைக்கும் சிலரும் ஏராளமாகச் சம்பளம் கேட்பார்கள். அத்துடன் அவர்கள் மிகவும் அகம்பாவத்துடனும் நடந்து கொள்ளுவார்கள். அதிக காலம் அவர்களை வைத்துக் கொள்ளுவதென்பது சாத்தியமற்றதாகிவிடும்.

சத்தியத்திற்கும், அகிம்சைக்கும் வித்யாபீடம் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறது. ஆகையால், நம்முடைய ஹாஸ்டல்களின் நிலைமையை உள்ளது உள்ளபடியே சொல்லவேண்டும். ஹாஸ்டல்களில் இருப்பவர்களிடமோ, வெளியில் இருப்பவர்களிடமோ அதை மறைக்கக் கூடாது. அதனால்தான் வித்யாபீட ஹாஸ்டலில் இனி சாதி பேதங்களுக்கு இடமில்லையென்பதை அவர் தெளிவாக்கியிருக்கிறார். சாதிவாரியாகச் சாப்பிடுவதற்கு

உட்காரவைப்பது உயர்ந்தவன், தாழ்ந்தவன், என்பதை அடிப்படையாகக் கொண்டது என்பது தெளிவு. மற்றவர்களைவிட தான் உயர்ந்த அந்தஸ்துள்ளவன் என்று உரிமை கொண்டாடும் பிராம்மணன், தன்னுடைய மதிப்பைக் குறைத்துக் கொள்ளுகிறான். அந்தஸ்து, பதவி ஆகிய எதையும் எதிர் பாராமல் சேவையிலேயே திருப்தியடையும் எளியவர்களுக்கு உலகம் உயர்ந்த மதிப்பு கொடுக்கிறது. விடுதலைதான் மிகவும் உயர்ந்த லட்சியம், அகிம்சைதான் உயர்ந்த கடமை என்று கருதப்படும் போது, எல்லாருக்கும் பொதுவான உள்ளம் சம்பந்தப்பட்ட வரையில் பேதம் காட்டப்படாமலிருக்கும்போது, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வேற்றுமைக்கு இடம் இருக்க முடியாது. ஆகையால், தேசீயப் பள்ளி ஹாஸ்டல்களைப்பற்றி இதைத்தான் சொல்ல முடியும். அதாவது, சுத்தமாயிருப்பதற்கான விதிகளைப் பின்பற்றுவதற்கு முயற்சிகள் செய்யப்படும்; உண்மையான பிராம்மண தருமத்தைப் பின்பற்றுவதே அதன் லட்சியமாக இருக்கும். பெயரளவில் உள்ள பிராம்மண தருமம் நம்முடைய லட்சியமாக இருக்க முடியாது; ஏனெனில், அது ஒரு கெட்ட பழக்கமாகும். அதைக் கைவிட்டாக வேண்டும்.

'நவஜீவன்' – 9—9—1928

# 34

# மாணவர்கள் ஹாஸ்டலுக்கு ஓர் இலக்கணம்

## 1

இந்த நகரத்தில் இம் மாதம் ஹாஸ்டல்கள் மகாநாடு ஒன்று நடைபெற இருப்பதால், ஒரு மாணவர் ஹாஸ்டல் எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றி என்னுடைய கருத்துகளைத் தெரிவிக்கும்படிக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். 1904-ஆம் வருடம் முதல் எனக்குத் தெரிந்த விதத்தில் மாணவர்களின் ஹாஸ்டல்களை நான் நடத்தி வந்திருக்கிறேன். ஆகையால், இந்த ஹாஸ்டல்களை எப்படி நடத்த வேண்டும், எப்படி நிர்வகிக்க வேண்டும் என்றெல்லாம் எனக்குக் கொஞ்சம் அனுபவமிருக்கிறது என்று நான் உரிமை கொண்டாடலாம். ஹாஸ்டல் என்ற பதத்தை அதனுடைய விரிவான அர்த்தத்தில் பரிசீலனை செய்வது நல்லது. எந்த ஒரு விஷயத்தையும்பற்றிக் கற்றுக் கொள்ளும் ஒவ்வொருவரும் ஒரு மாணவராவார்; ஒன்றுக்கு மேற்பட்ட அத்தகைய மாணவர்கள் வசிக்கும் இடத்தை ஹாஸ்டல் என்று நான் கருதுகிறேன்.

இத்தகைய ஹாஸ்டல்கள் வெற்றி பெறுவதற்கு அவற்றின் நிர்வாகிகள் நல்லொழுக்கம் உள்ளவர்களாக இருக்க வேண்டும். இதுதான் முதலாவதும் மிக முக்கியமானதுமான நிபந்தனையாகும்.

ஒரு ஹாஸ்டல் என்பது வெறும் தங்கும் விடுதியாக க்ஷீணித்துவிடும்படி விடவே கூடாது; அதாவது, சாப்பிடுவதற்காக மாணவர்கள் ஒரு இடத்தில் சேர்ந்து வசிக்கிறார்கள் என்று ஆகிவிடக்கூடாது.

மாணவர்கள், தாங்கள் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்ச்சியை வளர்த்துக் கொள்ள வேண்டும். அதன் நிர்வாகியாக இருப்பவர், தந்தையின் ஸ்தானத்தை வகிக்க வேண்டும். அவர் அவர்களுடைய நடவடிக்கைகளில் அக்கறை எடுத்துக் கொள்ளவேண்டும்; அவர்களுடைய சமூக வாழ்வில் பங்கு கொள்ளவேண்டும்; அவர்களுடனேயே சேர்ந்து சாப்பிடவும் வேண்டும்.

ஒரு மாணவனுக்கு ஒரு நல்ல ஹாஸ்டல், பள்ளிக்கூடத்தைக் காட்டிலுங்கூட அதிக முக்கியமான இடம் ஆகும். பார்க்கப் போனால், ஹாஸ்டல்தான் உண்மையான பள்ளிக்கூடம். பள்ளிக்கூடங்கள் அல்லது கல்லூரிகளில் வாய் மொழியான அறிவைத் தான் அவர்கள் பெறமுடியும்; ஆனால், ஹாஸ்டல்களில் அவர்கள் எவ்வளவோ விதமான விஷயங்களைத் தெரிந்து கொள்கிறார்கள். ஒரு சிறந்த ஹாஸ்டல், பள்ளிக்கூடத்திலிருந்து தனியாகப் பிரிந்து ஒரு ஸ்தாபனமாக இருக்கக் கூடாது. இரண்டும் ஒரே நிர்வாகத்தின் கீழ் இருக்க வேண்டும். ஆசிரியர்களும் மாணவர்களும் சேர்ந்தே வசிக்க வேண்டும். இவ்வாறாக, ஹாஸ்டல்களில் வீடுகளைப் போலவே நடந்து கொள்ள வேண்டும். உண்மையான வீடுகளில் கூட இல்லாத வளர்ச்சிக்கான நல்ல சூழ் நிலைகளை அங்கு தோற்றுவிக்க வேண்டும். ஆகையால், ஹாஸ்டல்களை குருகுலங்களாக்கிவிடுவதுதான் நல்ல வழியாக இருக்கும்.

நமது ஹாஸ்டல்களில் பலகுறைபாடுகள் இருக்கின்றன. நாம் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்ச்சி, மாணவர்களிடம் இல்லை; ஹாஸ்டல்களை நடத்துபவர்களும் மாணவர்களின் வாழ்க்கையில் பூராவாகக் கலந்து கொள்வதில்லை. குறைபாடுகளுக்குக் காரணம் இதுதான்.

இந்த ஹாஸ்டல்கள் நகர எல்லைகளுக்கு அப்பால் இருக்க வேண்டும். கிராமங்கள் அல்லது நகரங்களுக்கு என்னென்ன சீர்திருத்தங்கள் அவசியம் என்று கருதப்படுகின்றனவோ, அவற்றையெல்லாம் இந்த ஹாஸ்டல்களில் அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். அதாவது, சுகாதார வாழ்க்கைக்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு அந்த விதிகளும் கண்டிப்பாகப் பின்பற்றப்பட வேண்டும். ஒரு ஹாஸ்டல் சிறந்ததாக இருக்க வேண்டுமானால், அதை வாடகைக் கட்டிடத்தில் வைக்க முடியாது. அதில் நல்ல ஸ்நான அறைகள், கக்கூஸ்கள் முதலியன இருக்க வேண்டும்; கட்டிடம் நல்ல காற்றோட்டம் உள்ளதாக இருக்க வேண்டும்; அதில் ஒரு தோட்டமும் இருக்க வேண்டும்.

ஒரு நல்ல ஹாஸ்டல், எல்லாவிதங்களிலும் சுதேசியாக இருக்க வேண்டும். அதாவது, கட்டிடம் கட்டப்படும் விதம், அதி

லுள்ள சாமான்கள், அலங்காரங்கள் முதலியவை சுதேசியாக இருக்க வேண்டும். கிராமக் கலைகள், கைவினைகள், வாழ்க்கை முறைகள் ஆகியவை அதில் பிரதிபலிக்க வேண்டும். இந்தியாவின் வறுமையை மனத்திற் கொண்டு நமது தேவை, சக்தி ஆகியவற் றிற்கு உட்பட்டுக் கட்டிடம் கட்டப்பட்டிருக்க வேண்டும். சுபிட்ச மான, வளமுள்ள மேல் நாடுகளில் உள்ளவை போன்ற ஹாஸ்டல் கட்டிடங்கள் நமக்கு உதாரணங்களாக இருக்க முடியாது. இந்த நாட்டின் சீதோஷ்ண நிலைமையே வேறு விதமானது. ஆகையால், கட்டும் கட்டிடம் ஆங்காங்குள்ள நிலைமைக்குத் தகுந்தவாறு இருக்க வேண்டும்.

மந்தத்திற்கும், அசட்டைக்கும், அல்லது நிலை தவறிப் போவ தற்கும் இடமளிக்கக் கூடிய எதுவும் ஒரு நல்ல ஹாஸ்டலில் இருக் கக் கூடாது. ஆகையால், அங்கு அளிக்கப்படும் உணவு அறிவைத் தேடிச் செல்பவர்களுக்கு ஏற்றதாக எளிய முறையில் இருக்க வேண்டும்; ஒழுங்காகப் பிரார்த்தனைகள் நடக்க வேண்டும்; வேலை, ஓய்வு, தூக்கம் ஆகியவைகளுக்கு விதிகள் இருக்க வேண்டும்.

ஒரு நல்ல ஹாஸ்டல் என்பது, பிரம்மச்சரிய ஆசிரமமாகவே இருக்கும். அதாவது, பிரம்மச்சரிய வாழ்க்கை நடத்தும் மாணவர் கள் குடியிருக்கும் இடமாக இருக்கும். மாணவன் என்ற வார்த்தை சமீபத்தில் தோன்றியதாகும். முன்பெல்லாம், மாணவனை பிரம்மச் சாரி என்றே அழைப்பது வழக்கம். அந்தச் சொல் இன்னும் ஆழ்ந்த கருத்து உள்ளது; அது, மாணவனுடைய வாழ்க்கையின் லட்சியத்தை இன்னும் சரியான முறையில் குறிப்பிட்டுக் காட்டு கிறது. புலன்களை அடக்கி ஆள்வது, உடலிலும் உள்ளத்திலும் சுத்தம், இறுதி லட்சியத்தை அடைவதற்காக படிப்பில் ஆர்வம் ஆகியவைதான் பிரம்மச்சரியம் ஆகும். படிக்கும் காலத்தில் இந் தக் குணங்கள் அத்தியாவசியமானவை. இன்றுள்ள தலைகீழான நிலைமையிலும், மணமான மாணவர்கள், ஹாஸ்டல்களில் சேர்ந் தால் கூட, தங்களுடைய படிப்பு முடியும் வரையில் அவர்களும் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். இந்தக் காலத்தில் அவர்கள் தங்களுடைய மனைவிமார்களிட மிருந்து பிரிந்து வசிக்க வேண்டும்.

ஒரு நல்ல ஹாஸ்டல் எப்படியிருக்கும் என்பதையே நான் விவரித்திருக்கிறேன் என்பதை வாசகர்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். எல்லா ஹாஸ்டல்களுமே இந்த லட்சி யத்தை அடைய முடியாமல் இருக்கலாம். ஆனால், மேலே விவரிக் கப்பட்டுள்ள லட்சியம் தான் அளவு கோல் என்பது ஒப்புக் கொள்ளப்பட்டால், ஒவ்வொரு ஹாஸ்டலும் அந்த லட்சியத்தை அடைய முயற்சி செய்யவேண்டும்; அத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தே தங்களுடைய சாதனைகளையும் மதிப்பிட வேண்டும்.

'நவ ஜீவன்' – 3—3—1929

## 2

(ஹாஸ்டல் நிர்வாகிகளின் வேண்டுகோளுக்கிணங்க, மாண வர் ஹாஸ்டல்கள் மகாநாட்டில் காந்திஜி செய்த பிரசங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:)

ஹாஸ்டலில் வசிப்பது ஒருவருடைய குடும்பத்துடனேயே சேர்ந்து வசிப்பது போல் இருக்க வேண்டும் என்பதே என்னு டைய அபிப்பிராயம். நிர்வாகியும், மாணவர்களும் ஒரே குடும்பத் தினரைப் போல சேர்ந்து வசிக்க வேண்டும். நிர்வாகிகள் பெற் றோர்களின் ஸ்தானத்தை வகிக்க வேண்டும். நிர்வாகிக்கு மனைவி இருந்தால், புருஷனும் மனைவியும் இந்த மாணவர்களின் குடும்பத் திற்கு தாயார், தகப்பனார் போல நடந்து கொள்ள வேண்டும்.

நமது ஹாஸ்டல்களில் உள்ள நிலைமை திருப்திகரமாயிருப்ப தாகச் சொல்ல முடியாது. ஹாஸ்டல் நிர்வாகி பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்கவில்லையென்றால், அவருடைய மனைவி ஹாஸ்டலில் உள்ள மாணவர்களுக்குத் தாயார் போன்ற ஸ்தானத்தில் இருக்க முடியாது. தன் கணவன் ஹாஸ்டலில் வேலை செய்வதையே மனைவி விரும்பாமலிருக்கலாம். அல்லது நல்ல சம்பளம் கிடைக்கிறதே என்பதற்காக அவர் அங்கு வேலை செய்வதை மனைவி அனுமதிப் பதாக இருக்கலாம். அப்படியானால், ஹாஸ்டல் சமையல் அறை யிலிருந்து புருஷன் கொஞ்சம் நெய் திருடினால், மனைவி அதற்கு உடந்தையாயிருந்து, சந்தோஷமும் அடைவாள். எல்லா நிர்வாகி களுமே இப்படி இருக்கிறார்கள் என்று நான் சொல்லவில்லை; நம் முடைய விவகாரங்களெல்லாம் இன்று இவ்வளவு வருந்தத்தக்க நிலைமையில் இருக்கின்றன என்பதையே குறிப்பிடுகிறேன்.

நான் நினைப்பதுபோன்ற ஹாஸ்டல்கள் இப்போது குறை வாகவே இருக்கின்றன. இந்தியாவில், குஜராத்தைத் தவிர, வெளி இடங்களில் அத்தகைய ஹாஸ்டல்களே அதிகம் இல்லை. மாணவர் ஹாஸ்டல் என்பது குஜராத்தின் ஒரு விசேஷ பாக்கிய மாகும். இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. குஜராத், பணக்கார வியாபாரிகளும், வர்த்தகர்களும் நிறைந்த இடம். வியாபாரத்தின்மூலம் பணம் சம்பாதிப்பவர்கள், சமூகத்திலுள்ள குழந்தைகளுக்காக ஹாஸ்டல்களை ஆரம்பிப்பதில் ஆர்வமுடைய வர்களாக இருக்கிறார்கள். மாணவர்கள் விடுதி அல்லது ஹாஸ்ட லுக்கு சத்திராலயம் என்ற படாடோபமான பெயர் பின்னர்தான் வழக்கத்திற்கு வந்தது. ஆரம்பத்தில் அவற்றைத் தங்கும் விடுதி கள் என்றே அழைத்தார்கள். ஏனெனில், சுற்றுப் புறங்களிலுள்ள கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு வரும் மாணவர்களுக்கு வேறு எந்த எண்ணமும் கிடையாது. அதிக விஷய அறிவுள்ள நிர்வா கிகள் நியமிக்கப்பட்ட பிறகுதான், இந்த ஸ்தாபனங்களை லட் சிய உணர்ச்சியுடன் அவர்கள் நிர்வகிக்க ஆரம்பித்தார்கள்.

என்னைப் பொறுத்தவரையில், பள்ளிக்கூடங்களைவிட ஹாஸ் டல்களுக்குத் தான் அதிக முக்கியத்துவம் கொடுக்கிறேன். பள் ளிக்கூடத்தில் தெரிந்து கொள்ள முடியாத அவசியமான பல விஷ

யங்களை ஹாஸ்டல்களில் தெரிந்து கொள்ளலாம். பள்ளிக்கூடங்களில் அவர்களுடைய அறிவு ஒரு அளவுக்கு வளர்க்கப்படுகிறது, ஆனால், அதிகம் அல்ல. அவர்கள் காதால் கேட்டு, திருப்பிச் சொல்ல வேண்டியிருப்பதில் ஒரு பகுதி அவர்கள் மனத்தில் தங்கிவிடுகிறது. அவர்களையறியாமலே அப்படித் தங்கிவிடுகிறது. ஹாஸ்டல்களில் சாத்தியமாக இருக்கக்கூடிய அளவுக்கு, பள்ளிக்கூடங்கள் தனித்து நின்று, பையன்களின் மனத்தை வளர்த்து, பலப்படுத்திவிட முடியாது. பள்ளிக்கூடம், ஹாஸ்டல் இரண்டின் வேலைகளுமே ஹாஸ்டலைச் சேர்ந்ததாக இருக்க வேண்டும் என்பதே என்னுடைய கருத்தாகும்.

சேட்டுகளின் உதார குணத்தினால் ஆரம்பிக்கப்பட்ட ஹாஸ்டல்கள் வேறுவிதமாக இருந்தன. அவர்கள் ஹாஸ்டல்களைக் கட்டிக் கொடுத்த போதிலும், அதன் நிர்வாகத்தில் அவர்கள் எந்த விதமான பங்கும் எடுத்துக் கொள்ளவில்லை. பையன்கள் சாப்பிட்டுவிட்டு, பள்ளிக்கூடத்திற்குப் போனால், அத்துடன் தம் வேலை முடிந்து விட்டதென்று நிர்வாகியும் நினைத்தார். ஹாஸ்டல்களைக் கட்டிக் கொடுத்த சேட்டுகளும், அவற்றை நிர்வகித்த அதிகாரிகளும் கொஞ்சம் அக்கறை எடுத்துக் கொண்டிருந்தால், ஹாஸ்டல்களின் நிலைமை இன்றிருப்பதைப் போல் அவ்வளவு மோசமாக இராது. இப்போதுள்ள நிலைமையை கவனித்து, அவற்றை எப்படி அபிவிருத்தி செய்யலாம் என்பதை நாம் பரிசீலனை செய்ய வேண்டும். நாம் உறுதியாக இருந்தால், இந்த ஸ்தாபனங்களின் தன்மையை நிச்சயமாக மாற்றிவிட முடியும். பள்ளிக் கூடங்களில் சாதிக்கமுடியாதவற்றை ஹாஸ்டல்களில் செய்ய முடியும். ஹாஸ்டல் நிர்வாகி வெறும் கணக்குப் பிள்ளையாக மட்டும் இருக்கக் கூடாது. பையன் பள்ளிக்கூடத்தில் என்ன செய்கிறான் என்பதையும் அவர் கவனித்துக் கொள்ள வேண்டும். மாணவனைத் தன்னுடைய மகனை அல்லது சீடனை அவர் பாவித்து, அவனுடைய கல்விக்கும், நலனுக்கும் உதவி செய்ய வேண்டும். இன்று, பல நிர்வாகிகளுக்கு, மாணவர்கள் எந்த மாதிரியான உணவு சாப்பிடுகிறார்கள் என்பது கூடத் தெரியாது!

நமது ஹாஸ்டல்களில் நிலவும் வருந்தத்தக்க குழப்ப நிலைமையையும், பல சந்தர்ப்பங்களிலும் அத்தகைய நிலைமை கவனிக்கப்படாமல் புறக்கணிக்கப்படுவதையும் குறிப்பாக உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். உண்மையான நிலைமை என்ன என்பதை வெளியே சொல்ல நிர்வாகிகள் விரும்புவதில்லை. அப்படிச் சொன்னால், தங்களுடைய ஸ்தாபனங்களுக்குக் கெட்ட பெயர் வந்துவிடுமே என்பதற்காக அதை அவர்கள் மறைக்கிறார்கள். மாணவர்களின் முறையற்ற நடத்தை வெளிப்பட்டு விடும் என்பதற்காக, பெற்றோர்களுக்குக்கூட அவர்கள் தகவல் கொடுக்க பயப்படுகிறார்கள். ஆனால், என்றென்றைக்கும் இம் மாதிரி விஷயங்களை மறைத்து வைத்திருக்க முடியாது. யாருக்கும் ஒன்றும் தெரியாது என்று நிர்வாகி நினைத்துக் கொண்டிருக்கிறார். ஆனால், நாற்றம் வெகு தூரம் பரவிவிடுகிறது. எனவே, இதை

கவனிக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறேன். அவர்கள் கண்காணிப்புடன் இருந்து தங்கள் கடமையைச் சரிவரச் செய்வார்களாக. தங்களுடைய ஹாஸ்டல்களைச் சரியான விதத்தில் நடத்த முடியாதவர்கள் ராஜிநாமாச் செய்து விடவேண்டும். ஹாஸ்டல்களில் வசிக்கும் மாணவர்கள் நல்லொழுக்கத்தை இழந்துவிட்டால், அவர்களுடைய சிந்தனை சீர்குலைந்து, அறிவும் ஸ்தம்பித்து விட்டால், அவர்கள் எதற்கும் உதவாக்கரையாகி விடுகிறார்கள். அப்படி நடந்தால், அந்தப் பழி நிர்வாகிகளையே சேரும். அது நிர்வாகியின் திறமையின்மையையே எடுத்துக் காட்டும்.

நான் சொல்லுவதன் அர்த்தத்தை விளக்குவதற்குப் பல உதாரணங்கள் கொடுக்க முடியும். மாணவர்களிடமிருந்து எனக்கு ஏராளமாகக் கடிதங்கள் வருகின்றன. பல கடிதங்கள் அனுமதேய மானவையாக இருக்கின்றன. அவற்றை நான் குப்பைக் கூடையில் போட்டுவிடுகிறேன். ஆயினும், அக்கடிதங்களிலுள்ள விஷயங்களைப் பார்த்துக் கொள்ளுகிறேன். ஆனால், கடிதங்கள் எழுதுபவர்களில் பலர் தங்களுடைய பெயர்களையும், விலாசங்களையும் கொடுத்து தங்களுடைய தீய வழிகளிலிருந்து தாங்கள் எப்படி விடுபடலாம் என்று என்னை யோசனை கேட்கிறார்கள். ஆரம்பத்தில், இந்தப் பழக்கம் புதிதாக இருக்கும்போது, அவர்களிடம் அது வேரூன்றாமலிருக்கும் போது, நிர்வாகி, தன் செல்வாக்கை உபயோகித்து அந்த வழிகளிலிருந்து அவர்களைத் திருப்புவதற்குப் பதிலாக, ஊக்கம் அளிக்கிறார். இறுதியில் மாணவர்கள் விழிப்புறும்போது அந்தப் பழக்கத்திலிருந்து மீள்வதற்கான மன உறுதியை அவர்கள் இழந்துவிட்டவர்களாகிவிடுகிறார்கள். ஆகையால், நான் சொல்லக் கூடிய யோசனையைப் பின்பற்ற அவர்களுக்கு சக்தி இல்லை.

நிர்வாகியின் பதவியை வகிப்பதற்கு வேண்டிய யோக்கியதாம்சங்கள் உள்ளவர்கள் மிகவும் உயர்ந்த சம்பளம் கேட்கிறார்கள். விதவைகளாகிவிட்ட சகோதரிகளைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது; சிறுவர், சிறுமிகளின் கல்யாணத்திற்குச் செலவிட வேண்டியிருக்கிறது என்றெல்லாம் அவர்கள் சொல்லுகிறார்கள். இந்த நிலைமையில், அவர்கள் திறமைசாலிகளாக இருந்தால்கூட, அவர்கள் இல்லாமலே நாம் காரியங்களைச் செய்ய வேண்டியது தான். நல்ல காலமாக, இதை ஒரு சமூக சேவையாகவும் தமது வாழ்க்கையின் லட்சியமாகவும் கருதும் மற்றவர்கள் இருக்கிறார்கள். வேறு எதையும் செய்ய அவர்கள் விரும்பவில்லை. வெறும் ஜீவனத்திற்கு மட்டும் தேவையானதைப் பெற்றுக் கொண்டு, இந்த வேலையைச் செய்யத் தயாராக இருப்பவர்கள் இருக்கிறார்கள்.

நான் இதுவரையில் கூறியுள்ளவற்றிலிருந்து, ஹாஸ்டல் நிர்வாகி அநேகமாகக் குறைபாடுகளே இல்லாத ஓர் உதாரண மனிதனாக இருக்க வேண்டும் என்பதை நீங்கள் புரிந்துகொண்டிருப்பீர்கள். மாணவர்களின் உள்ளங்களைத் தொட்டு, அவர்களிடையே தார்மிக செல்வாக்கை உபயோகிக்கக் கூடியவர்தான் வெற்றிகர

மான ஹாஸ்டல் நிர்வாகியாகச் செயலாற்ற முடியும். அத்தகைய நிர்வாகியைத் தேடிக்கொள்ளாமல், மாணவர்களுக்காக ஹாஸ்டல்களை ஆரம்பிப்பது அபாயகரமானது.

இவ்வளவு நேரம் நிர்வாகிகளைப்பற்றிச் சொல்லிவிட்டேன். இனி மாணவர்களுக்கும் சில வார்த்தைகள் கூறுகிறேன். ஹாஸ்டல் நிர்வாகியாக இருப்பவர் தங்களுடைய எல்லாத் தேவைகளையும் கவனித்துக் கொள்ளுவதற்காக நியமிக்கப்பட்டுள்ள ஒரு வேலைக்காரர் என்று மாணவர்கள் அகம்பாவம் காரணமாக நினைத்தால், அது பெரும் தவறாகும். தாங்கள் எதுவுமே செய்ய வேண்டியதில்லையென்று அவர்கள் நினைப்பதும், எல்லா வேலைகளையும் வேலைக்காரர்கள் செய்ய வேண்டுமென்று எதிர்பார்ப்பதும் தவறாகும். ஹாஸ்டல் என்பது சுகமாகவும், வசதிகளுடனும் நாட்களைக் கழிப்பதற்கான இடம் அல்ல என்பதை அவர்கள் அறிய வேண்டும். 'ஹாஸ்டலில் நமக்குக் கிடைப்பவைகளுக்கு நாம் தான் பணம் கொடுக்கிறோமே' என்று நினைப்பதை அவர்கள் நிறுத்திக் கொள்ள வேண்டும். அவர்கள் கொடுக்கும் பணம் அவர்களுக்காக ஆகும் எல்லாச் செலவுகளையும் சமாளிக்கப் போதுமானதல்ல. இந்த ஹாஸ்டல்களை ஸ்தாபித்த சேட்டுகள் விஷயம் அறியாதவர்கள். ஆகையால், மாணவர்களை அவர்கள் இஷ்டப்படி விடுவது அவர்களுடைய முன்னேற்றத்திற்கு உதவி செய்யுமென்றும், அவர்களை வசதியாகவும், சௌக்கியமாகவும் வைத்திருப்பதில் ஏதோ புண்ணியம் இருக்கிறதென்றும் அவர்கள் நினைக்கிறார்கள். இந்தத் தவறான நம்பிக்கை காரணமாக, மாணவர்களுக்கு அவர்கள் பல வசதிகளைச் செய்து கொடுக்கிறார்கள். இதனால் மாணவர்களுக்கு நல்லது படிவதற்குப் பதிலாகக் கெட்டதுதான் படிகிறது; நல்லவர்களாவதற்குப் பதிலாக அவர்கள் இன்னும் மோசமாகத்தான் போகிறார்கள்; அத்துடன் மற்றவர்களை நம்பி வாழும் பழக்கமும் அவர்களுக்கு ஏற்பட்டுவிடுகிறது. புத்திசாலியாக உள்ள ஒரு மாணவன், தான் வசிக்கும் வீட்டின் வாடகை, நிர்வாகிக்கும், வேலைக்காரர்களுக்கும் கொடுக்கப்படும் சம்பளங்கள் ஆகியவற்றை சுலபமாகக் கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ள முடியும். அப்படிப் பார்த்தால், இந்தச் செலவுகளைச் சரிக்கட்டும் அளவுக்கு மாணவர்கள் பணம் கொடுக்கவில்லை என்பது தெரியும். தங்களுடைய சாப்பாட்டுக்கு ஆகும் செலவை மட்டும்தான் அவர்கள் கொடுக்கிறார்கள். பல ஹாஸ்டல்களில் உணவு, உடை, புத்தகங்கள் முதலியவைகளெல்லாம் கூட இலவசமாகவே அளிக்கப்படுகின்றன. இந்த ஹாஸ்டல்களுக்காக நிதி ஒதுக்கிவைக்கும் சேட்டுகள், இதனால் பயன் பெறும் மாணவர்கள் தங்களுடைய படிப்புக்குப் பிறகு தேச சேவை செய்யவேண்டும் என்று எழுத்து மூலம் ஒப்பந்தம் வாங்கிக் கொண்டாலும் பரவாயில்லை. ஆனால், தாராள மனம் படைத்தவர்களாகையால், அவர்கள் அப்படியொன்றும் செய்வதில்லை. எனினும், தாங்கள் பெற்றதைத் திருப்பிக் கொடுக்காவிட்டால், தாங்கள் திருட்டுப் பணத்தில் வாழ்க்கை நடத்துகிறோம் என்பதை மாணவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். நான் குழந்தையா

யிருந்த காலத்தில், ஆகா பகத் எழுதிய கவிதையொன்றைப் படித்தேன். அதில் ஒரு வரி பின்வருமாறு :

"திருட்டுச் சொத்தில் வாழ்க்கை நடத்துவது சுத்தம் செய்யப் படாத பாதரஸத்தை அருந்துவது போல் ஆகும்." *

சட்ட விரோதமான பணத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்துவதன் மூலம் மாணவர்கள் வீர உணர்ச்சிகளை வளர்த்துக் கொள்ளத் தவறி விடுகிறார்கள். அதனால் அவர்கள் அடங்கி ஒடுங்கி நடக்கும் தன்மையுடையவர்களாகிவிடுகிறார்கள். ஆகையால், இலவசமாகக் கிடைக்கும் உணவைத் தொடுவதில்லை என்று அவர்கள் உறுதி கொள்ள வேண்டும். ஹாஸ்டலில் உள்ள இதர வசதிகளை அவர்கள் தொடர்ந்து பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், இப்போது நான் சொன்னதைக் கேட்ட பிறகு, சிறிதும் தாமதமின்றி நிர்வாகியிடம் சென்று. வேலைக்காரர்களை அனுப்பி விடலாம் என்றும், தங்களுடைய வேலைகளையும், ஹாஸ்டல்களின் வேலைகளையும் தாங்களே செய்வதாகவும் தெரிவித்துவிட வேண்டும். அல்லது, இப்படிச் செய்தால் அந்த வேலைக்காரர்களுக்கு வேலையில்லாமற்போய்விடுமேயென்று தோன்றினால், அவர்கள் இருந்துவிட்டுப் போகட்டும் என்று விட்டுவிடலாம். எப்படியானாலும், கக்கூஸ் சுத்தம் செய்வது உள்பட எல்லா வேலைகளையும் தாங்களே செய்வது என்று மாணவர்கள் முடிவு செய்து கொள்ளவேண்டும். அப்போதுதான் நல்ல குடித்தனக்காரர்களாகவும், பிரஜைகளாகவும், தேசசேவைக்கான திறன் பெற்றவர்களாகவும் அவர்கள் பயிற்சிபெற முடியும். இன்று நாணயமாக வேலை செய்து தங்களுடைய சிறு குடும்பங்களைக் கூடப் பலராலும் காப்பாற்ற முடிவதில்லை.

ஒருவன் நல்ல வேலை பெறுகிறான் என்றால், அவன் நாணயமான வேலை செய்கிறான் என்று அர்த்தமில்லை. குமாஸ்தா வேலை செய்வதற்கு நமக்கு மாதம் ரூ. 75 கிடைக்கும் போது, ஒரு பெரிய குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பு உள்ள ஒரு தொழிலாளிக்கு மாதம் பன்னிரண்டு ரூபாயே கிடைக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்று அவன் யோசித்துப் பார்க்கவேண்டும். பாரபட்சமின்றி இதைப்பற்றி அவன் யோசித்துப் பார்த்தால், இவ்வளவு அதிகச் சம்பளம் பெறத் தனக்குத் தகுதியில்லை என்பதை அவன் சீக்கிரத்தில் உணருவான். தன்னுடைய ஜீவனோபாயத்திற்குத் தேவையான தொகையை, தான் நாணயமாகச் சம்பாதிக்கவில்லை என்பதையும், நகரங்களில் உள்ள நம்மில் பெரும்பாலோர் திருடுவதன் மூலமே வாழ்க்கை நடத்துகிறோம் என்பதையும் அவன் புரிந்து கொள்ளுவான். ஒரு கொள்ளைக் கூட்டத்திற்கு கமிஷன் ஏஜெண்டுகளாக நாம் இருக்கிறோம் என்பதைத் தவிர, வேறொன்றுமில்லை. மக்களிடமிருந்து நாம் பெறுவதில் 95 சதவிகிதம் வெளிநாடுகளுக்கு அனுப்பிவிடுகிறோம். அம்மாதிரி வேலையிலிருந்து சம்பாதிப்பது, எதுவுமே சம்பாதிக்காததற்குச் சமமானதுதான்.

* சுத்தம் செய்யப்படாத பாதரசத்தை அருந்தினால், உடம்பெல்லாம் புண்கள் ஏற்பட்டுவிடும். பின்னர், உடலுக்கு உள்ளேயிருந்து பாதரசத்தை அகற்றினால்தான் அந்தப் புண்கள் ஆறும்.

நான் சொல்லுவது உங்களுடைய பகுத்தறிவுக்கு ஏற்றதாக இருந்தால், நான் சொல்லுவதை நீங்கள் ஒப்புக் கொண்டால், இன்று முதலே அதன்படி நீங்கள் நடக்க ஆரம்பிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

ஹாஸ்டல்கள் ரிஷிகுலங்களைப் போலவே * இருக்க வேண்டும். அங்கு பிரம்மசாரிகள் மட்டுமே வசிக்க அனுமதிக்கப் படுகிறார்கள். மணமானவர்கள், ஹாஸ்டலில் இருக்கும்போது, வானப் பிரஸ்த தருமத்தைப் பின்பற்ற வேண்டும். இம்மாதிரி லட்சிய வாழ்க்கையை நீங்கள் ஐந்து முதல் பத்து வருஷங்கள் வரையில் நடந்தி வந்தால், இந்தியாவுக்காகப் பெரிய காரியங்கள் செய்யக் கூடிய ஆற்றலை நீங்கள் பெறுவீர்கள். சுயராஜ்யப் போராட்டம் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. இது ஒரு வேள்வியாகும். பிச்சையெடுத்து வாழ்க்கை நடத்துபவர்கள் இதில் எப்படிப் பங்கு கொள்ள முடியும்? அபாயங்களைப் பொருட் படுததாமல் இதில் கலந்து கொள்ளுவதற்கு முன் வருபவர்கள் என்னைப் போல் சிலர் இருக்கலாம். இதில் சேர விரும்புபவர் களுக்கு நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். சாதாரண உணவு தான் அவர்களுக்கு நான் அளிக்க முடியும்; சோளம் அல்லது கேழ்வரகினால் செய்யப்பட்ட ஒன்றிரண்டு ரொட்டிகள்தான் கொடுக்க முடியும். இப்போது முதலே அதைப்பற்றியெல்லாம் கவலைப்படவேண்டிய அவசியமில்லை என்று உங்களில் சிலர் நினைக்கலாம். அவர்களுக்கு நான் சொல்லுவது இதுதான்: அப்படி நினைத்தவர்கள் பலரை நான் பார்த்திருக்கிறேன். ஆனால், சோதனைக் காலத்தில் பெரும்பாலும் அவர்கள் தேர்ச்சி பெற வில்லை. சிறைகளுக்குச் செல்லுபவர்கள் அங்கு எப்படி நடந்து கொள்ளுகிறார்கள் என்பதைப் பற்றி நமக்கு அனுபவம் உண்டு. 1920-21-இல் சிறை சென்றவர்கள் உணவு விஷயமாக எப்படிச் சண்டை போட்டார்கள் என்பதும், மிகவும் கண்ணியக் குறைவான காரியங்களைச் செய்தார்கள் என்பதும் யாவருக்கும் தெரியும். அதைக் கண்டு நாங்கள் வெட்கப்பட வேண்டியிருந்தது. போதிய பயிற்சி பெற்ற பிறகுதான் தியாகம் செய்யும் தன்மையை ஒருவர் பெற முடியும். ஒருவன் உண்மையாகவே தியாக வாழ்க்கையை நடத்த விரும்புவதாயிருக்கலாம். ஆனால், மிகவும் சாதாரணமானவைகளாகத் தோன்றும் வாழ்க்கையின் அற்ப சுகங்களில் உள்ள ஆசையை அவன் அடக்கியாளவில்லையென்றால், சோதனைக் காலத்தில் அந்த ஆசைகள் அவனைக் காட்டிக் கொடுத்துவிடும். இது அனுபவத்தில் ருசுவான உண்மை. இங்கே கூடியுள்ள மாணவர்களாகிய நீங்கள், நான் சொன்னதையெல்லாம் புரிந்து கொள்ளுவதற்கு உண்மையாகவே முயற்சி செய்தால், இது கஷ்டமானதல்ல என்பதையும், சுலபமாகப் பின்பற்றக் கூடியவைகளே என்பதையும் தெரிந்து கொள்ளுவீர்கள்.

—'நவஜீவன்' – 23—2—1930

* படிப்புக்காக, சீடர்கள் குருவான ரிஷியுடன் சேர்ந்து வசிக்கும் ஆசிரமமே ரிஷி குலம் அல்லது குருகுலம் என்று கூறப்படுகிறது.

# 35

# சர்வகலாசாலைகளில் ஏன் கூடாது?

**கேள்வி :** கிரிக்கெட் விளையாட்டில் வகுப்புவாதம் கூடாதென்று நீங்கள் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறீர்கள். வகுப்புவாத அடிப்படையில் நடத்தப்படும் சர்வகலாசாலைகளும் ஆட்சேபிக்கத்தக்கவைகளே அல்லவா? எல்லோருக்கும் பொதுவாக உள்ள கல்லூரிகளிலும், ஹாஸ்டல்களிலும் ஆழ்ந்த அந்நியோன்னியமான நட்பு நிலவுகின்றது. மத விஷயங்களில் சகிப்புத் தன்மை என்பதும் இயற்கையான தாகிவிடுகிறது. பல்வேறு கலாசாரங்களின் வளர்ச்சிக்காக, பொதுவான கல்வி நிலையங்களில் தாராளமான நிதியுடன் வகுப்புகளை ஆரம்பிப்பது பலன் தரத்தக்கதாக இராதா?

**பதில் :** நீங்கள் சொல்லுவது சரிதான். வகுப்புவாத ஸ்தாபனங்களே இல்லாமலிருக்க முடியுமானால் நல்லதுதான். வகுப்பு வாத அடிப்படையில் கிரிக்கெட் விளையாடக் கூடாதென்று நான் உறுதியாகச் சொல்லுவதுபோல், முஸ்லிம் சர்வகலா சாலை, ஹிந்து சர்வகலாசாலை என்றெல்லாம் இருக்கக் கூடா தென்று நான் அவ்வளவு உறுதியாகச் சொல்ல முடியாது. வகுப்புவாத சர்வகலாசாலைகளின் ஆரம்ப காரணத்தில் களங்கம் எதுவும் இல்லையென்றால் இவை ஒரு தேசீய நோக் கத்திற்கு உதவியாக இருக்கவும் கூடும். ஹிந்து சர்வகலா சாலையும், முஸ்லிம் சர்வகலாசாலையும் வகுப்பு ஒற்றுமைக்கு உறைவிடங்களாக இருக்கலாம்; அப்படித்தான் இருக்க வேண்டும். ஆனால், வகுப்புவாத அடிப்படையில் விளையாட்டு கள் என்பது ஒன்றுக்கொன்று முரணானது என்றே தோன்று கிறது. வகுப்புவாதமற்ற கல்லூரிகளும், ஹாஸ்டல்களும் இருக்கின்றன. அப்படித்தான் இருக்க வேண்டுமென்று நீங்கள் சொல்லுவதை நான் பூராவாக ஒப்புக் கொள்ளு கிறேன். ஆனால், துரதிருஷ்டவசமாக விஷம் அந்த ஸ்தா பனங்களிலும் பரவிவிட்டது. இந்த அவல நிலை தற்காலிக மானதென்றே நம்புவோமாக.

—'ஹரிஜன்'-19—4—1942

# 36

# ஒரு புனித யாத்திரை

பாலிகாசிரமத்திற்கு விஜயம் செய்த காந்திஜி, தமது இருப் பிடத்திற்கு உடனடியாகத் திரும்பிவிட வேண்டும் என்று நினைத்

துக் கொண்டிருந்தார். ஆனால், ஜமியா மில்லியாவைச் சேர்ந்த பல மாணவர்களும், சில சிப்பந்திகளும் அவரிடம் வந்து, எப்போதாவது தங்களுடைய ஸ்தாபனத்திற்கும் ஒரு முறை விஜயம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

"எப்போதாவது என்றால், இப்போதுதான் என்றே அர்த்தம்" என்று காந்திஜி பதிலளித்தார். "இவ்வளவு தூரம் வந்த பிறகு உங்கள் ஸ்தாபனத்திற்கு வராமல் திரும்பிப் போக முடியாது" என்றும் கூறினார். ஜமியா மில்லியா கோஷ்டிக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. இந்தச் சந்தோஷச் செய்தியைத் தங்களுடைய சகபாடிகளுக்குத் தெரிவிப்பதற்காக அவருக்கு முன்னால் அவர்கள் ஓடினார்கள். வழி காட்டுவதற்காக பெட்ரோமாக்ஸ் விளக்குகளுடன் அவர்கள் திரும்பிவந்தனர். எதிர்பாராத இந்த விஜயம், அங்கே ஒரே பரபரப்பை உண்டாக்கியது. டாக்டர் ஜாகிர் ஹுஸேன் பவல்பூருக்குப் போயிருந்தார். ஆனால், மௌளஜீப் சாகிபும், மற்ற ஊழியர்களும் அங்கே இருந்தார்கள். பசும் புல் தரையில் கம்பளங்கள் விரிக்கப்பட்டன. திறந்த வெளியில் குடும்பத்தினர் ஒன்று சேருவதுபோலிருந்தது. 1920-இல் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமான காலத்தில் ஜமியா மில்லியா ஸ்தாபிக்கப்பட்டது. சமீபத்தில் அதனுடைய வெள்ளி விழாவையும் கொண்டாடப்போகிறார்கள். காலஞ்சென்ற ஹக்கீம் அஜ்மல்கான் சாகிப், டாக்டர் அன்ஸாரி, அலி சகோதரர்கள் ஆகியோர் போட்ட விதை, டாக்டர் ஜாகிர் ஹுஸேன், மற்றும் அவருடைய சகபாடிகளின் அன்பான அரவணைப்பில், ஒரு பெரிய மரமாக வளர்ந்திருக்கிறது. அதனுடைய ஆரம்ப வகுப்புகளில் 200 மாணவர்கள் படிக்கிறார்கள். மத்திய தர வகுப்புகளில் 100 மாணவர்களும், கல்லூரியில் 28 மாணவர்களும் இருக்கிறார்கள். இவர்களைத் தவிர 60 ஆசிரியர்கள் பயிற்சி பெற்று வருகிறார்கள். அந்த ஸ்தாபனத்தின் ஆதரவில் ஒரு பகல் பள்ளியும், கரோல்பாகில் ஒரு பிரசுராலயமும் நடத்தப்படுகின்றன.

"முன்னறிவிப்பு இல்லாமலே இங்கு நான் வந்துவிட்டேன். இந்தக் குடும்பத்தில் நானும் ஒருவன் என்ற உரிமையை இதன் மூலம் ருசுப்பித்துவிட்டேன்" என்று காந்திஜி கூறினார். அங்கு அளிக்கப்பட்ட மனப்பூர்வமான வரவேற்பு அவருடைய உள்ளத்தைத் தொட்டது. பின்னர், கேள்விகள் கேட்க விரும்புபவர்கள் கேட்கலாம் என்று காந்திஜி கூறினார்.

ஒரு மாணவர் கேட்டார்: "ஹிந்து முஸ்லிம் ஐக்கியத்தை ஏற்படுத்துவதற்கு மாணவர்கள் என்ன செய்யலாம்?" இது காந்திஜிக்கு மிகவும் பிடித்தமான ஒரு விஷயத்தைப் பற்றிய கேள்வியாகும். "இந்த வழி சுலபமானது. எல்லா ஹிந்துக்களுமே போக்கிரிகளாக மாறி, உங்களைத் திட்டினால் கூட, அவர்களை உங்களுடைய உடன் பிறந்த சகோதரர்களாக பாவிப்பதை நீங்கள் நிறுத்தக் கூடாது. அதே மாதிரி ஹிந்துக்களுக்கும் இது

பொருந்தும். இது அசாத்தியமானதா? இல்லை, சாத்தியமானது தான். ஒரு தனி நபருக்கு சாத்தியமாக இருப்பது பொது மக்களுக்கும் சாத்தியமானதே.

"இன்றுள்ள சூழ் நிலை முற்றிலும் விஷத்தன்மை வாய்ந்ததாக இருக்கிறது. பற்பல விதமான கோரமான வதந்திகள் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுகின்றன; பொதுமக்களும் தராதரம் பார்க்காமல் அவற்றை நம்பிவிடுகிறார்கள். இதனால் பீதி ஏற்படுகிறது. தாங்கள் மனிதப் பிறவிகள் என்பதை ஹிந்துக்களும், முஸ்லிம்களும் மறந்து, ஒருவருக்கொருவர் கொடிய மிருகங்களைப்போல் நடந்து கொள்ளுகிறார்கள். மற்றவன் என்ன செய்கிறான் அல்லது செய்யவில்லை என்பதைப் பொருட்படுத்தாமல், கண்ணியமாக நடந்து கொள்ளுவதுதான் மனிதனுக்கு அழகு. கண்ணியமாக இருப்பவனிடம் கண்யமாக நடந்து கொள்ளுவதில் சிறப்பு எதுவும் இல்லை. திருடர்களும், கொள்ளைக்காரர்களும் கூட அப்படிச் செய்கிறார்கள். அதில் விசேஷம் ஒன்றும் இல்லை. லாப நஷ்டத்தைக் கணக்கிடுவது மனிதத் தன்மைக்கு அழகல்ல. மற்றவன் எப்படியிருந்தாலும், நாம் கண்ணியமாக நடந்து கொள்ள வேண்டும் என்பது தான் மனிதனுக்கு அழகு. எல்லா ஹிந்துக்களும் என்னுடைய யோசனையைக் கேட்டால், அல்லது எல்லா முஸ்லிம்களும் நான் சொல்லுவதைக் கேட்டால் இந்தியாவில் அமைதி நிலவும். கத்திகளோ, தடிகளோ அந்த அமைதியைக் குலைக்க முடியாது. பதிலுக்குப் பதில் தாக்குவது அல்லது ஆத்திரமூட்டுவது இல்லையென்றால், கத்தியால் குத்தும் ஈனச் செயலில் விஷமிக்கு சீக்கிரத்தில் அலுப்பு ஏற்பட்டுவிடும். குத்துவதற்காகத் தூக்கிய கரத்தை, கண்ணுக்குப் புலப்படாத ஒரு சக்தி தடுத்து நிறுத்திவிடும்; அவனுடைய கொடிய எண்ணத்தை நிறைவேற்ற அவனுடைய கரம் மறுத்துவிடும். சூரியன் மீது நீங்கள் மண்ணை வாரி எறியலாம்; அதனால் சூரியனுடைய ஒளி மங்கிவிடாது. நாம் செய்யவேண்டியது என்னவென்றால், உள்ளத்தில் நம்பிக்கையுடனும், பொறுமையுடனும் இருக்க வேண்டும். கடவுள் நல்லவர். கொடுமை ஒரு அளவுக்கு மேல் போவதை அவர் அனுமதிப்பதில்லை.

"இந்த ஸ்தாபனத்தை வளர்ப்பதில் எனக்கும் பங்கு இருந்தது. ஆகையால், என்னுடைய உள்ளத்தில் இருப்பதை உங்களிடம் கூறுவது எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது. இதே விஷயத்தை ஹிந்துக்கள் கூட்டத்திலும் சொல்லியிருக்கிறேன். இந்தியாவிற்கும் உலகத்திற்கும் உங்களுடைய உதாரணம் ஓர் ஒளி விளக்காக இருக்கட்டும்."

தம் இருப்பிடத்திற்குப் போவதற்கு முன் காந்திஜி காலஞ்சென்ற டாக்டர் எம். ஏ. அன்ஸாரியின் சமாதிக்குச் சென்றார். இஸ்லாமின் சிறப்புக்கும் ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்கும் டாக்டர் அன்ஸாரி ஓர் உயர்ந்த சின்னமாக விளங்கினார். காந்திஜிக்கு அவர் ஓர் உடன்பிறந்த சகோதரர் போலிருந்தார். 1932-இல் புனாவில், காந்திஜி பர்ணகுடியில் 51 நாட்கள் உபவாசம் இருந்த

போது, டாக்டர் அன்ஸாரி தம்முடைய ஐரோப்பிய சுற்றுப் பிரயாணத்தை இடையில் நிறுத்திக் கொண்டு, காந்திஜியினிடம் ஓடிவந்தார். அவரது சமாதி இருக்கும் இடத்தில் ஒரு விசாலமான மேடையும், பல மேல்தளங்களும் இருக்கின்றன. சமாதிக்கு அடியில் அவருடைய பெயர், பிறந்த, இறந்த தேதிகள் பொறிக்கப்பட்ட சலவைக்கல் ஒன்று இருக்கிறது. அந்த சமாதியின் கம்பீரத்தை அந்த எளிமை இன்னும் அதிகமாக்குகிறது. நம் பிக்கைக்கும், சமூக ஐக்கியத்திற்கும் சின்னமாக விளங்கிய காலஞ்சென்ற டாக்டர் அன்ஸாரியின் பெயரை சுதந்திர இந்தியா வெகு காலம் நினைவில் வைத்திருக்கும்.

—'ஹரிஜன்' – 28—4—1946

# 37

# குழந்தைகள் பள்ளிக்கு ஒரு முன்னுதாரணம்

குழந்தைகளுக்குக் கல்வி அளிப்பது, சாதாரணமாக மிகவும் சுலபமானதாயிருக்க வேண்டும்; ஆனால், எப்படியோ அது மிகவும் கஷ்டமானதாகிவிட்டது அல்லது கஷ்டமானதாக்கப் பட்டுவிட்டது. நாம் கவனித்தாலும், கவனிக்காவிட்டாலும், நல்லதோ, கெட்டதோ, எதையாவது குழந்தைகள் எப்போதும் கற்றுக் கொண்டிருக்கின்றனர் என்பது அனுபவத்தில் தெரிந்த உண்மையாகும். நான் இப்படிச் சொல்லுவது சில வாசகர்களுக்கு விசித்திரமாகத் தோன்றலாம். குழந்தை என்றால் யார்? கல்வி என்பது என்ன? குழந்தைகளுக்குக் கல்வி போதிக்க நல்ல தகுதியுள்ளவர்கள் யார்? இந்த விஷயங்களைப் பற்றி நாம் கவனமாகச் சிந்தனை செய்து பார்த்தால், நான் மேலே கூறியது விசித்திரமாகத் தோன்றாது; முற்றிலும் சரியானதாகக்கூடத் தோன்றும்.

குழந்தைகள் என்றால், பத்து வயதுக்கு மேற்படாத பையன்கள், பெண்களையே குறிப்பிடுகிறோம். அப்போது, கல்வி என்பது எழுதப் படிக்கத் தெரிவது என்று மட்டும் அர்த்தமல்ல. எழுதவும் படிக்கவும் தெரிவது, கல்விக்கான முறைகளில் ஒன்றுதான். உண்மையில் பார்த்தால், கல்வி என்பது மனம் உள்பட நமது உணர்வுக் கருவிகளை சரியான முறையில் உபயோகிக்கக் கற்றுக் கொள்ளுவதாகும். அதாவது, செயல்படுவதற்கு உரிய அவயவங்களான கைகள், கால்கள் முதலியவற்றையும், அறிவுக் கருவிகளான மூக்கு, கண்கள் முதலியவற்றையும் உபயோகிப்பதற்கு குழந்தைகள் கற்றுக் கொள்ள வேண்டும். பொருள்களைத் திருடுவதற்கோ, பூச்சிகளை அடித்துக் கொல்லுவதற்கோ, தம்பிமார்கள், தங்கைகள், விளையாட்டுத் தோழர்கள் ஆகியோரை அடிப்பதற்கோ கைகளை உபயோகிக்கக் கூடாது என்பதை ஒரு குழந்தை

தெரிந்து கொண்டுவிட்டால், அந்தக் குழந்தை சரியான கல்விப் பாதையில் செல்ல ஆரம்பித்து விட்டது என்று எண்ணலாம். தன்னுடைய பற்கள், நாக்கு, காதுகள், கண்கள், நகங்கள் முதலியவைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டு, அவற்றைச் சுத்தமாகவும் வைத்துக் கொள்ளும் குழந்தையையும் அதே மாதிரி கருதலாம். சாப்பிடும்போது அல்லது தண்ணீர் அருந்தும்போது குறும்புகள் செய்யாமல், தனியாகச் சாப்பிட்டாலும், மற்றவர்களுடன் சேர்ந்து சாப்பிட்டாலும் சரியான விதத்தில் நடந்து கொள்ளக் கற்றுக் கொண்டிருக்கும் குழந்தைகள், நல்ல உணவு, கெட்ட உணவு என்ற வேற்றுமையை அறிந்து நல்ல உணவைப் பொறுக்கி எடுத்துக் கொள்ளத் தெரிந்த குழந்தைகள், அளவுக்கு மீறி சாப்பிடாமலும், புதிதாகக் காண்பதையெல்லாம் தங்களுக்குக் கொடுக்கும்படி கேட்காமலும் இருக்கும் குழந்தைகள், ஒன்றைக் கேட்டு அது கிடைக்காவிட்டால் பேசாமல் அமைதியாக இருக்கும் குழந்தைகள் ஆகிய இவர்களையெல்லாம், கல்விப் பாதையில் நல்ல முன்னேற்றம் அடைந்தவர்கள் என்று சொல்லலாம். யாருடைய உச்சரிப்பு நன்றாக இருக்கிறதோ, தான் வாழும் பிரதேசத்தின் சரித்திரத்தையும், பூகோளத்தையும் யார் சொல்ல முடியுமோ, - அவர்களுக்கு சரித்திரம், பூகோளம் என்ற வார்த்தைகள் தெரியாமலிருக்கலாம்-தாய் நாடு என்றால் என்ன என்பது யாருக்குத் தெரிந்திருக்கிறதோ, அந்தக் குழந்தையும் கல்விப் பாதையில் கணிசமான தூரம் முன்னேறியிருப்பதாக வைத்துக் கொள்ளலாம். சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும், நல்லதுக்கும் கெட்டதுக்கும் இடையே உள்ள வேற்றுமையை உணர்ந்து, எப்போதும் சத்தியத்தையும், நல்லதையுமே பின்பற்றும் குழந்தைகளும் அதே மாதிரி தான். இந்த விஷயத்தை மேற்கொண்டு விவரிக்க வேண்டியதில்லை. வாசகர்களே மற்ற விவரங்களைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். ஒரே ஒரு விஷயத்தை மட்டும் தெளிவாக்க விரும்புகிறேன். அதாவது, நான் மேலே குறிப்பிட்டுள்ள விஷயங்களைத் தெரிந்து கொள்ளுவதற்கு எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. பையன்களை அகரவரிசையைக் கற்றுக் கொள்ளும்படி செய்வது, அவர்களுடைய இளம் மனத்தில் அதிகமான சுமையை ஏற்றி, அவர்களுடைய கண்களையும், கைகளையும் துஷ்பிரயோகத்திற்கு உட்படுத்துவதாகும். நல்ல விஷயங்களைத் தெரிந்து கொண்டுள்ள பையன், அநேகமாக அதிக முயற்சி இல்லாமலே எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டு விடுகிறான். அத்துடன் மட்டுமில்லை; உரிய காலத்தில் சந்தோஷமாகவும் அதைச் செய்கிறான். ஆனால், இப்போது அவனுக்கு அது பெரிய சுமையாகிவிடுகிறது. நல்ல முறையில் செலவிடப்பட்டிருக்கக்கூடிய பெரும் பகுதி நேரம் வீணடிக்கப்பட்டு விடுகிறது. முடிவில், அழகாக எழுதுவதற்கும் சரியாக உச்சரிப்பதற்கும் கற்றுக்கொள்ளாமல் கோணல் எழுத்துகளை எழுதத்தான் கற்றுக்கொள்ளுகிறான். கையெழுத்தும் மோசமாக இருக்கிறது. படிப்பது சம்பந்தப்பட்ட வரையில், படிக்காமல் விட்டிருக்கவேண்டிய பலவற்றைப் படிக்

கிறார்கள்; அதையும் கூட சரியாக உச்சரிக்கத் தெரியாமல் தாறு மாறாகப் படிக்கிறார்கள். இதை, கல்வி என்று சொல்லுவது மதிப்பிற்குரிய அந்த வார்த்தையை அவமதிப்பதாகும். பையன் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்பு, அவன் அடிப்படையான விஷய அறிவைப் பெற வேண்டும். இப்படிச் செய்தால், பாட புத்தகங்கள், குழந்தைகளின் புத்தகங்கள் முதலிய மற்றும் பல தீமைகளுக்காக இந்த ஏழை நாடு செலவிடும் பணம் மிச்சப்படும். குழந்தைகளுக்கான புத்தகங்கள் அவசியம் என்று கருதப்பட்டால், அவை ஆசிரியர்களின் உபயோகத்திற்காக எழுதப்படவேண்டுமேயொழிய, நான் வர்ணித்த குழந்தைகளுக்காக அல்ல. காற்றடிக்கும் பக்கமாக நாமும் போவது என்றில்லாமலிருந்தால், இந்த விஷயம் நமக்கு வெட்டவெளிச்சமாகத் தெரியும்.

நான் குறிப்பிட்டது போன்ற கல்வியை, வீடுகளில் தான் பையன்கள் பெறமுடியும்; அதுவும் தாயார் மூலம்தான் பெற முடியும். ஒரு விதத்தில், எல்லாப் பையன்களுமே தங்களுடைய தாய்மார்களின் மூலம் ஏதாவது கற்றுக்கொள்ளத்தான் செய்கிறார்கள். ஆனால், இன்று குடும்பங்கள் சீர்குலைந்துவிட்டன என்றே சொல்லலாம். பெரும்பாலான பெற்றோர்கள் இந்த வேலைக்குத் தகுதியற்றவர்களாக இருக்கிறார்கள். இந்த நிலைமையில் வீட்டில் இருப்பதே போன்ற சூழ்நிலை உள்ள இடங்களில்தான் பையன்களை விடவேண்டும். மற்ற யாரையும் விட, குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் கடமையைத் திறமையுடன் செய்யக் கூடியவள் தாயார்தான். ஆகையால், இந்தக் குறிப்பிட்ட வேலையைப் பெண்களிடமே ஒப்படைக்க வேண்டும். அன்பு, பொறுமை சம்பந்தப்பட்டவரையில் பெண்களைவிட ஆண்கள் மிகவும் பின் தங்கியே இருக்கிறார்கள். இது உண்மையானால், பெண்கள் கல்வியின் பிரச்னையையும் தீர்ப்பதற்கு முயற்சிகள் எடுத்துக் கொண்டாலொழிய, குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும் பிரச்னையைத் தீர்க்க முடியாது. நமது குழந்தைகளுக்கு வெற்றிகரமாகக் கல்வி புகட்டக் கூடிய உண்மையான தாய்மார்கள் ஆசிரியர்களாக இருந்தாலொழிய, பையன்கள் பள்ளிக்கூடங்களுக்குப் போய்க் கொண்டிருந்தாலும் கல்வியறிவில்லாதவர்களாகவேதான் இருப்பார்கள் என்று சொல்ல நான் தயங்கவில்லை.

குழந்தைகளின் கல்வி எப்படி இருக்க வேண்டும் என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன். ஒரு தாய் ஆசிரியரிடம் ஐந்து குழந்தைகளை ஒப்படைப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இந்தக் குழந்தைகள், ஒழுங்காக நடந்து கொள்ளும் விதத்தில் பயிற்சி இல்லாதவர்கள். அவர்கள் பேசுவது கூட காதில் கேட்பதில்லை. சரியாக நடப்பதற்கோ, உட்காருவதற்கோ கூட அவர்களுக்குத் தெரியாது. மூக்கு, கண்கள், காதுகள், நகங்கள் யாவும் அசுத்தமாக இருக்கின்றன. உட்காரச் சொன்னால் கால்களை நீட்டிக் கொள்கிறார்கள். பேசும்போது முணு முணுக்கிறார்கள். திசைகளைப்பற்றியும் அவர்களுக்கு எதுவும் தெரியாது. ஆடைகள்

சுத்தமாக இல்லை. சட்டைப்பைகளில் என்னென்னவோ இருக்கின்றன. இவற்றை எடுத்து அவர்கள் வாயில் போட்டுக்கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் தலையில் அணிந்திருக்கும் குல்லாயின் விளிம்பு சுசகசவென்றும் கருத்தும் போயிருக்கிறது. அதிலிருந்து துர்நாற்றம் வீசுகிறது. இவர்களுடைய ஆசிரியருக்குத் தாய் உள்ளம் இருந்தால்தான், அத்தகைய பையன்களுக்குப் பயிற்சி அளிக்க முடியும். சுத்தமாக இருக்கும்படி சொல்லிக் கொடுப்பதே அவர்களுக்கு ஆசிரியை அளிக்கும் முதல்பாடமாக இருக்கும். அந்த ஆசிரியை குழந்தைகளிடம் தன் அன்பைக் கொட்டி, ஒரு தாய்க்கு மட்டுமே தெரியக் கூடிய பல்வேறு வழிகளில் அவர்களுக்கு விளையாட்டுக் காட்டுவாள். கௌசல்யை, தன்னுடைய குமாரனை ராமனுக்குச் செய்ததைப் போல் செய்வாள். அவர்களை அன்பு என்ற கயிற்றினால் தன்னுடன் பிணைத்துக் கொள்ளுவாள். இதன் மூலம், அவள் சொல்லுவதையெல்லாம் பையன்கள் மனமுவந்து செய்யும்படி செய்வாள். பையன்கள் சுத்தமாயிருக்கக் கற்றுக் கொள்ளும்வரையில், இவர்களுடைய பற்கள், காதுகள், கைகள், கால்கள் யாவும் சுத்தமாயிருக்கும் வரையில், தங்களுடைய ஆடைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவும் சரியாக உச்சரிக்கவும் கற்றுக் கொள்ளும் வரையில், ஆசிரியைக்கு ஓய்ச்சல் ஒழிவே இராது. இதைச் செய்து முடித்தபிறகு, முதலில் அவர்களுக்கு ராம நாமத்தை அதாவது கடவுளின் பெயரைக் கற்றுக் கொடுப்பாள். அவருக்கு எவ்வளவோ பெயர்கள் இருக்கின்றன. எந்தப் பெயரைச் சொல்லியழைத்தாலும் பரவாயில்லை. தருமத்திற்கு அடுத்தபடியாக அர்த்தத்தை அதாவது உலக விவகாரங்களைக் கற்றுக்கொடுக்க வேண்டும். பிறகு ஆசிரியை அவர்களுக்கு கணக்குச் சொல்லிக் கொடுப்பாள்; பெருக்கல் வாய்ப்பாடுகளைக் கற்றுக் கொள்ளச் செய்வாள் கூட்டல், கழித்தல் கணக்குகளையும் கூடியவரையில் வாய்மொழியாகவே கற்றுக் கொடுப்பாள். தாங்கள் எங்கே வசிக்கிறோம் என்பதைப் பற்றிப் பையன்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஆகையால், ஆறுகள், சிற்றாறுகள், குன்றுகள், கட்டிடங்கள் முதலியவைகளைப்பற்றிச் சொல்லிக் கொடுப்பாள். அதே சமயத்தில் திசைகளைப் பற்றிய அறிவையும் ஊட்டுவாள். குழந்தைகளின் நன்மைக்காகத் தன்னுடைய அறிவையும் வளர்த்துக் கொள்ளுவாள். இந்த முறையில், சரித்திரத்தையும், பூகோளத்தையும் தனித்தனிப் பாடங்களாகக் கருதக் கூடாது. இரண்டையும் கதைகள் உருவத்தில் போதிக்க வேண்டும். இத்துடன் அவள் திருப்தியடைந்துவிட மாட்டாள். ஒரு ஹிந்து தாய் தன்னுடைய குழந்தைக்கு அதன் இளம் பிராயத்திலிருந்தே சமஸ்கிருத சுலோகங்களைச் சொல்லிக் காட்டுவாள். அப்போதுதான் அவர்களுக்கு சமஸ்கிருத வார்த்தைகளின் உச்சரிப்பு பிடிபடும். ஆண்டவன் புகழைப் பாடும் சமஸ்கிருத சுலோகங்களையும் குழந்தைக்குப் பாடம் பண்ணி வைப்பாள். தேசபக்தியுள்ள தாயார் தன் குழந்தைகளுக்கு ஹிந்தியையும் கற்றுக்கொடுப்பாள். இதற்காக அவள் அவர்களுடன் ஹிந்தியில்

பேசுவாள். ஹிந்தி புத்தகங்களிலிருந்து குறிப்பிட்ட பகுதிகளை அவர்களுக்கு வாசித்துக் காட்டி, அவர்களுக்கு இரு மொழிகளில் பயிற்சி ஏற்படும்படி செய்வாள். அதற்குள் அவர்களுக்கு அகர வரிசை சொல்லிக் கொடுக்க மாட்டாள். இருந்தாலும் அதிலும் சிறிதளவு பயிற்சியளிப்பாள். நேர் கோடுகள், வட்டங்கள் முதலியவற்றைப் போடுவதற்குக் கற்றுக் கொடுப்பாள். ஒரு மலர். அல்லது தண்ணீர்க் குடம், அல்லது முக்கோணம் வரையத் தெரியாத ஒரு பையனை கல்வி பெற்றவன் என்று சொல்ல முடியாது. அத்துடன், நல்ல சங்கீதத்தையும் அவர்களுக்கு போதிக்காமலிருக்க மாட்டாள். தேசீய கீதத்தையோ, பிரார்த்தனை கீதங்களையோ பையன்கள் ஒருமிக்கச் சேர்ந்து பாடத் தெரியாவிட்டால், அதை ஆசிரியை அனுமதிக்கமாட்டாள். தாளக்கட்டுடன் பாடவும் அவள் கற்றுக் கொடுப்பாள். அவர்கள் தேகாரோக்கியத்துடன் இருக்க வேண்டும் என்பதற்காக, ஓடுதல், தாண்டுதல் போன்ற தேகப்பயிற்சிகளில் ஈடுபடச் செய்வாள். பிறகு, பையன்களுக்கு சேவை உணர்ச்சியை உண்டாக்கி, பல்வேறு கைவினைகளிலும் தேர்ச்சி பெறச் செய்ய வேண்டும். ஆகையால், பஞ்சு எடுப்பதிலிருந்து ஆரம்பித்து நூற்பது வரையில் பூராவாகச் சொல்லிக் கொடுப்பாள். பிள்ளைகள் தினசரி அரைமணி நேரமாவது மனமுவந்து நூற்பார்கள்.

இன்றுள்ள பெரும்பாலான பாட புத்தகங்கள் இதற்குப் பயனற்றவை. ஆகையால், தாய்-ஆசிரியை புதிய புத்தகங்களைத் தேடிப்பிடிக்க வேண்டும்; அல்லது புதிய புத்தகங்களைத் தயார் செய்ய வேண்டும். குழந்தைகளிடம் அவளுக்குள்ள அன்பு, இந்த வேலையில் அவளுக்கு உதவி செய்யும். ஒவ்வொரு கிராமத்திற்கும் தனித்தனியான சரித்திரமும், பூகோளமும் இருக்கின்றன. அதற்கென்று தனியான சரித்திர புத்தகமும் பூகோள புத்தகமும் இருப்பதும் இயற்கையே. கணக்குப் பயிற்சிகளும் புதிதாக இருக்கும். தான் பையன்களுக்குச் சொல்லிக் கொடுக்க விரும்பும் பாடங்களைத் தாய்-ஆசிரியை ஒவ்வொரு நாளும் தானகவே தயார் செய்வாள். புதுக் கணக்குகளைப் போடுவாள். ஒவ்வொரு நாளும் பையன்களிடம் புதிதாக ஏதாவது சொல்லுவதற்குத் தயார் செய்து வைத்திருப்பாள். பாடங்களைத் தயார் செய்யும்போது இவற்றையெல்லாம் குறித்து வைத்துக் கொள்ளுவாள். இவ்வாறாக, வகுப்பில் அவள் சொல்லிக் கொடுக்கும் பாடம் யந்திரத் தன்மை வாய்ந்ததாக இல்லாமல், பையன்களின் சிந்தனையைத் தூண்டிவிடும் வகையில் விறுவிறுப்பாக இருக்கும்.

பையன்களின் அபிவிருத்திக்குத் தகுந்தவாறு பாட திட்டம் மாறும். ஆகையால், மூன்று மாதத்திற்கு ஒரு தடவை பாட திட்டத்தைத் தயாரிக்க வேண்டும். வகுப்புகளுக்கு வரும் பையன்கள் பல்வேறு குடும்பச் சூழ்நிலைகளிலிருந்து வருபவர்களாக இருப்பார்கள். ஆகையால், எல்லாப் பையன்களுக்கும் ஒரே மாதிரியான பாட திட்டத்தை வைத்துக் கொள்ள முடியாது.

சில சமயங்களில் அவர்கள் கற்றுக் கொண்டதை மறக்கச் செய்வதும் அவசியமாக இருக்கலாம். உதாரணமாக, ஆறு அல்லது ஏழு வயதுள்ள ஒரு சிறுவன் கோணல் மாணலாக எழுதப் பழகியிருந்தால் அல்லது என்ன வாசிக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளாமல் வாசிக்கப் பழகியிருந்தால், அந்தப் பையன் அந்தப் பழக்கத்தைக் கைவிடும்படி தாய்-ஆசிரியை பார்த்துக் கொள்ள வேண்டும். படிப்பதன் மூலம்தான் குழந்தை கற்றுக் கொள்ள முடியும் என்ற தவறான எண்ணத்தை அவள் கைவிட வேண்டும். படிப்பில் பயிற்சியே இல்லாதவன் கூட, புத்திசாலித்தனமாக இருக்க முடியும் என்பதைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம்.

இந்தக் கட்டுரையில் ஆசிரியர் என்ற வார்த்தையையே நான் உபயோகிக்கவில்லை. அதற்குப் பதிலாக, தாய்-ஆசிரியை என்ற வார்த்தையையே உபயோகித்திருக்கிறேன். ஏனெனில், தான் பாடம் சொல்லிக் கொடுக்கும் குழந்தைகளுக்கு ஆசிரியை உண்மையிலேயே தாயைப்போல் இருக்கவேண்டும். தாயின் ஸ்தானத்தை வகிக்க முடியாதவர், ஆசிரியையாக இருக்க முடியாது. தனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறார்கள் என்ற உணர்ச்சியே குழந்தைகளுக்கு ஏற்படக் கூடாது. பையனை கவனித்துக் கொண்டு, அவனுக்கு வழிகாட்டிக் கொண்டிருந்தால் போதும். ஆறு மணி நேரம் பள்ளிக்கூடத்தில் இருக்கும் பையன் ஒருக்கால் தன் நேரத்தை வீணடிப்பதாயிருக்கலாம். ஆனால், மேலே நான் குறிப்பிட்ட ஆசிரியையிடம் உள்ள பையன் எப்போதும் உண்மையாக ஏதாவது கற்றுக் கொண்டேயிருப்பான்.

இப்போதுள்ள நிலைமையில் நல்ல ஆசிரியைகள் கிடைக்காமற் போகக்கூடும். ஆகையால், ஆடவர்களான ஆசிரியர்களையே நாம் பயன்படுத்திக் கொள்ளலாம். அப்படியானால், இந்த ஆசிரியர்கள் தாயாரின் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். ஆனால், இறுதியில் தாய்தான் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கும். நான் சொல்லுவது சரியாய் இருந்தால், குழந்தைகளிடம் அன்பு உள்ள எந்தத் தாயும், இந்தப் பணிக்குத் தன்னைத் தயார் செய்து கொள்ளும் அதே சமயத்தில், குழந்தைகளையும் தயார் செய்ய முடியும்.

'நவஜீவன்'—2—6—1929

# 38

# மான்டிஸோரி பயிற்சிக் கல்லூரியில்

ஸ்ரீமதி மான்டிஸோரி, காந்திஜியைச் சந்தித்தது பற்றி இப்பகுதிகளில் குறிப்பிட்டிருக்கிறேன். அது இரு ஆன்மாக்களின் சந்திப்பேயாகும். இந்தச் சந்திப்பு, அந்த அம்மையாரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. அன்னார் பின்வருமாறு

எழுதியிருந்தார் : "காந்திஜி சாதாரண மனிதர் அல்ல, ஒரு புனித ஆன்மா என்றே எனக்குத் தோன்றுகிறது. என் உள்ளத்திலே அவரை நான் பின்பற்றிவந்திருக்கிறேன். அவருடைய சாந்தம், இனிமையான சுபாவம் ஆகியவற்றைப் பார்க்கும் போது, உலகத்தில் கடுமை என்றே ஒன்று இல்லை என்று தோன்றுகிறது. எல்லையோ, தடைகளோ எதுவுமின்றி அவர் மனம் விட்டுப் பேசினர். சூரிய கிரணம் வீசுவதுபோல் அவ்வளவு உறுதியாகவும் நேரடியாகவும் இருக்கிருர். நான் பயிற்சி அளிக்கும் ஆசிரியர்களுக்கு இந்த மகாபுருஷன் பெரிதும் உதவி செய்யக் கூடுமென்று எனக்குத் தோன்றியது. ஆசிரியராக இருப்பவர் களங்கமற்ற உள்ளமும், பெருந்தன்மையும் படைத்தவராக இருக்கவேண்டும். வயது வந்தவர்களின் உலகம் மிகக் கடுமையானது, மனித வர்க்கத்தின் வாழ்க்கைக்கு இடையூறு விளைவிக்கும் பல தடங்கல்கள் நிறைந்தது. அதிலிருந்து ஆசிரியர் வெளியே வரவேண்டுமாயின், தனது உள்ளத்தையே மாற்றிக் கொள்ள வேண்டும். எங்களுடைய ஆசிரியர்களை அவர் சந்திப்பது மனித வர்க்கத்திலுள்ள குழந்தையின் ஆன்மிகப் பாதுகாப்புக்கு உதவியாய் இருக்குமாக."*

நாங்கள் உட்காருவதற்கு திண்டுகளும், தலையணைகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. ஏழ்மை நிறைந்த ஐலிங்டன் ஜில்லாவைச் சேர்ந்த குழந்தைகள், சின்னஞ்சிறு தேவதைகளைப் போல், சுத்தமாகவும், சாதாரணமாகவும் ஆடைகள் அணிந்து கொண்டு, கை, கால்களில் ஒன்றுமில்லாமல், இந்திய முறைப்படி காந்திஜிக்கு நமஸ்காரம் செய்தனர். பின்னர் அச்சிறுவர்கள் தங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டவைகளை எங்களுக்குச் செய்து காட்டினர். ஒருமித்த நடனம், மனே உறுதி, சித்தத்தை ஒன்றின் மீதே நிலை நாட்டும் சிறு சாதனைகள் ஆகியவற்றை அவர்கள் செய்து காட்டினர். பின்னர் வாத்திய சங்கீதமும், கடைசியாக, மௌனப் பயிற்சியும் நிகழ்ந்தன. இந்தச் செயல்கள் அங்கு கூடியவர்களைப் பெரிதும் கவர்ந்தன. குழைந்தைகளால் சூழப்பட்ட ஸ்ரீமதி மான்டிஸோரியைப் பார்த்தபோது, குழந்தைகளுக்கென்றே உருவான ஒரு சுதந்திர உலகத்தின் காட்சி மனக்கண் முன்பு தோன்றியது. ஆண்டவனின் சிருஷ்டிகளில் அவருக்கு மிகவும் அருகாமையில் இருப்பவர்கள் குழந்தைகள் தானே. ஸ்ரீமதி மான்டிஸோரியின் கல்வித் திட்டம் முழுமையான பலன் அளிக்காவிட்டால் கூட, குழந்தையினிடம் உள்ள கவர்ச்சியை பெற்றோர்கள், ஆசிரியர்கள் ஆகியோரின் கவனத்திற்குக் கொண்டுவந்ததன் மூலம், மனித வர்க்கத்திற்கே அவர் அருமையான சேவை செய்தவராகிருர். காதுக்கு இனிமையான இத்தாலிய மொழியில், காந்திஜிக்கு அவர் சுருக்கமான ஒரு வரவேற்பளித்தார். அவருடைய காரியதரிசி, அதை ஆங்கிலத்தில்

* ஸ்ரீமதி மான்டிஸோரி இருக்கும் இடத்திற்கும், அவரது பள்ளிக்கூடத்திற்கும் காந்திஜி விஜயம் செய்ததைக் குறித்து ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியுள்ள விவரங்களே மேலே கொடுக்கப்பட்டுள்ளன.

மொழி பெயர்த்துக் கூறினர். அந்த மொழிபெயர்ப்பேகூட எவரையும் மெய்சிலிர்க்க வைத்தது. அதன் விவரமாவது:

"என்னுடைய வகுப்பில் படிக்கும் மாணவர்களுக்கும், இங்குள்ள நண்பர்களுக்கும் நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நான் ஒரு பெரிய விஷயத்தை உங்களிடம் சொல்லப் போகிறேன். அதுதான் காந்திஜியின் ஆன்மா. அந்த மகாத்மா இப்போது நம்மிடையே உடலுடன் நேரில் வந்திருக்கிறார். அவரது குரல் உலகம் பூராவிலும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இன்னும் சிறிது நேரத்தில் அந்தக் குரலைக் கேட்கும் பாக்கியம் நமக்குக் கிடைக்கும். அன்பு உள்ளத்துடன் அவர் பேசுகிறார். அவர் தன் குரலால் மட்டும் பேசவில்லை, தன் வாழ்க்கையையே கொட்டிப் பேசுகிறார். இது அபூர்வமான ஒரு அரிய நிகழ்ச்சியாகும். அவர் பேசும்போது ஒவ்வொருவரும் முழு கவனத்துடன் கேட்கிறார்கள். உத்தம குருநாதரே! உங்களை இங்கு வரவேற்கும் பாக்கியம் பெற்றுள்ள இந்தக் குரல், லத்தீன் ஜாதிகளைச் சேர்ந்த ஒரு குரல், மகோன்னதமான ரோமாபுரியைச் சேர்ந்த குரல். மேல் நாட்டின் மத சிந்தனைகளுக்குத் தாயகமான ரோமாபுரியின் குரல் என்பது பெருமைக்குரிய விஷயம். கீழ்த் திசைக்கு மரியாதை செலுத்துவதற்காக, மேல் திசையின் வாழ்க்கை, சிந்தனை ஆகிய எல்லாவற்றையும் இங்கு உங்கள் முன்பு சமர்ப்பிக்க முடியவில்லையே என்று வருந்துகிறேன். இங்கு என்னுடைய மாணவர்களை உங்கள் முன்பு நிறுத்துகிறேன். இங்கே என்னுடைய மாணவர்கள் மட்டுமில்லை; அவர்களுடைய நண்பர்களும், அந்த நண்பர்களின் நண்பர்களும், உறவினர்களும் இங்கே கூடியிருக்கிறார்கள். ஆனால் என்னுடைய மாணவர்களிடையே பல நாட்டினர் இருக்கிறார்கள். தாராள மனம் படைத்த ஆங்கில ஆசிரியர்களும், இந்திய, இத்தாலிய, டச்சு, ஜெர்மன், டேனிஷ், ஸ்வீடிஷ், ஆஸ்டிரேலிய, அமெரிக்க மாணவர்களும், நியூஜீலந்து, தென்னுப்பிரிக்கா, கானடா, அயர்லாந்து ஆகிய நாடுகளைச் சேர்ந்த மாணவர்களும் இங்கே கூடியிருக்கிறார்கள். குழந்தைகளிடம் உள்ள அன்பு காரணமாகவே அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள்.

"நாகரிகம் என்ற வார்த்தையும், குழந்தையைப் பற்றிய சிந்தனையுமே நம்மைப் பிணைத்து, இன்று உங்கள் முன்பு கொண்டு வந்து சேர்த்திருக்கின்றன. குரு நாதரே! எந்த ஒரு ஆன்மிக வாழ்க்கையினால் மட்டுமே உலக சமாதானம் என்ற கட்டிடத்தை எழுப்ப முடியுமோ, அந்த வாழ்க்கையை வாழ்வதற்கே நாங்கள் கல்வி புகட்டுகிறோம். வாழ்க்கைக் கலையில் கரைகண்ட ஒரு குரு நாதரின் சொற்களைக் கேட்பதற்காகவே மாணவர்கள் இங்கே கூடியிருக்கிறார்கள். மாணவர்களுக்கும், அவர்களுடைய நண்பர்களுக்கும் வாழ்க்கையிலேயே இது மறக்க முடியாத ஒரு நன்னாளாக இருக்கும். உங்களுக்காகப் பயிற்சி செய்துகொண்டு, உங்களுக்காகப் பணி புரிந்துவரும் இந்த 24 ஆங்கிலேயக் குழந்தைகளும் எதிர்காலத்தில் தோன்றப்போகும் புதுக் குழந்

ஸ்தயின் உயிர்ச் சின்னங்கள். உங்கள் வார்த்தைகளைக் கேட்க நாங்கள் யாவரும் ஆவலுடன் காத்திருக்கிறோம்."

இந்த வரவேற்பு இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு காந்திஜியின் உள்ளத்தை உருக்கிவிட்டது. அந்தச் சந்தர்ப்பத்திற்குத் தகுதியான கீதம் போன்ற இனிய மொழிகள் அவரிடமிருந்து வந்தன. பெற்றோர்களுக்கும், குழந்தைகளுக்கும் அது ஒரு செய்தியாகவும், உலகத்தில் உள்ள எல்லாக் கலைகளையும் பற்றிய ஒரு சாசனமாகவும் இருந்தது. அதைப் பூராவாகக் கீழே தருகிறேன் :

"அம்மணி, உங்களுடைய அன்பான வார்த்தைகளால் என்னைத் திணறும்படி செய்து விட்டீர்கள். முற்றிலும் உண்மையான ஒரு விஷயத்தை நான் பணிவுடன் ஒப்புக்கொள்ள வேண்டும். அதாவது, என் உடலின் ஒவ்வொரு நரம்பிலும் அன்பு உணர்ச்சி ஓடவும், நான் அன்பு மயமாக விளங்கவுமே நான் முயற்சித்து வருகிறேன். என்னைப் படைத்த கடவுளை, சத்தியத்தின் உருவமாகவே நான் கருதுகிறேன். அவரைக் காண நான் துடித்துக் கொண்டிருக்கிறேன். சத்தியத்தை நான் அறியவேண்டுமானால், என் உயிரைக் கொடுத்தாவது அன்பின் ஆணைக்கு கீழ்ப்படிய வேண்டும் என்பதை என் வாழ்க்கையின் ஆரம்ப காலத்திலேயே நான் அறிந்து கொண்டேன். நான் குழந்தைப் பேறு பெற்றவன். எனவே, சிறு குழந்தைகளின் மூலம் அன்பின் நியதியை அறிந்து கொள்ளவும் கற்றுக் கொள்ளவும் முடியும் என்பதையும் கண்டு கொண்டேன். அறியாமையில் ஆழ்ந்த பெற்றோர்களாகிய நாம் சரியாக நடந்து கொண்டிருந்தால், குழந்தைகள் ஒரு குற்றமும் அறியாதவர்களாக இருந்திருப்பார்கள். குழந்தைகள் விஷமம் செய்யும் சுபாவம் உள்ளவர்களாகப் பிறப்பதில்லை என்பதே என்னுடைய உறுதியான நம்பிக்கை. குழந்தை வளர்ந்து கொண்டிருக்கும் போதும், பிறப்பதற்கு முன்பும், பிறந்த பின்னரும் பெற்றோர்கள் ஒழுங்காக நடந்து கொண்டால், குழந்தை இயற்கையாகவே சத்தியம், அன்பு இரண்டுக்கும் கட்டுப்பட்டு நடக்கும் என்பது உலகம் அறிந்த உண்மை. என்னுடைய வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் இந்தப் படிப்பினையை நான் உணர்ந்தபோது, என்னுடைய வாழ்க்கையைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றிக் கொண்டேன்.

"எவ்வளவோ இன்னல்களுக்கு இலக்கான என்னுடைய வாழ்க்கை, எத்தனை விதமான கட்டங்களைத் தாண்டியிருக்கிறது என்பதை உங்களிடம் நான் விவரித்துக் கூறப்போவதில்லை. ஆயினும், ஒரு விஷயத்தை நான் தாழ்மையுடன் கூறத்தான் வேண்டும். அது என்னுடைய சொந்த அனுபவமாகும். அதாவது, என்னுடைய வாழ்க்கையில் சிந்தனை, சொல், செயல் ஆகியவற்றில் எந்த அளவுக்கு அன்பின் ஆணைப்படி நடந்திருக்கிறேனோ அந்த அளவுக்கு, வார்த்தைகளினால் விவரிக்க முடியாத மன அமைதியை நான் அடைந்திருக்கிறேன். என்னிடம் காணப்

படும் அமைதியை பார்த்து நண்பர்கள் பொறுமைப்பட்டிருக்கிறார்கள். இது அவர்களைத் திகைக்க வைத்திருக்கிறது. இந்த விலை மதிப்பில்லாத உடைமை எனக்கு எப்படிக் கிடைத்தது என்று அவர்கள் கேட்டது உண்டு. என்றாலும் இதை விளக்கிக் கூற முடியவில்லை. அந்த அமைதியை நண்பர்கள் என்னிடம் கண்டால், நம் வாழ்விலேயே மிகவும் பெரிய நியதியாகிய அன்பு என்ற ஆணையை நான் பின்பற்ற முயற்சிப்பதே அதற்குக் காரணம் என்று அவர்களிடம் சொல்லியிருக்கிறேன்.

"1915-இல் நான் இந்தியாவுக்குத் திரும்பினேன். அப்போது தான் உங்களுடைய நடவடிக்கைகளைப் பற்றிய விவரங்கள் முதல் முதலாக எனக்குத் தெரிந்தன. அம்ரேலி என்ற ஊரில் மான்டிஸோரி முறையின்படி ஒரு சிறிய பள்ளிக்கூடம் நடத்தப்பட்டு வந்தது. அதற்கு முன்பே உங்களுடைய பெயரை நான் கேள்விப்பட்டிருந்தேன். உங்களுடைய முறையின் நோக்கத்தை அந்தப் பள்ளிக்கூடத்தில் சரிவரப் பின்பற்றவில்லை என்பது உடனேயே எனக்குத் தெரிந்துவிட்டது. எனினும், உங்களுடைய கல்வி முறை மேலெழுந்தவாரியாகப் பின் பற்றப்பட்டது. உங்களுடைய கல்வி முறையை அமலுக்குக் கொண்டுவர அவர்கள் நேர்மையுடன் முயற்சிக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டேன். ஆனால், அதில் போலிப் பகட்டும் நிறைய இருப்பதைக் கண்டேன்.

"பின்னர் அம்மாதிரிப் பள்ளிக்கூடங்கள் பலவற்றைப் பார்த்தேன். இதைப்பற்றி நான் அதிகம் தெரிந்து கொள்ள ஆரம்பித்த போது, இதனுடைய அஸ்திவாரம் சிறந்ததாக இருந்ததைக் கண்டேன். மிருகங்களின் தன்மையை அடிப்படையாகக் கொண்டிராமல், மனிதனுடைய கண்ணியத்தை அடிப்படையாகக் கொண்ட இயற்கை விதிகளின்படி குழந்தைகளுக்குக் கல்வி புகட்ட முடியுமென்றால், இந்த அஸ்திவாரம் சிறந்ததுதான் என்பதை அறிந்தேன். குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கப்பட்ட விதத்தைப் பார்த்தபோது, இந்த போதனை அக்கறையில்லாமல் இருந்தபோதிலும், மேற்கூறிய அடிப்படையிலேயே நீங்கள் இந்த முறையை வகுத்திருக்கிறீர்கள் என்பதை உடனடியாகத் தெரிந்து கொண்டேன். அதற்குப் பிறகு உங்களுடைய மாணவர்களில் பலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்களில் ஒருவர் இத்தாலிக்கு வந்து நேரில் உங்களுடைய ஆசிகளையும் பெற்றிருக்கிறார். குழந்தைகளையும், உங்களையும் இங்கு சந்திக்க வேண்டும் என்று நான் மிகுந்த ஆர்வத்துடன் இருந்தேன். இந்தக் குழந்தைகளைப் பார்த்ததில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது. இந்தச் சிறுவர்களைப் பற்றி முன்னதாகவே நான் கொஞ்சம் விசாரித்துத் தெரிந்து கொண்டேன். பர்மிங்ஹாமிலும் இம்மாதிரி பள்ளிக்கூடம் ஒன்றிருக்கிறது. இங்கே எப்படி இருக்கும் என்பதை அந்தப் பள்ளியைப் பார்த்தபோதே ஒருவாறு அறிந்து கொண்டேன். ஆனால், இவ்விரண்டுக்கு மிடையே ஒரு வேற்றுமை இருக்கிறது. அங்கும் கூட மனித சுபாவம் செயல்பட முயற்சித்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். இங்கும் அதையே காண்கிறேன். சிறுபிராயம் முதலே மௌனத்

தின் மேன்மையைக் குழந்தைகளுக்கு உணர்த்தியிருப்பதையும், ஆசிரியர் மெல்லிய குரலில் ஒரு வார்த்தை சொன்னவுடன் குழந்தைகள் ஒருவர்பின் ஒருவராகத் துளிக்கூட சப்தமில்லாமல் வந்ததையும் கண்டபோது எனக்கு விவரிக்க முடியாத அவ்வளவு ஆனந்தம் ஏற்பட்டது. குழந்தைகளின் நடனங்களும் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தன. தாளக்கட்டுடன் அவர்கள் நகருவதைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, அரைப் பட்டினி கிடக்கும் இந்திய கிராமங்களிலுள்ள லட்சக்கணக்கான குழந்தைகளின் ஞாபகம் எனக்கு வந்தது. 'உங்களுடைய கல்வி முறையின் கீழ் இந்தக் குழந்தைகளுக்கு அளிக்கப்படும் இதே மாதிரியான பயிற்சியை அவர்களுக்கும் நான் அளிக்க முடியுமா?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். இந்தியாவிலுள்ள மிகமிக ஏழ்மையான குழந்தைகளிடையே நாங்கள் ஒரு சோதனை நடத்திக் கொண்டிருக்கிறோம். அந்தச் சோதனை எவ்வளவு தூரம் வெற்றி பெறும் என்று எனக்குத் தெரியாது. இந்தியாவிலுள்ள குச்சுகளில் வசிக்கும் அந்தக் குழந்தைகளுக்கு அத்தியாவசியமான கல்வியளிக்கும் பிரச்னை எங்களிடையே இருந்து வருகிறது. ஆனால், அதற்கான வழிகள் எங்களிடம் இல்லை.

''தாங்களாக மனமுவந்து சேவைக்கு முன்வரும் ஆசிரியர்களையே நாங்கள் நம்ப வேண்டியிருக்கிறது. அத்தகைய ஆசிரியர்கள் அதிகமாக இல்லை. குழந்தைகளைப் புரிந்து கொண்டு, அவர்களுடைய தனித் தன்மைகளையும் அறிந்து, பின்னர் அவர்கள் தாங்களாகவே அத்தன்மைகளைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடியவிதத்தில் குழந்தைகளுக்கு இடம் கொடுத்து, அவர்களைப் பண்படுத்தக் கூடிய ஆசிரியர்கள் அதிகம் கிடைக்கவில்லை. ஆயிரக்கணக்கான குழந்தைகளிடம் எனக்கு அனுபவம் உண்டு, உங்களுக்கும், எனக்கும் இருப்பதைவிட அவர்களுக்கு இன்னும் அதிக நாணய உணர்ச்சி இருக்கிறது என்பதை நான் அறிவேன். நாம் மட்டும் கீழிறங்கி வந்து முயற்சி செய்தால், வாழ்க்கையின் மிகப் பெரிய படிப்பினைகளை ஒன்றும் அறியாதவர்கள் என்று சொல்லப்படும் குழந்தைகளிடமிருந்து கற்றுக் கொள்ளலாம். வயது வந்த அறிஞர்களிடமிருந்தல்ல, குழந்தைகளின் சொற்களில் விவேகம் செறிந்த கருத்துகள் வெளிவருகின்றன என்று ஏசுநாதர் கூறியது எவ்வளவு மகத்தான உண்மை! இதை நான் பூரணமாக நம்புகிறேன். தாழ்மையுடனும், மனத்தில் களங்கம் இல்லாமலும் குழந்தைகளிடமிருந்து விவேகத்தைக் கற்றுக் கொள்ளலாம் என்பதை, என்னுடைய அனுபவத்திலேயே பார்த்திருக்கிறேன்.

''உங்களுடைய நேரத்தை நான் வீணடிக்கக் கூடாது. இப்போதைக்கு என் மனத்தில் அதிகமாக இடம் பெற்றுள்ள விஷயங்களைப்பற்றியே உங்களிடம் சொல்லியிருக்கிறேன். அதாவது, நான் குறிப்பிட்ட இந்த லட்சக்கணக்கான குழந்தைகளிடம்

உள்ள சிறந்த அம்சங்களை வெளிக் கொணருவதற்கு என்ன செய்யலாம் என்ற பிரச்னையையே குறிப்பிடுகிறேன். ஆனல், இந்த ஒரு பாடத்தை நான் கற்றுக் கொண்டிருக்கிறேன். மனிதனுக்கு அசாத்தியமாக இருப்பது, கடவுளுக்கு மிகவும் அற்பமானது. மிகவும் அடிமட்டத்திலுள்ள சிருஷ்டியையும் காக்கும் அந்தக் கடவுளிடம் நாம் நம்பிக்கை வைத்தால் எதுவும் சாத்தியமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்த இறுதி நம்பிக்கையுடனேயே நான் காலம் தள்ளுகிறேன். அவருடைய ஆணைக்கு உட்பட்டும் நடக்க முயற்சிக்கிறேன். ஆகையால், குழந்தைகளிடம் உங்களுக்கு உள்ள அன்பு காரணமாக, உங்களுடைய பல்வேறு ஸ்தாபனங்களின் மூலம் நீங்கள் அவர்களுக்குக் கல்வி புகட்டுகிறீர்கள். அவர்களிடமுள்ள சிறந்த அம்சங்களை வெளிக் கொணர முயற்சிக்கிறீர்கள். இந்தக் கல்வி, பணக்காரர்களின் குழந்தைகளுக்கு மட்டும்தான் என்றில்லாமல், பரம ஏழைகளின் குழந்தைகளுக்கும் கிடைப்பது சாத்தியமாக இருக்குமென்று நம்புகிறேன். இந்த உலகத்தில் சமாதானம் நிலவ வேண்டுமானல், யுத்தத்திற்கு எதிராக ஒரு உண்மையான யுத்தத்தை நாம் நடத்த வேண்டுமானல், குழந்தைகளிடமிருந்துதான் நாம் ஆரம்பிக்க வேண்டும். கள்ளம் கபடமற்று இயற்கையாக அவர்கள் வளர்ந்தால், அந்தப் போராட்டம் அவசியமில்லை; பலனற்ற, வீணான தீர்மானங்களை நிறைவேற்றிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. அன்பிலிருந்து அன்புக்கும், சமாதானத்திலிருந்து சமாதானத்திற்கும் போய்க் கொண்டிருப்போம், தெரிந்தோ தெரியாமலோ, எந்த சமாதானத்திற்காகவும், அன்புக்காகவும் உலகம் ஏங்கி நிற்கிறதோ அந்த சமாதானம் உலகின் எல்லா மூலைகளிலும் பரவி விடும் என்று நீங்கள் சொன்னீர்கள். அது முற்றிலும் சரியேயாகும்.''

—'எங் இந்தியா' – 19—11—1931

# 39

# நாடியாடில் ஒரு மணிநேரம்*

நாடியாடில் ஒரு மணிநேரத்திற்குள் நெருக்கியடித்துக் கொண்டு மூன்று நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. அவையாவன : சென்ற வருஷம் காலமான ஒரு ஊழியரின் ஞாபகார்த்தமாக ஒரு மான்டிஸோரி பள்ளிக்கூடத்திற்கு விஜயம்; ஹரிஜனங்களின் ஆலயம் ஒன்றுக்கு விஜயம்; காலஞ்சென்ற வித்தல்பாய் பட்டேல் ஞாபகார்த்தப் பெண்கள் பள்ளித் திறப்பு விழா.

கடைசி நிகழ்ச்சியில் பூல்சந்த் ஷாவின் சேவையை காந்திஜி பாராட்டினர். அவருடைய ஞாபகார்த்தமாகத்தான் அந்த

* நாடியாடில் ஒரு பெண்கள் பள்ளியில் காந்திஜி செய்த பிரசங்கத்தின் சுருக்கம், ஸ்ரீ மகாதேவ தேசாயின் வாராந்திரக் கடிதத்திலிருந்து கொடுக்கப்பட்டுளது.

மான்டிஸோரி பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப்பட்டது. சமீபத்தில் காலமான மோகன்லால் பாண்டியாவையும் காந்திஜி பாராட்டிப் பேசினர். இருவரும் ஆடம்பரமில்லாமல் மௌனமாகத் தொண்டு செய்த ஊழியர்கள். இவ்வளவு காலமாக இவர்களைத் தான் காந்திஜி குஜராத்துக்கு உதாரணமாகக் காட்டி வந்தார்.

"இருவரும் சேவையிலேயே உயிர் நீத்தனர். ஆனல், செங்கல் லினலும், சுண்ணும்பினலும், கருங்கல்லினலும் எழுப்பப்படும் ஞாபகச் சின்னங்கள் நிலையானவையல்ல. இவர்களுடைய ஸ்தானத்திற்கு தகுதியான ஊழியர்களைத் தேடிப் பிடிப்பதே உண்மையான நினைவுச் சின்னமாகும். மன்னனின் அரியாசனம் எப்போதுமே காலியாக இருப்பதில்லை. மன்னர் இறந்ததற்கு துக்கம் கொண்டாடிக் கொண்டிருக்கும் போதே, "மன்னன் நீடூழி வாழ்க" என்று கூறுவது போல், தேச சேவை என்ற சிங்காசனம் ஒரு போதும் காலியாக இருக்கக் கூடாது. "ஒரு மனிதன் செய்யும் நல்ல காரியங்கள் அவனுடனேயே புதைக்கப்பட்டுவிடுகின்றன. ஆனல், அவன் செய்யும் கெட்ட காரியங்கள் அவன் செத்த பிறகும் இருக்கும்" என்று ஷேக்ஸ்பியர் கூறியிருக்கிறார். எல்லோருக்கும் பொதுவான ஓர் உண்மையை இங்கு அவர் சொல்லவில்லை. மனித சுபாவத்திலுள்ள ஒரு போக்கையே குறை கூறியிருக்கிறார். உண்மையில் பார்த்தால், அசுத்தம், தீமை எல்லாவற்றையும் இயற்கை தானே எடுத்துக் கொண்டு, மலரையும், பழத்தையும்தான் உலகத்திற்கு அளிக்கிறது. ஆகையால், நாமும் காலஞ்சென்ற நமது தலைவர்களின் குறைபாடுகளை மறந்து விட்டு, அவர்களிடமிருந்த நல்ல குணங்களையே ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். உலகம் தன்னுடைய பாரம்பரியத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்கு இது ஒன்றுதான் வழி" என்றார் காந்திஜி.

மான்டிஸோரி கல்வி முறை பற்றியும் இந்த நிகழ்ச்சியில் காந்திஜி சில வார்த்தைகள் கூறினர். எந்தக் கொள்கைகளின் மீது தம்முடைய கல்வி முறை அமைக்கப்பட்டுள்ளதோ, அந்தக் கொள்கைகளின் படியே அவர் தமது வாழ்க்கையை நடத்தி வந்திருக்கிறார் என்று ஸ்ரீமதி மான்டிஸோரி காந்திஜியை ஒரு சமயம் பாராட்டினர். அந்தப் பாராட்டுரையை காந்திஜி நன்றியுடன் ஏற்றுக் கொண்டார். அந்தக் கொள்கைகள் அவருக்குத் தெரியுமாகையால், குழந்தைகளை சுகபோகத்தில் வைத்திருப்பதில் பிரயோசனமில்லையென்றும், குழந்தைகளை வீடுகளிலிருந்து பள்ளிக்கூடத்திற்கு அழைத்துவர மாதம் ஐம்பது ரூபாய் வீணடிக்கப்படுவது அக்கிரமம் என்றும் அவர் கூறினர். மேலும், சில முறைகளைக் கண்மூடித்தனமாக அப்படியே இங்கும் பின் பற்றுவதால் பலன் ஏற்படாது என்றும், இந்தச் சிறுவர்களைக் கால்நடையாகவே ஆசிரியர்கள் பள்ளிக்கூடத்திற்கு அழைத்து வருவதுதான் நல்லது என்றும், இரண்டரை வயதான குழந்தைகள் ஒரு மைல் தூரம் நடப்பது அவ்வளவு பெரிதல்ல என்றும் காந்திஜி குறிப்பிட்டார்.

பெண்கள் கல்வி பற்றி காந்திஜி கூறியதாவது: "ஓயாமல் பெண்களின் கல்வியைப் பற்றிப் பேசிக்கொண்டேயிருப்பவர்கள் தங்களுடைய பெண்கள், சகோதரிகள், தாய்மார்கள் விஷயத்தில் தங்களுடைய கடமையை நிறைவேற்றி விட்டார்களா? அப்படிச் செய்யவில்லை யென்றால், பெண்களின் கல்வியைப் பற்றிப் பேச அவர்களுக்கு உரிமையில்லை.

"காலஞ்சென்ற வித்தல்பாய் பட்டேல் ஞாபகார்த்தப் பெண்கள் பள்ளி யொன்றைத் திறந்து வைப்பதற்காக இன்று நாம் கூடியிருக்கிறோம். வித்தல்பாயின் தேச பக்தி எவ்வளவு விரிவானதாயிந்ததோ, அவ்வளவு பரந்த நோக்கம் உடையதாக இருந்தாலொழிய, எந்த ஞாபகச் சின்னமும் அவருக்குத் தகுதியானதாயிருக்க முடியாது. இந்த ஞாபகச் சின்னத்தை எழுப்ப பட்டிதார்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வித்தல்பாய் பட்டேல் தங்கள் சாதியைச் சேர்ந்தவரென்று அவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால், காலஞ்சென்ற வித்தல்பாய் எந்த ஒரு சாதி அல்லது வகுப்பையும் சேர்ந்தவர் அல்ல. தேசீயம்தான் அவருடைய மதம். ஒரு பட்டிதார் அல்லது முஸ்லிம் அல்லது கிறிஸ்தவரை அவர் எவ்வளவு நேசித்தாரோ, அவ்வளவு ஒரு பங்கியையும் நேசித்தார். ஆகையால் சாதி, வகுப்பு என்ற வேற்றுமைகளில்லாமல் எல்லா இந்தியர்களுக்கும் சேவை செய்யத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்து கொள்ளக் கூடிய பெண்களைத் தயார் செய்தாலொழிய, அவருக்கு உண்மையான ஞாபகச் சின்னத்தை எழுப்ப முடியாது. டிரஸ்டிகள் இந்த லட்சியத்தை எப்போதுமே ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்."

'ஹரிஜன்' – 8—6—1935

# 40

## சமூகக் கல்வி*

குழந்தைகளின் கல்வியை விட, சமூகக் கல்வி, அதாவது மக்களுக்கான கல்வி, இன்னும் அதிகக் கஷ்டமானது. குழந்தைகள் கல்வி எப்படி நிறைவேற்றப்பட்டிருக்கிறது என்பதற்கு உதாரணங்கள் இருக்கின்றன. ஆனால் நமது பாமர மக்களுக்குக் கல்வி அளிப்பது சம்பந்தப்பட்டவரையில், நமக்கு வழிகாட்டுவதற்கு அந்த அளவுக்குக் கூட எதுவும் இல்லை என்று சொல்லலாம். இந்த விஷயமாக, வெளி நாடுகளிலிருந்துகூட நாம் தெரிந்து கொள்ளக் கூடியது மிகவும் சொற்பம்தான். மேலும்,

* சத்தியாக்கிரக ஆசிரமத்திலுள்ள ராஷ்டிரீய பாடசாலையின் ஆசிரியர்களால் நடத்தப்படும் 'வினிமயா' என்ற கையெழுத்து சஞ்சிகையிலிருந்து மேற்கண்ட கட்டுரை எடுக்கப்பட்டுளது.

இந்தியாவின் நிலைமை மற்ற நாடுகளிலுள்ள நிலைமைகளிலிருந்து மாறுபட்டதாகும்.

மதத்தைப் பற்றிய நமது கருத்துகளும், மதக் கோட்பாடுகளின் படி வாழ்க்கையை நடத்தும் முறைகளும் இன்று பலவீனமாகிவிட்டன. மேலும், நம் நாட்டில் பல்வேறு மதங்கள் இருப்பதன் காரணமாக அடிக்கடி பூசல்களும் ஏற்படுகின்றன. ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லோருக்கும் ஒரே மாதிரியான கல்வித் திட்டம் இருக்க முடியாது. உதாரணமாக, பசுக்களைக் காப்பாற்றும் விஷயத்தில் ஹிந்துக்களிடம் நாம் சொல்லக் கூடிய அதே வாதங்களை முஸ்லிம்களிடம் சொல்ல முடியாது. ஆயினும், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே ஏற்படும் பூசல்களில் உள்ள தீங்கைப் பற்றி இருவருக்குமே நாம் உணர்த்தியாகவேண்டியிருக்கிறது.

சமூக சீர்திருத்தம் என்பது மிகப் பெரியதும், கடினமானதுமான ஒரு பிரச்னையாகும். ஒவ்வொரு வகுப்புக்கும் பிரத்தியேகமான சில தனித் தன்மைகள் இருக்கின்றன. ஒவ்வொரு சாதியும், அதனதன் உட் பிரிவுகளால் அவதிப்படுகிறது. முஸ்லிம்கள், கிறிஸ்தவர்களிடையே உட் பிரிவுகள் இல்லையென்று யாரும் நினைக்க வேண்டாம். ஹிந்துக்கள் இந்தத் தீமையை எல்லா வகுப்புகளிலுமே பரவவிட்டிருக்கிறார்கள்.

ஆரோக்கியம், சுகாதாரம், அரசியல் ஆகிய விஷயங்களைப் பற்றித்தான் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக போதிக்க முடியும். அரசியலிலேயே பொருளாதாரமும் சேர்ந்திருக்கிறதென்று நான் கருதுகிறேன்.

இந்தியாவில் அரசியலும், சுகாதார சாத்திரமும் மதத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவை. இது விசித்திரமானதாகத் தோன்றலாம். எனினும், இது உண்மை. உதாரணமாக, பல்வேறு மதங்களைச் சேர்ந்தவர்கள் எல்லோருமே அரசியலைப் பற்றி ஒரே மாதிரியான கண்ணோட்டம் உள்ளவர்களல்ல. மேலும், நோய்களுக்கு சிகிச்சையளிக்கும் விஷயத்தில், மத உணர்ச்சிகளையும் கவனிப்பது தவிர்க்க முடியாததாகிவிடுகிறது. நோய் குணமடைந்த பிறகு உடலைத் தேற்றிக் கொள்ளுவதற்கு மாட்டிறைச்சி ரஸத்தைச் சாப்பிடுவது நல்லதென்று, மக்களுக்குக் கல்வி புகட்டும் பணியில் ஈடுபட்டிருப்பவர்கள், எல்லோரிடமுமே அவ்விதம் சொல்லிவிட முடியாது. குடி தண்ணீர் விஷயத்தில் சுகாதார விதிகளைப் பின்பற்றுவது விரும்பத்தக்கது என்பதை முஸ்லிம்களை ஏற்கும்படி செய்யவும் முடியாது.

இந்த நிலைமையில், சமூகக் கல்வி என்பது எங்கு ஆரம்பமாக வேண்டும்? அதனுடைய தன்மை என்ன, அளவு என்ன? சமூகக் கல்வி என்பது எல்லா மக்களுக்கும் கல்வி புகட்டுவதைத் தவிர வேறொன்றுமில்லை. இரவுப் பள்ளிகளை ஆரம்பித்து, வேலை செய்து அலுப்புற்றிருக்கும் தொழிலாளர்களுக்கு அகர வரிசை கற்றுக் கொடுப்பது சமூகக் கல்வி அல்ல.

அப்படியானல், சமூகக் கல்விப் பணியில் ஈடுபட்டுள்ள ஒரு ஆசிரியர் என்னதான் செய்ய வேண்டும்?

இப்போதைக்கு, அவருக்கு இரண்டே வழிகள்தான் இருக்கின்றன என்று எனக்குத் தோன்றுகிறது. முதலாவதாக, அவர் ஒரு கிராமத்தில் குடியமர்ந்து அங்குள்ள மக்களுடன் கலந்து பழகி, அவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும். எந்த அளவுக்கு அவர் அவர்களுக்குச் சேவை செய்கிருரோ, அந்த அளவுக்கு அவர்களுக்கு விஷய அறிவும் ஊட்டுபவராகிருர். மற்ெருன்று, மக்களுக்கு விஷய அறிவு ஊட்டுவதற்கான எளிய புத்தகங்களைத் தயாரித்து, மலிவான விலையில் வெளியிட வேண்டும். அந்தப் புத்தகங்களை மக்களிடையே பரப்புவதற்கு ஒரு இயக்கத்தையும் ஆரம்பிக்க வேண்டும். இந்தப் பணியில் அக்கறை உள்ளவர்கள், எழுத்தறிவில்லாதவர்களை கோஷ்டி கோஷ்டியாகக் கூட்டி அவர்களுக்கு வாசித்துக் காட்டுவதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக இது ஒரு நிலையான பழக்கமாகவும் ஆகிவிட வேண்டும்.

மக்கள் கல்வியைப் பற்றிய இந்தக் கருத்து சரியானதுதான் என்ருல், இதற்கு சரியான ஆசிரியர்களைப் பயிற்றுவிக்க வேண்டியதுதான் நம்முடைய முதல் வேலையாக இருக்க வேண்டும். சமூகக் கல்வி என்ருல் என்ன என்பது பற்றி மக்களுக்கு இன்னும் சரியாகத் தெரியவில்லை. இத்துறையில் காங்கிரஸ் மறைமுகமாகவேனும் ஏதோ செய்திருக்கிறது. ஆனல், நல்லொழுக்கத்தைக் கட்டி வளர்க்க வேண்டிய ஆசிரியரின் கண்ணேட்டத்துடன் காங்கிரஸ் இதைச் செய்யவில்லை. அரசியல் வாதிகளுக்கு, அரசியல் கல்வி அளிப்பதில்தான், சுயராஜ்யத்தில் தான் தீவிர அக்கறை இருக்கிறது. சுயராஜ்யம் வந்த பிறகு பாமரமக்களின் கல்வி தானுக வந்துவிடும் என்று அவர்கள் நினைக்கிருர்கள். ஆனல், நல்லொழுக்கம் இருந்தால்தான் சுயராஜ்யம் வரும் என்று மறுபுறம் ஆசிரியர் வாதாடுகிருர். இப்போது நம் முன்பு உள்ளது, கல்விக்கு எது ஏற்றது என்பதுதான். அரசியல்வாதியினிடம் நல்லொழுக்கம் இல்லாவிட்டால் கூட, தன் நோக்கத்தில் அவர் வெற்றி பெற்றுவிடக் கூடும். ஆனல், மக்களுக்கு ஆசிரியராக இருப்பவருக்கு நல்லொழுக்கம் இல்லாமல் முடியாது. அவரிடம் அந்த ஒழுக்கம் இல்லையென்ருல், அவர் கரிப்புத்தன்மையில்லாத சாரமற்ற உப்புக்குச் சமமாவார். இந்த விஷயத்தைப் பற்றி இன்னும் அதிகம் எழுதுவதால் பலனில்லை.

## 41

# நகர சபைகளும் ஆரம்பக் கல்வியும்

**கேள்வி :** "நம்முடைய முதியோர் கல்வித் திட்டங்களில் எந்த அம்சம் முக்கியமானது? எழுதப் படிக்கக் கற்றுக் கொள்

வதைப் பெருக்குவதா அல்லது 'உபயோகமான அறிவை'ப் போதிப்பதா? பெண்கள் கல்வியைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

பதில் : ''வயது ஆகி, ஒரு தொழிலையும் செய்து கொண்டிருப்பவர்களின் முதல் தேவை எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ளுவதுதான். பெரும்பாலான மக்கள் எழுத்தறிவில்லாதவர்களாக இருப்பது, இந்தியாவின் பாவமும், வெட்கக்கேடான நிலைமையுமேயாகும். எனவே, இதை ஒழித்தாக வேண்டும். அகர வரிசையைப் போதிப்பதுடன் எழுத்தறிவிப்பு இயக்கம் முடிந்துவிடக் கூடாது. அத்துடன் உபயோகமான அறிவும் சேர்ந்தே அளிக்கப்பட வேண்டும். ஆனால், ஒரே சமயத்தில் இரண்டு குதிரைகளின் மீது சவாரி செய்வதைப் பற்றி நகர சபைகள் உஷாராக இருக்க வேண்டும்; இல்லாவிடில் அவர்கள் நிச்சயமாகத் தோல்வியடைவார்கள்.

''பெண்களிடையே உள்ள எழுத்தறிவின்மை சம்பந்தப்பட்டவரையில், ஆண்களிடம் இருப்பதைப் போன்ற சோம்பேறித்தனமும், மந்தமும் அதற்குக் காரணமல்ல. தலைமுறை தலைமுறையாக, பெண்கள் கீழானவர்கள் என்ற நியாயமில்லாத ஒரு சம்பிரதாயம் இருந்து வருவதுதான் இதற்கு முக்கிய காரணம். தன்னுடைய சகபாடியாகவும், ''மறுபாதியாகவும்'' கருதுவதற்குப் பதிலாக, ஆண்கள் அவர்களை வீட்டு வேலை செய்யும் பணிப்பெண்களாகவும், தங்களுடைய போகத்திற்கான கருவிகளாகவும் மாற்றிவிட்டார்கள். இதன் பலனாக, நமது சமூகமே ஒரு அளவுக்கு செயலற்றுப் போய்விட்டது. இனத்துக்கே தாய் பெண்தான் என்று சொல்லப்படுவது முற்றிலும் சரியானது. அவர்களுக்கு நாம் செய்துள்ள பெரிய தவறைப் போக்க வேண்டியது, நாம் நிறைவேற்ற வேண்டிய ஒரு முக்கியமான கடமையாகும்.''

கேதா ஜில்லாவிலுள்ள கபத்வஞ்ஜைச் சேர்ந்த ஒரு நண்பர் கேட்டார் : ''சிலவிஷயங்களைப் பற்றி, வெவ்வேறு சமயங்களில் நீங்கள் வெவ்வேறு அபிப்பிராயங்களைத் தெரிவித்திருக்கிறீர்கள். நம்முடைய இப்போதைய கொள்கைகளை எதிர்ப்பதற்காக நம்முடைய எதிரிகள் இந்த அபிப்பிராயங்களைச் சில சமயங்களில் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். இந்த நிலைமையில் நாங்கள் என்ன செய்ய வேண்டும்?''

காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார் : ''இந்த முரண்பாடுகள் பெயரளவில்தான். இவற்றைச் சுலபமாகச் சீர்படுத்திக் கொள்ள முடியும். இந்த விஷயத்தில் எப்போதும் ஒரு விதியைப் பின்பற்ற வேண்டும். அதாவது, முன்னர் சொல்லப்பட்ட அபிப்பிராயங்களைவிடக் கடைசியாகக் கூறப்பட்டுள்ள அபிப்பிராயத்தையே பின்பற்ற வேண்டும். ஆனால், நான் முதலில் சொன்னதாக இருந்தாலும், கடைசியாகச் சொன்னதாக இருந்தாலும்,

எந்த அபிப்பிராயமும் உங்களுக்குப் பிடித்தமானதாயில்லை யென்றால், அது உங்களைக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை. அதனால் என்னுடைய அபிப்பிராயம் தவறு என்று அர்த்த மில்லை. ஆனால், நீங்கள் புரிந்துகொள்ள முடியாத அல்லது பின் பற்ற முடியாத ஒரு கருத்தை ஒப்புக்கொள்ளுவது தவறாகும்.

—'ஹரிஜன்' – 18—2—1939

# 42

# உண்மையான முதியோர் கல்வி

சர்க்கா ஜெயந்திக்காக வந்த பல்வேறு கடிதங்கள், தந்தி கள் ஆகியவற்றுள், இந்தூர் முதியோர் கல்வி சங்கத்திலிருந்து ஹிந்துஸ்தானியில் வந்த ஒரு கடிதம் என் கவனத்தை மிகவும் கவர்ந்தது. அக்கடிதத்திலுள்ள விஷயம் இதுதான்: ஆடம்பர மான கொண்டாட்டங்களில் நேரத்தை வீணடிப்பதற்குப் பதி லாக இந்தச் சங்கம், ஜெயந்தி வாரத்தை அவசரமானதும், உபயோகமானதுமான வேலைகளைச் செய்யப் பயன்படுத்திக் கொண்டது. அதாவது, இளைஞர்கள், வயதானவர்கள், பணக் காரர்கள், ஏழைகள், அதிகாரிகள், பொதுஜனங்கள் எல்லோ ரும் சேர்ந்துகொண்டு, மனிதர்களுக்கும், மிருகங்களுக்கும் தீங்கு விளைவிக்கக் கூடிய ஒரு விஷப் பூண்டை அழிப்பதில் ஈடுபட்டார் கள். எந்தப் பகுதியிலும் இத்தகைய ஒத்துழைப்பு நிரந்தர மான ஒரு அம்சமாகிவிட்டால், இளைஞர்கள், முதியோர்கள். இரு வருக்குமே அது ஒரு சிறந்த கல்வியாக இருக்கும். அந்த ஒத்து ழைப்பு எங்கு இருக்கிறதோ, அந்தச் சமூகத்தின் தன்மையையே அது மாற்றி அச்சமூகம் சிறப்புற்று விளங்கும்படி செய்யும்.

'ஹரிஜன்' – 26—10—1947

# 43

# கிராமக் கல்வி

'நவஜீவன்' பத்திரிகையில் இந்த அனுபந்தத்தை ஆரம்பிப் பதில் காகா சாகிபுக்குப் பல நோக்கங்கள் உண்டு. பள்ளிக் கூடம் போய் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ள ஆரம்பிக்கும் வயதைத் தாண்டிவிட்டவர்கள், குஜராத்தில் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். தங்கள் ஜீவனத்திற்காகப் பல தொழில்களைச் செய்துகொண்டே அவர்கள் குடும்பத்தை நடத்திவருகிறார்கள். அத்தகையவர்களில் சுமார் பத்தாயிரம் கிராமவாசிகளுக்குக் கல்வியின் மிக முக்கியமான சில அம்சங்களை எடுத்துக் கூறுவ தற்கு, இதை ஒரு சாதனமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்

டும் என்பது அவருடைய நோக்கங்களில் ஒன்ருகும். கிராமவாசிகளுக்கு நாம் அளிக்க விரும்பும் இந்தக் கல்வி முறைக்கு, இப்போதிருப்பதைவிட இன்னும் விரிவான முறையில் வியாக்கியானம் செய்ய வேண்டும். இந்தக் கல்வி, எழுதப் படிக்கக் கற்றுக்கொடுப்பதைவிட இன்னும் அதிகப்படியானதாக இருக்க வேண்டும். நடைமுறையில் மிகவும் உபயோகமான பல விஷயங்கள் கிராமவாசிகளுக்குத் தெரியாது. மேலும், பல அர்த்தமற்ற மூட நம்பிக்கைகளினுலும் அவர்கள் கஷ்டப்படுகிருர்கள். இந்த மூட நம்பிக்கைகளைப் போக்கி, இந்த அனுபவத்தின் மூலம் நமது விவசாயிகளுக்கு உபயோகமான அறிவைப் புகட்ட வேண்டும் என்று காகா சாகிப் விரும்புகிருர்.

தேகாரோக்கியம் சம்பந்தமாக கிராமங்களில் உள்ள நிலைமை மிகவும் மோசமானதாக இருக்கிறது. அவசியமானவைகளும், சுலபமாகக் கிடைக்கக் கூடியவைகளுமான பல ஆரோக்கிய விதிகளைப் பற்றிய அறிவு மக்களுக்கு இல்லாமலிருப்பது, நமது வறுமையின் முக்கிய காரணங்களில் ஒன்ருகும் கிராமங்களில் உள்ள நமது மக்களின் தேகாரோக்கியத்தை அபிவிருத்தி செய்ய முடியுமானல், ஆயிரக்கணக்கான ரூபாய் மிச்சப்படும். அந்த அளவுக்கு நமது மக்களின் பொருளாதார நிலைமையிலும் அபிவிருத்தி ஏற்பட முடியும். தேக ஆரோக்கியத்துடன் உள்ள ஒரு விவசாயி எவ்வளவு வேலை செய்ய முடியுமோ அந்த அளவுக்கு, உடல் நலிவுற்ற ஒரு விவசாயி செய்ய முடியாது என்பது வெளிப்படை. நம் நாட்டில் மரண விகிதம் எவ்வளவு இருக்கலாமோ அதைவிட அதிகமாக இருக்கிறது. இதன் மூலம் ஏற்படும் நஷ்டம் அற்பமானதல்ல.

நம்முடைய வறுமைதான் மோசமான நம்முடைய ஆரோக்கிய நிலைமைக்குக் காரணம் என்றும், வறுமையைப் போக்கிவிட முடியுமென்ருல், நமது ஆரோக்கியமும் தானுகவே சீரடைந்து விடும் என்றும் சொல்லப்படுகிறது. அரசாங்கத்திற்குக் கெட்ட பெயரை உண்டுபண்ண வேண்டும் என்று விரும்பினுல், அல்லது நம்முடைய கஷ்டங்களுக்கெல்லாம முழுப் பொறுப்பையும் அவர்கள் மீது சுமத்த விரும்பினுல்தான் அப்படிச் சொல்லலாம். ஆனுல், இப்படிச் சொல்லுவதில் பாதி உண்மைகூட இல்லை. நம்முடைய மோசமான ஆரோக்கிய நிலைமைக்கு நம்முடைய வறுமை சிறிதளவுதான் காரணம். இது என்னுடைய அனுபவ பூர்வமான அபிப்பிராயமாகும். வேறு அம்சங்களும் இருக்கின்றன. ஆனுல், இங்கு அவற்றை விவரிக்கப் போவதில்லை.

நம்முடைய அறியாமை, தவருன பழக்கங்கள் காரணமாகச் சில நோய்கள் வருகின்றன. இவற்றை சுலபமாக குணமாக்கிவிட முடியும். அத்தகைய முறைகளை வெளியிடுவதுதான் இந்தக் கட்டுரைத் தொடரின் நோக்கங்களில் ஒன்ருகும்.

இந்தக் கண்ணேட்டத்துடன் நமது கிராமங்களிலுள்ள நிலைமையைக் கவனிப்போம். பெரும்பாலான கிராமங்கள், குப்பை

மேடுகளைப் போல் காட்சியளிக்கின்றன. சுகாதாரத்தையோ, சுண்ணியமான நடத்தையையோ பற்றி மக்களுக்கு உணர்வே இல்லை. எங்கு சிறுநீர் கழிக்கிறோம் என்று பார்ப்பதில்லை. தம் வீட்டு முற்றங்களையே அசுத்தப்படுத்திவிடுகிறார்கள். தாங்கள் கழிக்கும் சிறு நீரையோ, மலத்தையோ மண்ணைப் போட்டு மூடு வதுமில்லை. கிராமங்களிலுள்ள தெருக்கள் சுத்தமாகவே இருப் பதில்லை. திட்டுத் திட்டுகளாக மண்ணும் குப்பையும் காணப் படுகின்றன. இதனால் மனிதர்களோ, மாடுகளோ தெருக்களை உபயோகிப்பது கஷ்டமாகிவிடுகிறது. குளங்கள் இருக்கும் ஊர்களில், குளங்கள் துஷ்பிரயோகம் செய்யப்படுகின்றன. மக்கள், தங்களுடைய துணிமணிகள், பாத்திரங்களைக் குளங்களி லேயே கழுவுகிறார்கள். மனிதர்கள், மாடுகள், இருவருமே குளிப் பதற்கு அதை உபயோகித்துக் கொள்ளுகிறார்கள். பக்கத்தி லுள்ள நிலத்தில் மலம் கழித்துவிட்டு, சிறுவர்களும், பெரியவர் களும் குளங்களுக்கு வந்து சுத்தம் செய்து கொள்ளுகிறார்கள். இதில் மிகவும் மோசமானது என்னவென்றால், குடிப்பதற்கும், சமையலுக்கும் கூட இதே ஜலம்தான் உபயோகிக்கப்படுகிறது!!

எந்த விதமான திட்டமும் இல்லாமல் வீடுகள் கட்டப்படு கின்றன. பக்கத்து வீட்டுக்காரர்களுக்கு அதனால் ஏதாவது சௌகரியம் ஏற்படுமா, அந்த வீட்டில் வசிப்பவர்களுக்குப் போதிய வெளிச்சமும், காற்றும் கிடைக்குமா என்பதைப் பற்றி யெல்லாம் நினைத்துப் பார்ப்பதேயில்லை.

கிராமவாசிகளிடையே ஒத்துழைப்பு இல்லை; இதனால் ஆரோக்கிய வாழ்வுக்குத் தேவையான அத்தியாவசிய உணவுப் பொருள்களைக்கூட அவர்கள் பயிரிடுவதில்லை. தம் ஓய்வு நேரத்தை அவர்கள் நல்ல விதத்தில் பயன்படுத்திக்கொள்ளுவ தில்லை; இதனால் அவர்களுடைய உடல் வளர்ச்சியோ, அறிவு வளர்ச்சியோ திருப்திகரமாக இருப்பதில்லை.

ஆரோக்கியம் பற்றிய விதிகள் அவர்களுக்குத் தெரியா தாகையால், தாம் நோயுறும் போது வைத்தியர்களிடம் போகா மல், மந்திரவாதிகளிடம் போய் தமது கஷ்டங்களை இன்னும் அதிகமாக்கிக் கொள்ளுகிறார்கள்; பணத்தைச் செலவு செய்கிறார் கள்; நோயை இன்னும் அதிகமாக்கி, நீடிக்கச் செய்கிறார்கள்.

கிராமவாசிகளின் பரிதாபமான வாழ்க்கைக்குக் காரண மான இந்த அம்சங்களையெல்லாம் விவாதித்து, அவற்றைப் போக்குவதற்கான யோசனைகளைக் கூற உத்தேசித்திருக்கிறோம்.*

—18—8—1929

---

* இந்தக் கட்டுரைத் தொடர், "காமதானி வஹாரே" என்ற பெயருடன் குஜராத்தி யில் புத்தக ரூபத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

# 44

# வீண் பயம்

கிராமவாசிகள் எல்லா நம்பிக்கையையும் இழந்துவிட்டார்கள் என்பதுதான் உண்மை. புதிதாக வருபவர்கள் யாரும் தங்கள் குரல்வளையை நெறித்து, தங்களைச் சுரண்டுவதற்கே வருகிறார்கள் என்று அவர்கள் சந்தேகப்படுகிறார்கள். அறிவுக்கும் உழைப்புக்கும் சம்பந்தமில்லாமல் போய்விட்டதால், அவர்களுடைய சிந்தனைத் திறன் செயலற்றுப் போய் விட்டது. தங்களுடைய வேலை நேரங்களை அவர்கள் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளுவதில்லை. ஊழியர் இத்தகைய கிராமங்களுக்கு அன்பு உணர்ச்சியுடனும், நம்பிக்கையுடனும் போக வேண்டும். வருஷத்தில் பாதி நாள் எந்த வேலையும் இல்லாமல், ஆண்களும், பெண்களும் சோம்பிக் கிடக்கும் இடங்களில், நாம் புத்திசாலித்தனத்துடன் வருஷம் பூராவும் உழைத்தால் அவர்களுடைய நம்பிக்கையைப் பெறாமல் இருக்கமாட்டோம். அவர்களிடையே நாணயத்துடன் நன்றாக உழைத்தால், நம் ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையுடன் ஊழியர்கள் இந்த கிராமங்களில் வேலை செய்ய முன்வரவேண்டும்.

"என்னுடைய குழந்தைகள் என்ன ஆவது? அவர்களுடைய படிப்பு என்ன ஆவது?" என்று கேட்கிறார் வேலை செய்ய வரும் ஊழியர். நவீன முறையில்தான் அவர்களுடைய குழந்தைகள் கல்வி பெற வேண்டும் என்றால், இவர்களுக்குப் பலன் தரத்தக்க விதத்தில் நான் வழி காட்டுவதற்கு ஒன்றுமில்லை. அவர்களை நல்ல திடகாத்திரர்களான, நாணயமான, புத்திசாலித்தனமான கிராமவாசிகளாக்கி, தங்கள் பெற்றோர்கள் வேலை செய்யும் ஊரில் தங்களுடைய ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதிக்கக் கூடியவர்களாக்கி விடுவது போதுமென்றால், அவர்களுடைய பெற்றோர்களின் வீட்டிலிருந்து கொண்டே அவர்கள் எல்லாப் படிப்பையும் பெறுவார்கள். அவர்களுக்கு விவரம் தெரிந்த தங்களுடைய கைகளையும், கால்களையும் சீராக உபயோகிக்கத் தெரிந்துகொள்ளும் வயது வந்தவுடனேயே, ஓய்வு நேரத்தில் அவர்களும் குடும்பத்திற்கு சம்பாதித்துப் போடுபவர்களாகி விடுவார்கள். ஒரு நல்ல வீட்டுக்குச் சமமான பள்ளிக்கூடமும் இல்லை; நல்லொழுக்கமுள்ள, நாணயமான பெற்றோர்களுக்குச் சமமான ஆசிரியர்களும் இல்லை. தற்காலக் கல்வி, கிராமவாசிகளின் மீது பயனற்ற ஒரு பெரும் பாரமாயிருக்கிறது. அவர்களுடைய குழந்தைகள் அந்தக் கல்வியைப் பெறவே முடியாது; ஒரு நல்ல வீட்டில் அவர்கள் பயிற்சி பெற்றால், நவீனக் கல்வி இல்லாததால் அவர்களுக்கு ஒரு குறையும் ஏற்பட்டுவிடாது. கிராமத்தில் வேலை செய்யும் ஆண் ஊழியரோ அல்லது பெண் ஊழியரோ, குடும்பத்தை நல்ல

முறையில் நடத்தக் கூடிய கண்ணியம் இல்லாதவர்களாக இருந் தால், கிராம ஊழியர் என்ற உயர்ந்த பெருமைக்கு அவர்கள் ஆசைப்படவே வேண்டாம்.

—'ஹரிஜன்' - 23—12—1935

# 45

# பள்ளிக்கூடப் புத்தகங்கள்

## 1

பொதுப் பள்ளிக்கூடங்களில் குழந்தைகளுக்காக உபயோகிக்கப்படும் புத்தகங்கள் தீமை விளைவிக்காவிடினும், பெரும்பாலும் உபயோகமற்றவையாகவே இருக்கின்றன என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. அந்தப் புத்தகங்களில் பல, சாமர்த்தியமாக எழுதப்பட்டிருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. எந்தச் சூழ்நிலைக்காக, எந்த மாதிரியானவர்களுக்காக அந்தப் புத்தகங்கள் எழுதப்பட்டனவோ, அவர்களுக்கு அவை மிகச் சிறந்தவையாக இருக்கலாம். ஆனால், அவை இந்தியச் சிறுவர் சிறுமிகளுக்காகவோ அல்லது இந்தியச் சூழ்நிலைக்கு உகந்தவாறோ எழுதப்பட்டவையல்ல. அப்படி எழுதப்பட்டவை, விஷயத்தைச் சரிவரப் புரிந்துகொள்ளாமல் எழுதப்பட்ட போலிகளாகவும், மாணவர்களின் தேவைகளுக்கு ஏற்ற முறையில் இல்லாமலும் இருக்கின்றன. இந்த நாட்டில், அந்தந்த மாகாணங்கள், அந்தந்த வகுப்புகளின் குழந்தைகளுக்கு ஏற்றவிதத்தில் தேவைகள் மாறுபட்டிருக்கின்றன. உதாரணமாக, ஹரிஜனக் குழந்தைகளின் தேவைகள், ஆரம்ப கட்டங்களிலாவது, மற்றக் குழந்தைகளின் தேவைகளிலிருந்து மாறுபட்டிருக்கின்றன.

ஆகையால், பாடம் சொல்லிக்கொள்ளுபவர்களைவிட சொல்லிக் கொடுப்பவர்களுக்குத்தான் புத்தகங்கள் முக்கியமாக வேண்டும் என்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன். ஒவ்வொரு ஆசிரியரும், மாணவர்கள் விஷயத்தில் தமது கடமையைச் சரியாக நிறைவேற்ற வேண்டுமானால், தம்முடைய அன்றாட பாடங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டும். இந்த விஷயத்திலும் கூட, தம்முடைய வகுப்பின் விசேஷத் தேவைகளை அனுசரித்தே அவர் தயாரிக்க வேண்டும்.

பாடம் சொல்லிக்கொள்ள வரும் சிறுவர், சிறுமிகளின் சிறந்த அம்சங்களை 'வெளிக்கொணருவதுதான் உண்மையான கல்வி'யாகும். மாணவர்களின் மனத்தில் சீரில்லாத, தேவையில்லாத தகவல்களைத் திணிப்பதன் மூலம் இதைச் செய்ய முடியாது. இப்படிச் செய்தால், அது மாணவர்களின் தனித் தன்மையை நசுக்கிவிடும் ஒரு பெரும் பாரமாகிவிடுகிறது; அத்துடன் அவர்களை வெறும் யந்திரங்களாகவும் ஆக்கிவிடுகிறது. நாமே இந்த முறைக்கு இரையாகாதவர்களாக இருந்திருந்தால், இந்திய

போன்ற ஒரு நாட்டில், எல்லோருக்கும் சேர்ந்து ஒரே மாதிரி யான கல்வியளிக்கும் இந்த முறையினல் எவ்வளவு தீங்கு ஏற் பட்டிருக்கிறது என்பதை வெகு காலத்திற்கு முன்பே உணர்ந் திருப்போம்.

பல ஸ்தாபனங்கள் தங்களுக்கு வேண்டிய பாட புத்தகங் களைத் தாங்களே தயார் செய்துகொள்ள முயற்சிகள் செய்திருக் கின்றன. இந்த முயற்சிகளில் அவை சற்றேறக் குறைய வெற் றியும் பெற்றிருக்கின்றன. ஆனல், அவை நம்முடைய நாட்டின் அத்தியாவசியமான தேவைகளைப் பூர்த்தி செய்யவில்லை என் பதே என்னுடைய அபிப்பிராயமாகும்.

இங்கு நான் கூறும் கருத்துகள், என்னுடைய சொந்தக் கருத்துகள் என்று நான் உரிமை கொண்டாடவில்லை. மிகவும் கடுமையான பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டிய ஹரிஜனப் பள்ளிகளின் நிர்வாகிகள், ஆசிரியர்களின் சௌகரியத்திற்காவே இக் கருத்துகள் இங்கு திரும்பக் கொடுக்கப்படுகின்றன. சிறு வர்களுக்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கும் புத்தகங்களை, எப்படியா வது கிளிப் பிள்ளைகள் மாதிரி கற்றுக்கொண்டால் போதும் என்ற உயிரற்ற முறையில் அவர்கள் தங்களுடைய வேலைகளைச் செய்துகொண்டிருக்க முடியாது. அவர்கள் மகத்தான ஒரு பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள். அந்தப் பொறுப்பை அவர்கள் துணிச்சலுடனும், புத்திசாலித்தனமாகவும், நாணயமா கவும் நிறைவேற்ற வேண்டும்.

இந்த வேலை கடினமானதுதான். ஆனல், நிர்வாகியோ, ஆசிரியரோ முழு மனத்துடன் இதில் உழைத்தால் அப்படியொன் றும் கஷ்டமாக இராது. அவர் தம்மை மாணவர்களின் தந்தை யாகப் பாவித்துக்கொண்டால், அவர்களுடைய தேவை என்ன என்பது உடனே அவருக்குப் புலப்படும்; அந்தத் தேவையையும் அவர் பூர்த்தி செய்வார். அதற்கான தகுதி அவரிடம் இல்லை யென்ருல், அந்தத் தகுதியைப் பெற அவர் முயற்சிக்க வேண்டும். சிறுவர், சிறுமிகளின் தேவைகளுக்குத் தகுந்த கல்வியைத்தான் அவர்களுக்கு அளிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் நாம் ஆரம்பித்திருக்கிறேம்; ஆகையால் ஹரிஜன மாணவர்களின் ஆசிரியருக்கோ அல்லது மற்ற எந்த ஆசிரியருக்குமோ அசாதார ணமான சாமர்த்தியமோ, வெளி விவகார அறிவோ தேவையாக இராது.

எந்தக் கல்வியின் முக்கியமான நோக்கமும், மாணவர்களின் நல்லொழுக்கத்தை உருவாக்குவதுதான். அதுதான் கல்வியின் நோக்கமாக இருக்க வேண்டும். ஆகையால், நல்லொழுக்கமுள்ள ஒரு ஆசிரியர் மனத் தளர்ச்சி அடையவேண்டிய அவசியமே இல்லை.

—'ஹரிஜன்' – 1—12—1933

# 2

கல்வியின் நலன் என்ற கண்ணோட்டத்துடன் பார்க்கும் போது, பாட புத்தகங்களை மாற்றிக் கொண்டேயிருக்க வேண்டும் என்ற இந்த மோகம் நல்லதல்ல. பாட புத்தகங்கள் கல்விக்கு ஒரு சாதனமாகப் பாவிக்கப்பட்டால், ஆசிரியர் நேரில் வாய் மொழியாகச் சொல்லிக் கொடுப்பது பயனற்றதாகிவிடுகிறது. பாட புத்தகங்களை வைத்துக் கொண்டு மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஒரு ஆசிரியர், சுயமாக எதையும் சொல்லிக் கொடுப்பதில்லை. ஆகையால், பாட புத்தகங்கள் எவ்வளவுக் கெவ்வளவு குறைவாக இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு ஆசிரியர்கள், மாணவர்கள் இருவருக்குமே நன்மையாகும் என்று தோன்றுகிறது. பாட புத்தகம் என்பது ஒரு வியாபாரச் சரக்காகி விட்டது என்றே தோன்றுகிறது. பணம் சம்பாதிப்பதற்காக பாட புத்தகங்கள் எழுதும் ஆசிரியர்களுக்கும், அவற்றை வெளியிடும் பிரசுர கர்த்தர்களுக்கும், அவை அடிக்கடி மாறுவதில்தான் அக்கறை இருக்கிறது. பல சந்தர்ப்பங்களில் ஆசிரியர்களும், பரீட்சைத் தாள்களை சோதிப்பவர்களுமே பாட புத்தகங்களை எழுதுபவர்களாக இருக்கிறார்கள். தங்களுடைய புத்தகங்கள் விற்பனையாக வேண்டும் என்று அவர்கள் விரும்புவது இயற்கையே. பாட புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் குழுவிலும் இத்தகையோர் தான் இருக்கிறார்கள். இவ்வாறாக, அந்த விஷச் சுழல் பூர்த்தியாகிவிடுகிறது. ஒவ்வொரு வருடமும் புதிய புத்தகங்களை வாங்குவதற்குப் பெற்றோர்களுக்குப் பணம் தேடுவதும் கஷ்டமாக இருக்கிறது. பையன்களும், பெண்களும் தூக்க முடியாமல் புத்தகங்களின் மூட்டையைச் சுமந்து கொண்டு பள்ளிக்கூடங்களுக்குப் போகும் காட்சி பார்ப்பதற்குப் பரிதாபமாக இருக்கிறது. இந்தப் பிரச்னை பூராவையும் அடியோடு பரிசீலனை செய்ய வேண்டும். இதிலுள்ள வியாபார உணர்ச்சியை அடியோடு அகற்ற வேண்டும்; படிப்பவர்களின் நலன்கள் என்ற ஒரே கண்ணோட்டத்துடன் இப்பிரச்னையை அணுக வேண்டும்.

அப்படிச் செய்தால், முக்கால் பங்கு பாட புத்தகங்களைக் குப்பைத் தொட்டியில் போட வேண்டியிருக்கலாம். என் விருப்பப்படி விடுவதாக இருந்தால், புத்தகங்கள் மாணவர்களுக்காக அன்றி, பெரும்பாலும் ஆசிரியர்களுக்கு உதவியாக இருக்கும்படி செய்துவிடுவேன். மாணவர்களுக்கு மிகவும் அத்தியாவசியமானவை என்று கருதப்படும் புத்தகங்கள், பல வருடங்களுக்கு மாற்றாமல் வைக்கப்பட வேண்டும்; அப்போதுதான் மத்தியதர வகுப்புக் குடும்பங்கள் சுலபமாக அந்தச் செலவைத் தாங்க முடியும். பாட புத்தகங்களை அச்சிடுவது, வெளியிடுவது ஆகிய இரண்டையும் சர்க்காரே ஏற்றுக் கொள்ளுவது, இத்துறையில் முதல் நடவடிக்கையாக இருக்கலாம். புத்தகங்கள் அனாவசியமாகப் பெருகிக் கொண்டே போவதற்கு இது இயற்கையான ஒரு தடையாக இருக்கும்.

—'ஹரிஜன்' — 9—9—1939

# 46

# நூல் நிலையத்தின் சீரிய கொள்கைகள்

*சத்தியாக்கிரக ஆசிரமத்தின் புத்தகங்களுக்காக, ஆமதாபாத் சங்கிரகாலயத்தின் அஸ்திவாரக்கல் நாட்டு விழாவின் போது காந்திஜி செய்த பிரசங்கத்திலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:*

நூல் நிலையங்கள் எப்படி இருக்க வேண்டும், என்ன செய்ய வேண்டும் என்பவைகளைப் பற்றி எனக்குச் சில கொள்கைகள் உண்டு. அவற்றை உங்களிடம் கூறுகிறேன். முதலாவதாக, நூல் நிலையத்திற்காக நீங்கள் கட்டும் கட்டிடம், நிலையம் வளர வளர, அழகு குலையாமல் விஸ்தரித்துக் கொண்டே போவதற்கு ஏற்றவையாகத் திட்டமிடப்பட்டிருக்க வேண்டும். பின்னர் கட்டும் கட்டிடங்கள், முதல் கட்டிடத்தின் சேர்க்கைகள் என்று தோன்றும் விதத்தில் இருக்கக் கூடாது. அவ்வப்போது சில பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்வதற்கும், ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ள ஆசிரியர்களும், மாணவர்களும் அமைதியான சூழ்நிலையில் அங்குள்ள புத்தகங்களைப் பயன் படுத்திக் கொள்ளுவதற்கும் வசதிகள் இருக்க வேண்டும். இந்த நூல் நிலையத்தை உலகிலேயே மிகப் பெரியதாகவும், சிறந்ததாகவும் ஆக்குவதைக் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். நம்மிடம் உறுதி இருந்தால், அதைச் செய்வதற்கு வேண்டிய பலத்தை ஆண்டவன் நமக்கு அளிப்பார். வித்யாபீடத்திலுள்ள புத்தகங்களை இந்த நிலையத்தில் வைக்கலாம் என்று காகா சாகிப் யோசனை கூறியிருக்கிறார். குஜராத்தில் கலைக்குப் பஞ்சமே இல்லை. பத்ரா மசூதியில் உள்ள பிரசித்தி பெற்ற சாளர வேலைக்கு இணையானது உலகத்திலேயே கிடையாது. அதே மாதிரி, ஆமதாபாத்தின் பின்னல் வேலைக்குச் சமமானதும் இல்லை. ஆமதாபாத் கல் வேலைக்காரர்களின் வேலை நயம் என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியிருக்கிறது. அவர்கள் இருள் நிறைந்த மோசமான குடில்களில் வசிப்பதை நான் பார்த்திருக்கிறேன். கலைஞர்கள், பிறர் தங்களுக்கு ஊக்கம் அளிக்க வேண்டும் என்பதற்காகக் காத்திருப்பதில்லை. ஒரு மியூஸியத்திற்கு ஐம்பதாயிரம் கொடுக்கத் தயாராக உள்ள மற்றொரு நன்கொடையாளரை நாம் கண்டுபிடிக்க முடியும் என்றால், இந்தக் கட்டிடத்திலேயே அத்தகைய ஒரு கலைப் பொருள் கூடத்தை அமைத்து விடலாம். இந்த நூல் நிலையம் நாளுக்கு நாள் வளர்ந்து பெருகும் விதத்தில் நாம் வேலை செய்ய வேண்டும். தங்களுடைய நேரத்தில் பெரும் பகுதியை இதற்காகச் செலவிடக்கூடிய ஒன்

றிருவர் நமக்குக் கிடைத்தால் நன்ருக இருக்கும். புத்தகங்களை நன்ருகவும், ஜாக்கிரதையாகவும் மட்டும் வைத்துக் கொள்ளக் கூடிய வியாபார மனப்பான்மை உள்ள ஒருவரை நூல் நிலையத்தின் நிர்வாகியாக நியமித்து விடாதீர்கள். புத்தகங்களின் தராதரத்தை உணர்ந்து வாங்கக் கூடியவராகப் பார்த்து அந்த வேலைக்கு ஒருவரை நியமிக்க வேண்டும். சம்பளம் வாங்கிக் கொள்ளாமல் இந்த வேலையைச் செய்ய யாரும் முன் வரவில்லையென்ருல், நல்ல சம்பளம் கொடுத்து, உண்மையிலேயே நல்ல தகுதியுள்ள ஒருவரை நியமிப்பதற்கு நீங்கள் தயாராக இருக்க வேண்டும். ஹரிஜனங்கள் எந்தக் கட்டணமும் செலுத்தாமல், நூல் நிலயத்தை இலவசமாக உபயோகித்துக் கொள்ள அனுமதிக்க வேண்டும், புத்தகங்கள் சேதமடைந்து விட்டால் அல்லது கிழிந்து விட்டால் அல்லது திருட்டுப் போய்விட்டால் கூட, அந்த நஷ்டத்தை நூல் நிலயமே ஏற்றுக் கொள்ள வேண்டும். ஹரிஜனங்கள் ஏழைகளிலும் ஏழைகள்; ஆகையால் சில விசேஷ சலுகைகளைப் பெற அவர்களுக்கு உரிமையுண்டு. உண்மையில், இந்தச் சலுகையை எல்லா ஏழைகளுக்குமே அளிக்கலாம். அது இந்த ஸ்தாபனத்தின் புகழை இன்னும் அதிகமாக்கும்.

இந்த ஸ்தாபனம் உயிர்த் துடிப்புடன் வளர்ச்சி பெறுவதற்காக, நன்கு படித்தவர்களாகப் பார்த்து நிர்வாகக் கமிட்டிக்கு நியமிக்க வேண்டும் என்று பாய் ரஸிக்லால் கூறினர். அந்த வேண்டுகோளை நானும் திருப்பிச் சொல்லுகிறேன். உலக அனுபவம் உள்ளவர்கள் மட்டும்தான் இதில் இருக்க வேண்டுமென்று நினைக்காதீர்கள். ஒரு நூல் நிலயம் எப்படி இருக்க வேண்டும், அது நன்கு பிரகாசிப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்ற விவகாரங்களெல்லாம் படித்தவர்களுக்கு நன்ருகத் தெரியும்.

பல நூல் நிலயங்களுக்கு கார்னேஜி* ஏராளமான நன்கொடைகள் அளித்தார். ஸ்காட்லாந்திலுள்ள அறிஞர்களைத் தவிர, பெரும்பாலான மற்ற அறிஞர்கள் அவருடைய நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டார்கள். இந்த நிபந்தனைகளை வற்புறுத்திஞல், அவருடைய நன்கொடையை ஏற்றுக் கொள்ள முடியாதென்று ஸ்காட்லாந்து அறிஞர்கள் ஒளிவு மறைவில்லாமல் கார்னேஜியினிடம் சொன்னர்கள்; "நூல் நிலயத்திற்கு என்ன புத்தகங்கள் உபயோகமாக இருக்குமென்று உங்களுக்கு எப்படித்

---

*ஆண்ட்ரூ கார்னேஜி (1835 1919) ஸ்காட்லாந்தில் மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவர். சிறுவயதில் அவர் தந்தையுடன் அமெரிக்காவுக்குக் குடியேறி கீழ்த்தரமான கூலி வேலையில் அமர்ந்தார். பின்னர் அவருக்கு ரயில்வே இலாக்காவில் ஒரு உத்தியோகம் கிடைத்தது. அதிலிருந்து அவர் படிப்படியாக உயர்ந்து கார்னேஜி இரும்புத் தொழிற்சாலையை ஸ்தாபித்தார். 1901-இல் அவர் அதிலிருந்து விலகிய போது, அவர் கோடீசுவரராகி விட்டார்! புத்தக சாலைகளுக்கும், கல்வி வளர்ச்சிக்கும், மற்றும் பல தரும ஸ்தாபனங்களுக்கும் அவர் அளித்த ஏராளமான நன்கொடைகள் உலகப் பிரசித்தி பெற்றவை.

தெரியும்" என்று அவரைக் கேட்டார்கள். கலைஞர்கள் தங்களுடைய கலையை விற்பனை செய்வதில்லை. குஜராத்தில் அருமையான புத்தகங்கள் நிறைய இருக்கின்றன. ஆனால், அவை பனியாக்களிடம் இருக்கின்றன. சரித்திர முக்கியத்துவம் உள்ள அருமையான பழைய நூல்கள் ஜைனர்களிடம் இருக்கின்றன. ஆனால், அவை பட்டுத் துணிகளில் சுற்றி வைக்கப்பட்டு பிரயோசனமில்லாமல் கிடக்கின்றன. பணம் பண்ணுவதைத் தவிர வேறொன்றும் அறியாத பனியாக்களிடம் இந்தப் புத்தகங்கள் பிரயோசனமில்லாமல் கிடப்பதைப் பார்த்து நான் கண்ணீர் விட்டிருக்கிறேன். இந்த நூல்கள் அவர்களிடம் இருப்பதால், பணம் என்ற பொறியில் சிக்கிக் கொண்டு ஜைன மதமே அழிகிறது என்று கூட நான் சொல்லுவேன். தருமத்திற்கு விலை மதிப்புப் போட முடியுமா? உண்மையில் பணம் என்பது தருமத்திற்கான ஒரு கருவியாகத்தான் இருக்க வேண்டும். ஆகையால், நூல் நிலையத்தின் நிர்வாகக் கமிட்டியில் கற்றறிந்த திறமைசாலிகளைச் சேர்க்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இதை எப்படிச் செய்யலாம் என்பதைச் சிந்தித்துப் பார்த்து அதைச் செய்யுங்கள்.

—'ஹரிஜனபந்து' — 1—10—1933

# 47

# செய்திப் பத்திரிகைகள்*

ஹிந்துஸ்தான் பத்திரிகையின் தீபாவளி இதழுக்கு ஒரு கட்டுரை தருவதாக அதன் ஆசிரியரிடம் நான் வாக்களித்தேன். ஆனால், அந்த வாக்குறுதியை நிறைவேற்ற எனக்கு நேரம் கிடைக்கவில்லை. ஆயினும், ஏதாவது எழுத வேண்டும் என்ற எண்ணத்துடன், பத்திரிகைகளைப் பற்றி என்னுடைய கருத்துகளை வாசகர்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன். சில சந்தர்ப்ப விசேஷங்கள் காரணமாக தென்னாப்பிரிக்காவில் ஒரு பத்திரிகைக் காரியாலயத்தில் நான் வேலை செய்ய நேர்ந்தது. அப்போது இந்த விஷயத்தைப் பற்றி நான் ஆழ்ந்து சிந்தனை செய்திருக்கிறேன். இங்கு நான் சமர்ப்பிக்கும் அபிப்பிராயங்களை நானே நடைமுறையில் பின்பற்றியுமிருக்கிறேன்.

ஜீவனோபாயத்திற்கான ஒரு கருவியாகப் பத்திரிகைகளை உபயோகித்துக்கொள்ளக் கூடாது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். பொதுமக்கள் க்ஷேம நலத்துடன் நேரடியான தொடர்பு உள்ள சில வேலைத் துறைகள் இருக்கின்றன. ஒருவர் தம்முடைய ஜீவனத்திற்காக அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுவதில் பல அபாயங்கள் இருக்கின்றன. ஏனெனில், இத்தகைய

* இந்தக் கட்டுரை, 'விக்ரமஸம் வத்' 1973 என்ற பத்திரிகையின் தீபாவளி இதழில் பிரசுரிக்கப்பட்டது.

காரியத்தில் இறங்கும்போது ஒருவர் கருத்தில் கொள்ள வேண்டிய முக்கியமான நோக்கத்தை அது மறைத்துவிடக்கூடும் என்பதுடன், அந்த நோக்கத்திற்கே கூட பாதகம் விளைவிக்கக் கூடும். ஒருவருடைய ஜீவனத்திற்காக மட்டுமின்றி, லாபம் சம்பாதிப்பதற்காகவும் பத்திரிகைகளை ஒரு கருவியாக உபயோகித்துக்கொள்ளும்போது, அதனால் பல தீமைகள் ஏற்படுகின்றன. இப்போதே கூடப் பெரும் அளவில் அம்மாதிரியான தீங்குகள் இருந்து வருகின்றன என்பதை, பத்திரிகைகள் வேலை செய்யும் விதத்தைப் பற்றி அறிந்தவர்களுக்கு ருசுப்பித்துக் காட்ட வேண்டிய அவசியமில்லை.

மக்களுக்கு அறிவு புகட்டுவதும், உலக சரித்திரத்தின் அன்றாடப் போக்குகளைப் பற்றி அவர்களுக்குத் தகவல்கள் கொடுப்பதுமே பத்திரிகைகளின் முக்கிய வேலையாகும். இது பொறுப்புள்ள வேலை. ஆனால், பத்திரிகைகளில் கொடுக்கப்படும் செய்திகளை வாசகர்கள் எப்போதுமே நம்ப முடிவதில்லை என்பதையும் பார்க்கிறோம். பல சமயங்களில் பத்திரிகைகளில் வெளியிடப்படும் செய்திகள், உண்மையில் நடந்தவைகளுக்கு நேர்மாறாக இருக்கின்றன. மக்களுக்கு அறிவூட்டுவதே தமது கடமை என்பதைப் பத்திரிகை ஆசிரியர்களும், மற்ற சிப்பந்திகளும் உணர்ந்தால், தாங்கள் வெளியிடும் செய்தி உண்மைதானா என்று சரி பார்த்துவிட்டுத்தான் வெளியிடுவார்கள். அவர்கள் மிகவும் சங்கடமான நிலைமையில் வேலை செய்ய வேண்டியிருக்கிறது என்பது உண்மைதான். அவர்களுக்கு ஏராளமான செய்திகள் வந்து கொண்டே இருக்கின்றன. அவற்றை அலசிப் பார்த்து, தங்களுக்குள்ள சொற்ப அவகாசத்தில், எது உண்மையாயிருக்கலாம் என்று அவசரமாக ஊகித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆயினும், ஒரு குறிப்பிட்ட செய்தி உண்மையானது தானா என்று நிச்சயமாகத் தெரியும்வரையில், அதைப் பிரசுரிக்காமலிருப்பதே நல்லது என்று நான் நினைக்கிறேன்.

பிரசங்கங்களை இந்தியப் பத்திரிகைகளில் வெளியிடும் விதம் பொதுவாக அதிருப்திகரமாகவே இருக்கின்றது. ஒரு பிரசங்கம் செய்யப்படும்போது, அதை அப்படியே வரிக்கு வரி எழுதிக் கொள்ளக்கூடியவர்களோ அல்லது பிறகு ஞாபகத்திலிருந்து அதை எழுதக் கூடியவர்களோ மிகக் குறைவுதான். இதனால் பிரசங்கத்தைப் பற்றிய செய்திகளில் பல மாறுதல்களும், இடைச்செருகல்களும் ஏற்பட்டுவிடுகின்றன. பிரசங்கத்தின் நகல் ஒன்றை பிரசங்கம் செய்தவருக்கு அனுப்பி, அவரைத் திருத்தச் சொல்ல வேண்டும். அதில் அவர் ஒரு மாறுதலும் செய்யாமலிருந்தால், அதைப் பிரசுரிக்கலாம். இதுவே சிறந்த விதியாய் இருக்குமென்று கருதுகிறேன்.

பத்திரிகைகளிலுள்ள காலி இடத்தை எப்படியாவது நிரப்ப வேண்டும் என்பதற்காக ஒரு செய்தியின் அவசியத்தையோ,

முக்கியத்தையோ கவனிக்காமல் எதையாவது பிரசுரித்து விடுகிறார்கள். இந்த வழக்கம் எல்லா நாடுகளிலுமே காணப்படுகிறது. மேல் நாடுகளிலும் இப்படித்தான் இருக்கிறது. பெரும்பாலான பத்திரிகைகள் லாபத்திலேயே குறியாக இருக்கின்றன என்பது தான் இதற்குக் காரணம். பத்திரிகைகள் மக்களுக்குச் சிறந்த சேவை செய்திருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. இதனால் தான் இந்தக் குறைபாடுகள் பொருட்படுத்தப்படுவதில்லை. ஆனால், அவை பெரும் தீங்கும் செய்திருக்கின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது. மேல் நாடுகளில் சில பத்திரிகைகளில் குப்பை கூளங்களே நிறைய இருக்கின்றன. அவற்றை வாசிப்பது கூடப் பாவமாகும். தங்களுடைய விருப்பு, வெறுப்பு காரணமாகப் பல பத்திரிகைகள் மக்களிடையே துவேஷத்தைத் தோற்றுவித்து வளர்த்துவிடுகின்றன; சில சமயங்களில் பல்வேறு குடும்பங்கள், வகுப்புகளிடையே மனக் கசப்பையும், பூசல்களையும் கூட உண்டாக்கிவிடுகின்றன. ஆகவே, பத்திரிகைகள் மக்களுக்குச் சேவையும் செய்கின்றன என்ற காரணத்திற்காக மட்டும், கண்டனங்களிலிருந்து தப்பிவிட முடியாது. மொத்தத்தில் பத்திரிகைகளின் லாபமும், நஷ்டமும் சமமாயிருக்கும் என்றே தோன்றுகிறது.

சந்தாதார்களிடமிருந்து கிடைப்பதைவிட, விளம்பரங்களிலிருந்துதான் பத்திரிகைகளுக்கு முக்கியமாக அதிக வருமானம் கிடைக்கிறது என்பது இப்போது நிலையான பழக்கமாகி விட்டது. இதன் பலன் வருந்தத்தக்கதாக இருக்கிறது. குடியின் கேட்டைப் பற்றித் தன்னுடைய தலையங்கத்தில் கடுமையாகக் கண்டித்து எழுதும் அதே பத்திரிகை, குடியைப் புகழ்ந்து விளம்பரங்களைப் பிரசுரிக்கிறது. புகையிலையின் கெடுதல்களைப் பற்றி படிக்கிறோம். ஆனால், அதே பத்திரிகையில் நல்ல புகையிலை எங்கு வாங்கலாம் அல்லது எந்த ரக சிகரெட்டுகளை உபயோகிக்க வேண்டும் என்ற விவரங்களையும் பார்க்கிறோம். பத்திரிகைகள் ஒரு குறிப்பிட்ட நாடகத்தைப் பற்றிக் கடுமையாகக் கண்டித்திருக்கலாம். அதே சமயத்தில், மற்றொரு பக்கத்தில் அதைப் பற்றி ஒரு நீண்ட விளம்பரத்தைப் பிரசுரித்திருக்கலாம். மருந்துகளைப் பற்றிய விளம்பரங்களிலிருந்துதான் மிகவும் அதிகமான வருமானம் கிடைக்கிறது. இந்த மருந்துகளால் மக்களுக்கு மிகுந்த தீங்கே ஏற்படுகிறது. பத்திரிகைகள் செய்யும் இதர சேவைகளை, இத்தகைய விளம்பரங்கள் அநேகமாக அழித்துவிடுகின்றன. இந்த விளம்பரங்களால் ஏற்படும் தீங்குகளை நான் பார்த்திருக்கிறேன். வீரியத்தை விருத்தி செய்து, நரம்புத் தளர்ச்சிகளைப் போக்குவதாகச் சொல்லப்படும் இந்த மருந்துகளைப் பலர் வாங்குகிறார்கள். இந்த மருந்துகளில் பல, ஒழுக்கக் குறைவுக்கு ஊக்கமளிப்பவைகளாக இருக்கின்றன. இம்மாதிரி விளம்பரங்கள் மதச் சார்புள்ள பத்திரிகைகளிலும் இடம் பெறுவது தான் விசித்திரமாக இருக்கிறது. இந்தப் பழக்கம் மேல் நாட்டிலிருந்து இங்கு வந்திருக்கிறது. இதற்காக எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருந்தாலும், ஒன்று விரும்பத்தகாத இந்தப் பழக்

கத்தை நிறுத்த வேண்டும்; அல்லது அதைச் சீர்திருத்தமாவது செய்ய வேண்டும். பிரசுரத்திற்கு விளம்பரங்களை ஏற்றுக்கொள்ளும்போது, அவற்றை ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்ய வேண்டியது ஒவ்வொரு பத்திரிகையினுடைய கடமையுமாகும்.

கடைசியான, ஆனால் முக்கியமற்றது என்று சொல்ல முடியாத கேள்வி ஒன்றிருக்கிறது: "பத்திரிகைகளின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும் 'ராஜத்துவேஷ கட்டுரைச் சட்டம்,' 'இந்தியத் தற்காப்பு விதிகள்' போன்ற சட்டங்கள் இருக்கும் ஒரு நாட்டில் பத்திரிகைகளின் கடமை என்ன?" இந்தக் கட்டுப்பாட்டைச் சமாளிப்பதற்காக, நமது பத்திரிகைகள் ஒரு மாதிரியான நடையைக் கண்டுபிடித்திருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட பிரச்னையின் மீது அவர்கள் எழுதுவது, இந்தச் சட்டங்களின் கீழ் வரக்கூடியது போலிருந்தால், அதற்கு இரண்டு வெவ்வேறு விதமான அர்த்தங்கள் சொல்லக் கூடிய விதத்தில் எழுதுகிறார்கள்; சிலர் இதை ஒரு விஞ்ஞான ரீதியான கலையாகவே வளர்த்திருக்கிறார்கள். ஆனால் இது, நம் நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கிறது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இதனால், மக்கள் தைரியமாக உண்மையைப் பேசும் வழக்கத்தை வளர்த்துக்கொள்ளத் தவறிவிடுகிறார்கள். ஒரு விஷயத்தைப் பற்றி திட்டமாக எதுவும் சொல்லாமல், அப்படியும் இப்படியுமாகப் பேசக் கற்றுக்கொள்ளுகிறார்கள். மொழி என்பது ஒருவருடைய கருத்துகளை வெளியிடுவதற்கான ஒரு கருவியாகும். ஆனால், இந்தப் பழக்கத்தினால் அத்தகைய மொழியின் உருவம் மாறுதலடைந்து, சிந்தனைகளை மூடி மறைப்பதற்கு அது ஒரு கருவியாக்கப்பட்டுவிடுகிறது. நமது மக்களுக்கு அறிவூட்டுவதற்கு இது வழி அல்ல என்று நான் உறுதியாக நம்புகிறேன். மக்களும் சரி, தனி நபர்களும் சரி, தங்கள் மனத்தில் உள்ளதைச் சொல்லும் பழக்கத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். இந்தப் பயிற்சியை மக்களுக்கு அளிக்கக்கூடிய நிலைமையில் பத்திரிகைகள் இருக்கின்றன. மேற்கூறிய சட்டங்களுக்கு பயப்படுபவர்களும் அல்லது அவற்றில் சிக்கிக்கொள்ள விரும்பாதவர்களும், பத்திரிகைகள் வெளியிடுவதை நிறுத்திக்கொள்ள வேண்டும்; அல்லது தங்களுடைய உண்மையான கருத்துகளை ஒளிவு மறைவின்றி வெளியிட்டு அதன் பலனையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுதான் சரியானதும், இறுதியில் நமக்கு மிகுந்த நன்மையளிக்கக் கூடியதுமான வழியாகும். உள்ளத்தில் துவேஷம் இல்லாதவனின் எழுத்திலும் துவேஷம் இருக்கமுடியாதென்று நீதிபதி ஸ்டீவன் ஏதோ ஒரு இடத்தில் கூறியிருக்கிறார். துவேஷம் ஏதாவது இருந்தால், பட்டவர்த்தனமாக அதைச் சொல்லிவிட வேண்டும். இப்படிச் செய்வதற்கு ஒருவருக்கு தைரியமில்லையென்றால், பத்திரிகை வெளியிடுவதை நிறுத்திவிட வேண்டும். இதுதான் நமது மக்களுக்கும், நாட்டுக்கும் நன்மையளிக்கக் கூடியதாகும்.

('காந்திஜினி விசார்-சிருஷ்டி' யிலிருந்து எடுக்கப்பட்டது)

# 48

## இலக்கிய மகாநாட்டின் கடமை*

இலக்கிய மகாநாட்டின் கடமையைப் பற்றி காந்திஜி மிக வும் விரிவாகப் பேசினர். இதுவரையில் அவர் சிரித்துக்கொண் டும், தமாஷ் செய்துகொண்டும் இருந்தார். ஆனல், தம்முடைய மன வேதனையை அவர் அடக்கிவைத்திருந்தார் போலிருக்கிறது. அந்த மகோன்னதமான மண்டபத்தில், ஆமதாபாத்தின் பிரமுகர் களும் செல்வவந்தர்களும் சூழ உட்கார்ந்திருந்தது, அவருக்குச் சற்று கஷ்டமாகத்தான் இருந்தது என்பதை அவருடைய பிரசங் கத்தின் பிற்பகுதியில் காண முடிந்தது. அவருடைய எண்ணங்க ளெல்லாம் பரம ஏழைகளைப் பற்றியே இருந்தன. தாம் சரியான இடத்திற்கு வந்திருக்கிறோமா என்று கூட அவர் ஆச்சரியப்பட் டுக்கொண்டிருந்தது போல் தோன்றியது. தம்முடன் மேடை மீது உட்கார்ந்திருந்த சில நூறு பேர்களும், எதிரே உட்கார்ந்திருந்த சில ஆயிரம் பேர்களும், இலக்கியத்தைப் பற்றி வெறும் பேச்சுப் பேசி இரண்டு நாட்களைக் கழிப்பதற்குத்தானே அங்கே கூடி யிருக்கிறார்கள்? பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்களைப் பற்றி அவர்கள் எண்ணுவது உண்டா? அந்த மக்கள் அங்கே வந் திருந்தால் மகாநாட்டின் வாதப் பிரதிவாதங்களைப் பார்த்து கேலி செய்யமாட்டார்களா? அந்த வாயில்லாப் பூச்சிகளின் விருப்பங் கள், அபிலாஷைகள் என்னவாகத்தான் இருக்க முடியும் என்று இவர்களுக்கு ஏதாவது சிந்தனை உண்டா? இவ்வாறாக அவர் தம்முடைய உள்ளக் குமுறல்களை யெல்லாம் அவர்கள் முன்பு கொட்டி, அவர்களுடைய சிந்தனைகளையும் எங்கேயோ தொலை வில் உள்ள சேவா கிராமத்திற்கு இட்டுச் சென்றுவிட்டார். சேவா கிராமத்தில் உள்ள எழுத்தறிவற்றவர்களையும், அரைப்பட் டினியுடன் இருப்பவர்களையும் பற்றிக் குறிப்பிட்டபோது காந்திஜி துக்கத்தினல் விம்மினர்.

"நம்முடைய இலக்கியங்களெல்லாம் யாருக்காக? ஆமதா பாத்திலுள்ள பெரிய மனிதர்களுக்காகவா? இல்லவே இல்லை. கற்றறிந்த அறிஞர்களைச் சம்பளம் கொடுத்து அவர்களால் வைத் துக்கொள்ள முடியும்; தங்களுடைய வீடுகளிலேயே பெரிய நூல் நிலையங்களையும் அவர்களால் வைத்துக் கொள்ள முடியும். ஆனல், கிணற்றடியில் நின்றுகொண்டு பெரிய தோல் வாளியை இழுப் பதற்காகத் தம்முடைய எருதுகளை ஆபாசமான பாஷையில் திட்டி விரட்டும் அந்த ஏழை என்ன ஆவது? துர்ப்பாஷை என்

---

* ஆமதாபாத்தில் (1936) நடைபெற்ற குஜராத் இலக்கிய மகாநாட்டில் காந்திஜி செய்த தலைமைப் பிரசங்கமே, ஸ்ரீ மகாதேவ தேசாயின் விமர்சனத்துடன் மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

பதை அறியாமலே, கிணற்றடியில் உள்ள இந்த மனிதன் அதை உபயோகித்துக் கொண்டிருக்கிறான். அதை அவன் மறந்து, வாய்விட்டுப் பாடக் கூடிய ஏதாவது பாடல்கள் இருந்தால் கொடுங்களேன் என்று பல வருடங்களுக்கு முன்பு ஸ்ரீ நரஸிம்ம ராவை நான் கேட்டிருந்தேன். அவருக்கு மிகவும் வயதாகிவிட்டது. அத்துடன் நோயாளியாகவும் இருக்கிறார். அதனால் அவர் இங்கு வரமுடியவில்லை. அவர் கொச்சாரப்பைச் சேர்ந்தவர். எங்களுடைய சத்தியாக்கிரக ஆசிரமத்திற்கு அங்குதான் விதை போடப்பட்டது. ஆனால், கொச்சாரப் ஒரு கிராமம் அல்ல, ஆமதாபாத்திலுள்ள ஒரு சேரி. உண்மையான, உயிரூட்டக் கூடிய இலக்கியம் அவசியம் தேவையாக உள்ள நூற்றுக் கணக்கான அத்தகையோர் என்னிடம் இருக்கிறார்கள். அதை நான் எப்படிச் செய்வது?

''இப்போது நான் சேவா கிராமத்தில் வசித்துக் கொண்டிருக்கிறேன். அதன் ஜனத் தொகை 600. அவர்களில் பத்து பேர் தான் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள். எப்படியும் அவர்களிடையே எழுதப் படிக்கத் தெரிந்தவர்களுடைய தொகை ஐம்பதுக்குக் குறைவாகத்தான் இருக்குமே யொழிய அதிகமாக இராது. படிக்கத் தெரிந்த சுமார் பத்து பேர்களில், தாங்கள் என்ன படிக்கிறோம் என்பதைப் புரிந்துகொள்ளக் கூடியவர்கள் மூன்று, நான்கு பேர்கள் கூட இல்லை. அவர்களிடையே படிக்கத் தெரிந்த பெண் ஒருத்தி கூடக் கிடையாது. ஜனத் தொகையில் 100-க்கு 75 பேர் ஹரிஜனங்கள். அவர்களுக்காக ஒரு சிறிய நூல் நிலையம் ஏற்படுத்த வேண்டுமென்று நினைத்தேன். அதில் உள்ள புத்தகங்கள் அவர்களுக்குப் புரியக் கூடியவையாகத்தான் இருக்க வேண்டும். ஆகையால், இரண்டு மூன்று பெண்களிடம், அவர்களுக்கு உபயோகமில்லாத பத்து, பன்னிரண்டு பள்ளிக்கூடப் புத்தகங்களைக் கொடுக்குமாறு கேட்டேன்.

''என்னிடம் உள்ளவர்களில் எல். எல். பி. பட்டம் பெற்ற ஒரு இளைஞர் இருக்கிறார். அவர், தான் படித்த சட்டத்தையெல்லாம் மறந்துவிட்டு, என்னுடனேயே இருக்கிறார். அவர் கிராமத்திற்குப் போய், விரும்பியவர்களுக்கு, இந்தப் புத்தகங்களில் புரிந்துகொள்ளக் கூடிய பாடங்களை வாசித்துக் காட்டுகிறார். ஒன்றிரண்டு பத்திரிகைகளையும் அவர் எடுத்துச் செல்லுகிறார். ஆனால், நம்முடைய பத்திரிகைகளை அவர்கள் புரிந்துகொள்ளும்படி அவர் எப்படிச் செய்யமுடியும்? ஸ்பெயினையும், ரஷ்யாவையும்பற்றி அவர்களுக்கு என்னதெரியும்? பூகோள சாத்திரம் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? அவர்களுக்கு நான் எதை வாசித்துக் காட்டுவது? முன்ஷியின் நாவல்களையா? அல்லது வங்காளியிலிருந்து ஸ்ரீ கிருஷ்ணலால் ஜாவேரி மொழி பெயர்த்துள்ள கிருஷ்ண சரித்திரத்தையா? அது நல்ல புத்தகம் தான். ஆனால், எழுத்தறிவில்லாத அவர்களிடம் அதை நான்

எப்படிக் கொடுக்க முடியும்? அதை அவர்கள் புரிந்துகொள்ளு வதற்குக் காலம் ஆகும்.

“சேவா கிராமத்துப் பையன் ஒருவனை என்னுடன் இங்கு அழைத்துவர வேண்டும் என்று எனக்கு ஆசைதான். ஆனால், நான் அழைத்துவரவில்லை. இங்கு வந்து அவன் என்ன செய் வான்? ஏதோ ஒரு புதிய உலகத்தில் இருப்பது போல் அவனுக் குத் தோன்றும். அவனுடைய பிரதிநிதியாக, அந்த கிராம மக்க ளின் பிரதிநிதியாக நான் இங்கு வந்திருக்கிறேன். அதுதான் உண்மையான ஜனநாயகம். என்னுடன் அங்கு வரும்படி ஒரு நாள் உங்களை நான் அழைக்கப் போகிறேன். உங்களுக்காக நான் வழி திறந்து கொண்டிருக்கிறேன். வழியெல்லாம் முட்கள் நிறைந்திருக்கின்றன என்பது உண்மையே. ஆனால், அந்த முட் களுடன் ரோஜாவும் இருக்கும்படி நான் பார்த்துக் கொள்ளு கிறேன்.

“இப்போது உங்கள் முன்பு நான் பேசிக் கொண்டிருக்கும் போது, டீன் பர்ரார்*ப் பற்றியும், அவர் எழுதியுள்ள ஏசுநாத ரின் வாழ்க்கை பற்றியும் எனக்கு ஞாபகம் வருகிறது. பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து நான் போராடலாம்; ஆனால், ஆங்கிலேயர் கள் மீது எனக்கு வெறுப்பு இல்லை. உண்மையில், அவர்களுடைய இலக்கியப் பொக்கிஷத்தை நான் போற்றுகிறேன். ஆங்கில மொழியில் உள்ள பொக்கிஷங்களில் டீன் பர்ராரின் புத்தகமும் ஒன்றாகும். அந்தப் புத்தகத்தை எழுத அவர் எவ்வளவு பாடு பட்டு உழைத்திருக்கிறார், தெரியுமா? ஏசுநாதரைப் பற்றி ஆங் கிலத்தில் எழுதப்பட்டுள்ள நூல்களையெல்லாம் அவர் வாசித் தார். பின்னர் அவர் பாலஸ்தீனத்திற்குச் சென்றார். பைபிளில் குறிப்பிடப்பட்டுள்ள, தம்மால் கண்டுபிடிக்க முடிந்த ஒவ்வொரு இடத்திற்கும் விஜயம் செய்தார். கடைசியில் நம்பிக்கையுடனும், பக்தியுடனும், இங்கிலாந்திலுள்ள பாமர மக்களுக்காக, அவர்கள் எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய நடையில் அந்தப் புத்த கத்தை எழுதினார். அது டாக்டர் ஜான்ஸனின் நடையில் எழுதப் பட்டதல்ல; டிக்கன்ஸின் எளிய நடையில் எழுதப்பட்டதாகும்.† கிராமீய ஜனங்களுக்காக, பெரிய இலக்கியத்தை உற்பத்தி செய்யக் கூடிய பர்ரார் போன்ற மனிதர்கள் நம்மிடையே இருக் கிறார்களா? நமது இலக்கிய நிபுணர்கள் காளிதாஸனையும், பவபூதியையும், ஆங்கில ஆசிரியர்களையும் பற்றிப் பேசுவார்கள்; அவர்களைப்போல் எழுதுவார்கள். அவர்கள் கிராமங்களுக்குச் சென்று, அங்குள்ள மக்களைப் புரிந்து கொண்டு, உயிரளிக்கக் கூடிய இலக்கியத்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்றே விரும்பு கிறேன்.”

* டீன் பர்ரார் (1831—1903) காண்டர்பரியில் தலைமைப் பாதிரியாராக இருந் தவர். ஏசுநாதரைப் பற்றியும், கிறிஸ்தவ மதத்தைப் பற்றியும் அவர் சிறந்த நூல்கள் எழுதியுள்ளார்.

† டாக்டர் ஜான்சனும் (1709—1784), சார்லஸ் டிக்கன்ஸும் (1812—1870) புகழ் பெற்ற பல நூல்களைச் சிருஷ்டித்த பிரிட்டிஷ் இலக்கிய மேதை ஆவர்.

அன்று காலை காந்திஜி தாம் பார்வையிட்ட கலைக் கண்காட்சியைப்பற்றி அடுத்தபடியாகக் குறிப்பிட்டார். அது மிகவும் பாராட்டத்தக்க விதத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. குஜராத் கலைஞர்களின் சிருஷ்டிகள் மட்டுமே, குறிப்பாக, ஸ்ரீ ரவி சங்கர ரவாலிடம் கலை பயின்றவர்களின் படைப்புகளே அதில் இடம் பெற்றிருந்தன. குஜராத் வித்யா பீடத்தில் படித்தவர்கள், பள்ளிக் கூடத்திற்கோ, கல்லூரிக்கோ சென்று படிக்காதவர்கள் முதலியோரின் சிருஷ்டிகளும் அங்கிருந்தன. உதாரணமாக, சகன்லால் ஜாதவ் என்பவர் ஒரு ஹரிஜன். அன்றாட மாமூல் கிராம வாழ்க்கையைப் பற்றிப் பாராட்டத்தக்க விதத்தில் அவர் வரைந்திருக்கிறார். ஸ்ரீ ரவி சங்கரோ காந்திஜியுடன் வந்து குறிப்பிடத்தக்க சில படங்களை விளக்கிக் கூறினார். கலைக் காட்சியைப் பற்றி காந்திஜி கூறியதைப் புரிந்து கொள்ளுவதற்கு இந்த முன்னுரை அவசியமாகும். காந்திஜி அப்போது பேசியதாவது :

"இன்று காலை காட்சியில் இருந்தவைகளைக் காண எனக்கு மகிழ்ச்சியாகவும், பெருமையாகவும் இருந்தது. இம்மாதிரி குஜராத்தில் இதற்கு முன்பு நான் பார்த்ததே இல்லை. ஆனால், ஒன்று சொல்ல விரும்புகிறேன். உயிரோவியம் எதையும் இங்கு நான் பார்க்கவில்லை. ஒரு கலைப் படைப்பை எனக்கு விளக்கிக் கூறுவதற்கு ஒரு கலைஞர் எதற்காக? அது தானாகவே என்னுடன் பேச முடியாதா? நான் என்ன அர்த்தத்தில் கூறுகிறேன் என்பதை விளக்குகிறேன். வாடிகனிலுள்ள கலைக் கூடத்தில் சிலுவையில் அறையப்பட்ட ஏசுநாதரின் சிலை ஒன்றைப் பார்த்தேன். அது என்னை அடியோடு கவர்ந்து, மெய்ம்மறக்கச் செய்து விட்டது. நான் அதைப் பத்து வருடங்களுக்கு முன்பு பார்த்தேன். ஆனால், அது இன்னும் என் கண் முன் நிற்கிறது. மைசூரிலுள்ள பேலூரிலிருக்கும் புராதனமான அந்தக் கோவிலில், கல்லில் செதுக்கப்பட்டிருந்த ஒரு சிலை இருக்கிறது. அதைப்பற்றி யாரும் எனக்கு விளக்கிச் சொல்ல வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. அதுவே என்னுடன் பேசிற்று. அது அரை நிர்வாணமான ஒரு பெண்ணின் சிலை. முறியடிக்கப்பட்ட மன்மதன் ஒரு தேள் உருவத்தில் அவள் காலடியில் கிடக்கிறான். அவனுடைய கணைகளிலிருந்து தப்புவதற்காக அந்தப் பெண் தன்னுடைய புடவையை இழுத்துச் சுற்றிக் கொள்ளுவதுபோல் சிலையில் செதுக்கப்பட்டிருக்கிறது. அந்த உருவத்தில் தேள் கொட்டிய தன் வேதனையை நான் காணமுடிந்தது. ஸ்ரீ ரவி சங்கர் அதற்கு வேறு ஏதாவது வியாக்கியானம் சொல்லலாம். ஆனால், நான் அர்த்தப் படுத்திக் கொண்டது அப்படித்தான்.

"நான் என்ன விரும்புகிறேன் என்பதைப்பற்றி மணிக் கணக்கில் உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்க முடியும். லட்சக்கணக்கான பாமர மக்களுடன் பேசக் கூடிய கலையையும், இலக்கியத்தையுமே நான் விரும்புகிறேன். அது எப்படி இருக்க

வேண்டும் என்பதை நான் பொதுவாக உங்களுக்குச் சொல்லி விட்டேன். விவரங்களை நீங்களே பூர்த்தி செய்து கொள்ளலாம். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். இப்போது என் உள்ளம் கதறிக் கொண்டிருக்கிறது. ஆனால், அவசியம் ஏற்பட்டால் கூட, மனம் உடைந்து போகாமல் காலம் அதைக் கல்லாக்கிவிட்டது. சேவா கிராமத்தையும் அங்குள்ள எலும்புக் கூடுகளையும் (இந்தச் சமயத்தில் காந்திஜியினால் துக்கம் காரண மாக மேற்கொண்டு பேசமுடியவில்லை. அவர் சற்று நிறுத்தி விட்டு, மீண்டும் பேச ஆரம்பித்தார்). அங்குள்ள மக்களையும் நினைத்துப் பார்க்கும்போது, நமது இலக்கியங்களெல்லாம் பரி தாபமான விஷயம் என்று நான் சொல்லாமல் இருக்க முடிய வில்லை. தலைமை ஆசிரியர் ஆனந்த சங்கர துருவா நூறு புத்த கங்களின் பட்டியல் ஒன்றை எனக்கு அனுப்பி வைத்தார். ஆனால், அதில் ஒன்றுவது அவர்களுக்கு உபயோகப்படாது. அவர்களிடம் நான் எதைக் கொடுப்பது ? அந்தப் பெண்களிடம் எதைக் கொடுப்பது ? அவர்களுக்கும், இப்போது என் முன்பு உட்கார்ந்து கொண்டிருக்கும் ஆமதாபாத் சீமாட்டிகளுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கிறதா என்று எனக்குத் தெரியவில்லை. சேவா கிராமத்திலுள்ள பெண்களுக்கு எந்த இலக்கியமும் தெரி யாது. ராம பஜனையைக் கூட என்னுடன் சேர்ந்து அவர்களால் திருப்பிச் சொல்ல முடியவில்லை. அடிமைகளைப்போல் உழைத் துக் கொண்டே இருக்க அவர்களுக்குத் தெரியும். வெய்யிலோ, மழையோ, பாம்புகளோ, தேள்களோ, எதையும் பொருட்படுத்தா மல் அவர்கள் ஜலம் கொண்டுவருகிறார்கள்; புல் வெட்டுகிறார்கள்; கட்டை உடைக்கிறார்கள் ; அவர்களுக்கு வேலை கொடுத்து, ஏதா வது காசு கொடுத்தால் என்னைத் தெய்வமாகக் கொண்டாடுகிறார் கள். இந்த வாயற்ற சகோதரிகளுக்கு நான் எதை எடுத்துச் செல்லுவது ? அந்த வாயில்லா மக்கள் ஆமதாபாத்தில் வசிக்க வில்லை. இந்திய கிராமங்களில் வசிக்கிறார்கள். அவர்களுக்கு எதைக் கொண்டு செல்ல வேண்டும் என்று எனக்குத் தெரியும். ஆனால், உங்களிடம் அதை நான் சொல்லுவதற்கில்லை. நான் பேச் சாளியல்ல ; எழுதுவதும் என்னுடைய தொழில் அல்ல. வேறு வழி யில்லாததால், நான் எழுதுகிறேன். ஒரு காலத்தில் நானும் வாயில்லாதவனாகத்தான் இருந்தேன். இதனால் என்னுடைய நண்பர்கள் என்னை 'முட்டாள்' என்று சொன்னார்கள். கோர்ட்டு களுக்குப் போனேன். அங்கும் கூட கஷ்டப்பட்டுத்தான் நான் பேச வேண்டியிருந்தது. பேசுவதோ, எழுதுவதோ என்னுடைய தொழில் அல்ல. அவர்களிடையே வசிப்பதும், எப்படி வாழ்வது என்று அவர்களுக்குக் காட்டுவதுமே என்னுடைய வேலையாகும். சுயராஜ்யத்திற்கான திறவுகோல் நகரங்களில் இல்லை, கிராமங் களில்தான் இருக்கிறது. ஆகையால் நான் ஒரு கிராமத்தில் குடி யேறியிருக்கிறேன். அதுவும் நானாகத் தேடிப் பிடித்த கிராமம் அல்ல, தானாக வந்த ஒரு கிராமம்."

—'ஹரிஜன்'-14—11—1936

# 49

## 'நான் விரும்பும் இலக்கியம்'

குஜராத் இலக்கிய மகாநாட்டில் காந்திஜி செய்த தலைமைப் பிரசங்கத்தைப் பற்றி என்னுடைய* சென்ற வாரக் கடிதத்தில் விரிவான விவரங்கள் கொடுத்திருந்தேன். கடைசி நாளன்று அவர் செய்த பிரசங்கத்தில், முதல் நாள் கூறிய கருத்தை இன்னும் விரிவாகக் குறிப்பிட்டார்; மேல் நாடுகளிலுள்ள "திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த" புத்தகங்கள், ஒவ்வொரு நாளும் வெளியாகிக் கொண்டே இருக்கும் நாவல்கள் முதலியவைகளைப் பற்றிப் பேசினார். காந்திஜி கூறியதாவது: "சாதாரணமாக 'கற்பனை' என்று குறிப்பிடும் நாவல்களோ, இலக்கியங்களோ இல்லாமலே இருந்தாலும் குஜராத்திக்கு அதனால் ஒரு நஷ்டமும் இல்லை. எவ்வளவுக்கெவ்வளவு நாம் நாவல்களில் ஈடுபடாமலிருக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமக்கு நல்லது. சுமார் 40 வருடங்களுக்கு முன்பு நான் தென்னாப்பிரிக்காவுக்குப் போனபோது, என்னுடன் சில புத்தகங்களை எடுத்துச் சென்றிருந்தேன். குஜராத்தி இலக்கணம் பற்றி டெய்லர் எழுதிய புத்தகம் அவற்றில் ஒன்று. அந்தப் புத்தகம் என்னை மிகவும் கவர்ந்தது என்பது எனக்கு ஞாபகமிருக்கிறது. ஆனால், அதை மீண்டும் படிப்பதற்கான சந்தர்ப்பமே எனக்குக் கிடைக்கவில்லை. நான் தலைமை வகிப்பதற்கு வந்த தினத்தன்று நூல் நிலையத்திலிருந்து அதை எடுத்துப் பார்த்தேன். ஆனால், அந்த இலக்கண புத்தகத்திற்கு அவர் எழுதியிருந்த பின்னுரையில் ஒரு சில இடங்களைப் பார்த்ததைத் தவிர, வேறு எதையும் நான் வாசிக்க முடியவில்லை. பின்னுரையில் அவர் எழுதியிருந்த சில வார்த்தைகள் என் கவனத்தை ஈர்த்தன. 'குஜராத்தி வளமில்லாத மொழி என்றோ, நன்கு அபிவிருத்தியடையாத மொழி என்றோ யார் சொன்னது?' என்று ஸ்ரீ டெய்லர் உணர்ச்சியுடன் கேட்கிறார். 'சமஸ்கிருதத்தின் புதல்வியாகிய குஜராத்தி எப்படி வளமில்லாத மொழியாக இருக்க முடியும்? அது எப்படிப் போதுமானதாயில்லாமல் இருக்க முடியும்?' என்றும் ஸ்ரீ டெய்லர் கேட்கிறார். பேசுபவனின் திறமைக்கேற்றவாறுதான் மொழியும் இருக்கும். வளமற்றிருப்பது மொழியல்ல. அதைப் பேசும் மக்களின் அறிவீனம்தான் குஜராத்தியில் பிரதிபலிக்கிறது. சில நாவல்களினால் அந்த நிலையைச் சீர்திருத்திவிட முடியாது. ஒரு சாதாரண உதாரணத்தை எடுத்துக் கொள்ளுவோம். நமது மொழியில் பல 'நந்த பத்ரிஷிகள்' இருந்தால், நமக்கு என்ன லாபம்? மீண்டும் கிராமவாசிகளைப் பற்றியும், நான் விரும்புவதைப் பற்றியுமே தான் பேச வேண்டும். வான சாத்திரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதைப் பற்றி எனக்குத் துளிக் கூடத் தெரியாது. எரா்வடா சிறையில் காகா சாகிப் ஒவ்

---

* ஸ்ரீ மகாதேவ தேசாயின் வாரக் கடிதம்.

வொரு இரவும் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவருடைய ஆர்வம் என்னையும் பிடித்துக் கொண்டது. புத்தகங்களையும், ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியையும் கூட வரவழைத்தேன். வான சாத்திரத்தைப்பற்றி ஆங்கிலத்தில் ஏராளமான புத்தகங்கள் இருந்தன. ஆனால், குஜராத்தியில் அதன் சம்பந்தமாக புத்தகங்களே இல்லை. குஜராத்தியில் ஒரு சிறு புத்தகம் எனக்கு அனுப்பப்பட்டிருந்தது. ஆனால், அது சகிக்க முடியாததாக இருந்தது. நமது மக்களுக்கு, கிராம வாசிகளுக்கு வான சாத்திரம் பற்றி நாம் நல்ல புத்தகங்கள் கொடுக்க முடியாதா? பூகோளம் பற்றிய நல்ல புத்தகங்களாவது நம்மிடம் இருக்கின்றனவா? எனக்குத் தெரிந்த வரையில் இல்லை. உண்மை என்னவென்றால், கிராமங்களிலுள்ள மக்களை நாம் புறக்கணித்து விட்டோம். நம்முடைய உணவுத் தேவைகளுக்கு முற்றிலும் அவர்களையே நாம் நம்பியிருந்தாலும், இவ்வளவு காலமாக நாம் அவர்களுடைய போஷகர்களைப் போலவும், அவர்கள் நம்முடைய வளர்ப்புகளைப் போலவுமே நடந்து வந்திருக்கிறோம். அவர்களுடைய தேவைகளைப் பற்றி நாம் நினைத்துப் பார்த்ததே கிடையாது. உலகத்திலேயே தன்னுடைய விவகாரங்களை ஒரு அந்நிய மொழியின் மூலம் நடத்தும் பரிதாபமான நிலையிலுள்ள ஒரே நாடு நம் நாடுதான். நம்முடைய உணர்ச்சிகளில் உள்ள ஏழ்மை நம்முடைய மொழியிலும் பிரதிபலிப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பிரெஞ்சு மொழியிலோ, ஜெர்மன் மொழியிலோ ஒரு நல்ல புத்தகம் வந்தால், அது பிரசுரமான சிறிது காலத்திற்குள்ளாகவே அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து விடுகிறார்கள். அவர்களுடைய மொழியிலுள்ள சிறந்த இலக்கியங்கள் கூட சாதாரண வாசகர்களுக்கும் கூடப் புரியக் கூடிய விதத்தில் சுருக்கப்பட்டு, மிகவும் குறைந்த விலைக்குக் கொடுக்கப்படுகின்றன. இங்கே நம்மிடம் அம்மாதிரி ஏதாவது இருக்கிறதா? இத்துறை புதியது; இதில் எவ்வளவோ செய்ய இடமிருக்கிறது. நமது இலக்கிய கர்த்தாக்கள் இத்துறையில் பரிசீலனைகள் நடத்த வேண்டுமென்று விரும்புகிறேன். கிராமங்களுக்குச் சென்று, மக்களின் நாடியைப் பிடித்துப் பார்த்து, அவர்களுடைய தேவைகளைக் கவனித்து, அவர்களுக்குத் தேவையானவற்றை அளிக்க வேண்டும். வார்தாவில் கிராம ஊழியர்கள் பயிற்சிப் பள்ளி ஒன்றிருக்கிறது. கிராமக் கைத்தொழில்களைப் பற்றி புரியக் கூடிய விதத்தில் ஏதாவது எழுத வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அத்தொழில்களை நீங்களே தெரிந்து கொள்ள வேண்டும் என்று அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியரிடம் நான் கூறியிருக்கிறேன். கிராமங்களிலுள்ள அடைபட்ட சூழ்நிலையில் நாங்கள் போய் இருந்தால் எங்களுடைய அறிவின் மணம் மங்கிவிடுமென்று சொல்லாதீர்கள். அடைபட்ட சூழ் நிலை இருப்பது அங்கே அல்ல; நீங்கள்தான் உங்களுடைய அறிவை அடைத்துக் கொண்டு அங்கே போகிறீர்கள். உங்களுடைய கண்களையும், காதுகளையும், அறிவையும் திறந்து வைத்துக்கொண்டு நீங்கள் அங்கே போனால்,

சுத்தமான, உயிருள்ள அந்த கிராமீயச் சூழ் நிலையில் உங்கள் அறிவின் மணம் இன்னும் அதிகமாக வீசும்."

—'ஹரிஜன்' – 21—11—1936

# 50

# சமஸ்கிருதத்தில் அக்கறையின்மை

**கேள்வி:** *சமஸ்கிருதம் படிப்பதை பாட்னு சர்வகலாசாலை அநேகமாகத் தடை செய்துவிட்டது என்பதை நீங்கள் அறிவீர்களா? இந்த நடவடிக்கையை நீங்கள் ஆதரிக்கிறீர்களா? ஆதரிக்கவில்லையென்றால் 'ஹரிஜன்' பத்திரிகையில் உங்களுடைய அபிப்பிராயத்தை தெரிவிப்பீர்களா?*

**பதில்:** பாட்னு சர்வகலாசாலை என்ன செய்திருக்கிறதென்பது எனக்குத் தெரியாது. ஆனால், சமஸ்கிருதப் படிப்பு வருந்தத்தக்க விதத்தில் புறக்கணிக்கப்படுகிறதென்று நீங்கள் கூறுவதை நான் முற்றிலும் ஒப்புக் கொள்ளுகிறேன். புராதன மொழிகளைப் படிக்க வேண்டும் என்பதில் நம்பிக்கை கொண்ட தலைமுறையைச் சேர்ந்தவன் நான். அப்படிப் படிப்பது நேரத்தையோ, முயற்சியையோ வீணடிப்பதாகும் என்று நான் நினைக்கவில்லை. தற்கால மொழிகளைப் படிப்பதற்கு, அது ஒரு துணையாய் இருக்கும் என்று நான் நம்புகிறேன். இந்தியா சம்பந்தப்பட்டவரையில், புராதனமான வேறெந்த மொழியையும் விட, சமஸ்கிருதத்தின் விஷயத்தில் இது அதிகமாகப் பொருந்தும். ஒவ்வொரு தேசீயவாதியும் அதைப் படிக்க வேண்டும். ஏனெனில், மாகாண மொழிகளைப் படிப்பதை அது சுலபமாக்குகிறது. நமது முன்னோர்கள் சிந்தனை செய்ததும், எழுதியதும் அந்த மொழியில் தான். தம்முடைய மதத்தின் தத்துவத்தை அறிந்து கொள்ள விரும்பும் எந்த ஹிந்து பையனும், பெண்ணும், சமஸ்கிருதத்தைப் பற்றிய ஆரம்ப அறிவாவது இல்லாமல் இருக்கக் கூடாது. காயத்ரியை மொழி பெயர்க்க முடியாது. காயத்ரிக்கு ஒரு தனி அர்த்தம் இருக்கிறதென்று நான் கருதுகிறேன். எந்த மொழி பெயர்ப்பிலும் அசல் மூலத்திலுள்ள இனிமையைக் காணமுடியாது. நான் சொன்னதற்கு காயத்ரி ஒரு உதாரணம் தான்.

ராம்கர், 17—3—1940 —'ஹரிஜன்'–23-3-1940

# 51

# அடிக்காதீர்கள்

**கேள்வி :** *நான் ஒரு பள்ளிக்கூட ஆசிரியர். என்னுயை பள்ளி மாணவர்கள், என் சொந்தக் குழந்தைகள் எல்லோருடை விஷயத்திலும் அகிம்சைக் கொள்கையையே பின்பற்ற நான் முயற்சி செய்கிறேன். யாராவது முரட்டுப் பையனைத் தவிர, மற்ற பள்ளி மாணவர்கள் விஷயத்தில் பெரும் அள வுக்கு நான் வெற்றி பெற்றிருக்கிறேன். அந்த முரட்டுப் பையனை மட்டும் தலைமை ஆசிரியரிடம் அனுப்பி விடுவேன். ஆனால், என் சொந்தக் குழந்தைகள் சம்பந்தப்பட்டவரையில் பல சமயங்களில் அவர்களை அடிக்க வேண்டுமென்று எனக் குத் தோன்றுகிறது; இருந்தாலும் என்னை நானே அடக்கிக் கொண்டுவிடுகிறேன். என்னுடைய சிறிய தகப்பனரிடம் அவர்கள் உண்மையாகவே பயப்படுகிருர்கள். அவர் என் னைப் போலில்லை. 'அடியாத மாடு படியாது' என்ற முதுரை யில் அவர் நம்பிக்கை கொண்டவர். என் சொந்தக் குழந் தைகள் விஷயத்தில் நான் என்ன செய்ய வேண்டும்? அகிம்சையைப் பின்பற்றும் ஒரு தலைமை ஆசிரியர் முரட்டுப் பையனை எப்படிச் சமாளிக்க வேண்டும்?*

**பதில் :** *நீங்கள் உங்களுடைய குழந்தைகளுக்கோ, பள்ளிப் பிள்ளைகளுக்கோ, அடிப்பது போன்ற தண்டனைகளைக் கொடுக்கக் கூடாதென்பதைப் பற்றி எனக்குச் சந்தேகமே கிடையாது. உங்களுக்குத் தகுதி இருந்தால், உங்க ளுடைய குழந்தைகள் அல்லது மாணவர்களின் மனத்தை மாற்றுவதற்கு, வேண்டுமானல் உங்களையே நீங்கள் தண்டித் துக் கொள்ளலாம். பல தாய்மார்கள் இந்த முறையைக் கையாண்டு தங்களுடைய குழந்தைகளைத் திருத்தியிருக் கிருர்கள். பல சந்தர்ப்பங்களில் நானே அப்படிச் செய் திருக்கிறேன். தென்னுப்பிரிக்காவில் பல முரட்டுப் பையன் களை நான் சமாளிக்க வேண்டியிருந்தது. முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், ஹிந்துக்கள், பார்ஸிகள் ஆகிய பையன் களில் ஒரு பையனையாவது நான் அப்படித் தண்டித்ததாக எனக்கு ஞாபகமில்லை. இதற்கு ஒரே ஒரு விலக்குதான் இருந்தது. அகிம்சை வழி பெரும் பாலும் வெற்றியே அளித் தது. ஒரு ஆசிரியருக்கும், அவருடைய மாணவர்களுக்கு மிடையே ஒரு பிணைப்பு ஏற்பட்டுவிட்டால், தங்களுக்காக தங்களுடைய ஆசிரியர்கள் கஷ்டப்படுவதைப் பார்க்கும் போது சாதாரணமாக அவர்கள் பணிந்துவிடுவார்கள். நீங்கள் சொல்லும் 'முரட்டுப் பையனுக்கு' உங்களிடம் மதிப்பு இல்லை என்ருல், அவனை உங்கள் பள்ளிக்கூடத்தி லிருந்து வெளியே அனுப்பிவிட்டு, ஒத்துழையாமையை மேற்*

கொள்ளலாம். ஒழுங்கு, கட்டுப்பாடு விதிகளைப் பின்பற்றாத ஒரு மாணவனை, உங்கள் பள்ளிக்கூடத்தில் வைத்துக் கொள்ளத்தான் வேண்டும் என்று அகிம்சை உங்களை நிர்ப் பந்தப்படுத்தவில்லை.

—'ஹரிஜன்' – 13—7—1940

# 52

# மதக் கல்வி, ராணுவப் பயிற்சி, ரோமன் லிபி*

## 1

உங்களுடைய சொற்பகால விஜயமும், பொதுவான முக்கிய விஷயங்களைப்பற்றி நாம் நடத்திய சுருக்கமான விவாதமும் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. கல்வியைப்பற்றி மௌலானா ஆஜாத் கூறியதாகச் சொல்லப்படும் விவரங்கள் கொண்ட 'ஹிந்துஸ்தான் ஸ்டான்டர்ட்' பத்திரிகைப் பிரதி யொன்றையும் நீங்கள் அனுப்பியிருந்தீர்கள். அந்தப் பத்திரிகைச் செய்தி சரியானதுதான் என்று வைத்துக் கொண்டால் கூட, ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம் பின்பற்றும் கொள்கைக்கு அது முரணாக இருக்கிறதென்று நான் கண்டிப்பாகக் கூறுவேன். இந்தியாவின் உயிர் நாடி இருப்பது கிராமங்களிலேயே ஒழிய, ஓர் அந்நிய வல்லரசின் கோட்டைகளாக இருக்கும் மேல் நாட்டு பாணியில் உள்ள சில நகரங்களில் அல்ல.

மதக் கல்வியுடன் சர்க்கார் சம்பந்தம் வைத்துக் கொள்ள முடியும் என்றோ அல்லது அதை அவர்கள் சமாளிக்க முடியும் என்றோ நான் நம்பவில்லை. மதக் கல்வி என்பது முற்றிலும் மத ஸ்தாபனங்களின் பொறுப்பாக இருக்க வேண்டும் என்று நம்பு கிறேன். மதத்தையும், ஒழுக்கக் கோட்பாடுகளையும் ஒன்றோ டொன்று குழப்பாதீர்கள். அடிப்படையான ஒழுக்கக் கோட் பாடுகள் எல்லா மதங்களுக்குமே பொதுவானவை என்று நான் நம்புகிறேன். இந்த அடிப்படையான ஒழுக்கக் கோட்பாடுகளை போதிக்க வேண்டியது சர்க்கார் செய்ய வேண்டிய வேலை என் பதில் சந்தேகமில்லை. மதம் என்று சொல்லும் போது அடிப் படையான ஒழுக்கக் கோட்பாடுகளை நான் குறிப்பிடவில்லை; தனித்தனியாக உள்ள மதங்களையே குறிப்பிடுகிறேன். சர்க்கார்

---

*ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஈ. டபிள்யூ. அரியநாயகத்திற்கு காந்திஜி எழுதிய ஒரு கடிதமும், மௌலானா ஆஜாதின் பேட்டியிலிருந்து சில பகுதி களும் முறையே இந்தக் கட்டுரையிலும் அடுத்த கட்டுரையிலும் கொடுக்கப்பட்டுள்ளன.

உதவி பெற்ற மதம், சர்க்கார் உதவி பெற்ற சர்ச் ஆகியவைகளினுல் நாம் வேண்டிய கஷ்டங்களை அனுபவித்தாகிவிட்டது. தங்களுடைய மதம் உயிர் வாழ்வதற்கு முற்றிலுமோ அல்லது ஓர் அளவுக்கோ சர்க்காரின் ஆதரவை நம்பியிருக்கும் ஒரு சமூகம் அல்லது கோஷ்டிக்கு மதம் என்று ஒன்று இருப்பதற்கே தகுதி இல்லை ; அவர்களுக்கு மதம் என்று ஒன்றிருப்பதாகவே சொல்ல முடியாது. வெட்டவெளிச்சமாக எனக்குத் தெரியும் இந்த உண்மைக்கு ஆதாரமாக நான் உதாரணங்கள் எதுவும் காட்ட வேண்டிய அவசியமில்லை.

பிரஸ்தாப அறிக்கையில் கவனிக்க வேண்டிய இரண்டாவது விஷயம், உருது, நாகரி லிபிகளுக்குப் பதிலாக ரோமன் லிபியை ஏற்பதைப் பற்றியது. இந்த யோசனை கவர்ச்சிகரமாக இருக்கலாம். இந்திய ராணுவ வீரர்கள் விஷயத்தில் இது உண்மையாகவும் இருக்கலாம். ஆயினும், லிபியை மாற்றுவது மிகப் பெரிய ஒரு தவருக இருக்கும் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இப்படிச் செய்வது எண்ணைச் சட்டியிலிருந்து அடுப்பில் விழுவதுபோலாகும். சென்ற ஜனவரி 21-இல் இது சம்பந்தமாக நான் பத்திரிகைகளுக்கு வெளியிட்ட அறிக்கையை நீங்கள் படிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

எனக்கு வேதனையளித்த மூன்ருவது விஷயம், ராணுவப் பயிற்சியைப் பற்றியது. இது சம்பந்தமாக தேசம் பூராவிலும் ஒரு முடிவு ஏற்படுவதற்கு நாம் நீண்ட காலம் காத்திருக்க வேண்டியிருக்குமென்று நான் நினைக்கிறேன். இல்லையேல், நாம் உலகத்திற்கு நலன் அளிப்பதற்குப் பதிலாக சாபக்கேடாகி விடக் கூடும். தலைவர்கள் உற்பத்தி செய்யப்படுவதில்லை. தலைவர்கள் இயற்கையாகவே பிறக்கிருர்கள். முழு சுதந்திரம் ஸ்தாபிக்கப்படுவதற்கு முன்பே சர்க்கார் இந்த விஷயத்தில் அவசரப்பட வேண்டுமா? ஆகையால், இத்தகைய ஒரு தீவிரமான சிபாரிசுக்கு மத்திய ஆலோசனை போர்டு உடந்தையாக இருந்திருப்பது எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது.

—'ஹரிஜன்'-23—3—1947

# 53

# மதக் கல்வி பற்றி மௌலானா ஆஜாத்

*19—2—1947 தேதியிட்ட 'ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு பத்திரிகையில் வெளியான மௌலானா ஆஜாதின் பேட்டியிலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :*

பள்ளிக்கூடங்களில் மதக் கல்வி போதிக்கப்படுவது பற்றி மௌலானா ஆஜாத் பின்வருமாறு கூறினார் : "மற்ற நாடுகளை விட இந்தியாவில் மதத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது, இன்னமும் கொடுக்கப்பட்டு வருகிறது. இந்தியாவின் சென்ற காலப் பழக்கம் மட்டுமல்ல, மக்களின் இன்றைய மனப்பான்மையும் கூட, மதபோதனையின் முக்கியத்துவத்தை வற்புறுத்தும் விதத்திலேயே இருக்கிறது. கல்வியில் மத போதனையும் சேர்க்கப்பட வேண்டும் என்று அரசாங்கம் முடிவு செய்தால், அந்த போதனை சிறந்த முறையில் இருக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

"தனிப்பட்ட ஸ்தாபனங்களில் அளிக்கப்படும் மத போதனை, பெரும்பாலும் மனப்பான்மையை விரிவுபடுத்தி, எல்லா மக்களிடமும் சகிப்புத் தன்மையையும், நல்லெண்ணத்தையும் ஊட்டுவதற்குப் பதிலாக, நேர்மாறான பலன்களையே விளைவிக்கின்றன. அரசாங்கத்தின் மேற்பார்வையில், அந்தந்த மதத்தைப் பற்றிய போதனை கூட, தனியார் மேல் பார்வையில் இருப்பதைவிட இன்னும் அதிக தாராளப்போக்குடன் போதிக்கப்படலாம். மனிதர்களை இன்னும் அதிக தாராள மனப்பான்மையும், பரந்த நோக்கமும் உள்ளவர்களாகச் செய்வதே எல்லா மத போதனைகளின் நோக்கமுமாகும். இதைத் தனியார் செய்யும்படி விடுவதைவிட, அரசாங்கமே இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டால் இதை இன்னும் அதிகமாகப் பலனளிக்கத்தக்க விதத்தில் செய்யலாம் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும்.

"மற்றொரு விஷயத்தைப் பற்றியும் என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். அது பாதிரிமார் சங்கங்களின் கல்வி நடவடிக்கைளைப் பற்றியது. நவீனக் கல்வியைப் பரப்புவதிலும், நவீன மனப்பான்மையை வளரச் செய்வதிலும் பாதிரிமார் சங்கங்கள் முக்கியமான பணியாற்றியிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. இந்தியாவில் மட்டுமில்லாமல், கீழ்த் திசையில் உள்ள மற்ற நாடுகள் விஷயத்திலும் இது உண்மையாகும்.

"சென்ற காலத்தில் பாதிரிமார் செய்துள்ள நல்ல வேலைகளைக் கவனிக்கும் போது, எதிர்காலத்தில் அதே மனிதாபிமான ரீதியில் அவர்கள் செய்யும் வேலைகளுக்கு ஏன் அதே மாதிரியான பாராட்டுதல் கிடைக்கக் கூடாது என்பதற்கு ஒரு காரணமும் இல்லை.

ஒரே ஒரு விஷயத்தைப் பற்றித்தான் சில சமயங்களில் சங்கடங்கள் ஏற்படுகின்றன். இது மத மாற்றத்தை, குறிப்பாக, கூட்டம் கூட்டமாக மக்களை மதமாற்றம் செய்வதைப் பற்றியது. இந்த விஷயமாக உலக அபிப்பிராயத்தில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. கூட்டம் கூட்டமாக இப்படி மத மாற்றம் செய்யப்படுவது உண்மையான மத மாற்றமே அல்ல என்பதைப் பொறுப்பு உணர்ச்சியுள்ள பாதிரிமாரே ஒப்புக்கொள்ள ஆரம்பித்திருக்கிருர்கள். உள்ளத்திற்கு ஞான ஸ்நானம் அளிப்பதே சிறந்தது என்று ஏசுநாதரே வலியுறுத்தியிருக்கிருர். பாதிரிமாரும் மக்களை ஒரு சர்ச்சின் சித்தாந்தங்களுக்கு உட்படுத்துவதற்கு முயற்சிப்பதைவிட அவருடைய மனிதாபிமானமுள்ள போதனைகளைப் பிரசாரம் செய்தால், ஏசுநாதரிடம் உண்மையான விசுவாசத்துடன் நடந்து கொண்டவர்களாவார்கள். எல்லாப் பாதிரிமார் சங்கங்களும் இந்தப் பரந்த மனப்பான்மையை மேற்கொண்டால், அவர்கள் அளிக்கும் சேவையை ஏற்றுக்கொள்ள சுதந்திர இந்தியா தயங்குவதற்குக் காரணம் இல்லை.''

—'ஹரிஜன்' – 23—3—1947

பகுதி இரண்டு

# இலக்கியக் கல்வி

## 1

## அரசாங்கப் பள்ளிகளின் விளைவு

இலக்கியப் பயிற்சியை நான் எப்போதுமே பிரமாதப் படுத்த முடிந்ததில்லை. இலக்கியப் பயிற்சியினால் ஒருவருடைய தார்மிக அந்தஸ்து ஒரு அங்குலம் கூட உயர்வதில்லை. நல்லொழுக்கமும், இலக்கியப் பயிற்சியும் வெவ்வேறானவை என்பதை என்னுடைய அனுபவத்தில் நான் நன்கு உணர்ந்திருக்கிறேன். அரசாங்கப் பள்ளிக்கூடங்கள் நம்மை வலிமையற்றவர்களாக, கதியற்றவர்களாக, கடவுள் அற்றவர்களாக ஆக்கிவிட்டன என்று நான் உறுதியாக நம்புகிறேன். அவற்றினால் நமக்கு அதிருப்திதான் ஏற்பட்டிருக்கிறது. அந்த அதிருப்தியை நீக்குவதற்கும் வழியில்லை. இதனால் நாம் ஏக்கமுற்றவர்களாகிவிட்டோம். நாம் குமாஸ்தாக்களாகவும், துவிபாஷிகளாகவும் ஆக வேண்டுமென்பதே அப்பள்ளிகளின் நோக்கம். அம்மாதிரியே நாம் ஆகிவிட்டோம்.

—'எங் இந்தியா' – 1—6—1921

## 2

## தேவைக்கு உகந்ததா ?

இந்தக் கல்வி மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கிறதா என்ற கேள்வி எழுகிறது. இந்தியாவின் மற்ற பாகங்களில் இருப்பதைப் போலவே பரோடாவிலும், ஜனத்தொகையில் பெரும்பான்மையோர் விவசாயத்தை நம்பியிருப்பவர்கள். இந்த விவசாயிகளின் குழந்தைகள் இன்னும் சிறந்த விவசாயிகள் ஆகிறார்களா? அவர்கள் பெற்ற கல்விக்கு, இன்னும் அதிகமான தார்மிக, லோகாயத அபிவிருத்தி அவர்களிடம் காணப்படுகிறதா? பலன்களைப் பார்ப்பதற்கு ஐம்பது வருட காலம் போதாதா? இந்தக் கேள்விகளுக்குப் பதில் திருப்திகரமாக இருக்க முடியாதென்றே அஞ்சுகிறேன். பரோடாவில் உள்ள விவசாயிகள், மற்ற இடங்களில் உள்ளவர்களை விட அதிக மகிழ்ச்சியுடனோ, நல்ல நிலைமையிலோ இருக்கவில்லை. பஞ்ச காலங்களில்

மற்றவர்களைப் போலவே அவர்களும் திக்கற்றவர்களாகத்தான் இருக்கிறார்கள். அவர்களுடைய கிராமங்களிலுள்ள சுகாதார நிலைமையும், இந்தியாவின் மற்ற பாகங்களில் இருப்பதைப் போலவே அவ்வளவு மோசமாகத்தான் இருக்கிறது. தங்களுடைய துணிகளைத் தாங்களே உற்பத்தி செய்துகொள்ள வேண்டியது எவ்வளவு முக்கியம் என்றுகூட அவர்களுக்குத் தெரியாது. இந்தியாவில் உள்ள மிகவும் வளம் மிக்க நிலங்களில் சில பரோடாவில் இருக்கின்றன. அங்கு விளையும் பருத்தியை அவர்கள் ஏற்றுமதி செய்யவேண்டியதே யில்லை. அது எளிதில் சுய தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளக் கூடியதாகவும், சுபிட்சமான விவசாயிகளைக் கொண்டதாகவும் உள்ள ஒரு சமஸ்தானமாகிவிட முடியும். ஆனால், அது அந்நியத் துணிகளால் அலங்கரிக்கப்பட்டிருப்பது, அவர்களுடைய வறுமைக்கும், அவமானத்திற்கும் கண்கூடான ஓர் அடையாளம். குடிப் பழக்கம் சம்பந்தப்பட்டவரையிலும் அவர்கள் அப்படித்தான். ஒருக்கால் அவர்கள் இன்னும் மோசமான நிலையில் இருக்கிறார்களோ, என்னவோ. பிரிட்டிஷ் வருமானத்தைப் போலவே, பரோடா வருமானமும் கள்ளு, சாராயக்கடை வருமானத்தினால் இழுக்குற்றிருக்கிறது. காளிபராஜ் குழந்தைகள் என்னதான் கல்வி பெற்றாலும், குடி என்ற பூதத்தினால் அவர்கள் அழிந்து போகிறார்கள். உண்மை என்னவென்றால், பரோடாவில் உள்ள கல்வி முறை அநேகமாக பிரிட்டிஷ் முறையை அப்படியே 'காப்பி'யடிப்பதாக இருக்கிறது. உயர்தரக் கல்வி நம்மை நம் நாட்டிலேயே அந்நியர்களாக்கிவிடுகிறது; ஆரம்பக் கல்வி பிற்கால வாழ்க்கைக்கு யாதொரு உதவியும் அளிக்கக் கூடியதாக இல்லை. ஆகையால், அதுவும் உபயோகமற்றதாகிவிடுகிறது. அதில் தனித் தன்மையோ, இயற்கையானதோ எதுவும் இல்லை. அது மக்களுக்கு ஏற்றதாயிருக்குமென்றால், தனித் தன்மை பெற்றதாயிருக்க வேண்டிய அவசியமே இல்லை.

—'எங் இந்தியா' – 21—1—1926

# 3

# ஆங்கிலக் கல்வி

வாசகர்: சுயாட்சி பெறுவதற்கு ஆங்கிலக் கல்வி அவசியமில்லை என்று நீங்கள் கருதுகிறீர்களா?

ஆசிரியர் (காந்திஜி): ஆம் என்பதும், இல்லை என்பதுமே என்னுடைய பதிலாகும். லட்சக்கணக்கான பாமர மக்களுக்கு ஆங்கில அறிவு அளிப்பது அவர்களை அடிமைப்படுத்துவதாகும். கல்விக்கு மெக்காலே போட்ட அஸ்திவாரம் நம்மை அடிமைப்

படுத்திவிட்டது. அவருக்கு அம்மாதிரி நோக்கம் இருந்ததென்று நான் சொல்லவில்லை; ஆனால், பலன் அப்படித்தான் இருக்கிறது. சுயாட்சியைப் பற்றி நாம் ஒரு அந்நிய மொழியில் பேசவேண்டி யிருப்பது வருந்தத்தக்க நிலைமை அல்லவா?

ஐரோப்பியர்கள் வேண்டாம் என்று உதறித் தள்ளிய முறைகளே இப்போது நம்மிடையே அமலில் இருக்கின்றன என்பதும் குறிப்பிடத் தக்கது. அவர்களிடையே உள்ள அறிஞர்கள் அடிக்கடி மாறுதல்களைச் செய்துகொண்டே இருக்கிறார்கள். விஷயமறியாத நாம் அவர்கள் உதறித் தள்ளியவைகளைப் பற்றிக்கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு பகுதியிலும் தங்களுடைய நிலைமையை உயர்த்திக்கொள்ள அவர்கள் முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். வேல்ஸ் இங்கிலாந்தில் ஒரு சிறிய பகுதி. வேல்ஸில் இருப்பவர்களிடையே வெல்ஷ் மொழியின் அறிவை மீண்டும் பரப்புவதற்குப் பெரும் முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. வேல்ஸ் குழந்தைகள் வெல்ஷ் மொழியையே பேசச் செய்ய வேண்டுமென்ற இயக்கத்தில் பிரிட்டிஷ் மந்திரி ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறார். நம்முடைய நிலைமை என்ன? நாம் ஒருவருக்கொருவர் தப்பும் தவறுமான ஆங்கிலத்தில் எழுதிக்கொள்ளுகிறோம். நம்மிடையே உள்ள எம். ஏ. பட்டதாரிகள் கூட இதற்கு விலக்கல்ல. நமது காங்கிரஸின் நடவடிக்கைகள் ஆங்கிலத்தில் நடத்தப்படுகின்றன; நம்முடைய சிறந்த சிந்தனைகள் ஆங்கிலத்திலேயே வெளியிடப்படுகின்றன; நமது சிறந்த பத்திரிகைகளும் ஆங்கிலத்திலேயே அச்சிடப்படுகின்றன. இந்த நிலைமை வெகுகாலம் தொடர்ந்து நீடித்தால், எதிர்கால சந்ததிகள் நம்மைக் கண்டித்து, சபிப்பார்கள் என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

ஆங்கிலப் படிப்பைப் பெறுவதன் மூலம் நாம் தேசத்தை அடிமைப்படுத்திவிட்டோம் என்பது கவனிக்கத்தக்கது. ஆஷாடபூதித்தனம், கொடுங்கோன்மை முதலியவைகள் அதிகமாகி விட்டன; ஆங்கிலம் தெரிந்த இந்தியர்கள் மக்களை ஏமாற்றவும், பயமுறுத்தவும் தயங்குவதில்லை. இப்போது மக்களின் நன்மைக்காக நாம் ஏதாவது செய்கிறோம் என்றால், அவர்களுக்கு நாம் செலுத்த வேண்டிய கடனில் ஒரு பகுதியைத்தான் செலுத்துகிறோம்.

நான் ஒரு நியாய ஸ்தலத்திற்குப் போகவேண்டுமானால், ஆங்கிலத்தைத்தான் உபயோகிக்க வேண்டியிருக்கிறது என்பது வேதனையளிக்கும் விஷயம் அல்லவா? நான் பாரிஸ்டர் ஆனால், என் தாய் மொழியில் பேசக் கூடாது; என் மொழியிலிருந்தே இன்னொருவர் எனக்கு மொழி பெயர்த்துச் சொல்ல வேண்டும் என்பது வேதனையளிப்பதல்லவா? இது முற்றிலும் அர்த்தமற்றதாக இருக்கிறதல்லவா? இது அடிமைத்தனத்திற்கு அடையாளம் அல்லவா? இதற்காக நான் ஆங்கிலத்தைக் குறை கூறுவதா? ஆங்

கிலம் அறிந்தவர்களாகிய நாம்தான் இந்தியாவை அடிமைப்படுத்தியிருக்கிறோம். தேசத்தின் சாபம் ஆங்கிலத்தைச் சேராது; நம் தலையில்தான் விழும்.

உங்களுடைய கடைசிக் கேள்விக்கு நான் அளிக்கும் பதில் ஆம் என்றும், இல்லை என்றும் கூறினேன். 'ஆம்' என்பதற்குக் காரணம் என்னவென்பதை விளக்கிவிட்டேன். 'இல்லை' என்பதற்கு என்ன காரணம் என்று இனிக் கூறுகிறேன்.

நாகரிகம் என்ற வியாதி நம்மை சரியாகப் பிடித்திருக்கிறது. இதனால் ஆங்கிலக் கல்வியை நாம் அடியோடு கைவிட்டுவிட்டு இருக்க முடியாது. ஏற்கனவே அதைப் பெற்றுள்ளவர்கள், அவசியமான சமயங்களில் அதை நல்ல விதத்தில் பயன்படுத்திக் கொள்ளக் கூடும். ஆங்கிலேயர்களுடனும், நமது மக்களுடனும் நாம் தொடர்பு வைத்துக் கொள்ளும்போது, அந்த மொழியின் மூலம்தான் அது சாத்தியம் என்றிருக்கும் போது, தங்களுடைய நாகரிகத்தில் அவர்களுக்கு (ஆங்கிலேயர்களுக்கு) எவ்வளவு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறதென்பதை அறிந்து கொள்ளுவதற்காக ஆங்கிலத்தை உபயோகிக்கலாம், அல்லது கற்றுக் கொள்ளலாம். ஆங்கிலம் படித்தவர்கள், தங்களுடைய குழந்தைகளுக்குத் தாய் மொழியின் மூலம் ஒழுக்கக் கோட்பாடுகளைக் கற்றுக் கொடுக்க வேண்டியிருக்கும்; மற்றொரு இந்திய மொழியையும் போதிக்க வேண்டியிருக்கும். ஆனால், அவர்களுக்கு வயது வந்த பிறகு அவர்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்ளலாம்; அது நமக்குத் தேவையில்லை என்பதே இறுதி நோக்கமாக இருக்கும். அதன் மூலம் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கக் கூடாது. அந்த ஒரு அளவுக்கு ஆங்கிலம் கற்றுக்கொள்ளும்போது கூட, அதன் மூலம் எதைக் கற்றுக் கொள்ளலாம், எதைக் கற்றுக் கொள்ளக் கூடாது என்பதையும் நாம் கவனிக்க வேண்டியிருக்கும்.

'ஹிந்த் ஸ்வராஜ்' (1908)—அத்தியாயம்—18

## 4

# குமாஸ்தாக்களின் உற்பத்தி

சென்னையிலுள்ள மாணவர்களாகிய நீங்களும், இந்தியா பூராவிலுமுள்ள மாணவர்களும், லட்சியத்தை நிறைவேற்றக் கூடியதும், உங்களிடமுள்ள சிறந்த அம்சங்களை வெளிக் கொணரக் கூடியதுமான ஒரு கல்வியைப் பெற்றுவருகிறீர்களா? அல்லது சர்க்கார் சிப்பந்திகளையும், வர்த்தக-ஸ்தாபன குமாஸ்தாக்களையும் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையாகிவிட்ட ஒரு கல்வியைப் பெற்று வருகிறீர்களா? அரசாங்க இலாகாக்களிலோ, வேறு துறைகளிலோ உத்தியோகம் பெறுவதுதான் நீங்கள் பெறும் கல்வியின் நோக்கமா? உங்களுடைய கல்வியின் நோக்கம் அது

தான் என்ருல், நீங்கள் விதித்துக் கொண்டுள்ள லட்சியம் அது தான் என்ருல், கவிஞர்* கற்பனை செய்துள்ள லட்சியம் ஈடேற வில்லை என்றே நான் அஞ்சுகிறேன். நவீன நாகரிகத்தை நான் கண்டிப்பாக எதிர்ப்பவன். இதை நான் சொல்லி நீங்கள் கேட்டிருக்கலாம் அல்லது படித்திருக்கலாம். இன்று ஐரோப்பா வில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் கவ னிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். நவீன நாகரிகத்தின் கால டியில் மிதிபட்டு ஐரோப்பா வேதனைப்பட்டுக் கொண்டிருக் கிறதென்ற முடிவுக்கு நீங்கள் வந்தால், நம் நாட்டிலும் அதே நாகரிகத்தைப் பின்பற்றுவதற்கு முன்பு நீங்களும், உங்களுடைய பெரியவர்களும் ஒரு முறைக்கு இரு முறையாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். "நம்மை ஆளுபவர்கள் அந்தக் கலாசாரத்தை நம் தாய்நாட்டுக்குக் கொண்டுவரும்போது, நாங்கள் என்ன செய்ய முடியும்?" என்று கேட்கிருர்கள். ஒரு விஷயத்தில் உங்க ளுக்கு ஒரு சந்தேகமும் இருக்கக் கூடாது. நீங்கள் ஏற்றுக் கொள் ளத் தயாராக இருந்தாலொழிய, எந்த ஆட்சியாளரும் அதைக் கொண்டுவர முடியுமென்று நான் நம்பவேயில்லை. அப்படியே அந் தக் காலாசாரத்தை ஆளுபவர்கள் நம்மிடம் கொண்டுவந்தாலும், அதை நிராகரிக்கக் கூடிய சக்திகள் நம்மிடத்திலேயே இருக்கின் றன என்றே நான் நினைக்கிறேன்.

'காந்திஜியின் கட்டுரைகளும், பிரசங்கங்களும்' – 27—4—1915

# 5

# அடிமைப்படுத்திய கல்வி

நமக்கு அளிக்கப்பட்டுள்ள ஆங்கிலக் கல்வி, அந்தக் கல்வி பெற்ற இந்தியர்களை அடிமைகளாக்கிவிட்டது என்று நான் உறு தியாக நம்புகிறேன். இந்திய மாணவர்களின் மனேவலிமையை அது மிகவும் சோதித்துவிட்டது; பிறர் செய்வதைப் போலவே செய்பவர்களாக நம்மை ஆக்கிவிட்டது. தாய்மொழியைப் புறக் கணிக்கும் வேலை, பிரிட்டிஷ் ஆட்சியின் மிகவும் வருந்தத்தக்க அத்தியாயங்களில் ஒன்ருக இருந்திருக்கிறது. ஆங்கிலத்தில் சிந் தித்து, தமது சிந்தனைகளைப் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே சொல்ல வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லாதிருந்தால், ராம் மோகன் ராய் இன்னும் பெரிய சீர்திருத்தக்காரராக இருந்திருப் பார்; லோகமான்ய திலகர் இன்னும் பெரிய சிந்தனையாளராக இருந்திருப்பார். அவர்களுடைய சீர்சிருத்தமும், புலமையும் மக் களிடையே ஆச்சரியமான பலன்களை விளைவித்திருக்கின்றன. இயற்கைக்கு மாருன ஒரு முறையின் கீழ் அவர்கள் பயிற்சி

---

* கவியரசர் ரவீந்திரநாத தாகூரையே கவிஞர் என்று காந்திஜி மேலே குறிப் பிட்டிருக்கிருர்.

பெற்றிருக்கவில்லை யென்றால், பலன் இன்னும் பிரமாதமாக இருந்திருக்கும். ஆங்கில இலக்கியம் என்ற பொக்கிஷத்திலிருந்து அவர்கள் இருவரும் பயன் பெற்றிருக்கிறார்கள் என்பதில் சந்தேக மில்லை. தங்களுடைய தாய்மொழிகளின் மூலமே இந்த அறிவு அவர்களுக்குக் கிடைத்திருக்க வேண்டும். இன்னொருவர் செய்வதையே செய்யும் மக்களை உற்பத்தி செய்யும் எந்த நாடும் ஒரு சமுதாயமாக முடியாது. பைபிள் புத்தகம் ஒன்று இல்லாதிருந்தால், ஆங்கிலத்திற்கு என்ன நேர்ந்திருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள். சைதன்யர், கபீர், நானக், குரு கோவிந்தசிங், சிவாஜி, பிரதாப் போன்றவர்கள் ராம் மோகன் ராயையும், திலகரையும் விடப் பெரிய மனிதர்கள் என்று நான் நினைக்கிறேன். ஒருவரை மற்றொருவருடன் ஒப்பிட்டுப் பேசுவது நல்லதல்ல என்பதை நான் அறிவேன். எல்லோரும் அவரவர்கள் துறையில் பெரிய மனிதர்களே. ஆனால், பலன்களைக் கொண்டு பார்க்கும்போது, இன்னும் அதிருஷ்டவசமான நிலைமையில் பிறந்த அவர்களைப்போல் ராம் மோகன் ராயும், திலகரும் செய்த போதனைகள் மக்களிடையே அவ்வளவு நிரந்தரமானவையாக இல்லை. அவர்களுக்கு நேர்ந்த இடையூறுகளைப் பார்க்கும்போது, அவர்களை சூரர்கள் என்றே சொல்ல வேண்டும். அவர்கள் இருவரும் இன்னும் அதிகமான காரியங்களைச் சாதித்திருப்பார்கள். ஆங்கில அறிவு இல்லையென்றால் ராஜாராம் மோகன்ராயோ, திலகரோ அம்மாதிரி இருந்திருக்க முடியாது என்பதை நான் நம்பத் தயாராயில்லை. சுதந்திரம் பற்றிய கருத்துகளை உணர்ந்து கொள்ளவும், சிந்தனைத் தெளிவு பெறவும் ஆங்கில அறிவு அவசியமானது என்பதைப் போன்ற பெரிய மூட நம்பிக்கை வேறு எதுவும் இந்தியாவில் கிடையாது. சென்ற ஐம்பது வருடங்களாக நாட்டில் ஒரே ஒரு கல்வி முறைதான் இருக்கிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்; ஒரே ஒரு போதனை மொழி தான் நம்மீது சுமத்தப்பட்டிருக்கிறது. ஆகையால், இப்போதுள்ள கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும் கல்வி பெற்றிராவிட்டால் நாம் எப்படி இருந்திருப்போம் என்று மதிப்பிடுவதற்கு நம்மிடம் ஆதாரங்கள் எதுவுமில்லை. ஆனால், ஒன்று மட்டும் நமக்குத் தெரியும். அதாவது ஐம்பது வருடங்களுக்கு முன்பு இருந்ததைவிட, இன்று நாம் மோசமான நிலைமையில் இருக்கிறோம்; இந்தியாவின் தற்காப்புத் திறமை குறைந்திருக்கிறது; மக்களின் தாங்கும் சக்தியும் குறைந்துள்ளது. சர்க்கார் முறையிலுள்ள குறைபாடுதான் இதற்குக் காரணம் என்று என்னிடம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. கல்வி முறைதான் அதிலுள்ள மிகப் பெரிய குறைபாடு ஆகும்.

அது திட்டமிடப்பட்ட விதமும் தவறு, பிறந்த விதமும் தவறு. ஏனெனில், இந்த நாட்டிலிருந்த கல்வி முறை துளிக் கூடப் பிரயோசனமில்லை என்று ஆங்கில ஆட்சியாளர்கள் உண்மையாகவே நம்பினார்கள். அது பாவத்திலேயே வளர்க்கப் பட்டு வந்திருக்கிறது. ஏனெனில், இந்தியர்களின் உடல்,

உள்ளம், ஆன்மா மூன்றும் குன்றிவிடும்படி செய்வதே அதன் போக்காக இருந்திருக்கிறது.

—'எங் இந்தியா' - 27—4—1921

# 6

# தாகூருக்கு பதில்

என் வீட்டைச் சுற்றி நாலு புறங்களிலும் சுவர்கள் எழுப்பப் படுவதையோ, என்னுடைய ஜன்னல்கள் அடைக்கப்படு வதையோ நான் விரும்பவில்லை. என் வீட்டைச் சுற்றி எல்லா தேசங்களின் கலாசாரங்களும் தாராளமாக மணம் வீச வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். ஆனால், அவற்றில் எதுவும் என் காலை வாரிவிடுவதை நான் அனுமதிக்கமாட்டேன். ஒரு அந்நிய னாகவோ, அடிமையாகவோ, பிச்சைக்காரனாகவோ மற்றவர்களின் வீட்டில் வசிக்க நான் தயாராக இல்லை. ஆங்கிலம் கற்பது கஷ்டமான ஒரு நிர்ப்பந்தம். வறட்டு கௌரவத்திற்காகவோ, ஆட்சேபகரமான சமூக வசதிகளுக்காகவோ அந்த நிர்ப்பந் தத்தை எனது சகோதரிகளின் மீது சுமத்த நான் தயாராக இல்லை. இலக்கிய ஆர்வமுள்ள இளைஞர்களும், யுவதிகளும் வேண்டிய அளவு ஆங்கிலத்தையும், மற்ற உலக மொழிகளையும் கற்றுக் கொள்ளட்டும். பின்னர், தங்களுடைய அறிவின் பலன் களை ஒரு போஸைப்போல், ஒரு ராயைப்போல் அல்லது கவிஞரைப்போல்* இந்தியாவுக்கும், உலகத்திற்கும் அளிக் கட்டும். ஆனால், ஓர் இந்தியராவது தன்னுடைய தாய் மொழியை மறப்பதையோ, புறக்கணிப்பதையோ, அதைப்பற்றி வெட்கப்படுவதையோ நான் அனுமதிக்கமாட்டேன். தம்முடைய சொந்தத் தாய் மொழியில் சிறந்த முறையில் சிந்திக்க முடியா தென்றே நினைப்பதையும் அனுமதிக்க மாட்டேன். என்னுடைய மதம் சிறைச்சாலையின் மதமல்ல. ஆண்டவனின் மிகச் சிறிய சிருஷ்டிக்குக் கூட அதில் இடமிருக்கிறது. ஆனால், அகம்பாவம், இனம், மதம், நிறம் ஆகியவை பற்றிய இறுமாப்பு முதலியவை களுக்கு அதில் இடமில்லை.

—'எங் இந்தியா'– 1—6—1921

---

* தாவர ஆராய்ச்சி மேதையான ஜகதீச சந்திர போஸையும் (1858–1936), விஞ் ஞான ஆராய்ச்சி மேதையான பி. ஸி. ராயையும் (1861-1944), கவியரசர் தாகூரையுமே (1861–1941), மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

# 7

# அருமையான இலக்கிய சிருஷ்டிகள்

நம் நாட்டிலுள்ள ஆண்களும், பெண்களும் ஆங்கிலம் கற்றுக் கொள்ளுவதில் இப்போது செலவிடும் நேரத்தைக் குறைத்துக் கொள்ளும்படி நான் கேட்பதன் நோக்கம், அதிலிருந்து அவர்கள் பெறக்கூடிய இன்பத்தைப் பறிக்கவேண்டும் என்பதல்ல; ஆனால், இன்னும் இயற்கையான ஒரு வழியைப் பின்பற்றுவதன் மூலம் இவ்வளவு செலவோ, கஷ்டமோ இல்லாமல் அதே இன்பத்தை அடையலாமென்றே நான் சொல்லுகிறேன். விலை மதிப்பில்லாத எழில் நிறைந்த ரத்தினங்கள் உலகத்தில் எவ்வளவோ இருக்கின்றன; ஆனால், இந்த ரத்தினங்கள் யாவுமே ஆங்கிலத்தில் பொறிக்கப்பட்டிருக்கவில்லை. அதே மாதிரி அருமையான சிருஷ்டிகள் தம்மிடமும் இருக்கின்றன என்று மற்ற மொழிகளும் பெருமைப்பட முடியும். இவையெல்லாம் நமது பாமர மக்களுக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டும். இவற்றையெல்லாம் நமது கல்விமான்கள் நமது மொழிகளில் மொழி பெயர்த்துக் கொடுக்க முன்வந்தால் தான் அது சாத்திய மாகும்.

'காந்திஜியின் கட்டுரைகளும், பிரசங்கங்களும்' – 20–2–1918

பகுதி மூன்று

# ஒத்துழையாமையும் தற்காலக் கல்வியும்

## 1

## இன்றைய கல்வி முறை

கல்வி என்ற சொல் இப்போது வெகுவாக அடிபட்டுக் கொண்டிருக்கிறது. அநேகமாக ஒவ்வொருவருமே அதைப்பற்றி ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். பள்ளிக்கூடங்களில், சர்க்கார் பள்ளிகளாயிருந்தாலும் தனியார் பள்ளிகளாயிருந்தாலும், மாணவர்கள் நிறைந்திருக்கிருர்கள். கல்லூரிகளும் அப்படியே இருக்கின்றன. குஜராத் கல்லூரியில் சேர விரும்பிய பல மாணவர்கள் ஏமாற்றத்துடன் திரும்பவேண்டியதாயிற்று. ஆனல், கல்வி பெற வேண்டுமென்ற விருப்பம் இப்படி அதிகமாகிக் கொண்டிருந்த போதிலும், கல்வி என்ருல் உண்மையில் என்ன என்பதைப் பற்றி யாரும் யோசித்துப் பார்ப்பதில்லை. இதுவரையில் நாம் பெற்றுள்ள கல்வி நமக்கு ஏதாவது நன்மை செய்திருக்கிறதா? ஆம் என்ருல், அதற்காக செலவிட்ட பணத்திற்கும் நேரத்திற்கும் ஏற்ற அளவில் அது இருக்கிறதா? கல்வி என்பதன் அர்த்தத்தைப்பற்றி கவனம் செலுத்தப்படவில்லையென்ருல், அதன் நோக்கங்களைப்பற்றியும் அப்படித்தான். சில ரக சர்க்கார் உத்தியோகங்களுக்கு தங்களைத் தகுதியாக்கிக் கொள்வதே பெரும்பாலானவர்களின் நோக்கம் என்று தோன்றுகிறது. சாதாரணமாக பல்வேறு தொழில்களையும் சேர்ந்தவர்கள், கல்வி கற்ற பிறகு, தங்களுடைய பழக்கமான தொழில்களைக் கைவிட்டுவிட்டு ஜீவாேபாயத்திற்கு வேறு உத்தியோகங்களைத் தேடி அலைகிருர்கள். அத்தகைய உத்தியோகங்கள் பெறுவது, தங்கள் வகுப்பிலுள்ள மற்றவர்களிடையே தங்களுக்கு இன்னும் ஒரு உயர்ந்த அந்தஸ்தை அளிக்கும் என்று அவர்கள் நினைக்கிருர்கள். நமது பள்ளிக்கூடங்களில் கொல்லர்கள், கருமான்கள், தச்சர்கள், தையற்காரர்கள், செருப்பு தைப்பவர்கள் போன்ற பல்வேறு தொழில் சாதிகளைச் சேர்ந்த பிள்ளைகள் இருக்கிருர்கள். ஆனல், அவர்கள் கல்வி கற்ற பிறகு, தம்முடைய பரம்பரையான தொழில் திறமையை உயர்த்திக்கொண்டு, அதை மேலும் அபிவிருத்தி செய்வதற்கு பதிலாக அதை ஏதோ மட்டமானவை என்று கைவிட்டு விடுகிருர்கள்; ஒரு குமாஸ்தா வேலை

பெறுவதே கௌரவமானது என்றும் நினைக்கிறார்கள். அவர்களுடைய பெற்றோர்களும் இதே மாதிரி தவறாகத்தான் நினைக்கிறார்கள். இவ்வாறாக சாதி, கர்மா என்ற இரு கண்ணோட்டங்களுடனும் பார்த்தால் கூட, அடிமைத்தனத்தில் நாம் இன்னும் ஆழ்ந்து சிக்கிக் கொள்ளுகிறோம். இந்த நாட்டைச் சுற்றி நான் செய்த பிரயாணங்களில், இந்த நிலைமை எங்குமே இருப்பது கண்டு பல சமயங்களில் கண்ணீர் வடித்திருக்கிறேன்.

கல்வி என்பது ஒரு கருவியே தவிர, அதுவே ஒரு குறிக்கோள் அல்ல. நல்ல ஒழுக்கத்தை வளர்ப்பதற்கு உதவி செய்யும் கல்வி முறையைத் தான் உண்மையான கல்வி என்று சொல்ல முடியும். இப்போது நமது பள்ளிக்கூடங்களில் நிலவும் கல்வி முறையினால் இந்த பலன் ஏற்படுகிறது என்று யாரும் உண்மையில் கூறமுடியாது. அதற்கு மாறாக, இளம் வயதினர் தங்களுடைய ஒழுக்கத்தின் நல்ல அம்சங்களைப் பள்ளிக்கூடங்களில் இழந்திருக்கிறார்கள் என்பதற்கு பல உதாரணங்கள் இருக்கின்றன. பள்ளிக்கூடங்களுக்கும், மாணவர்களின் இல்லங்களுக்குமிடையே இணக்கம் இல்லாதவரையில், மாணவர்கள் இரு வழிகளிலும் கஷ்டப்படுவார்கள் என்று பக்ஷபாதமற்ற ஆங்கில எழுத்தாளர் ஒருவர் ஒரு சமயம் கூறினார். அவர்கள் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்ளுவதும் வீட்டில் கற்றுக் கொள்ளுவதும் ஒன்றுக் கொன்று முரணானவையாக இருக்கின்றன. பள்ளிக்கூட வாழ்க்கை என்பது, வீட்டிலுள்ள வாழ்க்கைக்கு நேர்மாறானதாக இருப்பதால், பாட புத்தகங்களின் மூலம் போதிக்கப்படும் கல்வி, உபதேசம் செய்வதற்குமட்டும் தகுதி பெற்று, நடைமுறையில் செய்துகாட்ட முடியாதவர்கள் அளிப்பது போன்று போலியானதாக இருக்கிறது. இப்படிப் பெறும் அறிவை, நம்முடைய வீட்டு வாழ்க்கையில் பலன் தரத்தக்க விதத்தில் பயன்படுத்திக் கொள்ள முடியாது. பள்ளிக்கூடத்தில் என்ன சொல்லிக் கொடுக்கப்படுகிறது என்பது பெற்றோர்களுக்குத் தெரியாது; அதைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதும் இல்லை. இறுதிப் பரீட்சைக்காக அவர்கள் அலுப்பூட்டும் விதத்தில் தங்கள் பாடங்களைப் படிக்க வேண்டியிருக்கிறது. இந்தப் பரீட்சை முடிந்தவுடன் அவர்கள் படித்ததையெல்லாம் சீக்கிரத்தில் மறந்தும்விடுகிறார்கள். மேல் நாட்டு முறைகளை நாம் அப்படியே காப்பி அடிக்கிறோம் என்று சில ஆங்கில விமர்சகர்கள் நம்மீது கூறும் குற்றச்சாட்டில் உண்மை இல்லாமலில்லை. அவர்களில் ஒருவர் நம்மை மை ஒத்தும் காகிதத்திற்கு ஒப்பிட்டிருக்கிறார். அதிகப்படியான மையை அந்தக் காகிதம் உறிஞ்சிக் கொள்வதைப் போல், நாமும் தேவையற்றவைகளையே எடுத்துக் கொள்ளுகிறோம். அதாவது, மேற்கத்திய நாகரிகத்திலுள்ள கெட்ட அம்சத்தையே நாம் எடுத்துக் கொள்ளுகிறோம். ஒரு அளவுக்கு இது நம்முடைய போக்கையும், நடத்தையையும் சரியாகவே எடுத்துக் காட்டுகிறது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்,

இந்த மாதிரி நிலைமைக்கு என்ன காரணம் என்று நான் யோசித்துப் பார்த்திருக்கிறேன். ஆங்கிலத்தின் மூலம் நாம் கல்வி பெறுவதுதான் முக்கிய குறைபாடு என்று எனக்குத் தோன்றுகிறது. மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ச்சி பெற சுமார் 12 வருடங்கள் ஆகின்றன. ஆனால், இவ்வளவு காலத்தில் பெறும் பொது அறிவு எவ்வளவு குறைவானதாயிருக்கிறது என்பதைப் பார்க்க பரிதாபமாக இருக்கிறது. மேலும், நம்முடைய இந்த அறிவை நாம் செய்ய வேண்டியிருக்கும் வேலைக்கேற்றவாறு நாம் இணக்கமாக்கிக் கொள்வது நல்லது. அதாவது, நாம் கற்ற அறிவை செயலில் காட்டுவதில்லை. அதற்குப் பதிலாக, ஆங்கில மொழியில் புலமை பெறுவதிலேயே நமது முயற்சிகளில் பெரும் பகுதி செலவிடப்படுகிறது. மெட்ரிகுலேஷன் வகுப்பு வரை மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்படும் பாடங்கள் அவர்களுடைய தாய் மொழியிலேயே சொல்லிக் கொடுக்கப்பட்டால், குறைந்த பட்சம் ஐந்து வருடங்களாவது மிச்சப்படும் என்று, இந்த விஷயத்தைப் பற்றிப் பேசத் தகுதியுள்ள அறிஞர்கள் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்கள். இந்தக் கணக்குப்படி பார்த்தால், பத்தாயிரம் பிள்ளைகள் மெட்ரிகுலேஷன் பரீட்சை தேர்ச்சி பெறுவதற்குள் மக்களுக்கு ஐம்பதாயிரம் வருடங்கள் நஷ்டமேற்படுகின்றன! இது உண்மையிலேயே நம் எல்லோருக்கும் மிகுந்த கவலையை அளிக்க வேண்டிய ஒரு நிலைமையாகும். அத்துடன் மட்டுமில்லை. இதனால் நமது மொழிகளும் கூட தம் வளத்தை இழக்கச் செய்துவிடுகிறோம். "குஜராத்தி வளமில்லாத ஒரு மொழி" என்று பலர் அடிக்கடி சொல்லிக் கேட்டிருக்கிறேன். இதைக் கேட்கும்போது எனக்கு கோபம் வருகிறது. சமஸ்கிருதத்தின் அருமைக் குமாரத்திகளில் ஒன்றான குஜராத்தியை வளர்க்க வேண்டிய பொறுப்புள்ள நம்மிடம்தான் குற்றம் இருக்கிறதேயொழிய, மொழியில் இல்லை. அதை நாம் புறக்கணித்து விட்டோம், அலட்சியப்படுத்தி விட்டோம். அது தனக்குரிய பலத்தையும், சக்தியையும் எப்படிப் பெற முடியும்? இப்போதுள்ள கல்விமுறை, நமக்கும் நம்முடைய குடும்பங்களுக்குமிடையே ஒரு பிளவைத் தோற்றுவித்திருக்கிறது. நம்முடைய பெற்றோர்கள், மற்ற உறவினர்கள், நம்முடைய குடும்பத்திலுள்ள பெண்கள், வீடுகளில் வேலை செய்பவர்கள் ஆகியவர்களுடன் தான் நம் நேரத்தில் பெரும் பகுதியை நாம் செலவிடுகிறோம். ஆனால், நம்முடைய பள்ளிக்கூடக் கல்வி அவர்களுக்கெல்லாம் புதையுண்ட தனத்தைப் போல் ஆகிவிட்டது. அதனால் அவர்களுக்கு எந்த விதமான பிரயோஜனமுமில்லை. பிரத்தியட்ச தேவைகளுக்கு சம்பந்தமேயில்லாத நிலைமை இருந்தால், மக்கள் ஒருக்காலும் முன்னேற முடியாது என்பதை இதிலிருந்து நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். நாம் வெறும் மை ஒத்தும் காகிதத் துண்டுகளாக இருந்திருக்கவில்லையென்றால், ஐம்பது வருடக் கல்விக்குப் பிறகு நமது பாமர மக்களிடையே ஒரு புதிய உணர்ச்சி எழுந்திருப்பதை நாம் பார்த்திருக்க வேண்டும். ஆனால், அவர்களுடன் நமக்கு எந்தத் தொடர்பும் இல்லை.

அவர்களும் நம்மிடமிருந்து ஒதுங்கி நிற்கிறார்கள். ஏனெனில், நாம் முன்னேற்றமடைந்தவர்கள், நாகரிகமடைந்தவர்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள்; அவர்களை நாம் நாகரிகமற்றவர்களாக எண்ணுவதாகவும் அவர்கள் நினைக்கிறார்கள்.

நம்முடைய கல்லூரிக் கல்வி விஷயமும் இப்படித்தான். நாம் கல்லூரியில் படிக்கும் காலத்தில், அறிவின் அஸ்திவாரத்தை மேற்கொண்டு உறுதிப்படுத்தி பலப்படுத்துவதாகக் கருதப்படுகிறது. ஆனால், உண்மை வேறு விதமாக இருக்கிறது. ஏனெனில், நம்முடைய மொழியையே நாம் மறக்க ஆரம்பித்துவிடுகிறோம். பலருக்கு தமது சொந்த தாய் மொழியில் ஒரு வெறுப்பு உணர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. இலக்கணப் பிழைகள் நிறைந்த கீழ்த்தரமான ஆங்கிலத்தில் நமது அலுவல்களை நடத்த ஆரம்பித்துவிடுகிறோம். பல்வேறு கலைகளுக்கு நாம் இன்னும் சரியான வார்த்தைகளைக் கண்டு பிடிக்கவில்லை; ஆங்கிலப் பதங்களும் நமக்கு சரியாகப் புரிவதில்லை. நமது கல்லூரிப் படிப்பு முடியும்போது நமது அறிவின் சக்தி மழுங்கிவிடுகிறது; நமது உடல்களும் பலவீனமடைந்துவிடுகின்றன. நோய்வாய்ப்பட்ட நாம், நமது வாழ்நாள் பூராவும் ஊக்கமளிக்கும் மருந்துகளுக்கு அடிமைகளாகி விடுகிறோம். இப்படியிருந்தும் கூட, நாம்தான் அவர்களுடைய தலைவர்கள் என்றும், ரக்ஷகர்கள் என்றும், அவர்களுடைய எதிர்காலத்தை உருவாக்கப் போகிறவர்கள் என்றும் மக்கள் நினைக்கிறார்கள்; நாமும் கூட அப்படியே நினைக்கிறோம். பல்வேறு கல்லூரிகளில் தேர்ச்சி பெற்று வெளிவரும் குஜராத் இளைஞர்கள் உண்மையாகவே தாங்கள் மக்களின் ரக்ஷகர்களாகப் போவதாக நினைத்தால், அவர்களின் துணிச்சலை என்னவென்று சொல்லுவது?

நம்முடைய கல்வியைப் பற்றி நான் இவ்வளவு மோசமாகச் சித்திரித்தாலும், இதிலேயே நம்பிக்கைக்கான விதைகளும் இருக்கின்றன. ஒரு இந்தியனும் ஆங்கிலம் கற்றுக் கொள்ளக் கூடாது என்று நான் சொல்லவில்லை. ருஷ்யாவில் அவர்கள் செய்திருப்பதையும், தென்னாப்பிரிக்காவிலும், ஜப்பானிலும் அவர்கள் செய்து கொண்டிருப்பதையும் நாமும் செய்வோமாக. பின்னர் சொன்ன நாட்டில் குறிப்பிட்ட ஒரு சிலர் பொறுக்கி எடுக்கப்பட்டு, ஆங்கிலத்தில் உயர்தரக் கல்வி பெறுகிறார்கள். அந்த மொழியில் உள்ள தகுதியுள்ள நல்ல நூல்களை யெல்லாம் தமது தாய் மொழியில் எளிய நடையில் மொழி பெயர்க்கிறார்கள். இதனால் மக்கள் தாமே ஆங்கிலம் கற்றுக் கொள்ளும் உபயோகமற்ற சிரமத்தினின்றும் அவர்களைக் காப்பாற்றுகின்றார்கள் நம்மில் பலருக்கு ஆங்கிலம் தெரியும். அவர்கள் மேற்கொண்டு அந்த அறிவைப் பெருக்கிக் கொள்ளலாம். நல்ல தேகாரோக்கியமும், மூளைச் சுறு சுறுப்பும் உள்ளவர்கள் ஆங்கிலத்திலிருந்தும், மற்ற அந்நிய மொழிகளிலிருந்தும் நமது பாமர மக்களுக்கு நன்மையளிக்கக் கூடிய கருத்துகளை குஜராத்தியில் மொழி பெயர்க்க

முன்வரலாம். நாம் நீடித்து முயற்சி செய்தால், கல்வியின் இப்போதைய போக்கை மாற்றி புதிய கலைகள், புதிய கருத்துகள் ஆகியவற்றை குஜராத்தியின் மூலமே போதிக்கலாம். வைத்தியம், கப்பலோட்டுதல், மின்சாரம் போன்றவைகளைப்பற்றிய அறிவை குஜராத்தியின் மூலம் போதிப்பது அசாத்தியமல்ல. ஆங்கில அறிவு பெற்ற பிறகுதான் ஒருவர் உடற்கூறு பற்றிய அறிவைப் பெற முடியுமென்றோ, அறுவை சிகிச்சை செய்ய முடியுமென்றோ நினைப்பது அர்த்தமற்றதாகும்.

இந்தியாவின் ஜனத்தொகையில் சுமார் 85 சத விகிதத்தினர் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். பத்து சத விகிதத்தினர் மற்றும் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். அவர்களில் பெரும்பாலோர் நெசவாளர்கள். மீதமுள்ள ஐந்து சத விகிதத்தினர் படித்தவர்கள், அரசியல்வாதிகள், வக்கீல்கள், வைத்தியர்கள் முதலியோர். இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் உண்மையிலேயே மக்களுக்குச் சேவை செய்ய விரும்பினால், ஜனத்தொகையில் 95 சத விகிதத்தினர் செய்யும் தொழில்களைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்துகொள்ள வேண்டும். தங்களுடைய பரம்பரைத் தொழில்களை நன்கு தெரிந்துகொள்ள வேண்டியதும் அந்த 95 சத விகிதத்தினரின் கடமையாகும். இந்தக் கருத்து சரியானதென்றால், குழந்தைப் பருவம் முதற்கொண்டே விவசாயம், நெசவு ஆகிய இரண்டிலும் மாணவர்களுக்குப் பயிற்சியளிக்க நமது பள்ளிக்கூடங்களில் ஏற்பாடு செய்ய வேண்டும். விவசாயம், நெசவு ஆகிய இரண்டையும் கற்றுக்கொடுப்பதற்கு வேண்டிய சரியான சூழ்நிலையை உண்டாக்குவதற்காக, நமது பள்ளிக்கூடங்கள் யாவும் ஜன நெருக்கம் மிகுந்த நகர்ப் பகுதிகளிலிருந்து வெகுதூரத்தில் இருக்க வேண்டும். பெரிய வயல்கள் இருப்பதும், திறந்த வெளிகளில் வகுப்புகளை நடத்துவதற்கு ஏற்றதுமான இடங்களில் பள்ளிக்கூடங்கள் இருக்க வேண்டும். அத்தகைய பள்ளிக்கூடங்களில் சிறுவர்களுக்கு விளையாட்டு என்பது, வயல்களை உழுவதாயிருக்க வேண்டும். நமது சிறுவர்களுக்கும், இளைஞர்களுக்கும் கால்பந்து, கிரிக்கெட் போன்ற ஆட்டங்கள் இல்லாவிட்டால், அவர்களுடைய வாழ்க்கை சுவையற்றதாயிருக்கும் என்ற எண்ணம் முற்றிலும் தவறானதாகும். நமது விவசாயிகளின் பிள்ளைகள் கிரிக்கெட்டா ஆடுகிறார்கள்? அவர்களுடைய வாழ்க்கையில் மகிழ்ச்சிக்கோ, மாசற்ற ஆர்வத்திற்கோ என்ன குறை இருக்கிறது?

ஆகவே, கல்வியின் இப்போதைய போக்கை மாற்றுவது கஷ்டமானதல்ல. இந்த ரீதியில் பொதுஜன அபிப்பிராயம் உருவாக்கப்பட்டு, வற்புறுத்தப்பட வேண்டும் என்பதுதான் முக்கியம். அப்போது, தங்களுடைய இப்போதைய கொள்கையை சர்க்கார் மாற்றத்தான் வேண்டியிருக்கும். மேலும், மேற்கண்ட திட்டத்தில் நம்பிக்கையுள்ளவர்கள், பொது ஜன அபிப்பிராயம் அதை ஏற்றுக்கொள்ளத் தயாராகும் வரையில், அந்த ரீதியில்

சோதனைகள் செய்ய முன்வர வேண்டும். இத்துறையில் செய்யப்படும் முயற்சிகள் பலனளித்திருக்கின்றன என்பதை மக்கள் கண்டுகொண்டால், அவர்களும் அதே மாதிரி செய்ய விரும்புவார்கள். இந்தச் சோதனைகளுக்கு முதலில் அதிகமாகச் செலவு செய்ய வேண்டியிருக்குமென்று நான் நினைக்கவில்லை. அது எப்படியிருந்தாலும், செலவு அவ்வளவு முக்கியமான விஷயமல்ல. உண்மையான கல்வி என்பது என்ன என்று வாசகர்கள் கண்டு கொள்ள வேண்டுமென்பதே இந்த விஷயத்தைப் பற்றி நான் எழுதுவதற்கு காரணமாகும். இந்த ஆராய்ச்சிக்கு உதவியாயிருந்தால், என் நோக்கம் நிறைவேறியதாகிவிடும்.

(—1916 அக்டோபர் 'ஸமலோசக்' பத்திரிகையில் குஜராத்தியில் வெளியான காந்திஜியின் கட்டுரை.)

# 2

# சுதந்திரப் போராட்டத்திற்கு அழைப்பு

[28—9—1920-இல் ஆமதாபாத் மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி குஜராத்தியில் செய்த பிரசங்கத்தின் முக்கியமான பகுதியைக் கீழே காணலாம்:]

பஞ்சாபிலுள்ள மாணவர்கள் எவ்வளவோ அவமானங்களுக்கு உட்படுத்தப்பட்டார்கள். அவர்கள் ஒவ்வொரு நாளும் 16 முதல் 18 மைல்கள் வரையில் நடக்கும்படி செய்யப்பட்டார்கள். சிலர் கசையால் அடிக்கப்பட்டார்கள். அத்துடன் மட்டுமில்லை; ஒவ்வொரு நாளும், பிரிட்டிஷ் கொடிக்கு வணக்கம் செலுத்துவதற்காக ஒரு குறிப்பிட்ட இடத்தில் வரும்படியும் உத்திரவிடப்பட்டார்கள். இந்த விதத்தில் பிரிட்டிஷ் கொடிக்கோ அல்லது கடவுளுக்கே கூடவோ வணக்கம் செலுத்த வேண்டுமென்று அவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்டால், இப்படி நிர்ப்பந்திக்கப்பட்டவர்களும், கடவுளும் என்ன நினைத்திருப்பார்கள் என்பதை முடிவு செய்யும் பொறுப்பை உங்களிடமே விட்டுவிடுகிறேன். மேலும் சிலர் கல்லூரிகளிலிருந்தும் வெளியேற்றப்பட்டார்கள். தங்களுடைய நிலைமையைப் பற்றி இந்த மாணவர்களில் சிலர் எனக்கு எழுதினார்கள். தாங்கள் இப்போது முற்றிலும் திக்கற்றவர்களாக இருப்பதாகவும், தங்களுடைய எதிர்காலமும் நம்பிக்கையற்றதாக இருப்பதாவும் அவர்கள் நினைக்கிறார்கள். பஞ்சாப் சம்பவங்களிலிருந்து மாணவர்கள் தெரிந்து கொள்ளக் கூடியது ஏதாவது இருக்கிறதென்றால், அது இது தான்: கல்லூரிகளின் மீதுள்ள மோகத்தை அவர்கள் விட்டொழிக்க வேண்டும்; தாங்கள் கல்லூரிகளுக்குப் போகாவிட்டால், தங்களுடைய ஜீவனத்திற்கான வாய்ப்பை இழந்துவிடுவோம் என்ற எண்ணத்தையும் அவர்கள் மனத்திலிருந்து விரட்ட

வேண்டும். நான் லாகூருக்குப் போனபோது, மாணவர்களின் முகங்களில் நான் கண்ட மகிழ்ச்சிக் குறியிலிருந்து, இந்தக் கல்லூரி மோகம் பெரும் அளவு குறைந்துவிட்டது என்பதை அறிந்தேன். நான் நம்பிக்கை இழந்து, 'நீங்கள் கல்லூரிகளிலிருந்து வெளியேற்றப்பட்டுவிட்டதால், உங்களுடைய எதிர் காலம் உண்மையாகவே நாசமாகிவிட்டது' என்று அவர்களுக்கு தவருன வழியைக் காட்டியிருந்தால், அவர்களுடைய மோகத்தை அது இன்னும் அதிகப்படுத்தித்தானிருக்கும். மாணவர்கள் சர்க்கார் கல்லூரிகளுக்கே போகாதிருந்தால், சர்க்கார் என்ன செய்திருக்க முடியும்? சர்க்கார் அவர்களுக்கு ஒரு தீங்கும் செய்திருக்க முடியாது; பிரிட்டிஷ் கொடிக்கு வணக்கம் செலுத்தும்படி அவர்களை நிர்ப்பந்தம் செய்திருக்க முடியாது. பிரிட்டிஷ் கொடிக்கு வணக்கம் செலுத்தாவிட்டால், தங்களுடைய உயிர் போய்விடும் என்பதுதானே மாணவர்களிடமிருந்த மிகப் பெரிய பயம்? இந்த மாணவர்கள் சுதந்திரமான தங்களுடைய சொந்தக் கல்லூரிகளில் படித்துக்கொண்டிருந்தால். அவர்களுக்கு யாரும் எந்தக் கெடுதலும் செய்திருக்க முடியாது. ஆனுல், அவர்கள் சர்க்கார் கல்லூரிகளில் படித்துக் கொண்டிருந்தார்கள் என்பதற்காக, சர்க்கார் தங்கள் விருப்பத்தை அவர்கள் மீது சுமத்தி, அவர்களுடைய சுயமரியாதையை அழிக்க முடிந்தது. நம்முடைய சுதந்திரப் போராட்டம் பெரும் அளவுக்கு மாணவர்களின் தன்மையையே பொறுத்திருக்கிறது. அவர்களுடைய பலம், அந்தப் போராட்டத்தில் நாம் வெற்றி பெறுவதற்கு உதவி செய்யும். ஆனுல், அவர்களுடைய பலவீனம் அந்த வெற்றியை அநேகமாகக் காலவரையறையின்றி தள்ளிப் போட்டுவிடும். சட்ட சபைகளின் பகிஷ்காரத்தை நான் அதிகம் வற்புறுத்தியிருக்கிறேன் என்பது உண்மைதான். எல்லா மனிதர்களும் தலைவர்களிடம் தெய்வம்போன்ற மதிப்பு வைத்திருப்பவர்கள். ஆகையால், சட்டசபைகளுக்குப் போகத் தகுதி உள்ள தலைவர்கள் அங்கு போகவில்லையென்ருல், மக்களிடையே அது மகத்தான உணர்ச்சியை உண்டுபண்ணிவிடும். இதை இப்போதே செய்ய முடியுமாகையால், உடனடியாகவே செய்துவிட வேண்டும். சர்க்காரால் நடத்தப்படும் எல்லாப் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் நீங்கள் காலி செய்துவிட்டால், ஒரு மாதத்திற்குள் இந்தியாவின் தன்மையே மாறியிருப்பதைக் காண்பீர்கள் என்று நான் நிச்சயமாகச் சொல்லுவேன். ஒவ்வொரு பள்ளிக்கூடப் பையனும் நாளைக்கு திடீரென்று அங்கிருந்து வெளியே வந்துவிட்டால், சர்க்காரையும், மக்களையும் அது திகைக்க வைத்துவிடும்; வேறு எதுவும் அந்தப் பலனை அளிக்க முடியாது. வக்கீல்கள் கோர்ட்டுகளை பகிஷ்காரம் செய்வதைவிடக் கூட அது பெரிய விஷயமாக இருக்கும். மாணவர்கள் பள்ளிக்கூடங்களை விட்டால், டான்ஸா ஏரியில்-ஏன் அவ்வளவு தூரம் போக வேண்டும்; தூதேசுவர் நீர்த் தேக்கம் என்று வைத்துக்கொள்ளுவோம்-ஜலம் வறண்டுவிட்டதென்பதை சர்க்கார் உடனே உணருவார்கள். இந்தியா சுதந்திரம் பெறுவது, பெரும்பாலும் மாணவர்களையே பொறுத்திருக்கிறது. ஏனே

னில், மாணவர்கள் இளைஞர்கள்; வக்கீல்கள் சாதாரணமாக வயதானவர்கள். அவர்கள் தங்களுடைய தொழில்களில் கட்டுண்டு கிடப்பவர்கள். ஆனால், மாணவர்களுக்கு அம்மாதிரி பொறுப்புகள் கிடையாது. வக்கீல்கள் தங்கள் தொழிலின் மூலம் தங்கள் ஜீவனோபாயத்தைப் பார்த்துக்கொள்ள வேண்டும்; ஆகையால், சுயநலம் காரணமாக அவர்கள் தம் தொழிலில் இருக்க வேண்டியிருக்கிறது. அதைக் கைவிடும்படி அவர்களைத் திருப்புவது சற்று கஷ்டமாயிருக்கும். ஆனால், மாணவர்களுக்குத் தமது பள்ளிகளில் அம்மாதிரியான அக்கறை ஏதுமில்லை. ஆகையால், சர்க்கார் ஸ்தாபனங்கள் மீதுள்ள மோகத்தை மட்டும் அவர்கள் விட்டுவிட்டால், பள்ளிக்கூடங்களிலிருந்து வெளியே வருவது அவர்களுக்கு இன்னும் அதிக சுலபமானதாகி விடும்.

பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் மாணவர்கள் ஏன் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று கேட்கலாம். மத விஷயங்களில் ஆழ்ந்த அறிவுள்ளவரும், நல்ல பொதுஜன சேவை செய்துள்ளவருமான பண்டித மதன் மோகன் மாளவியா, நம்முடைய சிறந்த சிந்தனையாளர்களில் ஒருவரான ஸ்ரீ சாஸ்திரிஜி முதலியவர்களும், லாலா லஜபதிராய் போன்ற தலைவர்களும்கூட, இந்த இயக்கம் வேண்டாமென்று சொல்லுகிறார்கள். பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளிலிருந்து மாணவர்கள் வெளியே வந்துவிட வேண்டும் என்ற யோசனை அபாயம் நிறைந்ததாகும் என்று அவர்கள் எச்சரித்திருக்கிறார்கள். அவர்களுடைய கருத்துகளை கவனிக்க வேண்டியதில்லை என்று நான் சொல்லமாட்டேன். மிகுந்த தேசபக்தர்களான இந்தத் தலைவர்கள் தெரிவிக்கும் கருத்துகளுக்கு முழு மதிப்புக் கொடுக்க வேண்டும்; அதன் பிறகும், நான் சொல்லுவது சரியென்று தோன்றினால்தான் பள்ளிகளிலிருந்தும், கல்லூரிகளிலிருந்தும் வெளியே வரவேண்டும்.

நாம் பெறும் கல்வி திடீரென்று எப்படிக் கெடுதலானதாகி விட்டதென்று கேட்கலாம். சர்க்கார் எவ்வளவு மோசமானதாயிருந்தாலும் கூட, பள்ளிகளும், கல்லூரிகளும் நன்கு நிர்வகிக்கப்பட்டால், ஆசிரியர்களும் பேராசிரியர்களும் நல்லவர்களாயிருந்தால், எதற்காக வெளியே வரவேண்டும்? உங்கள் ஒவ்வொருவர் மனத்திலும் இந்தக் கேள்வி எழக்கூடும்.

சர்க்கார் கொள்கைகளை எப்படியோ பொறுத்துக் கொள்ளலாம். பஞ்சாப், கிலாபத் சம்பவங்கள் வரையில், நமக்கு நிச்சயமாக நியாயம் கிடைக்கும் என்றுதான் நான் நம்பிக் கொண்டிருந்தேன். 'பிரதம மந்திரி லாயிட் ஜார்ஜ் கொடுத்த வாக்குறுதிப்படியாவது உங்களுக்குக் கிடைக்கும்' என்று முஸ்லிம்களிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். ஆனால். நியாயத்திற்கு பதிலாக மிருகத்தனமான உதைதான் நமக்குக் கிடைத்தது; மக்களுக்கு இழைக்கப்பட்ட பெரிய அநீதியை மூடி மறைப்பதற்கு, மிகவும் மோசமான சூழ்ச்சிகளும் நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்

பட்டன. கிலாபத் விஷயத்தில் அவர்கள் சொன்ன சொல்லை மீறியதை ஒரு குழந்தை கூடப் புரிந்து கொள்ள முடியும்.

பஞ்சாபில் இவ்வளவு மோசமான அடக்கு முறைகளுக்கு உள்ளாக்கப்பட்டவர்கள் படித்த வகுப்பினரேயொழிய, பாமர மக்கள் அல்ல.

சர்க்கார் நம்முடைய கௌரவத்தைப் பறித்துவிட்டார்கள். ஒரு கொள்ளைக்காரன் நம் வீட்டுக்குள் புகுந்து நமது செல்வத்தையெல்லாம் அடித்துக் கொண்டுபோய் விடுகிறான். பிறகு நம்மிடம் வந்து, "உங்களிடமிருந்து எடுத்துச் சென்ற செல்வத்தைக் கொண்டு ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தியிருக்கிறேன். அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து கல்வி பெறுங்கள்" என்று அவன் சொன்னால், நாம் என்ன பதிலளிப்போம். என்னுடைய செல்வத்தையும், இதர உடைமைகளையும் என்னிடமிருந்து பறித்துக்கொண்டு போய்விட்டால், அதை நான் பொறுத்துக் கொள்ள முடியும். ஏனெனில், மீண்டும் அவற்றை நான் சம்பாதித்துக் கொள்ள முடியும். ஆனால் என்னுடைய கண்ணியத்தையும், மனிதத் தன்மையையும் பறித்துக்கொண்டு போய்விட்டால், அவற்றை மீண்டும் நான் எப்படிப் பெற முடியும்? என்னுடைய மூக்கை அறுத்துவிட்டால், பின்னர் அதை நான் எப்படி முழுமையானதாக்க முடியும்? கத்தியவாட் கொள்ளைக் காரர்கள், சாலையில் செல்லும் பிரயாணிகளின் மூக்கை அறுத்துவிடுவது வழக்கம். அங்கு ஒரு டாக்டர் இருந்தார். அவர் மூக்கை சரிப்படுத்திவிடுவார். ஆனால், இந்த மோசமான சர்க்காரினால் அறுக்கப்பட்டுள்ள இந்தியாவின் மூக்கை முழுமையானதாக்கக் கூடிய வைத்தியர் ஒருவரும் இல்லை. நாமேதான் அதைச் செய்ய முடியும். மிகவும் நல்ல பாலாயிருந்தால் கூட, அதில் விஷம் கலந்து விட்டால், அந்தப் பாலை நாம் கொட்டிவிட வில்லையா? சிறந்த கல்வியின் விஷயமும் அப்படித்தான். இந்தச் சம்பவங்கள் எனக்கு அளித்துள்ள வேதனையைப் போல் மாளவியாஜிக்கும், சாஸ்திரிஜிக்கும் அளிக்கவில்லையோ என்று நினைக்கிறேன். இந்த விஷயங்களில் சர்க்காரின் கொள்கை பாலில் கலந்த விஷம் என்று அவர்களும் நினைத்தால், நான் சொல்லுவதை அவர்கள் ஒப்புக் கொள்ளுவார்கள். சர்க்கார் நமக்கு அளிக்கும் கல்வியில் உள்ள விஷத்தைக் கண்டுபிடிக்க இந்தப் பெரிய தலைவர்கள் தவறிவிட்டார்கள் என்பதை வருத்தத்துடன் கூறுகிறேன்.

இந்த நிலைமைக்கு நாம் சரியானபடி பதிலளிக்காமல், தாழ்ந்து பணிந்து போனால், என்றென்றைக்கும் நமது சுயமரியாதையை இழந்துவிடுவோம், நம்முடைய சுதந்திர உணர்ச்சியைக் காட்டுவதற்குத் தகுதியற்றவர்களாகவும் ஆகிவிடுவோம். நீங்கள் சுயமாகச் சிந்தித்து, காரியங்கள் செய்ய முடியாத குழந்தைகள் அல்ல. ஆகையால், உங்களுடைய முடிவை உங்கள் பெற்றோர்களிடமும், பெரியவர்களிடமும் மரியாதையான விதத்தில் தெரிவித்துவிட்டு, நாளையிலிருந்தே பள்ளிக்கூடங்களி

லிருந்தும், கல்லூரிகளிலிருந்தும் வெளியே வந்து விடுங்கள். ஆனால், பதினாறு வயதுக்கு மேற்பட்ட பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் சுதந்திரம் பெற உரிமை இருக்கிறது; அதே சமயத்தில் அதில் உள்ள நிபந்தனைகளையும் பூராவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த சர்க்காரின் ஆட்சியை இனிப் பொறுத்துக் கொண்டிருக்க முடியாதென்ற உள்ளக் குமுறல் உடையவர்கள்தான் பள்ளிக்கூடங்களை விட்டுவிட உரிமை பெற்றவர்கள். 'இதில் விஷம் கலந்திருக்கிறது, இதன் கீழ் வாழுவது வெட்கக்கேடானது' என்று நினைப்பவர்களுக்குத்தான் அந்த உரிமை உண்டு. நம்முடைய சொத்துகளை யெல்லாம் கொள்ளையடித்துக் கொண்டு போகும் ஒரு கொள்ளைக்காரனிடமிருந்து எப்படி நாம் தருமத்தை ஏற்றுக்கொள்ள முடியாதோ, அதே மாதிரி, இந்த அந்நிய சர்க்காரினால் அளிக்கப்படும் கல்வியைப் பெறவும் நாம் மறுக்க வேண்டும். நம்முடைய தாயார், தகப்பனார், ஆசிரியர், தலைவர்கள் ஆகியோரிடம் நமக்குள்ள மரியாதை இதில்தான் இருக்கிறது; அவர்களுக்கு நாம் கீழ்ப்படிவதும் இதில்தான் இருக்கிறது. அப்படித்தான் செய்ய வேண்டும் என்று யாருடைய உள்ளம் கூறுகிறதோ அவருக்குத்தான் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் பகிஷ்கரிக்கும் உரிமை உண்டு. நான் சொல்லுவது சரி, அதில் உண்மை இருக்கிறது என்று நீங்கள் நினைத்தால், நாளை முதலே பள்ளிக் கூடங்களையும், கல்லூரிகளையும் விட்டு விடுங்கள்.

"அப்படியானால், நாங்கள் எந்தப் பள்ளிக் கூடங்கள் அல்லது கல்லூரிகளுக்குப் போவது?" இவ்விதம் கேட்கும் மாணவர்களுக்கு நான் அளிக்கும் பதில் இதுதான்: அவர்களுக்கு இன்னும் சந்தேகம் தெளியவில்லை. ஆகையால், அவர்கள் பொறுத்திருந்து தமது பெற்றோர்களைக் கலந்தாலோசிக்க வேண்டும். ஒரு கொடிய விஷப் பாம்பு இருக்கும் அறையிலிருந்து வெளியேற வேண்டியதுதானா என்பதைப்பற்றி எனக்கு எப்படி சந்தேகம் இருக்க முடியும்? இந்த விஷயமாக காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை வாசித்துப் பாருங்கள். உங்களுக்குப் புதிய பள்ளிக்கூடங்களைத் தேடித் தருவதாக அதில் வாக்களிக்கப்படவில்லை. புதிய பள்ளிக்கூடங்கள் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும், இப்போது நீங்கள் படிக்கும் பள்ளிக்கூடங்களிலிருந்து வெளியேறுவது என்பதே உங்களுடைய முடிவாக இருக்க வேண்டும். இதுதான் கேள்வி: நமக்கு விஷமாகிவிட்ட இப்போதுள்ள பள்ளிக்கூடங்களை நீங்கள் பகிஷ்கரிக்கத் தயாராயிருக்கிறீர்களா? நீங்கள் பகிஷ்கரிக்கத்தான் வேண்டும் என்பதே என்னுடைய பதிலாகும்.

இதனால் நான் கல்வியை எதிர்க்கிறேன் என்றோ, அல்லது என்னுடைய கருத்துகளைப் பரப்புவதற்கு இதை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்ளுகிறேன் என்றோ யாரும் நினைக்க

வேண்டாம். கல்வியைப்பற்றிய என்னுடைய கருத்துகளை தேசீயப் பள்ளிகளின் மூலம் பரப்ப நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்; அந்த இயக்கத்தை இன்னும் தீவிரமாக்கி, துரிதப்படுத்த வேண்டுமென்று எப்போதாவது எனக்குத் தோன்றினால், அதற்குரிய வழியை நான் கண்டு பிடிப்பேன் என்பது நிச்சயம். ஆனால், ஒரு போர்வீரன் என்ற கண்ணோட்டத்துடனேயே பள்ளிகளையும், கல்லூரிகளையும் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று நான் கோருகிறேன். யுத்தம் ஏற்பட்டால், மாணவர்கள் தமது படிப்புகளை விட்டுவிடுகிறார்கள்; கோர்ட்டுகள் மூடப்பட்டுவிடுகின்றன; சிறைகளில் உள்ளவர்களும் விடுவிக்கப்பட்டுவிடுகிறார்கள். பல சமயங்களில் கைதிகள் கூட, தம் பழைய குணங்களை மறந்து, போராட்டத்தில் குதித்துவிடுகிறார்கள். அதே மாதிரி, நாம் போராட வேண்டிய காலம் வந்துவிட்டது. நம் மக்களிடம் ஆயுதங்கள் இருந்து, அவற்றை எப்படி உபயோகிப்பது என்றும் அவர்களுக்குத் தெரிந்திருந்தால், ஆயிரக்கணக்கான வாள்கள் உறையிலிருந்து உருவப்பட்டு, வீசப்படுவதைக் கண்டிருப்போம். ஆனால், இந்தியாவில் அப்படி இருக்க முடியாது. இப்போது இந்தப் பிரச்னையை மாமூலான உலக வழக்கத்தின் படியே மக்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன். நான் சொல்லுவது மிகவும் சாதாரணமானது. அதாவது, எந்த தருமத்தையும் நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. நம்மீது இவ்வளவு பெரிய அவமதிப்புகளைச் சுமத்தியுள்ள ஒரு சர்க்காரிடமிருந்து எந்த விதமான உதவியையும் நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. இதை நீங்கள் ஒப்புக் கொண்டால், வேறு பள்ளிக்கூடங்கள் இருக்கின்றனவா, இல்லையா என்ற கேள்விக்கே இடமிருக்க முடியாது. மாணவர்கள் தாம் இப்போது படிக்கும் பள்ளிக்கூடங்களிலிருந்து உடனடியாக வெளியேற வேண்டுமென்பது அவர்களுடைய கடமையாகிவிட்டதா, இல்லையா என்ற ஒரே கேள்வியின் மீது நீங்கள் முடிவு செய்ய வேண்டும். பள்ளிக்கூடங்களை விட்ட பிறகு மாணவர்கள் என்ன செய்வது? அவர்கள் வேலையற்றிருக்கும் இடைக் காலத்தில் என்ன செய்வார்கள்? இந்தக் கேள்வியையும், இம்மாதியான மற்றக் கேள்விகளையும் நீங்கள் கேட்கலாம், அப்போதும் கூட இந்தப் பிரச்னையின் முக்கிய நோக்கம் பாதிக்கப்படவில்லை. இதன் பலனாக ஏற்படக் கூடிய பல விளைவுகளையும் உங்கள் முன்பு நான் சமர்ப்பிக்கவில்லை. முக்கிய நோக்கத்தின் அடிப்படையில் நீங்கள் ஒரு முடிவு செய்தாக வேண்டும்; பின்னர் கொஞ்சமும் தயங்காமல் அதைச் செயலில் காட்ட வேண்டும். ஆனால் சந்தேகம் நீங்கிய பிறகு, தன்னுடைய பலவீனம் காரணமாக எந்த மாணவனும் பள்ளிக்கூடத்திலோ, கல்லூரியிலோ தொடர்ந்து படிக்க உரிமை இல்லை என்பதையும் எடுத்துக் காட்ட வேண்டியது என்னுடைய கடமையாகும். மக்கள் உறுதியின்றி இருப்பதற்கு இது சமயமல்ல.

## 2

[அதே இடத்தில், மறுநாள் முக்கியமாக ஆசிரியர்களுக்காக குஜராத்தி மொழியில் காந்திஜி செய்த பிரசங்கத்தின் சுருக்கமான விவரம் கீழே கொடுக்கப்பட்டுளது :

ஒரு காலத்தில் நானும் ஒரு ஆசிரியராக இருந்தேன். நான் இன்னமும் ஆசிரியர்தான் என்றுகூடச் சொல்லிக் கொள்ளலாம். கல்வித் துறையில் நான் சோதனைகள் நடத்திப் பார்த்திருப்பதால், அதில் எனக்கு அனுபவம் உண்டு. எந்த சமுதாயத்தில் ஆசிரியர்கள் தமது சுயமரியாதையை இழந்துவிட்டார்களோ, அந்த சமுதாயத்திலுள்ளவர்கள் ஒருபோதும் முன்னுக்கு வர முடியாதென்பதே இந்தச் சோதனைகளின் பலனாக எனக்கு ஏற்பட்டுள்ள நம்பிக்கையாகும்.

நமது ஆசிரியர்கள் நிச்சயமாகத் தம்முடைய சுயமரியாதையை இழந்துவிட்டார்கள். தாம் செய்ய விரும்பாத காரியங்களை, வேறு கதியில்லை என்ற காரணத்தினால், செய்யச் சம்மதிக்கிறார்கள். அவர்கள் அந்தக் காரியங்களைச் செய்யும்படி நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள் என்பதில்லை; ஆனால், அவர்களின் மனதுக்குள் அவர்களை யறியாமலே ஒரு நிர்ப்பந்த உணர்ச்சி வேலை செய்து கொண்டிருக்கிறது. தம்முடைய மேல் அதிகாரிகளின் பயமுறுத்தல்கள் அல்லது கண்டனங்களைப்பற்றி அவர்கள் பயப்படுகிறார்கள் ; தம்முடைய சம்பளம் குறைக்கப்பட்டுவிடுமோ, உத்தியோக உயர்வு நிறுத்தப்பட்டுவிடுமோ என்றெல்லாம் பயப்படுகிறார்கள். ஆசிரியர்கள் தம்முடைய உயிர், சொத்து, சம்பளங்கள் ஆகிய யாவற்றையுமே பணயம் வைத்து, உண்மையை அப்படியே, உள்ளது உள்ளபடியே மாணவர்களிடம் எடுத்துச் சொல்ல வேண்டிய ஒரு நிலைமை நமக்கு ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் அப்படிச் செய்ய முடியவில்லையென்றால் இந்தத் தொழிலையே அவர்கள் விட்டுவிட வேண்டும். இதை உங்களுக்குத் தெளிவாக்கி, இந்த உண்மையை நீங்கள் உணரும்படி செய்துவிட முடிந்தால், என்னுடைய நோக்கம் நிறைவேறியதாகிவிடும். சாஸ்திரிஜி போன்ற புகழ் பெற்ற ஆசிரியர்கள் எனக்கு விரோதமாக இருக்கிறார்கள். ஹிந்து சர்வகலாசாலை போன்ற மகத்தான ஒரு ஸ்தாபனத்தைத் தோற்றுவித்த பண்டித மாளவியாஜி, நான் மக்களைத் தவறான பாதையில் இட்டுச் செல்கிறேன் என்று நம்புகிறார். பல தேசீயவாதிகளும் இப்படியே சந்தேகப்படுகிறார்கள். இருந்தாலும் நான் சரியான பாதையில் செல்வதாகவே நான் நினைக்கிறேன்.

சமீபத்தில் பாக்தாதிலிருந்து திரும்பி வந்துள்ள ஒரு கனவான் தம்முடைய அனுபவத்தை என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார். அவற்றைக் கேட்டபோது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்தியாவில் வசிப்பது எனக்கு சகிக்க முடியாததாக இருக்கிறது என்று நான் சொல்லுகிறேன். இருபத்து

நான்கு மணி நேரமும் நான் ஒத்துழையாமையைப் பற்றியே நினைத்துக் கொண்டிராமலிருந்தால் – இந்த சிந்தனைதான் எனக்குத் தூக்கத்தில் ஆறுதல் அளிக்கிறது-நான் இங்கு வசிப்பதென்பது உண்மையாகவே அசாத்தியமானதாகிவிடும். பாக்தாதிலுள்ள எழுத்தறிவில்லாத அரபுகள் நம்மை விட எவ்வளவோ முன்னேற்றம் அடைந்தவர்கள் என்று நான் சொல்லுவேன். நான் மேலே குறிப்பிட்ட கனவான் சாதாரண மனிதரல்ல. பாக்தாதில் அவர் பெரிய சர்க்கார் உத்தியோகத்தில் இருந்தவர். அவர் பிரிட்டிஷ் சர்க்காரின் விரோதியல்ல. அங்கு அவர் தாம் பார்த்தவைகளைத் தான் கூறினார்.

''பிரிட்டிஷ் ஆட்சி அங்கு தொடர்ந்து நீடிக்குமா ?'' என்று கங்கா பென் அவரைக் கேட்டார்.

''அதென்ன இந்தியாவா ?'' என்று அவர் பதிலளித்தார். ''மெஸபடோமியாவில் ஒரு ஆங்கிலேயராவது இருக்கும்வரையில் அரபுகள் சும்மா இருக்கமாட்டார்கள். அரபுகளிடம் நவீன ஆயுதங்கள் இல்லை. அவர்களிடமுள்ள கொஞ்சநஞ்ச ஆயுதங்களால் ஒரு பிரயோசனமும் இல்லை. ஆனால், அவர்களிடம் ஒன்று இருக்கிறது. 'இது எங்களுடைய நாடு. இங்கே இருக்க வேண்டாம் என்று நாங்கள் நினைப்பவர்கள் ஒரு நிமிஷம் கூட இங்கே இருக்க முடியாது' என்று அவர்கள் சொல்லுகிறார்கள்."

அவர்களை அடக்குவதற்காக பிரிட்டிஷ் சர்க்கார் அங்கு அனுப்பிய சீக்கியப் போர்வீரர்களையெல்லாம் அவர்கள் தீர்த்துக் கட்டி விட்டார்கள். இந்தியர்களும் அப்படிச் செய்ய வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அதற்கு மாறாக, மக்கள் அந்தப் பாதையில் செல்லுவதை நான் தடுத்து நிறுத்துகிறேன். அரபுகளுக்கு சீக்கியர்களிடம் எந்த விரோதமும் கிடையாது. அப்படியானால் அவர்களுடைய நோக்கமென்ன? ஆங்கிலேயர்கள் அவர்களுக்குப் பெரிய பெரிய வாக்குறுதிகளைக் கொடுத்தார்கள்–நல்ல சாலைகள், ரயில் பாதைகள் போட்டுத் தருவதாகவும், கல்வி அளிப்பதாகவும், அவர்களுடைய சௌகரியத்திற்கும் சுகத்திற்கும் இன்னும் பற்பல வசதிகளைச் செய்து தருவதாகவும் வாக்களித்தார்கள். ஆனால், அரபுகளுக்கு ஒரு விஷயம் தெரியும். "எங்களை அடிமைப்படுத்துவதற்காக இங்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள் ; நீங்கள் வெளியேற வேண்டும்'' என்று பிரிட்டிஷாரிடம் அவர்கள் சொன்னார்கள். இப்போது மெஸபடோமியாவில் உள்ள முஸ்லிம்கள், இந்த நாட்டிலுள்ள முஸ்லிம்களைவிடக் கூட இன்னும் முன்னதாகவே ஆங்கிலேயர்களைத் தம் நாட்டிலிருந்து விரட்டிக் கொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம்.

பிரிட்டிஷாருடைய விமானங்களைக் கண்டு அவர்கள் பயப்படுவதில்லை. இன்னும் அதிக சக்தியும் நாசகாரத்தன்மையும் வாய்ந்தவைகளான மற்ற ஆயுதங்களைக் கண்டும் அவர்கள் பயப்படவில்லை. தம் உயிர்களைக் கையில் பிடித்துக் கொண்டே

பயமின்றி அவர்கள் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். எதிரியினிடம் இழப்பதற்கு அவர்களிடம் ஒன்றுமில்லை. தம்முடைய செல்வத்தையோ, உடைமைகளையோ காப்பாற்றிக் கொள்ளுவதற்காக அவர்கள் போராடவில்லை. அவர்களுடைய ஆடைகள் கூடத் தோலினால் செய்யப்பட்டவை. அவர்களுக்கு வீடுகள் கிடையாது. நாடோடிகளான அவர்கள் கூடாரங்களில் வசிக்கிறார்கள். தம்முடைய நாட்டைக் காப்பாற்றுவதென்று அவர்கள் உறுதி கொண்டிருக்கிறார்கள். மணல் நிறைந்த பாலைவனமாக இருந்தாலும், அதன் சுதந்திரத்தைக் காப்பாற்ற அவர்கள் உறுதி கொண்டிருக்கிறார்கள். மதிப்பிற்குரிய பல பெரியார்களால் புனிதம் அடைந்த புண்ணிய பூமியாகிய பாக்தாதுக்குள் தங்களுடைய அனுமதி இல்லாமல் யாரும் பிரவேசிப்பதை அவர்கள் அனுமதிக்க மாட்டார்கள். அவர்களுடைய சம்மதம் இல்லாமல், ஆங்கிலேயர்களோ, சீக்கியர்களோ, மற்றவர்களோ அங்கு வாழ முடியாது.

அரபுகள் நிச்சயமாக நம்மை விட உயர்ந்தவர்களே. ''இது எங்களுடைய நாடு. இதற்கெதிராக யாராவது தம் விரலை உயர்த்தினால், அந்த விரலைத் துண்டித்துவிடுவோம். எங்கள் மீது கெட்ட எண்ணம் கொண்டுள்ளவர்கள் யாரையும் இங்கு அனுமதிக்கமாட்டோம்" என்று சொல்லக் கூடிய துணிச்சலும், தேச பக்திக் கனலும் யாரிடம் இருக்கிறதோ, அவர்களே உண்மையில் மகிழ்ச்சியுடன் இருப்பவர்களாவர். நாம் நாகரிகமடைந்தவர்களென்றும், அரபுகள் நாகரிகமில்லாத காட்டுமிராண்டிகளென்றும் நாம் நினைத்தால், அவர்களுக்கு அநீதி இழைத்தவர்களாகிறோம். அடிமைத்தனத்தின்கீழ் நாம் வாழ்ந்துகொண்டிருந்தபோதிலும், இன்னமும் ஒரு அளவுக்கு சௌகரியங்களையும், சுகத்தையும் நாம் அனுபவிக்க முடிகிறது. தேக சுகங்களில் நாம் பற்றுதல் வைத்துக் கொண்டிருக்கும் வரையில், அரபுகளுக்கு நாம் தாழ்ந்தவர்கள்தான்.

இந்தப் புண்ணிய பூமியின் புனிதத் தன்மையை நாம் காப்பாற்ற வேண்டுமென்று வேதங்களிலும், உபநிஷத்துகளிலும் நமது முன்னோர்கள் பணித்திருக்கிறார்கள். மற்றவர்கள் விருந்தினர்களாகத்தான் இங்கு காலடி எடுத்து வைக்கலாம். தம்முடைய சுதந்திரத்தை இழந்தவர்கள், தம்முடைய தருமம் உள்பட, யாவற்றையுமே இழந்தவர்களாவர்.

முஸ்லிம் ஆட்சியைவிட பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் நம்முடைய மதக் கோட்பாடுகளை நாம் இன்னும் அதிக தாராளமாகப் பின்பற்ற முடியும் என்ற கருத்தை நான் ஒப்புக் கொள்ளவில்லை. முஸ்லிம் ஆட்சியாளர்கள் கொடுங்கோலர்களாயிருந்தார்கள், மக்களிடம் அவர்களுடைய மனப்பான்மை சர்வாதிகாரத் தன்மை வாய்ந்ததாயிருந்தது என்பதையெல்லாம் நான் அறிவேன். ஆனால், பிரிட்டிஷ் ஆட்சி முற்றிலும் மதத்திற்கு முரணானது, கடவுள் பற்றில்லாதது. நம்முடைய மதம் உயிர் வாழ்வதற்கே, அந்த ஆட்சி ஆபத்தை விளைவித்துவிட்டது.

நம்மைச் சுற்றியுள்ள நாடுகளில் பட்டாணியர்கள், இராணியர்கள், அரபுகள் ஆகியோரின் நிலைமை நம் நிலைமையை விட நன்ருயிருக்கிறது. நம்மைப்போல் அவர்கள் கல்வி எதுவும் பெறுவதில்லை; ஆயினும், அவர்கள் நம்மைவிட உயர்ந்தவர்களாக இருக்கிருர்கள்.

இந்த நிலைமையில்தான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இதனுடைய பயங்கரத்தை உங்களுக்கு நான் உணர்த்தியிருக்கிறேன். இவ்வளவு தூரம் நான் சொன்ன பிறகு, என் கட்சியை ஆசிரியர்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன். நாம் இப்போது பெறுவது போன்ற கல்வியைத் தியாகம் செய்யத் தயாராக இல்லாத வரையில், நம் நாட்டுக்கு நாம் சுதந்திரம் பெறுவதென்பது சாத்தியமில்லை.

இப்போதெல்லாம் பல மாணவர்கள் என்னைப் பார்க்க வருகிருர்கள். தங்களுடைய கஷ்டங்களைப்பற்றி என்னிடம் கலந்தாலோசிக்கிருர்கள். அவர்கள் கூறுவதை நான் ஒப்புக் கொள்ள முடியாவிட்டாலும், அவர்களிடம் நான் அனுதாபம் காட்டுகிறேன். இப்போது படிக்கும் பள்ளிக்கூடங்களை விட்டுவிட்டால், உடனடியாக வேறு தகுதியான பள்ளிக்கூடங்களுக்கு நாம் ஏற்பாடு செய்யமுடியுமா என்று அவர்கள் என்னைக் கேட்கிருர்கள். இப்போதைய முறையில் உள்ள ஒரு தவருன மோகத்தையே இது காட்டுகிறது. கல்வியின் மீது எனக்கு விரோதம் இருப்பதாக யாரும் குற்றம் சாட்ட முடியாது. சிந்திக்காமலோ அல்லது வாசிக்காமலோ என்ருல் ஒரு கணம் கூடச் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. ஆனுல், நம்மைச் சுற்றித் தீப்பற்றி எரிந்துகொண்டிருக்கும்போது, நாம் பைபிளையோ, டிக்கன்ஸையோ படித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியாது. இந்தியா இன்று தீப்பற்றி எரிகிறது. இப்போதுள்ள கல்வி முறையின் மீது நமக்குள்ள கவர்ச்சியை நாம் கைவிட வேண்டும்.

கிலாபத் பிரச்னை, பஞ்சாப் அட்டூழியங்கள் ஆகியவற்றில் ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்குப் பெரும் அநீதியை இழைத்துவிட்டார்கள் என்று உண்மையாக நீங்கள் நம்பினுல், அவர்கள் பூராவாக அதற்குப் பிராயச்சித்தம் செய்து, தம்முடைய உள்ளங்களைப் பரிசுத்தம் செய்து கொண்டாலொழிய, அவர்களிடம் நாம் எந்த தருமத்தையும் பெறுவது பெரிய பாவம் என்பதை நீங்கள் உணரவேண்டும். அவர்களிடமிருந்து நீங்கள் சம்பளங்கள் பெறுவதோ, மாணவர்கள் கல்வி பெறுவதோ சரியாகாது. கல்வி பெறுவதற்காக நாம் பேயினிடம் போவதில்லை. அசுத்தமானவர்களிடமிருந்து மிகச் சிறந்த கல்வி கிடைத்தால் கூட, அது அசுத்தமானதுதான். ஆனுல், ஆங்கிலேயர்கள் தம்முடைய அசுத்தத்தைக் கூட சுத்தம் போல் காட்டிக் கொள்ளப் பார்க்கிருர்கள்.

இன்று நம்மைப் பீடித்துள்ள பயம், அடிமை உணர்ச்சி, மற்றும் நம்மிடமுள்ள பல்வேறு மாயைகள் ஆகியவற்றிற்கெல்லாம் காரணம் ஆங்கிலக் கல்விதான். நாம் ஆங்கிலக் கல்வி பெற்றிரா

விட்டால், நமக்கு அரசியல் உணர்வு ஏற்பட்டிராதென்றும், இன்று நாம் ஆரம்பித்திருப்பதைப் போன்ற அரசியல் இயக்கம் எதையும் ஆரம்பித்திருக்க மாட்டோம் என்றும் கூறுவது முற்றி லும் தவறான தாகும்.

தம் நாட்டுக்காக உயிரைவிடும் உணர்ச்சி அரபுகளிடம் இருக் கிறது. அந்த உணர்ச்சி நம்மிடமில்லை. இந்த இழி நிலையிலிருந்து நாம் வெளியேறுதவரையில், இந்தியா சுதந்திரம் பெறுதென்று நான் நிச்சயமாகக் கூறுகிறேன்.

மக்களிடையே ஆர்வத்தையும், தைரியத்தையும் ஊட்ட வேண்டுமானால், உடனடியாகத் தமது வேலைகளை ராஜிநாமாச் செய்துவிட வேண்டுமென்று ஆசிரியர்கள், பேராசிரியர்கள் இரு வருக்கும் நான் கூறுகிறேன். தம் வேலையை ராஜிநாமாச் செய்யும் ஆசிரியர், தமது மாணவர்களுக்கு மிகப் பெரிய ஒரு பாடத்தை போதித்தவராவார்.

ஆசிரியர்கள் தைரியமாயிருந்தால், நியாயமும் வழங்காமல், தம்முடைய தவறுகளுக்கும் பிராயச்சித்தம் செய்ய மறுக்கும் ஒரு சர்க்காரிடமிருந்து தாம் சம்பளம் பெறுவது சரியல்ல என்பதை உணர்ந்தால், உடனே குஜராத் சுதந்திரம் பெற்றுவிடும். நாங்கள் பிச்சை வாங்க வேண்டியிருந்தால் கூட, உண்மையான தேசீயக் கல்வியைக் கொடுக்க வேண்டுமென்றுதான் வற்புறுத்துவோம் என ஆசிரியர்கள் பறைசாற்றினால், இந்த உன்னதமான காட்சி யைக் காண்பதற்காக சுவர்க்கத்திலுள்ள கடவுள்கள் வெளியே வந்து, ஆசிரியர்கள் தம்முடைய லட்சியத்தில் வெற்றி பெறுவ தற்காகப் பணமாரி பொழிவார்கள் என்பது நிச்சயம்.

## 3

(6—10—1920-இல் சூரத் மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி குஜராத் தியில் செய்த ஒரு பிரசங்கத்தின் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:)

சர்க்கார் நமக்கு என்ன கொடுத்திருக்கிறார்கள், நம்மிட மிருந்து என்ன எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஒரு கணக்குப் போட்டுப் பார்த்தேன்; வரவைவிடப் பற்று வழிதான் அதிகமாயிருக்கிறது என்பதைக் கண்டேன். அரசியல் சீர்திருத் தங்களில் கொடுப்பதைவிட எடுத்துக் கொள்ளுவதுதான் அதிக மாக இருக்கிறது. சர்க்காரின் சக்தி அவர்களிடமுள்ள பீரங்கி களில் இல்லை; அதில் நமக்குள்ள கவர்ச்சியில்தான் இருக்கிறது. நம்முடைய இந்த கவர்ச்சியை, 'மாய மிருகம்' என்று துவிஜேந்திர நாத தாகூர் வர்ணித்திருக்கிறார். ராமனை ஏமாறச் செய்த மாயப் பொன் மானையே அது குறிப்பிடுகிறது. அது மூன்றுவகைப்பட் டது: சட்டசபைகளிடம் மோகம், கோர்ட்டுகளில் மோகம். பட் டங்களில் உள்ள மோகத்தை இதில் நான் சேர்க்கவில்லை. ஏனெ னில், வெகு சிலருக்கே அது கிடைக்கிறது. ஆனால், நம்மில் பலர் மேற்கூறிய மூன்றிலும் சிக்கிக் கொண்டுவிடுகிறோம். அறிஞரும்,

வயது முதிர்ந்த நமது தலைவருமான லாலா லஜபதிராய் அதில் சிக்கிக் கொண்டிருக்கிறார். மாளவியாஜி மகராஜிடம் எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. நான் நிதானம் இழந்துவிட்டேன் என்றும், மக்களைத் தவறான வழியில் இட்டுச் செல்கிறேன் என்றும் அவர் நினைக்கிறார். நாம் சட்டசபைகளில் பங்கு கொள்ள வேண்டுமென்றும், பள்ளிக்கூடங்களுக்குப் போக வேண்டுமென்றும் அவர் நினைக்கிறார். ஆனால், இது தவறானது என்றே எனக்குத் தோன்றுகிறது.

இந்த உண்மையை வக்கீல்கள் ஒப்புக் கொள்ளும்படி நான் செய்ய முடியாவிட்டால், அதற்குக் காரணமிருக்கிறது. அவர்களுக்குப் பணத்தில் எவ்வளவு பற்றுதல் இருக்கிறதென்பது எனக்குத் தெரியும். தம் குழந்தைகளிடமுள்ள பாசத்தைக் கைவிடுவது அவர்களுக்கு மிகவும் கடினமானதாகும்; தம்முடைய சாய்வு நாற்காலிகளையும், மோட்டார் வண்டிகளையும் விட்டுவிட்டு, வறுமையை மேற்கொள்ளுவது அவர்களுக்குக் கஷ்டமாயிருக்கும். ஆனால், மாணவர்களுக்கு அந்த மதிரியான சங்கடம் ஒன்றுமில்லை. அவர்களை சுலபமாக நேர் பாதையில் செலுத்த முடியும். அடிமைத்தனத்திற்கு மட்டுமே தகுதியாக்கும் இப்போதைய கல்வியை அவர்கள் தொடர்ந்து பெற்றுக் கொண்டிருப்பதையும், ஏதாவது வேலை சம்பாதிப்பதற்காக அவர்கள் பள்ளிக்கூடங்களுக்குப் போய்க்கொண்டிருப்பதையும் நான் நிறுத்தர்விட்டால், சர்க்காரின் ஆணிவேரை அசைக்க முடியாது. அந்த வேர்களை அசைத்து, களைந்து எறிந்துவிட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். மாணவர்களிடமிருந்துதான் சர்க்கார் தமக்கு வேண்டிய ஊட்டத்தை, தண்ணீர், உரம் முதலியவற்றைப் பெறுகிறார்கள். சர்க்கார் என்ற செடிக்கு மாணவர்கள் அளிக்கும் இந்த ஜலம், நயாகரா நீர் வீழ்ச்சியைப் போன்றது; கங்கை யமுனை, பிரம்மபுத்திரா ஆகிய ஆறுகளின் ஜலங்களை ஒன்றாகச் சேர்த்தால் எவ்வளவு இருக்குமோ, அதற்குச் சமமானது. நம்முடைய அடிமைத் தளையின் மிகப் பெரிய பிணைப்பான இந்தக் கல்வியைக் கைவிடத்தான் வேண்டும் என்பதை, இதிலிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம். இந்தக் கல்வியைக் கைவிடுவது, சுதந்திரப் போராட்டத்தின் இன்றியமையாத முதல் நடவடிக்கையாகும். அடிமைத் தனத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான இந்த ஆரம்பக் கடமையை நான் உங்களுக்குக் கற்றுத் தராத வரையில், மற்றதெல்லாம் வீண் விரயம்தான். அசுத்தமான ஒரு பாத்திரத்தில் நீங்கள் பாலைக் கொட்டிக் கொண்டே யிருந்தால், பாத்திரம் சுத்தமடையாது; பால்தான் திரிந்து போகும். அடிமைத்தனம் என்ற அசுத்தத்தினால் பாதிக்கப்பட்ட ஒரு பாத்திரத்தைப் போன்றவர்கள் நாம். அதே நிலைமையில் நாம் இருக்கும் வரையில் கல்வியினால் நமக்கு ஒரு நன்மையும் ஏற்படாது. ஆகையால், முதலில் நாம் சுத்தமடைய வேண்டும். கொஞ்ச காலத்திற்கு நாம் வைத்தியம் அல்லது சட்டம் கற்றுக் கொள்ளாவிட்டால், இந்தியா முழுகிப்போய் அழிந்து விடாது.

ஆனல், இந்த அடிமைத்தனம் தொடர்ந்து நீடித்தால் நிச்சயமாக இந்த விபரீதம் நேர்ந்தே தீரும். அப்போது இந்தியா மிருகங்கள் வாழும் நாடாக இருக்குமேயொழிய, மனிதர்கள் வாழும் நாடாக இராது. நாம் பேசினல் அதிகாரிகளுக்குக் கோபம் வந்து விடுமோ என்ற பயத்தினல் ஒருவன் தனக்கு உண்மையென்று தோன்றுவதை ஒளிவு மறைவின்றி எடுத்துச் சொல்ல முடியவில்லையென்றால், அது அடிமைத்தனம்தான். நமது உள்ளங்களைப் பாழ்படுத்தும் இந்த பயத்தை விட்டொழிப்பதே நாம் கற்றுக் கொள்ள வேண்டிய முதல் பாடமாகும். ஜாலியன்வாலா அட்டூழியங்களும், இஸ்லாத்துக்கு இழைக்கப்பட்ட அநீதியும், உங்கள் உள்ளங்களிலும், எனக்கிருப்பதைப் போன்ற சுதந்திரக் கனலை மூட்டட்டும்.

## 4

[காசி மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தின் விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]

தன்னடக்கத்தின் அவசியத்தைப்பற்றிச் சில மாதங்களுக்கு முன்பு உங்களிடம் பேசினேன். இன்றும் அதே விஷயத்தைப் பற்றி, எனக்குத் தெரிந்த வழியில் பேசுவதற்காக வந்திருக்கிறேன். இப்போதெல்லாம் நான் மாணவர்களுக்குத் தவருன வழி காட்டிக் கொண்டிருப்பதாகச் சிலர் என் மீது குற்றம் சாட்டுகிருர்கள். என்னுடைய பொறுப்புகளை நான் உணர்ந்திருக்கிறேன். ஆகையால், யாரையும் தவருன வழியில் செலுத்த நான் விரும்பவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மாணவர்களைத் தவருன வழியில் செலுத்த வேண்டும் என்று நான் நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. நானும் ஒரு காலத்தில் மாணவனுகத்தான் இருந்தேன். மாணவன் என்ற முறையில் என்னுடைய மூத்தவர்களிடம் நான் எப்போதுமே மரியாதை காட்டி வந்தேன். நான் நான்கு பிள்ளைகளுக்குத் தகப்பனுர். தம்முடைய கஷ்டங்களுக்கு உதவி செய்யக் கோரி நூற்றுக் கணக்கான பிள்ளைகள் என்னிடம் வந்திருக்கிருர்கள். இன்றைக்கும் கூட அவர்களுக்கெல்லாம் நான் தந்தை போல்தான் இருக்கிறேன். பிள்ளைகளை ஏமாற்றி, தவருன வழியில் இட்டுச் செல்லக் கூடிய வார்த்தைகள் என் வாயிலிருந்து வ ாது என்பது தெளிவு.

ஆனல், இன்றுள்ள காலப்போக்கில், என்னுடைய நடவடிக்கைகளின் மூலம் அவர்களுக்கு நான் அநீதி இழைக்கிறேன் என்று பெரியவர்கள் நினைக்கிருர்கள்; என்னுடைய சத்தியப் பாதையிலிருந்து நான் சிறிது விலகிவிட்டேன் என்று நினைக்கிருர்கள். வார்த்தைகளை அளந்து பேசவேண்டுமென்று நான் எப்போதும் வற்புறுத்துவது உண்டு. அந்தக் தன்மை இப்போது

என்னிடம் குறைந்துவிட்டதென்றும் நினைக்கிறார்கள். இந்தப் புகார்களைப்பற்றி நான் தீவிரமாக யோசித்துப் பார்த்திருக்கிறேன். ஆனால், நான் தராதரமற்ற விதத்தில் பேசவில்லை என்றே என்னுடைய மனச்சாட்சி கூறுகிறது.

பண்டித மாளவியாஜி செய்த பிரசங்கமொன்று, 'லீடர்' பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. அவருடைய சம்மதத்துடனேயே அது பிரசுரிக்கப்பட்டிருக்கிறதென்று அறிகிறேன். அந்தப் பிரசங்கத்தில் உள்ள ஒரு வாக்கியத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். "இந்தப் பிரச்னையைப் பற்றி நன்றாக யோசித்துப் பார்த்து, உங்களுடைய மனச்சாட்சி என்ன சொல்லுகிறதோ அதன்படி செய்யுங்கள்" என்று அவர் கூறியிருக்கிறார். உங்களிடம் நானும் அதையேதான் சொல்ல விரும்புகிறேன். உங்களுடைய மனச்சாட்சி என்ன சொல்லுகிறது என்பதைப் பற்றி உங்களுக்கு ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால், நீங்களாகவே இதைப்பற்றி முடிவு செய்ய முடியவில்லையென்றால், நான் சொல்லுவதையோ, அல்லது மற்றவர்கள் சொல்லுவதையோ நீங்கள் ஏற்றுக் கொள்ளக் கூடாது. மதிப்பிற்குரிய பண்டிட்ஜி என்ன சொல்லுகிறாரோ, அதன்படியேதான் செய்ய வேண்டும்.

ஒரு காரியம் சுத்தமானதாகவும், அதனுடைய நோக்கமும், பலனும் கூட சுத்தமானதாகவும் இருந்தால்தான், மனச்சாட்சிக்கிணங்க செய்த காரியம் என்று அதைச் சொல்ல முடியும். அத்துடன் மட்டுமில்லை. அது சம்பந்தமாக சாத்திரங்கள் மற்றொரு நிபந்தனையையும் விதித்திருக்கின்றன. தன்னடக்கம், பிரம்மச்சரியம், சத்தியம், உடைமையின்மை ஆகிய விதிகளை யார் பின்பற்றுகிறாரோ, அவர்தான் மனச்சாட்சி இருப்பதாகச் சொல்லிக் கொள்ள முடியும். நீங்கள் பிரம்மச்சாரி அல்லவென்றால், உங்களிடம் இரக்கம் இல்லையென்றால், பெரியவர்களிடம் மரியாதை இல்லையென்றால், தராதர உணர்ச்சி இல்லையென்றால், சத்தியம் இல்லையென்றால், உங்களுடைய செய்கைகள் மனச்சாட்சிப்படி செய்யப்பட்டவை என்று நீங்கள் சொல்லிக் கொள்ள முடியாது. ஆனால், உங்களிடம் இந்த குணங்களெல்லாம் இருந்தால், மேற்கத்தி வாழ்க்கை முறைகளை நீங்கள் கைவிட்டிருந்தால், உங்கள் உள்ளத்தில் கடவுள் இருக்கிறார் என்ற உணர்வு உங்களுக்கிருந்தால், உங்களுடைய பெற்றோர்களின் சொல்லை மீறி நடப்பதற்குக் கூட உங்களுக்கு உரிமை இருக்கிறது. ஆனால், அதையும் மரியாதையாகச் செய்ய வேண்டும். அப்போது உங்களுக்குச் செயல் சுதந்திரம் உண்டு ; அப்படி நீங்கள் செய்வதும் சரியானதாக இருக்கும். மேல் நாடுகளில் மாணவர்களிடையே அராஜகம் நிலவுகிறதென்பதை நான் அறிவேன். தங்கள் மனத்திற்குத் தோன்றுவதைத் தவிர, வேறெந்த விதியையும் அவர்கள் ஒப்புக் கொள்ளுவதில்லை. ஆனால், நமது மாணவர்கள் அம்மாதிரி கட்டுப்பாடில்லாத முறையில் நடந்து கொள்ளுவதை நான் விரும்பவில்லை. அத்

தகைய போக்குக்கு உங்களுக்கு நான் ஊக்கமளித்தால், நான் எந்த லட்சியத்திற்காக வேலை செய்கிறேனோ அந்த லட்சியத்திற்குத் தகுதியுள்ளவனாக மாட்டேன். அப்படியானால், பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விட வேண்டியது உங்கள் கடமை என்று நான் ஏன் சொல்லுகிறேன்? உங்களுடைய படிப்பை இடையில் மறித்து, உங்களுடைய மாணவர் வாழ்க்கையைப் பாழ்படுத்த விரும்புகிறேனா? இல்லை; நானே இன்னமும் ஒரு மாணவனைப் போல்தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றேன். ஆனால், உங்களுக்கு நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். சுதந்திரத்தின் படிப்பினையை அறியாதவர்கள் - பலர் எழுதிய 'சுதந்திரம்' என்ற நூலைப் படிப்பதால் இது தெரிந்துவிடாது-எதையுமே அறிந்தவர்கள் அல்ல.

சீதா பிராட்டி அசோக வனத்தில் சிறை வைக்கப்பட்டிருந்த காலத்தில், ராவணன் மன்னர்களுக்குரிய ஆகாரவகைகளை அனுப்பி வைத்தான்; பணிவிடைகள் செய்வதற்கு எவ்வளவோ தாதிகளை அனுப்பினான். ஆனால், தேவியார் அவற்றையெல்லாம் பயன்படுத்திக் கொள்ளவில்லை; இலைகள், கனிகளை மட்டுமே உட்கொண்டு திருப்தியடைந்தார். சீதா தேவியைப் போல் அமைதியாக ஒத்துழையாமை செய்யும் அந்த சக்தியை நீங்கள் பெறாவிட்டால், இந்தியா நாசமடைந்துவிடும் என்பதிலும், தொடர்ந்து அடிமைத்தனத்திலேயே தான் உழன்று கொண்டிருக்கும் என்பதிலும் சந்தேகமில்லை.

இன்று நாட்டிலுள்ள ஒவ்வொரு ஆணும், பெண்ணும் ஒரே குறிக்கோளுடன் ஒன்று சேர முடிந்தால், இந்தியா சீக்கிரத்தில் விடுதலை பெற்றுவிட முடியும். ஆனால், இம்மாதிரியான போராட்டத்தை ஆரம்பித்த எல்லா நாடுகளிலுமே கருத்து வேற்றுமைகளும் இருந்திருக்கின்றன; ஒருமைப்பாடு ஏற்பட்ட பிறகு அவர்கள் இறுதியில் தம் லட்சியத்தில் வெற்றி பெற்றிருக்கிறார்கள். நாமும் நமது லட்சியத்தை அடைவதற்கு, மற்ற நாடுகள் அனுபவித்தவை போன்ற சோதனைகளையும், கஷ்டங்களையும் அனுபவிக்கத்தான் வேண்டும். ஆயினும், மரியாதையான நடத்தையைக் கைவிட்டுவிடக் கூடாது. உங்களுடைய மனப்பான்மையிலும், நீங்கள் நடந்து கொள்ளும் விதத்திலும் தாழ்மையாகவும், தன்னடக்கத்துடனும் இருக்க வேண்டும். நீங்கள் சொல்லுவதை ஒப்புக் கொள்ளாத மாணவர்களை தொந்தரவு செய்யவோ, சிறுமைப் படுத்தவோ கூடாது. நம்முடைய மதிப்பிற்குரிய சில சகோதரர்களின் மனத்தில் உங்களைப்பற்றி அவநம்பிக்கை இருக்கிறது. அந்த அவநம்பிக்கை அகலும் விதத்தில் நீங்கள் நடந்து கொள்ள வேண்டும். இப்போது நீங்கள் படிக்கும் பள்ளிக்கூடங்களை விட்ட பிறகு, நீங்கள் இன்னும் நல்ல பிள்ளைகளாக நடந்து கொள்ள முயன்றால், அவர்களுடைய ஆசிகளைப் பெறுவீர்கள். ஆனால் கல்லூரிகளை விடுவதன் அர்த்தம் என்ன என்பதைப் பூராவாக யோசித்துத் தெரிந்து கொள்ளாமல், சுயநலமான காரியங்களைச் செய்து கொண்டும், தற்பெருமையடித்துக் கொண்டும், சேவைப்

பாதையைத் துறந்து, கெட்ட வழிகளில் செல்ல ஆரம்பித்தீர்களானால், அவர்களுக்கும் எனக்கும் மிகுந்த வேதனையை அளித்தவர்களாவீர்கள். என்ன செய்ய வேண்டுமென்பதை நீங்களே முடிவு செய்ய முடியாமலிருந்து, பெரியவர்களின் சொல்படியே நடக்க விரும்பினீர்களானால், பண்டிட்ஜி கூறும் யோசனைப்படி நடப்பதுதான் நல்லது என்று கூறுவேன். ஆனால், நீங்களே ஒரு முடிவுக்கு வந்திருந்தால், மற்றவர்களுடைய யோசனை உங்களுக்குத் தேவையில்லை. ஏனென்றால், ஒத்துழையாமைதான் உங்களுடைய கடமை என்பதை உங்களுடைய மனச்சாட்சி சந்தேகத்திற்கிடமில்லாமலும், வற்புறுத்தியும் சொல்லுவதாயிருந்தால், நீங்கள் நிச்சயமாக இப்போது படிக்கும் பள்ளிக்கூடங்களை விடத்தான் வேண்டும். அப்போது பண்டிட்ஜியே உங்களுக்கு ஆசி கூறுவார்; உங்களை அவர் தடுக்கமாட்டார்.

ஆயினும், ஒத்துழையாமைக்கு மிகுந்த தன்னடக்கம் வேண்டும். உங்களிடம் சகிப்புத் தன்மை இல்லையென்றால், நீங்கள் ஒத்துழையாமையாளராக இருக்க முடியாது. உங்களுடைய பெற்றோர்கள் விஷயத்தில் நீங்கள் செய்ய வேண்டிய கடமை சம்பந்தப்பட்டவரையில், நீங்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டீர்களென்றால், மரியாதையுடன் அவர்களிடம் சென்று, நீங்கள் செய்யும் காரியம் எவ்வளவு நியாயமானது என்பதை அவர்களிடம் விளக்கிக் கூறுங்கள். பின்னர் அவர்கள் சொல்லுவது, உங்களுடைய உறுதியைக் குலைப்பதாயிருந்தால், அவர்கள் சொன்னபடி தான் நடக்க வேண்டும். உங்களுடைய ஒவ்வொரு செய்கையும் தருமத்தை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். கடமையில் பற்றுதலும், தாழ்மை உணர்ச்சியும் உங்களுக்கு இருக்க வேண்டும். தருமத்தைப் பின்பற்றுவதை நீங்கள் புறக்கணித்தால், பள்ளிக் கூடங்களை விடும்போது நீங்கள் எடுத்துக் கொள்ளும் புனிதமான பிரதிக்ஞையை மீறியவர்களாவீர்கள். ஆகையால், முதலில் தாழ்மையைக் கற்றுக் கொள்ள வேண்டும். 'பெரிய தியாகங்கள்' என்று நான் சொல்லுவதன் காரணமென்ன? இப்போது நாம் உள்ள தாழ்ந்த நிலைமையில், நமது மனிதத் தன்மையை இழந்துவிட்டோம். ஜீவனோபாயத்தைக் கைவிடுவதென்பது நமக்குப் பெரிய தியாகமாகிவிட்டது.

கடைசியாக, நான் மீண்டும் உங்களுக்குச் சொல்லுகிறேன். உங்களுக்கு நம்பிக்கையுள்ள ஆசிரியர்களையும், மாளவியாஜியையும் கலந்தாலோசியுங்கள்; நன்கு சிந்தித்துப் பார்த்து அவர்களுடைய ஆசிகளுடன் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விடுங்கள்.

— 'நவஜீவன்' - 5—12—1920

# 3

# இப்போதுள்ள கல்வி முறை

## (ஒரு சம்பாஷணை)

**இந்திய நண்பர்:** *அப்படியானால், இப்போதுள்ள கல்வி முறை தவறானதா?*

**காந்திஜி:** *இந்தக் கேள்வியே எழவில்லை. இருந்தாலும், இந்தக் கேள்விக்கு பதிலளிப்பதில் எனக்கொன்றும் கஷ்டமில்லை. அது தவறானதுதான் என்றே நான் சொல்லுகிறேன். போதனு மொழி ஆங்கிலமாயிருப்பதால், மாணவர்களின் மூளையில் ஏற்றப்படும் சுமை இரட்டிப்பாய் விட்டது. இந்த விஷயத்தில் எனக்கு ஆழ்ந்த உணர்ச்சி உண்டு. இந்த அந்நிய மொழியின் மூலம் கல்வி பெற்றவர்கள், தம்முடைய சிந்தனையின் விறுவிறுப்பை இழந்துவிட்டார்களென்ற கருத்தைப் பேராசிரியர் யதுநாத சர்க்கார் போன்றவர்கள் ஆதரிக்கிறார்கள். புதிய புதிய விஷயங்களைக் கண்டுபிடித்து, சிருஷ்டி செய்யும் நமது சக்தியை இது அழித்துவிட்டது. ஒரு அந்நிய மொழியின் உச்சரிப்பையும், அதன் சொல் அலங்காரத்தையும் கற்றுக் கொள்ளுவதிலேயே நமது நேரம் பூராவும் போய்விடுகிறது. இது வெளியிலிருந்து நம்மீது சுமத்தப்படும் உபயோகமற்ற வேலையாகும்; இதன் பலனுக, ஐரோப்பிய நாகரிகத்தை நாம் அப்படியே கண்ணை மூடிக் கொண்டு பின்பற்றுபவர்களாக—வெறும் மை ஒத்தும் காகிதங்களாக-ஆகிவிட்டோம். அவர்களிடமுள்ள நல்ல அம்சங்களைக் கற்றுக்கொண்டு, அவற்றைப் பின்பற்றுவதற்குப் பதிலாக, அவர்களை அப்படியே 'காப்பி' யடிக்க ஆரம்பித்துவிட்டோம். இதனால், நமக்கும் பாமர மக்களுக்கும் இடையே பெரிய பிளவு ஒன்று ஏற்பட்டுவிட்டது. அரசியல் கிடக்கட்டும், சுகாதார விதிகள், மற்றும் சமூக நன்மைக்கு ஏற்றவைகளான சாதாரண விஷயங்களைக் கூட, அவர்களுக்குப் புரியக் கூடிய பாஷையில் நாம் விளக்கிக் கூற முடியவில்லை. பழைய தலைமுறையைச் சேர்ந்த பிராம்மணர்களைப் போலவே நாம் அவ்வளவு மோசமானவர்களாகி விட்டோம். இன்னும் அதிக மோசமானவர்களாகிவிட்டோம் என்று கூடச் சொல்லலாம். ஏனெனில், அந்த பிராம்மணர்களுடைய உள்ளங்கள் அசுத்தமாயில்லை. அவர்கள் தேசத்தின் நாகரிகத்திற்கு தரும கர்த்தாக்கள் போல் இருந்தார்கள். நாம் அப்படிக்கூட இல்லை. நம்முடைய கல்வியை நாம் துஷ்பிரயோகம் செய்கிறோம்; ஆனால், பாமர மக்களுக்கு நாம் தான் ரட்சகர்கள்போல் நடந்து கொள்ளுகிறோம். இந்த விஷயத்தைப் பற்றி நீங்கள் என்னுடன் வாதம் செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். ஆனால், என்னுடைய இந்தக்*

கருத்துகளெல்லாம் சமீபத்தில் தோன்றியவையல்ல; பல வருஷ அனுபவத்தின் பலன் என்பதையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**ஆங்கில நண்பர் :** இந்தப் பிரச்னையைப் பற்றி நாங்கள் தீவிர மாக யோசித்துப் பார்த்ததில்லை. ஆகையால், இதைப் பரிசீலனை செய்கிறோம் என்றுதான் நாங்கள் சொல்ல முடியும்.

**காந்திஜி :** அது சரிதான். ஒரு விஷயத்தைச் சொல்ல மறந்துவிட்டேன். அதாவது, இந்த முறை எங்களுடைய ஆன்மாவைக் கொன்றுவிட்டது. நீங்கள் பணத்தை தெய்வ மாகக் கொண்டாடுபவர்கள். ஆகையால், எல்லா விதங் களிலும் லோகாயதமான ஒரு கல்வி முறையை நீங்கள் உரு வாக்கியிருக்கிறீர்கள்; இதன் பலனாக, ஹிந்துக்கள் எந்தவித மான மதக் கல்வியும் பெற முடிவதில்லை. இங்கிலாந்தில் இதன் பலன் அவ்வளவு மோசமாக இல்லை; ஏனெனில், அங்குள்ள சர்ச்சுகளைச் சேர்ந்த பெரியவர்கள் ஏதோ ஒரு அளவுக்காவது மதக் கல்விக்கு ஏற்பாடு செய்ய முடிகிறது.

**இந்திய நண்பர் :** கெட்ட வழிகளில் கிடைத்த பணத்தைக் கொண்டு உங்கள் நாட்டுக் குழந்தைகளுக்குக் கல்வி போதிக் கப்படுவதை நீங்கள் விரும்பவில்லை, அல்லவா?

**காந்திஜி :** ஆம். கெட்ட வழிகளில் கிடைத்த பணத்தைக் கொண்டு அவர்கள் கல்வி பெறுவதை நான் விரும்பவில்லை என்பதோடு மட்டுமில்லை; அப்படி சம்பாதித்தவர்களிட மிருந்து கல்வி பெறுவதையும் விரும்பவில்லை. நாங்கள் மரி யாதையையோ, அன்போ வைக்காத ஒரு சர்க்காரின் கீழ் நடத் தப்படும் பள்ளிக்கூடங்களுக்கும் எங்களுக்கும், ஒரு சம்பந் தமும் இருக்கக் கூடாதென்று நான் சொல்லியிருக்கிறேன். ஒரு சாதாரண விஷயத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். "கடவுள் மன்னரைக் காப்பாற்றட்டும்" என்று மிகுந்த உற் சாகத்துடன் நான் பாடிக்கொண்டிருந்த காலம் ஒன்றிருந் தது. அதோடுமட்டுமில்லை. ஆங்கிலம் அறியாத எனது பையன்களைக் கூட அதை மனப்பாடம் செய்ய வைத்தேன். ஆப்பிரிக்காவிலிருந்து நான் ராஜ்கோட்டுக்கு வந்தபோது, அங்குள்ள பயிற்சிக் கல்லூரி மாணவர்களுக்கு அதைக் கற்றுக் கொடுத்தேன்; ஏனெனில், உண்மையான ராஜ பக்தியுள்ள ஒவ்வொரு பிரஜைக்கும் அது தெரிந்திருக்க வேண்டுமென்று நான் நினைத்தேன். ஆனால், இன்றுள்ள நிலைமை என்ன? இனி அதை நானும் பாட முடியாது, மற்ற வர்களையும் அதைப் பாடச் சொல்ல முடியாது. ஒரு மனிதன் என்ற முறையில் ஜார்ஜ் மன்னர் நீடுழி வாழட்டும் என்று மகிழ்ச்சியுடன் நான் சொல்லுவேன்; ஆனால் மனிதர்களா லும், கடவுளாலும் இழிவானதாகக் கருதப்படும் ஒரு சாம்

ராஜ்யம் ஒரு கணம்கூட உயிர் வாழ வேண்டும் என்று நான் மனப்பூர்வமாகச் சொல்ல முடியாது.

**இந்திய நண்பர் :** பாடம் சொல்லிக் கொடுக்கப்படும் விதத்தை ஒப்புக்கொள்ளுவதற்கில்லை என்று சொல்லியிருக்கிறீர்களே.

**காந்திஜி :** ஆம், உண்மைதான்.

**இந்திய நண்பர் :** நமது சர்வ கலாசாலைகளை இந்தியர்கள்தான் நடத்துகிறார்கள், நிர்வகிக்கிறார்கள்; அவற்றின் கொள்கைகளையும் அவர்களே நிர்ணயிக்கிறார்கள்.

**காந்திஜி :** ஆம், அது சரிதான். சர்வகலாசாலைகள் நான் சொன்னபடி கேட்பதாயிருந்தால், தம்முடைய அமைப்புச் சாசனத்தைக் கிழித்துத் தூர எறியும்படி அவர்களிடம் சொல்லுவேன். பிறகு, இது எங்களுடைய சர்வகலாசாலை என்று கூறுவேன். சர்வகலாசாலைக்கு மான்யம் கொடுப்பதை சர்க்கார் நிறுத்திவிடுவார்களென்று சொன்னால், அவர்களுக்குத் தேவையான பணத்தையெல்லாம் நான் திரட்டித் தருகிறேன் என்று உறுதி கூறுகிறேன். சர்வகலாசாலைகளை அவர்கள் தேசீய ஸ்தாபனங்களாக மாற்ற வேண்டுமென்று நான் விரும்புகிறேன். பண்டித மாளவியாஜியினிடம் நான் என்ன சொன்னேன்? சர்வகலாசாலையின் அமைப்புச் சாசனத்தை வைஸ்ராயினிடமே திருப்பிக் கொடுத்துவிடுங்கள்; சமஸ்தானாதிபதிகள் தாம் கொடுத்த பணத்தைத் திரும்பக் கேட்டாலும் கொடுத்துவிடுங்கள். பற்றாக்குறை ஏற்பட்டால், பிச்சையெடுப்போம். கேட்க முடியுமென்றால், மக்களிடமிருந்து நான் பிச்சை கேட்க முடியும் என்று அவரிடம் சொன்னேன்.

**இந்திய நண்பர் :** சர்வகலாசாலை அமைப்புச் சாசனம் நமக்கு என்ன கெடுதல் செய்தது?

**காந்திஜி :** எல்லாச் சங்கடங்களுக்கும் மூலகாரணம் சாசனம் தான். எல்லாவிதமான சர்க்கார் தலையீடுகளுக்கும், ஆதிக்கத்திற்கும் அதுதான் ஆரம்பம். சாசனம் காரணமாகத் தான் ஹிந்து சர்வகலாசாலை கானாட்டுக் கோமகனை வரவேற்று, கௌரவிக்க வேண்டியிருக்கிறது. அதை நான் எப்படி அனுமதிக்க முடியும்? நாட்டை, புரட்சியை நோக்கி நான் இட்டுச் செல்லுவதாகத் தனக்குத் தோன்றுகிறதென்று ஸ்ரீமதி பெஸன்ட் அம்மையார் ஒரு சமயம் என்னிடம் கூறினார். அவர் அதை ஆட்சேபிக்கும் தோரணையிலேயே கூறினார்; ஆனால், அவர் சொன்னது சரிதான். எனினும், நான் செய்யும் புரட்சி, இயற்கையாக ஒன்றின் விளைவாக மற்றொன்று ஏற்படும் புரட்சியாக இருக்கும். ஆனால், புரட்சி ஏற்பட்டுத்தான் தீர வேண்டும். வேறு மாற்று வழியே இல்லை.

—'நவஜீவன்' – 30—12—1920

# 4

# ஒத்துழையாமைக்கு மூன்று நிபந்தனைகள்

ஒத்துழையாமையில் நம்பிக்கை உள்ள எந்த மாணவனும், அமைதிக்குப் பங்கம் விளைவிக்கக் கூடிய எதையும் செய்யக் கூடாது. ஒத்துழையாமையாளர் மூன்று நிபந்தனைகளை ஒப்புக் கொள்ள வேண்டும்: முதலாவது அமைதி: அதை மீறக்கூடிய எதையும் செய்யக் கூடாது. உங்களுக்கு ஒருபோதும் கோபம் வரக்கூடாது; உங்களுடைய எதிரிகளை நீங்கள் திட்டக்கூடாது, கேலி செய்து கூச்சல் போடக்கூடாது, அடிக்கக் கூடாது. இந்த நிபந்தனைகளுக்கு நீங்கள் உட்படத் தயாராயிருந்தாலொழிய, இந்த இயக்கத்தில் சேரக்கூடாது.

ஒத்துழையாமை என்பது முற்றிலும் அமைதியாக இருக்க வேண்டும்; கத்தியை உபயோகிப்பதற்கு அதில் இடமில்லை. பலாத்காரத் தன்மை வாய்ந்த எதுவுமே கத்தியைப் போன்றது தான். பலாத்காரமான பேச்சு, கரங்கள் யாவுமே, கூரிய முனையுள்ள இரும்புத் துண்டைப் போன்றதேயாகும். இரண்டாவது நிபந்தனை, தன்னடக்கம்: உங்களை நீங்களே அடக்கியாளத் தெரிய வேண்டும். மூன்றாவது நிபந்தனை, யக்ஞம்: யக்ஞம் அல்லது தியாகத்தின் மூலம் ஒருவர் தூய்மை பெறவேண்டும். அதைப் பெற்றுவிட்டதாகக் கருதினாலொழிய, நீங்கள் பள்ளிக் கூடங்களை விடக்கூடாது. இங்கு இன்று சுமார் அறுபது மாணவர்கள் இருக்கிறார்கள். இந்த எண்ணிக்கை ஐந்தாகக் குறைந்து விட்டால் கூட, வித்யா பீடம் ஒழுங்காக நடந்து கொண்டிருக்கும். அஸ்திவாரம் பரிசுத்தமானதாயிருந்தால், சுயராஜ்யம் என்ற கட்டிடத்தை அதன்மீது எழுப்பலாம். யார் தன்னைத் தானே பரிசுத்தப்படுத்திக் கொள்ளவில்லையோ, அவன் அஸ்திவாரத்தின் பரிசுத்தத்தை அதிகமாக்க மாட்டான். ஆகையால், இந்த ஸ்தாபனத்தில் சேர விரும்பும் மாணவர்களிடம் ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதாவது, நீங்கள் இந்த நிபந்தனைகளை நிறைவேற்ற விரும்பவில்லையென்றால், இதைவிட்டுப் போய் விட வேண்டும்.

—'நவஜீவன்' – 15—11—1920

# 5

# நூலின் மூலம் சுயராஜ்யம்

## 1

*குஜராத் வித்யாபீட ஆசிரியர்கள், மாணவர்களிடையே குஜராத்தியில் காந்திஜி 13-1-1921-இல் செய்த பிரசங்க விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :*

எனது வாழ்க்கையில் சில விஷயங்களை நான் சில சமயங்களில்தான் தெளிவாகப் பார்க்க முடிந்திருக்கிறது. ரௌலட் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்பதற்காக நடத்தப்பட்ட இயக்கத்தின்போது, சட்ட மறுப்புக்கு மக்கள் இன்னும் தயாராகவில்லை என்று திடீரென்று எனக்குத் தோன்றியது. அதே மாதிரி, சென்ற மூன்று, நான்கு நாட்களாக எனக்கு ஒரு எண்ணம் தோன்றியிருக்கிறது : ஒத்துழையாமை இயக்கம் வெற்றி பெறுவதற்கு நாம் என்ன செய்யவேண்டும்? மாணவர்களை அதில் பங்கெடுத்துக் கொள்ளச் செய்து, ஒரு வருஷத்தில் சுயராஜ்யம் பெறுவதற்கு என்ன செய்யவேண்டும்? நான் வெகு காலமாக உண்மையென்று நம்பிவந்துள்ள ஒன்றை இப்போது உங்கள் முன்பு சமர்ப்பிக்கிறேன். இதில் எப்போதுமே எனக்கு நம்பிக்கை இருந்துவந்திருக்கிறது; ஆனால், அத்தகைய நம்பிக்கைக்கான ஓர் அம்சத்தை இப்போதுதான் நான் இன்னும் அதிகத் தெளிவாகப் புரிந்து கொள்ளமுடிந்திருக்கிறது.

இந்த ஸ்தாபனத்தின் குலபதி (அத்யட்சகர்) என்ற முறையில் உங்களிடம் எதையும் கூற நான் வரவில்லை. உங்களுக்கு யோசனை கூறுவதற்காக மட்டுமின்றி, இந்த விஷயத்தில் ஒரு மூத்த சகோதரனைப்போல் உங்களுடைய கருத்தை அறியவும் வந்திருக்கிறேன். மிகுந்த நம்பிக்கையுடனேயே நான் இந்த யோசனையைக் கூறப்போகிறேன். இன்று இதை உங்களுக்கு இவ்வளவு நம்பிக்கையுடனும், பலத்துடனும் கூறுவதைப் போல் இதற்கு முன்பு உங்களிடம் நான் சொன்னதில்லை. பள்ளிக்கூடத்தை விடுவதோ அல்லது கல்வி இல்லாமல் இருப்பதோ தற்கொலைக்கு ஒப்பாகும் என்று நீங்கள் சொன்னால், தற்கொலை செய்து கொள்ளுங்கள் என்றே சொல்லுகிறேன். அதற்காகக் கடவுள் உங்களை மன்னித்துவிடுவார் என்பது நிச்சயம். இதுவரையில் உங்களுக்குச் சுவையான பல உண்டிகளை நான் வழங்கி வந்தேன். ஆனால், ஒத்துழையாமை இயக்கத்தை வெற்றிகரமானதாக்கவேண்டும் என்று நீங்கள் விரும்பினால், உங்கள் நேரம் பூராவையும் நூல் நூற்பதில் செலவிட வேண்டுமென்று கூறுவதற்காகவே இன்று இங்கு நான் வந்திருக்கிறேன். இது உங்களுக்கு ஒரு புதிய கருத்தாக இருக்கலாம்; உங்களுக்கு அதிர்ச்சியளிப்பதாகக் கூட இருக்கலாம். உங்களில், பி. ஏ.

பட்டம் பெற விரும்புகிறவர்கள் பலர் இருப்பீர்கள். இந்த வித்யாபீடம் அந்தப் பட்டத்தை அளிக்கும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். அவர்களுக்கு நான் சொல்லுவது இதுதான். அதாவது, இன்று இந்தியா உள்ள நிலைமையில், யாருக்கும் கொடுக்கப்படக் கூடிய மிகப் பெரிய பட்டம் சர்க்கா சுற்றுவது தான். இது மிகைபடுத்திக் கூறப்படுவதுபோல் தோன்றலாம்; ஆனால், அப்படியில்லை. அதை நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். என்னைப் போலவே உங்களிடமும் அதே ஆர்வமும், உற்சாகமும் இருக்கவேண்டும் என்பதற்காகவே இதை உங்களிடம் சொல்லுகிறேன்.

நாம் சுதேசியைக் கைவிட்டதால்தான் இந்தியா நம்மிடமிருந்து பறிபோயிற்று. இந்தியாவில் நூல் நூற்பது, குறிப்பிட்ட ஒரு வகுப்பினரிடையே மட்டும் ஒரு தொழிலாக இருக்கவில்லை. பெண்கள் யாவரும், அவர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் நூற்றுக் கொண்டிருந்தார்கள். பல ஆண்களும் நூற்றுக் கொண்டிருந்தார்கள். டாக்கா மஸ்லினை நூற்றவர்கள் ஆண்களேயாவர். ஆனால், அவர்கள் அதை ஒரு தொழிலாகக் கொண்டிருந்தார்கள். பொதுவாக, நூற்பது ஒரு கடமையாகக் கருதப்பட்டதேயொழிய தொழிலாக அல்ல. நாட்டில் நூற்கும் பழக்கம் இருந்தவரையில், இந்தியா சுபிட்சமாக இருந்தது. நாம் உற்பத்தி செய்த துணி, நமது தேவைகளுக்குப் போதுமானதாக இருந்தது. ஆனால், நாம் இன்னும் அதிகம் உற்பத்தி செய்தோம் என்பதும், ஏராளமான துணி வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டது என்பதும், சென்ற கால சரித்திரத்திலிருந்து தெரிகிறது. முற்றிலும் நேர்மையற்ற, அக்கிரமமான முறைகளின் மூலம் கிழக்கிந்தியா கம்பெனி நமது ஜவுளித் தொழிலை அழித்தது; பணத்திற்காக யுத்தங்களை நடத்தியது; துறைமுகங்களைக் கைப்பற்றிக் கொண்டது; வர்த்தகத்தை ஏகபோகமாக்கிக் கொண்டது; இறுதியில் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையும் ஸ்தாபித்தது. நமது முன்னோர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளுக்குப் பிராயச்சித்தம் செய்தாலொழிய, நாம் எப்படி சுயராஜ்யம் பெறமுடியும்? தீங்கிழைத்தவர்களை தண்டிப்பதன்மூலம் அதை நாம் பெறமுடியாது. தண்டிக்கும் முறையை நாம் கைவிட வேண்டும். நம்மை நாமே பரிசுத்தமாக்கிக் கொள்ளுவதன் மூலம்தான் வலிமைபெற வேண்டுமேயொழிய, எதிரிகளைத் தண்டிப்பதன்மூலம் அல்ல. அவர்கள் நம் நாட்டை ஆளுவதை நாம் அப்படித்தான் நிறுத்தவேண்டும். நம்மிடம் தூய்மையும், சத்தியமும் இல்லை என்ற காரணத்திற்காக அவர்கள் இங்கேயே இருந்து நம்மை ஆளவேண்டும் என்பதையும், சரியான முறைகளின் மூலம்தான் நாம் மீண்டும் சுதந்திரம் பெற வேண்டும் என்பதையும் நீங்கள் ஒப்புக்கொண்டால், நம்முடைய கடமை என்ன? நம்முடைய பாவங்களுக்கு நாம் பிராயச்சித்தம் செய்யவேண்டும் என்பதே இந்தக் கேள்விக்குப் பதிலாகும், முன் காலத்தில் செய்ததைப்போல், நாம் நூற்க ஆரம்பிக்க

வேண்டும். வேறு எந்த வேலைக்கும் பதிலாக இதைச் செய்வதாயிருக்கக் கூடாது; மக்களின் வீண் நேரத்தை இதற்குப் பயன்படுத்திக் கொண்டு, அதன்மூலம் அதனுடைய இப்போதைய அவல நிலையிலிருந்து அதை உயர்த்தவேண்டும். ஆண்கள், பெண்கள், குழந்தைகள், எல்லோருமே நூற்க ஆரம்பித்த பிறகுதான், நம்முடைய பிராயச்சித்தம் பூர்த்தியானதாயிருக்கும்.

பிரிட்டிஷ் சாமான்களை பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று சொல்லுபவர்கள், லங்காஷயரை மண்டியிடச் செய்ய வேண்டும் என்பதற்காகவே அப்படிச் சொல்லுகிறார்கள். ஆனால், நான் அப்படி நினைக்கவில்லை. மற்றவர்களை மண்டியிடச் செய்வதற்குப் பதிலாக, நம்மை மண்டியிடவைப்பதற்கு மற்றவர்கள் செய்யும் முயற்சிகளை எதிர்த்து நிற்பதற்கான பலத்தை நாம் பெறுவதற்கு வேலை செய்வதே சிறந்தது என்று எனக்குத் தோன்றுகிறது. ஜப்பான், இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகள் வரமுடியாமல் நம் கதவுகளை அடைக்கவிரும்பினால், நமக்குத் தேவையான எல்லாத் துணிகளையும் நாமே உற்பத்தி செய்யவேண்டும். தேவையான அளவுக்கு நாம் நூலை உற்பத்தி செய்தாலொழிய, தேவையான அளவு துணியையும் உற்பத்தி செய்ய முடியாது. நமக்குத் தேவையான துணி பூராவையும் நமது மில்களில் உற்பத்தி செய்ய வேண்டுமானால், இதற்கு வேண்டிய மில்களை அமைப்பதற்குக் குறைந்த பட்சம் ஐம்பது வருஷங்களாவது ஆகும் என்று அனுபவம் உள்ள தொழிலதிபர்கள் கூறுகிறார்கள். மில்களின் மூலம் நாட்டிலுள்ள கோடிக்கணக்கான மக்களின் நிலைமைக்குப் பரிகாரம் காணமுடியாது. ஏராளமான ஆண்களும், பெண்களும் இப்போது அநேகமாகத் துணியே கூட இல்லாமல் இருக்கிறார்கள். மில்களின் மூலம் இவர்களுக்கு வேண்டிய துணியைக் கொடுக்கமுடியாது. எந்த நாடும் விவசாயத்தை மட்டுமே நம்பி வாழ்ந்ததில்லை; அப்படி வாழவும் முடியாது. விவசாயத்திற்குத் துணையாக ஒரு உபதொழில் இருக்க வேண்டும். நெசவுதான் அந்த உபதொழில். அந்தத் தொழிலை உயிர்ப்பித்து, அதை நாம் கற்றுக் கொண்டாலொழிய, நம்முடைய கல்வியினாலெல்லாம் ஒரு பலனும் ஏற்படாது.

நான் சொல்லியிருப்பது சரிதான் என்றால்-இது உண்மைதான் என்பதை ஒரு தீர்மானத்தின் மூலம் தேசீய காங்கிரஸ் பகிரங்கமாக ஒப்புக் கொண்டிருக்கிறது-இப்போது நாம் என்ன செய்ய வேண்டும்? அடுத்த ஒன்பது மாதங்களில் சுதந்திரம் பெற வேண்டுமென்ற நம்முடைய உறுதி உண்மையானதுதான் என்றால், இந்தியாவில் உள்ள துணிப் பஞ்சத்தைப் போக்குவதுதான் மாணவர்களுக்கு உண்மையான கல்வியாக இருக்கும். இப்போது இந்தியாவுக்கு உணவுப் பஞ்சத்தை விட, துணிப் பஞ்சம்தான் அதிகமாக இருக்கிறது. மிகவும் அவசியமான இந்தத் துணிக்காக, வருஷத்தில் அறுபது கோடி ரூபாய்கள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. இந்தியா இப்போது வெளி

நாடுகளிலிருந்து நாற்பது கோடி பவுன் நூலை இறக்குமதி செய்து கொண்டிருக்கிறது. நமது வீடுகளிலேயே இந்த நூலையெல்லாம் நாம் நூற்க ஆரம்பிக்க வேண்டும். நெசவாளர்களுக்குப் பஞ்ச மில்லை; ஆனால், இப்போது நூற்பாளர்கள் இல்லை. எவ்வளவு நெசவாளர்கள் இருக்கிறார்கள் என்ற சரியான விவரம் இன்னும் எனக்குக் கிடைக்கவில்லை. அவர்களுடைய எண்ணிக்கை ஐம்பது லட்சம் அல்லது அதற்கு அதிகமாகவே இருக்கலாம். இந் தப் பணத்தையெல்லாம் நாம் மிச்சப்படுத்த வேண்டுமானால், நாம் நூற்க ஆரம்பிக்க வேண்டும். இந்த அறுபது கோடி ரூபாயும், நம் நாட்டிலேயே கைத்தொழில்களில் முதலீடு செய்யப்பட்டால், நமது மக்களில் எவ்வளவு ஆயிரக் கணக்கான பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்பதை நினைத்துப் பாருங்கள். நெய்யை எவ் வளவு ஜாக்கிரதையாகவும் அளவாகவும் உபயோகிக்கிறோமோ, அதே மாதிரி துணியையும் உபயோகிக்க வேண்டும். நாம் விரும் பும் அளவுக்குத் துணியை உபயோகிக்க நமக்குக் கட்டுபடியா காது. ஒரு சட்டையுடன் நாம் காலம் தள்ள முடியுமென்றால், அதற்கு அதிகமாக விரும்பக் கூடாது. ஒரு குட்டையான துணியை நாம் உபயோகிக்கக்கூடுமாயின், நாம் நீளமான துணியை உபயோகிக்க முற்படக் கூடாது. அறுபது கோடி ரூபாயை மிச்சப்படுத்த வேண்டுமானால், அதற்கேற்றவாறு பெரிய தியாகம் செய்யவும் நாம் தயாராயிருக்க வேண்டும்.

இந்த ஆண்டில் மீதமுள்ள காலத்தை மாணவர்கள் இந்தப் பணியில் செலவிட்டால் காங்கிரஸ் தீர்மானத்தில் உறுதி கூறப் பட்டிருப்பதுபோல், இந்த ஆண்டு முடிவதற்குள்ளாகவே நாம் சுயராஜ்யம் பெற்றுவிடுவோமென்று நான் நிச்சயமாக நம்புகி றேன். ஆனால், இதற்குக் கடும் உழைப்பு அவசியமாகும். சில நிபந்தனைகளின் மீதுதான் நாம் நமது லட்சியத்தைப் பெற முடி யும். மாணவர்கள் தமது படிப்பை நிறுத்திவிட்டு, இந்தியாவின் நன்மைக்காகத் தொழிலாளர்களாகட்டும். நீங்கள் செய்யும் வேலைக்கு ஊதியம் கேட்காமலிருந்தால், அது உங்களுக்குப் பெரும் பெருமையளிக்கும்; அது உங்களுடைய அன்புப் பணியாயிருக்கும். ஆனால், ஊதியம் வேண்டுவோர் அதைக் கேட்டுப் பெறலாம்.

உங்களுக்கு புத்திமதி கூற நான் தகுதியுள்ளவன் என்று நீங்கள் கருதினால், பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் நீங்கள் விட்டுவிடுங்கள் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். சுயராஜ் யப் போராட்டத்தில் முழுப் பங்கு எடுத்துக்கொள்ளுவதற்கு உங்க ளுக்கு விருப்பமும், உறுதியும் இருந்தால், இந்தியாவுக்காக உங் களால் முடிந்த அளவுக்கு நூற்க வேண்டும். அது சாத்தியமில்லை யெனில், நாலு மணி நேரமாவது நூற்க வேண்டும். நீங்கள் அடி யோடு படிப்பை நிறுத்திவிட வேண்டும் என்று நான் சொல்ல வில்லை. அப்படியே நீங்கள் நிறுத்திவிட்டாலும், அதனால் உங்க ளுடைய அறிவு மங்கிவிடுமென்றும் நான் நினைக்கவில்லை. யாருடைய மனத்தில் அசுத்தமில்லையோ அவர்களுடைய அறிவு எப்போதும் அப்படியே இருக்கும். படிப்பதற்குப் புத்தகங்களே

இல்லாமல் நான் சிறையில் இருந்த காலத்தில், என்னல் இன்னும் நன்ருகச் சிந்தனை செய்ய முடிந்தது. இது என்னுடைய அனுபவம். அளவுக்கு மீறிய படிப்பினுல், நம்முடைய மூளைகள் அழுகிப் போய்விட்டன. அதனுல்தான் தினசரி ஆறுமணி நேரம் நூற்றுவிட்டு, மீதமுள்ள நேரத்தைப் படிப்பதில் செல விடுங்கள் என்று சொன்னேன். நீங்கள் நூற்கக் கற்றுக் கொண்டு, அதில் தேர்ச்சியும் பெற்ற பிறகு உங்களில் சிலர் கிராமங்களுக்குக் கூடச் சென்று, இதை அங்கேயும் பரப்ப லாம். ஆனல், உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை யென்ருல், கல்லூரிகளிலேயே இருந்துவிடலாம். நாமெல் லோருமே தினசரி நான்கு முதல் ஆறு மணி நேரம் வரையில் நூற் பதில் செலவிடாவிட்டால், நாம் சுயராஜ்யம் பெற முடியாது. ஒரு மாதத்தில் அல்லது அதிகமாகப்போனுல் மூன்று மாதங்களில் நூற் கக் கற்றுக் கொண்டுவிடலாம்; பின்னர் கிராமங்களுக்குச் சென்று அதை அங்கேயும் பரப்பலாம். தீராத நூல் பஞ்சத்தைப் போக்கு வதற்காக, வேண்டிய அளவு நூலை உற்பத்தி செய்வதுதான் இந்தி யாவை அதனுடைய லட்சியத்தை நோக்கி இட்டுச் செல்லுவதற்கு நமக்குள்ள நல்ல பலனளிக்கக் கூடிய வழியாகும். மேலும், நாம் அப்படிச் செய்யவில்லையென்ருல், காங்கிரஸ் அமைப்பின் கீழ் நாம் ஏற்றுக் கொண்டிருக்கும் வாக்காளர்களை எப்படி உண்டாக் கப் போகிருேம்? இன்றைய குஜராத்தி கிராமங்களுக்கு நான் என்ன செய்தியைக் கொடுக்கப் போகிறேன்? ஆங்கிலேயர்களைத் திட்டச் சொல்லட்டுமா? அல்லது அவர்களுக்கு ஆயுதங்கள் கொடுக்கட்டுமா? இல்லையென்ருல், அவர்களிடம் நான் என்ன சொல்லுவது? ஒவ்வொருவரும் உடனடியாக நூற்க ஆரம்பிக்க வேண்டும் என்பது ஒன்றுதான் என்னிடமுள்ள செய்தியாகும் கிராமவாசி யொருவர் ஆமதாபாத்திலிருந்து தனக்கு வேண்டிய துணியை வாங்குவதைப் பார்க்கும் போது, எனக்கு வேதனையா யிருக்கிறது. ஒவ்வொரு கிராமமும் தனக்குத் தேவைப்படுவதை உள்ளூரிலேயே உற்பத்தி செய்து கொள்ள வேண்டும் என்பதே சுதேசியின் கடமையாகும். இதுமுதல் ஒரு வருஷத்திற்கு இதையே தான் வேலைத் திட்டமாக வைத்துக் கொள்ள வேண்டு மென்று இங்கு கூடியுள்ள தலைமை ஆசிரியரையும், ஆசிரியர்களை யும் கேட்டுக் கொள்ளுகிறேன். மாணவர்கள் கிராமங்களுக்குப் போவதற்குப் பயிற்சியளித்து, அவர்களைத் தயார் செய்வதில் ஆசி ரியர்கள் கவனம் செலுத்தவேண்டும்.

இந்த வருடத்தில் பின் கண்டவற்றை நீங்கள் செய்து முடித் தால்போதும்: ஆங்கிலத்தைக் கைவிட்டுவிட்டு குஜராத்தியை அபி விருத்தி செய்து கொள்ளுவது, ஹிந்துஸ்தானி, உருது லிபிகளைக் கற்றுக் கொள்ளுவது, நன்கு நூற்கப் பயிற்சி பெறுவது. இதை நீங்கள் செய்து விட்டால், அடுத்த ஆண்டில் மேற்கொண்டு வேலைக் குத் தயாராயிருப்போம். சுயராஜ்யம் பெறும்வரையில் நாம் இந்த வேலைத் திட்டத்தைப் பின்பற்ற வேண்டுமென்றே நான் விரும்புகி றேன். ஆனல், அது சாத்தியமானதாகத் தோன்ருவிட்டால்,

ஒரு வருட காலத்திற்காவது இதைப் பின்பற்ற வேண்டும். நான் இன்று உங்களுக்கு அளிக்கும் செய்தி இதுதான்.

உங்களுக்குள்ள எந்த சந்தேகத்தையும் தெளிவுபடுத்திக் கொள்ள, நீங்கள் என்ன கேள்வி வேண்டுமானாலும் கேட்கலாம். ஆகையால், தயங்காதீர்கள். இந்தப் புதிய வேலைத் திட்டத்தில் நம்பிக்கையில்லாத ஒரு மாணவராவது இதை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று நான் விரும்பவில்லை. உங்களுடைய உள்ளத்திற்கும், அறிவுக்கும் பிடித்தமானதாயிருந்தால் மட்டும் இதை ஏற்றுக் கொள்ளுங்கள்.

## கேள்விகளும், பதில்களும்

**ஒரு மாணவர்:** நூல் நூற்பது, ஒத்துழையாமை இயக்கத்திற்கு எப்படி உதவியாக இருக்கும்?

**காந்திஜி:** இந்தியா பொருளாதார விடுதலை பெறுவதற்கு நூற்றல் உதவியாக இருக்கும். பொருளாதார சுதந்திரம் பெறும் வரையில் நாம் சுயராஜ்யம் பெற முடியாது; அப்படியே பெற்றாலும், அதன் பலன்களை அனுபவிக்க முடியாது. சோப்பு இல்லாமலும், ஊசி, குண்டூசி இல்லாமலும் நாம் காலம் தள்ள முடியும்; ஆனால், துணியில்லாமல் இருக்க முடியாது. இப்போது நம்முடைய ஏற்றுமதிகளும், இறக்குமதிகளும் சமமாக இல்லை; ஏற்றுமதிகளைவிட இறக்குமதிகள் மிகவும் அதிகமாக இருக்கின்றன. இதன் பலனாக, நமது வறுமை ஆண்டுதோறும் அதிகமாகிக் கொண்டே போகிறது. அத்துடன், ராணுவத்திற்காக ஆகும் பெரும் செலவையும் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. துணிக்காக நாம் அறுபது கோடி ரூபாய் கொடுக்கிறோம்; அதைத் தவிர, மற்றத் தேவைகளுக்காகவும் பெரும் அளவு தொகையை வீணடிக்கிறோம். ஆகையால், முதலில் நாம் பொருளாதார சுதந்திரம் பெற வேண்டும் என்பது தெளிவு. நூற்பது, அந்த அறுபது கோடி ரூபாயை மிச்சப்படுத்த உதவியாக இருக்கும்; அந்த அறுபது கோடியை நாம் மிச்சப்படுத்தினால், மீதமுள்ள தொகையையும் மிச்சப்படுத்தும் சக்தி நமக்கு ஏற்படும் அல்லது அவற்றை வெளியிலிருந்து வாங்கும் சுமையைத் தாங்கக் கூடிய நிலைமையிலாவது இருப்போம். ஒரு கடிகாரத் தொழிற்சாலையோ, குண்டூசித் தொழிற்சாலையோ இல்லாமல் இந்தியா இருக்க முடியும்; ஆனால், நமக்கு வேண்டிய துணியை நாமே உற்பத்தி செய்து கொள்ளாமல் இருக்க முடியாது.

**ஒரு மாணவர்:** கைராட்டினத்தைப் புகுத்துவது, மீண்டும் மாணவர்களிடையே ஒரு புயலை உண்டாக்கிவிடுமே.

**காந்திஜி:** அப்படிப் புயல் ஏற்படுவது வரவேற்கத்தக்கதுதான் மாணவர்கள் இன்னும் உயர்வு பெறுவதற்கு அது உதவி

செய்கிறது. மாணவர்கள் தமக்குத் தாமே சிந்தனை செய்யும்படியாக நிர்ப்பந்தப்படுத்துவதற்கு, இத்தகைய புயல்களை உண்டாக்க வேண்டியது என்னுடைய கடமையாகும்; ஆசிரியர்களுடைய கடமையுமாகும். இப்போது மாணவர்களுடைய உடல் விழிப்புடனிருந்த போதிலும், அறிவு உறங்கிக் கிடக்கிறது. இந்தப் புயல் காரணமாகவும், அதனால் மாணவர்களிடையே ஏற்படக்கூடிய மோதல் காரணமாகவும், ஒரு சிலராவது விழிப்படையக்கூடும். ஆகையால், அதில் ஒன்றும் தீங்கு இல்லை.

**ஒரு மாணவர் :** மாணவர்களைத் தவிர மற்றவர்களையும் நீங்கள் ஏன் நூற்கச் சொல்லக்கூடாது? மாணவர்கள் மட்டும் படிப்பைவிட வேண்டுமென்று ஏன் சொல்லுகிறீர்கள்?

**காந்திஜி :** நூற்பது கல்வியல்ல என்று நினைப்பது நம்முடைய முதலாவது தவறாகும். தியாகம் செய்வது கல்வியல்ல என்று நினைப்பது இரண்டாவது தவறாகும். தம்முடைய படிப்பை தியாகம் செய்வதன்மூலம் தேசத்திற்குத் தொண்டு செய்ய வேண்டியது தமது கடமை என்பதை மாணவர்கள் நாளைக்கு உணர்வார்களாயின், இந்த வருடத்திற்கு நான் செய்ய வேண்டிய வேலை இப்போதே முடிந்துவிட்டதாகக் கருதுவேன்.

**ஒரு மாணவர் :** இந்த மாறுதல் ஒத்துழையாமை இயக்கத்திற்கு ஒரு முட்டுக்கட்டையாக இராதா?

**காந்திஜி :** இராது; சர்க்கார் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விடுபவர்கள், சர்க்கார் அளிக்கும் கல்வி அசுத்தமானது என்ற நம்பிக்கையுடன் விடவேண்டும். இந்த ஸ்தாபனத்தினிடம் உள்ள ஒரு கவர்ச்சியினால், அவற்றை விடுவதாயிருந்தால், அப்படிச் செய்யக்கூடாது; அந்த நிலைமையில் இப்போதுள்ள கல்லூரிகளே அவர்களுக்குப் போதும். வெறும் இலக்கியக் கல்வி போதிப்பதற்காக மட்டும் இந்த ஸ்தாபனத்தை நாங்கள் ஆரம்பிக்கவில்லை. ஆகையால், மற்றக் கல்லூரிகளைப் போல் இதுவும் ஒரு கல்லூரியல்ல. இப்போது இதுதான் நம்முடைய கடமை என்பதை நாம் தெளிவாக உணர்ந்தால், ஒரு வருட காலத்திற்கு இந்த வேலையைச் செய்வது தேசத்திற்கு நன்மை செய்யும் என்பதை உணர்ந்தால், சுயராஜ்யம் பெறுவதற்கு அது நமக்கு உதவி செய்யும் என்பதை உணர்ந்தால், அதை நாம் செய்யத்தான் வேண்டும்.

**ஒரு மாணவர் :** எங்களுடைய கவனம் பூராவையும் கைராட்டினத்திலேயே செலுத்திக் கொண்டிருந்தால், எங்களுடைய பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் நாங்கள் பெற்ற அறிவை நாங்கள் மறந்துவிடக்கூடும் என்று நீங்கள் நினைக்கவில்லையா?

**காந்திஜி :** கைராட்டினம் நமக்கு சுதந்திரம் தேடித்தரும்; ஆகையால், அது நம்மை இலக்கிய அறிவுக்கு உண்மையாகவே தகுதியுள்ளவர்களாக்கிவிடும். இவ்வாருக, கைராட்டினம் இப்போதைய கல்விக்கு ஒரு புதிய விறுவிறுப்பைக் கொடுக்கும்.

# 6

# ஒரு புதிய உண்மை

ஒரு புதிய உண்மையை, இன்னும் சிறந்த ஒரு உண்மையை சமர்ப்பிப்பதற்காக இன்று உங்கள் முன்பு நான் வந்திருக்கிறேன். பன்னிரண்டு மாதங்களுக்குள் சுயராஜ்யம் பெறுவதென்று நீங்கள் உறுதி கொண்டிருந்தால், ஒரு வருடத்திற்குள் சுயராஜ்யம் பெறுவதற்கு உதவி செய்வதென்று நீங்கள் உறுதி கொண்டிருந்தால், இப்போது நான் சொல்லப்போகும் யோசனையை ஏற்றுக் கொள்ளுவதன் மூலம், ஏற்கனவே சுயராஜ்யத்திற்காகத் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்துள்ளவர்களின் வேலையைச் சுலபமானதாகவும், தெளிவானதாகவும் செய்யுங்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். நீங்கள் எந்த ஸ்தாபனங்களை விட்டு விட்டு வந்திருக்கிறீர்களோ, அதே ரீதியில் உங்களுடைய கல்லூரிகளையும், பள்ளிக்கூடங்களையும் தொடர்ந்து நடத்துவதன் மூலம் சுயராஜ்யம் பெற முடியுமென்று நீங்கள் நினைத்தால், அது வருந்தத்தக்க தவருகும். வேதனையும், தியாகமும் இல்லாமல் உலகத்தில் எந்த நாடும் சுதந்திரம் பெற்றதில்லை; சங்கடங்களில்லாமல் புதிய பிறப்பைப் பார்த்ததில்லை. தியாகம் என்ருல் என்ன? புனிதமாக்குவது என்பதே, தியாகம் என்ற வார்த்தைக்கு எனது இளமையில் நான் கற்ற சரியான அர்த்தமாகும். ஒத்துழையாமை என்பது பரிசுத்தத்திற்கான ஒரு மார்க்கம்; அந்தப் பரிசுத்தத்தைப் பெறுவதற்காக நமது சாதாரணமான மாமூலை நிறுத்தி வைக்க வேண்டியது அவசியமாயிருந்தால், அதைச் செய்துதானுக வேண்டும். வங்காளத்தை எனக்குத் தெரியும். இதை நீங்கள் தட்டிக் கழிக்க மாட்டீர்களென்றும், இதை நீங்கள் ஏற்றுக் கொள்ளுவீர்களென்றும் எனக்குத் தெரியும்.

நமது கல்வியில் இரண்டு விஷயங்கள் மிகவும் குறைவாக இருந்திருக்கின்றன. நமது கல்வியமைப்பை உருவாக்கியவர்கள் உடலுக்கும், உள்ளத்திற்கும் பயிற்சியளிப்பதைப் புறக்கணித்து விட்டார்கள். உள்ளத்திற்கான கல்வியை நீங்கள் பெற்றுவருகிறீர்கள்; ஆனுல், ஒத்துழையாமைக்காகவே ஒத்துழையாமை என்பது, இந்த சர்க்கார் தொடர்ந்து செய்துகொண்டேயிருக்கும் தீமையிலிருந்து வாபஸ் பெறுவது என்பதைத் தவிர வேறொன்றுமில்லை. மனமறிந்து வேண்டுமென்று நாம் தீமையிலிருந்து வாபஸ் பெறுகிறேமென்ருல், கடவுளை நோக்கி

நமது முகங்களைத் திருப்பிக் கொண்டு செல்லுகிறோம் என்று தான் அர்த்தம். அது உள்ளத்தின் பயிற்சியை முடிவுறச் செய் கிறது அல்லது ஆரம்பித்து வைக்கிறது என்று எடுத்துக் கொள் ளலாம். இந்தியா கைராட்டினத்தை மறந்ததால், இந்தியா உதவாக்கரையான ஒன்றுக்குத் தன்னை விற்றுக்கொண்டதால் அது அடிமைத்தனத்தில் அகப்பட்டுக் கொண்டது. ஆகை யால், வங்காள இளைஞர்களாகிய நீங்கள் கைராட்டினத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கோர நான் அஞ்சவில்லை. இந்தச் சோதனை வருடத்தின்போது, நூற்பதில் பயிற்சி பெற்று, உங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு நூலை உற்பத்தி செய்யுங்கள். இதுவே உங்களுடைய முக்கிய நோக்கமாகவும், பயிற்சியாகவும் இருக்கட்டும். சுயராஜ்யம் ஏற்பட்ட பிறகு உங்களுடைய சாதாரணக் கல்வி ஆரம்ப மாகட்டும். ஆனால், வங்காளத்திலுள்ள ஒவ்வொரு இளைஞனும் ஒவ்வொரு யுவதியும் நூற்பதிலேயே தமது நேரத்தைச் செலவு செய்வதைத் தமது புனிதமான கடமையாகக் கொள்ளட்டும். யுத்தத்திலிருந்து கிடைக்கும் உதாரணத்தை உங்கள் கவனத் திற்குக் கொண்டு வந்திருக்கிறேன்.

—'எங் இந்தியா' 2—2—1921

7

# ஒத்துழையாமையும் இலக்கியப் பயிற்சியும்

இலக்கியப் பயிற்சி அவசியமானதுதான். எழுதவும், படிக்கவும் ஒருவருக்குத் தெரிந்திருக்க வேண்டியதே. ஆனால், அத்துடன் எல்லாம் முடிந்து விடவில்லை. முடிவுக்கான ஒரு மார்க்கம்தான் அது; எழுதப்படிக்கத் தெரியாமலே விஷய அறிவு இருந்தால் போதாதா? உலகத்தின் பல பெரிய ஆசிரியர் களுக்கும், சீர்திருத்தவாதிகளுக்கும் எழுதப் படிக்கத் தெரியாது. ஏசுநாதருக்கும், முகமது நபிகளுக்கும் படிப்பு கிடையாது, போயர் ஜனாதிபதியான குரூகருக்கு. கஷ்டப்பட்டுத் தன் கையெழுத்தை மட்டும்தான் போடத் தெரியும். அவருடைய படிப்பு அவ்வளவுதான். மாஜி ஆப்கானிஸ்தான அமீரின் விஷய மும் அப்படித்தான். ஆனால், அவர்கள் ஒவ்வொருவருக்குமே அநேகமாக அளவற்ற விஷய அறிவு இருந்தது.

ஆனால், நான் சாதாரணமான மனிதர்களைப்பற்றிப் பேசுவ தாகச் சொல்லலாம். அது உண்மைதான். எனினும், படிப்பில் லாமலிருப்பது அசாத்தியமல்ல என்பதை அது ருசுப்பிக்கிறது. இன்றைக்கும் கூட, உலக ஜனத்தொகையில் பெரும் பகுதியினர் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாகவே இருக்கிறார்கள்; ஆனால்

அவர்களுக்கு விஷய அறிவு இல்லாமலில்லை. உண்மையில் பார்க்கப் போனால், நம்முடைய வாழ்க்கைக்கு உலகத்திலுள்ள அத்தகையவர்களைத்தான் நாம் நம்பியிருக்கிறோம். சுதந்திரப் போராட்டம் நடந்துகொண்டிருக்கும் வரையில் நமது குழந்தைகள் இலக்கியக் கல்வி பெற முடியாமலிருந்தால், அதனால் அவர்களுக்கும், தேசத்திற்கும் நல்லதுதான் என்பதைக் காட்டுவதற்காகவே இதையெல்லாம் எழுதுகிறேன். ஒரு வீட்டிலுள்ள காற்று விஷத் தன்மை வாய்ந்ததாகி விட்டால், அது சுத்தமாகும் வரையில் அந்த வீட்டைக் காலி செய்வதுதான் புத்திசாலித்தனம். அதைப் போலவே, விஷத் தன்மை வாய்ந்த சர்க்கார் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் காலி செய்வதும் நமக்கு நல்லதுதான்.

அதுவரையில் நமது பிள்ளைகள் என்ன செய்வார்கள்? மக்களுக்குத் தம்முடைய கடமையைப்பற்றிய உணர்வு இருந்தால், தம்மிடமுள்ள பெரிய கட்டிடங்களில் சிலவற்றை தாராளமாக நமக்குக் கொடுப்பார்கள்; நமது பிள்ளைகளுக்கு அங்கு பாடம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்யலாம். ஆனால், இப்படி நடக்கவில்லையென்றாலும் கூட, திறந்த வெளியில் வகுப்புகளை நடத்த ஏற்பாடு செய்ய முடியும். நூற்பது, பக்திப் பாடல்கள் பாடுவது, உடற்பயிற்சி செய்வது முதலியவைகளை அங்கே நடத்தலாம். காங்கிரஸ் தீர்மானத்தின்படி நமது ஆசிரியர்களில் பலர் இப்போது சிறைக்குப் போகத் தயாராக வேண்டும். ஆகையால், குறைந்தபட்ச ஆசிரியர்களைக்கொண்டு நமது வேலையை நடத்துவதற்குச் சௌகரியமான விதத்தில் இப்போது நமது கல்வி முறையை மாற்ற வேண்டும். வயது முதிர்ந்த பெண்களிடம் சிறுவர்களை ஒப்படைப்பதில் எனக்குத் தயக்கமே இல்லை. அவர்கள் ஏற்கனவே நூற்க ஆரம்பித்துவிட்டார்கள். குழந்தைகளையும் அவர்கள் கவனித்துக் கொள்ளட்டும். மரியாதையாக நடந்து கொள்ளுவதற்கு நமது பையன்களுக்கு நாம் கற்றுக் கொடுத்திருந்தால், பெண்களுக்கு அதிக மரியாதை கொடுப்பதன் மூலம், நன்றாகப் பழகத் தெரிந்து கொள்ளுவார்கள்; பெண்களும் இன்னும் அதிகமான, நல்ல சேவைகளுக்கான பயிற்சியைப் பெறுவார்கள்.

—' நவஜீவன் ' – 15—1—1922

# 8

# ஆங்கில அறிவு

**வி**யாபார காரணத்திற்காகவும், அதிலிருப்பதாகச் சொல்லப்படும் அரசியல் மதிப்புக்காகவும் தான் இன்று ஆங்கிலம் கற்கப்படுகிறதென்பது ஒருவேளை கவிஞருக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆங்கிலம் இல்லாமல் தமக்கு சர்க்கார் உத்தியோகம் கிடைக்காதென்று நமது பையன்கள் நினைக்கிறார்கள். இப்போதுள்ள நிலைமையில், அவர்கள் நினைப்பது சரிதான். திருமணத்திற்கு ஒரு அனுமதிச் சீட்டாகப் பெண்களுக்கு ஆங்கிலம் போதிக்கப்படுகிறது. ஆங்கிலேயர்களுடன் ஆங்கிலத்தில் பேசலாமே என்பதற்காகப் பல பெண்கள் ஆங்கிலம் கற்க விரும்புவதை நான் அறிவேன். தம்மிடமும், தம்முடைய நண்பர்களிடமும் தமது மனைவி மார்கள் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்று வருத்தப்படும் கணவன்மார்களை நான் அறிவேன். ஆங்கிலம் தாய் மொழியாக்கப்படும் குடும்பங்களையும் நான் அறிவேன். ஆங்கில அறிவில்லாமல் இந்தியாவுக்கு சுதந்திரம் என்பது அநேகமாக அசாத்தியம் என்று நூற்றுக்கணக்கான இளைஞர்கள் நம்புகிறார்கள். ஆங்கிலம் என்ற புற்று நோய் நம் சமூகத்தில் அவ்வளவு ஆழ்ந்து புரையோடி யிருக்கிறது; இதன் பலனாக, பல இடங்களில் கல்வி என்பதற்கான ஒரே அர்த்தம் ஆங்கில அறிவு என்றாகிவிட்டது. இவையெல்லாம் நமது அடிமைத்தனத்திற்கும், இழிவுக்கும் அடையாளங்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. நமது இந்திய மொழிகள் இப்படி நசுக்கப்பட்டு, சாகடிக்கப்படுவதைக் காண எனக்குத் தாங்க முடியவில்லை. பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கும், கணவர்கள் தமது மனைவிகளுக்கும் தமது சொந்த மொழியில் எழுதாமல், ஆங்கிலத்தில் எழுதுவது என்பதை என்னால் சகிக்க முடியவில்லை. அந்த மாபெரும் கவிஞரைப் போலவே நானும் சுதந்திரமான காற்றில் அவ்வளவு நம்பிக்கை உடையவன் என்றே நம்புகிறேன். என் வீட்டைச் சுற்றி நாலாபுறங்களிலும் சுவர் எழுப்பப்பட்டு எனது ஜன்னல்கள் அடைக்கப்படுவதை நான் விரும்பவில்லை. எனது வீட்டைச் சுற்றி எல்லா நாடுகளின் பண்பாடுகளும் முடிந்த அளவு சுதந்திரத்துடன் வீசவேண்டுமென்றே நான் ஆசைப்படுகிறேன். ஆனால், எதுவும் என்னைத் தலைகுப்புறக் கவிழ்ப்பதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. மூன்றாவது மனிதனாகவோ, பிச்சைக்காரனாகவோ, அடிமையாகவோ மற்றவர்களின் வீடுகளில் வசிக்க நான் மறுக்கிறேன். வறட்டு கௌரவத்திற்காகவோ, நிச்சயமில்லாத சமூக அந்தஸ்திற்காகவோ, ஆங்கிலம் கற்றுக் கொள்ள வைக்கும் அனாவசியமான நிர்ப்பந்தத்தை எனது சகோதரிகளின்மீது சுமத்த நான் விரும்பவில்லை. இலக்கிய ஆர்வமுள்ள நமது இளைஞர்களும், யுவதிகளும் தங்களுக்கு விருப்பமான அளவுக்கு ஆங்கிலத்தையும், இதர உலக மொழிகளையும் கற்றுக்

கொள்ளட்டும்; பின்னர், ஒரு போஸைப்போல, ஒரு ராயைப் போல, அல்லது கவிஞரையே போல, தமது அறிவின் பலனை இந்தியாவுக்கும், உலகத்திற்கும் அளிக்கட்டும். ஆனால், ஒரு இந்தியனாவது தன் தாய் மொழியை மறப்பதையோ, புறக்கணிப் பதையோ அல்லது அதைப்பற்றி வெட்கப்படுவதையோ நான் அனுமதிக்கமாட்டேன்; தம்முடைய சொந்த மொழியில் சிந்திக்க முடியாதென்றோ, சிறந்த சிந்தனைகளைத் தம் தாய் மொழியில் வெளியிட முடியாதென்றோ நினைப்பதையும் நான் அனுமதிக்க மாட்டேன். என்னுடைய மதம் சிறைக்கூடத்தின் மதமல்ல. கடவுளின் மிகவும் தாழ்மையான சிருஷ்டிக்கும் அதில் இடமுண்டு. ஆனால், அகம்பாவம், சாதி அல்லது மதம் அல்லது நிறத்தின் பெருமைக்கு அதில் இடமில்லை. மனிதவர்க்கத்தின் சீர்திருத்தம், பரிசுத்தம், தேசபக்தி ஆகியவைகளுக்கான இந்த மகத்தான இயக்கத்தை கவிஞர் தப்பு அர்த்தம் செய்துகொண்டிருப்பதுபற்றி மிகவும் வருந்துகிறேன். அவர் பொறுமையுடன் இருந்தால், தன்னுடைய நாட்டினரைப்பற்றி வருத்தமோ, வெட்கமோ அடைவதற்கு ஒரு காரணமும் இல்லை என்பதை அவரே அறிவார். சில வெளித்தோற்றங்களைக் கண்டு, அவையேதான் இயக்கமோ என்று தவறாக நினைத்துவிட வேண்டாம் என்று மரியாதையுடன் அவரை எச்சரிக்கிறேன். டயர்கள் அல்லது ஓட்வியர்களை உதாரணமாக வைத்துக்கொண்டு ஆங்கிலேயர்களை மதிப்பிடுவது எவ்வளவு தவறாகுமோ, அதே மாதிரி லண்டனிலோ, இந்தியாவிலோ மாணவர்கள் தவறாக நடந்து கொண்டதை வைத்துக்கொண்டு ஒத்துழையாமையை மதிப்பிடுவதும் தவறாகும்.

—' எங் இந்தியா ' – 1 –6—1921

# 9

# ஒத்துழையாமை செய்யும் மாணவர்கள்

## 1

நான் தெரிவித்த சில கருத்துகள் மாணவர்களிடையே ஒரு கண்டனப் புயலை எழுப்பியிருப்பதாக அறிகிறேன். இந்த மாணவர்களில் சிலர், தமது கடிதங்களின் மூலம் என்மீது சொல்லம்புகளை வீசிக் கொண்டிருக்கிறார்கள்.

மாணவர்கள் செய்துள்ள தியாகத்தைக் கண்டு நான் பெருமைப்படுகிறேன். மாணவர்கள் நாட்டுக்கு நல்ல சேவை செய்திருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், அவர்கள் நிறையச் செய்திருந்த போதிலும், அவர்கள் இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. தியாகத்திற்கு ஒரு வரம்பே இருக்க முடியாது. தாம் செய்துள்ள தியாகம் போது

மானது என்று சொல்பவர்கள், அது தற்பெருமை என்பதையும், அவர்களுடைய தியாகத்தினல் ஏற்பட்டிருக்கக்கூடிய பலன் களை அது சூன்யமாக்கிவிடும் என்பதையும் மறந்துவிடுகிருர்கள். மிகவும் பரிபூர்ணமான தியாகத்திற்குப் பிறகுதான் சுயராஜ்யம் கிடைக்கும். நமது தியாகத்தை மதிப்பிடுவதற்கான சோதனை அதுதான். நாம் சுயராஜ்யம் பெருமலிருக்கும் வரையில், நமது தியாகம் பூர்த்தியானதாக இல்லை என்றே கருதப்படவேண்டும்

மேலும், ஒருவருடைய தியாகம் அவருக்கு வருத்தத்தை விளைவித்தால் அது தியாகமல்ல. உண்மையான தியாகம் என் பது தியாகம் செய்பவரின் மனத்திலுள்ள பாரத்தை இறக்கி, அவருக்கு ஒரு சாந்தியையும், மகிழ்ச்சியையும் அளிக்கும். வாழ்க் கையின் சுகங்கள் மனதுக்கு வேதனையளிப்பவையாக இருந்த தால்தான் புத்தர் அவற்றைத் துறந்தார். .உண்மையில், இந்தத் தியாகமே அவருக்கு சுகானுபவமாயிருந்தது. அவருக்கு தியாகம் என்பது போகமாக இருந்தது; அதனல்தான் அது நிலைத் திருந்தது.

பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விட வேண்டியதன் அவசியத்தை மனப்பூர்வமாக உணர்ந்தால்தான், சர்க்கார் பள்ளிக் கூடங்களின் பகிஷ்காரம் உண்மையானதா யிருக்கும். ஒரு பொற் கூண்டில் வசிக்கும் கிளிக்கு பாம்பு போன்ற ஜந்துக்களின் அபாயம் கொஞ்சமும் கிடையாது. அதற்கு நிச்சயமாக காலா காலத்தில் ஆகாரமும் கிடைக்கிறது. ஆயினும், எஜமான் அந்தக் கூண்டின் கதவைத் திறந்தால், கிளி பறந்தோடிப்போய் ஒரு மரக் கிளையில் உட்கார்ந்துகொண்டு, அதில் ஒய்யாரமாக ஊசலாடிக் கொண்டே பரமானந்தத்தை அனுபவிக்கும். இந்த சுதந்திரத் திற்குக் கடுமையான பொறுப்புகள் உண்டு என்று அதற்குத் தெரியும்; ஆகாரத்திற்குத் தேடியலைய வேண்டும் என்பதும், பாம்புகள், மற்றும் பெரிய பறவைகளிடமிருந்து தனக்கு அபாயம் வரும் என்றும் அதற்குத் தெரியும். ஆனல், அதைப்பற்றியெல் லாம் அது கவலைப்படுவதில்லை. பொன் கூண்டிடமும், அத னுடைய எஜமானனிடமும் இந்தக் கிளி செய்யும் ஒத்துழையாமை நிலைத்து நிற்கும். ஏனெனில், கூண்டையும், அதனல் கிடைத்த பந்தோபஸ்தையும் தியாகம் செய்தது மகிழ்ச்சிக்குரிய காரியம் என்று அந்தக் கிளி கருதுகிறது. எஜமானன் தம்மீது வைத் திருந்த அன்பு சுயநலத் தன்மை வாய்ந்தது என்று அதற்குத் தெரியும். அங்கு அனுபவித்த வசதிகள் அதற்கு எரிச்சலூட்டு பவையாகத் தோன்றியிருக்கின்றன. சுதந்திரமே விலை மதிப்பில் லாத மிகவும் உயர்ந்த சொத்து என்பதையும், நவரத்தினங்களாக வைத்து இழைத்திருந்தாலும் கூண்டு கூண்டுதான் என்பதையும் அது உணர்ந்துவிட்டது. அதனல்தான் கூண்டின் கதவைத் திறந்த உடனேயே, அது பறந்தோடி விட்டது.

சர்க்கார் பள்ளிக்கூடங்கள் அபாயகரமான படுகுழிகள் என்பதை உணர்ந்து அவற்றிலிருந்து வெளியே வந்துவிட்ட மாண

வர்கள், தாம் படிப்பதற்கு வேறு சுதந்திரமான பள்ளிக்கூடங்கள் இருந்தாலும், இல்லாவிட்டாலும் திரும்ப அங்கு போகமாட்டார்கள். இந்தத் தியாக உணர்ச்சியுள்ள மாணவர்களுக்குத்தான் பள்ளிக்கூடங்களை விடுவதற்கு உரிமை உண்டு. ஒத்துழையாமையை நிறுத்திவைப்பது, ஒத்துழையாமையின் மதிப்பை இன்னும் அறியாதவர்கள், யாருடைய கண்டனத்திற்கும் உட்படாமல் அதைக் கைவிடுவதற்கு வாய்ப்பு பெறுவது என்பதேயாகும். நாம் சுலபமாகத் தாங்க முடியாத தியாகம், தவறானது என்று நமக்குத் தோன்றும் தியாகம் ஆகியவற்றினால் நமக்கு ஒரு நன்மையும் ஏற்படாது. ஒத்துழையாமை நிறுத்தி வைக்கப்படும்போது, இத்தகைய மனமில்லாத ஒத்துழையாமையாளர்கள் காங்கிரஸ் கட்டுப்பாட்டிலிருந்து விடுவிக்கப்படுவார்கள்; அவர்கள் திரும்பவும் சர்க்கார் பள்ளிகளுக்குப் போவதற்கு வாய்ப்பு கிடைக்கும்.

ஆனால், இந்தப் பள்ளிக்கூடங்கள் சிறைச்சாலைகளைப்போல் சகிக்க முடியாதவைகளாக இருக்கின்றன என்று நினைப்பவர்கள், என்ன நேர்ந்தாலும் கூட, சுயராஜ்யம் கிடைக்கும் வரையில் அங்கு திரும்பிச் செல்ல மாட்டார்கள். இவ்வாறாக, மாணவர்களுக்கும் சரி, மற்ற ஒத்துழையாமையாளர்களுக்கும் சரி, எப்போதுமே இருந்த பிரச்னைதான் இப்போதும் இருக்கிறது. இப்போது ஒரே ஒரு வித்தியாசம் இருக்கிறது. அதாவது காங்கிரஸ் விதித்திருந்த தடை காரணமாக சர்க்கார் பள்ளிக்கூடங்களுக்குப் போக முடியாமல் இருந்தவர்களுக்கு, இப்போது அந்தத் தடை நீங்கி விடுகிறது. ஆனால், தங்கள் மனச்சாட்சியின் கட்டளைக்கிணங்க தமது பள்ளிக்கூடங்களை விட்டவர்களுக்கு அந்தக் கட்டுப்பாடு அப்படியேதான் இருக்கிறது.

இப்படிப் பார்க்கும்போது, சர்க்கார் கல்விக்கும், தேசீயக் கல்விக்குமிடையே உள்ள வித்தியாசம் கற்பனையில் உள்ளது தான்; ஏனெனில், கொள்கையை அடிப்படையாகக் கொண்ட வித்தியாசம் இராது. ஆயினும், கொள்கையை அடிப்படையாகக் கொண்ட ஒரு வித்தியாசமும் இருக்கிறது – கொடிக்கும், அதன் உரிமையாளருக்கும் உள்ள வித்தியாசத்தைப்போல. என்னுடைய வீட்டில் சமைக்கப்படும் உணவும், இன்னொரு வீட்டில் சமைக்கப்படும் உணவும் ஒரே மாதிரியானவைதான்; ஆனால் இன்னொருவர் வீட்டில் சமைக்கப்படும் உணவை எடுத்துக் கொள்ளுவது திருட்டாகும்; ஆகையால், அது தடை செய்யப்பட்டதாகவே கருத வேண்டும். நமக்கு வீட்டில் கிடைப்பதுபோன்ற உணவே சிறைச்சாலையிலும் நமக்குக் கிடைக்கலாம்; ஆனால், அதற்காக நாம் வீட்டு உணவைப்போல் அதை நல்லதாகக் கருத முடியாது. சர்க்கார் பள்ளிக்கூடத்தை சிறைச்சாலையாக நினைக்காத மாணவர் அங்கு திரும்பப் போய்விடலாம். அவரைக் குறை கூறுவதற்கு மற்றவர்களுக்கு உரிமை இல்லை. ஒருவருக்குச் சிறைவாசமாகத் தோன்றுவது, இன்னொருவருக்கு சுதந்திரமாகத் தோன்றுவது முற்றிலும் சாத்தியமே.

உண்மையானதும், அடிப்படையானதுமான ஒரு இயக்கம், சிந்தனையின் போக்கில் ஒரு மாறுதலை உண்டாக்குகிறது. சிந்தனை மாறுதலைத் தொடர்ந்து செயல்படுவதும் தானாகவே ஏற்படுகிறது. முன்னதாகவே சிந்தனை மாறுதலின்றிச் செய்யப்படும் ஒரு செய்கை ஒரு சுமையாயிருக்கும். அதனால் ஒருவருக்கு எந்த நன்மையும் ஏற்படுவதில்லை. சிந்தனை செய்யாத ஒருவன் அப்படியே மற்றொருவனைப் பின்பற்றுபவனாவான். பொதுவாக, சிந்தனை செய்யும் சக்தி நம்மிடம் இல்லை. அதனால்தான் எல்லா இடங்களிலுமே பக்தர்கள் நல்ல சேர்க்கையைப் புகழ்ந்து பாடியிருக்கிறார்கள்.

பூராவாக யோசித்துப் பார்க்காமல் ஒருவர் ஒத்துழையாமை இயக்கத்தில் சேரக்கூடிய காலம் போய்விட்டது; இனிமேல் இதில் சேருவதானாலும், சேர்ந்தவர்கள் தொடர்ந்து நீடிப்பதானாலும், அதைப்பற்றி ஜாக்கிரதையாக யோசித்துப் பார்த்து, அதன் அர்த்தம் என்ன என்பதைப் பூராவாக உணர்ந்த பிறகுதான் அப்படிச் செய்ய முடியும். காங்கிரஸ் விதித்திருந்த வெளித் தடைகள், தற்கால சாந்தியான மருந்தைப்போல், கொஞ்ச காலத்திற்குத்தான் வேலை செய்ய முடியும். மூன்று, நான்கு வருட சோதனைக்குப் பிறகு, பள்ளிக்கூடங்கள் சம்பந்தப்பட்டவரையில் ஒத்துழையாமை சரியானதுதானா என்று பல அறிஞர்கள் சந்தேகப்பட ஆரம்பித்திருப்பதைக் காண்கிறோம். அவர்களுடைய யோசனையை நாம் கேட்பதாயிருந்தால், அவர்களில் பெரும்பாலோர் சர்க்கார் பள்ளிக்கூடங்களை பகிஷ்கரிப்பதற்கு விரோதமாக இருப்பார்கள். இத்தகைய எதிரிடையான சூழ்நிலையில், சுதந்திரமாகச் சிந்திக்கக் கூடிய குறிப்பிட்ட ஒரு சில மாணவர்கள் தான் ஒத்துழையாமை செய்ய வேண்டுமென்ற தம் உறுதியைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். அத்தகைய மாணவர்களுக்கு உதவி செய்வதுதான் தேசீயப் பள்ளிகள், கல்லூரிகளின் நோக்கமாகும். என்னை இந்த ஸ்தாபனத்தின் 'குலபதி' (அத்யட்சகர்) என்று அழைக்கிறார்கள். இந்தப் பதவியை வகிப்பதற்கு எனக்குள்ள தகுதி என்னுடைய உயர்ந்த படிப்பைப் பொறுத்திருக்கவில்லையென்பது நிச்சயம். இந்தப் பதவியை வகிக்க எனக்கு ஏதாவது யோக்கியதை இருக்கிறதென்றால், ஒத்துழையாமைத் துறையில் எனக்குள்ள பெயரே அதற்குக் காரணமாக இருக்க வேண்டும். ஆகையால், கல்வி விஷயத்தில் ஒத்துழையாமைக்கு ஆதரவான அம்சங்களை நான் வற்புறுத்தியிருந்தால், அது மன்னிக்கத் தகுந்தது என்று மட்டுமின்றி, பாராட்டத் தகுந்தது என்றும் கருதப்பட வேண்டும்.

ஆனால், இந்த விஷயத்தில் எனது நிலையைத் தவறாக அர்த்தம் செய்து கொண்டிருக்கிறார்கள்; அதாவது, எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளுவதையும், அறிவு பெறுவதையும் நான் எதிர்ப்பவன் என்று தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மை

அதற்கு நேர்மாருனது. எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பதை நிறுத்திவிட்டு, அதற்குப் பதிலாக பஞ்சு பட்டைபோடுதல், நூற்றல் ஆகியவற்றை மட்டுமே கற்றுக் கொடுக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. மாணவர்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பதுடன், போதிய அளவுக்குப் புத்தக அறிவும் கொடுக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். புத்தக அறிவு விஷயத்தில், அவர்கள் சர்க்கார் பள்ளிகளில் படிப்பவர்களுக்குச் சமமானவர்களாக இருக்கவேண்டும்.

ஆனால், வெறும் புத்தக அறிவு மட்டும் எனக்குத் திருப்தியளிக்க முடியாது. சர்க்கார் உத்தியோகங்களுக்காகவோ, குமாஸ்தாக்களுக்காகவோ தயாரிப்பதுதான் சர்க்கார் பள்ளிக்கூடங்களின் நோக்கம். அங்கு எழுதப் படிக்கக் கற்றுக்கொடுக்கப்படுகிறது. ஆனால், தேசீயப் பள்ளிக்கூடங்கள் தமக்கு விதித்துக் கொண்டுள்ள லட்சியம் சுயராஜ்யம், விடுதலை, தன்னம்பிக்கை. ஆகையால், இந்தப் பள்ளிக்கூடங்களில் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுப்பதுடன் உள்ளத் தூய்மையையும், உறுதியையும் வளர்க்கவும், உடலுழைப்பின் மேன்மையைப் போதிக்கவும் வேண்டும். தேசீயப் பள்ளிக்கூடங்களில் எழுதப் படிக்கத் தெரிவதை ஒரு முடிவாகக் கருதுவதற்குப் பதிலாக, நல்லொழுக்கத்தை வளர்க்கவும், சுயராஜ்யம் பெறவும் அதை ஒரு சாதனமாகக் கருதவேண்டும். மாணவர்களுக்குத் தூய்மையையும், ஒழுக்கத்தையும் போதிக்க வேண்டுமானால், தூய்மையும், உறுதியும் கொண்ட ஆசிரியர்கள் நமக்கு வேண்டும். கைராட்டினமே நம் ஆயுதசாலையிலுள்ள மிகவும் சக்தி வாய்ந்த ஆயுதமாகையால், தேசீயப் பள்ளிக்கூடங்களில் நம்முடைய போதனா முறையில் அதற்கு முதலிடம் கொடுக்க வேண்டியது அத்தியாவசியமாகும். காங்கிரஸ் மகாசபை தன்னுடைய தீர்மானங்களில் கைராட்டினத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்திருக்கிறது; ஆயினும், இந்தத் தீர்மானங்களை நிறைவேற்றுபவர்கள் அவற்றின்படி நடப்பதில்லையென்பதும் உண்மைதான். காங்கிரஸ் அங்கத்தினர்கள் மனப்பூர்வமாகவும், பூராவாகவும் தாம் நிறைவேற்றிய தீர்மானங்களைச் செயலில் காட்டியிருந்தால், இதற்குள்ளாக நாம் சுயராஜ்யம் பெற்றிருப்போம் அல்லது அதன் பிரகாசமான வாயிலுக்கு அருகிலாவது வந்திருப்போம். ஆனால், அந்த காங்கிரஸ் அங்கத்தினர்களின் அசட்டையையும், விசுவாசமின்மையையும் மாணவர்கள் பின்பற்றக் கூடாது. இளைஞர்கள் வயதானவர்களின் வழிகளைப் பின்பற்றினால் அழிந்துவிடுவார்கள். துளஸிதாசர் கூறியிருக்கிருர்: "பலசாலிகள் என்ன செய்தாலும் குற்றமில்லை." மக்கள் அவர்களுடைய தவறுகளை மன்னித்து விடுகிருர்கள். ஆனால், பலசாலிகளின் வழிகளை நாம் பின்பற்ற முடியாது. எந்த தேசீயப் பள்ளிக்கூடத்தில் ஹிந்தியையும், உருதுவையும் போதிப்பது கட்டாயமானதாக்கப்படவில்லையோ, அது தேசத்தின் பலத்தைப் பெருக்காது. அதே மாதிரி, தீண்டாதார்களைச் சேர்த்துக் கொள்ள மறுக்கும் ஒரு தேசீயப் பள்ளியை, தேச நன்மையை

முன்னிட்டு மூடிவிடுவதே நல்லது. தேசீயப் பள்ளிக்கூடங்களில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள், மற்றும் இதர வகுப்புகளைச் சேர்ந்த மாணவர்கள் சகோதரர்களைப் போல் சேர்ந்து வாழவேண்டும். இந்த ஸ்தாபனங்களின் தேசீயத் தன்மைக்கு இவை அத்தியாவசியமான அம்சங்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. தேசீயக் கல்விக்காக எழுப்பப்படும் கூச்சல்கள் விஷயத்தில் சிந்தனையே இல்லை என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. பாட புத்தகங்களை மாற்றுவதும், சரித்திரம் சொல்லிக் கொடுக்கும் முறையை மாற்றுவதும் சில்லறை விஷயங் கள் ஆகும். இந்தக் காரியங்களுக்காக நாம் பெரும் தொகை களைச் செலவிட முடியாது; இவற்றிற்காக தனி ஸ்தாபனங்களை அமைக்கவும் முடியாது. முயற்சி செய்தால், சர்க்கார் பள்ளிக் கூடங்களிலும் இந்த மாறுதல்களைச் செய்ய முடியும். எப்படி யிருந்தாலும், சர்க்கார் பள்ளிக்கூடங்களை பகிஷ்காரம் செய்வ தற்கு இது போதிய காரணமாயிராது; அது வேலை செய்யாது. சர்க்கார் பள்ளிக்கூடங்களை பகிஷ்காரம் செய்வதற்கான காரணங்களை நான் பரிசீலனை செய்திருக்கிறேன். அந்தப் பள்ளிக்கூடங்களுக்கும், தேசீயப் பள்ளிகளுக்குமிடையே இருக்க வேண்டிய வேற்றுமையையும் குறிப்பிட்டிருக்கிறேன். இந்த வித்தியாசம்தான் தேசீயப் பள்ளிகளின் நிர்வாகிகளுக்கும், ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் சோதனையாகும். ஒத்துழை யாமைதான் இவற்றைக் கண்டுபிடிப்பதற்கான அடையாளம்; இந்த வித்தியாசம் அதனுடைய வெளித்தோற்றமாயிருக்கும். ஒத்துழையாமையில் மேலும் பல விஷயங்கள் இருக்கலாம்; ஆனால், இவை இருந்தாக வேண்டும். இவை இல்லாவிடில் ஒத்துழையாமை என்பதற்கே அர்த்தமில்லை.

—'நவஜீவன்' 21-12-1924

## 2

ஒரு நிருபர் பின்வருமாறு எழுதுகிறார் :

"சமீபத்தில் குஜராத் வித்தியா பீடத்தில் நீங்கள் செய்த பிரசங்கங் களையும், இது சம்பந்தமான இதர கட்டுரைகளையும் படித்தேன். ஆயினும், மாணவர்களின் நிலையில் உள்ள உண்மையை என்னால் நிராகரிக்க முடிய வில்லை.

" ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்ததன் மூலம் மாணவர்கள் தமது கடமையைத்தான் செய்திருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், இதனால் மிகுந்த பண நஷ்டத்திற்குள்ளானவர்கள் அவர்கள்தான் என்பதை ஞாபகத் தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

" ஒத்துழையாமை இயக்கம் நிறுத்திவைக்கப்பட்டிருப்பதாலும், அவ் வியக்கத்தில் இப்போது ஒன்றும் நடவடிக்கை இல்லாமலிருக்கும் காரணத்தி

ஞலும், ஒரு காலத்தில் சமூகத்தில் மாணவர்களுக்கு இருந்த மதிப்பும், மரியாதையும் இப்போது இல்லாமற்போய்விட்டன. ஒருவர் எவ்வளவுதான் உணர்ச்சிவசப்பட்டுப் போனாலும், வாழ்க்கையை நடத்துவதற்கு ஏதாவது சம்பாதித்தாக வேண்டும் என்ற பிரச்னையைப் புறக்கணித்துவிடுவதற்கில்லை. மேலும், பெரும்பாலான நமது மாணவர்கள், தாம் படிப்பதோடல்லாமல், தமது குடும்பங்களையும் பராமரிக்க வேண்டியிருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

"சரியான கல்வி என்பது ஒரு மாணவர் பொருளாதாரத் துறையில் தன்னிறைவு பெறுவதற்கு உதவியாக இருக்க வேண்டுமென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். அதாவது, அவன் வாழ்க்கைக்குத் தேவையானதை சம்பாதித்துக் கொள்ள உதவியாக இருக்க வேண்டுமென்று கூறுகிறீர்கள். ஆனல், இப்போதுள்ள நிலைமையில் இதில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன.

"ஒத்துழையாமை இயக்கம் இப்போது நிறுத்திவைக்கப்பட்டிருப்பதால், மற்றவர்கள் சுலபமாகத் தமது பழைய தொழில்களுக்குத் திரும்பிவிடலாம். ஆனல், மாணவர்கள் விரும்பினல் கூட அப்படிச் செய்ய முடியாது.

"ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொண்டதன் பலனைக் கிடைத்த புகழ் காரணமாக, ஏற்கனவே அதிக வருமானம இல்லாத வக்கீல்கள் கூட இப்போது நிறைய சம்பாதிக்கிறார்கள். ஆனல், மாணவர்கள் அடியோடு மங்கிவிட்டார்கள்; அவர்களைப்பற்றி யாருமே கவலைப்படுவதில்லை. அதற்கு மாருக, அவர்கள் அலட்சியம் செய்யப்படுகிறார்கள்.

"இந்த மாதம் 15உ நீங்கள் ராஜ்கோட்டுக்கு வருகிறீர்கள். நமது சமஸ்தாஞதிபதிகளாவது பட்டப் படிப்புகளைவிட, தகுதியையே அதிகமாக விரும்புகிறவர்களாக இருக்க வேண்டும். பம்பாய் சர்வகலாசாலையில் பட்டம் பெற்றவர்களைத்தான் வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டுமென சர்க்கார் அவர்களுக்கு ஏதாவது உத்தரவு பிறப்பித்திருக்கிறார்களா என்று எனக்குத் தெரியாது. வித்தியா பீடத்தில் படித்துத் தேறியவர்களை வேலையில் வைத்துக் கொள்ள வேண்டுமென்று நீங்கள் அவர்களுக்கு யோசனை கூறக் கூடாதா? ராஜ்கோட்டிலும், பவநகரிலும் உள்ள பிரிஜா—பிரதிநிதி சபைகளில் (சமஸ்தானப் பிரஜைகள் மகாநாடு) இதற்கான தீர்மானங்களை நீங்கள் சுலபமாக நிறைவேற்றிவைக்க முடியுமென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அத்தீர்மானங்களுக்கு அந்த சமஸ்தாஞதிபதிகளிடமிருந்து அங்கீகாரத்தையும் பெற முடியும். மேலும், ராஷ்டிரீய பாடசாலைக்கு அஸ்திவாரக் கல் நாட்டுவதற்காக நீங்கள் ராஜ்கோட்டுக்குப் போவதால், இதற்கு இது மிகவும் பொருத்தமான சந்தர்ப்பமாகவும் இருக்கும். இந்திய சமஸ்தாஞதிபதிகள் இவ்வாறு மறைமுகமாக வித்தியா பீடத்திற்கு உதவி செய்யும்படி தூண்டப்பட்டால், இந்தப் பிரச்னை எளிதாகிவிடும்."

மாணவர் சமூகத்தினர் தாமாக மனமுவந்து செய்த தியாகங்களை நான் பல சமயங்களில் பாராட்டியிருக்கிறேன். ஆனல், தம்முடைய தியாகங்களைப் பற்றித் தாமே புகழ் பாடிக்கொண்டிருப்பவர்களை உலகம் அங்கீகரிப்பதில்லை என்பது பொதுவான ஒரு விதியாகும். இதற்கு விலக்கே கிடையாது. தியாகம் செய்

பவன் தானே அதைப் புகழ்ந்து கொண்டால் அது தியாகமாகாது. தியாகம் செய்யப் போவதாக அறிவிக்க வேண்டிய அவசியமில்லை; அது தானுகவே பறைசாற்றிக் கொண்டுவிடும். தம்முடைய தியாகம் எவ்வளவு பெறுமானம் உள்ளது என்று மதிப்பிட்டுக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, மாணவர்கள் ஒத்துழையாமையினுல் தமக்குக் கிடைத்த லாபம் என்ன என்பதை ஏன் கணக்குப் போட்டுப் பார்க்கக்கூடாது?

தான் தேசீயக் கல்வி பெற்றதே ஒரு பெரிய லாபம் என்பதை அறியாதவன், ஒன்றையுமே அறியாதவனுவான். தன்னுடைய மதிப்பு குறைந்துவிட்டதென்று நினைப்பதற்கு வித்தியா பீடப் பட்டதாரிக்குக் காரணமில்லை. எதற்காக அவன் இப்படித் தன்னைத்தானே குறைத்துக் கொள்ளவேண்டும்? வித்தியா பீட மாணவர்கள் தன்னம்பிக்கை காட்ட வேண்டுமென்று நான் எதிர்பார்க்கிறேன். கதியற்ற பிச்சைக்காரர்களைப் போல் அவர்கள் தைரியத்தை இழந்துவிடக் கூடாது. கடவுளிடம் அவர்களுக்கு உறுதியான நம்பிக்கை இருக்க வேண்டும். சமஸ்தானங்களில் அவர்களுக்காக நான் கெஞ்ச வேண்டும் என்று ஏன் அவர்கள் எதிர்பார்க்கிருர்கள்? தம்முடைய அறிவின் மூலமும், நல்லொழுக்கத்தின் மூலமும் தமது மதிப்பை அவர்கள் தாமாகவே உயர்த்திக் கொள்ள முடியும். அவர்களுடைய சேவையைக் கோரும் காலம் வந்துதானுகவேண்டும். அந்தக் காலம் வருவதை துரிதப்படுத்தும் பொறுப்பு முற்றிலும் வித்தியா பீட பட்டதாரிகளிடமே தான் இருக்கிறது. சிறு சிறு கண்ணுடித் துண்டுகளில் உள்ள ரத்தினங்கள் எப்போதாவது அறியத்தான் படுகின்றன. தேசீயப் பள்ளிகளின் பட்டதாரிகளும் அம்மாதிரி ரத்தினங்களைப் போன்றவர்களே. என்னுடைய கத்தியவார் சுற்றுப் பிரயாணத்தின் போது இந்தப் பட்டதாரிகளைப் பற்றி ஒரு வார்த்தை கூட நான் பேச விரும்பவில்லை. கதரையும் கைராட்டினத்தையும் பிரபலப்படுத்துவதற்காக நான் அங்கு போகிறேன். கதரிடம் அதிகாரிகளுக்குப் பிடித்தம் உண்டாகும்படி செய்யவும், சமஸ்தானுதிபதிகள் தமது கடமையில் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுவதற்காகவும் நான் அங்கு போகிறேன். கதர், கைராட்டினம் ஆகியவற்றின் அந்தஸ்து உயர்ந்தால் இந்த பட்டதாரிகளின் மதிப்பும் உயரும். ஏனெனில், இந்தக் கலையில் முழுத் தேர்ச்சி பெருதவர்கள் உண்மையான பட்டதாரிகள் அல்ல. முன்பெல்லாம் அதிகாரிகள் ஆங்கிலம் தெரிந்த மந்திரி தான் வேண்டுமென்று தேடிக் கொண்டிருந்தார்கள். இப்போது, நல்ல கைராட்டின நிபுணரின் சேவை அவசியம் என்று அவர்கள் கருதுவதற்கான ஒரு சூழ்நிலையைத் தோற்றுவிக்கவே நான் அங்கு போகிறேன்.

இந்த நிருபர் செய்துள்ள சில தவறுகளையும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். மற்றவர்களைப் போல் மாணவர்கள் தமது ஒத்துழையாமையை நிறுத்திவைக்க முடியாதென்று

கூறுவது சரியல்ல. இதில் உள்ள மிகவும் வருந்தத்தக்க, வேதனை யளிக்கும் உண்மை என்னவென்றால், ஒத்துழையாமையில் கலந்து கொண்ட ஆயிரக்கணக்கான மாணவர்கள் இப்போது மீண்டும் ஒத்துழைப்பவர்களாகிவிட்டார்கள்; அதாவது, முன்பு ஒத்துழை யாமையாளர்களாக இருந்த சில மாணவர்கள், தேசீயப் பள்ளிக் கூடங்களில் பரீட்சை எழுதி, நற்சாட்சி பெற்றிருந்தும் கூட, மீண்டும் சர்க்கார் பரீட்சையில் எழுதியிருக்கிறார்கள். ஆனால், பல வக்கீல்களுடைய தொழில் நடத்தும் சன்னதுகள் ரத்து செய்யப்பட்டுவிட்டன. இதன் பலனாக அவர்கள் ஒத்துழை யாமையாளர்களாகும் நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. மேலும், தமது உத்தியோகங்களைத் துறந்த பல சர்க்கார் ஊழியர்கள், வறுமையில் ஆழ்ந்துவிட்டதாகக் கருதப்படலாம். ஆனால், அவர்கள் தம் நிலைமையைப பற்றிப் பரிதாபப்படவில்லை; தாங்கள் ராஜாக்களைப் போலிருப்பதாகவே நினைக்கிறார்கள். ஏனெனில், அவர்கள் சர்க்கார் உத்தியோகங்களில் இருந்தபோது தளை களுடன் இருந்தார்கள்; இப்போது அவர்கள் சுதந்திரமாக இருக்கிறார்கள்.

ஆகையால், ஏக்கத்திற்கு இடம் கொடுப்பதற்கு நியாயமே இல்லை என்றே இந்த மாணவர்களுக்கு நான் கூறுகிறேன். அத் துடன் மட்டுமில்லை, அவர்கள் முன்னேறிச் சென்று கொண்டே யிருக்க வேண்டும். ஆனால், அவர்கள் நாணயமுள்ளவர்களா கவும், பயமற்றவர்களாகவும், தம்மைத் தாமே அடக்கியாளக் கூடியவர்களாகவும், சுறுசுறுப்பானவர்களாகவும், தேசத்திற்குத் தொண்டு செய்ய வேண்டுமென்ற ஆர்வம் உளளவர்களாகவும் இருக்க வேண்டும். அத்தகைய மாணவர்கள் ஒருக்காலும் ஏக் கத்திற்கு இடம் கொடுக்கமாட்டார்கள். நமது நாட்டின் எதிர் கால நலன் அவர்களைப் பொறுத்துத் தானிருக்கிறது. சுதந்திரம் என்ற தேவதையின் பொற்கோவிலுக்கு அஸ்திவாரம் போடப் போகிறவர்களும் அவர்கள்தான்.

—'நவஜீவன்' - 15—2—1925

# 10

# ஒத்துழையாமையும் கல்வியும்

## 1

ஒத்துழையாமை இயக்கத்தின் மற்றத் துறைகளில் எந்த விதமான மாறுதல்கள் ஏற்பட்டாலும் கூட, தேசீயப் பள்ளிக் கூடங்கள் நடந்துகொண்டுதான் இருக்க வேண்டும். அவை அப்படி நீடிக்கவில்லை யென்றால், மக்களுக்கு அது மிகவும் ஆழ்ந்த அவமானத்தை அளிக்கும் ஒரு விஷயமாக இருக்கும்.

அத்துடன் மட்டுமில்லை; காலம் போகப்போக, இந்தப் பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கையும் அதிகமாக வேண்டும். சுயராஜ்யம் கிடைத்த பிறகு, ஒத்துழையாமையில் ஈடுபட்ட வக்கீல்கள் மீண்டும் கோர்ட்டுகளில் தம் தொழிலை நடத்துவார்கள்; ஆனால் இந்தக் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட தேசீயப் பள்ளிக் கூடங்கள் தொடர்ந்து நீடிக்க வேண்டும். மற்றப் பள்ளிக் கூடங்கள் பார்த்துப் பின்பற்றுவதற்கு, இவை உதாரணமாக இருக்கும். இந்தப் பள்ளிக்கூடங்கள் நிர்ணயிக்கும் தரத்தைத் தான் சர்க்கார் பள்ளிக்கூடங்கள் பின்பற்றும். இந்த சுயராஜ்யம் இன்றைக்குக் கிடைக்காமலிருக்கலாம்; அது வருவதற்கு யுகக் கணக்கில் ஆகலாம். ஆனால், இடைக்கால இடையூறுகளைச் சமாளித்து முழுமையாக உயிர்வாழும் தேசீயப் பள்ளிக்கூடங்கள் அப்போது உதாரணங்களாக விளங்கும்; மக்கள் அவற்றைப் போற்றிக் கொண்டாடுவார்கள்.

ஆகையால், ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்திவைக்க வேண்டுமென்ற என்னுடைய யோசனையைக் கேட்டு கவலையும், நடுக்கமும் காட்டுபவர்கள், ஒத்துழையாமை வேலைத் திட்டத்தில் தமக்கே நம்பிக்கை இல்லை என்பதைத்தான் காட்டிக் கொள்ளுகிறார்கள் என்றே சொல்லுவேன். தன்னுடைய கொள்கைகளிலும், பணியிலும் நம்பிக்கை உள்ளவன், மற்றவர்களுக்கு நம்பிக்கையில்லாததைப் பற்றி பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. நம்பிக்கையுள்ள ஒருவன், மற்றவர்களுக்கு நம்பிக்கையில்லாதது தன்னுடைய நம்பிக்கையைக் குலைக்கக் கூடாது என்று இரட்டிப்பு உறுதிகொள்ள வேண்டும். ஒருவனைக் காப்பற்றுவதற்குக் காவலர்கள் இல்லையென்றால், அவன் இன்னும் அதிக உஷாராகிறான். அதே மாதிரி, நம்பிக்கையுள்ளவன் தன் தோழர்களால் கைவிடப்பட்டாலும் கூட உறுதியுடன் சிங்கத்தைப் போல் தனித்து நின்று போராடுவான்; மலைபோல் அசைக்க முடியாதவனாக இருப்பான்.

—'நவஜீவன்' – 23—11—1924

## 2

என்னைப் பொறுத்தவரையில், ஒத்துழையாமையின் எந்த அம்சத்தைப் பற்றியும் நான் என்னுடைய கருத்துகளைத் துளிக் கூட மாற்றிக்கொள்ள வில்லை. கல்வியைப் பற்றிய என்னுடைய அபிப்பிராயமும் 1920-21-இல் என்னவாக இருந்ததோ, அப்படியேதான் இன்னமும் இருக்கிறது. அந்தக் கருத்துகள் சரியானவைதாம் என்று மாணவர்களையோ, அவர்களுடைய கார்டியன்களையோ நம்பச் செய்வதற்கான சக்தி எனக்கிருந்தால், இன்று சர்க்கார் பள்ளிக் கூடங்களில் ஒரு மாணவன் கூட இருக்க மாட்டான். முன்போல் இந்த விஷயத்தைப்பற்றி 'நவஜீவன்' பத்திரிகையில் இப்போது அடிக்கடி நான் விவாதிக்கவில்லை

யென்றால், பள்ளிக்கூடங்களைக் காலி செய்வதற்காகப் பிரசாரங்கள் செய்வது அல்லது கட்டுரைகள் எழுதுவதற்கான காலம் கடந்துவிட்டது என்பதுதான் அதற்குக் காரணம். கொஞ்சமும் தளராமல் ஒத்துழையாமைக் கொள்கையைப் பின்பற்றி வந்துள்ள பள்ளிக்கூடங்களைக் காப்பாற்றி, அவற்றை பலப்படுத்துவதே இப்போது நாம் செய்யவேண்டிய காரியமாகும். கதரைப் போல், தேசீயக் கல்வி வேலையில் அவ்வளவு முன்னேற்றம் ஏற்படவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கையும், மாணவர்களின் எண்ணிக்கையும் குறைந்து கொண்டுதான் வந்திருக்கின்றன. இதைப் பற்றியே எப்போதும் பேசிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை என்றாலும், சந்தர்ப்பம் ஏற்படும்போது இந்த உண்மையை ஒப்புக்கொள்ள நான் தயங்கவில்லை. இதனால் என் மனத்தில் பயமோ, தோல்வி உணர்ச்சியோ ஏற்படவில்லை. நம்முடைய நம்பிக்கையை நாம் கைவிடாமலிருந்தால், நம்முடைய கல்விப் பணியில் அலை ஓய்ந்திருப்பதைத் தொடர்ந்து, அலை மோதுவதும் ஏற்படத்தான் செய்யும். ஒத்துழையாமை உபதேசத்தை விடாமல் பின்பற்றி வந்துள்ள பள்ளிக்கூடங்கள், அவற்றை விட்டுக் கொடுக்காமல் அதே பாதையில் மனப்பூர்வமாகப் போய்க் கொண்டிருந்தால், பலன் நல்லதாகத்தான் இருக்கும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஒத்துழையாமை வேலையை இப்போது நாம் செய்து கொண்டுதானிருக்க வேண்டும். ஆனால், கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றும் மனப்பான்மையுடனோ அல்லது ஒரு கொள்கையாகவோ அல்லது ஒரு உபாயமாகவோ அல்ல. உண்மையான ஒத்துழையாமையாளர்கள், தம்முடைய சொந்த ஆன்மிக பலத்தை நம்பி, தன்னம்பிக்கையுடன் தமது கொள்கைக்காகப் போராடிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் இன்னும் பல சோதனைகளை அனுபவிக்க வேண்டியிருக்கலாம். ஆனால், இது உண்மையானால், அனலில் இட்ட தங்கம் எப்படி இன்னும் அதிக பிரகாசம் பெறுகிறதோ, அதே மாதிரி ஒத்துழையாமையாளர்களும் இந்தச் சோதனையிலிருந்து இன்னும் அதிக ஒளியுடன் வெளிவருவார்கள் என்று நம்புகிறேன். கடைசிவரையில் தமது உறுதியில் தளராதிருப்பவர்களே உண்மையான ஒத்துழையாமையாளர்கள் ஆவர். இத்தகையோர் ஒருவராயிருந்தாலும், பலராயிருந்தாலும், அவர்கள்தான் நாட்டுக்கு சுயராஜ்யம் தேடிக் கொடுப்பார்கள்.

—'நவஜீவன்' – 30—5—1926

## 3

பெர்லினுக்கோ அல்லது வேறு ஏதாவது ஒரு ஐரோப்பிய சர்வகலாசாலைக்கோ போக வேண்டுமென்ற இந்தப் பித்தம், ஒத்துழையாமை உணர்ச்சிக்கு அடையாளமல்ல. இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்பட்ட துணிக்கு பதிலாக ஜப்பான் துணி

யைக் கொண்டுவருவது போன்றதுதான் இது. ஆங்கிலேயர் துணியை ஏன் கைவிடுகிறோம்? அது ஆங்கிலேயர் துணி என்பதற்காகவல்ல; அது ஏழைகளின் பரம்பரையான தொழிலைக் குலைத்து, அவர்களை இன்னும் அதிக ஏழைகளாக்கிவிடுகிறது என்பதற்காகத்தான். ஆங்கிலேயரின் துணி ஏழைகளைக் கொள்ளையடிக்கிற தென்றால், ஜப்பானியத் துணியும் அப்படித்தான். அதே மாதிரி, சர்க்கார் ஸ்தாபனங்கள் தீங்கிழைக்கும் தன்மை வாய்ந்தவைகளாக இருக்கின்றன என்பதற்காகத்தான் அவற்றைக் கைவிடுகிறோம். ஆகையால், அதையே வேறு ஒரு பெயரின் கீழ்க் கொண்டுவந்து, நாம் நம்மை ஒத்துழையாமையாளர்கள் என்று நம்பிக்கொண்டிருக்கக் கூடாது. இந்திய பாரம்பர்யத்தில் உள்ள எல்லாச் சிறந்த அம்சங்களுடனும் ஒத்துழைப்பது என்பதுதான் ஒத்துழையாமையின் அர்த்தம். பெர்லினில் இருந்துகொண்டு அந்த உணர்ச்சியை நாம் வளர்த்துக் கொள்ள முடியாது. இந்தியாவில்தான் நமது சோதனைகளெல்லாம் செய்யப்பட வேண்டும். முழுமையான, பலன் அளிக்கத்தக்க ஒரு மாற்றை நாம் கண்டுபிடிக்கும் வரையிலாவது, சர்க்கார் ஸ்தாபனங்களை விடுவதுதான் முதல் நடவடிக்கையாக இருக்க வேண்டும் என்பது தெளிவு. ஆகையால், அந்த நடவடிக்கையை எடுத்துக்கொண்ட மாணவர்கள், தாம் செய்வது என்ன என்பதை அறிந்து செய்திருந்தால், சரியான காரியத்தைச் செய்தவர்களேயாவர். காலம் போகப் போக, அத்தகைய மாணவர்களின் தியாகம்தான் நாட்டுக்கு அதிகமான பலன்களை கொடுத்துக் கொண்டிருக்கும். ஆனால், இப்படிச் செய்துவிட்டோமே என்று வருந்துபவர்கள் அல்லது தம்முடைய நிலையையே கண்டு கவலைப் படுபவர்கள், திரும்பவும் சர்க்கார் ஸ்தாபனங்களுக்குச் செல்லத் தயங்கவே கூடது. இது லட்சியத்தின் மோதலாகும். ஒத்துழையாமை லட்சியம் நல்லது. ஏனென்றால், இந்திய மண்ணுக்கு அது ஏற்றதுதானென்றால், எந்த மாதிரியான தடங்கலையும் அது சமாளித்துவிடும்.

—'எங் இந்தியா' – 15—7—1926

## 11

# அது ஒரு தோல்விதானா?

ஒத்துழையாமை முற்றிலும் தோல்வியடைந்து விட்டதென்று அடிக்கடி பத்திரிகைகளில் படிக்கிறோம். மரியாதை தெரிந்த பல விமர்சகர்கள் பல சமயங்களில், சம்பாஷணையின் போது தயங்கித் தயங்கி இந்த விஷயத்தை பிரஸ்தாபிக்கிறார்கள். ஒத்துழையாமை என்ற என்னுடைய தவறான இயக்கத்தினால் தேசத்தை நான் தப்பு வழியில் செலுத்தியிராவிட்டால், தேசத்

தில் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டிருக்கும் என்றும் என்னிடம் அவர்கள் லேசாகச் சொல்லுகிருர்கள். இன்றைய அரசியலுக் கும் இந்த விஷயத்திற்கும் சம்பந்தமில்லை என்றே சொல்லலாம். ஆயினும், காரணமில்லாமல் இதைப்பற்றி நான் குறிப்பிடவில்லை. ஒத்துழையாமை என்பது உயிர்த் துடிப்பு உள்ள சக்தியாக நம்மிடம் வந்திருக்கிறது. எந்தச் சமயத்திலும் இது சர்வ வியாபக மான ஒரு தன்மையைப் பெற்றுவிடலாம். அவநம்பிக்கை, கண் டனங்கள் ஆகியவற்றின் மத்தியில் ஒத்துழையாமையில் தங்க ளுக்கு உள்ள நம்பிக்கையைக் கைவிடாமல் துணிச்சலுடன் செயல்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்கும் தைரியம் கூற விரும்பு கிறேன். அதற்காகத்தான் இந்த விஷயத்தைப் பற்றிக் குறிப் பிடுகிறேன். ஆயினும், அபாயகரமான ஒரு அரை குறை உண்மை யையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதாவது, எப்போது பலாத்காரம் தலை தூக்கியதோ அப்போதே ஒத்துழையாமை இயக்கம் முழுமையாகத் தோல்வியடைந்துவிட்டது. ஒத்துழை யாமை, பலாத்காரம் இரண்டும் ஒன்றுக்கொன்று நேர் முரணை சொற்களாகும். பலாத்காரத்திற்கு ஊட்டமளிப்பது பலாத்கா ரமேதான்; அது உயிருடன் இருப்பதற்கு, பதிலுக்குப் பதில் பலாத்காரம் வேண்டியிருக்கும்; இதனுல்தான் சாத்விக ஒத்துழை யாமை தோன்றியது. ஆகையால், ஒத்துழையாமை இயக்கத் தில் பலாத்காரம் தோன்றியவுடன், அது தன்னுடைய வீரியத் தையும் தேச நிர்மாணத் தன்மையையும் இழந்துவிடுகிறது. ஆனுல், அகிம்சை வழியிலேயே இருக்கும் வரையில், அதற்கு முழு வெற்றிதான் என்பதைக் கண்கூடாகப் பார்க்க முடிந்தது. 1920-இல் மக்களிடையே ஏற்பட்ட மகத்தான விழிப்பை, ஒத்து ழையாமையின் சக்திக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். மீண்டும் திரும்பப் பெற முடியாதவாறு தமது அந்தஸ்தை சர்க்கார் இழந்துவிட்டனர். பட்டங்கள், கோர்ட்டு கள், கல்வி ஸ்தாபனங்கள் முதலியவைகளில் 1920-இல் இருந் ததைப் போன்ற மதிப்பும் மோகமும் இப்போதெல்லாம் மக்க ளுக்கு இல்லை. நாட்டிலுள்ள மிகச் சிறந்த வக்கீல்களில் சிலர் சட்டத் தொழிலை அடியோடு கைவிட்டுவிட்டார்கள்; வறுமையை ஏற்றுக்கொண்டது பற்றியும் அவர்கள் மகிழ்ச்சியுடனேயே இருக்கிருர்கள். மீதமுள்ள சில தேசீயப் பள்ளிகளும் கல்லூரி களும் நல்ல முறையில் நடந்துகொண்டிருக்கின்றன. ஒரு காலத் தில் வளமான ஒரு தோட்டத்தைப் போலிருந்த குஜராத்தை வெள்ளம் வந்து பாழாக்கிய போது, எவ்வளவு பெரிய ஸ்தா பனம் தோன்றியது என்று நினைத்துப் பாருங்கள். தேசீயப் பள்ளிக்கூடங்களைச் சேர்ந்த மாணவர்களும், ஆசிரியர்களும், மற்ற ஒத்துழையாமையாளர்களும் இல்லாவிட்டால், குஜராத் விவசாயிகளுக்கு அவசியமான அந்த உதவி உற்றகாலத்தில் கிடைத்தே இருக்காது. இம்மாதிரி உதாரணங்களைப் பெருக்கிக் கொண்டே போகலாம். எங்கே நல்ல நிலையில் இருப்பவர்களுக் கும், பாமர மக்களுக்குமிடையே பிணைப்பு இருக்கிறதோ, அங்கு

தான் உண்மையான தேசீய வாழ்வு இருக்கிறது என்பதையும், ஒத்துழையாமைதான் அதற்குக் காரணம் என்பதையும் ருசுப்பிக்கலாம்.

இந்த வேலைத் திட்டத்திலுள்ள மூன்று நிர்மாண அம்சங்களைத்தான் எடுத்துக்கொள்ளுங்களேன். தேசீயப் புனர் வாழ்வில் கதர் வரவர முக்கியமான ஒரு அம்சமாக வளர்ச்சி பெற்றுக் கொண்டுவருகிறது. சுமார் இரண்டாயிரம் ஊழியர்கள் 1500-க்கு மேற்பட்ட கிராமங்களில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஐம்பதாயிரத்திற்கு மேற்பட்ட நூற்பாளர்களுக்கும், குறைந்த பட்சம் பத்தாயிரம் நெசவாளர்கள், அச்சு போடுபவர்கள், சாயம் ஏற்றுபவர்கள், சலவையாளர்கள், மற்றும் இதர வேலைக்காரர்களுக்கும் கண்கூடான நிவாரணம் அளித்துக் கொண்டிருக்கிறார்கள். தீண்டாமையும் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறது. 1920-21-இல் ஏற்பட்ட ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை அதனுடைய மகத்தான சாத்தியக் கூறுகளை எடுத்துக்காட்டியது. இந்த இரு பெரிய வகுப்பினருக்குமிடையே இன்று காணப்படும் பலாத்காரம், மோசடி, பொய் ஆகியவைகளெல்லாம் மோசமான அறிகுறிகள்தாம்; ஆனால் இவையெல்லாம் பக்குவப்படாத சுய உணர்வையே காட்டுகின்றன. ஒத்துழையாமை என்பது கடைந்தெடுப்பது போன்ற ஒரு இயக்கம்; உள்ளே இருந்த அசுத்தங்களெல்லாம் இதில் மேலே வந்துவிட்டன. சாத்விக ஒத்துழையாமை என்பது உயிர்த்துடிப்புள்ள, தூய்மைப்படுத்தவல்ல ஒரு சக்திதான் என்றால், இன்று நம் கண்ணுக்குப் புலப்படும் அந்த அசுத்தங்களுக்கு அடியில், கண்ணுக்குப் புலப்படாமலே உருவாகிக் கொண்டிருக்கும் சுத்தமான ஒற்றுமையையும் சீக்கிரத்தில் வெளியே கொண்டுவந்துவிடும். ஆகையால், உண்மையான சுயராஜ்யம் நமக்கு எப்போது வந்தாலும், அது லண்டனிலிருந்து நம் மீது சொரியப்படும் ஒரு நன்கொடையாக இருக்க வேண்டியதில்லை; அதற்கு மாறாக, அது ஊட்டமளிக்கும் ஒத்துழையாமையின் உதவியுடன், கட்டுப்பாடான தீமைகளை எதிர்த்து நாம் நடத்திய கடும் போராட்டத்திற்குப் பரிசாக இருக்கும் என்பது எனக்கு வெட்ட வெளிச்சமாகி யிருக்கிறது.

—'எங் இந்தியா' – 10—11—1927

## 12

# பரோடாவில் கல்வி

பரோடா மன்னர் தமது சமஸ்தானத்திலேயே இருப்பதில்லை என்பதைப் பற்றியும், சீர்திருத்தங்கள் விஷயத்தில் அந்த சமஸ்தானத்தின் கஞ்சத்தனமான கொள்கையைப் பற்றியும் என்னதான் சொன்னாலும், அங்கு கல்வித்துறையில் ஏற்பட்டுள்ள

முன்னேற்றத்தைப் பற்றி எந்தவிதமான சந்தேகமும் இல்லை. மகாராஜாவின் பொன் விழாவையொட்டி அந்த சமஸ்தானத்தில் கல்வி இலாகா வெளியிட்டுள்ள ஒரு சிறு பிரசுரத்தில் இந்த விவரங்களைக் காணலாம். ஐம்பது வருடங்களுக்கு முன்பு அங்கு இருநூறு ஆரம்பப் பள்ளிகள்தான் இருந்தன. அவற்றை தனிப்பட்டவர்கள் நடத்திக்கொண்டிருந்தார்கள். அந்தப் பள்ளிகளில் 800 பிள்ளைகள்தான் இருந்தார்கள். இன்று கல்லூரி உள்பட 78 ஆங்கில கல்வி ஸ்தாபனங்கள் இருக்கின்றன. 14,425 மாணவர்களுக்குக் கல்வி போதிக்கப்படுகிறது. அவர்களில் 345 பேர் பெண்கள். 2916 தாய் மொழிப் பள்ளிகள் இருக்கின்றன. இங்கு 2,17,138 மாணவர்களும், 67,384 மாணவிகளும் படிக்கிறார்கள். ஒடுக்கப்பட்ட வகுப்பினர்களுக்காக உள்ள 219 பள்ளிகளும் இதில் சேர்ந்திருக்கின்றன. இவற்றைத் தவிர, 124 உருதுப் பள்ளிகள் இருக்கின்றன. இவற்றில் 26 பெண்களுக்கான பள்ளிகள். இந்தப் பள்ளிக்கூடங்களில் 6,693 மாணவர்கள் கல்வி பயின்று வருகிறார்கள். இவையெல்லாம் பாராட்டுக்கு உரியவையே. ஆனால், இந்தக் கல்வி மக்களின் தேவைகளைப் பூர்த்திசெய்கிறதா என்ற கேள்வி எழுகிறது. இந்தியாவின் மற்றப் பாகங்கள் இருப்பதைப்போலவே பரோடாவிலும், பெரும்பாலான மக்கள் விவசாயத்தை நம்பியிருப்பவர்கள். இந்த விவசாயிகளின் குழந்தைகள் இன்னும் நல்ல விவசாயிகளாகிறார்களா? தாம் பெற்ற கல்விக்கு ஏற்ற தார்மிக, லோகாயத அபிவிருத்தி அவர்களிடம் காணப்படுகிறதா? நல்ல பலன்கள் காட்டுவதற்கு ஐம்பது வருஷங்கள் போதாதா? இந்தக் கேள்விக்குப் பதில், திருப்தியளிப்பதாக இராதென்றே அஞ்சுகிறேன். மற்ற இடங்களிலுள்ள விவசாயிகளைவிட, பரோடாவிலுள்ள விவசாயிகள் இன்னும் நல்ல நிலைமையிலோ, அதிக சந்தோஷமாகவோ இல்லை. பஞ்ச காலங்களில் மற்றவர்களைப் போலவே அவர்களும் கதியற்றவர்களாகவே இருக்கிறார்கள். இந்தியாவின் மற்றப் பகுதிகளிலிருப்பதைப் போலவே அங்கும் சுகாதார நிலைமைகள் படுமோசமாகவே இருக்கின்றன. தம்முடைய துணியைத் தாமே உற்பத்தி செய்துகொள்ள வேண்டியது எவ்வளவு முக்கியம் என்பது கூட அவர்களுக்குத் தெரியவில்லை. இந்தியாவிலேயே மிகவும் வளமான சில நிலங்கள் பரோடாவில் இருக்கின்றன. அவர்கள் தங்களுக்குத் தேவையான பருத்தியை ஏற்றுமதி செய்ய வேண்டிய அவசியமில்லை. சுபிட்சமான விவசாயிகள் கொண்ட, தன்னிறைவு பெற்ற ஒரு சமஸ்தானமாக அது சுலபமாகத் திகழ முடியும். ஆனால், அது அந்நியத் துணிகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டிருக்கிறது. அவர்களுடைய வறுமைக்கும், அவமானத்திற்கும் இது கண்கூடான ஒரு சின்னம். குடி விஷயத்திலும் அவர்கள் மற்றவர்களைப் பேர்லவேதான் இருக்கிறார்கள். ஒருக்கால் அவர்கள் இன்னும் மோசமாக இருக்கிறார்களோ என்னவோ! பிரிட்டிஷ் வருமானத்தைப்போலவே, பரோடாவின் வருமானமும் குடி வருமானத்தினால் இழுக்குற்றிருக்கிறது. காளிபராஜ் குழந்தைகள் என்ன கல்வி பெற்றாலும், குடிப் பழக்கத்

தினல் பாழடிக்கப்படுகிறார்கள். பரோடாவில் உள்ள கல்வி முறை, பிரிட்டிஷ் முறையை அநேகமாக அப்படியே 'காப்பி'யடிப்பதாக இருக்கிறது என்பதே இதிலுள்ள உண்மையாகும். உயர்தரக் கல்வி நம் நாட்டிலேயே நம்மை அந்நியர்களாக்கி விடுகிறது. ஆரம்பக் கல்வி என்பது பிற்கால வாழ்க்கைக்கு ஒரு பிரயோசன மும் இல்லாமலிருக்கிறது. ஆகவே, அதுவும் உபயோகமற்றதாகி விடுகிறது. அதில் தனித் தன்மையோ, இயற்கையானதோ எதுவு மில்லை. மக்களின் தேவைக்கு ஏற்றவாறு இருப்பதாயிருந்தால், தனித் தன்மை வாய்ந்ததாக இருக்கவேண்டும் என்ற அவசியமே இல்லை.

—' எங் இந்தியா ' – 21—1—1926

# 13

# மெக்காலேயின் கனவுகள்

மெக்காலேயின் ' வாழ்க்கையும் கடிதங்களும் ' என்ற நூலி லிருந்து ஒரு நண்பர் பின்கண்ட பகுதிகளை எனக்கு அனுப்பி யிருக்கிறார் :

" 'இந்தியாவிலுள்ள சுதேசிகளிடையே ஐரோப்பிய இலக்கி யத்தையும், விஞ்ஞானத்தையும் பரப்புவதே பிரிட்டிஷ் சர்க் காரின் மகத்தான குறிக்கோளாக இருக்க வேண்டும்' என்று 1835 மார்ச் 7-ந் தேதியன்று லார்டு வில்லியம் பெண்டிக் முடிவு செய்தார். பொதுக்கல்விக் கமிட்டியிலிருந்து இரண்டு உறுப்பினர் கள் ஓய்வு பெற்றார்கள்; ஆங்கிலேயர்கள், சுதேசிகள் உள்பட பல புதிய உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டார்கள். மிகுந்த ஆர்வத்துட னும் ஊக்கத்துடனும் மெக்காலே தலைவர் பதவியை ஏற்றுக் கொண்டார். மெக்காலே அப்படி இருந்தாரென்றால், அந்த வேலை அவருடைய மனதுக்குப் பிடித்தமாயிருந்தது என்பதே நிச்சய மாக அதற்கு அர்த்தமாகும்."

லார்டு மெக்காலே கூறியதாவது :

" நமது ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் பிரமாதமாக முன் னேறிக் கொண்டிருக்கின்றன. சில இடங்களில் கோருபவர் களுக்கெல்லாம் கல்வி போதிப்பது அநேகமாக அசாத்திய மாகவே இருக்கிறது. ஹூக்ளி நகரத்தில் 1,400 பையன்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்கிறார்கள். ஹிந்துக்களிடையே இந்தக் கல்வியினால் ஏற்பட்டுள்ள பலன் வியக்கத்தக்கதாக இருக்கிறது. ஆங்கிலக் கல்வி பெற்ற எந்த ஹிந்துவும் பின்னர் தன் னுடைய மதத்தினிடம் ஒரு காலத்திலும் உண்மையான பற்றுதல் காட்டமாட்டார். சிலர் கொள்கைக்காக அதைத் தொடர்ந்து பின்பற்றுவதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள், சிலர்

*கிறிஸ்தவ மதத்தை தழுவிவிடுகிருர்கள். நம்முடைய கல்வித் திட்டங்கள் தொடர்ந்து நிறைவேற்றப்பட்டால், முப்பது வருஷங்களுக்குப் பிறகு வங்காளத்திலுள்ள உயர்தர வகுப்பினரிடையே விக்கிரக ஆராதனை செய்பவர் ஒருவர்கூட இருக்க மாட்டார் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கையாகும். மதமாற்றம் செய்வதற்கான முயற்சியோ, மத சுதந்திரத்தில் சிறு தலையீடோ கூட இல்லாமல் இது நடந்துவிடும். அறிவு, அதன் பலனை சிந்தனை என்ற இயற்கையான விதியின் கீழ் அப்படி நடந்து விடும். இந்த சாத்தியக் கூறைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன்."*

*ஆங்கிலக் கல்வி பெற்ற இந்தியா, தனது மத நம்பிக்கையைக் கைவிட்டு விடுமென்ற மெக்காலேயின் கனவு பலித்து விட்டதா என்று எனக்குத் தெரியாது. ஆனுல், அவருக்கு மற்ெருரு கனவும் இருந்ததென்பது நமக்குத் தெரியும். அதாவது, ஆங்கிலக் கல்வி பெற்ற இந்தியாவின் மூலம், ஆங்கில ஆட்சியாளர்களுக்கு குமாஸ்தாக்கள் போன்றவர்களைத் தயாரித்துக் கொடுக்க வேண்டுமென்ற கனவு எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே நிச்சயமாகப் பலித்துவிட்டது.*

'எங் இந்தியா' – 29—3—1928

# 14

# மெட்ரிகுலேட்டுகளின் கும்பல்

*ஒரு நிருபர் பின்வருமாறு எழுதுகிருர் :*

*" சென்ற வருடம் 9,000 பையன்கள் மெட்ரிகுலேஷன் பரீட்சை எழுதினுர்கள் ; ஆனுல், இந்த வருடம் அவர்களுடைய எண்ணிக்கை 14 ஆயிரமாக உயர்ந்துவிட்டது. இந்தக் கணக்கு பம்பாய்க்கு மட்டும்தான் ; இந்தியா பூராவுக்குமான தொகை சுமார் 56,000 இருக்கும். இவர்களில் 50 சத விகிதத்தினர் தேர்ச்சி பெறுவார்கள் என்று வைத்துக் கொண்டால், பரீட்சையில் தேர்ச்சி பெறுபவர்கள் பம்பாய் மாகாணத்தில் 7000 ஆகவும் இந்தியா பூராவுக்குமாக 28000 ஆகவும் இருக்கும். இவ்விஷயமாக இயற்கையான ஒரு கேள்வி எழுகிறது: இந்த மாணவர்களுக்காக 28,000 உத்தியோகங்கள் காலியாக இருக்கின்றனவா? இல்லையென்ருல், இவர்கள் தம்முடைய ஜீவனுேபாயத்திற்கு என்ன செய்யப்போகிருர்கள் ? இவர்கள் பள்ளிக்கூடங்களில் இருக்கும் காலத்தில் இவர்களுடைய செலவுகள் மிகவும் அதிகமாகி விடுகின்றன. ஒரு சாதாரணமான வருமானத்தைக் கொண்டு தம் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முடியாத அளவுக்கு அதிகமாகிவிடுகின்றன. மூக்குக் கண்ணுடிகள், 'காலர்'கள், 'நெக்டைகள்', நாடகக் கொட்டகைகள், சினிமாக்கள், கவிதைகள், நாவல்கள், மருந்துகள், கூந்தல் தைலங்கள், சீப்புகள், பிரஷ்கள் முதலியவை இல்லாமல் இவர்களால் இருக்க முடியவில்லை. தமக்குக் கிடைக்கும் தொகை*

யில் பெரும் பகுதியை, அவசியமில்லாத இந்தச் சாதனங்களுக்காகச் செலவிட வேண்டியிருக்கிறது. மாதம் இருபது அல்லது முப்பது ரூபாய் கிடைக்கக் கூடிய தம்முடைய உத்தியோகத்திலிருந்து அவர்களுக்கு அதற்கெல்லாம் எப்படிப் பணம் கிடைக்கும்? இந்தப் பிரச்னையைச் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியமாகும். இல்லாவிடில், அடுத்த பத்து வருடங்களில் இது மிகவும் பெரிதாகிவிடும்; அப்படியாகிவிட்டால் நீங்கள் கூறக் கூடிய மிகச் சிறந்த மருந்து கூட வேலை செய்யாது. பின்னர் அவர்கள் சட்ட விரோதமான வருமானம் பெறுவதற்கு வாய்ப்புகள் உள்ள ரெவினியூ அல்லது ரயில்வே இலாகாக்களில்தான் உத்தியோகம் தேடுவார்கள்.''

இந்த நிருபர் எழுப்பியுள்ள கேள்வி சரியான கேள்விதான். இதே பத்திரிகையில் இதற்குப் பதிலும் பல தடவைகளில் கொடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்கார் பட்டம் அல்லது பரீட்சை என்ற முத்திரையைப் பெற வேண்டுமென்ற கவர்ச்சி, நம்மிடையே அடிமை மனப்பான்மையைத் தோற்றுவித்து, அடிமைத் தளைகளை பலப்படுத்திவிடுகிறது. அதனால்தான் சர்க்கார் பள்ளிக்கூடங்களுக்குப் போவதை நிறுத்த வேண்டிய அவசியத்தை நான் வற்புறுத்தி வந்திருக்கிறேன். ஆனால் மாணவர்களை இந்த மோகத்திலிருந்து யார் மீட்பது? சர்க்கார் பட்டம் அல்லது நற்சாட்சி ஒன்றை அவன் பெற்றுவிட்டால், லஞ்சம் போன்ற வகைகளில் சட்ட விரோதமான வருமானம் தேடித்தரக் கூடிய உத்தியோகத்தை அவன் எப்படிப் பெறமுடியும்? உடல் உழைப்பை வரவேற்பதற்கு நமது மாணவர்கள் கற்றுக் கொள்ளாதவரையில், இலக்கிய அறிவைவிட அது அதிக முக்கியமானது என்று உணராதவரையில், இந்தக் கவர்ச்சியின் பிடிப்பை அவர்கள் தகர்க்க முடியாது. கைராட்டினத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதற்கு இதுவும் ஒரு காரணம்; ஏனெனில், உடல் உழைப்பை ஏற்றுக் கொள்ளுவதற்கு இது ஒரு சின்னமாகும். 'நவஜீவன்' பத்திரிகையின் முதல் இதழில், கைராட்டினம், கலப்பை இரண்டையும் சித்திரிக்கும் படம் ஒன்று இருந்தது. கைராட்டினத்தை நமது மக்கள் ஏற்றுக் கொண்டு விட்டால், உடலுழைப்பும், கௌரவமான வறுமையும் மக்களின் வாழ்க்கையில் தாமாகவே உரிய இடத்தைப் பெற்றுவிடும். இதனால் எல்லோரும் சர்க்காரின் மூலம்தான் சம்பாதிக்க வேண்டுமென்று அர்த்தமில்லை; ஆனால், எல்லோருமே ஏதாவது ஒன்றை உற்பத்தி செய்வதற்கு உழைப்பதன் மூலம் தான் சம்பாதிக்க வேண்டும் என்று அர்த்தமாகும். மாணவர்கள் வரவர மேல் நாட்டு வாழ்க்கை முறையை மேற்கொள்ளுவது, மேல் நாட்டுப் பொருள்களில் ஆசை கொள்ளுவது ஆகியவை சம்பந்தப்பட்டவரையில், பள்ளிக்கூடங்களில் நிலவும் சூழ்நிலையைத்தான் குற்றம் சொல்ல வேண்டும். அநேகமாக எந்த மாணவனுமே இந்த வியாதியிலிருந்து தப்புவதில்லை.

—'நவஜீவன்' – 26—8—1928

# 15

# மாணவர்களும், நல்லொழுக்கமும்

## 1

*ஒரு மாணவர் பின்வருமாறு எழுதுகிறார் :*

*" குறை கூறுபவர்களுக்கு பல சமயங்களில் நீங்கள் அளிக்கும் பதில்கள், தர்க்க ரீதியில் சரியாக இருக்கின்றன ; அவை மனத்திற்குத் தற்காலிகமான திருப்தியை அளிக்கின்றன. ஆனால், உண்மையில் அந்தப் புதிர் புரியாமலேதான் இருந்து கொண்டிருக்கிறது. உதாரணமாக, "கோழைதான் எண்ணிக்கையின் பலத்தைக் கொண்டு போராடுவான்" என்று நீங்கள் சொல்லுவதை எடுத்துக் கொள்ளுவோம். ஏட்டளவில் இது சரியாகத்தான் இருக்கிறது. அப்போதைக்கு இதனால் மனத்திற்கு ஒரு தைரியமும் ஏற்படுகிறது. ஆனால், நடைமுறையில் இதனால் என்ன பிரயோசனம் ? உங்களுடைய ஆன்ம சக்திக் கொள்கையைத் தராதரமின்றி எல்லோருக்கும் போதிக்கிறீர்கள். ஆனால், கைராட்டினத்திலும், கதரிலும் கூட நம்பிக்கை இல்லாதவர்கள் உங்களுடைய கற்பனைகளை உண்மையாக ஏற்றுக் கொள்ளுவார்களென்று நினைக்கிறீர்களா ? உங்களுடைய உபதேசம் வாத்தின் கழுத்தில் ஜலத்தை ஊற்றுவது போல் முற்றிலும் பயனற்றதாக இராதா ? "*

ஆன்ம பலத்தைப்பற்றிய என்னுடைய உபதேசம் இப்போதைக்குப் பயனற்றதாகத் தோன்றினாலும் கூட, முற்றிலும் வீணாகிவிடாதென்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். 'எறும்பு ஊர கல்லும் தேயும்' என்பது பழமொழி. இந்த நிருபருக்கு இன்று அனுபவ சாத்தியமற்றதாகத் தோன்றும் கற்பனைகள், நாளைக்கு அனுபவ சாத்தியமானவைகளாகக் கருதப்படும் என்பதே என்னுடைய நம்பிக்கையாகும். சரித்திரத்தில் இம்மாதிரி உதாரணங்கள் எவ்வளவோ இருக்கின்றன. "ஆன்ம பலம்" என்ற வார்த்தை மாணவர்களுக்கு இன்று அர்த்தமற்றதாகத் தோன்றினால், நாம் எவ்வளவு மோசமான நிலைமைக்கு வந்து விட்டோம் என்பதையே அது காட்டுகிறது. நிரந்தரமான மதிப்புள்ள ஆன்மிக விஷயங்களை இன்றைய இளைஞர்கள் கற்பனைகள் என்று கருதுவதும், அவ்வப்போதுள்ள நிலையற்ற விஷயங்களை அனுபவசாத்தியமானவைகளாகக் கருதுவதும் மிகவும் வருந்தத்தக்கதல்லவா ?

வெறும் எண்ணிக்கையினால் ஒரு பிரயோசனமும் இல்லை என்பதை ஒவ்வொரு நாளும் கண் முன்பு கண்டிருக்கிறோம். 30 கோடி மக்கள் உள்ள இந்தியாவை, ஒரு லட்சத்திற்கும் குறைவான ஆங்கிலேயர்கள் ஆளுவதைவிட இந்த உண்மையை எடுத்துக் காட்ட வேறு என்ன ருசு வேண்டும்? ஆயிரம் ஆடுகளிருந்தாலும், ஒரு சிங்கத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே ஓடிவிடுகின்றன. இதன் காரணம் தெளிவானது. ஆடுகளுக்குத் தம்முடைய பலவீனம் தெரியும்; சிங்கத்திற்குத் தன்னுடைய பலம் தெரியும்.

தன்னுடைய பலத்தைச் சிங்கம் உணர்ந்திருப்பதால், அந்த உணர்வு எண்ணிக்கையின் பலத்தை மிஞ்சி விடுகிறது. இதி லிருந்து ஆன்ம பலம் என்பது வெறும் கற்பனையல்ல என்றும், உண்மையில் அது பலமுள்ள ஒரு சக்திதான் என்றும் நாம் ஊகிக் கக்கூடாதா ?

எண்ணிக்கையில் உள்ள பலத்தை நான் குறைத்துக் கூற விரும்பவில்லை. அதற்கும் உபயோகம் இருக்கிறது. ஆனால், ஆன்ம பலத்தின் பக்கபலம் இருக்கும்போதுதான் அது பயன் படும். லட்சக்கணக்கான எறும்புகள் சேர்ந்து கொண்டு, யானையின் பலவீனமான இடத்தில் தாக்கினால் யானையைக் கொன்று விடலாம். அந்த எறும்புகளின் ஒருமையுணர்ச்சி காரணமாக அவை பலம் பெறுகின்றன. அதே மாதிரி, எறும்பு களைப்போல் நாம் ஒருமையுணர்ச்சி பெற்றுவிட்டால், நாமும் வெல்ல முடியாதவர்களாகி, நமது தளைகளிலிருந்து விடுதலை பெற்று விடுவோம்.

நமது தேசீயப் பள்ளிக்கூடங்களில் உள்ள மாணவர்கள் ஒரு சிலராகவே இருந்தாலும் கூட, அவர்களுக்கு உண்மையாகவே தியாக உணர்ச்சியும், சேவை செய்யும் உணர்ச்சியும் இருந்தால், தம்முடைய லட்சியங்களில் உயிர்த் துடிப்புள்ள நம்பிக்கை யிருந்தால், சர்க்கார் பள்ளிக்கூடங்களில் உள்ள எல்லா மாணவர்களையும் விடக்கூட அதிகமாக தேசத்திற்கு உதவியாக இருப்பார்கள் என்பது என்னுடைய திடமான நம்பிக்கையாகும். எண்ணிக்கையை விட தரம்தான் உயர்ந்தது என்பது சரியான உண்மையாகும். ஏனெனில், நடைமுறையில் அது உண்மையாக இருக்கிறது. நடைமுறையில் எதை ருசுப்பிக்க முடியவில்லையோ அது சரியான கொள்கையாகவும் இருக்க முடியாது என்றே நான் கருதுகிறேன்.

உலகம் பந்தைப்போல் உருண்டையாயிருக்கிறதென்றும், அது தன்னைத்தானே சுற்றிக் கொள்ளுகிறதென்றும் கலீலியோ அறிவித்தபோது, கற்பனைக்காரன், கனவு காண்பவன் என்று அவரைக் கேலி செய்தார்கள், திட்டினார்கள். ஆனால், கலீலியோ சொன்னதுதான் உண்மை என்பதை இன்று நாம் அறிவோம். உலகம் தட்டையாயிருக்கிறதென்றும், சுற்றாமல் இருந்த இடத்தி லேயே நிலையாக இருக்கிறதென்றும் சொன்ன அவருடைய எதிரிகள்தான் அறியாமை என்ற புகை மண்டலத்தில் வசித்துக் கொண்டிருந்தார்கள் என்பதையும் நாம் அறிவோம்.

இன்றைய கல்வி முறை ஆன்மிக விஷயங்களிலிருந்து நம்முடைய கவனத்தைத் திருப்பிவிட்டுவிடும் தன்மை வாய்ந்த தாக இருக்கிறது. ஆகையால், ஆன்ம சக்தியின் சாத்தியக் கூறுகள் நமக்குப் புரிவதில்லை. இதன் பலனாக நம் கவனமெல் லாம் தற்காலிகமான, லோகாயதமான விஷயங்களிலேயே சென்று விடுகிறது. கற்பனையே இல்லாத அசட்டுத்தனத்திற்கு இதுதான் எல்லை.

ஆனால், நம்பிக்கையையும், பொறுமையையும் விடாமலே நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நான் கூறுவதில் உள்ள உண்மையில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. இந்த நம்பிக்கை என்னுடையவும், என்னுடைய சகபாடிகளுடையவுமான அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. பொறுமையுடனும், விருப்பு வெறுப்பில்லாமலும் ஆராய்ச்சி செய்யும் சக்தி உள்ள ஒவ்வொரு மாணவரும் பின் கண்ட உண்மைகளைத் தானே சோதித்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்:

1. வெறும் எண்ணிக்கையினால் பிரயோசனமில்லை.

2. ஆன்ம சக்தியைத் தவிர மற்றெல்லா சக்திகளுமே தற்காலிகமானவை, பயனற்றவை.

3. மேலே கூறியது உண்மைதான் என்றால், கட்டுப்பாட்டின் மூலமும், தன்னைத் தானே பரிசுத்தப்படுத்திக் கொள்ளுவதன் மூலமும், ஈடு இணையற்ற இந்த ஆயுதத்தைப் பெறுவதற்கு விடாமல் முயற்சி செய்வது ஒவ்வொரு மாணவருடைய கடமையாகவும் இருக்க வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும்.

—'எங் இந்தியா' – 14—11—1929

## 2

ஓய்வு பெற்ற பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர் (பஞ்சாப்) ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"சென்ற காங்கிரஸ் மகா சபைக்குப் பிறகு எங்கள் மாகாணத்திலுள்ள மாணவர்களிடையே பெரும் பரபரப்பு இருந்து வந்திருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். அந்த இளம் உள்ளங்களில் ஒரு புதிய கனல் கொழுந்து விட்டெரிவதுபோல் தோன்றுகிறது. இந்தக் கனலுக்கு மூல காரணம் நீங்கள்தான்; இது எந்தப் பக்கமாக அடிக்கும் என்பதற்கும் பொறுப்பு நீங்கள் தான். ஆகையால், இது சம்பந்தமான பின் கண்ட இரண்டு விஷயங்களையும் சிந்தித்துப் பார்த்து, உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பீர்கள் என்று நம்புகிறேன்:

"1. சரியான சந்தர்ப்பங்களில் மாணவர்கள் தங்கள் தாய் நாட்டின் மீதுள்ள பற்றுதலைத் தெரிவித்துக் கொள்ளுவதிலோ அல்லது சுயாட்சியில் தங்களுக்குள்ள ஆர்வத்தை வெளிப்படுத்துவதிலோ எனக்குக் கொஞ்சம் கூட ஆட்சேபணை இல்லை; ஆனால் இது உண்மையான 'அகிம்சை'யை மீறுவதாக இருக்கக் கூடாது. காலாகாலம் இல்லாமல் முரட்டுத் தனமான அல்லது வெறுப்புத்தன்மை வாய்ந்த புரட்சி கோஷங்களை எழுப்பும் போது, இவர்கள் நிச்சயமாக 'பலாத்காரம்' என்ற குற்றத்தைப் புரிந்தவர்களாகிறார்கள் என்றே நான் அஞ்சுகிறேன். "யூனியன் ஜாக் கொடி ஒழிக" என்று அவர்கள் கோஷமிடுவது இந்தக் குற்றத்தின் கீழ் வராதா?

"2. நல்லொழுக்கத்தை வளர்க்கும் விஷயத்தில் நமது பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளிலும் உருப்படியாக எதையுமே செய்யவில்லை. இந்த நிலைமையில், மாணவர்கள் கண்ணியத்தையும், கட்டுப்பாட்டையும் பலி கொடுத்து, மாணவர்கள் என்ற முறையில் தம்முடைய பல்வேறு கடமைகளையும் சிறிதும் பொருட்படுத்தாமல், அவ்வப்போது மனத்தில் தோன்றுவதற்கேற்ப நடப்பதை நீங்கள் அனுமதிக்கப் போகிறீர்களா? நம்முடைய இளைஞர்கள் முதலில் நல்ல ஒழுக்கம் பெறுவதே, சம்பந்தப்பட்ட யாவருடைய முதல் கவலையாகவும் இருக்க வேண்டாமா?"

இந்த கோஷங்களைப்பற்றி 'எங் இந்தியா' பத்திரிகையில் சமீபத்தில் நான் எழுதியிருக்கிறேன். "யூனியன் ஜாக் கொடி ஒழிக" என்ற கோஷத்தில் பலாத்காரம் தொனிக்கிறது என்பதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளுகிறேன். மேலும், பல ஆட்சேபகரமான கோஷங்களும் வழக்கத்தில் வந்திருக்கின்றன. அகிம்ஸையை ஒரு செயல் முறையாக நம்புகிறவர்கள் கூட இந்த கோஷங்களை எழுப்பக் கூடாது. இந்த கோஷங்களினால் ஒரு நன்மையுமில்லை. அதனால் கெடுதலே ஏற்படலாம். கட்டுப்பாடுள்ள ஒரு இளைஞன் இத்தகைய கோஷங்களை எழுப்பமாட்டான். இது நிச்சயமாக சத்தியாக்கிரகத்திற்கு முரணானதுதான்.

அவர் எழுப்பியுள்ள இரண்டாவது விஷயம் சம்பந்தப்பட்ட வரையில், அதிகாரிகள் எதை விதைத்தார்களோ அதைத்தான் அறுவடை செய்கிறார்கள் என்பதை அவர் கவனிக்கத் தவறிவிட்டார் என்று தோன்றுகிறது. எங்கே நல்லொழுக்கம் காணப்படவில்லையோ, அங்கே கல்வி முறைதான் அதற்குப் பொறுப்பாகும். என்னுடைய அபிப்பிராயத்தையோ, உதவியையோ கோருவது அதற்குப் பரிகாரமாகாது. ஆசிரியர்களும் மாணவர்களின் லட்சியத்தைப் பகிர்ந்து கொண்டு அவர்களை வெற்றிப் பாதையில் இட்டுச் செல்ல வேண்டும். தம்முடைய நாட்டின் சோக சரித்திரம் மாணவர்களுக்குத் தெரியும். மற்ற நாடுகள் எப்படி சுதந்திரம் பெற்றன என்பதும் அவர்களுக்குத் தெரியும். தம்முடைய சொந்த நாட்டின் விடுதலைக்காக அவர்கள் வேலை செய்வதைக் கட்டுப்படுத்துவது சாத்தியமில்லை. அவர்களுடைய லட்சியத்தை அடைவதற்கு அவர்களுக்கு சரியான வழிகாட்டாவிட்டால், முதிர்ச்சியற்ற அவர்களுடைய அறிவு எந்த வழியைக் காட்டுகிறதோ அந்த வழியில்தான் அவர்கள் செல்லுவார்கள். அது எப்படியிருந்தபோதிலும், என்னைப் பொறுத்த வரையில், அவர்களுக்கு நான் வழிகாட்டிவிட்டேன். அவர்களுடைய உற்சாகத்திற்கு நான்தான் காரணம் என்றால், அதைப்பற்றி எனக்கு மகிழ்ச்சிதான். அவர்களை சரியான பாதையில் நடத்திச் செல்லுவதற்கும் நான் முயற்சி செய்து வருகிறேன். என்னுடைய முயற்சியையும் மீறி அவர்கள் தவறான பாதையில் சென்றால், அதற்கு நான் பொறுப்பாளி அல்ல.

அமிருதசரஸில் வெடி வீச்சின் மூலம் சர்தார் பிரதாப் சிங் என்ற குற்றமற்ற இளைஞர் ஒருவர் தன் உயிரை இழந்ததைக்

குறித்து என்னை விட அதிகமாக வருந்துபவர் யாரும் இருக்க முடியாது. வெடி வீசியவர்; அவரைக் கொல்ல வேண்டுமென்று நினைக்கவில்லை. ஓய்வு பெற்ற இந்தப் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர் குறிப்பிட்டுள்ள நல்லொழுக்கமின்மைதான் இந்த அக்கிரமங் களுக்குக் காரணமாகும். நல்லொழுக்கம் என்பது அவ்வளவு சரியான வார்த்தையல்ல. நிதானம் என்று கூறுவது சரியாக இருக்கும். கல்ஸா கல்லூரியின் தலைமை ஆசிரியர்தான் அவர்க ளுடைய குறி என்றால், மிகவும் ஆழ்ந்த ஒரு நோய் இருக்கிறது என்பதையே அது காட்டுகிறது. ஆசிரியர்கள், மாணவர்கள் இருவரையும் பிணைக்கும் பந்தம் ஒன்றும் இல்லை. முற்றிலும் சர்க்காருக்குச் சொந்தமான அல்லது சர்க்கார் உதவி பெற்ற கல்வி ஸ்தாபனங்களில் உள்ள ஆசிரியர்கள் தமக்கு சர்க்காரிடம் விசுவாசம் இருந்தாலும், இல்லாவிட்டாலும், விசுவாசம் இருப்ப தாகச் சொல்லிக் கொள்ளுவதும், மற்றவர்களுக்கு அதை ஊட்டு வதும் தம்முடைய கடமை என்று நினைக்கிறார்கள். மாணவர் களிடம் அந்த விசுவாச உணர்ச்சி இல்லை. அவர்கள் பொறுமை இழந்துவிட்டார்கள். இதனால் அவர்கள் தன்னடக்கத்தை இழந்து, தம்முடைய சக்திகளைப் பல்வேறு வழிகளில் செலவிடு கிறார்கள். என்னைப் பொறுத்த வரையில், இந்தச் சம்பவங்கள் என்னுடைய நடவடிக்கைகளை நான் திருத்திக் கொள்ள வேண்டும் என்பதற்கு எச்சரிக்கையல்ல. இரு தரப்பிலும் அலை மோதிக் கொண்டிருக்கும் பலாத்காரத்தை நான் கட்டுப்படுத்த வேண்டும் அல்லது இந்த முயற்சியில் நான் தோல்வியடைய வேண்டும்; என்னுடைய வேலைத் திட்டமும் தொடர்ந்து செயல் பட வேண்டும்.

—'எங் இந்தியா' – 6—3—1930

## 16

# விலைக்கு வாங்கித் திருமணம்

அநேகமாக இந்தியா பூராவிலும், எல்லா வகுப்பினரிடை யேயும் நிலவிவரும் வரதட்சிணை வழக்கத்தைப்பற்றி சில மாதங் களுக்கு முன்பு 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் வாசகர்கள் விவா தித்தார்கள்; இதைப்பற்றி அப்பத்திரிகை தலையங்கமும் எழுதி யிருந்தது. இந்தக் கொடுமையான வழக்கத்தைப்பற்றி 'எங் இந்தியா' பத்திரிகையில் நான் அடிக்கடி எழுதுவது உண்டு. 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் வெளியான விவரங்கள் எனக்கு அப்போதே தெரிந்த கொடும் நினைவுகளை மீண்டும் என் மனத்தில் எழுப்புகின்றன. ஸிந்துவில் நிலவி வந்த வழக்கத்தைப் பற்றியே நான் எழுதியிருந்தேன். தமது பெண்களை நல்ல இடத் தில் மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று ஆசைப்படும் பெற்றோர்களிடமிருந்து ஏராளமான பணம் பறிக்கும் படித்த

ஸிந்திகள் பலர் இருந்தார்கள். 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை, பொதுவான இந்த வழக்கத்தையே எதிர்த்துப் புனிதமான ஒரு இயக்கம் நடத்தியிருக்கிறது. இது இருதயமற்ற ஒரு வழக்கம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எனக்குத் தெரிந்தவரையில் பாமர மக்களை இது பாதிக்கவில்லை. நடுத்தர வகுப்பினரிடையே மட்டும்தான் இந்த வழக்கம் இருந்துவருகிறது. இந்திய சமுதாயம் என்ற சமுத்திரத்தில் இவர்கள் ஒரு துளியேயாகும். கொடிய பழக்கங்களைப்பற்றி நாம் பேசும்போதெல்லாம், நடுத்தர வகுப்பினரைப்பற்றியே நாம் நினைக்கிறோம். கிராமங்களில் வசிக்கும் லட்சக்கணக்கான மக்களுக்கும் பழக்க வழக்கங்களும், சங்கடங்களும் இருக்கின்றன. ஆனால், அவற்றைப்பற்றி இன்னும் நமக்கு ஒன்றும் தெரியாது.

இந்த நாட்டில் உள்ள மக்களில், ஒரு சிறு பிரிவினரிடையே மட்டும்தான் வரதட்சிணைக் கொடுமை இருக்கிறது என்பதற்காக அதை நாம் புறக்கணித்து விடலாம் என்று அர்த்தமில்லை. இந்த வழக்கம் ஒழிந்தாக வேண்டும். திருமணம் என்பது, பணத்திற்காகப் பெற்றோர்கள் செய்யும் ஒரு ஏற்பாடாக இருக்கும் நிலைமை போக வேண்டும். இந்த வழக்கம் சாதிப் பிரிவினையுடன் நெருங்கிய தொடர்பு உள்ளது. ஒரு குறிப்பிட்ட சாதியைச் சேர்ந்த சில நூறு இளைஞர்கள் அல்லது யுவதிகளிடையேதான் பெண் அல்லது பிள்ளை பார்க்கலாம் என்ற கட்டுப்பாடு இருக்கும் வரையில், என்னதான் சொன்னாலும் இந்த வழக்கம் இருந்து கொண்டுதானிருக்கும். இந்தத் தீமையைப் போக்க வேண்டுமானால், பெண்கள் அல்லது பையன்கள் அல்லது பெற்றோர்கள் சாதிக் கட்டுப்பாடுகளை உடைத்தாக வேண்டும். பின்னர் திருமண வயதையும் உயர்த்த வேண்டும். தமக்குத் தகுதியான வரன் கிடைக்காவிட்டால், மணமாகாதவர்களாகவே இருக்கவும் பெண்கள் துணிய வேண்டும். இதற்கு நமது நாட்டின் இளைஞர்களின் மனப்பான்மையில் புரட்சிகரமான மாறுதல்களை உண்டு பண்ணக்கூடிய தன்மைவாய்ந்த ஒரு முறை வேண்டும். துரதிருஷ்டவசமாக கல்வி முறைக்கும், நமது சூழ் நிலைக்கும் இடையே ஒரு சம்பந்தமும் இல்லாமலிருக்கிறது. இதனால் நமது நாட்டிலுள்ள மிகச் சிறுபான்மையோரான பையன்களும், பெண்களும் பெறும் கல்வி இந்த வழக்கத்தைப் பாதிப்பதேயில்லை. ஆகையால், இந்தத் தீமையைக் குறைப்பதற்காக என்னென்ன செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்ய வேண்டியதுதான். இருந்தாலும், துரிதமாக மாறுதலடைந்துவரும் நாட்டின் நிலைமைக்கேற்ற ஒரு கல்வி முறை இருந்தால்தான் இதையும், இன்னும் பல தீமைகளையும் சமாளிக்க முடியுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். திருமணம் என்பது, வாழ்க்கையில் மிகவும் அந்நியோன்னியமான ஒரு விஷயம். இம்மாதிரி ஒரு விஷயத்தில், கல்லூரிப் பயிற்சி பெற்ற பல பையன்களும், பெண்களும் கூட, தீமை என்று தெரிந்த இந்தப் பழக்கத்தை ஏன் எதிர்க்க முடியாமல் அல்லது எதிர்க்க விரும்பாமல் இருக்கிறார்கள்?

தமக்குத் திருமணம் ஆகவில்லை என்பதற்காகப் படித்த பெண்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ள வேண்டும்? ஒருவருடைய தார்மிக உணர்ச்சிக்கு முற்றிலும் முரணுயிருப்பதும், நியாயமற்றதுமான ஒரு வழக்கத்தை எதிர்க்கத் துணிய முடியவில்லையென்ருல், அவர்கள் பெற்ற கல்விக்கு என்ன மதிப்பு இருக்கிறது? இதற்குப் பதில் தெளிவானது. சமூகத் தீங்குகளையோ, மற்றத் தீங்குகளையோ பெண்கள் எதிர்ப்பதற்குத் துணிவு அளிக்காத கல்வி முறையில் ஏதோ பெரிய தவறு இருக்கத்தான் வேண்டும். வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் எழக்கூடிய பிரச்னைகளையும் சரியான முறையில் தீர்க்கக் கூடிய விதத்தில் மாணவனின் ஆற்றலை வெளிக் கொணரத் தக்க கல்வி முறைதான் பிரயோசனமாகும்.

—'ஹரிஜன்' – 23—5—1936

# 17

# கல்வி இலாகா மந்திரிகளுக்கு

மாணவர்களுக்குள்ள சில சங்கடங்களை எடுத்துக் காட்டும் சில விவரங்களை, தெற்கேயுள்ள ஒரு உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் எனக்கு அனுப்பியிருக்கிருர் :

"எம். இ. ஆர். 99: ராஜத்துரோகமான நடவடிக்கைகளுக்காக கோர்ட்டுகளினுல் தண்டிக்கப்பட்ட எந்த மாணவரையும் சர்க்காரின் முன் அனுமதி பெருமல் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக் கொள்ளக் கூடாது. சர்க்காருக்கு எதிரான அரசியல் கிளர்ச்சிகளில் பள்ளிக்கூட நிர்வாகியோ, அதில் உள்ள சிப்பந்திகளோ கலந்து கொள்ள அனுமதிக்கக் கூடாது; சர்க்கார் மீது துவேஷம் உண்டாக்கக் கூடிய அபிப்பிராயங்களையும் பரப்பக் கூடாது; மாணவர்கள் அரசியல் கூட்டங்களுக்குப் போவதையும், எந்த விதமான அரசியல் கிளர்ச்சியில் கலந்து கொள்ளுவதையும் அனுமதிக்கக் கூடாது.

100. இம்மாதிரி தவருன நடத்தை தொடர்ந்து இருந்து கொண்டிருந்தால், அல்லது ஆசிரியர்களோ, நிர்வாகிகளோ இதற்கு ஊக்கமளித்துக் கொண்டிருந்தால், முதலில் எச்சரிக்கை செய்து விட்டு, கல்வி இலாகா டைரக்டர் அத்தகைய பள்ளிக்கூடத்திற்கு அளிக்கப்பட்டுள்ள அங்கீகாரத்தை வாபஸ் பெறலாம், மான்யத் தொகையை நிறுத்தி வைக்கலாம், சர்க்கார் உபகாரச் சம்பளப் பரீட்சைகளுக்கு எழுதக் கூடாதென்று நிறுத்தி வைக்கலாம் அல்லது சர்க்கார் உபகாரச் சம்பளங்கள் பெறுபவர்களுக்கு அதை நிறுத்தி வைக்கலாம்.

101. பள்ளிக்கூட ஆசிரியர் ஒருவர் பகிரங்கமாகத் தெரிவிக்கும் அபிப்பிராயங்கள், அவர் பொறுப்பிலுள்ள மாணவர்களின் சீரான அபிவிருத்திக்கு அபாயம் விளைவிக்கக் கூடியவையாக இருந்தால், முதிர்ச்சி பெருத அவர்களுடைய உள்ளங்களில் அதிகாரிகளிடம் உள்ள மரியாதையைக் குறைக்கத்தக்க

18

கருத்துகளைப் புகுத்துவதாயிருந்தால், அவர்கள் உபயோகமான பிரஜைகளாவதையும், பிற்கால வாழ்க்கையில் முன்னேற்றம் பெறுவதையும் தடை செய்யும் விதத்தில் இருந்தால், அல்லது ஒரு ஆசிரியர் தானே நேரில் தன்னுடைய மாணவர்களை ஒரு அரசியல் கூட்டத்திற்கு அழைத்துச் சென்றதாகத் தெரிந்தால், அல்லது அவர்கள் அப்படிப் போவதற்கு ஊக்கமளித்திருந்தால், அந்த ஆசிரியர் தன் கடமையில் தவறியதாகக் கருதி, அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

79. சர்க்காரால் அங்கீகரிக்கப்படாத புத்தகங்களை (மதக் கல்வி போதனைக்கான புத்தகங்கள் தவிர) உபயோகிக்கக் கூடாது. எந்தப் பள்ளிக்கூடத்திலும், எந்தப் பாட புத்தகத்தையும் அனுமதிக்கவோ, நிராகரிக்கவோ சர்க்காருக்கு உரிமையுண்டு.

80. எல்லாக் குழந்தைகளுக்கும் அம்மை குத்த வேண்டும்.

அங்கீகரிக்கப்பட்ட பள்ளிக் கட்டிடங்களில் தேசீயக் கொடியை ஏற்றுவது, பள்ளி வகுப்புகளில் தேசீயத் தலைவர்களின் படங்களை மாட்டுவது, சர்க்கார் பரீட்சைகளில் மாணவர்கள் தமது பதில்களில் தேசீயக் கருத்துகளைத் தெரிவிப்பது ஆகியவற்றைத் தடுக்கும் சுற்றறிக்கைளும் இன்னும் அமலில் இருக்கின்றன.

ஆசிரியர் சங்கங்களைக் கலந்தாலோசிக்காமல் பாடத் திட்டங்களை மாற்றக் கூடாதென்று சர்க்கார் ஒரு விதி இயற்றலாம். சென்னையில் தென்னிந்திய ஆசிரியர்கள் சங்கம் ஆசிரியர்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கிறது. 4-ஆவது படிவத்திலும் சர்க்கார் பரீட்சை நடத்த வேண்டுமென்று சென்ற சர்க்கார் கொண்டுவந்த யோசனையை இந்தச் சங்கம் கண்டித்திருக்கிறது.

ஹிந்தி பேசாத மாகாணங்களில் ஹிந்திக்கு ஊக்கமளிப்பதற்காக, ஹிந்தி ஆசிரியருக்கு மற்ற ஆசிரியர்களுக்குக் கொடுப்பதை விட அதிக மான்யம் கொடுக்க வேண்டும். ஹிந்தி பிரசாரகர்கள் உருது லிபியிலும் சிறிது காலம் பயிற்சி பெற வேண்டும்.

தலைமை ஆசிரியர்கள் ஐந்து வருடங்களுக்குள் பாட புத்தகங்களை மாற்றக் கூடாதென்று சென்னையிலுள்ள விதி, பெற்றோர்களுக்கு பணத்தை மிச்சப்படுத்தவில்லை. ஏனெனில், உயர் வகுப்புகளுக்குப் போகும் பிள்ளைகள் எப்படியும் புதிய புத்தகங்கள் வாங்கி விடுகிறார்கள். தேர்ச்சி பெறாதவர்கள் சாதாரணமாக வேறு புத்தகங்கள் உள்ள மற்றப் பள்ளிக்கூடங்களுக்குப் போய் விடுகிறார்கள். இதனால் திறமை பாதிக்கப்படுகிறது. 79-ஆவது விதியின் கீழ் தேசீயப் போக்கு வாய்ந்த புத்தகங்கள் வைக்கப்படுவதையும் தடுக்கிறது.

இரண்டு வருடங்களுக்குள்ளாக எல்லா உயர் வகுப்புகளிலும் தாய்மொழி உபயோகிக்கப்பட வேண்டும். ஆறாவது படிவத்தின் ஆங்கிலத்தை 4-வது படிவத்தின் தரத்திற்குக் குறைப்பது, ஆங்கில இஷ்ட பாட வகுப்புகளை ஆரம்பிப்பது, ஆங்கிலத்திற்குப் பதிலாக 5-ஆவது வகுப்பு, 1, 2-ஆவது படிவங்களில் (மற்ற ராஜ்யயங்களில் அதற்குச் சமமான வகுப்புகளில்) முற்றிலும் ஹிந்தியைப் போதிப்பது, கணக்குப் பாடத்தை சுலபமாக்குவது ஆகியவற்றை உடனே கவனிக்க வேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன். இதனால் ஹிந்தி சரியான கவனம் பெறுவதற்கும், கை வினைத் தொழில்களில்

உண்மையான பயிற்சி அளிப்பதற்கும் சௌகரியமாயிருக்கும். இப்போதெல்லாம் பயிற்சி என்பது வெறும் பெயரளவில்தான் இருக்கிறது.

99, 100 பிரிவுகளுக்குப் பதிலாக வேறு மூன்று பிரிவுகளை இயற்றலாம். மாணவர்களுக்கு அனுபவத்தில் பிரஜைகளின் கடமை, சுகாதாரம், ஆரோக்கிய உணவு முதலியவைகளில் தலைமை ஆசிரியர்கள் பயிற்சியளிக்க வேண்டுமென்று விதிக்கலாம். பள்ளிக்கூட சூழ்நிலை, இன்றைய அரசியல், பொருளாதாரப் பிரச்னைகள் பற்றியும் அறிவூட்டலாம். இப்படிச் செய்தால் விரும்பத்தகாத, விஷயமறியாத கிளர்ச்சிகள் தாமாகவே செத்துவிடும்.''

மேலே கூறியவற்றில் பெரும்பாலானவை ஒரு கணமும் தாமதமின்றி உடனே அகற்றப்படவேண்டும். மாணவர்களுடைய மனத்தையோ, ஆசிரியர்களுடைய மனத்தையோ கூட்டுக்குள் அடைக்கக் கூடாது. தாம் அல்லது சர்க்கார் எது சிறந்த வழி என்று கருதுகிறார்கள் என்பதைத்தான் ஆசிரியர்கள் எடுத்துக் காட்ட முடியும். அப்படிச் செய்த பிறகு, மாணவர்களின் கருத்துகளையோ, உணர்ச்சிகளையோ கட்டுப்படுத்த அவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. இதனால், மாணவர்கள் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் உட்படுத்தப்படக் கூடாது என்று அர்த்தமில்லை. கட்டுப்பாடு இல்லாமல் எந்தப் பள்ளிக்கூடத்தையுமே நடத்த முடியாது. ஆனால், கட்டுப்பாட்டுக்கும், மாணவர்களுடைய பொது அபிவிருத்திக்குத் தடைகள் விதிப்பதற்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. அவர்களுடைய நடவடிக்கைகள் வேவு பார்க்கப்படும்போது, இது சகிக்க முடியாததாகிவிடுகிறது. பகிரங்கமாக இல்லாவிட்டாலும், மறைமுகமாக தேசீய விரோதமான ஒரு சூழ்நிலையிலேயே இதுவரையில் அவர்கள் இருந்துவந்திருக்கிறார்கள் என்பதுதான் இதிலுள்ள உண்மை. இந்த நிலைமையை இனி அகற்றிவிட வேண்டும். தேசீயத்தை வளர்ப்பது ஒரு நல்ல காரியமேயொழிய, குற்றமல்ல என்பதை மாணவர்கள் அறிய வேண்டும்.

—'ஹரிஜன்' – 18—9—1937

# 18

# உயர்தரக் கல்வி

உயர்தரக் கல்வியைப் பற்றி கொஞ்ச காலத்திற்கு முன்பு நான் தயக்கத்துடனும், சுருக்கமாகவும் தெரிவித்த கருத்துகளை, மகாகனம் ஸ்ரீனிவாச சாஸ்திரி குறை கூறியிருக்கிறார். அப்படிக் குறை கூறுவதற்கு அவருக்கு முழு உரிமையுண்டு. மனிதர், தேசபக்தர், அறிஞர் என்ற முறையில் அவரிடம் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. ஆகையால், அவருடன் கருத்து வேற்றுமைகள் ஏற்படும் சந்தர்ப்பங்கள் எழும்போது எனக்கு வேதனையாகவே இருக்கிறது. ஆயினும், உயர்தரக் கல்வியைப

பற்றிய என்னுடைய கருத்துகளை, முன்பு சொன்னதை விட இன்னும் விரிவாகச் சொல்ல வேண்டியது என்னுடைய கடமையாகிறது. அப்போதுதான் எங்கள் இருவரிடையே உள்ள கருத்து வேற்றுமைகளை வாசகர்கள் தாமாகவே புரிந்துகொள்ள முடியும்.

என்னிடமுள்ள குறைகளை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். சர்வகலாசாலைக் கல்வி என்று சொல்லிக்கொள்ளக்கூடிய எதுவும் எனக்குக் கிடையாது. என்னுடைய உயர்தரப் பள்ளிப் படிப்பு சாதாரண அளவுக்குமேல் அதிகமாக இருந்ததே கிடையாது. என்னுடைய பரீட்சைகளில் தேர்ச்சி பெற முடிந்தால், அதுவே பெரிய காரியம் என்று நான் நினைத்தேன். பள்ளிக்கூடத்தில் மிகவும் சூடிகையான பையன் என்று பெயர் வாங்கவேண்டும் என்பது என்னுடைய அபிலாஷைகளுக்கு அப்பாற்பட்டது. இருந்தாலும், உயர்தரக் கல்வி என்று கூறப்படுவதுள்பட, பொதுவாகக் கல்வியைப்பற்றி எனக்கு மிகவும் திடமான அபிப்பிராயங்கள் உண்டு. என்னுடைய கருத்துகள் தெளிவாகத் தெரிந்து கொள்ளப்பட வேண்டும். இது, தேசத்திற்கு நான் செய்ய வேண்டிய கடமையாகும். என்னை நானே அடக்கி வைத்துக்கொள்ளும் அளவுக்கு என்னிடம் உள்ள அச்சத்தை நான் விடவேண்டும். கேலி செய்வார்களோ அல்லது நம்முடைய செல்வாக்கும், அந்தஸ்தும் போய்விடுமோவென்று நான் பயப்படக் கூடாது. என்னுடைய கருத்துகளை நான் மறைத்து வைத்துக் கொண்டிருந்தால், தவறுகளைத் திருத்திக் கொள்ளவே முடியாது. என்னுடைய தவறுகளைக் கண்டுபிடிக்கவேண்டும் என்றும், அவற்றைத் திருத்திக் கொள்ளவேண்டும் என்றுமே நான் ஆசைப்படுகிறேன்.

நான் பல வருடங்களாகக் கொண்டிருப்பவைகளும், எனக்கு வாய்ப்பு கிடைத்தபோதெல்லாம் அமல் நடத்தப்பட்டிருப்பவைகளுமான என்னுடைய முடிவுகளைக் கூறுகிறேன் :

1. உலகத்திலேயே மிகவும் உயர்தரமான கல்வியைப் பெறுவதைக் கூட நான் ஆட்சேபிக்கவில்லை.

2. அத்தகைய கல்விக்கு சர்க்காருக்கு நிச்சயமான உபயோகம் இருக்கிறதென்றால், அந்தச் செலவை சர்க்கார்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

3. பொது வருமானத்திலிருந்து உயர்தரக் கல்விக்குச் செலவிடுவதை நான் ஆட்சேபிக்கிறேன்.

4. கலைகள் என்ற பெயரில் நமது கல்லூரிகளில் அளிக்கப்படும் கல்வியில் பெரும் பகுதி வீணேயாகும். இதனால் படித்தவர்களிடையே வேலையில்லாமை ஏற்பட்டுவிட்டது என்பதே என்னுடைய உறுதியான நம்பிக்கை. அது மட்டுமா ? நமது கல்லூரிகளில் இந்தச் செக்கில் அரைபட வேண்டிய துரதிருஷ்டம்

வாய்ந்த நம்முடைய சிறுவர், சிறுமிகளின் உடல், உள்ளம் இரண்டையுமே இது பாதித்துவிட்டது.

5. இந்தியாவில் ஒரு அந்நிய மொழியின் மூலமே உயர்தரக் கல்வி போதிக்கப்படுகிறது. இதனால் தேசத்திற்கு அறிவுத் துறையிலும், தார்மிகத் துறையிலும் சொல்லொணுத் தீங்கு ஏற்பட்டுவிட்டது. இந்தக் காலத்திலேயே வாழும் நாம், இந்தத் தீங்கு எவ்வளவு பெரியது என்பதை மதிப்பிட முடியாது. இந்தக் கல்வியைப் பெற்றுள்ள நாமே குற்றவாளிகளாகவும், நீதிபதிகளாகவும் இருக்க வேண்டியிருக்கிறது. இது அசாத்திய மான வேலையாகும்.

மேற்கூறிய என்னுடைய முடிவுகளுக்கான காரணங்களையும் இனி நான் கூற வேண்டும். அதற்கு, என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்தே ஒரு அத்தியாயத்தைக் கொடுத்தால் நன்ரு யிருக்கும்.

12 வயது வரையில் நான் பெற்ற அறிவெல்லாம், என்னுடைய தாய் மொழியான குஜராத்தியின் மூலம்தான். கணக்கு, சரித்திரம், பூகோளம் ஆகியவைகளைப் பற்றி அப்போது எனக்கு ஏதோ கொஞ்சம் தெரியும். பின்னர் ஒரு உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தேன். மூன்று வருடங்களுக்குத் தாய் மொழியின் மூலமே பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்டன. ஆனல், மாணவர்களின் மூளையில் ஆங்கிலத்தை அடித்துப் புகுத்துவதுதான் ஆசிரியரின் வேலையாக இருந்தது. ஆகையால், எங்களுடைய நேரத்தில் பாதி, ஆங்கிலம் கற்றுக் கொள்ளுவதிலும், அதனுடைய உச்சரிப்புகளைத் தெரிந்து கொள்ளுவதிலுமே செலவாகிக்கொண்டிருந்தது. வார்த்தைகள் எப்படி எழுதப்படுகின்றனவோ அதே மாதிரி உச்சரிக்க முடியாத ஒரு மொழியைக் கற்றுக் கொள்ளுவது வேதனை மிக்க ஒரு அனுபவமாயிருந்தது. வார்த்தைகளின் எழுத்துக்களை மனப்பாடம் செய்வது ஒரு விசித்திரமான அனுபவமாயிருந்தது. ஆனல், என்னுடைய வாதத்திற்கும் இதற்கும் சம்பந்தமில்லை. முதல் மூன்று வருடங்கள் வரையில் எல்லாம் சுலபமாக இருந்தது.

நாலாவது வருடத்தில்தான் சங்கடம் ஆரம்பமாயிற்று. க்ஷேத்திர கணிதம், பின்ன கணிதம், ரசாயனம், வான சாத்திரம், சரித்திரம், பூகோளம் ஆகிய எல்லாவற்றையும் ஆங்கிலத்தின் மூலம் நாங்கள் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. சமஸ்கிருதம், பாரசீகம் ஆகியவற்றைக்கூட, தாய்மொழியின் மூலமின்றி, ஆங்கிலத்தின் மூலம்தான் கற்றுக் கொள்ளவேண்டும் என்ற அளவுக்கு ஆங்கிலத்தின் கொடுங்கோன்மை அவ்வளவு அதிகமாயிருந்தது. தனக்குப் புரிந்த குஜராத்தியில் எந்த மாணவனவது வகுப்பில் பேசினல், அவனுக்கு தண்டனை கொடுக்கப்பட்டது. சரியாக உச்சரிக்க முடியாமலும், சரியாகப் புரிந்துகொள்ள முடியாமலும், தப்பும், தவறுமாக ஆங்கிலத்தில் பேசினலும் அதைப்பற்றி ஆசிரியருக்குக் கவலையில்லை. அதைப் பற்றி

ஆசிரியர் ஏன் கவலைப்பட வேண்டும்? அவருடைய ஆங்கிலத்திலேயே தவறு இல்லாமலில்லை. வேறு எப்படித்தான் இருக்க முடியும்? மாணவர்களைப் போலவே ஆசிரியருக்கும் ஆங்கிலம் அந்நிய மொழிதானே. இதன் பலன் ஒரே குழப்பமாயிருந்தது. எல்லாவற்றையும் நாங்கள் மனப்பாடம் செய்யவேண்டியிருந்தது. சில சமயங்களில் படிப்பது முற்றிலும் புரியவே புரியாது. சில சமயங்களில் ஒன்றுமே புரியாது. க்ஷேத்திர கணிதத்தை எங்களுக்குப் புரிய வைப்பதற்கு ஆசிரியர் திணறிக் கொண்டிருக்கும்போது, எனக்குத் தலை சுற்றும். யூக்ளிடின் முதல் புத்தகத்தில் 13-ஆவது கணக்குக்கு வரும்வரையில், க்ஷேத்திர கணிதம் என்றால் என்னவென்று எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என்னுடைய தாய் மொழியினிடம் எனக்கு மிகுந்த பற்றுதல் உண்டு. ஆயினும், க்ஷேத்திர கணிதம், பின்ன கணிதம் போன்ற பாடங்களில் வரும் வார்த்தைகளுக்குச் சரியான குஜராத்தி வார்த்தைகள் இன்றும் கூட எனக்குத் தெரியாதென்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். கணக்கு, க்ஷேத்திர கணிதம், பின்ன கணிதம், ரசாயனம், வான சாத்திரம் முதலியவைகளை நான்கு வருடங்களில் நான் எவ்வளவு கற்றுக் கொண்டேனோ, அவற்றை ஆங்கிலத்தின் மூலமின்றி குஜராத்தியின் மூலம் கற்றிருந்தால், சுலபமாக ஒரு வருடத்திற்குள் எனக்குத் தெரிந்திருக்கும். அந்தப் பாடங்களை நான் புரிந்து கொள்ளுவது சுலபமாகவும், தெளிவாகவும் இருந்திருக்கும். என்னுடைய குஜராத்தியும் வளம் பெற்றிருக்கும். அந்த அறிவை என் வீட்டிலேயே நான் பயன்படுத்திக் கொண்டிருப்பேன். இந்த ஆங்கில போதனமொழி காரணமாக, ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் படித்தறியாத என் குடும்பத்தினருக்கும், எனக்குமிடையே தாண்டமுடியாத ஒரு தடை ஏற்பட்டுவிட்டது. நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பதைப் பற்றி என் தகப்பனருக்கு ஒன்றுமே தெரியாது. நான் விரும்பியிருந்தால் கூட, நான் என்ன கற்றுக் கொள்ளுகிறேன் என்பதில் என் தகப்பனர் அக்கறை கொள்ளும்படி செய்திருக்க முடியாது. அவர் நல்ல புத்திக் கூர்மையுள்ளவர்தான் என்றாலும், அவருக்கு ஆங்கிலத்தில் ஒரு வார்த்தைகூடத் தெரியாது. என்னுடைய வீட்டிலேயே நான் வெகு சீக்கிரமாக ஒரு அந்நியனாகிக் கொண்டு வந்தேன். நான் மற்றவர்களைவிட உயர்ந்த மனிதனாகவும் ஆகிவிட்டேன். என்னுடைய ஆடைகளில் கூடக் கண்ணுக்குப் புலப்படாத மாறுதல்கள் ஏற்படத்தொடங்கின என்பது எனக்கு ஏற்பட்ட ஒரு தனி அனுபவமல்ல; பெரும்பாலானவர்களுக்கும் இது பொதுவான ஓர் அனுபவமாகவே இருந்தது.

உயர்நிலைப் பள்ளியில் நான் படித்த மூன்று வருடங்களில் என்னுடைய பொது அறிவு கொஞ்சம் கூட அதிகமாகவில்லை. எல்லாவற்றையும் ஆங்கிலத்தில் போதிப்பதற்குப் பிள்ளைகளைத் தயார் செய்யும் ஏற்பாடுதான் அது. உயர்நிலைப் பள்ளிகள் என்பது, ஆங்கிலேயர்கள் கலாசாரத் துறையில் வெற்றி பெறு

வதற்கான பள்ளிகளேயாகும். நான் படித்த பள்ளிக்கூடத்தில் இருந்த முன்னூறு பையன்கள் பெற்ற அறிவு, கட்டுப்படுத்தப் பட்ட அறிவேயாகும். அந்த அறிவைப் பாமர மக்களுக்குக் கொடுக்க முடியாது.

இலக்கியத்தைப்பற்றியும் ஒரு வார்த்தை. பல ஆங்கில வாசகங்களையும், ஆங்கிலக் கவிதைப் புத்தகங்களையும் நாங்கள் படிக்க வேண்டியிருந்தது. இதெல்லாம் நன்ருகத்தான் இருந்தன என்பது உண்மையே. ஆனுல், பாமர மக்களுக்குச் சேவை செய்வதற்கோ அல்லது அவர்களுடன் தொடர்பு பெறச் செய்வதற்கோ இந்த அறிவெல்லாம் எனக்குப் பயன்படவேயில்லை. ஆங்கில வாசகம், கவிதை இரண்டிலும் நான் படித்ததைப் படித்திராவிட்டால், ஒரு அபூர்வமான பொக்கிஷத்தை இழந்திருப்பேன் என்று நான் சொல்ல முடியாது. இந்த ஏழு வருடங்களையும் குஜராத்தியில் தேர்ச்சி பெறுவதில் செலவிட்டிருந்தால், கணிதம், விஞ்ஞானம், சமஸ்கிருதம், மற்றும் இதர பாடங்களை குஜராத்தியின் மூலம் கற்றுக்கொண்டிருந்தால், அப்படி நான் பெற்ற அறிவைச் சுலபமாக என்னுடைய அண்டை அயலார்களுடன் பகிர்ந்து கொண்டிருக்க முடியும். குஜராத்திக்கு நான் இன்னும் வளம் ஊட்டியிருப்பேன். என் தேசத்தினிடமும், என் தாய் மொழியினிடமும் எனக்கு அபாரமான பற்றுதல் உண்டு. தீவிரமாக முனைந்து வேலை செய்யும் சுபாவமும் உண்டு. ஆகையால், தாய் மொழியின் மூலம் கல்வி பெற்றிருந்தால், பாமர மக்களுக்கு நான் இன்னும் உயர்ந்த முறையில், இன்னும் நல்ல சேவை செய்திருப்பேனே என்னவோ, யார் கண்டது ?

ஆங்கிலத்தையோ, அதிலுள்ள உன்னதமான இலக்கியத்தையோ நான் குறை கூறுவதாக நினைக்கக் கூடாது. ஆங்கிலத்தினிடம் எனக்குள்ள அன்புக்கு 'ஹரிஜன்' பத்திரிகையே போதிய சான்ருகும். இங்கிலாந்தின் மிதமான சீதோஷ்ண நிலையும், அதனுடைய காட்சிகளும் இந்தியாவுக்கு என்ன பிரயோசனம்? அதே மாதிரி ஆங்கிலத்தின் உன்னதமான இலக்கியத்தினுலும் இந்தியாவுக்குப் பிரயோசனமில்லை. தன்னுடைய சீதோஷ்ண நிலையிலும், இலக்கியத்திலும் காட்சிகளிலுமே இந்தியா வளர்ச்சி பெற வேண்டும். இவையெல்லாம் இங்கிலாந்தில் உள்ளவைகளுக்குக் குறைவாக இருக்கலாம். நமது பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டே நாமும், நமது குழந்தைகளும் முன்னேற வேண்டும். அந்நிய ஆகாரத்தைக் கொண்டு நாம் வளர்ச்சி பெறவே முடியாது. அந்த மொழியில் உள்ள பொக்கிஷங்களையும், உலகத்திலுள்ள மற்ற மொழிகளில் உள்ளவற்றையும், நம் நாட்டினர் தமது சொந்த மொழிகளின் மூலமே பெறவேண்டுமென்று நான் விரும்புகிறேன். ரவீந்திரநாதரின் இணையற்ற சிருஷ்டிகளின் மூலம் அதை நான் பெறுகிறேன். டால்ஸ்டாயின் சிறுகதைகளை ரஸிப்பதற்கு குஜராத்திப் பையன்களும், பெண்களும் ரஷ்ய மொழியைக் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. நல்ல மொழி பெயர்ப்புகளின் மூலம்

அவற்றை அவர்கள் பெறுகிறார்கள். உலகத்திலுள்ள சிறந்த இலக்கிய வெளியீடுகளை, அவை வெளியான ஒரு வாரகாலத்திற்குள்ளாகவே எளிய ஆங்கில நடையில் மொழி பெயர்த்துவிடுவதாக ஆங்கிலேயர்கள் பெருமைப்பட்டுக் கொள்ளுகிறார்கள். ஷேக்ஸ்பியரும், மில்டனும் என்ன நினைத்தார்கள், என்ன எழுதினார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளுவதற்கு நான் ஏன் ஆங்கிலம் கற்றுக் கொள்ள வேண்டும்?

உலகத்திலுள்ள பல்வேறு மொழிகளிலுமுள்ள சிறந்தவற்றைக் கற்றுக் கொண்டு, அவற்றைத் தாய் மொழிகளில் மொழி பெயர்த்துக் கொடுப்பதற்கென்றே தனியாக ஒரு மாணவர் வகுப்பை நடத்துவது, நல்ல சிக்கனமான ஏற்பாடாயிருக்கும். நமது எஜமானர்கள் நமக்குத் தவறான வழியைக் காட்டினார்கள்; பழக்கம் காரணமாக, தவறு கூட சரியானதாகத் தோன்ற ஆரம்பித்து விட்டது.

இந்தியப் பண்பாட்டை அழித்துவிடத்தக்க இந்தத் தவறான கல்வியினால், நாட்டிலுள்ள லட்சக்கணக்கான மக்களுக்குத் தொடர்ந்து தீங்கிழைக்கப்பட்டுக் கொண்டே வருகிறது என்பதற்கான ருசுவை நான் ஒவ்வொரு நாளும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய மதிப்பிற்குரிய சகபாடிகளான பட்டதாரிகள் கூட, தம்முடைய உள்ளக் கிடக்கைகளை வெளியிட வேண்டியிருக்கும்போது தடுமாறுகிறார்கள். தம்முடைய இல்லங்களிலேயே அவர்கள் அந்நியர்களாக இருக்கிறார்கள். தம்முடைய தாய் மொழிகளில் அவர்களுக்குத் தெரிந்த சொற்கள் அளவுக்குட்பட்டிருப்பதால், ஆங்கில வார்த்தைகளையும், வாக்கியங்களையுமே கூடக் கலக்காமல் அவர்கள் தம்முடைய பேச்சை முடிக்க முடிவதில்லை. ஆங்கிலப் புத்தகங்கள் இல்லாமலும் அவர்கள் இருக்க முடியாது. பல சமயங்களில் அவர்கள் ஒருவருக்கொருவர் ஆங்கிலத்திலேயே எழுதிக் கொள்ளுகிறார்கள். இந்தத் தீமை எவ்வளவு விரிவாகப் பரவியிருக்கிறது என்பதைக் காட்டுவதற்காகவே எனது சகபாடிகளின் உதாரணத்தைக் குறிப்பிடுகிறேன். ஏனெனில், எங்களைத் திருத்திக் கொள்ளுவதற்கு நாங்கள் உண்மையாகவே முயற்சிகள் செய்து வருகிறோம்.

நமது கல்லூரிகளில் படிப்பவர்களிடையேயிருந்து, ஒரு ஜகதீஷ் போஸையாவது தோற்றுவிக்க முடிந்தால், நம்முடைய கல்லூரிகளில் உள்ள வீண் விரயத்தைப்பற்றி நாம் கவலைப் பட வேண்டியதில்லை என்று வாதிக்கப்படுகிறது. இந்த விரயம் தவிர்க்க முடியாததாயிருந்தால், இந்த வாதத்தை தாராளமாக நான் ஒப்புக் கொள்ளுவேன். இந்த விரயத்தைத் தவிர்த்திருக்கலாம்; இன்னமும் கூடத் தவிர்க்க முடியும் என்பதை நான் ருசுப்பித்திருக்கிறேன். மேலும் ஒரு போஸைத் தோற்றுவித்துவிடுவதென்பது, வாதத்திற்குத் துணைபுரியவில்லை. ஏனெனில், போஸ் இந்தக் கல்வியின் உற்பத்தியல்ல. அவருக்கிருந்த பெரிய இடை

யூறுகளையும் மீறி அவர் முன்னுக்கு வந்தார். அவருடைய அறிவு அநேகமாக மற்றவர்களுக்கு எடுத்துக்கூற முடியாததாகி விட்டது. ஆங்கிலம் தெரிந்தாலொழிய யாரும் போஸைப்போல் ஆக முடியாதென்று நாம் நினைக்கத் தொடங்கிவிட்டோம் போலி ருக்கிறது. இதைவிட மட்டமான ஒரு மூட நம்பிக்கை இருக்க முடியுமென்று நான் நினைக்க முடியவில்லை. நம்மைப் போல் எந்த ஜப்பானியரும் அவ்வளவு நிர்க்கதியாக இருப்பதாகத் தெரிய வில்லை.

நான் விவரிக்க முயற்சித்துள்ள இந்தத் தீமைகளை, துணிச் சலான ஒரு பரிகாரத்தின் மூலம் தவிர வேறு விதமாகப் போக்க முடியாது. காங்கிரஸ் மந்திரிகள் மனம் வைத்தால், இந்தத் தீமை களைப் போக்க முடியாவிட்டாலும், அவற்றின் கடுமையையாவது குறைக்க முடியும்.

சர்வ கலாசாலைகளைத் தன்னிறைவு பெற்றவைகளாக்க வேண்டும்; யாருடைய சேவை தமக்குத் தேவைப்படுமோ அவர் களுக்கு மட்டுமே சர்க்கார் கல்வியளிக்க வேண்டும்; மற்றத் துறைகளில் அறிவு பெற தனியார் முயற்சிக்கு ஊக்கமளிக்க வேண்டும்; என்ன நேர்ந்தாலும் நேரட்டும் என்று, போதனை மொழியை உடனடியாக மாற்ற வேண்டும்; மாகாண மொழி களுக்கு உரிய ஸ்தானத்தை அளிக்க வேண்டும். இப்போது தினசரி சேர்ந்து கொண்டேயிருக்கும் இந்த விரயத்தைவிட, உயர்தரக் கல்வியில் தற்காலிகமாகக் குழப்பம் ஏற்பட்டால் கூட எனக்கு ஆட்சேபணையில்லை.

மாகாண மொழிகளின் அந்தஸ்தையும், அவற்றின் வியாபார மதிப்பையும் உயர்த்துவதற்கு ஒன்று செய்ய வேண்டும்; அதா வது, ஒரு கோர்ட் எந்த மாகாணத்தில் இருக்கிறதோ, அந்த மாகாணத்தின் மொழிதான் கோர்ட்டில் உபயோகிக்கப்படும் மொழியாயிருக்கும் என்று விதித்து விட வேண்டும். ஒரு மாகா ணத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகள் இருந்தால், அந்த மொழிகளில்தான் மாகாண சட்டசபைகளின் நடவடிக்கைகள் நடத்தப்பட வேண்டும். சட்டசபை அங்கத்தினர்கள் தீவிரமாக முயற்சி செய்தால், ஒரு மாத காலத்திற்குள்ளாகத் தமது மாகா ணத்தில் உள்ள மொழிகளைக் கற்றுக் கொண்டுவிட முடியும். தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளின் ஆரம்ப இலக்கணத்தையும், அம்மொழிகளில் சில நூறு வார்த்தைகளை யும் தமிழர் ஒருவர் கற்றுக் கொள்ளுவதை யார் தடை செய்கிறார் கள்? இவையெல்லாம் தமிழுடன் இணைந்த மொழிகளேயாகும். மத்திய சர்க்காரில் ஹிந்தியே முதல் முக்கியத்துவம் பெற்றிருக்க வேண்டும்.

இது, கல்வித் துறைப் பிரமுகர்களால் முடிவு செய்யப்பட வேண்டிய விஷயம் அல்ல என்பதே என்னுடைய அபிப்பிராய மாகும். ஒரு இடத்தில் உள்ள பையன்களும் பெண்களும் எந்த

மொழியின் மூலம் கல்விபெற வேண்டும் என்பதை அவர்கள் முடிவு செய்ய முடியாது. இந்தப் பிரச்னை ஒவ்வொரு சுதந்திர நாட்டிலும் ஏற்கனவே முடிவு செய்யப்பட்டிருக்கிறது. எந்தப் பாடங்களைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதையும் அவர்கள் முடிவு செய்ய முடியாது. அது, அவர்கள் எந்த இடத்தில் வசிக்கிறார்களோ அங்குள்ள தேவையைப் பொறுத்திருக்கிறது. தம்மால் இயன்றவரையில் நாட்டினரின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதே அவர்களுடைய கடமையாகும். இந்த தேசம் உண்மையாகவே சுதந்திரம் பெறும் போது, போதனா மொழிப் பிரச்னை ஒரே ஒரு வழியில்தான் தீர்க்கப்பட முடியும். கல்வித் துறையாளர்கள் பாட திட்டங்களை வகுத்து, அவற்றிற்கான பாட புத்தகங்களையும் தயாரிப்பார்கள். இன்றைய கல்வியைப் பெறுபவர்கள் அந்நிய ஆட்சியாளர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கிறார்கள். ஆனால், சுதந்திர இந்தியாவில் கல்வி பெறுபவர்கள் நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்பவர்களாக இருப்பார்கள். படித்தவர்களாகிய நாம் இந்தப் பிரச்னையுடன் விளையாடிக் கொண்டிருக்கும் வரையில், நாம் கனவு காணும் சுபிட்சமான சுதந்திர இந்தியாவைத் தோற்றுவிக்க மாட்டோமென்று நான் பெரிதும் அஞ்சுகிறேன். கல்வி, பொருளாதாரம், சமூகம், அரசியல் ஆகிய எந்தத் துறையாயிருந்தாலும், நம்முடைய கடும் முயற்சிகளின் மூலமே நம் தளைகளிலிருந்து விடுபட்டு, வளர்ச்சி பெறவேண்டும். இந்த முயற்சியே போராட்டத்தின் முக்கால் பாகமாகும்.

ஆகவே, நான் உயர்தரக் கல்விக்கு விரோதியல்ல என்றே சொல்லிக் கொள்ளுகிறேன். ஆனால், இன்று இந்நாட்டில் அளிக்கப்படும் உயர்தரக் கல்விக்கு நான் விரோதிதான். என்னுடைய திட்டத்தின் கீழ் இன்னும் நல்ல நூல் நிலையங்கள் இருக்கும்; ரசாயன சாலைகள் இருக்கும்; ஆராய்ச்சிக் கழகங்கள் இருக்கும். அத்திட்டத்தின் கீழ் நம்மிடம் ஏராளமான ரசாயன நிபுணர்கள், இஞ்சினீர்கள், மற்றும் இதர நிபுணர்கள் இருப்பார்கள். இவர்கள் நாட்டின் உண்மையான ஊழியர்களாக இருப்பார்கள்; தம்முடைய உரிமைகளையும் தேவைகளையும் பற்றி வரவர அதிக உணர்வு பெற்றுவரும் மக்களின் பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்பவர்களாகவும் இருப்பார்கள். இந்த நிபுணர்களெல்லாம், மக்களின் மொழியில்தான் பேசுவார்களேயொழிய, அந்நிய மொழியில் பேசமாட்டார்கள். அவர்கள் பெறும் அறிவெல்லாம் பாமர மக்களின் பொதுச் சொத்தாக இருக்கும். வெறும் 'காப்பி'யடிப்பதற்குப் பதிலாக உண்மையான வேலையும் நடக்கும். அதனுடைய செலவும் சீராகவும், நேர்மையாகவும் விநியோகிக்கப்பட்டிருக்கும்.

—'ஹரிஜன்' – 9—7—1938

# 19

# ஒரு விளக்கம்

உயர்தரக் கல்வி சம்பந்தமாக நான் எழுதியிருந்த கட்டுரையைப் பற்றி ஒரு கல்லூரியின் மாஜி ஆசிரியர் ஒருவர் நீண்ட கடிதமொன்று எழுதியிருக்கிறார். அதிலிருந்து பின் கண்ட பகுதிகளைக் கீழே தருகிறேன் :

"உயர்தரக் கல்வியைப் பற்றிய உங்களுடைய கருத்துகள், 9-7-1938 'ஹரிஜன்' பத்திரிகையில் வெளியிடப்பட்டிருந்தன. இதற்கு, மேற் கொண்டு விளக்கம் அவசியமாயிருக்கிறது. உங்களுடைய கருத்துகளில் பலவற்றை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். முக்கியமாக, ஒரு அந்நிய போதனா மொழியினால் ஏற்படும் தீங்கு மிகவும் அதிகமாகும். இன்று உயர்தரக் கல்வியில், தங்கம் என்று தவறாகக் கருதப்படும் பித்தளை நிறைய இருக்கிறதென்றே நானும் நினைக்கிறேன். மிகவும் சமீப காலம் வரையில், 'உயர்தரக் கல்வி' என்று சொல்லப்படும் துறையில் நானும் ஆசிரியராக இருந்திருக்கிறேன். ஆகையால், நேரடியான அனுபவத்தின் மீதே நான் பேசுகிறேன். பொது வருமானம், உயர்தரக் கல்வியின் தேவைக்கு அதன் பங்கு, அதன் விளைவு ஆகியவை சம்பந்தமான உங்களுடைய மூன்றாவது முடிவுதான் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. அதாவது, சர்வகலாசாலைகள் தன்னிறைவு பெற்றவைகளாயிருக்க வேண்டுமென்ற தங்களுடைய கருத்து எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. ஒரு நாடு முற்போக்கான நாடாக இருக்க வேண்டுமானால், அதில் ரசாயனம், வைத்தியம், இஞ்சினீரிங் ஆகியவைகளுக்கு மட்டுமின்றி, இலக்கியம், தத்துவம், சரித்திரம், சமூகவியல் ஆகிய எல்லாத் துறைகளிலுமே அறிவு பெறுவதற்கு வாய்ப்புகள் இருக்க வேண்டுமென்று நான் நம்புகிறேன். உயர்தர அறிவு பெறுவதற்குப் பற்பல வசதிகள் வேண்டியிருக்கும். சர்க்காரின் ஆதரவு இல்லாமல் அந்த வசதிகளைப் பெறமுடியாது. மற்றவர்கள் வலுவில் தாங்களாக அளிக்கும் உதவியை மட்டுமே ஒரு நாடு நம்பியிருந்தால், அது பின்தங்கித்தான் நிற்கும். அது சுதந்திரம் பெறவும் முடியாது, பெற்ற சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும் முடியாது. எல்லாத் துறைகளிலுமே உயர்தரக் கல்வியைப் பற்றி சர்க்கார் மிகவும் கண்காணிப்புடன் இருக்க வேண்டும். தன்னிச்சையான உதவிகளும் இருக்க வேண்டியதுதான்; நமக்கும் நப்பீல்டுகளும், ராக்பெல்லர்களும் தேவைதான்.* ஆனால், சர்க்கார்

---

* மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ள நப்பீல்டும், ராக்பெல்லரும் கோடீசுவரர்கள். கல்விக்காகவும் மற்றும் பல தரும காரியங்களுக்காகவும் கோடிக் கணக்கில் நன்கொடை அளித்தவர்கள். ஜான் டேவிஸன் ராக் பெல்லர் (1839-1937) ஜீவனத்திற்காக அமெரிக்காவில் சிறிய உத்தியோகத்தில் அமர்ந்து தம்முடைய அறிவினாலும், உழைப்பினாலும், தொழில் திறமையினாலும் சில ஆண்டுகளுக்குள் கோடீசுவரராகிவிட்டார். எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிலில் பல அரிய அபிவிருத்திகளைச் செய்தவர் அவர்தான். ராக்பெல்லர் தமது ஆயுட் காலத்தில் சுமார் 350 கோடி ரூபாய்க்கு மேல் கல்வி முதலிய பல தரும கைங்கர்யங்களுக்காக நன்கொடைகள் அளித்தார்.

கோடீசுவரரான நப்பீல்டும் வைத்திய, கல்வித் துறைகளின் அபிவிருத்திக்காக ஒரு கோடி பவுனுக்கு மேல் நன்கொடை அளித்துள்ளார்.

கையைக் கட்டிக் கொண்டிருப்பதைப் பேசாமல் பார்த்துக் கொண்டிருக்க முடியாது; அப்படி இருப்பதை அனுமதிக்கவும் கூடாது. வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவும், உதவிகள் அளிக்கவும், வழிகாட்டவும் அது முன்வரவேண்டும். இந்தப் பிரச்னையின் இந்த அம்சத்தை நீங்கள் தெளிவு படுத்த வேண்டுமென்று விரும்புகிறேன்.

"'என்னுடைய திட்டத்தின் கீழ் இன்னும் நல்ல நூல் நிலையங்கள் இருக்கும்' என்று உங்கள் கட்டுரையின் முடிவில் கூறியிருக்கிறீர்கள். நீங்கள் கூறும் திட்டத்தை அந்தக் கட்டுரையில் நான் காணவில்லை; அதன் கீழ் எப்படி 'இன்னும் அதிகமான நல்ல நூல் நிலையங்களும், ரசாயன ஆராய்ச்சி சாலைகளும் ஏற்படும்' என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அம்மாதிரி நூல் நிலையங்களும், ரசாயன ஆராய்ச்சி சாலைகளும் இருக்கவேண்டுமென்றே நான் நினைக்கிறேன். இதற்கு நன்கொடை அளிப்பவர்களும், இதர ஸ்தாபனங்களும் போதிய அளவுக்கு முன் வராதவரையில் இந்தப் பொறுப்பை சர்க்கார் தட்டிக் கழிக்க முடியாது."

என்னுடைய கட்டுரையில் "நிச்சயமான உபயோகம்" என்ற வார்த்தைகளை உபயோகித்திருக்கிறேன். அதை விரிவாக அர்த்தப்படுத்திக் கொண்டால், என்னுடைய கட்டுரை தெளிவாகவே இருக்கிறது. வறுமை நிறைந்த, விஷயமறியாத மக்கள் கொண்ட ஒரு இந்தியாவை நான் சித்திரிக்கவில்லை. தன்னுடைய மேதைக்கு ஏற்ற விதத்தில் தொடர்ந்து முன்னேறிக் கொண்டிருக்கும் ஒரு இந்தியாவையே நான் கற்பனை செய்திருக்கிறேன். ஆயினும் இந்தியாவை, மடிந்துகொண்டிருக்கும் மேற்கத்திய நாகரிகத்தை 'காப்பி'யடிக்கும் ஒரு மூன்றாம் தர நாடாகவோ, முதல்தர நாடாகவோ கூட நான் கற்பனை செய்யவில்லை. என்னுடைய கனவு பலித்தால், இங்குள்ள ஏழு லட்சம் கிராமங்கள் ஒவ்வொன்றும், நல்ல முறையில் வாழ்க்கை நடத்தும் முடியரசுகளாக மாறினால் நிலைமை எப்படி இருக்கும்? அங்கு எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் இருக்கமாட்டார்கள்; வேலையில்லாமல் யாரும் சோம்பி இருக்கமாட்டார்கள்; ஒவ்வொருவரும் ஏதாவது உபயோகமான வேலையைச் செய்து கொண்டிருப்பார்கள்; எல்லோருக்கும் சத்துள்ள உணவு இருக்கும்; நல்ல காற்றோட்டமுள்ள வீடுகள் இருக்கும்; உடலை மூடிக்கொள்ளுவதற்குப் போதுமான கதர் துணி கிடைக்கும்; எல்லாக் கிராமவாசிகளுக்கும் சுகாதார விதிகள் தெரிந்திருக்கும்; அந்த விதிகளையும் அவர்கள் பின்பற்றுவார்கள். அத்தகைய நாட்டுக்கு பற்பல விதமான தேவைகள் வளர்ந்துகொண்டே இருக்கும். அந்தத் தேவைகளை சர்க்கார் பூர்த்தி செய்ய வேண்டும். இல்லாவிடில் அது தேக்கமடைந்துவிடும். ஆகையால், இந்த நிருபர் கூறுவது போல் எல்லாக் கல்விக்கும், நான் கூறக் கூடியதைவிட இன்னும் அதிகமாகக்கூட, சர்க்கார் பண உதவி அளிக்கலாம். சர்க்காருக்கு அம்மாதிரியான தேவைகள் இருந்தால், அதற்கேற்ற நூல் நிலையங்களும் இருக்கத்தான் செய்யும்.

அப்படியானல், என்ன நடக்காதென்று நான் கருதுகிறேன்? அளவுக்கு மீறிய மனப்பாடங்களினல் மூளை வரட்சியடைந்தவர்களும், ஆங்கிலேயர்களைப் போலவே ஆங்கிலத்தைப் பேச வேண்டும், எழுத வேண்டும் என்ற அசாத்தியமான காரியத்தைச் செய்ய முயற்சித்து மூளை அநேகமாக செயலற்றுப் போய் விட்டவர்களுமான பி. ஏ., எம். ஏ., பட்டதாரிகளின் சைன்யம் இராது. இவர்களில் பெரும்பாலோருக்கு வேலை இல்லை, உத்தியோகம் இல்லை. அப்படி உத்தியோகம் கிடைத்தாலும், சாதாரணமாக குமாஸ்தா உத்தியோகம்தான் கிடைக்கிறது. பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் 12 வருட காலம் படித்து அவர்கள் பெற்ற அறிவெல்லாம் அந்த வேலைக்கு அவர்களுக்குப் பிரயோசனமே இல்லை.

சர்வகலாசாலைகளின் உற்பத்திகளை சர்க்கார் பயன்படுத்திக் கொள்ளும் போது, சர்வகலாசாலைகள் தன்னிறைவு பெற்றவைகளாகின்றன. தேசத்திற்கோ, தனிப்பட்டவருக்கோ நன்மையளிக்காத ஒரு பயிற்சிக்காகப் பணம் செலவிடுவது ஒரு குற்றமாகும். தேசத்திற்கு நன்மையளிக்காத தனிப்பட்டவர் நன்மை என்று ஒன்றிருக்க முடியாது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இப்போதுள்ள உயர்தரக் கல்வி மட்டுமின்றி, ஆரம்பக் கல்வியும், மத்தியதரக் கல்வியும்கூட பிரத்தியட்ச நிலைமைக்கு ஏற்றவையாக இல்லை என்பதை, என்னைக் குறை கூறுபவர்களில் பெரும்பாலோர் ஏற்றுக்கொள்ளுகிறார்கள் என்றே தோன்றுகிறது. ஆகையால் இந்தக் கல்வி நாட்டுக்கு நன்மையளிப்பதாக இருக்க முடியாது. இது முற்றிலும் பிரத்தியட்ச நிலைமைக்கு ஏற்றதாயிருந்தால், முற்றிலும் தாய் மொழியின் மூலமே கல்வி போதிக்கப்படுவதா யிருந்தால், ஒருக்கால் அதை நான் ஆட்சேபிக்காமல் இருக்கலாம். பிரத்தியட்ச நிலைமைக்கு ஏற்ற கல்வி என்றால், தேசீய அதாவது, நாட்டின் தேவைக்கு ஏற்ற கல்வி என்றே அர்த்தமாகும். அதற்கான செலவை சர்க்காரே ஏற்றுக் கொள்ளுவர். அந்த நன்னாள் வரும்போது கூட, பல ஸ்தாபனங்கள் வெளியார்களின் தன்னிச்சையான நன்கொடைகளின் மூலம் நடத்தப்படுவதைக் காண்போம். அவை நாட்டுக்கு நன்மையளிக்கலாம் அல்லது நன்மையளிக்காமல் இருக்கலாம். இன்று கல்வி என்ற பெயரில் இந்தியாவில் அளிக்கப்படுவதில் பெரும் பகுதி அந்த ரகத்தைச் சேர்ந்ததேயாகும். ஆகையால், என் விருப்பப்படி விட்டால், அதற்காகும் செலவு பொது வருமானத்திலிருந்து கொடுக்கப்பட மாட்டாது.

ஆனல், 'பிரத்தியட்ச நிலைமை,' போதனமொழி ஆகியவை பற்றி என்னுடைய கருத்துகளை என்னுடைய எதிர்ப்பாளர்கள் ஏற்றுக்கொள்ளுகிறார்கள் என்ற காரணத்தினல் நான் அயர்ந்து விட முடியாது. இப்போதுள்ள முறையை, அவர்கள் வெகு காலமாகக் குறை கூறியும் சகித்துக்கொண்டும் வந்திருக்கிறார்கள். சீர்திருத்தத்திற்கான சந்தர்ப்பம் இப்போது ஏற்பட்டிருப்பதால்,

காங்கிரஸ்காரர்கள் செயல்படத் துடிக்க வேண்டும். போதனு மொழி கொஞ்சம் கொஞ்சமாகவன்றி உடனடியாக மாற்றப்பட்டால், நம்ப முடியாதபடி அவ்வளவு சீக்கிரத்தில் பாட புத்தகங்களும், ஆசிரியர்களும் தோன்றுவதைக் காண்போம். நாம் உண்மையிலேயே காரியங்கள் செய்ய விரும்பினுல், ஒரு அந்நிய மொழியின் மூலம் கலாசாரத்தின் அடிப்படைகளைக் கற்றுக் கொள்ளுவதில் தேசத்தின் நேரத்தையும், சக்தியையும் இப்படி அநியாயமாக வீணடித்திருக்க வேண்டியதில்லை என்பதை ஒரு வருட காலத்திற்குள்ளாகவே நாம் உணர்ந்து கொள்ளுவோம். வெற்றிக்கு ஒரு நிபந்தனை உண்டு. அதாவது, மாகாண சர்க்கார்களுக்கு கோர்ட்டுகள் விஷயத்தில் அதிகாரம் இருந்தால், அல்லது அவர்களிடம் செல்வாக்கு இருந்தால், கோர்ட்டுகளிலும், மாகாண சர்க்கார்களின் காரியாலயங்களிலும் உடனடியாக பிரதேச மொழியை உபயோகிக்க ஆரம்பித்துவிட வேண்டும்.

—'ஹரிஜன்' – 30—7—1938

# 20

# காசி விசுவ வித்தியாலயத்தில் காந்திஜி

(ஜனவரி 21உ யன்று காசி ஹிந்து சர்வ கலாசாலையின் வெள்ளி விழாக் கொண்டாட்டத்தில் காந்திஜி ஹிந்துஸ்தானியில் ஒரு பிரசங்கம் செய்தார். அநேகமாக அதன் மொழி பெயர்ப்பு முழுவதும் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :)

## புண்ணிய யாத்திரை

மதிப்பிற்குரிய மாளவியாஜி அவர்களே, சர் ராதாகிருஷ்ணன் அவர்களே, சகோதரர்களே, சகோதரிகளே,

நீண்ட தூரம் பிரயாணம் செய்வதற்கு வேண்டிய உடல் பலமோ, மன விருப்பமோ எனக்கு இல்லை என்பதை நீங்களெல்லோரும் நன்கு அறிவீர்கள். ஆயினும், காசி ஹிந்து சர்வ கலாசாலையின் வெள்ளி விழா பட்டமளிப்பில் நான் பிரசங்கம் செய்ய வேண்டுமென்று சர் ராதாகிருஷ்ணனிடமிருந்து எனக்கு அழைப்பு வந்தபோது, அதை மறுப்பதற்கு எனக்கு மனம் வரவில்லை. பண்டிட்ஜிக்கும் எனக்குமிடையே உள்ள ஆழ்ந்த அன்புப் பிணைப்புகளை நீங்கள் அறிவீர்கள். ஆகையால், அவரிடமிருந்து அழைப்பு வரும்போது, முடிந்தால் அதற்குக் கீழ்ப்படிவது எனக்கு ஒரு அளவுக்கு பெருமையையும், திருப்தியையும் அளிக்கிறது. ஆகையால், 'முடியாது' என்று நான் சொல்ல முடியவில்லை. சர்

ராதாகிருஷ்ணனின் கடிதம் ஒரு புண்ணிய ஸ்தல யாத்திரைக்கான அழைப்பாகும்.

மாளவியாஜி நாட்டுக்கு மகத்தான சேவைகள் செய்திருக்கிறார். இருந்தாலும், இந்த சர்வ கலாசாலேதான் அவருடைய மகத்தான சேவையும், சாதனையுமாகும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. தம்முடைய உயிருக்குச் சமமாகக் கருதும் இந்த வேலையில் அவர் உழைத்துத் துரும்பாகிவிட்டார். இந்த சர்வ கலாசாலையின் அஸ்திவாரக் கல் நாட்டு விழாவில் நான் கலந்துகொள்ள வேண்டுமென்று இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு அவர் என்னை அழைத்த போது, அவரிடம் எனக்கிருந்த ஆழ்ந்த மதிப்பு காரணமாக அதை ஏற்றுக் கொண்டேன். வைஸ்ராயும், இந்தியாவிலுள்ள சமஸ்தானாதிபதிகளும் கலந்து கொள்ள விருந்த அந்தப் பெரிய விழாவில், என்னைப் போன்ற ஒரு ஏழைக்கு இடமில்லை என்பது எனக்குத் தெரியும். அப்போது நான் 'மகாத்மா' ஆக்கப்படவில்லை. அந்தப் பெயரால் யாராவது என்னை அழைத்தால், மகாத்மா முன்ஷி ராம்ஜி என்று என்னைத் தவருக எண்ணிக் கொண்டிருப்பார்கள் என்று எனக்குத் தெரியும். காலஞ் சென்ற சுவாமி சிரத்தானந்தஜியின் அப்போதைய பெயர் அதுதான். ஏனெனில், பல மகாத்மாக்கள் இருக்க முடியாது. முன்ஷி ராம்ஜியின் மகத்தான சேவைகள் காரணமாக அவர் அந்தப் பெயருக்கு உரியவர் என்பது தென்னாப்பிரிக்காவிலிருந்தபோதே எனக்குத் தெரியும். ஆனால், மக்களின் ஊழியர்கள் எவ்வளவு சாதாரண நபர்களாக இருந்தாலும், அவர்களைக் கண்டுபிடிக்கும் ஒரு சாமர்த்தியம் மாளவியாஜிக்கு உண்டு.

## உஷ்ணத்தையும் ஒளியையும் வீசும் சூரியன்

உலகத்தில் மாளவியாஜியை விடப் பெரிய பிச்சைக்காரர் யாரும் கிடையாது என்பது எல்லோருக்கும் தெரியும். அவர் தனக்காகப் பிச்சை கேட்டதே கிடையாது. ஆண்டவனின் அருளினல், அவருக்கு எப்போதுமே அதற்குத் தேவை இருந்ததில்லை. ஆனல், அவர் பல லட்சியங்களைத் தம்முடையவையாக்கிக் கொண்டிருக்கிறார். அந்த லட்சியங்களை நிறைவேற்றுவதற்காக அவர் தாமாகவே பிச்சைக்காரர் ஆனர். கடவுள் எப்போதுமே அவருடைய கப்பறை நிறைந்து வழிந்தோடும்படி அருளியிருக்கிறார். ஆனல், அவருடைய பசி தீராப்பசி. அவர் கோரிய கோடி ரூபாய் கிடைத்துவிட்ட போதிலும், அவர் இன்னமும் வேண்டுமென்று கேட்கிறார். நமது தலைவரான தர்பங்கா மகாராஜாவினிடமிருந்து ஒரு நல்ல நன்கொடை கிடைத்திருப்பதாக இப்போது கூட என் காதில் அவர் ரகசியமாகக் கூறினர்.

உயர்ந்த சிந்தனை, பரிசுத்தமான எளிய வாழ்க்கை ஆகியவற்றின் உயிர்ச் சின்னமாக அவர் இன்னமும் நம்மிடையே இருப்பது அரியதொரு பாக்கியம்தான். ஆனல், அவருடைய

உடல் உங்கள் மத்தியில் இருந்தாலும் கூட, அவருடைய பெரிய உதாரணம் உங்களில் பலரையும் ஆட்கொள்ளவில்லை என்றே நான் அஞ்சுகிறேன். தவறு முற்றிலும் உங்களுடையதேயொழிய, அவருடையதல்ல. உலகத்திலுள்ள எல்லோருக்கும் சூரியன் தனது வெப்பத்தையும், ஒளியையும் வீசுகிறான். ஆனால், அதிலி ருந்து ஒளிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு சூரியன் கூட எப்படி உதவி செய்ய முடியும்? எனினும், மாளவியாஜியின் புகழைப் பாடுவதற்காக நான் இங்கே வரவில்லை. இந்த மேடை பூராவிலும் அவருடைய புகழ் ஒலித்திருக்கிறது. அதற்கெல்லாம் அவர் தகுதியுள்ளவரே.

இனி உங்களுக்கும், வித்தியாபீடத்தின் ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் நான் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும். சர் ராதாகிருஷ்ணனின் அழைப்பை நான் ஏற்றுக்கொண்ட போது, என்னுடைய பிரசங்கத்தின் நகல் ஒன்றைத் தமக்கு அனுப்பிவைக்கும்படி அவர் என்னைக் கேட்டிருந்தார். எதையும் எழுதுவதற்கு எனக்கு அவகாசமில்லையென்று அவருக்குப் பதில் அனுப்பியிருந்தேன். நான் என்ன சொல்லப்போகிறேன் என்று கூட எனக்குத் தெரியாது. படித்த அறிஞர்களிடையே பேச வரும்போது எனக்கு ஒரு விதமான அச்சம் ஏற்படுகிறது. நான் இந்தியாவுக்குத் திரும்பிவந்த காலம் முதற்கொண்டு, காங்கிரஸ் பிரதிநிதித்துவம் வகிக்கும் ஏழைகள், ஒடுக்கப்பட்டோர்களின் மத்தியிலேயே நான் வேலை செய்து வந்திருக்கிறேன். அவர்க ளிடையே இருக்கும்போது எனக்குத் தயக்கமோ, தடங்கலோ ஏற்படுவதில்லை. உங்களிடையே பேச வரும்போது எனக்கு நாவடைத்து விடுகிறது. அந்தச் சமயத்தில் மனத்தில் என்ன உதிக்கிறதோ அதைத்தான் பேச வேண்டியிருக்கும் என்று சர் ராதாகிருஷ்ணனிடம் சொன்னேன். என்ன பேச வேண்டுமென்று இப்போது என் மனத்தில் புலப்பட்டுவிட்டது. ஆனால், நான் மனம் விட்டுப் பேசுவதை நீங்கள் எப்படி வரவேற்பீர்களோ என்று எனக்குத் தெரியாது.

## வருந்தத்தக்க நிலைமை

ஒவ்வொருவராகப் பேசிவிட்டு மேடையிலிருந்து இறங்கிச் சென்ற போது, ஹிந்தி, உருது, ஹிந்துஸ்தானி அல்லது சமஸ்கிருதத்திலாவது, மராத்தி அல்லது வேறு ஏதாவது ஒரு இந்திய மொழியிலாவது யாராவது பேசமாட்டார்களா என்று நான் ஏங்கினேன். ஆனால், எனக்கோ, உங்களுக்கோ அம்மாதிரி அதிருஷ்டம் ஏதும் ஏற்படவில்லை. ஏன்? நாம் அடிமைகள்; நம்மை அடிமைப்படுத்தி வைத்திருப்பவர்களின் மொழியை நாம் விடாமல் பிடித்து வைத்துக்கொண்டிருக்கிறோம். நம்முடைய சங்கடங்களுக்கெல்லாம் ஆங்கிலேயர்கள் மீது குறை கூறுவது ஒரு நாகரிகமாகிவிட்டது. அவர்கள் செய்துள்ள பல தவறுகளுக்காக அவர்களைக் குறைகூற நான் தயங்கியதில்லை.

ஆனால், ஆங்கிலத்தை நமது மொழியாக வைத்துக்கொள்ள வேண்டுமென அவர்கள் நம்மை நிர்ப்பந்தம் செய்தார்களென்று நான் குற்றம் சாட்டியதே இல்லை. நம் வாழ்க்கையின் முக்கியமான வருடங்களை ஆங்கிலம் கற்றுக்கொள்ளுவதில் நாம் செலவிடுகிறோம். ஆங்கிலேயர்களைப் போல் நாமும் ஆங்கிலம் பேச வேண்டுமென்பதே நம்முடைய பேராவலாக இருக்கிறது. தப்பு இல்லாத நல்ல ஆங்கிலம் பேசுகிறீர்களே என்று ஒரு ஆங்கிலேயர் நம்மைத் தட்டிக்கொடுத்தால், நமக்குப் பெருமை தாங்குவதில்லை, நம்முடைய தாய் மொழியைப் போல் ஆங்கிலத்தை நினைத்துக்கொண்டு, அதைக் கற்றுக்கொள்ளுவதற்கு எவ்வளவு வருடங்களையும், இளமையின் சக்தியையும் செலவிட்டிருக்கிறோமென்று யோசித்துப் பாருங்கள். எவ்வளவு வருடங்கள், எவ்வளவு சக்தி தேசத்திற்கு நஷ்டமாகியிருக்கின்றன என்பதை, சாதாரணப் பெருக்கல் மூலம் கணக்குப் போட்டுப் பாருங்கள்.

ஆயினும், இந்திய கலாசாரத்தின் உயிர்ச் சின்னம் என்று இன்று போற்றப்படும் காசி ஹிந்து விசுவ வித்தியாலயத்திலேயே இவ்வளவும் நடந்து கொண்டிருக்கிறது. நல்ல சம்பளங்கள் கொடுப்பதாகச் சொல்லி, சிறந்த ஆசிரியர்களைக் கொண்டு வருவதற்கு மாளவியாஜி தம்மால் இயன்றதையெல்லாம் செய்தார்; ஆனால், பாக்கி காரியத்தை அவரால் செய்ய முடியவில்லை. அது அவருடைய தவறல்ல. ஆங்கிலத்தின் இடத்தை ஹிந்தி பெறவில்லை. ஆசிரியர்கள் வாழையடி வாழையாக வரும் சம்பிரதாயத்தைப் பின் பற்றுகிறார்கள். அவர்களிடமிருந்து என்ன கிடைக்கிறதோ அத்துடன் மாணவர்களும் திருப்தியடைந்து விடுகிறார்கள். அவர்கள் அப்படித் திருப்தியடைய வேண்டியதில்லை. அற்ப காரணங்களுக்காக அவர்கள் பல சமயங்களில் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்; உண்ணாவிரதங்களைக் கூட ஆரம்பிக்கிறார்கள். அகில இந்திய மொழியில்தான் தங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் ஏன் வற்புறுத்தவில்லை? ஆந்திர மாகாணத்தைச் சேர்ந்த 250 மாணவர்கள் இன்று இங்கிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் சர் ராதாகிருஷ்ணனிடம் சென்று, சர்வகலாசாலையில் ஆந்திரா பிரிவு ஒன்றை ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்கட்டும்; அவர்கள் அகில இந்திய மொழியைக் கற்க விரும்பவில்லையென்றால், தெலுங்கின் மூலம் தங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டுமென்று கேட்கட்டும்.

## ஜப்பானின் உதாரணம்

ஜப்பானில் என்ன நடந்திருக்கிறதென்பதை நீங்கள் அறிவீர்கள். அது ஒரு மகத்தான நாடு என்று நான் நினைக்கவில்லை. ஆனால், மேற்கத்தி நாடுகளின் ஆதிக்கத்தை அது வெற்றிகரமாக அறைகூவியிருப்பதால், ஆசியாவில் ஜப்பான் ஒரு பெரிய நாடு

என்று கருதப்படுகிறது. ஜப்பானிய பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் கல்வி பெறும் ஆயிரக்கணக்கான பையன்களும், பெண்களும் ஜப்பானிய மொழியின் மூலம்தான் பாடம் கற்றுக் கொள்ளுகிறார்களேயொழிய, ஆங்கிலத்தின் மூலம் அல்ல. அவர்களுடைய லிபி கடினமானது ; ஆனால், அதைக் கற்றுக் கொள்ளுவதற்கு அது அவர்களுக்குத் தடையாக இல்லை. அதைக் கைவிட்டுவிட்டு, அவர்கள் ரோமன் லிபியையும் மேற்கொள்ளவில்லை. ஆங்கிலத்தையோ, மற்ற ஐரோப்பிய மொழிகளையோ அவர்கள் பகிஷ்காரம் செய்யவில்லை. ஆனால், தம்முடைய சக்தியை மிச்சப்படுத்தி வைத்துக் கொள்ளுகிறார்கள். மேற்கத்தியர் மட்டுமே அளிக்கக் கூடியவைகளை ஜப்பானுக்கும் அளித்து, ஜப்பானிய சிந்தனையையும், அறிவையும் வளம் பெறச் செய்வதற்காகவே அந்த மொழிகளை அவர்கள் கற்றுக் கொள்ளுகிறார்கள். மேல் நாடுகளிலிருந்து ஏற்றுக்கொள்ளத் தகுதியுள்ளவை யாவற்றையும் ஜப்பானிய மொழியில் அவர்கள் கொண்டுவந்து விடுகிறார்கள். ஜப்பானிய இளைஞர்களின் மனம் உஷாராகவும், ஆரோக்கியமாகவும் இருப்பதே அதற்குக் காரணமாகும். இப்படி அவர்கள் பெறும் அறிவு தேசத்தின் சொத்தாகி விடுகிறது. சர்க்கார் காரியாலயங்களில் குமாஸ்தாக்களாக வேண்டும் அல்லது பாரிஸ்டர்கள், வக்கீல்கள், நீதிபதிகள் ஆக வேண்டும் என்பதைத் தாண்டி நம்முடைய ஆசை போவதில்லை. அவர்கள் அழிக்க வேண்டிய ஒரு முறைக்கு உதவியாக இருக்கும் வேலைகளே இவை. ஆங்கில மொழியில் நல்ல புலமை பெறுவதிலும் நாம் வெற்றிபெறவில்லை. ஆங்கிலம் படித்தவர்களிடமிருந்து எனக்குப் பல கடிதங்கள் வருகின்றன. எனக்கு எழுதுபவர்களில் சர்வகலாசாலைகளின் மிக உயர்தரமான பட்டங்களைப் பெற்றவர்கள். ஆனால், ஆங்கில மொழியில் அவர்களுக்குள்ள அறியாமை சகிக்க முடியவில்லை. அதற்குக் காரணம் இதுதான். மாளவியாஜிக்களும், ராதாகிருஷ்ணன்களும் மிக அரிது ; அவர்கள் சாதித்தவைகளை மற்றவர்கள் சாதிக்க முடியாது.

## கட்டுப்பாடு இல்லை

ஆங்கிலப் பிரசங்கங்களை நான் கேட்டுக் கொண்டிருந்த போது, நம் மக்களின் பொறுமையும், அவர்களிடம் இயற்கையாக அமைந்துள்ள மரியாதைக் குணமும் எனக்குப் பெரிதும் வியப்பாக இருந்தது. என்ன பேசுகிறார்களென்று அவர்களுக்கு ஒரு வார்த்தை கூடப் புரியாது. நியாயமாக அவர்கள் நம்மைச் சூழ்ந்து கொண்டு வம்பு செய்திருக்கலாம் ; ஆனால், அவர்கள் அப்படிச் செய்யவில்லை. இதைப் பற்றி உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருந்தால், உங்களுக்கு ருசுப்பித்துக் காட்டுகிறேன். இங்கு கூடியிருப்பவர்களில் மாணவர்கள் உட்பட வெகு சிலரே இங்கு நடந்தவைகளைப் புரிந்து கொண்டிருப்பார்கள். இங்கிருப்பவர்களைக் கைதூக்கச் சொல்லி இதை நான் ருசுப்பிக்க முடியும்.

மற்ருெரு விஷயத்தையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். இன்று காலை இங்கு நான் ஒரு காட்சியைக் கண்டேன். அதை நான் எதிர்பார்க்கவேயில்லை. காலையில் வஸந்த பஞ்சமி தின ஊர்வலம் நடை பெற்றது. மாளவியாஜியின் மௌன ஆசிகளைப் பெற்றுக் கொண்டு, மாணவர்கள் அவருடைய வீட்டைத் தாண்டி பவனி செல்ல வேண்டும். அவர்கள் நடந்து சென்ற விதம், அவர்களுக்கு அடிப்படையான உடற் பயிற்சி கூட இல்லையென்பதைத் தெளிவாக்கியது. பவனி செல்லும் போர் வீரர்களைப் போல் சீராக, தலை நிமிர்ந்து, கட்டுப் பாடுடன் நடந்து செல்லுவதற்குப் பதிலாக, அவர்கள் மனம் போன வாக்கில் போய்க் கொண்டிருந்தார்கள்.

## ஹிந்திக்கு முக்கியத்துவம் கொடுங்கள்

சர்வ கலாசாலையின் வெளிவாசலை அடையும்போது, உங்கள் கண்களில் தென்படும் ஒரு காட்சியைப்பற்றியும் நான் ஒரு வார்த்தை சொல்லாமலிருக்க முடியவில்லை. மாளவியாஜி வாய்திறந்து கேட்டால் பணம் கிடைக்கும். இதனால் அந்த வாசல் இங்குள்ள மகோன்னதமான கட்டிடங்களுக்கு ஏற்றவகையில் அமைந்திருக்கிறது. ஆனால், வாசலில் நான் என்ன கண்டேன்? அதில் முக்கால் பாகத்தை, **காசி ஹிந்து சர்வகலாசாலை** என்ற ஆங்கில வார்த்தைகள் அடைத்துக்கொண்டிருக்கின்றன. நீங்கள் எந்த ஹிந்தியின் மூலம் அறிவு பெறவேண்டுமோ, அந்த ஹிந்தி வார்த்தைகள் மீதமுள்ள கால்பாகத்தில் இடம் பெற்றிருக்கின்றன. ஆங்கிலத்திற்கு என்ன அவசியம் வந்தது என்று யோசித்துப் பார்த்தேன். இந்த மாதிரி விஷயங்களைப் பொறுப்பேற்றுக் கொண்டவர்கள் சிறிது யோசித்துப் பார்த்திருந்தால், தேவநாகரி அல்லது பாரசீக லிபிகளில் தான் இந்தப் பெயரை எழுதியிருக்க வேண்டும் என்பது புலப்பட்டிருக்கும். வகுப்பு ஒற்றுமை ஏற்படவேண்டும் என்பதே மாளவியாஜி, சர் ராதாகிருஷ்ணன் ஆகிய இருவரின் விருப்பமுமாகும். அவர்களுடைய விருப்பத்திற்கு இது சின்னமாக இருந்திருக்கும். இந்தப் பகுதிகளில் உள்ளவர்களுக்கு ஹிந்தி, உருது இரண்டுமே தெரியும்; இரண்டு லிபிகளும் இங்குள்ளவர்களுக்குத் தெரியும். ஆகையால், அப்படிச் செய்வதுதான் உசிதமாக இருந்திருக்கும். உண்மை என்னவென்ருல், ஆங்கிலத்திற்காக நாம் வீணடித்த வருடங்கள் நம்முடைய ஞாபக சக்தியையும், கற்பனையையும் ஸ்தம்பிக்க வைத்து, நமது மதத்தையும் மரத்துப் போகும்படி செய்து விட்டன.

ஹிந்தி பேசாத ஒருவர் ஹிந்தியையோ, ஹிந்துஸ்தானியையோ கற்றுக்கொள்ளுவது அவ்வளவு கஷ்டமா என்ன? குஜராத்தி, வங்காளி அல்லது மராத்தி தெரிந்த யாருக்கும் மூன்று மாதங்களில் ஹிந்தி கற்பிக்க நான் பொறுப்பேற்றுக் கொள்ள முடியும். தென்னிந்திய மொழிகளான தமிழ், தெலுங்கு,

மலையாளம், கன்னடம் ஆகியவற்றில் கூட நிறைய சமஸ்கிருத வார்த்தைகள் இருக்கின்றன. நம்மிடம் நாட்டுப் பற்று மட்டும் இருந்தால், சமஸ்கிருதத்திலிருந்து பிறந்த மொழிகளையும் தென்னிந்திய மொழிகளையும்கூட தேவநாகரி லிபியில் எழுதுவதற்கு நாம் தயங்கக் கூடாது. இந்த மொழிக்குப் பொதுவான வார்த்தைகள் உண்டு. அத்துடன் லிபியும் பல அம்சங்களில் ஒரே மாதிரியாக இருக்கின்றன. நமது மூளை அயர்வுற்றிருக்கவில்லை. ஐந்தாறு இந்திய மொழிகளைச் சுலபமாக நாம் கற்றிருப்போம். உருது கற்றுக்கொள்ளுவதும் கஷ்டமில்லை; அதில் பாரசீக, அரபு வார்த்தைகளை வைத்து அடைப்பது ஒரு பெருமை என்று நமது அறிஞர்கள் நினைக்காவிட்டால் அது கஷ்டமல்ல. பண்டிதர்களும் ஹிந்தியில் அதிகமான சமஸ்கிருத வார்த்தைகளை உபயோகித்துவிடுகிறார்கள்.

## ஒரு சிறப்பு அம்சத்திற்கு யோசனை

மற்றொரு விஷயத்தையும் உங்களிடம் சொல்ல விரும்புகிறேன். ஒவ்வொரு சர்வகலாசாலைக்கும் ஒரு தனிச் சிறப்பு அம்சம் இருப்பதாகக் கருதப்படுகிறது. உதாரணமாக, ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகளுக்கென்று தனியான சிறப்பு அம்சங்கள் இருக்கின்றன. ஆனால், நம்முடைய சர்வகலாசாலைகள் மேல் நாடுகளிலுள்ள சர்வகலாசாலைகளின் மை ஒத்தும் காகிதங்களாக இருக்கின்றன என்றே அஞ்சுகிறேன். மேல் நாட்டு சர்வகலாசாலைகளின் வெளித் தோற்றங்களை நாம் கடன் வாங்கிக்கொண்டிருக்கிறோம்; அதை வைத்துக்கொண்டு இங்கு நாம் உயிருள்ள சர்வகலாசாலைகளை ஏற்படுத்திவிட்டதாகப் பெருமைப்பட்டுக் கொள்ளுகிறோம். இவை பாமர மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்றனவா? வேறு எந்த இடத்திலும் இல்லாத இஞ்ஜினீரிங் கல்வியும், தொழில் நுட்பமும் இங்கு போதிக்கப்படுவதாக அறிகிறேன். இதை ஒரு சிறப்பு அம்சமாக நான் கருதமாட்டேன். உங்களுக்கு நான் ஒரு சிறப்பு அம்சம் கூறுகிறேன். அலிகாரிலுள்ள இளைஞர்களை உங்கள் சர்வகலாசாலைக்குக் கொண்டுவர முடிந்திருக்கிறதா? அதுவே உங்களுடைய விசேஷ வேலையாக இருக்க வேண்டும், உங்களுடைய சர்வகலாசாலையின் விசேஷ சாதனையாக இருக்க வேண்டும். கடவுள் மாளவியாஜியை இன்னும் சில வருடங்களுக்கு நம்மிடையே விட்டுவைத்திருந்தால், வேண்டிய பணம் வந்துகொண்டேயிருக்கும். ஆனால், நான் விரும்பும் ஹிந்து—முஸ்லிம் உள்ளப் பிணைப்பு என்ற அற்புத நிகழ்ச்சியை எந்தப் பணத்தினாலும் சாதிக்க முடியாது. முஸ்லிம்களை இங்கு வரும்படி நீங்கள் வெளியே போய் அழைக்க வேண்டும்; உங்களுடைய அழைப்பை அவர்கள் நிராகரித்தால், அதை நீங்கள் பொருட்படுத்தக் கூடாது. நம்முடைய நாகரிகம் பத்தாயிரம் வருடங்களாக இருந்துவருகிறதென்று லோகமான்ய திலகர் கூறுகிறார். அது இன்னும் பழமையானது என்று வேறு சில அறிஞர்கள்

கூறுகிருர்கள். அத்தகைய மகத்தான நாகரிகத்தின் பிரதிநிதிகளாக நீங்கள் இருக்கிறீர்கள். உலகத்தை சிநேகம் செய்து கொள்ளுவதும், விரோதிகள் என்று சொல்லப்படுபவர்களை நண்பர்களாக மாற்றுவதுமே அந்த நாகரிகத்தின் விசேஷப் பொறுப்பாக இருக்கவேண்டும். புனிதமான கங்கை நதியைப் போல், நமது நாகரிகம் வெளியிலிருந்து பல சிற்ருறுகளைத் தன்னுள் ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஹிந்து நாகரிகத்திற்கும், ஹிந்து கலாசாரத்திற்கும் பிரதிநிதித்துவம் வகிக்க விரும்பும் ஹிந்து சர்வகலாசாலை, மற்ற கலாசாரங்களிலுள்ள சிறந்த அம்சங்களை ஏற்றுக்கொண்டு, வகுப்பு ஒற்றுமைக்கு எல்லோருக்கும் ஒரு உதாரணமாக விளங்க வேண்டுமென்பதே என்னுடைய பிரார்த்தனையாகும். அதுவே அதனுடைய தனிச் சிறப்பு அம்சமாக இருக்க வேண்டும். இதற்கு ஆங்கிலம் உங்களுக்கு உதவி புரியாது. நம்முடைய புராதன அறிவேதான் இதை போதிக்க வேண்டும்; நமது சாத்திரங்களை சரியான அர்த்தத்துடன் நாம் படித்துப் புரிந்துகொள்ள வேண்டும்.

இன்னும் ஒரே ஒரு வார்த்தை. நீங்கள் அரண்மனை போன்ற ஹாஸ்டல்களில் வசித்துக்கொண்டிருக்கிறீர்கள். ஆனல், எந்த விதமான ஆடம்பரமும் இல்லாமல், ஒரு சிறிய வீட்டில் பண்டிட்ஜி எளிய வாழ்க்கை நடத்துவதைப் பாருங்கள். அவருடைய அறைக்குள் போய்ப் பாருங்கள். அங்கு அலங்காரம் ஒன்றும் கிடையாது; மிகவும் சொற்பமான மேஜை, நாற்காலிகள்தான் இருக்கும். அவருடைய வாரிசுகளாகப் போகிற நீங்கள் உங்களுடைய வாழ்க்கையையும் அதே மாதிரி அமைத்துக்கொள்ள வேண்டும். உங்களில் பலர் ஏழைப் பெற்ருேர்களின் குழந்தைகள். நீங்கள் ஏழைகளுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்க வேண்டும் என்பதை மறந்துடாதீர்கள். ஆகையால், சுகபோக வாழ்க்கை நம் நாட்டிலுள்ள வறுமைக்கு ஏற்றதல்ல என்பதையும் மறந்து விடாதீர்கள். மாளவியாஜியைப் போல் நீங்கள் யாவரும் சாதாரண எளிய வாழ்க்கைக்கும், உயர்ந்த சிந்தனைக்கும் உதாரணங்களாக இருப்பீர்களாக. நான் சொன்னது உங்களுக்குப் பிடித்தமாயிருந்தால், அதை நிறைவேற்றி வைப்பதற்குக் கடவுள் உங்களுக்கு நீண்ட ஆயுளையும், விவேகத்தையும் அருளட்டும்.

—'ஹரிஜன்' - 1—2—1942

# 21

# படிப்பை முடித்த பிறகு என்ன செய்வது?

"படிப்பை முடித்த பிறகு நான் என்ன செய்வது?" என்று ஒரு மாணவர் ஒரு கேள்வியை எழுப்பியிருக்கிறார்.

இன்று நாம் அடிமைப்பட்ட நாட்டினராக இருக்கிறோம். நமது ஆட்சியாளர்களின் நலன்களுக்கு உதவி செய்யும் நோக்கத்துடனேயே நமது கல்வித் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. மிகுந்த சுயநலம் உள்ளவன் கூட, யாரைச் சுரண்ட விரும்புகிருனே அவனுக்கு ஏதாவது ஆசை காட்ட வேண்டியிருக்கிறது. அதே மாதிரி, நம்முடைய ஆட்சியாளர்கள் அவர்களுடைய பள்ளிக் கூடங்களில் நாம் சேர்ந்து படிக்க வேண்டும் என்பதற்காகப் பல ஆசைகளைக் காட்டியிருக்கிருர்கள். மேலும், சர்க்காரிலுள்ள எல்லாருமே ஒரே மாதிரியானவர்களல்ல. கல்விப் பிரச்னையை அதன் குண தோஷங்களுக் கேற்ப பரிசீலனை செய்யக்கூடிய பரந்த நோக்கம் உடையவர்களும் சிலர் அதில் இருக்கிருர்கள். ஆகையால், இப்போதைய முறையில் கூடக் கொஞ்சம் நன்மை இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், இப்போதைய கல்வி, திட்டம் எதுவுமில்லாமல் தவருக உபயோகித்துக் கொள்ளப்படுகிறது; அதாவது, பணமும், பதவியும் பெறுவதற்கு அது ஒரு சாதனமாகக் கருதப்படுகிறது.

''விடுதலையளிப்பதுதான் கல்வி'' என்பது ஒரு முதுரை. அன்றைப் போலவே இன்றைக்கும் கூட அது உண்மைதான். இங்கு கல்வி என்பது வெறும் ஆன்மிக அறிவைக் குறிப்பிட வில்லை; விடுதலை என்பது மரணத்திற்குப் பிறகு கிடைக்கும் ஆன்மிக விடுதலையையும் குறிப்பிடவில்லை. மனித வர்க்கத்தின் சேவைக்கு உபயோகமான எல்லாப் பயிற்சியுமே அறிவில் சேர்ந்ததுதான், இந்த வாழ்க்கையில் கூட எந்த விதமான அடிமைத் தனமும் இல்லாதிருப்பதே விடுதலை. அடிமைத்தனம் இரு வகைப்பட்டது: வெளி ஆதிக்கத்திற்குப் பணியும் அடிமைத் தனம்; தன்னுடைய உண்மையற்ற செயற்கைத் தேவைகளுக்குப் பணிவது மற்ருெரு விதமான அடிமைத்தனம். இந்த லட்சியத்தில் வெற்றி பெறுவதற்காகப் பெறும் அறிவே உண்மையான படிப்பாகும்.

அந்நிய ஆட்சியாளர்கள் வகுக்கும் ஒரு கல்வி முறை அவர்களுடைய நலன்களுக்குத் தான் ஏற்றதாக இருக்கும் என்பதை உணர்ந்து, 1920-இல் காங்கிரஸ் ஒரு தீர்மானம் செய்தது; அதாவது, மற்ற விஷயங்களுடன், சர்க்காரால் நடத்தப்படும்

எல்லாக் கல்வி ஸ்தாபனங்களையும் பகிஷ்காரம் செய்ய வேண்டு மென்ற கொள்கையை ஒப்புக்கொண்டது. ஆனால், அந்த சகாப்தம் முடிவடைந்துவிட்டது போல் தோன்றுகிறது. சர்க் கார் பள்ளிக்கூடங்களும், அம்மாதிரி முறையில் கல்வியளிக்கும் பள்ளிக்கூடங்களும் எவ்வளவு வேகமாகப் பெருகுகின்றனவோ, அதைவிட அதிக வேகமாக அப்பள்ளிகளில் சேருவதற்கு கிராக்கி வரவர அதிகமாகிக் கொண்டு வருகிறது. பரீட்சை எழுதுபவர்களின் எண்ணிக்கையும் பெருகிக் கொண்டே போகிறது. மனோவசியம் செய்யப்பட்டது போன்ற இந்த நிலைமை இருந்தாலும், நான் விவரித்துக் கூறியதுதான் உண்மை யான கல்வி என்று நான் சொல்லுகிறேன்.

நான் கூறிய லட்சியங்களால் மேலெழுந்தவாரியாகக் கவரப் பட்டு ஒரு மாணவன் தன் படிப்பை நிறுத்தினால், பின்னர் தன் செய்கைக்காக அவன் வருந்தக் கூடும். ஆகையால், பத்திரமான ஒரு வழியை நான் கூறியுள்ளேன். அவன் தனது பள்ளிக்கூடத்தி லேயே தொடர்ந்து படித்துக் கொண்டிருக்கலாம். அதே சமயத்தில், நான் கூறியுள்ள லட்சியங்களைக் கருத்தில் வைத்துக் கொண்டு பணம் பண்ணுவதற்காக அல்லாமல், அந்தக் கல்வியை அந்த லட்சியங்களை நிறைவேற்றுவதற்குப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும். தன்னுடைய ஓய்வு நேரத்தை அந்த லட்சியத்திற்கான வழியில் செலவிட்டு, இப்போதைய கல்வியி லுள்ள குறைபாட்டை ஈடு செய்ய முயற்சிக்க வேண்டும். ஆகையால், நிர்மாண வேலை செய்வதற்குக் கிடைக்கும் வாய்ப்பு களையெல்லாம் அவன் சாத்தியமானவரையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' – 10—3—1946

# 22

# மாணவர்களை இங்கிலாந்துக்கு அனுப்புதல்

நண்பர் தொடர்ந்து கேள்வி கேட்டார். "சென்ற தலைமுறை யைச் சேர்ந்த சிறந்த மனிதர்கள் இங்கிலாந்தில் கல்வி பயின்ற வர்கள். உதாரணமாக, நீங்களும் அப்படித்தான். இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு, முன்போலவே இந்திய மாணவர்களைப் படிப்புக்கு அங்கே அனுப்புவதற்கு நீங்கள் சம்மதிப்பீர்களா?"

"இல்லை. இப்போது இல்லை" என்று காந்திஜி பதிலளித் தார். "40 வருடங்களுக்குப் பிறகுதான் மாணவர்களை அங்கு அனுப்பவேண்டும் என்று நான் யோசனை கூறுவேன்."

"அப்படியானால், இரண்டு தலைமுறைகளைச் சேர்ந்தவர்களுக்கு, மேல்நாட்டுத் தொடர்பின் அநுகூலம் கிடைக்க முடியாமல் பறிப்பதாக ஆகிறது" என்று அந்த நண்பர் சொன்னார்.

125 வயது வரையில் வாழ வேண்டும் என்பது காந்திஜிக்கு மிகவும் பிடித்தமான ஒரு விஷயம். நண்பர் இப்படிச் சொன்னதும் காந்திஜி அதைப்பற்றிப் பிரஸ்தாபித்தார்.

"ஏன் இரண்டு தலைமுறைகள்? ஒரு தனி மனிதனின் வாழ்க்கையில் கூட, நாற்பது அல்லது அறுபது வருஷங்கள் கூட அவ்வளவு நீண்டகாலம் அல்ல. சரியானபடி வாழ்க்கையை நடத்தினால் 60–ஆவது வயதில் முதுமை எய்திவிடும் அவசியம் இராது. துரதிருஷ்டவசமாக, இந்த நாட்டில் பலர் அந்த வயதில் முதுமை எய்திவிடுகிறார்கள். முதிர்ச்சிபெற்ற பிறகு தான் அவர்கள் அங்கு செல்லவேண்டும் என்று நான் மீண்டும் சொல்லுகிறேன். ஏனெனில், தம்முடைய கலாசாரத்திலுள்ள நல்ல அம்சங்களைப் புரிந்து கொண்டபிறகுதான், இங்கிலாந்து அல்லது அமெரிக்காவில் உள்ள சிறந்த அம்சங்களை அவர்கள் உண்மையாகப் புரிந்து கொண்டு, அவற்றை ஏற்றுக் கொள்ள முடியும். என்னைப்போல், 17 வயதிலேயே ஒரு பையன் இங்கிலாந்துக்குப் போனால் என்ன ஆகுமென்று கற்பனை செய்து பாருங்கள்; அவன் மூழ்கியே போய்விடுவான்" என்று காந்திஜி கூறினார்.

"அப்படியானால் எப்போதாவது உங்களை நாங்கள் இங்கிலாந்தில் எதிர்பார்க்கலாம்?" என்று நண்பர் கேட்டார்.

"ஓ, தாராளமாக எதிர்பார்க்கலாம்" என்று காந்திஜி சொன்னபோது எல்லோரும் சிரித்தார்கள்.

—'ஹரிஜன்' – 23—6—1946

# 23

# ஏன் வெளிநாடுகளுக்குப் போக வேண்டும்?

நரம்பு சிகிச்சை கற்றுக்கொண்டு திரும்பி வந்து, இங்குள்ள மக்களுக்குச் சேவை செய்யலாம் என்ற நோக்கத்துடன் இந்திய டாக்டர் ஒருவர் அமெரிக்காவுக்குப் போனார். கஷ்டப்பட்டு அவர் கொலம்பியா சர்வகலாசாலையில் இடம் பெற்று, அங்கு பணியாற்றிக் கொண்டிருக்கிறார்.

மாணவர்கள் வெளிநாடுகளுக்குப் போகக் கூடாதென்று நான் வற்புறுத்த வேண்டும் என அவர் விரும்புகிருர். அதற்கு அவர் பின்கண்ட காரணங்களைக் கூறியிருக்கிருர்:

"(அ) நமது ஏழை நாடு, பத்து மாணவர்களைப் பயிற்சிக்காக வெளி நாடுகளுக்கு அனுப்புவதற்குச் செலவிடும் பணத்தை இன்னும் நல்லவிதமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். அந்தப் பணத்தைக் கொண்டு ஒரு முதல்தர மான பேராசிரியரை இந்தியாவுக்கு வரவழைத்தால், 40 மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கலாம். அத்துடன் ஒரு ஆராய்ச்சிக் கூடத்திற்கு வேண்டிய சாதனங்களையும் வாங்கிக்கொள்ளலாம்.

"(ஆ) இங்கு வரும் மாணவர்கள் ஆராய்ச்சித் துறையில் அடிப்படை அறிவு பெறுகிருர்கள். ஆனல், நம் நாட்டுக்குத் திரும்பி வந்த பிறகு, எப்படி ஒரு ஆராய்ச்சிக் கூடத்தை அமைப்பது என்று அவர்களுக்குத் தெரிவதில்லை.

"(இ) தொடர்ந்து பணியாற்றுவதற்கு அவர்களுக்கு வாய்ப்பு இல்லை.

"(ஈ) சிறந்த நிபுணர்களை நாம் கொண்டுவந்தால், நமது ஆராய்ச்சிக் கூடங்களும் நன்கு சீர்படும்."

நமது மாணவர்கள் வெளிநாடுகளுக்குப் போவதை நான் எப்போதுமே ஆதரித்ததில்லை. அப்படிச் செல்லுபவர்கள் திரும்பி வந்தபிறகு, வட்டமான துளையில், சதுரமான முளையை அடிப்பதுபோல் பொருத்தமற்றவர்களாக இருக்கிருர்கள் என்பதே என்னுடைய அனுபவமாகும். சொந்த நாட்டு மண்ணில் கிடைக்கும் அனுபவம் தான் மிகவும் உயர்ந்தது; அது தான் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிவது. ஆனல், வெளிநாடு களுக்குப் போகும் மோகம் இன்று நம் மாணவர்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. வெளிநாடுகளுக்குச் செல்லும் மாணவர் களுக்கு, நான் மேலே கொடுத்துள்ள கடிதம் ஒரு எச்சரிக்கை யாக இருக்கட்டும்!

—'ஹரிஜன்' – 8—9—1946

பகுதி நான்கு

# கல்வித் துறையில் சோதனைகள்

## 1

## தேசீயப் பள்ளிகள்

சுயராஜ்யம் பெறுவதற்காகவே தேசீயப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவை அந்தப் பெயருக்குத் தகுதியுள்ளவைகளாக இருக்கவேண்டுமானால், கல்வி ஸ்தாபனங்கள் பற்றிய தேசீயத் திட்டத்தை நிறைவேற்றக்கூடிய விதத்தில் நடத்தப்படவேண்டும். உதாரணமாக, கைராட்டினத்தைப் பரப்புவதற்கும், ஹிந்துக்களையும், முஸ்லிம்களையும், மற்றவர்களையும் இன்னும் நெருக்கமாக ஒன்று சேர்ப்பதற்கும், 'தீண்டத்தகாதாருக்கு' அறிவு புகட்டவும், பள்ளிக்கூடங்களிலிருந்து தீண்டாமை என்ற சாபக்கேட்டை அகற்றவும் அவை சக்தி வாய்ந்த சாதனங்களாக இருக்கவேண்டும். இந்த அளவு கோலின்படி மதிப்பிட்டுப் பார்த்தால், இந்தச் சோதனை தோல்வி அடைந்து விடவில்லை என்றாலும், உற்சாகமளிக்காத ஒரு வெற்றி என்றே சொல்லவேண்டும். மொத்தம் உள்ள 30,000 பையன்கள், பெண்களில் ஆயிரம் பேர்கள் கூட, 100 ராட்டினங்களில் தினசரி அரை மணி நேரம் வீதம் நூற்கவில்லை. நூற்றுக்கணக்கான கைராட்டினங்கள் கேட்பாரற்று சும்மா கிடக்கின்றன. கொள்கையளவில் 'தீண்டத்தகாதாரும்' பள்ளிக்கூடங்களில் சேரலாம் என்றிருந்தாலும், வெகு சில பள்ளிக்கூடங்களிலேயே தீண்டத்தகாத மாணவர்கள் இருக்கிறார்கள். பள்ளிக்கூடங்களில் முஸ்லிம் மாணவர்களின் தொகையும் மிகக் குறைவாக இருக்கிறது. ஆகையால், இப்போது நாம் எண்ணிக்கையைப் பார்க்காமல், தரத்திற்கே முதலிடம் கொடுக்க வேண்டுமென்று தயக்கமே இல்லாமல் யோசனை கூறியிருக்கிறேன். மாணவர்களைச் சேர்ப்பதற்கான தகுதி வரவர கடுமையாக்கப்பட வேண்டும். தம் குழந்தைகள் நூற்கக் கற்றுக் கொள்ளுவதையோ, 'தீண்டாதார்களுடன்' சேர்ந்து பழகுவதையோ விரும்பாத பெற்றோர்கள், இஷ்டப்பட்டால் தம் குழந்தைகளை வாபஸ் பெற்றுக்கொண்டு விடலாம். 'தீண்டாதார்களையும்', ராட்டினத்தையும் விலக்கிவைத்தால்தான் பள்ளிக் கூடங்களை நடத்தமுடியும் என்றால், பள்ளிக் கூடங்களை மூட வேண்டியிருந்தால் கூடக் கவலைப்படக் கூடாது.

என்று ஆசிரியர்களுக்கு யோசனை கூறியுள்ளேன். "தீண்டத் தகாத' குழந்தைகள் எப்படியோ பள்ளிக்கூடத்திற்குள் வந்து விட்டால், போனால் போகட்டும் என்று அதை சகித்துக்கொண் டிருப்பது மட்டும் போதாது; அன்பும், அரவணைப்பும் காட்டி அவர்களை நம் பள்ளிக்கூடங்களுக்கு வரும்படி செய்வதும் அவசியமாகும். முஸ்லிம், பார்ஸி பெற்றோர்கள் தமது குழந்தை களை அனுப்புவதற்காக ஆசிரியர்கள் காத்துக் கொண்டிருக்கக் கூடாது; குழந்தைகளை அனுப்புங்கள் என்று தாமே அவர்களை அழைக்கவேண்டும். ஒரு தேசீயப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியர் தம்முடைய துறையில் ஒரு சுயராஜ்ய பிரசாரகராக இருக்க வேண்டும். தம்முடைய பொறுப்பில் உள்ள ஒவ்வொரு குழந்தை யின் சரித்திரமும் ஆசிரியருக்குத் தெரிந்திருக்க வேண்டும்; தம் பள்ளிக் கூடத்தில் இல்லாத குழந்தைகளையும் அறிந்திருக்க வேண்டும்; அவர்களுடைய பெற்றோர்களை அறிந்திருக்க வேண்டும்; அவர்கள் ஏன் தமது குழந்தைகளைத் தமது பள்ளிக் கூடத்திற்கு அனுப்பவில்லை என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த வேலையை அரைகுறை மனத்துடன் செய் யாமல், அன்பு உள்ளத்துடன் செய்யவேண்டும். அப்போதுதான் தேசீயப் பள்ளிக்கூடங்கள், காங்கிரஸ் தீர்மானத்தின்படி உண்மையான தேசீயத் தன்மை வாய்ந்தவையாக இருக்கும்.

இது கஷ்டமான வேலை என்பதில் சந்தேகமில்லை. இந்த சர்க் கார், எல்லாவற்றையுமே லாப நஷ்டக் கணக்குப் பார்க்கும் விதத்தில் செய்து விட்டது. எதற்குமே நல்லொழுக்கம் சோதனை யாக இல்லை. இயற்கையற்ற ஒரு பாடத் திட்டத்தை மேலெழுந்த வாரியாக சமாளித்துவிட்டால், அது ஒன்றே போதுமானதாக இருக்கிறது. ஒவ்வொரு தொழிலுமே பணம் சம்பாதிப்பதற்கான ஒரு சாதனம் என்ற இழி நிலைக்குக் கொண்டு வரப்பட்டுளது. பணம் சம்பாதிப்பதற்காகத்தான் நாம் வக்கீல்களாகவோ, பள்ளி ஆசிரியர்களாகவோ போகிறோமேயொழிய, நம் நாட்டு மக்களுக்குச் சேவை செய்வதற்காக அல்ல. ஆகையால், உள் ளத்தைப் புழுங்கவைக்கும் இந்தச் சூழ்நிலையில்தான் வித்தியா பீடம் (ஆமதாபாத்திலுள்ள குஜராத் தேசீய சர்வகலாசாலை) ஆசிரியர்களைச் சேர்க்க வேண்டியிருந்தது. பெரும்பாலான ஆசிரி யர்கள் த:ம்மையும், தம்முடைய சூழ்நிலையையும் விட உயர்ந்த விதத்தில் நடந்து கொள்ள வேண்டியிருந்தது. தேசத்தின் அழைப்பை ஏற்றுக் கொண்டு அவர்கள் வந்ததுதான் அதிசயம்.

ஆனால், இப்போது நான்கு வருட அனுபவத்திற்குப் பிறகு, நாம் புது மாதிரியாக நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இருந்த இடத்திலேயே இருந்து கொண்டிருந்தால், மூழ்க வேண்டி யதுதான். ஆகையால், பையன்களும், பெண்களும் தினசரி அரை மணி நேரமாவது ராட்டினத்தில் நூற்றாக வேண்டும். முப்பதாயிரம் பையன்களும், பெண்களும், எண்ணூறு ஆசிரியர்களும் நூற்ப தென்பது அற்ப சொற்பமான பயிற்சியல்ல; அதாவது, தேசத் திற்காக ஒவ்வொரு நாளும் அரை மணி நேரம் உழைக்கின்றார்கள்

என்பதே இதன் அர்த்தமாகும். அது ஒவ்வொரு நாளும் தேச பக்தியில் பலன்தரத்தக்க அனுபவமும், பயிற்சியும் பெறுவதாகும். தன்னுடைய கல்வியின் ஆரம்பத்திலேயே, ஒரு பையன் பதிலுக்கு எதையும் எதிர்பாராமல் உழைப்பதென்பது தியாகத்திற்கு ஓர் உதாரணமாகும். பிற்கால வாழ்வில் அந்த அனுபவத்தை அவன் மறக்கவே மாட்டான். தேசத்திற்கு இதனால் மாதத்தில் 1875 மணங்கு நூல் வெகுமதியாகக் கிடைக்கிறது. இதனால் 5000 பேர்களுக்குத் தலா ஒரு வேஷ்டியாவது கிடைக்கும். மற்ற விஷயங்கள் ஒரு புறமிருக்கட்டும். சமீபத்தில் சென்னையில் வந்த வெள்ளம் காரணமாகப் பலர் உடுக்க உடையின்றித் தவிக்கின்றனர். தானும், இன்னும் ஐந்து குழந்தைகளும் சேர்ந்து ஒருமாத காலத்தில் நூற்கும் நூல், இப்படி உடுக்க உடையற்றுப் போனவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வேஷ்டி வீதம் கொடுக்கப் போதுமானதாயிருக்கும் என்று ஒவ்வொரு குழந்தையும் யோசித்துப் பார்ப்பதன் மூலம் அவர்களுக்குக் கிடைக்கக் கூடிய படிப்பினையின் மதிப்பை ஒவ்வொரு ஆசிரியரும் கணக்குப் போட்டுப் பார்க்கட்டும்.

—'எங் இந்தியா' – 7—8—1924

## கதரில் உள்ள பொருளாதார அம்சங்கள்

சுயராஜ்யம் என்ற கண்ணோட்டத்துடன்தான் தேசீயப் பள்ளிக்கூடங்களைப்பற்றி நான் சிந்தித்துப் பார்க்க முடிகிறது. ஆகையால், கல்லூரிகளில் இருப்பவர்கள் கூட நூற்பதில் நல்ல பயிற்சி பெற்று, அதன் பலன்களிலும் கவனம் செலுத்த வேண்டுமென்று நான் விரும்புகிறேன். கதரில் உள்ள பொருளாதார அம்சங்களை அவர்கள் ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்றும் விரும்புகிறேன். ஒரு மில்லை ஏற்படுத்துவதற்கு எவ்வளவு காலம் ஆகிறது? அதற்கு எவ்வளவு மூலதனம் தேவைப்படும்? இதையெல்லாம் அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். மில்கள் வரையறையின்றிப் பெருகிக் கொண்டிருக்க முடியாது என்பதையும் அவர்கள் அறிய வேண்டும். மில்களின் மூலம் செல்வம் எப்படி வினியோகிக்கப்படுகிறது, ராட்டினத்தில் நூற்றல், கைத்தறி நெசவு மூலம் அது எப்படி வினியோகிக்கப்படுகிறது என்பதையும் அவர்கள் அறிய வேண்டும். ராட்டினத்தில் நூற்பதும், இந்தியாவில் துணி நெய்வதும் எப்படி அழிக்கப்பட்டன என்பதை அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தியாவிலுள்ள லட்சக் கணக்கான வீடுகளில் நூற்க ஆரம்பித்தால், அதன் பலன் எப்படியிருக்கும் என்பதைப் புரிந்து கொண்டு, அதை ருசுப்பிக்கவும் தெரிந்து கொள்ள வேண்டும். இந்தக் குடிசைத் தொழிலைப் பூராவாக உயிர்ப்பித்தால், பிளவு பட்டுள்ள ஹிந்து, முஸ்லிம் உள்ளங்களை அது எவ்வாறு ஒன்றுபடுத்தும் என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

—'எங் இந்தியா' – 11—12—1924

## நூற்றலும், மற்ற கலைகளும்

நமது கல்வி ஸ்தாபனங்களெல்லாம் வெறும் நூல் நூற்பு, நெசவுக் கழகங்களாக மாறிவிட வேண்டுமென்று நான் சொல்ல வில்லை. எந்த தேசீயக் கல்வி முறையிலும், நூற்றலும், நெசவும் அவசியமான ஒரு பகுதியாக இருக்க வேண்டுமென்று நான் கருது கிறேன். இதற்காகப் பையன்களின் நேரம் பூராவையும் எடுத்துக் கொண்டு விடவேண்டும் என்பது என்னுடைய நோக்கமல்ல. திறமையுள்ள ஒரு வைத்தியரைப் போல், பாதிக்கப்பட்ட அவயவத்தின் மீது மட்டுமே என்னுடைய கவனத்தைச் செலுத்து கிறேன். ஏனெனில், மற்ற அவயவங்களைக் கவனித்துக் கொள்ளு வதற்கு இதுதான் சிறந்த வழியாகும். குழந்தையின் கைகள், மூளை, உள்ளம் ஆகிய மூன்றையுமே நான் அபிவிருத்தி செய்வேன். கைகள் இப்போது அநேகமாகச் செயலற்றுப் போயிருக்கின்றன. உள்ளம் அடியோடு புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் நம்முடைய கல்வியிலுள்ள இந்தப் பெரும் குறைபாடுகளைத் தீர்க்க வேண்டுமென்று சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நமது குழந்தைகள் தினசரி அரைமணி நேரம் நூற்பது, அவர்கள் தாங்க முடியாத ஒரு சுமையா என்ன? இதனால் மனம் செயலற்றுப் போய்விடுமா?

பல்வேறு கலைகளிலும் பயிற்சி அளிக்கப்படுவது முக்கியம் என்றே நான் நினைக்கிறேன். நமது குழந்தைகளுக்கு ரசாயனமும், பௌதிகமும் எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லிக் கொடுக்கலாம். எனக்கு நேரடியான தொடர்பு உள்ளதாகக் கருதப்படும் ஸ்தாபனங்களில் இந்த அம்சம் கவனிக்கப்படவில்லையென்றால், இதற்கு வேண்டிய ஆசிரியர்கள் எங்களுக்குக் கிடைக்க வில்லை. மேலும், இந்தப் பாடங்களை அனுபவ பூர்வமாகச் சொல்லிக் கொடுப்பதற்கு வேண்டிய ரசாயன ஆராய்ச்சி சாலைகளை அமைப்பதற்கு ஏராளமான செலவாகும். இந்த ஆரம்பப் பருவத்திலும், நிச்சயமற்ற நிலைமையிலும் அதற்கு நாங்கள் தயாராயில்லை.

— 'எங் இந்தியா' - 12—3—1925

## பள்ளிகளில் நூற்றல்

நூல் நூற்றலை இன்றியமையாத ஒரு தொழிலாக உயிர்ப்பிப்பதென்றால், இதை முக்கியமானதாகக் கருதி, நல்ல பள்ளிக் கூடங்களில் மற்றப் பாடங்கள் போதிக்கப்படுவதைப் போல், இதையும் சரியான முறையில் போதிக்க வேண்டும். அப்போது ராட்டினங்கள், அவ்வப்போது இந்தப் பத்திரிகையில் விதிக்கப்பட்டுள்ள சோதனைகளுக்கிணங்க நல்ல நிலைமையில் இருக்கும். மாணவர்களுடைய மற்றப் பயிற்சிகள் அன்றாடம் பரிசீலனை செய்யப்படுவது போலவே, இந்த விஷயத்திலும் அவர்களுடைய அன்றாட வேலை ஒழுங்காகச் சோதிக்கப்படும்.

பையன்களும், இஷ்டப்பட்டால் தம் வீட்டிலேயே வசதியான ராட்டினத்தில் நூற்பதைக் கற்றுக் கொடுக்கலாம். ஆனால், வகுப்புகளில் நூற்கச் சொல்லிக் கொடுப்பதற்கு தக்ளிதான் மிகவும் ஏற்றதும், மலிவானதுமான கருவியாகும்.

—'எங் இந்தியா' – 15—10—1925

## தேசீயக் கல்வியா, சர்க்கார் கல்வியா ?

எங்களுடைய மாணவர்களில் ஒருவர் பர்தோலியில் சிறைக்குப் போய்விட்டார். மற்றும் பலரும் போவார்கள். அவர்கள் வித்தியா பீடத்திற்குப் பெருமையளிப்பவர்கள். சர்க்கார் பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவர்கள் தாம் விரும்பினால் கூட அப்படிச் செய்யத் துணிய முடியுமா? உங்களைப் போல் அவர்கள் பர்தோலிக்குப் போய் வல்லபாய்க்கு உதவி செய்ய முடியாது. அவர்கள் தமது அனுதாபத்தை ரகசியமாகத்தான் தெரிவிக்க முடியும். தேசீய வாழ்வின் ஒரு நெருக்கடியான தருணத்தில் நம்மை இப்படிக் கட்டுப்படுத்தி, அடைத்து வைக்கும் இலக்கியக் கல்வியினால் என்ன பிரயோசனம்? அடிமைத்தனத்திற்கு, அறிவும் இலக்கியப் பயிற்சியும் ஈடாகிவிடுமா?

மேலும், நாம் கல்வி அளிக்கும் முறைக்கும், அவர்களுடைய முறைக்குமிடையே எவ்வளவோ வித்தியாசங்கள் இருக்கின்றன. உதாரணமாக, அவர்கள் சொல்லிக் கொடுப்பதைப் போல் நாம் ஆங்கிலம் சொல்லிக் கொடுக்க மாட்டோம். அந்த மொழியை எழுதப்படிக்க நாம் கற்றுக் கொடுப்போம். ஆனால், நாம் தாய் மொழியைப் புறக்கணித்து, ஆங்கிலத்தை நமது சிந்தனையை வெளிப்படுத்தும் கருவியாக வைத்துக் கொண்டால், அது தேசீயத் தற்கொலைக்கு ஒப்பாகும். இந்த தேசீய ஸ்தாபனத்தில் அந்த மோசமான பழக்கத்தைத் திருத்த முயற்சிக்கிறோம். நம்முடைய பாடங்கள் யாவற்றையும் குஜராத்தி மொழியின் மூலமே கற்றுக்கொள்ள வேண்டும். அதை வளம் பெறச் செய்து, எல்லாவிதமான கருத்துகளையும், உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தத்தக்க மொழியாக அதை வளர்க்கவேண்டும்.

பொருளாதாரம் சொல்லிக் கொடுக்கப்படும் விதத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இப்போது சர்க்கார் பள்ளிக்கூடங்களில் உள்ள முறை மிகவும் மோசமானது. ஒவ்வொரு நாட்டின் பொருளாதாரமும் ஒவ்வொரு விதமானது. ஜெர்மன் பாட புத்தகங்கள் ஆங்கில பாடபுத்தகங்களிலிருந்து மாறுபட்டிருக்கும். சுதந்திர வர்த்தகமே இங்கிலாந்துக்கு விமோசனமாயிருக்கலாம்; ஆனால், நமக்கு அது அழிவையே தரும். இந்தியப் பொருளாதாரத்தை இனித்தான் நாம் உருவாக்க வேண்டும்.

சரித்திரத்தின் விஷயமும் அப்படித்தான். ஒரு பிரெஞ்சுக்காரர் இந்திய சரித்திரத்தை எழுதினால் தன் வழியில்தான் எழுதுவார். ஆங்கிலேயர் முற்றிலும் வேறு விதமாக எழுதுவார். ஆங்கிலேயர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே நடைபெற்ற சண்டைகளைப் பற்றிய வர்ணனைகள், எழுதுபவர்களுக்குத் தகுந்தாற்போல் மாறுபட்டிருக்கும். இந்திய தேச பக்தர் ஒருவர் உண்மையான ஆதாரங்களைக் கொண்டு எழுதும் இந்திய சரித்திரம், ஆங்கிலேய அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் எழுதுவதினின்றும் மாறுபட்டே இருக்கும். இருவருமே நேர்மையுடன் எழுத முயற்சித்திருந்தாலும் மாறுபாடுகள் இருக்கும். நம்முடைய தேசீய வாழ்வில் நடந்த சம்பவங்களைப் பற்றி ஆங்கிலேயர்களின் மதிப்பீடுகளை நாம் ஏற்றுக் கொண்டது மிகப் பெரிய தவறாகும். ஆகையால், நீங்களும், உங்களுடைய ஆசிரியர்களும் புதிய ஆராய்ச்சிகள் நடத்துவதற்கு இது ஏற்ற ஒரு துறையாகும்.

கணக்கு போன்ற ஒரு பாடத்தை நாம் சொல்லிக் கொடுக்கும் முறை கூட வேறு விதமாக இருக்கும். நம்முடைய ஆசிரியர் கணக்கு கேள்விகளை, இந்திய நிலைமைகளைக் கருத்தில் கொண்டு கேட்கிறார். இவ்வாறாக, அவர் கணக்கு சொல்லிக் கொடுக்கும்போதே, இந்திய பூகோளத்தையும் சொல்லிக் கொடுப்பார்.

உடலுழைப்பு, தொழிற் பயிற்சி ஆகியவைகளுக்கும் நாம் விசேஷ முக்கியத்துவம் அளிக்கிறோம். இந்தப் பயிற்சி பெறுவதால் உங்கள் மூளை மழுங்கிவிடுமென்று தவறாக நினைத்து விடாதீர்கள். அறிவு என்பது விஷயங்களை மனப்பாடம் செய்து சேமிப்பு வைப்பதற்கான ஒரு கிடங்கு அல்ல. அக்கறையின்றி இலக்கியப் பயிற்சி பெறுவதைவிட, புத்திசாலித்தனமான விதத்தில் தொழிற் பயிற்சி பெறுவது அறிவு வளர்ச்சிக்கு இன்னும் உறுதுணையாக இருக்கலாம்.

—'எங் இந்தியா'—21—6—1928

பகுதி ஐந்து

# தேசீயக் கல்விப் பாதையில்

## 1

## இன்றைய பரிதாப நிலை

*(1920 நவம்பர் 15உ யன்று, ஆமதாபாத், குஜராத் வித்தியா பீடத்தின் குஜராத் மகாவித்தியாலயத்தை ஆரம்பித்து வைத்து காந்திஜி குஜராத்தியில் செய்த பிரசங்கத்தின் சுருக்கமான மொழி பெயர்ப்பு கீழே கொடுக்கப்பட்டுளது :)*

நான் கலந்து கொண்டுள்ள இதர நிகழ்ச்சிக்கும் இன்றைய நிகழ்ச்சிகளுக்கும் வித்தியாசம் உண்டு. இது கொஞ்சம் ஆபத்தானதென்று நான் நினைக்கிறேன். இதனால் தேசத்திற்குக் கெடுதல் எதுவும் ஏற்பட்டுவிடும் என்பதால் அல்ல; ஆனால், இந்த வேலைக்கு நான் தகுதியானவன் அல்ல என்று நினைக்கிறேன். உண்மையான கல்வியை போதிப்பதற் கென்றே இந்த ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டதா யிருந்தால், என்னுடைய தகுதியின்மையை நான் இப்படி ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டிராது. ஆனால், இந்த மகாவித்தியா லயம் மாணவர்களுக்குக் கல்வி போதிப்பதற்காக மட்டும் அல்ல; அவர்களுக்கு ஜீவனோபாயத்திற்கு வழி தேடிக்கொடுப் பதும் அதன் நோக்கங்களில் ஒன்றாகும். இந்தக் கண்ணோட்டத் துடன் மகாவித்தியாலயத்தை குஜராத் கல்லூரியுடன் ஒப்பிட் டுப் பார்க்கும்போது எனக்குத் திகைப்பு ஏற்படுகிறது. குஜராத் கல்லூரி ஒரு பெரிய விவகாரம். ஆனால் இந்த மகாவித்தியாலயம் சின்ன சமாசாரம்தான். ஆனால், இது பெரிய ஸ்தாபனம் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். குஜராத் கல்லூரி யில் கல்லும் சுண்ணம்பும் அதிகமாயிருக்கிறது. ஸ்தாப னங்களை மதிப்பிடுவதற்கு உண்மையான அளவுகோல், பெரிய பெரிய கட்டிடங்களும், இதர சாதனங்களும் இருப்பதுமட்டும் அல்ல என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளச் செய்யும் சக்தி என்னிடம் இல்லை. நம்முடைய பணியில் எனக்கு இருப்பது போன்ற அவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கையை கடவுள் உங்களுக்கும் அளிக்கட்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

இன்றுள்ள நிலைமை என்னவென்றால், ஒரு சதுர அங்குலம் நிலத்தைக் கூட நம்முடையது என்று சொல்லிக்கொள்ள முடிய வில்லை. எல்லாம் ஒரு அந்நிய சர்க்காருக்குச் சொந்தமாக இருக் கிறது. இந்த நிலமும், இங்குள்ள மரங்களும் மட்டுமல்ல, நம் முடைய உடல்கள்கூட அவர்களுடைய அதிகாரத்திற்கு உட்பட் டிருக்கின்றன. நம்முடைய ஆன்மாகூட நமக்குச் சொந்தமானதா என்று நமக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. நம்முடைய நிலைமை இவ்வளவு பரிதாபகரமானதாக இருக்கும்போது, தேசீயக் கல்லூரியை வைப்பதற்கு அழகான கட்டிடத்தையோ, அதில் பாடம் சொல்லிக் கொடுப்பதற்கு நல்ல அறிவாளிகளையோகூட நாம் தேடிக்கொண்டிருக்க முடியாது. மற்ற வகைகளில் விஷய அறிவில்லாத ஒருவர் வந்து, எப்படி நமது உள்ளத்தின் ஒளி அணைக்கப்பட்டுவிட்டது, நம்முடைய இந்த நாடு எப்படித் தன்னுடைய புராதனமான விவேகத்தை இழந்துவிட்டது என் பதை நமக்கு உணர்த்தினால், அவரையே மகிழ்ச்சியுடன் உங்க ளுடைய தலைமை ஆசிரியராக நியமிப்பேன். ஆனால், அத்தகைய மாடு மேய்ப்பவர் ஒருவரை நீங்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பீர்களா என்று எனக்குத் தெரியாது. ஆகையால், நாங்கள் ஸ்ரீ கித்வானியைத் தேடி அலைய வேண்டியிருந்தது. அவருக் குள்ள பட்டங்களை நான் அவ்வளவு முக்கியமாகக் கருதவில்லை யென்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இந்தக் கல்லூரியில் நம்முடைய அளவு கோல் வேறு விதமானது. பித்தளையைப்போல் தோன்றுவதை நல்லொழுக்கம் என்ற உரைகல்லில் தேய்த்துப் பார்த்தால் அது பசும் பொன்னாயிருக்கும்.

நம் கல்லூரியில், உயர்ந்த நல்லொழுக்கமுள்ள ஸிந்திகள், மகாராஷ்டிரியர்கள், குஜராத்திகள் ஆகியோர் ஆசிரியர்களாக இருப்பது நம்முடைய அதிருஷ்டம்தான்.

இந்த விழாவுக்கு வந்துள்ள கனவான்களும் பெண்களும், இந்தக் கல்லூரிக்கு மனப்பூர்வமாக ஆசி கூற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்திய தத்துவத்தின் இந்தப் புதிய சோதனையில் தங்கள் பையன்களும், பெண்களும் சேர்ந்து கொள்ள வேண்டுமென்று அழைப்பதன் மூலம்தான் அவர்கள் அந்த ஆசியை அளிக்க முடியும். இந்தியாவிலுள்ளவர்கள் தாரா ளமாகப் பணம் கொடுக்கும் சுபாவமுடையவர்கள். ஆனால், பணம் இல்லை என்ற காரணத்தினால் அபிவிருத்தி தடைப்படுவதே இல்லை; மனிதர்கள் இல்லாததாலும், தலைவன் இல்லாததாலும், தலைவர்கள் இருந்தாலும் அவரைப் பின்பற்றுவோர் இல்லாத தாலும்தான் தடைப்படுகிறது. ஆனால், திறமையுள்ள தலைவன், பின்பற்றுபவர்களைக் கவருவதற்குத் தவறுவதில்லையென்றே நான் நினைக்கிறேன். அவனிடம் உள்ள கருவிகள் மகாமோசமா யிருக்கலாம்; இருந்தாலும் உள்ளதை வைத்துக்கொண்டு தன்னால் முடிந்ததை அவன் செய்வான். அதே மாதிரி ஒரு தலைவன் உண்மையான கலைஞனாயிருந்தால், களிமண்ணைக்கூடப் பொன்

ளுக்கிவிடுவான். உங்களுடைய ஆசிரியர்களும் அம்மாதிரி வாழ்க்கையின் கலைஞர்களாக வேண்டுமென்று விரும்புகிறேன்.

வெறும் அறிவினால் மட்டும் நமக்கு ஒரு பலனும் இல்லை. அப்பழுக்கில்லாத நல்லொழுக்கத்தின் மூலம்தான் நாம் சுயராஜ்யம் பெற முடியும். அந்நிய சர்க்காரின் சைத்தான் தன்மை வாய்ந்த பலாத்காரத்தை, பரிபூரணமானதாக இல்லாமலிருந்தால் கூட, நமது அமைதியான, ஆன்மிக இயக்கத்தின் மூலமே சமாளிக்க வேண்டும். சுதந்திரம் என்ற விதையை ஊன்றி, அதற்குத் தண்ணீர் வார்த்து, கடவுள் விரும்பும்போது, அது சுயராஜ்யம் என்ற அற்புதமான மரமாக வளருவதற்குப் பாடுபடவேண்டும். இதை உங்களுடைய கருத்தில் கொண்டிருந்தால், எல்லாம் சரியாக இருக்கும். லட்சியத்திற்காக வாழவும், அவசியமானால் அதற்காக உயிரை விடவும் அவர்கள் தயாராக இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். ஏனெனில், அதற்காக உயிரை விடுவது உண்மையில் வாழ்வதேயாகும்.

ஆசிரியர்கள் தம்முடைய கடமையைச் செய்கிறார்களென்று வைத்துக்கொண்டால், மாணவர்களுக்கு நான் சொல்லக் கூடியது அதிகம் இல்லை. மாணவர்கள், பாவம், இப்போதுள்ள சூழ்நிலையின் விளைவே ஆவர். அவர்கள் துணிச்சலுள்ளவர்களாகவும், உண்மை பேசுபவர்களாகவும், தூய உள்ளமுடையவர்களாகவும் இல்லை என்றால், அந்தக் குற்றம் அவர்களுடையதல்ல; அது அவர்களுடைய பெற்றோர்களின், ஆசிரியர்களின், ஆட்சியாளர்களின் குற்றமேயாகும். ஆனால், ஆட்சியாளர்களை ஏன் குறை கூற வேண்டும்? அரசன் எப்படியோ அப்படித்தான் பிரஜைகளும் என்பது உண்மையானால், பிரஜைகள் எப்படியோ அப்படித்தான் ஆட்சியாளர்களும் என்பதும் உண்மைதான். ஆகையால், பெற்றோர்கள், ஆசிரியர்களாகிய நாம் தேசத்தின் தன்மையிலுள்ள குறைபாடுகளைப் போக்க முயற்சி எடுத்துக் கொள்ளுவோமாக.

நாட்டிலுள்ள ஒவ்வொரு வீடும் ஒரு பள்ளிக்கூடம்; பெற்றோர்கள்தான் ஆசிரியர்கள். ஆனால், பெற்றோர்கள் போதிப்பதை நிறுத்திவிட்டதால், புனிதமான தம்முடைய பொறுப்பை நிறைவேற்றத் தவறிவிட்டார்கள். அந்நிய நாகரிகத்தின் உண்மையான தன்மை என்னவென்று நமக்குத் தெரியவில்லை; அதிலுள்ள குறைகளோ, குணங்களோ கூட நமக்குக் கொஞ்சமும் தெரியவில்லை. அந்த நாகரிகத்தை நாம் வாடகைக்கு வாங்கியிருக்கிறோம் அல்லது திருடியிருக்கிறோம். இந்தத் திருட்டு சாமான்களினால் நமக்கு ஒரு பிரயோசனமும் ஏற்படாது.

நம்முடைய வித்தியாலயம் புத்தக அறிவு பெறும் ஆலயமல்ல: இது சுதந்திரக் கோவில். நல்லொழுக்கத்தைப் பேணி வளர்ப்பதே நம் முன் உள்ள வேலையாகும். மாணவர்களிடையே நாம் எந்த அளவுக்கு வெற்றி பெறுகிறோமோ, அந்த அளவுக்கு

நாம் சுயராஜ்யத்திற்குத் தகுதியுள்ளவர்களாக இருப்போம். மாணவர்களிடையே வேலைசெய்வது ஒன்றுதான் சுயராஜ்யத்தை உருவாக்குவதற்கான கருவியாகும். நம்முடைய பணத்தையும், நமது பூரா உள்ளத்தையும் இன்று நாம் ஆரம்பிப்பது போன்ற ஸ்தாபனங்களில் ஈடுபடுத்த வேண்டும்.

இது செயல்களுக்கான காலமேயொழிய வார்த்தைகளுக்கான காலம் அல்ல. தேசீயக் கல்லூரியில் சேர்ந்துள்ள மாணவர்களை, பாதி ஆசிரியர்களாகவே நான் மதிக்கிறேன். இந்தக் கல்லூரிக்கு அவர்கள் அஸ்திவாரம் போட்டிருக்கிறார்கள். ஆகையால், அவர்கள் தம்முடைய பொறுப்பை உணரவேண்டும். அவர்கள் இதில் முழுக் கூட்டாளிகள். அவர்கள் தம்முடைய பங்கைச் செய்யாவிட்டால், ஆசிரியர்களின் முயற்சிகள் பெரும் பாலும் வீணாகிவிடும். நாம் ஏன் சர்க்கார் கல்லூரிகளை விட்டு விட்டு இந்தக் கல்லூரியில் சேர்ந்தோம், இங்கு என்ன எதிர் பார்க்கிறோம் என்பதை மாணவர்கள் உணரவேண்டும். அந்நிய ஆட்சியாளர்களை எதிர்த்து நாம் நடத்தும் போராட்டம் மிகவும் நீண்டதாயிருக்கக் கூடும். கடைசிவரையில் மாணவர்களாகிய நீங்கள் தாக்குப் பிடிப்பதற்குக் கடவுள் உங்களுக்கு பலம் அளிக்கட்டும். உங்களில் ஒரு சிலரே அப்படி கடைசிவரையில் சமாளித்து நிற்க முடிந்தாலும், அந்த ஒரு சிலர் இந்தக் கல்லூரிக்கு மட்டுமில்லாமல், தாய் நாட்டுக்கே பெருமை தேடித் தருபவர்களாக இருப்பார்கள். குஜராத் வளம் படைத்தது அல்லது அறிவு மிகுந்தது என்பது அந்தப் பெருமைக்குக் காரணமாக இராது; ஒத்துழையாமை என்ற விதை இந்த மாகாணத்தில் ஊன்றப்பட்டு, வளர்க்கப்பட்டது என்பதே அதற்குக் காரணமாயிருக்கும். இது தற்பெருமையல்ல; நான் இந்தக் கருத்தை வெளியிடத்தான் செய்தேன். மக்கள் அதை உற்சாகமாக ஏற்றுக் கொண்டனர். எனக்கு அதில் உள்ள தீவிர நம்பிக்கையையும் பகிர்ந்து கொண்டனர். என் எதிரில் உள்ள மரங்களை நான் எப்படிப் பார்க்க முடிகிறதோ, அதே மாதிரி சாத்விக ஒத்துழையாமைதான் இந்தியாவின் விமோசனமாக இருக்க முடியும் என்பதையும் நான் பார்க்க முடிகிறது. அந்தப் பெரிய இயக்கத்தின் கண்கூடான சின்னம்தான் இந்தக் கல்லூரி. அதில் நான் ஒரு இலைதான், அதுவும் உலர்ந்துபோன இலை. ஆசிரியர்களும் இலைகள்தாம். ஆனால், என்னைவிடப் பசுமையான இலைகள். மாணவர்களாகிய நீங்கள் மரக் கிளைகளைப் போன்றவர்கள்; உங்களிடையே யிருந்துதான் புதிய ஆசிரியர்கள் பரம்பரை தோன்றும். என்னிடம் எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறீர்களோ அதே அளவு நம்பிக்கையை உங்களுடைய ஆசிரியர்களிடத்திலும் வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஆனால், அவர்களிடம் சரியான உணர்ச்சி காணப்படவில்லையென்று உங்களுக்குத் தோன்றினால், பிரஹ்லாதன் தன்னுடைய தந்தையையும், ஆசிரியர்களையும் நிரா

கரித்ததைப் போலவே நீங்களும் நிராகரித்துவிட்டு அவர்கள் இல்லாமலே உங்கள் வேலையைக் கவனியுங்கள்.

நாம் விடுதலை பெறுவதற்கு இந்தக் கல்லூரியை ஒரு கருவியாகக் கடவுள் ஏற்றுக் கொள்ளட்டுமென்று பிரார்த்திக்கிறேன். நம்முடைய சுதந்திரம் இந்தியாவுக்கு மாத்திரமன்றி, உலகத்தின் க்ஷேமத்திற்கே உதவியாக இருக்கட்டும்.

## 2

# மேலும் சங்கடங்கள்

குஜராத் தேசீய சர்வகலாசாலையுடன் இணைக்கப்பட்ட ஸ்தாபனங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ளும் விஷயத்தை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் எழுப்பியிருந்தார். இது சம்பந்தமாக, சர்வகலாசாலையின் ஸெனட் சபை நிறைவேற்றியுள்ள தீர்மானம் ஆமதாபாதில் ஒரு பரபரப்பை உண்டாக்கியிருப்பதாகத் தெரிகிறது. இந்தப் பரபரப்பு 'டைம்ஸ் ஆப் இந்தியா' நிருபருக்கு மகிழ்ச்சியளித்திருக்கிறது. அத்துடன் மட்டுமில்லை. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, ஸெனட் சபையின் அமைப்பிலுள்ள மற்றொரு குறைபாட்டையும் அவர் கண்டுபிடித்திருக்கிறார். அதாவது, ஸெனட் சபையில் ஒரு முஸ்லிம் அங்கத்தினர் கூட இல்லை என்கிறார் அவர். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை என்பது வெறும் வாய்ப் பேச்சல்ல. இதற்கு இயற்கையற்ற ருசுக்கள் தேவையில்லை. இந்த தேசீய இயக்கத்தில் அக் கறை எடுத்துக்கொள்ளக் கூடியவரும், உயர்தரக் கல்வி பெற்றவரும், ஓய்வு நேரம் உள்ளவருமான முஸ்லிம் யாரும் கிடைக்கவில்லை. ஸெனட் சபையில் முஸ்லிம் பிரதிநிதி யாரும் இல்லாமலிருப்பதற்கு இதுதான் காரணம். நோக்கங்களைத் திரித்துக்கூறி, இந்த இயக்கத்தைச் சிறுமைப்படுத்துவதற்கான முயற்சிகளையும் நாம் சமாளிக்க வேண்டியிருக்கும் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே இதைக் குறிப்பிடுகிறேன். ஆனால், இது வெளியிலிருந்து வரும் சங்கடம்; இதைச் சுலபமாகச் சமாளித்து விடலாம்.

'தாழ்த்தப்பட்ட' வகுப்பினர் பிரச்னை நமக்குள்ளேயே இருக்கும் ஒரு சங்கடம்; ஆகையால், அது பெரிய விஷயமாகும். ஏனெனில், இதனால் பிளவு ஏற்பட்டு, நமது இயக்கம் பலவீனமடையக் கூடும். நமக்குள்ளேயே இருக்கும் சங்கடங்களைத் தீர்க்காமல், காலவரையறையின்றி ஒத்திப்போட்டுக் கொண்டேயிருந்தால், எந்த லட்சியமுமே வெற்றி பெற முடியாது. ஆயினும், பிளவைத் தவிர்க்க வேண்டும் என்பதற்காக, கொள்கைகளை விட்டுக்கொடுக்க முடியாது. ஒரு லட்சியத்தின் ஜீவா

தாரமான அம்சங்களை விட்டுக்கொடுத்துவிட்டு, அதை வளர்க்க முடியாது. 'தாழ்த்தப்பட்ட' வகுப்பினரின் பிரச்னை நம்முடைய லட்சியத்தின் ஜீவாதாரமான ஒரு அம்சமாகும். உண்மையான ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை இல்லாமல் சுயராஜ்யம் சாத்தியமில்லை. அதைப் போலவே, 'தாழ்த்தப்பட்ட' வகுப்பினருக்கு முழு நியாயம் வழங்காமல் சுயராஜ்யம் பெறுவதென்பதும் சாத்தியமில்லை. நம்மிடையே நாம் 'பறையர்களை' சிருஷ்டித்திருப்பதால், நாம் 'சாம்ராஜ்யத்தின் பறையர்கள்' ஆகிவிட்டோம் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். அடிமையைவிட அடிமைகளை வைத்திருக்கும் எஜமானன்தான் எப்பொழுதும் அதிகமாக பாதிக்கப்படுகிறான். ஹிந்துஸ்தானத்தின் ஜனத்தொகையில், ஐந்தில் ஒரு பகுதியினரை நாம் அடிமைத்தனத்தில் வைத்துக் கொண்டிருக்கும் வரையில், நாம் சுயராஜ்யம் பெறத் தகுதியுள்ளவர்களாக மாட்டோம். 'பறையன்' ஊர்ந்து செல்லும்படி நாம் செய்யவில்லையா? அவர்களை நாம் ஒதுக்கிவைக்கவில்லையா? 'பறையனை' இப்படி ஒதுக்கிவைப்பதுதான் மதம் என்றால், வெள்ளையர்கள் நம்மை ஒதுக்கிவைப்பதும் மதம்தான். நம்முடைய கீழ்த்தனத்தில் நாம் திருப்தியடைந்திருக்கிறோம் என்று வெள்ளைக்காரர்கள் சொல்லுவது சரியான வாதம் அல்லவென்றால், 'பறையன்' தன்னுடைய நிலைமையில் திருப்தியடைந்திருக்கிறான் என்று நாம் கூறுவதும் சரியாகாது. அடிமைத்தனத்தை நாம் கட்டித்தழுவ ஆரம்பிக்கும்போது அது பரிபூரணமானதாகி விடுகிறது.

புயலுக்கு முன்பு பணிய மறுத்தபோது, குஜராத் ஸெனட் சபை அதன் பலாபலன்களைக் கவனித்தே அப்படிச் செய்திருக்கிறது. இந்த ஒத்துழையாமை என்பது ஆன்ம சுத்திக்கான ஒரு வழியாகும். அழுகிப்போனவைகளைப் பற்றிக் கொண்டு, சுயராஜ்யம் என்ற வரப்பிரசாதமும் வேண்டும் என்று நாம் கேட்க முடியாது. தீண்டாமை என்பது ஒரு பழக்கமே யொழிய, ஹிந்து மதத்தின் ஒரு அம்சம் அல்ல என்பதே என்னுடைய நம்பிக்கையாகும். செயல் சம்பந்தப்பட்டவரையில், உலகம் காட்டுமிராண்டித்தனமாகவே இருந்தாலும் கூட, சிந்தனைத் துறையில் எவ்வளவோ முன்னேறியிருக்கிறது. அடிப்படையான உண்மைகளை ஆதாரமாகக் கொள்ளாத எதையும் எந்த மதமும் அனுமதிக்க முடியாது. ஒரு நோயைப் புறக்கணித்தால் எப்படி அது உடலை அழித்து விடுமோ அதே மாதிரி, ஒரு தவறைப் பெரிய உண்மையாகக் கொண்டாடுவது மதத்தையே அழித்துவிடும்.

இப்போது நம்மை ஆட்சி புரியும் சர்க்கார், பாவ புண்ணியத்தைப் பொருட்படுத்தாத ஒரு வர்த்தக ஸ்தாபனம். ஹிந்துக்களையும், முஸ்லிம்களையும் பிரித்து அது நம்மை ஆட்சிபுரிந்து வருகிறது. ஹிந்து மதத்திலுள்ள பலவீனங்களையும் அவர்கள் பயன்படுத்திக் கொள்ளக் கூடியவர்களே. 'தாழ்த்தப்பட்ட' வகுப்பினரை மற்ற ஹிந்துக்களுக்கு எதிராகத் தூண்டிவிடுவார்கள்;

*பிராம்மணரல்லாதாரை பிராம்மணர்களுக்கு எதிராகத் தூண்டி விடுவார்கள். குஜராத் ஸெனட் சபையின் தீர்மானம் சங்கடத்திற்கு முடிவு கட்டிவிடவில்லை; உள்ள சங்கடத்தையே அது எடுத்துக் காட்டுகிறது. ஹிந்து மதத்தைச் சேர்ந்த உயர்ந்தவர்களும், தாழ்ந்தவர்களும் தீண்டாமை என்ற பாவத்தை விட்டொழித்தால் தான் சங்கடம் தீரும். சுயராஜ்யத்தை விரும்பும் ஒரு ஹிந்து, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு உழைப்பதைப் போலவே, 'தாழ்த்தப்பட்ட' வகுப்பினரின் நன்மைக்காகவும் தீவிரமாக உழைப்பார். அவர்களை நாம் நம்முடைய சகோதரர்களைப் போல் பாவித்து, நமக்கு என்னென்ன உரிமைகள் வேண்டுமென்று கோருகிறோமோ, அதே உரிமைகளை அவர்களுக்கும் அளிக்க வேண்டும்.*

— *'எங் இந்தியா'* – 24—11—1920

## 3

# ஒரு தேசீயப் பள்ளியின் சிறப்பு அம்சங்கள்

**கேள்வி :** *ஜீவனோபாயத்தைத் தேடுவதற்கு மக்கள் இப்போது மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது; தேசீயப் பள்ளிக்கூடம் ஒன்றில் கல்வி பெற்ற மாணவனுக்கு அதுபோன்ற கஷ்டம் இராதா?*

**பதில் :** *கஷ்டம் இருக்கக் கூடாது. இந்த சாதாரணமான நன்மையைக் கூட அளிக்காத கல்வி, கல்வி ஆகாது. உண்மையான கல்வி என்பது மாணவனுக்கு பொருளாதார, சமூக, ஆன்மிக சுதந்திரங்கள் மூன்றையுமே தேடித்தரவேண்டும். இதில் முதலாவது சுதந்திரம் இல்லாதவனுக்கு மற்ற இரண்டும் கிடைக்காது.*

**கே :** *தேசீயப் பள்ளிக்கூடங்களில் வேலை செய்யும் ஊழியர்கள் எல்லாவிதமான சுயநலப் பற்றுகளையும் துறந்துவிட வேண்டியது கடமையல்லவா ?*

**ப :** *அப்படித்தான் இருக்க வேண்டும். சுயநலத்தைத் துறக்க முடியாதவர்கள், தேசத்தின் ஊழியர்களாக முடியாதென்றே நான் நினைக்கிறேன்.*

**கே :** *தேசீய சர்வகலாசாலையொன்றில் பட்டம் பெற்றவர், தன் வாழ்நாளைத் தேசத்தின் சேவைக்கென்றே அர்ப்பணம் செய்து கொள்ள வேண்டாமா?*

ப: இந்த விதி எப்போதுமே பொருந்தாது. இறுதியில் தேசத்தை சரியான முறையில் உருவாக்கிய பிறகு, பயமில்லாமலும், நாணயமாகவும் வாழ்பவர்கள் எல்லோரையுமே தேசத்தின் ஊழியர்களாக மதிக்கலாம்.

கே: சர்க்கார் பள்ளிக்கூடங்களில் வாய்மொழியாக அறிவு புகட்டலாம்; ஆனல், நல்லொழுக்கத்தை வளர்ப்பதில் கவனம் செலுத்தப்படவில்லையென்று நாங்கள் நினைக்கிரேும். இதனல், தேசீயப் பள்ளிக்கூடங்களில் நல்லொழுக்கத்தை வளர்ப்பதற்கு முதலிடம் கொடுக்க வேண்டுமென்று ஆகவில்லையா?

ப: ஆம், அதுதான் அர்த்தம். அறிவுகூட, நல்லொழுக்கத்தை வளர்ப்பதற்காகவே போதிக்கப்பட வேண்டும். அறிவு என்பது ஒரு கருவி; நல்லொழுக்கத்தை வளர்ப்பதுதான் அதன் குறிக்கோள்.

கே: அப்படியானல், தேசீயப் பள்ளிக்கூடங்களில் உள்ள ஆசிரியர்களுக்கு நல்லொழுக்கம் இருக்க வேண்டுமென்பது இன்றியமையாததாகும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறீர்களா?

ப: நிச்சயமாக.

கே: அப்படியானல், குடிப் பழக்கமுள்ள அல்லது புகைபிடிக்கும் ஒரு ஆசிரியருக்கு தேசீயப் பள்ளிக்கூடத்தில் இடமிருக்க முடியாது, அல்லவா?

ப: குடிப் பழக்கமுள்ள ஒரு ஆசிரியரை விலக்கிவைக்க முடியுமென்ற அளவுக்கு தார்மிகத் துறையில் நாம் முன்னேற்றம் அடைந்திருக்கிரேும் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படும். ஆனல், புகைபிடிக்கும் பழக்கத்தைப்பற்றியும் அப்படிச் சொல்லுவதற்கு எனக்குத் தைரியமில்லை. புகைபிடிப்பவர் மற்ற விஷயங்களில் நல்லொழுக்கம் உள்ளவராக இருக்கலாம் என்று என்னுடைய அனுபவத்தில் நான் அறிந்திருக்கிறேன். நல்லொழுக்கத்தை மதிப்பிடும்போது, உள்ளம், உணர்ச்சி எதுவுமே இல்லாதவர்களைப்போல் நாம் நடந்து கொள்ளக் கூடாது என்பது முக்கியம்.

கே: மாணவர்கள் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறுவதற்குள் உடல் வலுவற்றவர்களாகிவிடுகிருர்கள்; பட்டப் பரீட்சையில் தேறுவதற்குள் உடல் வலிமை, மனேவலிமை இரண்டையுமே அடியோடு இழந்துவிடுகிருர்கள். இது பரிதாபப்படத் தக்கதல்லவா?

ப: என் விருப்பப்படி விட்டால், உடல் நோயுற்ற மாணவர்கள் எந்தவிதமான கல்வியுமே பெறக் கூடாதென்று தடுத்து விடுவேன்.

கே: ஒரு மாணவன் எல்லா அம்சங்களிலுமே இணக்கமாகக் கல்வி பெறவேண்டும் என்பது அவசியமல்லவா?

ப: அப்படித்தான் இருக்க வேண்டும். உடல் சரியாக இருந்தால், மனமும் சரியாகத்தான் இருக்க வேண்டும். மனம் சரியாக இருந்தால் உள்ளமும் சரியாகவே இருக்கவேண்டும்.

கே: 21 வயதுக்கு உட்பட்ட மணமான பையன்களை தேசீயப் பள்ளிக்கூடங்களில் அனுமதிக்கக் கூடாது என்று ஒரு தடை இருக்க வேண்டாமா?

ப: அம்மாதிரி தடை இருக்க வேண்டுமென்றே நினைக்கிறேன். பள்ளிக்கூடத்தில் படிப்பதும், மண வாழ்க்கையும் ஒன்றோடொன்று பொருந்தாத விஷயங்களாகும்.

கே: ஒருவருடைய மனைவி இறந்துவிட்டால், அவர் மறுமணம் செய்து கொள்ளக் கூடாதென்று விதிப்பது நல்லதல்லவா?

ப: கண்டிப்பாக இந்தக் கருத்தை நான் ஆதரிப்பேன்.

கே. தேசீயப் பள்ளிகளில் மாணவர்களை அடிக்கலாமா?

ப: கூடாது, அதற்கு இடமே இருக்க முடியாது.

கே: ஒரு மாணவனுக்கு தேசீயக் கல்வியில் பிடித்தம் ஏற்படவில்லையென்றால், அது யாருடைய தவறு என்று சொல்லுவீர்கள்?

ப: சாதாரணமாக, ஆசிரியர்கள், மாணவர்கள் இருவருமே அதற்குப் பொறுப்பானவர்களாவர். ஆனால், பல சந்தர்ப்பங்களில் தவறு ஆசிரியர்களுடையதாகவே இருக்கும்.

கே: நமது பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் இவ்வளவு மொழிகளைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று வைத்திருப்பது, நியாயமான அளவைவிடச் சற்று அதிகமாக இருக்கிறதென்று நீங்கள் நினைக்கவில்லையா?

ப: ஒரே வர்க்கத்தைச் சேர்ந்த பல மொழிகளைக் கற்றுக்கொள்ளுவதில் சிரமம் ஒன்றுமில்லை. உதாரணமாக ஹிந்துஸ்தானி, குஜராத்தி, மராத்தி, வங்காளி ஆகிய மொழிகளைச் சுலபமாகக் கற்றுக் கொண்டுவிடலாம். ஆனால் ஆங்கிலம், கிரீக், லத்தீன், அரபு ஆகிய மொழிகளைக் கற்றுக் கொள்ளுவது கஷ்டம். ஏனெனில், அவை முற்றிலும் வேறு மொழிகள். அந்த மொழிகளுக்கிடையே பொதுவான அம்சம் எதுவும் கிடையாது.

கே: ஆசிரியரின் அந்தஸ்து ஒரு மந்திரியின் அந்தஸ்தைவிட உயர்ந்ததல்லவா? அப்படியானால், வைஸ்ராய்க்கு மாதம் ஆயிரம் ரூபாய் கிடைத்தால், ஆசிரியருக்கு மாதம் இரண்டாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டாமா?

**ப:** ஒரு வைஸ்ராய் செய்யும் வேலையைக் கணக்குப் போட்டு, மதிப்பிட்டு விட முடியும். ஆனால், ஆசிரியர் செய்யும் வேலையை அப்படி மதிப்பிட்டுவிட முடியாது. ஆகையால் ஆசிரியர் வறுமையை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஆகாரத்திற்கு மட்டும் எவ்வளவு தேவையாய் இருக்குமோ அதை மாத்திரம் வாங்கிக்கொண்டு அவர்கள் வேலை செய்ய வேண்டும் என்றுகூடச் சொல்லுவேன். வைஸ்ராய் தன்னுடைய விலையைச் சொல்லிக் கொள்ளுகிறார். ஆனால், ஆசிரியர் விலை சொன்னால், அவர் உபயோகமற்றவராகி விடுவார்.

**கே:** தன்னிடம் படிக்கும் ஒரு மாணவியை ஆசிரியர் மணந்து கொள்ளலாமா? தன்னுடன் சேர்ந்து படிக்கும் ஒரு மாணவியை, மற்றொரு மாணவன் மணந்து கொள்ளலாமா?

**ப:** இந்த இரண்டுமே முறையற்றவை என்றே நான் கருதுகிறேன். என்னுடைய சொந்தப் பெண்ணை நான் எப்படிக் காப்பாற்றுவேனோ அதே மாதிரி, என்னிடம் படிக்கும் ஒரு பெண்ணையும் காப்பாற்ற வேண்டும். அதே மாதிரி, ஒருவர் தன்னுடன் சேர்ந்து படிக்கும் ஒரு பெண்ணைத் தன்னுடைய சகோதரியாகவே கருத வேண்டும். மாணவ—மாணவிகளிடையே, சகோதர-சகோதரி பாவம்தான் சரியான உறவு முறையாகும். இந்தக் கேள்விக்கு என்னுடைய பதிலை இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன். இது சற்று பெரிய விஷயம். இதற்குச் சரியான பதில் அளிக்க வேண்டுமானால் சற்று விரிவாகவே விவாதிக்க வேண்டியிருக்கும். முதல் கேள்வியின் பதிலைப்பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை. ஆனால், இரண்டாவது கேள்விக்கு பதிலளிப்பது சற்று கஷ்டமாக இருக்குமென்று தோன்றுகிறது. ஏனெனில், இன்று நூற்றுக்கணக்கான பையன்களும், பெண்களும் ஒரே பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கிறார்கள். ஆனால், நான் ஆரம்பித்த எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் அல்லது என் பொறுப்பில் உள்ள பள்ளிக்கூடங்களிலும் இந்த விதி கட்டாயமாகப் பின்பற்றப்பட்டு வந்திருக்கிறது. அதன் பலனும் நன்றாகவே இருந்திருக்கிறது.

'நவ ஜீவன்' – 20—10—1921

# 4

# உத்தியோகமும் கல்வியும்

கல்வியைப்பற்றிய என்னுடைய கருத்துகள் ஒரு மாதிரி புரட்சித்தன்மை வாய்ந்தவையாக இருப்பதுபோல் உங்களுக்குத் தோன்றலாம். கல்வி என்பது, அதாவது கல்வியின் மூலம் பெற்ற அறிவு, பணம் சம்பாதிப்பதற்காகப் பயன் படுத்திக் கொள்ளப்படக்கூடாது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். நெசவு, தச்சு வேலை, தையல் போன்ற ஏதாவது ஒரு தொழிலின் மூலம்தான் ஜீவனம் நடத்துவதற்கு சம்பாதிக்க வேண்டும். டாக்டர்கள், வக்கீல்கள், ஆசிரியர்கள் முதலியவர்கள் தாம் பெற்ற பயிற்சிகளைப் பணம் சம்பாதிப்பதற்காகவே பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். நம்முடைய நாடு வீழ்ச்சியடைந்ததற்கான முக்கிய காரணங்களில் இதுவும் ஒன்று என்று நான் நினைக்கிறேன். ஆனால், இது ஒரு லட்சியம்தான். நடைமுறையில் இந்த லட்சியத்தை நாம் அடைய முடியாமலிருக்கலாம். இருந்தாலும், இதை நாம் எவ்வளவுக்கெவ்வளவு பின்பற்றுகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமக்குத்தான் நன்மை என்பதில் சந்தேகம் இல்லை. வித்தியா பீடம் இதைத் தன்னுடைய லட்சியமாகக் விதித்துக் கொள்ளவில்லை; ஆனால், தேச சேவைதான் கல்வியின் முக்கியமான நோக்கம் என்று விதித்திருக்கிறது. ஒருவருடைய அறிவை தேச சேவைக்கே பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது லட்சியமாக இருக்கும்போது, 'உத்தியோகத்திற்கு' அதில் இடமே இருக்க முடியாது. ஏனெனில், பணம் சம்பாதிப்பதை இரண்டாம் பட்சமாகவே கருத வேண்டும். ஆசிரியர்களாகவோ, மாணவர்களாகவோ வித்தியா பீடத்திற்கு வந்திருப்பவர்கள் இந்த உத்தியோக எண்ணத்தை விட்டுவிட்டார்கள் என்றே நினைக்கிறேன். கல்வியைப் பற்றிய இந்த மனப்பான்மை குஜராத்திலோ, இந்தியாவின் மற்றப் பகுதிகளிலோ இன்னும் ஆழ்ந்து வேரூன்றவில்லை. ஆகையால், இந்த ஸ்தாபனங்களில், இந்த லட்சியத்தில் தளராத நம்பிக்கையுள்ள மாணவர்களின் எண்ணிக்கை ஆரம்பத்தில் குறைவாக இருந்தால், அதைக் கண்டு நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. நூற்றுக்கணக்கான மாணவர்கள் வித்தியாபீடத்தில் கல்வியும் கற்றுக்கொண்டு, அதே சமயத்தில் தேச சேவையில் ஒரு பற்றுதலையும் வளர்த்துக் கொண்டு வருகிறார்கள் என்பதுதான் ஆச்சரியமாக இருக்கிறது.

—' நவ ஜீவன் ' - 1—6—1924

# 5

# சரியான பாதையில் ஒரு சோதனை

[குஜராத் வித்தியாபீடத்தின் அத்யட்சகர் என்ற முறையில், மகா வித்தியாலயத்தின் மாணவர்களும், ஆசிரியர்களும் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி செய்த பிரசங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]

இன்று காலை எனக்கு மூன்று கடிதங்கள் கிடைத்தன. முடிந்தால் வித்தியாபீடத்திற்குத் தீ வைத்துவிடும்படி ஒருவர் எழுதியிருக்கிறார். இதை எழுதியவர் வித்தியாபீடத்தில் முன்பு மாணவராக இருந்தவர். வித்தியாபீடம் இது வரையில் உபயோகமான எதையும் செய்யவில்லையென்று அவர் கூறுகிறார். வித்தியாபீடத்தில் உள்ளவர்கள் மனம் போனவாக்கில் நடந்து கொள்ளும் தன்மை வாய்ந்தவர்களாக இருக்கிறார்களென்றும், அருமையான உணவுகளை உட்கொள்வதில் ஆனந்தம் அடைகிறார்களென்றும் இரண்டாவது கடிதத்தில் புகார் செய்யப்பட்டிருக்கிறது. இங்கே மாணவர்கள் எளிய வாழ்க்கை நடத்துகிறார்களென்றும், இதனால் அவர்கள் நல்லொழுக்கம் பெறுவார்களென்றும் நினைத்துக் கொண்டு தன்னுடைய பிள்ளையை இங்கு அனுப்பியதாக அவர் கூறுகிறார். மூன்றாவது கடிதம் சென்னையிலிருந்து வந்தது. இன்று நான் செய்யும் பிரசங்கத்தில், இந்தியா பூராவுக்குமே பிரயோசனமாக இருக்கக் கூடியதாக ஏதாவது இருக்க வேண்டுமென்று அந்தக் கடிதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

இப்போது நான் என்ன செய்வது? இந்த மூன்றில் நான் எதைச் செய்வது? இதில் எதையுமே நான் செய்யப் போவதில்லை. தோற்றுவிப்பதிலும், வளர்ப்பதிலும் எனக்குப் பெரும் பங்கு இருந்த ஒரு ஸ்தாபனத்திற்கு நான் எப்படி தீ வைக்க முடியும்? ஆங்கில ஓவியர் ஒருவர் ஒரு கதை சொல்லியிருக்கிறார். ஒருசமயம், வேடிக்கைக்காக அவர் தம்முடைய சித்திரங்களில் ஒன்றைக் கடைத் தெருவில் மாட்டி வைத்தார். அந்தச் சித்திரத்தில் ஏதாவது குறைபாடு காணப்பட்டால் அங்கே பென்சிலால் ஒரு குறிபோடும்படியும் அடியில் எழுதி வைத்தார். அடுத்த நாள் அவர் அங்கு போய் பார்த்தப் பொழுது படம் பூராவும் குறிகளாய் இருந்தன. "இந்த ஓவியத்தில் எனக்குத் திருப்தி இருக்கும்வரை அதை நான் கொளுத்த மாட்டேன்" என்று அவர் சொன்னார்.

இன்று காலை இந்த ஓவியருடைய ஞாபகம் எனக்கு வந்தது. அவர் சொன்னதும் உண்மையானதாகவே எனக்குப் பட்டது. குறைபாடுகளை நாம் தேடிக் கொண்டிருந்தால் அதற்கு முடிவே இராது. கடவுள் மனிதர்களுடைய மனத்தில் சில விஷயங்களின் மீது பற்றுதல் ஏற்படும்படி செய்திருக்கிறார். அதற்கிணங்கவே நாம் நடந்து கொண்டிருக்கிறோம். வித்தியா பீடத்தை மிகவும் கடுமையாகத் தாக்கி எழுதியுள்ள நிருபர், வித்தியாபீடத்தி

லுள்ள ஆசிரியர்களிடமும், மாணவர்களிடமும் விசேஷச் சிறப்பு எதுவும் இல்லை என்று கூறியிருக்கிறார். தன்னுடைய கடிதத்தை 'நவஜீவன்' பத்திரிகையில் பிரசுரித்து, அதைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருக்கின்றார். ஆனால், நான் அப்படி செய்யப் போவதில்லை. மாணவர்களிடம் எளிமை காணப்படவில்லை என்ற புகார் சம்பந்தப்பட்டவரையில், அதை விருப்பு வெறுப்பின்றி நீங்கள் பரிசீலனை செய்து, ஆவன செய்ய வேண்டும். சென்னையிலிருந்து வந்த கடிதத்தை நான் கவனித்துக்கொள்கிறேன். இந்தப் பிரசங்கத்தை யாரும் பிரசுரிக்காவிட்டால், நான் ஒரு பெரிய பிரசங்கம் செய்திருக்க வேண்டும் என்று அவர் நினைப்பார்.

பூர்வ பீடிகையாக இவ்வளவையும் சொல்லி விட்டேன். உங்களிடையே இன்று நான் என்ன பேச வேண்டும் என்பதை நன்றாக யோசித்துத்தான் வைத்திருக்கிறேன். நான் யோசிக்கவில்லை என்று சொல்ல மாட்டேன். அப்படிக் கூறுவது உண்மையானதாக இராது. அது எனக்குப் பிடிக்கவில்லை. எராவ்டா சிறைச் சாலையில் அமைதியான சூழ்நிலையில் இரண்டு வருட காலம் யோசிப்பதற்கு எனக்கு அவகாசம் இருந்தது. அந்தக் காலத்தில் என்னுடைய பழைய கருத்துகள் ஊர்ஜிதமாயின. தேசத்தின் முன்பு நான் சமர்ப்பித்த வேலைத் திட்டத்தைப்பற்றி நான் கொஞ்சமும் வருந்தவில்லை. அதே மாதிரி, குஜராத்தில் நாங்கள் ஸ்தாபித்த வித்தியா பீடத்தில் ஆசிரியர்களாகவும், பேராசிரியர்களாகவும் குஜராத்திகளை நியமிக்காமல், ஸிந்திக்காரர்களையும், மகாராஷ்டிரர்களையும் நியமித்ததைப் பற்றியும் நான் வருந்தவில்லை. ஸிந்துவிலும், தக்காணத்திலும் நாம் காணும் நல்லவைகளைச் சேகரிப்பதே நம்முடைய தருமமாகும். கிருபளானி தன்னை ஒரு பீகார்க்காரராக நினைத்துக் கொண்டால், அப்படியே அவரை நாம் எடுத்துக்கொள்வோம். குஜராத்திலிருந்தும் அவர் கற்றுக் கொள்ள வேண்டியது ஏதாவது இருக்கும். பீகாரில் அவர் ஒரு நெசவாளராக இருந்தார். இங்கு அவர் நூற்பதற்கும் பஞ்சுப் பட்டைப் போடுவதற்கும் கற்றுக்கொள்வார். பின்னர், அவர் தன்னை பீகார்க்காரர் என்று மட்டுமல்லாமல் குஜராத்திக்காரர் என்றும் சொல்லிக்கொள்வார். ஆனால் இம்மாதிரி ஏற்படுவதற்கான நிலைமையை உண்டாக்க வேண்டியவர்கள் நாமேதான். அவர் ஸிந்துவிலிருந்து வந்தவர் ; ஆகையால் நம்முடைய விருந்தாளி. நம்முடைய நன்மைக்காக அவரை நாம் இங்கு கொண்டு வந்திருக்கிறோம். ஆகையால் அவர் அளிப்பதை நாம் பெற்றுக் கொள்வோம். அதனால் குஜராத்துக்கு நஷ்டம் ஒன்றுமில்லை ; நல்ல லாபம்தான் கிடைக்கும். என் விருப்பப்படி விட்டால் மகா வித்தியாலத்தில் ஒரு குஜராத்தியைக் கூட வைத்திருக்க மாட்டேன். பூராவும் ஸிந்திக்காரர்களையும், மகாராஷ்டிரர்களையுமே நியமித்து அவர்களை நம்முடைய தாய் மாமன்களாகவும், சிறிய தகப்பனார்களாகவும் ஆகும்படி கேட்டுக்கொள்வேன். உண்மை

யிலேயே அவர்கள் நமது தாய் மாமன்களாகவும் சிறிய தகப்பனர்களாகவும் ஆகிவிட்டால், நமக்கு வேறு என்ன வேண்டும்?

வித்தியாபீடத்தை ஸ்தாபிக்கும்போது நம்முடைய நோக்கம் என்ன? ஒத்துழையாமையைப் பலப்படுத்துவதற்காகவே அதை ஏற்படுத்தினேம். நாம் யாருடன் ஒத்துழையாமை செய்ய விரும்பினேம்? சர்க்கார் கல்லூரிகளில் உள்ள ஆசிரியர்கள், மாணவர்களுடனே? இல்லை; அந்த மாதிரி நினைக்கவே கூடாது. அவர்கள் சம்பந்தப்பட்டுள்ள கல்வி முறையுடன்தான் நம்முடைய ஒத்துழையாமை. இந்த ஒத்துழையாமையின் தனிச் சிறப்பையும், இந்த ஒத்துழையாமையின் மூலம் நாம் என்ன சாதிக்க உத்தேசிக்கிறேம் என்பதையும் பற்றி சிந்தித்துப் பார்த்தபோது எனக்கு இரண்டு கதைகள் ஞாபகம் வந்தன: முதலாவது கதை சிங்கத்தையும் ஆட்டையும் பற்றியது. சிங்கமும், ஆடும் ஒரே இடத்தில் சேர்த்து வைக்கப்பட்டிருந்தன; சிங்கம் கூட்டுக்குள் இருந்தது. ஆடு அதற்கு வெளியே இருந்தது. ஆடு தின்பதற்கு அருமையான தழைகளும், மற்ற ஆகார வகைகளும் இருந்தன. ஆனல், அது நாளுக்கு நாள் மெலிந்து கொண்டே வந்தது. பக்கத்தில் சிங்கம் இருப்பதால்தான் ஆடு வளரவில்லை என்று என்னைப் போன்ற ஒரு புத்திசாலி கண்டு பிடித்தான். சிங்கத்தின் அருகாமையிலிருந்து அப்புறப்படுத்தப்பட்ட உடன் அந்த ஆடு ஆனந்தக் கூத்தாடியது. அதற்கு மிகவும் மட்டமான ஆகார வகைகள் தான் கொடுக்கப்பட்டன. அப்படி இருந்தும் அது சில நாட்களுக்குள்ளாகவே நன்ருகக் கொழுத்துவிட்டது.

மற்ெருரு கதை, ஸர் நாராயண் சந்தவர்க்கார் எழுதியது. சிறையில் இருந்த போது இதை நான் படித்தேன். அப்போது புனவில் இருந்த ஸர் நாராயண் உலாவப் போய்க்கொண்டிருந்தார். ஒரு கிழவி ஒரு ஆட்டுக் குட்டியை வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போவதைக் கண்டார். இந்த ஆட்டுக்குட்டி ஒரு பெரிய பணக்காரருக்குச் சொந்தமானது. ஆகையால் அதற்கு வேண்டிய எல்லாத் தீனிகளும் கிடைத்துக் கொண்டிருந்தன. அப்படியும் அது சந்தோஷமாய் இருக்கவில்லை. அந்தக் கிழவி அதை வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போனதால் அது சந்தோஷத்தில் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தது. அவளுக்கு முன்பாகவே கூட துள்ளித் துள்ளி ஓடிக் கொண்டிருந்தது. ஏன்? அடிமைத்தனத்திலிருந்து சுதந்திரத்திற்குப் போவதால் அதற்கு அவ்வளவு சந்தோஷம். உயிருள்ள பிராணி ஒன்று சுதந்திரமான சூழ்நிலையில் தான் வளர முடியும், அடிமைத்தனத்தில் வளர முடியாது. இதே உண்மையைத்தான் துளசிதாசர் தனக்கே உரித்தான தனி பாணியில், ''அடிமைத்தனத்துக்கு சந்தோஷம் இருக்க முடியும் என்று கனவில் கூட காண முடியாது" என்று கூறி இருக்கிருர்.

சர்க்காரால் அளிக்கப்படும் கல்வியில், மிகச் சிறந்த வசதிகள் இருக்கலாம்; அழகான கட்டிடங்களும் திறமைமிக்க ஆசிரியர்களும் இருக்கலாம். ஆனல், தமது நெற்றியில் அடிமைத்தனத்

தைக் காட்டும் கருப்புக் குறி எப்போதும் இருந்து கொண்டு தான் இருக்கும். குமாஸ்தா போன்ற ஒரு சில உத்தியோகத் திற்கு மேல் அதிகமாக அதிலிருந்து நாம் எதையும் எதிர்பார்க்க முடியாது. இன்றைக்கெல்லாம் இருந்தால் ஒருவர் ஒரு வக்கீலாக லாம். ஆனால், பட்டதாரிகளில் பெரும்பாலோர் மாதம் முப்பது ரூபாய் சம்பளம் கிடைக்கும் வேலையையே தேடுவார்கள். அத்து டன் அவர்கள் திருப்தி அடையவும் வேண்டியிருக்கும். ஒரு சிலர் குஜராத் கல்லூரியில் பேராசிரியர்கள் ஆகலாம். இங்கு, இந்த வித்தியாபீடத்தில் வசதிகள் ஒன்றும் இல்லை. பல்வேறு பாடங் களைச் சொல்லிக் கொடுப்பதற்குக் கூட போதிய ஏற்பாடுகள் இல்லாமல் இருக்கலாம்; உங்களுக்கு என்ன சொல்லிக் கொடுக் கப்படுகிறதோ அத்துடன் திருப்தி அடைய வேண்டியிருக்கலாம். கட்டிடம் சம்பந்தப்பட்டவரையில், உங்கள் தலைக்கு மேல் கூரை கூட இல்லாமல் இருக்கக்கூடும். வீட்டின் சொந்தக்காரர் தனக்கு இஷ்டமான போது எந்தச் சமயத்திலும் நம்மை வெளியேற்றி விடக்கூடும். அன்றாடத் தேவைகளுக்கான பணத்தை வலப் பாய் பிச்சை வாங்க வேண்டியிருக்கிறது. இந்த வித்தியாபீடம் எவ்வளவு காலம் நிலைத்து நிற்கும் என்றுகூடக் கேட்கலாம். அது நிலைத்து நிற்கும் என்பது நிச்சயமில்லை. இன்று அது இருக்கிறது. நாளைக்கு அது இல்லாமல் இருக்கலாம். குஜராத் கல்லூரியின் மீது சூரியன் அஸ்தமிப்பதே இல்லை; அதன் நிலை உறுதியாக இருக்கிறது. ஆனால் உங்களுடைய வித்தியாபீடத்தின் மீது சூரியன் அன்றாடம் உதித்து மறைகிறான். இதுதான் உலகத்தின் இயற்கையான சட்டம். இந்தக் கஷ்டங்களை எல்லாம் தாண்டித் தான் நம்முடைய லட்சியத்தை அடைய வேண்டும்.

நம்முடைய லட்சியத்தை நாம் உயர்வானதாகவே ஏற்றுக் கொள்ள வேண்டும். அந்த உயர்ந்த லட்சியத்திற்கு ஏற்ப நாம் நடந்து கொள்ளத் தவறி விடுகிறோம் என்பது உண்மையே. பல சமயங்களில் நாம் தவறுகள் செய்கிறோம்; மிகப் பெரிய தவறு களைக் கூடச் செய்கிறோம். ஆனால், அவை நல்ல காரியங்கள் என்று நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதில்லை.

விடுதலைக்கு இட்டுச் செல்வதே ஞானம் என்பதுதான் நம் முடைய லட்சியம். "நமது தேவைகளுக்கு ஏற்ற விதத்தில் ஒரு குறுகிய அர்த்தத்தைக் கொடுத்து, இந்த மகத்தான உண்மையை நாம் துஷ்பிரயோகம் செய்யவில்லையா?" என்று கிஷோர்லால் பாய் என்னிடம் கேட்டார். அவர் கேட்டதைப்பற்றி நான் ஆழ்ந்து சிந்திக்கத்தான் வேண்டும். ஆனால், நாம் செய்து கொண்டிருக்கும் காரியங்களில், இம்மாதிரி துஷ்பிரயோகம் எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நாட்டின் விடுதலை என்ற அடிப்படை யான விடுதலையைப் பெறுபவன்தான் அந்த உயர்ந்த விடுதலையை யும் பெற முடியும். நாட்டின் விடுதலையைப் பெற முடியவில்லை என்றால், அந்த உயர்ந்த விடுதலையைப் பெற முடியும் என்று எப்படி நம்புவது? ஆகையால், விடுதலை என்ற வார்த்தைக்கு உள்ள இரு அர்த்தங்களுமே நம்முடைய லட்சியமாகும். அதாவது

தாய் நாட்டின் விடுதலை என்ற வழக்கமான அர்த்தம்; உலக பந்தத்திலிருந்து விடுதலை என்ற உண்மையான அர்த்தம்.

இந்த வித்தியாபீடத்தை ஏன் ஏற்படுத்தினேன் என்று இன்று எனக்கு வருத்தமோ, பச்சாத்தாபமோ இல்லை. கல்லூரிப் பகுதிகளில் உள்ள எல்லாப் பையன்களுமே இங்கிருந்து ஓடிப் போய், சர்க்கார் கல்லூரிகளில் சேர்ந்துவிட்டால்கூட நான் சிரித்துக் கொண்டுதான் இருப்பேன். நான் புத்திசாலி என்றும், அவர்கள் முட்டாள்தனமாக நடந்துக் கொண்டார்கள் என்றுமே சொல்வேன். தேசத்தை தாழ்நிலையிலிருந்து மீட்பதற்கு வேறு வழியே இல்லை. நாம் எல்லோருமே ஒரு பெரிய மாயையின் பிடிப்பில் சிக்கிக் கொண்டிருக்கிறோம். அதனால்தான் இந்த சாதாரண உண்மை நமக்குப் புலப்படவில்லை. ஆனால் என்னைப் பொறுத்தவரையில், பகிஷ்காரத்தைத் தவிர வேறு வழியே கிடையாது என்று சாகும் வரையில் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டேதான் இருப்பேன். முழு ஒத்துழைப்புக்கான கட்டம் வந்துவிட்டது என்று எனக்குத் தோன்றும் போதுதான் பகிஷ்காரத்தை நிறுத்தச் சொல்வேன். அது வரையில், தேசம் பூராவுமே என்னை ஒண்டியாக விட்டுவிட்டால்கூட பகிஷ்காரத்தை நான் விடாமல் பிடித்துக் கொண்டுதான் இருப்பேன். எனக்கு அனுபவம் இருக்கிறது. பல வருடங்களாகச் சிந்தனை செய்த பிறகுதான் இந்த முடிவுக்கு நான் வந்தேன். அதனால்தான் நான் இப்படிச் சொல்லுகிறேன். நீண்ட காலம் தவமிருந்து, சிந்தனை செய்தபிறகு நான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன் என்றும் சொல்லுவேன். இப்போது நான் சொல்லுவதைத்தவிர வேறு எதையும் நான் சொல்ல முடியாது. $20 \times 5$ என்பதன் விடை 100 என்பதை அறிந்த ஒரு மனிதன், $20 \times 4$ அல்லது $20 \times 6$-இன் விடையும் 100 தான் என்று எப்படிச் சொல்ல முடியும்? எராவ்டா சிறையில் நான் செலவிட்ட காலம் இக்கருத்துகளை மேலும் உறுதிப்படுத்திவிட்டது.

படிப்பை முடித்த பிறகு நீங்கள் என்ன செய்வீர்கள் என்ற கேள்வி இருக்கிறது. "உத்தியோகத்தைப் பற்றி" நான் எதுவும் சொல்லுவதற்கு கிருபளானி விட்டு வைக்கவில்லை. நாம் பயத்தை விட்டொழிக்க விரும்புகிறோம் என்பது முக்கியமான விஷயம். படிப்பை முடித்த பிறகு, நீங்கள் விரும்பினால் உங்கள் அறிவை பணம் சம்பாதிப்பதற்கு பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், நீங்கள் பயத்தை விட்டொழிக்க வேண்டும். ஒரு ஆங்கில இளைஞன் என்ன செய்கிறான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆங்கிலேயர்களை நான் கேவலமாக நினைக்கவில்லை. ஆங்கிலேயர்களை நான் நேசிக்கிறேன் என்பது பலருக்குத் தெரியாது. அவசியமான போது ஆங்கிலேயர்களைப் பின்பற்றுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. என்னுடைய தன்மையை நான் விட்டு விடக் கூடாது என்பதுதான் முக்கியம். அப்படி விடாமல் இருப்பதனால், எங்கிருந்து வேண்டுமானாலும் வர்ணங்களைக் கொண்டு வந்து என் விருப்பப்படி சித்திரம் தீட்டலாம். எப்போதாவது

நாங்கள் உங்களை விட்டுப்போக வேண்டியிருந்தால், நாங்கள் என்ன செய்வோம் என்று என்னுடைய ஆங்கில நண்பர்கள் என்னைக் கேட்டதே இல்லை. தம்முடைய வேலையை விட்டு விட்டு அவர்கள் என்னிடம் வந்தார்கள். சிலர் விஷயத்தில், அவர்களுடைய தேவைகளை நான் தவருக மதிப்பிட்டேன். ஆனால், அதைப்பற்றி அவர்கள் என்னிடம் புகார் செய்வதே இல்லை. ஏனெனில், நான் நல்லெண்ணத்துடன்தான் செய்தேன் என்று அவர்களுக்குத் தெரியும். மேலும், தம்முடைய ஜீவனோபாயத்திற்கு தாம் காந்தியை நம்பியிருக்கவில்லை என்றும் அவர்களுக்குத் தெரியும். அவர்களுடைய வாழ்வை கவனித்துக் கொள்பவர் கடவுள். கடவுள்தான் நம்மை ஈன்றெடுத்தார்; நாம் வாழ்வதற்கு வேண்டிய உணவையும் அவர் அளிப்பார். வேறு விதமாக இருக்க முடியாது. முஸ்லிம்களும், இந்துக்களும் இதை அறிவர். ஆனால், இன்று முஸ்லிம்கள் தமது குரானையும், இந்துக்கள் தமது பகவத் கீதையையும் மறந்துவிட்டு, தவருன லாப நஷ்டக் கணக்கை எடுத்துக் கொண்டிருக்கிருர்கள். 'நாம் பட்டினி கிடப்போமோ' என்று கவலைப்படுகிருர்கள். அதற்காக கவலைப்படாதவர்கள் பட்டினியால் செத்துவிடுவதில்லை என்பதை அவர்கள் மறந்துவிடுகிருர்கள். எதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டும்? பள்ளிக்கூடத்தில் நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டியது இதுதான்: உங்களுடைய லட்சியத்தில் தளராத உறுதியும், அதன் விளைவுகளைப்பற்றிக் கவலையில்லாமல் இருப்பதும்தான். பிரிட்டனில் உள்ள பள்ளிச் சிறுவர்களும், தம்முடைய ஜீவனோபாயத்தைப் பற்றிக் கவலைப்படுவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. படிப்பை முடித்துக் கொண்டு, பின்னர் பணம் சம்பாதிப்பதற்கு தம்முடைய சாமர்த்தியத்தை உபயோகித்துக் கொள்ளும்படி ஆசிரியர்கள் அவர்களிடம் சொல்லுகிருர்கள். அதனுல்தான் அந்தச் சிறிய தீவில் உள்ள மக்கள் உலகத்தின் மறு கோடிக்குக் கூடப் போவதை நாம் பார்க்கிருேம். என்னுடைய ஆங்கில நண்பர்களில் பலர் உலகத்தின் பல்வேறு பகுதிகளில் சுற்றி அலைந்து கொண்டிருக்கிருர்கள். "ஆனுல், அவர்களுக்கு பிரிட்டிஷ் கொடியின் பாதுகாப்பு இருக்கிறதே" என்று சொல்லலாம். இந்தக் கொடி அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்தாலும் சோறு போடுவதில்லை. அவர்கள் கொல்லப்பட்டால், பிரிட்டிஷ் கொடி செயல் பட ஆரம்பிக்கும். அவர்களுடைய பீரங்கிகள் முழங்கி கொலைகாரர்களைத் தண்டிக்கும். இம்மாதிரியான பாதுகாப்பு நமக்கு வேண்டாம். ஆனுல், இப்போது நான் உங்களுக்கு உணர்த்த விரும்புவது அது அல்ல. ஜீவனோபாயத்திற்கு என்ன செய்வது என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கக் கூடாது என்பதை மட்டுமே இப்போது நான் உங்களுக்கு வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அவசியம் ஏற்பட்டால் ஒரு தோட்டியாகவோ, நெசவாளியாகவோ வேலை செய்வேன்; ஆனுல், மானக்கேடான எதையும் செய்ய மாட்டேன், யாரிடமும் பிச்சை கேட்கமாட்டேன் என்று நீங்கள் உறுதி கொள்ள வேண்டும். உங்களுடைய பெற்ருேர்கள், சகோதரர்கள், சகோதரிகளுக்கு என்ன நேர்ந்துவிடுமோ என்று ஏன்

கவலைப்பட வேண்டும்? இருட்டை நீக்குவதற்கு ஒரே ஒரு விளக்குப் போதும். அதே மாதிரி உங்கள் குடும்பத்தில் நீங்கள் நல்ல பிள்ளையாக இருந்தால் அதுவே போதும். உங்களுடைய பெற்றோர்களையும், சகோதரர்களையும், சகோதரிகளையும் நீங்களே காப்பாற்ற வேண்டியிருந்தாலும் அதற்காகக் கவலைப்படக் கூடாது. 'உனக்கு உணவு போட்டு விட்டுத்தான் சாப்பிடுவேன்; ஆனால், சாதாரண ஆகாரம்தான் கிடைக்குமே ஒழிய பட்சண வகைகள் எதுவும் கிடைக்காது' என்று உங்கள் சகோதரியிடம் சொல்லுங்கள். அவளுக்காக நீங்கள் கஷ்டப்பட்டு உழைக்கும் போது அவள் சும்மா உட்கார்ந்திராமல் தானும் வேலை செய்யும் படி பார்த்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு அந்தத் துணிச்சல் இருந்தால் எல்லாம் சரியாக இருக்கும்.

ஆசிரியர்களாகிய நம்மைப்பற்றியும் சில வார்த்தைகள். நாம் என்ன செய்ய வேண்டும்? நமக்காக நாம் என்ன கேட்பது? நமக் காக நாம் ஒன்றும் கேட்கவில்லை. ஒரு விஷயத்தை ஒளிவு மறைவு இல்லாமல் உங்களிடம் சொல்ல விரும்புகிறேன். எப்போதாவது ஆசிரியர்களிடம் நீங்கள் நம்பிக்கை இழந்து விட்டால், பணம் பண்ணுவதற்காகவே அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள் என்று நீங்கள் நினைத்தால், தியாகம் செய்யும் தேசபக்தர்கள் என்று வேஷம் போடுவதற்காகவோ அல்லது புகழுக்காகவோ அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள் என்று நீங்கள் நினைத்தால், நீங்கள் தாராளமாக அவர்களை விட்டு விட்டுப் போய்விடலாம். அன் றொரு நாள் ஒரு கனவான் என்னிடம் ஒரு விஷயம் சொன்னார். அதாவது, எனக்கு பணத்தில் ஆசை இல்லாமல் இருக்கலாமாம். ஆனால், என்னுடைய நடத்தையில் பெரும் பாசாங்கு இருப்பதா கவும், மகாத்மா ஆகவேண்டும் என்ற ஆவல்தான் இதற்குக் காரணம் என்றும் அவர் கூறினார். ஒரு விதத்தில் அவர் சொன்ன தும் சரிதான். ஆகையால், ஆசிரியர்கள் பெரிய மனிதர்களைப் போல் வேஷம் போட விரும்புகிறார்கள் என்று நீங்கள் நினைத் தால், நீங்கள் அவர்களை விட்டுப் போய் அவர்களை அம்பலப் படுத்திக் கண்டிக்கலாம். ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் இடையே ஒப்பந்தம் ஒன்றும் இல்லை. ஆனால், ஆசிரியர்களிடம் நல்லொழுக்கம் இருப்பதாக நீங்கள் கண்டால், பூரா சுமையையும் அவர்கள் மீதே போட்டு விடக் கூடாது. பண்டங்களை வெகுமதி யாகக் கொடுப்பது போல் அறிவை வெகுமதியாகக் கொடுப்ப தில்லை; அது சாத்தியமுமில்லை. உங்களிடம் உறங்கிக் கொண் டிருக்கும் சக்திகளை வெளிக் கொணர்வதே ஆசிரியரின் வேலை ஆகும். ஆனால், அதை ஒளி பெறச் செய்யவோ, வளம் பெறச் செய்யவோ உங்களால்தான் முடியும். உள்ளே இருப்பதை வெளியே கொண்டு வருவது என்பதுதான் கல்வி என்ற ஆங்கில வார்த்தையின் அர்த்தமாகும். ஆகையால், நீங்கள் இங்கு என்ன கற்றுக்கொள்ளப் போகிறீர்கள் என்பதைப்பற்றிக் கவலைப் படவே கூடாது. ஆசிரியர்களிடம் நம்பிக்கை வைத்து அவர்கள் கற்றுக் கொடுப்பதைக் கற்றுக் கொள்ளுங்கள்.

உங்களுடைய ஒழுக்கங்களுக்குப் பாதுகாப்பு உங்களிடமே தான் இருக்கிறது. உங்களுடைய நடத்தைக்கு ஆசிரியர்கள் காவலர்களாக இருக்க முடியாது. வேடிக்கையாகப் பொழுது போக்குவதற்காக நாம் இங்கு வரவில்லை என்பதை நீங்கள் எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். உங்களுடைய படிப்பிலும், உங்களுடைய உடலைப் பலப்படுத்திக் கொள்வதிலும் உங்களுடைய துணிச்சலை வளர்த்துக் கொள்வதிலும் தான் உங்களுடைய கைகளையும், கால்களையும் உபயோகிப்பதற்குக் கற்றுக்கொள்ள வேண்டும். உடலுழைப்பிற்கு அஞ்சும் மாணவர்கள் முதலில் தம் உடலை பலவீனப்படுத்திக் கொண்டு விடுகிறார்கள்; பின்னர், உடற்பயிற்சி அரங்கிற்குப் போகலாமா என்று யோசிக்கிறார்கள். ஆனால், பலம் பெறுவதற்கு வழி அது அல்ல. உங்களுடைய இதயத்தையும், உறுதியையும் பலப்படுத்திக் கொள்ள வேண்டும்; பின்னர் உடலைப் பலப்படுத்திக் கொள்வது சுலபமாக இருக்கும். உங்களிடமே என் பிரார்த்தனையைச் சொல்லிக் கொள்கிறேன். இதைக் கடவுளிடம் சொல்ல வேண்டியதில்லை. ஏனெனில், நான் எப்போதுமே அவர் முன்னிலையில்தான் வாழ்கிறேன், காரியங்களைச் செய்கிறேன். அதனால்தான் என்னுடைய பிரார்த்தனையை உங்களிடம் சொல்லிக் கொள்கிறேன். உங்களுக்கும் உங்களுடைய ஆசிரியர்களுக்கும் புகழ் ஏற்படக்கூடிய விதத்தில் நீங்கள் நடந்து கொள்ள வேண்டும். நாடு பூராவிற்குமே நம்முடைய வித்தியா பீடம் ஒரு உதாரணமும், மாதிரியும் ஆகும். கல்வித் துறையில் ஒத்துழையாமை குஜராத்தில் வெற்றி பெற்று விட்டது. இதனால் நம் வேலைத் திட்டத்தின் இந்த அம்சத்திற்கு பெயரும், புகழும் கிடைத்திருக்கின்றன. அதனால் இதைப் பற்றி நாம் இப்போது பேசக் கூடாது; அதை மதிப்பிடுவதற்குக் காலம் இன்னும் வரவில்லை. எதிர்காலத்தில்தான் இதை ஓரளவு நிச்சயத்துடன் செய்ய முடியும்.

நானும் ஆசிரியர்களுள் ஒருவன். ஆகையால் ஆசிரியர்களை நான் எதுவும் கேட்டுக் கொள்வது சரியாக இராது. இதை மட்டும் உங்களிடம் சொல்ல விரும்புகிறேன். அதாவது கல்வித் துறையில் ஒத்துழையாமை வெற்றி பெறுவதோ, தோல்வி அடைவதோ உங்களிடம்தான் இருக்கிறது. இங்கிருந்து நீங்கள் வீட்டிற்குப் போகும் போது இதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

'நவஜீவன்' - 9—6—1924

# 6

# எங்கள் வேலைபற்றிய விவரம்

*(1—8—1924-இல் நடைபெற்ற தேசீயக் கல்வி மகாநாட்டில் குஜராத்தி மொழியில் காந்திஜி செய்த தலைமைப் பிரசங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :)*

*நாட்டில் இப்போது ஏக்கமும், ஏமாற்றமும் நிறைந்த ஒரு சூழ்நிலையைக் காண்கிறோம். இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. ஆனால், இதற்கு ஒரு அளவுக்கு நானும் பொறுப் பேற்றுக் கொள்ள வேண்டுமென்று நினைக்கிறேன். நான் ஒரு காலவரையைக் குறிப்பிட்டு, ஒரு வருட காலத்திற்குள் நாம் சுதந்திரம் பெற வேண்டுமென்று கூறினேன். இப்போது ஒரு வருடத்திற்கு மேலாகிவிட்டது. ஆனால், சுயராஜ்யம் இன்னும் தொலைவில் இருப்பதாகவே தோன்றுகிறது. 1921-இல் இருந்ததைவிட அது இன்னும் தொலைவில் இருப்பதாகக் கூடச் சிலருக்குத் தோன்றலாம். ஆனால், நான் அப்படி நினைக்கவில்லை. சுயராஜ்யம் நிச்சயமாக நெருங்கி வந்திருக்கிறதென்றே நான் நினைக்கிறேன். ஆனால், அப்படி நினைப்பதற்கு எனக்கு இருப்பதைப் போன்ற தளராத நம்பிக்கை இருக்க வேண்டும். அனுபவத்தின் மூலம்தான் அந்த நம்பிக்கை ஏற்படும். நாம் ஒரு காலவரையறையை விதித்து, அதற்கேற்ற அவசரத்துடன் வேலை செய்யாதிருந்தால், இப்போது சாதித்துள்ள அளவுக்குக் கூடச் சாதித்திருக்க முடியாது.*

*நான் உங்கள் முன்பு சமர்ப்பிக்கப்போகும் புள்ளி விவரம் உங்களுக்குத் தெரியாததல்ல. நம்மை உற்சாகப்படுத்திவைத்திருப்பதற்கு அவை போதும். ஒத்துழையாமையின் பல்வேறு துறைகளிலும் குஜராத் பெற்றுள்ள சாதனை வெட்கப்படக்கூடியதல்ல ; குஜராத் மட்டுமின்றி, இந்தியாவே கூட அதைப்பற்றி வெட்கப்படக் காரணமில்லை. நம்முடைய வேலையைக் கணக்குப் போட்டுப் பார்த்தால், நாம் செய்திருக்கக் கூடிய அளவுக்குச் செய்யவில்லை என்பது உண்மைதான். ஆனால், ஒவ்வொருவரும் தன்னாலியன்றவரை முயற்சி செய்திருந்தால், வெட்கப்படுவதற்குக் காரணமே இருக்க முடியாது. நான் ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்பதை விளக்குகிறேன்.*

*போதிய அளவு வேலை செய்யவில்லை என்று சில சமயங்களில் என்னுடைய சகாக்களை நான் கிண்டல் செய்திருக்கிறேன். ஏனெனில், அது என்னுடைய கடமையாகும். சேவை செய்ய விரும்பும் ஒருவர், சந்தர்ப்ப விசேஷங்களினால் அவர்மீது தலைமைப் பதவியும் சுமத்தப்பட்டிருந்தால், தன்னுடைய சக ஊழியர்களிடமிருந்து அவர் உயர்ந்தபட்ச சேவையைக் கோரவேண்டும். புகார் செய்வதும், தன்னுடைய அதிருப்தியைத் தெரிவித்துக் கொள்ளு*

வதும் அவருடைய கடமையாகிறது. ஆனால், இதை விருப்பு வெறுப்பின்றிப் பரிசீலனை செய்து பார்க்கும்போது, எல்லோருமே நாணயமாக வேலை செய்திருக்கிறார்களென்றே நான் நம்புகிறேன்.

நம்பிக்கையளிக்கும் அம்சத்தைக் காட்டுவதற்காகவே இதைச் சொன்னேன். இதற்கு ஆதரவாகக் கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்களை நீங்கள் அறிவீர்கள். ஆசிரியர்களால் சேகரிக்கப்பட்ட அந்தப் புள்ளி விவரங்களை வித்தியாபீடத்தின் பிரதம நிர்வாகி கொடுத்திருக்கிறார். அந்த விவரங்களைப்பற்றி நான் உற்சாகமடைய விரும்புகிறேன். உங்களுக்கும் உற்சாக மூட்ட விரும்புகிறேன். மூன்று முனிஸிபாலிடிகளில் உள்ள பள்ளிக்கூடங்களை விலக்கிவிட்டுப் பார்த்தால், நம்முடைய தேசீயப் பள்ளிக்கூடங்களில் மொத்தம் பத்தாயிரம் மாணவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்காக நாம் மூன்றரை லட்ச ரூபாய் செலவிட்டிருக்கிறோம். இந்த மாணவர்களில் 500 பேர் பெண்கள்; இது குறைந்த எண்ணிக்கைதான். ஆமதாபாத், நாதியாத், சூரத் முனிபாலிடிகள் ஒத்துழையாமைக் கொள்கையை ஏற்றுக் கொண்டு, தம்முடைய பள்ளிக்கூடங்களை தேசீயப் பள்ளிகளாக மாற்றிவிட்டன. இந்தப் பள்ளிக்கூடங்களில் உள்ள மொத்த மாணவர்கள் 20,000. இவர்களில் 10,000 பேர் ஆமதாபாத்தி லேயே இருக்கிறார்கள். நம்மிடம் 800 ஆசிரியர்கள் இருக்கிறார்கள். மேலே குறிப்பிட்ட மூன்றரை லட்ச ரூபாய் செலவில், இந்த ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளங்களும், படிகளும் சேர்ந்திருக்கின்றன. நாம் இரண்டு கல்லூரிகளை நடத்துகிறோம். புராதன சரித்திரம் படிப்பதற்கான ஒரு பிரிவும் இருக்கிறது. இம்மாதிரி வேலை இந்தியாவில் வேறு எங்கும் செய்யப்படவில்லையென்று அறிகிறேன். இவ்வாறாக, நமக்கு பலமளிப்பதும், நம்மிடம் பலம் பெறுபவைகளுமான ஸ்தாபனங்கள் மூன்று இருக்கின்றன :

1. தட்சிணாமூர்த்தி வித்தியார்த்தி பவனம்.
2. புரோச் சிக்ஷா மண்டலம்.
3. சரோதர் சிக்ஷா மண்டலம்.

இந்த மூன்று ஸ்தாபனங்களை அமைத்து நிர்வகிப்பவர்கள், ஒத்துழையாமைக் கொள்கையை ஏற்றுக்கொண்டதன் மூலம், ஒத்துழையாமை இயக்கத்தின் புகழைத் தாங்கள் இன்னும் அதிகப்படுத்தியிருப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் ; அதே மாதிரி, அவர்கள் ஒத்துழையாமை இயக்கத்திலிருந்து ஊக்கமும் பெற்றிருக்கிறார்கள்.

இதைத் தவிர, நாம் பல பாட புத்தகங்களையும் தயாரித்திருக்கிறோம். இவற்றில் பலவற்றை நான் சிறையில் இருக்கும் போது பார்த்திருக்கிறேன். தட்சிணாமூர்த்தி, சரோதர் மண்டலங்களிலுள்ள புத்தகங்களையும் பார்த்திருக்கிறேன்.

அவற்றை நான் படித்திருப்பதாகச் சொல்லவில்லை. ஆனால், நான் ஏராளமான புத்தகங்களைப் படித்திருக்கிறேன். இதனால், ஒரு குறிப்பிட்ட புத்தகத்தை மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலே, அதில் என்ன இருக்கிறது, அது எப்படி தயாரிக்கப் பட்டிருக்கிறது, அதை எழுதியவரின் நோக்கம் என்ன என்பவைகளையெல்லாம் கண்டுபிடிக்கும் சக்தி எனக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்தப் புத்தகங்களைத் தயாரித்தவர்களும், இவற்றை வெளியிட்ட ஸ்தாபனங்களும் நம்முடைய மனப்பூர்வமான நன்றிக்கு உரியவர்களாவர். இவற்றைத் தவிர, வித்தியாபீடமும் பல புத்தகங்களைத் தயாரித்திருக்கிறது. இது பெரிய சாதனையே ஆகும். சென்ற ஐம்பது வருடங்களில் இன்றைய குஜராத்தின் சரித்திரத்தில் இதற்கு ஈடு இணையே கிடையாது. அப்போது ஏதாவது கொஞ்சம் செய்யப்பட்டிருந்தால், அது சர்க்கார் செய்ததாகும். அந்தப் பெருமையை நாம் எடுத்துக் கொள்ள முடியாது. அதில் நம்மவர்கள் இருந்தார்கள் என்பது உண்மைதான்; ஆனால், அதற்கான திட்டங்களையும், ஏற்பாடுகளையும் செய்தது சர்க்கார்தான். சர்க்காருக்கு பலமளிப்பதற்காகவே அந்தத் திட்டம் வகுக்கப் பட்டது; தம்முடைய நலன்களுக்கு உதவியாய் இருக்க வேண்டும் என்பதே அதன் நோக்கமாகும்.

மேலும், இந்தத் திட்டத்தை நாம் ஆரம்பித்த முதல் வருடத்திலேயே, அவர்களை விட அதிகப் புத்தகங்களைத் தயாரித்திருக்கிறோம். ஆனால், நம்முடைய வேலையை நாம் போட்டி மனப்பான்மையுடன் செய்யவில்லை.

குஜராத் ஒரு பின்தங்கிய மாகாணமாக இருந்தது; இன்றும் அது அப்படித்தான் இருக்கிறது. குஜராத்திகள் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருந்தார்கள். கடை வைத்து வியாபாரம் செய்யத்தான் அவர்களுக்குத் தெரியும். முடிந்த வரையில் பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதே அவர்களுடைய பேராவல். மக்களுக்குப் பிரயோசனமான நல்ல புத்தகங்களைத் தயாரிக்க வேண்டிய அவசியம் உணரப்படவேயில்லை. முதலில் இத்துறையில் வேலை செய்ய ஆரம்பித்தது ஸஸ்தன் சாஹித்திய வளர்ச்சிக் காரியாலயம். அதாவது, இந்த ஸ்தாபனத்தின் ஜீவ நாடியாக இருந்த ஸ்வாமி அகண்டானந்த்தான் இந்த வேலையை ஆரம்பித்தார். மலிவான விலையில் குஜராத்தில் நல்ல புத்தகங்களைத் தயாரித்து, அவற்றை குஜராத்தியில் விற்பனை செய்வதற்கு அவர் உண்மையாகவே அரும்பாடுபட்டார். ஆனால், அந்த ஸ்தாபனத்தின் சாதனை மறக்க முடியாததுதான் என்றாலும், ஒத்துழையாமை இயக்கத்தின் சாதனை அதையும் மீறிவிட்டது.

பாட புத்தகங்களைப்பற்றி நான் நினைத்ததற்கு அதிகமாகப் பேசிவிட்டேன். இப்போது ஒரு எச்சரிக்கையும் கொடுக்க விரும்புகிறேன். இந்தப் புத்தகங்களெல்லாம் குஜராத்தியில் தயாரிக்கப் படுவது நல்லதுதான்; ஆனால், இது போதுமானதென்று எனக்குப் படவில்லை. நான் எரவ்டா சிறையிலிருந்த போது, இந்தப்

புத்தகங்கள் ஒன்றன் பின் ஒன்ருக எனக்கு வந்து கொண்டே இருந்தன. அதைப் பார்த்தபோது எனக்கு பயமாகிவிட்டது. அதனல் நான் உஷாராகிவிட்டேன். அந்தப் புத்தகங்களெல்லாம் நன்ருக இருந்தன; நன்ருகவும் அச்சிடப்பட்டிருந்தன. அந்தப் புத்தகங்கள் ஒருவரை மயக்கக் கூடிய விதத்தில் அவ்வளவு வசீகரமாயிருந்தன. குஜராத் ஏழை மாகாணமல்ல; இந்தப் புத்தகங்கள் குஜராத்தின் புகழை உயர்த்தப்போவதில்லை. மற்ற மாகாணங்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் போது, குஜராத் வளமுள்ள மாகாணம்தான். ஆனல், குஜராத் கூட இந்தச் சுமையைத் தாங்க முடியாதென்று நான் நினைக்கிறேன். இவ்வளவு புத்தகங்களை குஜராத் ஜீரணம் செய்ய முடியாது; அதனல் கூட இவ்வளவு செலவைத் தாங்க முடியாது. இந்தப் புத்தகங்கள் ஆமதாபாத், சூரத், நாதியாத், புரோச் போன்ற நகரங்களுக்கு மட்டும் என்றே தயாரிக்கப்பட்டிருந்தால், நான் எதுவும் சொல்ல மாட்டேன். அந்த நகரங்கள் கூட, செலவைத் தாங்க முடியுமென்ருலும், அதற்கு அவர்களுக்கு மனம் வராதென்று சொல்லுவேன். ஆனல், அவை நிச்சயமாக கிராம மக்களின் சக்தியை மீறியதாகும். நாம் தயாரிக்கும் புத்தகங்கள், மிகவும் ஏழைகளாயிருப்பவர்கள் கூட வாங்கக் கூடியவைகளாக இருக்க வேண்டும். என் இஷ்டப்படி விட்டால், அரையணு அல்லது ஒரு அணுவுக்கு மேல் அதிக விலையில்லாத புத்தகங்களையே தயாரிப்பேன்.

ஒரு புத்தகத்தைப் பொதுமக்களின் முன்பு சமர்ப்பிப்பதற்கு முன்பு நான் ஆயிரம் தடவை யோசிப்பேன். குழந்தைகளுக்கென்று நான் சின்னஞ்சிறு புத்தகமொன்று எழுதியிருக்கிறேன். அதை ஐந்தே நிமிடங்களில் முடித்துவிடலாம். கவனமாகப் படித்தால், பத்து நிமிடங்கள் ஆகும். எழுத்தாளர்களும், வாசகர்களும் அதில் எடுத்துக் காட்டியுள்ள குற்றம் குறைகளை நான் படிக்கவில்லை. ஆனல், பெரும்பாலான அந்த விமர்சனங்கள் என்னைப் பாராட்டவில்லை என்பதை நான் அறிவேன். எனக்கு அளிக்கப்பட்டுள்ள பாராட்டுக்கோ, கண்டனத்திற்கோ எல்லையே இல்லை. ஆகையால், இரண்டைப்பற்றியுமே நான் கவலைப் படுவதில்லை. ஆயினும், அந்தப் புத்தகத்தைத் தயாரித்ததன் நோக்கம் முக்கியமானது. ஆசிரியர், பெரும்பாலும் வாய்மொழியாகவே பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதே அதன் கருத்தாகும். புத்தகங்கள் அல்லது பாட புத்தகங்கள் மூலமாக மட்டுமே அறிவைப் புகட்ட முடியாது. பல பாட புத்தகங்கள் வைக்கப்பட்டிருக்கும்போது குழந்தைகளின் மனத்தில் ஏதோ ஒரு விதமான உணர்ச்சி ஏற்படுகிறது. இந்தப் புத்தகங்களைப் பற்றியே அவர்கள் நினைத்துக் கொண்டிருப்பதால், அவர்களுடைய சிந்திக்கும் சக்தி முடக்கப்பட்டுவிடுகிறது. பல குழந்தைகள் விஷயத்தில் எனக்கு நேரடியான அனுபவம் இருக்கிறது; இந்த விஷயத்தைப் பற்றிப் பல ஆசிரியர்களுடன் நான் விவாதித்திருக்கிறேன். அதன் பலனுகவே இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். தென்னுப்பிரிக்காவில் நடத்திய சோதனைகளில் நான் எப்போதுமே

உஷாராக இருந்து, எல்லா விஷயங்களையும் மிக ஜாக்கிரதையாக கவனித்திருக்கிறேன். நான் போராட்டத்தின் மத்தியில் இருந்து கொண்டு, பற்றி எரியும் தீயினூடே உள்ளவனைப் போல் நடமாடிக் கொண்டிருந்த காலத்தில் கூட அதே மாதிரி அனுபவம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. இரண்டு பள்ளிக்கூடங்களை ஒப்பிட்டுப் பாருங்கள்: ஒன்று ஆசிரியர்கள் பல பாட புத்தகங்களை உபயோகிக்கும் பள்ளிக்கூடம். மற்றொன்று, ஆசிரியர்கள் ஒரு பாட புத்தகத்தைக் கூட உபயோகிக்காத பள்ளிக்கூடம். இரு பள்ளிக்கூடங்களிலும் உள்ள ஆசிரியர்களும் ஒரே மாதிரியான திறமை உள்ளவர்களாக இருந்தால், பாடபுத்தகங்களை உபயோகிக்காதவர்கள் குழந்தைகளுக்கு அதிகம் சொல்லிக் கொடுக்கிறார்கள். குழந்தைகளிடம் புத்தகங்களைக் கொடுக்க நான் விரும்பவில்லை. வேண்டுமானால் ஆசிரியர்கள் அவற்றைப் படிக்கலாம். ஆகையால், ஆசிரியர்களுக்கு வழிகாட்டிகளாகநாம் புத்தகங்கள் எழுதலாம்; ஆனால், குழந்தைகளுக்கென்று நாம் எழுதினால், ஆசிரியர்கள் வெறும் யந்திரங்களாகிவிடுவார்கள். ஆசிரியர்கள் சுயமாகச் சிந்தித்து செயல்படும் சக்தியை அது அழித்துவிடும். ஆனால், ஆசிரியர்களுக்கு நான் எந்தக் கட்டுப்பாட்டையும் விதிக்க விரும்பவில்லை. என்னுடைய கருத்தைத் தெரிந்து கொண்டு, உரிய விதத்தில் அதைப் பரிசீலனை செய்யவேண்டுமென்றே விரும்புகிறேன். பாட புத்தகங்கள் எழுதுபவர்களெல்லாம் தத்தம் துறைகளில் நிபுணர்கள். உபயோகமாயிருக்கக் கூடும் என்று நினைக்கும்போது அந்தப் புத்தகங்களைப் பயன்படுத்திக் கொள்ளுவது நல்லதுதான். ஆனால், நான் சொன்னதன் கருத்து என்ன என்பதையும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

நான் ஆசிரியர் வேலை செய்திருக்கிறேனா என்று நீங்கள் கேட்க விரும்பலாம். அனுபவத்தின் மீதுதான் என் கருத்துகள் உருவாக்கப்பட்டவை என்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். கல்விப் பிரச்னையைப்பற்றி நான் ஆழ்ந்து சிந்தனை செய்திருக்கிறேன். நான் தெரிவித்துள்ள கண்ணோட்டத்திற்கிணங்க இதை நீங்கள் பரிசீலனை செய்ய வேண்டுமென்றும், உங்களுடைய வேகத்தைச் சிறிது குறைத்துக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். பல்லாயிரக்கணக்கான குழந்தைகளுக்கு நாம் புத்தகங்கள் தயாரிக்க வேண்டுமென்றால், குஜராத்துக்கு அது கட்டுபடியாகாது. அப்படி முயற்சி செய்தாலும், சீக்கிரத்தில் அலுப்புற்று விடுவோம். இது தான் நான் சொல்ல விரும்புவது. இரண்டாவதாக, குழந்தைகளின் இளம் உள்ளங்களில் இந்தப் புத்தகங்களின் சுமையை ஏற்றக் கூடாது.

ஒரு புதிய கருத்து மனதில் பட்ட உடன், அதைப் பிரதானமாக நினைத்துக் கொண்டு, அதை உலகத்திற்கு எடுத்துச் சொல்ல ஆரம்பித்துவிட்டால், அதனால் சொல்பவருக்கும் நஷ்டம், உலகத்திற்கும் நஷ்டம். ஆனால், அதை தன் விஷயத்திலும், தன் குழந்தைகள் விஷயத்திலும் சோதனை செய்து பார்த்து, அந்தச்

சோதனை என்ன பலனளிக்கிறது என்று சரியாக மதிப்பிட்டுப் பார்த்து, பிறகும்கூட, மேலும் சோதனை செய்து பார்ப்பதற்காக வெளியே சொல்லாமலே வைத்திருந்தால், தவிர்க்கக் கூடிய நஷ்டத்திலிருந்து உலகம் காப்பாற்றப்படுகிறது. என்னுடைய இந்தக் கருத்துக்கு ஆதரவாகப் பல பெரிய மனிதர்களின் உதாரணங்கள் என்னிடம் இருக்கின்றன. அவர்கள் தம்முடைய கருத்துகளை வெளியில் சொல்லாமலே வைத்துக் கொண்டிருந்தார்கள். இதனால் அவர்களுக்கோ, உலகத்திற்கோ ஒன்றும் நஷ்டம் ஏற்படவில்லை. அத்தகையவர்கள், முதலில் தமக்கு உண்மையானவையாகவும், குறிப்பிடத்தக்கவையாகவும் தோன்றிய கருத்துகளைப் பின்னர் திருத்திக் கொண்டிருக்கிறார்கள். பின்னர் ஏற்பட்ட அனுபவத்தின் பலனாக, முதல் கருத்துகளை மறந்து விட்டார்கள். என்னுடைய ஆப்த நண்பரும், நெருங்கிய சகாவுமான ஆண்ட்ரூஸ் இதற்கு ஒரு உதாரணம். அவர் எப்போதும் அவசரப்படுபவர். பத்து வருடங்களுக்கு முன்பு, அவர் மனத்தில் ஏதாவது பட்டால் உடனே அதைக் குறித்துக் கொள்ளுவார். பத்து வருடங்களுக்கு முன்பு இருந்த கருத்துகள் இப்போது அவரிடமில்லை. அவர் மதப் பற்றுள்ளவர். நாமும் மதப் பற்றுள்ளவர்களே. நம்முடைய கருத்துகளில் சிலவற்றை வெளியில் சொல்லாமலே நாம் இறந்துவிட்டால், அப்படி வெளியிடப்படாத கருத்துகளை நமது ஆன்மா தன்னுடன் தாங்கிச் செல்லும்; எதிர் காலத்தில் எப்போதாவது அந்தக் கருத்துகள் உலகத்திற்குக் கிடைக்கவே செய்யும். வித்தியாபீடமும், அதனுடன் சம்பந்தப்பட்ட மற்ற ஸ்தாபனங்களும் எந்த நிலைமையில் ஸ்தாபிக்கப்பட்டன என்பதை நாம் ஞாபகப்படுத்திக் கொண்டால், இப்போது நமக்கு ஏற்பட்டிருக்கும் கஷ்டங்களும், புதிர்களும் தாமாகவே தீர்ந்துவிடும். கல்வித் துறையாளர்கள் என்ற முறையில் கல்வியைப்பற்றிய பிரச்னைகளை இன்று நாம் பரிசீலனை செய்கிறோம். கல்வி போதிப்பதே ஆசிரியரின் வேலையாகும். ஆகவே, நம்மால் முடிந்த அளவுக்கு நாம் சிறந்த கல்வியை அளிக்க வேண்டும். ஆனால், நம்முடைய பிரச்னை அவ்வளவு சுலபமானதல்ல. வித்தியாபீடத்தையும், அதனுடன் சம்பந்தப்பட்ட மற்ற ஸ்தாபனங்களையும் வெறும் கல்விக்காகவே நாம் ஆரம்பிக்கவில்லை. ஒத்துழையாமை இயக்கத்தின் ஒரு பகுதியாகவே வித்தியாபீடத்தை ஆரம்பித்தோம். அதாவது, ஆசிரியர்கள், மாணவர்கள், பெற்றோர்கள் யாவரும் சுயராஜ்யத்துக்காக, வித்தியாபீடத்தின் மூலம் ஒரு சங்கமாகத் தம்மை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதே இதன் அர்த்தமாகும். நாமெல்லோரும் சுயராஜ்யத்தின் ஊழியர்கள்—ஒத்துழையாமையின் போர் வீரர்கள். ஒத்துழையாமையின் சாதனைகளைப்பற்றி உங்களிடம் சொல்லுதவற்காக இப்போது நான் வரவில்லை. தேசீயக் கல்வியில் ஈடுபட்டுள்ள ஒரு ஆசிரியரின் கடமையும், தருமமும் என்ன என்பதையே சொல்ல வந்திருக்கிறேன். சுயராஜ்யம் பெறுவதற்காக நாம் இங்கு சங்கம் போல் அமைத்துக் கொண்டபோது, ஒத்துழையா

மைதான் பின்பற்றத்தக்க சரியான கொள்கை என்பதை ஏற்க னவே ஒப்புக் கொண்டவர்களாகிவிட்டோம்.

கொள்கையிலேயே ஏதாவது தவறு இருந்தால், காங்கிரஸ் அதை மாற்றும். அதற்கிடையே நாம் சரியான காரியத்தையே செய்கிறோம் என்ற நம்பிக்கையில் நாம் காரியங்கள் செய்துகொண் டிருக்க வேண்டும். ஒத்துழையாமை சரியா, தவறா என்று வேதாந்த விசாரம் செய்வதற்காக நாம் இங்கு கூடியிருக்கவில்லை. வித்தியாபீடமும், அதனுடன் சம்பந்தப்பட்ட ஸ்தாபனங்களும் சுய ராஜ்யத்திற்காக அர்ப்பணிக்கப்பட்டவை என்பதை நாம் ஒப்புக் கொள்கிறோம். சுயராஜ்யக் கண்ணோட்டத்துடன் பார்த்தால்தான் அவை இருப்பதற்கு நியாயம் தெரியும். கல்விக்காகவே கல்வி என்ற சித்தாந்தத்தை சுயராஜ்யம் பெற்ற பிறகு மகிழ்ச்சியுடன் பரிசீலனை செய்வோம். ஆனால், இன்றைக்கு, மேலே குறிப்பிட்ட குறுகிய அளவுக்குத்தான் இதை கவனிக்க வேண்டும்.

நம்முடைய ஆரம்பப் பள்ளிக்கூடங்கள், உயர்நிலைப் பள்ளி கள், கல்லூரிகள், புராதன இந்திய சரித்திர ஆராய்ச்சி இலாகா ஆகிய எல்லாவற்றிலுமே, இதே கருத்தை நாம் கவனத்தில் வைத் திருக்க வேண்டும். சுயராஜ்யம், ஒத்துழையாமை ஆகியவைகளைக் கவனிப்பதைப் புறக்கணிக்க முடியாது. சத்தியம், அகிம்சை மூலம்தான் நாம் சுயராஜ்யம் பெற வேண்டும் என்பதும் முடிவாகி விட்டது. 'அமைதியான', 'நியாயமான' என்ற வார்த்தைகளுக்கு காங்கிரஸ் என்ன அர்த்தம் சொன்னாலும், என்னைப் பொறுத்த வரையில், சத்தியம், அகிம்சை என்பவையே அந்த வார்த்தை களின் அர்த்தங்களாகும். குஜராத்தும் அப்படித்தான் நினைக்கிற தென்றே நம்புகிறேன். மேலும், ஐந்து அம்சங்களுள்ள ஒத்துழை யாமைத் திட்டம் ஒன்றைப் பின்பற்றவும் நாம் ஒப்புக்கொண்டி ருக்கிறோம். அதன்படி நாம் நடந்து கொள்ளாவிட்டால், நமது வார்த்தையை மீறியவர்களாகிறோம். நம்முடைய பொறுப்பில் உள்ள மாணவர்களின் ஒழுக்கத்திற்கு நாம்தான் பொறுப்பாளி. பகிஷ்காரக் கொள்கையை நாம் கைவிட்டால், அவர்களுக்கு நாம் தவறான ஒரு பாடத்தைக் கற்பித்தவர்களாவோம். இந்த வேலைத் திட்டத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள், இந்த ஸ்தாபனங்களி லிருந்து வெளியே போய்விடுவது நல்லது. நாமெல்லோருமே வயிற்றை நிரப்ப வேண்டியவர்கள்தான். ஆகையால், வாழ் வதற்கு ஏதாவது சம்பாதிக்க வேண்டுமென்ற பொறுப்பிலிருந்து தப்ப முடியாது. ஆனால் அதுமட்டுமே நம்முடைய முக்கிய நோக்க மாக இருக்க முடியாது. ஆனால், ஒத்துழையாமையின் நிபந்தனை களை ஏற்றுக் கொண்டு அதன்படி நடக்க முடியாதவர்கள், இந்த ஸ்தாபனங்களிலிருந்து போய்விடவேண்டும். ஜீவனோபாயத் திற்காக மட்டுமே தேசீயப் பள்ளிக்கூடங்களுக்கு வருவது, கற்றுக் கொடுப்பவர்களுக்கோ, கற்றுக் கொள்ளுபவர்களுக்கோ பெருமையளிக்காது.

நமது போராட்டத்தில் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. ஒன்று, அழிக்கும் தன்மை வாய்ந்தது; இதை நாம் ஏற்கனவே

சாதித்துவிட்டோம். மீண்டும் பிடிவாதமாக இதையே செய்து கொண்டிருந்தால், விஷயம் தெரியாத ஒரு முட்டாள் குடியான வனைப்போல் நடந்து கொண்டவர்களாவோம். குடியானவன் களை பிடுங்குகிறான், கற்களைப் பொறுக்கி எறிகிறான், விதை விதைப்பதற்காக நிலத்தை உழுகிறான். ஆனால், நிலத்தைப் போதிய அளவுக்குப் பண்படுத்திய பிறகு. விதை விதைப்பதற்குப் பதிலாக, மேலும் உழுது கொண்டேயிருந்தால், அவன் தன்னுடைய நேரத்தை வீணடிப்பதாகத்தான் சொல்ல வேண்டும். அதே மாதிரி, முதல் வயலில் பலனைப் பார்க்காமல், மற்றொரு வயலில் அவன் தன்னுடைய சோதனையை ஆரம்பித்தால், அதுவும் முறையற்றதாகவே இருக்கும். அவன் தன்னுடைய சோதனையைப் பூர்த்தி செய்யாமல், தனக்குப் பதிலாக இன்னொருவன் அந்த வேலையைச் செய்யும்படியும் விடக்கூடாது. பொறுமையுடன் தன் வேலையைச் செய்தால், உரிய காலத்தில் அறுவடை செய்யலாம் என்ற நம்பிக்கையில் தன் வேலையைச் செய்து கொண்டிருக்க வேண்டும். நம்முடைய வேலையிலுள்ள அழிவு அம்சம் முடிந்துவிட்டது. இனி நிர்மாண அம்சத்தை நாம் நிறைவேற்ற வேண்டும். நிர்மாண வேலை நம்முடைய ஒத்துழை யாமை இயக்கத்தை பலப்படுத்தும். நாம் செய்யும் வேலையை உலகம் போற்றி, ஆதரிக்க ஆரம்பித்தால், மற்றப் பள்ளிக் கூடங்கள் தாமாகவே மறைந்துவிடும். மற்றப் பள்ளிக்கூடங் களில் அதிக விறுவிறுப்பு இல்லையென்றும். வேறு விதமான பள்ளிகளை ஆரம்பிக்கத் தேவை இருக்கிறதென்றும் இப்போதே மக்கள் ஒப்புக் கொள்ளுகிறார்கள். நம்முடைய வேலையில் நமக்கு நம்பிக்கையிருந்தால், அதை முடிப்பதற்கு ஒரு வருடம் ஆகிறதா, இருபது வருடங்களாகின்றனவா என்று பார்க்காமல் அதைச் செய்துகொண்டேயிருக்க வேண்டும்.

புதிய பள்ளிக்கூடங்களைத் திறப்பதும், ஏற்கனவே உள்ள பள்ளிகளை பலப்படுத்துவதும் நமது வேலையில் ஒரு அம்சமாகும்; இது நிரந்தரமான தன்மை வாய்ந்ததாகும். ஆசிரியர்கள் கோர்ட்டுகளையும், பஞ்சாயத்துகளையும் மறந்துவிட வேண்டும். இந்த விஷயங்களையெல்லாம் நமது மனதிலிருந்தே விரட்டிவிட லாம். நமது பொறுப்பை நாம் நிறைவேற்றிக் கொண்டிருந்தால் போதுமானது. இந்தப் பள்ளிக்கூடங்களை நல்ல முறையில் நடத்து வதன் மூலம் இவற்றின் புகழ் ஓங்கச் செய்வது நமது அடுத்த பொறுப்பாகும். கணிசமான அளவுக்கு இவற்றை விரிவுபடுத்து கிறோம். இவற்றில் காப்பாற்றத் தகுந்தவைகளை இனிப் பொறுக்கி எடுக்க வேண்டும். இங்குள்ள விவசாயிகள் நான் சொல்லுவதன் அர்த்தத்தை நன்கு புரிந்து கொள்ளுவார்கள். குடியானவன் விதை தெளிக்கிறான்; பின்னர் அவற்றிலுள்ள சப்பை, சோடை களைக் களைந்தெறிகிறான். அதே மாதிரி, அறுவடை முடிந்த பிறகும். நல்ல கோதுமையாகப் பார்த்து விதைக்காக வைத்துக் கொள்ளு கிறான். இவ்வாறாக ஒவ்வொரு வருடமும் நல்ல பயிர் விளையும்படி செய்கிறான். நமது வேலையை விரிவுபடுத்தி விட்டோம்; இனி

அதைக் காப்பாற்றி, அதனுடைய தரத்தையும், தன்மையையும் அபிவிருத்தி செய்ய வேண்டும்.

நாம் கவனிக்க வேண்டிய வேறு பல காரியங்களும் இருக்கின்றன. அவை கைராட்டினமும், தீண்டாமையை ஒழிப்பதும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை அவ்வளவு தீவிரமான பிரச்னையாக இல்லையென்றாலும், அது இருக்கத்தான் செய்கிறது. ஹிந்துக்களும், முஸ்லிம்களும் உண்மையான சகோதரர்களைப் போல் வாழ வேண்டும் என்று மாணவர்களுக்கு உணர்த்திவிட்டோமானால், இன்னும் இருந்துகொண்டிருக்கும் விஷத்தை அகற்றிவிடமுடியும். குஜராத்தில் மண்டைகள் உடைவதில்லை என்பது உண்மையே; ஆயினும், அந்த இரு வகுப்பினருக்குமிடையே நேசப் பான்மை இல்லை. இந்த நட்பை ஏற்படுத்துவதற்கான பொறுப்பில் ஒரு பகுதியைப் பள்ளிக்கூடங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். மேலும், தீண்டாதார்களைச் சேர்த்துக் கொள்ளும் பொறுப்பையும் எல்லாப் பள்ளிக்கூடங்களும் நிறைவேற்ற வேண்டும். வித்தியா பீடம் நடக்க முடியாமல் போய்விடலாம் என்றிருந்தால் கூட, தீண்டாதாரைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று விதித்துக் கொண்டிருக்கிறோம். இந்தப் பொறுப்பை நிறைவேற்ற ஆசிரியர்கள் என்ன செய்திருக்கிறார்கள்? பெற்றோர்கள் என்ன செய்திருக்கிறார்கள்? பெற்றோர்கள் பயப்படுகிறார்கள். அவர்களை விலக்கி வைக்க வேண்டும் என்பதே பெற்றோர்களின் மனப்பான்மையாக இருக்கிறது. ஆகையால், நமது பள்ளிக்கூடங்களில் தீண்டாதார்கள் போதிய அளவுக்கு இல்லை. நல்ல காலமாக, இந்துலால், மாமா, மற்றும் இதர ஊழியர்களுடைய முயற்சிகள் காரணமாக, தீண்டாதார்களுக்கென்று 15 பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. தீண்டாதார்களுக்கான இந்தப் பள்ளிக்கூடங்கள் வேலை செய்வது, நம்மிடமுள்ள திறமையையோ, நம்முடைய தாராளத்தையோ குறிக்கவில்லை; நமது அவமானத்தின் சின்னங்களே இவை. தீண்டாதார்களை இழிவாக நினைக்கும் இடங்களில்தான் அவர்களுக்குத் தனியாகப் பள்ளிக்கூடங்கள் வேண்டும்; இல்லாவிடில் அவர்களும் மற்றப் பிள்ளைகளைப்போல் ஒரே பள்ளிக்கூடத்தில்தான் படிக்க வேண்டும். முதலில் அவர்களுக்குக் கல்வி அளித்துவிட்டு, பிறகு மற்றவர்களைக் கவனிப்போம். அவர்களைக் குளிப்பாட்டி, சரியாக ஆடையணிவித்து, ஆகாரமும் கொடுக்க வேண்டும். அவர்கள் பேசுவது சரியாக இல்லையென்றால், சரியான உச்சரிப்பையும், பேச்சையும் கற்றுக் கொடுக்க வேண்டும். இது ஒரு சிறிய தவறல்ல; அதற்கு மாறாக, அது நாம் செய்யும் ஒரு பெரிய தவறாகும்.

தீண்டாமை ஒழிப்பை காங்கிரஸ் வேலைத் திட்டத்தின் ஒரு அம்சமாகவே நாம் கருத வேண்டும். தீண்டாதார்களை நம்மைவிட்டுப் பிரித்து வைத்திருக்கும்வரையில், அவர்களையும் நம்மவர்கள் என்று நாம் சேர்த்துக் கொள்ளத் தயாராக இல்லாதவரையில், இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்க

முடியாது. நான் கூறுவதை, ஆங்கிலேயர்களின் பிரதிநிதிகளோ அல்லது பத்திரிகைகளோ திரித்துக் கூறி பயன் படுத்திக் கொள்ள முடியும் என்பது எனக்குத் தெரியும்; ஆனால், அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆன்ம சுத்தியின் மூலம்தான் நாம் சுயராஜ்யம் பெறவேண்டும். ஆகையால், இந்த உண்மையை நான் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டேதான் இருப்பேன்.

இதை நான் வற்புறுத்தினால், ஆசிரியர்கள் ராஜினாமாச் செய்துவிடுவார்களென்றும், மாணவர்கள் போய்விடுவார்களென்றும் சிலர் என்னிடம் கூறுகிறார்கள். அதற்காக நான் உண்மையைச் சொல்லாமலிருக்க முடியுமா? என்னிடம் ஒரு கோடி ரூபாய் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவையெல்லாம் கள்ள நாணயங்களாக இருக்கின்றன. அந்தப் பணத்தினால் எனக்கு என்ன பிரயோசனம்? அந்த நாணயங்களெல்லாம் ஸபர்மதி ஆற்றில் வீசி எறிவதற்குத் தான் பிரயோசனப்படும். ஆனால், அதில் ஒரு நல்ல நாணயமாவது இருந்தால், அதை நான் எப்போது, எப்படிக் கண்டுபிடிப்பது? பசியால் வாடும் என் குழந்தைகளுக்கு நான் உணவு வாங்க வேண்டியிருப்பதாக வைத்துக் கொள்வோம். அவ்வளவு கள்ள நாணயங்களிடையே இந்த ஒரு நல்ல நாணயம் புதைந்து கிடக்கும்படி விட்டிருந்தால் அதனால் எனக்கு என்ன உபயோகம்? தாமதமின்றி அந்த நல்ல நாணயத்தை நான் கண்டுபிடித்து, மீதமுள்ளவற்றையெல்லாம் தூக்கி எறிந்துவிட வேண்டும். ஆகையால், ராஜிநாமாச் செய்துவிடுவார்களே என்பதைப் பற்றி நான் பயப்படவில்லை. எல்லாக் கள்ள நாணயங்களுமே மறையட்டும். ஆசிரியர்களாகிய நாம் அச்சமற்றவர்களாக இருக்க வேண்டும். கண்டிப்பாக சத்தியத்தையே பின்பற்ற வேண்டும். தீண்டாதார்களை அனுமதிக்காத ஒரு பள்ளிக்கூடம் தேசீயப் பள்ளிக்கூடம் அல்ல என்றும், சுயராஜ்யத்தையும், ஒத்துழையாமையையும் ஆதரிக்கும் பள்ளிக்கூடம் அல்ல என்றும் அவர்கள் பயமில்லாமல் பறைசாற்ற வேண்டும். ஒரு காரியம் சுயராஜ்யம் பெறுவதற்கு உதவியாக இருக்கிறதா என்பதுதான், அதை மதிப்பிடுவதற்கு நான் வைத்துக்கொண்டுள்ள உரைகல் ஆகும். இந்தச் சோதனையில் வெற்றி பெறும் பள்ளிக்கூடங்களைத் தான் தேசீயப் பள்ளிக்கூடங்களாக ஒப்புக் கொள்ளுவேன். தீண்டாதார்களை அனுமதிக்க மறுக்கும் பள்ளிக்கூடங்களையும், பெற்றோர்களும், கார்டியன்களும் நேர் முகமாகவோ, மறைமுகமாகவோ அவர்களை விலக்கிவைக்க முயற்சிக்கும் பள்ளிக்கூடங்களையும் விட்டு விடுவது என்று நாம் உறுதி கொள்ள வேண்டும். நாமே தீண்டாதார்கள் இருக்கும் பகுதிகளுக்குப் போய் உட்கார்ந்து கொண்டு, அந்தப் பிள்ளைகளுக்குக் கல்வி புகட்டுவோம். நகர்ப்புறப் பிள்ளைகள் அங்கு வந்தால் வரட்டும்; அப்படி அவர்கள் வரவில்லையென்றால், அந்த அளவுக்கு நமக்குச் சுமை குறைந்ததாக நினைப்போம். அவர்களுக்காக அனாவசியமாகச் செலவிடும் பணம் மிச்சப்படும். வீணடிப்பதற்கு நம்மிடம் பணம் இல்லை. தீண்டாமையை ஒழிப்பதற்கு நாம் வேலை செய்வது பிடிக்காததால்தான்

பலர் நமக்குப் பணம் கொடுக்கவில்லை. இந்த வேலை மக்களிடையே ஆதரவை இழந்துவிட்டதென்றும், அதனால்தான் அவர்கள் நமக்கு இப்போது பணம் கொடுப்பதில்லையென்றும் நினைப்பதில் தவறு ஒன்றுமில்லை. ஆயினும், அத்தியாவசியமான இந்த வேலையை நாம் செய்து கொண்டுதானிருக்க வேண்டும். மக்கள் தவறான வழியில் போகிறார்கள் என்று நமக்குத் தோன்றும்போது, அவர்களை நேர்பாதைக்குத் திருப்ப வேண்டுமென்று நாம் நினைக்கும்போது, கொடி காட்டுபவர்களைப் போல் நடந்து கொள்ள நாம் தயாராக இருக்கவேண்டும். ஒத்துழையாமை இயக்கத்தின் ஒரு நிரந்தர அம்சமான தீண்டாமை ஒழிப்புக்காக நாம் வேலை செய்ய முடியாத ஒரு பள்ளிக்கூடத்திற்கு, தேசீயப் பள்ளிக்கூடத்தின் அந்தஸ்தை அளித்தால், நாம் ஒரு பாவத்தைச் செய்தவர்கள் ஆவோம்.

எனக்கு என்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா? மெல்லிய நூல் இழைகள் மூலம் சுயராஜ்யம் பெறுவதில் நமக்கு உண்மையான நம்பிக்கை இருந்தால் அதை நம்முடைய செயல்களின் மூலம் காட்டவேண்டும். எனக்கு இரண்டு கடிதங்கள் வந்திருக்கின்றன. "உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. இதற்கு முன்பு சர்க்காவைப் பற்றி நீங்கள் புகழ்பாடுவது ஒரு அளவிற்கு உட்பட்டிருந்தது. இப்போது அந்த வரம்பையும் கைவிட்டு விட்டீர்கள்" என்று அவர்கள் எழுதியிருக்கிறார்கள். ஆனால், உலகம் என்னை முட்டாள் என்று சொன்னாலும், பைத்தியக்காரன் என்று சொன்னாலும் நான் அதையேதான் சொல்லிக் கொண்டிருப்பேன். எனக்கு வேறு ஒன்றும் தோன்றவில்லை என்றால் நான் என்ன செய்வது? சர்க்காவிலும் தேர்ச்சி பெற்றிருந்தாலொழிய, மகாவித்தியாலயத்தில் பட்டம் பெற்ற ஒருவரைக்கூட பட்டம் பெறத் தகுதி உள்ளவர்கள் என்று நான் கருத மாட்டேன். இதில் நிர்ப்பந்தம் இருப்பதாக ஆட்சேபிக்கப் படுகிறது. நிர்ப்பந்தம் என்று அவர்கள் சொல்லுவதன் அர்த்தம் என்ன? மாணவர்கள் ஆங்கிலம், குஜராத்தி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளை கற்றுக் கொள்ள வேண்டும் என்று விதிப்பதில் நிர்ப்பந்தம் இல்லையா? அதே மாதிரி அவர்கள் நூற்கவும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நாமும் விதிக்கலாம். அதில் நமக்கு நம்பிக்கையில்லை என்றால், அது வேறு விஷயம். நீங்கள் நூற்கவில்லை என்றால் பள்ளிக்கூடத்தில் இருக்க முடியாது என்று மாணவர்களிடம் சொல்லுவதில் என்ன தவறு இருக்கிறது? ஒருவனுக்கு உள்ள புண்ணைத் தொட்டால் வலி தாங்காமல் அவன் கத்துகிறான் என்பதற்காக அதை நாம் தொடக்கூடாதா? புண்ணை அறுத்து சீழை வெளிப்படுத்திவிட்டால், அவனுக்கு ஆறுதலாக இருக்கும் என்பதை நாம் அறிய வேண்டும். அதில் நிர்ப்பந்தம் ஒன்றுமில்லை; அதற்கு மாறாக அது, நன்கு யோசித்து திட்டமிடப்பட்ட ஒரு செயல்முறையாகும். அவர்களுடைய நலன்களுக்கு அவசியமானது என்று நாம் கருதுவதைத் தயக்கமின்றி மாணவர்களிடம் சொல்ல வேண்டும். அதை ஒப்புக்

கொள்ளாத மாணவர்களோ, பெற்றோர்களோ இங்கு வரக் கூடாது. சுயராஜ்ய லட்சியத்திற்காக வேலை செய்வதாகக் கூறிக் கொள்ளும் ஆரம்பப் பள்ளிக்கூடமோ, உயர்நிலைப் பள்ளிக் கூடமோ, கல்லூரியோ இந்த நிபந்தனையை நிறைவேற்றியாக வேண்டும். இந்த விஷயத்தில் வேறு எந்தக் கருத்தையும் அனு மதிக்க முடியாது. யாருடைய கருத்தாவது மாறியிருந்தால், அவர்கள் ராஜினமா செய்துவிட்டு அந்த ஸ்தாபனத்திலிருந்து வாபஸாகி விட வேண்டும். காங்கிரஸின் தீர்மானம் அமலில் இருக்கும் வரை, அத்தகையவர்களுக்கு இங்கே இடமிருக்க முடியாது.

சர்க்காவும், தீண்டாமை ஒழிப்பும் நமது கல்வியின் மிக அத்தியாவசியமான இரு அம்சங்களாகும். மாணவர்களிட மிருந்தோ அல்லது அவர்களுடைய கார்டியன்களிடமிருந்தோ இந்த உண்மைகளை நாம் எந்த விதத்திலும் ஒளிக்கக் கூடாது. பெற்றோர்களுக்கு இது பிடிக்கவில்லை என்றால், அவர்கள் தமது பிள்ளைகளை தாராளமாக சர்க்கார் பள்ளிகளுக்கு அனுப்பலாம். அப்படியானல் சர்க்கார் பள்ளிகளுக்கும், தேசீயப் பள்ளிகளுக்கு மிடையே உள்ள வேற்றுமைதான் என்ன? நமது பள்ளிக்கூடங் களில் நிலவும் சுதந்திரமான சூழ்நிலைதான் அந்த வேற்றுமை என்று நான் சொல்லுவேன். ஆனல், சர்க்காவையோ, தீண்டா தார்களையோ நான் மறந்ததே இல்லை. சுதந்திரம் என்றால் விருப் பப்படி நடப்பது அல்லது உறுதியின்றி நடப்பது என்று நான் சொப்பனத்தில் கூட நினைத்ததில்லை. மாணவர்கள் தங்கள் ஆசிரியர்களிடம் ஒரு மாதிரியாக நடந்து கொள்ளலாம் அல்லது பேச்சில் இருக்க வேண்டிய கண்ணியத்தைப் புறக்கணிக்கலாம். ஆனல், அப்போதும் கூட அவர்களுக்குக் கீழ்ப்படிந்துதான் ஆக வேண்டும். தீண்டாதார்களை இழிவாக நினைப்பவனும், அவர் களுடைய தோளில் ஏறிக் குதிரை சவாரி செய்வதில் ஆனந்தம் அடைபவனுமான ஒரு மாணவனுக்குச் சுதந்திரத்தைப் பற்றி என்ன தெரிய முடியும்? சுதந்திரத்தில் உள்ள ஆனந்தத்தை அவன் அறிய முடியாது. பர்தோலியில் உள்ள பணக்காரர்களும், படித்தவர்களும் மற்றவர்களை அடக்கி ஒடுக்கி வைத்திருப்பதை அறிந்தவர்களாக இருக்கலாம். ஆனல், சுயராஜ்யம் என்றால் என்ன என்பதை அவர்கள் அறிந்திருக்க முடியாது. எந்த வித மான அநீதியையும் எதிர்த்துப் போராடி அதை ஒழிப்பதாக ஆசிரியர்கள் சபதம் பூண்டிருக்கிறார்கள். ஆகையால், ஒவ்வொரு பரீட்சையிலும் ஒரு மாணவன் முதலில் ஒரு குறிப்பிட்ட அளவு தானே நூற்ற நூலைக் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனை இருக்க வேண்டுமென நான் வற்புறுத்துவேன். அப்படிச் செய் தால், சீக்கிரத்தில் ஒவ்வொரு தேசீயப் பள்ளிக்கூடமும் சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதாக இருக்கும். தேசத்தின் முன்பு நான் சமர்ப்பித்த கொள்கைகளும், வேலைத் திட்டமும் சரி யானவைதான் என்றும் அப்போது நான் காட்ட முடியும்.

நமது பள்ளிக்கூடங்களில் தேசீயத் தன்மையைப் பாதுகாப்பதற்கு இந்த இரண்டு விஷயங்களையும் நாம் நிறைவேற்ற வேண்டும். ஒவ்வொரு ஆசிரியரும், ஏற்கனவே கற்றுக் கொண்டிராவிட்டாலும் இனியாவது நூற்றல், பட்டை போடுதல், பஞ்சுக் கொட்டை எடுத்தல் ஆகியவற்றைக் கற்றுக்கொள்ள வேண்டும். நூலின் தரத்தை மதிப்பிடவும் கற்றுக்கொள்ள வேண்டும். தம்முடைய ஓய்வு நேரத்தை எல்லாம் இந்த வேலைக்காக அவர்கள் செலவிடட்டும். இவை எல்லாம் அவருக்கே தெரியவில்லை என்றால், அவர் பையன்களுக்கு எப்படிக் கற்றுக் கொடுக்க முடியும்? மொழிப் பாடம்தான் தாம் கற்றுக் கொடுக்க முடியும் என்றும், நூற்றல், நெசவு இரண்டையும் கற்றுக் கொடுப்பதற்கு வேறு ஒருவரை வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் சொல்லக் கூடிய ஆசிரியர்கள் இருக்கலாம். நாம் எல்லோரும் சாப்பிடுகிறோம்; ஆடைகளை எப்படி அணிய வேண்டுமென்றும் அறிந்திருக்கிறோம். அதே மாதிரி நூற்றல் முதலியவைகளையும் நாம் அறிந்திருக்க வேண்டும். அப்போதுதான் மாணவர்களுக்கு நாம் ஓர் உதாரணமாக இருக்க முடியும்.

இதுவரையில் மகாவித்தியாலயம் (கல்லூரி), வித்தியாமந்திர்கள் (உயர்நிலைப் பள்ளிகள்), தீண்டாதார்களுக்கான பள்ளிக்கூடங்கள் ஆகியவைகளுக்கே எல்லாப் பணமும் செலவிடப்பட்டிருக்கிறது. ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் விஷயத்தில் வித்தியாபீடம் இன்னும் போதிய கவனம் செலுத்தவில்லை. நான் கூறியுள்ள கொள்கைகளுக்கு உயிரூட்டுவதற்காக வித்தியாபீடத்தை ஒரு கதர் பள்ளிக்கூடமாக மாற்றவேண்டும். ஒத்துழையாமை இயக்கம் மக்கள் அனைவருக்குமே ஒழிய குறிப்பிட்ட ஒரு பகுதியினருக்காக அல்ல. நமக்கு சாப்பிடுவதற்குப் போதிய உணவு கிடைக்கிறது; உடலை மூடிக் கொள்ள போதிய ஆடைகளும் கிடைக்கின்றன. ஆனால், இந்தியா பூராவிலும் உள்ள கிராமங்களில் உள்ளவர்கள் அப்படி இல்லை. எலும்புக் கூடுகளைப் போல் உள்ள அந்த மனிதர்களுக்குக் கொஞ்சம் சதைப்பற்று ஊட்ட விரும்புகிறோம். நாம் தொண்டு செய்ய விரும்பும் கோடிக் கணக்கான இந்த எலும்புக் கூடுகளுக்கு, தம்முடைய எலும்புகளை மூடிக் கொள்ள தம்முடைய வெறும் தோலைத் தவிர வேறு எதுவும் இல்லை. அந்த எலும்புக் கூடுகளைப் பார்த்து நான் அழுதிருக்கிறேன். அவர்களைப் பார்த்தால் நீங்களும் அழுவீர்கள்; 'சகிக்க முடியவில்லையே' என்று உங்களை அறியாமலேயே சொல்லுவீர்கள்.

மனித எலும்புக் கூடுகள் இருக்க முடியும் என்று பம்பாயில் உள்ளவர்களுக்குத் தெரியவே தெரியாது. நம்முடைய மக்களிடையே ஒரு விழிப்பை உண்டாக்குவது நமது வேலையாகும். பத்திரிகைகளில் அவர்களைப் பற்றிய செய்திகள் வராவிட்டால் கவலையில்லை. ஏனெனில் பாமர மக்கள் பத்திரிகைகளைப் படிப்பதில்லை. என்னையும் உங்களையும்தான் அவர்கள் மதிப்பிடுகிறார்கள். உங்கள் கண்களினூடே பார்த்து நீங்கள் சொல்லு

வதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளுகிறார்கள். இதை நீங்கள் வேத வாக்காக (முழு உண்மையாக) எடுத்துக் கொள்ளலாம். உங்கள் கண்களில் ஏதாவது இருந்தால் அதை எடுத்துக் கொண்டு, சிரித்துக் கொண்டே பத்திரிகைகளை அப்பால் எறிந்து விடுவார்கள்.

நாம் விரும்பினால், கல்லூரிக் கல்விக்கு முக்கியத்துவம் அளிக்கலாம். ஆனால், கல்வி பாமர மக்களிடையேயும் பரவ வேண்டுமென்று நாம் விரும்பினால் கங்கோத்திரி*யின் மெல்லிய, ஆனால் பரிசுத்தமான நீர்த் துளியைப் போல் அதை மாற்ற வேண்டும். தேர்ச்சி பெறும் மாணவர்கள் கிராமங்களில்தானே இருக்கப் போகிறார்கள்? இதைக் கருத்தில் கொண்டுதான் அவர்களுக்கு நாம் பயிற்சி அளிக்க வேண்டும். நமக்கு சொற்ப மாணவர்களே தான் கிடைக்கிறார்கள் என்றால் கூடக் கவலையில்லை.

இறுதியாக, ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்குத்தான் நான் அதிக முக்கியத்துவம் கொடுக்க விரும்புகிறேன். ஆரம்பப் பள்ளிக்கூட விஷயத்தில் வித்தியாபீடம் இன்னும் அதிக கவனம் செலுத்தவேண்டும் என்றும், அதிக பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும் என்றும் நான் விரும்புகிறேன். அவைகளை எப்படி நடத்த வேண்டும் என்று நாம் யோசிக்கவேண்டும். இது சம்பந்தமாக என்னுடைய கருத்துகளைக் கூறுகிறேன். கண்ணை மூடிக் கொண்டு சர்க்கார் பள்ளிக்கூடங்களின் நடைமுறையை அப்படியே பின்பற்றுவது முட்டாள்தனமாகும். இரண்டு வருடங்களுக்கு முன்பு 'எங் இந்தியா' பத்திரிகையில் நான் சில புள்ளி விவரங்களை வெளியிட்டிருந்தேன். ஐம்பது வருடங்களுக்கு முன்பு இருந்ததைவிட இப்போது பஞ்சாபில் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் குறைவாகவே இருக்கின்றன என்பதை அந்த விவரங்கள் காட்டின. பர்மாவில் கூட நாடு பூராவிலும் பள்ளிக்கூடங்கள் இருந்தன. எல்லாக் குழந்தைகளுக்கும் எழுதப் படிக்கவும், சிறிது கணக்கும் தெரிந்திருந்தன. இன்று அப்படி இல்லை. ஏனெனில், சர்க்கார் அந்தப் பழைய கிராமப் பள்ளிக்கூடங்களையெல்லாம் மூடிவிட்டு தம்முடைய சொந்தப் பள்ளிக்கூடங்களை ஆரம்பித்தார்கள். ஏழு லட்சம் கிராமங்களில் சரியான பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பது எப்படி சாத்தியமாகும்? இந்த ஏழு லட்சம் கிராமங்களில் பள்ளிக்கூடங்கள் இல்லாத கிராமங்கள் மூன்று லட்சம். நிலைமை இவ்வளவு மோசமாக இருக்கும் போது சர்க்கார் பள்ளிக்கூடங்களை ஆரம்பிப்பதால் என்ன பிரயோஜனம்? பள்ளிக்கூடக் கட்டிடங்கள் இல்லாமலே நாம் காலம் தள்ளி விடலாம். ஆனால், நல்ல ஒழுக்கம் உள்ள ஆசிரியர்கள்தான் வேண்டும். முன் காலத்தில் குருவாக இருந்தவர்கள் அம்மாதிரி இருந்தார்கள். அவர்கள் மாணவர்களுக்குப் போதித்துவிட்டு, பிச்சை எடுத்துத் தம் வாழ்க்கையை நடத்தி

---

* புனித கங்கை நதி உற்பத்தியாகும் இடமே 'கங்கோத்திரி' என்று கூறப்படுகிறது.

22

ஞர்கள். கோதுமை மாவைக் கொண்டுவந்து வேண்டியதைச் செய்து கொள்வார்கள். கிடைத்தால் நெய்யும் கொண்டு வருவார்கள். இந்த ஆசிரியர்கள் நல்லவர்களாக இல்லாத இடங்களில், அவர்கள் அளித்த கல்வி அவ்வளவு திருப்திகரமாக இல்லை. ஆனால், நல்ல ஆசிரியர்கள் இருந்த இடங்களில், கல்வியும் நல்ல தரமுள்ளதாக இருந்தது. அம்மாதிரியான ஆசிரிய பரம்பரை இன்று மறைந்துவிட்டது. நல்ல கட்டிடங்கள் இருந்தால் மட்டும், அளிக்கும் கல்வியின் தரம் உயர்ந்து விடாது. நாம் கிராமங்களில் வசித்துக் கொண்டு சர்க்காவிற்காக அங்கு வேலை செய்தால்தான் நம்முடைய நோக்கம் நிறைவேறும். வித்தியாபீடம் இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்து ஏற்ற ஒரு திட்டத்தை வகுக்க வேண்டும். ஆனால், வித்தியாபீடம் என்பது உங்களிடமிருந்தோ, என்னிடமிருந்தோ மாறுபட்ட ஒன்றல்ல. ஐந்து அல்லது ஏழு பேர்கள் சேர்ந்து ஒரு திட்டத்தை வகுப்பது சுலபம். ஆனால் தியாக உணர்ச்சி உள்ளவர்களும், என்ன கிடைத்தாலும் போதும் என்ற திருப்தியுடன் கிராமங்களுக்குப் போய் அங்கு குடியேறுவதற்குத் தயாராக உள்ளவர்களுமான தன்னலமற்றவர்களைக் கண்டுபிடிப்பதுதான் கடினமாகும்.

எனக்கு வந்த கடிதம் ஒன்று 'நவ ஜீவன்' பத்திரிகையில் வெளியிடப்பட்டிருந்தது. அந்தக் கடிதத்தை எழுதியவர் ஒரு ஆசிரியர். அவர் மூன்று குழந்தைகளுடன் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார். இப்போது அவருடைய பள்ளிக்கூடத்தில் தொண்ணூற்று ஆறு பையன்கள் இருக்கிறார்கள்,-73 பையன்கள், 23 பெண்கள். ஒரு மரத்தடியில் அவர் தமது வகுப்பை நடத்து கிறார். அவர்கள் "உயர்ந்த வகுப்பைச்" சேர்ந்த குழந்தைகள் அல்ல. அது தீண்டாதவர்களுக்கான ஒரு பள்ளிக்கூடம். தீண் டத்தகாத வகுப்பைச் சேர்ந்த ஒரு ஆசிரியர் செய்திருப்பதை நாமும் செய்ய முடியாதா? தீண்டாத வகுப்புக் குழந்தைகளை யாவது நாம் கொண்டு வர வேண்டாமா? ஒரு குறிப்பிட்ட இடத்தில் அவர்கள் வரவில்லை என்றால், வேறு ஒரு இடத்திற்கு மாறி நம்முடைய சோதனையை அங்கு நடத்துவோம். ஆரம்பக் கல்வி விஷயத்தில் நாம் மிகவும் அதிகமான கவனம் செலுத்த வேண்டும் என்பதைத்தான் நான் வற்புறுத்திச் சொல்ல விரும்பு கிறேன்.

நாம் பாடம் சொல்லிக் கொடுக்கும் முறையைக் கண்டு பெற்றோர்கள் பீதியடைந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. தாய் மொழியின் மூலம் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கப்படுவது பற்றி அவர்கள் கவலையடைகிறார்கள். இதனால் எனக்கு ஆழ்ந்த மனவேதனை ஏற்பட்டபோதிலும், சிரிக்கத்தான் தோன்றியது. வேதனை மிகவும் அதிகமாகும் போது, ஒருவன் அழமுடியாது; அதற்குப் பதிலாக அவன் சிரிக்கிறான். இது மிகப் பெரிய மானக்கேடு என்று நான் நினைத்தேன். தம் குழந்தைகள் நன்றாக ஆங்கிலம் பேச முடியாதே என்று பெற்றோர்கள் பயப்படுகிறார்கள். அவர்கள் தப்பும்

தவறுமாக குஜராத்தி மொழி பேசுவது பற்றிப் பெற்றோர்கள் கவலைப்படவில்லை. பிள்ளைகளுக்கு குஜராத்தியில் பாடம் சொல்லிக் கொடுக்கப்பட்டால், தாம் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்ளுபவைகளை அவர்கள் தம் வீட்டுக்கும் கொண்டுவர முடியும் என்பதை அவர்கள் உணரவில்லை. க்ஷேத்திர கணிதம், பின்ன கணிதம், கணக்கு முதலிய பாடங்களில் உபயோகிக்கப் படும் நுட்பச் சொற்களுக்கு சரியான குஜராத்தி சொற்கள் இன்னமும் எனக்குத் தெரியாது. 'வட்டம்' என்ற ஆங்கில பதத்திற்கு சரியான குஜராத்தி வார்த்தையைச் சொல்லும்படி கேட்டால் நான் கஷ்டப்பட்டு யோசிக்க வேண்டியிருக்கும். வெவ்வேறு விதமான முக்கோணங்களுக்கான ஆங்கில வார்த்தைகள் எனக்குத் தெரியும்; ஆனால், ஒரு குஜராத்தி பெயராவது தெரியாது. இது பரிதாபப்பட வேண்டிய விஷயமல்லவா? ஆகையால், உங்கள் குழந்தைகளை உங்களிடமே வைத்துக் கொள்ளுங்கள் என்றே இந்தப் பெற்றோர்களுக்குச் சொல்லு வேன். ஆங்கிலத்தின் மூலம்தான் அவர்களுக்கு நாம் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்றால், அவர்களால் நமக்கு ஒரு பலனும் இல்லை. அவர்களுக்கு நாம் ஆங்கிலத்தில் போதித்தால், சரியான குஜராத்தி பதங்களுக்கு அவர்கள் யாரிடம் போவார்கள்? இதற்காகவா நாம் தேசீயப் பள்ளிக்கூடங்கள் அமைக்கவும், அதற்காக நிதி திரட்டவும் உத்தேசிக்கிறோம்? அதைவிட அந்த யோசனையைக் கைவிட்டுவிட்டு, இந்த நட வடிக்கைகளிலிருந்தே வாபஸாகிவிடுவது நல்லதல்லவா? நானே இந்த குஜராத்தி சொற்களையெல்லாம் கற்றுக்கொடுக்க ஆரம் பித்தால் என்ன? தான் சொல்ல விரும்புவதைச் சொல்லுவதற்கு சரியான வார்த்தைகள் இல்லையே என்று ஆங்கிலேயர் எவரும் கஷ்டப்படுவதில்லை. ஸ்பெர்ஜியன் என்று ஒரு ஆங்கிலேயர் இருந்தார். அவர் அதிகமாகப் படித்தவரல்ல. கடற்படையில் தான் அவருக்கு விசேஷ அக்கறை. ஆனால், அதைப்பற்றி அவர் பேச ஆரம்பித்தால், அது செவிக்கு விருந்தாக இருக்கும். கடற் படை சம்பந்தமாக அசாதாரணமான வார்த்தைகளைக் கூட அவர் சிரமமின்றி உபயோகிப்பதும், அதில் அவருக்கு உள்ள அறிவும் கேட்போரை ஆச்சரியத்தில் ஆழ்த்தும். நம்மிடையே உள்ள பிரபல அறிஞர்களான நரசிங்க ராவ், ஆனந்த சங்கர் போன்ற வர்கள் கூட பல ஆங்கில வார்த்தைகளுக்கு சரியான குஜராத்தி வார்த்தைகளைச் சொல்ல முடியாது. இந்த நிலைமையில் ஆங் கிலத்தில் பாடம் சொல்லிக் கொடுங்கள் என்று என்னைக் கேட்டாலும் நான் மறுத்துவிடுவேன். தாய் மொழியின் மூலம் பாடம் சொல்லிக் கொடுப்பது, ஒத்துழையாமை இயக்கத்தின் ஒரு அம்சமல்ல என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆகையால், தமது குழந்தைகளுக்கு நல்ல ஆங்கிலம் கற்றுக் கொடுப்பதுடன், நமது கைராட்டினம், சங்கீதம் முதலியவைகளில் பயிற்சி அளிக்க வேண்டுமென்று பெற்றோர்கள் விரும்பினால் அதை நான் ஒப்புக் கொள்வேன். பள்ளிக்கூட நேரத்தில் ஒரு பாதி ஆங்கிலம் சொல்லிக் கொடுப்பதற்கும், மற்றொரு பாதி

ராட்டினத்தில் நூற்பதற்குப் பயிற்சி அளிக்கவும் செலவிடுவேன். ஆங்கிலத்தோடு கூட முடிந்த அளவிற்கு குஜராத்தியையும் போதிப்பேன். இந்த அளவிற்கு அவர்களை நான் ஏமாற்றியும் விடுவேன். ஏனெனில், அப்போதும் கூட பையன்களுக்கு நான் குஜராத்தி சொல்லிக் கொடுக்கிறேன் அல்லவா? நம்முடைய எம். ஏ. பட்டதாரிகளில் கூட சிலர் தவருன ஆங்கிலம் எழுது கிருர்கள்; வார்த்தைகளையும் சரியாக எழுதத் தெரிவதில்லை.

பெண்களின் கல்வி பற்றி நான் சொல்ல வேண்டியது நிறைய இருக்கிறது. ஆனல் அது ஒரு பெரிய விஷயம்; ஒரு விதத்தில் பார்த்தால், இயக்கத்துடன் அதற்கு நேரிடையான தொடர்பு கிடையாது. அது எப்படி இருந்தாலும், நமது பெண்களை அறி விலிகளாகவே வைத்திருக்க நாம் விரும்பமாட்டோம். ஆனல், இந்த விஷயத்தில் எந்த வழியைப் பின்பற்றுவது சரியானதாக இருக்கும்? எந்தக் கட்டத்தில் பெண்களுக்கு அளிக்கும் கல் வியை மாதர்களுக்கு அளிக்கும் கல்வியாக மாற்ற வேண்டும்? இவையெல்லாம் ஆழ்ந்த பரிசீலனைக்கு உரிய விஷயங்களாகும். முற்றிலும் கல்விக் கண்ணேட்டத்துடனேயே இதை நாம் அணுக வேண்டும். இப்போதைக்கு நமது நோக்கம் ஒரு அளவிற்கு உட் பட்டதேயாகும். ஆகையால் அவர்களை ஆரம்பப் பள்ளிகளில் சேர்த்து ராட்டினத்தில் நூற்கச் சொல்லலாம். பெண்களின் கல்வி விஷயத்தில் நான் செய்துள்ள சோதனைகளைப் போல் வெகு சிலரேதான் செய்திருக்க முடியும் என்றுலும், மற்ற தரும சங்கட மான விஷயங்களைப் பற்றி நான் குறிப்பிட விரும்பவில்லை. வயது வந்த பையன்கள், வயது வந்த பெண்கள் இருவருக்கும் சேர்த்து ஒரே வகுப்பறையில் நான் பாடம் சொல்லிக் கொடுத்திருக்கி றேன். அந்தச் சோதனை செய்ததைப்பற்றி நான் வருந்தவில்லை. இந்தச் சோதனையில் நான் ஓரளவு தோல்வி அடைந்தேன் என் பது உண்மையே; ஆனல், முற்றிலும் தோல்வி அடைந்து விட வில்லை. ஏனெனில், அவர்களை இடைவிடாமல் கண்காணித்துக் கொண்டும், சிங்கம் போல் கர்ஜித்துக் கொண்டும் இருந்தேன். அதைப் பற்றி நான் அதிகம் பேசாததால், அதை நான் புறக் கணிப்பதாக நினைத்துவிடாதீர்கள்.

'நவஜீவன்' – 3—8—1924

## பெண்கள் கல்வித் திட்டம்

(பெண்களின் கல்விக்காக வித்தியாபீடம் ஒரு திட்டத்தை உருவாக்க வேண்டுமென்று வற்புறுத்தும் தீர்மானம் ஒன்றை ஸ்ரீ சந்துலால் தவே மகாநாட்டில் கொண்டு வந்தார். அந்தத் தீர்மானத்தின் மீது காந்திஜி செய்த பிரசங்கத்தின் சுருக்கத்தைக் கீழே தருகிறேம்:)

பாய் சந்துலால், நான் சொன்னதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளவில்லை. இது மிகவும் ஆழ்ந்த முக்கியத்துவம் வாய்ந்த பெரிய விஷயமாகும். ஆகையால், இதைப் பற்றி விவாதிப்

பதற்கு இந்த மகாநாட்டிற்கு அவ்வளவு தகுதி கிடையாது. பத்மா பென் சொன்னது உண்மையிலேயே எனக்கு அதிசயமாய் இருந்தது. எனக்கு, ஒரு விபசாரி கூட சகோதரியைப் போன்றவள்தான். நான் போன இடங்களிலெல்லாம் அவர்களை மரியாதையுடன் சந்தித்திருக்கிறேன், இனியும் அப்படித்தான் செய்யப் போகிறேன். அவர்களுக்கு கைராட்டினத்தைக் கொடுக்க உத்தேசித்திருக்கிறேன். சமீபத்தில் நான் சிறைப்பட்டிருந்ததன் காரணமாக என்னுடைய கருத்துகள் மாறவில்லை. இந்த விஷயத்தைப் பற்றி என் மனத்தில் பல எண்ணங்கள் குமுறிக் கொண்டிருக்கின்றன. ஆனால், அவற்றையெல்லாம் இப்போது உங்கள் முன்பு கூறுவதற்கு இல்லை. மற்ற யாரையும் விட இந்த விஷயத்தைப் பற்றி நான் அதிகம் சிந்தித்திருக்கிறேன் என்று நான் சொல்லிக் கொள்வேன். இந்தத் தியாகத்தின் பயனாக நமது மக்களிடையே உள்ள வேறு எந்தப் பிரிவினரிடையேயும் ஏற்பட்ட விழிப்பை விட பெண்களிடையே ஏற்பட்டுள்ள விழிப்புத்தான் அதிகமானது என்றும் சொல்லுவேன்.

சர்க்காவானது பெண்களின் உள்ளங்களை ஆழ்ந்து தொடாமல் இருக்க முடியாது. உள்ளத்திற்குப் பயிற்சி அளிப்பது அவர்களுக்கு உண்மையான கல்வி ஆகும். அவர்களே செய்து கொண்டிருக்கும் ஒன்றைப் பற்றி ஒரு தீர்மானம் நிறைவேற்றுவதால் என்ன பயன்? இந்தத் தீர்மானங்களுக்கு அர்த்தமே இல்லை. நமது சொந்த வீடுகளில், நம் கண் முன்பு என்ன நடக்கிறது என்பதையே நாம் பார்ப்பதாகத் தெரியவில்லை. சமீபகாலம் வரையில் நாகரிகம் இல்லாதவர்கள் என்றும், எழுத்து வாசனை அற்றவர்கள் என்றும் கருதப்பட்டு வந்த பெண்கள், தம்முடைய முகமூடிகளைக் களைந்து வெளியே வந்து விட்டார்கள். பல வருடங்கள் நாம் முயற்சி செய்தாலும் இதை விடப் பெரிய கல்வியை அளிக்க முடியுமா? ஏற்கனவே, இந்த இயக்கத்துடன் சேர்ந்தே பெண் கல்வியும் செயல் பட்டுக் கொண்டிருக்கிறது. இது பெண் கல்விக்கான ஒரு சாதனமாக இல்லாதிருந்தால், இந்த இயக்கமே வளர்ச்சி பெற முடியாது என்று கூடச் சொல்லலாம்.

பெண்கள் கல்வியை சரியான முறையில் பரிசீலனை செய்வதாக இருந்தால், அது நம்முடைய எல்லையைத் தாண்டியதாகும். அதை அளவிட முயற்சிப்பது, கடல் நீரை வற்ற வைக்கும், அல்லது கானல் நீரைப் பிடிக்கப் பார்க்கும் ஒரு முயற்சியைப் போன்றதே. மனிதனின் மறுபாதிதான் பெண்; அப்படி இருக்க வேண்டும் என்று அவளுக்கு யார் சொல்லிக் கொடுக்க முடியும்? ஒரு சில பெண்கள் கார்வே சர்வகலாசாலையில் பட்டம் பெற்று விட்டால் அதனால் என்ன பிரயோஜனம்? அது உண்மையான கல்வியை அளிக்கமுடியாது. ஆனால், மனிதனின் மறுபாதிதான் பெண் என்பதை அவர்கள் உணரும்படி செய்து விட்டால் அதுவே உண்மையான கல்வியாக இருக்கும்.

இந்தப் பிரச்னையையும் அதற்கான பரிகாரத்தையும் நாம் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டுமானால், அமைதியாக உட்

கார்ந்து கொண்டு ஒருவரோடு ஒருவர் கலந்து ஆலோசனை செய்து, அதைக் கவனமாகப் பரிசீலனை செய்யவேண்டும். ஆனால், இந்த வித்தியாபீடத்தின் குலபதி என்ற முறையில் நான் ஏதாவது செய்ய வேண்டுமென்று நீங்கள் நினைத்தால், பாய் சந்துலாலும், மற்றவர்களும் எங்கள் மீது போட விரும்பும் சுமையை நாங்கள் தாங்க முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதற்கான வசதிகளோ அல்லது தேவையான அளவிற்குப் பெண் ஊழியர்களோ எங்களிடம் இல்லை. குலபதிக்கு எவ்வளவு தான் ஆசை இருந்தாலும், அவர் அதிகம் செய்துவிட முடியாது. பணத்தை வீணடித்து சில பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து விடுவதால் மட்டும் பெண்கள் கல்வியில் வெற்றி பெற முடியாது. அதனால்தான் நான் பேசாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். நமது பள்ளிக்கூடங்களும், வித்தியாலயங்களும் மாணவிகளை அனுமதிக்கத் தயாராக இருக்கின்றன. நீங்கள் எந்தத் திட்டத்தையும் தயாரித்து எங்களிடம் கொண்டு வரலாம்; வித்தியாபீடம் நிச்சயமாக அதைக் கவனமாகப் பரிசீலனை செய்யும். ஆனால், வித்தியாபீடம் தானாக எந்தத் திட்டத்தையும் தயாரிக்காது. அந்தப் பொறுப்பை "நிபுணர்கள்" தான் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவர்கள் தமது கருத்துகளைத் தெரிவித்து அதற்கு ஆதரவு பெறுவதற்காகக் கிளர்ச்சி செய்து, வித்தியாபீடத்தின் நிர்வாகக் குழுவினிடம் போகட்டும். இந்த நடவடிக்கையிலிருந்து வித்தியாபீடம் ஒதுங்கி நிற்க விரும்பவில்லை. சுயராஜ்யத்துடன் சம்பந்தப்பட்ட ஒரு நல்ல கல்வி முறையைத் தயாரித்து, யாராவது எங்களிடம் கொண்டுவந்து கொடுத்தால் வித்தியாபீடம் அதைப் பரிசீலனை செய்ய மறுத்து விடுவதைத் தவிர வேறு வழி இல்லை. பெண்கள் கல்வியைப் புறக்கணிக்கவோ, மறந்துவிடவோ வித்தியாபீடம் விரும்புகிறது என்று அர்த்தமல்ல. இது சம்பந்தமாக அது ஒரு வேலைத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளக் கூடிய நிலைமையில் இல்லை என்றே கூறுகிறேன். ஒரு கால்மணி நேரத்திற்குள் இந்தப் பிரச்னையை நான் சரியானபடி விவாதிக்க முடியாது. ஒரு தலைவன், ஒரு போர் வீரன் என்ற முறையில் உங்களைத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். பெண்கள் கல்வியில் எனக்கு அக்கறை இல்லை என்ற எண்ணத்தை அகற்றிவிடுங்கள். நாம் பரிகாசத்திற்கு உரியவர்களாகி விடக்கூடாது என்பதற்காகவாவது இந்தத் தீர்மானத்தை வாபஸ் பெற்றுக் கொள்ளுங்கள்.

—'நவஜீவன்' - 10—8—1924

# 7

# ஆசிரியர்களுக்கு

மகாநாடு நடந்து முடிந்துவிட்டது. ஆசிரியர்கள், பொது ஜனங்கள் இருவருக்குமே இந்த மகாநாடு முக்கியமானது என்றே கருத வேண்டும். ஆனால், அதற்குரிய முக்கியத்துவம் அளிப்பதற்கு இது சமயமல்ல. ஆசிரியர்களின் மதிப்பை ஆசிரியர்களும் உணரவில்லை, பொதுமக்களும் உணரவில்லை. ஆசிரியர்களின் சம்பளத்தைப் பார்த்து அவர்களுடைய மதிப்பைக் கணக்குப் போடுகிறார்கள். குமாஸ்தாவைவிட அவர்கள் குறைவான சம்பளம் பெறுவதால்—அதுதான் இப்போதைய வழக்கமாயிருக்கிறது—குமாஸ்தாவைவிட ஆசிரியரின் மதிப்பு குறைவு என்று நினைக்கிறார்கள். இதனால்தான் ஆசிரியரை 'முன்ஷிஜி' என்று அழைக்கிறார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

அப்படியானால், ஆசிரியரின் அந்தஸ்தை எப்படி உயர்த்துவது? ஏழு லட்சம் கிராமங்களிலுள்ள ஏழு லட்சம் ஆசிரியர்களின் சம்பளங்களை உயர்த்துவது சாத்தியமா? அது விரும்பத் தக்கதுதான் என்றாலும், அது சாத்தியமில்லையென்றால், சில குறிப்பிட்ட கிராமங்களில் மட்டும் ஆசிரியர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்துவிட்டு மற்ற கிராமங்களுக்குக் கல்வியே வேண்டாம் என்று விட்டுவிடுவதுதான் சிறந்த வழி என்று தோன்றுகிறது. உண்மையில் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டதிலிருந்து நாம் இப்படித்தான் செய்து வந்திருக்கிறோம். இந்த முறை தவறு என்பதை நாம் உணர்ந்திருப்போமென்றே நினைக்கிறேன். ஆகையால், எல்லா கிராமங்களுக்குமே கல்வியளிக்கக் கூடிய ஒரு வழியை நாம் கண்டுபிடிக்க வேண்டும். சம்பளங்களைப் பார்த்து ஆசிரியர்களின் மதிப்பைக் கணக்குப் போடக் கூடாது; ஆசிரியர்களும் கல்வியையே தமது முக்கிய நோக்கமாக வைத்துக்கொண்டு, நம் வேலைக்கு நாம் என்ன சம்பளம் பெறுகிறோம் என்பதை இரண்டாம் பட்சமாகவே கருத வேண்டும். இதுதான் சரியான வழியாக இருக்கும். சுருங்கக் கூறுமிடத்து, கல்வியைத் தனது தருமமாக ஆசிரியர் கருதி, அதைச் செய்ய வேண்டும். இந்த வேள்வியைச் செய்யாமல் தன் ஆகாரத்தை உட்கொள்ளும் ஆசிரியர் ஒரு திருடனாகவே மதிக்கப்பட வேண்டும். இப்படிச் செய்தால், நல்ல ஆசிரியர்களுக்குப் பஞ்சம் இராது. அவர்களுடைய மதிப்பும் லட்சம் மடங்கு உயர்ந்துவிடும். ஒவ்வொரு ஆசிரியரும், தன் மனப்பான்மையை மாற்றிக்கொள்வதன் மூலம் தன்னைத்தானே அந்த நிலைமைக்கு உயர்த்திக் கொண்டுவிட முடியும்.

இந்த மகாநாட்டின் நோக்கங்கள் வெற்றிபெறச் செய்வதோ அல்லது தோல்வியுறச் செய்வதோ முற்றிலும் ஆசிரியர்களிடமே தான் இருக்கிறது. வெற்றியின் ரகசியம் ஆசிரியர்களின் உறுதியில்

தான் இருக்கிறது. ஒவ்வொரு ஆசிரியரும், நூல் நூற்பதையும், அத்துடன் இணைந்த வேலைகளையும் கற்றுக்கொண்டு, ஒவ்வொரு மாதமும் காங்கிரசுக்குக் குறைந்த பட்சம் 3000 கெஜம் நூல் கொடுக்கட்டும். அதுவே பெரிய சாதனையாக இருக்கும், மகா நாட்டுக்கும் அது கணிசமான வெற்றியாக இருக்கும். ஒவ்வொரு ஆசிரியரும் இதைச் சுலபமாகச் செய்யலாம். சுயராஜ்யம் பெறுவதற்கு உதவி செய்வதே இப்போது ஒவ்வொரு ஆசிரியரின் கடமையுமாகும். நூல் நூற்பதும், கதர்த் துணி நெய்வதும்தான், அவர்கள் இந்த லட்சியத்திற்குச் செய்யக் கூடிய முதலாவதும், மிகக் குறைந்ததுமான உதவியாகும். இதைச் செய்பவர்கள் மற்ற எல்லா உதவிகளையும் செய்பவர்களாகவே கருதப்படலாம்; ஆனால், இதைக் கூடச் செய்யாதவர்கள் வேறெதையும் செய்ய முடியாது.

ஆசிரியர்கள் வெற்றி பெற வேண்டிய மற்றொரு சோதனை, தீண்டாமை ஒழிப்பாகும். ஆசிரியர்களுக்குச் சிறந்த பண்பாடும் நல்லொழுக்கமும் இருந்தால், தீண்டாதாரின் குழந்தைகளை அவர்கள் தம் பள்ளிக்கூடங்களுக்குக் கொண்டுவர முடியும். இந்த முயற்சியில் பள்ளிக்கூடத்திற்கே அபாயம் வருவதாயிருந்தாலும் பரவாயில்லை. ஏனெனில், தருமத்திற்குப் பிறகுதான் பள்ளிக்கூடம். பள்ளிக்கூடத்தின் தேவைகளுக்காக தருமத்தை விட்டுக்கொடுக்க முடியாது. தீண்டாமை ஒழிப்பில் மாணவர்களுக்கு பிரத்தியட்சமான ஒரு உதாரணம் காட்டாவிட்டால், அவர்கள் இங்கு வேறு என்னதான் கற்றுக்கொள்ளப் போகிறார்கள்? "எங்களுடைய குழந்தைகளுக்கு நேர்மை, நாணயம் பற்றி ரொம்ப அதிகமாகக் கற்றுக்கொடுத்துவிடாதீர்கள். அப்படிச் செய்தால் அவர்கள் வியாபாரத்திற்குத் தகுதியற்றவர்களாகிவிடுவார்கள்" என்று பெற்றோர்கள் சொன்னால், ஆசிரியர் அதற்குச் சம்மதிப்பாரா? பெற்றோர்கள் அப்படிச் சொன்னால் அந்தப் பிள்ளைகளே தமக்கு வேண்டாம் என்று ஆசிரியர் மறுத்துவிடமாட்டாரா? சத்தியத்தில் நம்பிக்கை இல்லையென்றால், சரித்திரம், பூகோளம், கணிதம் ஆகிய பாடங்களைக் கற்றுக்கொடுப்பதால் மாணவனுக்கு என்ன பிரயோசனம்? அதே மாதிரி முஸ்லிம்கள், பார்ஸிகள் மற்றும் இதர வகுப்பினர்களிடம் சென்று, உங்களுடைய குழந்தைகளை தேசீயப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புங்கள் என்று பெற்றோர்களை ஆசிரியர் கேட்டுக்கொள்ள வேண்டும்.

தேசீய இயக்கத்தின் வெற்றிக்கு அத்தகைய ஆசிரியர்கள் உதவியாக இருப்பார்கள். அவர்கள் தம்முடைய சம்பாத்தியத்தை மறந்து, என்ன தியாகம் செய்ய வேண்டியிருந்தாலும், கல்வி யளிப்பதே தம்முடைய கடமை என்று நினைத்தால் தான் பள்ளிக்கூடங்கள் புத்துயிர் பெறும்; அவை உண்மையான தேசீயப் பள்ளிகளும் ஆகும். நாம் ஒரு தடவை ஒன்றை ஒப்புக் கொண்டுவிட்டால், அதற்கு உண்மையாக நடந்துகொள்ள

வேண்டும் என்பதுதான், வயதானவர்கள், இளைஞர்கள், ஆண்கள், பெண்கள் எல்லோருமே முதலில் தெரிந்துகொள்ள வேண்டிய பாடமாகும்.

— 'நவஜீவன்' - 10—8—1924

# 8

# தேசீயக் கல்வியின் அத்தியாவசியத் தேவைகள்

## 1

மகாவித்தியாலயத்திலுள்ள மாணவர்கள் சில விஷயங்களை மிகத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். இந்த ஸ்தாபனத்திற்கு வரும் ஒவ்வொருவரும், இந்த வித்தியாலயத்தின் அடிப்படை லட்சியம் என்ன என்பதைப் பூராவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். அந்த லட்சியம் இல்லையென்றால், தேசீய ஸ்தாபனம் என்ற தன்மையை அது இழந்துவிடும். சுயராஜ்யம் பெறுவதற்கான வழிகளாக ஒரு வேலைத் திட்டத்தை நாங்கள் வகுத்திருக்கிறோம். அந்த வேலைத் திட்டம் என்ன என்பதை நீங்கள் தெரிந்துகொண்டு, அதைச் செயலில் நடத்திக்காட்ட வேண்டும். இல்லாவிட்டால், நாம் உலகத்தை ஏமாற்றுபவர்களாவோம். நீங்கள் நிறைய அறிவு பெறலாம்; ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி பெறலாம்; காசியிலுள்ள பண்டிதர்கள் கேட்டு வெட்கப்படக் கூடிய அளவுக்கு உங்களுடைய சமஸ்கிருத உச்சரிப்பு அவ்வளவு சுத்தமானதாக இருக்கலாம். ஆனால், அதனாலெல்லாம் ஒரு லாபமும் இல்லை. அந்த விஷயங்களெல்லாம் இங்கே உங்களுக்குக் கிடைக்காது. வேறு எந்த இடங்களிலும் நீங்கள் பெற முடியாதவைகளும், மேலே குறிப்பிட்டவைகளை விட மிக உயர்ந்தவைகளுமான விஷயங்களைக் கற்றுக்கொள்ளுவதற்காகவே நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள். அவை பின்வருமாறு: கைராட்டினம், தீண்டாமையை ஒழித்து, தீண்டாதார்களையும் நமது சமூகத்தைச் சேர்ந்தவர்களாக்குவது, ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்சிகளிடையே ஒற்றுமை ஆகியவைதான். தீண்டாத வகுப்பு, அல்லது முஸ்லிம் அல்லது பார்ஸி வகுப்புகளைச் சேர்ந்த எந்தப் பையனுடனாவது நீங்கள் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டிருக்கிறீர்களா? இந்த ஸ்தாபனத்தில் அவனுக்கும் இடம் இருக்கிறதென்று அவனுக்கு விளக்கிக் கூறி, இந்தப் பள்ளிக்கூடத்தில் வந்து சேரும்படி அவனை நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களா?

உங்களைப் பரீட்சை செய்து பார்ப்பதற்காக வெளியிலிருந்து இங்கே வரும் ஒருவர், ஆங்கிலம், குஜராத்தி அல்லது சமஸ்கிருதத்தில் உங்களுக்குள்ள தேர்ச்சியைக் கண்டு ஏமாந்து விடமாட்டார். இங்கு நீங்கள் சர்க்கா சுற்றுவீர்களா இல்லையா, தீண்டாமை ஒழிப்பில் வெற்றி பெற்றீர்களா, இல்லையா என்பதையே பார்ப்பார். சர்க்கா, தீண்டாமை ஒழிப்பு, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஆகிய விஷயங்களில் நாம் இங்கு நல்ல வேலை செய்து கொண்டிருக்கிறோம் என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளும்படி நாம் நடந்துகொள்ள வேண்டும். இவற்றைத் தவிர, மற்ற எல்லா விஷயங்களிலும் நீங்கள் தேர்ச்சி பெற்றால் கூட பிரயோசனமில்லை ; மேற்கண்ட விஷயங்களில் நீங்கள் தேர்ச்சி பெற்றாலன்றி இந்த வித்தியாலயத்தில் நீங்கள் செலவிட்ட வருடங்கள் வீண் வியர்த்தமாகவே முடியும்.

நவஜீவன் ' – 10—8—1924

## 2

(திலகர் வித்தியாபீடப் பட்டமளிப்பு விழாவின் போது காந்திஜி நிகழ்த்திய ஒரு பிரசங்கத்திலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:)

நீங்கள் இங்கு கற்றுக் கொள்ளுவதன் நோக்கம் சுயராஜ்யம் தான். சுயராஜ்யத்திற்காகப் போராடும் ஒரு போர் வீரன் என்ற முறையில்தான், குஜராத் தேசீய சர்வகலாசாலையின் (குஜராத் வித்தியாபீடம்) குலபதி என்ற பொறுப்பை ஏற்றுக் கொள்ள நான் சம்மதித்தேன். மாணவர்களை சுயராஜ்யப் போர் வீரர்களாக்குவதற்கு நம்மால் முடிந்த பயிற்சியை அளிக்கலாம் என்ற நோக்கத்துடன் அந்தப் பதவியை ஏற்றுக் கொண்டேன். சென்ற தடவை நான் இங்கிலாந்துக்குச் சென்றபோது, 1914 ஆகஸ்டு 6-இல் அங்கே போய்ச் சேர்ந்தேன். அங்கு நான் கண்டதென்ன? யுத்தத்தின் தீவிரம் அதிகமாகிக் கொண்டிருந்தது. அங்குள்ள சட்டக்கல்லூரிகள் மூடப்பட்டுக் கொண்டிருந்தன. ஆக்ஸ்போர்டிலும் கேம்பிரிட்ஜிலும் கூட பாடபோதனை அநேகமாக நின்றுவிட்டது. யுத்தம் நடந்து கொண்டிருந்ததால், கல்விக்கு அவர்கள் இரண்டாவது இடம் தான் கொடுத்தார்கள். அவர்கள் செய்தது சரிதான். கல்வியின் நோக்கம் என்ன ? மாணவர்களை நல்ல பிரஜைகளாக்க வேண்டும், நல்ல தேச ஊழியர்களாக்க வேண்டும், தம்முடைய தாய் நாட்டுக்கும், தாம் வாழும் சமூகத்திற்கும் புகழ் தேடித்தருபவர்களாக்க வேண்டும், நல்ல விதத்தில் அவர்கள் வாழ்ந்து, நல்ல குடித்தனக்காரர்களாகும்படி செய்ய வேண்டும் என்பதுதானே கல்வியின் நோக்கம்.

சமீபத்தில் இங்கு வந்த ஆங்கிலேயர், சர்க்கார் பள்ளிக்கூடத்திற்கும், உங்களுடைய பள்ளிக்கூடத்திற்குமிடையே உள்ள வித்தியாசம் என்ன என்று தானே பார்ப்பார் ? உங்களுடைய

கட்டிடங்களைப் பார்வையிடுவாரா? அல்லது கல்வி, கேள்வியில் சிறந்த உங்கள் ஆசிரியர்களின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பாரா? அல்லது நீங்கள் ஆங்கிலத்தில் பேசுவதைக் கேட்க வேண்டும் என்று விரும்புவாரா? இல்லை. புதிதாக எதையாவது பார்க்க வேண்டும் என்று தான் ஆசைப்படுவார். அவர் விஜயம் செய்த மற்ற ஸ்தாபனங்களில் நூல் நூற்றலைப் பார்த்திருக்க மாட்டார். ஆகையால், இங்கு நூற்றலையும், நெசவு வேலையையும் பார்க்க விரும்புவார். உங்களுடைய கொல்லையில் வளரும் பருத்திப் பயிரைப் பார்க்க விரும்புவார். உங்களுடைய நூலைப் பார்க்க விரும்புவார். இது மெல்லிய இழையாக இருந்தால், "உண்மையில் இதனுலெல்லாம் மாஞ்செஸ்டருக்கு விபரீதம் தான்" என்று தனக்குத்தானே சொல்லிக் கொள்ளுவார். ஆனால், நீங்கள் நூற்பது முரட்டு நூலாயிருந்தால், "மாஞ்செஸ்டருக்கு இன்னும் அபாயம் வந்துவிடவில்லை" என்று நினைப்பார். ஐரோப்பிய துரைகளைப் போல் நீங்கள் ஆடைகள் அணிந்திருக்க வேண்டுமென்று அவர் எதிர்பார்க்க மாட்டார்; அதற்கு மாருக, நம்முடைய ஏழை மக்களைப் போலவே நீங்களும் வாழ்க்கை நடத்த வேண்டுமென்றே எதிர்பார்ப்பார். உங்களுடைய அலுவல்களை உங்களுடைய தாய் மொழியிலேயே நடத்த வேண்டுமென்று எதிர்பார்ப்பார். நல்ல ஆங்கிலம் பேசக்கூடிய ஆசிரியர்கள் உங்களுக்கு இருப்பதில் பெருமை ஒன்றுமில்லை. ஆனால், ஹிந்தி அல்லது மராத்தி மூலம் உங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்கள் இருந்தால், அவர்கள் ஏழைகளாகவும், மதப் பற்றுள்ளவர்களாகவும், தம்மிடமுள்ள யாவற்றையும் தியாகம் செய்யக் கூடியவர்களாகவும் இருந்தால், அது உங்களுக்குப் பெருமையளிப்பதாக இருக்கும். மற்றவர்களிடம் உள்ள அறிவுத் திறன் அவர்களிடம் இல்லாவிட்டாலும் பாதகமில்லை. வித்தியா பீடத்தின் நோக்கத்தையும், அது என்ன சாதிக்க உத்தேசித்திருக்கிறது என்பதையும் நான் தெளிவாக அறிய விரும்புகிறேன்.

'நவஜீவன்' - 14—9—1924

# 9

# தேசீயப் பள்ளிக்கூடங்கள்

(பெல்காமில் நடைபெற்ற இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையில் காந்திஜி செய்த தலைமைப் பிரசங்கத்திலிருந்து ஒரு பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது :)

கதருக்கு அடுத்தபடியாக, தேசீயக் கல்வி ஸ்தாபனங்களை நடத்துவதுதான் மிக வெற்றிகரமாக இருந்திருக்கிறதென்பது ஒருக்கால் பொதுமக்களுக்குத் தெரியாமலிருக்கலாம். ஒரு சில மாணவர்களாவது இருக்கும் வரையில், இந்த ஸ்தாபனங்களைக்-

கைவிடுவதற்கில்லை. தம்முடைய கல்லூரிகளையும், பள்ளிக்கூடங்களையும் தொடர்ந்து நடத்துவது, தம்முடைய கௌரவத்தைப் பற்றிய ஒரு விஷயம் என்று ஒவ்வொரு மாகாணமும் நினைக்க வேண்டும். ஒத்துழையாமையை நிறுத்திவைப்பதால் இந்த ஸ்தாபனங்கள் பாதிக்கப்படக் கூடாது. அதற்கு மாறாக, இந்த ஸ்தாபனங்களைத் தொடர்ந்து நடத்துவதற்கும், பலப்படுத்துவதற்கும் முன்பைவிட அதிக முயற்சிகள் செய்யப்பட வேண்டும். பெரும்பாலான மாகாணங்களில் தேசீயப் பள்ளிகளும், கல்லூரிகளும் இருக்கின்றன. குஜராத்தில் மட்டும்தான் ஒரு தேசீய சர்வகலாசாலை இருக்கிறது. இதைப் பராமரிப்பதற்கு வருடத்தில் ரூ. 1,00,000 ஆகிறது. இதன் நிர்வாகத்தின் கீழ் மூன்று கல்லூரிகளும், எழுபது பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன; ஒன்பதாயிரம் மாணவர்கள் இருக்கிறார்கள். ஆமதாபாத்தில் இதற்குச் சொந்தமான பூமி இருக்கிறது. ஏற்கனவே, கட்டிடத்திற்காக ரூ. 2,05,323 செலவிடப்பட்டிருக்கிறது. நாடு பூராவிலும் ஒத்துழையாமை செய்யும் மாணவர்கள், ஆடம்பரமில்லாமல் அருமையான வேலை செய்திருக்கிறார்கள். அவர்கள் செய்தது மகத்தானதும், உன்னதமானதுமான ஒரு தியாகமாகும். லோகாயதக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் போது, அவர்கள் இழந்ததை விட அதிக லாபம் பெற்றிருக்கிறார்களென்றே நான் சொல்லுவேன். அவர்கள் மூலம்தான் நாட்டின் இளைஞர்கள் அவதிப்பட்டு, சிறுமைப்படுத்தப்பட்டார்கள்; அதனால்தான் அவர்கள் தம்முடைய பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விட்டார்கள். இந்த ஸ்தாபனங்களில் தான் நம்முடைய அடிமைத்தனம் என்ற சங்கிலியின் முதல் கரணை பூட்டப்படுகிறது. இவற்றிற்குச் சமமான தேசீய ஸ்தாபனங்கள் எவ்வளவுதான் திறமையின்றி நடத்தப்பட்டாலும் கூட, நம்முடைய சுதந்திரத்திற்கான முதல் கருவிகள் செய்யப்படும் தொழிற்சாலைகளாக இருக்கின்றன. ஆகையால், இந்த ஸ்தாபனங்களைப் பராமரிப்பது, மாகாண நிதிகளின் முதல் பொறுப்பாக இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். ஆனால், இந்த ஸ்தாபனங்கள் உண்மையான தேசீயத் தன்மை வாய்ந்தவையாக இருக்க வேண்டுமானால், உண்மையான ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை வளர்ப்பதற்கான நிலையங்களாக இருக்க வேண்டும். தீண்டாமையை ஹிந்து மதத்திற்கு ஒரு இழுக்காகவும், மனிதவர்க்கத்திற்கு எதிரான ஒரு குற்றமாகவும் ஹிந்து மதத்தைச் சேர்ந்த பையன்களும், பெண்களும் கருதும்படி செய்வதற்கு இந்த ஸ்தாபனங்கள் பயிற்சி நிலையங்களாக இருக்க வேண்டும். நூல்நூற்பது, நெசவு ஆகிய வேலைகளில் நிபுணர்களைத் தயாரிக்கும் பயிற்சிப் பள்ளிக்கூடங்களாகவும் அவை இருக்க வேண்டும். கதரும், கைராட்டினமும் சக்தி வாய்ந்த சாதனங்கள் என்ற நம்பிக்கையை காங்கிரஸ் தொடர்ந்து வைத்துக்கொண்டிருந்தால், இந்த ஸ்தாபனங்கள் கைராட்டினத்தின் பெருமையை உயர்த்துவதற்கு வேலை செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்க உரிமையிருக்கிறது. கதர் உற்பத்

திக்கான தொழிற்சாலைகளாகவும் அவை இயங்க வேண்டும். இதனால் பையன்களும், பெண்களும் எந்த இலக்கியப் பயிற்சியுமே பெறக் கூடாதென்று அர்த்தமில்லை. மூளைக்குப் பயிற்சியளிப்பதுடன், கைக்கும், உள்ளத்திற்கும் சேர்ந்து பயிற்சியளிக்க வேண்டுமென்று நான் சொல்லுகிறேன். ஒரு தேசீயப் பள்ளிக்கூடத்தின் அல்லது கல்லூரியின் தரமும், உபயோகமும் அவற்றில் படிக்கும் மாணவர்களின் இலக்கிய சாதனைகளைப் பொறுத்திருக்கவில்லை; அவர்களிடமுள்ள தேசீயம், பஞ்சடிக்கும் வில்லைக் கையாளுவதில் அவர்களுக்குள்ள சாமர்த்தியம், கைராட்டினம், தறி ஆகியவற்றில் அவர்களுக்குள்ள திறமை முதலியவைகளைக் கொண்டே மதிப்பிடப்படும். எந்த ஒரு தேசீயப் பள்ளிக்கூடமோ அல்லது கல்லூரியோ மூடப்பட்டு விடக்கூடாது என்றே நான் பெரிதும் விரும்புகிறேன். ஆயினும், ஹிந்துக்களல்லாத பையன்களை அனுமதிக்கும் விஷயத்தில் அலட்சியமாக இருப்பதும், தீண்டாதார் வகுப்பு மாணவர்களை அனுமதிக்க மறுப்பதும், தன்னுடைய பயிற்சியில் பஞ்சு பட்டை போடுதல், நூற்றல் இரண்டையும் இன்றியமையாத அம்சங்களாகக் கொள்ளாததுமான எந்தப் பள்ளிக்கூடத்தையும், அல்லது கல்லூரியையும் மூடிவிட நான் கொஞ்சமும் தயங்க மாட்டேன். பள்ளிக்கூடத்தின் பெயர்ப் பலகையில் 'தேசீய' என்ற வார்த்தை இருந்தால் போதும்; எந்த சர்க்கார் சர்வ கலாசாலையுடனும் அது இணைக்கப்படவில்லை அல்லது வேறு விதங்களில் அது சர்க்கார் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருக்கவில்லை என்பதுடன் நாம் திருப்தியடையக் கூடிய காலம் தாண்டி விட்டது. தாய் மொழியையும், ஹிந்துஸ்தானியையும் புறக்கணிக்கும் மனப்பான்மை இன்னமும் பல தேசீய ஸ்தாபனங்களில் காணப்படுகின்றன என்பதையும் நான் எடுத்துக் காட்டாமல் விடக் கூடாது. தாய் மொழி அல்லது ஹிந்துஸ்தானியின் மூலம் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டியதன் அவசியத்தை இன்னும் பல ஆசிரியர்கள் உணரவில்லை. தேசீயக் கல்வியளிக்கும் பணியில் ஈடுபட்டிருப்பவர்கள், நான் குறிப்பிட்ட பல விஷயங்களைப்பற்றித் தம்முடைய அனுபவங்களைப் பரிமாறிக் கொள்ளுவதற்கும், சாத்தியமானால் கல்வித் துறையில் ஒரு பொதுவான வேலைத் திட்டத்தை வகுத்து, அமல் நடத்துவதற்கும் ஸ்ரீ கங்காதர ராவ் ஒரு மகாநாடு கூட்டியிருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன்.

– 'எங் இந்தியா' – 26–12–1924

# 10

# உபயோகமான சில யோசனைகள்

## 1

சமீபத்தில் நான் டில்லியில் கொஞ்ச காலம் தங்கியிருந்த போது, டாக்டர் சுமந்த மேத்தாவிடமிருந்து பின் கண்ட கடிதம் எனக்குக் கிடைத்தது :

"பம்பாய் சர்வகலாசாலைக் கல்லூரிகளில் அளிக்கப்படுவது போன்ற கல்வியை அளிப்பதற்காக நமது வித்தியாலயம் ஏற்படவில்லை. ஆனால், தெரிந்தோ, தெரியாமலோ நாம் அவர்களையே பின் பற்றுவது போல் தோன்றுகிறது.

"சுதந்திரப் போராட்டத்திற்குப் போர் வீரர்களைத் தயார் செய்வதும், பல்வேறு துறைகளில் சமூக அபிவிருத்திக்கான ஊழியர்களை தயார் செய்வதுமே வித்தியாலயத்தில் நாம் செய்ய வேண்டிய வேலையாகும். முதலில் கூறியவர்கள் முக்கியமாக அரசியல் வேலையிலும், இரண்டாவதாகச் சொன்னவர்கள் சமூக வேலையிலும் ஈடுபடுவார்கள். இவ்விருவரும் ஒருவரோடொருவர் தொடர்பே இல்லாதவர்கள் அல்ல என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது.

"நம்முடைய படித்த இளைஞர்களில் பலர் கிராமங்களில் போய் குடியேறி கதர் வேலை சம்பந்தமாக அங்கு வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். வித்தியாலயத்திலிருந்து நாம் பெற்ற மிகப் பெரிய லாபம் இது. இப்படி கிராமங்களுக்குப் போகும் மாணவர்களுக்கு இப்போது வித்தியாலயத்தில் அளிக்கப்படுவது போன்ற கல்வி தேவையில்லை. நூற்பதிலிருந்து விற்பது வரை கதரைப் பற்றிப் பையன்கள் அறிந்திருக்க வேண்டும்; கணக்கு வைத்துக் கொள்ளுதல், பல்வேறு விதமான கூட்டுறவு சங்கங்களை நடத்துதல் முதலியவைகளையும் அறிந்திருக்க வேண்டும். தேசீயக் கல்வியின் அர்த்தம் என்ன அதன் நடைமுறை என்ன, மக்களுக்கு எப்படி சேவை செய்யலாம் என்பவைகளையும், உதாரணமாக, தீண்டாமை ஒழிப்பு ஆகியவைகளையும் அறிந்திருக்க வேண்டும். ஆனால், வித்தியாலயத்தில் அம்மாதிரி கல்வி முறை எதுவும் அமல் நடத்தப்படவில்லை என்றே நான் அஞ்சுகிறேன். ஆகையால் அங்கு அவசியமானதை அளிக்காமல், அனாவசியமானதையெல்லாம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

"மேற் கூறிய பயிற்சி பெற்ற மாணவர்கள் வேலை சம்பாதித்துக் கொள்ள முடியும் என்பதே இப்போதுள்ள நிலைமையாகும். உதாரணமாக பில் வகுப்பினர், தீண்டாதார், காளிபராஜ் பூர்வகுடிகள் ஆகியோரிடையேயோ அல்லது கிராமங்களிலோ அவர்கள் வேலை செய்யலாம்.

"இந்த வேலையை ஏற்றுக் கொள்பவர்கள் மகாவித்தியாலயத்துடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தால், வித்தியாலயத்தைச் சேர்ந்த ஒவ்வொரு பட்டதாரிக்குமே வேலைதேடிக் கொடுப்பது சாத்தியமாக இருக்கலாம். இன்று குஜராத்தில் உள்ள நிலைமை என்ன? அரசியல் போராட்டத்திற்கோ அல்லது சேவை செய்வதற்கோ போதுமான அளவு ஊழியர்கள் இடம் பெறவில்லை. வித்தியாலயம் இவர்களுக்குப் பயிற்சி அளிக்கட்டும்.

"ஹரி கதைகள், பஜனைகள் போன்ற பழைய வழிகளில் பாமர மக்களுக்கு அறிவூட்டுவதற்கும் இவர்கள் பயிற்றுவிக்கப்படலாம். அறிவு வளர்ச்சிக்கான சினிமா படம் காட்டுவதையும் இவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதற்குப் பதிலாக, வர்த்தகம், சமஸ்கிருதம், தத்துவம், பொருளாதாரம், இலக்கியம் முதலிய வகுப்புகளை நடத்திக் கொண்டிருக்கிறோம்.

"குஜராத் கல்லூரியை விட வித்தியாலயத்தின் வேலை இன்னும் உயர்வானது என்று நான் நம்புகிறேன் :

1. ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் இடையே இன்னும் ஆழ்ந்த உறவு இருக்கிறது.

2. கல்வி பற்றிய அதனுடைய நோக்கு வேறுவிதமானதாக இருக்கிறது.

3. சர்க்கார் கல்வி ஸ்தாபனங்களை விட இவற்றில் சூழ் நிலை இன்னும் அதிகத் தூய்மையானதாக இருக்கிறது.

"இருந்தாலும் சர்க்கார் கல்வி ஸ்தாபனங்களுடன் போட்டியில் இறங்க வேண்டுமென நாம் நினைக்கக் கூடாது என்று கருதுகிறேன். அதனால் நமக்கு ஒரு நன்மையும் ஏற்படாது. இந்தக் கருத்துகளை நீங்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டால் நான் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. ஆனால், ஒரு அளவிற்காவது இவற்றை அங்கீகரித்தால், அம்மாதிரியான பாடத் திட்டம் ஒன்றைத் தயாரிக்க நான் உதவி செய்கிறேன். ஏனெனில், இந்தத் துறையில் எனக்குக் கொஞ்சம் அனுபவம் இருக்கிறது."

இந்தக் கடிதத்தை நான் வரவேற்கிறேன். இக்கடிதத்தில் உள்ள யோசனையின் சாராம்சத்தை ஆச்சாரிய கித்வானி அமல் நடத்தி இருக்கிறார். வாய்ப்பு கிடைத்த போதெல்லாம் பல்வேறு இடங்களில் மாணவர்களை சமூக சேவை வேலையில் அவர் ஈடுபடுத்தியிருக்கிறார் ; அவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டும் இருந்திருக்கிறார். இது பாடத் திட்டத்தின் ஒரு அம்சமல்ல ; ஆயினும் தனிப்பட்ட ஒரு முறையில் பரீட்சார்த்தமாகவே செய்யப்பட்டது ; இதை நிரந்தர அம்சமாக்கிப் பாடத் திட்டத்திலேயே சேர்க்க வேண்டும் என்று டாக்டர் மேத்தா விரும்புவது நல்லதுதான். இப்போதுள்ள பாடத் திட்டத்திற்குப் பதிலாக, தம்முடைய திட்டத்தை வைக்க வேண்டுமென்று அவர் யோசனை கூறுகின்றார்.

என்னைப் பொறுத்தவரையில் இதை நான் வரவேற்பேன். இப்போதுள்ள பாடத் திட்டத்தை அடியோடு நிராகரிக்க வேண்டிய அவசியம் இல்லையென்றே நான் கருதுகிறேன். அப்படிச் செய்ய வேண்டியது அவசியமாக இருந்தால் கூட, அது சாத்தியமாக இராது. மாணவர்களின் மனோதத்துவத்தைக் கருத்தில் கொண்டே இப்போதைய பாடத் திட்டம் தயாரிக்கப் பட்டது. மற்ற மாகாணங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, சேவை செய்ய வேண்டுமென்ற உறுதி குஜராத்தில் தாமதித்துத் தான் ஏற்பட்டது. சேவை செய்வதற்கு மாணவர்கள் தயாராக இல்லை. மேலும், சேவை செய்பவர்களும், வயிற்றுப்

பிழைப்புக்கு சம்பாதிக்கும் பிரச்னையும் இருக்கிறது. வயிற்றுப் பிழைப்புக்கு சம்பாதிக்க உதவி செய்வதுதான் கல்வியின் நோக்கம் என்று பெரும்பாலோர் உறுதியாக நம்புகிருர்கள். சம்பாத்தியத்துடன் நின்று விடுவதாக இருந்தால் அதைக் கூட மன்னித்து விடலாம், ஆனால், அதைத் தாண்டியும் போகிருர்கள். பணம் பண்ண வேண்டும், மற்றவர்கள் மீது அதிகாரம் செய்யக் கூடிய நிலைமையை அடையவேண்டும் என்ற ஆசையும் இருக் கிறது. இந்த எண்ணம் இருக்கும் வரையில், நம்முடைய கொள்கைகளுக்கு முற்றிலும் பொருத்தமாக உள்ள, குறைபாடே இல்லாத ஒரு பாடத் திட்டத்தை நாம் வைக்க முடியாது. திடீரென்று இதில் தீவிரமான மாறுதல் செய்வது கஷ்டம் என்று நான் நினைக்கிறேன். ஆனல், கொஞ்சம் கொஞ்சமாக இந்த எண்ணத்தை மாற்றி, அதற்கு இரண்டாவது இடம் கொடுக் கும்படி செய்வது சாத்தியமென்றே நினைக்கிறேன்.

வித்தியாபீடம் தனது மாணவர்களுக்கு சமூக சேவைக்கான வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும் என்பதையும், அவர்கள் ஜீவனோபாயத்திற்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொள்ளுவதற்கான சந்தர்ப்பங்களைத் தேடித்தர வேண்டும் என் பதையும் நான் ஒப்புக் கொள்ளவேண்டும். வாய்ப்புகள் இல்லா விட்டால் கூட வித்தியாபீடமே அத்தகைய வாய்ப்புகளைச் சிருஷ் டிக்க வேண்டும். ஜீவனத்திற்குப் பணம் சம்பாதிப்பது ஒன்றே கல்வியின் நோக்கமாக இருக்கக் கூடாது என்ருலும், அதையும் கவனிக்க வேண்டியதுதான். தன்னைத்தானே அபிவிருத்திசெய்து கொள்ளுவதுதான் கல்வியின் நோக்கம். அதில் ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதிக்கும் தகுதியும் அடங்கியிருக்கிறது.

ஆங்கிலம் தெரிந்தாலொழிய பெரும்பாலான மாணவர் களுக்குத் திருப்தி ஏற்படுவதில்லையென்று தெரிகிறது. இலக்கி யத்திலும் தமக்குப் போதிய பயிற்சி அளிக்கப்பட வேண்டு மென்று அவர்கள் எதிர்பார்க்கிருர்கள். அதில் ஒன்றும் கெடுதல் இல்லை. இதையே அவர்கள் முக்கியமாகக் கருதிவிடாமல் இருக் கும்படி நாம் பார்த்துக் கொள்ளவேண்டும். அதையே அவர்கள் ஒரு நோக்கமாக்கிக் கொண்டுவிடக் கூடாது. ஏனெனில், கலையிலும், இலக்கியத்திலும் உள்ள இந்த ஆசை, கட்டுப் பாடின்மை என்ற இழி நிலையை எளிதில் அடைந்து விடுகிறது. ஒரு அளவுக்கு உட்பட்டிருந்தால், இது ஒரு நல்ல ஆஸ்திதான்.

சர்க்கார் சர்வகலாசலைகளில் உள்ள பாடத் திட்டம் முற்றி லும் கெடுதலானது என்று ஒரேயடியாகச் சொல்லிவிட முடியாது. அதை அடியோடு நிராகரித்துவிட வேண்டுமென்று எனக்குத் தோன்றியதில்லை. கிளிப் பிள்ளையைப் போல் மனப்பாடம் செய்யும் பழக்கத்தைத்தான் விடவேண்டும்; தாய்மொழி தடை செய்யப்பட்டிருப்பதையும், தேவையில்லாத, ஆடம்பர ஆங்கில அறிவையும், ஒரு தலைப்பட்சமான சரித்திரம் போதிக்கப்படு வதையும், நமது புராதனமான கலாசாரம் அநேகமாக அடியோடு

புறக்கணிக்கப்படுவதையும், தன்னடக்கம் போன்ற குணங்கள் வலியுறுத்தப் படாமலிருப்பதையும்தான் நிராகரிக்க வேண்டும்.

ஆகையால், வித்தியாபீடத்தின் பாடத் திட்டத்தில் நிறைய மாறுதல்கள் செய்வதற்கு இடமிருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், இதைச் செய்வதைவிடச் சொல்லுவது எளிது. போதிய அனுபவம் யாருக்கும் இல்லை. பாடத் திட்டத்தைத் தயாரிக்கும் பொறுப்பு கொடுக்கப்பட்டவர்களெல்லாம் சர்க்கார் கல்வி என்ற முத்திரை உடையவர்கள். அவர்களில் சிலருக்கு சர்க்கார் கல்லூரிகளிடம் ஒரு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆனால், தேவையான அறிவையோ, அனுபவத்தையோ அவர்கள் எங்கிருந்து பெறுவது? ஆகையால், தேசீய ஸ்தாபனங்களில் வைக்கப்பட்டுள்ள பாடத் திட்டங்களில் தவிர்க்க முடியாத குறைபாடுகள் காணப்படுவது இயற்கையே. இந்த ஸ்தாபனங்களின் தலைவர்களான ஆச்சாரியர்கள், தம்மால் முடிந்த வரையில் மாறுதல்களைச் செய்யத்தான் முயற்சித்திருக்கிறார்கள். அதில் ஒரு அளவு வெற்றியும் பெற்றிருக்கிறார்கள்.

டாக்டர் சுமந்த மேத்தாவின் யோசனையைக் கவனிப்போம். அவர் கூறுவது போன்ற பாடத் திட்டத்தைத் தயாரித்து, அமலுக்குக் கொண்டுவர வேண்டுமென்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அவர் கூறும் சில பாடங்களை, கல்லூரிப் படிப்பின் ஆரம்பக் கட்டத்திலேயே எடுத்துக்கொள்ளலாம். மற்றும் சிலவற்றை இன்னும் முன்னதாகவே கூட எடுத்துக்கொள்ளலாம். வேறு சிலவற்றை, ஆரம்பக் கல்வி கட்டம் முடிந்த உடனேயே கற்றுக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது. தன்னுடைய திட்டத்தைத் தயாரிக்கும்படி டாக்டர் சுமந்த மேத்தாவை அழைக்கிறேன். அவருக்கு நான் நேரடியாக எழுதலாம். இந்த விஷயத்தை நான் இந்தப் பத்திரிகையில் விவாதித்திருப்பதற்குக் காரணம் இருக்கிறது. இந்தப் பிரச்னையில் அக்கறையுள்ள ஆசிரியர்களும், மற்ற அறிஞர்களும் கூட இதைப் பற்றிச் சிந்தனை செய்து, ஒருவரோடொருவர் விவாதித்து, டாக்டர் சுமந்த மேத்தாவுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதற்காகவே இந்த விஷயத்தை இங்கு விவாதித்திருக்கிறேன். நம்மிடையே உள்ள சிந்தனையாளர்கள் வெகு சிலர்தான்; அவர்களும் கூட தத்தம் துறைகளில் உள்ள வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவரவர்கள் வேலையையே கவனிக்கும் பழக்கம் அதிகமாகிக் கொண்டுவருகிறது; அதுவும் நல்லதுதான். ஒவ்வொருவரும் எல்லா விஷயங்களிலுமே தலையிடுவது என்று ஆரம்பித்துவிட்டால், அந்த விஷயத்திற்கோ, தனக்கோ நியாயம் வழங்க முடியாது. ஒருவர் இதுதான் தன் வேலை என்று நிர்ணயித்துக் கொண்டுவிட்டால், அதிலேயேதான் கவனத்தைச் செலுத்த வேண்டும்; இல்லாவிட்டால், அதற்குரிய பலனைப் பெற முடியாது. ஆகையால், இந்த வேலையை வெற்றிகரமாக முடிக்கும் பொறுப்பை டாக்டர் மேத்தாவேதான் ஏற்றுக்கொள்ள

வேண்டும். ஆசிரியர்களிடையே சிந்தனை சக்தி உள்ளவர்களும், கல்வியிலும், அறிவைப் பரப்புவதிலும் அக்கறையுள்ள ஊழியர்களும் அவருக்கு உதவி செய்வார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் தொடர்பு கொள்ளச் செய்வதும், என் கருத்துகளைத் தெரிவிப்பதுமே என்னுடைய வேலையாகும். ஒரு வருடத்திற்கு பெட்லாடைவிட்டு நகருவதில்லை என்று டாக்டர் மேத்தா அங்கேயே குடியேறி இருக்கிறார். தன்னுடைய திட்டத்தை அங்கேயே பரீட்சை செய்துபார்த்து அதனுடைய உபயோகத்தை மதிப்பிடுவதற்கு அவருக்கு வாய்ப்பு இருக்கிறது. ஆகையால், அதை அபிவிருத்தி செய்து, முடிந்தவரையில் செம்மையானதாக்குவது அவருக்குச் சுலபமே.

அத் திட்டத்தை இறுதியாக உருவாக்கிய பிறகும்கூட, அதை நிறைவேற்றத் தயாராக உள்ள ஆசிரியர்களை போதிய அளவிற்குப் பெற வேண்டியிருக்கும் என்பது வேறு விஷயம். அவசியம் ஏற்படும்போது அவர்கள் அதற்கு முன்வருவார்கள் என்றே நிச்சயமாக நம்புகிறேன்.

—'நவஜீவன்' – 8—2—1925

## 2

கல்வித் துறையில் கொஞ்சம் அனுபவமுள்ள ஒரு நிருபர் பின்வருமாறு எழுதுகிறார் :

"காங்கிரசின் முடிவுகள் தேசீயப் பள்ளிகளை கட்டுப்படுத்துபவைகளாய் இருக்கவேண்டுமென்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், தேசீயக் கல்வியை அரசியல் இயக்கத்தின் விளையாட்டுக் கருவியாகச் செய்துவிடாமலும், காங்கிரஸ் இருக்க வேண்டும். தேசீயக் கல்வியின் நோக்கம பிராம்மணர்களை உற்பத்தி செய்வது மட்டுமல்ல; பல்வேறு வர்ணங்களையும் சேர்ந்தவர்கள் தத்தம் வர்ணங்களின் பொறுப்புகளை ஏற்றுக்கொள்வதற்கும் தயார் செய்ய வேண்டும். வித்தியாபீடத்தின் கல்லூரிப் பகுதியில் விஞ்ஞான போதனைக்கும் பல்வேறு தொழில்களில் பயிற்சி அளிப்பதற்கும் இடமில்லாமல் இருப்பது முறையாகாது. மொழி, சரித்திரம், பொருளாதாரம் ஆகியவற்றைக் கற்றுக் கொடுக்கும்போது பௌதிகம், ரசாயனம், விவசாயம் ஆகியவற்றையும் ஏன் கற்றுக் கொடுக்கக்கூடாது? ஒருவனுடைய சிறப்புத் தன்மைகளை வளரச் செய்துவிட்டால், எப்படியாவது அவன் ஜீவனத்திற்கு வழி தேடிக்கொண்டுவிடுவான். ஆகையால் அதை வளரச் செய்தால் போதும் என்று சொல்லப்படுகிறது. இதை ஒப்புக்கொண்டாலும் கூட, மாணவர்களுக்கு விஞ்ஞானத்தையும், தொழில்களையும் போதிப்பது உபயோகமற்றதாகிவிடாது. இதனால் மாணவர்களின் அறிவுத் திறனோ, சிந்தனை சக்தியோ பாதிக்கப்பட்டுவிடும் என்று யாரும் சொல்ல மாட்டார்கள் என்றே நம்புகிறேன்.

"அதற்கு மாறாக, விஞ்ஞானம், தொழில்கள் ஆகியவற்றில் பயிற்சி பெற்றிருப்பது, காரண காரியங்களுடன் விஷயங்களைப் பரிசீலனை செய்யும் சக்தியை வளர்ப்பதற்கு உதவும். கச்சா பொருட்களை எப்படி உபயோக மான பண்டங்களாக மாற்றுவது என்ற நுட்பங்களும் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். மக்களின் வாழ்க்கையில் இவை மிகவும் உபயோகமாக இருக்கும். ஒரு நல்ல நெசவாளியோ அல்லது ஆசிரியரோ நல்ல தேச ஊழியராக இருக்க முடியும். அதைப் போலவே கருமான் ஆகியவர்களும் நல்ல தேச ஊழியர் களாக இருக்க முடியும். இந்தத் தொழிலாளர்கள் தேசத்திற்கு அவசியமான வர்கள், முக்கியமானவர்கள். ஆகையால், அவர்களுடைய தொழில்களையும் தேசீயப் பள்ளிக்கூடங்களின் பாடத் திட்டங்களில் சேர்க்க வேண்டும். சர்க்காரின் கல்வித் திட்டம் தவறாக இருக்கிறது; ஏனெனில் அது சூத் திரர்களை மாத்திரமே உற்பத்தி செய்கிறது. ஆனால், நம்முடைய பள்ளிக் கூடங்களில் பிராம்மணர்களை உற்பத்தி செய்வதில் மட்டுமே நாம் கவனம் செலுத்திக் கொண்டிருந்தால், நமது கல்வி முறையும் தவறானதாகத்தான் இருக்கும்.

"வெறும் ஆன்மிக அறிவும், நூற்பதும் தேசத்தை உயர்த்தி முன் னேற்றப் பாதையில் கொண்டுபோய் சேர்த்துவிடும் என்றும், ஆகையால் அதுதான் உண்மையான கல்வி என்றும் கூறப்படும் வாதம் ஓரளவுதான் உண்மையாக இருக்கும். ஒரு மனிதன் நல்ல ஊழியனாக இருப்பதற்குப் பயிற்சி அளிப்பதுதான் கல்வியின் நோக்கம் என்று சொல்லுவது சுலபம். ஆனால், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் சமுதாயம் பூராவும் துரிதமாக தன்னைத்தானே நம்பியிருக்கும் நிலையை அடையச் செய்வது எவ்வளவு கடினமென்பது அனுபவத்தில் தெரியும். நல்ல புத்திமதிகள் சொல்லுவதன் மூலமோ அல்லது ஒரு லட்சியத்தை அளிப்பதன் மூலமோ மனித சுபாவத்தில் உள்ள குறைபாடுகளை எல்லாம் விரட்டிவிட முடியுமென்றால், கடவுள் அவதாரம் எடுக்க வேண்டிய அவசியமே இராது."

இதில் கூறப்பட்டுள்ள கருத்துகள் டாக்டர் சுமந்த மேத் தாவின் கருத்துகளுக்கு நேர் எதிராக இருப்பதை வாசகர்கள் காணலாம். இவ்விரு கருத்துகளிலுமே உண்மை இருக்கிறது. இரண்டையும் நடைமுறைக்குக் கொண்டுவருவது நல்லதுதான். ஆனால், சில விஷயங்கள் நன்றாக இருக்கின்றன என்பதனால் அவற்றை நிறைவேற்றி வைக்கும் ஆற்றல் நமக்கு எப்போதுமே இருக்கத்தான் செய்யும் என்பதில்லை. அனுபவம்தான் நமது கல்விக்கு இறுதியானதும், நிரந்தரமானதுமான உருவத்தைக் கொடுக்க முடியும். இப்போது ரசாயனம் போன்ற பாடங்களைச் சொல்லிக்கொடுப்பதற்கு நாம் ஏற்பாடு செய்யவில்லை என்றால், அந்தப் பாடங்களை நாம் அசட்டை செய்கிறோம் என்று அர்த்த மல்ல; அதற்கு வேண்டிய வசதிகள் நம்மிடம் இல்லை என்பதே காரணம். ஆகையால், இப்போதைக்கு அவசியமான காரியங் களை மட்டுமே எடுத்துக்கொண்டிருக்கிறோம். கை ராட்டினம் என்பது உடலுழைப்பின் சின்னம். அது ஸ்திரமாக வேரூன்றி விட்டால், தச்சு வேலை, கருமான் வேலை முதலியவை தாமாகவே வந்துவிடும். நாலு வர்ணங்களின் தேவைகளையும் பூர்த்தி செய்யக் கூடிய ஒரு பாடத் திட்டத்தைத் தயாரிக்க நாம் முயற்சி செய்ய

வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. அந்தப் பாதையில் தான் நாம் போய்க்கொண்டிருக்கிறோம் என்று எனக்குத் தோன்று கிறது. தேசீயக் கல்வியில் ஈடுபட்டுள்ள ஆசிரியர்களும், கல்வித் துறையாளர்களும் தமது நம்பிக்கையை விடாமல் தமக்கு அளிக் கப்பட்ட வேலையைச் செய்துகொண்டிருந்தால், தேவையான மாறுதல்களும், சீர்திருத்தங்களும் தாமாகவே வந்துவிடும். நேர்மை இருக்குமிடத்தில் சுபிட்சம் இருக்கும். என்னுடைய சுற்றுப் பிரயாணங்களில் நான் ஒரு விஷயத்தைக் கண்டுபிடித் திருக்கிறேன். இத்தகைய திட்டங்களுக்குப் பண உதவி செய்ய மக்கள் தயாராக இருக்கிறார்கள், துடித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று கூடச் சொல்லலாம். ஆனால், தம் வேலையை நன்கு அறிந் தவர்களும், அதே சமயத்தில் என்ன நேர்ந்தாலும் இதை விடுவதில்லை என்ற உறுதி கொண்டவர்களும்தான் இல்லை.

—'நவஜீவன்' – 8—3—1925

# 11

# ஒரு ஆசிரியரின் சங்கடம்

சுதந்திரம் பெறுவதற்குக் கதர் இன்றியமையாதது என்று தேசீயப் பள்ளிக்கூடங்கள் நம்புகின்றன. ஆனால், அங்கு கதர் கட்டாயமாக உபயோகிக்கப்பட வேண்டுமென்பதை ஒரு ஆசிரியர் ஆட்சேபித்திருக்கிறார். அதற்கு அவர் கூறும் காரணங் கள் பின்வருமாறு :

"1. தம்முடைய உறவினர்களும், அண்டை, அயலார்களும் பெருமை யுடன் அணிந்துகொள்ளும் விதம் விதமான வர்ணங்கள் உள்ள அந்நிய நாட்டுத் துணிகளைக் கண்டு, சின்னக் குழந்தைகள் ஏற்கனவே மோகம் கொண்டிருக்கிறார்கள். ஆகையால், தவிர்க்க முடியாத ஒரு தீமை என்றே அவர்கள் கதரை ஏற்றுக் கொள்ளுகிறார்கள். இதனால் அவர்கள் குழந்தைப் பருவத்திலிருந்தே மோசடியையும், வெளி வேஷத்தையும் பழகிக் கொள்ள நேருகிறது. பெரும்பாலான மாணவர்கள் கதரையே அணியும் ஒரு பள்ளிக் கூடத்தில், இந்தக் குழந்தைகளும் கதரை உபயோகிக்க விரும்புவது இயற்கை தான் என்று நீங்கள் நினைத்தால், நடக்கக் கூடியது இதுதான். கதரின் உபயோகத்தைக் கட்டாயமாக்கினால் அதனால் பிள்ளைகளுக்கு அதனிடம் ஒரு வெறுப்பு வளர்ந்துவிடும். அதற்குப் பதிலாக அவர்கள் தாமாகவே அதை உபயோகிக்க ஆரம்பிக்கும்படி விட்டுவிடுவதுதான் நல்லது. அவசியமானால், இந்த நம்பிக்கை நிறைவேறும்வரையில் பொறுமையுடன் காத்துக் கொண் டிருக்க வேண்டும்."

'கட்டாயம்' என்ற வார்த்தை இங்கு மிகவும் தவறாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பையன் கட்டாயமாக தேசீயப் பள்ளிக்கூடத்திற்குப் போக வேண்டுமானால், பள்ளிக்

கூடத்தில் கட்டாயமாகக் கதர் அணிய வேண்டுமானால், அந்த நிலைமையில் கதரின் உபயோகம் கட்டாயமாக்கப்படுகிறது என்று கூறுவதில் ஒருவேளை நியாயம் இருக்கலாம். 'ஒருவேளை' என்ற வார்த்தையையே நான் உபயோகிக்கிறேன். ஏனெனில், கட்டாயக் கல்வி அமலுக்குக் கொண்டு வரப்பட்டால்கூட, பள்ளிக்கூடங்களில் அனுமதிக்கப்படும் பையன்கள் பின்பற்ற வேண்டிய சில விதிகள் இருக்கத்தான் செய்யும். அந்த விதிகள் யாவுமே நியாயமற்றவை என்று கூறுவது கண்மூடித்தனமாக இருக்கும். உதாரணமாக, பையன்கள் சில பாடங்களை அங்கே கற்றுக்கொள்ள வேண்டியது கட்டாயமாக இருக்கலாம். பையன்கள் சுத்தமான ஆடைகள் அணிந்து வரவேண்டுமென்பதும் கட்டாயமாக இருக்கலாம். அழுக்கு ஆடைகளை அணிந்து கொண்டோ, ஆடைகள் இல்லாமலோ, அல்லது விசித்திரமான ஆடைகளை அணிந்துகொண்டோ வரக்கூடாதென்று இருக்கலாம். இவையெல்லாம் கட்டாயமான விதிகளாகவே இருக்கும். ஆனால், அதற்காக அவை முறையற்றவை என்று சொல்ல யாரும் துணியமாட்டார்கள்.

கதர் எவ்வளவு முக்கியமானது என்பதில் இன்னும் முழு நம்பிக்கை ஏற்படாதவர்கள்தான் இது இஷ்ட பூர்வமானதா, கட்டாயமானதா என்பதைப் பற்றித் தம்மை அலட்டிக்கொள்ளுகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. பெற்றோர்களுக்குப் பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும், அண்டை அயலார்கள் சரியாக நடந்துகொண்டாலும், இல்லாவிட்டாலும், சில விஷயங்களில் குழந்தைகளுக்கு நாம் சில கட்டுப்பாடுகளை விதிக்காமல் இருக்க முடியாது. உதாரணமாக, ஒரு குழந்தை வெளியே போகும்போது, அதற்கு நாம் சரியாக ஆடையணிவிக்க வேண்டும். அதேமாதிரி, ஒரு பையன் ஆபாசமாகப் பேசினால் அவனை நாம் கண்டிக்க வேண்டும். பையன்களின் நடத்தையை இப்படிக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கும் பல சந்தர்ப்பங்கள் ஒவ்வொரு ஆசிரியருக்கும் தெரியும். அம்மாதிரி கட்டுப்பாடுகளை விதிக்கக் கூடாது என்று ஆசிரியர் என்னதான் வாதித்தாலும் பிரயோசனப்படாது. இதன் அர்த்தம் என்ன? சில பழக்க வழக்கங்கள் சமூகத்தில் ஆழ்ந்து ஊன்றிவிட்டன. அவை பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆகவே, அவை உண்மையில் கட்டாயமாகச் சுமத்தப்பட்டவைகளாக இருந்தால் கூட, அவற்றை அப்படிக் கருதக் கூடாது.

பையன்கள் தாமாகவே கதர் அணியட்டும் என்ற கொள்கை தோல்வியடைந்து விட்டது. இனிமேல் அதற்காகக் காத்துக் கொண்டே இருக்க முடியாது என்பதற்காக இப்போது கதரின் உபயோகம் கட்டாயமானதாக்கப்படவில்லை; சுலபமாகக் கதரைக் கட்டாயமாக்கக் கூடிய சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது என்று நானும், மற்றும் சிலரும் கருதுகிறோம். அதனால்தான் கதரும், ராட்டினத்தில் நூற்பதும் தேசீயப் பள்ளிக்கூடங்களில் கட்டாயமாக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட சீர்திருத்தத்தை, ஏற்றுக்

கொள்ளவேண்டியதுதான் என்று மனத்திற்குத் தோன்றலாம்; ஆனால், சமூகத்திற்கு அதை ஏற்றுக் கொள்ளுவதற்கான பக்குவம் ஏற்படாமலிருக்கலாம். பல சமயங்களில் இப்படியும் நடப்ப துண்டு. அம்மாதிரி சந்தர்ப்பங்களில், உடலின் தயக்கத்தைச் சமாளிப்பதற்கு கட்டாய முறை சுலபமானது என்று சமூகம் ஏற்றுக் கொண்டுவிடுகிறது. ஆகையால், 'கட்டாயம்' என்ற வார்த்தையின் உண்மையான அர்த்தத்தை நாம் புரிந்துகொண்டு ஏற்றுக் கொள்ளத் தயாராயிருந்தால், அனாவசியமான பல குழப்பங்கள் தீர்ந்துவிடும். பிரஜைகளின் விருப்பத்திற்கு மாறாக, ஆட்சியாளர்கள் அவர்கள்மீது தம் விருப்பபபடி சிலவற்றைச் சுமத்துகிறார்கள். அதற்குக் கீழ்ப்படியாவிட்டால் தண்டனை கிடைக்கும் என்று பயமுறுத்துகிறார்கள். உண்மையில், அது தான் கட்டாயம். அந்த வார்த்தைக்கு இந்த வியாக்கியானத்தை ஒப்புக்கொண்டால், ஆசிரியரின் மேற்கண்ட புகார் ஆதாரமற்ற தாகிவிடுகிறது.

"2. கதரில் உள்ள ஆசையினால், மனமுவந்து அதை ஏற்றுக்கொண்டால், அது நீடித்து நிற்கும். ஏனெனில் போட்டியிலும், ஒருவரைப் பார்த்து அதே மாதிரி செய்வதிலும் பையன்களுக்கு ஆசை அதிகம். ஆகையால், பெரும்பாலான மாணவர்கள் மேற்கூறிய விதத்தில் கதர் அணிய ஆரம்பித்து விட்டால், கதருக்கான ஒரு சூழ்நிலை ஏற்பட்டுவிடும். அப்போது, பள்ளிக் கூடத்திற்கு வரும் புதிய அல்லது கதர் அணிந்து பழக்கமில்லாத பையன்கள் தாமாகவே கதர் அணிய ஆரம்பித்துவிடுவார்கள். முதல் நாளன்றே இப்படி ஏற்படாமலிருக்கலாம். இஷ்டப்பட்டுத் தாமாகவே கதரை ஏற்றுக்கொள்ளுவது சற்றுத் தாமதப்படலாம் என்றாலும், அதுதான் அவர்களின் உள்ளங்களில் இன்னும் ஆழ்ந்து பதியும். பையன்கள் கதர் அணிய வேண்டும் என்பதுதான் முக்கிய நோக்கம். ஆகையால், முதல் நாளன்றே அவர்கள் கதர் அணியவேண்டுமென்று கட்டாயப்படுத்துவதைப் போல், கொஞ்ச நாள் அதற்காகக் காத்திருப்பது அவ்வளவு உதவியாக இராது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

கதர் தான் அணியவேண்டும் என்ற எங்களுடைய கட்டா யத்தில் அன்பு, மனமாற்றம், போட்டி ஆகிய எல்லாவற்றிற்குமே இடம் இருக்கிறது. கதரைக் கட்டாயமானதாக்கும் பொறுப்பு ஆசிரியரிடம் இருக்கிறதேயொழிய, பையன்களிடமல்ல. குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர் போலீஸ்காரனைப் போல் குழந்தைகளை அதட்டமாட்டார்; நல்லவிதமாகச் சொல்லி அவர்களின் மனத்தை மாற்றுவார். முதல் நாளன்றே அவர்கள் கதர் தான் அணியவேண்டும் என்ற கட்டாயம் எதுவுமில்லை: நாலு வருஷங்களுக்குப் பிறகு அவர்களுக்கு அதைப் பழக்கப் படுத்திவிட வேண்டுமென்றுதான் உத்தேசிக்கிறோம். கட்டாயம் இருப்பது ஆசிரியரிடம் தானேயொழிய மாணவர்களிடம் இல்லை. தன் கடமை என்னவென்பதை அது ஆசிரியரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறது. ஆகையால், பொறுத்துக் கொண்டிருப்பது உதவி செய்கிறதா இல்லையா என்ற கேள்வியே எழவில்லை. ஒரு

ஆசிரியருக்குப் பொறுமைதான் அத்தியாவசியமான குணதிசய மாக இருக்கவேண்டும்.

"3. கட்டாயமாகக் கதரைத்தான் உபயோகிக்க வேண்டுமென்ற விதி, இஷ்டபூர்வமாக அதைப் பரப்புவதற்குச் செய்யப்பட்ட முயற்சி தோல்வியடைந்துவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளுவது போல் எனக்குத் தோன்றுகிறது. இந்தத் தோல்விக்குக் காரணங்களைக் கண்டுபிடித்து, அவற்றை அகற்ற வேண்டியதுதான் நாம் செய்ய வேண்டிய காரியமாகும். அதற்குப் பதிலாக, கட்டாய முறையைப் பின்பற்றுகிறார்கள். அதனால் இன் னும் அதிக வெற்றி கிடைக்குமா? கட்டாயக் கதர் சோதனை தோல்வியடைந்து விட்டது; ஆகையால் அதைக் கட்டாயமாக்குவது தவறாகும். இஷ்டபூர்வ மாகக் கதரை உபயோகிக்கச் செய்யும் முயற்சி புறக்கணிக்கப்பட்டிருப்பதை, கட்டாயக் கதர் விதி எப்படி ஈடு செய்யும்?"

இதற்கு ஏற்கனவே பதிலளிக்கப்பட்டிருக்கிறது.

"4. பிரசாதத்தில் ஒரு பங்கு பெறுவதற்காக நெற்றிக்குப் பொட்டு வைத்துக்கொள்ளக்கூடிய வேஷதாரிகளுக்குக் குறைவேயில்லை. கட்டாயக் கதர் விதியினால் இந்த வேஷதாரிகளின எண்ணிக்கை அதிகமாகாதா? அதாவது, இந்தப் பள்ளிக்கூடங்களில் சேருவதற்கென்றே கதர் உபயோகிப் பவர்களின் எண்ணிக்கை அதிகமாகிவிடாதா? சுயநலவாதிகள் மோசடியாகக் கதரை உபயோகிப்பதால் கதர் அபிவிருத்தியடையுமா? அல்லது, குறைவா யிருந்தாலும், உண்மையான கதர் அபிமானிகள் அதை மேற்கொள்ளுவதால் அபிவிருத்தியாகுமா? கட்டாயமாகக் கதரை உபயோகிக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லாமலும், அதே சமயத்தில் மோசடிகளுக்கு இடமளிக்காமலும் உள்ள வேறு வழி எதுவும் இல்லையா?"

மோசடி என்பது குழந்தைகளைக் குறிப்பிடுகிறதென்றால், அதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. அம்மாதிரி ஏமாற்றுவதற்குக் குழந்தைகளுக்குத் தெரியவே தெரியாது. ஆசிரியர்கள் விஷ யத்தில் இந்தப் பயத்திற்கு நியாயம் இருக்கலாம். ஆனால், விதிகள் என்றிருந்து, சில கட்டுப்பாடுகளுக்கும் உட்பட வேண்டி யிருந்தால். அங்கு ஒரு அளவுக்குப் போலி வேடமும் புகுந்து கொண்டுவிடுகிறது. சூழ் நிலையைத் தூய்மையாக்குவதுதான் இதற்குப் பரிகாரமேயொழிய, விதிகளைத் தளர்த்துவதல்ல.

"5. தேசீயப் பள்ளிக்கூடங்கள் எதற்காக இருக்கின்றன? ஒன்று சுயராஜ்யத்திற்கு விதிக்கப்பட்டுள்ள நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தவர்களுக் காக இருக்க வேண்டும்; அல்லது இன்னும் நிறைவேறாமல், ஆனால், இந்தப் பள்ளிக்கூடத்தில் அனுமதிக்கப்படுவதன் மூலம் கற்றுக்கொள்ளக் கூடியவர் களுக்காக இருக்க வேண்டும். இல்லையா? கட்டாயமாகக் கதரைத்தான் அணிய வேண்டுமென்று விதிக்கப்பட்டிருப்பது, நிபந்தனைகளை நிறைவேற்றிய வர்களுக்காகத்தான் தேசீயப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன என்று தோன்றச் செய்கிறது. இனிமேல் அதற்குத் தயாராக வேண்டியவர்களுக்கு வேறு எந்தப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன?"

தேசீயப் பள்ளிக்கூடங்கள் நடப்பதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன : ஒன்று தேசீய மனப்பான்மை உள்ளவர்களுக்கு ஏற்ற பள்ளிக்கூடங்களை வைப்பது; மற்றொன்று, நமது உதாரணத்தின் மூலம் தேசீய மனப்பான்மை இல்லாதவர்களை அந்தப் பாதையில் திருப்புவது. தேசீய லட்சியத்தின் தன்மையைக் குறைத்து, தேசீய மனப்பான்மை இல்லாதவர்களை ஆசை காட்டி இழுக்க முயற்சிக்கக் கூடாது. தேசீயப் பள்ளிக்கூடங்களில் உள்ள ஆசிரியர்களும் மாணவர்களும் தேசீயத்தை வளர்த்து, அதை வளப்படுத்துவதை மக்கள் பார்க்கும்போது, மேலும் மேலும் அதிகமாக அதில் சேர வருவார்களென்பது நிச்சயம்.

"6. விதிகள், ஒரு லட்சியத்தின் ஜீவநாடியை மறக்கடித்துவிடும். கதரின் உபயோகத்தை விரிவு படுத்த வேண்டும் என்ற அவசரத்தில் கதர் அணியாத மாணவர்களுக்காகச் சில பள்ளிக்கூடங்கள் தாமே கதரைக் கையிருப்பில் வைத்துக் கொள்ள ஆரம்பிக்கலாம்; அல்லது இலவசமாக அதை விநியோகிப்பதை வேறு யாராவது ஏற்றுக்கொள்ளலாம். அப்படியானல், அந்தத் துணி இருக்கும் வரையில் பையன்கள் அந்தப் பள்ளிக்கூடங்களிலேயே இருப்பார்கள். ஆனால், அவர்கள் உண்மையாகக் கதரை ஏற்றுக் கொண்டவர்களாக மாட்டார்கள். எண்ணிக்கையை அதிகமாகக் காட்டுவதற்காக வேறு பல தந்திரங்களையும் கையாளலாம். கட்டாயத்தினுல் தற்காலிகமான பலன்தான் கிடைக்கும். ஆனால், ஆரம்பத்தில் அவை பிரமாதமாகத் தோன்றலாம். ஆகையால், நமது பள்ளிக்கூடங்கள் கதர் விஷயத்தில் நிர்ப்பந்தம் செய்யக்கூடாதென்றும், கதரைப் பரப்புவதற்கு இயற்கையான சாதாரண முறைகளையே கையாண்டால் போதுமென்றும் சொல்லுவது நல்லதல்லவா? இதுதான் பத்திரமானதும், இறுதியில் நிச்சயமானதுமான செயல் முறையாக இருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது."

விதிகள் உயிரற்ற விலங்குகள் ஆகிவிடுகின்றனவா அல்லது நல்லொழுக்கத்தை வளர்ப்பதற்கு உதவி செய்கின்றனவா என்பது விதிகளை இயற்றி, அவற்றை அமல் நடத்துபவரைப் பொறுத்திருக்கிறது. ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் புதிதாக முளைவிட்டுள்ள செடிகளைப்போன்றவை; அவற்றை நேராகவோ, கோணலாகவோ எப்படி வேண்டுமானாலும் வளைக்கலாம். அவை நேராக வளரும்படி பார்த்துக் கொள்ள வேண்டியதே நம்முடைய பொறுப்பாகும்.

—'நவஜீவன்' - 22—3—1925

# 12

# எச்சரிக்கை

சமீபத்தில் நான் குஜராத்தில் சுற்றுப் பிரயாணம் செய்த போது, ஏராளமான பையன்கள் நமது தேசீயப் பள்ளிக்கூடங்களில் படிப்பதைப் பார்த்தேன். அவர்களில் பெரும்பாலோர் அசுத்தத்துடன் காணப்பட்டார்கள். சிலருடைய குல்லாய்களில் வியர்வையும், அழுக்கும் படிந்திருந்தன; அவர்களை யாரும் தொட முடியாதபடி அவ்வளவு துர்நாற்றமும் வீசிக்கொண்டிருந்தது. சிலர் விசித்திரமான ஆடைகளை அணிந்திருந்தார்கள். சிலர் அப்போதிருந்த கால நிலையின் தேவைக்கு அதிகமான ஆடைகளை அணிந்திருந்தார்கள். மற்றும் சிலர் கால்சட்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால், அந்தச் சட்டைகளில் பொத்தான்கள் இல்லை. வேறு சிலர் வெறும் கந்தல்களை அணிந்திருந்தார்கள். தொத்து நோய்களால் பீடிக்கப்பட்டிருப்பவர்களைப் பள்ளிக்கூடங்களில் அனுமதிக்கக் கூடாது என்பதைப்போலவே, கிழிந்த துணிகளை அணிந்துகொண்டோ, அசுத்தமாகவோ இருப்பவர்களையும் அனுமதிக்கக் கூடாதென்று நினைக்கிறேன். இந்தப் பையன்கள் எங்கே போய் கண்ணியமாக நடக்கக் கற்றுக் கொள்ளுவார்கள் என்று கேட்கலாம். இதற்கு மிகவும் சுலபமான வழி இருக்கிறது. முதலில் ஆசிரியர் இவர்களைக் குளிக்கும் அறைக்கு அழைத்துச் சென்று குளிப்பாட்ட வேண்டும். பின்னர் அவர்களுடைய துணிகளை சுத்தம் செய்யச் சொல்ல வேண்டும். அவர்களுடைய துணிகள் உலர்ந்து கொண்டிருக்கும்போது, பள்ளிக்கூடத்திலிருந்து அவர்களுக்குத் துணி கொடுக்க வேண்டும். அவர்களுடைய துணி காய்ந்த பிறகு பள்ளிக்கூடத் துணிகளை அவர்கள் தோய்த்து. உலர்த்தித் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். இதனால் ஏற்படக் கூடிய அதிகப் படி செலவைப் பள்ளிக்கூடம் ஏற்றுக் கொள்ள முடியாதென்றால், பையனிடம் ஒரு சீட்டைக் கொடுத்து, அவனை வீட்டுக்கு அனுப்பி விட வேண்டும். பையன் ஏன் திருப்பி அனுப்பப்படுகிறான் என்று அந்த சீட்டில் தெளிவாகக் காரணம் கூற வேண்டும். அவன் குளித்து விட்டு வந்த பிறகு வகுப்பில் அனுமதிக்கத்தான் வேண்டும். தேகத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுதல், பண்புள்ள நடத்தை இரண்டுமே பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுக்கப் பட வேண்டிய முதல் பாடங்களாக இருக்க வேண்டும். பையன்கள் ஒரே மாதிரியான ஆடைகளை அணியச் செய்வது கஷ்டமாக இருந்தாலும் போதிய ஆடைகள் இல்லாமலோ. ஆபாசமாக ஆடைகள் அணிந்து கொண்டோ பள்ளிக்கூடத்திற்கு வருவதை அனுமதிக்கக் கூடாது.

தேகப் பயிற்சி விஷயத்திலும் அதே மாதிரி கவனம் செலுத்த வேண்டும். உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி இரண்டுக்குமே

இது அவசியமாகும். சரியான முறையில் நடக்கவும், உட்காரவும், நிற்கவும் பிள்ளைகளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஆயிரம் பையன்கள் சேர்ந்து போனால் கூட, ஒரே சீராக நடந்து செல்லத் தெரிய வேண்டும். ஒரு பையன் அலட்சியமாகச் சாய்ந்து கொண்டிருக்கிறான்; இன்னொருவன் கூனிபோல் உட்கார்ந்திருக்கிறான்; வேறு ஒருவன் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான்; மற்றொருவன் கொட்டாவி விடுகிறான்; இன்னொருவன் அழுகிறான். ஒரு நல்ல பள்ளிக்கூடத்தில் இதையெல்லாம் அனுமதிக்கவே முடியாது. இம்மாதிரி அவர்கள் இஷ்டப்படி இருக்கலாம் என்று விட்டு விட்டால், ஆயிரக் கணக்கானவர்களுடன் சேர்ந்து போகும்போது அவர்கள் எப்படிச் சீராக நடந்துபோகக் கற்றுக் கொள்ளுவது? ஆரம்பம் முதலே இந்த விஷயங்களிலும் பிள்ளைகளுக்குப் பயிற்சியளிக்கவேண்டும். இதனால் அவர்களுக்கு ஒரு மரியாதை உணர்ச்சியும் ஏற்படும்; பார்ப்பதற்கும் அவர்கள் சுத்தமாகவும் சுறுசுறுப்பாகவும் தோன்றுவார்கள்.

பள்ளிக்கூடத்திற்கும் அந்தஸ்து பெருகும், சூழ் நிலை மகிழ்ச்சி அளிப்பதாக இருக்கும். அப்படி கட்டுப்பாடாகப் பயிற்றுவிக்கப் பட்ட மாணவர்களை ஆயிரக்கணக்கில் வெளியே அழைத்துச்சென்றாலும் கூட, இப்போது பள்ளிக்கூடங்களில் காணப்படும் குழப்பமோ, கூச்சலோ இராது. ஒன்றிரண்டு பள்ளிக்கூடங்களில் நான் பார்த்திருக்கிறேன். ஊதல் ஊதிய உடன் தொள்ளாயிரம் பிள்ளைகள் மூன்றே நிமிடத்தில் குறித்த இடத்தில் அமைதியாகச் சேர்ந்து, வேலை முடிந்தவுடன் கொஞ்சம் கூட சப்தம் செய்யாமல் வகுப்புகளுக்குச் சென்று விட்டார்கள். அவர்கள் வெளியே வந்தது போலவே தோன்றவில்லை.

பையன்கள் அரை நிஜார், ஒரு ஷர்ட், குல்லாய் ஆகியவைகளை அணிய வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அது போதுமானதாகும். ஆடைகள் சுத்தமானதாக இருந்தால், நூற்றுக்கணக்கான பையன்கள் ஒரே மாதிரி ஆடை அணிந்திருப்பது பார்ப்பதற்கு அழகாக இருக்கும். சில பையன்கள் ஒரு நீண்ட அல்லது அரை கோட்டையும் போட்டுக் கொண்டு அதைப்பற்றி பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள். இப்படி அவர்கள் தம்மைத் தாமே முட்டாள்களாக்கிக் கொள்வதினின்றும் அவர்களைக் காப்பாற்ற வேண்டும்.

சுத்தம், ஒழுங்கு, உடற்பயிற்சியில் திறமை ஆகியவைதான் குழந்தைகளின் கல்வி அல்ல என்பதையும், அவை கல்வியில் ஒரு சிறு பகுதிதான் என்பதையும் நான் நன்கு உணர்ந்திருக்கிறேன். அவர்கள் நல்லொழுக்கம் பெறவும், எழுதப் படிக்கவும் பயிற்சி அளிக்க வேண்டும். ஆனால், சில்லறை விஷயங்களைக் கூடப் புறக்கணித்துவிடக் கூடாது. உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றுமே வளர்ச்சி பெறுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இம்மூன்றில் ஏதாவது ஒன்று வளர்ச்சி பெறாவிட்டால் கூட எதிர் காலத்தில் அதனால் அவனுக்குக் கஷ்டம் ஏற்படும். ஆரம்ப காலத்தில் தமக்கு அளிக்கப்பட்ட பயிற்சியில் இந்தக் குறைபாடுகள் இருந்தன என்பதை அறியும்

போது அவர்கள் வருந்துவார்கள். அத்துடன் மட்டுமல்ல. சமூகமும் அதனால் பாதிக்கப்படும். ஒரு தவறான கல்வி அமைப்பின் தீய பலன்களை இன்றே கூட நாம் அனுபவித்துக் கொண்டிருக்கின்றோம். நம்முடைய பழக்க வழக்கங்கள் சுகாதார விதிகளுக்கு முரணாக இருக்கின்றன. இதனால், பிளேக் போன்ற நோய்களை ஒழிப்பதில் நாம் இன்னும் வெற்றி பெற முடியவில்லை. நமது நகரங்களில் சுத்தமாக இருப்பது அநேகமாக அசாத்தியமாகிவிட்டது. ஒரு நல்ல பிரஜை எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற சாதாரண விதிகள் கூட நமக்குத் தெரியவில்லை. இதில் இன்னும் மோசமானது என்னவென்றால், தெரிந்த சிலவற்றைக் கூட நாம் பின்பற்றுவதில்லை.

'நவஜீவன்' - 26—4—1925

## 2

இந்தப் பள்ளிக்கூடத்தின் (பம்பாயிலுள்ள ஒரு தேசீயப் பள்ளிக்கூடம்) ஆண்டு விழா இந்த மாதம் 8-ஆம் தேதி கொண்டாடப் பட்டது. அந்த நிகழ்ச்சிகளில் பையன்கள் சில நாடகங்களை நடத்திக் காட்டினார்கள். நாடகத்தில் உபயோகிக்கப்பட்ட எல்லா ஆடைகளும் அந்நியத் துணிகளால் செய்யப்பட்டிருந்தன. அத்தகைய நிலை இந்தப் பள்ளிக்கூடத்தின் தேசீயத் தன்மைக்கு முரணானதாகும்; ஆகையால் அது வருந்தத்தக்கதுமாகும். அவர்கள் அப்படிச் செய்திருக்க வேண்டிய அவசியமில்லை. பையன்கள் என்னென்ன கற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை எடை போடுவதற்காகவே ஜனங்கள் அங்கு வந்தார்களே ஒழிய, நாடகம் பார்ப்பதற்காக அல்ல. இம்மாதிரி நிகழ்ச்சிகளில் விலை உயர்ந்த நல்ல ஆடைகளை உபயோகிப்பதுதான் வழக்கம். இவை ஆடம்பரமாக, பளபளப்பாக இருந்தாலும், நல்ல ரசனை உள்ளவர்களுக்குத் திருப்தியளிப்பதில்லை. பையன்களின் உணர்ச்சிகளை சரியான முறையில் பயிற்றுவிப்பதற்குப் பொறுப்பேற்றுக் கொண்டுள்ள ஒரு கல்வி ஸ்தாபனத்தில் இந்தத் தவறான வழக்கத்திற்கு இடம் இருக்க முடியாது. உண்மையிலேயே சிறந்தவைகளைத்தான் மாணவர்களுக்கு நாம் அளிக்கலாம். ஹாம்லெட்டுக்கு* அந்நிய ஆடைகளை அணிவிக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அந்தக் காலத்தில் இருந்ததைப் போலவோ அல்லது நமது கற்பனைக்கு ஏற்றவாறோ அவனுக்கு ஆடை அணிவிக்கலாம். ஹாம்லெட்டிடமிருந்த குணாதிசயம் உலகம் பூராவிற்கும் பொதுவானது. ஒரு நாடகத்தில் வரும் மொகலாய கதாபாத்திரங்களுக்கு மொகலாய பாணியில் ஆடை அணிவித்தாலும் அல்லது நமது கற்பனைக்கேற்றவாறு உரிய விதத்தில் ஆடை அணிவித்தாலும் தவறு எதுவும் இல்லை. நாம் கதர் அபிமானிகள்; ஆகையால் நாம் செய்யும்

* உலகப் புகழ் பெற்ற ஷேக்ஸ்பியர் இயற்றிய ஹாம்லெட் நாடகத்தில் ஹாம்லெட் கதாநாயகன் ஆவான்.

ஒவ்வொன்றிலும் கதரையே உபயோகிக்க வேண்டும். மேடையை அலங்கரிப்பதற்காக உபயோகிக்கப்பட்டிருந்த திரைகள் கூட எனக்குப் பிடிக்கவில்லை. என் விருப்பப்படி விட்டால், திரைகளையே நான் உபயோகிக்கமாட்டேன். அதற்குப் பதிலாக கதரையே உபயோகித்து ஏதாவது அழகு படுத்தியிருப்பேன். ஆனல் இதற்கு, கதரினிடம் அளவு கடந்த அபிமானம் இருக்க வேண்டும்; வெளிக்குத் தெரியாமல் இருக்கும் உட்கருத்துகளை ஓயாமல் தேடிக் கொண்டிருக்கும் மனப்பான்மை இருக்க வேண்டும். ஒரு தேசியப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியர்களிடமும், நிர்வாகிகளிடமும் இதைக் காண முடியவில்லை என்ருல், வேறு எங்குதான் போய்த் தேடுவது? எதிர்கால இந்தியாவின் லட்சியங்களைச் செயலில் காட்டும் உணர்ச்சியைக் கடவுள் தேசீயப் பள்ளிகளுக்கு அளிக்கட்டும்; கங்கையும் யமுனையும் போல் பரிசுத்தமாக இருந்து நமது மக்களின் நல்ல சிந்தனைக்கும் நடத்தைக்கும் அடிப்படையாக இருக்கட்டும்.

—'நவஜீவன்' - 13—12—1925

# 3

(சுவாமி சிரத்தானந்தரின் கங்க்ரி வெள்ளி குருகுல விழாக் கொண்டாட்டத்தின் போது நடைபெற்ற தேசீயக் கல்வி மகாநாட்டிற்குத் தலைமை வகித்து காந்திஜி செய்த பிரசங்கத்தைப்பற்றி ஸ்ரீ. மகாதேவ தேசாய் எழுதுவதாவது:)

மற்ற மதங்களின் மீது துவேஷத்தைத் தூண்டிவிட்டுப் பரப்பும் ஒரு ஸ்தாபனம் இருப்பதற்கே தகுதி அற்றதாகும் என்று காந்திஜி சொன்னர். இரக்கம்தான் தருமத்தின். அதாவது, நியாயத்தின் ஆணிவேர்; மமதை பாவத்தின் ஆணிவேர் என்று துளஸிதாசர் கூறிய பெரிய உண்மையை இந்த ஸ்தாபனங்கள் எப்போதும் கருத்தில் கொண்டிருக்க வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினர். எல்லா மதங்களுக்குமே பொதுவான அடிப்படைக் கொள்கைகளை வலியுறுத்துவது அவசியம் என்றும், இந்த அடிப்படை உரிமைகளை மறக்கும் மனிதன் மனிதல்ல, மிருகம் தான் என்றும் அவர் சொன்னர்.

சமஸ்கிருதம், பாரசீகம் ஆகியவற்றைப் போதிப்பதைப் பற்றி காந்திஜி கூறியதாவது:

"சமஸ்கிருதம் கற்றுக் கொள்ள வேண்டியது ஒவ்வொரு இந்திய மாணவனுடைய கடமையும் ஆகும்; இந்துக்களுக்கு மட்டுமல்லாமல் முஸ்லிம்களுக்கும் இது ஒரு கடமையாகும். ஏனெனில் ராமனும், கிருஷ்ணனும் ஹிந்துக்களின் முன்னோர்கள் மட்டுமல்ல, முஸ்லிம்களுடைய முன்னோர்களும் ஆவர். அவர்களைப் புரிந்து கொள்வதற்கு சமஸ்கிருதம் கற்றுக் கொள்ள வேண்டும். ஆனல், முஸ்லிம்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டு அவர்களைப்

புரிந்து கொள்வதற்கு முஸ்லிம்களின் மொழிகளைக் கற்றுக்கொள்வதும் இந்துக்களின் கடமையாகும். இன்று நாம் பைத்தியக்காரர்களாகிவிட்டோம். ஆகையால் ஒருவர் மொழியை ஒருவர் பாராமல் ஓடுகிறோம். துவேஷத்தையும், பயத்தையும் பரப்பும் ஒரு ஸ்தாபனம் தேசீய ஸ்தாபனமல்ல, அது தேசீய ஸ்தாபனமாக இருக்கவும் முடியாது. இது நிச்சயம்.''

—'நவஜீவன்' – 27—3—1927

# 13

# அழிவற்ற நம்பிக்கை

## 1

(குஜராத் வித்தியாபீடத்தின் அத்யட்சகர் என்ற முறையில் வித்தியாபீடத்தின் பட்டமளிப்பு விழாவில் காந்திஜி செய்த பிரசங்கத்தின் சில பகுதிகளே கீழே கொடுக்கப்பட்டுள்ளன:)

சென்ற நான்கு வருடங்களில் மாணவர்களின் எண்ணிக்கை வரவர குறைந்து கொண்டு வந்திருக்கின்றது என்பதை இன்று வித்தியாபீடத்தின் ரிஜிஸ்திரார் வாசித்த அறிக்கையிலிருந்து அறிந்திருப்பீர்கள். சாதாரணமாக, இது ஏமாற்றத்தை அளிக்கும். ஆனால், இது எனக்கு ஏமாற்றமே இல்லை. மாணவர்களின் எண்ணிக்கை அதிகமானால், அதுதான் முன்னேற்றம் என்று சாதாரணமாக நினைக்கிறார்கள். நாமும் அப்படிக் காட்ட முடிந்திருந்தால் எனக்கு மகிழ்ச்சியாக இருக்குமென்பதை ஒப்புக் கொள்கிறேன். இந்த ஸ்தாபனத்தின் இன்றைய நிலைமை எனக்குத் திருப்தி அளிக்கிறதென்று நான் சொல்ல முடியாது. ஆனால், நான் ஏமாற்றமும் அடையவில்லை. இந்த ஸ்தாபனத்தை ஒரு வருடம்தான் நடத்த வேண்டியிருக்கும் என்றும், சுயராஜ்யம் பெற்ற பிறகு ஏற்கனவே தேசத்தின் ஆணைக்கிணங்க நீங்கள் விட்டு வந்த பள்ளிக்கூடங்களுக்கும், கல்லூரிகளுக்கும் திரும்பிப்போய் விடுவீர்கள் என்றும் நானும், மற்றும் பலரும் நம்பிக் கொண்டிருந்தோம் என்பதும் உண்மைதான். ஆனால், நான்கு ஆண்டுகள் கடந்துவிட்டன. இன்னும் எவ்வளவு காலம் நாம் இப்படி வனவாசத்தில் இருக்க வேண்டும் என்று இப்போது கூடச் சொல்ல முடியவில்லை. ஆனால், இதை வனவாசம் என்று கூறுவானேன்? எனக்கு இது வனவாசமாகவே தோன்றவில்லை. நாம் சுயராஜ்யம் பெற்ற பிறகும் கூட அம்மாதிரி பல ஸ்தாபனங்கள் சர்க்காரை நம்பியிராமல், சுதந்திரமாகத் தொடர்ந்து நடக்கவும் கூடும். ஆனால் அப்போது ஒரு வேற்றுமை இருக்கும். அப்போது சர்க்கார் பள்ளிகளுடனும், கல்லூரிகளுடனும் போட்டி போட வேண்டியிருக்காது. சர்க்கார் ஸ்தாபனங்கள்

எதிரியின் முகாமைச் சேர்ந்தவை என்றும், ஆகையால் அவற்றை பகிஷ்கரிக்க வேண்டுமென்றும் கருத மாட்டோம். அப்போதும் கூட இம்மாதிரி சோதனைகள் தொடர்ந்து நடந்து கொண்டுதானிருக்கும். நாம் நடத்துபவைகளைப் போன்ற ஸ்தாபனங்களுக்கும் இடமிருக்கும். ஆகையால் இங்கு படிக்கும் மாணவர்கள் ஏமாற்றமடைய மாட்டார்கள் என்றும், இங்கு தாம் கழித்த காலம் வீண் விரயம் என்று நினைக்க மாட்டார்கள் என்றும் நினைக்கிறேன்.

ஒரு பள்ளிக்கூடத்தை தேசீயப் பள்ளிக்கூடம் என்று சொல்ல வேண்டுமென்றால், அது பின் கண்ட நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும்: அன்றாட மாமூல் வேலையில் நூல் நூற்றலுக்கு இடமிருக்க வேண்டும். ஆசிரியர்களும், மாணவர்களும் தினசரி அரைமணி நேரம் நூற்க வேண்டும். கதரை மட்டுமே அணிபவர்களாக இருக்க வேண்டும். தாய் மொழி அல்லது ஹிந்துஸ்தானியின் மூலம் பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும். உடற் பயிற்சிக்கு முழு முக்கியத்துவம் அளிக்க வேண்டும். தற்காப்புப் பயிற்சியும் அதில் சேர்ந்திருக்க வேண்டும். தனக்குத் தெரிந்த வழியில், இந்துக்கள், முஸ்லிம்களின் உள்ளங்களை ஒன்று படுத்துவதற்கு முயற்சி செய்ய வேண்டும். தீண்டாதார்கள் உள்ளே வரக்கூடாது என்று கதவை அடைத்து விடாமல், அவர்களை வரவேற்க வேண்டும். தேசீயப் பள்ளிக்கூடத்தைப் பற்றிய இந்த வியாக்கியானத்தைக் காங்கிரஸ் விதித்திருக்கிறது. ஆகையால் கைராட்டினத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் வித்தியாபீடத்தின் கீழ் உள்ள மற்ற ஸ்தாபனங்களிலிருந்தும் வெளியேறி விடவேண்டும் என்று நான் சொன்னால், நான் கடுமையாக இருக்கிறேன் என்றோ, அநியாயமாக நடந்து கொள்கிறேன் என்றோ நினைக்காதீர்கள். இந்த ஒரே வழியில் தான் நாம் முன்னேற முடியும். நாம் எங்கு போய்க்கொண்டிருக்கிறோம், எவ்வளவு ஆண்கள், பெண்கள், மாணவர்கள் நம்முடன் அங்கு வருகிறார்கள் என்பதையும் அது காட்டும்.

வித்தியாபீடத்தின் எதிர்கால அபிவிருத்தியைப் பற்றி யோசனை கூறும்படி ரிஜிஸ்திரார் என்னைக் கேட்டிருக்கிறார். ஆனால், இந்த விஷயத்தில் நான் எந்த யோசனையும் கூறுவதற்கில்லை. இந்த வருடம் இந்தியாவின் நிலையில் என்ன மாறுதல் ஏற்படக் கூடும் என்று எனக்குத் தெரியாது. எனக்கு நிறைய நம்பிக்கை இருக்கிறது. ஆனால் அந்த நம்பிக்கை என்ன என்பதை இப்போது நான் சொல்ல முடியாது; அப்படிச் சொல்லுவது நல்லதல்ல. மாணவர்களுக்கு நான் கூறுவது இதுதான்; வித்தியாபீடத்திற்கு என்ன நேருகிறது என்பதைப்பற்றி அவர்கள் கவலைப்படக் கூடாது. இந்த ஸ்தாபனத்தில் நாம் இருப்பதுதான் சரியான காரியமாகும்; சர்க்கார் பள்ளிக்கூடம் அல்லது கல்லூரிக்குப் போயிருந்தால் அது தவறாக இருந்திருக்கும். ஏனெனில், நாம் பெறவேண்டிய கல்வியை அங்கு பெற்றிருக்க

மாட்டோம் என்பதுமட்டும் உங்களுக்குத் தெரிந்திருந்தால் போதும். இந்தியா தான் பெற்றிருக்க வேண்டியவற்றை சர்க்கார் ஸ்தாபனங்களிலிருந்து பெறவில்லை என்று நீங்கள் நம்பும் வரையில், நாம் அடிமைத்தளைகளைக் களைந்தெறியும் வரையில் அதற்கான சாத்தியக் கூறுகளும் இல்லை. வித்தியா பீடம் தான் உங்களுக்குச் சரியான இடம். அதை விட்டுப் போக வேண்டும் என்று நீங்கள் நினைக்கவே கூடாது. ஆனால், நீங்கள் விரும்புவதையெல்லாம் சர்க்கார் ஸ்தாபனங்களிலிருந்து பெற முடியும் என்று நினைத்தால், நீங்கள் அங்கு போவதுதான் நல்லது. அப்போதும் வித்தியாபீடத்தின் எதிர்காலத்தைப்பற்றி நீங்கள் கவலைப்படுவதற்குக் காரணம் இருக்க முடியாது.

சர்க்கார் பள்ளிக்கூடம் என்ற நினைவையே நீங்கள் விட்டு விட வேண்டும்; அவற்றினிடம் எந்த விதமான பற்றுதலும் இருக்கக் கூடாது. அந்தப் பற்றுதல் இருக்கும் வரை, வித்தியா பீடத்தை அவற்றுடன் ஒப்பிட்டுத்தான் பார்ப்பீர்கள். "அங்கு எவ்வளவோ வசதிகள் இருக்கின்றன. இங்கு வசதிகளே இல்லை" என்பதுதான் வித்தியாபீடத்தின் தனித்தன்மையாகும். அதே மாதிரி வசதிகளை இங்கேயும் ஏற்படுத்திக் கொண்டால் கஷ்டங்களைச் சமாளிக்க எப்படிக் கற்றுக் கொள்ள முடியும்? அல்லது, இதை வேறுவிதமாக சொல்லுகிறேன். அந்த வசதிகள் இங்கு இல்லாதிருப்பது தான் உங்களுக்கு இங்குள்ள வசதியாகும். வித்தியாபீடத்தையும், சர்க்கார் பள்ளிக்கூடங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கவே முடியாது. இந்த உண்மையை நீங்கள் உணர்ந்து மனத்தில் இறுத்திக்கொண்டால், வித்தியாபீடத்தின் எதிர்காலத்தைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியம் இராது. என்னுடைய கடமையைச் செய்ததன் மூலம் சுதந்திரப் போராட்டத்திற்கு என்னால் முடிந்த உதவியைச் செய்துவிட்டேன் என்று நீங்கள் சொல்ல முடிந்தால் போதும். அதற்குமேல் எதிர்பார்க்க உங்களுக்கும், எனக்கும் உரிமை கிடையாது. சுதந்திரப் போராட்டத்திற்கு உதவியாக இருக்கும்வரையில்தான் வித்தியா பீடம் நிலைத்திருக்கும். அப்படி இல்லையானால், அது தன்னைத் தானே அழித்துக் கொண்டுவிடும். அந்த நிலைமையில் அது அழிக்கப்படுவதில் என்ன தவறு இருக்கிறது? வித்தியாபீடத்தின் எதிர்காலம் என்பது இந்திய சுயராஜ்யத்தின் எதிர்காலம்தான்.

—'நவஜீவன்'–18—1—1925

## 2

பட்டங்கள் பெற்று, இன்று பரிசுகள் பெற்ற மாணவர்களைப் பாராட்டுகிறேன். அவர்கள் நீண்ட ஆயுளுடன் இருக்கட்டும், அவர்களுடைய பட்டங்களும், அறிவும் அவர்களுக்கும் நாட்டுக்கும் பெருமை அளிக்கட்டும். சுற்றியுள்ள ஏக்கம் என்ற காரிருளில் நாம் வழிதவறிப் போகாதிருப்போமாக. நம்பிக்கைக்

கான ஒளிகளை வெளியே தேடிக்கொண்டிருக்கக்கூடாது ; நமது உள்ளங்களிலேயே அவற்றைத் தேடவேண்டும். நம்பிக்கை உள்ளவனும், பயத்தை ஒழித்தவனும், தன் வேலையில் ஈடுபட்டிருப்பவனும், தன் கடமைகளை நிறைவேற்றுவதில் தன் உரிமைகளைக் காண்பவனுமாகிய மாணவன், சுற்றியுள்ள இருளைக் கண்டு நடுங்கமாட்டான். இந்த இருள் தற்காலிகமானதென்றும், ஒளி அண்மையிலேயே இருக்கிறதென்றும் அவனுக்குத் தெரியும். ஒத்துழையாமை தோல்வி அடைந்துவிடவில்லை. ஒத்துழைப்பும், ஒத்துழையாமையும் காலம் தோன்றிய நாள் முதற்கொண்டே இருந்து வந்திருக்கின்றன. சத்தியமும் அசத்தியமும், சமாதானமும் சண்டையும், வாழ்வும் சாவும் ஆகிய இருமைகள் யாவுமே இருக்கத்தான் செய்யும். ஆனல் சத்தியத்துடன் நாம் ஒத்துழைக்க வேண்டுமானல், அசத்தியத்துடன் ஒத்துழையாமை செய்ய வேண்டும்; தாய் நாட்டினிடம் விசுவாசமாக இருப்பது போற்றத்தக்கது என்றல், விசுவாசம் அற்றிருப்பது வெறுக்கத் தக்கதாகும்; சுதந்திரத்துடன் நாம் ஒத்துழைக்க வேண்டுமானல், அடிமைத்தனத்துடன் நாம் ஒத்துழையாமை செய்ய வேண்டும். ஆகையால் ஒரு தேசீயப் பள்ளிக்கூடம் இருந்தாலும், பல பள்ளிகள் இருந்தாலும், ஒரு மாணவன் இருந்தாலும், பலர் இருந்தாலும் சுதந்திரம் பெறுவதற்கான கருவிகளில் எதிர்கால சரித்திர ஆசிரியர் தேசீயப் பள்ளிக்கூடத்திற்கு முக்கிய இடம் கொடுத்தாக வேண்டும். நாம் செய்பவை எல்லாம் புதுமாதிரியான முயற்சிகள். அவற்றில் எவ்வளவோ குறைபாடுகளைக் காண முடியும். சிலவற்றை நாமே பார்க்கலாம். அந்தக் குறைபாடுகளை நீக்குவதற்கு நமது முயற்சிகளைச் செய்து கொண்டே இருக்கவேண்டும். நமது நிர்வாகம் திருப்திகரமாய் இல்லை என்பதும், நமது அமைப்பாளர்களும், பேராசிரியர்களும் செம்மையற்றவர்கள் என்பதும் எனக்குத் தெரியும். இந்த விஷயங்களை எல்லாம் நன்றக கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேம். குறைபாடுகளை அகற்றுவதற்கு எல்லா முயற்சிகளையும் செய்கிறேம்.

மாணவர்களே, பொறுமையுடன் இருங்கள். நாம் சுயராஜ்ய சேனையின் போர்வீரர்கள் என்று நம்புங்கள். அத்தகைய போர் வீரருக்குத் தகுதியற்ற எதையும் செய்யாதீர்கள், பேசாதீர்கள், நினைக்காதீர்கள். கடவுள் உங்களுக்கு அருள் புரியட்டும்.

—'எங் இந்தியா' – 10—12—1925

# 3

[கோடை விடுமுறைக்குப் பிறகு காந்திஜியின் பிரசங்கத்துடன் ஜூன் 14–ஆம் தேதியன்று குஜராத் மகாவித்தியாலயம் திறக்கப்பட்டது. அது அவருடைய மௌன தினமாகையால் அவருடைய பிரசங்கத்தை ஒருவர் வாசித்தார். அதனுடைய மொழி பெயர்ப்பைக் கீழே காணலாம்.]

1921-க்கும் 1926-க்கும் எவ்வளவு வேற்றுமை ! நான் சோகக் கதை கூறுகிறேன் என்று நினைக்காதீர்கள். நான் பின்னுக்கிப் போகவில்லை. நமது தேசமும் பின்னுக்கிப் போகவில்லை. நாம் சுயராஜ்யத்திற்கு ஐந்து வருடத்திற்கு அருகில் போயிருக்கிறோம் என்பதில் சந்தேகமே இருக்க முடியாது. 1921-இல் கிட்டத்தட்ட அதைப் பெற்றுவிட்டோம் என்றும், ஆனால் இப்போது அது வெகு தொலைவில் இருக்கிறதென்றும் யாராவது கூறினால் அதை நம்பாதீர்கள். அது எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பது யாருக்கும் தெரியாது. நல்ல எண்ணத்துடனும், கடவுள் நம்பிக்கையுடனும் செய்யும் எதுவும் வீண் போவதில்லை. மனிதனுடைய வெற்றி அத்தகைய முயற்சியில்தான் இருக்கிறது. பலன் ஆண்டவனிடம் இருக்கிறது.

எண்ணிக்கைப் பலத்தை கண்டு ஆனந்தப்படுபவர்கள் தைரியம் இல்லாதவர்கள்தான். தனித்து நின்று போராடுவதிலேயே வீரன் பெருமை கொள்வான். அத்தகைய வீர உணர்ச்சியை வளர்த்துக் கொள்வதற்காகவே நீங்கள் எல்லோரும் இங்கிருக்கிறீர்கள். நீங்கள் ஒருவராய் இருந்தாலும், பலராய் இருந்தாலும் இதுதான் உண்மையான வீரம். மற்றவை எல்லாம் போலிகளே. தியாகம், உறுதி, நம்பிக்கை, பணிவு ஆகியவை இல்லாமல் இந்த வீர உணர்ச்சியை வளர்க்க முடியாது.

ஆன்ம சுத்தி என்ற அஸ்திவாரத்தின் மீது இந்த வித்தியாலயத்தை எழுப்பி இருக்கிறோம். சாத்விக ஒத்துழையாமை அதில் ஒரு அம்சம். ஆனால் நம்முடைய தீண்டாத சகோதரர்களுடன் நாம் ஒத்துழைக்காதவரை, பல்வேறு மதங்களைச் சேர்ந்த மக்களிடையே இதய பூர்வமான ஒற்றுமை ஏற்படாதவரை, கைராட்டினத்திற்கும், கதருக்கும் அதற்குரிய புனித ஸ்தானத்தை அளிப்பதன் மூலம் நாட்டில் உள்ள லட்சக்கணக்கான மக்களுடன் ஒத்துழைக்காதவரை, ஒத்துழையாமை என்பதன் எதிர்மறைக்கு அர்த்தமே இல்லை. அத்தகைய ஒத்துழையாமை அகிம்சையை அடிப்படையாகக் கொண்டிராது. இம்சையே, அதாவது, துவஷமே அதன் அடிப்படையாக இருக்கும். நிச்சயமாக ஒன்றைச் செய்ய வேண்டும் என்பதில்லாமல் ஒன்றைச் செய்யக் கூடாது என்று விதிப்பது உள்ளமே இல்லாத உடலைப் போன்றதாகும். தீயில் போட்டுக் கொளுத்துவதற்குத்தான் அது தகுதியானது. இந்தியாவில் உள்ள ஏழு லட்சம் கிராமங்களுக்கு ஏழாயிரம் ரயில்வே ஸ்டேஷன்கள் தான் இருக்கின்றன. இந்த ஏழாயிரம் கிராமங்கள் கூட நமக்குத் தெரியாது. ரயில்வே ஸ்டேஷன்களுக்கு அருகாமையில் இல்லாத கிராமங்களின் நிலை

மையைப் பற்றி சரித்திரத்தின் மூலம்தான் நமக்குத் தெரியும். கிராமவாசிகளை நம்முடன் பிணைக்கக் கூடிய ஒரே அன்புப் பணி கைராட்டினம்தான். இந்த அடிப்படை உண்மையை இன்னும் புரிந்து கொள்ளாதவர்கள் இந்த ஸ்தாபனத்தில் இருப்பதால் ஒரு பிரயோசனமும் இல்லை. இந்தியாவில் பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்களைப் பொருட்படுத்தாததும், அவர் களுடைய கஷ்ட நிவாரணத்திற்கு வழி தேடாததுமான கல்வி, தேசியக் கல்வி ஆகாது. கிராமங்களுடன் சர்க்காருக்கு உள்ள தொடர்பு, வரியை வசூலிப்பதுடன் தீர்ந்து விடுகிறது. கைராட்டி னத்தின் மூலம் அவர்களுக்குச் சேவை செய்யும்போது நம்முடைய தொடர்பு ஆரம்பமாகிறது. ஆனால், அது அத்துடன் முடிந்துவிட வில்லை. கைராட்டினம்தான் அந்தச் சேவையின் கேந்திரம். உங் களுடைய அடுத்த விடுமுறை நாட்களைத் தொலைவில் உள்ள ஏதாவது ஒரு கிராமத்தில் கழித்தீர்களானால், நான் சொல்லு வதன் உண்மையைத் தெரிந்து கொள்வீர்கள்; அங்குள்ள மக்கள் உற்சாகம் அற்றும் பயந்து கொண்டும் இருப்பதைக் காண்பீர் கள். அங்கே கால்நடைகளைப் பார்த்தால் பரிதாபமாக இருக் கும். ஆயினும், அங்கு சோம்பல் தாண்டவம் ஆடுவதைக் காண் பீர்கள். வெகு காலத்திற்கு முன்பு தம்முடைய வீடுகளில் கைராட் டினம் இருப்பதைப்பற்றி மக்கள் சொல்லுவார்கள்; ஆனால், இன்று அதைப்பற்றியோ அல்லது வேறு எந்தக் குடிசைத் தொழி லைப் பற்றியோ பேசவும் மாட்டார்கள். அவர்கள் முற்றிலும் நம்பிக்கை இழந்தவர் ஆகிவிட்டார்கள். இஷ்டப்படும் போது இறக்க முடியாதாகையால் அவர்கள் உயிர் வாழ்கிறார்கள். நீங்கள் நூற்றால்தான் அவர்கள் நூற்பார்கள். முன்னூறு பேர்கள் உள்ள ஒரு கிராமத்தில் நூறு பேர்கள் நூற்றால் கூட, வருடத்தில் நிச்சயமாக ரூபாய் 1800 அதிகப்படியான வருமானம் கிடைக்கும். இந்த வருமானத்தின் அடிப்படையில், ஒவ்வொரு கிராமத்திலும் உறுதியான சீர்திருத்தத்திற்கு நீங்கள் அஸ்தி வாரம் போட முடியும். ஆனால், இதைச் சொல்லுவது எளிது, செய்வது கடினம் என்பதை நான் அறிவேன். நம்பிக்கை இருந் தால் இது எளிதாகிவிடும். 'நான் ஒருவனாய் இருக்கிறேன். ஏழு லட்சம் கிராமங்களுக்கு நான் எப்படிப் போக முடியும்!' நம் முடைய கர்வம் நம்மிடம் ரகசியமாக கூறும் வாதம் இதுதான். ஒரு கிராமத்தில் போய் உட்கார்ந்து கொண்டு அங்கு வெற்றி பெற்றால், மற்றவை தாமாக வரும் என்ற நம்பிக்கையுடன் ஆரம்பி யுங்கள். நிச்சயமாக முன்னேற்றம் தானாக வரும். உங்களை அத்தகைய ஊழியர்களாக ஆக்க வேண்டுமென்றே வித்தியாலயம் விரும்புகிறது. அது உற்சாகம் அளிக்கும் வேலை அல்லவென்றால், வித்தியாலயமே உற்சாகம் அற்றதுதான். அதை விட்டுவிட்டுப் போய்விடலாம்.

நாட்டிற்குத் தன்னலமற்ற சேவை செய்ய கடவுள் உங்க ளுக்கு நீண்ட ஆயுளை அளிப்பாராக.

—'யங் இந்தியா' 17—6—1926

## 4

அன்றொரு நாள் ஜெர்மன் பேராசிரியர் ஒருவர் மகாவித்தியாலயத்திற்கு விஜயம் செய்துவிட்டு, காந்திஜியிடம் வந்து தமது திருப்தியைத் தெரிவித்துக் கொண்டார். "நீங்கள் திருப்திப்படலாம். ஆனால், இன்று அதில் பார்ப்பதற்கு அதிகமாக ஒன்றுமில்லை. அது பூமியில் ஆழப்பதிந்து கிடக்கிறது. விதைகள் முளைவிட்டுப் பெரிய மரங்களாக வளரும்போல் ஆரம்பத்தில் தோன்றியது; ஆனால், அவை கருகிவிட்டன. விதைகள் அழுகி அழிந்து போயிருந்தால் அது எங்களுக்கு வேண்டியதுதான். ஆனால், விதைகள் சாகவில்லை என்றே நான் நினைக்கிறேன். அவை மீண்டும் முளைவிட்டு, பெரிய மரமாக வளரும் காலம் வரும்" என்று காந்திஜி அவரிடம் சொன்னார்.

தேசீய சர்வகலாசாலையின் இன்றைய நிலை, அதன் எதிர் காலத்தைப்பற்றிய தன்னுடைய கருத்து இரண்டையும் காந்திஜி இவ்வாறு சுருக்கமாகக் கூறினார். பட்டமளிப்பு விழாவின்போது, ஸ்ரீ ஆண்ட்ரூஸின் பிரசங்கத்தை மொழி பெயர்க்கும் பொறுப்பை காந்திஜியே ஏற்றுக் கொண்டார். தனக்கே உரிய வழியிலும் அந்தப் பொறுப்பை நிறை வேற்றினார்; "நாம் எதிர் பார்க்கும் விஷயங்களுக்கு நம்பிக்கைதான் ஆதாரம்; கண்ணுக்குப் புலப்படாதவைகளின் ருசுவும் இதுதான்" என்று வற்புறுத்தினார்; ஜெர்மன் பேராசிரியரிடம் தெரிவித்த கருத்தை இன்னும் அதிக வன்மையுடன் கூறினார்; ஸ்ரீ ஆண்ட்ரூஸின் பிரசங்கத்தை ஒரு கவிஞனின், கலைஞனின், திறமை மிக்க பிரசங்கியின் சிருஷ்டி என்று பாராட்டினார்; கடவுள் மனிதன், நம்பிக்கை தளராத மனிதன் என்றும் போற்றினார். "இந்த வருடத்தில் பதினைந்து ஆரம்பப் பள்ளிகளின் அங்கீகாரத்தை ரத்து செய்ய வேண்டியிருந்ததென்று ரிஜிஸ்திரார் சொன்னதைக் கேட்டீர்கள். இன்னும் பல பள்ளிகளின் அங்கீகாரத்தையும் ரத்து செய்ய வேண்டியிருந்தால் தான் என்ன? நம்முடைய கண்டிப்பான வேலைத் திட்டத்தை நாம் தளர்த்தத் தயாராக இல்லை. அதனால் தான் அப்பள்ளிகளின் அங்கீகாரத்தை ரத்து செய்ய வேண்டியிருந்தது. ஒன்று கட்டாய நூற்றலை ஏற்றுக் கொள்ள வேண்டும் அல்லது போய்விட வேண்டும் என்று சொன்னோம். இதன் பலனாக், இறுதியில் வித்தியாபீடம் பூராவுமே காலியாகிவிடுவதாயிருக்கலாம்; அத்யட்சகர் ஒருவர் மட்டுமே மீதமாக இருந்து அவரே ஆசிரியராகவும், மாணவராகவும் இருக்க நேரலாம். அதனால் என்ன? அப்போதும் நான் அங்கேயே உட்கார்ந்துகொண்டு, என் கைராட்டினத்தைச் சுற்றிக் கொண்டுதான் இருப்பேன். அந்த நம்பிக்கை உங்களுக்கிருந்தால், கோரையினாலும், களிமண்ணினாலும் கட்டப்பட்ட குடிசைகளிலிருந்து ஒன்றல்ல, நூற்றுக்கணக்கான உண்மையான ஊழியர்கள் தோன்றுவார்களென்பது நிச்சயம்" என்று காந்திஜி சொன்னார். இறுதியில் அவர் கூறினார்: "வித்தியாபீடம் எப்படி ஆகப்போகிறதென்பதை இன்னும் சில நாட்களில் அறிவீர்கள். ஆனால், எங்களில் யாரா

வது ஒருவர் உயிருடனிருக்கும் வரையில், வித்தியாபீடம் மூடப் படுவதைப் பார்ப்பதற்கு முன்பு, உயிருடன் இங்கு புதைக்கப்படு வதற்குத் தயாராயிருப்பார் என்ற உறுதியுடன் நீங்கள் நம் பிக்கையுடனும், பொறுமையுடனும் காத்திருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இங்கேயே இருந்து தீக்குளியுங்கள். நீங்கள் தீக் குளிக்க முடியவில்லையென்றால், உங்கள் விதியின்மீது பழி சுமத் தாதீர்கள். ஆனால், எங்களில் யாராவது ஒருவர் கடமையைச் செய்யத் தவறினால், நாங்கள் அங்கம் அங்கமாகப் பிய்த்தெறியப் படுவதற்குத் தகுதியானவர்களேயாவோம். நான் அகிம்சையில் நம்பிக்கையுள்ளவனாக இருந்தும் இப்படிச் சொல்லுகிறேன்.

—' எங் இந்தியா ' – 19—1—1928

# 14

# தேசீயக் கல்வி ஸ்தாபனங்கள்

## 1

தேசீய ஸ்தாபனங்கள் இப்போது மக்களிடையே அவ்வள வாக செல்வாக்கு பெற்றிருக்கவில்லை என்பதைப் பற்றி சந்தேகம் இருக்க முடியாது. அந்த ஸ்தாபனங்களுக்கு விலை உயர்ந்த அழகான கட்டிடங்களோ, இதர தளவாடங்களோ கிடையாது. நல்ல சம்பளம் வாங்கும் ஆசிரியர்களோ, பேராசிரியர்களோ இல்லை. தங்களிடம் ஒரு பாரம்பர்யம் இருக்கிறது, அல்லது ஒரு முறை இருக்கிறது என்றும் அவை சொல்லிக்கொள்ள முடியாது.

அந்த ஸ்தாபனங்களில் அளிக்கப்படுபவை பலருக்குக் கவர்ச்சிகரமாக இல்லை. தன்னலமற்ற, தேசபக்தியுள்ள பல ஆசிரியர்கள் அங்கு வறுமையிலும், தேவையிலும் வாழ்கிறார்கள். தம்முடைய போதனையினால் நாட்டின் இளைஞர்கள் பலன் பெறட் டும் என்ற எண்ணத்துடன் அவர்கள் அப்படி வாழ்கிறார்கள். கைராட்டினத்தில் நூற்பதையும், அதில் பொதிந்துள்ள கருத்து களையும் இந்த ஸ்தாபனங்கள் போதிக்கின்றன ; சேவை செய்வ தற்குச் சொல்லிக் கொடுக்கின்றன ; தாய் மொழியின் மூலம் பாடங்கள் சொல்லிக் கொடுப்பதற்கு முயற்சி செய்கின்றன ; தேசீய விளையாட்டுகளை உயிர்ப்பிக்கவும், தேசீய சங்கீதத்தைக் கற்றுக் கொடுக்கவும் முயற்சி செய்கின்றன. கிராமங்களில் வேலை செய்யவும், அதற்காக இந்தியாவில் உள்ள ஏழை மக்களிடம் பையன்களுக்கு ஒரு தோழமை உணர்ச்சியை ஏற்படுத்துவதற் காகவும் அந்த ஆசிரியர்கள் முயற்சி செய்கிறார்கள். ஆனால், இது அவ்வளவு கவர்ச்சிகரமானதாக இல்லை. அதனால்தான் எண் ணிக்கை குறைந்து கொண்டே வந்திருக்கின்றது. இந்த ஸ்தா பனங்கள் செல்வாக்கை இழந்ததற்கு இதுமட்டும் காரணமல்ல,

பரபரப்பும், போதையும், நம்பிக்கையும் நிறைந்திருந்த அந்த 1921-ஆம் வருடத்தில் பல காரியங்கள் செய்யப்பட்டன. போதை தணிந்தவுடன் அதைத் தொடர்ந்து மந்தம் வந்துவிட்டது. பையன்கள் லாப நஷ்டம் பார்க்க ஆரம்பித்துவிட்டார்கள். தேசபக்தி என்பது லாப நஷ்டக் கணக்கு அல்ல என்று அவர்களுக்குத் தெரியாது. ஆகையால் அவர்கள் தவருன முடிவுகள் செய்து, சர்க்கார் பள்ளிகளும், கல்லூரிகளும்தான் உயர்ந்தவை என்று தீர்மானித்துவிட்டார்கள். இது அவர்களுடைய குற்றமில்லை. நம்மைச் சுற்றியுள்ள எல்லாமே வியாபாரம், பேரம் என்ற அளவிற்கு வந்துவிட்டன. சுற்றியுள்ள சூழ்நிலையை மீறிப் பையன்களும். பெண்களும் நடந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாதுதான்.

இதுமட்டுமல்ல; தேசீய ஆசிரியர்களும் குற்றம் குறையற்றவர்களாக இல்லை. அவர்கள் எல்லோருமே தன்னலமற்றவர்கள் அல்ல ; அற்பத்தனமான சூழ்ச்சிகளுக்கு அப்பாற்பட்டவர்கள் அல்ல ; எல்லோருமே தேசபக்தி உள்ளவர்களும் அல்ல. இதுவும் அவர்களுடைய குற்றமில்லை. நாம் எல்லோருமே அந்தந்த சந்தர்ப்பங்களை ஒட்டி நடக்கும் பிராணிகள்தான். சுயமுயற்சி என்பதே இல்லாமலும், எப்போதும் கட்டுப்பாடுகளின் கீழும் சேவகர்களாக வேலை செய்வதற்கு நம்மைப் பழக்கப்படுத்திவிட்டார்கள். ஆகையால் தியாகம், சுயநலம், குடும்ப நலம் ஆகியவற்றைப் பொருட்படுத்தாத தேசபக்தி, பாரபட்ச மற்ற சேவை ஆகியவைகளெல்லாம் நமக்குப் புரியவில்லை.

ஆகையால் இப்போதுள்ள மந்த நிலைமைக்குக் காரணம் என்னவென்பதை சரியாகக் கண்டுபிடிப்பது சாத்தியமேயாகும். ஆனல், நமது அசல் வேலைத் திட்டத்திலுள்ள ஒவ்வொரு அம்சத்திலும் உள்ள நம்பிக்கையைப் போலவே, தேசீயப் பள்ளிக்கூடங்களில் எனக்குள்ள நம்பிக்கை அழிவற்றதாகும். தேசீயச் சூழ்நிலையில் ஏற்பட்டுள்ள மந்தத்தை நான் உணர்ந்திருக்கிறேன் ; அதற்கேற்றவாறு காங்கிரஸ் தீர்மானங்கள் கொண்டுவருவதற்கும் ஆதரவு அளிக்கிறேன். எனினும், அதனல் நாம் பாதிக்கப்படவில்லை. மற்றவர்களும் அதே மாதிரி இருக்கவேண்டுமென்று அழைக்கிறேன். இந்த தேசீய ஸ்தாபனங்கள் இப்படி வீழ்ச்சி அடைந்த போதிலும், நமது நம்பிக்கைகள், அபிலாஷைகள் என்ற பாலைவனத்தில் ஊற்றுகளைப் போல் இருக்கின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது. இவற்றிலிருந்துதான் சம்பளமே பெருத அல்லது குறைந்த சம்பளம் பெறும் ஏராளமான ஊழியர்கள் நமக்குக் கிடைக்கிருர்கள் ; அவற்றிலிருந்துதான் எதிர்கால சமுதாயமும் தோன்ற வேண்டும். எங்கு வேண்டுமானலும் சென்று பாருங்கள். கொஞ்சமும் பிரதி பலனை எதிர்பார்க்காமல் தம்முடைய சக்திகளை எல்லாம் தாய் நாட்டின் சேவைக்காகச் செலவிட்டுக் கொண்டிருக்கும் இளைஞர்களையும், யுவதிகளையும் கூடக் காண்பீர்கள்.

ஆகையால், எண்ணிக்கை குறைந்து கொண்டே வருவதை முன்னிட்டு குஜராத் மகாவித்தியாலயத்தை மூடிவிட வேண்டு மென்று ஒருவர் எழுதியிருப்பதற்கு நான் செவி சாய்க்க முடியாது. மக்கள் அதற்கு ஆதரவளித்தால் அல்லது ஆசிரியர்களிடம் தெம்பு இருந்தால், மக்கள் ஆதரித்தாலும், ஆதரிக்காவிட்டாலும் மகாவித்தியாலயத்தின் லட்சியங்களுக்கு இணங்க அந்த ஸ்தாபனத்திலேயே தன்னுடைய பயிற்சியைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்று விரும்பும் உண்மையான ஒரு பையன் அல்லது பெண் இருக்கும் வரையில், அது நடந்து கொண்டுதான் இருக்க வேண்டும். நல்ல நிலைமையில் இருந்தால் தான் அது நடக்கும் என்பதில்லை. தேசீய ஊழியர்கள் எப்படியோ அப்படித்தான் தேசீய ஸ்தாபனங்களும். நல்ல காலமாயிருந்தாலும், கெட்ட காலமாயிருந்தாலும் அவர்கள் தம்முடைய வேலைத்திட்டத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டுதான் போக வேண்டும்.

'எங் இந்தியா' – 10—12—1925

## 2

அனுபவமுள்ள ஊழியர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :

"உணர்ச்சியோ அல்லது லட்சியத்தில் கொஞ்சமும் பற்றுதலோ இல்லாமல் ஒரு பள்ளிக்கூடம் பெயரளவில் மட்டுமே தேசீயப் பள்ளிக்கூடமாக இருக்கும்போது, தேசீயப் பள்ளிக்கூடங்களுக்குக் காங்கிரஸ் விதித்துள்ள நிபந்தனைகளில் ஒன்றாவது நிறைவேற்றப்படாமல் இருக்கும் போது, அந்தப் பள்ளிக்கூடம் தனது போக்கை மாற்றிக்கொள்ள வேண்டும் அல்லது அதை மூடிவிட வேண்டும் என்றுதான் எதிர்பார்ப்போம். அதுதான் சரியானதாகும். ஆனால், ஆசிரியர்கள் தம்மால் இயன்ற முயற்சிகளைச் செய்து கொண்டும், மாணவர்கள் ஒரு அளவிற்கு ஒத்துழைத்துக் கொண்டும் இருக்கும் இடங்களில், பெற்றோர்கள் எதிர்ப்புக் காட்டுகிறார்கள். சிலர் தீண்டாமை விஷயத்திலும், சிலர் கதர் விஷயத்திலும், வேறு சிலர் சங்கீதம் அல்லது தேகப் பயிற்சி விஷயத்திலும் எதிர்ப்புக் காட்டுகிறார்கள். இதனால் தேசீயக் கல்வித் திட்டத்திலுள்ள எந்த அம்சத்தையும் அமலுக்குக் கொண்டு வரமுடியாமல் போய்விடுகிறது. அந்த மாதிரி இடங்களில், எப்போதாவது போக்கு மாறிவிடுமென்றும், மக்கள் அதை விரும்பிக் கேட்பார்கள் என்றும் நம்பிக் கொண்டு அந்தப் பள்ளிக்கூடங்களைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு போவதுதான் நல்லது அல்லவா? ஒருவன் பாம்பு கடித்து இறந்துவிட்டால் உயிர் இருக்கிறது என்பதற்கான அறிகுறிகள் இல்லாவிட்டால்கூட மூன்று நாட்களுக்கு உடலை அப்படியே வைத்திருக்க வேண்டுமென்று எங்கள் பக்கத்தில் ஒரு நம்பிக்கை உண்டு. விஷத்தை இறக்கி அவனை உயிர்ப்பித்து விடக்கூடிய ஒரு மந்திரவாதி கிடைப்பான் என்ற நம்பிக்கை அதற்குக் காரணமாயிருக்கலாம். ஆனால், அதற்குள் உடலை எரித்துவிட்டால் அல்லது புதைத்துவிட்டால் அது சாத்தியமாகாது அல்லவா?"

இந்த நிருபர் கூறியுள்ள வாதத்தைக் கவனிப்பதற்கு முன்பு, அவர் கூறியுள்ள பாம்பு கடித்த மனிதனின் உதாரணத்தைப் பார்ப்போம். உதாரணம் காட்டுவது எப்போதுமே சற்று ஆபத்தானதுதான். ஏனெனில் இரண்டு விஷயங்கள் எல்லா அம்சங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பது அரிது. முக்கியமான அம்சங்களில் அப்படி ஒரே மாதிரியாக இல்லையென்றால் உதாரணம் சரியாக இராது, தவறாகவே இருக்கும். பாம்பு கடித்தவன் சம்பந்தப் பட்டவரையில் உயிர் மூட்டிவிடலாம் என்ற நம்பிக்கை இருக்கிறது; உயிர் போய்விட்டது என்று வைத்தியர் இன்னும் சொல்லிவிடவில்லை. உடலைத் தகனம் செய்துவிட்டால் அதை மீண்டும் உயிர்ப்பிக்கும் பேச்சே இராது. ஆகையால், இரண்டு மூன்று நாட்களுக்கு உடலை அப்படியே வைத்திருப்பது நல்லது என்று கருதப்படுகிறது. ஆனால், தேசீயப் பள்ளிக்கூடங்கள் விஷயத்தில் இந்தக் காரணங்கள் பொருந்தா. இப் பள்ளிகள் ஒன்று, துரிதமாக சீர்திருத்தப்பட வேண்டும் அல்லது மூடப்பட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். தேசீய உணர்ச்சியை உயிர்ப்பிப்பது அசாத்தியமானதாக இருந்திருக்கும். அது மடிந்து விட்டது என்று நிபுணர்கள் கூறியிருப்பார்கள். அதைத் திரும்ப ஆரம்பிப்பது அசாத்தியமானதல்ல என்பது தெளிவு. ஆகையால் அந்த உதாரணம் தவறு என்றே ஆகிறது. காங்கிரசினால் விதிக்கப்பட்ட நிபந்தனைகளில் எதையும் நிறைவேற்றாத ஒரு தேசீயப் பள்ளிக்கூடம் மூடப்படத்தான் வேண்டும் என்றே அர்த்தம். இந்தப் பள்ளிக்கூடங்கள் தொடர்ந்து நடப்பது அசத்தியம் பரவுவதற்கு உதவுகிறது. தேசீயப் பள்ளிக்கூடங்களின் பெயரால் வசூலிக்கப்பட்ட பணம் இந்தப் போலி தேசீயப் பள்ளிகளுக்காக செலவிடப்படுகிறது. இது, நன்கொடையாளர்களின் நம்பிக்கையை மோசம் செய்வதாகும். இதிலுள்ள மோசமான விஷயம் என்னவென்றால், இதனால் உண்மையான தேசீயப் பள்ளிக்கூடங்களும் பாதிக்கப்படுகின்றன. போலிப் பள்ளிக்கூடங்களில் காணப்படுவதைக் கொண்டுதான் உண்மையானப் பள்ளிக்கூடங்களையும் மதிப்பிடுகிறார்கள். இதன் பயனாக, தேசீயப் பள்ளிக்கூடங்களில் நிதி வசூலிப்பவர்கள் தம் நாணயத்தை இழந்துவிடுகிறார்கள். தேசீயப் பள்ளிக்கூடங்களுக்காக நிதி வசூலிப்பது கஷ்டமாகிவிடுகிறது. இம்மாதிரி விரும்பத்தகாத விளைவுகளைச் சிருஷ்டிப்பதைவிட உண்மையான ஒரு தேசீயப் பள்ளிக்கூடத்தை நடத்தி, சிறு அளவில் இருந்தால் கூட நமது கவனம் பூராவையும் அதிலேயே செலவிடுவது மிகவும் நல்லதாகும். சத்தியமும், கண்ணியமுமாவது அதில் இருக்கும். பலவீனமான ஒரு அஸ்திவாரத்தின் மீது பலமான கட்டிடத்தை எழுப்ப முடியாது; அது எவ்வளவுக் கெவ்வளவு உயரமாயிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நமது நஷ்டமும் அதிகமாக இருக்கும். அதேமாதிரி பெயரளவில் மட்டுமே தேசீயப் பள்ளிக்கூடங்களாக இருப்பவைகளின் எண்ணிக்கையை அதிகமாக்கிக் கொண்டு போவது நமது சுமையைத்தான் அதிகப்படுத்துகிறது; தேசீயக் கல்வி லட்சியத்திற்கும் தீங்கு விளைவிக்கிறது. நல்ல காலம் வந்

தால், உண்மையான தேசீயப் பள்ளிக்கூடம் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது என்றாலும் அதைச் சுலபமாக அதிகமாக்கலாம். ஆனால், பெயரளவில் மட்டும் தேசீயப் பள்ளிக்கூடங்களாக இருக்கும் பல பள்ளிகளிலிருந்து நாம் நல்லதைப் பெற முடியுமென்று நினைப்பது வெறும் ஆசைக் கனவேயாகும். அத்துடன் மட்டுமில்லை; எதிர்காலத்தில் தேசீயப் பள்ளிக்கூடங்களுக்குத் தேவை ஏற்பட்டால், இந்தப் போலி தேசீயப் பள்ளிகளை மூடுவதுதான் அப்போது நாம் செய்யவேண்டிய முதல் வேலையாக இருக்கும்.

தேசீய லட்சியம் உறங்கிக் கிடக்கிறது என்றால், அந்தக் குற்றம் ஆசிரியர்களுடையதுதான் என்பது என்னுடைய அனுபவம். ஆசிரியர்கள் உற்சாகத்துடனும், மாணவர்கள் அசிரத்தையுடனும், பெற்றோர்கள் விரோதமாகவும் உள்ள ஒரு பள்ளிக்கூடத்தைப் பற்றி இந்த நிருபர் உதாரணம் கொடுத்திருக்கிறார். தமது குழந்தைகள் நூல் நூற்றலையும், கதர் நெய்வதையும் கற்றுக் கொள்வதைப் பெற்றோர்கள் ஆட்சேபித்தால், தீண்டாதார் குழந்தைகள் அனுமதிக்கப்பட்டால், தங்கள் குழந்தைகளை வாபஸ் பெற்றுவிடுவோம் என்று மிரட்டினால், பெற்றோர்களின் எதிர்ப்பை மீறி, விடாப்பிடியாக பள்ளிக்கூடத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருப்பது ஒரு ஆசிரியரின் சுயமரியாதைக்கு முரணானதாகும். அது தேசத்தின் நேரத்தையும் வீணடித்ததாகும். பெற்றோர்களின் எதிர்ப்பை மீறி நாம் தேசீயப் பள்ளிக்கூடங்களை நடத்திக்கொண்டு போனால், பாதிரிமார் எந்தத் தவறை செய்வதாக நாம் கூறுகிறோமோ அதே தவறை நாமே செய்தவர்கள் ஆவோம். பெற்றோர்களின் விருப்பத்தை மீறி குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து, அதன் மூலம் குடும்பத்தில் பிளவுகள் உண்டாகும்படி செய்ய நமக்கு உரிமையில்லை. பதினாறு வயதிற்கு மேற்பட்டவர்களும், தமது நலன்கள் என்ன என்பதை அறிந்தவர்களும், கஷ்டங்களை அனுபவிக்கக் கூடியவர்களுமாக இருப்பவர்களுக்கு பாதுகாப்பு தேவையில்லை. அவர்கள் தம்மைத் தாமே கவனித்துக் கொள்வார்கள். தேவையான இடங்களில் அவர்களுக்காக நாம் கல்வி ஸ்தாபனத்தை ஆரம்பித்து நடத்த வேண்டியதுதான். ஆனால், இந்தியா பூராவிலும் அம்மாதிரி மாணவர்கள் எங்கிருக்கிறார்கள், எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? பிரஹ்லாதனைப் போல் தெய்வ பக்தியும், பயமின்மையும், துன்பங்களைத் தொடர்ந்து அனுபவிக்கும் பொறுமையும், அதே சமயத்தில் விவேகமும், மரியாதையும் உள்ள மாணவர்கள் படிக்கும் பள்ளிக்கூடங்கள் எங்கே இருக்கின்றன? அத்தகைய தன்மைகள் உள்ள மாணவர்கள் ஏராளமாக இருந்தால் எங்குமே புது வாழ்வைக் காண்போம். சுயராஜ்யம் எங்கிருக்கிறது என்று யாரும் கேட்கமாட்டார்கள். அம்மாதிரி மாணவர்களைத் தோற்றுவிக்க வேண்டுமானால், ஒரு சில மாணவர்களேதான் இருக்கிறார்கள் என்றாலும் அதைப் பொருட்படுத்தாமல் மிகப் பரிசுத்தமான தேசீயப் பள்ளிக்கூடங்களை நாம் நடத்த

வேண்டும். பெற்ருேர்கள் புத்தி சொல்ல வந்துவிட்டால், ஆசிரியர்களை மாணவர்கள் மேய்க்க ஆரம்பித்துவிட்டால், காங்கிரஸ் உதவி அளிக்காவிடில் பள்ளிக்கூடம் சர்க்கார் நிர்வாகத்தின் கீழ் போய்விடுமென்று நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ பய முறுத்தப்பட்டால் தேசீயப் பள்ளிக்கூடங்கள் இருக்க முடியாது. அத்தகைய பள்ளிக்கூடம் எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக மூடப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. ஒத்துழையாமை என்ருல் என்ன என்பதை இப்போது நாம் அறிவோம். அதன் அபாயங்களையும் அறிவோம். ஆகையால், ஒத்துழையாமை செய்யும் பள்ளிகளின் பாதை தெளிவாக இருக்கிறது. எனவே, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளாமல் இருப்போமாக; ஏற்ற இறக்கங்களினுல் பாதிக்கப்படாமல் இருப்போமாக. நம்முள் நம்பிக்கை உள்ளவர்கள் தொடர்ந்து வேலை செய்வோமாயின், எல்லாம் சீராகிவிடும்.

—'நவஜீவன்' – 8—8—1926

## 3

தேசீயக் கல்வியைப் பற்றி நெய்ரோபியிலிருந்து ஒரு நண்பர் எழுதியிருக்கிருர். அவர் கூறுவது இதுதான்: தேசீயக் கல்வியில் முன்னேற்றம் எதுவும் தென்படவில்லை. ஏனெனில், மாணவர்கள் தம்மைத் தாமே நம்பி இருப்பதற்குப் பயிற்சி அளிக்கக்கூடிய கல்வி போதிக்கப்படவில்லை. கைராட்டினத்துடன் விவசாயமும் போதிக்கப்பட்டால் இந்தக் கஷ்டம் அகன்றுவிடும். மக்களின் வாழ்க்கையில் இருப்பதைப் போலவே, பள்ளிக்கூடத்திலும் விவ சாயத்திற்குத்தான் முதலிடம் கொடுக்க வேண்டும்; கைராட் டினத்திற்கு இரண்டாவது ஸ்தானமே கொடுக்கப்பட வேண்டும்.

இம்மாதிரி அபிப்பிராயங்களைப் பற்றி ஏற்கனவே 'நவஜீவன்' பத்திரிகையில் விவாதித்திருக்கிருேம். ஆனுல், பத்திரிகைகளில் வாசிப்பதை மக்கள் சாதாரணமாக ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருப்பதில்லை. ஆகையால், இம்மாதிரி கேள்விகள் எழும் போதெல்லாம் அவற்றை மீண்டும் கவனிக்க வேண்டியது அவசிய மாகிறது. தேசீயக் கல்வி அபிவிருத்தி பெறவில்லை என்ருே அல்லது அதன் வேகம் மிகவும் குறைந்து விட்டதென்ருே நினைப்பதற்குக் காரணமில்லை. அதன் வேகம் குறைந்திருந்தால், அந்த அளவிற்குப் பொறுப்பு ஆசிரியர்களுடையதுதான். இதை நான் பல தடவைகளில் சொல்லியிருக்கிறேன். இதை ருசுப் பிக்கவும் முடியும். ஆசிரியர்களுக்கு விடாமுயற்சியும், நம்பிக் கையும், புத்திசாலித்தனமும், அத்துடன் நல்லொழுக்கமும் இருக்கும் இடங்களில் தேசீயப் பள்ளிக்கூடங்கள் நன்ருகவே தான் நடந்துகொண்டிருக்கின்றன. இந்த உண்மையைப் பல தடவைகளில் எடுத்துக் காட்டியிருக்கிருேம்.

வேகம் இப்படிக் குறைந்ததற்கு ஆசிரியர்கள்தான் காரணம் என்றாலும், குற்றம் பூராவும் அவர்களுடையது இல்லை. அவர்களே ஒரு அந்நிய சர்க்காரின்கீழ் உருவானவர்கள்; அடிமைகளை உற்பத்தி செய்வதற்கென்று தயாரிக்கப்பட்ட ஒரு கல்வி முறையின் சிருஷ்டிகள். மிகுந்த கஷ்டத்துடன் அவர்கள் அதிலிருந்து விடுபட்டு வந்திருக்கிறார்கள். தம்மால் முடிந்த உதவியை அவர்கள் அளித்தார்கள்; பிறகு நின்று விட்டார்கள். தேசீயக் கல்வி மேலும் முன்னேற வேண்டுமானால், முதலில் இப்போதுள்ள தேசீயப் பள்ளிக்கூடங்கள் தம்முடைய பலத்தையும், திறமையையும் காட்ட வேண்டும். அவை நிலைத்திருக்கப் போகின்றன என்றால் இந்தத் தன்மைகள் காட்டப்படவேண்டுமென்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். சர்க்கார் பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் சுதந்திரமாக இருப்பதற்கான கல்வி போதிக்கப்படவில்லை. ஆயினும் அவற்றின் ஆடம்பரம் நம்மை மயக்கி விட்டது. அதனால்தான் சர்க்கார் பள்ளிகள் நடக்கின்றன. மேலும் படிப்பு முடிந்த பிறகு, மாதம் நானூறு அல்லது ஐந்நூறு ரூபாய் சம்பளம் உள்ள உத்தியோகங்கள் பெறுவதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்ற ஆசையும் சில மாணவர்களுக்கு ஏற்படுகிறது. "நம்மில் யாராவது ஒருவர் நிச்சயமாக பரிசு பெறப்போகிறோம்" என்று லாட்டரி சீட்டைப் பற்றி நினைப்பதைப் போலவே இதையும் பற்றி நினைக்கிறார்கள். "யார் கண்டது, எனக்கே கூட அந்த அதிர்ஷ்டம் வரலாம்" என்றும் நினைக்கிறார்கள். தேசீயக் கல்வியில் அம்மாதிரி கவர்ச்சி ஒன்றும் இல்லை.

அந்த நிருபர் கூறியுள்ள யோசனையை இனி கவனிப்போம். நமது பொருளாதார வாழ்வில் விவசாயம் ஒரு முக்கியமான ஸ்தானத்தை வகிக்கிறது என்பது உண்மைதான். ஆனால் அது மறைந்து விடவில்லை; இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. அதை நாம் உயிர்ப்பிக்க வேண்டுமென்ற தேவையில்லை. அதில் அபிவிருத்திக்கு இடமிருக்கிறது. ஆனால், விவசாயத்தை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்பது, தேசீயக் கல்வியில் ஈடுபட்டிருப்பவர்களுடைய சக்தியை மீறியதாகும். சர்க்கார் உதவியில்லாமல் அதை அபிவிருத்தி செய்வதற்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது. பூர்வாங்க சோதனைக்காகவே லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவிடவேண்டி யிருக்கும். சுயராஜ்யம் இல்லாமல் இதைச் செய்ய முடியாது. ஏனெனில் விவசாயம் பற்றிய சர்க்கார் சட்டங்கள் நாட்டின் பொருளாதார நிலைமைக்கு ஏற்றவையாக இருக்கவேண்டும். விவசாயிகளுக்கு விஷய அறிவு ஊட்டுவதற்கு நாடெங்கிலும் பல இடங்களில் மாதிரிப் பண்ணைகள் இருக்க வேண்டும். விவசாயிகள் தமது வேலைகளை இன்னும் அதிகத் திறமையுடன் செய்வதற்குப் பற்பலவிதமான வசதிகளும் அளிக்க வேண்டும். இவையெல்லாம் இன்று இந்தியாவில் இல்லை. ஆனால், மக்களின் நலனில் கருத்துள்ள சர்க்கார்கள் நடக்கும் தென்னாப்பிரிக்கா, ஆஸ்திரேலியா,

மற்றும் இதர நாடுகளில் விவசாயிகள் இந்த அனு கூலங்களை எல்லாம் அனுபவிக்கிறார்கள். ஆகையால் அதற்கு அடுத்தபடி முக்கியமானதாகிய கைராட்டினம்தான் கல்வித் துறையாளர்களுக்கு இருக்கிறது. சர்க்கா முக்கிய மானதுதான் என்பதை இந்த நிருபரும் ஒப்புக்கொண் டிருக்கிறார். கைராட்டினத்தை ஏற்றுக் கொண்டுள்ள தேசீயப் பள்ளிக்கூடங்கள் தேசீயக் கல்வி பெற விரும்பும் எல்லா இளை ஞர்களுக்கும் இடம் கொடுத்து அவர்களைத் தன்னம்பிக்கை உள்ளவர்களாகத் தயாரிக்க முடியும். ஆனால் சர்க்காவைப் பற்றிய அவர்களுடைய அறிவு சாஸ்திரீயமானதாகவும், விரிவான தாகவும் இருக்க வேண்டும். அம்மாதிரி மாணவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தயாரிக்கப்படுகிறார்கள்; கதர் இயக்கம் வளர்ச்சி பெற்றுக்கொண்டு வரும்போது, தேசீயக் கல்வியும் வளர்ச்சிப் பெற்று மேலும் மேலும் விரிவடைகிறது.

—"நவஜீவன்" – 5—6—1927

## 4

செல்வாக்கு, அளவு என்ற கண்ணோட்டத்துடன் பார்த்தால், ஒரு தேசீயப் பள்ளிக்கூடத்தை வெள்ளாட்டுடன் ஒப்பிடலாம்; சர்க்கார் பள்ளிக்கூடங்கள் சிங்கத்தைப் போன்றவை. ஆட்டை விட சிங்கம் எவ்வளவோ அதிக பலமுள்ள மிருகம். ஒரே ஒரு சிங்கம் பல ஆடுகளை தீர்த்துக்கட்டிவிட முடியும். ஆகையால் தேசீயப் பள்ளிக்கூடங்கள் எல்லாப் போட்டிகளையும் சமாளித்து வளர்ச்சி பெற்று விடமுடியும் என்று பேசுவது முட்டாள்தனம் அல்லவா? சிந்தனை செய்யும் சக்தியில்லாதவர்கள் அல்லது மேலெழுந்தவாரியாகச் சிந்திக்கக் கூடியவர்கள் மட்டும்தான் இப்படிப் பேசுவார்கள். ஆனால், தேசீயக் கல்வி அபிமானிகள் அதைக் கேட்டு தோல்வி உணர்ச்சியோ, சோர்வோ அடைய வேண்டியதில்லை.

ஒரு தேசீயப் பள்ளிக்கூடத்தையும், ஒரு சர்க்கார் பள்ளிக் கூடத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கவே முடியாது. தேசீய உணர்ச்சி பூராவாக வளர்ச்சிப் பெறும் வரையில் ஒரு தேசீயப் பள்ளிக்கூடத்தின் முக்கியத்தை சரியான முறையில் புரிந்து கொள்ளமுடியாது. அவ்விதம் வளர்ச்சி பெற்றால்தான் பள்ளிக்கூடத்தின் தேசீயத்தன்மையைத் தெரிந்துகொள்ள இயலும். தேசீயப் பள்ளிக்கூடத்தின் தனிச் சிறப்பை அறிந்து கொள்ள வேண்டும். அந்தத் தனிச்சிறப்புகள் என்ன? தாய் நாட்டிடம் பற்றுதல், தாய் நாட்டிற்காகச் சேவை, நாட்டிற்காகத் தன்னையே தியாகம் செய்து கொள்ளுதல் ஆகியவையே. சர்க்கார் பள்ளிக்கூடத்தில் தேசபக்தி என்பது அந்நிய ஆட்சியி னிடம் விசுவாசம் காட்டுவதற்கு உட்பட்டதாக இருக்கும். இவ்விரண்டிற்கும் இடையே மோதல் ஏற்படும்போது மாண

வர்கள் அந்நிய ஆட்சியைத்தான் ஆதரிக்க வேண்டுமென சர்க்கார் பள்ளிக்கூடங்களில் சொல்லிக் கொடுக்கப்படுகிறது என்று யாருக்குத்தான் தெரியாது? ஆகையால் தேசத்தில் பற்றுதல் உள்ளவர்கள், சர்க்கார் பள்ளிக்கூடம் என்ற அரண்மனையை விட தேசீயப்பள்ளிக்கூடம் என்ற குடிசையையே விரும்புவார்கள். ஒரு சிறைக் கூடம் பெரிய அரண்மனையைப்போல் தோற்றமளிக்கலாம். அவனுடைய சொந்தக் குடிசை இடிந்து உடைந்து போனதாயிருக்கலாம். ஆனால், தன்னுடைய சொந்தக் குடிசையில் உள்ள சுதந்திரத்திற்குப் பதிலாக சிறைக் கூடத்தின் அடிமைத்தனத்தை விரும்பும் மனிதன் யாராவது இருக்கிறானா? இவ்விரண்டிற்குமிடையே உள்ள இந்த முக்கியமான வித்தியாசத்தை நாம் மறக்காதிருந்தால், நம்முடைய சுயநலத்தினாலும், பகட்டு, ஆடம்பரத்தின் மீதுள்ள கவர்ச்சியினாலும் நம்முடைய கண்கள் மறைக்கப்படாதிருந்தால், தேசீயப் பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்குப் பஞ்சமேற்பட்டிராது; அப்பள்ளிகள் நிறைந்திருக்கும்; பணக்காரர்களும் இந்த ஸ்தாபனங்களுக்கு நல்ல கட்டிடங்கள் கட்டித்தர ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டு முன்வந்திருப்பார்கள். அது எப்படி இருந்தாலும், தேசீயப் பள்ளிக்கூடத்தை ஒரு மரத்தடியில் நடத்த வேண்டியிருந்தாலும், அதில் ஒரு சில மாணவர்களே இருந்தாலும், நமது ஆசிரியர்கள் ஒருபோதும் தம்முடைய நம்பிக்கையை இழந்து விடக்கூடாது.

—'நவஜீவன்' – 15—9—1929

# 15

# உங்கள் பிரதிக்ஞைகளைக் கைவிடாதீர்கள்

[1927-ஆம் ஆண்டில் பீகார் வித்தியாபீடத்தில் காந்திஜி நிகழ்த்திய பட்டமளிப்பு விழாப் பிரசங்கத்தின் விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:]

பட்டம் பெற்றவர்கள் இன்று எடுத்துக் கொண்ட புனிதமான பிரதிக்ஞைகளுக்கேற்ப வாழ்க்கையில் நடந்து கொள்வார்கள் என்று நான் நம்புகிறேன். குஜராத் வித்தியாபீடப் பட்டமளிப்பு விழாவில் சொன்னதையே இங்கும் திருப்பிச் சொல்லுகிறேன். அதாவது, ஒரு லட்சிய மாணவனையும் ஒரு லட்சிய ஆசிரியரையும் உற்பத்தி செய்தால் கூட வித்தியாபீடம் தன் நோக்கத்தை நிறைவேற்றியதாகிவிடும். இந்த ஸ்தாபனங்களின் வேலை என்ன? மாசில்லாத மாணிக்கங்களைக் கண்டுப்பிடிப்பதே இவற்றின் நோக்கமாகும். அத்தகையோரின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தாலும் போதுமானது.

தென்னாப்பிரிக்காவில் நான் கழித்த நாட்களைப் பற்றிய நினைவுகளை இங்கே எடுத்துக் கூற விரும்புகிறேன். தென்னாப்பிரிக்காவில் நான் இருபது வருடங்கள் கழித்தேன். ஆனால், அங்குள்ள வைரச் சுரங்கங்களைப் போய் பார்க்க வேண்டுமென்று ஒருதடவை கூட நான் நினைத்ததில்லை. நான் 'தீண்டத்தகாதவன்' என்றுகூறி எனக்கு அனுமதி மறுத்து, அவமதித்துவிடுவார்களோ என்ற பயமும் இதற்குக் காரணமாகும். ஆனால் கோகலே தென்னாப்பிரிக்காவுக்கு விஜயம் செய்தபோது, நாட்டின் முக்கியமான கைத்தொழிலை அவருக்குக் காட்ட வேண்டியது என்னுடைய கடமையென்று நினைத்தேன். அவர் அவமதிக்கப்பட்டுவிடுவாரோ என்ற பயத்திற்கு இடமில்லை. ஆகையால் அங்குள்ள மிகப் பெரிய சுரங்கத்திற்குப் போனோம். அங்கே நாங்கள் கண்ட காட்சி! தோண்டி எடுக்கப்பட்ட மண்ணும், கல்லும் மலை மலையாகக் குவிந்திருந்தன. ஆனால், வைரங்களே இல்லை. லட்சக் கணக்கான டன்கள் கல்லையும், மண்ணையும் தோண்டி எடுப்பதற்கு பல லட்சக்கணக்கில் கொட்டிச் செலவிட்ட பிறகுதான் சில விலையுயர்ந்த வைரக் கற்களைக் கண்டு பிடிக்க முடிந்தது! சுரங்கத்தின் சொந்தக்காரரான கல்லினன் கண்டு பிடித்த ஒரு வைரக் கல்லிற்கு அவருடைய பெயரே இடப்பட்டது. ஜார் சக்கரவர்த்தியின் கிரீடத்தில் உள்ள வைரத்தையும், கோஹினூரையும் விட இது பெரிய வைரமாகும். பல வருடங்கள் உழைத்து லட்சக்கணக்கான பவுன்களைச் செலவிட்ட பிறகு இதை அவர் கண்டுபிடித்தார். அப்போது அவருக்கு என்ன ஆனந்தம் ஏற்பட்டிருக்கும் என்பதைக் கற்பனைச் செய்து பாருங்கள். தம்முடைய வாழ்நாளின் வேலையைச் செய்து முடித்துவிட்டதாகவே அவர் நினைத்தார். செயற்கையான மதிப்புள்ள ஒன்றிற்காக இவ்வளவு உழைப்பையும், மூலதனத்தையும் கொடுக்க நாம் தயங்கக் கூடாது என்றால், மனிதச் சுரங்கத்திலிருந்து விலையுயர்ந்த மாணிக்கங்களைக் கண்டு பிடிக்க நாம் எவ்வளவு செலவிட வேண்டும்? அந்த உணர்ச்சியுடன் நாம் வேலை செய்வோமாக. 'ஆன்மாக்களின் உற்பத்தி' என்று ரஸ்கின் கூறியதை விட இது அதிகப் பொருத்தமான உதாரணமாகும். அந்த உற்பத்தி சக்தி கடவுளிடம்தான் இருக்கிறது. மானிடப் பிறவிகளாகிய நாம் ஏற்கனவே கடவுளால் ஒளித்து வைக்கப்பட்டிருப்பதைத்தான் கண்டுபிடிக்க வேண்டும்.

ஒத்துழையாமையில் ஈடுபட்டுள்ள ஸ்தாபனங்கள் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக் கூடாது என்பதை இப்போது நாம் கவனிக்க வேண்டும். சர்க்காருடன் எந்த விதமான தொடர்பும் இல்லாமல் வாபஸ் பெற்றுக் கொள்வது, செய்யக் கூடாத காரியங்களில் ஒன்றாகும். இப்போதுள்ள ஸ்தாபனங்கள் ஏற்கனவே இதைச் செய்துவிட்டன. இவ்வளவு ஏராளமான மாணவர்களையும் ஆசிரியர்களையும் வெளியே கொண்டு வந்துவிட்டோமே என்பதை நினைத்து நான் துளிக்கூட வருந்தவில்லை. இவர்களில் பலர் திரும்பிப்போய்விட்டார்கள், பலர் அதிருப்தி

யடைந்திருக்கிருர்கள், பலர் அமைதியற்றிருக்கிருர்கள் என்பது பற்றியும் நான் வருந்தவில்லை. அவர்களுக்காக நான் வருந்து கிறேன்; அவர்களிடம் எனக்கு ஆழ்ந்த அனுதாபமும் ஏற்படு கிறது. எனினும், அவர்களுடைய நிலையைக் குறித்து நான் பச்சாத்தாபப்படவில்லை. இந்த சங்கடங்களும் நம்முடைய அன்ருட அனுபவங்களாகத்தான் இருக்க வேண்டும். சத்தியத்தைப் பின்பற்றுவது மலர் மஞ்சமாக இருந்தால், சத்தியத்தில் மகிழ்ச் சியைத் தவிர வேறு எந்தக் கஷ்டமும் இல்லை என்ருல், அதில் என்றும் பெருமையோ, அழகோ இராது. வானமே இடிந்து விழுந்தாலும் கூட நாம் சத்தியத்தையே பின்பற்ற வேண்டும். சத்தியத்தைப் பின்பற்றும் முயற்சியில் இந்தியா உள்பட, உலகம் பூராவையுமே நாம் இழக்க வேண்டியிருந்தால்தான் என்ன? இந்தியா உள்பட நாம் அருமையாகக் கருதுபவை எல்லாம் கடவுளின் சன்னதியில் திரும்பப் பெற்றுவிடு வோம் என்ற உறுதியுடன் சாகும் வரையில் சத்தியத் தைப் பின்பற்றிஞல்தான் உண்மையிலேயே நாம் சத்தி யத்தைப் பின் பற்றுபவர்கள் ஆவோம். நம்முடைய ஆசிரியர்கள், பேராசிரியர்களில் பலர் அமைதியற்றிருக்கிருர்கள் என்றும், சிலர் பட்டினிகிடக்கிருர்கள் என்றும் எனக்குத் தெரியும். தேசீயச் சூழ்நிலை சரியான விதத்தில் தூய்மையாவதற்கு உண்மையான அந்தத் தவம் அவசியமாகும்.

இதுதான் எதிர்மறையான அம்சமாகும். இந்த அம்சம் சம்பந்தப்பட்டவரையில், ஒரு கணிசமான அளவுக்குத் தவம் செய்யப்பட்டிருப்பதைக் குறித்து நான் திருப்தியடைகிறேன். ஆஞல், இருமைகள் அடங்கிய இந்த உலகத்தில் நிச்சயமான அம்சம் ஒன்றும் இருக்கிறது. இது இன்னும் அதிகக் கஷ்ட மானதென்ருலும், நிரந்தரமானது. வித்தியாபீடம் போன்ற ஸ்தா பனங்களில் அல்லாமல், வேறு எங்கே அவற்றை நிறைவேற்று வது?

ஐரோப்பாவில் மக்களின் விசேஷ மேதைக்கு ஏற்ற விதத்தில் கல்வி முறை இருக்கிறது. ஒரே விஷயம், மூன்று வெவ்வேறு நாடுகளில், மூன்று வேவ்வேறு மொழி களில், அந்தந்த நாட்டின் பல திறப்பட்ட பண்பாட்டுக் கும், மேதைக்கும் ஏற்றவாறு போதிக்கப்படுகின்றன. நாம் மட்டும்தான் ஆங்கில முறையை அப்படியே பின் பற்றுவதில் ஆனந்தம் கொள்ளுகிருேம். கொஞ்சம் கூட மாறுதல் இல்லாமல் மேல் நாட்டினரை நாம் அப்படியே பின்பற்ற வேண்டுமென்பது தான் இந்தத் திட்டத்தின் நோக்கமாகும். இதில் புதிது ஒன்று மில்லை. நம்மைப் புரிந்து கொள்ள வேண்டுமென்று எந்தக் காலத்திலும் துளிக்கூட அக்கறை எடுத்துக் கொள்ளாதவர்களி டம் நமது விஷயங்களை ஒப்படைத்ததன் இயற்கையான விளைவு தான் இது. பாவம், மெக்காலே! அவர் என்ன செய்ய முடியும்? நம்முடைய சமஸ்கிருத இலக்கியங்களெல்லாம் வெறும் மூட நம்பிக்கைகள் என்று அவர் உண்மையாகவே நம்பிஞர். மேல்

நாட்டுப் பண்பாட்டின் மூலமாக நல்ல சிந்தனையை நமக்குக் கொடுக்கலாம் என்று நினைத்தார்! தம்மையறியாமலேயே அவர் நமக்கு அழிவைத் தேடியதற்காக அவரை நாம் திட்டக் கூடாது. ஆங்கிலமே போதனை மொழியாக இருப்பதன் பலனாக, சுயமாக நாமே சிந்திக்கக் கூடிய திறனை இழந்துவிட்டோம். நாம் இறக்கைகள் இல்லாத பறவைகளாகிவிட்டோம். நம்முடைய மிக உயர்ந்த ஆசையெல்லாம் ஒரு குமாஸ்தா உத்தியோகமோ, ஒரு ஆசிரியர் பதவியோதான். அந்த முறையின் கீழ் நம்மில் ஒருவர் லார்டு சின்ஹாவாகலாம். ஆனால், நம்மில் ஒவ்வொருவருமே, பிரம்மாண்டமான அந்த அந்நிய யந்திரத்தில் ஒரு பகுதியாக இருக்க வேண்டும் என்பதுதான் நோக்கம். முஸாபர்பூரில் ஒரு பையன் என்னிடம் வந்து, தேசீயப் பள்ளிக்கூடத்திற்குப் போனால், லார்டு சாகிபாக முடியுமா என்று கேட்டான். "இல்லை. ஒரு கிராமாந்தர 'லார்டு' ஆகலாம். ஆனால், லார்டு சின்ஹா* வாக முடியாது. லார்டு பர்க்கன்ஹெட்† ஒருவர்தான் உன்னை அப்படிச் செய்ய முடியும்" என்று அவனுக்கு நான் பதிலளித்தேன்.

ஏழைகளுக்குக் கல்வி மறுக்கப்படுகிறது. ஆனால், கல்வி அளிப்பதற்கென்று ஏழைகளிடமிருந்து பணம் வசூலித்து, அரண்மனைகளைப் போன்ற கட்டிடங்களை எழுப்புவதில் உள்ள மோகம் குறையவில்லை. அலகாபாத்திலுள்ள பொருளாதாரக் கழகத்திற்குப் போயிருந்தேன். பேராசிரியர் ஜெவான்ஸ் என்னை அழைத்துக் கொண்டு போய்ச் சுற்றிக் காட்டினார். அந்தக் கட்டிடம் கட்டி முடிய முப்பது லட்ச ரூபாய் செலவானதாக (அப்படித்தான் எனக்கு ஞாபகம்) அவர் சொன்னபோது, எனக்கு உடம்பு பதறியது. பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்களிடமிருந்து பணம் வசூலித்துத்தான் இந்த அரண்மனைகளைக் கட்ட முடியும்.

புதுடில்லியைப் பாருங்கள். அங்கும் இதே கதைதான். ரயில்வேக்களில் முதலாவது, இரண்டாவது வகுப்புகளில் செய்யப்பட்டுள்ள பிரமாதமான ஏற்பாடுகளைப் பாருங்கள். வசதியுள்ள சிலரைப்பற்றியே நினைப்பதும், ஏழைகளைப் புறக்கணிப்பதுமே மனப்போக்காக இருக்கிறது. இது சைத்தான் முறை அல்லவென்றால், வேறு எதற்குத்தான் அந்தப் பெயர் பொருந்தும்? நான் உண்மையைச் சொல்ல வேண்டுமானால், வேறுவிதமாகச்

---

*லார்டு சின்ஹா பீகார் கவர்னராகப் பதவி வகித்தார். முதன் முதலாக கவர்னர் பதவிக்கு வந்த ஓர் இந்தியர் அவர்தான். வைஸ்ராய் நிர்வாக சபை அங்கத்தினர் பதவியையும், காங்கிரஸ் அக்ராசனர் பதவியையும் திறம்பட வகித்த லார்டு சின்ஹா, 1922-ஆம் ஆண்டில் தலைவர்கள் கைது செய்யப்பட்டதைக் கண்டித்து பீகார் கவர்னர் பதவியை ராஜிநாமா செய்தார்.

†லார்டு பர்க்கன்ஹெட் (1872-1930) 1924-லிருந்து 1928 வரையில் இந்தியா மந்திரியாக இருந்ததுடன், பிரிட்டிஷ் மந்திரி சபையிலும் வெளியிலும் பல முக்கிய பதவிகளை வகித்தார். அவர் பல ஆண்டுகள் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கத்தினராக இருந்து, சிறந்த அரசியல் மேதை என்று புகழ் பெற்று விளங்கினார்.

சொல்ல முடியாது. இந்த முறையை வகுத்தவர்களிடம் எனக்குச் சண்டை இல்லை. அவர்கள் வேறுவிதமாகச் செய்ய முடியாது. ஒரு எறும்பைப் பற்றி யானை எப்படி நினைக்க முடியும்? தென்னாப்பிரிக்கத் தூது கோஷ்டியின் அங்கத்தினர்களில் ஒருவராக வந்த சர் வெப்பல் கிரிப்பென் ஒரு பிரசங்கத்தில் சொன்னதுபோல், பரம்படியின் கீழ் அகப்பட்டுக் கொண்டுள்ள தேரைக்குத்தான் எங்கு வலிக்கிறதென்பது தெரியும். நம்முடைய விவகாரங்களை நடத்தும் பொறுப்பு அவர்களிடம் இருக்கிறது. எவ்வளவு நல்லெண்ணம் இருந்தாலும் கூட, அவர்களிடையே உள்ள மிகச் சிறந்தவர்கள் கூட, நம் விவகாரங்களை நாம் நடத்துவது போல் நடத்த முடியாது. ஏனெனில், அவர்களுடைய சிந்தனைப் போக்கு நமக்கு நேர் மாறானது. வசதியுள்ள ஒரு சிலரைப் பற்றியே அவர்கள் நினைக்கிறார்கள். லட்சக் கணக்கில் உள்ள ஏழைகளைப் பற்றியே நாம் நினைக்க வேண்டும்.

பட்டதாரிகள் தமது பட்டங்களைப் பெற்றுக் கொள்ளட்டும்; தமக்குப் பிடித்தமானவைகளைக் கற்றுக் கொள்ளட்டும்; ஆனால், அவர்களுடைய பொருளாதாரமும், விஞ்ஞானமும் சர்க்காவுக்கு ஆக்கமளிப்பதாக இருக்க வேண்டும். சர்க்காவை ஒரு மூலையில் ஒதுக்கி வைத்துவிடாதீர்கள். நமது நடவடிக்கைகளின் சூரியன் சர்க்காதான். அது இல்லாவிட்டால் வித்தியாபீடங்கள் பெயரளவில்தான் வித்தியாபீடங்களாக இருக்கும். சட்ட சபைகளின் மூலம் முன்னேற்றம் காணவேண்டுமானால், பிரிட்டிஷ் பார்லிமெண்டைத்தான் நாடவேண்டும் என்று லார்டு இர்வின் கூறியது முழு உண்மையாகும். அவருடைய சூரியன் லண்டனில் இருக்கிறது; நம்முடைய சூரியன் சர்க்காவில் இருக்கிறது. இதற்காக அவரிடம் நாம் கோபம் கொள்ளக் கூடாது. பார்லிமெண்டைத் தவிர வேறு கண்ணோட்டத்துடன் அவர் சிந்திக்க முடியாது. நான் இப்படிக் கூறுவது தவறாக இருக்கலாம். ஆனால், அது தவறு என்று எனக்கு நிச்சயமாகத் தெரிந்தாலொழிய, அதை நான் விடமாட்டேன். சர்க்கா யாருக்கும், எந்தவிதமான கேடும் விளைவிக்க முடியாது. அது இல்லாவிட்டால், நாமும், – ஏன், உலகமும் என்று கூடச் சொல்லலாம், – அழிந்தே போவோம். யுத்தத்தின்போது என்னனென்ன விதமான பொய்கள் பிரசாரம் செய்யப்பட்டன என்பதையும், யுத்தத்திற்குப் பிறகு ஐரோப்பா அவைகளைப் பற்றி என்ன நினைக்கிறது என்பதையும் நாம் அறிவோம். யுத்தத்தின் பிற்கால விளைவுகளில் உலகம் அலுப்புற்று விட்டது. இன்று சர்க்கா இந்தியாவுக்கு ஆறுதல் அளிக்கும் அருமருந்தாக இருப்பதைப் போலவே, நாளைக்கு அது உலகத்திற்கே ஆறுதல் அளிப்பதாக இருக்கலாம். ஏனெனில், அது மிகவும் அதிகமான பேர்களுக்கு அதிகமான நன்மையளிக்கும் ஒன்றல்ல; எல்லோருக்குமே அதிகபட்சமான நன்மைகளை அது அளிக்கிறது. தவறு செய்யும் ஒரு மனிதனை நான் பார்க்கும் போதெல்லாம், நானும் தவறிழைத்து விட்டேன் என்று எனக்கு நானே சொல்லிக் கொள்ளுகிறேன். காமவெறி பிடித்த ஒருவனைப் பார்க்கும் போது,

நாமும் ஒரு காலத்தில் அப்படித்தானே இருந்தோம் என்று சொல்லிக் கொள்ளுகிறேன். இவ்வாருக, உலகத்திலுள்ள ஒவ்வொருவரிடமுமே நான் ஒரு உறவு உணர்ச்சி கொள்ளுகிறேன். நம்மில் மிகவும் எளியவர்கள் கூட மகிழ்ச்சியுடன் இராவிட்டால், நானும் மகிழ்ச்சியுடன் இருக்க முடியாதென்று நினைக்கிறேன். சர்க்காவை உங்கள் படிப்பின் கேந்திரமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற அர்த்தத்தில்தான் உங்களுக்கு இதைச் சொல்லுகிறேன். பிரஹ்லாதன் எங்கும் ராமனைப் பார்த்தான்; கிருஷ்ணனின் உருவத்தில் கூட துளஸிதாசர் ராமனைத் தவிர வேறு ஒன்றையும் காண முடியவில்லை. அதே மாதிரி, உங்களுடைய அறிவெல்லாம் சர்க்காவின் உட்கருத்துகளைப் புரிந்து கொள்ளுவதிலேயே திருப்பப்படவேண்டும். நம்முடைய விஞ்ஞானம், பூகோளம், பொருளாதாரம் ஆகிய யாவையுமே, நம்மிடையே உள்ள மிகுந்த ஏழையானவர்களின் முக்கிய ஊன்றுகோலாக சர்க்காவைச் செய்வதிலேயே பயன்படுத்திக் கொள்ளப்பட வேண்டும். குஜராத் வித்தியாபீடத்தில் இதில் நாங்கள் இன்னும் வெற்றி பெறவில்லை என்பதை நான் அறிவேன். புகார் செய்யும் மனப்பான்மையுடன் இதை நான் சொல்லவில்லை. எனது உள்ளத்தின் வேதனையை அப்படியே கொட்டித் தீர்த்துக் கொள்ளுகிறேன். நீங்களெல்லோரும் என்னுடைய இந்த வேதனையைப் புரிந்து கொள்ள வேண்டும்."

வித்தியாபீடத்திற்கு எல்லோரும் உதவி செய்ய வேண்டுமென்று இறுதியில் காந்திஜி கேட்டுக் கொண்டார். அங்கு வந்திருந்தவர்களெல்லாம் இந்த வேண்டுகோளுக்கு மனப்பூர்வமாக ஆதரவளித்தார்கள். அங்கேயே ரூ. 600–க்கு மேல் வசூலிக்கப்பட்டது. ரூ. 2000 வரை நன்கொடைகள் வாக்களிக்கப்பட்டன.

—'எங் இந்தியா' – 10—2—1927

# 16

# குஜராத் வித்தியாபீடத்தின் புனரமைப்பு

## 1

ஒத்துழையாமை இயக்கம் மிகவும் தீவிரமாக இருந்த காலத்தில், இந்தியாவிலேயே முதலாவதாக ஸ்தாபிக்கப்பட்ட இந்த தேசீய சர்வகலாசாலை, சென்ற மூன்று, நான்கு வருடங்களாக உயிருக்கு மன்ருடிக் கொண்டிருக்கிறது. பையன்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்து விட்டது. இத்துடன் இணைக்கப்பட்டிருந்த பல பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டுவிட்டன அல்லது சர்க்கார் அங்கீகாரத்தைக் கோரியுள்ளன. உள்ளூர வேறு காரணங்

கள் எதுவும் இல்லையென்றால், இந்த க்ஷீணத்தைப் பற்றிக் கவலைப்படுவதற்கு ஒன்றுமிராது. ஆனால், நான் உள்பட எங்களில் பெரும்பாலோர், தேசீயப் புனரமைப்பில் மிகவும் முக்கியமான இந்த வேலைக்கு நாங்கள் செய்திருக்கக் கூடியவைகளைச் செய்யவில்லை என்று கருதுகிறோம். எல்லோரும் உஷாராக இருந்திருந்தால், இவ்வளவு பேர்கள் இங்கிருந்து வெளியேறுதிருக்கலாம். ஆனால், இந்த நிலைமை ஏற்படுவதற்கு, எங்களை மீறிய சில காரணங்களும் இருந்தன. ஏற்கனவே செய்த வேலையின் தரம் இன்னும் உயர்ந்ததாக இருந்திருக்கலாம் என்றாலும், இதுவரையில் சாதித்திருப்பது எந்த ஸ்தாபனமுமே பெருமைப் படக் கூடியதாகும். வித்தியாபீடம் இல்லையென்றால் சமீபத்தில் ஏற்பட்ட பெரும் வெள்ளத்தின் போது வல்லபாய் பட்டேலுக்கு அவ்வளவு ஊழியர்களின் உதவி கிடைத்திராதென்று துணிந்து கூறுவேன். ஸிந்து வெள்ள நிவாரணத்திற்காக பேராசிரியர் மால்கானி ஸிந்துவுக்குப் போய் தீரத்துடன் வேலை செய்து கொண்டிருந்தார். வித்தியாபீடத் தொண்டர்கள் அவருக்கு உதவி புரிவதற்காக ஸிந்துவுக்குக் கூடப் போனார்கள். வித்தியாபீடத்தின் பட்டதாரி என்று சொல்லிக் கொள்ளுவதில் பெருமையடையும் ஒருவர், பட்டதாரிகள் செய்த சேவையைப் பற்றிச் சுருக்கமாக ஒரு அறிக்கை தயாரித்திருக்கிறார். அதைப்பற்றி என்றைக்காவது ஒரு நாள் கூறுகிறேன். தவிர்த்திருக்கக் கூடியவை, தவிர்த்திருக்க முடியாதவை என்ற நம்முடைய குறைபாடுகளை மட்டும் இப்போது ஒப்புக் கொள்ளுவோம். நம்முடைய உறக்கத்திலிருந்து நாம் இப்போது விழிப்புற்றுவிட்டது போலவும் தோன்றுகிறது.

சென்ற சனிக்கிழமையன்று சீரமைப்பதற்கான பூர்வாங்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது. வித்தியாபீடத்தின் சொத்துக்களையும், இன்னும் அதிக மதிப்புள்ள வித்தியாபீடப் பொறுப்புகளையும் ஸெனட் சபை, ஒரு தருமகர்த்தா போர்டினிடம் ஒப்படைத்தது. இது சம்பந்தமாக ஸெனட் சபை நிறைவேற்றிய தீர்மானத்தின் மொழிபெயர்ப்பைக் கீழே தருகிறேன்

"குஜராத் வித்தியாபீடத்தின் ஸெனட் சபை பின்வருமாறு அபிப்பிராயப்படுகிறது ;

1. ஒத்துழையாமை இயக்கத்தையொட்டி குஜராத் வித்தியாபீடத்தை ஸ்தாபித்ததன் மூலமும், இயக்கம் தடைப்பட்ட காலத்திலும் அதை நடத்திவந்ததன் மூலமும், தேசத்திற்கு குஜராத் மிகவும் முக்கியமான சேவையைச் செய்திருக்கிறது ;

2. ஆயினும், வித்தியாபீடத்தில் வருடந்தோறும் மாணவர்களின் எண்ணிக்கை குறைந்து வந்திருக்கிறது ;

3. வித்தியாபீட நிர்வாக நிலைமை இன்னும் அனுகூலமாக இருந்திருந்தால், தரம் சம்பந்தப்பட்டவரையில் வித்தியாபீடம் இன்னும் நல்ல பலன்களைப் பெற்றிருக்கலாம்.

4. வித்தியாபீடம் இன்னும் திறம்பட வேலை செய்வதற்காகவும், கீழே விவரிக்கப்பட்டுள்ள கொள்கைகள் கொஞ்சமும் மாறுதலின்றி அப்படியே பின்பற்றப்படுவதற்காகவும், வித்தியாபீடத்தை ஒரு தருமகர்த்தாக்கள் போர்டினிடம் ஒப்படைக்க வேண்டிய கட்டம் வந்து விட்டது.

ஆகையால், வித்தியாபீடத்தின் சீரமைப்புக்காக, 1927 டிசம்பர் 4உ யன்று இந்த ஸெனட் சபை நிறைவேற்றிய தீர்மானத்திற்கிணங்க, ஸெனட் சபை ஒரு தருமகர்த்தாக்கள் போர்டை நியமிக்கிறது. அது குஜராத் வித்தியாபீட மண்டலம் என்று அழைக்கப்படும். அதிலுள்ள அங்கத்தினர்களின் ஜாபிதா கீழே தரப்படுகிறது.

பின்னர் விவரிக்கப்பட்டுள்ள கொள்கைகளைப் பின்பற்றுவதாக அவர்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளுகிறார்கள். வித்தியாபீடத்துடன் சம்பந்தப்பட்ட எல்லா ஸ்தாபனங்களையும், ஸ்தாவர, ஜங்கம சொத்துக்களையும், அவற்றின் உரிமைகளையும், பொறுப்புகளையும், அந்த வித்தியாபீட மண்டலத்திற்கு மாற்றிக் கொடுக்கிறோம். அந்த மண்டலம் மேற்கொண்டு அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளவும் அதிகாரம் கொடுக்கப்படுகிறது. அவர்களுக்கும் அதே யோக்கியதாம்சங்கள் இருக்க வேண்டும். அங்கத்தினர்களின் எண்ணிக்கை 25-க்கு மேற்படக் கூடாது. ராஜினமா, மரணம் அல்லது விதிகளை மீறியதற்காக ஒரு அங்கத்தினர் நீக்கப்பட்டால், அல்லது வேறு காரணத்தினால் காலி ஸ்தானங்களைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும்போது, மண்டல அங்கத்தினர்களில் ஐந்தில் நாலு பகுதியினருடைய வாக்குகளின் மூலம் அந்த ஸ்தானங்கள் பூர்த்தி செய்யப்பட வேண்டும்.

## அங்கத்தினர்களின் பெயர்கள்.

1. ஸ்ரீஜத். வல்லபாய் பட்டேல்
2. ,, நரசிம்ம பிரசாத் பட்
3. ,, காகா கலேல்கர்
4. ,, சங்கர்லால் பாங்கர்
5. ,, மகாதேவ தேசாய்
6. ,, அப்துல் காதம் பாவாஸீர்
7. ,, மணிலால் கோத்தாரி
8. ,, கிஷோர்லால் மஷ்ருவாலா
9. ,, நரஹரி பரீக்
10. ,, வால்ஜி தேசாய்
11. ,, ஹரிபிரசாத விரஜ்ராய் தேசாய்
12. ,, ஜகத்ராம் தவே
13. ,, கோகுல்பாய் பட்
14. ,, சுகலால்ஜி பண்டிட்

15. ,, பரீக்ஷித்லால் மஜ்முதார்
16. ,, கோபால்ராவ குல்கார்னி
17. ,, மாமா பாட்கே
18. ,, ஸ்ரீமதி மணிபென் வி. பட்டேல்.

## கொள்கைகள்

*1. சுயராஜ்யம் பெறுவதற்கான இயக்கங்களை நடத்துவதற்குத் தேவையான நல்லொழுக்கம், திறமை, கல்வி, மனச்சாட்சி ஆகியவை உள்ள ஊழியர்களைத் தயாரிப்பதே வித்தியா பீடத்தின் முக்கிய நோக்கமாகும்.*

*2. வித்தியாபீடத்தினால் நடத்தப்படும் எல்லா ஸ்தாபனங்களும், அத்துடன் இணைக்கப்பட்ட ஸ்தாபனங்களும் முற்றிலும் ஒத்துழையாமையில் ஈடுபட்டிருக்கும்; ஆகையால், சர்க்கார் அளிக்கும் எந்தவிதமான உதவியையும் அவை பெற மாட்டா.*

*3. சுயராஜ்யத்திற்காகவே வித்தியாபீடம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சாத்விக ஒத்துழையாமை அதற்கான வழிகளில் ஒன்றாகும். ஆகையால், அதில் உள்ள ஆசிரியர்களும், தருமகர்த்தாக்களும் சத்தியத்திற்கும், அகிம்சைக்கும் முரணில்லாத வழிகளை மட்டுமே பின்பற்ற வேண்டும்; அவற்றை நிறைவேற்றுவதற்கு மனப்பூர்வமாக முயற்சி செய்யவும் வேண்டும்.*

*4. வித்தியாபீடத்தின் ஆசிரியர்களும், தருமகர்த்தாக்களும், அதனுடன் இணைக்கப் பட்ட ஸ்தாபனங்களும், தீண்டாமையை ஹிந்து மதத்திலுள்ள ஒரு களங்கமாகக் கருத வேண்டும். அதை அகற்றுவதற்குத் தம்மாலியன்ற முயற்சிகளைச் செய்ய வேண்டும். ஒரு பையன் அல்லது பெண் தீண்டத்தகாத வகுப்பைச் சேர்ந்தவர் என்பதற்காக அவனையோ, அவளையோ விலக்கக் கூடாது. அவர்களைக் கல்வி ஸ்தாபனங்களில் அனுமதித்து விட்டால், பிறகு அவர்களை வேற்றுமை உணர்ச்சியுடன் நடத்தக் கூடாது.*

*5. வித்தியாபீடத்தின் ஆசிரியர்களும், தருமகர்த்தாக்களும், அத்துடன் இணைக்கப்பட்ட எல்லா ஸ்தாபனங்களும் கைராட்டினத்தில் நூற்பதை சுயராஜ்ய இயக்கத்தின் ஒரு அத்தியாவசியமான அம்சமாகக் கருத வேண்டும். ஆகையால், அவர்கள் முடியாத சந்தர்ப்பங்களைத் தவிர மற்றப்படி வழக்கமாக நூற்க வேண்டும். அவர்கள் வழக்கமாகக் கதரையும் அணிய வேண்டும்.*

*6. மாகாணத்தின் மொழியே வித்தியாபீடத்தின் முக்கிய மொழியாக இருக்கும்; அதுவே போதனு மொழியாகவும் இருக்கும்.*

**விளக்கம்:** *குஜராத்தியைத் தவிர மற்ற மொழிகள் நேரடியாகவே போதிக்கப் படலாம்.*

7. வித்தியாபீடத்தின் பாடத் திட்டத்தில் ஹிந்தி-ஹிந்துஸ்தானி போதனை கட்டயமானதாக இருக்க வேண்டும்.

குறிப்பு: ஹிந்தி-ஹிந்துஸ்தானி என்பது, வட இந்தியாவில் ஹிந்து, முஸ்லிம் மக்களால் பொதுவாகப் பேசப்படுவதும், தேவ நாகரி அல்லது பாரசீக லிபியில் எழுதப்படுவதுமான மொழியாகும்.

8. அறிவுப் பயிற்சியைப் போலவே, உடலுழைப்புப் பயிற்சிக்கும் அதே முக்கியத்துவம் அளிக்க வேண்டும். தேசத்தின் நல்வாழ்வுக்குத் தேவையான உபயோகமான தொழில்களே கற்றுக் கொடுக்கப்பட வேண்டும்.

9. தேசத்தின் வளர்ச்சி கிராமங்களைப் பொறுத்திருக்கிறதேயொழிய, நகரங்களைப் பொறுத்ததல்ல. ஆகையால், வித்தியாபீடத்தின் நிதியில் பெரும் பகுதியும், வித்தியாபீடத்தின் ஆசிரியர்களில் பெரும்பாலோரும், கிராம வாசிகளின் நலன்களுக்கு ஏற்ற கல்வியைப் பரப்புவதிலேயே பயன்படுத்தப்பட வேண்டும்.

10. பாடத் திட்டத்தை வகுக்கும்போது, கிராமங்களில் வசிப்பவர்களின் தேவைகளே முக்கியமாக கவனிக்கப்பட வேண்டும்.

11. வித்தியாபீடத்தினல் நடத்தப்படும் அல்லது அதனுடன் இணைக்கப்பட்ட எல்லா ஸ்தாபனங்களிலும் எல்லா மதங்கள் விஷயத்திலும் பூரணமாக சகிப்புத் தன்மை இருக்க வேண்டும். மாணவர்களின் ஆன்மிக வளர்ச்சிக்காக, சத்தியத்திற்கும், அகிம்சைக்கும் ஏற்ற விதத்தில் மதக் கல்வி போதிக்கப்பட வேண்டும்.

12. வித்தியாபீடத்தினல் நடத்தப்படும் அல்லது அதனுடன் இணைக்கப்பட்ட எல்லா ஸ்தாபனங்களிலும் தேச மக்களின் உடல் சம்பந்தமான அபிவிருத்திக்காக உடற்பயிற்சி கட்டாயமானதாக இருக்க வேண்டும்.

இந்த முறைகள் மிகவும் கடுமையானவைதான். ஆனல், துரிதமாகவும், விடாப்பிடியாகவும், உஷாராகவும் முயற்சிகள் எடுத்துக் கொள்ளவில்லையென்ருல், இதனல் ஒரு பயனுமிராது. இந்த முயற்சிகளின் காரணமாக மேலும் பலர் விலகிச் செல்லக் கூடும். இதை, ஸெனட் சபை (இப்போது தருமகர்த்தாக்கள் போர்டு) நன்கு உணர்ந்திருக்கிறது. நல்ல தரத்தையே அவர்கள் விரும்புகிருர்கள்; அது உறுதி செய்யப்பட்டுவிட்டால், எண்ணிக்கை தானுக வரும் என்று அவர்கள் நினைக்கிருர்கள். தரத்திற்காக அவர்கள் எல்லாவற்றையுமே தியாகம் செய்யத் தயாராக இருக்கிருர்கள். எந்தக் கொள்கைகளுக்காக இந்த ஸ்தாபனம் நடத்தப்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்தக் கொள்கைகளை நிறைவேற்றுவதற்கு மனித சாத்தியமான எல்லா முயற்சிகளும் செய்யப்படும் என்ற நம்பிக்கையுடன்

கொடுக்கப்பட்டுள்ள நன்கொடைகளை அதற்கு மாருக் உபயோகிப்பது தவருகும். எப்படியாவது ஸ்தாபனத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக தரும கர்த்தாக்கள் கொள்கைகளை பலி கொடுத்தால், அவர்கள் தம்மிடம் வைக்கப்பட்டுள்ள நம்பிக்கையைப் பொய்யாக்கியவர்களாவார்கள். தரும கர்த்தாக்கள் உறுதியுடன் இருப்பார்களென்றே நான் நம்புகிறேன். அவர்கள் அப்படி இருந்தால், என்னைப் பொறுத்த வரையில் பயமே இல்லை.

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், ஜனநாயகத்திலிருந்து ஒரு சிலரின் ஆட்சிக்கு இறங்கிவிட்டது போல் அது தோன்றும். ஆனல் உண்மையில் அப்படியில்லை. எந்தக் கொள்கைகளுக்காக ஸெனட் சபை தேர்ந்தெடுக்கப்பட்டதோ, அந்தக் கொள்கைகளே நிலையற்றிருக்கும் போது, பல அங்கத்தினர்கள் கொண்ட அந்தச் சபை செயல்பட முடியாது. ஒரு ஜனநாயகத்தின் லட்சியங்களும், கொள்கைகளும் காலத்திற்கேற்றவாறு மாறிக்கொண்டிருக்கின்றன. ஒரு சீர்திருத்தவாதியின் கொள்கைகள் மாறுபடாமல் அப்படியே உறுதியாக இருக்கின்றன. ஒத்துழையாமையின் தேசீயத் தன்மை மாறிவிட்ட பிறகு, இந்தியாவின் தளைகளைக் களைவதற்கு அது ஒன்றுதான் வழி என்று அதை ஒரு சாதனமாகக் கருதியவர்கள், தம் வாழ்க்கையிலேயே அதனுடைய இயற்கையான முடிவுக்கு வேலை செய்வதன் மூலம் அந்தச் சாதனத்தைக் காப்பாற்றவே கடமைப்பட்டிருக்கிருர்கள். அதனல் தான், கைராட்டினத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டவர்கள் அடங்கிய, அகில இந்தியா நூற்போர் சங்கம் என்று பெயர் கொண்ட ஒரு சுதந்திரமான ஸ்தாபனத்தை காங்கிரஸ் ஏற்படுத்தியது. நாளடைவில் தாய் ஸ்தாபனத்திற்கு ஒரு பேருதவியாக, இந்த ஸ்தாபனம் கதர் வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும் என்பதே ஏற்பாடு. உண்மையான ஜனநாயக ஸ்தாபனத்தை உருவாக்க வேண்டுமென்ற நம்பிக்கையுடனேயே நிரந்தர டிரஸ்ட் அமைக்கப்பட்டிருக்கிறது. தேசம் பூராவிலும் கதர் உண்மையிலேயே பரவி விட்டால், உலகமே கண்டிராத ஒரு ஜனநாயகத்தை அதில் காணலாம். அதே மாதிரி, தேசீயக் கல்வியை உயிருள்ள ஒரு சக்தியாக்குவதற்காக, ஸெனட் சபை ஒரு தரும கர்த்தாக்கள் போர்டாக மாறியிருக்கிறது. அதாவது, தேசீயக் கல்வி குஜராத்தின் ஒவ்வொரு கிராமத்திற்கும் பரவ வேண்டும்; அறிவு வளர்ச்சியில் உள்ள கௌரவம் உடலுழைப்பிலும் இருக்கிறதென்பதை மாணவர்கள் உணர வேண்டும்; கிராமங்களில் சேவை செய்வதற்கு ஊழியர்களைத் தயாரிக்க வேண்டும். இந்த லட்சியத்தை நிறைவேற்றுவதே தருமகர்த்தாக்கள் போர்டின் நோக்கமாகும். பூராவாக விவாதித்த பிறகு, ஸெனட் சபை ஞாயிற்றுக் கிழமையன்று இந்தத் தீர்மானத்தை நிறை வேற்றியது. அவர்களுக்கும் நம்பிக்கை இருந்தது. தருமகர்த்தாக்களும் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். ஸெனட் சபை தானகவேதான் தன்னுடைய பொறுப்புகளை விட்டுக் கொடுத்திருக்கிறது. ஆகையால், இதிலிருந்து ஒரு சிலர் அதி

காரம் செலுத்துவதென்ற நிலைமை ஏற்படாது. ஸெனட் சபைக்கு முழு அதிகாரங்கள் இருந்தன. அவற்றைப் பூராவாக நிறை வேற்றக் கூடிய நிலைமையிலும் அது இருந்தது. அந்த நிலைமை யில்தான் ஸெனட் சபை தன்னுடைய அதிகாரங்களை ஒரு நிரந் தரக் குழுவினிடம் விட்டுக் கொடுத்தது. இது ஒரு தன்னல மறுப்பாகும். இதன் பெருமையை தருமகர்த்தாக்கள்தான் ருசுப்பிக்க வேண்டும். அவர்களுடைய பொறுப்பு மிகக் கடுமை யானது. ஆனால், போதிய சேவை உணர்ச்சி இருந்தால், பொறுப்பு அவ்வளவு கடினமானதாக இராது. அதனால், குஜராத் மட்டுமில்லாமல் இந்தியாவும் நன்மை பெறும். பலனின் அளவைக் கொண்டு அவர்கள் மதிப்பிடப்பட மாட்டார்கள். அவர்களுடைய தொண்டின் அளவு, தரம் ஆகியவற்றைக் கொண்டே அவர்கள் மதிப்பிடப்படுவார்கள்.

—'எங் இந்தியா' – 2—2—1928

## 2

[கோடைகால விடுமுறைக்குப் பிறகு திறக்கப்பட்ட மகா வித்தியாலய, விநய மந்திர் மாணவர்களிடையே காந்திஜி ஒரு பிரசங்கம் செய்தார். அதனு டைய சுருக்கமான விவரம் கீழே தரப்படுகிறது :]

சமீபத்தில் வித்தியாபீடத்தினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அடிப்படைக் கொள்கைகளைப் பற்றி உங்கள் விடுமுறை காலத் தில் நீங்கள் கவனமாக யோசித்துப் பார்த்திருப்பீர்களென்று நம்புகிறேன். நான் பல தடவைகளில் கூறியிருப்பது போல், நம்முடைய பலம் எண்ணிக்கையில் இல்லை. எண்ணிக்கையை நாம் பொருட்படுத்தவில்லை என்பதில்லை ; ஆனால், எண்ணிக்கை குறைவாயிருப்பது பற்றி நாம் கவலைப்பட வேண்டிய அவசிய மில்லை. இந்த அடிப்படைக் கொள்கைகளை நம்மால் இயன்ற அளவுக்கு நன்றாகப் புரிந்து கொண்டு, அவற்றை ஏற்றுச் செய லில் நடத்திக் காட்டுவதில்தான் நம்முடைய உண்மையான பலம் இருக்கிறது வித்தியாபீடத்தினிடம் உண்மையாக இருந்துவந் துள்ள மாணவர்கள், அதனுடைய கொள்கைக்கு ஏற்றவிதத்தில் நடந்து கொண்டால், அவர்களின் மூலம் நம்முடைய லட்சியமான சுயராஜ்யத்தைப் பெறுவோம் என்பது நிச்சயம். கொள்கைகளில் மனப்பூர்வமான நம்பிக்கையும், அவற்றைப் பயமின்றி பின்பற்று வதுமே நம்முடைய தேவையாகும். என்ன நேர்ந்தாலும் வித்தியா பீடத்தின் கொள்கைக்கு உண்மையாக நடந்து கொள்ளுவோம் என்று உங்கள் ஆசிரியர்களுக்கு உறுதி கூறவேண்டும். சத்திய மும், அகிம்சையும்தான் நம்முடைய உரைகல் ; இவ்விரண்டிலும் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு இங்கே இடமில்லை.

சர்க்கார் ஸ்தாபனங்களுக்கும், தேசீய ஸ்தாபனங்களுக்கு மிடையே உள்ள சில தெளிவான வித்தியாசங்களை நாம் புரிந்து

கொள்ளுவோம். நம்முடைய மாணவர்களில் ஒருவர் பர்தோலியில் சிறை சென்றிருக்கிறார். மேலும் பலரும் சிறைக்குப் போவார்கள். அவர்கள் வித்தியாபீடத்திற்குப் பெருமையளிப்பவர்கள். சர்க்கார் பள்ளிகளில் இருப்பவர்கள் தாமும் அப்படியே செய்ய வேண்டுமென்று நினைத்தால் கூட, அப்படிச் செய்ய அவர்கள் துணிய முடியுமா ? நீங்கள் பர்தோலிக்குச் சென்று வல்லபாய்க்கு உதவி செய்யலாம். ஆனால், அவர்களால் அப்படி முடியாது. அவர்கள் ரகசியமாகத்தான் தம்முடைய அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ள முடியும். தேசீய வாழ்வின் ஒரு நெருக்கடியான கட்டத்தில் நம்மை முடக்கி, ஒடுக்கி வைக்கும் இலக்கியப் பயிற்சியினால் என்ன பலன் ? ஒருவன் செயலற்றுப் போய்விடுகிறான் என்றால் அறிவும், இலக்கியப் பயிற்சியும் அவன் பெறுவதால் என்ன பலன் ?

மேலும் நாம் பாடம் சொல்லிக் கொடுக்கும் முறைக்கும் அவர்களுடைய முறைக்குமிடையே எவ்வளவோ வேற்றுமை இருக்கிறது. உதாரணமாக, அவர்கள் சொல்லிக் கொடுக்கிற மாதிரி, நாம் ஆங்கிலம் சொல்லிக் கொடுக்க முடியாது. அந்த மொழியில் ஒரு அளவுக்குப் பயிற்சி ஏற்படும்படி நாம் செய்யலாம். ஆனால் தாய்மொழியைப் புறக்கணித்து, ஆங்கிலத்தையே நமது சிந்தனையின் கருவியாக்கிவிட்டால், தேசம் தற்கொலை செய்து கொள்வது போலாகும். இந்த தேசீய ஸ்தாபனத்தில் அந்தத் தீய பழக்கத்தைத் திருத்த முயற்சிக்கிறோம். நமது பாடங்களையெல்லாம் குஜராத்தி மொழியின் மூலமே கற்றுக் கொள்ள வேண்டும். எல்லா விதமான கருத்துகளையும், உணர்ச்சிகளையும் வெளியிடுவதற்கு ஏற்ற முறையில் அதை நாம் வளம் பெறச் செய்ய வேண்டும். இந்த நாட்டில் இருப்பதைப் போன்ற நிலைமையை வேறெந்த நாட்டிலுமே நாம் பார்க்க முடியாது. இவ்வளவு வருடங்களாக எல்லாவற்றையும் ஆங்கிலத்தின் மூலமே கற்றுக் கொண்டதன் பலனை நாம் வேண்டிய அளவு அனுபவித்துவிட்டோம். கடமைப் பாதையிலிருந்து நாம் வழுவிவிட்டோம்.

பொருளாதாரம் சொல்லிக் கொடுக்கப்படுவதையே எடுத்துக் கொள்ளுங்கள். இப்போது சர்க்கார் ஸ்தாபனங்களில் உள்ள முறை படுமோசமானது. ஒவ்வொரு நாட்டுக்கும் ஒவ்வொரு பொருளாதாரம் இருக்கிறது. ஜெர்மன் பாடபுத்தகங்கள் மற்றவைகளிலிருந்து வேறுபட்டவை. சுதந்திர வர்த்தகமே இங்கிலாந்தின் விமோசனமாயிருக்கலாம். ஆனால், நமக்கு அது அழிவையே தரும். இனித்தான் இந்தியாவுக்கான பொருளாதாரத்தை நாம் உருவாக்க வேண்டும்.

சரித்திரத்தின் விஷயமும் அப்படித்தான். இந்தியாவின் சரித்திரத்தை எழுதும் ஒரு பிரெஞ்சுக்காரர் அதைத் தன் வழியிலேயேதான் எழுதுவார். ஆங்கிலேயர் முற்றிலும் வேறுவிதமாக எழுதுவார். ஆங்கிலேயர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே நடந்த சண்டைகளைப் பற்றிய விவரங்களை, அவர்கள்

வெவ்வேறுவிதமாக வர்ணிப்பார்கள். ஆராய்ச்சியின் மூலம் கிடைக்கும் ஆதாரங்களைக் கொண்டு ஒரு இந்திய தேச பக்தர் எழுதும் இந்திய சரித்திரம், ஆங்கில அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் எழுதுவதினின்றும் மாறுபட்டிருக்கும். இருவருமே யோக்கியமானவர்களாக இருக்கலாம். நம்முடைய தேசீய வாழ்வில் நடந்த சம்பவங்களைப் பற்றி ஆங்கிலேயர்கள் செய்த மதிப்பீட்டை நாம் ஏற்றுக்கொண்டது மிகப் பெரிய தவருகும். ஆகையால் நீங்களும், உங்களுடைய ஆசிரியர்களும் சுதந்திரமாக ஆராய்ச்சி செய்வதற்கு அந்தத் துறையில் நிறைய இடமிருக்கிறது.

கணக்கு போன்ற ஒரு பாடத்தை நாம் சொல்லிக் கொடுப்பதும் வேறுவிதமாக இருக்கும். நமது கணக்கு ஆசிரியர் இந்திய நிலைமைகளுக்கு ஏற்றவாறு கணக்குப் போடுவார். ஆகவே, கணக்கு கற்றுக் கொடுக்கும்போதே, அவர் இந்திய பூகோளத்தையும் கற்றுக் கொடுப்பார்.

உடலுழைப்பு, கைத்தொழில் பயிற்சி ஆகியவற்றிலும் நாம் விசேஷ கவனம் செலுத்துகிறோம். இந்தப் பயிற்சியினால் மூளை மழுங்கிவிடும் என்று தவருக நினைத்துக்கொண்டு விடாதீர்கள். தகவல்களை உருப்போட்டுச் சேகரித்துவைக்கும் பண்டசாலைகளாக நமது மூளைகளைச் செய்வதன் மூலம் அறிவு வளர்ந்து விடுவதில்லை. அக்கறையின்றி இலக்கியத்தைப் படிப்பதைவிட, புத்திசாலித்தனத்துடன் கைத்தொழில் பயிற்சி பெறுவது அறிவு வளர்ச்சிக்கே பேருதவியாக இருக்கும்.

—'எங் இந்தியா' – 21—6—1928

## 3

உருப்படியான வேலைகளைச் செய்வதற்குப் பயிற்சியளிப்பது நமது கல்வித் திட்டத்தில் முக்கியமான ஒரு அம்சமாக இருக்க வேண்டும். இந்த நாட்டில் அதற்கான சரியான சூழ்நிலையைத் தோற்றுவிக்க வேண்டிய அவசியமிருக்கிறது. அப்படி நடந்தால், பையன்கள் தாம் கற்றுக்கொண்டு செய்யும் வேலைகளின் மூலம் பள்ளிக்கூடச் செலவுகளை யெல்லாம் சரிக்கட்டிக்கொண்டு போவதற்கு வேண்டிய அளவு சம்பாதிப்பது சாத்தியமாக இருக்கும். இந்த எண்ணத்துடன்தான் ஸ்ரீ மதுசூதன தாஸ் கடாக்கில் தோல் தொழிற்சாலையை ஆரம்பித்தார். அது ஒரு நல்ல திட்டம். ஆனால், இந்தக் கைத்தொழில் முயற்சிக்கு ஆதரவான சூழ்நிலை நாட்டில் இல்லாததால், அது தோல்வியடைந்தது. நமது உயர்தரக் கல்வியில் தச்சு வேலையும் ஏன் ஒரு முக்கிய அம்சமாக இருக்கக்கூடாது? நெசவு வேலை இல்லாத நமது கல்வித் திட்டம் சூரியன் இல்லாத வானத்தைப் போலிருக்கும். இம்மாதிரி தொழில்கள் முறையாகச் சொல்லிக்கொடுக்கப்படும் இடங்களில்

பையன்கள் பள்ளிக்கூடச் செலவுகளை சமாளிப்பதற்குப் போதுமான அளவு சம்பாதிக்க முடியும்.

காரியங்களைச் செய்வதற்கு உடலில் தெம்பும், மனத்தில் உறுதியும் மாணவர்களுக்கு இருக்க வேண்டும். இதற்கு ஏற்ற சூழ்நிலையை உண்டாக்க ஆசிரியர்களும் தமது பங்கைச் செய்ய வேண்டும். ஒரு நெசவாளி கபீராக மலர முடிந்ததென்றால், மற்ற நெசவாளிகளும் ஒரு கித்வானியாகவோ, கிருபளானியாகவோ, கலேல்கராகவோ, ஏன் ஆக முடியாது? செருப்புத் தைக்கும் ஒருவர் ஷேக்ஸ்பியராக முடிந்ததென்றால், மற்ற செருப்புத் தைப்பவர்களும் பெரிய கவிஞர்களாகாவிட்டாலும், நல்ல ரசாயன அல்லது பொருளாதார நிபுணர்களாக ஏன் ஆக முடியாது? உழைப்புக்கும், அறிவு வளர்ச்சிக்குமிடையே முரண்பாடு இருப்பதாகத் தவருக நினைத்துக் கொள்ளுவதன் மூலம், மக்களின் அபிவிருத்தியை நாம் பெரிதும் தடைப்படுத்துகிறோம். இவ்விரண்டுக்குமிடையே முரண்பாடு இல்லை என்பதைச் செயலில் காட்டி, சீர்கேடான இந்த மாயையை அகற்ற வேண்டியது வித்தியாபீடத்தின் பொறுப்பாகும்.

—'நவஜீவன்' – 23–9–1928

# 17

# ஆரம்பக் கல்வி

## 1

கிராமாந்திரக் கல்விக்காக வேலை செய்ய வேண்டும் என்பது குஜராத் வித்தியாபீடத்தின் நோக்கங்களில் ஒன்ருகும். பொதுவாக, இன்று கிராமாந்திரக் கல்வி என்பது ஆரம்பக் கல்விதான். இந்த வித்தியாபீடம் கிராமத் தொண்டர்களைத் தயாரிப்பதற்காக இருக்கிறதேயொழிய, குமாஸ்தாக்களை உற்பத்தி செய்வதற்காக அல்ல. வித்தியாபீடம் நகரத்திற்கு அருகில் இருக்க வேண்டுமானல் - உண்மையில் அப்படித்தான் இருக்கிறது - நகர வாழ்க்கையின் போக்கை மாற்றுவதற்கு அது தன்னல் இயன்றவரையில் முயற்சி செய்யும். கிராமங்களின் அழிவினல் இன்று நகரங்கள் சுபிட்சமாக இருக்கின்றன; ஆனல், கிராமங்களின் சேவைக்காகவே நகரங்கள் இருக்க வேண்டும்.

இது சாத்தியமாக இருந்தாலும், இல்லாவிட்டாலும், எவ்வளவு இளைஞர்களையும், யுவதிகளையும் இந்தக் கருத்துக்குத் திருப்ப முடியுமோ, அவ்வளவு பேர்களையும் திருப்புவதற்கு வித்தியாலயம் முயற்சி செய்ய வேண்டும்.

ஆகையால், அவரவர்களுடைய நோக்கங்களுக்கு ஏற்றவாறு, ஆரம்பக் கல்வியைப் பல்வேறு கோணங்களிலிருந்து பார்க்க முடியும்.

ஆரம்பக் கல்வியைப் பற்றி நான் ஆழ்ந்து யோசனை செய்திருக்கிறேன்; பல சோதனைகளும் நடத்தியிருக்கிறேன். அதன் பலனாக நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். அதாவது, ஆரம்பக் கல்வி ஒரு வருடத்திற்காவது புத்தகங்களே இல்லாமல் அளிக்கப்பட வேண்டும். அதற்குப் பிறகும்கூட, புத்தகங்களை உபயோகிப்பதை முடிந்தவரையில் குறைத்துக் கொள்ள வேண்டும்.

ஆரம்பத்திலிருந்தே புத்தகங்களைப் புகுத்தி, குழந்தைகள் அகரவரிசையைக் கற்கும்படி செய்தால், அவர்களுடைய பல்வேறு திறன்களின் வளர்ச்சி தடைப்பட்டுவிடுகிறது; புத்திக் கூர்மை மந்தமடைந்து விடுகிறது. நியாயமாக இந்தக் காலத்தில்தான் அது துரிதமாக வளர்ச்சிபெற வேண்டும். குழந்தை பிறந்த உடனேயே விஷயங்களைக் கற்றுக்கொள்ள ஆரம்பித்து விடுகிறது. ஆனால், தனது கண்கள், காதுகள் அல்லது புலன்கள்மூலமே பெரும்பாலும் கற்றுக்கொள்கிறது. குழந்தை பேசக் கற்றுக்கொண்டவுடன், அதாவது சப்தங்களைத் திருப்பிச் சொல்லக்கற்றுக்கொண்ட உடன், துரிதமாக மொழியையே கற்றுக் கொண்டுவிடுகிறது. தன்னுடைய பெற்றோர்களுடைய மொழியையே அவன் கற்றுக்கொள்ளுவது இயற்கையேயாகும். பெற்றோர்கள் நல்ல பண்பாடு உடையவர்களாக இருந்தால், அவனுக்கும் அந்த குணங்கள் ஏற்படுகின்றது. அவர்களுடைய நல்ல நடவடிக்கைகளைப் பின்பற்றுகிறான். இதுதான் அவனுடைய உண்மையான கல்வியாகும். நம்முடைய பண்பாடும் பழக்க வழக்கங்களும் சீர்குலையாதிருந்திருந்தால், குழந்தைகள் இன்னமும் தம் வீடுகளிலேயே சிறந்த முறையில் கல்வி பெற்றுக் கொண்டிருப்பார்கள்.

ஆனால், இப்போது நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் பரிதாபமான நிலைமையைப் பார்க்கும் போது இது சாத்தியமில்லை; பையன்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புவதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால், குழந்தை பள்ளிக்கூடத்திற்குப் போக வேண்டியிருந்தால், பள்ளிக்கூடம் வீட்டைப் போலவும், அங்கு போதிக்கப்படும் கல்வி நல்ல பண்பாடு உள்ள ஒரு வீட்டில் அளிக்கப்படும் கல்வியைப் போலவும் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதே இதன் அர்த்தமாகும். இப்படிப் பாடம் சொல்லிக்கொள்ளும் ஒரு குழந்தை, மற்ற வழியில், அதாவது, அகர வரிசை மூலம் கற்றுக்கொள்ளக் கூடியதைவிட ஒரு வருடத்தில் பத்து மடங்கு அதிகமாகக் கற்றுக்கொள்ளும்.

வாய் மொழியாகப் பாடம் சொல்லிக் கொடுப்பது, பையன்கள் கதைகளைக் கேட்டுத் தெரிந்துகொள்வதைப் போல் சுலபமாக முதல் வருடத்திலேயே சரித்திரம், பூகோளம் ஆகியவற்றின்

அடிப்படைகளை அவர்கள் தெரிந்துகொள்ள உதவி செய்யும். பல கவிதைகளை அவர்கள் மனப்பாடம் பண்ணிவிடுவார்கள்; எந்த விதமான சிரமமும் இல்லாமல் தாமாகவே எண்ணவும் தெரிந்துகொண்டுவிடுவார்கள். அகர வரிசைகளைப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற சுமை அவர்களுக்கு இரா தாகையால், அவர்களுடைய மனம் வளர்ச்சியடைவது தடைப் படாது, அவர்களுடைய கண்களும் துஷ்பிரயோகம் செய்யப் படமாட்டாது.

அவர்கள் தம்முடைய கைகளைப் பல்வேறு எழுத்துகளை எழுதிப் பழகுவதற்கு உபயோகிக்கமாட்டார்கள். இந்தப் பழக்கம் கையெழுத்தை அடியோடு கெடுத்துவிடுகிறது. க்ஷேத்திர கணிதம், எளிய படங்கள் வரைவதற்குத் தம் கைகளை உபயோகிப்பார்கள். இது கைகளுக்கு நல்ல ஆரம்ப காலப் பயிற்சியாக இருக்கும்; இணக்கம், திறமை இரண்டும் சேர்ந்து பெறுவதற்கு இது உதவியாக இருக்கும்.

குஜராத்திலும், இந்தியாவிலும் உள்ள கோடிக்கணக்கான குழந்தைகளுக்கு நாம் கல்வி புகட்ட வேண்டுமென்று விரும் பினால், ஆரம்பக் கல்வி புகட்டுவதற்கு இது ஒன்றுதான் வழி யாகும்.

இப்போது நாட்டிலுள்ள நிலைமையில், குழந்தைகளுக்குப் புத்தகங்கள் கொடுப்பதென்பது சாத்தியமில்லை. ஆரம்ப கட்டத் திலும் குழந்தைகளுக்குப் புத்தகங்கள் கொடுக்க வேண்டிய அவசியம் இருந்தால், என்ன செலவானாலும் அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், அவை அவசியமில்லை யென்று கருதப்பட்டால், அப்படிப் புத்த கங்கள் கொடுப்பது தீமையாகக் கூட இருக்கும் என்று கருதப் பட்டால், ஆரம்ப வருடங்களில் புத்தகங்கள் கொடுக்கக் கூடா தென்ற இந்த யோசனையைப் பரிட்சித்துப் பார்க்க வேண்டும். தார்மிக ரீதியில் ஒரு காரியம் அவசியமற்றதாக இருந்தால், அனுபவ ரீதியிலும் அது அனுமதிக்க முடியாததாகவே இருக்கும். ஒரு லட்சிய நாகரிக அமைப்பில், தார்மிகமும், பிரத்தியட்சக் கொள்கை என்று கூறப்படுவதும் முரண்பாடானவையாக இரா.

கடைசியாக, இங்கு விளக்கப்பட்டுள்ள இந்தக் கல்வி முறையை இப்போதுள்ள ஆசிரியர்கள் நிறைவேற்ற முடியாது என்பது தெளிவு. அவர்கள் பையன்களுக்கு எப்படியோ, அகர வரிசையையும், சாதாரணக் கணக்கையும் சொல்லிக்கொடுத்து விடலாம். ஆனால், என்னுடைய திட்டத்தில், பள்ளிக்கூடத்தின் முதல் வருடத்திலேயே சிறுவர்களுக்கு எந்த விதமான பாடம் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறேனே, அதெல்லாம் ஆசிரியர்களுக்கே தெரியாது. அவர்களே பிழை

யில்லாமல் பேச முடியவில்லை; பையன்கள் பிழையின்றிப் பேசுவதற்கு அவர்கள் எப்படி உதவி செய்ய முடியும்?

இந்தச் சங்கடத்தை அடுத்த கட்டுரையில் கவனிப்போம்.

—'நவஜீவன்' - 13—5—1928

## 2

நாம் தீர்க்க வேண்டிய பிரச்னைகளில் ஒன்று என்னவென்றால், முந்திய கட்டுரையில் விவரிக்கப்பட்ட கல்வி முறையை எப்படி அமலாக்குவது என்பதே. அதற்குத் தேவையான சரியான ஆசிரியர்களை எங்கிருந்து பெறப்போகிறோம்? உண்மையில் இதுதான் மிகவும் கஷ்டமான பிரச்னை. சர்க்கார் பயிற்சிக் கல்லூரிகள் இந்தப் பிரச்னையைத் தீர்க்கவில்லை. தம் பொறுப்பிலுள்ள மாணவர்களுக்கு எழுதவும், படிக்கவும், கணக்குப் போடவும் கற்றுக்கொடுப்பதைக்கூட அவர்கள் தீர்க்கவில்லை. இவற்றை அவர்கள் போதிப்பது மிக மிகச் சொற்பமாகவே இருக்கிறது. மாணவர்களுக்கோ, மக்களுக்கோ இதனால் அதிக உபயோகம் இல்லை.

ஆகையால், இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவதற்கு வித்தியாபீடம் முன்வர வேண்டும். கல்வித் துறையில் நாட்டுக்கு ஆக்கமளிக்கக்கூடிய சாதனங்களையும், உபாயங்களையும் கண்டு பிடிக்க வேண்டியது வித்தியாபீடத்தின் கடமையும், உரிமையுமாகும். அப்படி கிடைக்காவிட்டால் அதை அபிவிருத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இந்தச் சாதனங்களைப் பெறுவதற்கு ஐரோப்பாவிலிருந்து அதிக உதவியை எதிர்பார்க்க முடியாதென்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும்; குறிப்பாக, இப்போது இந்தியாவில் உள்ள நிலைமையில் அப்படி எதிர்பார்க்கவே முடியாது. நாம் வகுக்கும் கல்வி முறை நாட்டின் சுதந்திரத்தைக் காப்பற்றுவதற்கான ஒரு கருவியாக இருக்க வேண்டும்.

ஆகையால், கல்வித் துறையில் நாமேதான் சோதனைகள் செய்து பார்க்க வேண்டும். நாம் இந்தச் சோதனைகளை நடத்தும்போது, ஐரோப்பாவின் அனுபவங்களையும் நாம் தெரிந்து கொள்ளலாம்; ஆனால், ஐரோப்பாவுடன் சம்பந்தப்பட்ட எதுவுமே நல்லது, அல்லது ஐரோப்பிய நிலைமையில் அவர்களுக்கு நல்லதாயிருப்பது, இங்கு இந்தியாவில் நமக்கும் நல்லதாயிருக்கும் என்று நாம் எண்ணவே கூடாது. இது சரியான வாதம்தான் என்று ஒப்புக்கொள்ளப்பட்டால், சர்க்கார் பள்ளிக்கூடங்களில் என்ன நடக்கிறதென்பதை நாம் அலசிப் பார்த்து மதிப்பிட வேண்டும் என்ற முடிவுக்கே வருவோம். சர்க்கார் கல்வி சுயராஜ்யத்திற்குப் பாதகமானது. நமது நாகரிகத்தை அழித்துவிடக்கூடியது என்பதை நாம் அறிந்திருக்கிறோம்.

ஆகையால், சர்க்கார் பள்ளிக்கூடங்களில் செய்யப்படுபவை களுக்கு நேர்மாறானவைகளை நாம் செய்தால், நாம் சரியான தீர்வு காணக்கூடும். இனி உதாரணங்களைக் கவனிப்போம் :

அங்கே போதனைமொழி ஆங்கிலமாக இருக்கிறது. ஆகை யால், தேசீயப் பள்ளிகளில் அதை நாம் அனுமதிக்கவே கூடாது என்பதை அதிலிருந்து நாம் உணர வேண்டும்.

அவர்களுக்கு ஏராளமான செலவில் கட்டப்பட்ட பெரிய கட்டிடங்கள் இருக்கின்றன. இது விரும்பத்தக்கதல்ல என்பதை நாம் அறிய வேண்டும். நம்முடைய பள்ளிக்கூடக் கட்டிடங்கள் ஏழைகளுக்குத் தகுந்த முறையில் சாதாரணமானவைகளாக இருக்க வேண்டும்.

அங்கு அவர்கள் வெறும் எழுத்தறிவிலும், மொழி, இலக் கியம் ஆகியவைகளிலும் மட்டுமே கவனம் செலுத்துகிறார்கள். உள்ளூர் கைத்தொழில்களைப் புறக்கணிக்கிறார்கள். இது சரியல்ல என்பது தெளிவு.

அங்கே அவர்கள் மதத்தைப் பற்றிச் சொல்லிக்கொடுப்ப தில்லை. குறிப்பிட்ட எந்த மதத்தையும் நான் சொல்லவில்லை. எல்லா மதங்களுக்கும் பொதுவாக உள்ள அடிப்படைக் கொள் கைகளையே சொல்லுகிறேன். கல்வியின் இதர அம்சங்களால் சாதாரணமாக மாணவர்கள் பெறக்கூடிய நன்மையை இது அழித்துவிடுவதாக இருக்கிறது என்பதை நாம் அறிவோம். சர்க்கார் பள்ளிகளில் சொல்லிக்கொடுக்கப்படும் சரித்திரம் முற்றிலும் பொய்யானதல்ல என்றாலும், முக்கியமாக பிரிட்டிஷ் சர்க்காரின் கண்ணோட்டத்துடனேயே அது இருக்கிறது. அதே விவரங்களை ஜெர்மன், பிரெஞ்சு, அமெரிக்க சரித்திராசிரியர்கள் வேறுவிதமாக வியாக்கியானம் செய்திருப்பார்கள். பஞ்சாப் படுகொலை போன்ற சமீபகால சம்பவங்கள் கூட, சர்க்கார் எழுத் தாளர்களால் ஒரு விதமாகவும், தேசீய எழுத்தாளர்களால் முற்றிலும் வேறு விதமாகவும் சித்திரிக்கப்படுகின்றன.

சர்க்கார் பள்ளிகளில் போதிக்கப்படும் பொருளாதாரம், சர்க்காரின் கொள்கைகளை அங்கீகரிக்கின்றன. ஆனால், அதை நாம் முற்றிலும் வேறுவிதமான கண்ணோட்டத்துடன் பார்க் கிறோம்.

சர்க்கார் பள்ளிக்கூடங்களில், ஆசிரியர்கள் நல்லொழுக்கம் உள்ளவர்களா என்பதைக் கவனிக்காமலே நியமனம் செய்கி றார்கள். ஆனால், நமது பள்ளிகளில் உள்ள ஆசிரியர்கள் மிகவும் உயர்ந்த ஒழுக்கமுள்ளவர்களாக இருக்க வேண்டும். சர்க்கார் பள்ளி ஆசிரியர்களுக்கு அவர்களுடைய வேலைக்குத் தேவையான மிகக் குறைந்தபட்ச யோக்கியதாம்சங்கள் தான் இருக்கின்றன; அவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளங்களும் மிகக் குறைவு. ஆனால், தேசீயப் பள்ளி ஆசிரியர்கள் உயர்ந்த யோக்கியதாம்

சங்கள் உள்ளவர்களாக இருக்க வேண்டும். அவர்களுடைய தன்னலமின்மைதான் அதற்குக் காரணமாக இருக்குமே யொழிய, அவர்கள் வேறு வழியின்றி திக்கற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதல்ல.

நமது நகரப் பள்ளிக்கூடங்களில் எந்த மாதிரி கல்வி அளிக்கப்பட வேண்டும் என்பது இதிலிருந்து ஒருவாறு உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

நம்முடைய மாணவர்கள், கிராம நாகரிகத்தை ஸ்திரப்படுத்தி, புத்துயிர் ஊட்டுவதற்கு வேலை செய்யத் தகுதியுள்ளவர்களாக இருக்க வேண்டும். கிராமவாசிகளின் தேவைகள் என்ன என்பதை அவர்கள் பரிசீலனை செய்வார்கள்; அங்கு காணப்படும் குறைபாடுகளை அகற்ற முயற்சி செய்வார்கள்; குழந்தைகள் நல்ல குடியானவர்களாவதற்குப் பயிற்சியளிப்பார்கள்; நகர ஆடம்பரங்களில் சிக்குண்டுவிடாமல் நல்ல கிராமவாசிகளாக இருப்பதற்கும் பயிற்சியளிப்பார்கள். இப்போது நகரங்களில் அளிக்கப்படும் கல்வியில் நாம் தீவிரமான மாறுதல்களைச் செய்வதற்கு முன்வராதவரையில், வித்தியாபீடத்தின் முக்கியமான நோக்கங்களில் ஒன்றை நாம் நிறைவேற்ற முடியாது. ஒரே ஒரு உதாரணத்தை எடுத்துக்கொள்ளுங்கள் : மகாவித்தியாலயம் (கல்லூரி), புதிய குஜராத்தி பாடசாலை, விநய மந்திரம் (மத்திய தரப்பள்ளி) ஆகிய மூன்று ஸ்தாபனங்களை நாம் ஆமதாபாத்தில் நடத்திக்கொண்டிருக்கிறோம். இந்தப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களை நல்ல கிராமவாசிகளாக்குவதற்கு நாம் முயற்சி செய்வதாக இருந்தால், இவற்றை நடத்துவதற்கு நமக்கு உரிமை உண்டு. கிராம வாழ்க்கையைப் பற்றி பூரா விவரங்களையும் அவர்கள் அறிந்திருக்க வேண்டும்; அதில் அவர்களுக்குப் பிடித்தமும் இருக்க வேண்டும். இறுதியில், மகாவித்தியாலயம் அல்லது விநய மந்திரத்தில் தமது படிப்பை முடித்துக்கொண்டு வெளியே வருபவர்கள் கிராமங்களுக்குச் சென்று அங்குள்ள மக்களின் சேவையிலேயே தம்மை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். இதை எப்படிச் செய்யலாம் என்பதை அடுத்த கட்டுரையில் கவனிப்போம்.

—'நவஜீவன்' – 20—5—1928

## 3

ஆரம்பக் கல்விப் பிரச்னையை, அதாவது கிராமாந்தரக் கல்விப் பிரச்னையை நாம் தீர்க்க வேண்டுமானால், நான் கூறியுள்ள கருத்துகளை ஆசிரியர்கள் புரிந்துகொண்டு, அவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டும். விநய மந்திரத்திலும், மகாவித்தியாலயத்திலும் பாடத் திட்டத்தை மாற்றியமைப்பதற்கும் நாம் சம்மதிக்க

வேண்டும். அப்போதுதான் இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண முடியும்.

ஜனங்கள் என்ன சொல்லுவார்களோ, அல்லது மாணவர்களின் எண்ணிக்கை குறைந்து விடுமோ அல்லது மக்களிடையே ஸ்தாபனத்தின் மதிப்பு குறைந்து விடுமோ என்ற பயத்தில் எந்த மாறுதலையும் செய்ய நாம் தயங்குகிறோம். ஆனால், துணிச்சலுடன் தேவையான மாறுதல்களை நாம் செய்தால், கிராமங்களில் சேவை செய்வோம் என்ற உறுதியுடன் இந்தப் பள்ளிக் கூடங்களிலிருந்து ஊழியர்கள் கோஷ்டி ஒன்று வெளிப்படும்; நகரங்கள் செய்யும் பாவங்களுக்கு இவர்களுடைய சேவை ஒரு அளவுக்காவது பிராயச்சித்தமாக இருக்கும்.

இந்தப் பள்ளிக்கூடங்களில் தேர்ச்சி பெற்று வருபவர்கள் முதல் தரமான பஞ்சடிப்பவர்களாகவும், நூற்பவர்களாகவும், நெசவாளர்களாகவும் இருக்க வேண்டும். பருத்தி பயிரிடுவதில் அவர்கள் நிபுணர்களாக இருக்க வேண்டும். கிராமங்களுக்குத் தேவையான அளவுக்கு அவர்களுக்குத் தச்சு வேலையும் தெரிந்திருக்க வேண்டும்; அதாவது, நல்ல கைராட்டினங்களைச் செய்வதற்குத் தெரிந்திருக்க வேண்டும். வண்டிகள், கலப்பைகள் போன்றவைகளைச் செய்யத் தெரியாவிட்டாலும், அவற்றைச் செப்பனிடக் கற்றிருக்க வேண்டும். அத்துடன் கிராம வாழ்வுக்குத் தேவையான அளவுக்குத் தையல் வேலையையும் அறிந்திருக்க வேண்டும். அவர்களுடைய கையெழுத்து நன்றாக இருக்க வேண்டும். எளிய நடையில் நல்ல வசன நடை எழுதவும், சாதாரணமான கணக்குகள் போடவும் அறிந்திருக்க வேண்டும். ராமாயணம், மகாபாரதம் போன்ற மத சம்பந்தமான பண்டைய நூல்களில் அவர்களுக்கு நல்ல அனுபவம் இருக்க வேண்டும்; இன்றைய நிலைமைக்கேற்ப அவற்றை விளக்கிக் கூறவும் திறமை பெற்றிருக்க வேண்டும். கிராம விளையாட்டுகள், சுகாதார விதிகளை அறிந்திருக்க வேண்டும். சாதாரணமான நோய்களைக் கண்டுபிடித்து எளிய வீட்டுவைத்திய முறைகளின் மூலம் அவற்றை குணப்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். கிராமங்களிலுள்ள கிணறுகள், குளங்கள், குப்பை மேடுகள் முதலியவற்றைச் சுத்தம் செய்யத் தெரிந்திருக்க வேண்டும். இன்னும் எவ்வளவோ விஷயங்களை நான் அடுக்கிக் கொண்டு போக முடியும். ஆனால், எல்லாவிதத்திலும் கிராமங்களுக்குக்குத் தொண்டு புரியக் கூடிய விதத்தில், நமது பள்ளிக்கூடங்கள் சிறுவர்களுக்குப் பயிற்சியளிக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். இதற்காக ஆகும் செலவு, கல்விக்கான செலவாகக் கருதப்பட வேண்டும். இந்தப் பயிற்சி ஒன்றுதான், நாம் கிராமங்களுக்குச் சென்று, கிராம வாழ்க்கையைச் சீர்திருத்தம் செய்வதற்குத் தகுதியளிக்கும்.

நாம் இந்த மாறுதலைச் செய்து, நமது நோக்கங்களை விளக்கிக் கூறியவுடன் நமது பள்ளிக்கூடங்கள் காலியாகிவிடுமென்று உங்களில் சிலர் பயப்படுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும்.

இந்த பயம் உண்மையாகவே ஆகிவிட்டாலும் கூட, சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காக அந்த நிலைமையை எதிர் நோக்கவும் நான் தயாராயிருப்பேன். கிராமங்களுக்கு இசைவான ஒரு கல்வி முறையை வகுப்பதென்பது, வித்தியாபீடத்தின் நோக்கமாக இருக்கும்வரையில், அப்படிச் செய்யாமலிருப்பது, நம்மிடம் வைக்கப்பட்ட நம்பிக்கைக்கு துரோகமாக நடந்து கொண்டதாகும்.

நமது நம்பிக்கையைத் தளர விடாமல், நமது லட்சியத்தில் உறுதியுடன் நாம் வேலை செய்தால், இறுதியில் மக்கள் அதன் முக்கியத்தை உணர்ந்து, அதைப் பரப்புவதற்கு நம்முடன் ஒத்துழைப்பார்கள். இது என்னுடைய அனுபவம், உறுதியான நம்பிக்கையும் கூட. இந்தத் தோல்விக்குக் காரணம் என்ன என்பதை நாம் கண்டு பிடிக்க முயற்சி செய்தால், ஒன்று ஊழியர்கள் தம் லட்சியத்தில் உண்மையாக இருக்கவில்லை அல்லது அரை குறை மனத்துடன்தான் அதை நிறைவேற்றினார்கள் என்பது தெரியும். கீதை கூறுவதுபோல், தன்னுடைய நம்பிக்கையில் உறுதி இல்லாதவன் தோல்வி அடைவான்.

நம்பிக்கையும், தியாக உணர்ச்சியும் உள்ள ஆசிரியர்கள் நமது பள்ளிக்கூடங்களில் இருந்தால், பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் நிறைந்திருப்பார்கள் என்பதே என்னுடைய திடமான நம்பிக்கையாகும். அடிப்படை உண்மைகளின் மதிப்பை மக்கள் உணர்ந்துதானிருக்கிறார்கள். பல சமயங்களில் இதற்கு மிக மிகக் காலதாமதமாவது போல் தோன்றும். ஆனால், இது வெறும் மாயையேயாகும். சரியான பாதைதான் எப்போதுமே குறுக்குப் பாதையாகவும் இருக்கும்.

இச்சைகளைத் தூண்டி விடுவதும், மக்களின் பலவீனங்களுக்கு இடமளிப்பதுமான ஒரு பள்ளிக்கூடத்தில் மாணவர்கள் ஏராளமாகப் போய்ச் சேர்ந்தால், அதனால் யாருக்கு என்ன லாபம்? ஒரு ஸ்தாபனம் உபயோகமானது அல்லது அதன் நோக்கத்தில் அது வெற்றி பெறுகிறது என்பதற்கு, வெறும் எண்ணிக்கை மட்டும் ருசுவாகாது. என்னுடைய திட்டத்தை ஏற்றுக் கொண்டால், அதனால் ஏற்படக் கூடிய பலன் ஒன்றுதான் என்பது எனக்குத் தெரியும். அதாவது சர்க்கார் பள்ளிக்கூடத்தில் பெறுவதுபோன்ற அதே கல்வியையோ, சுகமான நகர வாழ்க்கையை நடத்துவதற்கு ஏற்ற கல்வியையோ இங்கும் பெறலாம் என்ற நம்பிக்கையுடன் வந்த மாணவர்கள், நமது பள்ளிகளிலிருந்து வெளியேறிவிடுவார்கள். ஆனால், அதுவும் நல்லதுதான். ஏனெனில், அதனால் நமக்கும் சரி, அவர்களுக்கும் சரி, தரும சங்கடமான ஒரு நிலைமை ஏற்படுவது தவிர்க்கப்படும். இருவரும் பரஸ்பரம் பற்றற்ற முறையில் சேவை செய்வதற்கும் அது உதவியாக இருக்கும்.

ஆரம்பக் கல்வி பிரச்னையைப்பற்றி விளக்கிக் கூறுவதே இந்தக் கட்டுரைத் தொடரின் நோக்கமாகும். என்னுடைய

கருத்தை சரியானபடி நான் விளக்கிக் கூறிவிட்டேன் என்றே நினைக்கிறேன். இன்னும் ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்லி இதை முடித்துக் கொள்ளுகிறேன். பின்னர், இது சம்பந்தமாக என்னிடம் கேட்கப்பட்டுள்ள சில கேள்விகளுக்குப் பதிலளிக்கிறேன்.

ஆரம்பக் கல்வி கட்டத்தின் முதலாவது வருஷத்திலேயே அகர வரிசைகளைக் கற்றுக் கொடுக்கக் கூடாது என்ற கருத்து சரியானதுதான் என்றால், அதன் நல்ல பலன்களில் சில நமது விநய மந்திரங்கள், அல்லது மத்தியதரப் பள்ளிகள் அல்லது மகாவித்தியாலயத்திலும் காணப்பட வேண்டும்.

புத்தகங்கள் வெளியிடப்படுவது இன்று மிகவும் அதிகமாகியிருக்கிறது. ஒவ்வொரு நாளும் புத்தகங்கள் பிரசுரிக்கப்படுகின்றன. நமக்கு சுமாராக எழுதத் தெரியும் அல்லது ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பரிசீலனை செய்திருக்கிறோம் அல்லது படித்திருக்கிறோம் என்று நினைக்கும் ஒவ்வொருவரும் தம்முடைய கருத்துகளை எழுதி, அவற்றை அச்சடித்து வெளியிட வேண்டுமென்று துடிக்கிறார். அதன் மூலம் தேசத்திற்கு தான் சேவை செய்வதாகவும் நினைக்கிறார். மாணவர்களின் மூளைக்குப் பெரும் சங்கடமும், பெற்றோர்களின் பணத்திற்குச் செலவும்தான் இதனால் ஏற்படும் பலனாகும்! இதனால் மாணவர்களின் அறிவு வளர்ச்சி ஸ்தம்பித்து விடுகிறது. அவர்களுடைய மூளை சம்பந்தமில்லாத, விசித்திரமான தகவல்களைச் சேகரித்து வைக்கும் கிடங்காகிவிடுகிறது; அவர்கள் தாமே சுயமாகச் சிந்திப்பதற்கு இடமில்லாமற் போய் விடுகிறது. அந்த தகவல்களும் சீராக இருப்பதில்லை; ஒரு சோம்பேறியின் வீட்டில் சாமான்கள் இறைந்து கிடப்பதைப் போலவே, இந்தத் தகவல்களும் அவன் மனத்தில் சிதறிக் கிடக்கும். அந்தத் தகவல்களினால் அவனுக்கு ஒரு உபயோகமும் இல்லை; அதனால் மக்களுக்கும் பிரயோசனம் ஏற்படுவதில்லை.

ஆகையால், என் விருப்பப்படி விடுவதாக இருந்தால், இப்போது வெளியிடப்படும் ஏராளமான புத்தகங்களை மக்களிடம் கொடுக்க மாட்டேன். எழுதப்படிக்கத் தெரிந்த மாணவர்கள் கூட ஆசிரியர்களிடமிருந்து வாய்மொழியாகத்தான் பெரும்பாலானவற்றைக் கற்றுக் கொள்ளுகிறார்கள். ஆகையால், மாணவர்கள் குறிப்பாகச் சில புத்தகங்களை மட்டுமே படிக்க வேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன். ஆனால், தாம் படித்தவற்றைப்பற்றி அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்; நல்லவைகளாகத் தோன்றுபவைகளை நடைமுறையில் அனுசரிக்க வேண்டும். அப்படிச் செய்தால், அவர்களுடைய வாழ்க்கை தூய்மையானதாகவும், பலமும், விறுவிறுப்பும் நிறைந்ததாகவும் இருக்கும். சிந்தித்துப் பார்க்கவும், தராதரம் பிரித்துப் பார்க்கவும் அவர்கள் கற்றுக்கொண்டிருப்பார்கள். அதுதான் உண்மையான கல்வி முத்திரையாகும். நமது ஏழை மக்களுக்கு ஏற்றதும், பயனளிக்

கக்கூடியதுமான கல்வியும் அதுதான். மாணவர்கள், மக்கள் இருவருக்குமே அது நன்மையளிக்கும்.

வித்தியாபீடத்தின் நோக்கங்களைப் பற்றி ஆசிரியர்கள் நன்ருகச் சிந்தித்துப் பார்த்து, அவற்றை ஏற்றுக் கொண்டு அமல் நடத்த முயற்சிக்க வேண்டும். வித்தியாபீடத்திற்கு ஏற்பட்டுள்ள கஷ்டமான பிரச்னைக்குத் தீர்வு காண்பது, இப்போதுள்ள ஆசிரியர்களின் இந்தத் திறமையைப் பொறுத்தே இருக்கிறது.

—'நவஜீவன்' - 27—5—1928

# 18

# சில கேள்விகள்

ஆரம்பக் கல்வியைப் பற்றி முன்பே மூன்று கட்டுரைகள் எழுதிவிட்டதால், பின்கண்ட கேள்விகளுக்கு இப்போது சற்று எளிதாகவே பதில் அளிக்கலாம் :

"1. ஆங்கிலத்தின் சுமை குறைக்கப்பட்டால், இப்போது மாணவர்களின் வாழ்க்கையில் வீணடிக்கும் சில வருடங்களை மிச்சப்படுத்தலாம் என்று முன்பு ஒரு முறை நீங்கள் எழுதியிருந்தீர்கள். எத்தனை வருடங்கள் வீணுகின்றன? இதனுல் சமூகத்திற்கு ஏற்படும் நஷ்டம் ஆகியவைகளைப் பற்றி உங்களுடைய மதிப்பீடு என்ன?"

ஆங்கிலத்தின் சுமையைக் குறைப்பதென்ருல் என்ன என்பதை முதலில் விளக்குகிறேன். மாணவர்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்ளுவதை அடியோடு நிறுத்திவிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அதைக் கற்றுக் கொள்ளலாம், உபயோகிக்கலாம். ஆனல், ஒரு பிரெஞ்சுக்காரர் ஆங்கிலத்தைக் கற்றுக் கொண்டு அதை உபயோகிப்பது போலவே இருக்க வேண்டும். அதாவது ஒருவர் ஒரு அந்நிய மொழியைக் கற்றுக் கொண்டு எப்படி உபயோகிக்கிருரோ, அதே மாதிரி இருக்க வேண்டும். நாம் ஆங்கிலம் கற்றுக் கொள்ளுவதை இத்துடன் நிறுத்திக் கொண்டு விட்டால், நாம் ஆங்கிலத்தில் சிந்தனை செய்யவோ, சரியான உச்சரிப்புடன் அதைப் பேசவோ, ஆங்கிலேயரைப் போன்று அவ்வளவு திறமையுடன் அதை எழுதவோ அவசியமிராது. உபயோகமற்ற இந்த முயற்சியில் ஒவ்வொரு மாணவனும் தன் வாழ்க்கையில் ஐந்து வருடங்களையாவது வீணடிக்கிருன் என்றே நான் நினைக்கிறேன். அத்துடன் மட்டுமில்லை. தனக்கு உண்மையில் ஆசை இல்லாத ஒன்றைக் கட்டாயமாகக் கற்றுக் கொள்ளுவது, அவன் சுயமாகச் சிந்திக்கும் சக்தியை முடக்கிவிடுகிறது ; அவனுடைய உடல் பலவீனமடைகிறது ; அவன் வெறும் மை யொத்தும் காகிதத்தைப் போல் ஆகிவிடு

கிருன். ஒருவன் தன் தாய் மொழியின் மூலம் விஷயங்களைக் கற்றுக் கொண்டால், ஐந்து வருடங்களில் இன்னும் எவ்வளவு அதிகமாகக் கற்றுக் கொள்ளலாம்? எவ்வளவு நேரத்தை, எவ்வளவு சக்தியை மிச்சப்படுத்தலாம்? சிறந்த சிந்தனையைச் சுலபமாகத் தன் தாய் மொழியின் மூலமே அறிந்து கொள்ளலாம்; அதே சமயத்தில், ஒரு அந்நிய மொழியின் கஷ்டமான உச்சரிப்பைத் தெரிந்து கொள்ளும் தொந்தரவும் இல்லாமற் போகும்.

*"2. ஒருபுறம் குழந்தைகள் கல்வியும், மற்றொரு புறம் கல்லூரிக் கல்வியும் அதிகச் செலவுக்குக் காரணமாக இருக்கின்றன. தேசீயக் கல்வியில் இவ்விரண்டையும் சேர்க்க வேண்டாமா? உயர்ந்த தரத்தில் இவ்விரண்டுமே இன்னும் குறைந்த செலவில் கிடைக்கச் செய்வதற்கு ஏதாவது திட்டம் வைத்திருக்கிறீர்களா?"*

குழந்தைகள் கல்வியை எப்படி குறைந்த செலவில் நடத்துலாம் என்பதையும், எப்படித் தன்னைக்கட்டிக் கொள்ளும்படியாகக் கூடச் செய்யலாம் என்பதையும், முன்பு எழுதிய மூன்று கட்டுரைகளில் எடுத்துக் காட்ட முயற்சித்திருக்கிறேன். கல்லூரிக் கல்வி விஷயத்திலும் இதே கண்ணோட்டத்துடன் நடந்து கொண்டால், அதன் செலவையும் குறைக்க முடியும்; மாணவர்களும் தேசத்திற்கு பலமளிக்கக் கூடிய அறிவைப் பெறவும் உதவியாக இருக்கும். "உயர்ந்த தரமுள்ள கல்வி" என்று அந்த நிருபர் குறிப்பிட்டிருக்கிறார். சர்க்கார் ஸ்தாபனங்களில் கிடைப்பதுபோன்ற கல்வி என்ற அர்த்தத்தில் அவர் அந்த வார்த்தைகளை உபயோகித்திருக்கிருரென்ருல், அந்தக் கேள்வியே எழவில்லை. ஏனெனில், சர்க்கார் அளிக்கும் கல்வி முறை கொஞ்சமும் விரும்பத்தக்கதல்ல என்றே நான் கருதுகிறேன். தேசீயக் கல்லூரிகள் அல்லது பள்ளிக்கூடங்களில் அளிக்கப்படும் கல்வி முற்றிலும் வேறு விதமாக இருக்கும்; பலவழிகளில் புதுமாதிரியானதாகவும் இருக்கும். ஆகையால், அதற்குரிய விதத்தில் அது நல்லது தான்.

*"3. பழைய சம்பிரதாயக் கல்வி முறையை ஆதரிப்பவர்கள், மாணவர்களுக்குத் தம்முடைய ஆசிரியர்களிடம் பக்தி ஏற்படச் செய்ய வேண்டுமென்று விரும்புகிருர்கள்; ஆசிரியரைத் திருப்தி செய்வதன் மூலமாகவன்றி வேறு வழிகளில் அறிவு பெற முடியாதென்று மாணர்வகளிடம் அறிவுறுத்துகிருர்கள். ஆசிரியரிடம் சரியான பக்தி காட்டாவிட்டால் அல்லது அவருக்கு சரியான பணிவிடை செய்யாவிட்டால், ஆசிரியருக்கு அதிருப்தி ஏற்பட்டுவிடுமென்றும், அப்போது மாணவர்கள் கற்றுக் கொண்டதையெல்லாம் இழக்கச் செய்து விடுவாரென்றும் சொல்லுகிருர்கள். அந்த விபரீதமான விளைவைத் தவிர்ப்பதற்காக ஆசிரியரைத் திருப்தி செய்ய வேண்டும் என்கிருர்கள். குருபக்தியைப் பற்றிய இந்தக் கருத்து உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது?"*

குருபக்தியில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனல், ஒவ்வொரு ஆசிரியருமே ஒரு குருவாக இருக்க முடியாது. இப்படிப் பார்க்கும் போது, குரு-சிஷ்ய உறவு என்பது ஆன்மிகத் தன்மை

வாய்ந்தது ; அதுதாஞகவே ஏற்பட வேண்டும். இயற்கையான இந்த உணர்ச்சியை வெளி நிர்ப்பந்தத்திற்கு உட்பட்டு உற்பத்தி செய்ய முடியாது. இம்மாதிரி ஆசிரியர்கள் இன்னும் இந்தியாவில் இருக்கிருர்கள். (மோட்சத்திற்கான வழியைக் காட்டக் கூடிய சக்தி வாய்ந்த ஞான குருவைப் பற்றி நான் இங்கு குறிப்பிடவில்லை யென்று நான் எச்சரிக்கவேண்டிய அவசியமில்லை). அத்தகைய ஆசிரியர்களுக்கு முகஸ்துதியே தேவையில்லை. அவர்களிடம் காட்டப்படும் மரியாதை இயற்கையானதாக இருக்க வேண்டும். ஆசிரியருக்கு மாணவனிடம் உள்ள அன்பும் அப்படித்தான். ஆகவே, ஆசிரியர் எப்போதும் கொடுக்கத் தயாராக இருக்கிருர்; மாணவனும் பெற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிருன். சாதாரணமான விஷயங்களை நாம் யாரிடமிருந்து வேண்டுமாஞலும் கற்றுக் கொள்ளலாம். அப்படிக் கற்றுக் கொள்ளவும் செய்கிருேம். ஒரு தச்சு வேலைக்காரருக்கும் எனக்குமிடையே பொதுவானது ஒன்றுமில்லை. அவரிடம் பலதவறுகளும் இருக்கலாம். ஆயினும், அவரிடமிருந்து நான் எவ்வளவோ கற்றுக் கொள்ளலாம். ஒரு கடைக்காரரிடமிருந்து எனக்குத் தேவையானவற்றை வாங்கிக்கொள்ளுவதைப்போல், அவரிடமிருந்தும் எனக்கு வேண்டிய அறிவை வாங்கிக்கொள்ளுகிறேன். ஆஞல், இங்கும் கூட ஒருவிதமான நம்பிக்கை அவசியமாகும். நான் எந்தத் தச்சரிடமிருந்து தச்சு வேலை கற்றுக்கொள்ள விரும்புகிறேஞே, அவருடைய திறமையில் எனக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். என்னிடம் அந்த நம்பிக்கை இல்லையென்ருல், அவரிடமிருந்து நான் எதையும் கற்றுக்கொள்ள முடியாதென்பது தெளிவாகும். ஆஞல், ஆசிரியரிடம் பக்தி செலுத்துவது வேறு விஷயம். நல்லொழுக்கத்தை வளர்ப்பதே கல்வியின் நோக்கமாக இருக்கும் போது, பழைய குரு-சிஷ்ய உறவு மிக அத்தியாவசியமானதாகும். ஆசிரியரிடம் ஒரு பக்தி உணர்ச்சி இல்லையென்ருல், நல்லொழுக்கத்தை வளர்ப்பது கடினமானதாகிவிடும்.

"4. உண்மையில், இந்தக் காலத்தில் ஒரு ஆசிரியர் செய்ய வேண்டியதெல்லாம் தபால்காரன் வேலையைப் போன்றதுதான். நல்ல எழுத்தாளர்கள் எழுதிய புத்தகங்களாக மாணவர்களுக்குக் கொடுத்து, அவர்கள் அதை உபயோகிக்கும்படி பார்த்துக் கொள்ளுவதற்குத்தான் ஆசிரியர் அங்கே இருக்கிருர். ஆசிரியர் வேறு என்ன செய்யவேண்டும் அல்லது அறிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?

"பள்ளிக்கூடங்களில் பாடங்கள் சொல்லிக் கொடுக்கப்படும் விதத்தைப் பார்க்கும்போது, ஆசிரியர் என்பவர், மாணவர்கள் சுலபமாகப் புரிந்து கொள்ளுவதற்கு சௌகரியமாக, கஷ்டமான வாக்கியங்களை விளக்கிக் கூறுபவர், நீண்ட பாடங்களைச் சுருக்கிக் கூறுபவர் என்றே தோன்றுகிறது. இதுதான் ஆசிரியரின் வேலை என்று பொதுவாக நம்பப்படுவதை நாம் ஏன் ஏற்றுக்கொள்ளக் கூடாது?"

பாட புத்தகங்கள் எவ்வளவு நன்ருக இருந்தாலும், நல்ல ஆசிரியரும் அவசியம் என்றே கருதுகிறேன். நீண்ட பாடங்

களைச் சுருக்கிக் கூறுவது அல்லது கஷ்டமான வாக்கியங்களை விளக்கிக் கூறுவதோடு மட்டும் அவர் திருப்தியடைந்துவிட மாட்டார்; அவசியம் ஏற்படும்போது, அவர் பாட புத்தகங்களை ஒரு புறமாக வைத்துவிட்டு, ஒரு நல்ல ஓவியரைப் போல், தான் சொல்லிக் கொடுக்கும் பாடம் மாணவர்களுக்குப் பளிச்சென்று புரியும்படி செய்வார். ஒரு நல்ல பாட புத்தகத்தை ஒரு நல்ல போட்டோ படத்திற்குச் சமமாகச் சொல்லலாம். ஆனால், ஒரு ஓவியம் அவ்வளவு சிறந்ததாக இல்லாதிருந்தால் கூட, மிகச் சிறந்த போட்டோ படத்தைவிட உயர்வானதாக இருக்கும். அதைப் போலவே ஒரு நல்ல ஆசிரியர், மிகச் சிறந்த பாட புத்த கங்களை விட அதிக உபயோகமுள்ளவராக இருப்பார். ஒரு விஷயத்தின் மிக முக்கியமான அம்சங்களுக்கு ஆசிரியர் மாணவனை இட்டுச் செல்லுவார்; அவனுக்கு அதில் பிடித்தம் ஏற்படும்படி செய்வார்; தன்னைப்போல் மாணவனும் அதைச் சரியாகப் புரிந்துகொள்வதற்கு உதவியாக இருப்பார். நீண்ட பாடங்களைச் சுருக்கிக் கூறுவது, கஷ்டமான வாக்கியங்களை விளக்கிக் கூறுவது ஆகியவைதான் ஒரு ஆசிரியரின் பணி என்ற பொதுவான கருத்தை நாம் ஒருபோதும் ஏற்றுக்கொள்ள முடியாது என்றே எனக்குத் தோன்றுகிறது. துண்டு துண் டாகத் தகவல்களை அளிப்பதுடன் நின்றுவிடாமல், சேவை என்ற உயர்ந்த நோக்கம்கொண்ட ஆசிரியர்களைத் தோற்றுவிப்பதே நமது முயற்சியாக இருக்க வேண்டும். இன்றைக்கும்கூட இம்மாதிரி ஆசிரியர்கள் நமக்குக் கிடைக்கவில்லை என்பது சரியல்ல.

"5. புரோச்சில் நடந்த கல்வி மகாநாட்டில் நீங்கள் செய்த பிரசங்கத்தில் ஆரம்பக் கல்வியை இலவசமானதாக்க முடியுமென்றாலும், அதைக் கட்டாய மானதாக்க முடியாதென்றும், கட்டாயமானதாக்கக் கூடாதென்றும் சொன் னீர்கள்.

"ஏற்கனவே ஒடுக்கப்பட்டுள்ள மக்கள் மீது, நல்லதாக இருந்தால் கூட எதையும் கட்டாயமாகச் சுமத்தக்கூடாது. இன்று நம் பொறுப்பில் உள்ள வர்களுக்குக் கல்வி புகட்டும் வேலை நமக்கு ஏற்பட்டிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். எந்தவிதமான விதிவிலக்கும் இல்லாமல் எல்லோருக்கும் கதர், மற்றும் இதர தேசீய கைவினைத் தொழில்களைப் பற்றி போதிக்க வேண்டும் என்ற உங்களுடைய கல்வித் திட்டத்தைக் கட்டாயமானதாக்குவீர் களா, இல்லையா?"

என்னுடைய கல்வித் திட்டத்தைக்கூடக் கட்டாயமான தாக்கக் கூடிய அளவுக்கு எனக்கு இன்னும் துணிச்சல் ஏற்பட வில்லை. இன்னும் பல வருடங்கள் வரையிலாவது நம் நாட்டில் இதற்கு அவசியமிராது என்று நினைக்கிறேன். ஏனெனில், ஆரம்பக் கல்வியைக் கட்டாயமானதாக்குவதுதான் சரியான வழி என்றால் கூட, அதை அமல் நடத்துவதற்கு முன்பு பல நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கும். தங்க ளுக்குப் பிடித்தமானதும், பலனளிக்கக் கூடியதுமான கல்வியை

மக்கள் பெறுவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தாலே இப்போதைக்குப் போதுமானது என்று நினைக்கிறேன். இப்படிச் செய்தால், நாம் கட்டாயப்படுத்த வேண்டிய அவசியம் இல்லாமல் அவர்களே அதை வரவேற்பார்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

"6. தம் பொறுப்பில் உள்ள பையன்களுக்குத் தமக்கு விருப்பமான விதத்தில் மதக் கல்வி அளிப்பதற்கு ஆசிரியர்களுக்கு உரிமை இருக்கிறதென்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

ஆசிரியர்கள் எந்த ஸ்தாபனத்தின் கீழ் வேலை செய்கிறார்களோ அந்த ஸ்தாபனம் விதிக்கும் கொள்கை அல்லது கொள்கைகளுக்கு உட்பட்டே நடக்க வேண்டும். ஆகையால், நமக்கு விருப்பமான விதத்தில் மதக் கல்வி அளிப்பதற்குத் தமக்கு உரிமை இருக்கிறது என்று அவர்கள் உரிமை கொண்டாட முடியாது. மற்றப் பாடங்களைப் போலவே, மதக் கல்வி விஷயத்திலும், ஸ்தாபனத்தின் நிர்வாகிகள் தீர்மானிக்கும் கொள்கையையே ஆசிரியர் நிறைவேற்ற வேண்டும். ஆயினும், சொல்லிக் கொடுக்கும் விதத்தை ஆசிரியரின் விருப்பத்திற்கு விட்டுவிட வேண்டியதுதான். ஆனால், அவர் என்ன சொல்லிக் கொடுக்கிறார் என்பது, மத விஷயத்தில் அவர் வேலை செய்யும் ஸ்தாபனத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட லட்சியங்களுக்கு ஏற்ப இருக்க வேண்டும். குறிப்பிட்ட வேறு சில பாட புத்தகங்களைப் படித்து அப்பாடங்களைச் சொல்லிக் கொடுக்க முடியும் என்பது உண்மையே. ஆனால், மதக் கல்வி விஷயத்தில் இது சாத்தியமில்லை. உண்மையில், புத்தகங்களின் மூலம் இதை போதிக்கவே முடியாது. மற்றப் பாடங்களின் போதனையே பெரும்பாலும் அறிவுக்குத்தான். ஆனால், மதக் கல்வி என்பது ஒருவர் உள்ளத்திலிருந்து வரவேண்டும். அது மாணவர்களின் உள்ளத்தைத் தொட வேண்டும். ஆகையால், ஒரு ஆசிரியர் தானே ஆழ்ந்த மதப் பற்றுதல் உள்ளவராக இருந்தாலொழிய, மதக் கல்வி போதிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளக் கூடாது. இதில் ஒரு அளவுக்குத் தராதரம் பார்க்க வேண்டியதும் அவசியமாகும். உதாரணமாக, அகிம்சைதான் மிகவும் உயர்ந்த மதக் கோட்பாடு என்று ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு பள்ளிக்கூடத்தில், பலாத்காரத்தைத் தூண்டிவிடக்கூடிய எதையும் போதிக்கக்கூடாது. அதே மாதிரி அன்பு, எல்லா மதங்களுக்கும் மரியாதை செலுத்துவது என்ற லட்சியங்களை ஏற்றுக்கொண்டுள்ள ஒரு பள்ளிக்கூடத்தில், மற்ற மதங்களுக்கு விரோதமான எந்தப் பிரசாரத்திற்கும் இடம்கொடுக்கக் கூடாது. சுருங்கக் கூறுமிடத்து, மதக் கல்வி அளிக்க வேண்டிய அவசியத்தை ஒரு பள்ளிக்கூடம் ஏற்றுக்கொண்டால், அது எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதையும் விளக்கமாக விதிக்க வேண்டும். இதை ஆசிரியர்களின் விருப்பத்திற்கு விட்டுவிடக் கூடாது. அப்படிச் செய்தால் குழப்பம்தான் ஏற்படும்.

"7. ஒவ்வொரு மாணவனும் குறைந்தபட்சம் மூன்று அல்லது நான்கு மொழிகளைக் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியம் என்று கருதப்பட்டால், இப்போது வழக்கிலிருக்கும் மதங்களின் அடிப்படைக் கோட்பாடுகள், அனுஷ்டானங்கள், சித்தாந்தங்கள், மூட நம்பிக்கைகள் ஆகியவைகளும் மாணவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்று நீங்கள் நினைக்கவில்லையா?"

உண்மையான ஒவ்வொரு மதத்தினிடமும் மாணவர்களுக்கு மரியாதையும், அன்பும் ஏற்படச் செய்யவேண்டுமானால், ஒவ்வொரு மதத்தின் அடிப்படையான கோட்பாடுகளையும் அவர்கள் தெரிந்துகொள்ளுவதற்கு நாம் ஏற்பாடு செய்ய வேண்டும். பல்வேறு மதங்களிலும் புகுந்துகொண்டுள்ள மூட நம்பிக்கைகள், அந்த மதங்களின் விசேஷ அனுஷ்டானங்கள் முதலியவற்றை அவர்கள் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. இந்தியா போன்ற ஒரு நாட்டில் தன் கண்களையும், காதுகளையும் திறந்துவைத்துக் கொண்டுள்ள ஒவ்வொருவரும் இந்த அனுஷ்டானங்கள், மூட நம்பிக்கைகளின் தன்மை என்ன என்பதைச் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். நல்லது எங்கிருந்தாலும் அதை நாம் தேடிச் செல்ல வேண்டும். அப்படிச் செய்தால், ஒவ்வொரு மதத்தின் அனுஷ்டானங்களையும், மூட நம்பிக்கைகளையும் மட்டும் தெரிந்துகொள்ள வேண்டியிராது. நம்முடைய மதத்தின் அனுஷ்டானங்கள், மூட நம்பிக்கைகளை மட்டும் தெரிந்து கொண்டால் போதும். அவசியமான சந்தர்ப்பங்களில் அவற்றைச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய அவசியத்தையும் பையன்களிடம் வற்புறுத்த வேண்டும். அதற்கே அவர்களுக்கு நேரம் சரியாக இருக்கும்.

"8. சமூகம் நான்கு சாதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ள வர்ணாசிரம முறையில் உங்களுக்கு நம்பிக்கையிருப்பதால், மாணவர்களுக்கு அளிக்கப்படும் கல்வியும், அவர்களுடைய சாதிக்கேற்றவாறு வெவ்வேறு விதமானதாக இருக்க வேண்டும் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா, இல்லையா?"

வர்ணங்களுக்குத் தகுந்தாற்போல் கல்வி மாறுபட்டதாக இருக்க வேண்டுமென்று நான் நினைக்கவில்லை. பல்வேறு வர்ணங்களுக்கும் பொதுவான அம்சங்கள் நிறைய இருக்கின்றன. அவர்களுக்கு அளிக்கப்படும் கல்வியும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்பதே கல்வியின் முக்கிய நோக்கம். கண்ணியமான ஒரு மனிதன் சுலபமாக மனித சமுதாயத்தின் சட்டங்களை அறிந்துகொள்ளுவான். இந்தச் சட்டங்களே மனிதனின் பெருமைகளை மேலும் அதிகப்படுத்துகின்றன. வர்ணாசிரம தருமம் என்பது அவரவர்கள் செய்யும் வெவ்வேறு தொழில்களை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு வர்ணத்தைச் சேர்ந்தவரும் அதற்கென்று உள்ள தொழிலைச் செய்தே சம்பாதிக்க வேண்டும். ஆகையால், ஒரு குறிப்பிட்ட வர்ணத்தைச் சேர்ந்தவர்களிடம் பொதுவாக அந்த வர்ணத்தின் குணாதிசயங்கள் பரம்பரையாக வருவதைக் காணலாம். ஒரு குறிப்பிட்ட வர்ணத்

தைச் சேர்ந்தவர்களிடம் மற்ற மூன்று வர்ணங்களின் குணாதிசயங்கள் இருக்க முடியாதென்று நான் சொல்லவில்லை; அப்படி இராதென்றும் நான் சொல்லவில்லை. மற்றவர்களுக்காக உழைத்து பிராம்மணன் தன் ஜீவனத்திற்கு சம்பாதித்துக்கொள்ளுவான். ஆனால், அவனுக்கு சேவை செய்யும் கலை தெரியவில்லையென்றால், அல்லது அதைப்பற்றி அவன் வெட்கப்படுகிறான் என்றால், அவன் பிராம்மணனே அல்ல. அதே மாதிரி, ஒரு சூத்திரன் வேதம் முதலியவற்றைப் பிறருக்குப் போதிக்காவிட்டாலும், மனமுவந்து மற்றவர்கள் அளிப்பதைக் கொண்டு ஜீவனம் நடத்த வேண்டியிருந்தாலும், ஒரு நல்ல சமுதாயத்தில் அவனுக்கும் வேதம் முதலியவைகளில் போதிய அளவுக்கு விஷய அறிவு அளிக்கப்பட்டிருக்கும்.

"9. உபயோகமான கைவினைத் தொழில் பயிற்சியில் இயற்கையில் மற்றெல்லா விதமான கல்வியும் அடங்கியிருக்கிறது என்பதும், அறிவு வளர்ச்சிக் கல்வி என்பது வெறும் வெளி அலங்காரம் என்பதும் உண்மை தானா? அது உண்மையானால், மகா வித்தியாலயத்தில் அளிக்கப்படும் கல்விக்கு நீங்கள் ஏன் ஆதரவு தருகிறீர்கள்?"

இந்தக் கருத்தில் எவ்வளவு உண்மை இருக்கிறதோ, அவ்வளவு தவறும் இருக்கிறது. அறிவு வளர்ச்சிக் கல்வியே முக்கியம் என்று தூக்கிவைத்துக் கொண்டாடும்போதுதான், தொழில் பயிற்சியிலேயே மற்றெல்லா விதமான அறிவு வளர்ச்சிக் கல்வியும் இருக்கிறது என்று நான் சொல்லுகிறேன். ஏனெனில், அறிவு வளர்ச்சிக் கல்விக்கும், தொழிற் பயிற்சிக்குமிடையே தாண்ட முடியாத தடை என்று எதுவுமில்லை. இரண்டும் ஒன்றோடு ஒன்று சம்பந்தமில்லாத இரு தனிப் பிரிவுகள் அல்ல. அதற்கு மாறாக, கைவினைத் தொழில்களில் பயிற்சிபெறுவது, அறிவு வளர்ச்சிக்கும் முழு வாய்ப்பு அளிக்கிறது. அந்தப் பயிற்சி இல்லாமல், அறிவு வளர்ச்சி அசாத்தியமானதென்று கூட நான் சொல்லுவேன். ஒரு கொத்தனுக்குத் தன் ஜீவனத்திற்காக சம்பாதிக்கக் கூடிய அளவுக்கு மட்டும்தான் தொழில் தெரியும் என்றால், அவர் எந்தக் கல்வியும் பெற்றிருப்பதாகச் சொல்ல முடியாது. ஆகையால், கொத்தனரின் கல்வியில் பின் கண்ட விஷயங்களும் சேர்ந்திருக்கவேண்டும்: சமூக வாழ்க்கையில் இந்தத் தொழிலுக்குள்ள இடம், செங்கல் அடுக்கும் விதம், வீடுகளின் தேவை, ஒரு நல்ல வீட்டுக்கு அவசியமான சாதனங்கள், நாகரிகத்திற்கும், மனிதர்கள் வசிக்கும் வீடுகளுக்குமுள்ள நெருங்கிய சம்பந்தம். அறிவு வளர்ச்சிக் கல்வி என்றால், சில விஷயங்களைத் தெரிந்து கொள்ளுவதைத் தவிர வேறொன்றுமில்லை என்று நினைப்பது முற்றிலும் தவறான எண்ணமாகும். அம்மாதிரி பயிற்சியில்லாமலே அறிவை நன்றாக வளர்த்துக் கொள்ளுவது சாத்தியமேயாகும். என்னென்னவோ விஷயங்களைச் சேகரித்து வைக்கும் ஒரு அலமாரியைப் போல் மாணவர்களின் மனத்தைத் திருப்பிவிடும் ஆசிரியர், கல்வி போதனையின் முதல் பாடத்தைக் கூடக்

கற்றுக் கொள்ளவில்லை என்று தான் அர்த்தம். இந்த நிருபர் கூறிய கருத்தில் உண்மையும் இருக்கிறது, தவறும் இருக்கிறது என்று நான் ஏன் சொன்னேன் என்பதை இதற்குள் வாசகர்கள் புரிந்து கொண்டிருப்பார்கள். கைவினைத் தொழில்கள், அறிவுப பயிற்சி பற்றி நான் சொன்ன கருத்துகள் ஏற்றுக் கொள்ளப் பட்டால் அது தவருகும். கைவினைத் தொழில்களில் பயிற்சி பெறுவதும், அறிவு வளர்ச்சிக்கான கல்வி பெறுவதும் இரண்டு வெவ்வேருன விஷயங்கள் என்ற தவருன எண்ணம் நிலவுவதை மனத்திற்கொண்டு அந்தக் கேள்வி எழுப்பப்பட்டிருந்தால், அது உண்மைதான். மகாவித்தியாலயத்தையும், அதில் அளிக்கப் படும் கல்வியையும் நான் ஏன் ஆதரிக்கிறேன் என்பதை இப்போது சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். நான் கருத்தில் கொண்டுள்ள ஸ்தாபனத்தில் கொத்தனும், நெசவாளியும், தம் வயிற்றுப் பிழைப்புக்குச் சம்பாதிக்க வேண்டிய அளவுக்கு மட்டுமே தொழில் தெரிந்தவர்களாயிருக்க மாட்டார்கள்; புத்திசாலித்தனமுள்ள சமூக ஊழியர்களாகவும் · இருப்பார்கள். நெசவாளிகள், செருப்புத் தைப்பவர்கள், பொற்கொல்லர்கள், விவசாயிகள் முதலியவர்களும் மகாவித்தியாலயத்தில் படிக்கிருர்கள்; அவர்களுடைய சாதிகளிலிருந்து முறையே கபீர், போஜபகத், ஆகா, குருகோவிந்த் போன்றவர்கள் தோன்றுவார்கள் என்று நான் நம்புகிறேன். அவர்களெல்லாம் அறிவு வளர்ச்சிக் கல்வி பெற்றவர்கள் அல்ல என்று யார் சொல்ல முடியும்?

''10. கைவினைத் தொழில்களின் பயிற்சிதான் கல்வியின் உயிர்நாடி என்ருல், வித்தியாபீடததை கொத்தனர்கள், கருமான்கள், நெசவாளிகள் ஆகியோர் கொண்ட ஒரு கமிட்டியினிடம் ஒப்படைததுவிடலாமே. வேண்டுமானல் அறிவு வளர்ச்சிக்காக அவர்கள் ஆசிரியர்களை நியமித்துக் கொள்ளட்டும்.''

ஒன்பதாவது கேள்விக்கு அளிக்கப்பட்ட பதிலிலேயே இந்தக் கேள்விக்கும் பதில் இருக்கிறதென்று நினைக்கிறேன். கபீர் போன்ற நெசவாளர்கள் இருந்தால், வித்தியாபீடத்தின் நிர்வாகத்தை நிச்சயமாக அவர்களிடம் ஒப்படைத்துவிடுவேன்; அறிவு வளர்ச்சிக் கல்வி அளிக்கும் ஆசிரியர்களும் அவர்களின் கீழ் ஊழியர்களாக வேலை செய்வதை ஒரு பெருமையாகக் கருதுவார்கள் என்றும் நம்புகிறேன். கல்வி முறையில் சேர்க்கப்படுவதற்குக் கைவினைத் தொழில்கள் தகுதி உள்ளவையல்ல என்று நாம் கருதியதால்தான், இன்று சமூகத்தில் நமது கைவினைத் தொழிலாளர்கள் ஒரு கீழ்த்தரமான அந்தஸ்திற்குத் தள்ளப்பட்டிருக்கிருர்கள். சமூகத்திற்கு சேவை செய்வதற்கு அவர்களிடமிருந்து நாம் எந்த உதவியும் பெற முடியாமல் இருப்பதற்கும் காரணம் அதுதான்.

''11. தேசத்தின் முன்னேற்றம் கிராமங்களைப் பொறுத்திருக்கிறதேயொழிய நகரங்களைப் பொறுத்திருக்கவில்லை என்று வித்தியாபீடத்தின் நோக்கங்களைப் பற்றிய அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. அப்படியானல், நமது நகரங்களில் உள்ள பையன்களை ஏன் வீணகக் கெடுக்கிறீர்கள்? வேண்டு

மாஞல் கிராமங்களிலுள்ள பையன்களுக்கு கிராமக் கல்வி அளியுங்கள். ஆனல், நகர்ப்புறங்களிலுள்ள பையன்கள் நகர வாழ்க்கையையே விரும்புகிருர்கள். அவர்களுக்கு ஏற்ற கல்வியை அளிக்க ஏன் ஏற்பாடு செய்யக்கூடாது? வித்தியாபீடத்திற்கு வேண்டிய நிதிகளையெல்லாம் நகரங்களிலிருந்து தானே பெறுகிறீர்கள்? வித்தியாபீடத்தை ஏற்ற ஒரு கிராமத்திற்கு மாற்றி, தேவையான பணம், தானியங்கள், பருத்தி முதலியவற்றை அந்த கிராமத்திலிருந்தே வசூல் செய்து கொள்ளுவதாயிருந்தால், நாங்கள் எதுவும் பேசுவதற்கு இராது.''

அதிருஷ்டவசமாக இந்தக் கேள்வி நகரத்தில் வாழ்பவர்கள் அல்லது நகர மாணவர்கள் பலரின் மனத்தில் எழுவதில்லை. கிராமங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளத் தயாராக இருப்பதாகத் தெரிவித்துள்ள நகர வாசிகள், கிராம மக்களின் செலவிலேயே கிராமப் பையன்களுக்குக் கல்வி அளிக்க வேண்டுமென்று எப்படிச் சொல்ல முடியும்? நகர வாசிகளின் கவனம் கிராமங்கள் பால் ஈர்க்கப்பட்டதன் விளைவாகத்தான் வித்தியாபீடம் தோன்றியது. தங்கள் கண்கள் திறந்த பின்னர் நகர மக்கள் தான் வித்தியாபீடத்தை ஆரம்பிக்கத் தீர்மானித்தனர். கிராமங்களின் அபிவிருத்தி தான் அதனுடைய விசேஷ நோக்கமென்ருல், அதற்கான செலவை ஏற்றுக் கொள்ளும்படி கிராமவாசிகளை எப்படிக் கேட்க முடியும்? இப்போதைக்காவது, கிராமங்களில் கூட கல்லூரிக்காக ஆகும் செலவை ஏற்றுக் கொள்ளவேண்டியது நகர மக்களின் பொறுப்பாகும். சர்க்கார் மீது நாம் கூறும் அதே குற்றச் சாட்டுகளை, கிராம மக்களும் நம் மீது கொண்டுவரக்கூடும். ''நகரவாசிகளாகிய நீங்கள் எங்களைச் சுரண்டியிருக்கிறீர்கள், இன்னமும் சுரண்டிக் கொண்டிருக்கிறீர்கள். தயவு செய்து இப்போது அதை நிறுத்திவிடுங்கள். பழைய நிகழ்ச்சிகளை நாங்கள் மறந்துவிடுகிரேம்'' என்று அவர்கள் சொல்லலாம். எங்களில் சிலர் உண்மை நிலைமையையும், எங்கள் கடமையையும் உணர்ந்து விட்டோம். கிராமவாசிகளுக்கு நாம் இழைத்த தவறை நம்மில் சிலர் உணர்ந்து விட்டோம்; அதற்குப் பரிகாரம் செய்வதென்றும் தீர்மானித்திருக்கிரேம். இதனுடைய முதலாவது அம்சம் சர்க்காருடன் ஒத்துழையாமை செய்வதாகும். ஒத்துழையாமையின் உட்கருத்துகளை நாம் அறிந்த பிறகு, சர்க்காருடன் ஒத்துழைப்பதால் கிடைக்கும் நேர்மையற்ற அனுகூலங்களை நிராகரிக்கவும் கற்றுக் கொண்டோம். ஒத்துழையாமையை ஆரம்பித்த பிறகு நாம் பேசாமல் உட்கார்ந்திருந்தோமாஞல், ஒத்துழையாமையின் அர்த்தத்தை நாம் புரிந்து கொள்ளவில்லையென்று நம்மைப் பற்றிக் கூறுவது சரியாக இருந்திருக்கும். நம்முடைய வீட்டை யாராவது கொள்ளையடிக்க ஆரம்பிப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவனுக்கு நாம் உதவி செய்யாமல் இருப்பது மட்டும் போதாது. நாம் குறுக்கிட்டு, அவனுடைய தீச் செயலைத் தடுக்க வேண்டும்; கொள்ளையில் பங்கு பெறுவதையும் தவிர்க்கவேண்டும். அப்போதுதான் கொள்ளைக்காரனுடன் நாம் உண்மையாக ஒத்

துழையாமை செய்தோம் என்று சொல்ல முடியும். ஒத்துழை யாமை செய்வது பலாத்காரத் தன்மைவாய்ந்ததாகவோ, அமைதியானதாகவோ, கலகத்தன்மை வாய்ந்ததாகவோ, மிருக பலம் அல்லது ஆன்ம பலத்தை அடிப்படையாகக் கொண்ட தாகவோ இருக்கலாம். ஆன்ம பலத்தை அடிப்படையாகக் கொண்ட சாத்விக ஒத்துழையாமை முறையைப் பின்பற்றுவ தென்று நாம் தீர்மானித்திருக்கிறோம். கிராமங்களின் செல்வத் தைச் சுரண்டுவதில் பல நகர மக்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்; அதற்குப் பிராயச்சித்தமாக, கிராமவாசிகளுக்கு ஏதாவது சேவை செய்ய வேண்டுமென்பதை உணர்ந்திருக்கிறோம். இதை நாம் உணர்ந்ததன் பலனாகத்தான் வித்தியாபீடம் தோன்றியது. உண்மையை உணர வேண்டும் என்பதில் நம்மில் பலர் விடாப் பிடியாக விழிப்புடன் இருப்பதால், ஒத்துழையாமையின் ரகசி யத்தை ஒவ்வொரு நாளும் இன்னும் அதிகத் தெளிவுடன் புரிந்து கொண்டு வருகிறோம். அந்த அளவுக்கு வித்தியாபீடத்திற்கு இன் னும் அதிக உண்மையான உருவம் கொடுக்கவும் முயற்சித்துக் கொண்டிருக்கிறோம். நகர மக்கள் கொடுக்கும் நன்கொடைகளில் பெரும் பகுதியை கிராமவாசிகளின் கல்விக்காகச் செலவிட வேண்டும் என்பதற்கு அதுவே போதிய காரணமாகும். இப் போதைக்கு இந்தக் கல்வி, நகரத்திலிருந்து வந்து வித்தியாபீடத் தில் பயிற்சி பெற்றவர்கள் மூலமே அளிக்கப்பட வேண்டும்.

வித்தியாபீடம் வசூலித்த பணத்தை வேறு எதற்கும் உப யோகிப்பது மக்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதியை மீறு வதாகும் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். இப்போதுள்ள கல்வியிலிருந்து மாறுபட்டதும், என்னுடைய கருத்துக்கு ஏற்றது மான ஒரு கல்வியை அளிப்பதற்குப் பயன்படுத்திக்கொள்ளப் படும் என்ற நம்பிக்கையில்தான் அவர்கள் பணம் கொடுத்திருக் கிறார்கள்.

“12. சென்ற எட்டு வருடங்களாக தீண்டாமையை அகற்றும் கொள் கையை வித்தியாபீடம் தொடர்ந்து பின்பற்றி வந்திருக்கிறது. இந்தக் காலத் தில் தீண்டாதார்கள் எவ்வளவு பேர் இங்கிருந்து பட்டம் பெற்றிருக்கிறார் கள்?”

இந்தக் கேள்வி விசித்திரமாக இருக்கிறது. இது அறியா மையைக் காட்டுவதாகவும் இருக்கிறது. தீண்டாமை ஒழிப்பு என்றால், ‘தீண்டாதார்’ என்று சொல்லப்படுவோரைப் பட்டதாரி களாக்கிவிடுவது என்று அர்த்தமில்லை; அம்மாதிரி அர்த்தம் இருக்கவும் கூடாது. நாளடைவில் அவர்களில் சிலர் பட்டதாரி களாவது சாத்தியமே. அது வரவேற்கத்தக்கதாக இருக்கும். அத்தகைய பையன்களுக்கு வித்தியாபீடம் உதவி செய்யத் தயாராக இருக்க வேண்டும் என்பதும் நியாயமே. ஆனால், தீண்டாதார் வகுப்புகளைச் சேர்ந்தவர்களைப் பட்டதாரிகளாக் குவது, தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தின் ஒரு பகுதியல்ல. தனக்கு அளிக்கப்பட்ட பல்லாயிரக் கணக்கான ரூபாய் நன்

கொடைகளை வித்தியாபீடம் மறுத்திருக்கிறது; திறமையுள்ள பலரின் சேவைகளையும் மறுத்திருக்கிறது. இந்தச் செய்கைகளின் மூலம் வித்தியாபீடம் தீண்டாதாரிடம் தனக்குள்ள அன்பைச் செயலில் காட்டியிருக்கிறது.

"13. பிரம்மச்சரியம் இல்லாததால் தேச மக்கள் தேக பலத்திலும் சரி, ஆன்மிக பலத்திலும் சரி, குன்றிவிட்டார்கள். துணிச்சலுடனும், விடா முயற்சியுடனும் காரியங்கள் செய்யும் ஆற்றலும் அவர்களுக்குக் குறைந்துவிட்டது. இதைப் பிரத்தியட்சமாகப் பார்த்து வருகிறோம். வித்தியாபீடத்தின் நோக்கங்களை விவரிக்கும் கடைசி ஷரத்தில் பிரம்மச்சரியத்தையும் சேர்க்காமல் நீங்கள் எப்படி விட்டீர்கள்?"

இது நல்ல கேள்வி. எனினும் தேசமக்களின் தேக பலமும், ஆன்மிக பலமும் பலவீனம் அடைந்திருப்பதும், துணிச்சலுடன் காரியங்கள் செய்யும் ஆற்றல் குறைந்திருப்பதும், பிரம்மச்சரியம் இல்லாததன் நேரடியான விளைவு என்று ருசுப்பிக்க முடியாது. பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்தால் தேகபலம் இருக்குமென்றும் ருசுப்பிக்க முடியாது. ஆகையால், பிரம்மச்சரியத்தை, தேக பலம் அல்லது பலவீனத்துடன் சம்பந்தப்படுத்துவது முறையல்ல; இவையெல்லாம் நிலையற்றவை. ஆகையால், இவ்விரண்டையும் சம்பந்தப்படுத்துவது, தெய்விகமான பிரம்மச்சரியத்தின் சிறப்பைக் குறைப்பதாகும். மேல் நாடுகளிலுள்ள மக்கள் பிரம்மச்சாரிகள் அல்ல. ஆனால், அவர்கள் தேக பலமற்றவர்களாகவோ, மனோ பலம் அற்றவர்களாகவோ இல்லை. துணிச்சலுடனும், தொடர்ந்தும் வேலை செய்வதற்கு அவர்களிடமுள்ள ஆற்றல் அபாரமானது. கூர்க்காக்கள், பட்டாணியர்கள், சீக்கியர்கள், டோக்ராக்கள், மற்றும் ராணுவத்திலுள்ள ஆங்கிலேய சிப்பாய்கள் முதலியோர் பிரம்மச்சாரிகள் அல்ல. ஆனால், அவர்கள் நல்ல உடல்கட்டுடன் இருக்கிறார்கள். நம்முடைய வியாயாமசாலையிலுள்ள (தேகப் பயிற்சிக் கூடம்) மாணவர்களை அவர்கள் எளிதில் தோற்கடித்து விடுவார்கள். ஆகையால், தேகபலம், ஒரு விதமான மனோபலம், துணிச்சலுடனும் விடாமுயற்சியுடனும் காரியங்கள் செய்வது ஆகியவையெல்லாம் பிரம்மச்சரியம் இல்லாவிட்டால் முடியாது என்று சொல்லுவது சரியாகாது என்று ருசுப்பிக்க முடியும். நான் கற்பனை செய்யும் பிரம்மச்சரியம் அதாவது, பிரம்மத்தை அறியும் பாதையில் இட்டுச் செல்லும் பிரம்மச்சரியம், தேக பலம் அல்லது மனோபலத்தைத் தாண்டியதாகும். லட்சியம், அதை அடைவதற்கான மார்க்கம் இரண்டும் அதுவேதான். ஆகையால், அதில் வெற்றி பெறுவதற்கு எனது உடலைத் தியாகம் செய்யத் தயாராக இருப்பேன். உடலில் மோகம் கொண்டவன் தொடர்ந்து பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பது அரிது. பீஷ்மரும், மற்றவர்களும் அப்படி இருந்தார்கள் என்ற உதாரணங்கள் நமக்குத் தப்பெண்ணங்களை உண்டாக்கக் கூடும். ராமாயணத்திலும், மகாபாரதத்திலும் கூறப்பட்டவைகளை அப்படியே ஒப்புக்கொள்ளுவது நம்மை திசை தவறச் செய்துவிடும். அவற்றின் உட்கருத்துகளை உணர்ந்து, செயலில் காட்ட வேண்டியதே நமது

கடமையாகும். விஷயங்களைத் தெரிந்துகொண்டு, சோதனை செய்ய வேண்டும் என்ற உண்மையான உணர்ச்சியுடன் அதை நாம் செய்தால், நிச்சயமாக முன்னேறிச் செல்லுவோம்.

மனிதனுடைய உடல் அலட்சியமாக விட்டுவிடக் கூடிய ஒன்றல்ல. அதைக் காப்பாற்ற வேண்டும். சில சமயங்களில் மனித உடல் ராவணனுடைய இருப்பிடமாக இருக்கலாம்; ஆனால், ராமனின் அயோத்தியும் அதுதான். செயல்களமாகிய குருக்ஷேத்திரமாக அது இருந்தால், அதுவேதான் தரும க்ஷேத்திர மாகவும் இருக்கிறது. அதாவது கடமையைச் செய்யும் களமாக இருக்கிறது. ஆகையால், அதைப் புறக்கணிக்க முடியாது. அதை நல்ல நிலைமையில், பலமாக வைத்திருக்க வேண்டும். ஆகையால், உடற்பயிற்சி அவசியமாகும். ஆனால், உடற்பயிற்சிக்குக் கொடுக்கும் முக்கியத்தை இத்துடன் நிறுத்திக்கொண்டுவிட வேண்டும். மாணவர்களிடையே உடற்பயிற்சியை பிரபலப்படுத்துவதற்கு இதுவே போதுமானது. பிரம்மச்சரியத்திற்கும், உடற்பயிற்சிக்குமிடையே துண்டிக்க முடியாத தொடர்பு இருப்பதாக நாம் வற்புறுத்த முடியாது. அது மிகைபட்டதாகும் என்பதோடு மட்டுமில்லை; பிரம்மச்சரியத்தைப் பின்பற்றும் ஒருவன் நல்ல தேக பலம் பெற்றிருக்கவில்லையென்றால், பிரம்மச்சரியம்தான் அதற்குக் காரணமோ என்ற தவறான எண்ணத்தில் அதைக் கைவிட்டுவிடக் கூடும் என்ற அபாயம் இருக்கிறது.

பிரம்மச்சரியத்திற்கு தேகபலத்தின் துணை தேவையில்லை. அதனுடைய முக்கியத்துவமும், தேவையும் வேறு. மேல் நாடுகளில் இருப்பவர்களுக்கு தேக பலமும், மனோபலமும் இருக்கலாம்; ஆனால், அவர்களுக்கு ஆன்ம பலம் இல்லை. ஒவ்வொரு கணமும் அவர்கள் தம்முடைய மட்டமான உணர்ச்சிகளுக்கு இரையாகிவிடுகிறார்கள். தங்களுடைய முடிவுக்கு ஒரு சிறு எதிர்ப்பு தோன்றுவதையும் அவர்கள் பொறுக்க முடிவதில்லை. தம்முடைய சக்தி, கைத்தொழில்கள், முயற்சிகள் ஆகிய யாவற்றையும், மற்ற இனத்தினரைக் கொள்ளையடித்து அவர்களை அழிப்பதிலேயே செலவிடுகிறார்கள். இத்தகையோருடைய தேக பலத்தையும், மனோபலத்தையும் பார்த்து நாம் எப்படிப் பொறாமைப்பட முடியும்? அவர்களுடைய பலமும், சுறுசுறுப்பும் பிரம்மச்சரியம் இல்லாததையே காட்டுகிறது. அதனால்தான் உலகத்தின் உண்மையான முன்னேற்றத்திற்கு அது பெரிய அபாயமாக இருந்திருக்கிறது. அதனால்தான் அதை சைத்தான் தன்மை வாய்ந்ததென்று நான் கூறியிருக்கிறேன். மேற்கத்திய நாடுகளை நான் கண்டிக்கவுமில்லை, சிறுமைப்படுத்தவுமில்லை. சத்தியம், மற்றும் இதர தார்மிகக் கோட்பாடுகளில் தளராத நம்பிக்கை உள்ளவர்கள் பலர் அங்கே இருக்கிறார்கள். பல பிரம்மச்சாரிகளும் அங்கே இருக்கிறார்கள். இங்கே நான் குறிப்பிட்டுள்ளவைகளும், மேற்கத்திய வாழ்க்கையிலுள்ளவைகளுமான

பல விரும்பத்தகாத அம்சங்கள் அவர்களுக்கும் தெரியும். ஆகையால், மேற்கத்திய நாடுகளிடம் நமக்கு அன்பும், மரியாதையும் இருந்தால்கூட, அவர்களுடைய கோரமான முயற்சிகளால் ஏற்பட்டுள்ள வருந்தத்தக்க விளைவுகளைப் பற்றி நாம் பேசலாம். பிரம்மச்சரியம் என்ற நல்ல அஸ்திவாரத்தின் மீது மேற்கத்திய நாகரிகம் எழுப்பப்பட்டிருந்தால், இன்று உலகம் வேறுவிதமாக இருந்திருக்கும். இன்றுள்ளதைப் போன்ற பரிதாப நிலைமையில் இராது; உயர் நோக்கங்கள் கொண்ட ஆண்களும், பெண்களும் வாழும் நல்ல பூமியாக இருந்திருக்கும். பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்காததால் ஏற்படும் தீய விளைவுகளை அறிந்துள்ள நாம், மக்களிடம் பிரம்மச்சரிய லட்சியத்தைப் பரப்ப வேண்டும். பிரம்மச்சரியம் இல்லாமல் முழு ஆன்மிக வளர்ச்சி அசாத்தியமானது. பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்காத ஒருவன் பயிற்றுவிக்கப்படாத முரட்டுக் குதிரையைப் போல் நடந்துகொள்ளக் கூடும்; ஆனல், பண்பாட்டின் முத்திரையான தூய்மையையும், நாகரிகமான தன்மையையும் அவன் பெற முடியாது. பிரம்மச்சரியம் இல்லாமல் தெளிவு பெற்ற, தூய்மையான முயற்சி எதுவும் இருக்க முடியாது. பிரம்மச்சரியம் இல்லாதவனிடம் கூட விறுவிறுப்பும், மனோபலமும் இருப்பதாகத் தோன்றலாம்; ஆனல், அது ஆயிரம் ஆசைகளுக்கும், இச்சைகளுக்கும் இரையாகிக் கொண்டிருக்கும். அதே மாதிரி பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்காத ஒருவர் நல்ல உடல்கட்டு உள்ளவராக இருக்கலாம்; ஆனல், உண்மையில் ஆரோக்கியமானவராக இருக்கமாட்டார். தசைகளை பலப்படுத்தி, கொழுப்பேற்றிக் கொண்டால், உடம்பு ஆரோக்கியமாக இருக்கும் என்பதில்லை. ஒரு மரத் துண்டைப் போல் மெல்லிய உடம்பு ஒருவருக்கு இருக்கலாம்; ஆனல், அவர் குளிர், மழை, வெய்யில் ஆகியவைகளைத் தாங்கிக்கொண்டு ஆரோக்கியமாகவே இருக்கக் கூடும். பிரம்மச்சரியம் இல்லாமல் அத்தகைய ஆரோக்கியமான உடலைப் பெறமுடியாது. இந்த நம்பிக்கை எனக்கு இன்றுதான் ஏற்பட்டிருக்கிறது என்பதில்லை; நீண்ட காலமாகவே இந்த நம்பிக்கை இருந்து வந்திருக்கிறது. மேலும், அது அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. அசுத்தமான சிந்தனை ஒவ்வொன்றும் எப்படி மனிதனுடைய சக்தியை வீணடித்து, அவனுடைய ஆன்மாவை அழிக்கிறது என்பதற்கு என்னுடைய வாழ்க்கையிலிருந்தும், என்னுடைய நண்பர்கள், சக ஊழியர்களின் வாழ்க்கையிலிருந்தும் நான் பல உதாரணங்கள் கொடுக்க முடியும். ஆகவே, தம்மைத்தாமே அறிய விரும்புகிறவர்கள், உடல் நலிந்து கொண்டிருந்தால்கூட பிரம்மச்சரியத்தைக் காப்பற்றிக்கொள்ள வேண்டும்.

நம்முடைய மாணவர்களிடையே உடல் நலிவும், மனோபலமின்மையும் காணப்படுவதற்குக் காரணம் வேறு. குழந்தை மணம், குடும்ப பாரம், வறுமை காரணமாக போஷாக்குள்ள ஆகாரமின்மை முதலியவையே அதற்குக் காரணங்களாகும். குழந்தை மணம் என்பது பிரம்மச்சரியமில்லாமை என்று வாச

கர்கள் தவருக நினைத்துக் கொண்டுவிட வேண்டாம். இந்தத் தீய பழக்கங்களை ஒழிப்பதற்கு இடைவிடாமல் பெரு முயற்சி செய்ய வேண்டும். சமூகத்தில் நிலவும் தீய பழக்கங்களைச் சீர்திருத்தியாக வேண்டும்; இப்போதுள்ள இயற்கையற்ற கல்வி முறையின் சுமையைக் குறைக்க வேண்டும். ஆனல், இது வேறு விஷயம், ஆகையால், அதைப்பற்றி இங்கு நான் விவாதிக்கப் போவதில்லை. ஆயினும், தேகப்பயிற்சி செய்வதன்மூலம் மட்டும் நமது மாணவர்கள் உடற்கட்டைப் பெற முடியாதென்று மாத்திரம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எல்லாத் துறைகளிலும் முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும்; அப்போதுதான் நாம் கோரும் பலனையட்டும் அடைய முடியும்.

"14. நீங்கள் இந்த நாட்டின் பொது வாழ்வில் பங்கெடுத்துக் கொள்ள ஆரம்பித்த காலத்திலிருந்து, யாருக்காவது சந்தேகம் ஏற்பட்டு, அதைப்பற்றித் தெளிவான ஒரு முடிவுக்கு வரமுடியவில்லையென்ருல், உங்களை அணுகி, அதைப்பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைப் பெறும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட விதத்தில் நடந்து கொள்ளுவது சரியா, இல்லையா என்று உங்களிடமிருந்து அறிய மக்கள் ஆவலாக இருக்கிருர்கள். உண்மையில் இப்போதுள்ள நிலைமையையே நான் சொல்லுகிறேன். உங்களுடைய நடவடிக்கைகளெல்லாம் மதத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்பதையே இது காட்டுகிறது. நீங்கள் காலமான பிறகு, இந்த முடிவுகளை ஒரு குழுவினர் அளிப்பது சரியாக இருக்குமா? அவசியமானல், பெரும்பான்மை வாக்குகள் எடுத்து இந்த முடிவுகளை அவர்கள் அளிக்கலாமா? இல்லையானல், தரும சாஸ்திரங்களில் தேர்ச்சிபெற்ற ஒரு குழுவினரைத் தோற்றுவிக்க வேண்டியது அவசியம் அல்லவா?"

வாதத்திற்கிடமான விஷயங்களைப் பற்றி மக்கள் என்னிடம் வந்து என்னுடைய தீர்ப்பைக் கோருவது தகுதியானதென்று நான் நினைக்கவில்லை. என்னுடைய நடவடிக்கைகளின் வெளி உருவம் எப்படியிருந்த போதிலும், யாவும் மதக் கொள்கைகளையே அடிப்படையாகக் கொண்டவை. ஆனல், ஒவ்வொரு தகராறைப் பற்றியும் மக்கள் என்னுடைய தீர்ப்பைக் கோருகிருர்கள் என்ருல், என்னுடைய நடைமுறையை உருவாக்கிக் கொள்ள நான் என்ன விதிகளைப் பின்பற்றுகிறேன் என்பதை மக்கள் புரிந்து கொள்ளவில்லை அல்லது அவைகளைப்பற்றி அவர்களுக்கு சந்தேகங்கள் இருக்கின்றன என்பதே அர்த்தமாகும். என்னை மகாத்மா என்று அழைக்கிருர்கள்; அல்லது நல்ல மனிதன் என்று என்னிடம் மதிப்பு வைத்திருக்கிருர்கள். நமது மக்கள் எளிதில் ஒன்றை நம்பிவிடக் கூடியவர்கள், தாமே சிந்தித்துப் பார்க்கும் பழக்கம் இல்லாதவர்கள். ஆகையால், என்னென்னவோ விதமான கேள்விகளை என்னிடம் கேட்டுக் கொண்டே இருக்கிருர்கள். இது என்னுடைய பெருமை உணர்ச்சிக்குத் திருப்தியளிக்கலாம்; அல்லது என்னுடைய வேலையில் ஒரு அளவுக்கு இது உதவியாகவும் இருக்கலாம். ஆனல் மக்களுக்கோ, கேள்வி கேட்பவர்களுக்கோ இது கணிசமாக

உதவியளிக்கிறதா என்பது எனக்குச் சந்தேகம்தான். நான் அபிப்பிராயங்கள் சொல்லுவதை நிறுத்திவிட்டு, எனக்குத் தோன்றுபவைகளைச் சந்தடியில்லாமல் செய்வதாக இருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும் என்று பல சமயங்களில் யோசித்துப் பார்த்திருக்கிறேன். அப்படியாளுல், இப்போது நான் நடத்திக் கொண்டிருக்கும் இந்த வாரப் பத்திரிகையை முதலில் நிறுத்த வேண்டியிருக்கும்; அத்துடன், இப்போது எனக்குள்ள கடிதப் போக்குவரத்தையும் கடுமையாகக் குறைத்து விடவேண்டும். ஆனல், அதற்கு வேண்டிய அவ்வளவு தைரியம் எனக்கு இருப்பதாக நான் நினைக்கவில்லை. எனினும், மனிதனின் மாபெரும் நண்பனை மரண தேவன் எந்தச் சமயத்திலும் என்னை அழைத்துக் கொண்டு போய், நான் விரும்பினலும், விரும்பா விட்டாலும், என்னுடைய இந்தப் பேச்சுகளுக்கெல்லாம் முற்றுப் புள்ளி வைத்துவிட முடியும்.

என்னுடைய கொள்கைகளைப் பின் பற்றுபவர்கள் கொண்ட ஒரு குழுவினர், எனக்குப் பிற்காலத்தில், தகராறுகளைப்பற்றி வாக்குகள் எடுத்து அபிப்பிராயம் சொல்லுவதில் எதுவும் தவறு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை; என் ஜீவியகாலத்தில் இப்போதேகூட அப்படிச் செய்யலாம். ஆனல், தனிப்பட்டவர் களைப் போலவே, குழுவினரும் தருமத்தையே குறிக்கோளாகக் கொண்டிருக்க வேண்டும்.

15. "வித்தியாபீடத்தில் அளிக்கப்படும் கல்வி மூன்று தனித்தனி கட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஆரம்பக் கல்வி, மத்தியதரக் கல்வி, உயர்தரக் கல்வி. இவற்றை முறையே கிராமத்திற்கான கல்வி, நகரத்திற்கான கல்வி, சமூக நல சேவையில் ஈடுபட விரும்புவோர்களுக்கான கல்வி என்று கூறுவது எவ்வளவு தூரம் சரியாக இருக்கும்?"

ஆரம்பக் கல்வி, மத்தியதரக் கல்வி, உயர்தரக் கல்வி ஆகியவற்றிற்கு இந்த நிருபர் கொடுத்துள்ள அர்த்தங்கள் எனக்குப் பிடிக்கவில்லை. கிராமங்களில் உள்ளவர்கள் வெறும் ஆரம்பக் கல்வியுடன் திருப்தியடைந்து விட வேண்டுமென்று நாம் ஏன் நினைக்க வேண்டும்? கிராம வாசிகளில் யாராவது விரும்பினல், அவர்களுக்கும் மத்தியதரக் கல்வி, உயர்தரக் கல்வி பெறுவதற்கு உரிமையுண்டு. நகரங்களிலுள்ள பையன்களுக்கும் ஆரம்பக் கல்வி அளிக்காமல் முடியாது. கிராமங்களின் சுபிட்சமே இந்த மூன்று ரகமான கல்வியின் நோக்கமாக இருக்க வேண்டும்.

16. "சங்கீதத்திற்கு நீங்கள் எப்போதும் ஏன் இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்?"

நம் நாட்டில் பொதுவாக இன்று சங்கீதம் பயிலுவது புறக்கணிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. சங்கீதம் இல்லாமல், கல்வி முறையே பூர்த்தியானதாக எனக்குத் தோன்றவில்லை. சங்கீதத்தினல் தனி மனிதனுக்கும், மக்களின் சமூக வாழ்வுக்கும்

ஒரு இனிமை ஏற்படுகிறது. சுவாசத்தைச் சீராக அடக்கி விடுவதற்கு பிராணயாமம் எப்படி அவசியமோ, அதே மாதிரி குரலைச் சீர்படுத்துவதற்கும் சங்கீதம் அவசியமாகும். இந்த நாட்டில் பொதுக் கூட்டங்களில் சப்தமும், இரைச்சலும் சாதாரண வழக்கமாக இருக்கின்றன. மக்களிடையே சங்கீத அறிவைப் பரப்புவது அதைக் கட்டுப்படுத்துவதற்குப் பெரிதும் உதவியாக இருக்கும். சங்கீதம் கோபத்தைத் தணிக்கிறது. தரமறிந்து அதை உபயோகிப்பது மனிதன் கடவுளை அறிவதற்குப் பெரிதும் உதவியாக இருக்கும். சங்கீதம் என்றால் எதையாவது விருப்பப்படி கூச்சல் போட்டுக் கத்துவதல்ல; சினிமாப்பாட்டுகளைப் பாடுவதும் சங்கீதமல்ல. அதனுடைய சாதாரண அர்த்தத்தை நான் மேலே குறிப்பிட்டிருக்கிறேன். ஆனால், நம் வாழ்க்கை பூராவும் ஒரு பாட்டைப்போல் இனிமையானதாயிருக்க வேண்டும் என்பதே அதன் உள்ளர்த்தமாகும். சத்தியம், நேர்மை போன்ற நல்ல குணங்களை வளர்த்துக் கொள்ளாவிட்டால், அத்தகைய வாழ்க்கை சாத்தியமில்லை என்பதைச் சொல்லத் தேவையில்லை. வாழ்க்கையை இன்ப மயமாக்குவதென்றால், கடவுளுடன் ஒன்று படுவதாகும். விருப்பு, வெறுப்புகளை அகற்றாதவன், சேவையின் இன்பத்தை அனுபவிக்காதவன், தெய்விகமான சங்கீதத்தைப் புரிந்து கொள்ள முடியாது. இந்த தெய்விகக் கலையின் இந்த ஆழ்ந்த கருத்தை உணராமல் சங்கீதம் பயிலுவதால், ஒரு பலனும் இல்லை என்றே நான் சொல்லுவேன்.

17. ஓவியக்கலை என்றால், சைத்ரிகன் கோடுகள் மூலமும், வர்ணங்களின் மூலமும் தனது உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறான் என்று அர்த்தம். ஓவியத்தைப் பற்றிய இந்த வியாக்கியானத்தை ஏற்றுக் கொண்டால், எல்லோருக்கும் போதிக்கப்பட வேண்டிய தேசீயக் கல்வியில் இதையும் ஒரு அத்தியாவசியமான அம்சமாகச் சேர்த்துக் கொள்ளுவீர்களா?"

மையையும், வர்ணங்களையும் கொட்டி அவற்றைச் சித்திரம் என்று கூறுவதை நான் ஆட்சேபித்திருப்பது உண்மைதான்; ஆனால், சித்திரம் வரைவதையும், ஓவியம் தீட்டுவதையும் நான் குறைத்துப் பேசியதே இல்லை. சித்திரக்காரர் கூறும் வியாக்கியானத்தின்படி ஓவியம் தீட்டுவதை எல்லோருக்கும் போதிக்க முடியுமா என்பது சந்தேகமே. சங்கீதத்திற்கும், ஓவியத்திற்குமிடையே இந்த வித்தியாசம் இருக்கிறது. அதாவது, இயற்கையாகவே ஓவியம் தீட்டுவதில் ருசி உள்ள ஒரு சிலர் தான் அதைக் கற்றுக் கொள்ள முடியும்; ஆனால், சங்கீதத்தை எல்லோரும் கற்றுக் கொள்ள முடியும், கற்றுக் கொள்ளவும் வேண்டும். ஓவியத்தில் கூட நேர்கோடுகள் கிழிப்பது, மிருகங்களின் உருவங்கள், உயிரற்ற பொருள்களை வரைவது ஆகியவற்றை எல்லோருக்கும் கற்றுக் கொடுக்கலாம். அது நிச்சயமாக உபயோகமானதும், அவசியமானதுமேயாகும்; எழுத்துகளைக் கற்றுக்கொடுக்கு முன்பு ஒவ்வொரு பையனுக்கும் இதைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன்.

18. "இலக்கணம், கூட்டு வட்டி, உயர்தர க்ஷேத்திர கணிதம் முதலியவைகளை பையன்கள் பிற்காலத்தில் மறந்துவிடக் கூடும். ஆகையால், தேசீயக் கல்விக்காக வகுக்கப்படும் பாடத் திட்டத்தில் இவற்றைச் சேர்க்கக் கூடாதென்று சிலர் அபிப்பிராயப்படுகிருர்கள். இதை நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா? ஒப்புக்கொள்ளுவதாக இருந்தால், உருதுவையும் அந்த ரகத்தில் ஏன் சேர்க்கக் கூடாது? நாம் ஒருவரோடொருவர் இன்னும் நெருக்கமான தொடர்புகள்கொள்ள வேண்டும் என்றும், ஒருவருடைய கலாசாரத்தை மற்றவர் புரிந்துகொள்ள வேண்டும் என்றும் ஹிந்துக்களும், முஸ்லிம்களும் உணரும் போதுதான் சமஸ்கிருதம், உருது ஆகிய மொழிகளை அறிந்திருப்பது உபயோகமாகவும், நிலையாகவும் இருக்கும். உருது எந்தக் கலாசாரத்தைப் பிரதிபலிக்கிறதோ அதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற விருப்பம் ஏற்படும் போதுதான் உருது தீவிரமாகப் பயன்படுத்திக் கொள்ளப்படும். அதுவரையில் பிள்ளையார் பூஜையைப் போல் அதுவும் வெறும் ஒரு மதச் சடங்கைப் போன்றே இருக்கும், எந்த உபயோகமும் இல்லாத ஒரு வெறும் சடங்காகவே இருக்கும்."

இங்கே இலக்கணம், கூட்டு வட்டி, உயர்தர க்ஷேத்திர கணிதம் ஆகியவையெல்லாம் ஏன் ஒன்றுகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன என்று எனக்குத் தெரியவில்லை. ஒரு மொழியில் நல்ல தேர்ச்சி பெற வேண்டுமானுல், இலக்கணம் அத்தியாவசியமானது என்றும், இலக்கணமும் உயர்தர க்ஷேத்திரகணிதமும் மிகவும் சுவாரஸ்யமான பாடங்கள் என்றுமே நான் எப்போதும் கருதி வந்திருக்கிறேன். இரண்டுமே அறிவுக்கு நல்ல பயிற்சியளிக்கிறது. மேலும், மொழி ஆராய்ச்சிக்கு இலக்கணம் இல்லாமல் முடியாது. ஆகையால், தேசீயக் கல்வியில் இந்த இரண்டுக்குமே நான் இடம் கொடுப்பேன். இதே மாதிரி கணக்கு எழுதுவதில் நல்ல தேர்ச்சி பெற விரும்புபவன் கூட்டுவட்டிக் கணக்கை அறியாமல் முடியாது. ஆகையால், நிருபர் தன் கேள்வியில் குறிப்பிட்டுள்ள மூன்று பாடங்களும் தேசீயக் கல்வியின் பாடத் திட்டத்தில் தமக்குரிய இடத்தைப் பெறும். எல்லாக் கல்வி முறைகளுக்குமே பொதுவான அம்சங்கள் இருக்கின்றன என்பதே இதில் கவனிக்க வேண்டியதாகும். சர்க்கார் கல்வி தேசீய அபிவிருத்திக்கு இடையூருக இருப்பதால்தான், இன்று சர்க்கார் கல்வி, தேசீயக் கல்வி என்று பாகுபாடு செய்ய வேண்டியிருக்கிறது. ஆனல், சர்க்கார் பள்ளிக்கூடங்களில் உள்ள பல விஷயங்கள் நமது பள்ளிகளில் இருக்கும், இருக்கவும் வேண்டும். இரண்டுக்குமிடையே ஒரே மாதிரியான சில அம்சங்கள் இருந்த போதிலும், சர்க்கார் பள்ளிகளில் உள்ள சூழ்நிலை அடிமைத் தளைகளை பலப்படுத்துகிறது; நெருக்கடியான தருணங்களில் நம்மை அடக்குவதற்கும் உபயோகிக்கப்படுகிறது. ஆகையால், அத்தகைய பள்ளிகளைக் கைவிட வேண்டும். மேலும், அங்கு அளிக்கப்படும் கல்வியில் ஒரு பகுதியாவது முற்றிலும் அனுவசியமானது என்பதை ஏற்கனவே பார்த்தோம். அது வெறும் சுமையேயன்றி வேறில்லை. ஆனல், இப்போது விவாதத்திலிருக்கும் விஷ

யத்தை விட்டு விட்டு நான் எங்கேயோ போகிறேன். இந்தக் கேள்வியின் உள்ளர்த்தத்தை நான் புரிந்து கொள்ளாமல் இருந்திருக்கலாம் என்ற எண்ணத்தில் இந்த விளக்கத்தை நான் அளித்திருக்கிறேன்.

மேலே குறிப்பிட்ட பாடங்களுக்கும், உருதுவுக்கும் சம்பந்தமில்லை; அதைக் கற்றுக் கொள்ளுவதைத் தனியாகப் பரிசீலனை செய்யவேண்டும். ஹிந்துக்களும், முஸ்லிம்களும் இறுதியில் ஒன்று சேர்ந்துவிடுவார்கள். ஆனால், நமது தேசீயப் பள்ளிகளில் அவர்கள் இன்னும் நெருங்கி வருவதற்கு நாம் ஓயாமல் முயற்சி செய்து கொண்டே இருக்க வேண்டும். இதற்கு நாம், ஒருவருடைய மதத்தை இன்னொருவர் தெரிந்து கொள்ள வேண்டும். தாம் கற்றுக் கொள்ளும் கொஞ்ச நஞ்சம் உருதுவையும் மாணவர்கள் மறந்து விட்டால், அதை அவர்கள் உண்மையாகப் படிக்கவில்லை என்றே ஆகிறது; படித்துத் தீரவேண்டுமே என்பதற்காகத்தான் படிக்கிறார்கள். ஆனால், ஹிந்தியைப் பற்றியும் இப்படியே சொல்ல முடியும். மாணவர்களிடையே ஹிந்தி, உருதுவினிடம் எப்படி அக்கறை ஏற்படச் செய்யலாம் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்; ஆனால், தேசம் முன்னேற வேண்டுமானால், அந்த மொழிகளை அறிந்திருக்க வேண்டியது அவசியம் என்பதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை.

19. ''மாணவர்களுக்கு முழுச் சுதந்திரம் இருக்கவேண்டும்; அவர்கள் சுதந்திரமாக வளர்ச்சி பெறுவதைத் தடுக்கக் கூடிய எதுவும் இருக்கக் கூடாது. இந்த நோக்கம் ஈடேற வேண்டுமானால், ஆசிரியர்களுக்கு எதன் மீதும் விருப்போ, வெறுப்போ இருக்கக் கூடாது. ஆசிரியர்கள் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது எந்தக் கொள்கை, விதி அல்லது வழக்கத்தையும்பற்றித் தமக்கு எந்தவிதமான பாரபட்சமும் இல்லாதது போல் நடந்து கொள்ள வேண்டும். ஆசிரியரைப் பற்றிய இந்த இலக்கணம் பல இடங்களில் ஒப்புக் கொள்ளப்படுகிறது. நீங்கள் அதை ஒப்புக்கொள்ளுகிறீர்களா?''

மேலே கூறியிருப்பதை ஆதரிக்கவும் முடியும், எதிர்க்கவும் முடியும். உண்மையான சாரத்தைக் காப்பாற்றுவதற்கு அது உதவி செய்யவில்லையானால், எதிர்க்க வேண்டும்; உதவியாக இருந்தால், மாணவர்களுக்கு முழு சுதந்திரம் கொடுக்கலாம்; ஆசிரியர்களும் தம் விருப்பப்படி பற்றற்று, நடு நிலைமையுடன் இருக்கலாம். மாணவர்களின் சுதந்திரத்தைப் பெறுவதற்காக அவர்கள் விருப்பம் போல் செய்யலாம். இதற்கு ஒரே ஒரு நிபந்தனை தான் உண்டு. அதாவது மாணவர்களோடு மாணவர்களாக அவர்களும் கலந்து பழக வேண்டும்.

"உலகத்தில் உங்கள் விருப்பப்படி வாழுங்கள்; ஆனால், எப்படியும் கடவுளை அடைய வேண்டுமென்ற குறிக்கோளை உங்கள் மனத்தில் இறுத்திக் கொள்ளுங்கள்."

ஒரு லட்சிய ஆசிரியருக்கு வேறெந்த லட்சியமும் இருந்ததில்லை, இருக்கவும் கூடாது.

'நவஜீவன்' – 3—6—1928 முதல்
1—7—1928 வரை

# 19

# ஜோடானி—கோஷ்

குஜராத்தி மொழிக்கான ஒரு அகராதியை குஜராத் வித்தியா பீடம் இந்த வாரம் வெளியிட்டிருக்கிறது. வார்த்தைகளை எழுத்துக் கூட்டுவதற்கான அகராதி அது. குஜராத்தியில் இம்மாதிரி அகராதி வெளியிடப்பட்டிருப்பது இதுவே முதல் தடவையாகும். குஜராத்தியில் வேறு சில அகராதிகளும் இருக்கின்றன. ஆனால், குறிப்பிட்ட எந்தக் கொள்கையையும் அனுசரித்து, அவற்றில் வார்த்தைகளுக்கு எழுத்துக் கூட்ட முயற்சிக்கப்படவில்லை. வார்த்தைகளுக்கு நிரந்தரமான எழுத்துகள் இல்லாத மொழி, மூக்கு இல்லாத மனிதனைப் போன்றதேயாகும். ஆகையால், குஜராத்தியில் இம்மாதிரி அகராதியொன்று இருக்க வேண்டுமென்று நான் எப்போதுமே விரும்பியிருக்கிறேன். 'நவஜீவன்' பத்திரிகையைப் படிக்கும் வாசகர்களின் எண்ணிக்கை குறைவானதென்று சொல்ல முடியாது. அதே மாதிரி, மொழி, இலக்கியம் பற்றிய விஷயங்களில் வித்தியாபீடத்தை நம்பியிருப்பவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆகையால், அவர்கள் ஒரு நல்ல அகராதியில்லாமல் எப்படி இருக்க முடியும்? அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவே இந்த அகராதி தயாரிக்கப்பட்டு, வெளியிடப்பட்டிருக்கிறது.

இந்த அகராதியில் உள்ள எழுத்து இலக்கணம்தான் சரியானது, மற்றவைகளிலுள்ளவை தவறு என்று எப்படி ஒப்புக்கொள்ளுவது என்று கேட்கலாம். எது சரி, எது தவறு என்பது இங்கே கேள்வியல்ல என்பதே இதற்குப் பதிலாகும். குஜராத்தி மொழியை நன்கு அறிந்தவர்களும், இலக்கண சுத்தமான குஜராத்தியை எழுதுபவர்களும் உபயோகிக்கும் உச்சரிப்புகளையே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே, இந்த அகராதியைத் தொகுத்தவர்கள் பின்பற்றிய விதியாகும்.

குஜராத்தி மொழியில் பற்றுதல் உள்ளவர்கள், சரியான குஜராத்தி எழுத விரும்புபவர்கள், தேசீய இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டுள்ள கணக்கற்ற குஜராத்திகள் உபயோகிக்கும் உச்சரிப்பையே தாமும் உபயோகிக்க விரும்புபவர்கள், இந்த அகராதியின் பிரதியொன்றை வாங்கிக் கொள்ளுவது நல்லது.

ஆங்கில மொழியில் எழுத்துப் பிழைகள் நேருவதை விட, நம்முடைய தாய்மொழியான குஜராத்தியில் எழுத்துப் பிழைகள் நேருவதைப் பற்றித்தான் நாம் அதிகமாக வெட்கப்பட வேண்டும். இந்த அகராதி வெளியிடப்பட்ட பிறகு, வார்த்தைகளை எழுத்துக் கூட்டும் விஷயத்தில் விருப்பப்படி நடந்து கொள்ள யாருக்கும், உரிமையில்லை. என்னைப் போலவே குஜராத்தி முழுமையாகத்

தெரியாதவர்கள் யாவரும், தம்முடைய கடிதப் போக்குவரத்துக்கு இந்த அகராதியையே உபயோகிக்கும்படி சிபார்சு செய்கிறேன்.

இந்த அகராதியில் 43,743 வார்த்தைகள் இருக்கின்றன. இது எப்படி எழுதப்பட்டது, வார்த்தைகளின் எழுத்துகளை நிர்ணயிப்பதற்கு எந்த விதி கையாளப்பட்டது என்ற விவரங்களை நான் கூற வேண்டிய அவசியமில்லை. இந்த விவரங்களை வாசகர்கள் புத்தகத்திலிருந்தே தெரிந்து கொள்ளட்டும். நல்ல நிலையில் உள்ளவர்களும், மொழியில் அக்கறையுள்ளவர்களும் இந்த அகராதியின் பிரதியொன்றைத் தமது வியாபார நிர்வாகிகளிடம் கொடுத்து, அதன் உதவியுடன் குஜராத்தி எழுதும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

இந்தப் புத்தகத்தை வாசகர்கள் எப்படி வரவேற்பார்களோ என்று பிரசுரகர்த்தர்களுக்குச் சந்தேகம்; ஆகையால் முதல் பதிப்பில் 500 பிரதிகளைத்தான் அச்சடித்திருக்கிறார்கள். இது 'நவஜீவன்' பத்திரிகை சந்தாதார்களுக்குக் கூடப் போதுமானதாக இராதென்று நம்புகிறேன். ஒரு பிரதியின் அடக்கவிலை மூன்றே முக்கால் ரூபாய் ஆகிறது. ஆனால், இதன் விலையை மூன்று ரூபாயாகத்தான் வைத்திருக்கிறார்கள். 373 பக்கங்கள் கொண்ட இந்தப் புத்தகம் அழகாக 'பைண்டு' செய்யப்பட்டிருக்கிறது. குஜராத்தியில் பற்றுதல் உள்ள குஜராத்திகள் சீக்கிரத்தில் எல்லாப் பிரதிகளையும் வாங்கி, பிரசுரகர்த்தாக்களின் சந்தேகங்களை அகற்றி, அகராதியைத் தயாரித்தவர்களுடைய சேவையையும் பாராட்ட வேண்டும்.

—'நவஜீவன்' – 7—4—1929

# 20
# அபூர்வமான சாதனைகள்

தேசீயக் கல்வியைப் பற்றிப் பழைய மாணவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதையும், அவர்களுடைய கருத்துகள், பொருளாதார நிலைமை முதலியவைகளையும் பற்றி குஜராத் வித்தியாபீட மாணவர்கள் சங்கம் ஒரு விசாரணை நடத்தியது. தமது முடிவு[illegible] அவர்கள் ஒரு சிறு புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். [illegible]தப் பிரசுரம் வெளியிடப்பட்டு இப்போது ஒரு வருடமாகிறது. நான் சுற்றுப் பிரயாணம் செய்யும் போதெல்லாம் இந்தப் பிரசுரம் எப்போதும் என்னிடம் இருந்தது. ஆகையால், காலதாமதம் ஆகிவிட்டால் கூட, அந்த முடிவுகளின் சுருக்கத்தை இங்கு வெளியிடுவது பொருத்தமற்றதாக இராது என்றே நினைக்கிறேன். ஏனெனில் அதில் குறிப்பிடப்பட்டுள்ள முடிவுகள் உபயோகமானவை.

1921 முதல் 1926 வரையில் 251 மாணவர்கள் வித்தியா பீடத்தில் பட்டப் பரீட்சையில் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள். ஸிந்து, சென்னை மாகாணங்களிலிருந்து வந்தவர்களை நீக்கிவிட்டு, 200–க்கு மேற்பட்ட மாணவர்களுக்கு ஒரு கேள்வித் தாள் அனுப்பப்பட்டது. இவர்களில், இரண்டு பெண்கள் உள்பட, 82 பேர் இக்கேள்விகளுக்கு பதில் அனுப்பினார்கள். தேசீயக் கல்வியைப் பற்றிப் புரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலுள்ளவர்கள் இதைப் படிக்க வேண்டும். அவசரமாக நான் குறித்து வைத்துக் கொண்ட சிலவற்றை மட்டும்தான் நான் இங்கே கொடுக்க முடியும்:

சர்க்கார் பள்ளிக்கூடங்களை ஏன் விட்டீர்கள் என்ற கேள்விக்குக் கிடைத்த பதில்கள் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| தேசீய ஆர்வம் காரணமாக விட்டவர்கள் | ... | 33 |
| ஒத்துழையாமையில் உள்ள நம்பிக்கையினால் விட்டவர்கள் | ... | 10 |
| தேசீயக் கல்வியின் அவசியத்தில் உள்ள நம்பிக்கையினால் விட்டவர்கள் | ... | 10 |
| தேசத்தின் அழைப்புக்கிணங்க விட்டவர்கள் | ... | 11 |
| உறவினர்களின் விருப்பத்திற்கிணங்க விட்டவர்கள் | ... | 6 |
| அப்போதிருந்த சூழ்நிலையினால் உந்தப்பட்டு விட்டவர்கள் | ... | 12 |
| மொத்தம் | ... | 82 |

நான் எந்த நிலைமையில் ஒத்துழையாமை செய்தேன் என்பதைப் பற்றி அந்த மாணவர்களில் ஒருவர் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"என்னுடைய குடும்பத்தையும், சாதியையும் சேர்ந்த பெரியவர்களின் பேச்சையும், எனக்கு உதவி செய்து கொண்டிருந்த ஸ்தாபனங்களின் விருப்பத்தையும் மீறி என்னுடைய கல்லூரியை நான் விட்டேன். இதனால் சர்க்கார் கல்லூரியில் எனக்கு மாதா மாதம் கிடைத்துக் கொண்டிருந்த ரூ. 60 உபகாரச் சம்பளத்தை நான் இழந்தேன்."

வித்தியாபீடத்தின் கல்லூரிப் பிரிவாகிய குஜராத் வித்தியாலயத்தின் பழைய மாணவர்கள், வித்தியாலயத்தின் சூழ்நிலையைப் பற்றிக் கொடுத்துள்ள சில அபிப்பிராயங்கள் பின்வருமாறு:

"அங்கே எனக்கு வேண்டிய அளவுக்கு சுதந்திரம் இருந்தது. மகாவித்தியாலயம் என்னுடைய வாழ்க்கையையே அடியோடு

மாற்றிவிட்டதென்பது குறிப்பிடத்தக்க ஒரு விஷயமாகும். அதனால் எனக்கு புனர்ஜன்மம் ஏற்பட்டதென்று கூடச் சொல்லுவேன்."

''ஆரம்பத்தில் அங்கிருந்த சூழ்நிலை அரசியல் தன்மை வாய்ந்ததாக இருந்தது; பின்னர் அது மாறிவிட்டது. மொத்தத்தில் அது உன்னதமான எண்ணங்களை வளர்க்கும் விதத்தில் இருந்தது. ஆயினும், அந்த எண்ணங்களைச் செயலில் காட்டவோ அல்லது அதற்கு எங்களைத் தயார் செய்யவோ கூட வித்தியாலயம் முயற்சி செய்ததாகச் சொல்ல முடியாது.''

"அங்கிருந்த தூய்மையானதும், மதத் தன்மை வாய்ந்ததுமான சூழ்நிலையே மகாவித்தியாலயத்தின் தனிச் சிறப்பாகும்.''

''அங்கு நான் மூன்று வருடங்கள் இருந்தேன். அங்கிருந்த அவ்வளவு உன்னதமான சூழ்நிலையை இந்தியாவில் வேறெங்கும் காண முடியாதென்று நிச்சயமாகக் கூறுவேன்.''

''அங்கிருந்த சூழ்நிலை படிப்புக்கும் சரி, உயர்ந்த சிந்தனைகளுக்கும் சரி மிகவும் உதவியாக இருந்தது."

"ஒரு மனிதன் எப்படி உயர்ந்த, சீரிய வாழ்க்கையை நடத்தலாம் என்பதற்கு குஜராத் வித்தியாபீடம் நேர்பாதையைக் காட்டுகிறது. அங்கிருந்த சூழ் நிலை, உலக வாழ்க்கையில் நான் அனுபவம் பெறுவதற்கு நல்ல வாய்ப்புகளை அளித்தது. ஒருவனுடைய வாழ்க்கையில் இது எவ்வளவு முக்கியமானது என்பதைப் பார்க்கும் போது, இதை சாதாரண விஷயமாகக் கருத முடியாது.''

''சூழ்நிலை தூய்மையானதாக இருந்தது. சர்க்கார் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் உள்ள குறுகிய மனப்பான்மை அங்கே காணப்படவில்லை. எல்லோருக்கும் முழு சுதந்திரம் இருந்தது; மாணவர்களின் அறிவு வளர்ச்சிக்கு அது பெரும் உதவியாகவும் இருந்தது. அதே சமயத்தில், மாணவர்கள் முன்பு அத்தகைய சுதந்திரத்தை அனுபவித்ததில்லையாகையால் அவர்கள் அதை துஷ்பிரயோகம் செய்யவும் இடமிருந்தது."

இந்தப் பிரசுரம் தயாரிக்கப்பட்ட காலத்தில் மாணவர்கள் செய்து கொண்டிருந்த தொழில்கள் பின்வருமாறு:

கல்வி ஸ்தாபனங்களில்:

| | | | |
|---|---|---|---|
| 1. | வித்தியாபீடம் | ... | 9 |
| 2. | மற்ற அங்கீகாரம் பெற்ற தேசீயப் பள்ளிகளில் | ... | 21 |
| 3. | சர்க்கார் பள்ளிகளில் | ... | 7 |
| | மொத்தம் | ... | 37 |

தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஸ்தாபனங்களில்:

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தீண்டாதார் ஸ்தாபனங்கள் | | ... | 2 |
| 2. | பில் வகுப்பினருக்கான | ,, | ... | 2 |
| 3. | காளிபராஜ் | ,, | ... | 1 |
| 4. | தொழிலாளர் | ,, | ... | 3 |
| | | மொத்தம் | ... | 8 |

சுயேச்சையான தொழில்கள்:

| | | |
|---|---|---|
| விவசாயம், வியாபாரம் முதலியவை | ... | 11 |
| வியாபார ஸ்தாபனங்களில், காரியாலயங்களில் | ... | 18 |
| வக்கீல் தொழில் | ... | 2 |
| பத்திரிகைத் தொழில் | ... | 3 |
| எந்தக் குறிப்பிட்ட தொழிலிலும் இல்லாதவர்கள் | ... | 3 |
| ஆகமொத்தம் | ... | 82 |

82 பேர்களில் 45 பேர்கள் சமூக சேவை சம்பந்தமான வேலைகளின் மூலம் ஜீவனோபாயம் தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை வாசகர்கள் கவனிக்க வேண்டும்.

அவர்களுடைய சம்பாத்தியம் சம்பந்தப்பட்ட வரையில், யாருமே மாதம் முப்பது ரூபாய்க்குக் குறைந்து சம்பாதிக்கவில்லை.

12 மாணவர்கள் மாதம் அறுபது ரூபாய் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். மாதம் எழுபத்தைந்து ரூபாய் வருமானம் உள்ளவர்கள் 15. ஒரு மாணவர் மாதம் 200-ம், மற்றொருவர் ரூ. 130-ம், இன்னொருவர் ரூ. 125-ம் சம்பாதித்தார்கள். ரூ. 50 முதல் ரூ. 200 வரை வருமானம் உள்ளவர்கள் 57. பதினெட்டு மாணவர்கள் தம்முடைய வருமானம் பற்றிய விவரங்களை அனுப்ப முடியவில்லை; ஏனெனில், அவர்கள் சுயமாக ஏதாவது செய்து கொண்டிருந்தார்கள், அல்லது வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார்கள்.

இந்தப் பலன்கள் மிகவும் திருப்திகரமானவை என்று கூறுவது மிகையாகாது. சர்க்கார் கல்லூரிகளில் பட்டம் பெற்றவர்கள் பல இடங்களில் மாதம் முப்பது ரூபாய்க்கும் குறைவாகச் சம்பளம் பெறுவதைப் பார்க்கலாம். இங்கு மாதம் முப்பது ரூபாய் சம்பாதிப்பவர் ஒருவரே தான்; அவரும் ஒருக்கால் கட்டுப்பாட்டுக்காக அந்தச் சம்பளம் போதுமென்றிருக்கிறாரோ, என்னவோ. வெறும் சாப்பாட்டுக்கு மட்டும் கிடைத்தால் போதும் என்று வேலை செய்யத் தயாராக இருப்பவர்கள் இன்று இங்

தியாவில் படித்தவர்களிடையே பலர் இருக்கிறார்கள். மேலே குறிப்பிட்டவர்களில் 42 பேர்கள் சமூக சேவை அலுவல்களில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதைப் பார்த்தோம். இந்த லட்சியத்தைத்தான் மாணவர்கள் பின்பற்ற வேண்டுமென்று வித்தியாபீடம் விரும்புகிறது; அதாவது, உயிர்வாழ்வதற்குப் போதுமான சம்பளம் பெற்றுக் கொண்டு, ஏதாவதொரு சமூக சேவை செய்வது. ஆனால், சர்க்கார் சர்வ கலாசாலையின் லட்சியம் என்ன? அதை லட்சியம் என்று கூறலாம் என்றால் ஒரு நல்ல சர்க்கார் உத்தியோகம் பெறுவதே அங்குள்ள லட்சியமாகும். ஒரு தேசீய ஸ்தாபனம் தேசீய ஊழியர்களைத் தயார் செய்வதில் கவனம் செலுத்துகிறது; ஆனால், சர்க்கார் சர்வகலாசாலை, நாம் அடிமைகள் என்று கருதும் சர்க்கார் ஊழியர்களைத் தயார் செய்கிறது. தேசீய ஸ்தாபனத்தில் சேவையைத் தவிர வேறு எந்த விதமான உத்தியோக கவர்ச்சியும் இல்லை. ஆனால், சர்க்கார் கல்லூரியில் படிப்படியாக உயரும் சம்பளம், பின்னர் பென்ஷன் என்ற கவர்ச்சி இருக்கிறது. உண்மையான சேவையை நன்றியறிதலுடன் பாராட்டும் தன்மை ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கிறது. தமக்கு நன்மை செய்தவர்களிடம் ஒரு ஆழ்ந்த அன்பும், மதிப்பும் கொள்ள மக்கள் தவற மாட்டார்கள். ஒரு தேசீய ஊழியர் எதிர்பார்க்கக் கூடிய பென்ஷன் என்பது இந்த நம்பிக்கை ஒன்றுதான். அதனால்தான் மேலே குறிப்பிட்ட பலன்கள் மிகவும் திருப்திகரமாக இருக்கின்றன என்று நான் கருதுகிறேன். சேவை செய்வதன் மூலம் கூட, தேசீய சர்வகலாசாலைப் பட்டதாரிகள் போதிய வருமானம் பெற முடிகிறது என்பது, மேலே கொடுக்கப்பட்டுள்ள மாதாந்திர வருமானங்களிலிருந்து ருசுவாகிறது. காலம் போகப்போக, தியாக உணர்ச்சி பரவப்பரவ, மேற் கூறிய வருமானங்கள் குறையும் என்று நம்புகிறேன். வலுக்கட்டாயமாக இல்லாமல் அவர்களாகவே குறைத்துக் கொள்ளுவார்களென்றும் நம்புகிறேன். கோடிக்கணக்கான நம்முடைய மக்கள் பட்டினி கிடந்து கொண்டிருக்கும் வரையில், ஒரு ரூபாயில் காலம் தள்ளக் கூடியவன் இரண்டு ரூபாயை எடுத்துக் கொண்டால், உண்மையில் திருட்டுக் குற்றம் புரிந்தவனாகிறான்.

"உங்களுடைய வாழ்க்கையில் நீங்கள் எந்த வேலையைச் செய்ய அதிகம் விரும்புவீர்கள்?" என்ற கேள்விக்குக் கிடைத்த பதில்களில் சில பின்வருமாறு :

"தேசத்திற்கும், சமூகத்திற்கும் விடுதலை பெறுவதற்கான போராட்டத்தில் ஒரு போர் வீரனாக இருக்க விரும்புகிறேன்!"

"தேசத்திற்கு சேவை செய்யக் கூடிய எந்த நடவடிக்கையிலும் பங்கு கொள்ள விரும்புகிறேன்."

"கல்வி, கதர், இரண்டிலும் ஈடுபட விரும்புகிறேன்."

"தீண்டாமை விலக்கு அல்லது கிராமங்களிலுள்ள ஆரம்பப் பள்ளிகள் அல்லது மத்திய தரப் பள்ளிகளில் வேலை செய்ய விரும்புகிறேன்."

"மக்களுக்கு ஏதாவது ஒருவிதத்தில் சேவை செய்ய வாய்ப்பு கிடைத்தால், என் வாழ்க்கையில் நான் செய்ய வேண்டிய கடமையைச் செய்தேன் என்ற திருப்தி யடைவேன்."

தேசீயக் கல்வியின் உயர்வையும், அதிலுள்ள பல அனுகூலங்களையும் குஜராத்தி வித்தியாபீடத்தைச் சேர்ந்த இந்த மாஜி பட்டதாரிகள் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆயினும், இப்போதுள்ள தேசீயக் கல்வி அரைகுறையானதாக இருக்கிறதென்றும், அதில் தங்களுக்கு முழுத் திருப்தி ஏற்படவில்லை என்றும் சொல்ல அவர்கள் தயங்கவில்லை.

1926-ஆம் வருஷம் வரையில், நூல் நூற்பதில் உள்ள தியாகத்தைச் சிலர்தான் அறிந்திருந்தார்கள் என்பதைப் பின் கண்ட புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.

| | | |
|---|---|---|
| ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் அல்லது அதற்கும் அதிகமாக நூற்பவர்கள் | — | 5 |
| அரை மணி நேரமே நூற்பவர்கள் | — | 10 |
| மாதம் 1000 கஜம் நூற்பவர்கள் | — | 9 |
| விட்டு விட்டு நூற்பவர்கள் | — | 9 |
| நூற்காமலே இருந்தவர்கள் | — | 49 |
| மொத்தம் | | 82 |

என்னைப் போன்றவர்கள் ஒரு பெரிய யக்ஞம் என்று கருதுவதும், முக்கியமானது என்று ஒரு தீர்மானத்தின் மூலம் காங்கிரஸ் அங்கீகரித்திருப்பதுமான இந்த விஷயத்தில் காட்டப்பட்டுள்ள அசட்டை ஏமாற்றம் அளிப்பதாகத்தானிருக்கிறது. ஆனால், 1920-க்குப் பிறகு நிலைமை அபிவிருத்தி யடைந்திருக்கிறது என்று எனக்குத் தெரியும். அதில் எனக்குத் திருப்தி தான்.

முற்றிலும் கதரையே அணிந்தவர்கள் 56 பேர்கள். இந்த எண்ணிக்கை குறைவானதுதான். ஆயினும் ஒன்றுமே இல்லாமலிருப்பதற்கு இது மேல் என்றே நினைக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மற்றவர்களும் கதரை உபயோகித்தார்கள். கதரை உபயோகிக்காதவர்கள் தங்களுடைய கஷ்டங்களைப் பற்றிப் பின் வருமாறு கூறுகிறார்கள் :

"கதர் மிகவும் எளிமையானதாக இருக்கிறது ; ஆகையால், எங்களுக்கே மதிப்பு கொடுக்காத மக்களிடையே நாங்கள் வேலை

செய்யவேண்டியிருக்கிறது. இதனால் எங்களுக்கு வேலை குறைகிறது. வருமானமும் குறைகிறது.''

'' கதரின் விலை அதிகமாக இருக்கிறது. அது கிடைப்பதும், கஷ்டமாக இருக்கிறது. மெல்லிய மில் துணியில் உள்ள மோகமும் ஒரு தடையாக இருக்கிறது.''

'' தயாராகத் தைத்து வைக்கப்பட்ட மில் துணிகள், கடைகளில் எவ்வளவு வேண்டுமானாலும் மலிவாகக் கிடைக்கிறது. கதரின் விஷயம் அப்படியில்லை.''

தாங்கள் ஏன் கதர் அணியவில்லை என்பதற்கு இத்தகைய சாக்குப் போக்குகள் சொல்லப்படுவதிலிருந்தே, பட்டினி கிடக்கும் ஏழைகளுக்கு கதர் எவ்வளவு பெரிய உதவியாக இருக்கிறது, நமது சுதந்திரப் போராட்டத்திற்கு அது எவ்வளவு பெரிய உதவியாக இருக்கிறது என்பதைப் பலர் புரிந்துகொள்ளவில்லை என்பது விளங்குகிறது. சங்கடங்களையும், கஷ்டங்களையும் அனுபவிக்காமல் இந்த உலகத்தில் எந்த நாடுமே சுதந்திரம் பெற்றதில்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் புத்தகத்தைப் படிப்பவர்கள், தேசீயப் பள்ளிகளும், கல்லூரிகளும் நாட்டுக்கு மிகுந்த நன்மை செய்திருக்கின்றன, இன்று நமது மாணவர்களிடையே காணப்படும் உறுதிக்கு இந்த ஸ்தாபனங்கள் தான் மூல காரணம் என்ற முடிவுக்குத்தான் வருவார்கள் என்று நினைக்கிறேன். குஜராத் வித்தியாபீடத்தைப் பற்றி மேலே கொடுக்கப்பட்டுள்ள அதே அனுபவம், காசி வித்தியாபீடத்தைப்பற்றியும் எனக்கு உண்டு. ஜமியா மில்லியா, பீகார் வித்தியாபீடம் ஆகியவற்றின் வேலைகளைப் பரிசீலனை செய்து பார்த்தாலும், இது போலவேதான் இருக்குமென்று நம்புகிறேன்.

—' நவஜீவன் ' – 27–10–1929.

## 2

குஜராத் வித்தியாபீட பட்டதாரிகள் சங்கத்தின் காரியதரிசியான ஸ்ரீ ஜிதாலால் ஜீவன்லால் காந்தி பின்வருமாறு எழுதுகிறார் ;

'' உங்களுடைய கட்டுரையில் ('அபூர்வமான சாதனைகள்') நீங்கள் குறிப்பிட்டிருந்த புத்தகம் வெளியானதற்குப் பிறகு, மேற்கொண்டு சில தகவல்கள் கிடைத்திருக்கின்றன. ஆகவேதான் இதை எழுதுகிறேன்.

'' அந்தப் புத்தகம் வெளியாகி ஒரு வருடம் ஆகிவிட்டதென்று குறிப்பிட்டிருந்தீர்கள். உண்மையில் அது வெளியாகி

இரண்டு வருடங்கள் ஆகிவிட்டன. நீங்கள் பெங்களூரில் இருந்த போது அதை உங்களுக்கு அனுப்பினோம்.

"அந்தப் புத்தகம் வெளியான பிறகு கிடைத்த தகவல்கள் பின்வருமாறு :

"பட்டப் பரீட்சைகளில் தேர்ச்சி பெற்ற (சென்ற வருடாந்திரப் பரீட்சைக்குப் பிறகு வரையில்) மாணவர்களின் எண்ணிக்கை 297. அவர்களில் 200 பட்டதாரிகளைப்பற்றி சங்கத்திற்கு ஏதோ சில தகவல்கள் கிடைத்துள்ளன. குறைந்தபட்சம் 120 பட்டதாரிகளாவது கதரை உபயோகிக்கிறார்கள் என்று அந்தத் தகவலைக் கொண்டு நிச்சயமாகச் சொல்லலாம். மில் வேஷ்டிகளை உபயோகிப்பவர்கள் இதில் சேர்க்கப்படவில்லை.

"நூற்பது சம்பந்தப்பட்ட வரையில், எல்லோருமே சர்க்கா சங்கத்தின் அங்கத்தினர்களாக இல்லாவிட்டாலும் கூட, குறைந்த பட்சம் ஐம்பது பேர்களாவது தினசரி ஒழுங்காக நூற்கிறார்கள் என்று சொல்லலாம்; இது மாதம் ஆயிரம் கஜம் அல்லது அதற்குக் குறைவாக நூற்பவர்களைத் தவிர மற்றவர்களையே குறிப்பிடுகிறது.

"பட்டதாரிகள் ஈடுபட்டிருக்கும் வேலைகளைக் கவனிக்கும் போது, சுமார் 100 பேர்கள் கல்வி அல்லது வேறு இதர சமூக சேவை செய்யும் ஸ்தாபனங்களில் இருக்கிறார்கள் என்பது தெரிகிறது. அவர்களைப் பின்வருமாறு பிரிக்கலாம் :

தேசீய வேலைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் :

| | | |
|---|---|---|
| குஜராத் வித்தியாபீடம் | ... | 14 |
| தேசீயப் பள்ளிகள் | ... | 11 |
| பர்தோலி தாலுக்காவிலுள்ள ஆசிரமங்களில் | ... | 5 |
| தொழிலாளர் நல ஸ்தாபனங்களில் | ... | 5 |
| அந்த்யஜ சேவா மண்டலம் (ஹரிஜன முன்னேற்ற சங்கம்) | ... | 4 |
| உத்தியோக மந்திரம் (கிராமக் கைத்தொழில்களில் ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருக்கும் ஸ்தாபனம்) | ... | 3 |
| பில் சேவா மண்டலம் (பில் வகுப்பினர் முன்னேற்ற சங்கம்) | ... | 2 |
| சர்க்கா சங்கம் | ... | 2 |
| மற்றும் இதர வகைகளில் | ... | 6 |
| | | 52 |
| பத்திரிகைகளில் | ... | 11 |
| மற்ற ஸ்தாபனங்களில் | ... | 22 |
| சர்க்கார் பள்ளிகளில் | ... | 8 |

"மற்ற பட்டதாரிகள் சொந்த வியாபாரம், விவசாயம் முதலியவற்றில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

"தேசீயக் கல்வி ஸ்தாபனங்களில் வேலை செய்பவர்களில் சிலர் அந்த ஸ்தாபனங்களில் ஆயுள் அங்கத்தினர்களாகவும் இருக்கிறார்கள்.

"பத்திரிகைகளில் வேலை செய்பவர்களில் மூவர் ஆசிரியர்களாக இருக்கிறார்கள்.

"மற்ற ஸ்தாபனங்கள் என்ற இனத்தில் மாணவர் விடுதிகள், தேசீயக் கல்வி ஸ்தாபனங்கள், தனிப்பட்ட பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் ஆகியவைகளும் சேர்ந்திருக்கின்றன.

"எட்டு பட்டதாரிகள்தான் சர்க்காருடன் நேரடியான சம்பந்தம் உள்ள பள்ளிக்கூடங்களில் வேலை செய்கிறார்கள்.

"தனியார் அல்லது சர்க்கார் உத்தியோகங்களில் உள்ளவர்கள் எப்போதுமே அங்கு இருக்க வேண்டுமென்று விரும்பவில்லை. மனத்திற்குப் பிடித்தமில்லாமலும், துரதிருஷ்டவசமான நிலைமை காரணமாகவும் அவர்கள் அந்த உத்தியோகங்களை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். சொந்தமாக ஒரு தொழில் செய்யக்கூடிய வாய்ப்பு கிடைத்தவுடன் அவர்கள் அந்த வேலைகளை விட்டுவிட உத்தேசித்திருக்கிறார்கள். உத்தியோகம், தொழில் ஆகியவைகளில் இருப்பவர்கள்கூட, நாட்டின் நலன்களுக்கு விரோதமாக இருக்கக் கூடிய எதையும் செய்ய விரும்பவில்லை.

"கதர் சம்பந்தப்பட்டவரையில், தனது கொள்கை என்ன என்பதை சங்கம் ஏற்கனவே தெளிவாக்கியிருக்கிறது. இது சம்பந்தமாக சங்கம் பின்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது.

"எப்போதும் சுத்த கதரையே உபயோகிப்பவர்களும், குஜராத் வித்தியாபீடத்தின் மாஜி பட்டதாரிகளும், மகாவித்தியாலயத்தின் மாஜி மாணவர்களும், பழைய பட்டதாரிகள் வோட்டர் சங்கத்தின் உறுப்பினர்களும் மட்டுமே இந்தச் சங்கத்தில் அங்கத்தினர்களாக இருக்கலாம்.

"சர்க்கார் தொடர்பு சம்பந்தப்பட்டவரையில் சங்கம் பின்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது:

"வித்தியாபீடத்தின் பட்டதாரி அல்லது மாஜி மாணவர் யாரும் மகாவித்தியாலயத்தை விட்ட பிறகு சர்க்கார் பட்டப் படிப்பில் சேர்ந்தால், அல்லது எந்த சர்க்கார் இலாகாவிலாவது உத்தியோகம் ஏற்றுக்கொண்டால், அவர் பட்டதாரிகள் சங்கத்தில் அங்கத்தினராகச் சேர முடியாது.

"மேற்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றிய பிறகு கூட சங்கம் எதையும் இழந்துவிடவில்லை. இந்த வருஷம் சங்கத்தில் அங்கத்தினர்களாகச் சேருவதற்கு 76 பேர்களிடமிருந்து விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. மேற்கூறிய தீர்மானங்கள் நிறைவேற்றப்படுவதற்கு முன்பு சங்கத்தில் அங்கத்தினர்களாகச் சேர்ந்தவர்களில் பத்து பேர்கள்தான் இந்தத் தீர்மானங்கள் காரணமாக வெளியேற வேண்டியிருந்தது. இந்தத் தீர்மானங்கள் காரணமாக சங்க அங்கத்தினர்களின் எண்ணிக்கை 66–ஆகக் குறைந்துவிட்டது. கடந்த வருடங்களின் விவரங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இது கணிசமான முன்னேற்றம்தான்.

"மொத்தம் எவ்வளவு அங்கத்தினர்கள் இருந்தார்கள், எவ்வளவு பேர்கள் கதர் அணிந்தார்கள் என்ற விவரங்கள் முறையே கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | | மொத்த அங்கத்தினர்கள் | கதர் அணிந்தவர்கள் |
|---|---|---|---|
| முதல் வருடத்தில் | ... | 23 | 21 |
| இரண்டாவது வருடத்தில் | ... | 73 | 55 |
| மூன்றாவது வருடத்தில் | ... | 60 | 53 |
| நாலாவது வருடத்தில் | ... | 76 | 69" |

தேசீயக் கல்வியின் பலன்களைப்பற்றி என்னுடைய முதல் கட்டுரையில் நான் கூறியதை இந்தக் கடிதம் ஊர்ஜிதம் செய்கிறதென்பதை வாசகர்கள் பார்க்கலாம். நாட்டிலுள்ள சூழ்நிலை நன்றாக இருந்தால், நமது இளைஞர்களுக்கு உற்சாகம் இருந்தால், தேசீயப் பள்ளிகளில் மாணவர்கள் நிறைந்திருப்பார்கள். தேசீயப் பள்ளிகளில் உயிர்த் துடிப்பு இருக்கிறது. வேறு ஒன்றுமில்லாவிட்டாலும்கூட, மாணவர்களிடையே தன்னம்பிக்கையையும், சேவை உணர்ச்சியையுமாவது அது உண்டாக்குகிறது.

நூல் நூற்றல், கதர் அணிதல் ஆகியவற்றில் காணப்படும் முன்னேற்றமும் திருப்திகரமானதாகவே கருதப்பட வேண்டும். ஆனால், என்னைக் கேட்டால், இன்னும் அபிவிருத்திக்கு இடமிருக்கிறது என்றே சொல்லுவேன். கொஞ்ச காலமாவது ஒரு தேசீயப் பள்ளியில் இருந்த யாரும் கதர் அணியும் விஷயத்தில் அரைகுறை மனத்துடன் இருக்க முடியாது. உதாரணமாக, ஒரு சீருடையின் (uniform) ஒரு பகுதியை ஒருவர் அணிந்து கொள்ளாவிட்டால், அவர் சீருடை அணிந்திருப்பதாகச் சொல்ல முடியாது. தேசீயப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் கதர்தான் அங்கீகரிக்கப்பட்ட சீருடை என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு நேர் கோணத்திற்கும் 90 டிகிரி இருக்கிறது. ஒரு தேசீயக் கல்லூரியின் பட்டதாரி உபயோகிக்க வேண்டிய சீருடை விஷயமும் அப்படிப் போன்றதுதான். சீருடை என்றால் உடைக்கு உபயோகிக்கப்படும் துணியின் ரகம் என்றே நாம்

அர்த்தப்படுத்திக்கொள்ளுகிறோம். எந்த ரகமான துணியை அணிய வேண்டும் என்பதில் கட்டுப்பாடு இல்லை. அதுதான் சரி என்று நான் நினைக்கிறேன். பழைய காலத்தில் நமது குருகுலங்களில் இருந்த பழக்கம்தான் இன்று மேல் நாடுகளிலுள்ள பிரபல பள்ளிகளில் நிலவுகிறது. அதற்கு நல்ல ஆதாரம் இருக்கிறதென்றே நான் நினைக்கிறேன்.

பட்டதாரிகள் கதரில் இன்னும் போதிய அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. ஏனெனில், அதன் மதிப்பை அவர்கள் இன்னும் பூராவாகப் புரிந்துகொள்ளவில்லை. அவர்கள் புரிந்துகொண்டால், ஒவ்வொரு மாதமும் நன்கு முறுக்கேற்றப்பட்ட அருமையான நூலை நூற்றுக் குவிக்கலாம்; இதற்கு அதிக நேரமும் ஆகிவிடாது. "தாமே நூற்ற கதர் நூலில்தான் சுயராஜ்யம் இருக்கிறது" என்பதை அவர்கள் உறுதியாக நம்பாதவரையில், நூல் நூற்பதிலும் கதரிலும் அவர்கள் அந்த அளவுக்கு முழு அக்கறை காட்டும் வரையில் நாம் காத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்.

—'நவஜீவன்' - 17—11—1929

# 21

# தேசீயப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளின் பணி

அந்நியத் துணிகளின் பகிஷ்காரத்தினால் ஏற்படக்கூடிய பலன்களைப் பற்றியோ அல்லது கதரின்மூலம் எவ்வளவு பேர்களுக்கு அறிவூட்ட முடியும் என்பதைப் பற்றியோ ஒரு சாதாரண மனிதன் கற்பனை செய்து பார்க்க முடியாது. பிஜோலியாவில் பணியாற்றிக் கொண்டிருக்கும் பாய் ஜிதாலால் கோவிந்த்ஜி இத்துறையில் அங்கு செய்யப்படும் வேலைகளைப்பற்றித் தம்முடைய அனுபவங்களை அவ்வப்போது எனக்கு எழுதுவதுண்டு. மேலே நான் கூறியதன் அர்த்தத்தை வாசகர்கள் எளிதில் புரிந்து கொள்ளுவதற்காக அவருடைய சில கருத்துகளைச் சுருக்கமாகக் கொடுக்கிறேன்.

"நம் நாட்டிலுள்ள 22 கோடி விவசாயிகளும் கதரை உபயோகிக்க ஆரம்பித்த பிறகுதான், அந்நியத் துணி பகிஷ்காரம் வெற்றி பெறும். அவர்களைக் கதர் அணியச் செய்வதென்றால், கதரின் தத்துவத்தை அவர்களுக்கு விளக்கவேண்டும்; தமக்குத் தேவையான துணிமணிகளைத் தாமே உற்பத்தி செய்து கொள்ளுவதிலுள்ள அனுகூலங்களை அவர்களுக்குக் காட்ட வேண்டும். கதர் உற்பத்தி பற்றிய முழு விவரங்களையும் அவர்களுக்குக்

கற்றுக் கொடுக்கவேண்டும். இந்த வேலையைச் செய்வதற்கு நமக்குத் தொண்டர்கள் வேண்டும்; நடமாடும் பள்ளிக்கூடங்கள் வேண்டும்; நூல் நூற்றல், பஞ்சு பட்டைபோடுதல் முதலியவை களைப் பற்றிச் சிறு புத்தகங்கள் தயாரித்து விநியோகிக்க வேண்டும்.''

நான் சுருக்கமாகத்தான் கூறியிருக்கிறேன். மேலே கூறியிருப் பதில் விட்டுப்போனவைகளை வாசகர்களே பூர்த்தி செய்து கொள்ளுவார்களாக. பகிஷ்கார திட்டத்தின்மூலம் எவ்வளவு பேர்களுக்கு விஷய அறிவு ஊட்டலாம் என்பதை அவர்களே கற்பனை செய்து பார்ப்பார்களாக.

இந்தக் கல்வியை யார் அளிப்பது? கல்வித் துறையாளர்கள் தம்முடைய கல்வித் திட்டத்தில் இதற்கு என்ன இடம் அளிப் பார்கள்? இப்போதுள்ள ஆங்கில முறையின் கீழ் கல்வி பயின்று பதப்பட்டவர்கள், இதற்கு நிச்சயமாக இடம் கொடுக்க மாட்டார்கள்; ஏனெனில், இப்போதுள்ள ஆட்சியை அவர்கள் பாதுகாத்தாக வேண்டும். ஆகையால், இந்தியாவில் கிஸான் ராஜ்யம் ஏற்பட வேண்டுமென்று விரும்பும் தேசீய மனப்பான் மையுள்ள கல்வித் துறையாளர்கள்தான் இதை எடுத்துக் கொண்டு, தம்முடைய நடவடிக்கைகளின் கேந்திரமாக இதைச் செய்ய வேண்டும். இது சரியான கருத்துதான் என்றால், மேலே குறிப்பிட்டது போன்ற கல்வியை அளிப்பது தேசீயப் பள்ளிகள் கல்லூரிகளின் கடமையாகும். அதாவது, அதைப் பரப்புவதற்கு அவர்கள் ஊழியர்களைத் தயார் செய்ய வேண்டும். இத்தகைய பயிற்சியே தேசீய ஊழியர்களின் எல்லா வேலைகளுக்கும் அடிப் படையாக இருக்க வேண்டும்; இலக்கியக் கல்விபெற விரும்பும் மாணவனுக்கு அகர வரிசையைக் கற்றுக்கொள்ளுவது எவ்வளவு முக்கியமானதோ, அது போலவே இதுவும் இருக்க வேண்டும்.

எல்லாக் கலைகளுமே சுவாரஸ்யமானவைதாம். குறிப்பிட்ட ஒரு கலைதான் சுவாரஸ்யமாக இருக்கிறது என்றும், மற்றவை அப்படி இல்லையென்றும் ஒருவன் சொன்னால், அவன் சொல்லு வது அவனுக்கே தெரியாது என்றுதான் அர்த்தம். ஒன்றைச் செய்யத் தெரிந்திருப்பதற்கும், அதை ஏன் செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்று தெரிந்திருப்பதற்குமிடையே நிறைய வேற்றுமை இருக்கிறது. தோலைப் பதம் செய்பவருக்கு, தோலைப்பதனிடத் தெரியும், அதற்கு வர்ணம் கொடுக்கத் தெரியும். அதனால் அவர் ரசாயன வாதியாகிவிடமாட்டார். ரசாயன வாதிக்கு சாஸ்திர பூர்வமான அறிவு உண்டு. ஆனால், பதனிடுபவர் தலைமுறை தலைமுறையாக அளிக்கப்பட்டு வந்துள்ள ஒரு முறையை யந்திரம்போல் அறிந்திருக்கிறார். அந்த முறைகளைப் பின்பற்றி அவர் தமது ஜீவனத்திற்குச் சம்பாதித்துக் கொள்ளு கிறார். ஆனால், அவர் விரும்பினால், வாய்ப்பு கிடைத்தவுடன் இப்போதைய தொழிலை விட்டுவிடுவார். மற்றத் தொழில் செய்ப

வர்களின் விஷயமும் அப்படித்தான். ஆனல், ஒரு விஞ்ஞானிக்குத் தன்னுடைய குறிப்பிட்ட அறிவில் ஒரு ஆனந்தம் இருக்கிறது. அவர் புதிது புதிதாகக் கண்டு பிடித்து, தமது அறிவு வளர உதவி செய்கிருர். நெசவை ஒரு தொழிலாக வைத்துக் கொள்ளுவதிலும், நெசவை ஒரு கலையாகக் கருதுவதிலும் கூட இந்த வேற்றுமை இருக்கிறது. ஆனல், நெசவு என்பது, புதிய விஷயங்களைக் கண்டு பிடித்து, ஒழுங்குபடுத்தப்பட வேண்டிய் ஒரு கலை என்பதை ஒப்புக்கொள்ள மக்கள் இன்னும் தயாராக இல்லை.

எல்லாக் கலைகளும், ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரே மாதிரி முக்கியத்துவம் கொண்டதாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை, அது சாத்தியமுமில்லை. ஸஹாரா பாலைவனத்திலுள்ளவர்களுக்கு கப்பலோட்டும் கலை தெரியாது. அதே மாதிரி, பலர் தீமை என்று கருதும் குதிரைப் பந்தயமும் ஒரு கலை என்பது இந்தியாவில் கோடிக்கணக்கானவர்களுக்குத் தெரியாது. ஆனல், அதைப் பற்றிப் புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அதற்கென்றே விசேஷ பாஷையும் வளர்ந்திருக்கிறது. உபயோகமாக உள்ள ஒன்றை ஏற்றுக்கொண்டு, அதை அபிவிருத்தி செய்கிருர்கள் என்பதே இதன் அர்த்தமாகும். ஸஹாரா பாலைவனத்திற்கும் கடல் வந்து அதில் ஒரு பகுதியை மூழ்கடித்து, மற்ற தேசங்களுடன் வர்த்தகம் நடத்துவதற்கு அதை அவர்கள் பயன்படுத்திக் கொள்ள விரும்பினல், அந்தப் பாலைவனத்தில் இருப்பவர்களும் கப்பல் போக்குவரத்துக் கலையில் அக்கறை எடுத்துக் கொள்ளுவார்கள். அப்போது கப்பல் போக்குவரத்தும் அவர்களுடைய பாடத் திட்டங்களில் இடம் பெறும். சுருங்கக் கூறுமிடத்து, நாம் எந்தக் கலையை ஏற்றுக் கொண்டு, அபிவிருத்தி செய்ய விரும்புகிருேமோ, அது நமக்கு பயனுள்ளது என்பதை உணர வேண்டும். ராட்டையில் உள்ள மகத்தான சக்தியை மக்கள் உணர்ந்து விட்டால், எழுத்தாளர்களும், சிந்தனையாளர்களும் அதனல் கவரப்பட்டுவிடுவார்கள். பின்னர் அதில் அவர்கள் கவிதையையும், கலையையும் காண்பார்கள்; இந்தியாவின் பொருளாதார அபிவிருத்திக்கு அது எவ்வளவு உதவக் கூடும் என்பதையும், மேலும் பல விஷயங்களையும் காண்பார்கள்.

நமது தேசீயப் பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும் இரண்டு வேலைகளைச் செய்ய வேண்டும். அவை தாமே ராட்டையில் வேலை செய்ய வேண்டும்; சமூகத்திலும் அதற்கு ஆதரவான ஒரு சூழ்நிலையைத் தோற்றுவிக்க வேண்டும். மாறுதல் ஏற்படும் இடைக் காலத்தில், தேசீயக் கல்வி பாதிக்கப்படத்தான் செய்யும். எல்லா நாடுகளிலுமே அப்படி நடக்கிறது. ராட்டையின் தத்துவத்தை நன்கு விளக்கி, மக்களிடையே அதைப் பரவச்செய்வது தான் நமது தேசீய ஸ்தாபனங்களும், வித்தியாபீடங்களும் இந்தியாவில் செய்ய வேண்டிய மிகப் பெரிய வேலை என்று நான் கருதுகிறேன்.

—'நவஜீவன்' - 21—4—1929

## 2

தேசீயக்கல்வியில் எனக்குள்ள நம்பிக்கை நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருகிறது. தேசீய ஸ்தாபனங்களில் படித்துவிட்டு வெளியே போகும் மாணவர்கள் சிறந்த முறையில் நடந்து கொள்ள வேண்டுமென்றே நான் எதிர்பார்க்கிறேன். சுதந்திரப் போராட்டத்தில் அவர்கள் முன்னணியில் இருக்க வேண்டும்.

உங்களுடைய பள்ளிக்கூடங்கள் அல்லது கல்லூரிகளை, சர்க்கார் பள்ளிகள் அல்லது கல்லூரிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நிச்சயமாக ஏமாற்றமடைவீர்கள். இரண்டும் வெவ்வேறு விதமானவை. உங்களுக்குச் சொந்தமாக அரண்மனை போன்ற கட்டிடங்கள் இல்லை. நல்ல சம்பளம் பெறுபவர்களும், நன்கு கற்றறிந்தவர்களுமான பேராசிரியர்களும், ஆசிரியர்களும் மக்களைச் சுரண்டி வாழும் சர்க்கார் ஸ்தாபனங்களில் இருக்கிறார்கள். அதெல்லாம் உங்களுக்குக் கிடைக்காது. உங்களிடம் நிதி வசதியிருந்தால் கூட இதெல்லாம் உங்களுக்குக் கிடைக்காது. குமாஸ்தாக்களை உற்பத்தி செய்வது, ஒரு அந்நிய ஆட்சி நடைபெறுவதற்கு உதவி செய்யக்கூடிய மற்றவர்களைத் தயாரிப்பது ஆகியவைதான் முக்கியமாக சர்க்கார் ஸ்தாபனங்களின் நோக்கமாகும். ஆனால், தேசீய ஸ்தாபனங்களின் நோக்கம் இதற்கு நேர்மானது. குமாஸ்தாக்கள் போன்றவர்களை உற்பத்தி செய்வது அவற்றின் நோக்கமல்ல; என்ன நேர்ந்தாலும், கூடிய சீக்கிரத்தில் அந்நிய ஆட்சிக்கு முடிவு கட்டிவிட வேண்டுமென்ற உறுதி கொண்டவர்களைத் தயாரிப்பதே அவற்றின் நோக்கமாகும். சர்க்கார் ஸ்தாபனங்கள் அந்நிய சர்க்காரிடம் விசுவாசமாக நடந்துகொள்ள வேண்டும் என்பது இயற்கையே. தேசீய ஸ்தாபனங்கள் தேசத்தினிடம்தான் விசுவாசமாக இருக்க முடியும். சர்க்கார் ஸ்தாபனங்களில் படித்தால் நல்ல வருவாயுள்ள வேலைகள் கிடைக்கலாம் என்ற வாய்ப்பு இருக்கிறது. ஆனால், முழுசேவைக்குக் கூட தேசீய ஸ்தாபனங்களில் வெறும் ஜீவனத்திற்குப் போதுமானதுதான் கிடைக்கும். மூன்று விதமான கடன்களைத் தீர்ப்பதாக இப்போதுதான் நீங்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டீர்கள். மாக்ஸ் முல்லர் ஞாபகப்படுத்தியிருப்பது போல், நமக்கு வாழ்க்கை என்பது கடமையாக இருக்கிறது. கடமையை ஒழுங்காகச் செய்வதில் உரிமைகளும் இருக்கின்றன; ஆனால், உரிமைகளில் கண் வைத்துக்கொண்டே தன் பொறுப்புகளை நிறைவேற்றுபவன் அவற்றைச் சரிவர நிறைவேற்றுவதில்லை; பல சமயங்களில் அவன் எதிர்பார்த்திருக்கக் கூடிய உரிமைகளைப் பெறவும் தவறி விடுகிறான்; அல்லது அந்த உரிமைகளைப் பெற்றாலும் கூட, அவை சுமையாகக் கூட ஆகி விடுகின்றன. ஆகையால், உங்களுடைய உரிமை சேவை ஒன்றுதான். நாட்டுக்கு சுதந்திரம் பெறுவதில் உங்கள் கடமையை நீங்கள் செய்துமுடிக்கும் வரையில் உங்களுக்கு ஓய்வு என்பதே

இருக்க முடியாது. சர்க்கார் கல்வி ஸ்தாபனங்களுக்கும், உங்களுடைய சொந்த ஸ்தாபனங்களுக்குமிடையே உள்ள இந்த அடிப்படையான வேற்றுமையை நீங்கள் புரிந்துகொண்டால், நம் ஸ்தாபனங்களில் சேர்ந்ததைக் குறித்து நீங்கள் வருந்தவே மாட்டீர்கள்.

—'எங் இந்தியா' – 10—10—1929

# 22

# மிகவும் சுருக்கு வழி

சிறைக்குச் செல்லுவதைவிட இன்னும் கடுமையான சோதனை எங்களுக்கு இருக்கிறது. திருடர்கள், கொள்ளைக்காரர்கள்கூடச் சிறைக்குப் போகலாம், அங்கே போய் அவர்கள் சௌக்கியமாக இருக்கிறார்கள். ஆனால், சிறை செல்வதன் மூலம் அவர்கள் தேசத்திற்குச் சேவை செய்யவில்லை. சிறை செல்வதோடு மட்டும் நிறுத்திக்கொள்ளும் ஒருவர், தேசத்திற்கு சேவை செய்வதில்லை. நீங்களாக மனமுவந்து, போராட்டத்திற்காகப் பலனை எதிர்பாராத தியாகம் செய்யத் தயாராக இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். நம்மைச் சுற்றி பலாத்காரம் அதிகமாக இருக்கிறது. என்னைச் சிறைக்கு அனுப்பிவிட்டால் அப்போது பலாத்காரம் தலைதூக்கினால், அந்தத் தீயில் குதித்து உங்களையே நீங்கள் தியாகம் செய்துகொள்ள வேண்டியிருக்கும். சத்தியம், அகிம்சை வழியின்படியே நடப்போம் என்று எடுத்துக்கொண்டுள்ள பிரதிக்ஞைக்கு நீங்கள் உண்மையாக நடந்து கொள்ளுவதானால், பலாத்காரமோ, தீயிடுதலோ நடைபெறும் போது வீட்டுக்குள் போய் ஒளிந்துகொள்ளமாட்டீர்கள்; அல்லது நீங்களும் அதில் தீவிரமாகப் பங்குகொள்ளமாட்டீர்கள். அந்தப் பெரும் தீயை அணைப்பதற்காக நீங்கள் அங்கு விரைந்து ஓடுவீர்கள். உங்களிடமிருந்து அத்தகைய நடத்தை நிச்சயமாக எதிர்பார்க்கப்படும். பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் கூட உங்களிடமிருந்து வேறு எதையும் எதிர்பார்க்க மாட்டார்கள். நல்ல குணத்திற்கு தீமை தலைவணங்கும்; சுற்றிலும் தீமையே நிறைந்திருக்கும்போது கூட, நற்குணம் வாய்ந்தவர்கள் அவர்களுடைய உயர்ந்த ஸ்தானத்திலிருந்து கீழே இறங்கிவிடக் கூடாதென்றே தீயவர்களும் எதிர்பார்ப்பார்கள்.

சிறையை நோக்கிச் செல்லுவதற்கு நீங்கள் தயாராகத்தான் இருப்பீர்கள்; ஆனால், நீங்கள் சிறைக்குப் போக வேண்டியிருக்கும் என்று நான் நினைக்கவில்லை. இப்போது நான் சித்திரித்துக் காட்டிய, இன்னும் உயர்வானதும், கடுமையானதுமான

சோதனை உங்களை எதிர் நோக்கியிருக்கிறது. சட்ட மறுப்பு இயக்கம் எந்த உருவத்தில் இருக்கப்போகிறது என்று எனக்குத் தெரியாது; ஆனால், பலனளிக்கத் தக்க ஒரு வழியை நான் தேடிக்கொண்டிருக்கிறேன்.

முடிந்தால் அகிம்சை, சத்தியத்தின் மூலமே நமது லட்சியத்தை அடைந்துவிட வேண்டுமென்று நான் துடித்துக்கொண்டிருக்கிறேன். அகிம்சையையும், சத்தியத்தையும் பலி கொடுக்காமல் நம்முடைய லட்சியத்தை அடைய முடியாது என்றால், எவ்வளவு காலத்திற்கு வேண்டுமானாலும் காத்திருக்க எனக்குப் பொறுமை இருக்கிறது. அகிம்சையிலும், சத்தியத்திலும் எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கையே இதற்குக் காரணமாகும். பாதை எவ்வளவுதான் நீண்டதாகத் தோன்றிய போதிலும், அது ஒன்றுதான் மிகவும் சுருக்கு வழி என்பதை நான் அறிவேன்.

—'எங் இந்தியா' – 16—1—1930

## 2

(காந்திஜி இரண்டு பிரசங்கங்கள் செய்ததாகச் சென்ற இதழில் குறிப்பிடப்பட்டிருந்தது, இது, இரண்டாவது பிரசங்கத்தின் சுருக்கமான மொழி பெயர்ப்பு ஆகும். முதல் பிரசங்கம் விசேஷமாக வித்தியாபீட மாணவர்கள், பட்டதாரிகளுக்காகவும் ஆமதாபாத்திலுள்ள சமாதானப் பிரியர்களுக்காகவும் செய்யப்பட்டது. 1919–இல் தாம் கைது செய்யப்பட்ட பிறகு, ஆமதாபாத்தில் ஏற்பட்ட பலாத்காரம், தீயிடுதல் போன்றவைகளையும், இந்த வெறியாட்டத்தில் குற்றமற்ற சிலர் பலியானதையும் கருத்தில் கொண்டே காந்திஜி அந்தப் பிரசங்கத்தைச் செய்தார். இரண்டாவது பிரசங்கம், நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த ஒரு விரிவான கூட்டத்திற்காகச் செய்யப்பட்டதாகும். அப்போது சட்ட மறுப்பு நடந்த காலம். அந்தச் சமயத்தில் அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்று அவர் குறிப்பிடவில்லை. சத்தியம், அகிம்சை மூலம் தேச விடுதலைபெற வேண்டுமென்ற திட்டம் நாட்டின் முன்பிருந்தபோது, அவர்கள் எப்படி வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பதைப் பற்றியே சொன்னார். சட்ட மறுப்பு இயக்கத்திற்கும் இந்தக் கொள்கைக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றியது முதல் பிரசங்கம்; தேசீய திட்டத்தை அமல் நடத்துவதில் இந்தக் கொள்கைகளை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்ற விவரங்களைப் பற்றியது இரண்டாவது பிரசங்கம்.—'எம்.டி.')

சட்டமறுப்பு இயக்கம் காரணமாகத்தான் வித்தியாபீடம் தோன்றியது. சில வருடங்களுக்கு முன்பு நான் சொன்னது போல், சுயராஜ்யம் பெறுவதுதான் வித்தியாபீடத்தின் நோக்கம். தேசீயக் கல்வி ஸ்தாபனங்களில் கல்வி பயிலுபவர்களும், அந்த ஸ்தாபனங்களுடன் சம்பந்தப்பட்டவர்களும், தேசம் செய்ய வேண்டியிருக்கும் காரியங்களையெல்லாம் செய்ய வேண்டும். சுயராஜ்யம் பெறுவதற்காக தேசம் என்ன கட்டுப்பாடுகளுக்கு உட்பட வேண்டியிருக்கிறதோ அதே கட்டுப்பாடுகளுக்கு அவர்

களும் உட்பட வேண்டும். அப்போதுதான் சமயம் வரும்போது, மனமுவந்து தியாகங்கள் செய்ய முன்வருவதற்கு அவர்கள் தயாராக இருக்க முடியும்.

நம்முடைய இயக்கம் ஆன்ம சுத்திக்கான ஒரு இயக்கமாகும். அரசியலுக்கும், ஒழுக்கத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லையென்று நினைப்பவர்களும் இருக்கிறார்கள். நம்முடைய தலைவர்களின் நல்லொழுக்கத்தைப் பற்றி நாம் கவலைப்படுவதில்லை. ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலுமுள்ள ஜனநாயகங்கள், அரசியலுக்கும், ஒழுக்கத்திற்கும் சம்பந்தம் இருக்கிறதென்ற எண்ணத்தையே ஏற்றுக்கொள்ளுவதில்லை. தீய ஒழுக்கம் உள்ளவர்கள் கூடப் பல சமயங்களில் அறிவாளிகளாக இருப்பார்கள்; தம்முடைய அறிவாற்றல் காரணமாகச் சில காரியங்களை அவர்கள் நன்றாகவே நிர்வகிக்கிறார்கள். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் உள்ள சில பிரமுகர்களின் அந்தரங்க நடத்தை திருப்திகரமானதாக இராது. நாமும் நம்முடைய அரசியல் இயக்கத்தைப் பல சமயங்களில் அம்மாதிரியே நடத்திவருகிறோம். காங்கிரஸ் பிரதிநிதிகள் அல்லது தலைவர்களின் ஒழுக்கங்களைப் பற்றி நாம் கவலைப்படவில்லை. ஆனால், 1920-இல் நாம் முற்றிலும் ஒரு புதிய பாதையில் செல்ல ஆரம்பித்தோம்; காங்கிரஸ் தனது லட்சியத்தை அடைவதற்கு சத்தியமும், அகிம்சையும்தான் மார்க்கங்களாக இருக்க வேண்டுமாகையால், அரசியல் வாழ்க்கையிலும் ஆன்ம சுத்தி அவசியம் என்று அறிவித்தோம்.

அரசியலுக்கும், ஒழுக்கத்திற்கும் சம்பந்தம் இருக்கக் கூடாதென்று பலர் அந்தரங்கமாக நினைத்தபோதிலும், இந்தக் கருத்துக்கு இன்று பகிரங்கமான எதிர்ப்பு எதுவும் அதிகம் இல்லை. அதனால்தான் நமது முன்னேற்றம் மெதுவானதாக இருக்கிறது; சில விஷயங்களில் முன்னேற்றமே இல்லாமலும் இருக்கிறது. 1920-ஆம் வருடத்தில் நாம் ஏற்றுக்கொண்ட கொள்கையின்படி நடந்திருந்தோமானால், இந்தக் கட்டத்திற்கு வருவதற்குக்கூட ஒன்பது வருஷங்கள் ஆகியிருக்க முடியாது. நம்மை நாகரிகப்படுத்துவதும், நம்மைப் பரிசுத்தப்படுத்துவதும் சுயராஜ்யத்தின் நோக்கம் அல்ல என்றால், அதனால் ஒரு பலனும் இராது. பொது விஷயமாக இருந்தாலும், சொந்த விஷயமாக இருந்தாலும், நம்முடைய விவகாரங்கள் எல்லாவற்றிலுமே ஒழுக்கத்திற்கு நாம் முதலிடம் கொடுக்கிறோம் என்பதுதான் நம்முடைய நாகரிகத்தின் கேந்திரமாகும். நம்மை நாகரிகப்படுத்துவது வித்தியாபீடத்தின் நோக்கங்களில் ஒன்று. ஆகையால், தேசீயக் கல்வி ஸ்தாபனங்களில் சுதந்திரப் போராட்டத்திற்கு மிகப் பெரிய தியாகங்களைச் செய்ய வேண்டியது கடமையாகும்.

நம்முடைய செயல் முறையின் உள் அர்த்தத்தை நீங்கள் எல்லோரும் புரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன். சத்தியமும், அகிம்சையும் காங்கிரசின் சித்தாந்தமேயொழிய, செயல் முறை அல்லவென்று நீங்கள் நினைத்தால், என் நிலைமை

என்னவாயிருக்குமென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், அவை உங்களுடைய சொந்த செயல்முறை என்று நீங்கள் உறுதியாக நம்பினால், அதைப் பற்றி நான் அதிகமாக விவரிக்க வேண்டியதில்லை. ஒருவர் வித்தியாபீடத்தைச் சேர்ந்தவர் என்பதே அவருடைய சத்தியத்திற்கும், அகிம்சைக்கும் போதிய உத்தரவாதமாக இருக்க வேண்டும். ஆகையால், இந்த தேசீயக் கல்வி மகாநாடும், இதில் கலந்துகொள்ளுவதற்காக வந்திருப்பவர்களும் கேட்க வேண்டிய முதல் கேள்வி இதுதான். நாம் செய்யும் காரியங்களெல்லாம் இந்தச் செயல் முறைக்கு ஏற்ப இருக்கின்றனவா? சத்தியத்தையும், அகிம்சையையும் செயல் முறையாகக் கொண்டு, உங்கள் காரியங்களை நீங்கள் செய்திருந்தால், அதை நீங்கள் மாற்றிக்கொள்ளுவதற்குச் சபலம் ஏற்படக் கூடிய ஒரு காலம் வரும். உதாரணமாக, எனது நண்பர்களான அலி சகோதரர்கள் இதைச் செயல் முறையாகத்தான் கொண்டார்கள். அதை அவர்கள் ஒளிக்கவுமில்லை. அவர்களைப் போலவே நினைப்பவர்கள் பலர் இருக்கிறார்கள். நாட்டுக்குச் சேவை செய்யும் விஷயத்தில் அவர்களுக்கு இடம் உண்டு. ஆனால், தேசீயக் கல்வி ஸ்தாபனங்களில் ஆசிரியர்களாகவும், மாணவர்களாகவும் இருக்கும் உங்களுக்கு அந்த மனப்பான்மை இருந்தால் போதாது. அந்த இரண்டையும் உறுதியான சித்தாந்தங்களாக ஏற்றுக்கொண்டு, அவற்றை நீங்கள் வாழ்க்கையின் ஒரு பகுதியாக்கிக்கொள்ள வேண்டும். எல்லோரும் அகிம்சையைச் செயல் முறையாக ஏற்றுக்கொண்டு, நாம் மட்டும் அதைச் சித்தாந்தமாக வைத்துக்கொண்டிருந்தால் நாம் முன்னேற முடியாது. ஆகையால், சுயராஜ்யம் பெறுவதற்கு, எந்த நிலைமையிலும் அசத்தியத்தையும், பலாத்காரத்தையும் அனுமதிக்க மாட்டோம் என்று மீண்டும் நம்மை நாமே கேட்டுக்கொண்டு, ஊர்ஜிதம் செய்துகொள்ளுவோமாக. அப்படிச் செய்தால்தான் எல்லாம் சரியாக இருக்கும்.

சத்தியம், அகிம்சைக் கொள்கையிலிருந்துதான் நிர்மாண வேலைத் திட்டம் தோன்றியிருக்கிறது. அதன் ஒவ்வொரு அம்சத்தையும் பரிசீலனை செய்வோம். ஹிந்துக்கள், முஸ்லிம்கள் விஷயத்தில் பலாத்கார உணர்ச்சியையும், முஸ்லிம்கள், ஹிந்துக்கள் விஷயத்தில் பலாத்கார உணர்ச்சியையும் வைத்துக் கொண்டிருக்கும் வரையில், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை என்பது அசாத்தியமானதேயாகும். வகுப்புவாதப் பிரச்னையைப் பற்றி லாகூர் காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம், நமது சித்தாந்தத்தின் ஓர் அம்சம் தான். சீக்கியர்கள் வெறும் நியாயம் வழங்கினால் போதுமென்று கேட்டார்கள். ஆனால், தீர்மானம் அதற்கு அதிகமாகவும் போயிருக்கிறது என்பதைக் கவனித்திருப்பீர்கள். அது சீக்கியர்களுக்கு மட்டுமின்றி, இந்தியாவிலுள்ள எல்லா வகுப்பினருக்கும் நியாயம் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே நிறைவேற்றப்பட்டுளது.

தீண்டாமை ஒழிப்பை எடுத்துக் கொள்ளுங்கள். இந்த விஷயத்தைப் பற்றிப் பேசும்போது, சிலரைத் தொடக் கூடாது என்றிருப்பதை நீக்கிவிட்டால் போதுமென்று சிலர் நினைக்கிறார்கள். பொதுக் கிணறுகளை, பள்ளிக்கூடங்கள், கோவில்கள் ஆகியவற்றில் தீண்டாதார் என்று சொல்லப்படுவோருக்கு உள்ள தடையை அகற்ற வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள். ஆனால், நீங்கள் இன்னும் அதிகமாகப்போக வேண்டும். உங்களை நீங்கள் நேசிப்பது போலவே அவர்களையும் நேசிக்க வேண்டும் ; அவர்கள் உங்களைப் பார்த்தமாத்திரத்தில் நீங்களும் அவர்களில் ஒருவர் என்ற உணர்ச்சி அவர்களுக்கு ஏற்படும்படி இருக்க வேண்டும். அப்போதுதான் நிர்மாண வேலைத் திட்டத்திற்கு அவர்களுடைய ஒத்துழைப்பை நீங்கள் பெற முடியும்.

மது விலக்கு விஷயமும் அப்படித்தான், கதர்த் திட்டமும் அதே மாதிரியானதுதான். ஆனால், அதைப் பற்றி இங்கு நான் பேச வேண்டுமா ? இது மிகவும் உருப்படியான வேலை. ஒருவர் தன்னுடைய அன்றாட வேலைகளைப் பற்றி ஒழுங்காகக் குறிப்பு எழுதிவைத்துக் கொண்டிருந்தால், தேசத்தின் செல்வத்தை அவர் எவ்வளவு அதிகமாக்கியிருக்கிறார் என்பதைத் தெளிவாகச் சொல்ல முடியும். அந்த மனப்பான்மையுடன் இந்த வேலையில் நாம் இறங்கியிருந்தால், இதற்குள்ளாக எவ்வளவோ முன்னேறியிருப்போம். சென்ற வருடம் நாம் செய்த சொற்ப வேலையின் மூலம் கூட நாம் எவ்வளவு சாதித்திருக்கிறோம் என்ற விவரங்களை அந்நியத் துணி பகிஷ்காரக் கமிட்டி நமக்குக் கொடுத்திருக்கிறது. இது மிகவும் அற்பமானது என்றே நான் நினைக்கிறேன்; ஆனால், நாமெல்லோரும் உறுதியுடனும், தளராத நம்பிக்கையுடனும் இதைச் செய்திருந்தால் பலன் எப்படி இருந்திருக்கும் ? உண்மையான, திறமையான ஊழியர்கள் நமக்கு அவசியமாக வேண்டியிருக்கிறது. ஆனால், உங்களிடையே கூட, போதிய உறுதியும், நம்பிக்கையும் இல்லாதவர்கள் பலர் இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். நமது அசட்டையையும், நமது நம்பிக்கையின்மையையும் நாம் கைவிட்டால், திறமை தானகவே வந்துவிடும்.

என்ன செய்ய வேண்டும் என்பதை நான் சொல்லிவிட்டேன். இனி என்ன செய்யக் கூடாதென்பதையும் சொல்லுகிறேன். இலக்கியப் பயிற்சி, அறிவு ஆராய்ச்சி, மொழி ஆராய்ச்சி, ஆங்கிலம், சமஸ்கிருதம், லலித கலைகளைக் கற்றுக் கொள்ளுதல் முதலியவைகளையெல்லாம் ஒரு புறத்தில் ஒதுக்கிவையுங்கள். நமது தேசீயப் பள்ளிக்கூடங்களெல்லாம் நம்முடைய தேசீய ஆயுத உற்பத்தி சாலைகளாக, அதாவது, நிர்மாண வேலைக்கூடங்களாக மாறவேண்டும். இந்தியாவிலுள்ள லட்சக் கணக்கான நமது குழந்தைகள் எந்த விதமான கல்வியும் பெற முடியாமல் இருக்கிறார்கள். தேசீயக் கல்வியையோ, நான் குறிப்பிட்டுள்ள மற்ற பெரிய விஷயங்களையோ கூட அவர்கள் பெற முடிவதில்லை

நாம் சுதந்திரம் பெறும் வரையிலாவது, அதெல்லாம் இல்லாமல் நாம் இருக்க முடியாதா ?

அங்கத்தினர்களையும், தொண்டர்களையும் சேர்க்கும்படி காரியக் கமிட்டி தேசத்திற்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறது. இந்த வேலைக்கென்று தனியாக வேறு ஸ்தாபனம் இருக்க வேண்டுமென்ற அவசியம் என்ன ? நீங்களெல்லோரும் அங்கத்தினர்களாகவும், தொண்டர்களாகவும் இருந்து, இந்த வேலைக்குப் பொறுப்பேற்றுக் கொள்ளலாம். மகாயுத்தத்தின் போது ஐரோப்பாவிலிருந்த மாணவர்கள் என்ன செய்தார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். அவர்கள் செய்த தியாகத்தைச் செய்ய நாமும் தயாராக இருக்கிறோமா ? சுதந்திரம் பெறும் வரையில் நாம் நிம்மதியாக மூச்சுவிடக்கூட முடியாதென்ற ஆழ்ந்த உறுதி நம்முள் இருந்தால், நிர்மாண வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கென்றே நாம் உயிர்வாழ்வோம், அதையே நாம் வாழ்க்கையின் கடமையாகக் கொள்ளுவோம்.

கடைசியாக, உங்களிடம் என்ன எதிர்பார்க்கப்படுகிறது என்பதை ஒரே வார்த்தையில் கூறுகிறேன். நாம் தூய்மையாக இருக்க வேண்டுமென்பதைப் போலவே, மரண பயத்தையும் ஒழிக்க வேண்டும். 'ஆங்கிலேயர்கள் இந்தியாவிலிருந்து போய் விட்டால் அதனால் இந்தியாவுக்கு ஒன்றும் நஷ்டமில்லையென்று காந்தி நினைக்கலாம். ஆனால், ஆங்கிலேயர்கள் இந்தியாவிலிருந்து போய்விட்டால், ஒரு பணக்காரனின் சொத்துகள் கூட பந்தோபஸ்தாக இராது ; ஒரு கன்னிப் பெண்ணின் கற்புக்குக் கூட ஆபத்து ஏற்படாமல் இராது' என்று சமீபத்தில் ஒரு ஆங்கிலேயர் கூறியிருக்கிறார். இந்தியர்களைப் பற்றி அவர் எவ்வளவு மட்டமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்பதையே இது காட்டுகிறது. ஆனால், வேறு விதமாக எப்படி இருக்க முடியும் ? இன்று நாம் அவ்வளவு தூரம் பயத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிறோம் ; நமது சொத்தையும், கௌரவத்தையும் காப்பாற்றிக் கொள்ள கூலிக்கு ஆள்பிடித்து வைத்துக் கொள்ள வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். நாம் மரண பயத்தை விட்டொழித்த மாத்திரத்திலேயே, இந்தப் பரிதாபமான நிலையிலிருந்து நாம் விடுபட்டுவிடுவோம். வித்தியாபீடத்தில் படிக்கும் ஒவ்வொரு பெண்ணும் விழிப்புற்று, ஒரு போக்கிரி தொட வந்தாலும் எதிர்த்து சமாளிக்கக் கூடிய தார்மிக பலத்தைப் பெற வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன். நீங்கள் யாவரும் மரண பயத்தை விட்டொழிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இந்தியாவின் சுதந்திர சரித்திரத்தை எழுதும் காலத்தில், பலாத்காரத்தில் இறங்காமல், எந்த பலாத்காரத்தையும் எதிர்த்துப் போராடித் தம் உயிர்களைக் கொடுத்த தேசீயப் பள்ளிகள், கல்லூரிகளின் மாணவ, மாணவியர்களின் பெயர்களைக் குறிப்பிடும்படி இருக்க வேண்டும். கொல்லுவதற்கான பலம் தற்காப்புக்குத் தேவையில்லை ; இறப்பதற்குத்தான் ஒருவருக்கு தைரியம் வேண்டும்

ஒரு மனிதன் இறப்பதற்கு முற்றிலும் தயாராக இருக்கும் போது, அவன் பலாத்காரத்தில் இறங்கக் கூட மாட்டான். தீரத்துடனும் இரக்க மொழிகளைக் கூறிக்கொண்டும் தம் உயிரை நீத்தவர்கள், முரட்டுத்தனமான எதிரிகளின் மனத்தைக் கூட மாற்றியிருக்கிறார்கள் என்பதற்குச் சரித்திரத்தில் எவ்வளவோ உதாரணங்கள் இருக்கின்றன.

பிரசங்கத்தின் முடிவில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் காந்திஜி பின் வருமாறு கூறினார் :

"போராட்டத்தில் மாணவர்கள் பங்கு கொள்ள வேண்டும் என்பதில் எனக்கு அவ்வளவு அக்கறை இருந்தால், பள்ளிகளையும், கல்லூரிகளையும் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென நான் ஏன் சொல்லவில்லையென்று கேட்கிறீர்கள். அதற்கான சூழ்நிலை இல்லை என்பதே என்னுடைய பதிலாகும். சூழ்நிலை இல்லாவிடில் மாணவர்கள்தான் என்ன செய்ய முடியும் என்று திருப்பிக் கேட்க மாட்டீர்களென்று நம்புகிறேன். அவர்கள் எவ்வளவோ செய்ய முடியும். இந்தப் பணியில் அவர்களுடைய ஆர்வம் இன்னும் அதிக தீவிரமானதாக இருந்தால், மாணவர்கள் சர்க்கார் பள்ளிகளையும், கல்லூரிகளையும் விட்டு வெளியேறும் படியான ஒரு சூழ்நிலையைத் தோற்றுவித்திருப்பீர்கள். இது வரையில் அவர்கள் செய்ய முடியாததை, இனிக் கூடச் செய்யலாம்."

— 'எங் இந்தியா' - 23—1—1930

## 3

பொதுவாக தேசீயக் கல்விக்காகவும், குறிப்பாக குஜராத் வித்தியாபீடத்திற்காகவும் செலவிடப்படும் பணம் வீண்தான் என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. தன்னுடைய மகத்தான தியாகத்தின் மூலம் குஜராத் வித்தியாபீடம், அதை ஸ்தாபித்தவர்கள், அதற்கு நன் கொடைகள் கொடுத்தவர்களின் நம்பிக்கைகளைப் போதிய அளவுக்கு நிறைவேற்றியிருக்கிறது. ஏற்கனவே இங்கு படித்துக் கொண்டிருக்கும் 16 வயதுக்குப்பட்ட பையன்களைத் தவிர மற்றவர்கள் விஷயத்தில் வித்தியாபீடம் தன்னுடைய கல்வி நடவடிக்கைகளை நிறுத்தி வைத்துவிட்டது. ஆசிரியர்களும், 15 வயதுக்கு மேற்பட்ட மாணவர்களும் தாமாகவே தொண்டர்களாகச் சேர முன்வந்துள்ளனர். ஆசிரியர்களுடன் சுமார் நாற்பது மாணவர்கள் ஏற்கனவே வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். தேவையானவர்களுக்கு சத்தியாக்கிரகத்தைப் பற்றி பதினைந்து நாள் அவசரகாலப் பயிற்சி அளிப்பதற்காக ஒரு வகுப்பும் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வளவு ஜரூராகச் செயல்பட்டுள்ள ஆசிரியர்களையும், மாணவர்களையும் பாராட்டுகிறேன். அவர்களில் இருபது பேர்கள்

இந்த யாத்திரையில் என்னுடன் வருகிருர்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவர்கள் இரு கோஷ்டிகளாகப் பிரிந்திருக்கிருர்கள். பின்னர் புறப்படப் போகும் 80 யாத்திரைக் காரர்களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்காகவும், கிராம வாசிகளுக்கு உதவி செய்வதற்காகவும் இவர்கள் முன்ன தாகவே போகிருர்கள். அந்த எண்பது பேர்களும் கைது செய்யப் படுவதற்கு முன்பு இவர்கள் சட்ட மறுப்பு செய்யக் கூடாதென்று உத்திரவிடப்பட்டிருக்கிறது; அவர்கள் கைது செய்யப்பட்ட வுடன் அவர்களுக்குப் பதிலாக இவர்கள் முன் வருவார்கள்.

1920-இல் விடுக்கப்பட்ட தேசத்தின் அழைப்புக்கிணங்க முதன் முதலாக அமைக்கப்பட்ட ஸ்தாபனம் குஜராத் வித்தியா பீடம்தான். ஒவ்வொரு தேசீயக் கல்வி ஸ்தாபனமும் குஜராத் வித்தியாபீடத்தின் உன்னதமான இந்த உதாரணத்தைப் பின் பற்றுமென்று நம்புகிறேன். சர்க்கார் பள்ளிகளும், சர்க்காரிட மிருந்து மான்ய உதவி பெறும் பள்ளிகளும் கூட இந்த உதார ணத்தைப் பின்பற்றுமென்று நம்புகிறேன். இந்தக் காலத்தில் ஒவ்வொரு புரட்சியிலுமே மாணவர்கள் முன்னணியில் இருந்திருக் கிருர்கள். இந்தப் புரட்சி சாத்விகமானது என்ற காரணத் திற்காக, மாணவர்களுக்கு அவ்வளவு கவர்ச்சியளிக்காததாக இருக்கக் கூடாது.

''எது முக்திக்கு வழிகாட்டுகிறதோ அதுதான் அறிவு'' என்பதே குஜராத் வித்தியாபீடத்தின் நோக்கமாகும். பெரிதா யிருப்பதில் சிறிதும் அடங்கியிருக்கிறது என்ற கொள்கைக் கேற்ப, தேசீய சுதந்திரம் அல்லது லோகாயத சுதந்திரமும் ஆன்மிக விடுதலைக்குள் அடங்கியிருக்கிறது. ஆகையால், கல்வி ஸ்தாபனங்களில் பெறும் அறிவு, நாட்டின் விடுதலைப் பாதையை யாவது காட்டி, அதற்கு இட்டுச் செல்லுவதாக இருக்க வேண்டும்.

சத்தியாக்கிரக யாத்திரிகர்கள் அன்ருடம் செய்ய வேண்டிய மாமூலான காரியங்களை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் கூட, அதுவே ஒரு முழுக் கல்வியாக இருக்கிறதென்பது புலப்படாமல் போகாது. அவர்கள் அழிவை உண்டாக்கிக் கொண்டும், மட்ட உணர்ச்சிகளுக்கெல்லாம் இடம் கொடுத்துக் கொண்டும் திரியும் முரட்டுக் கலகக்காரர்கள் அல்ல. அவர்கள் தன்னடக்க முள்ள ஒரு குழுவினர் ஆவர். கட்டுப்பாடான கொடுங்கோன்மையை எதிர்த்து சாத்விக முறையில் கலகம் செய்யப் போவதாக அவர்கள் அறிவித்திருக்கிருர்கள். அவர்கள் தம்முடைய யாத் திரையின்போது, சத்தியத்தையும், அகிம்சையையும் பரப்பிக் கொண்டே, தாமே பெரும் கஷ்டங்களை அனுபவிப்பதன் மூலம் சுதந்திரம் பெற உறுதி கொண்டவர்கள் ஆவர். இன்று நாட்டி லுள்ள நிலைமையில் இதை விட உண்மையான கல்வி வேறென்று இருக்க முடியாது. தன்னுடைய பிள்ளையையோ, பெண்ணையோ இதற்கு அர்ப்பணம் செய்வதுபற்றி எந்தத் தகப்பனும் துளிக் கூட கவலைப்பட வேண்டியதில்லை.

*1920*-இல் நடந்த இயக்கத்திற்கும், இதற்கும் உள்ள வித்தியாசத்தைக் கூறுகிறேன். சர்க்கார் ஸ்தாபனங்களைக் காலி செய்து, தேசீய ஸ்தாபனங்களை அமைப்பதே *1920*-இல் விடுக்கப்பட்ட அழைப்பின் நோக்கமாகும். சர்வ ஜன சட்டமறுப்பு இயக்கம் என்ற இறுதிப் போராட்டத்தில் ஈடுபடுவதற்காக இன்றைய அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. இது நடக்கலாம் அல்லது நடக்காமல் போகலாம். இதுவரையில் சுதந்திரத்தைப் பற்றிப் பெரும் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தவர்களிடம் செயலில் இறங்கும் தன்மை இல்லையென்றால், அது நடக்காது. உப்பில் கரிப்பு இல்லையென்றால், அதற்கு யார் என்ன செய்ய முடியும்? அர்த்தமில்லாத, வெறும் கோஷங்களைக் கிளப்பி மாணவர்கள் ஒரு நெருக்கடியை உண்டாக்கிவிட வேண்டுமென்று எதிர்பார்க்கப்படவில்லை. மௌனமாகவும், கண்ணியமாகவும், மாணவர்களுக்குத் தகுதியான விதத்திலும் அவர்கள் நடந்து கொள்ள வேண்டும். தாமே தியாகங்கள் செய்வதிலோ அல்லது அகிம்சையிலோ மாணவர்களுக்கு நம்பிக்கை இல்லாமலிருக்கலாம். அப்படியானால் அவர்கள் வெளியே வரமாட்டார்கள்; வரவேண்டிய அவசியமுமில்லை. அந்த நிலையில், அகிம்சையினால் என்ன நடக்கிறதென்பதை அவர்கள் பொறுத்திருந்து பார்க்கலாம். மாணவர்கள் ஒன்று தாமாக மனமுவந்து இந்த அகிம்சைப் புரட்சியில் சேரலாம் அல்லது எதிலும் சேராமல் நடுநிலைமை வகிக்கலாம். வேண்டுமானால், நடக்கும் சம்பவங்களை விமர்சனக் கண்ணோட்டத்துடன் பார்த்துக் கொண்டிருக்கலாம். அதுதான் கண்ணியமானதாக இருக்கும். இந்தத் திட்டத்தைத் தயாரித்தவர்களின் கருத்தை ஏற்றுக் கொள்ளாமலும், அதை மீறியும் அவர்கள் தம் விருப்பப்படி நடந்து கொண்டால், இயக்கத்திற்குத்தான் அவர்கள் தீங்கு விளைவிப்பார்கள். சாத்தியமான அளவுக்கு சட்ட மறுப்பை இப்போது அபிவிருத்தி செய்யாவிட்டால், இன்னும் ஒரு தலைமுறைக்கு அது சாத்தியமில்லாமற் போகலாம் என்பது எனக்குத் தெரியும். மாணவர்கள் என்ன செய்ய வேண்டும் என்பது தெளிவு. சென்ற பத்து வருடங்களில் ஏற்பட்டுள்ள விழிப்பு அவர்களின் உணர்ச்சிகளைத் தூண்டி விடாமலில்லை. இறுதி நடவடிக்கையில் அவர்கள் குதிப்பார்களாக.

—'எங் இந்தியா' – 20—3—1930



ஆமதாபாத் குஜராத் வித்தியா பீட பட்டமளிப்பு விழாவில் அதன் அத்தியட்சகரான காந்திஜி
(நவம்பர் 28, 1926).



குஜராத் வித்தியா பீட மாணவர்களுக்கு காந்திஜி பட்டங்களை வழங்கும் காட்சி.

# 23

# வித்தியாபீடத்தின் வெற்றி

[குஜராத் வித்தியாபீடத்தில் பட்டப்படிப்பு, கிராமசேவைப் பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்கிய போது காந்திஜி செய்த பிரசங்கத்தின் விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

பட்டதாரிகள், கிராம சேவைப் பயிற்சி பெற்றவர்கள் ஆகிய இரு பிரிவினருக்குமிடையே இங்கு வேற்றுமை காட்டப்படுவது ஒரு விதத்தில் சரியானதுதான். உண்மையை முன்னிட்டு இந்த வித்தியாசத்தை எடுத்துக் காட்டவேண்டியிருக்கிறது. பட்டதாரிகளின் பாடத் திட்டம் வேறுவிதமானது; அவர்கள் அதிக வருடங்கள் படிக்க வேண்டியும் இருக்கிறது. ஆனால், கிராமப் பயிற்சி பெற்றவர்கள் தாம் குறைந்தவர்கள் என்று நினைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவர்கள் பெற்ற பயிற்சி எந்த விதத்திலும் குறைவானதல்ல. பட்டதாரிகள் அதிக வருடங்கள் படித்து, அதிக விஷயங்களைத் தெரிந்து கொண்டிருக்கலாம்; ஆனால், செயல் என்று வரும்போது கிராம சேவைப் பயிற்சியாளர்கள் அவர்களை மிஞ்சி விடுவது சாத்தியமேயாகும். அப்படி நடந்தால் அதைக் கண்டு நான் ஆச்சரியப்பட மாட்டேன். பட்டதாரிகளை மிஞ்சக்கூடிய பல அம்சங்கள் அவர்கள் பெற்ற பயிற்சியில் இருக்கின்றன. இவ்விருவரில் உங்களுக்கு யார் வேண்டும் என்று என்னைக் கேட்டால், கிராம சேவைப் பயிற்சி பெற்றவர்களையே நான் விரும்புவேன். ஏனெனில், வித்தியாபீடத்தின் மூலம் நாம் கிராம சேவைக்குச் செல்லவேண்டும் என்றே ஆரம்பம் முதல் நான் சொல்லிவந்திருக்கிறேன். பட்டதாரிகளின் விருப்பமும் அதுவாகத்தான் இருக்க வேண்டும். அதாவது, கிராமங்களுக்குச் சென்று, அங்குள்ள மக்களுக்குச் சேவை செய்வதே அவர்களுடைய லட்சியமாக இருக்க வேண்டும். கிராமங்களுக்குச் சேவை செய்வதென்ற உறுதியுடன் இந்த வித்தியாபீடத்தில் கல்வி பெற வந்தவர்கள், அந்தப் பிரதிக்ஞையைக் காப்பற்றத் தவறமாட்டார்களென்று நம்புகிறேன். அந்த லட்சியத்தை நிறைவேற்ற அவர்கள் செய்யும் முயற்சிகளின் மூலம், அந்தப் பிரதிக்ஞைக்கு இன்னும் அதிகப் புகழ் தேடித் தருவார்களாக. குஜராத் வித்தியாபீடத்தில் நாம் ஏன் இவ்வளவு வருடங்கள் படித்தோம் என்று பட்டதாரிகள் தம்மைத்தாமே கேட்டுக்கொள்ள வேண்டும். தேசத்திற்கு எப்படி, எந்தவிதத்தில் தாம் சேவை செய்யவேண்டும் என்பதை மாணவர்கள் பூராவாக உணர்ந்திருக்கிறார்களா என்பதை இப்போது நான் சொல்லுவதற்கில்லை.

ஆனால், இந்த விமர்சனம் ஒரு முன்னுரையைப் போன்றது தான். நான் மேற்கொண்டு சொல்ல விரும்புவதெல்லாம் பெரும்

பாலும் புகழுரைதான். கராடியில் நான் கைது செய்யப்பட்ட பிறகு இந்தியாவில் என்ன நடந்தது என்பதைப் பத்திரிகை களில் படித்துத்தான் நான் தெரிந்து கொண்டேன். பின்னர், நான் விடுதலையான பிறகு, மற்றவர்கள் சொல்லக் கேட்டும் தெரிந்து கொண்டேன். நமது வித்தியாபீடங்கள்-நமது தேசீயப் பள்ளிகளும், கல்லூரிகளும் இந்த இயக்கத்தில் எடுத்துக் கொண்ட பங்கைப் பற்றி நான் எவ்வளவோ கேள்விப்பட்டேன். அதைக் கேட்டபோது நான் உண்மையில் மிகவும் ஆனந்தமடைந் தேன். குஜராத் வித்தியாபீடம், பீகார், காசி வித்தியாபீடங் களைப் பற்றியும் நிறைய தெரிந்துகொண்டேன், இந்த மூன்று ஸ்தாபனங்களிலும் உள்ள ஆசிரியர்களும், மாணவர்களும் தமது புத்தகங்களைத் தூக்கி எறிந்துவிட்டு, சுதந்திரப் போராட்டத்தில் கலந்துகொள்ள முன்வந்தது சிறிய விஷயம் அல்ல. இந்தப் போராட்டத்தின் சரித்திரத்தை எழுதும்போது, தேசீய வித்தியா பீடங்களும் மாணவர்களும் எடுத்துக்கொண்ட பெரும் பங்கை அறிய உலகம் மகிழ்ச்சியடையும். நான் சிறையில் இருந்த காலத்தில், மாணவர்களையும், ஆசிரியர்களையும் பற்றிப் பத்திரி கைகளில் ஏதாவது படித்தால், அவர்களையும், சர்க்கார் பள்ளிக் கூடங்களில் உள்ளவர்களையும் பற்றி உடனே ஒப்பிட்டுப்பார்ப் பேன். 1920-இல் சர்க்கார் பள்ளிக்கூடங்களை பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று ஆரம்பித்த இயக்கம் எவ்வளவு சரியானது என்பது அப்போது எனக்குத் தெளிவாயிற்று. சர்க்கார் பள்ளிக்கூடங்களில் எப்போதும் போலவே கூட்டம் நிறைந்திருக்கிறது என்பது உண்மையே. அந்தப் பள்ளிக்கூடங் களில் சேர வேண்டுமென்ற ஆவலில் அவர்கள் மன்னிப்புக் கேட் கிறார்கள், அபராதங்கள் செலுத்துகிறார்கள், எப்படியாவது அப் பள்ளிகளில் சேர்ந்துவிடுகிறார்கள் என்பதுதான் இதில் இன்னும் பரிதாபமானதாகும். இதனால் கல்லூரித் தலைவர்களுக்கு அல்லது கல்வி இலாகா தலைவர்களுக்கு தைரியம் ஏற்பட்டுவிடுகிறது. போராட்டத்தில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ பங்கு எடுத்துக்கொண்டவர்கள் அல்லது சிறை சென்றவர்கள் பள்ளி களில் சேர விரும்பினால், முதலில் அவர்களைப் பற்றிய விவரங்கள் கல்வி இலாகா தலைவரின் பரிசீலனைக்கு அனுப்பப்பட வேண்டும் என்று சுற்றறிக்கைகள் கூட அனுப்புகிறார்கள். அவர்களைப் பற்றிய விவரங்களைப் பரிசீலனை செய்துவிட்டு அவர்தான் அவர்களை அனுமதிக்க வேண்டும். தமது சுய மரியாதையை விற்றுவிட்டு இப்படி சர்க்கார் பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் போகிறவர்களைப் பற்றி நாம் என்ன நினைப்பது? இத்தகைய நிபந்தனைகளை வற்புறுத்தும் கல்வி இலாகா அதிகாரிகளைப் பற்றித்தான் என்ன நினைப்பது?

ஹிந்து சர்வகலாசாலை விஷயத்தில் சர்க்கார் பின்பற்றும் கொள்கை உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். நியாயத்திற்காகப் போராடுவதில் பண்டித மதன் மோகன் மாளவியா சாதாரண மானவர் அல்ல. அதன் உள் கதை எனக்குத் தெரியும். சர்க்

க்கார் மான்யம் நிறுத்தப்பட்டுவிடலாம் என்ற சாத்தியக் கூறு இருந்தது. மிகவும் கஷ்டப்பட்டு மாளவியாஜி அந்த ஸ்தாபனத்தைக் காப்பாற்றினர்; மிகவும் கஷ்டப்பட்டு சர்வகலாசாலைக்கு சர்க்கார் அளிக்கும் மான்யம் நிறுத்தப்படாமலும் பார்த்துக் கொண்டார். அவருடைய பயமின்மை, தைரியம், தியாகம், ஆற்றல் ஆகியவற்றிற்கு சர்க்கார் பணிய வேண்டியிருந்தது. மான்யம் நிறுத்தப்பட்டிருந்தால், மளாவியாஜி ஒரு துளி கண்ணீர் கூடச் சிந்தியிருக்கமாட்டார். ஒரு மாணவருக்காவது அனுமதி மறுக்கப்பட்டால், மான்யத்தை ஏற்றுக்கொள்ளுவதில்லையென்று அவர் முடிவு செய்துவிட்டார். நம்முடைய ஸ்தாபனங்களுக்கும், சர்க்கார் மான்யம் பெறும் பள்ளிகள், கல்லூரிகளுக்குமிடையே உள்ள வித்தியாசத்தை இது காட்டுகிறது.

நமது கல்லூரிப் பிரிவின் சாதனைகளைப் பார்த்துவிட்டோம். வித்தியாபீடத்தின் அறிக்கையின் அனுபந்தத்தில், சிறை சென்ற ஆசிரியர்கள், மாணவர்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வித்தியாபீடம் எப்போதும் இருப்பதைப் போலவே தான் இருந்துவந்திருக்கிறது; ஆயினும், சென்ற ஒரு வருடத்தில் மாணவர்கள் கற்றுக்கொண்டதைப் போல் இதற்கு முன்பு கற்றுக் கொண்டதில்லை யென்று காகா சாகிப் கூறுகிறார். வித்தியா பீடத்தின் தேசீயத் தன்மை முன்பு குறைந்ததாயில்லை. ஆயினும், சென்ற வருட சாதனையைப் போல் முன்பு இருந்ததில்லை. எதிர் காலத்திலும் போராட்டம் ஏற்பட்டு, நாம் சிறைகளை நிரப்பும் போது, நம்முடைய கடமையைச் செய்தோம் என்ற திருப்தி நமக்கு இருக்கும். மாபெரும் வரப்பிரசாதமான அறிவின் பலன் அதுதானே. அப்படிச் செய்தால்தான் நாம் உண்மையான ஆசிரியர்களாகவும், மாணவர்களாகவும் இருப்போம் என்று நம்புகிறோம். தாம் ஒரு சாதாரணப் பள்ளிக்கூடத்தின் சிருஷ்டிகள் என்று பட்டதாரிகளும், கிராம சேவைப் பயிற்சி பெற்றவர்களும் நினைக்கக்கூடாது. நாம் என்ன செய்ய முடியும்? வயிற்றுப் பிழைப்புக்காக நாமும் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. விதி நம்மை வித்தியாபீடத்தில் கொண்டுவந்து சேர்த்து விட்டது. ஆகையால், அவர்கள் சொல்லுவதையெல்லாம் நாம் செய்ய வேண்டியிருக்கிறது என்று ஒரு கணம்கூட நீங்கள் நினைக்கக்கூடாது. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது, நீங்கள் ஒரு சிலர்தான் என்று தோன்றலாம். ஆனல், நீங்கள் கடல் போன்றவர்கள். மற்றவர்கள் கடல் போல் தோன்றினலும், அவர்கள் உண்மையற்ற மாயைகள்தாம். சுயராஜ்யம் பெறுவதற்கான தைரியத்தையும், சக்தியையும் அவர்களுக்கு ஊட்டுவது மிகமிகக் கஷ்டமானதாகும். தேசீயப் பள்ளிகளில் உள்ள மாணவர்களுக்கு அந்த சக்தி இருப்பதை நாமே நேரில் பார்க்கலாம். அவர்கள் வேலை செய்வதைப் பார்த்தவர்கள், இந்த வித்தியா பீடங்களை ஏற்படுத்தியதால் நமக்கு ஒன்றும் நஷ்டமில்லை என்பதை ஒப்புக்கொள்ளுவார்கள். அதற்கு மாருக, அதற்காக

அளிக்கப்பட்ட நன்கொடைகளுக்கு வட்டியும், முதலுமாகச் சேர்ந்து நாம் சம்பாதித்துவிட்டோம்.

—'நவஜீவன்' – 3—5—1931

# 24

# கிராம வேலை என்பது என்ன?

## 1

வித்தியாபீடத்தின் உண்மையான வேலை கிராமங்களில்தான் இருக்கிறது. வித்தியாபீடம் ஆரம்பமானதிலிருந்தே இதை நான் வற்புறுத்திக்கொண்டு வந்திருக்கிறேன். ஆனால், இரண்டு வருடங்களுக்கு முன்பு இது சட்ட விரோதமான ஸ்தாபனம் என்று அறிவிக்கப்பட்டு, பெரும்பாலான நமது ஆசிரியர்களும், மாணவர்களும் சிறைப்படும் வரையில், குஜராத்தின் தலை நகரில் ஒரு மத்திய ஸ்தாபனம் இருந்தால்தான் இந்த வேலையைச் செய்ய முடியுமென்று நினைத்துக்கொண்டிருந்தோம். ஆனால், இப்போது நிலைமை மாறிவிட்டது. நாமெல்லோரும் கலந்தாலோசித்து, நிலைமையைப் பரிசீலனை செய்வதற்கும் இப்போது அவகாசம் கிடைத்திருக்கிறது. ஆகையால், எதிர்கால வேலையைப் பற்றி நமது ஆரம்பத் திட்டத்தின் அடிப்படையிலேயே சிந்திக்கத் தொடங்குவது நன்மையாகும். உயிர்த் துடிப்புள்ள ஒரு ஸ்தாபனத்தில் அங்கத்தினராக உள்ள ஒவ்வொருவரும் எங்கிருந்தாலும், அந்த லட்சியங்களைப் பிரதிபலிப்பவராக இருக்க வேண்டும். அம்மாதிரி நிலைமை ஏற்பட்டால், அந்த ஸ்தாபனத்திற்கென்று ஒரு தனி இடம் இருந்தாலும், இல்லாவிட்டாலும், அதைக் குறித்து கவலைப்பட வேண்டியதில்லை.

ஆகையால், வித்தியாபீடத்தின் லட்சியங்களில் நம்பிக்கை உள்ளவர்களும், அதற்குத் தொண்டு செய்வதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டுள்ளவர்களும், நேராக கிராமங்களுக்குச் சென்று, அந்த லட்சியங்களுக்கு இணங்க கிராமங்களில் தமது வாழ்க்கையை நடத்த ஆரம்பிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். இப்படிச் செய்தால், நீங்கள் ஒவ்வொருவருமே ஒரு வித்தியாபீடமாக இருப்பீர்கள்; உங்களுடைய சொந்த உதாரணத்தின் மூலம் அந்த லட்சியங்களை மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பவர்களாக இருப்பீர்கள். வித்தியாபீடத்தின் லட்சியங்களுக்கு இணங்க கிராமங்களில் வாழ்க்கை நடத்திய ஊழியர்களில் பலர், அதனுடைய மத்ய ஸ்தாபனத்தை கிராமத்திலேயே அமைப்பதாக இருக்கலாம். ஆனால் இன்று நாம் அந்த நிலைமையில் இல்லை. போதிய அனுபவம் இருந்தால்தான் புதிய வித்தியா

பீடத்தை அமைக்க முடியும். அந்த அனுபவத்தையெல்லாம் இனித்தான் நான் பெற வேண்டும்.

இந்த கிராம ஊழியரின் வாழ்க்கையில் கைராட்டினமே நடுநாயகமாக இருக்கும். கைராட்டினத்தின் பூரா உட்கருத்துகளையும் இன்னும் நான் யாருக்கும் உணர்த்த முடியாதது பற்றி வருந்துகிறேன். என்னுடைய வாழ்க்கையே அதன் உண்மையான நிலையைப் பிரதிபலிப்பதாக இல்லை என்பதுதான் இதற்குக் காரணமாகும். ஒன்பது மாத காலம் நான் இந்தியாவில் சுற்றியலைந்து கொண்டிருந்தபோது, இந்த உண்மை அடிக்கடி என் மனத்தில் பட்டது. ராட்டையில் நூற்பது இந்தியாவில் எல்லோருக்கும் பொதுவாக வாய்ப்பு அளிக்கக் கூடிய ஒரு உபதொழில் என்பதை நாம் இன்னும் சரியாக உணரவில்லை. ராட்டை இல்லாவிட்டால், கிராமத்திலுள்ள நெசவாளி உயிர் வாழ முடியாது. மில்களிலிருந்துதான் அவனுக்கு நூல் கிடைக்கிறது என்பது உண்மையே. ஆனல், என்றென்றைக்கும் அவன் மில்களையே நம்பிக் கொண்டிருந்தால், அவன் அழிந்து போவான். சென்ற பத்து வருடங்களில் புதிதாகக் கதர் நெசவாளர்கள் வகுப்பு ஒன்று தோன்றியிருக்கிறது. அவர்களுடைய ஆடைத் தேவைகளுக்கு எவ்வளவு அவசியமோ அந்த அளவுக்குத்தான் நமது பொருளாதார வாழ்வில் ராட்டை இடம் பெற்றிருக்கிறது. ஆனல், இந்தக் குறுகிய ஒரு நோக்கத்திற்காக மட்டும் அகில இந்திய நூற்போர் சங்கம் போன்ற ஒரு பெரிய ஸ்தாபனம் இருப்பதென்பது நியாயமாகாது.

விவசாயத்துடனேயே சேர்ந்த ஒரு உபதொழிலாக இருப்பதுதான் கதர். லட்சக்கணக்கான ஹரிஜன நெசவாளர்களுக்கு இது உயிர் மூச்சாக இருக்கிறது. அதன் மூலம் அவர்கள் ஜீவனம் தேடிக்கொள்ளுகிருர்கள். நமது கிராமங்களிலிருந்து சோம்பேறித்தனத்தை விரட்டியடித்து, ஒவ்வொரு கிராம இல்லத்தையும் சுறுசுறுப்பானதாக்கும் வரையில், நமது வாழ்க்கையில் ராட்டை அதற்குரிய ஸ்தானத்தைப் பெற்றுவிட்டது என்று சொல்ல முடியாது. வேலையின்மையும், சோம்பேறித்தனமும் போட்டியிலும் சச்சரவிலும் கொண்டுபோய் விடக்கூடும். கதர் ஒன்றுதான் இதற்கு மாற்ருகும். சோஷலிஸம் என்று சொல்லப்படும் கைத்தொழில் அபிவிருத்தி இதற்குப் பரிகாரமாகாது. இந்தியா ஏற்றுக்கொள்ளக்கூடிய சோஷலிஸம் ராட்டையின் சோஷலிஸம் தான். ஆகையால் கிராம ஊழியர்கள் ராட்டையையே தமது நடவடிக்கைகளின் ஒரு நடு நாயகமாக்கிக் கொள்ளட்டும்.

ஊழியர் ஒழுங்காக நூற்பதோடு மட்டும் நிற்கமாட்டார்; தன்னுடைய ஜீவனத்திற்காக உடலுழைப்பிலும் ஈடுபடுவார். தூங்குவதற்கும், ஓய்வெடுத்துக் கொள்ளுவதற்கும் உள்ள எட்டு மணிநேரம் போக மீதி நேரத்தில் எல்லாம் அவர் ஏதாவது வேலை செய்து கொண்டிருப்பார். வீணடிப்பதற்கு அவருக்கு நேரமே

இராது. அவர் சோம்பியிருக்கமாட்டார்; மற்றவர்கள் அப்படி இருக்கவும் விடமாட்டார். ஓயாமல், மகிழ்ச்சியுடன் அவர் வேலை செய்து கொண்டேயிருப்பது அவருடைய அண்டை வீட்டுக்காரர்களுக்கு ஒரு உதாரணமாக இருக்கும். உடலுழைப்பின் மூலம் தான் உடலைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். மனத்தைப் பண்படுத்துவதற்கு அறிவுத் துறையிலும் பயிற்சி அவசியமாகும். வேலைகள் பல ரகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும் என்பது உண்மையே. ஆனால், அது பல்வேறு உடலுழைப்பு வேலைகளாகவே இருக்கும். அறிவுத் துறை என்பது தனியாகப் பிரித்து வைக்கப்பட்டிராது. நாமே சோம்பியிருப்பதோ, அல்லது வேறு வழியில்லாமல் சோம்பியிருப்பதோ போகவேண்டும். அந்தச் சோம்பல் ஒழியாவிட்டால், என்ன பரிகாரம் கண்டு பிடித்தாலும், பலன் ஏற்படாது; அரைப் பட்டினி கிடப்பது நிரந்தரமான பிரச்னையாகவே இருந்து கொண்டிருக்கும். இரண்டு தானியங்கள் சாப்பிடுபவன் நாலு தானியங்களை உற்பத்தி செய்ய வேண்டும். இது பொதுவான விதியாக ஏற்றுக் கொள்ளப்பட்டாலொழிய, ஜனத்தொகையை எவ்வளவுதான் குறைத்தாலும், பிரச்னையைத் தீர்க்க உதவியாக இராது. இந்த விதியை ஏற்றுக் கொண்டு பின்பற்றினால், இன்னும் கோடிக்கணக்கானவர்கள் வந்தாலும் இடமிருக்கும்.

இவ்வாறாக, கிராம ஊழியராக இருப்பவர் சுறுசுறுப்பின் உருவாக இருப்பார். பருத்தி விதைப்பதிலிருந்து. நெசவு வரையில், கதர் உற்பத்தி சம்பந்தமான எல்லா வேலைகளிலும் அவர் தேர்ச்சி பெறுவார். அவற்றைச் செம்மைப்படுத்துவதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பார். அவர் அதை ஒரு கலையாகக் கருதினால் அதில் அவருக்கு அலுப்புத்தட்டாது. ஒவ்வொரு நாளும் அதில் அவர் ஒரு புதிய இன்பத்தைக் காண்பார். அதனுடைய மகத்தான சாத்தியக் கூறுகளை அவர் அறிய அறிய அவருடைய மகிழ்ச்சியும் அதிகமாகும். அவர் ஆசிரியராக மட்டுமில்லாமல் அங்கே கற்றுக் கொள்ளுபவராகவும் இருப்பார் ; எளிய கிராம வாசிகளிடமிருந்து தான் கற்றுக் கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறதென்பதைச் சீக்கிரத்தில் தெரிந்து கொள்ளுவார்; கிராம வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் அவர் பங்கு எடுத்துக் கொள்ளுவார்; கிராமியக் கைவினைத் தொழில்களைக் கண்டு பிடித்து, அவற்றை அபிவிருத்தி செய்வதற்கான சாத்தியக் கூறுகளைப் பற்றி ஆராய்வார்; கதரில் கிராமவாசிகளுக்குக் கொஞ்சமும் சிரத்தை இல்லாமலிருக்கலாம்; ஆனால் தன்னுடைய சேவை நிறைந்த வாழ்க்கையின் மூலம் அதில் அவர்களுக்கு அக்கறை ஏற்படும்படி செய்வார்; தன்னால் எவ்வளவு முடியும் என்பதை, அதாவது தன் சக்தியின் எல்லையை அவர் மறந்துவிட மாட்டார்; விவசாயிகள் கடன் பிரச்னையைத் தீர்ப்பது போன்ற பயனற்ற வேலைகளில் அவர் ஈடுபடமாட்டார்.

சுத்தம், சுகாதாரம் ஆகிய விஷயங்களிலும் அவர் அதிக கவனம் செலுத்துவார். அவருடைய வீடும், அதனுடைய சுற்றுப்

புறங்களும் சுத்தத்திற்கு ஒரு உதாரணமாக இருக்கும். அத்துடன் மட்டுமல்லாமல், துடைப்பத்தையும் கூடையையும் கிராமத்தைச் சுற்றி எடுத்துச் சென்று, அந்த கிராமம் பூராவுமே சுத்தமாக இருப்பதற்கும் அவர் உதவி செய்வார்.

கிராமத்தில் ஒரு ஆஸ்பத்திரியை ஏற்படுத்தவோ அல்லது தானே கிராம வைத்தியராகிவிடவோ அவர் முயற்சி செய்ய மாட்டார். சிக்கலைக்கும் இவை போன்ற கண்ணிகளைத் தவிர்க்க வேண்டும். நான் ஹரிஜன் வேலை சம்பந்தமாகச் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது ஒரு கிராமத்திற்குப் போயிருந்தேன். அங்கு நம்முடைய ஊழியர்களில் ஒருவர் ஆடம்பரமான ஒரு கட்டிடத்தைக் கட்டி, ஒரு ஆஸ்பத்திரியை அமைத்து, சுற்று வட்டாரத்திலுள்ள கிராமவாசிகளுக்கு இலவசமாக மருந்துகள் கொடுத்துக் கொண்டிருந்தார். தொண்டர்கள் வீடு வீடாக மருந்தை எடுத்துச் சென்று கொண்டிருந்தார்கள். மாதம் அங்கே 1200 பேர்கள் மருந்து வாங்கிக் கொண்டதாகப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இதை நான் மிகவும் கடுமையாகக் கண்டித்தேன். கிராம சேவை செய்வதற்கு வழி இதுவல்ல என்று அவரிடம் சொன்னேன்.

கிராமவாசிகளிடையே சுத்தம், சுகாதாரம் சம்பந்தமான விதிகளைப் பரப்புவதுதான் அவருடைய வேலை. வியாதிகளை குணப்படுத்துவதற்கு முயற்சி செய்வதற்குப் பதிலாக வியாதிகளைத் தடுப்பதற்கு வழி சொல்லிக் கொடுப்பதே அவருடைய வேலையாகும். அரண்மனை போன்ற அந்தக் கட்டிடத்தை விட்டு விட்டு கூரை போட்ட குடிசைகளில் இருக்கும்படி சொன்னேன். அந்தக் கட்டிடத்தை ஸ்தல ஸ்தாபனத்திற்கு வாடகைக்குக் கொடுத்துவிடும்படியும் கூறினேன். கொயினா, விளக்கெண்ணெய், அயோடின் போன்ற மருந்துகளைமட்டும் கைவசம் வைத்துக் கொண்டிருந்தால் போதுமானது. தம் உடல்களையும், கிராமத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்ளுவது எவ்வளவு அவசியம் என்பதை மக்கள் உணரும்படி செய்வதில் தான் ஊழியர் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

கிராமத்திலுள்ள ஹரிஜனங்கள் விஷயத்திலும் அவர் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். அவருடைய வீட்டுக்கு ஹரிஜனங்கள் எந்தச் சமயத்திலும் தாராளமாக வரும்படி இருக்க வேண்டும். தமக்குச் சங்கடங்களும், கஷ்டங்களும் ஏற்படும்போது, இயற்கையாகவே அவர்கள் இவரிடம்தான் வருவார்கள். கிராமத்தின் மத்தியில் உள்ள அவருடைய வீட்டுக்கு ஹரிஜன நண்பர்கள் வருவதை கிராமவாசிகள் விரும்பவில்லையென்றால், ஊழியர் ஹரிஜனங்கள் வசிக்கும் பகுதிக்குத் தன் ஜாகையை மாற்றிவிட வேண்டும்.

அகர வரிசை அறிவைப் பற்றியும் ஒரு வார்த்தை. அதுவும் முக்கியமானதுதான். ஆனால், அளவுக்கு மீறி அதற்கு முக்கியத்துவம் கொடுத்துவிடக் கூடாதென்றும் எச்சரிக்க விரும்பு

கிறேன். குழந்தைகளுக்கோ, பெரியவர்களுக்கோ எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்காமல், அவர்களுக்கு கிராம வாழ்க்கை பற்றிய விதிகளைச் சொல்லித்தர முடியாது என்று நினைக்காதீர்கள். எழுதப்படிக்கக் கற்றுக்கொடுக்காமலே நடைமுதல் விவகாரங்கள், சரித்திரம், பூகோளம், ஆரம்பக் கணக்கு போன்றவைகளை வாய்மொழியாகவே நிறைய அவர்களுக்குக் கற்பிக்க முடியும். கையைவிட, கண்கள், காதுகள், நாக்கு ஆகியவற்றிற்குத்தான் முதலில் பயிற்சியளிக்க வேண்டும். எழுதுவதற்கு முன்பு படிக்க வரவேண்டும்; எழுத்துகளைப் பார்த்து எழுதக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்பு சித்திரம் வரைய வரவேண்டும். இந்த இயற்கையான முறையைப் பின்பற்றினால், குழந்தைகளின் புரிந்து கொள்ளும் சக்தி இன்னும் நல்ல முறையில் அபிவிருத்தியடைவதற்கு வாய்ப்பு இருக்கும். அதாவது, குழந்தைகளுக்கு அகரவரிசை முறையின்மூலம் கற்றுக் கொடுப்பதை விட இதில் அதிக முன்னேற்றம் இருக்கும்.

ஊழியரின் வாழ்க்கை, கிராமத்தின் வாழ்க்கையுடன் இசைந்ததாக இருக்கும். அன்றாட வாழ்க்கையின் தொல்லைகளைக் கேட்கப் பிடிக்காமல், புத்தகங்களிலேயே மூழ்கிக்கிடக்கும் ஒரு இலக்கிய ரசிகரைப் போல் அவர் வேஷம் போட மாட்டார். அதற்கு மாறாக மக்கள் எந்த சமயத்தில் அவரைப் பார்க்க வந்தாலும், கைராட்டை, தறி, மற்றும் தன்னுடைய இதர கருவிகளை வைத்துக் கொண்டு அவர் ஏதாவது செய்து கொண்டிருப்பதைப் பார்ப்பார்கள். அவர்கள் எவ்வளவு அற்ப விஷயத்தைப்பற்றிக் கேட்டாலும் அக்கறையுடன் அவர் பதில் சொல்லுவார். தன் ஜீவனத்திற்குத் தானே சம்பாதித்துக் கொள்ளும் விஷயத்தில் அவர் எப்போதும் கண்டிப்பாக இருக்க வேண்டும். தம்முடைய அன்றாடத் தேவைகளுக்குப் போதுமான அளவைவிட அதிகமான அளவுக்கு உற்பத்தி செய்யும் சக்தியைக் கடவுள் ஒவ்வொருவருக்கும் அளித்திருக்கிறார். அவரிடம் சாமர்த்தியம் இருந்தால், தன்னுடைய திறமைக்கேற்ற வேலையைத் தேடிக் கொள்ளுவதில் அவருக்குக் கஷ்டமிராது. மக்களே அவருடைய வாழ்க்கைக்கு வேண்டியவற்றை மகிழ்ச்சியுடன் கொடுக்கத் தயாராக இருக்கலாம்; ஆனால், சில இடங்களில் அவரை லட்சியம் செய்யாமல் இருப்பார்கள் என்பதும் சாத்தியமே. அப்போதும் அவர் விடாமல் வேலை செய்து கொண்டுதான் இருப்பார். சில கிராமங்களில், அவருடைய ஹரிஜன ஆதரவு காரணமாக அவர் பகிஷ்கரிக்கப்படலாம். அப்படி ஏற்பட்டால் அவர் ஹரிஜனங்களிடமே சென்று, தனக்கு உணவளிக்கும்படி அவர்களைக் கேட்கட்டும். வேலைக்குத் தகுந்த கூலி என்றைக்கும் உண்டு. மனப்பூர்வமாக அவர் அவர்களுக்குத் தொண்டு செய்தால் ஹரிஜனங்களிடமிருந்து உணவு பெற அவர் தயங்க வேண்டியதில்லை. ஆனால், எப்போதுமே அவர் பெற்றுக் கொள்ளுவதைவிட அவர்களுக்குக் கொடுப்பதுதான் அதிகமாக இருக்க வேண்டும். ஆரம்பகாலத்தில், சாத்தியமானால் ஒரு மத்திய

நிதியிலிருந்து அவர் தனக்காக அற்பத் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம்.

பசுக்கள் விஷயத்தைப்பற்றி வேண்டுமென்றேதான் நான் ஒன்றும் சொல்லாமல் விட்டிருக்கிறேன். கிராம ஊழியர் இந்தப் பிரச்னையைச் சமாளிப்பது கஷ்டம். ஆகையால், இதைப்பற்றி மக்களுக்கு விஷய அறிவு ஊட்டுவதுடன் அவர் நின்று விட வேண்டும். செத்த மாடுகளின் தோலை எப்படிப் பதப்படுத்துவது, எப்படிச் சாயமேற்றுவது, பசுவைக் காப்பாற்றுவதற்குச் சிறந்த வழி என்ன என்ற முறைகளையெல்லாம் நாம் இன்னும் முடிவு செய்யவில்லை. குஜராத்தில் எருமைகளின் பிரச்னை, நிலைமையை இன்னும் சிக்கலானதாக்குகிறது. எருமைகளின் அபிவிருத்திக்கு ஊக்கமளிப்பது பசுக்கள் மடிவதை அனுமதிப்பதாகும் என்பதை மக்கள் உணரும்படி செய்யவேண்டும். ஆனால், மற்றொரு சமயத்தில் இதை விவரமாகக் கவனிக்கலாம்.

நம்முடைய ஆயுதங்கள் ஆன்மிகத் தன்மை வாய்ந்தவை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். கண்ணுக்குப் புலப்படாமல், ஆனால், கண்டிப்பாக வேலைசெய்யும் ஒரு சக்தி அது. பின்னாலிருந்து உந்தித் தள்ளுவதற்கு ஒன்று இருக்கும் வரையில் அது இயங்குவது நிற்பதேயில்லை. ஆகையால், உங்களுடைய எல்லா நடிவக்கைகளுக்கும் ஆன்மிக சக்தியே அடிப்படையாக இருக்க வேண்டும். அதனால்தான் நடத்தை முற்றிலும் தூய்மையானதாக இருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறேன்.

இது அசாத்தியமான ஒரு திட்டமென்றும், இதற்கான தகுதிகள் உங்களிடம் இல்லையென்றும் சொல்லாதீர்கள். இது வரையில் அதை நீங்கள் நிறைவேற்றவில்லையென்பது ஒரு தடையாக இருக்கக் கூடாது. இது உங்களுடைய காரண காரிய அறிவுக்கு ஏற்றதாயிருந்தால், இதைச் செய்ய நீங்கள் தயங்கக் கூடாது. இந்தச் சோதனையைச் செய்து பார்க்கத் தயங்காதீர்கள். மேலும் மேலும் அதிக முயற்சிகளுக்கு இந்தச் சோதனையே ஒரு ஊக்குவிக்கும் சக்தியாக இருக்கும்.

—'ஹரிஜன்' – 31—8—1934

## 2

பல ஊழியர்கள் கிராம வாழ்க்கை என்றால் பயப்படுகிறார்கள். ஏதாவது, ஒரு ஸ்தாபனத்திலிருந்து தமக்குப் பணம் கொடுக்காவிட்டால், கிராமங்களில் வேலை செய்து ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதிக்க முடியாதென்றும், அதிலும் மணமாகி, ஒரு குடும்பமும் இருந்தால், இன்னும் கஷ்டமாக இருக்குமென்றும் அஞ்சுகிறார்கள். இது உறுதியைக் குலைக்கும் ஒரு

எண்ணம் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். நகர்ப்புற மனப்பான்மையுடன் ஒருவர் கிராமத்திற்குச் சென்று, அங்கு நகர வாழ்க்கையை நடத்த வேண்டுமென்று விரும்பினால், நகர மக்களைப்போல், அவரும் கிராமவாசிகளைச் சுரண்டிப் பிழைத்தாலொழிய, தன் வாழ்க்கைக்குப் போதுமானதைச் சம்பாதிக்க முடியாது. ஆனால், ஒருவர் கிராமத்திற்குப் போய்க் குடியேறி, கிராமவாசிகளைப் போலவே வாழ்க்கையை நடத்த முயற்சி செய்தால் தன்னுடைய உடலுழைப்பின் மூலம் தனக்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொள்ளுவதில் கஷ்டம் ஒன்றும் இராது.

கிராமவாசிகளுக்கு நவீன விஷய அறிவு ஒன்றும் கிடையாது. விஷய அறிவில்லாத பரம்பரை வழிகளிலேயே அவர்கள் வருடம் பூராவும் உழைத்துச் சம்பாதிக்கிறார்கள். அவர்கள் அப்படிச் செய்கிறார்களென்றால், அவர்கள் சம்பாதிக்கும் அளவுக்காவது தாமும் சம்பாதிக்க வேண்டுமென்ற நம்பிக்கை அவருக்கு இருக்க வேண்டும். ஒரு கிராமவாசியின் நலனைக் கூடப் பாதிக்காமல் அவர் அதைச் செய்ய முடியும். ஏனெனில், அவர் உற்பத்தி செய்பவராகத்தான் அங்கு போகிறாரேயொழிய, மற்றவர்களின் உழைப்பில் காலம் தள்ளுபவராக அவர் போகவில்லை.

அவருடைய குடும்பம் மிகப் பெரியதல்லவென்றால், அவருடைய மனைவியும் குடும்பத்திலுள்ள மற்றொருவரும் முழு நேர ஊழியர்களாக இருக்க வேண்டும். அந்த ஊழியருக்கு உடனடியாக கிராமவாசியைப் போன்ற உடல் பலம் ஏற்பட்டுவிடாது. ஆனால், தன்னுடைய அவநம்பிக்கையையும், அச்சத்தையும் அவர் விட்டொழித்து விட்டால், தன்னுடைய புத்திசாலித்தனத்தின் மூலம் அந்தக் குறையை ஈடுசெய்து விடலாம். அவர் வாங்கிச் சாப்பிடுபவராக மட்டும் இருக்கமாட்டார், உற்பத்தியிலும் ஈடுபட்டிருப்பார். கிராமவாசிகளின் ஒத்துழைப்பு ஆரம்பத்தில் மெதுவாகத்தான் கிடைக்கும். ஆனால், ஊழியர் கிராமவாசிகளுக்கு ஒரு உதாரணமாக இருந்து, அவர்கள் முன்னிலையிலேயே வேலை செய்ய வேண்டும். தூரத்தில் நின்று கொண்டு மரியாதையுடன் போற்றப்பட வேண்டிய ஒருவர் என்றில்லாமல், அவரும் அவர்களில் ஒருவராகவே வாழ ஆரம்பித்தால், என்றைக்காவது ஒரு நாள் அந்த உதாரணம் அவர்கள் மனத்தில் பதியத்தான் செய்யும்.

நான் செல்லும் கிராமத்தில் ஊழியர் வருவாய் தரக்கூடிய எந்த வேலையைச் செய்யலாம் என்பதே கேள்வியாகும். அவரும், அவருடைய குடும்பத்தில் உள்ளவர்களும், கிராமவாசிகள் உதவி யளித்தாலும், அளிக்காவிட்டாலும், கிராமத்தைச் சுத்தம் செய்வதில் சிறிதுநேரம் செலவிட வேண்டும். தன்னால் முடிந்த அளவுக்கு அவர்களுக்கு வைத்திய உதவியும் அளிக்க வேண்டும். சாதாரண கொயினா மருந்தை யாரும் முதலில் கொடுக்கலாம். கட்டியோ, காயமோ இருந்

தால், அதைச் சுத்தம் செய்யலாம். கண்களும், காதுகளும் அசுத்தமாக இருந்தால் சுத்தம் செய்யலாம். காயத்திற்கு ஒரு மருந்தைத் தடவலாம். கிராமங்களில் தினசரி ஏற்படக் கூடிய சாதாரண நோய் நொடிகளுக்கு எளிய முறையில் வைத்திய முறைகளைக் கூறும் புத்தகம் ஏதாவது இருக்கிறதா என்று நான் தேடிக் கொண்டிருக்கிறேன். அது எப்படியிருந்தாலும், கிராம வேலையில் இரண்டு முக்கியமான அம்சங்கள் இருக்க வேண்டும். இதற்காக அவர்களுக்கு தினசரி இரண்டு மணி நேரத்திற்கு மேல் ஆகக் கூடாது. தினசரி எட்டு மணி நேர வேலை என்பது கிராம ஊழியருக்குக் கிடையாது. கிராமவாசிகளுக்காக அவர் வேலை செய்வது அன்புப் பணியாக இருக்கும். ஆகையால், அந்த இரண்டு மணி நேரத்தைத் தவிர, தன்னுடைய ஜீவனோபாயத் திற்காக அவர் தினம் எட்டு மணி நேரமாவது வேலை செய்ய வேண்டும். அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில்கள் சங்கம் ஆகிய ஸ்தாபனங்களினால் வகுக்கப்பட்டுள்ள புதிய திட்டத்தின் கீழ், எல்லா வேலைகளுக் குமே ஒரு சமமான குறைந்த பட்ச மதிப்பு உண்டு. ஒருவர் ஒரு மணிநேரம் பஞ்சு பட்டை போடுகிறார். காகிதம் செய்பவர் அல்லது நூற்பவர் அல்லது நெசவாளர் அந்த ஒரு மணி நேர வேலைக்கு எவ்வளவு ஊதியம் பெறுவாரோ அதே ஊதியத்தைப் பட்டை போடுபவரும் பெறுவார். அந்த ஒரு மணி நேரத்திற்குள்ள வேலையை அவர்கள் செய்து முடிக்க வேண்டும். ஆகையால், ஊழியர் எந்த வேலையைச் சுலபமாகச் செய்ய முடியுமோ அதைக் கற்றுக் கொள்ளலாம். ஆனால், அவர் உற்பத்தி செய்யும் பொருள் கிராமத்தில் சுலபமாக விற்பனையாகக் கூடியதாக இருக்க வேண்டும்; அல்லது சுற்றுவட்ட கிராமங்களில் விற்பனையாகக் கூடியதாக இருக்க வேண்டும், அல்லது சங்கங்களுக்குத் தேவைப் படும் பொருள்களாக இருக்க வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பெரிய தேவை இருக்கிறது. அதாவது, கலப்படம் இல்லாத உணவுப் பொருள்களும், மற்றப் பண்டங்களும், ஒரு நியாயமான கமிஷனுடன் அடக்க விலைக்குக் கிடைக்கக் கூடிய நியாய விலைக் கடை ஒன்று இருக்க வேண்டும். எவ்வளவு சிறிய கடையாயிருந்தாலும், கொஞ்சம் மூலதனம் இருக்க வேண்டும். ஆனால், ஒரு ஊழியர் வேலை செய்யும் பிரதேசத்தில் ஒரு அளவுக்காவது பழக்கப்பட்டவராக இருந் தால், கடனுக்கு மொத்தமாகச் சாமான்கள் வாங்க முடியும். அந்த அளவுக்கு அவருடைய நாணயத்தில் மக்களுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும்.

இந்த உருவான யோசனைகளை நான் மேற்கொண்டு விரிவாகக் கூற விரும்பவில்லை. கூர்ந்து கவனிக்கும் தன்மையுள்ள ஒரு ஊழியர் முக்கியமான பல விஷயங்களை சீக்கிரத்தில் கண்டு கொள்ளுவார். நாம் சம்பாதிப்பதற்கு என்ன வேலை செய்யலாம், அதே சமயத்தில் நாம் சேவை செய்ய வந்திருக்கும் கிராம

வாசிகளுக்கு நாமே எப்படி உதாரணமாக இருக்கலாம் என்பதையெல்லாம் அவரே கண்டு கொள்ளுவார். கிராமவாசிகளைச் சுரண்டும் தன்மையில்லாத வேலையை அவர் தேர்ந்து எடுத்துக் கொள்ளவேண்டும். அவ் வேலை கிராமவாசிகளின் சுகாதாரத்தையோ, ஒழுக்கங்களையோ பாதிப்பதாக இராமல், கிராம வாசிகள் தங்கள் ஓய்வு நேரங்களில் ஏதாவது ஒரு தொழிலைத் தெரிந்து கொண்டு, அவர்களுடைய சொற்ப வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்குக் கற்றுக் கொடுப்பதாக இருக்க வேண்டும். கிராமங்களிலுள்ள புல் பூண்டுகள், மற்றும் இதர இயற்கை வாய்ப்புகளிலும் அவருடைய கவனம் செல்ல வேண்டும். இவற்றில் பலவற்றை நன்கு பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பதை அவர் சீக்கிரத்தில் கண்டு கொள்ளுவார். சாப்பிடக் கூடிய பூண்டுகள் அவருக்குக் கிடைத்தால், தன் உணவில் ஒரு பாகத்தைத் தேடிக் கொண்டது போலாகும். சலவைக் கல் போன்ற பல கற்களை மீரா பென் எனக்கு அளித்திருக்கிறார். அவை பல காரியங்களுக்கு உபயோகமாக இருக்கின்றன. அவற்றை நான் பல்வேறு உருவங்கள் கொண்ட கருவிகளாக மாற்றிவிடுவேன். கொளுத்துவதற்கென்று தூக்கி எறியப்பட்ட மூங்கில் துண்டுகளை காகா சாகிப் கொடுத்திருக்கிறார். ஒரு சாதாரணக் கத்தியை வைத்துக் கொண்டு அந்தத் துண்டுகளை அவர் காகிதம் அறுக்கும் கத்திகளாகவும், மரக் கரண்டிகளாகவும் செய்திருக்கிறார். இவ்விரண்டையும் ஒரு அளவுக்கு விற்பனை செய்யவும் முடியும். மகன்வாடியிலுள்ள ஊழியர்களில் சிலர், தம் ஓய்வு நேரங்களில் ஒரு பக்கம் எழுதப்பட்ட காகிதத்தை உரைகளாகச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

இதில் உள்ள உண்மை என்னவென்றால், கிராமவாசிகள் எல்லா நம்பிக்கையையும் இழந்துவிட்டார்கள். புதிதாக வரும் ஒவ்வொருவரும் தம் கழுத்தை நெறிக்கத்தான் வருகிறார்களென்றும், தம்மைச் சுரண்டவே அங்கே வருகிறார்களென்றும் கிராமவாசிகள் சந்தேகப்படுகிறார்கள். அறிவுக்கும், உழைப்புக்கும் சம்பந்தமே இல்லாமலிருப்பதால், அவர்களுடைய சிந்தனா சக்தி ஸ்தம்பித்துவிட்டது. தம்முடைய வேலை நேரத்தை அவர்கள் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளுவதில்லை. அன்புடனும், நம்பிக்கையுடனும் ஊழியர்கள் அம்மாதிரி கிராமங்களுக்குப் போக வேண்டும். ஆண்களும், பெண்களும் விஷய அறிவில்லாமல் வேலை செய்து கொண்டும், வருடத்தில் பாதி நாள் வேலை இல்லாமலும் இருக்கிறார்கள். அந்த மாதிரி இடங்களில் தாம் புத்திசாலித்தனமாக வருடம் பூராவும் வேலை செய்தால் கிராமவாசிகளின் நம்பிக்கையைப் பெற அவர் தவறமாட்டார். அவர்களிடையே நாணயமாக வேலை செய்தால் தம் ஜீவனத்திற்குத் தேவையானதைச் சம்பாதித்துக் கொண்டு விடலாம் என்ற உறுதியுடன் ஊழியர்கள் அங்கே போக வேண்டும்.

"என்னுடைய குழந்தைகள் என்ன ஆவது, அவர்களுடைய படிப்பு என்ன ஆவது?" என்கிறார் ஊழியராக வருபவர். நவீன

முறையில்தான் அவர்களுடைய குழந்தைகள் கல்வி பெறவேண்டுமென்றால், நான் உபயோகமான விதத்தில் எதுவும் வழிகாட்ட முடியாது. தம்முடைய பெற்றோர்கள் குடியேறிய கிராமத்தில் என்றைக்கும் அவர்கள் சம்பாதிக்க முடியும் என்ற தகுதி போதுமென்றால், அவர்களை நல்ல உடல் கட்டுள்ள, புத்திசாலித்தனமான, நேர்மையான கிராமவாசிகளாக்கினல் போதுமென்றால், அவர்களுடைய பெற்றோர்களிடமிருந்து கொண்டே அதற்கு வேண்டியதை அவர்கள் கற்றுக்கொள்ளுவார்கள். அவர்களுக்கு விவரம் தெரிய ஆரம்பித்து, கைகளையும், கால்களையும் சீராக உபயோகிக்கத் தெரிந்துகொள்ளும் காலம் முதல், அவர்களும் சம்பாதிக்கத் தொடங்கிவிடுவார்கள். கண்ணியமான ஒரு குடும்பத்துக்குச் சமமான பள்ளிக்கூடம் வேறு எதுவும் கிடையாது; நன்னடத்தையுள்ள பெற்றோர்களுக்குச் சமமான ஆசிரியர்களும் கிடையாது. இன்றைய உயர்நிலைப் பள்ளிகளில் அளிக்கப்படும் கல்வி கிராமவாசிகளுக்கு வெறும் சுமையாகவே இருக்கிறது. அவர்களுடைய குழந்தைகள் அந்தக் கல்வியைப் பெறவே முடியாது. கண்ணியமான ஒரு குடும்பத்தில் அவர்கள் வளர்ந்தால், அந்தக் கல்வியைப் பெருததற்காக அவர்களுக்கு நஷ்டம் எதுவும் இல்லை. கிராமங்களில் வேலை செய்யும் ஆடவரோ, பெண்ணோ கண்ணியமானவர் அல்ல என்றால், கண்ணியமான குடும்பத்தை நடத்தத் தகுதியுள்ளவர் அல்ல என்றால், அத்தகையவர்கள் கிராம ஊழியராகும் பெரும் பாக்கியத்திற்கு ஆசைப்படவே வேண்டாம்.

—'ஹரிஜன்' - 23—11—1935

## 3

(குஜராத் தேசீயப் பள்ளிகளிலுள்ள ஆசிரியர்களின் சிறிய மகாநாடொன்று மே 22-ந் தேதியன்று தித்தாலில் கூடியது. அந்த மகாநாட்டின் அமைப்பாளர் ஒரு கேள்வித்தாள் அனுப்பியிருந்தார். அதன் விவரமாவது:)

1. நமது கிராமங்களின் தேவைக்கு ஏற்றதும், கிராமங்களுக்கு மிகவும் பலனளிக்கக் கூடியதுமான கல்வி முறை என்ன? அம்மாதிரிக் கல்வியை ஒவ்வொரு கிராமத்திலும் எப்படிப் பரப்புவது?

2. மக்களில் பெரும்பாலோர் எழுத்தறிவற்றவர்களாகவும், அறியாமையிலும் இருப்பதை எப்படிப் போக்குவது?

3. அறிவு வளர்ச்சிக்கு எழுதப்படிக்கத் தெரிவது இன்றியமையாததா? அகர வரிசையைக் கற்றுக்கொடுத்து, எழுதப்படிக்கச் சொல்லிக் கொடுக்கும் முறை அறிவு வளர்ச்சிக்குப் பாதகமானதா?

4. எல்லாப் பாடங்களுக்குமே கைத்தொழில் பயிற்சியை நடுநாயகமாக்குவதன் அவசியம்.

5. இப்போதுள்ள தேசீயப் பள்ளிகளின் எதிர்காலம்.

6. குழந்தைகளின் தாய்மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் போதிப்பதற்கான சாத்தியக் கூறு.

7. இப்போதுள்ள பள்ளிக்கூடங்களில் தேசீயக் கல்வியின் அத்தியாவசியமான அம்சங்களில் எவை இல்லாமலிருக்கின்றன?

8. ஆரம்ப, மத்தியதரக் கல்வியின் ஆரம்ப வருடங்களிலேயே ஹிந்தி-ஹிந்துஸ்தானியைக் கட்டாயமாக்க வேண்டிய அவசியம்.

இந்த விஷயங்களைப் பற்றித் தம்முடைய கருத்துகளைத் தெரிவிக்கும்படி காந்திஜியை கேட்டிருந்தனர். தனிப்பட்ட உதாரணங்களைக் கொடுத்து, காந்திஜி அவற்றைக் குறித்து தம் கருத்துகளைத் தெரிவித்தார். அந்த உதாரணங்களை இங்கே நான் கொடுக்கவில்லை. அவருடைய கருத்துகளை மட்டும் திரட்டிக் கொடுத்திருக்கிறேன்.—எம்.டி.

கிராமவாசிகளுக்கு மிகவும் ஏற்றதாக உள்ள கல்வியை நாம் அளிக்க வேண்டுமானால், வித்தியாபீடத்தை கிராமங்களுக்குக் கொண்டு செல்ல வேண்டும். கிராமவாசிகளின் தேவைகளுக்கு ஏற்றவிதத்தில் கல்வியளிக்கக் கூடிய ஆசிரியர்களைத் தயார் செய்வதற்காக, அதை நாம் ஒரு பயிற்சிக்கூடமாக மாற்ற வேண்டும். நகரத்தில் பயிற்சிக்கூடத்தை வைத்துக்கொண்டு, கிராமாவசிகளின் தேவைகளைப் பற்றி ஆசிரியர்களுக்குச் சொல்லிக் கொடுக்க முடியாது; கிராமங்களின் நிலைமையைப் பற்றி அவர்களுக்கு அக்கறை ஏற்படும்படியும் செய்ய முடியாது. நகரவாசிகளுக்கு கிராமங்களில் அக்கறை உண்டாகும்படி செய்து, அவர்களை கிராமங்களிலேயே வசிக்கச் செய்வதென்பது சுலபமான காரியம் அல்ல. சேவா கிராமத்தில் ஒவ்வொரு நாளும் இந்தக் கருத்து உறுதிப்படுவதை நான் காண்கிறேன். ஒரு வருட காலமாக நாங்கள் சேவாகிராமத்தில் இருந்து வருகிறோம். இதனால் நாங்கள் கிராமவாசிகளாகிவிட்டோம் என்று நான் சொல்ல முடியாது; அல்லது நாங்கள் அவர்களுடனேயே ஒன்றியவர்களாகிவிட்டோம் என்றும் சொல்ல முடியாது.

ஆரம்பக் கல்வி சம்பந்தப்பட்டவரையில், முதலில் எழுதப் படிக்கக் கற்றுக்கொடுத்து பயிற்சியை ஆரம்பிப்பது அறிவு வளர்ச்சிக்குத் தடையாக இருக்கிறது என்பதே என்னுடைய திடமான நம்பிக்கையாகும். சரித்திரம், பூகோளம், மனக் கணக்கு, நூல் நூற்றல் முதலியவைகளில் அவர்கள் ஆரம்ப காலப் பயிற்சியாவது பெறும்வரையில், அவர்களுக்கு நான் அகர வரிசை கற்றுக்கொடுக்கமாட்டேன். இவற்றின் மூலமே அவர்களுடைய அறிவை வளர்க்க வேண்டும். தக்ளி அல்லது கைராட்டையின் மூலம் புத்திசாலித்தனத்தை எப்படி வளர்க்க முடியுமென்று கேட்கலாம். உயிரில்லாமல் வெறும் யந்திரங்களைப் போல் அதை போதிக்கவில்லையென்றால், புத்தி சாலித்தனத்தை அதன் மூலம் பிரமாதமாக வளர்க்க முடியும். கைராட்டை அல்லது தக்ளியின் ஒவ்வொரு அம்சத்தையும் ஒரு

குழந்தைக்கு விளக்கிச் சொல்லும் போது, பருத்தியின் சரித்திரத்தையும், நாகரிகத்திற்கும் அதற்குமுள்ள தொடர்பையும் எடுத்துக்கூறும் போது, நூல் இழைகளை எண்ணுவதற்குக் கற்றுக்கொடுக்கும்போது, நூலின் சீரையும் நம்பரையும் கண்டுபிடிக்கக் கற்றுக்கொடுக்கும் போது, பருத்தி பயிராகும் கிராம வயல்களுக்கு அவனை அழைத்துச் செல்லும்போது, அவன் அதை கவனமாகக் கேட்பான்; ஒரே சமயத்தில் அவனுடைய கைகள், கண்கள், மூளை எல்லாவற்றிற்கும் பயிற்சியளித்ததாகவும் இருக்கும்.

ஆறு மாத காலத்திற்கு இந்தவிதமான பூர்வாங்கப் பயிற்சியை அளிக்கலாம். அதன் பிறகு குழந்தை அகர வரிசையை வாசிப்பதற்குத் தயாராக இருக்கக்கூடும். அவன் வேகமாக அதை வாசிக்க முடிந்தால், சாதாரண சித்திரம் வரைதலுக்கு அவன் தயாராகிவிட்டானென்று கொள்ளலாம். கோணங்கள், பறவைகளின் உருவங்கள் முதலியவற்றை அவன் வரையக் கற்றுக்கொண்டுவிட்டால், எழுத்துகளையும் கிறுக்காமல் நன்ருக எழுத ஆரம்பித்துவிடுவான். என்னுடைய குழந்தைப் பருவத்தில் எனக்கு அகரவரிசை கற்றுக்கொடுத்தது நன்ருக ஞாபகமிருக்கிறது. அது எவ்வளவு அலுப்புத் தட்டுவதாக இருந்தது என்பது எனக்குத் தெரியும். என்னுடைய அறிவு ஏன் துருப்பிடித்துக்கொண்டிருக்கிறது என்பதைப் பற்றி யாரும் கவலைப்படவில்லை. எழுதுவது அருமையான ஒரு கலையென்றே நான் நினைக்கிறேன். சிறு குழந்தைகளின் மீது அதைச் சுமத்தி, கல்விக்கு அதையே ஆரம்பமாக வைத்துக்கொள்ளுவதன் மூலம் அக்கலையையே நாம் கொன்றுவிடுகிருேம்; உரிய காலத்திற்கு முன்பாகவே குழந்தைக்கு அகர வரிசையைக் கற்றுக்கொடுத்து அவனுடைய வளர்ச்சியைத் தடுத்துவிடுகிருேம்; எழுதும் கலையையும் பாழடிக்கிருேம்.

எழுத்தறிவின்மையை விட, அறியாமையைப் பற்றித்தான் நாம் வருந்துவதுடன் வெட்கப்படவும் வேண்டும். ஆகையால், முதியோர் கல்வி விஷயத்தில் கூட, அறியாமையைப் போக்குவதற்குத் தீவிரமான திட்டமொன்றைத் தயாரிக்க வேண்டும். நல்ல பாடத் திட்டத்தை வகுத்து, நல்ல ஆசிரியர்களைக் கொண்டு, வயதுவந்த கிராமவாசிக்குப் பயிற்சியளிக்க வேண்டும். இதனல் அவர்களுக்கு எழுத்தறிவிப்பு செய்யக் கூடாதென்று நான் சொல்லவில்லை. அது கல்விக்கு மிகவும் ஏற்ற ஒரு கருவி என்ற மதிப்பை நான் குறைத்துப் பேசவில்லை. அகர வரிசையைச் சுலபமாக்குவதற்கு பேராசிரியர் லாபாக் எடுத்துக்கொண்டுள்ள பெரும் முயற்சிகளை நான் பாராட்டுகிறேன். அதே துறையில் பேராசிரியர் பகவத் செய்துள்ள சேவைகளையும் பாராட்டுகிறேன். விரும்பிய போது சேவா கிராமத்திற்கு வருமாறு பேராசிரியர் பகவத்தை நான் அழைத்திருக்கிறேன். சேவா கிராமத்தில் உள்ள ஆடவர்கள், பெண்கள், குழந்தை-

களிடம் கூட அவருடைய முறையைச் சோதனை செய்து பார்க்கும்படி கூறியிருக்கிறேன்.

கிராமக் கைவினைத் தொழில்களைக் கற்றுக்கொடுப்பதைக் கல்வியின் நடுநாயகமாக வைத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தைப் பற்றி எனக்கு எந்தவிதமான சந்தேகமும் கிடையாது. மனிதனிடமுள்ள சிறந்த தன்மைகளை வெளிக்கொணருவதுதான் கல்வியாகும். ஆனால், இந்தியாவிலுள்ள ஸ்தாபனங்களில் பின்பற்றப்படும் முறையை நான் கல்வி என்று சொல்லமாட்டேன்; அது மூளையைச் சீரழிப்பதாகும். அந்த முறை எப்படியோ மனத்திற்குப் பயிற்சி அளித்துவிடுகிறது. ஆனால், ஆரம்பம் முதலே கைவினைத் தொழில்களின் மூலம் பயிற்சியளிப்பது புத்தி பூர்வமான உண்மையான வளர்ச்சிக்கு உதவியாக இருக்கும்; அறிவு சக்தியையும், மறைமுகமாக ஆன்மிக சக்தியையும் காப்பாற்றுவதற்கும் அது உதவியாக இருக்கும். நான் லலித கலைகளைக் குறைத்துப் பேசுவதாக எண்ணிவிடக் கூடாது. தவறான இடத்தில் வைக்கப்படும் எதுவும் குப்பைக்குச் சமானம் என்று கூறப்படுவது முற்றிலும் சரியானதேயாகும். உபயோகமற்றதும், ஆபாசமாகக் கூட இருப்பதுமான புத்தகங்கள் டன் கணக்கில் வந்து குவிந்துகொண்டிருப்பதை யாரும் பார்க்கலாம்; நான் சொல்லுவது உண்மைதான் என்பதற்கு இது தகுந்த ருசுவாகும்.

—'ஹரிஜன்' - 5—6—1937

# 25

# ஒரு லட்சிய கிராம ஊழியர்

[வார்தாவிலுள்ள கிராம சேவக் பள்ளி மாணவர்களிடையே காந்திஜி பேசினார். இந்தப் பள்ளிக்கூடம் எப்படி ஆரம்பிக்கப்பட்டது என்பதை காந்திஜி விரிவாகக் கூறியதுடன், அவர்கள் மேற்கொண்டு வேலை செய்ய வேண்டிய லட்சியத்தையும் பின் வருமாறு விளக்கிக் கூறினார்.]

இந்தப் பள்ளிக்கூடத்தை ஆரம்பிப்பது பற்றி எனக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லை என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். எங்களிடம் போதிய சாதனங்கள் இல்லை. கிராம சேவையில் எங்களுக்கு நடைமுறை அனுபவமும் அதிகம் இல்லை. மாணவர்களுக்கு உபயோகமான பயிற்சி எதையாவது நாம் அளிக்க முடியுமா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. மாணவர்கள் அதிகமாக வருவார்களா, கிராம சேவைக்கு ஏற்றவர்களாக வருவார்களா என்றும் எனக்குச் சந்தேகமாக இருந்தது. இதுவரையில் என்னுடைய சந்தேகங்கள் பொய்த்து



ஸ்ரீநிகேதனில் விசுவபாரதி கிராமப் புனருத்தாரண அலுவல்களில்
ஈடுபட்டுள்ளவர்களை காந்திஜி பார்வையிடுகிறார் (1940).



கலாபவன் (சாந்திநிகேதன்) மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி பேசுகிறார் (1940).

விட்டன என்பதைக் கூற நான் மகிழ்ச்சியடைகிறேன். குறுகிய இந்த மூன்று மாத காலத்தில் நாங்கள் எதிர்பார்த்ததை விட அதிகமாகவே சாதித்து விட்டோம்.

ஆனால், உங்களுடைய வேலையிலும், வாழ்க்கையிலும் நீங்கள் வைத்துக் கொள்ள வேண்டிய லட்சியம் என்ன என்பதைப் பற்றியே இன்று உங்களிடம் பேச உத்தேசித்திருக்கிறேன்.

உத்தியோகம் சம்பாதிப்பதற்காக நீங்கள் இங்கே வரவில்லை. இன்று மனிதனுடைய மதிப்பு ரூபாய், அணா, பைசாவை அடிப் படையாகக் கொண்டு கணக்கிடப்படுகிறது. ஒருவருடைய கல்விப் பயிற்சி வர்த்தகப் பொருளாகிவிட்டது. அந்த அளவு கோலுடன்தான் நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்களென்றால், நிச்சய மாக ஏமாற்றமடையத்தான் செய்வீர்கள். உங்களுடைய படிப்பு முடிந்த பிறகு மாதம் பத்து ரூபாய் ஊதியத்தில் நீங்கள் சேவையை ஆரம்பிப்பதாயிருக்கலாம்; முடியும் போதும் ஊதியம் அதுவாகவே இருக்கலாம். ஒரு பெரிய வர்த்தக ஸ்தாபனத்தின் நிர்வாகி அல்லது ஒரு உயர்தர அதிகாரி பெறும் ஊதியத்துடன் அதை நீங்கள் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது.

இப்போதுள்ள அளவுகோல்களை நாம் மாற்றியாகவேண்டும். பெரிய உத்தியோகங்கள் கிடைக்குமென்று நாங்கள் உறுதி கூறவில்லை. அம்மாதிரி ஆசைகளிலிருந்து உங்களைத் தடுக்க வேண்டுமென்றே நாங்கள் விரும்புகிறோம். உங்களுடைய சாப் பாட்டுச் செலவு மாதம் ஆறு ரூபாய்க்குள் முடிந்துவிட வேண்டு மென்று எதிர்பார்க்கிறோம். ஒரு ஐ. ஸி. எஸ். காரரின் சாப் பாட்டுச் செலவு மாதம் அறுபது ரூபாயாக இருக்கலாம். எனினும், அதனால் அவர் உடல் வலுவிலோ, அறிவிலோ அல்லது தார்மிகத் துறையிலோ உங்களைவிட உயர்ந்தவராக இருப்பார் என்று அர்த்தமில்லை. அவர் இவ்வளவு சௌக்கியமாக வாழ்க்கையை நடத்தினால் கூட, இந்த அம்சங்களில் அவர் உங்களை விடத் தாழ்ந்தவராகவே இருக்கலாம். உங்களுடைய தகுதிகளை நீங்கள் ரூபாய், அணா கணக்கில் மதிப்பிடவில்லை என்ற காரணத்தினால் தான் இந்த ஸ்தாபனத்திற்கு வந்திருக்கிறீர்களென்று நினைக் கிறேன். அற்ப ஊதியம் பெற்றுக் கொண்டு, உங்களுடைய சேவையை நாட்டுக்கு அளிப்பதில் நீங்கள் ஆனந்தம் கொள்ளு கிறீர்கள். ஒருவர் பங்கு மார்க்கெட்டில் ஆயிரம் ரூபாய் சம்பா திக்கலாம்; ஆனால், நமது தேவைகளுக்கு அவர் முற்றிலும் உப யோகமற்றவராயிருக்கக் கூடும். எளிய முறையில் வாழ்க்கை நடத்தும் நம்மிடையே இருப்பது அவருக்குச் சங்கடமாக இருக்கும்; அதே மாதிரி அவர்களிடையே இருப்பது நமக்கும் கஷ்டமாக இருக்கும். தேசத்திற்காகச் சேவை செய்யக் கூடிய லட்சிய ஊழியர்களே நமக்கு வேண்டும். தமக்கு எந்த விதமான ஆகாரம் கிடைக்கிறது; தாம் சேவை செய்யும் கிராமவாசிகள் தமக்கு என்னென்ன சௌகரியங்களை அளிக்கிறார்கள் என்பதைப்

பற்றி அவர்கள் கவலைப்பட மாட்டார்கள். தம்முடைய தேவைகளுக்கு அவர்கள் கடவுளையே நம்பியிருப்பார்கள். தாம் அனுபவிக்க வேண்டியிருக்கும் சங்கடங்களையும், சோதனைகளையும் பற்றி அவர்கள் பெருமைப்படுவார்கள். ஏழு லட்சம் கிராமங்களைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய இந்த நாட்டில், இது தவிர்க்க முடியாததாகும். வருடா வருடம் சம்பள உயர்வு, பிராவிடெண்ட் நிதி, பென்ஷன் போன்றவைகளில் நாட்டமுள்ள மாதச் சம்பளக்காரர்களை வைத்துக்கொள்ள நமக்குக் கட்டுபடியாகாது. கிராம வாசிகளுக்குச் செய்யும் மனப்பூர்வமான சேவைதான் அவர்கள் பெறும் வெகுமதியாகும்.

கிராமவாசிகளுக்கும் இதுதான் தரமா என்று உங்களில் சிலர் கேட்கக் கூடும். அப்படி இல்லை. இவையெல்லாம் வேலைக்காரர்களாகிய நமக்குத்தானேயொழிய, நமது எஜமானர்களாகிய கிராமவாசிகளுக்கு அல்ல. இவ்வளவு வருடங்களாக நாம் அவர்கள் முதுகில் ஏறி சவாரி செய்து வந்திருக்கிறோம். நமது எஜமானர்களின் நிலைமை இன்றிருப்பதை விட இன்னும் அபிவிருத்தியடைய வேண்டும் என்பதற்காக நாமே இன்னும் அதிக வறுமையை ஏற்றுக்கொள்ளுகிறோம். அவர்கள் இன்று சம்பாதிப்பதை விட இன்னும் அதிகமாகச் சம்பாதிப்பதற்கு நாம் உதவி செய்ய வேண்டும். கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தின் நோக்கம் அதுதான். நான் கூறியுள்ளது போன்ற ஊழியர்கள் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டேயிருந்தாலொழிய அது வளர்ச்சி பெற முடியாது. நீங்கள் அத்தகைய ஊழியர்களாக இருப்பீர்களாக.

—'ஹரிஜன்' – 23—5—1936

# 26

## வித்தியாபீடம் நீடூழி வாழ்க

[குஜராத் ஸாகித்ய பரிஷத்தின் 12-ஆவது மகாநாட்டில் காந்திஜி செய்த தலைமைப் பிரசங்கத்திலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :]

நான் கல்வி, கேள்விகளில் தேர்ச்சி பெற்ற அறிஞனுமல்ல, இலக்கிய மேதையும் அல்ல. ஆனல், நான் வித்தியாபீடத்தின் அத்தியட்சகன் ; ஜோடானி கோஷ்* வெளியிடப்படுவதற்குக் காரணமாக இருந்தவன். சர் சினுபாய் இந்த வித்தியாபீடத்தைச் சென்ற காலத்தில் குறிப்பிட்டார். வித்தியாபீடம் செத்து மறைந்துவிடவில்லை என்பதை சர் சினுபாய்க்குத் தெரிவித்துக்

---

* 'ஜோடானி கோஷ்' என்பது குஜராத்தி மொழி அகராதியாகும். இதைப் பற்றி காந்திஜி இந்தத் தொகுப்பின் 421-ஆம் பக்கத்தில் விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

கொள்ளுகிறேன். அது இன்னும் உயிருடன்தானிருக்கிறது, தொடர்ந்து உயிருடனும் இருக்கும். ஏதோ ஒன்றிரண்டு நாட்களுக்கு வாழ்ந்து விட்டுப் பின்னர் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகும் நிலையற்ற ஒன்றல்ல அது. சுயராஜ்ய மந்திரத்தை நான் சொல்லிக் கொண்டிருக்கும் வரையில் அதுவும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும். ஆசிரமத்திற்கென்று இப்போது குறிப்பிட்ட இடம் எதுவும் இல்லை. அதனால் அது மறைந்து விடவில்லை. நடமாடும் ஆசிரமமாக அது மாறியிருக்கிறது. அதே மாதிரிதான் வித்தியாபீடமும் இருக்கும். யாரோ ஒருவர் பெருந்தன்மையுடன் நமக்கு இரண்டு லட்ச ரூபாய் நன்கொடையளித்தார். அதைக் கொண்டு வித்தியாபீடத்திற்கு ஒரு கட்டிடம் கட்ட முடிந்தது. ஆனால், அம்மாதிரி நன்கொடை கிடைக்கவில்லையென்றால், வித்தியாபீடம் தோன்றியிராதென்று அர்த்தமில்லை. பணம் இல்லாதபோது கூட அது இருக்கத்தான் செய்தது. அது தோன்றிய நாள் முதலே இருந்து கொண்டுதான் வந்திருக்கிறது; இப்போதும் அது இருக்கிறது; எதிர் காலத்திலும் இருந்து கொண்டிருக்கும். அதனுடைய உருவம் மாறியிருக்கிறது என்பது உண்மையே. எதிர்காலத்திலும் மாறுதல்கள் ஏற்படும். வித்தியாபீடத்தில் ஒரு கித்வானியோ, கிருபளானியோ, காகாவோ இல்லை. இப்போது அது கிராம வாசிகளிடம் இருக்கிறது. அறிஞர்கள் தான் ஒரு வித்தியாபீடத்தை நடத்த வேண்டுமா, என்ன? கிராம மக்களும் அதை நடத்த முடியும். அவர்கள் கிராமிய மனப்பான்மை கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம்; அதாவது, பெயருக்கு இல்லாமல், உண்மையாகவே கிராமிய மனப்பான்மை கொண்டவர்களாக இருக்க வேண்டும். கத்தியவாடில் 'பஹுரூபிகள்' என்று ஒரு வகுப்பினர் இருக்கிறார்கள். இவர்கள் யாரைப் போலவும் நடை, உடை, பாவனைகளை நடிக்க முடியும். அம்மாதிரி ஆட்கள் நமக்குத் தேவையில்லை; உண்மையில் கிராமங்களில் நாட்டம் உள்ளவர்களே நமக்கு வேண்டும். அத்தகையவர்கள் நிச்சயமாக வித்தியாபீடத்தை நடத்த முடியும். ஆமதாபாத்திலுள்ள பணக்காரர்களின் பொம்மைகள் போன்ற பையன்களுக்காகவும், பெண்களுக்காகவும் வித்தியாபீடம் ஏற்படவில்லை. பாய் அம்பாலாலின் பெண் அதில் இருக்கிறாள் என்பது உண்மைதான். அதனால் வித்தியாபீடத்தின் தன்மை மாறி விடவில்லை. குழந்தைகளுக்குச் செல்லம் கொடுத்து. வேடிக்கை காட்டுவதற்கான இடம் அல்ல அது. பையன்களையும், பெண்களையும் கிராம சேவைக்குப் பயிற்சி செய்வதற்காகவும், கிராம மக்களின் தேவையை அவர்களுக்கு உணர்த்துவதற்காகவும் அந்த ஸ்தாபனம் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு மாணவர்களை எப்படித் தயார் செய்வது என்பது வித்தியாபீடத்திற்குத் தெரியாமலிருக்கலாம். ஆனால், அதற்கு அவர்கள் முயற்சி செய்கிறார்கள். மனப்பூர்வமாக ஒரு காரியத்தைச் செய்ய முற்படுபவர்கள் சோர்வடைவதில்லை என்று கீதையின் ஆறாவது அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. தன் மேல் பாரத்தை போட்டு வேலை

செய்பவர்களுக்குக் கடவுளே கொடுத்துள்ள உறுதி மொழி இது. மனப்பூர்வமாக வேலை செய்பவர்களுக்கு இது நிச்சயமாகப் பலன் அளிக்கத்தான் செய்யும். தன்னுடைய சென்ற கால வேலையின் மூலம், நன்கொடையாளர்கள் அளித்த பணத்தை வித்தியா பீடம் ஈடு செய்து விட்டது. சென்ற காலத்தில் அது ஈடு செய்திருப்பதைப் போலவே, எதிர் காலத்திலும் செய்து கொண்டிருக்கும் என்பதை சர் சினுபாய்க்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

—'ஹரிஜனபந்து' – 22—1—1936

# 27

# கிராமக் கைத்தொழில் பயிற்சிப் பள்ளி

நிர்வாகிகளின் அனுபவமின்மை காரணமாக இந்தப் பள்ளிக்கூடம் பல மாறுதல்களுக்கு உட்பட்டுவிட்டது. இது புதிய பாதையாகையால் அ. இ. கிராமக் கைத்தொழில் சங்கம் தானே வழியை வகுத்துக் கொண்டு போக வேண்டியிருக்கிறது. ஒரு வருடகாலம் நடத்திய சோதனையின் பலனாக நிர்வாகத்தினர் அதிக ஆசையை இப்போது குறைத்துக் கொண்டிருக்கிறார்கள். சோதனைகளின் மூலம் ஆசிரியர்களும் தமக்குத் தாமே பயிற்சி அளித்துக் கொண்டிருக்கிறார்கள். அடுத்த பள்ளிக்கூட வருடம் ஆரம்பமாகும் போது, அதுவரையில் இருந்ததைவிட அவர்கள் இன்னும் அதிகத் தயாரான நிலைமையில் இருப்பார்கள். அதிகமாக ஆசைப்படாமல், இலக்குகளைக் குறைத்து நிர்ணயித்து, பிரத்தியட்சக் கண்ணோட்டத்துடன் வெளியிடப்பட்டுள்ள பள்ளிக்கூட அறிக்கையின் விவரம் பின்வருமாறு:

" 1937 ஜூலை 1 வ. முதல் அ. இ. கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தின் கிராம ஊழியர் பயிற்சி வகுப்புகள் ஆரம்பமாகும்.

ஜூன் 16 வ-யுடன் மாணவர்களைச் சேர்ப்பது நிறுத்தப்படும். ஜூன் 29-க்குள் மாணவர்கள் பள்ளியில் ஆஜராக வேண்டும்.

1. பாடங்களைக் கற்பிக்க ஹிந்தியே போதனை மொழியாக இருந்து வரும்.

2. வகுப்புகள் 12 மாத காலத்திற்கு நடத்தப்படும். அதில் இரண்டு மாதங்கள், அனுபவ பூர்வமான பயிற்சிக்காக கிராம அபிவிருத்தி நிலயங்களில் செலவிடப்படும். முதல் பத்து மாதங்களில் பின் கண்ட கைத்தொழில்களில் பயிற்சி அளிக்கப்படும். கிராம வேலைகளின் கொள்கைகளைப் பற்றியும் போதிக்கப்படும்.

(அ) நெல் குத்துதல், அரைத்தல்,
(ஆ) காகிதம் செய்தல்,
(இ) செக்கில் எண்ணெ ஆட்டுதல்,
(ஈ) பனை வெல்லம் செய்தல்,
(உ) தேன் வளர்த்தல்.

மேற்கூறிய தொழில்களில் ஒன்றை மாணவர்கள் தேர்ந் தெடுத்துக் கொண்டு, தினசரி ஆறுமணி நேரம் அதில் செலவிட வேண்டும்.

3. வருட இறுதியில் மாணவர்களுக்குப் பரீட்சை நடத்தப் படும்; அவசியமானல் பயிற்சி காலம் நீடிக்கப்படும்.

4. பள்ளிக்கூடத்தில் சேர விரும்பும் மாணவர்கள் 18 வய துக்கும் உட்பட்டவர்களாக இருக்கக் கூடாது; நல்ல தேகாரோக் கிய முள்ளவர்களாக இருக்க வேண்டும். பள்ளிக்கூடக் கமிட்டி யினர் விரும்பினல் மாணவர்களில் சிலருக்கு ஒரு பூர்வாங்கப் பரீட்சை வைக்கப்படும். அதில் அவர்கள் தேர்ச்சி பெருவிட் டால் அவர்களுடைய விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படலாம். அவர்களுக்கு ஹிந்தி பேசத் தெரிந்திருக்க வேண்டும். அவர் கள் வழக்கமாகக் கதர் உடுத்துபவர்களாக இருக்க வேண்டும். கக்கூஸ்களை சுத்தம் செய்வது, சமையல் வேலை, நூல் நூற்றல், மற்றும் பள்ளிக்கூட அதிகாரிகளால் விதிக்கப்படும் இதர உட லுழைப்பு வேலைகள் ஆகியவற்றைச் செய்ய அவர்கள் தயாராக இருக்க வேண்டும்.

5. மாணவர்கள், தம் சொந்தக் கையெழுத்தில் ஹிந்தி யிலோ அல்லது தம் தாய் மொழியிலோ விண்ணப்பங்களைப் பூர்த்தி செய்து மகன்வாடிக்கு அனுப்ப வேண்டும். விண்ணப்பங் களுடன் இரண்டு சிபாரிசுகளும் இருக்க வேண்டும். வார்தாவி லிருந்து திரும்பி ஊருக்குப் போவதற்குப் போதுமான அளவு முன் பணம் அனுப்ப வேண்டும். திரும்பிப் போகும் செலவு பத்து ரூபாய்க்குக் குறைவாக இருந்தால், முன் பணமாகக் கட்ட வேண்டிய தொகை பத்து ரூபாய்.

பயிற்சி பள்ளிக்கூடக் கமிட்டியின் காரியதரிசியிடமிருந்து கடிதம் வருவதற்கு முன்பு யாரும் வரக்கூடாது.

இடவசதி, போதனை இரண்டும் இலவசமாக அளிக்கப்படும். சாப்பாட்டுச் செலவு மாதம் சுமார் ஏழு ரூபாய் ஆகும். மாணவர் கள் தமக்கு வேண்டிய படுக்கை, ஆடைகள், சாப்பிடுவதற்கு வேண்டிய தட்டு, டம்ளர் முதலியவைகளையும், எழுது கோல் களையும் தாமே கொண்டு வரவேண்டும்.

6. தகுதியுள்ள சில மாணவர்களுக்கு மாதம் ஏழு ரூபாய் உபகாரச் சம்பளம் கொடுக்கப்படும். கைராட்டினத்தில் நூற் பதில் பூர்வாங்கப் பயிற்சி பெருத எந்த மாணவருக்கும் உபகாரச்

சம்பளம் கிடையாது. (சர்க்காவில் மணிக்கு 250 கஜம் நல்ல நூல் நூற்கத் தெரிய வேண்டும்.)''

மாணவர்கள் இந்த அறிக்கையை கவனமாக வாசிப்பார்களாக. உடலுழைப்பு செய்ய விருப்பமில்லாமல், தமக்குப் பிடித்தமான தொழிலை மட்டும் கற்றுக் கொள்ள வேண்டுமென்று விரும்புபவர்கள் ஏமாற்றமடைவார்கள். மேலே குறிப்பிட்ட தொழில்களைக் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்திருப்பவர்களுக்கு இங்கே நல்ல வாய்ப்பு இருக்கிறது.

—'ஹரிஜன்' - 17—4—1937

## 2

இந்தப் பயிற்சிப் பள்ளிக்கூடத்தில் தேர்ச்சி பெற்றவர்களுக்கு அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்குவதற்காக நடந்த விழாவின் நடவடிக்கைகளிலிருந்து சில பகுதிகளை நான் கீழே கொடுத்துள்ளேன்:

''அ. இ. கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தின் கிராம ஊழியர் பயிற்சிப் பள்ளிக்கூடத்தின் இந்த விழா மகன்வாடியில் நடந்தது. சர்தார் வல்லபாய் பட்டேல் தலைமை வகித்தார். நவம்பர் 17வ விழா நடந்தது. மத்திய மாகாணப் பிரதம மந்திரி பண்டித ரவி சங்கர சுக்லா, ஸிந்து மாகாணப் பிரதமர் கான்பகதூர் அல்லாபக்ஷ், ஆசாரிய ஜே. பி. கிருபளானி, அ. இ. கிராமக் கைத்தொழில் சங்க போர்டின் அங்கத்தினர்கள் உட்பட ஏராளமானவர்கள் வந்திருந்தார்கள். தலைவரையும், மற்றவர்களையும் வரவேற்று, பயிற்சிப் பள்ளியின் சூபரின்டென்ட் ஸ்ரீ ஜே. பி. பட்டேல் செய்த பிரசங்கத்தின் விவரம் வருமாறு:

''இந்த கிராமசேவக் வித்தியாலயத்திற்கு இன்று மூன்று ஆண்டுகள் பூர்த்தியாகின்றன. இந்தக் காலத்தில் கைத் தொழில்களைக் கற்றுக் கொடுக்கும் விஷயத்தில் நாங்கள் சிறிது அனுபவம் பெற்றிருக்கிறோம்; காலப் போக்கில் மேலும் அனுபவம் பெறுவோம் என்றும் நம்புகிறோம்.

''காகிதம் செய்தல், எண்ணெ ஆட்டுதல், தேனீ வளர்த்தல், வெல்லம் காய்ச்சுதல், நெல் குத்துதல், அரைத்தல், மாவு அறைத்தல் ஆகிய தொழில்கள் இப்போது கற்றுக் கொடுக்கப்படுகின்றன. வித்தியாலயத்தின் வகுப்புகள் ஐந்து மாதங்களுக்கு நடத்தப்படுகின்றன. அந்தக் காலத்தில் காகிதம் செய்தல் அல்லது எண்ணெ ஆட்டுதல் ஆகிய இரண்டில் ஒன்று கற்றுக் கொடுக்கப்படுகிறது. மற்றக் கைத்தொழில்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மாதம் ஆகிறது.

''கிராமியப் பொருளாதாரம், கணக்கு வைத்துக்கொள்ளுதல், சுகாதார விதிகள் ஆகியவைகளும் அதிகப்படியாகக் கற்றுக்கொடுக்கப்படுகின்றன.

''படிப்பை முடித்த பிறகு ஏதாவது ஒரு கிராம சேவையில் ஈடுபட வேண்டுமென்ற நோக்கத்துடனேயே மாணவர்களை இங்கே சேர்க்கிறோம். ஆகையால், கூடியவரையில் ஏற்கனவே ஏதாவது தேசீய சேவை செய்து கொண்டிருப்பவர்கள், இன்னும் அதிகப் பயிற்சி தேவையாக இருப்பவர்கள் அல்லது ஏதாவதொரு ஸ்தாபனத்தினால் அனுப்பப்படுபவர்களையே சேர்க்கிறோம். இங்கே வருபவர்கள் கூடியவரையில் முதிர்ச்சி பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்பதற்காக, மாணவர்கள் 22 வயதானவர்களாக இருக்க வேண்டுமென்று வைத்திருக்கிறோம்.

''ராஷ்டிர பாஷையின் மூலம் பாடங்கள் சொல்லித் தரப்படுகின்றன. ஆகையால், ராஷ்டிர பாஷையிலும் மாணவர்கள் சிறிது பயிற்சி பெறுகிறார்கள். எங்களுடைய சமையல் அறையில் ஒரு ஹரிஜனும், ஒரு முஸ்லிமும் வேலை செய்கிறார்கள். இது தற்செயலாக ஏற்பட்டதேயாகும். இதன் மூலம் தீண்டாமை ஒழிப்பு, சாதி வேற்றுமை ஒழிப்பு ஆகியவற்றிலும் கொஞ்சம் பயிற்சி பெறுகிறார்கள். மாவரைத்தல், சுத்தம் செய்தல், சமையல் செய்தல் போன்ற வேலைகளை மாணவர்களேதான் செய்கிறார்கள். இவ்வாறாக அவர்களுடைய வாழ்க்கை இங்கே சுறுசுறுப்பு நிறைந்ததாக இருக்கிறது. உடலுழைப்பின் மேன்மையையும் இங்கே தெரிந்துகொள்ளுகிறார்கள். இதனுடைய நேரடியான பலன் என்னவென்றால், அவர்கள் இங்கு தங்கியிருக்கும் காலத்தில் நல்ல தேக ஆரோக்கியத்துடன் இருக்கிறார்கள்.

''இம்மாதிரி பயிற்சியின் மூலம் கிராமங்களில் போய்க் குடியேறக்கூடிய ஐம்பது ஊழியர்களை வருஷா வருஷம் வித்தியா பீடம் தயார் செய்ய முடிந்தால், நாளடைவில் இந்தியா பூராவிலும் கிராம ஊழியர்கள் பரவியிருப்பார்களென்று நம்புகிறோம்.''

காரியதரிசி ஸ்ரீ டி. பி. பட் வாசித்த அறிக்கையில், பின்கண்ட சுவாரஸ்யமான விவரங்கள் காணப்படுகின்றன:

''இப்போது முடிவடைந்துள்ள பயிற்சி வகுப்புக்கு 48 மாணவர்களைச் சேர்த்தோம். எங்களிடம் அனுப்பப்பட்ட மாணவர்களைப் பற்றிய விவரம் பின்வருமாறு:

| | |
|---|---|
| சென்னை சர்க்கார் | 10 |
| மத்திய மாகாண சர்க்கார் | 8 |
| பம்பாய் ,, | 2 |
| ஒரிஸ்ஸா ,, | 1 |
| பரோடா சமஸ்தானம் | 2 |
| ஜெயப்பூர் சமஸ்தானம் | 1 |
| மொத்தம் | 24 |

"மற்ற மாணவர்களில் எட்டு பேர்களுக்கு சங்கத்திலிருந்து உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்டது; பத்து பேர்களுக்கு, பள்ளிக் கட்டணம் செலுத்த வேண்டியதில்லையென்று விலக்கு அளித்தார்கள். மற்றவர்கள் பணம் கொடுத்துப் படித்தவர்கள் ஆவர்.

"காங்கிரஸ் மாகாணப் பிரிவினையின்படி மாணவர்களின் விவரம் பின்வருமாறு: ஆந்திரம் 8, பீகார் 4, பர்மா 1, மத்ய மாகாணம் 8, குஜராத் 7, கர்னாடகம் 3, கேரளம் 3, மகாராஷ்டிரம் 2, தமிழ் நாடு 8, ஐக்கிய மாகாணம் 5.

"கைகளுக்கு மட்டுமில்லாமல், மாணவர்களின் மூளைக்கும் பயிற்சியளிக்கக்கூடிய விதத்தில் எங்களுடைய பாட அட்டவணையைத் தயாரித்திருக்கிறோம். கொள்கையை விளக்குவதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறோம். ஆகையால் எங்கள் மாணவர்களுக்கு தம் தொழில் வெறும் யந்திரங்களைப் போல் இல்லாமல், அறிவை உபயோகிப்பதற்கும் இது வாய்ப்பளிக்கும். கைத் தொழில்களின் உற்பத்தி சம்பந்தமான எல்லா வேலைகளையும், சம்பள ஆட்கள் யாருமில்லாமல் மாணவர்கள் தாமே செய்கிறார்கள். இதனால் மாணவர்கள் உற்பத்தியின் பல்வேறு அம்சங்களையும் புரிந்துகொள்ளுவது சௌகரியமாக இருக்கிறது; இதிலுள்ள அலுப்பூட்டும் வேலைப் பளுவைக் குறைப்பதற்கு வழி கண்டு பிடிப்பதற்கும் தூண்டிவிடுகிறது.

"இந்தக் காலத்தில், வித்தியாலயத்திலிருந்து 14 மாணவர்கள் போய்விட்டார்கள். 34 மாணவர்கள் பரீட்சைக்கு ஆஜரானார்கள். அவர்களில் எட்டு மாணவர்கள் 66 சத விகிதத்திற்கு அதிகமாகவே மார்க் வாங்கியிருக்கிறார்கள். அவர்கள் சிறப்பு அத்தாட்சி பெறத் தகுதியுள்ளவர்கள்; 18 மாணவர்கள் சாதாரணமான தேர்ச்சிதான் பெற்றிருக்கிறார்கள். மற்றும் ஐந்து மாணவர்கள் கொள்கைப் பரீட்சையில் தவறிவிட்டார்கள், ஆனால் செயல் முறைப் பரீட்சையில் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள். அவர்களுக்குக் கைத் தொழில் அத்தாட்சிப் பத்திரங்கள் அளிக்கப்பட்டுள்ளன. மொத்தம் 73 சத விகித மாணவர்கள் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள்."

வெளியே செல்லும் மாணவர்களின் பட்டியல் ஒன்றை வைத்துக்கொள்ள வேண்டுமென்று நிர்வாகிகளுக்கு நான் யோசனை கூறுகிறேன். அப்போதுதான் அவர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள முடியும். அத்துடன் ஆராய்ச்சித் தன்மை வாய்ந்த வகுப்புகளைக் கடிதப் போக்குவரத்தின் மூலமே வைத்துக்கொள்ளலாம். சாத்தியமானவரையில், இங்கிருந்து போகும் ஒரு மாணவர், நைந்துபோன பழைய பாதையில் விழுந்துவிடக் கூடாது அல்லது தான் முன்னேற்றம் அடையவில்லையே என்று ஏக்கமடையவும் கூடாது.

—'ஹரிஜன்' – 10—12—1930

# 28

# கல்வியைப் பற்றி எனது கருத்துகள்

[27—6—32-க்கும், 10—7—32-க்கும் இடையே காந்திஜி, அவர் எழுதிய 'சத்தியாக்கிரக ஆசிரம இதிகாசம்' என்ற குஜராத்தி புத்தகத்தில் தமது கருத்துகளைக் குறிப்பிட்டிருந்தார். அவற்றின் சுருக்கமான விவரம் பின்வருமாறு :]

கல்வியைப் பற்றி எனக்குச் சில விசித்திரமான கருத்துகள் உண்டு. என்னுடைய சகபாடிகள் அவற்றை முழுமையாக ஏற்றுக்கொள்ளவில்லை. அக்கருத்துக்கள் பின்வருமாறு :

1. சிறு பையன்களும், பெண்களும் எட்டு வயதுவரையில் சேர்ந்து படிக்க வேண்டும்.

2. ஒரு கல்வித் துறையாளரின் மேற்பார்வையில் பெரும்பாலும் உடலுழைப்பிலேயே அவர்கள் பயிற்சி பெற வேண்டும்.

3. ஒவ்வொரு குழந்தையினிடமும் உள்ள விசேஷத் தன்மைகளைத் தெரிந்துகொண்டு, அதற்குத் தகுந்தாற்போல் அந்தக் குழந்தை என்ன வேலையில் ஈடுபடவேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும்.

4. ஒரு காரியத்தைச் செய்யும் போது, அதற்கான காரணங்களை விளக்கிக் கூற வேண்டும்.

5. குழந்தை விஷயங்களைப் புரிந்துகொள்ள ஆரம்பிக்கும் போது, பொது அறிவு புகட்ட வேண்டும். எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளுவது பின்னர்தான்.

6. குழந்தைக்கு முதலில் எளிய கோணங்களை வரையக் கற்றுக்கொடுக்க வேண்டும். குழந்தை அதைச் சுலபமாக வரையக் கற்றுக்கொண்டவுடன் அகர வரிசையை எழுதக் கற்றுக்கொடுக்க வேண்டும். இப்படிச் செய்தால் ஆரம்பம் முதலே கையெழுத்து நன்ருக இருக்கும்.

7. எழுதுவதற்கு முன்பு அவர்களுக்கு படிக்கத் தெரிய வேண்டும். எழுத்துகளைப் பாடங்களாக பாவித்து, அவற்றை அடையாளம் கண்டுபிடித்து, பின்னர் அதே மாதிரி வரைய வேண்டும்.

8. இந்த முறையில் பயிற்சி பெறும் ஒரு குழந்தை, எட்டு வயதாகும் போது, தன்னுடைய சக்திக்கு ஏற்றவாறு நிறையக் கற்றுக்கொண்டிருக்கும்.

9. குழந்தைகளுக்கு நிர்ப்பந்தமாக எதையும் கற்றுக் கொடுக்கக் கூடாது.

10. அவனுக்குச் சொல்லிக் கொடுக்கப்படும் ஒவ்வொரு விஷயத்திலும் அவனுக்கு அக்கறை இருக்க வேண்டும்.

11. கல்வி என்பது குழந்தைகளுக்கு விளையாட்டைப் போல் தோன்ற வேண்டும். விளையாட்டு, கல்வியின் அத்தியா வசியமான ஒரு அம்சமாகும்.

12. எல்லாக் கல்வியும் தாய் மொழியின்மூலமே போதிக்கப் படவேண்டும்.

13. குழந்தைகள் எழுத்துகளைக் கற்றுக்கொள்ளுவதற்கு முன்பு, தேசீய மொழியாக ஹிந்தி, உருதுவை அவர்களுக் குக் கற்றுக்கொடுக்க வேண்டும்.

14. மத சம்பந்தமான போதனை இன்றியமையாததாகும். ஆசிரியரின் நடத்தையைப் பார்த்தும், அவர் சொல்லுவதைக் கேட்டும் குழந்தை அதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

15. குழந்தையின் கல்வியில் 9 வயது முதல் 16 வயது வரையில் இரண்டாவது கட்டமாகும்.

16. முடிந்தவரையில், இரண்டாவது கட்டத்திலும் பையன் களும், பெண்களும் சேர்ந்தே படிக்க வேண்டும்.

17. ஹிந்து குழந்தைகளுக்கு சமஸ்கிருதமும், முஸ்லிம் குழந் தைகளுக்கு அரபு மொழியும் கற்றுக்கொடுக்க வேண்டும்.

18. இரண்டாவது கட்டத்தில் உடலுழைப்புப் பயிற்சி நீடிக்க வேண்டும். தேவைக்கேற்றவாறு இலக்கியக் கல்விக்கு அதிக நேரம் ஒதுக்கப்பட வேண்டும்.

19. இந்தக் கட்டத்தில் குழந்தைகளுக்கு அவர்களுடைய பெற்றோர்களின் தொழிலை போதிக்க வேண்டும். குழந்தைகள் தாமாகவே தம்முடைய பரம்பரைத் தொழில் மூலம் ஜீவனத்திற்கு சம்பாதிக்கக் கூடிய விதத்தில் அந்த போதனை இருக்க வேண்டும். இந்த முறை பெண்களுக்குப் பொருந்தாது.

20. இந்தக் கட்டத்தில் உலக சரித்திரம், பூகோளம், சுகாதார நூல், வான சாஸ்திரம், கணக்கு, க்ஷேத்திர கணிதம், பின்ன கணிதம் முதலியவைகளில் அறிவு பெறவேண்டும்.

21. இந்தக் கட்டத்தில் ஒவ்வொரு குழந்தைக்கும் தையல் வேலையும், சமையல் வேலையும் கற்றுக் கொடுக்க வேண்டும்.

22. 16 வயது முதல் 25 வயது வரையில் மூன்றாவது கட்டம். இந்தக் காலத்தில் ஒவ்வொரு வாலிபனும் பெண்ணும் தன்னுடைய விருப்பம், பண வசதிக்கேற்ற கல்வியைப் பெற வேண்டும்.

23. இரண்டாவது கட்டத்தின் போது (9-16) கல்வி 'தன்னைக்கட்டிக் கொள்ளுவதாக இருக்க வேண்டும். அதாவது, குழந்தை கற்றுக் கொண்டிருக்கும் போதே, எப்போதும் ஏதாவது ஒரு தொழிலைச் செய்து கொண்டிருக்கும். அதன் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொண்டு பள்ளிக்கூடச் செலவை ஈடு செய்து கொள்ளுவது சாத்தியமாக இருக்கும்.

24. ஆரம்பம் முதலே உற்பத்தி தொடங்கிவிடுகிறது. ஆனால், முதல் கட்டத்தின்போது அது செலவை ஈடுசெய்து கொள்ளாது.

25. ஆசிரியர்களுக்கு உயர்ந்த சம்பளங்கள் கொடுக்கக் கூடாது. ஜீவனத்திற்கு வேண்டியதையே கொடுக்க வேண்டும். சேவையே அவர்களின் நோக்கமாக இருக்க வேண்டும். ஆரம்பக் கல்வி கட்டத்தில் கண்டவர்களையெல்லாம் ஆசிரியர்களாகச் சேர்த்துக் கொள்ளுவது தவறாகும். எல்லா ஆசிரியர்களும் சிறந்த ஒழுக்கமுள்ளவர்களாக இருக்க வேண்டும்.

26. கல்வி ஸ்தாபனங்களுக்கு, அதிகச் செலவில் பெரிய கட்டிடங்கள் அவசியமில்லை.

27. பலமொழிகளில் ஒன்றாகத்தான் ஆங்கிலம் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். ஹிந்திதான் தேசீய மொழியாதலால், மற்ற நாடுகளுடன் தொடர்பு கொள்வதற்கும், சர்வதேச வர்த்தகத்திற்கும்தான் ஆங்கிலம் உபயோகிக்கப்படவேண்டும்.

28. பெண்கள் கல்வி சம்பந்தப்பட்டவரையில், அது ஆண்களுக்கு அளிக்கப்படும் கல்வியிலிருந்து மாறுபட்டிருக்க வேண்டுமா, எப்போது அவர்களுடைய கல்வி ஆரம்பமாக வேண்டும் என்று நிச்சயமாக என்னால் சொல்ல முடியவில்லை. ஆனால், ஆண்களுக்குள்ள அதே வசதிகள் பெண்களுக்கும் இருக்க வேண்டும் என்பதும், அவசியமான சந்தர்ப்பங்களில் விசேஷ வசதிகளும் செய்து தரப்பட வேண்டும் என்பதுமே எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

29. எழுத்தறிவில்லாத முதியோர்களுக்காக இரவுப் பள்ளிகள் இருக்க வேண்டும். ஆனால், அவர்களுக்கு எழுதப் படிக்கவும், கணக்குப் போடவும் கற்றுக் கொடுக்க வேண்டுமென்று நான் நினைக்கவில்லை. பிரசங்கங்கள் மூலம் அவர்கள் பொது அறிவு பெறுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அவர்கள் விரும்பினால், எழுதப் படிக்கவும், கணக்குப் போடவும் கற்றுக் கொள்ள நாம் ஏற்பாடு செய்ய வேண்டும்.

பகுதி ஆறு

# பிரச்னை தீர வழி

## 1

## தவருன சில வாதங்கள்

### 1

நம்முடைய வருமானத்தில் 17 கோடியை நிறுத்திவிட்டால், நம் கல்வியைப் பாழடித்து விடுவோம் என்று குறை கூறு பவர்கள் சொல்லுகிருர்கள். நம்முடைய கல்விக்கான செலவு பூராவும் கலால் வருமானத்திலிருந்துதான் ஈடு செய்யப்படு கிறது என்று சர்க்கார் சொல்லுவதை, அவர்கள் கண்ணை மூடிக் கொண்டு அப்படியே நம்புகிருர்கள். இது உண்மையாக இருந்தால், நிச்சயமாக அந்தக் கல்வியை உதறித்தள்ள வேண்டி யதுதான். ஒரு காரணம், சர்க்காரின் கொடுங்கோன்மை முறை; மற்ருெரு காரணம், பாவத்தன்மை வாய்ந்த ஒரு வியாபாரத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்திலிருந்து கல்வியளிக்கப்படுகிறது என்பதே.

கலால் வருமானத்தை சர்க்கார் கல்விக்கென்று ஏன் ஒதுக்கி வைக்க வேண்டும்? அதற்குப் பதிலாக நிலவரி வருமானத்தை அதற்கு உபயோகித்தால் என்ன? கலால் வருமானத்தை ராணுவச் செலவுக்கு ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது? அப்படிச் செய்தால் கலால் வருமானம் நின்றுபோகும்போது படைபலக் குறைப்பு ஏற்படக் கூடும். சுயராஜ்யம் வந்த பிறகு ராணுவத்திற்காக நாம் கோடிக் கணக்கில் செலவிடப் போவ தில்லை. ராணுவச் செலவில் 17 கோடியை நாம் சுலபமாக மிச்சம் பிடிக்க முடியுமாகையால், கலால் வருமானம் நின்று போவதைப் பற்றி நாம் பீதியடைய வேண்டியதில்லை.

நமது கல்விக்காகும் செலவை, கலால் வருமானத்தி லிருந்தோ, நிலத் தீர்வை வருமானத்திலிருந்தோ ஈடு செய்யக் கூடாது. சுயராஜ்ய அமைப்பில், கைராட்டையே அதன் முக்கிய ஆதாரமாக இருக்கவேண்டும். ஒவ்வொரு பள் ளிக்கூடத்திலும், கல்லூரியிலும், கைராட்டையையும், தறியை யும் புகுத்திஞல் நமது கல்விக்கு வேண்டிய பணம் எளிதில் கிடைத்துவிடும். இன்று நமது பையன்கள், தம் நேரம் பூராவையும் நூற்பதில் செலவிட வேண்டுமென்று நான் விரும்பு கிறேன். சுயராஜ்யம் கிடைத்த பிறகு, ஒரு மணி நேரமாவது

அதற்குச் செலவிட வேண்டும். நமது வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் சுயராஜ்யத்தின் முத்திரை இருக்க வேண்டும்.

இன்று நமது பள்ளிக்கூடங்களெல்லாம் அடிமைகளை உற்பத்தி செய்யும் தொழிற் சாலைகளாகவே இருக்கின்றன. சுயராஜ்யத்தின் கீழ் அளிக்கப்படும் கல்வி, பையன்கள் தம் இளமையிலிருந்தே தன்னிறைவு பெறச் செய்யும் தன்மை வாய்ந்ததாக இருக்கும். அவர்களுக்கு வேறு எந்த விதமான தொழிலையும் கற்றுக் கொடுக்கலாம்; ஆனால், நூற்றல் கட்டாய மானதாக இருக்கும். ஏழை எளியவர்களுக்குக் கைராட்டையே ஆறுதலாக இருக்க வேண்டும். அதிலுள்ள நன்மை வேறு எதிலுமில்லை. விவசாயத்திற்குத் துணையாக இருக்கக் கூடியதும் அது ஒன்றுதான். எல்லோரும் தச்சர்களாகவோ, கருமான்க ளாகவோ இருக்க முடியாது; ஆனால், எல்லோரும் நூற்பவர் களாக இருக்க வேண்டும். தம் தேசத்திற்காகவோ, தம் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்காகவோ நூற்க வேண்டும். எல்லா மக்களுக்குமே துணிமணிகள் வேண்டும். ஆகையால், கைராட்டையும் எல்லோருக்கும் பொதுவானதாக இருக்க வேண்டும்.

இலக்கியக் கல்வியின் அவசியமான ஒரு துணையாக இப்போது முதலே நூல் நூற்றலை கற்றுக் கொடுக்க ஆரம்பிப் போமாக. பின்னர் சுயராஜ்யம் வந்த பிறகு அந்தப் பிரச்னை யைக் குறித்துப் புதிதாகச் சண்டை போட வேண்டியிராது.

—'எங் இந்தியா' – 30—3—1921

## 2

கதர் நூல் இழைதான் சுயராஜ்யத்திற்குத் திறவுகோல் என் பதில் நமக்கு நம்பிக்கையிருந்தால், கைராட்டையின் சக்தியில் நமக்கு முழு நம்பிக்கையிருந்தால், நாமெல்லோரும் ஆர்வத் துடன் விரும்பும் இந்தியப் பொருளாதார அபிவிருத்தி, கைராட் டையைத் தவிர வேறு எதன் மூலமும் ஏற்பட முடியாதென்று நாம் உறுதியாக நம்பினால், தம்முடைய வருமானம் போதுமானதா யிருப்பதாலும், வேறு உபதொழில்கள் இல்லாததாலும் கோடிக் கணக்கான நம் நாட்டு மக்கள் தம் சொற்ப தேவைகளைக் கூட சமாளிக்க முடியாமல், எப்போதும் கடன் பட்டே இருக்கிறார்கள் என்ற உண்மையை நாம் புரிந்து கொண்டால், முதல் காரியமாகப் பையன்களுக்கு நூல் நூற்கக் கற்றுக் கொடுக்கும்படி நாம் செய்ய வேண்டும். இதனால் இரண்டு பலன்கள் ஏற்படும். முதலில் அவர் கள் தம் தேவைகளைத் தாமே பூர்த்தி செய்து கொள்ளக் கற்றுக் கொள்ளுவார்கள். இரண்டாவதாக, பள்ளிக்கூடங்களில் மாணவர் களுக்கு நூற்கக் கற்றுக் கொடுக்கும்போது அது சீக்கிரமாக எல்லா இடங்களிலும் பரவிவிடும். இது தான் நமது விதி என்று

ஏக்கமுற்று விட்டவர்களுக்கும், தம்முடைய ஜீவனத்திற்காகப் பிச்சையெடுக்கப் பழகிவிட்டவர்களுக்கும் கைராட்டினத்தைக் கற்றுக்கொடுப்பது கொஞ்சம் கஷ்டம் தான். ஏழைகள், பட்டினி கிடப்பவர்களுக்கு மட்டும்தான் என்று இதை ஒதுக்கிவைத்து விட்டால், ராட்டை ஒரு நாளும் பரவாது. ஆனல், சமூகத்தில் நல்ல நிலைமையில் இருப்பவர்கள் இதை ஒரு கடமையாக ஏற்றுக்கொண்டால், பாமர மக்களும் தாமாகவே அதை மேற்கொள்ளுவார்கள். ஆகையால், மிகவும் முக்கியத்துவம் உள்ள ராட்டையை இன்னும் பரவலாக உபயோகித்தாலொழிய பையன்களுக்கும் முதியவர்களுக்கும் சரியான முறையில் கல்வியளிக்க முடியாது என்பதைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம்.

இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளுவதில் எந்தக் கஷ்டமும் இருக்க முடியாது. கூடிய சீக்கிரத்தில் நமக்கு சுயராஜ்யம் தேடித் தரக் கூடிய ஒரு நடவடிக்கையில் நாம் எல்லாரும் கவனம் செலுத்த வேண்டும் என்பது தெளிவாகும். கைராட்டினத்தில் நூற்பதுதான் அந்த நடவடிக்கையாகும். அது ஒன்றுதான் வழி. ஏனெனில், இந்தவருடமே அந்நியத் துணியை அடியோடு பகிஷ்காரம் செய்வதற்கு அது நமக்கு உதவி செய்கிறது. அந்த பகிஷ்காரம் வெற்றிகரமாக இருந்தால், நாம் சீக்கிரமாக சுயராஜ்யம் பெறலாம். நமது ஆங்கில அறிவை வளர்த்துக்கொள்ளுவது சுதந்திரம் பெறுவதற்கு உதவி செய்யாது. அதே மாதிரி, நாம் ஒரு பிரபல கணித நிபுணராகவோ, விஞ்ஞானியாகவோ ஆவதாலும் சுயராஜ்யம் பெற முடியாது. காகிதங்கள், குண்டூசிகளை உற்பத்தி செய்வதற்குத் தொழிற்சாலைகளை ஏற்படுத்துவதாலும் சுயராஜ்யம் பெற முடியாது. இவற்றையும் நிறுத்தி வைக்க வேண்டும். ஆகையால், நமது மகாவித்தியாலயங்கள் (கல்லூரிகள்), விநய மந்திரங்கள் (உயர்நிலைப்பள்ளிகள்), குமார மந்திரங்கள் (ஆரம்பப்பள்ளிகள்), அத்யாபன மந்திரங்கள் (ஆசிரியர் பயிற்சிப்பள்ளிகள்) ஆகியவற்றில் ஒரே ஒரு நடவடிக்கைக்குத்தான் இடமிருக்கிறது; அதாவது, நூல் நூற்றல்தான்.

இலக்கியக் கல்வியளிப்பது இன்றியமையாததாகத் தோன்றலாம். அவகாசம் இருந்தால், ஒரு மாற்ருக அதையும் அளிக்கலாம். எனக்குத் தெரிந்த ஒரு ஆங்கில அறிஞர், தன்னுடைய வேலையின் தன்மையை மாற்றிக் கொள்ளுவதன் மூலமே ஓய்வு பெற்றுக் கொண்டிருந்தார். வேலையினால் அலுப்படைந்து, அவர் பார்லிமெண்டிலிருந்து வெளியே வந்தவுடன், தன் வேலையின் தன்மையை மாற்றிக் கொள்ளுவார். எறும்புகள் ஊறுவதையும். தேனீக்கள் பறப்பதையும் பார்த்துக் கொண்டிருப்பார். இதன் மூலம் அவர் ஓய்வு பெறுவார். அதே மாதிரி பழக்கத்தை நமது மாணவர்களுக்கும் நாம் ஏன் போதிக்கக் கூடாது? நூற்பதனல் அவர்கள் அலுப்புறும் போது, ஹிந்தி படிக்கட்டும். அதில் அலுப்பு ஏற்படும்போது, மீண்டும் ராட்டையை மேற்கொள்ளட்டும். அதற்கு மனமில்லையென்ருல், சங்கீதம் அல்லது தேகப் பயிற்சிகளைக் கற்றுக்கொள்ளட்டும். பிறகு மீண்டும் ராட்டைக்கு

வரட்டும். இப்படிச் செய்து கொண்டிருந்தால், கொஞ்சம் கொஞ்சமாக இந்த நல்ல பழக்கம் ஏற்பட்டுவிடும். மக்கள் இன்று எந்த ஒன்றிலாவது அதிக ஆர்வம் காட்ட வேண்டுமானால் அது ராட்டை தான். குடிப் பழக்கம் உள்ளவர்களுக்கு ராட்டை நிச்சயமான பரிகாரமாகும். இவ்விரண்டுக்குமிடையே உள்ள வித்தியாசம் என்னவென்றால், ஒன்று உயிர் கொடுக்கிறது, மற்றொன்று கொல்லுகிறது.

ராட்டையில் நூற்க நல்ல திறமை வேண்டும். அது ஒரு சிறிய கருவிதான் என்றாலும், இயக்குவது சுலபமானதென்றாலும், விலை மலிவாக இருந்த போதிலும், ஒரு மனிதனுடைய சுறு சுறுப்பு, விடா முயற்சி, பொறுமை, ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமென்ற உறுதி ஆகியவைகளை அது சோதனைக்கு உள்ளாக்குகிறது. நூல் நூற்பதென்பது வெறும் இழையை இழுப்பது மட்டுமல்ல. ராமானுஜத்தின் கட்டுரையை வாசித்திருப்பவர்களுக்கு இது புரியும். ஆந்திராவில் 120-ஆம் நம்பர் நூல் நூற்கும் பெண்களுக்குப் பருத்தியின் தரத்தைப் பரிசோதிக்கத் தெரியும். அவர்களே அதைக் கொட்டை அடிக்கிறார்கள்; வெண்மையான, மிருதுவான பட்டைகளாகப் போடுகிறார்கள். உண்மையில் அவர்களுடைய கலையின் மிகப் பெரிய அம்சம் இதுதான். பின்னர் 120-ஆம் நம்பர் நூலை நூற்பது அவர்களுக்கு எளிதாகிவிடுகிறது. நூற்பதற்கு நேரம் பிடிக்கும். மற்ற விவரங்களைக் கற்றுக் கொள்ளுவது சுலபம்; அவற்றிற்கு அவ்வளவு காலமும் பிடிக்காது. எல்லோருமே அந்தப் பெண்களைப் போல் அவ்வளவு திறமை பெற வேண்டுமென்ற அவசியமில்லை. ஆனால், ஒவ்வொரு நூற்பாளருக்கும் பஞ்சடித்தல் போன்ற முறைகள் தெரிந்திருக்க வேண்டும். பட்டை போடுவதை ஒரே நாளில் கற்றுக் கொண்டுவிடலாம். பஞ்சடிப்பதைக் கற்றுக் கொள்ளுவதற்கு அதிகபட்சமாக ஒரு வாரம் ஆகலாம். ஆகையால், நூற்பாளர் ஒவ்வொருவரும் கையினால் செய்யப்பட வேண்டிய இந்தப் பல்வேறு முறைகளையும் கற்றுக் கொள்ளட்டும். மில் பட்டைகளை உபயோகிப்பதால் பலனில்லை. மேலும், எல்லா இடங்களிலுமே மில் பட்டைகள் கிடைக்கும்படி செய்வது சாத்தியமில்லை.

இந்த வேலையை முன்பு பஞ்சடிப்பவர்கள் செய்து கொண்டிருந்தார்கள். இப்போதிருப்பதைப் போல் எல்லோருமே இதைச் செய்து கொண்டிருந்ததில்லை. ஆகையால் பஞ்சடிப்பவர்களும் மற்றவர்கள் சம்பாதித்த அளவுக்குத்தான் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். பஞ்சடிப்பவர் குறைந்த பட்சம் ரூ. 35 அல்லது ரூ. 40 சுலபமாகச் சம்பாதிக்கிறார். பம்பாயில் சிலர் தினசரி ரூ. 2-8-0 கூடச் சம்பாதிக்கிறார்கள். பஞ்சடிப்பதற்கு மிகச் சிறிது நேரம்தான் தேவை. ஆகையால், ஒருவர் நூற்பதன் மூலம் தன் வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிக்க விரும்பினால், ஒவ்வொரு சேர் நூலுக்கும் அவர் மேற்கொண்டு சுலபமாக இரண்டணா சம்பாதித்துவிடலாம். ஒரு நாளில் ஒருவர் நூற்கும் பஞ்சை வெகு சீக்கிரமாக அடித்துவிடலாம்.

ஒரு பள்ளி மாணவன் தினசரி நாலுமணி நேரம் நூற்ருல் ஒரு அணு கிடைக்கும் என்று முன்பு நான் சொன்னது தப்புக் கணக்கு என்று இப்போது தெரிகிறது. நல்ல வேளையாக, என்னுடைய தவறுகளெல்லாம் என்னுடைய அளவுக்கு மீறிய ஜாக்கிரதையினுல் ஏற்படுபவையாகும். எட்டு மணிநேரம் நூற்ப வனுடைய வருமானம் இரண்டணுதான் என்று நான் கணக்குப் போட்டிருந்தேன். நன்ருக நூற்பவர் ஒருவர் எட்டு மணி நேரத்தில் நூற்கக் கூடியது நாற்பது தோலா; இருபது தோலா அல்ல. மாமூலான விகிதத்தில் கணக்குப் போட்டுப் பார்த்தால், எட்டு மணிநேரம் நூற்பவர் நாலணு சம்பாதிப்பார், இரண்டணு அல்ல. சத்தியாக்கிரக ஆசிரமத்திலுள்ள பையன்கள் சத்தியாக் கிரக வாரத்தின்போது நாள் பூராவும் நூற்றுக்கொண்டேயிருந் தார்கள். சிலர் தினம் பத்து மணிநேரம் கூட நூற்ருர்கள். சிலர் காலே 4-30-க்கு நூற்க ஆரம்பித்தார்கள். ஒரு பையன் பத்து மணி நேரத்தில் 70 தோலா நூற்ருன். அதாவது, மணிக்கு 7 தோலா ஆகிறது. பெரும்பாலான பையன்கள் மணிக்கு 5 தோலா நூற்கிருர்கள். இவர்களில் யாரும் ஐந்து மாதப் பயிற்சிக்கு அதிகமாகப் பெற்றவர்கள் அல்ல. அதுவும், தினசரி நாலுமணி நேரப் பயிற்சிதான். இந்தப் பிள்ளைகள் என் கண்களைத் திறந்துவிட்டார்கள். ஜாக்கிரதையாக நூற்கும் ஒரு பையன், ஒரு மணி நேரத்தில் ஐந்து தோலா நூற்க முடியுமென்று நான் நிச்சய மாக நம்புகிறேன். இந்த வேகத்தில் ஒரு பையன் தன் பள்ளிக் கூடத்திற்கு மணிக்கு அரையணு அல்லது மாதத்திற்கு ரூ. 3-2-0 கொடுக்க முடியும். அதாவது, அவன் மாதத்தில் 25 நாட்களுக்கு, தினசரி நாலுமணி நேரம் வேலே செய்வான். இதுவே உயர்ந்த பட்ச வருமானமாக இருக்கும். சராசரி மாதம் இரண்டு ரூபாய் தான் கிடைக்கிறது என்று வைத்துக்கொண்டாலும், 20 பையன் கள்கொண்ட ஒரு வகுப்பின் மூலம் மாதத்தில் ரூ. 40 வருமானம் கிடைக்கும். சுறுசுறுப்புள்ள நல்ல பையன்கள், ஒரு நல்ல ஆசிரி யருக்கு மாதம் ரூ. 60 சம்பாதித்துக் கொடுக்கலாம்.

ஆனுல், இது என்னுடைய பல தவறுகளில் ஒன்றுதான்.

மேற்கொண்டு ஏற்பட்டுள்ள அனுபவத்தைப் பார்க்கும் போது, பையன்கள் நூற்பதோடுமட்டும் நிறுத்திக்கொள்ளாமல், பஞ்சடிப்பது, பட்டை போடுவது ஆகியவற்றையும் தாமே செய்துகொள்ள வேண்டும் என்று தெரிகிறது. இதைச் செய் தால், ஒவ்வொரு அரைச் சேர் பருத்திக்கும் கிடைக்கும் வருமா னத்தில் ஒரு அணு அதிகமாகும். ஒரு சேர் பருத்தியை அடித்து, பட்டை போடுவதற்கு இரண்டு அணு என்று நான் கணக்குப் போட்டிருக்கிறேன். இதற்குக் கொஞ்சம் காலம் ஆகுமாதலால், நாலுமணி நேர வேலேக்கு அதிகப்படியாகக் கிடைப்பது ஒரு அணு என்பதற்கு பதிலாக அரையணு என்று வைத்துக்கொள்ளு வோம். ஒரு நாளுக்கு அரையணு வீதம், 25 நாட்களுக்குக் கிடைக்கும் மொத்த அதிகப்படி வருமானம் ரூ. 0-12-6 ஆகும்.

ஆகையால் நன்ருக வேலே செய்யும் ஒரு பையன் ரூ. 3-2-0+0-12-6, அதாவது ரூ. 3-14-6 கொடுப்பான். ரூ. 1-9-0 தான் கிடைக்கும் என்று முதலில் நான் கணக்குப் போட்டிருந்தேன். இது என்னுடைய மற்ருெரு தவருகும். அதாவது, பஞ்சடிப்பதைத் தனியாகச் செய்ய வேண்டுமென்றும், அந்த வேலையை நூற்பவர்கள் செய்யக் கூடாதென்றும் முதலில் நான் நினைத்தது தவறு.

மேலும், பள்ளிக்கூடங்களிலேயே நூற்றல், நெசவு இரண்டும் செய்யும் போது, பருத்தி முதலியவை அங்கேயே சேமித்து வைக்கப்பட்டிருக்கும். பள்ளிக்கூடங்களில் உற்பத்தியாகும் நூலின் மார்கெட் விலே நாம் நினேப்பதைவிட எப்போதும் அதிகமாகவேதான் இருக்கும். இது சேருக்கு அரையணுவாக இருக்கும் என்று வைத்துக்கொள்ளலாம். இந்தச் சில்லறை உயர்வுகளேக் கூட்டிக்கொண்டே போனுல், கடைசியில் ஒரு கணிசமான தொகைவரும். மக்கள் இதனுல் எவ்வளவு லாபம் அடைவார்களென்பதைத் தொழிற்சாலே அதிபர்கள் நமக்குச் சொல்ல முடியும். பள்ளிக்கூடங்களில் படிக்கும் பல்லாயிரக் கணக்கான பையன்களுக்கு இந்தச் சுலபமான கைத் தொழிலேக் கற்றுக் கொடுத்தால் எவ்வளவு மகத்தான நன்மை ஏற்படும் என்பதையும், அவர்கள் செய்யும் வேலேக்குக் கிடைக்கக்கூடிய ஊதியத்தையும், இதன் மூலம் நூல் மார்க்கெட்டின் மீது எப்படி பலனளிக்கத்தக்க கட்டுப்பாட்டை நாம் பிரயோகிக்க முடியும் என்பதையும் எண்ணிப் பாருங்கள். மக்கள் மட்டும் இந்த சாதாரண விஷயத்தைப் புரிந்துகொள்ள முடிந்தால், இப்போது நாட்டில் நிலவும் வறுமையைச் சீக்கிரத்திலேயே ஒழித்துவிட முடியும் என்றே எனக்குத் தோன்றுகிறது.

இன்னும் ஒரு விஷயம் பாக்கி இருக்கிறது. பள்ளிக்கூடங்களில் நெசவு வேலேயையும் ஆரம்பித்தால், பள்ளிகளின் வருமானம் மேற்கொண்டு பெருகும். நூற்றலுக்கு மணிக்கு அரையணு என்று கணக்குப் போட்டோம். அதே மாதிரி நெசவுக்கு மணிக்கு ஒரு அணு என்று ஆகும். நெசவு இல்லாமலே கூட, ஒவ்வொரு மாணவனும் மாதம் ரூ. 4. சம்பாதிக்கும், அதாவது ரூ. 4 சம்பளமாகக் கொடுக்கும் ஒரு பள்ளிக்கூடத்திற்கு சர்க்கார் உதவியோ, பொது ஜனங்களிடமிருந்து நன்கொடைகளோ தேவைப்படாது. அத்தகைய பள்ளிக்கூடம் வெளி உதவியை எதிர்பாராமல் இயங்க முடியும். பையன்களும் பள்ளிக்கூடச் சம்பளம் கொடுக்க வேண்டியிராது.

இந்த முறையைப் பின்பற்றும்படியும், சர்க்காரிடமிருந்து பெறும் ஒரு லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய் உதவித் தொகையைக் கைவிட்டு விடும்படியும் சூரத் முனிஸிபாலிடிக்கு நான் யோசனே கூறியிருக்கிறேன். தங்களுக்கு எந்தவிதமான அசௌகரியமும் இல்லாமலும், புதிய வரி விதிக்காமலும், உதவித் தொகையைக் கைவிடுவதற்கு இதுதான் அவர்களுக்கு வழி.

அதன் பலனுகை, பையன்களுக்கு இலவசக் கல்வி யளித்ததாக இருப்பதுடன், அதே சமயத்தில் சுயராஜ்யம்பெறும் முயற்சிக்குக் கணிசமான உதவி செய்ததாகவும் இருக்கும்.

இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதிலுள்ள கஷ்டங்களை நான் அறிவேன். பள்ளிக்கூடங்களுக்குக் கட்டிடங்கள் கட்டுவதுதான் எல்லாவற்றையும் விட மிகப் பெரிய பிரச்னையாகும். ஆனால், மக்கள் நமக்கு உதவி செய்யத் தயாராயிருக்கும் இடங்களில் இந்தக் கஷ்டத்தைச் சுலபமாகச் சமாளித்துவிடலாம். பஞ்சாயத்துக் கட்டிடங்கள், ஆலயங்கள், மசூதிகள் ஆகியவற்றின் நிர்வாகிகள் சம்மதித்தால், அவற்றை இதற்காக உபயோகிக்கலாம். அவை பெரிய கட்டிடங்கள்; பையன்கள், ராட்டைகள் இரண்டுக்குமே வேண்டிய இடமிருக்கிறது. இப்போதுள்ள கட்டிடங்களில் இடம் மிகவும் நெருக்கமாக இருப்பதால், ராட்டைகளை வைப்பதற்கு அங்கே இடமில்லை. ராட்டை இடத்தை அடைப்பது நல்லதுதான். இதனால் பையன்களுக்கு இன்னும் நல்ல சுத்தமான காற்று கிடைக்கும்; அதன் பலனுகை அவர்கள் ஆரோக்கியத்துடனும், மனத்தில் சுறுசுறுப்புடனும் இருப்பார்கள்.

ராட்டைக்கு சுயராஜ்யம் தேடித் தரும் சக்தி இருக்கிறதா என்று ஒரு நிருபர் எழுதியுள்ள கடிதத்தில் ஒரு சந்தேகத்தை எழுப்பியிருக்கிறார். தன்னுடைய கருத்துக்கு ஆதாரமான வாதங்களையும் அவர் கொடுத்திருக்கிறார். அது மரியாதையுடன் எழுதப்பட்டுள்ள ஒரு நல்ல கடிதமாகும். அதைப் பூராவாக வெளியிட வேண்டுமென்று எனக்கு ஆசைதான்; அதற்கு இங்கே இடமில்லாததால், அவருடைய வாதங்களை மட்டும் சுருக்கமாகக் கூறுகிறேன். அவர் எழுதுகிறார்:

“நாம் தன்னிறைவு பெறுவதற்கு ராட்டை உதவி செய்யும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்கள் சம்பாதிப்பதற்கு அது வழி திறந்துவிடும். எனினும், அதனால் எப்படி நமக்கு விடுதலை கிடைக்குமென்று எனக்குப் புரியவில்லை. கிளைவ் இருந்த காலத்திலேயே ராட்டையும் இருந்தது; அப்படியிருந்தும் நாம் சுதந்திரத்தை இழந்தோம். ஆகையால், லங்காஷயர் நம்மைச் சுரண்டிச் சாப்பிடுவது அதனால் நின்றுவிடக் கூடுமென்றாலும், இங்கிலாந்து நம்மைச் சுரண்டுவது தொடர்ந்து நீடித்துக் கொண்டேதான் இருக்கும்.”

இந்த சந்தேகங்கள் நியாயமற்றவையல்ல; ஆனால், ‘நவஜீவன்’ வாசகர்கள் இந்த சந்தேகங்களுக்குச் சுலபமாக பதில் அளிக்க முடியும். இந்த நண்பரும் இப்பத்திரிகையைப் படிப்பவர் என்றே தோன்றுகிறது. அவருக்கு இன்னமும் சந்தேகங்கள் இருக்கின்றன என்றால், இந்த விஷயத்தை நான் சரியாக விளக்கவில்லையென்பதுதான் காரணமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். இதை நான் மேற்கொண்டு

விவரமாகத் தொடர்ந்து விளக்கும்போது, அதை அவர்கள் ஏற்றுக் கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன். இதை நான் சரியாகத்தான் புரிந்து கொண்டிருக்கிறேன். இதில் ஏதாவது குறைபாடு இருப்பதாயிருந்தால், மற்றவர்களுக்கு அதை நான் சரியாக விளக்கிக் கூற முடியவில்லை என்பதாகத்தான் இருக்க வேண்டும். ராட்டையின் மூலம் அந்நியத் துணிகளை அறவே பகிஷ்காரம் செய்துவிட முடியும் என்பதை அந்தக் கடிதத்தை எழுதியவரே ஒப்புக் கொள்ளுகிறார். சர்க்கார் நமக்கு எவ்வளவோ கஷ்டங்களையும், சங்கடங்களையும் விளைவித்தால் கூட, அவற்றையெல்லாம் மீறி அந்நியத் துணியை பகிஷ்காரம் செய்வதற்கு நம்மிடமுள்ள அதே சக்தி, நமக்குப் பூர்ண சுதந்திரத்தையும் தேடித்தர முடியும்.

இனி சில புள்ளி விவரங்களைக் கவனிப்போம். அந்நியத் துணிகளுக்காக நாம் அறுபது கோடி ரூபாய் செலவிடுகிறோம். அடுத்தபடியாக, சர்க்கரைக்காக ரூ. 23 கோடியும், இரும்புக்காக 16 கோடியும் செலவு செய்கிறோம். யந்திரங்கள், தாவர எண்ணைகள் ஒவ்வொன்றுக்கும் ஒன்பதரைக் கோடி ஆகிறது. மற்றவை அவ்வளவு குறிப்பிடத்தக்கவையல்ல.

துணிக்காகச் செலவிடும் அறுபது கோடியை மிச்சப்படுத்தும் முயற்சியில் நாம் வெற்றி பெற்றுவிட்டால், மற்ற இனங்களின் இறக்குமதியை பகிஷ்காரம் செய்வது குழந்தைகளின் விளையாட்டைப் போன்றதாகவே இருக்கும். இங்கிலாந்து இந்நாட்டின் மீது விடாமல் ஆதிக்கம் செலுத்துவதற்குள்ள மிகப் பெரிய அந்தக் கவர்ச்சியை அகற்றிவிட்டோமானால், மற்றவைகளையும் அகற்றுவது கஷ்டமாக இருக்க முடியாது. வரவேற்கத்தக்க அந்த நிலைமை ஏற்படும்போது, இங்கிலாந்துக்கு இந்தியாவினிடம் அக்கறை இருக்காது; தன்னுடைய ராணுவப் பிடிப்பை பலவந்தமாக வைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்ற எண்ணமும் இராது. இது என்னுடைய உறுதியான நம்பிக்கையாகும்.

இதையே வேறொரு கோணத்திலிருந்து பார்ப்போம். சுதந்திரம் பெறவேண்டுமானால் நாணயம், ஒற்றுமை, தீரம், தாய் நாட்டினிடம் பற்றுதல், வீரம், தியாகம், தேசத்தின் கைத் தொழில்களையும், வர்த்தகத்தையும் நிர்வகிப்பதற்கான திறமை ஆகியவைகளெல்லாம் நம்மிடம் இருக்க வேண்டும். இந்த குணங்களெல்லாம் நம்மிடம் இருந்தாலொழிய நாடு பூராவிலும் ராட்டையைப் பரப்ப முடியாது. இந்த குணங்களையெல்லாம் அபிவிருத்திசெய்து கொண்டுள்ள மக்களை யாரும் அடிமைத்தனத்தில் வைத்திருக்க முடியாது.

கடமையுணர்ச்சி காரணமாக, இந்தியா அந்நியத் துணியைக் கைவிடும்போது, நாட்டிலிருந்து வெளியேறுங்கள் என்று சர்க்காருக்கு எச்சரிப்பதற்கான பலத்தை நாம் பெற்றிருப்போம்.

நமது அந்த இறுதி எச்சரிக்கையை சர்க்கார் அலட்சியம் செய்தால், வரி கொடா இயக்கத்தை ஆரம்பிப்போம்.

கிளைவ் இருந்த காலத்திலும் ராட்டை இருந்ததென்பது உண்மைதான். ஆனல், அப்போது நாம் அடிமைகளாகி விடவில்லை. அது அப்போதுதான் ஆரம்பமாகியிருந்தது. ராட்டையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கைவிட்டவுடன், இது துரிதப்பட்டு, முடிவில் நாம் அடிமைகளாகவே ஆகிவிட்டோம். ராட்டையை இழந்ததன் பலனுக நாம் கதியற்றவர்களாகி விட்டோம். நம்முடைய கதியற்ற இந்த நிலைமை காரணமாக கிழக்கிந்தியா கம்பெனி நம்மீது ஆதிக்கத்தை பலப்படுத்திக் கொண்டு, விஸ்தரித்துக் கொள்ளுவது இன்னும் எளிதாகி விட்டது.

—' நவஜீவன் ' - 8—5—1921

# 2
# இரண்டு கேள்விகள்

ஒரு குமார மந்திரத்தின் (ஆரம்பப் பள்ளிக்கூடம்) தலைமை ஆசிரியர் பின் வருமாறு கேட்கிருர்: "ஒரு கிராமத்தில் நடைபெறும் தேசீயப் பள்ளிக்கூடத்தை அங்குள்ள கிராமவாசிகள் பொருட்படுத்துவதில்லை. இதன் பலனுக, வேறு வருமானத்திற்கு வழியில்லாத ஆசிரியர் பட்டினி கிடக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அத்தகைய ஒரு கிராமத்தில் ஆசிரியர் என்ன செய்ய வேண்டும்?"

ஒரு வங்காளி ஆசிரியரும் இதே மாதிரி கேள்வியைக் கேட்டிருந்தார். 'எங் இந்தியா' பத்திரிகையில் அந்தக் கேள்விக்கு பதில் அளித்திருந்தேன். அதையே இன்னும் சற்று விரிவாக இங்கே விவாதிப்போம். அப்பாஸ் சாகிபும் இதே கேள்வியைச் சிறிது மாறுபாட்டுடன் கேட்டிருக்கிருர். பள்ளிக்கூடங்களே இல்லாத கிராமங்களில் என்ன செய்வது என்று அவர் கேட்கிருர். அம்மாதிரி கிராமங்கள் பல இருக்கின்றன.

முதல் கேள்விக்குப் பதில் அளிப்பது எளிது. ஆசிரியரிடம் உறுதி இருந்தால்,. எப்படியாவது எல்லாக் கஷ்டங்களையும் சமாளித்துவிடுவார். ஆசிரியராக இருப்பவர் காந்தத்தைப் போலிருக்க வேண்டும். பையன்கள் அவரால் ஈர்க்கப்பட வேண்டும். ஒரு நிமிஷம் கூட மாணவர்கள் அவரை விட்டுப் பிரிய முடியாது என்ற விதத்தில் அவர் இருக்க வேண்டும்; சற்று நேரம் அவரை விட்டுப் பிரிந்திருப்பதைக் கூட சகிக்காதவர்களாக அவர்கள் இருக்க வேண்டும். அத்தகைய ஒரு ஆசிரியரைப் பெற்ருேர்கள் புறக்கணிக்க முடியாது. ஒரு ஆசிரியர்

பணக்காரரானல், அவர் திருடராகக் கருதப்படுவார். ஆனல், அவர் தன் தேவைகளைச் சமாளித்துக் கொள்ள முடியாமல் பட்டினி கிடக்க வேண்டியிருந்தால், அவர் ஒரு முட்டாளாகக் கருதப்படுவார். அந்த ஆசிரியருக்கு நான் சொல்லும் யோசனை இதுதான்: வீடு விடாகச் சென்று பிச்சை எடுங்கள்; ஆனல், ஆசிரியரின் கடமையைக் கைவிட்டு விடாதீர்கள். ஆசிரியர் தன் கடமையை ஒரு ஜீவனத் தொழிலாக்கி விடக் கூடாதென்று காகா சாகிப் கூறுவது சரிதான்.

மேலும், ஆசிரியர் தொழில் அதிகச் செலவில்லாததாக இருக்க வேண்டும். மாணவர்கள் கல்வி கற்றுக்கொண்டே தம் செலவுக்கு வேண்டியவற்றை சம்பாதித்துக் கொள்ள வேண்டும். முன்னுட்களில் அப்படித்தான் இருந்தது. ஒரு மாணவன் ஆசிரியரிடம் போகும்போது ஸமித்துக் குச்சிகளை எடுத்துச் செல்வான். அதாவது, 'நான் ஆசிரியருக்குச் சுமையாக இருக்க மாட்டேன். தேவையான உடலுழைப்பு வேலைகளைச் செய்து எனக்கும், ஆசிரியருக்கும் வேண்டியதைச் சம்பாதிப்பேன்' என்று அவன் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதே அதன் அர்த்தமாகும். மேலும், 'நான் எப்போதும் கீழ்ப்படிந்து நடப்பேன்' என்று உறுதி கூறுவதாகவும் அர்த்தம். இவ்விரண்டும் அன்று எவ்வளவு அவசியமாயிருந்தனவோ அதே மாதிரி இன்றும் அவசியம்தான். உடலுழைப்பு, பணிவு ஆகிய இரண்டும் ராட்டையில் இருக்கின்றன. நூற்பதுவரையில், பருத்தியின் எல்லாச் செயல்முறைகளையும் இன்றைய ஆசிரியர் மாணவனுக்குச் சொல்லிக் கொடுத்து, அவன் நல்ல நூல் நூற்கும்படி செய்ய வேண்டும். அவரும் மாணவர்களுக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டு, அவர்கள் நூற்கும்போது அவரும் நூற்க வேண்டும். அத்துடன் பெருக்கல் வாய்ப்பாடு, சமஸ்கிருதச் சொற்களின் இலக்கணம் முதலியவைகளையும், சுலோகங்களின் அர்த்தங்களையும் கற்றுக் கொடுக்க வேண்டும். சுவாரஸ்யமான சரித்திரக் கதைகளைச் சொல்லி, நூற்பதில் ஒரு உற்சாகத்தை ஊட்டவேண்டும். இப்படிச் செய்தால் மாணவர்களின் கவனம் குன்ருது. தக்ளியை உபயோகிக்க ஆரம்பிக்கலாமென்று நான் யோசனை கூறியுள்ளேன். ஏனெனில், இதை உபயோகிப்பதாயின், தாமதமின்றி வேலையை ஆரம்பித்து விட முடியும்.

அப்பாஸ் சாகிபின் கேள்வியை இனி கவனிப்போம். இன்று இந்தியாவில் ஆங்கில அறிவு ஒரு அளவுக்கு இருந்தாலும், மொத்தத்தில் எழுத்தறிவு குறைந்திருக்கிறதென்பது 'நவஜீவன்' வாசகர்களுக்கு ஒரு வேளை தெரியாமலிருக்கலாம். சென்ற ஐம்பது வருடங்களில் கிராமப் பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை மிகக் குறைந்து வந்திருக்கிறது. கல்வித் துறையில், மத்தியதர வகுப்பினராகிய நாம் முன்னேறியுள்ள அளவுக்கு, கிராமக் குழந்தைகள் பின் தங்கிப் போயிருக்கிருர்கள் என்பதே இதன் அர்த்த

மாகும். நம்முடைய பொருளாதார நிலைமை அபிவிருத்தியடைந்து, கிராமங்களின் பொருளாதார நிலைமை நலம் குன்றியிருப்பதைப் போலவே, கல்வி விஷயத்திலும் நேர்ந்திருக்கிறது. இது வருந் தத்தக்கதாயினும், முற்றிலும் உண்மையேயாகும். புள்ளி விவரங் களைக் கவனிக்கும் யாரும் இதை ருசுப்பிக்க முடியும். பர்மாவிலும் இப்படித்தான் நடந்திருக்கிறது. பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரத் திற்கு வருவதற்கு முன்பு, பர்மாவில் அநேகமாக ஒவ்வொரு குழந் தைக்கும் எழுத்தறிவு இருந்தது. ஏனெனில் பள்ளிக்கூடம் இல்லாத கிராமமே அப்போது கிடையாது. நிலைமை துரிதமாக மாறுதலை அடைந்துவருகிறது. கிராமப் பள்ளிகள் மறைந்து கொண்டிருக்கின்றன. இதன் பலனாக எழுத்தறிவின்மை அதிக மாகிக்கொண்டிருக்கிறது.

நமது இயக்கம் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகப் பரவு கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஏழைகளின் பொருளாதார நிலை மையும், எழுத்தறிவும் அதிகமாகும். ஏனெனில், ஏழைகளின் நலம்தான் நம்முடைய நோக்கம். ஒவ்வொரு கிராமத்திற்கும் தகுதியுள்ள ஒரு ஆசிரியரைக் கண்டுபிடித்து, அங்கே ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பிப்பதுதான் இதற்குப் பரிகாரம் ஆகும். பள்ளிக்கூடத்திற்கு கட்டிடம் இல்லையென்றால், ஒரு மரத்தடியில் வகுப்புகளை நடத்த வேண்டும். ஹிந்துப் பையன்கள் தம் வகுப்பு களுக்குக் கோவில்களிலும், முஸ்லிம் பையன்கள் மசூதிகளிலும் கூடுவார்களாக. இவ்வாறாக, உடனடியாக இதை ஆரம்பித்து விடவேண்டும்; பள்ளிக்கூடக் கட்டிடத்திற்கான ஏற்பாடுகளைப் பின்னர் செய்துகொள்ளலாம். சமாளிக்க வேண்டிய கஷ்டங்கள் எவ்வளவோ இருக்கின்றன; ஆனால், அவற்றைச் சமாளித்து வெற்றி பெறுவதில்தான் நமது சாமர்த்தியம் இருக்கிறது. நமது கிராம மக்களிடையே விழிப்பையும், அறிவுப் பசியையும் நாம் உண்டாக்க வேண்டும். இவையெல்லாம் ராட்டையில் இருக் கின்றன. இந்த வேலையை மனப்பூர்வமாகவும், ஜாக்கிரதை யாகவும் தாலூகா கமிட்டிகளும், ஜில்லா கமிட்டிகளும் மேற் கொள்ள வேண்டும்.

—'நவஜீவன்' – 27—7—1924

# 3
# சரியான கேள்விகள்

ஒரு நிருபர் பின்வருமாறு கேட்கிறார் :

"கட்டாய ஆரம்பக் கல்வி முறையை இந்தியாவில் அமலுக்குக் கொண்டு வருவதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா ? இந்தக் கல்வியைக் கட்டாயமானதாக்குவது நியாயமற்றதா அல்லது அவசியம் இல்லாததா ? நாடு இப்போதுள்ள நிலைமையில் நாம் சுயராஜ்யம் பெற்றால், இந்தியா பூராவிலும் ஆரம்பக் கல்வியைக் கட்டாயமானதாக்குவீர்களா ?"

பிரதான கேள்விக்கு இல்லையென்றுதான் பதில் சொல்ல வேண்டுமென்று அஞ்சுகிறேன். கட்டாயக் கல்வியை எல்லாக் காலத்திலும் நான் ஆட்சேபிப்பேனா என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. எந்தவிதமான கட்டாயமும் எனக்கு வெறுப்பை அளிப்பதாக இருக்கும். ஆட்சேபிக்கத்தக்க முறைகளின் மூலம் தேசத்தில் குடிப் பழக்கத்தை அகற்றுவதை நான் எப்படி விரும்பவில்லையோ, அதே மாதிரி, கட்டாயத்தின் மூலம் தேசத்தில் கல்வியைப் பரப்புவதையும் நான் விரும்பவில்லை. ஆனால், ஏற்கனவே உள்ள கள்ளுக்கடைகளை மூடுவது புதிய கடைகளைத் திறக்க மறுப்பது முதலிய நடவடிக்கைகளின் மூலம் குடிப் பழக்கத்தைத் தடுக்க முயற்சிப்பேன். அதே மாதிரி இடையூறுகளை அகற்றி, மக்களின் தேவைக்கேற்ற கல்வியை அளிக்கக்கூடிய இலவசப் பள்ளிகளை ஆரம்பித்து, எழுத்தறிவுக்கு ஊக்கம் கொடுப்பேன். ஆனால், இப்போது இலவசக் கல்வியளிக்கும் சோதனையைக்கூட நாம் பெரும் அளவில் செய்து பார்க்கவில்லை. பெற்றோர்களுக்கு நாம் எந்தவிதமான தூண்டுதலும் அளிக்கவில்லை. எழுத்தறிவின் முக்கியத்தைக் கூட நாம் போதிய அளவுக்கு உணர்த்தவேயில்லை. இந்தப் பயிற்சிக்கு நம்மிடம் சரியான பள்ளி ஆசிரியர்கள் இல்லை. ஆகையால், இப்போது முதலே கட்டாயத்தைப் பற்றி நினைப்பதற்கில்லை என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். கட்டாயக் கல்வி அமலாக்கப்பட்ட எல்லா இடங்களிலுமே அது வெற்றி பெற்றிருக்கிறதா என்பதும் நிச்சயமில்லை. பெரும்பாலோர் கல்வியை விரும்பினால், கட்டாயத்திற்குக் கொஞ்சமும் அவசியமேயில்லை. இல்லையென்றால், கட்டாயப்படுத்துவது மிகவும் தீங்கு விளைவிப்பதாக இருக்கும். கொடுங்கோல் சர்க்கார்தான் பெரும்பாலோரின் விருப்பத்தை மீறிச் சட்டங்களை இயற்றும். பெரும்பாலோரின் குழந்தைகள் கல்வி பெறுவதற்கு சர்க்கார் முழு வசதிகள் அளித்துவிட்டார்களா ? சென்ற நூறு வருடங்களுக்கு மேலாகவே எல்லா விஷயங்களிலும் நாம் கட்டாயத்திற்கு உட்பட்டுக் கொண்டிருக்கிறோம். நம்முடைய முன் அனுமதி பெறாமல்,

நம்முடைய வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களிலும் சர்க்கார் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். இஷ்டபூர்வமான முறைகளுக்கு தேசத்தைப் பழக்கப்படுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. இப்போதைக்கு பிரார்த்தனைகளுக்கும், மனுக்களுக்கும், வேண்டுகோள்களுக்கும் சரியான பதில் கிடைக்காமலிருந்தாலும், நாம் இதைச் செய்ய வேண்டும். பிரார்த்தனைகளுக்கு ஒரு பலனும் கிடைக்கவில்லை, இஷ்டபூர்வமான முயற்சிகளினால் எந்தச் சீர்திருத்தமும் சாத்தியமில்லை என்று நினைத்துப் பழகிவிடுவதைப் போல், ஒரு சமூகத்தின் உண்மையான வளர்ச்சிக்குக் கேடு விளைவிக்கக் கூடியது வேறு எதுவுமில்லை. இப்படிப் பழகிப் போன மக்கள் சுயராஜ்யத்திற்கு முற்றிலும் தகுதியற்றவர்களாகி விடுகிறார்கள்.

ஆகவே, இன்று நாம் சுயராஜ்யம் பெற்றால், இஷ்டபூர்வமான ஆரம்பக் கல்வி அறிவுக்கு மனப்பூர்வமான எல்லா முயற்சிகளையும் செய்து, அவை தோல்வியடையும் வரையிலாவது, கட்டாயக் கல்வியை நான் எதிர்ப்பேன் என்பது தெளிவு. ஐம்பது வருடங்களுக்கு முன்பு இருந்ததைவிட இன்று இந்தியாவில் எழுத்தறிவின்மை அதிகமாக இருக்கிறது. பெற்றோர்களுக்கு இப்போது விருப்பமில்லை என்பது இதற்குக் காரணமல்ல. இயற்கையற்ற ஒரு அந்நிய சர்க்காரின் ஆட்சியில் முன்பிருந்த வசதிகள் இப்போது மறைந்துவிட்டன என்பதே இதற்குக் காரணமாகும். வாசகர்கள் இதை மறந்துவிடக் கூடாது. பர்மாவிலும் இன்று இப்படித்தான் நடந்துகொண்டிருக்கிறது.

அவருடைய மற்றொரு கேள்வி பின்வருமாறு :

"இப்போது கட்டாய ஆரம்பக் கல்விச் சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. ஆகையால், கட்டாய ஆரம்பக் கல்விக்கு முனிஸிபல் சபைகளிலும், இதர ஸ்தல ஸ்தாபனங்களிலுமுள்ள பல்வேறு அபிப்பிராயங்களையுடைய அங்கத்தினர்களும் மனப்பூர்வமாக ஆதரவு தருவார்கள். இதைப் பயன்படுத்திக் கொண்டு முனிஸிபல் சபைகளும், ஸ்தல ஸ்தாபனங்களும் ஆரம்பக் கல்வியைக் கட்டாயமாக்குவதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?"

இந்தக் கேள்வி ஒத்துழையாமையுடன் தொடர்பு உள்ளது. அங்கத்தினர்கள் விரும்பினால், அந்தச் சட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளுவது காங்கிரஸ் தீர்மானத்திற்கு முரணானதல்ல என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். ஆனால், நான் ஏற்கனவே கூறியுள்ள காரணங்களை முன்னிட்டு, உடனடியாகக் கட்டாயத்தை மேற்கொள்ளுவதற்குத் தயங்கவே செய்வேன். இதைப் பற்றிய அடிப்படை ஆட்சேபணை ஒருபுறம் இருக்கட்டும். இதன்மீது நான் தீர்மானமான ஒரு அபிப்பிராயம் கூறுவதற்கு முன்பு, இரண்டு விஷயங்களை அறிய விரும்புகிறேன்.

1. இலவசமாக ஆரம்பக் கல்வி அளிக்க முயற்சி செய்யப் பட்டிருக்கிறதா? அதன் பலன் என்ன?

2. ஒவ்வொரு பெற்றோரின் அபிப்பிராயமும் கோரப்பட்டதா? அவருடைய ஆட்சேபணை கவனிக்கப்பட்டதா? ஆட்சேபணை நியாயமானதாயிருந்தால், அதைச் சமாளிக்க ஏற்பாடு செய்யப்பட்டதா?

நிதானமான எல்லா முறைகளையும் கையாளாமல், கட்டாய முறைக்கு ஓடுவது அவசரப்பட்டதும், முறையற்றதுமான செய்கையாகும். இலவசமாகக் கல்வி தங்கள் வீட்டைத் தேடிவரும் போது கூட, பெரும்பாலான பெற்றோர்கள் தம்முடைய குழந்தைகளின் கல்வியைப் புறக்கணிக்கும்படியான அவ்வளவு முட்டாள்தனமாகவோ, இதயமற்றவர்களாகவோ இருப்பார்கள் என்று நினைப்பது நியாயமாகாது.

—'எங் இந்தியா' – 14—8—1924

# 4

# குழந்தைகள் கல்வி

## 1

கல்வி மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் ஒன்று, வித்தியாபீடம் முக்கியமாக ஆரம்பக் கல்வியில் தன் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்பதாகும். இதைப் பற்றி வித்தியாபீடத்திற்கு அனுபவசாத்தியமான சில யோசனைகளைக் கூற உத்தேசித்திருந்தேன். ஆனால், அதற்கு முன்பு எனக்கு வேறு வேலை ஏற்பட்டுவிட்டது; காலமும் கடந்துவிட்டது. எனினும், நான் ஆரம்பக் கல்வி விஷயத்தை மறந்துவிட்டேன் என்று அர்த்தமில்லை.

எனது யோசனைகளைக் கூறுவதற்கு முன்பு, கல்வியைப் பற்றியே சில கருத்துகளை ஆசிரியர்களின் முன்பு சமர்ப்பிக்க விரும்புகிறேன். படிக்கத் தெரிவது மிகவும் முக்கியம் என்று நாம் அளவுக்கு மீறி வற்புறுத்திவருகிறோம் என்றே சில வருடங்களாக நான் எண்ணிவந்திருக்கிறேன். ஆகையால், நமது கல்வி முறையில் பாட புத்தங்களை உபயோகிப்பது அதிகமாகிக் கொண்டிருக்கிறது.

ஒரு குழந்தைக்குப் படிக்கக் கற்றுக் கொடுத்தாலொழிய, அதற்கு எந்தவிதமான அறிவையும் புகட்ட முடியாது என்ற ஒரு தவறான எண்ணத்தில் நாம் சிக்கிக்கொண்டு விட்டோம்.

கல்வித் துறையில் இதைவிடப் பெரிய தவறு வேறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்தத் தவறான நம்பிக் கையினால் குழந்தைகளின் வளர்ச்சியை நாம் தடைப்படுத்து கிறோம் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. ஒரு பையன் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளுவதற்கு முன்னதாகவே அவனுடைய மனம் வளர்ச்சி பெற முடியும், வளர்ச்சி பெறுகிறது என்பது அனுபவத்தில் தெரிந்திருக்கிறது. இவை ஒரு அளவுக்கு அவனுடைய வளர்ச்சியைக் குன்ற வைக்கின்றன. எந்த ஆசிரி யரும் இதைச் சோதனை செய்து பார்த்து, ஊர்ஜிதம் செய்ய முடியும். ஒரு குழந்தைக்கு வாய்மொழியாகச் சொல்லிக் கொடுத் தால் அகர வரிசையோ, முறைப்படியான கல்வியோ இல்லாமலே அவன் எவ்வளவு சீக்கிரமாக அபிவிருத்தியடைகிறான் என்ப தைப் பாருங்கள். ஆசிரியர், சம்பாஷணையின் போதே சரித்திரம், பூகோளம், விஞ்ஞானம் பற்றிய உண்மைகளைச் சொல்லிக் கொடுக்க முடியும். ஒரு குழந்தை ஒரு வருடத்திற்குள்ளாக ராமாயணம், மகாபாரதக் கதைகளை சுலபமாகத் தெரிந்து கொள்ள முடியும். சாதாரணமாக, நாலைந்து வருடங்களுக்குப் பள்ளிக்கூடத்தில் படித்த பிறகுதான் இவற்றைத் தெரிந்து கொள்ளுகிறார்கள். "அம்மா, எனக்குக் குடிக்கத் தண்ணீர் கொடு" என்ற ஒரு எளிய வாக்கியத்தை எழுதுவதற்கு ஒரு குழந்தை ஒரு வருடம் பூராவும் படிக்க வேண்டியிருப்பது எவ்வளவு அனாவசியம்? பையன் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நிர்ப்பந்திப்பதன் மூலம் அவன் இயற்கையாக வளர்ச்சி பெறுவதற்குத் தடைகளை ஏற்படுத்திவிடுகிறோம். சாதாரணமாக, அவன் சுலபமாகக் கற்றுக் கொண்டிருக்கக் கூடிய வேறு பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியாமல் செய்கிறோம்; அவனுடைய ஞாபக சக்திக்கு அளவுக்கு மீறித் தொல்லை கொடுக்கிறோம்; சீக்கிரமாக எழுதக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று அவசரப் படுத்துவதன் மூலம் அவனுடைய கையெழுத்தைப் பாழ்படுத்துகிறோம்; கடைசியில் அவனுடைய சிறு பிராயம் முதலே பாட புத்தகங்களுக்கு அவனை அடிமை யாக்குவதன் மூலம், உபயோகமற்ற புத்தகங்களை வாங்கும் கடும் சுமையை ஏழை இந்தியா மீது சுமத்துகிறோம்.

என்னுடைய கருத்தை ஆசிரியர்கள் ஏற்றுக் கொள்ளும்படி நான் செய்ய முடிந்தால், ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் பாட புத்தகங்களை ஆசிரியர்களின் உபயோகத்திற்காகத்தான் வைப் பேன், மாணவர்களுக்கு வைக்கமாட்டேன். அத்தகைய புத்த கங்கள் வேறு விதமான கண்ணோட்டத்துடன் எழுதப்பட வேண்டும். அகர வரிசையையும், எழுத்துகளின் வடிவத்தையும் கற்றுக் கொள்ளுவதற்கு முன்பு குழந்தைகளுக்குச் சித்திரம் வரையக் கற்றுக் கொடுக்க வேண்டும்; இதன் மூலம் அவர்கள் அழகிய உருவங்களையும், படங்களையும் வரையத் தெரிந்து கொள்ளுவார்கள். குழந்தை அகர வரிசையைக் கற்றுக் கொள்ளு வதற்கே மூன்று வருடங்கள் ஆனாலும் கவலைப்பட வேண்டிய

தில்லை. இந்தக் காலத்தில் அவனுக்கு மத சம்பந்தமான விஷயங்களை நிறையச் சொல்லிக் கொடுக்கலாம். கீதையிலிருந்து பொறுக்கி எடுத்த சுலோகங்களைச் சொல்லித் தரலாம். இதனுல், அவனுடைய ஞாபக சக்தியும், கேட்கும் திறனும் அபிவிருத்தியடையும். அவன் வார்த்தைகளைச் சரியாக உச்சரிக்கக் கற்றுக் கொடுக்க வேண்டும்; நல்ல பழக்கங்கள், கூர்ந்து கவனித்தல் முதலியவைகளிலும் அவனைத் தயார் செய்ய வேண்டும். குழந்தையின் சக்திகள் எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தியடைய நாம் முயற்சி செய்ய வேண்டும். அதே சமயத்தில் கையெழுத்தை ஒரு தனிக் கலையாக அபிவிருத்தி செய்து கொள்ளவும் ஊக்கமளிக்க வேண்டும். இன்று பெரும்பாலான பையன்களின் கையெழுத்து மிகவும் மோசமாக இருக்கிறது; அதைப் படித்துப் பார்ப்பதென்றுலே வேதனையாக இருக்கிறது. இதை அனுபவத்திலிருந்தே நான் சொல்லுகிறேன்; ஏனெனில், என்னுடைய கையெழுத்தே அவ்வளவு படுமோசமாக இருக்கிறது; எனக்கே அதைப் பார்க்க வெட்கமாக இருக்கிறது. யாருக்காவது எழுத வேண்டுமென்றுல் கூட நான் தயங்க வேண்டியிருக்கிறது. என்னுடைய கோணலான எழுத்துகளைப் பார்க்க எனக்கே வேதனையாக இருக்கிறது. பக்குவம் செய்யப் படாத உணவை ஒருவர் சாப்பிட்டு ஜீரணம் செய்ய முடியாது; அதைப் போலவே, மோசமான கையெழுத்தை யாரும் சகிக்க முடியாது. ஒருவனுடைய கையெழுத்து நன்றுக இல்லையென்றுல், அவன் அநாகரிகமானவன் என்று மதிக்கப்படுகிறுன். அத்தகையவர்களுடைய கையெழுத்தைப் படிக்க மறுத்துவிட வேண்டுமென்று எனக்குப் பல சமயங்களில் தோன்றுவது உண்டு.

ஆரம்பக் கல்வியில், அவசியமான இந்த முதல் நடவடிக்கையை நாம் எடுத்துக்கொள்ள முடிந்தால், எவ்வளவோ அனுவசியமான செலவு நமக்கு மிச்சப்படும். அத்துடன் மட்டுமில்லை. குழந்தைகளின் வாழ்க்கையையும் வளப்படுத்துவதற்கு நாம் உதவியவர்கள் ஆவோம். ஏனெனில், இந்த மாறுதலைச் செய்தால் அவர்களுடைய உடல் வளர்ச்சியும், மனே வளர்ச்சியும் இன்னும் அதிகமாகும்.

—'நவஜீவன்' - 26—10—1924

## 4

(ஆசிரமப் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியருக்கு எழுதிய ஒரு கடிதத்திலிருந்து)

உங்களுடைய சஞ்சிகையின் கல்வி மலருக்கு ஒரு கட்டுரை எழுதிய பின், நமது குழந்தைகளின் கல்வி விஷயத்தில் ஏதாவது செய்ய வேண்டும் என்ற ஆவல் இப்போது எனக்கு அதிகமாகியிருக்கிறது. இந்தப் பரீட்சையை நாம் ஏன் செய்து பார்க்கக் கூடாது? ஆசிரமக் குழந்தைகளின் முன்னேற்றத்திற்காக இதை

ஏன் செய்யக் கூடாது? என்னுடைய கட்டுரையில் நான் ஒன்று கூறியிருந்தேன்; அதாவது ஒரு குழந்தை ஒரு குடத்தின் படத்தை வரைய முடிந்தாலும், குடத்தைப்போல் அதே மாதிரி வரைய முடியாது. அதைப் போலவே, அவன் படிக்க முடிந்தாலும், எழுதவும் எழுதுவான் என்று எதிர்பார்க்க முடியாது. இந்தக் கருத்து உங்களுக்குத் திருப்தியாக இருந்தால், இந்தப் பரீட்சையைச் செய்து பார்க்கலாம் என்று சொல்லுகிறேன். அவன் படிக்க ஆரம்பிப்பதற்கு முன்பு, காதால் கேட்பதைப் போலவே எழுத்துகளை உச்சரிக்க ஆரம்பிக்கிறான், அதாவது, பேச ஆரம்பிக்கிறான். ஆசிரமத்திலுள்ள லக்ஷ்மி, ரஸிக் முதலிய குழந்தைகளுக்கு முதலில் படம் வரையக் கற்றுக் கொடுத்து விட்டு, பிறகு வார்த்தைகளை எழுதக் கற்றுக் கொடுத்தால் என்ன? வாய்மொழியாகவே நிறையக் கற்றுக் கொடுத்தால் என்ன? இப்போதைக்குப் படங்கள் வரைவதிலேயே அவர்கள் தம் கைகளை உபயோகிக்கட்டுமே. இதற்கு ஆசிரியர்களும் சித்திரம் வரைவதன் அடிப்படைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால், இந்த கட்டத்தில் நான் இந்த விஷயமாக இன்னும் ஆழ்ந்து செல்லக் கூடாது. இந்த யோசனையைப் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். நாம் சந்திக்கும்போது இதைப் பற்றி இன்னும் விவரமாகப் பேசுவோம்.

—'நவஜீவன்' – 17—11—1924

# 5

# உழைப்பின் மேன்மை

"நமது சர்வகலாசாலைகளில் பட்டங்கள் பெற்ற இளைஞர்கள், தமது பட்டங்களை விலைகூறிக் கொண்டிருப்பதை தினமும் பார்க்கிறோம். படிப்பே இல்லாத, ஆனால், பணக்காரராக உள்ள ஒருவரிடம் அவர்கள் சிபார்சு கேட்கிறார்கள். பெரும்பாலான சந்தர்ப்பங்களில், சர்வகலாசாலைப் பட்டத்தை விட அதிகாரிகள் அந்தப் பணக்காரரின் சிபார்சுக்குத்தான் அதிக மதிப்புக் கொடுக்கிறார்கள். இது எதைக் காட்டுகிறது. அறிவாற்றலைவிடப் பணத்திற்குத்தான் அதிக மதிப்பு, மூளைக்கு அவ்வளவு மதிப்பு கிடையாது என்பதையே அது காட்டுகிறது. ஏன் இப்படி இருக்கிறது? மூளையினால் பணம் சம்பாதிக்க முடியவில்லை என்பதே இதற்குக் காரணம். அறிவாற்றல் தேவைப்படும் வேலைகள் இல்லாததுதான் இந்தத் தோல்விக்குக் காரணமாகும். மனித சமுதாயத்திலேயே மூளைதான் மிக மதிப்புள்ளதும், பலமுள்ளதுமான சக்தியாகும்; ஆனால், அதற்கு கிராக்கி இல்லாததால் அது வீணாகிறது.

"ஒரு விவசாயினுடைய ஆஸ்தி அவருடைய கைகள்தான். ஜமீன்தாரின் ஆஸ்தி அவருடைய நிலங்களே. நிலத்தின் பண்பாடுதான் விவசாயம். கை

களின் ஆற்றல்தான் கைத்தொழில். விவசாயமும் ஒரு கைத்தொழில் என்று கூறப்படுகிறது என்பதை நான் அறிவேன். ஆனால், அடிப்படைகளில் உள்ள வித்தியாசங்கள் காரணமாக விவசாயத்தைக் கைத்தொழில்களின் ரகத்தில் சேர்த்துவிட முடியாது. கைகளின் ஆற்றல் படிப்படியாக வளர்ச்சிபெற்று, அந்தந்தக் கட்டத்தில் அதிகப்படியான ஊதியத்திற்கு வழிவகை செய்யும். உடலுழைப்பின் ஒரு பிரிவைத்தான் கைத்தொழில் என்று நியாயமாகச் சொல்ல முடியும். நிலத்தில் வேலை செய்வது இப்படியல்ல. ஏர் உழுபவன், விதை விதைப்பவன், வயல்களில் களை பிடுங்குபவன், தன்னுடைய கைகளின் ஆற்றலின் மூலம் அதிக ஊதியம் பெறமாட்டான். விவசாயிகளின் தொழிலில் இன்னும் அதிக வருவாய் பெறக்கூடிய திறமை பெறுவதற்கு வாய்ப்பு இல்லை. ஒரு தச்சரை எடுத்துக்கொள்ளுவோம். சாமான்களை வைக்கும் பெட்டிகளைச் செய்வதுடன் அவர் தன் வேலையை ஆரம்பிக்கிறார். அவருடைய தினசரி ஊதியம் பெருகும்போது, அதற்கேற்றவாறு அவருடைய கைத்திறனும் வளருவதைக் கவனியுங்கள். இரண்டு புட்டிகளின் மேல் படமெடுத்து ஆடும் பாம்புகள் போல் அமைத்து, ஓர் அற்புதமான சாதனத்தைச் செய்தவர், சாமான்கள் போடும் பெட்டிகள் செய்வதற்காகத்தான் முதலில் என்னிடம் அமர்ந்தார். முதலில் அவருக்கு தினசரி கூலி ஆறணா. இரண்டு வருடங்களில் அவர் தினசரி ஒரு ரூபாய் சம்பாதிக்க ஆரம்பித்துவிட்டார். அவருடைய கைவினைத் தொழில் உற்பத்திகளின் மார்க்கெட் விலைப்படி, அதில் தினசரி குறைந்தபட்சம் நாலணா அவரை வேலைக்கு அமர்த்திக் கொண்டவருக்குக் கிடைத்தது. இதனால் இரண்டு வருடங்களில் சம்பளம் ரூ. 133-லிருந்து ரூ. 365 ஆக உயருகிறது. ஜனத்தொகையில் 98 சதவிகிதத்தினருக்கு அதிகமாகவே நிலங்களில் வேலை செய்கிறார்கள். நிலங்களின் பரப்பு வளருவதில்லை. ஜனத்தொகை பெருகப் பெருக நபர்களின் எண்ணிக்கையும அதிகமாகிறது. முப்பது வருடங்களுக்கு முன்பு ஒருவரிடமிருந்து நிலம் ஐந்து பேர்கள் கொண்ட ஒரு குடும்பத்தைக் காப்பாற்றிக் கொண்டிருந்தது. இப்போது அதே நிலம் 12 முதல் 15 பேர்கள் வரை காப்பாற்ற வேண்டியிருக்கிறது. சில சமயங்களில் அந்தக் குடும்பத்தில் உள்ளவர்களில் சிலர் வேறு இடங்களுக்குப் போவதன் மூலம் இந்த அதிகப்படி நிர்ப்பந்தம் குறைகிறது. ஆனால், பெரும்பாலான சந்தர்ப்பங்களில் ஜீவசக்திக் குறைவு தவிர்க்க முடியாதது என்று ஏற்பட்டுவிடுகிறது.''

1924-இல் பீகார் இளைஞர்கள் கழகத்தில் ஸ்ரீ எம். எஸ். தாஸ் செய்த பிரசங்கத்திலிருந்து சில பகுதிகளை மேலே கொடுத்திருக்கிறேன். உரிய தருணத்தில் அதன் முக்கியமான அம்சங்களை விவாதிக்க வேண்டும் என்பதற்காக அந்தப் பிரசங்கத்தை என்னிடமே வைத்திருந்தேன். இவர் சொல்லியிருப்பதில் புதியது ஒன்றுமில்லை. அவர் ஒரு பிரபல வக்கீல், ஆனால், உடலுழைப்பை அவர் இழிவுபடுத்தவில்லை. வயதான பிறகு அவர் கைவினைத் தொழில்களைக் கற்றுக்கொண்டார். வெறும் பொழுது போக்குக்காக மட்டும் கற்றுக்கொள்ளவில்லை. இளைஞர்களுக்கு உடலுழைப்பின் மேன்மையைக் காட்டுவதற்காகவும், நாட்டின் கைத் தொழில்களில் அவர்கள் கவனம் செலுத்த ஆரம்பித்தாலொழிய, எதிர்காலம் பிரகாசமாக இல்லை என்பதை அவர்களுக்குக் காட்டுவதற்காகவுமே அவர் கற்றுக்கொண்டார்.

அதனால்தான் அவர் கூறுவதற்கு மதிப்பு இருக்கிறது. ஸ்ரீ தாஸே கட்டாக்கில் ஒரு தோல் பதனிடும் தொழிற்சாலையை அமைத்திருக்கிறார். அதற்கு முன்பு குறிப்பிட்ட எந்த வேலையிலும் தேர்ச்சி இல்லாத சாதாரண தொழிலாளர்களாக இருந்தவர்களில் பலர் இதன்மூலம் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். ஆனால், லட்சக்கணக்கான கைகளின் புத்திசாலித்தனமான உழைப்பு தேவையாக இருக்கும் மிகப் பெரிய கைத்தொழில் நூல் நூற்றல் தான் என்பதில் சந்தேகமில்லை.

இந்த நாட்டில் விவசாயத்தை நம்பியிருக்கும் ஏராளமான மக்களுக்கு, மேற்கொண்டு புத்திசாலித்தனமான ஒரு வேலையைக் கொடுக்க வேண்டியதே இன்றைய தேவையாகும்; அந்த வேலை அவர்களுடைய மூளை, கைகள் இரண்டுக்குமே பயிற்சியளிப்பதாக இருக்க வேண்டும். அவர்களுக்கு அளிக்கக் கூடிய மிகச் சிறந்ததும், மலிவானதுமான கல்வி அதுதான். உடனடியாக அது வருவாய் அளிக்கிறது என்பதால் மலிவானது என்று சொல்லுகிறேன். இந்தியாவில் எல்லோரும் கல்வி பயில வேண்டுமென்று நாம் விரும்பினால், எழுதப்படிக்கத் தெரிவதும், கணக்குப்போடத் தெரிவதும் ஆரம்பக் கல்வியாகாது. ராட்டையில் நூற்றலே அந்தக் கல்வியாகும். அதன் மூலம் கைகளும் கண்களும் சரியாகப் பயிற்சி பெறும்போது, எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளுவதற்கு குழந்தைகள் தயாராகிவிடுகிறார்கள். இது முற்றிலும் அர்த்தமற்றதென்று சிலருக்குத் தோன்றலாம், முற்றிலும் அனுபவ சாத்தியமற்றதென்று சிலருக்குத் தோன்றலாம். இது எனக்குத் தெரியும். ஆனால், அப்படி நினைப்பவர்கள் நம் நாட்டிலுள்ள லட்சக்கணக்கான மக்களின் நிலைமையை அறியாதவர்களாவர். லட்சக்கணக்கான இந்திய விவசாயிகளின் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுவது என்றால் என்ன என்பதையும் அவர்கள் அறியமாட்டார்கள். நாட்டில் ஏற்பட்டுள்ள அரசியல் விழிப்புக்குப் படித்தவர்கள்தான் காரணம். அவர்கள் உடலுழைப்பின் மேன்மையை உணர வேண்டும். ஒவ்வொரு இளைஞனும் கைராட்டினத்தில் நூற்கக் கற்றுக்கொண்டு, அதை கிராமத்திலும் பரப்புவதைத் தன் கடமையாகக் கருத வேண்டும். இல்லாதவரையில் மிகவும் அவசியமான இந்தக் கல்வியை அளிக்க முடியாது.

—'எங் இந்தியா' – 9—9—1926

# 6

# ஒரு மாணவனின் சங்கடம்

வஞ்சனை, சூது, எதுவும் இல்லாத மாணவர் ஒருவர் பின் வருமாறு எழுதுகிறார் :

"நான் ஒரு கதர் ஊழியனுக வேண்டும் என்று நீங்கள் எனக்கு எழுதியிருந்த கடிதத்தை மிகுந்த கவனத்துடன் படித்தேன். நாட்டுக்குச் சேவை செய்யக் கூடிய ஏதாவது ஒரு வேலையை மேற்கொள்ள வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். ஆனால், கதர் ஊழியர் ஆவதா அல்லது வேறு ஏதாவது சேவையை மேற்கொள்ளுவதா என்று இனிமேல்தான் நான் முடிவு செய்ய வேண்டும். ஆன்மிக வளர்ச்சிக்கு கதர் வேலை ஒரு கருவியாக இருக்கமுடியும் என்று இன்னும் என் மனத்தில் படவில்லை. இப்போதைக்கு நாட்டுக்கு என்னுடைய கடமையை நிறைவேற்றுவதற்காக நூற்றுக் கொண்டிருக்கிறேன். ஏனெனில், நமது பொருளாதார அபிவிருத்திக்கும், சுதந்திரம் பெறுவதற்கும் இது அவசியம் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். இறுதியில் எனக்கு நல்ல திருப்தியளிக்கும் வேலையைத்தான் நான் ஏற்றுக் கொள்ளுவேன். ஆனால், இப்போதைக்கு முடிந்தவரையில் விஷயங்களைத் தெரிந்து கொண்டு, சேவைக்கு என்னைத் தயார் செய்துகொள்ள வேண்டும் என்பதே என்னுடைய நோக்கமாகும்.

"பிரம்மச்சரியம் சம்பந்தபட்டவரையில், அதைப்பற்றி நான் என்ன எழுத முடியும்? பிரம்மச்சரிய விரதத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற என்னுடைய விருப்பம் நிறைவேறுவதற்கான சக்தியையும் உறுதியையும் அளிக்கும்படி நான் கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்ளத்தான் முடியும்.

"பள்ளிக்கூடங்களில் அறிவும் பெற வேண்டும், அதே சமயத்தில் கைவினைத் தொழில்களையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் ஏன் சம முக்கியத்துவம் அளிக்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை. இரண்டையும் ஒரே சமயத்தில் செய்வதற்கு முயற்சிப்பதன் மூலம், ஒன்றைக்கூட நாம் சரியாகச் செய்யத் தவறிவிடுகிறோம் என்றே நான் நினைக்கிறேன்.

"ஏதாவது ஒரு தொழிலை நாம் கற்றுக்கொள்ள வேண்டியது தான். ஆனால், அறிவை வளர்க்கும் பயிற்சி முடிந்த பிறகு அதை ஆரம்பிப்பது நல்லதல்லவா? ராட்டையில் நூற்பதை நான் ஒரு தொழிலாகக் கருதவில்லை. சமூகத்திற்கு நாம் செய்ய வேண்டிய ஒரு கடமையாகவே அதைக் கருதுகிறேன். ஆகையால், ஒவ்வொருவருமே நூற்கத்தான் வேண்டும். ஆனால், நெசவு, விவசாயம், தச்சு வேலை முதலியவைகளைப் பள்ளிக்கூடப் படிப்பு முடியும் வரையில் ஒத்திப் போடலாமென்றே நான் நினைக்கிறேன். அவை ஒவ்வொன்றும், பூராவாகக் கற்க வேண்டிய தனித்தனியான விஷயங்கள். அதற்கென்று தனியாக ஒருவருடமோ அல்லது அதற்கும் அதிகமாகவோ ஒதுக்கினல் போதும்.

"இங்கு காரியங்கள் செய்யப்படும் விதம், அறிவு வளர்ச்சி, தொழில் திறமை இரண்டையுமே பாதிக்கிறது. மூன்று மணிநேரம் தொழில் பயிற்சி,

ஓய்வு நேரத்தில் நூல் நூற்றல், மற்றப் பள்ளிக்கூடங்களில் போதிக்கப்படும் பாடங்களையெல்லாம் படித்தல், பின்னர் மற்றவர்களுடன் சேர்ந்து பொது வான வேலைகளைச் செய்தல் ஆகிய இவ்வளவையும் செய்வதென்பது உண்மை யில் மிகவும் கஷ்டமாக இருக்கிறது.

"பையன்கள் இவ்வளவு படிக்க வேண்டுமென்று விதித்திருப்பதைக் குறைக்க முடியாது. எல்லாப் பாடங்களையும் அவர்கள் படிக்க வேண்டியது அவசியம். தம்முடைய வாசிப்பைத் தாமே கவனித்துக்கொள்ள வேண்டி யிருப்பதுடன், இவ்வளவு பாடங்களையும் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கும் பையன்கள் மீது மேற்கொண்டு அதிக வேலையைச் சுமத்துவது எப்படி நியாய மாகும்? தமக்கு அளிக்கப்பட்டுள்ள வேலைகளைச் செய்வதற்கே அவர் களுக்குப் போதிய அவகாசம் கிடைக்கவில்லையென்றால், தம்முடைய பாடங் களைப் படிப்பது, தாமே சிந்தித்துப் பார்ப்பது ஆகியவற்றிற்கு அவகாசம் கிடைக்கும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

"இந்தக் கஷ்டங்களைப் பற்றி ஆசிரியர்களுடன் நான் விவாதித்தேன். இதைப் பற்றி விவாதங்களும் நடந்திருக்கின்றன, ஆனால், எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. எங்களுடைய கஷ்டங்களை ஆசிரியர்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையென்று நினைக்கிறேன். நான் கூறியுள்ள விஷயங்களைப் பற்றி நீங்கள் யோசனை செய்து பார்த்து, அதில் என்ன தவறு இருக்கிறது என்பதை தயவுசெய்து எடுத்துக் காட்டுவீர்களா?"

இந்தக் கடிதத்தில் இரண்டு முக்கியமான விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. இந்தக் கடிதம் என்னுடைய கடிதத்திற்கு எழுதப்பட்ட பதில் என்பதை வாசகர்களுக்கு நான் சொல்லத் தேவையில்லை. இவருக்குத் தனியாக பதில் எழுதுவதைவிட 'நவஜீவன்' பத்திரிகையிலேயே இந்த விஷயங்களைப் பற்றி விவா தித்தால், இதே மாதிரி சங்கடங்கள் உள்ள மற்ற மாணவர் களுக்கும் உதவியாக இருக்குமென்று நினைத்தேன். அதனால் தான் இந்த மூன்று மாதங்களாக இதற்கு பதில் அனுப்பாமல் வைத்துக்கொண்டிருந்தேன்.

இந்தக் கடிதத்தில், ஆன்மிக வளர்ச்சி, சமூகத்திற்குச் சேவை ஆகிய இரண்டுக்குமிடையே ஒரு பாகுபாடு செய்யப்பட்டிருக் கிறது; இந்தியாவில் பலர் இதே மாதிரி வேற்றுமை பாராட்டு கிறார்கள். இது தவறானது என்றே நான் கருதுகிறேன். உள் ளத்தின் வளர்ச்சிக்கு முரணாக இருக்கிற எதுவுமே பொதுவாக சமூகத்தின் உண்மையான வளர்ச்சிக்கும் முரணானதுதான் என்பதே என்னுடைய நம்பிக்கையாகும்; என்னுடைய அனுப வமும் இப்படித்தான். சமூகத்திற்கு சேவை செய்வதன் மூலம் தான் ஆன்மிக வளர்ச்சியில் வெற்றிபெற முடியுமென்று நான் கருதுகிறேன். சேவை என்பது யக்ஞத்தைப் போன்றதேயாகும். ஆன்மிக வளர்ச்சிக்கு இடையூறாக இருக்கும் சேவையைப் புறக் கணித்துவிட வேண்டும்.

பொய் சொல்லுவதன் மூலமும் சில சமயங்களில் சேவை செய்ய முடியுமென்று நினைப்பவர்கள் இருக்கிறார்கள். ஆனால்,

பொய் சொல்லுவது ஆன்மாவை இழிவு படுத்துவதாகும் என்பதையும், அதனுடைய உயர்ந்த ஸ்தானத்திலிருந்து வீழ்ச்சியுறச் செய்துவிடுகிறது என்பதையும் யாவரும் அறிவர். ஆகையால், பொய் சொல்லுவதன் மூலம் சேவை செய்யலாம் என்பதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. உண்மையில், பொய் சொல்லுவதும் சேவைக்கு ஒரு சாதனமாக இருக்க முடியும் என்று நினைப்பது வெறும் மன பிரமையே ஆகும். அதனால், சமூகத்திற்குத் தாற்காலிகமான நன்மை ஏற்படுவதாகத் தோன்றலாம். ஆனால், இறுதியில் அதனால் நன்மையைவிடக் கெடுதல் ஏற்படுகிறது என்பதை ருசுப்பிக்க முடியும்.

இதற்கு மாறாக, சமூகத்திற்கும், உலகிற்கும், ஆகையால், ஆன்மாவுக்கும்கூட ராட்டை நன்மை செய்கிறது. இதனால் ஒருவன் நூற்கிறான் என்பதற்காக அவனுக்கு ஆன்மிக வளர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது என்று அர்த்தமில்லை. ஒன்றிரண்டு அணாக்களைச் சம்பாதிப்பதற்காக நூற்பவருக்கு ஒன்றிரண்டு அணாக்கள் தான் கிடைக்கும். ஆன்ம தரிசனம் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் நூற்பவர் அதன் மூலம் முக்தி பெறலாம். தாகத்துடனிருப்பவனுக்கு அன்புடனும், பக்தியுடனும் குடிக்கத் தண்ணீர் கொடுப்பவனும் முக்தி பெறலாம். பகட்டுக்காக காயத்ரி மந்திரத்தை ஜபிப்பவர்கள் வீழ்ச்சியடைந்துவிடுகிறார்கள். பணத்திற்காக இந்த மந்திரத்தை ஜபிப்பவர்கள் தம்முடைய பண ஆசையை நிறை வேற்றிக்கொள்ளுவதற்கு அப்பால் போக முடியாது. நோக்கம் உயர்ந்ததாகவும், பரிசுத்தமானதாகவும் இருந்து, செயலும் அதே மாதிரி இருந்தால் முக்தி பெற முடியும்.

உயர்ந்த நோக்கம் எது, உயர்தரமான செயல் எது என்பதைத் தெரிந்துகொள்ளுவதற்கு பிரம்மத்தைப் பற்றிய அறிவு அவசியம். ஆன்மிக வளர்ச்சி பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் கதர் வேலைக்குத் தகுதி பெறுவதென்பது சிறிய விஷயம் அல்ல. ஆன்மிக வளர்ச்சி பெற விரும்பும் கதர் ஊழியர் விருப்பு, வெறுப்புகள் இல்லாதவராக இருக்க வேண்டும். இதைப் பற்றிச் சொல்ல வேண்டிய யாவும் அநேகமாக இதிலேயே அடங்கியிருக்கிறது. தன்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்குப் போதுமானதை மட்டும் பெற்றுக்கொண்டு, எங்கேயோ தொலைவில் உள்ள ஒரு கிராமத்தில், நேசபாவமற்ற சூழ்நிலையில் போய் உட்கார்ந்து கொண்டு, தளராத நம்பிக்கையுடன் வேலை செய்யக் கூடிய கதர் ஊழியர் ஒருவர்கூட இதுவரையில் நமக்குக் கிடைக்கவில்லை. அத்தகைய ஒரு ஊழியருக்கு சமஸ்கிருதமும், சங்கீதமும் தெரிந்திருக்க வேண்டும்; எல்லா முக்கியமான மதங்களின் அடிப்படைகளையும் பற்றிப் போதிய அளவுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்றே எதிர்பார்ப்பேன். தனக்குத் தெரிந்த கலைகளை அவர் நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், ராட்டையைச் சுழற்றுவதைத் தவிர அவருக்கு வேறு ஒன்றுமே தெரியாது என்றால்கூட அவர் திருப்தியுடன் வேலை செய்ய முடியும்.

எவ்வளவோ காலமாக சோம்பேறித்தனம், மூட நம்பிக்கை, பசி, நம்பிக்கையின்மை ஆகியவையெல்லாம் நிலவி வந்திருக்கின்றன. இதனால் ஏற்பட்டுள்ள இருளையும் துன்பத்தையும் போக்க வேண்டுமானால், சற்றேறக்குறைய முக்தியின் தலைவாசலையே அடைந்துள்ள தவச் சீலர்கள் நமக்கு வேண்டும். இந்த தருமத்தை ஒரு அளவுக்குப் பின்பற்றினால் கூட, பெரிய விபரீதங்களை அது தடுக்கும். ஆகவே, அதைப் பின்பற்றுவது சுலபமானது. ஆனால், அதைப் பரிபூரணமாக நிறைவேற்றுவதென்பது, ஆன்ம தரிசனம் செய்ய விரும்பும் ஒருவரின் தவத்தைப் போல் அவ்வளவு கடினமானதாகும்.

உடனே படிப்புகளை நிறுத்திவிட்டு, கதர் வேலையில் இறங்கிவிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. தைரியமும், உறுதியும், நம்பிக்கையும் உள்ள ஒரு மாணவன், "என்னுடைய படிப்பு முடிந்தவுடன் நான் கதர் வேலையை மேற்கொள்ளுவேன்" என்று இன்றைக்கே பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றே நான் சொல்லுகிறேன். இந்தப் பிரதிக்ஞையை எடுத்துக் கொண்டுவிட்டால், அவருடைய கதர் வேலை ஆரம்பமாகிவிட்டதென்றே கூறலாம். ஏனெனில், இந்தக் குறிப்பிட்ட வேலைக்குத் தேவையான தகுதியைப் பெறுவதற்கே அவர் முயற்சி செய்வார்.

இனி இரண்டாவது சங்கடத்தை கவனிப்போம். "பள்ளிக்கூடங்களில் அறிவும் பெற வேண்டும், அதே சமயத்தில் கைவினைத் தொழில்களையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் ஏன் சம முக்கியத்துவம் அளிக்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை."

நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்ததிலிருந்து இதே கேள்வி பல தடவைகளில் என்னிடம் கேட்கப்பட்டிருக்கிறது இரண்டுக்கும் சம முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டுமென்ற அதே பதிலைத்தான் நான் கொடுத்து வந்திருக்கிறேன். முன் காலத்தில் அப்படித்தான் இருந்தது. மாணவன் கையில் ஸமித்துக் கட்டைகளுடன் குருவினிடம் போவான். அவன் வேலை செய்யத் தயாராயிருக்கிறான் என்பதற்கும், அவனுடைய தாழ்மைக்கும் அது ஓர் அடையாளமாகும். வேலை என்பது, குருவுக்காகக் காட்டிலிருந்து விறகு கொண்டு வருவதும் தண்ணீர் கொண்டுவருவதும்தான். விவசாயம், பசுப் பராமரிப்பு முதலியவைகளைப் பற்றியும் குருவினிடமிருந்து அவன் சிறிது கற்றுக் கொள்ளுவான்.

இன்று நிலைமை அப்படியில்லை. உலகத்தில் இன்று இவ்வளவு பசி, அநீதி, தீமை இருப்பதற்கான காரணங்களில் அதுவும் ஒன்றாகும். புத்தகப் படிப்பு, அறிவு வளர்ச்சி பெறுவது, பல்வேறு கைவினைத் தொழில்களில் உடலுழைப்பு ஆகியவையெல்லாம் பார்வைக்கு வெவ்வேறாகத் தோன்றினாலும், உண்மையில் வேவ்வேறானவையல்ல. இவற்றை இணைத்து வைத்துள்ள

பிணைப்புகளைத் துண்டிக்க முயற்சிப்பது, அறிவை துஷ்பிரயோகம் செய்வதாகிறது. அறிவு வளர்ச்சிப் பகுதி கணவனைப் போன்றது; உடலுழைப்புப் பகுதி மனைவியைப் போன்றது. இவ்விரண்டுக்கு மிடையே உள்ள பந்தம் துண்டிக்க முடியாதது. உடலுழைப்பு இல்லாததால், கணவன் இன்று சிறிதும் தன்னடக்கமின்றி நடந்து கொள்ளுகிறான். தன்னுடைய தீய கண்களைக் கட்டுப்பாடின்றி கண்டவற்றையெல்லாம் பார்க்க அனுமதிக்கிறான். அப்படியும் அவனுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை; கடைசியில் அலுத்து, சலித்துப் போய் வீழ்ச்சியடைகிறான்.

இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுமானால், உட லுழைப்புக்குத் தான் முதலிடம் கொடுக்க வேண்டியிருக்கும். ஒரு குழந்தை முதலில் தன் அறிவை உபயோகிப்பதில்லை; கைகளையும் கால்களையும்தான் உபயோகிக்கிறது; கொஞ்சம் கொஞ்சமாகத் தனது கண்களையும், காதுகளையும் உபயோகிக்க ஆரம்பிக்கிறது. நாலு, ஐந்து வயதான பிறகு தான் அது விஷயங் களைப் புரிந்து கொள்ளுகிறது. குழந்தைக்குப் புரிந்து கொள்ளும் சக்தி அதிகமாக இருந்தால், உடலைப் புறக்கணித்து விடலா மென்று அர்த்தமில்லை. அப்படிச் செய்தால் உடல் மனம் இரண் டுமே பாழாகிவிடும். உடலின் செய்கைகள் மூலம்தான் அறிவு தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுகிறது. இன்று உடற்பயிற்சி விளையாட்டுகளைச் செய்வதோடு நின்று விடுகிறது. முன்பெல் லாம் இந்தத் தேவை உபயோகமான உடலுழைப்பின் மூலம் பூர்த்தியாகிக் கொண்டிருந்தது. பையன்கள் விளையாட்டு களிலோ, போட்டிகளிலோ கலந்து கொள்ளக் கூடாது என்று நான் சொல்லவில்லை. தேக ஆரோக்கியத்திற்காக மட்டும் இத் தகைய விளையாட்டுகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க லாகாது. அதற்குப் பதிலாக உடல், மனம் இரண்டுக்குமே ஓய்வு கொடுக்க வேண்டும். கல்வியில் சோம்பலுக்கு இடமில்லை. ஒரு கைத்தொழிலைக் கற்றுக் கொண்டாலும், எழுதப்படிக்கக் கற்றுக் கொண்டாலும், கல்வி என்பது எப்போதுமே சுவாரஸ்யமாக இருக்க வேண்டும். படிப்பதிலோ, எழுதுவதிலோ, கைத் தொழிலைக் கற்றுக் கொள்ளுவதிலோ அலுப்பு ஏற்பட்டால், அது பையனுடைய தவறல்ல, கல்வி முறையிலும், ஆசிரியரிடமும் உள்ள தவறேயாகும்.

இந்தக் கடிதம் என்னிடம் இருந்த காலத்தில், இங்கிலாந்தில் மேற்கொள்ளப் படும் ஒரு புதிய கல்வித் துறை சோதனையைப் பற்றிய புத்தகத்தை நான் படிக்க நேர்ந்தது. அங்கு ஒரு ஸ்தா பனம் அமைக்கப்பட்டிருக்கிறது. கைவினைத் தொழில்களில் பயிற்சியளிப்பதுடன், இலக்கியக் கல்வியையும் போதிப்பதற்கு அந்த ஸ்தாபனத்தின் சார்பில் பல நிலையங்கள் ஆரம்பிக்கப்படும். இதை ஆரம்பித்துள்ளவர்களின் ஜாப்தாவில், பிரிட்டனில் கல்வித் துறையில் பிரமுகர்களாக உள்ள அநேகமாக எல்லோருடைய பெயர்களும் இருக்கின்றன. கல்வியின் இப்போதைய போக்கை மாற்றி குழந்தைகளுக்குக் கைத்தொழில் பயிற்சி, இலக்கியக்

கல்வி இரண்டையும் அளிக்க வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். கைத்தொழில் பயிற்சிக்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்வதற்காக சுற்றி நிறைய திறந்தவெளி உள்ள இடங் களில் இம்மாதிரி இன்னும் பல நிலையங்கள் ஆரம்பிக்கப்படும். இதனால் பையன்கள் கற்றுக் கொள்ளும் போதே ஏதாவது சம்பா திப்பதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. இதனால் இலக்கியக் கல்விக் காகச் செலவிடப்படும் காலம் ஒருக்கால் அதிகமாகலாம் என்று அந்தப் புத்தகத்தின் ஆசிரியர் கூறுகிறார். எனினும், அதனால் ஒரு கெடுதலும் இல்லையென்றும் சொல்லுகிறார். அதற்கு மாறாக, அதனால் மாணவர்களுக்கு நன்மையே ஏற்படும். ஒரு பையன் சம் பாதிக்க ஆரம்பித்தால், நாணயமாகச் சம்பாதிக்கும் பணத்தின் மதிப்பைத் தெரிந்து கொள்ளுகிறான். தனக்கு அளிக்கப்படும் எல்லா விதமான பாட போதனைகளிலும் அவனுக்கு ஒரு மதிப்பு ஏற்படுகிறது.

தென்னாப்பிரிக்காவில் நான் நடத்திய சோதனைகள் இந்தக் கருத்தை ஊர்ஜிதம் செய்கின்றன என்றே நான் நினைக்கிறேன். நான் எந்த அளவுக்கு அதை நிறைவேற்ற முடிந்ததோ, அந்த அளவுக்கு அது வெற்றி பெற்றது.

பாடம் சொல்லிக் கொடுக்கும் முறை நன்றாக இருந்தால், பாடங்களைப் படிப்பதற்கோ, அதைத் தவிர வேறு விஷயங்களைப் படிப்பதற்கோ அதிக காலம் ஆகாது. மாணவர்கள் தம் விருப் பப்படி நடந்து கொள்ளுவதற்கும், விருப்பப்படி படிப்பதற்கும், சோம்பேறித்தனமாகப் பொழுதைப் போக்குவதற்கும் கூட கொஞ்சம் அவகாசம் அவசியம்தான். யோகாப்பியாசத்தில் இதை 'சவாசனம்' என்று கூறுகிறார்கள் என்பதைச் சிறிது காலத்திற்கு முன்பு நான் அறிந்தேன். 'சவாசனம்' என்றால், பிரேதத்தைப் போல் கால்களை நீட்டிக் கொண்டு, எந்த சிந் தனையும் இல்லாமல் படுத்திருப்பது என்று அர்த்தம். அப் போதும் கூட, ஒவ்வொரு தரம் மூச்சு விடும்போதும் ராம நாமத்தை ஜபித்துக் கொண்டிருக்க வேண்டும்; எனினும், அதனால் ஓய்வு பாதிக்கப்படக் கூடாது. ஒரு பிரம்மச்சாரிக்கு ஒவ்வொரு மூச்சிலும் கடவுளின் திருநாமத்தைக் கூறுவதுதான் கடமை யாகும்.

நான் சொல்லுவது சரிதான் என்றால், இந்த மாணவரும், அவருடைய மற்ற நண்பர்களும் இந்த உண்மையின் அனு பவத்தை ஏன் பெறவில்லை? இவர்கள் பொய் சொல்லுபவர்கள் அல்ல; மமதை பிடித்தவர்கள் அல்ல; தம்முடைய லட்சியத்தை அடைவதற்காகக் கடுமையாக உழைக்கவும் தயாராக இருக் கிறார்கள். அப்படியிருக்க ஏன் அவர்களுக்கு இந்த அனுபவம் ஏற்படவில்லை?

நம் எல்லோரிடமுமே உள்ள பரிதாபம் இதுதான்: கை வினைத் தொழில்களைப் புறக்கணித்துவிட்டு, இலக்கியக் கல்விக்கே

முக்கியத்துவம் கொடுக்கப்படும் காலத்தில் நமது ஆசிரியர்கள் பிறந்து வளர்ந்திருக்கிறார்கள். ஆயினும், நம்மில் சிலர் இந்தப் பெரிய தவறைக் கண்டுகொண்டிருக்கிறோம். இதைத் திருத்து வதற்கு முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. ஆனால், எப்படித் திருத்த வேண்டும் என்பது இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. மேலும், தெரிந்துகொண்டுள்ள சொற்பத்தையும் நாம் நிறை வேற்றக்கூடிய சக்தி இல்லாதவர்களாக இருக்கிறோம். ரகுவம்சம், அல்லது ராமாயணம் அல்லது ஷேக்ஸ்பியர் பாடங்கள் சொல்லிக் கொடுக்கத் தகுதியுள்ளவர்கள், தச்சு வேலையையோ, நெசவுத் தொழிலையோ கற்றுக்கொடுப்பதற்கான பயிற்சியைப் பெற வில்லை. ரகுவம்சத்தில் அவர்களுக்குள்ள தேர்ச்சி நெசவுத் தொழிலில் இல்லை; அப்படித் தேர்ச்சி இருந்தாலும், அதில் அவர்களுக்கு அக்கறை இல்லை. நமது ஆசிரியர்களிடம் உள்ள இந்தக் குறைபாடு காரணமாக, இலக்கியக் கல்வி, கைவினைத் தொழில்களில் பயிற்சி ஆகிய இரண்டையும் கற்றுக்கொள்ளக் கூடியவர்களும், அதே சமயத்தில் நல்லொழுக்கம் உள்ளவர்களு மான சரியான மாணவர்களை உற்பத்தி செய்வது கஷ்டமாக இருக்கிறது. ஆகையால், இந்த இடைக்காலத்தில், குறை பாடுகள் உள்ள, போதிய பயிற்சி இல்லாத நமது ஆசிரியர்களும், கஷ்டப்பட்டு உழைக்கும் நமது மாணவர்களும் பொறுமை யுடனும், நம்பிக்கையுடனும் இருக்க வேண்டும். நம்பிக்கை இருந்தால் எந்தக் கடல்களையும் கடந்துவிடலாம்; தகர்க்க முடியாத கோட்டைகளையும் தகர்த்துவிடலாம்.

—'நவஜீவன்' – 3—7—1927

# 7

# சுயதேவையைப் பூர்த்தி செய்வதே சுயமரியாதை

கல்வியைக் கட்டாயமானதாக்குவதற்காக அல்லது கல்வி பெற விரும்பும் ஒவ்வொரு பையனுக்கும், பெண்ணுக்கும் கல்வி கிடைக்கச் செய்வதற்காக, இப்பத்திரிகையில் அடிக்கடி ஒரு யோசனை கூறப்பட்டிருக்கிறது. அதாவது, பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும், பூராவாக இல்லாவிட்டாலும், அநேகமாக சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுபவைகளாக இருக்க வேண்டும். இதற்கு நன்கொடைகளோ, சர்க்கார் உதவியோ, மாணவர்களிடமிருந்து கட்டணமோ பெறக்கூடாது; மாணவர் களே ஏதாவது வேலை செய்து சம்பாதிக்க வேண்டும். கைத் தொழில் பயிற்சியளிப்பதைக் கட்டாயமானதாக்கினால்தான் இது சாத்தியமாயிருக்கும். இலக்கியப் பயிற்சியுடன் மாணவர்கள்

கைத்தொழில் பயிற்சியும் பெற வேண்டிய அவசியம் நாளுக்கு நாள் அதிகமாக உணரப்பட்டு வருகிறது என்பது ஒருபுறம் இருக்கட்டும். கல்வி தன்னைக் கட்டிக்கொண்டு போவதற்கு கைத்தொழில் பயிற்சி பெற்றாக வேண்டும் என்ற அவசியமும் இந்நாட்டில் இருக்கிறது. மாணவர்கள் உடலுழைப்பின் மேன்மையை உணர ஆரம்பித்து, உடலுழைப்பு தெரியாமலிருப்பது அவமானம் என்பதும் ஏற்றுக்கொள்ளப்படும் போதுதான் இப்படிச் செய்ய முடியும்.

உலகத்தில் மிகவும் செல்வம் கொழிக்கும் நாடு அமெரிக்கா. ஆகையால், கல்வி தன்னைக் கட்டிக்கொண்டு போகவேண்டுமென்ற அவசியம் அங்கு கிடையாது. ஆயினும், அந்த நாட்டில் மாணவர்கள் தம் செலவு பூராவையும் அல்லது அதில் ஒரு பகுதியைத் தாமே சம்பாதித்துக்கொள்ளுவது வழக்கமாக இருக்கிறது. நியூ யார்க் நகரத்திலுள்ள, அமெரிக்கா இந்துஸ்தான் சங்கத்தின் வெளியீடான 'ஹிந்துஸ்தானி மாணவன்' என்ற பிரசுரத்தில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது :

"அமெரிக்க மாணவர்களில் சுமார் 50 சதவிகிதத்தினர் கோடை விடுமுறையையும், தம்முடைய பள்ளிக்கூட காலத்திலேயே ஒரு பகுதியையும் பணம் சம்பாதிப்பதற்காகச் செலவிடுகிறார்கள். 'தமக்குத் தேவையானதைத் தாமே சம்பாதித்துக் கொள்ளும் மாணவர்கள் மதிக்கப்படுகிறார்கள்' என்று கலிபோர்னியா சர்வகலாசாலை வெளியீடு கூறுகிறது. சுறுசுறுப்புள்ள ஒரு மாணவன் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டே ஒவ்வொரு வாரமும் 12 முதல் 25 மணி நேரம் வரையில் வெளி வேலைக்காகச் செலவிடலாம். இதனால் அவனுடைய கல்லூரிப் படிப்பு அதிகமாக பாதிக்கப்பட மாட்டாது. ஒரு மாணவனுக்குப் பின் கண்டவற்றில் கொஞ்சம் அனுபவ பூர்வமான அறிவு இருக்க வேண்டும். தச்சு வேலை, சர்வே செய்வது, நகல் தயாரிப்பது, கல் அடுக்குவது, ஒட்டுப் போடுவது, மோட்டார் ஓட்டுவது, போட்டோ படம் பிடிப்பது, யந்திர வேலை, சாயம் போடுதல், வயல் வேலை, பொதுப் பண்ணை வேலை, வாத்திய சங்கீதம் முதலியன. ஹோட்டல்களிலும் 2 மணிநேரம் வேலை செய்வதற்கு வாய்ப்பு இருக்கிறது. இதனால் அவனுடைய சாப்பாட்டுச் செலவு குறைகிறது. ஒரு அளவுக்குத் தன் தேவையைத் தானே சம்பாதித்துக் கொள்ளும் மாணவன், ஒரு பள்ளிக்கூட வருடத்தில், கோடை விடுமுறையின் போது, 150 டாலர்கள் முதல் 200 டாலர்கள் வரையில் மிச்சப்படுத்தலாம். கான்ஸாஸ், நியூ யார்க் சர்வகலாசாலை, பிட்ஸ்பர்க், யூனியன் சர்வகலாசாலை, ஆண்டியோக் கல்லூரி ஆகியவற்றில், கைத்தொழில் இஞ்சினீரிங்கில் 'கூட்டுறவு' பாடங்கள் அளிக்கப்படுகின்றன. ஒரு மாணவன் தொழிற்சாலைகளில் வேலை செய்யவதன் மூலம் ஒரு வருட கல்லூரிக் கட்டணத்தைச் சம்பாதிக்க முடியும்; அந்தக் காலத்தில் அவன் பெறும் அனுபவ பூர்வமான அறிவும் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படுகிறது.

"ஸிவில், மின்சார இஞ்சினீரிங்கில் இம்மாதிரி கூட்டுறவு போதனைகள் அளிப்பது பற்றி மிச்சிகன் சர்வகலாசாலை பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. கூட்டுறவு 'பாடங்களைப் பெறும்போது, இஞ்சினீரிங் பட்டம் பெறுவதற்கு இன்னும் அதிகப் படியாக ஒரு வருடம் வேண்டும்."

தம்முடைய படிப்புச் செலவுகளை மாணவர்கள் தாமே சம்பாதித்துக்கொள்ளும் விதத்தில் அமெரிக்கா தனது பள்ளிகளையும், கல்லூரிகளையும் அமைத்துக் கொள்ளுகிறதென்றால், நமது பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் இந்த ஏற்பாடு இன்னும் எவ்வளவு அவசியமாக இருக்க வேண்டும்? ஏழை மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வியளித்து அவர்களை பாப்பர்களாக்குவதைவிட, ஏதாவது வேலை தேடித்தருவது இன்னும் நல்லதல்லவா? தம்முடைய ஜீவனத்திற்கோ, பள்ளிக்கூடச் செலவுகளுக்காகவோ கைகளையும், கால்களையும் உபயோகித்து உடலுழைப்பு செய்வது கௌரவக் குறைவு என்ற தவறான எண்ணத்தை இந்திய இளைஞர்களின் மனத்தில் ஏற்படுத்திவிடுவதால் நாம் எவ்வளவு தீங்கு விளைவிக்கிறோம்? தார்மிகத் துறையிலும், ஆன்மிகத் துறையிலுமே தீங்கு ஏற்படுகிறது. தார்மிகத் துறையில்தான் அதிகத் தீங்கு ஏற்படுகிறது. மனச்சாட்சியுள்ள ஒரு இளைஞனுக்கு உபகாரச் சம்பளம் என்பது அவன் ஆயுள் பூராவும் ஒரு பெரும் சுமையாகவே இருந்துகொண்டிருக்கும். தன்னுடைய கல்விக்கு தான் பிறருடைய தருமத்தை நம்பியிருக்க வேண்டியிருந்தது என்று பிற்கால வாழ்வில் ஞாபகப்படுத்துவது யாருக்குமே பிடித்தமாக இராது. தன்னுடைய மனத்தையும் சரீரத்தையும் ஆன்மாவையும் அபிவிருத்தி செய்து கொள்ளுவதற்கு ஒரு தச்சுப் பட்டறையிலோ அல்லது அம்மாதிரி வேறு ஏதாவது ஒரு இடத்திலோ வேலை செய்த நாட்களை நினைத்து யார்தான் பெருமைப்படாமல் இருக்க முடியும்?

—'எங் இந்தியா' – 2—8—1928

# 8

# அவசியமில்லாத பயம்

மிதவாத நண்பர் ஒருவர் 'மூன்று வருடங்களுக்குள் மது விலக்கு' என்ற காங்கிரஸ் திட்டத்தை வெகுவாகப் பாராட்டிவிட்டு, கல்வியைப் பற்றித் தனக்குள்ள அச்சத்தைப் பின்வருமாறு தெரிவித்திருக்கிறார்:

"காங்கிரஸின் கல்வித் திட்டம் சிறிது கலக்கத்தை உண்டுபண்ணியிருப்பது போல் தோன்றுகிறது. உயர்தரக் கல்வியின் அபிவிருத்தியை அது தடுத்துவிடுமோவென்ற அச்சம் இருக்கிறது. நன்கு யோசனை செய்து ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு உத்தேச மாறுதல்களைப் பற்றிப் போதிய முன்னறிவிப்பு கொடுக்கப்படும் வரையில், அவசரப்பட்டு எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படமாட்டாதென்று நம்புகிறேன். காங்கிரஸ் திட்டத்தை மக்கள் முழுமையாக விவாதிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும் வரையிலாவது எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படமாட்டாதென்று நம்புகிறேன்."

இந்த அச்சத்திற்குக் கொஞ்சமும் அவசியமே இல்லை. காரியக் கமிட்டி பொதுவான எந்தக் கொள்கையையும் விதிக்க வில்லை. காசி வித்தியாபீடம், ஜமியா மில்லியா, திலக் வித்தியா பீடம், பீகார் வித்தியாபிடம், குஜராத் வித்தியாபீடம் போன்ற ஸ்தாபனங்களை காங்கிரஸ் நடத்துகிறது என்பதைத் தவிர, வேறு பொதுக்கொள்கை எதையும் அது அறிவிக்கவில்லை. நான் எழுதியதெல்லாம் என்னுடைய சொந்தக் கருத்துகளே யாகும். நாட்டின் இளைஞர்களுக்கும், இந்தியாவின் மொழி களுக்கும், பொதுப் பண்பாட்டுக்கும் இப்போதுள்ள கல்விமுறை இழைத்துள்ள பெரும் தீங்கைப் பற்றி எனக்கு திடமான அபிப் பிராயங்கள் உண்டு. ஆனல், பொதுவாக எல்லா காங்கிரஸ் காரர்களையுமே என் பக்கமாகத் திருப்பிவிட்டதாக நான் சொல் லிக்கொள்ளவில்லை. அப்படியிருக்கும்போது, காங்கிரசுக்கு வெளியே இருப்பவர்களும், இந்திய சர்வகலாசாலைகளில் ஆதிக்கம் வகிப்பவர்களுமான கல்வித் துறையாளர்களைப் பற்றி என்ன சொல்ல முடியும்? அவர்களைத் திருப்புவதென்பது எளிதான காரியமல்ல. ஸ்ரீ சாஸ்திரியார் கூறியுள்ள யோசனை நன்கு கவனிக்கப்படும். கல்வி சம்பந்தமான விஷயங்களில் யார் யாருடைய அபிப்பிராயங்களுக்கு மதிப்பு உண்டோ அவர்கள் எல்லோரையும் கலந்து ஆலோசனை செய்வார்கள். அப்படிச் செய்யாமல் தீவிரமான எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படமாட்டாது. எனக்குக் கடிதம் எழுதியுள்ள அந்த நண்பரும், அவரைப்போல் அச்சப்படும் மற்றவர்களும் இதை உறுதியாக நம்பலாம்.

ஏற்கனவே பல கல்வித் துறை பிரமுகர்களுடன் நான் கடிதப் போக்குவரத்து நடத்திக்கொண்டிருக்கிறேன். எனக்கு ஆதரவான அபிப்பிராயங்களும் கிடைத்துக்கொண்டிருக் கின்றன. இவை பொதுவான என்னுடைய திட்டத்திற்கு ஆதரவாகவே இருக்கின்றன என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரி வித்துக் கொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' – 28—8—1937

## 2

கல்வி சம்பந்தமாக இப்பத்திரிகையில் நான் தெரிவித்துள்ள கருத்துகளைப்பற்றி எனக்குப் பல அபிப்பிராயங்கள் வந்திருக் கின்றன. அவற்றில் மிக முக்கியமானவற்றை இங்கு நான் வெளி யிடலாம். இப்போதைக்கு ஒரு படித்த நண்பரின் புகாருக்கு பதில் சொல்லுகிறேன். எழுத்தறிவிப்பு புறக்கணிக்கப்பட்டுள்ள தென்றும், இதற்கு நான்தான் பொறுப்பாளி என்றும் அவர் கூறுகிறர். அம்மாதிரி நினைக்கும்படியாக நான் எழுதியவற்றில் ஒன்றுமே இல்லை. நான் கூறும் பள்ளிக்கூடங்களில் பையன் களுக்கு எல்லாப் பாடங்களுமே கைவினைத் தொழில்கள்

மூலம் சொல்லிக் கொடுக்கப்படும் என்று நான் கூறவில்லையா? எழுத்தறிவும் அதில் சேர்ந்திருக்கிறது. என்னுடைய திட்டத்தில், எழுத ஆரம்பிப்பதற்கு முன்பு கைகள் கருவிகளை உபயோகிக்க ஆரம்பித்துவிடும். வாழ்க்கையில் மற்ற விஷயங்களை அவர்கள் அறிந்திருப்பார்களாதலால், எழுத்துகள், வார்த்தைகளின் படங்களைக் கண்கள் வாசித்துவிடும்; பொருள்கள், வாக்கியங்களின் அர்த்தங்களைக் காதுகள் புரிந்து கொண்டுவிடும். பயிற்சி பூராவுமே இயற்கையானதாக இருக்கும்; துரிதமானதாக இருப்பதுடன், நாட்டிலேயே மிக மலிவானதாகவும் இருக்கும். ஆகையால், என் பள்ளிக்கூடத்திலுள்ள குழந்தைகள் எழுதுவதை விடச் சீக்கிரமாகப் படிக்க ஆரம்பித்துவிடுவார்கள். அவர்கள் எழுதுவது, இப்போது கூட நான் எழுதுவதைப்போல் கோணலாக இராது. (இதற்கு என்னுடைய ஆசிரியர்கள்தான் காரணம்). அவர்கள் பார்க்கும் பொருள்களின் படங்களை சரியாக வரைவதுபோல், எழுத்துகளையும் சரியாக வரைவார்கள். நான் கருத்தில் கொண்டுள்ளது போன்ற பள்ளிக்கூடங்கள் எப்போதாவது ஏற்பட்டால், படிப்பது சம்பந்தப்பட்டவரையில், மிகவும் முன்னேற்றமடைந்துள்ள பள்ளிகளுடனும் அவை போட்டி போடும். சேவா கிராமத்திலுள்ள பள்ளியில் படிக்கும் குழந்தைகள் பழைய முறைப்படி எழுதுகிறார்கள்; அவர்கள் கரும் பலகையையும், காகிதத்தையும் வீணடிக்கிறார்கள் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும்.

—ஹரிஜன் : - 28—8—1937

# 9

# கைவினைத் தொழில் மூலம் கல்வி

விநோபாவுக்கும், எனக்கும் இடையே ஐந்து மைல் தூரம் தான் இருக்கிறது. ஆனால், இருவருக்கும் அவரவர்களுடைய வேலை இருக்கிறது. உடல் நிலையும் திருப்திகரமாக இல்லை. எனவே, நாங்கள் ஒருவரையொருவர் சந்திப்பது அரிதாக இருக்கிறது. ஆகையால், அவசியம் ஏற்படும்போது கடிதப் போக்குவரத்தின் மூலம் எங்களுடைய அலுவல்களில் சிலவற்றை கவனித்துக் கொள்ளுகிறோம்.

*கல்வியைப் பற்றிய உங்களுடைய புதிய கருத்துகள் எனக்கு மிகவும் பி... ந்திருக்கின்றன; ஏனெனில், இந்த விஷயத்தில் என்னுடைய கருத்துகளும் அதே ரீதியில்தான் இருக்கின்றன. வேலையும் கல்வியும் என்ற இரட்டை அம்சம் எனக்குப் பிடிக்கவில்லை. வேலைதான் கல்வி என்ற அம்சம் தான் எனக்குத் திருப்தியாக இருக்கிறது. கல்வி, சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதாக இருக்க வேண்டும். அப்படி இருக்க முடியும் என்பதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. கிராம வாசிகள் சம்பந்தப்*

பட்டவரையில், சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளாத கல்வியை கல்வி என்று சொல்லுவதற்கே தகுதியில்லை. இந்த விஷயத்தில் என்னுடைய கருத்து முற்றிலும் உங்களுடைய கருத்துக்கு உகந்ததாக இருப்பதால், இது சம்பந்தமாக எதுவும் எழுத வேண்டுமென்று எனக்குத் தோன்றவில்லை. இதை நான் பரீட்சித்துப் பார்க்கத்தான் விரும்புகிறேன். இத்துறையில் நான் கொஞ்சம் பரிசோதனை செய்திருக்கிறேன்; கடவுள் அருளினால், ஒரு திட்டமான முடிவுக்கு வரலாமென்றும் நம்புகிறேன்."

அவருடைய கடிதங்களில் ஒன்றிலிருந்து மேற்கண்ட பகுதி கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கடிதத்தில் தெரிவிக்கப் பட்டுள்ள கருத்துக்கு நான் மிகுந்த முக்கியத்துவம் கொடுக் கிறேன். ஏனெனில், நானோ என்னுடைய சக ஊழியர்களோ, இத்துறையில் வினோபா செய்திருப்பதைப்போல் அவ்வளவு சோதனைகள் செய்ததில்லை. தக்ளியின் வேகத்தில் ஏற்பட்டுள்ள புரட்சிகரமான அபிவிருத்திக்கு அவருடைய ஓயாத உழைப்பே முற்றிலும் காரணமாகும். மற்ற ஊழியர்களுக்கு அவர் ஊக்க மளிக்கும் ஒரு ஊற்றாக இருந்தார். ஒரு பெரிய ஸ்தாபனத்தின் டைரக்டர் என்ற ஹோதாவில் அவருக்கு எவ்வளவோ வேலைகள் இருந்த போதிலும், ராட்டையிலும், தக்ளியிலும் தினசரி எட்டு மணிநேரத்திற்கு அதிகமாகவே அவர் நூற்றுவருகிறார். இந்தக் கைவினைத் தொழில்களுக்கு அவர் வெகு காலத்திற்கு முன்பே கல்வியில் முக்கிய இடம் கொடுத்திருக்கிறார். கைவினைத் தொழில்களின் மூலம் கல்வியை சுயதேவையைத் பூர்த்தி செய்து கொள்ளச் செய்வதென்பதை முதலில் நான்தான் கண்டேன் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆகையால், அதற்கு அவருடைய ஆதரவும் கிடைக்கிறதென்றால், அது மிகவும் ஊக்க மளிப்பதாக இருக்கிறது. வினோபாவை அறிந்தவர்கள் தம்முடைய நம்பிக்கையை பலப்படுத்திக் கொள்ளட்டும், அல்லது அறியாதவர்கள் அதை வளர்த்துக் கொள்ளட்டும் என்பதற் காகவே அவருடைய அபிப்பிராயத்தை இங்கு எடுத்துக் கொடுத் திருக்கிறேன். அவருடைய ஆதரவு எனக்குக் கிடைத்திராவிட் டால் எனக்கு வருத்தமாக இருந்திருக்கும். என்றாலும், அவர் ஆதரவு தெரிவித்திருப்பதில் எனக்கோ, 'ஹரிஜன் ஸேவக்' பத்திரிகையின் வாசகர்களுக்கோ ஆச்சரியம் எதுவுமில்லை. என்னுடைய மிகப் பழைய சக ஊழியர்களையும் நண்பர்களையும் என்னுடைய கருத்துக்கு ஆதரவாக நான் திருப்ப முடியவில்லை யென்றால், மக்களை அப்படிச் செய்ய முயற்சி செய்வது அதிகப் பிரசங்கித்தனமாகவே இருக்கும். மனு சுபேதாரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தபோது மகிழ்ச்சியும், ஆச்சரியமும் ஏற்பட்டன. கல்வி, மதுவிலக்கு பற்றிய என்னுடைய கருத்துகள் சம்பந்தமாக அவருடன் நான் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்திருக்கிறேன். அவருடைய பின் கண்ட கடிதம் வாசகர் களுக்கு சுவாரஸ்யமானதாக இருக்குமென்று நம்புகிறேன் (தம்முடைய கடிதத்துடன் அவர் ஆங்கிலத்தில் சில யோசனை

களையும் அனுப்பியிருந்தார். அவை ஏற்கனவே 'ஹரிஜன்' பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.)

"கல்வியின் சுமையை மாணவர்கள் எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ள வேண்டும்? அவர்களுடைய உடலுக்கும் மனத்திற்கும் வேலை கொடுத்துக் கொண்டும், அதே சமயத்தில் அவர்களுடைய எதிர் காலத்தில் உபயோகமாக இருக்கக் கூடியதுமான எத்தகைய வேலையை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும்? கல்வி மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க நீங்கள் ஒப்புக் கொண்டிருக்கிறீர்களென்று நான் கேள்விப்பட்டபோது, இந்தப் பிரச்னைகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். ஆகையால், இந்த விஷயமாக நான் தயாரித்துள்ள குறிப்புகளை உடனே உங்களுக்கு அனுப்பிவைக்க வேண்டுமென்று நினைத்தேன்.

"வீட்டில் செய்யும் தொழில்கள், பள்ளிக்கூடத்தில் செய்யும் தொழில்கள் ஆகிய இரண்டுக்கும் திட்டமிடுவதில் வித்தியாசம் ஒன்றுமில்லை. ஆனல், வீட்டுத் தொழில்களுக்கு வேண்டிய மூலப் பொருள்களுக்கு ஏற்பாடு செய்ய சர்க்கார் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். பள்ளிக்கூடத் தொழில்களுக்கும் அம்மாதிரி ஏற்பாடு செய்ய முடிந்தால் நல்லதுதான் என்ருலும், எப்போதுமே அது அனுபவ சாத்தியமாக இராது.

"கைகளால் இயக்கக் கூடிய கருவிகளைச் செய்வதற்கு சர்க்கார் ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக்கும்படி செய்ய முடியுமா என்பது சந்தேகமே; ஏனெனில், செலவில் சிக்கனமாக இருக்கும் கொள்கை இன்னும் சில வருடங்களுக்கு நீடிக்கத்தான் செய்யும். ஆனல் இதற்குச் சிறைகளைப் பயன்படுத்திக் கொள்ளுவது சாத்தியமாக இருக்கலாம்.

"ஒரு பொதுவான திட்டத்தைத் தயாரித்து, ஒவ்வொரு நகரத்திற்கும், ஜில்லாவிற்கும் அனுப்ப வேண்டும். குறிப்பிட்ட ஒரு தொழிலுக்கு அந்தந்த இடங்களில் என்ன வசதிகள் கிடைக்கும் எங்கெந்த மூலப் பொருள்கள் மலிவாக, சுலபமாகக் கிடைக்கும் என்ற விவரங்களைச் சேகரிப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும். நகரங்களில் நமக்கு நிறைய வசதிகள் இருக்கும். கிராமங்களில் என்ன செய்யலாம் என்பதைப் பற்றிய வரையில், அதைப் பற்றிய விவரங்கள் தெரிந்தவர்கள் தான் உபயோகமான யோசனைகளைச் சொல்ல வேண்டும்.

"ஏற்கனவே பள்ளிக்கூடம் இல்லாத இடத்தில் ஒருவரை நியமிக்க வேண்டும். அவர் தானும் வேலை செய்து கொண்டு, மற்றவர்களையும் வேலை செய்ய வைக்க வேண்டும். அவர் பையன்களுக்குப் பாடங்கள் சொல்லிக் கொடுப்பார். அவர்களுக்கு வேலை செய்யும் விதத்தைக் கற்றுக் கொடுப்பார். இரண்டும் ஏககாலத்தில் நடக்க முடிந்தால் மிகவும் நன்ருக இருக்கும்.

"நீங்கள் முதலில் இதைப் பற்றிப் பேசிய போது, பிரச்னை மிகவும் கஷ்டமானதாக இருக்கும்போல் தோன்றியது. ஆனல், இதைப் பற்றி நான் யோசித்துப் பார்த்தபோது, நம்முடைய மிகப் பெரிய மூன்று பிரச்னைகளை அது சிறந்த முறையில் தீர்க்கலாம் என்று தோன்றியது. அவையாவன: நமது மக்களுக்கு கைவினைத் தொழில்களில் பயிற்சியளிப்பது. வேலையில்லாமை, கல்வி ஆகியவையே.

"சென்ற மாதம் 18உ 'ஹரிஜன்' பத்திரிகையில் ஒரு பேராசிரியர் எழுதியிருந்த கட்டுரையைப் படித்தேன். கல்வித் துறையில் கூட சுயநல உரிமை இருப்பதுபோல் எனக்குத் தோன்றியது. நமது திட்டத்திற்கு எதிராகச் சொல்லப்படும் குறைபாடுகளுக்கெல்லாம் காரணம், நீங்கள் கூறுவது போல் வெறும் அசூயைதான். கம்பத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு, அதைப் பிடித்துக் கொண்டு, 'என்னைக் கட்டிப் போட்டுவிட்டார்கள்' என்று கிளி புகார் செய்வதாக ஞானேசுவர் மகராஜ் கூறுகிறார்.

"இந்தியா போன்ற ஏழ்மையான ஒரு நாட்டில் கல்வியையும், கைத் தொழில் பயிற்சியையும் தனித்தனியாகப் பிரித்து வைப்பதால் நலன் ஏற்படாது. நமக்குள்ள வசதிகள் குறைவு; ஆகையால், நாம் கரடு முரடான பாதையில் போகத் தயாராக இருக்க வேண்டும். பிரிட்டிஷ் சர்க்கார் இதைப் பற்றிக் கவலைப்படவில்லை, போதிய வசதிகள் இல்லையென்றால், கல்வியை விரிவு படுத்துவதன் வேகத்தைக் குறைக்க வேண்டும் என்று ஒரு அந்நிய சர்க்கார் தான் கூறும். கல்விச் செலவில் எந்த அளவை மாணவர்களிடமே மாற்றிவிடலாம் என்பதை ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்து பார்த்தால், பெரும் அளவுக்கு அவர்கள் அதற்கு உதவி செய்ய முடியும் என்பது புலப்படும். அத்துடன் மட்டுமில்லை. அவர்கள் பெரியவர்களான பிறகு ஜீவனத்திற்கு சம்பாதிக்கக் கூடிய அளவுக்கு ஒரு தொழிலை நன்றாகவும் கற்றுக் கொண்டவர்களாவர்.

—'ஹரிஜனபந்து' -16—10—1937

# 10

# சுயதேவையைப் பூர்த்திசெய்து கொள்ளும் கல்வி

டாக்டர் எ. லக்ஷ்மிபதி பின் வருமாறு எழுதுகிறார் :

"பாதிரிமாரால் நடத்தப்படும் சில ஸ்தாபனங்களை நான் பார்த்திருக்கிறேன். அங்கு காலையில்தான் பள்ளிக்கூடங்கள் நடத்தப்படுகின்றன மாலை நேரங்களை விவசாய வேலை அல்லது ஏதாவது கைவினைத் தொழில்களில் செலவிடுகிறார்கள். மாணவர்கள் செய்யும் வேலையின் தரத்திற்கும், அளவுக்கும் ஏற்றவாறு அவர்களுக்கு ஊதியமும் கொடுக்கப்படுகிறது. இவ்வாறாக அந்த ஸ்தாபனங்கள் சற்றேறக்குறைய தன்னைக் கட்டிக் கொண்டு போகும படியாகச் செய்கிறார்கள். பள்ளிக்கூடங்களை விட்டு வெளியே போகும் போது ஏதோ கண்ணைக்கட்டி விட்டது போன்ற உணர்ச்சியும் மாணவர்களுக்கு ஏற்படுவதில்லை. ஏனெனில், தம்முடைய ஜீவனத்திற்கு வேண்டியதையாவது சம்பாதித்துக் கொள்ளுவதற்கு அவர்கள் ஏதோ ஒரு தொழிலைக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். கல்வி இலாகாவினால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களில் உள்ள அலுப்புத்தட்டும் மாமூலுக்கும், இந்தப் பள்ளிக்கூடங்களுக்கும் சூழ்நிலையில் வேற்றுமை இருப்பதை நான் கவனித்திருக்கிறேன். நாம் உபயோகமான ஒரு வேலையைச் செய்துவிட்டோம், நமது உடல்கட்டும்

நமக்கு நன்ருயிருக்கிறது என்ற உணர்ச்சியில் இன்னும் அதிக ஆரோக்கியத்துடனும் காணப்படுகிருர்கள். விவசாயப் பருவத்தின் போது இந்தப் பள்ளிக்கூடங்கள் கொஞ்ச காலம் மூடப்பட்டு விடுகின்றன. பையன்களெல்லாம் வயல் வேலைக்குத் தேவையாக இருக்கிருர்கள். நகரங்களில் கூட, விருப்பம் உள்ள பையன்களைத் தொழில்களில் பயன்படுத்திக் கொள்ளலாம். இது அவர்களுக்கு ஒரு பொழுது போக்காகவும் இருக்கும். தேவையுள்ள பையன்களுக்குப் பள்ளிக்கூடத்திலேயே ஒரு வேளை சாப்பாடு போடலாம்; அல்லது காலை வகுப்புகளின் போது, அரை மணிநேரம் ஓய்வு கொடுத்து விரும்பும் பையன்கள் எல்லோருக்குமே சாப்பாடு போடலாம். இப்படிச் செய்தால் ஏழைப் பையன்கள் சந்தோஷமாகப் பள்ளிக்கு ஓடிவருவார்கள்; அவர்கள் ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போவதற்குப் பெற்ருேர்களும் ஊக்கமளிப்பார்கள்.

"இந்த அரை நாள் பள்ளிக்கூட திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டால், அதிகப்படி சம்பளம் எதுவும் கொடுக்காமல், கிராமங்களில் முதியோர்களுக்குக் கல்வியளிப்பதற்குச் சில ஆசிரியர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கட்டிடங்களும் மற்றும் இதர தளவாடங்களும் அதே மாதிரி உபயோகமாக இருக்கும். சென்னை கல்வி மந்திரியை நான் சந்தித்து, அவரிடம் ஒரு கடிதம் கொடுத்திருக்கிறேன். பள்ளிக்கூடங்களில் வகுப்புகள் நடத்தப்படும் நேரம் சரியாக இல்லாததுதான் இந்தத் தலைமுறையினரின் தேக ஆரோக்கியம் குன்றியிருப்பதற்கு முக்கிய காரணம் என்று அந்தக் கடிதத்தில் கூறியிருக்கிறேன். பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் யாவும் காலை 6 மணி முதல் 11 மணி வரையில்தான் நடத்தப்பட வேண்டும் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். பள்ளிக்கூடத்தில் நாலுமணி நேரம் படிப்பது போதுமானதாகும். பிற்பகலை வீட்டில் கழிக்கவேண்டும். மாலை நேரங்களில் உடற்பயிற்சி செய்யவேண்டும். சில பையன்கள் தம் ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொள்ளலாம்; சிலர் தம் பெற்ருேர்களின் தொழிலுக்கு உதவியாக இருக்கலாம். அப்போது மாணவர்களுக்குத் தம் பெற்ருேர்களுடன் அதிகத் தொடர்பு இருக்கும்; எந்தத் தொழிலோ அல்லது பரம்பரையான திறனே அபிவிருத்தியடைவதற்கு இது அத்தியாவசியமானதாகும்.

"உடல் வளர்ச்சி என்பது நாட்டின் வளர்ச்சி என்பதை நாம் உணர்ந்தால், இந்த மாறுதல் புரட்சிகரமானதாகத் தோன்றினும், பெரும்பாலோரும் விரும்பத்தக்கதாகவே இருக்கும். இந்தியப் பழக்க வழக்கங்களுக்கு ஏற்றதாகவும் இருக்கும்."

பள்ளிக்கூடங்களைக் காலை நேரங்களில் மட்டுமே நடத்த வேண்டும் என்று டாக்டர் லக்ஷ்மிபதி கூறும் யோசனையைக் கல்வி இலாகா அதிகாரிகளுக்குச் சிபார்சு செய்வதைத் தவிர, நான் மேற்கொண்டு அதிகமாக எதுவும் சொல்ல விரும்பவில்லை. சற்றேறக்குறைய தன்னைக் கட்டிக் கொள்ளும் பள்ளிக்கூடங்கள் சம்பந்தப்பட்டவரையில், ஒரு அளவுக்கோ முழுமையாகவோ செலவையும் சமாளித்துக் கொள்ள வேண்டும், மாணவர்களுக்கும் ஏதாவது கற்றுக் கொடுக்க வேண்டும் என்று விரும்பினுல், வேறு எந்த விதமாகவும் செய்ய முடியாது. ஆயினும், என்னுடைய சில யோசனைகள் கல்வித் துறையாளர்களுக்கு அதிர்ச்சியை விளைவித்திருக்கிறது. ஏனெனில், அவர்களுக்கு வேறு வழி தெரியாது.

கல்வி தன்னைக் கட்டிக் கொண்டு போவதா? கல்வியின் மதிப்பையே அது சீர்குலைத்து விடுமே என்று அவர்கள் நினைக்கிறார்கள். இந்த யோசனைகளில் ஏதோ வியாபார நோக்கம் இருப்பதாகவும் அவர்கள் கருதுகிறார்கள். கல்வி விஷயங்களில் யூதர்கள் செய்யும் முயற்சியைப் பற்றிய ஒரு புத்தகத்தை நான் படித்தேன். யூதர் பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்கு அளிக்கப்படும் தொழிற் பயிற்சியைப்பற்றி அதில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:

"ஆகையால், தம்முடைய கைகளை உபயோகித்துத் தாம் செய்யும் வேலைக்கு மதிப்பு இருக்கிறதென்பதை அவர்கள் அறிகிறார்கள். அறிவுத் துறையிலும் பயிற்சி இருப்பதால் அந்த வேலையின் பளு லேசாகிறது; அந்தப் பயிற்சியில் உள்ள தேசபக்தி நோக்கம் அதை உன்னதமான நிலைக்கு உயர்த்துகிறது."

சரியான ஆசிரியர்கள் இருந்தால், நமது குழந்தைகளுக்கு உடலுழைப்பின் மேன்மை கற்றுக் கொடுக்கப்படும்; தம்முடைய அறிவு வளர்ச்சியின் இயற்கையான ஒரு அம்சமாகவும் அதைக் கருதுவார்கள். தம்முடைய பயிற்சிக்குத் தேவையானதைத் தம்முடைய உழைப்பின் மூலம் சம்பாதிப்பதை தேசபக்தியுள்ள ஒரு காரியம் என்பதையும் அவர்கள் புரிந்து கொள்ளுவார்கள். உற்பத்தி செய்வதற்காக மட்டும் கைவினைத் தொழில்கள் கற்றுக் கொடுக்கப்படுவதில்லை; மாணவர்களின் அறிவை வளர்ப்பதற்காகவே அவற்றைக் கற்றுக் கொடுக்கவேண்டும் என்பது தான் என்னுடைய யோசனையின் ஜீவாதாரமான அம்சமாகும். 7 வயதுக்கும் 14 வயதுக்குமிடையே உள்ள பையன்களுக்கு சர்க்காரே பொறுப்பேற்றுக் கொண்டு, பிரதிபலன் அளிக்கக் கூடிய தொழில்கள் மூலம் அவர்களுடைய அறிவுக்கும், உடலுக்கும் பயிற்சியளிப்பதாயின், அந்த நிலைமையில் அவை தன்னைக் கட்டிக் கொண்டு போகவில்லையென்றால், பொதுப் பள்ளிகள் வெறும் மோசடிகளாகவும், ஆசிரியர்கள் முட்டாள் களாகவுமே இருக்கவேண்டும்.

ஒவ்வொரு பையனும் பெண்ணும் வெறும் யந்திரத்தைப் போல் இல்லாமல், புத்திசாலித்தனத்துடன் வேலை செய்வதாகவும், நிபுணர்களின் மேல் பார்வையில் தாம் யாவரும் சேர்ந்து செய்யும் வேலையில் அக்கறை எடுத்துக் கொள்ளுவதாகவும் வைத்துக் கொள்ளுவோம். அப்படியானால், ஒரு வருடத்திற்குப் பிறகு, அவர்கள் ஒரு மணிக்கு ஒரு அணு சம்பாதிக்கக் கூடியவர்களாக இருப்பார்கள். ஒரு நாளைக்கு நாலு மணி நேரம் வீதம், பள்ளிக்கூடம் நடக்கும் 26 நாட்களில் ஒவ்வொரு குழந்தையும் மாதம் ரூ. 6-8-0 சம்பாதித்திருக்கும். லட்சக்கணக்கான குழந்தைகளை இம்மாதிரி சம்பாதிக்கக் கூடியவர்களாகச் செய்ய முடியுமா என்பதுதான் கேள்வி. ஒரு வருடம் பயிற்சியளித்த பிறகு, மணிக்கு ஒரு அணு சம்பாதிக்கக் கூடியவர்களாகக் கூட அவர்களை நாம் செய்யவில்லையென்றால், நம்முடைய அறிவு வெறும் சூன்யமாகவே இருக்கவேண்டும். இந்தியாவிலுள்ள

கிராமவாசிகள் எந்த கிராமத்திலும் மணிக்கு ஒரு அணு சம்பாதிப்பதில்லையென்று எனக்குத் தெரியும். உள்ளவர்கள், இல்லாதவர்கள் இருவருக்குமிடையே அவ்வளவு பெரிய ஏற்றத்தாழ்வு இருக்கத்தான் செய்யும் என்று நாம் ஏற்றுக் கொண்டு விட்டோம்; நகர்ப் புற மக்கள் ஒருவேளை தம்மையறியாமலேயே, கிராமங்களைச் சுரண்டும் பிரிட்டிஷாருடன் சேர்ந்திருக்கலாம். கிராமங்களில் அவர்கள் மணிக்கு ஒரு அணு கூட சம்பாதிக்கவில்லை என்பதற்கு அதுதான் காரணம்.

—'ஹரிஜன்' – 11—9—1937

பகுதி ஏழு

# புதிய கல்வி

## 1

## பண்பாட்டிலும், வாழ்க்கையிலும் வேரூன்ற வேண்டும்

இன்றைய கல்வித் திட்டத்தின் முக்கிய அம்சங்களாக இருக்கும் பாடத் திட்டம், புத்தக அறிவு முதலியவைகளெல்லாம் ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ், எடின்பரோ, லண்டன் ஆகிய நகரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையாகும். ஆனால், அவையெல்லாம் நம் நாட்டிற்கு ஏற்றவையல்ல; அவற்றை நிராகரிக்கும் வரையில், தேசீயக் கல்வி என்று எதுவும் இருக்க முடியாது. ஐரோப்பியக் கல்வி இல்லாமல் இந்தியாவுக்கு முடியுமா என்பதைப் பற்றி இப்போது நாம் விவாதிக்கப்போவதில்லை. ஐரோப்பாவின் ஆயுதங்களான கைத்தொழில் வளர்ச்சி, முதலாளித்துவம், ராணுவத் தன்மை முதலியவைகளைக் கொண்டேதான் ஐரோப்பாவை எதிர்த்து நாம் போராட வேண்டும் என்று இந்தியா தீர்மானித்தால், தம்முடைய குழந்தைகளை போலி ஐரோப்பியர்களாகவும், சிப்பாய்களாகவும், வெடி மருந்துகளைக் கண்டுபிடிப்பவர்களாகவும், விஞ்ஞானத்தை துஷ்பிரயோகம் செய்பவர்களாகவும், கடவுளை மறந்தவர்களாகவும் ஆக்கிவிடுவதென்று இந்தியா தீர்மானித்தால், என்னதான் விபரீதம் ஏற்படுவதாயிருந்தாலும், இந்தியா தன்னுடைய பாதையில் உறுதியுடனும் திறந்த கண்களுடனும் முன்னேறிச் செல்ல வேண்டும். ஆனால், அந்த நிலைமையில் தேசீயக் கல்வி நமக்கு வேண்டாம் என்றும் முடிவு செய்துவிட வேண்டும். ஏனெனில், தேசீயக் கல்வியின் மூலம், தம் பையன்களையும், பெண்களையும் அந்த வேலைகளுக்குத் தகுதியுள்ளவர்களாக்க முடியாது. இந்தியாவில் நீண்ட காலமாகவே நன்கு வேரூன்றிப் படர்ந்த ஒரு நாகரிகம் இருந்து வந்திருக்கிறது. இதனால் இந்தியாவுக்கென்றே ஒரு கல்வி முறையும் இருந்தது. 'தேசீயத் தன்மை' வாய்ந்தது என்று சொல்லிக்கொள்ளக் கூடியது அது ஒன்றுதான். ஆனால், ஆங்கிலோ இந்திய முறையிலிருந்தும், அதனுடைய சந்ததியான போலி தேசீய முறையிலிருந்தும் அது முற்றிலும் மாறுபட்டது. ஆகவே கேள்வி இதுதான்: தேசீயக் கல்வி வேண்டுமா, அந்நியக் கல்வி வேண்டுமா என்பதைத் தெளிவாகவும், இறுதியா

கவும் முடிவு செய்துவிட வேண்டும். எந்த மாதிரி முறை வேண்டும், அதன் கருத்தென்ன, நோக்கமென்ன, அந்த நோக்கத்தை அடைவதற்கு என்ன வழிகளைக் கையாளப் போகிறோம் என்பவைகளை யெல்லாம் முடிவு செய்துவிட வேண்டும்.

இதுவரையில் அப்படிச் செய்யப்படவில்லை. இதை முடிவு செய்ய வேண்டிய அவசியம் இன்னும் உணரப்படவேயில்லை என்று அநேகமாக நிச்சயமாகவே சொல்லலாம். இந்த விஷயத்தில் குழப்பம் இருந்துகொண்டிருக்கும் வரையில், 'தேசீய'க் கல்வி வளர முடியாது. அதன் காரணம் இதுதான்: சர்க்கார் ஏற்கனவே ஒருவிதமான கல்வியை அளித்து வருகிறார்கள். அந்த விஷயத்தில் முற்றிலும் உத்தியோகப் பற்றற்ற எந்த ஸ்தாபனமும் அவர்களுடன் போட்டி போட முடியாது. சர்க்கார் ஸ்தாபனம் பெரிது. அதனிடம் நிறைய பணம் இருக்கிறது. கொடுப்பதற்கு நிறைய பரிசுகளும் இருக்கின்றன.

அடிப்படை விஷயங்களைப் பற்றித் தெளிவான சிந்தனை இல்லாத வரையில், இந்தப் புதிர் இருக்கத்தான் செய்யுமென்று நம்புகிறோம். (நன்கு யோசனை செய்து சில முடிவுகளைச் செய்து, நாங்கள் உண்மையிலேயே இந்தியக் கல்வியை அளிக்கிறோம். சர்க்கார் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அளிக்கப்படுவது போன்றே, ஆனால், இன்னும் மட்டரகமான ஒரு போலிக் கல்வியை அளிக்கமாட்டோம் என்று மக்களுக்கு வாக்குறுதி கொடுத்தால், நாம் சொல்லுவதை மக்கள் கேட்கத்தான் செய்வார்கள். இப்போதுள்ள ஏற்பாடுகளால் கஷ்டப்படுபவர்கள், சமூகப் பிளவை விரும்பாதவர்கள், இளைஞர்கள் வீணடிக்கப்படுவதைக் கண்டு வேதனைப்படுபவர்கள் ஆகிய யாவரும், தப்புவதற்கு வழி கிடைப்பதைப் பற்றி நன்றி செலுத்துவார்கள். தேசீய, சமூக மீட்சிக்கான தவிர்க்க முடியாத புரட்சியையே நோக்கமாகக்கொண்ட ஸ்தாபனங்களிடம்தான் எதிர்கால முன்னேற்றத்தின் ரகசியம் இருக்கும்.

இதை நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நம்முடைய வாழ்க்கையின் தொடர்பைக் குலைத்துவிட்டதென்பது இப்போதுள்ள கல்வி முறையில் கண்ணுக்கு எதிரே தெரியும் மிகப் பெரிய தீமையாகும். இன்னும் ஆழ்ந்த தீமைகள் இருக்கின்றன என்பதற்கும் இதுவே அடையாளமாகும். ஒரு தலைமுறையினர் சென்ற தலைமுறையின் சுமையை ஏற்றுக்கொண்டு, சமூகத்தின் வாழ்க்கையில் பிளவோ, விபரீதமோ ஏற்படாமல், தொடர்பை அப்படியே காப்பாற்றுவதற்குத் தயார் செய்வது தான் நல்ல கல்வியின் நோக்கமாகும். சமூக வாழ்க்கை என்ற சுமை தொடர்ச்சியானது. ஏதாவது, ஒரு கட்டத்தில், ஒரு தலைமுறையினர் சென்ற தலைமுறையினரின் முயற்சிகளுடன் அடியோடு தொடர்பற்றுப் போய்விட்டால், அல்லது தன்னைப் பற்றியோ தன்னுடைய பண்பாட்டைப் பற்றியோ வெட்கப்பட ஆரம்பித்தால், அந்தத் தலைமுறை அழிந்துவிடும்.

சமூகத்தைப் பாதுகாக்கும் சக்தி, பற்பல விதமான உயர்ந்த நம்பிக்கைகளால் பிணைக்கப்பட்டதாகும். அவையாவன: தொழிலில் நம்பிக்கை, பெற்றோர்களிடம் விசுவாசம், குடும்பத்தினிடம் விசுவாசம், தர்மத்தில் நம்பிக்கை முதலியவையே.

இந்தியாவில் முன் காலத்தில் இருந்த கல்வி முறையில், சேவையில் பெருமை, சமூகத்திலும், வாழ்விலும் ஒவ்வொன்றுக்கும் உள்ள இடம் ஆகிய பாரம்பரியங்களுக்கு மதிப்பு கொடுக்கப்பட்டு வந்தது. இன்றுள்ள தேசீயத் தன்மையற்ற அந்நியக் கல்வி முறை இளைஞர்களை, வாழ்க்கையில் உபயோகமான எந்த வேலைக்கும் தகுதியற்றவர்களாக்கிவிடுகிறது என்பதும் நிச்சயம். தம்முடைய குழந்தைகளை ஆங்கிலப் பள்ளிகளுக்கு அனுப்பியவர்களில் பெரும்பாலோர் விவசாயிகள், கடவுளிடம் ஆழ்ந்த பக்தியுள்ளவர்கள். இந்த இளைஞர்கள் திரும்பி வந்தபோது விவசாயத்தைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாதவர்களாகவும், தங்களுடைய பெற்றோர்களின் தொழிலில் மிகுந்த அலட்சியம் உள்ளவர்களாகவும் வந்திருப்பார்கள்; கடவுளிடம் நம்பிக்கை வைக்க வேண்டிய கட்டத்தைத் தாம் தாண்டி விட்டதாக நினைத்திருப்பார்கள் அல்லது கடவுளின் சித்தத்தில் நம்பிக்கையற்றிருப்பார்கள். இதில் உள்ள பரிதாபம் என்னவென்றால், குறிப்பிட்ட சில குமாஸ்தாக்களையும், உதவியாளர்களையும் தயாரிப்பதற்காக மட்டுமேதான் சர்க்கார் இந்த விபரீதமான பிளவை ஏற்படுத்தினார்கள். ஆனால், அதன் உண்மையை மறந்துவிடக்கூடாது. கல்வி முறையில் அடுக்காக 'சீர்திருத்தங்கள்' ஏற்பட்டுள்ளன. சர்வகலாசாலைகளைப் பற்றி கமிஷன்கள் பரிசீலனை செய்திருக்கின்றன; ஆரம்பக் கல்வியைக் கட்டாயமானதாக்க முயற்சிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இது பூராவுமே தேசீய வாழ்க்கை, வளர்ச்சி இரண்டின் அஸ்திவாரங்களையுமே தகர்த்துவிடும் ஒரு தீமை என்பது கொஞ்சம்கூட உணரப்படவேயில்லை. இந்த முறையை அடியோடு ஒழித்துவிட வேண்டும். இந்திய சர்வகலாசாலைகள் அமைக்கப்படுவதற்கு முன்பு, லார்டு மெக்காலே தனது கொடிய முடிவுகளை எழுதுவதற்கு முன்பு, கல்வி எப்படி இருந்தது என்பதைப் பற்றி உடனடியாக விசாரணை நடத்த வேண்டும். இதைச் சீக்கிரமாகச் செய்ய வேண்டியது அத்தியாவசியமாகும். ஏனெனில், பழைய ஆசிரியர்கள் கூட்டம் அநேகமாக மறைந்துவிட்டது; அவர்களுடைய போதனையின் ரகசியம் அவர்களுடனேயே மறைந்துவிடக் கூடும். அந்தப் பாடத் திட்டங்களை உயிர்ப்பிப்பதன்மூலம், அரசியல் சரித்திரமும், பூகோளமும் மறைந்து போகலாம். ஆனால், அப்படி நேர்ந்துவிடுமே என்பதைப் பற்றி நாம் துளிக்கூட கவலைப்படவில்லை. பழைய பாடத் திட்டத்தின் அம்சங்களை நாட்டின் ஒரு பகுதியிலாவது அமலாக்குவதற்கு முயற்சி செய்து வந்திருக்கிறோம். ஐரோப்பாவிலிருந்து கடைசியாக வந்துள்ளதைவிட இன்னும் அதிக திருப்திகரமானதாகவும். பலன் அளிப்பதாகவும் இருந்திருக்கிறதென்று நிச்சயமாகக்

கூறுவோம். ஆனால், இது ஒரு சாதாரண மனிதனின் அபிப்பிராயம்தான். அதனால்தான் இதைப் பற்றி நிபுணர்கள் பரிசீலனை செய்ய வேண்டுமென்று விரும்புகிறோம். அப்படிச் செய்து, அதன் விளைவுகளையும் ஏற்றுக் கொண்டால், நாட்டு மக்கள் நன்றி செலுத்துவதற்குக் காரணமிருக்குமென்று நம்புகிறோம்.

—'எங் இந்தியா' - 20—3—1924

# 2

# பாட புத்தகங்களின் விபரீதம்

ஆரம்ப காலம் முதற்கொண்டே இன்றுள்ள பாட புத்தகங்கள், பையன்களும், பெண்களும் எப்போதும் தம் வீடுகளில் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றிச் சொல்லுவதில்லை; அவர்களுக்குக் கொஞ்சமும் தெரியாத விஷயங்களைப்பற்றியே கூறுகின்றன. வீட்டு வாழ்க்கையில் எது சரி, எது தவறு என்பதைப் பையன் பாட புத்தகங்களின் மூலம் தெரிந்து கொள்ளுவதில்லை. தன்னுடைய சூழ் நிலையைப் பற்றிப் பெருமைப் படவேண்டும் என்று அவனுக்குக் கற்றுக் கொடுக்கப் படுவதேயில்லை. அவன் எவ்வளவுக் கெவ்வளவு உயர்வு பெறுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு வீட்டிலிருந்து விலகிச் சென்று விடுகிறான். இதனால் அவனுடைய படிப்பின் முடிவில் சுற்றியுள்ள சூழ்நிலையைப்பற்றி அவன் ஒன்றும் தெரியாதவனாகிவிடுகிறான். கிராமக் காட்சிகளைப்பற்றியெல்லாம் அவனுக்கு ஒன்றுமே தெரியாது. அவனுடைய சொந்த நாகரிகம் கோழைத்தனமானது, காட்டு மிராண்டித்தனமானது, மூட நம்பிக்கைகள் நிறைந்தது, எதற்கும் பிரயோசனமற்றது என்று அவனிடம் சித்திரித்துக் காட்டப்படுகிறது. அவனுடைய பரம்பரையான பண்பாட்டிலிருந்து அவனை அகற்றுவதே அவனுடைய கல்வியின் நோக்கமாக இருக்கிறது. பெரும்பாலான படித்த இளைஞர்கள் அடியோடு தேசத்தைப் பற்றியே அறியாதவர்களாகிவிடவில்லையென்றால், புராதனமான நமது கலாசாரம் அவர்களிடம் அவ்வளவு ஆழ்ந்து வேரூன்றியிருக்கிறது. அதனுடைய வளர்ச்சியை, முரணான ஒரு கல்வி முறையினால் கூட அழிக்க முடியவில்லை. என் விருப்பப்படி விட்டால், இப்போதுள்ள பெரும்பாலான பாட புத்தகங்களை அழித்துவிடுவேன்; வீட்டு வாழ்க்கைக்கு இசைவானதும், பையன் படிக்கும் போதே தன்னைச் சுற்றியுள்ளவைகளைப் புரிந்து கொள்ளுவதற்கு உதவி செய்யக் கூடியதுமான புத்தகங்களை எழுதும்படி செய்வேன்.

—'எங் இந்தியா' - 1—9—1921

# 2

# சூழ் நிலைக்கு முரணான கல்வி

துரதிருஷ்டவசமாக, கல்வி முறைக்கும் சுற்றியுள்ள நிலைமைக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாமலிருக்கிறது. இதனால் நாட்டிலுள்ள மிகச் சிறுபான்மையோரான ஒரு சில பையன்களும், பெண்களும் பெறும் கல்வி சூழ்நிலையைத் தொடுவதுகூட இல்லை.

—'ஹரிஜன்' - 23—5—1936

# 3

# இங்கிலாந்தின் தேவையும் இந்தியாவின் தேவையும்

எவ்வளவுதான் நல்லெண்ணம் இருந்த போதிலும், இங்கிலாந்தின் தேவைக்கும், இந்தியாவின் தேவைக்கும் உள்ள வேற்றுமையை ஆங்கில ஆசிரியர்கள் பூராவாகப் புரிந்துகொள்ள முடியாது. அவர்களுக்குத் தேவையாக உள்ள கட்டிடங்கள் நம் நாட்டின் சீதோஷ்ண நிலைக்குத் தேவையில்லை. நமது குழந்தைகள் கிராமச் சூழ்நிலையில் வளர்ந்தவர்கள்; ஆகையால், பெரும்பாலும் நகர்ப்புற சூழ்நிலையில் வளர்ந்த ஆங்கிலக் குழந்தைகள் பெறுவது போன்ற கல்வி நமது குழந்தைகளுக்குத் தேவையில்லை.

நமது குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் சேர்க்கப்படும் போது, அவர்களுடைய தேவை கரும் பலகையும், பென்சிலும், புத்தகங்களும் அல்ல; சுலபமாகவும், பலனை அளிக்கக் கூடிய விதத்திலும் அவர்கள் கையாளக் கூடிய எளிய கிராமியக் கருவிகளே அவர்களுடைய தேவையாகும். இது கல்வி முறைகளிலேயே ஒரு புரட்சியை ஏற்படுத்துவதாகும். ஆனால் ஒரு புரட்சி ஏற்பட்டாலொழிய, பள்ளிக்கூடம் போகும் வயது வந்த குழந்தைகளுக்கெல்லாம் கல்வி கிடைக்கும்படி செய்ய முடியாது.

இப்போது சர்க்கார் பள்ளிக்கூடங்களில் அளிக்கப்படும் எழுத்தறிவுக் கல்வி மாணவர்களின் பிற்கால வாழ்க்கைக்கு உபயோகமாக இருப்பதில்லை என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. அந்தப் பள்ளிகளில் சொல்லிக் கொடுப்பவைகளில் பெரும்பாலானவை ஒரு வருடத்திற்குள்ளாகவே குழந்தைகளுக்கு மறந்து போய்விடுகின்றன. ஏனெனில், அவர்களுடைய கிராமியச் சூழ் நிலைக்கு அவை தேவையில்லை.

ஆனால், குழந்தைகளின் சூழ் நிலைக்கு ஏற்றதான தொழிற் பயிற்சி அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தால், பள்ளிக்கூடங் களில் ஆன செலவை அவர்கள் சம்பாதித்திருப்பார்கள் என்பதுடன், பிற்கால வாழ்க்கையிலும் அதை உபயோகப் படுத்திக் கொண்டிருப்பார்கள். ஒரு பள்ளிக்கூடத்தில் பருத்திச் செடி வளர்ப்பதற்கு ஒரு தோட்டம் இருந்தது. அதே நூல் நூற்றல், நெய்தலுக்கான ஒரு ஸ்தாபனமாக இருந்தால், அந்தப் பள்ளிக்கூடம் முற்றிலும் தன்னைக்கட்டிக் கொண்டு போக முடியும் என்றே நான் நினைக்கிறேன்.

நான் கூறும் திட்டத்தில் இலக்கியப் பயிற்சி விலக்கப்பட வில்லை. படிப்பது, எழுதுவது, கணக்குப் போடுவது ஆகியவை இல்லாத எந்த ஆரம்பக் கல்வியும் முழுமையானதாகக் கருதப் படமாட்டாது. என்னுடைய திட்டத்தில் படிப்பதும், எழுதுவதும் கடைசி வருடத்தில் வரும். அப்போதுதான் குழந்தைகள் அகர வரிசையை சரியாகக் கற்றுக் கொள்ளுவதற்குத் தயாராக இருப்பார்கள்.

கையெழுத்து ஒரு கலை. ஒவ்வொரு எழுத்தும் சரியாக வரையப்பட வேண்டும்; ஒரு சித்திரக்காரர் படம் வரைவதைப் போல் இருக்க வேண்டும். பையன்களுக்கு முதலில் எளிய படங்களை வரையக் கற்றுக் கொடுத்தால்தான் இது சாத்திய மாகும். பள்ளிக்கூடத்தில் தொழிற் பயிற்சிக்குத்தான் பெரும் பான்மையான நேரம் செலவிடப்படும்; அத்துடன் சேர்ந்து ஆரம்ப சரித்திரம், பூகோளம், கணக்கு ஆகிய பாடங்களும் சொல்லிக் கொடுக்கப்படும். எப்படிப் பழக வேண்டும் என்ப தைக் கற்றுக் கொள்ளுவார்கள்; சுத்தமான, சுகாதார முறை களையும் அனுபவ பூர்வமாகத் தெரிந்து கொள்ளுவார்கள். இவற்றையெல்லாம் அவர்கள் தமது வீடுகளுக்கும் கொண்டு சென்று மௌனமாகச் செயல் புரியும் புரட்சிக்காரர்களாகிவிடு வார்கள்.

—'எங் இந்தியா' – 11—7—1929

## 4

# ஒழுக்கத்தை வளர்க்கும் கல்வி

உள்ளத்திற்குக் கல்வியளிப்பது பற்றி ஒரே ஒரு வார்த்தை. புத்தகங்களின் மூலம் இதைச் செய்ய முடியும் என்று நான் நம்பவில்லை. ஆசிரியருடன் வைத்துக்கொள்ளும் உயிர்த் துடிப்புள்ள தொடர்பின் மூலம்தான் இது முடியும். ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலோ மத்தியதரப் பள்ளிக்கூடங்களிலோ கூட உள்ள ஆசிரியர்கள் யார்? அவர்கள் நம்பிக்கையும், நல்லொழுக்

கமும் உள்ளவர்களா? அவர்களே தமது உள்ளங்களுக்குக் கல்வி பெற்றவர்கள்தாஞ? அவர்களுடைய பொறுப்பில் விடப் பட்டுள்ள குழந்தைகளின் நிரந்தரமான அம்சத்தையும் அவர்கள் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிருர் களா? ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்கு ஆசிரியர்களைச் சேர்க்கும் முறையே, நல்லொழுக்கத்திற்கு ஒரு தடையாக இல்லையா? ஆசிரியர்கள் வாழ்க்கையை நடத்துவதற்குப் போதுமான சம்பள மாவது அவர்களுக்குக் கிடைக்கிறதா? தேசபக்திக்காக ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் நியமிக்கப்படவில்லை என்பதும் நமக்குத் தெரியும். வேறு வேலை பெற முடியாதவர்கள்தான் இதற்கு வருகிருர்கள்.

—'எங் இந்தியா' – 1—9—1921

# 5

# சுதந்திரமும் கட்டு திட்டமும்

மாணவர்கள் தாமே முன்வந்து காரியங்கள் செய்வதற்கு வாய்ப்பு இருக்க வேண்டும். அவர்கள் தாமே சிந்தித்துப் பார்க் கவும், செயலாற்றவும் தகுதி உள்ளவர்களாக இருக்க வேண்டும்; அதே சமயத்தில் முற்றிலும் கீழ்ப்படிதலும், கட்டுப்பாடும் உள்ள வர்களாக இருக்க வேண்டும்; பிறரைப் பார்த்து அப்படியே நடந்து கொள்ளுவதை நிறுத்திவிட வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு சுதந்திரம் அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ் வளவு கட்டுப்பாடும் பணிவும் இருந்தாக வேண்டும். கட்டுப் பாடு, தாழ்மையிலிருந்து தோன்றும் சுதந்திரத்தை மறுக்க முடி யாது; கட்டுப்பாடின்றி விருப்பப்படி நடப்பது மட்டரகத்தின் அறிகுறியாகும்; அது தனக்கும், பக்கத்திலிருப்பவர்களுக்கும் கேடு விளைவிக்கக் கூடியதாகும்.

—'எங் இந்தியா'– 3—6—1926

# 6

# உள்ளத்தூய்மை இன்றியமையாதது

ஒரு நல்ல கல்வி முறையை வளர்ப்பதற்கு, உள்ளத் தூய்மை இன்றியமையாத ஒரு அம்சமாகும். ஆயிரக்கணக்கான மாண வர்களை நான் சந்தித்திருக்கிறேன். அவர்களுடன் கடிதப் போக்குவரத்து செய்திருக்கிறேன். அக்கடிதங்களில் அவர்கள் ஒளிவு மறைவே இல்லாமல் தமது உள்ளக் கிடக்கைகளை என்னிடம் கொட்டுகிருர்கள். இதிலிருந்து செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது என்பது எனக்குப் புலனாகியிருக்கிறது.

நான் சொல்லுவதன் அர்த்தம் என்னவென்பதை நீங்கள் எல்லோரும் நன்ருக அறிந்திருப்பீர்களென்று நம்புகிறேன். மாணவன் என்ற ஆங்கில வார்த்தைக்குச் சமமான அருமையான வார்த்தையொன்று நமது மொழிகளில் இருக்கிறது. ‘பிரம்மச்சாரி’ என்பதே அந்தச் சொல். ‘வித்தியார்த்தி’ என்பது பின்னர் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சொல் ஆகும். பிரம்மச்சாரி என்ருல் என்ன என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நம்புகிறேன். கடவுளைத் தேடி அலைபவன், மிகக் குறுகிய காலத்தில் கடவுளுக்கு மிகச் சமீபமாகப் போவதற்கு ஏற்ற முறையில் நடந்து கொள்ளுபவன் என்பதே அந்த வார்த்தையின் அர்த்தமாகும். உலகத்திலுள்ள பெரிய மதங்களிடையே எந்த விதமான வேற்றுமைகள் இருந்தாலும், ஒரு விஷயத்தில் வேறுபாடே இல்லை. அதாவது, உள்ளத் தூய்மை இல்லாத ஆணோ, பெண்ணோ கடவுளின் தூய, வெண்மையான சிங்காசனத்தின் முன்பு போய் நிற்பதென்பது சாத்தியமில்லை என்ற அடிப்படை உண்மையை எல்லா மதங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன. நம்முடைய படிப்போ, வேத வாக்கியங்களைத் திருப்பிச் சொல்லுவதோ, சமஸ்கிருதம், லத்தீன் அல்லது கிரேக்க மொழிகளை நன்கு படித்திருப்பதோ, உள்ளத் தூய்மை பெறுவதற்கு நமக்கு உதவி செய்யவில்லையென்ருல், அவற்றிஞல் எந்தவிதமான பலனும் இல்லை. நல்லொழுக்கத்தை வளர்ப்பதே அறிவின் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

—‘ எங் இந்தியா ’ - 8—9—1927

# 7

# சேவை கல்வியின் ஒரு பகுதியே

இப்போதுள்ள நமது கல்வி முறையில் இலக்கியத் திறனுக்கு மட்டுமே பிரத்தியேகமான முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பெரிய குறைபாட்டை சர். விசுவேசுவரய்யா வற்புறுத்தி எடுத்துக் காட்டியிருக்கிருர். அத்துடன், நான் இன்னும் ஒரு பெரிய குறையையும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். படித்துக் கொண்டிருக்கும் காலத்தில், படிப்பை பாதிக்கக் கூடிய சிறிய தொண்டுகளைக்கூடத் தாம் செய்யக் கூடாது என்று மாணவர்கள் நினைக்கும்படி செய்கிருர்கள். குஜராத்தில் சில மாணவர்கள் செய்து கொண்டிருப்பதைப் போல், தம்முடைய இலக்கியக் கல்வியையோ, தொழிற் பயிற்சியையோ நிறுத்தி வைத்துவிட்டு, மாணவர்கள் நிவாரண வேலையில் ஈடுபட்டால், அதனுல் அவர்களுக்கு லாபமேயொழிய நஷ்டம் ஒன்றுமில்லை. சேவை செய்வதே கல்வியின் இறுதி நோக்கமாக இருக்க வேண்டும். படிக்கும் போதே சேவை செய்வதற்கு ஒரு மாணவனுக்கு வாய்ப்பு கிடைத்தால், படிப்பை நிறுத்திவைப்ப

தாக அதைக்கருதாமல் படிப்புக்கு அனுசரணையான ஒரு அரிய சந்தர்ப்பம் என்றே கருத வேண்டும்.

—'எங் இந்தியா' – 13—10—1927

# 8
# உயிர்களின் ஒருமை

உங்களிடமே உள்ள சிறந்த அம்சங்களை வெளிக் கொணருவதுதான் உண்மையான கல்வி ஆகும். மனித குலம் என்ற புத்தகத்தைவிடச் சிறந்த புத்தகம் வேறு என்ன இருக்க முடியும்? அல்லும் பகலும் ஹரிஜனங்கள் வாழும் பகுதிகளுக்குச் சென்று, அவர்கள் ஒரே மனித குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்ச்சியுடன் சேவை செய்வதைவிடச் சிறந்த கல்வி வேறு என்ன இருக்க முடியும்? இது நம்மை உயர்த்தும் ஒரு ஆராய்ச்சியாக இருக்கும். என்னுடைய கொள்கை கூறுகிய ஒன்றல்ல. மனிதர்களாகப் பிறந்தவர்வர்கள் யாவரும் சகோதரர்களே என்ற உண்மையை நடைமுறையில் கொண்டு வருவதே என்னுடைய கொள்கையாகும்.

—'ஹரிஜன்' - 30—3—1934

# 9
# பணம் தேடும் படலம்

தங்களுடைய குழந்தைகளின் கல்விக்குப் பணம் தேடுவதற்காகப் பெற்றோர்கள் ஆட்சேபகரமான காரியங்களைக் கூடச் செய்கிறார்கள் என்பது யாருக்குத்தான் தெரியாது? இதை அவர்கள் கடமையாகக் கூட நினைக்கிறார்கள். நம்முடைய கல்வி முறை பூராவையும் அடியோடு மாற்றினாலொழிய, நிலைமை இன்னும் படுமோசமாகப்போகிறது என்பது நிச்சயம். குழந்தைகள் பெரிய சமுத்திரத்தைப் போலிருக்கிறார்கள். அதன் ஒரு மூலையைத்தான் நாம் தொட்டிருக்கிறோம். அவர்களில் மிகப் பெரும்பாலோர் இன்னும் கல்வியில்லாமலேதான் இருக்கிறார்கள். அவர்கள் படிக்க விரும்பாமலில்லை. ஆனால், அவர்களுடைய பெற்றோர்களுக்கு அதற்கான அறிவும் சக்தியும் இல்லை. இந்தியா போன்ற இவ்வளவு ஏழ்மை நாட்டில் பெற்றோர்கள் வயது வந்த பல குழந்தைகளைக் காப்பாற்றுவது, ஏராளமாகச் செலவு செய்து கல்வியளிப்பது, ஆனால், குழந்தைகள் உடனடியாக அதற்கு பதில் செய்யாமலிருப்பதென்றால், ஏதோ பெரிய கோளாறு இருக்கத்தான் வேண்டும். குழந்தைகள் படிக்க ஆரம்பிக்கும்

நாட்களிலிருந்தே வேலை செய்து, கல்விக்குத் தேவையான பணத்தைச் சம்பாதிப்பதில் எதுவும் தவறு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்தியா பூராவிலும், எல்லோருக்கும் பொருத்தமானதும், சுலபமானதுமான கைவினைத் தொழில் கைராட்டினத்தில் நூற்பதும், அது சம்பந்தமான மற்ற வேலைகளும்தான். இதை நமது கல்வி ஸ்தாபனங்களில் புகுத்தினால், மூன்று காரியங்களை நாம் நிறைவேற்றியவர்களாவோம். கல்வி தன்னைக் கட்டிக்கொண்டு போகும் குழந்தைகளின் மனம், உடல் இரண்டுக்குமே பயிற்சி கிடைக்கும், அந்நிய நூல், துணி இரண்டையும் அடியோடு பகிஷ்காரம் செய்வதற்கும் வழி கோலியதாகும். மேலும், இவ்வாறு பயிற்சி பெறும் குழந்தைகள் தன்னம்பிக்கையும் சுதந்திர உணர்ச்சியும் பெறுவார்கள்.

—'எங் இந்தியா' – 15—6—1921

# 10

# எல்லோருக்கும் இலவசக் கல்வி அளிக்க வழி

படிக்க வேண்டிய வயது வந்துள்ள ஒவ்வொரு குழந்தையும் பொதுப் பள்ளிக்கூடங்களுக்குப் போக வேண்டுமென்றுதான் நாம் எதிர்பார்க்க வேண்டும். அப்படி எதிர்பார்த்தால், இப்போதுள்ள ரீதியில் கல்விக்காகும் செலவைச் சமாளிப்பதற்கு நம்மிடம் நிதி வசதியில்லை; இப்போது வசூலிக்கப்படும் பள்ளிக்கூடச் சம்பளங்களைக் கொடுப்பதற்கு லட்சக்கணக்கான நமது மக்களுக்கும் சக்தியில்லை. ஆகையால், எல்லோரும் படிக்க வேண்டுமானால் கல்வி இலவசமானதாக இருக்க வேண்டும். ஒரு லட்சிய சர்க்கார் ஏற்பட்டால் கூட, வயது வந்த குழந்தைகளுக்கெல்லாம் கல்வியளிப்பதற்கு வேண்டிய 200 கோடி ரூபாய் நம்மிடம் இராது. ஆகையால், பிள்ளைகள் பெறும் கல்வியில் ஒரு பகுதிக்கோ, அல்லது பூராவுக்குமோ அவர்களை வேலை செய்யச் சொல்லி, செலவில் ஒரு பகுதியை ஈடுபடுத்த வேண்டுமென்பது தெளிவு. இப்படி எல்லோருமே லாபகரமாகச் செய்யக் கூடிய வேலை ராட்டினத்தில் நூற்றலும், கைத்தறி நெசவும்தான் என்பதே என்னுடைய கருத்தாகும். என்னுடைய திட்டத்திற்கு அந்த உழைப்பு நூற்றலாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. ஏதாவது வருமானம் கிடைப்பதாயிருந்தால், அது எந்த வேலையாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஆயினும், எது அனுபவ சாத்தியம், எது லாபகரமானது, எதை விரிவாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று பார்த்தால், துணி உற்பத்தி சம்பந்தமான வேலையைத் தவிர வேறு எந்த வேலையையும், இந்தியா பூராவிலும் உள்ள நமது பள்ளிக்கூடங்களில் புகுத்த முடியாது என்பது புலப்படும்.

இந்தியா போன்ற ஒரு ஏழை நாட்டில் உடலுழைப்புப் பயிற்சி அளிப்பதில் இரண்டு காரியங்கள் நிறைவேறும். நமது குழந்தைகளின் கல்விச் செலவை அது ஈடு செய்து கொள்ளும்; பிற்காலத்தில் அவர்கள் பயன்படுத்திக் கொள்ளக் கூடிய ஒரு தொழிலைக் கற்றுக் கொண்டதாகவும் இருக்கும். இத்தகைய ஒரு ஏற்பாடு நமது குழந்தைகளுக்குத் தன்னம்பிக்கையைக் கற்றுக் கொடுப்பதாயிருக்கும். வேலை செய்வதை இழிவு படுத்துவதைப் போல் தேசத்தைச் சீர்குலைக்கக் கூடியது வேறொன்றுமில்லை.

—'எங் இந்தியா' – 1—9—1921

# 11

# ஒரு தொழிலின் மூலம் கல்வி

காந்திஜி செய்த பல பிரசங்கங்களில் தம்முடைய புதிய கல்வித் திட்டம் தம் மனத்தில் எப்படித் தோன்றியது, தொழிலுக்கும், கல்விக்கும் ஏற்பட வேண்டிய இணக்கத்தைப் பற்றிய தம்முடைய கருத்து என்ன ஆகியவற்றைப் பின்வருமாறு விரிவாக விளக்கினர் :

நான் தென்னுப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்த பிறகு பல மாணவர்கள் என்னை வந்து பார்த்தார்கள். இன்றைய கல்வி முறை எப்படி தோல்வியடைந்து விட்டது என்பதை அவர்கள் மூலம் தெரிந்து கொண்டேன். ஆகையால், ஒரு புதிய வழியை வகுக்க வேண்டிய அவசியத்தை நான் வெகுகாலத்திற்கு முன்பே உணர்ந்துவிட்டேன். ஆசிரமப் பள்ளிக்கூடத்தில் கைவினைத் தொழில்களில் பயிற்சி அளிக்க ஆரம்பித்தேன். உடலுழைப்புப் பயிற்சிக்கு அதிகப்படியான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இதன் பலனாக குழந்தைகள் சீக்கிரத்தில் உடலுழைப்பில் அலுப்படைந்து விட்டார்கள். தமக்கு இலக்கியப் பயிற்சி இல்லாமற் போய்விட்டதென்று நினைக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் அப்படி நினைத்தது தவறு. ஏனெனில், அவர்கள் கற்றுக் கொண்டது கொஞ்சமாக இருந்தாலும், மற்றப் பள்ளிக்கூடங்களில் சாதாரணமாகப் பையன்களுக்குக் கிடைத்ததை விட அது அதிகமானதேயாகும். ஆயினும், அதைப்பற்றி நான் யோசித்துப் பார்த்தேன். கடைசியாக இலக்கியப் பயிற்சியும் கைத்தொழில் பயிற்சியும், அளிப்பதில் பிரயோசனமில்லை என்றும், கைத்தொழில் பயிற்சி மூலம் இலக்கியப் பயிற்சி அளிக்க வேண்டும் என்றும் முடிவு செய்தேன். அப்படிச் செய்தால், கைத்தொழில் பயிற்சி அலுப்பூட்டுவதாக இராது; இலக்கியப் பயிற்சியிலும் ஒரு புதிய உபயோகமும், பிரயோசனமும் இருக்கும்.

ஆங்கிலத்தை உபயோகிப்பதில்லையென்றும் நாங்கள் முடிவு செய்துவிட்டோம். ஏனெனில், குழந்தைகள் பெரும்பாலான

நேரத்தை ஆங்கில வார்த்தைகளையும், சொற்றொடர்களையும் உருப்போடுவதிலேயே செலவிட வேண்டியிருக்கிறது என்று நாங்கள் அறிந்திருந்தோம். அப்போது கூடத் தாம் கற்றுக் கொண்டவைகளைத் தம் மொழியில் அவர்கள் சொல்ல முடியாது; ஆசிரியர் கற்றுக் கொடுப்பதையும் சரியாகப் புரிந்து கொள்ள முடிவதில்லை. கவனிக்காமலே இருப்பதன் காரணமாகத் தங்கள் சொந்த மொழியையே அவர்கள் மறந்து கொண்டிருந்தார்கள். இந்த இரண்டு தீமைகளையும் தவிர்ப்பதற்கு கைத்தொழில் மூலம் கல்வியளிப்பது ஒன்றுதான் வழி என்று தோன்றியது.

பையன்களிடம் என்ன சரக்கு இருக்கிறது? அவர்களுக்கு எழுதப்படிக்கத் தெரியுமா? பூகோளம் ஏதாவது தெரியுமா? இவற்றையெல்லாம் முதல் நாளன்றே கேட்டுத் தெரிந்து கொண்டு, தக்ளியில் நூற்கக் கற்றுக் கொடுத்து, அவர்களுக்குத் தெரிந்ததை அதிகப் படுத்த ஆரம்பிக்க வேண்டுமென்று நினைத்தேன்.

எவ்வளவோ கைவினைத் தொழில்கள் இருக்கும்போது, தக்ளியை ஏன் நான் எடுத்துக் கொண்டேன் என்று நீங்கள் கேட்கலாம். நாம் கண்டு பிடித்த முதல் தொழில்களில் ஒன்று தக்ளியாகும். எவ்வளவோ காலமாக அது இருந்து வந்திருக்கிறது. தக்ளியை எடுத்துக் கொண்டதற்கு இதுதான் காரணம். புராதன காலத்தில் நம்முடைய துணிகளெல்லாம் தக்ளி நூலினால்தான் நெய்யப்பட்டன. கைராட்டை பிறகுதான் வந்தது. கைராட்டையில் மிகவும் மெல்லிய நூல் நூற்க முடியாதாகையால், தக்ளிக்கே தான் திரும்பிப் போக வேண்டியிருந்தது. தக்ளியைக் கண்டு பிடித்தது மனிதனின் மேதாவித் தனத்திற்கு ஒரு சான்றாகும். மனிதனுடைய கண்டுபிடிக்கும் சக்தி அதற்கு முன்பு அவ்வளவு உச்ச நிலையை அடைந்ததேயில்லை. விரல்களின் சாமர்த்தியம் மிகச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளப்படுவதற்கு அது உதவி செய்தது. ஆனால், கல்வியறிவில்லாத சாதாரண மக்கள் மட்டுமே தக்ளியை உபயோகித்துக் கொண்டிருந்ததால், அந்தப் பழக்கம் விட்டுப்போய் விட்டது. அதை மீண்டும் அதனுடைய உன்னத ஸ்தானத்திற்குக் கொண்டு வரவேண்டுமானால், கிராம வாழ்க்கையை உயிர்ப்பித்து சீரமைக்க வேண்டுமானால், குழந்தைகளின் கல்வியை தக்ளியுடன் ஆரம்பிக்க வேண்டும். ஆகையால், நம்முடைய அன்றாட வாழ்க்கையில் தக்ளிக்கு இருந்த ஸ்தானம் என்ன என்பதைப் பையன்களுக்குச் சொல்லிக் கொடுப்பதே எனது அடுத்த பாடமாக இருக்கும். பின்னர் கொஞ்சம் சரித்திரம் சொல்லிக் கொடுப்பேன்; அதன் சிறப்பு குன்றிய விவரங்களையும் கூறுவேன். பிறகு கிழக்கு இந்தியா கம்பெனியிலிருந்து ஆரம்பித்து இந்திய சரித்திரம் சுருக்கமாக போதிக்கப்படும், அல்லது அதற்கு முந்திய முஸ்லிம்கள் ஆட்சி காலத்திலிருந்து ஆரம்பிக்கப்படும். கிழக்கிந்தியா கம்பெனியார் எப்படி நம்மைச் சுரண்டினார்கள், எப்படித் திட்டம் போட்டு

நமது முக்கிய கைவினைத் தொழில்களை நசுக்கிப் பின்னர் அவற்றை அழித்தார்கள் என்பவையெல்லாம் விவரமாகக் கூறப் படும். பின்னர் தக்ளி எப்படிச் செய்வது என்பது கற்றுக்கொடுக் கப்படும். முதலில் ஈரக் களிமண் உருண்டை அல்லது மாவு உருண்டையில் செய்திருக்க வேண்டும். ஒரு மூங்கில் குச்சியை அதன் நடுவே செருகியிருப்பார்கள். வங்காளத்திலும், பீகாரி லும் இன்னும் கூடச் சில இடங்களில் இது இருக்கிறது. பிறகு, களிமண் உருண்டைக்கு பதிலாக வட்டமான செங்கல் துண்டை உபயோகித்தார்கள். இப்போது நம் காலத்தில் அதற்கு பதி லாக வட்டமான இரும்பு அல்லது பித்தளைத் துண்டை உப யோகிக்கிறோம். மூங்கில் துண்டுக்குப் பதிலாகக் கம்பி வந்திருக் கிறது. இங்கு கூட அந்த வட்டத் துண்டு, கம்பி இரண்டும் எந்த அளவில் இருக்க வேண்டும், ஏன் அதை விட அதிகமாகவோ, குறைவாகவோ இருக்கக் கூடாது என்று ஆராய்ச்சி செய்தால் உபயோகமாக இருக்கும். அடுத்தபடியாக, பருத்தி, அதனுடைய பல்வேறு ரகங்கள், இப்போது இந்தியாவிலும் மற்ற நாடுகளி லும் அது எங்கெங்கு பயிராகிறது என்பவை போன்ற விவரங்கள் வரும். பருத்தி பயிரிடும் விதம், அதற்கு எந்த மண் மிகவும் ஏற்றது முதலியவைகளும் போதிக்கப்படும். அதிலிருந்து சிறிதளவு விவசாயத்திற்குப் போவோம்.

ஆசிரியர் இதையெல்லாம் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுமானால், முதலில் அவருக்கே இவ்வளவும் தெரிந்திருக்க வேண்டும். எவ்வளவு கஜம் நூல் நூற்கப்பட் டிருக்கிறது, நூலின் நெம்பர் என்ன, சிட்டம் போடுவது, அதை நெசவுக்குத் தயார் செய்வது, குறிப்பிட்ட தொகை ரகத் துணி களுக்கு எவ்வளவு ஊடை போட வேண்டும் முதலியவைகளை யெல்லாம் சொல்லிக் கொடுப்பதன் மூலம் சாதாரணக் கணக்கை யும் போதித்து விடலாம். பஞ்சு பொறுக்குவது, கொட்டை எடுப்பது, பட்டை போடுவது, நூற்பது, நெய்வது ஆகியவை யெல்லாம் பருத்தியின் பல்வேறு உபயோக முறைகள். இவற் றுடன் அதனுடைய சரித்திரமும் கணக்கும் இணைந்திருக்கும்.

கைவினைத் தொழில்கள் மூலம் உடல், மனம், உள்ளம் ஆகிய மூன்றுக்கும் பயிற்சி யளிக்க வேண்டும் என்பதே இந்த முறை யின் முக்கிய நோக்கமாகும். கைவினைத் தொழிலின் எல்லா அம்சங்களையும் கற்றுக் கொடுப்பதன் மூலம் குழந்தையினிடம் உள்ள எல்லாச் சிறப்பு அம்சங்களையும் கவனித்து வெளிக் கொணர வேண்டும். நீங்கள் கற்றுக் கொடுக்கும் சரித்திரம், பூகோளம், கணக்கு ஆகிய பாடங்களெல்லாம் அந்தத் தொழி லுடன் சம்பந்தப்பட்டதாக இருக்கும்.

—'ஹரிஜன்'-11—6—38

# 12

# நயி தலீம் மூலம் எதிர்பார்க்கப்படுவது என்ன ?

[வர்தாவிலுள்ள ஹிந்துஸ்தானி தலீமி சங்கத்தினால் வெளியிடப்படும் 'நயி தலீம்' என்ற மாத சஞ்சிகையின் முதல் இதழுக்கு காந்திஜியினால் அனுப்பப்பட்ட செய்தி கீழே கொடுக்கப்பட்டுள்ளது:]

நயி தலீம் என்றால் அதில் உள்ள புதிய கருத்து என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். பழைய கல்வி முறையில் என்னென்ன நல்ல அம்சங்கள் இருக்கின்றனவோ அவையெல்லாம் நயி தலீமில் அப்படியே வைத்துக் கொள்ளப்படும்; அவற்றைத் தவிர போதிய புதிய அம்சங்களும் இருக்கும். நயி தலீம் உண்மையிலேயே புதியது தான் என்றால் அதனால் பின் கண்ட பலன்கள் ஏற்படும்: நம்முடைய ஏக்க உணர்ச்சி மாறி நம்பிக்கை ஏற்படும்; நம்முடைய வறுமையும், பட்டினியும் மாறி நம்முடைய ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொள்ள வழி பிறக்கும்; வேலையில்லை என்ற நிலைமை மாறி, தொழிலும், வேலையும் பெருகும்; வேற்றுமைகள் மறைந்து ஒற்றுமை ஏற்படும்; நம்முடைய பையன்களும் பெண்களும் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளுவதுடன், ஒரு கைவினைத் தொழிலின் மூலம் அறிவுப் பயிற்சியும் பெறுவார்கள்.

—உத்மன்காய் – 14—10—1938

பகுதி எட்டு

# ஆதாரக் கல்வி மகாநாடு

## 1

## கல்வி மகாநாட்டின் முன்புள்ள பிரச்னைகள்

சமீபத்தில் நவ பாரத் வித்தியாலயம் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்ட வர்தா மார்வாடி உயர்நிலைப் பள்ளி தனது வெள்ளி விழாவைக் கொண்டாடப் போகிறது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, இப்பகுதியில் நான் விளக்க முயற்சித்துவரும் கல்வித் திட்டத்தைப் பற்றி விவாதிப்பதற்காக, தேசீய மனப்பான்மையுள்ள கல்வித் துறையாளர்களின் சிறு மகாநாடு ஒன்றை நடத்துவதென்று பள்ளி நிர்வாகிகள் தீர்மானித்திருக்கிறார்கள். இத்தகைய மகாநாடொன்றை நடத்துவது விரும்பத்தக்கதுதானா என்று அதன் காரியதரிசியான ஸ்ரீ ஸ்ரீமன் நாராயண அகர்வால் என்னிடம் கேட்டார். இந்த யோசனையை நான் ஒப்புக்கொண்டால், நான் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். இரு யோசனைகளுமே எனக்குப் பிடித்திருந்தன. அக்டோபர் 22, 23 தேதிகளில் இந்த மகாநாடு வர்தாவில் நடத்தப்படும். அழைப்பாளர்கள் மட்டுமே மகாநாட்டில் அனுமதிக்கப்படுவார்கள். இந்தப் பிரச்னையில் ஆழ்ந்த அக்கறை உள்ளவர்களும், விவாதத்தில் உபயோகமாகக் கலந்து கொள்ளக் கூடியவர்களுமான ஒரு சிலருக்கு மட்டுமே அங்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இது ஆடம்பரமான மகாநாடாக இராது. பார்வையாளர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். மகாநாட்டின் முன்புள்ள அலுவல் மட்டுமேதான் அதில் கவனிக்கப்படும். குறிப்பிட்ட அளவு பத்திரிகைப் பிரதிநிதிகள் அனுமதிக்கப்படுவார்கள். பத்திரிகைக்காரர்கள் தங்களுக்குள்ளாகவே ஒன்றிரண்டு பேர்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு அவர்கள் கொடுப்பதைப் பகிர்ந்து கொள்ளலாம்.

நம்பிக்கையுடனும், ஆனால், தாழ்மை உணர்ச்சியுடனும், திறந்த மனத்துடனுமே இந்த வேலையை நான் மேற்கொள்ளுகிறேன். விஷயங்களைத் தெரிந்து கொள்ளவும், அவசியமானால் என் கருத்துகளை மாற்றிக் கொள்ளவும், திருத்திக் கொள்ளவும் தயாராயிருக்கிறேன்.

மகாநாட்டின் முன்பு பின்கண்ட கருத்துகளைச் சமர்ப்பிக்க லாம் என்று இப்போதைக்கு உத்தேசித்திருக்கிறேன் :

1. இப்போதுள்ள கல்வி முறை நாட்டின் தேவைகளுக்கு எந்த விதத்திலும் ஏற்றதாயில்லை. உயர்தரக் கல்வி பூராவுக்கும் ஆங்கிலமே போதனு மொழியாக்கப்பட்டிருப்பதால், படித்த சிலருக்கும், படிக்காத பலருக்குமிடையே நிரந்தரமான ஒரு சுவரை எழுப்பிவிட்டது; அறிவு பாமர மக்களிடையே பரவுவதை அது தடுத்துவிட்டது. ஆங்கிலத்திற்கு இப்படி அளவுக்கு மீறி முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பதன் காரணமாக, படித்த வர்கள் மீது ஒரு பெரிய சுமை ஏற்பட்டுள்ளது. இதனுல் அவர்கள் ஆயுள் பூராவும் ஊனமுற்றவர்களாகவே இருக்கிருர்கள்; தமது சொந்த நாட்டிலேயே அவர்கள் அந்நியர்களாகி விட்டார்கள் தொழிற் பயிற்சி இல்லாத காரணத்திஞல் படித்தவர்கள் அநேக மாக பலனுள்ள உற்பத்தி வேலைகளில் ஈடுபடுவதற்குத் தகுதி யற்றவர்களாகிவிட்டார்கள். இதனுல் அவர்களுடைய உடலும் பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆரம்பக் கல்விக்காகச் செலவிடப் படும் பணம் வீண்தான். ஏனெனில், கற்றுக்கொடுக்கப்படும் கொஞ்ச நஞ்சமும் சீக்கிரத்தில் மறந்து போய்விடுகிறது. நகரங்கள் அல்லது கிராமங்களுக்கு இதனுல் ஒரு பலனுமில்லை. இப்போதுள்ள கல்வி முறையினுல் கிடைக்கும் அனுகூலம், முக்கிய வரி கொடுப்பவர்களுக்குக் கிடைப்பதில்லை. மிகவும் குறைவாகக் கிடைப்பது அவர்களுடைய குழந்தைகளுக்குத் தான்.

2. ஆரம்பக் கல்வியின் காலம் ஏழு வருடங்களாகவாவது இருக்க வேண்டும். மெட்ரிகுலேஷன் வரையில் படித்தால் என்ன அறிவு பெற முடியுமோ, அந்த அளவு அறிவு இந்தக் காலத்தில் பெற வேண்டும். அதில் ஆங்கிலம் இராது. ஆனுல், நல்ல தொழில் பயிற்சி இருக்கும்.

3. பையன்களும், பெண்களும் எல்லாத் துறைகளிலும் அபி விருத்தி பெறுவதற்காக, சாத்தியமானவரையில் எல்லாப் பயிற் சியும் லாபகரமான ஒரு தொழிலின் மூலம் அளிக்கப்பட வேண்டும். அதாவது, தொழிற் பயிற்சியில் இரண்டு காரியங்கள் நிறைவேற வேண்டும். பையன் தான் செய்யும் வேலையின் மூலம் தன்னுடைய பள்ளிக்கூடச் சம்பளத்திற்கு சம்பாதிக்க வேண்டும்; அதே சம யத்தில் பள்ளிக்கூடத்தில் பெறும் தொழிற் பயிற்சியின் மூலம் பையனே, பெண்ணே முழுமை பெறவேண்டும்.

மாணவர்களின் வேலையினுல் கிடைக்கும் வருமானம் பள்ளிக் கூடத்திற்குத் தேவையான நிலம், கட்டிடங்கள், மற்றும் இதர தளவாடங்களுக்காகும் செலவை ஈடு செய்யவேண்டும் என்று எதிர்பார்க்கப்படவில்லை.

பருத்தி, கம்பளம், பட்டு முதலியவைகளைச் சேகரிப்பதி லிருந்து, சுத்தப்படுத்துவது, கொட்டை எடுப்பது (பருத்திக்கு),

பட்டைபோடுதல், நூற்பது, சாயம் போடுவது, இரட்டை முறுக்கேற்றுவது, மோஸ்தர்கள் தயாரித்து நெய்வது, பூவேலை செய்தல், தையல், காகிதம் செய்வது, அறுப்பது, புத்தகங்களை 'பைண்டு' செய்வது, மர அலமாரி செய்வது, பொம்மைகள் செய்வது, வெல்லம் தயாரிப்பது ஆகியவைகளையெல்லாம், அதிக முதலீடு செய்ய வேண்டிய அவசியமில்லாமல் சுலபமாகக் கற்றுக் கொள்ள முடியும்.

பையன்களும், பெண்களும் தமது ஜீவனத்திற்கு சம்பாதித்துக் கொள்ள இந்த ஆரம்பக் கல்வி அவர்களைத் தயார் செய்ய வேண்டும். அந்தத் தொழில்களைக் கற்றுக் கொள்ளுபவர்களுக்கு வேலை தருவதாக சர்க்கார் உத்தரவாதம் அளிக்கவேண்டும்; அல்லது அவர்கள் உற்பத்தி செய்யும் சாமான்களை ஒரு குறிப்பிட்ட விலையில் சர்க்கார் வாங்கிக் கொள்ள வேண்டும்.

4. தேசத்திற்குத் தேவைப்படும் பல்வேறு துறைகளிலும் உயர்தரக் கல்வி தனியார்களிடம் விடப்பட வேண்டும்.

சர்க்கார் சர்வகலாசாலைகள் வெறும் பரீட்சை செய்யும் ஸ்தாபனங்களாக மட்டுமே இருக்க வேண்டும்; பரீட்சைகளுக்காக வசூலிக்கப்படும் கட்டணங்களைக் கொண்டு இவை தம் செலவுகளைச் சமாளித்துக் கொள்ள வேண்டும்.

கல்வித் துறை பூராவையும் சர்வகலாசாலைகள் கவனித்துக் கொள்ளும். வெவ்வேறு படிப்புகளுக்கான பாடத் திட்டங்களைத் தயாரித்து, அங்கீகாரம் அளிப்பதையும் அவர்களே கவனித்துக் கொள்ளுவார்கள். சம்பந்தப்பட்ட அந்தந்த சர்வகலாசாலைகளின் முன் அனுமதி பெறுமல் எந்தத் தனியார் பள்ளியும் நடத்தப்படக்கூடாது. நல்ல தகுதியும், நாணயமும் உள்ள எந்த கோஷ்டியினருக்கும் சர்வகலாசாலையை ஏற்படுத்தும் அங்கீகார சாசனம் தாராளமாக அளிக்கப்பட வேண்டும். ஒரு மத்திய கல்வி இலாகாவை நடத்தும் செலவைத் தவிர, சர்வகலாசாலைகளினல் சர்க்காருக்கு எந்தவிதமான செலவும் இருக்கக் கூடாது.

இந்தத் திட்டத்தினல், சர்க்காரின் தேவைகளுக்கு வேண்டிய கல்வி ஸ்தாபனங்களை சர்க்கார் நடத்த வேண்டியதில்லையென்று அர்த்தமில்லை.

இத்திட்டம் பூராவாக ஏற்றுக்கொள்ளப்பட்டால், எதிர்காலத்தை உருவாக்கப் போகும் இளைஞர்களுக்குப் பயிற்சியளிக்கும் சர்க்காரின் பெரிய பொறுப்பு தீர்ந்துவிடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

—'ஹரிஜன்' – 2—10—1937

# 2

# ஊக்கமளிக்கும் ஊற்று

[சத்தியாக்கிரக ஆசிரம மாணவர்களிடையே இந்தப் பிரசங்கம் காந்திஜியினல் செய்யப்பட்டது. மாணவர்களின் வாழ்க்கையில் பரிசுத்தம், பொறுப்பு உணர்ச்சி அவசியம் என்ற காந்திஜியின் கருத்துகளை வாசகர்களுக்குத் தெரிவிப்பதற்காக 'ஸபர்மதி' என்ற மாத சஞ்சிகையிலிருந்து (1922) அது எடுத்துத் தரப்படுகிறது:]

இங்கு நாம் ஒரு புதிய சோதனையை ஆரம்பிக்கிறோம். இதில் எவ்வளவோ அபாயங்கள் இருக்கின்றன. நான், கூட இல்லையென்ருல் ராஷ்டிரீய சாலையின் ஆசிரியர்கள் இந்தச் சோதனையைத் தாமே செய்யத் துணியமாட்டார்கள்.

பையன்களும், பெண்களும் சேர்ந்து படிக்கும் சோதனையைச் செய்து பார்க்க விரும்புகிறோம்; அதாவது, கிண்டர்கார்டன் வகுப்பிலிருந்து, உயர்நிலைப் பள்ளிவரையில் பையன்களும், பெண்களும் சேர்ந்து படிப்பார்கள். ''இப்போது பள்ளிக்கூடங்களுக்கு வரும் பெண்களின் எண்ணிக்கை அதிகமாகிக்கொண்டிருக்கிறது. அவர்களில் சில வயது வந்த பெண்களும் இருக்கிருர்கள். அவர்களுக்காகத் தனி வகுப்பு நடத்த வேண்டுமா?'' என்று சில ஆசிரியர்கள் ஒரு சமயம் என்னைக் கேட்டார்கள். இந்த யோசனையை நான் ஒப்புக் கொள்ளவில்லை. பெண்களுக்கென்று தனியாக ஒரு வகுப்பை ஆரம்பிக்க வேண்டிய அவசியமில்லை என்று சொன்னேன்.

ஆனல், என்னுடைய இந்த முடிவில் பல அபாயங்கள் இருக்கின்றன என்பதைப் பின்னர் உணர்ந்தேன். இந்த விஷயத்தில் இந்த ஆசிரமத்திலுள்ள பையன்களுக்கும், பெண்களுக்கும், சில விதி முறைகளைக் கொடுக்க வேண்டியது அவசியமென்று கருதினேன். நான் சொல்லுவது இறுதியானது, உங்களைக் கட்டுப் படுத்துவது என்று எடுத்துக் கொள்ளாதீர்கள். அவ்வப்போது என் மனத்தில் தோன்றும் எண்ணங்களை உங்களிடம் சொல்லுகிறேன். பின்னர் ஆசிரியர்கள் இதைப் பற்றி விவாதித்து, அவசியமானல், தேவையான மாறுதல்களைச் செய்து கொள்ளலாம்.

பையன்களும், பெண்களும் ஒரே வகுப்பில் சேர்ந்து படிக்கலாம். ஆனல், அவர்கள் சில ஒழுங்கு முறைகளைப் பின்பற்ற வேண்டும். வகுப்பின் ஒரு புறத்தில் பையன்களும், மற்ருெரு புறத்தில் பெண்களும் உட்கார வேண்டும். வயது வந்த பையன்களும், பெண்களும் ஒருவரையொருவர் தொடக்கூடிய விதத்தில் நெருங்கி உட்காரக் கூடாது. பெண்களில் சிலர் பருவமடையும் நிலையில் இருக்கின்றனர்; மற்றவர்கள் சீக்கிரத்தில் பருவமெய்திவிடுவர். பெண்கள் வளர்ந்துகொண்டிருக்கிருர்கள். பையன்கள் ஏற்

கனவே வயது வந்தவர்கள். ஆகையால், அவர்கள் ஒருவரையொருவர் தொடக்கூடாது. அது நல்லொழுக்க விதியை மீறி நடப்பதாகும். வகுப்பு முடிந்த பிறகு பையன்கள் எல்லோருமாகச் சேர்ந்து, சிரித்து விளையாடலாம். பெண்களும் அதே மாதிரி செய்யலாம். ஆனால், பையன்களும், பெண்களும் ஒருவரோடொருவர் அப்படி நடந்துகொள்ள முடியாது. அவர்கள் ஒருவரோடொருவர் பேசக்கூடாது, சிரிக்கக் கூடாது, எக்காரணத்தை முன்னிட்டும் அவர்கள் அந்தரங்கமாகக் கடிதப் போக்குவரத்து நடத்தக் கூடாது. இளம் வயதினராகிய உங்களிடையே அந்தரங்கமானதென்று எதுவும் இருக்கக் கூடாது. சத்தியத்தைக் கடைப்பிடிக்கும் ஒருவனுக்கு அந்தரங்கமானது என்று எதுவும் இருக்க முடியாது. அத்தகைய கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ளுவது, வயது வந்தவர்களிடையே கூட பலவீனத்திற்கு அறிகுறியாகக் கருதப்படும். பெரியவர்களின் இந்த பலவீனத்தை நீங்கள் பின்பற்றக் கூடாது. அதற்கு மாறாக, உங்களிடம் அம்மாதிரி பலவீனம் இருந்தால், பெரியவர்கள் சொல்லுவதைக் கேட்டு அதைப் போக்கிக் கொண்டுவிட வேண்டும். சாதாரணமாக, பெற்றோர்கள் தம்முடைய பலவீனங்களைத் தம்முடைய குழந்தைகளிடம் சொல்லுவதில்லை. அது பெரிய தவறாகும். ஏனெனில், இதன் மூலம் அவர்கள் குழந்தைகளை அழிவு என்ற பாதாளத்திற்கு விரட்டி விடுகிறார்கள். தாம் செய்த தவறுகளைத் தம்முடைய குழந்தைகளும் செய்யாதபடி பெற்றோர்கள் பார்த்துக் கொண்டால், இளம் தலைமுறையினருக்கு அதனால் எவ்வளவோ பலன் ஏற்படும். எதுவும் அந்தரங்கமாக இருக்கக்கூடாது என்பதனால், மற்றவர்களின் விவகாரங்களை நீங்கள் துருவிப் பார்க்கலாம் என்று அர்த்தமில்லை. அது உங்களுக்கு சம்பந்தமுள்ள விஷயமல்ல. எப்போதாவது பெரியவர்கள் சேர்ந்து பேச விரும்பும்போது, உங்களை நகர்ந்துபோகச் சொன்னால், உடனே போய்விட வேண்டும். எங்களுடைய பலவீனங்களை நீங்கள் தெரிந்து கொள்ளுவதன் மூலம், அவற்றை நாங்கள் விட்டொழிப்பதற்கு நீங்கள் உதவி செய்யவில்லை. ஆனால், பெரியவர்களுக்குத் தெரியக்கூடாது என்று நீங்கள் பேசுவதோ, எழுதுவதோ எதுவும் இருக்கலாகாது. பள்ளிக்கூடங்களிலோ, வெளியிலோ, பெரியவர்கள் இல்லாத இடங்களில் பையன்களும், பெண்களும் ஒருவரோடொருவர் பேசாமல் இருப்பதுதான் இதற்குச் சிறந்த வழியாகும். பையன்கள் மற்றப் பையன்களுடைய அறைகளுக்குப் போகலாம். அங்கு உட்கார்ந்து கொண்டு பேசலாம். அதே மாதிரி பெண்களும், மற்றப் பெண்களின் அறைகளுக்குப் போகலாம், ஆனால், பெண்கள் பையன்களின் அறைகளுக்குப் போகக் கூடாது. பெரியவர்களின் முன்னிலையிலும், பிரார்த்தனை சமயங்களிலும் பெண்கள் பையன்களுடன் பேசலாம். அவர்களுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுக்கலாம். இம்மாதிரி சாதாரண நடவடிக்கைகளில் ஒன்றும் தவறு இல்லை. ஆயினும், இப்போதும் கூட சரியானபடி நடந்து கொள்ள வேண்டும். ஒருவர் மீதொருவர் படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

வயது வந்த பையன்களும், பெண்களும் ஒருவரையொருவர் தொடுவதால் காம இச்சை தூண்டிவிடப்படக் கூடிய சாத்தியக் கூறு இருக்கிறது. ஆகையால், ஒருவர் மீது ஒருவர் படாமல் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

நம்முடைய நாட்டுக்குச் சேவை செய்ய நாம் விரும்பினுல், உள்ளத்தையும், உடலேயும் பரிசுத்தமாக வைத்துக் கொள்ளு வதால் கிடைக்கும் ஜீவசக்தியைக் காப்பாற்றி வைக்க வேண்டியது இன்றியமையாததாகும் என்று நான் உறுதியாக நம்பு கிறேன். வாடி வதங்கிய மலர்களைப் போலாகிவிட்டால் உங்க ளுடைய உடல்களினுல் என்ன பலன்? ஏற்கனவே உடலில் சதைப்பற்று இல்லே. உயிரளிக்கும் ஜீவ சக்தியைக் காப்பாற்றி வைப்பதன் மூலம் உங்களுடைய உடல்களை வலிமைபெறச் செய்ய வேண்டும். உடல் பலவீனமாய் இருக்கும்வரையில் அறிவு பெறுவதோ, பெற்ற அறிவைக் காப்பாற்றிக் கொள்ளு வதோ சாத்தியமில்லே. அதைப் பயன்படுத்திக் கொள்ளுவதும் சாத்தியமில்லே. முன் கோபியான ஒருவன் அறிவு பெறக்கூடும்; நாணயமில்லாதவனும் அறிவு பெறமுடியும்; ஆனுல், பிரம்மச்சரி யத்தை அனுஷ்டிக்காதவனுக்கு அது சாத்தியமில்லே. புராணங் களிலிருந்து இந்த உண்மையை நாம் அறிந்திருக்கிறேம். காம இச்சையில் மூழ்கித் திளைத்த ராட்சதர்கள் கூட, மாணவர்களா யிருந்த காலத்தில் அறிவு பெறுவதற்காக பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்க வேண்டியிருந்ததென்று புராணங்கள் கூறுகின்றன. ஆகையால், முன் காலத்து ராட்சதர்களைப் போல் நீங்கள் அவ்வளவு உடல் வலு உள்ளவர்களாக இருக்கவேண்டுமென்று நான் விரும்புகிறேன். இதனுல் மௌலானு ஷவுகத் அலியைப் போல் நீங்கள் பூதாகாரமாகப் பருத்துப் போகவேண்டும் என்று அர்த்தமில்லே. அப்படிப் பருமனுயிருப்பது பலத்தைத்தான் காட்டுகிறது என்பதில்லே. ஆனுல், நீங்கள் பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்து, ஜீவதாதுவைக் காப்பாற்றினீர்களானுல், நம்மிடையே மீண்டும் ஒரு ஹனுமான் பிறப்பதை நாம் காண லாம். குச்சிபோல் மெலிந்திருக்கும் உடலேயுடையவன் எப்படி இரக்க குணத்தைப் பெறமுடியும்? அத்தகைய மனிதன் பயந்து நடு நடுங்கித்தான் போவான். ஷவுகத் அலி என்னை அடிக்கிறுர் என்று வைத்துக் கொள்ளுவோம். நான் அடியை வாங்கிக் கொண்டு பேசாமலிருந்துவிட்டால், அவரை நான் மன்னித்து விட்டேன் என்று சொல்லிக் கொள்ள முடியாது. அதற்கு மாருக, பதிலுக்கு பதில் எதுவும் செய்யாததால் அதிக பலத்தின் முன்பு பயந்து விட்டேன் என்றே எடுத்துக் கொள்ளலாம். என்னைத் தாக்குபவனைவிட நான் பலசாலியாக இருந்தால்தான் அவனை நான் மன்னித்ததாகச் சொல்லலாம். உதாரணமாக, ரஸிக்கை நான் மன்னித்துவிட முடியும். ஆகையால். நீங்கள் தைரியசாலி களாக இருக்க விரும்பினுல், சத்தியத்தையும், இரக்கத்தையும் செயல் முறையில் காட்டுபவர்களாக இருக்க விரும்பினுல், பிரம் மச்சரியத்தை அனுஷ்டித்து, ஜீவ தாதுவை ஜாக்கிரதையாகக்

காப்பாற்றிக் கொள்ள வேண்டும். பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்கும் என்னுடைய முயற்சியினால்தான் 51 வயதாகியும் கூட நான் இன்னும் சுறுசுறுப்பாக இருக்கிறேன். இன்னும் இளமையிலேயே இதே முயற்சிகளை நான் ஆரம்பித்திருந்தால், எவ்வளவு உன்னதமான நிலையில் இருந்திருப்பேன் என்று எனக்கே தெரியாது. தங்கள் குழந்தைகள் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுக்கும்படி இன்று இங்கு வந்துள்ள பெற்றோர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். தங்களுக்குத் திருமணம் செய்து வைக்கும்படி அவர்கள் உங்களிடம் வந்து கேட்டுக் கொண்டால்தான் நீங்கள் அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். முன்காலத்தில்தான் மனிதர்கள் பிரம்மச்சாரிகளாக இருக்க முடிந்தது என்று கூறுவது உண்மையாகாது. லார்டு கிச்சனர் ஒரு பிரம்மச்சாரி என்றே நினைக்கிறேன். அவர் மணம் செய்து கொள்ளவேயில்லை. அவர் ஒரு அருமையான மனிதர். அவர் வேறு இடங்களில் தன் மிருக இச்சைகளைத் திருப்தி செய்து கொண்டார் என்றும் நான் நினைக்கவில்லை. நல்ல உடல் கட்டுள்ளவர்களும், திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பவர்களும் தான் தற்காப்புப் படைகளில் சேர வேண்டுமென்று அவர் கருதினர். ஆகையால், உங்களுடைய குழந்தைகளுக்குச் சீக்கிரமாகத் திருமணம் செய்துவிட வேண்டாமென்று பெரியவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். பின்னர் நல்ல வரன் கிடைக்காமற் போய்விடுமோவென்று பயப்படாதீர்கள். உங்களுடைய பையன்களே மணம் செய்து கொள்ளவேண்டுமென்று கேட்கும்வரையில் நீங்கள் காத்திருக்கவேண்டும். சந்தர்ப்பம் ஏற்படும்போது உங்கள் பையனுக்கோ, பெண்ணுக்கோ நல்ல வரன் கிடைக்கச் செய்வதற்குக் கடவுள் துணை நிற்பார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

இந்தப் பையன்களுக்கும், பெண்களுக்கும் இன்னொரு வார்த்தை கூறவிரும்புகிறேன். அதாவது, நீங்களெல்லோரும் ஒரே ஆசிரியரிடம் படித்திருக்கிறீர்கள். ஆகையால், நீங்கள் ஒருவரையொருவர் சகோதர, சகோதரிகளாக பாவித்துக் கொண்டு நடக்க வேண்டும். அவர்களிடையே வேறெந்த விதமான உறவும் இருக்கக்கூடாது. இந்த ஆசிரமத்தில் வசித்துக் கொண்டு இந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் யாவரும் இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இந்த உறவு முறையை மீறி ஏதாவது நடந்தது என்று எனக்குத் தெரிந்தால், இந்த பள்ளிக்கூடத்தையோ, ஆசிரமத்தையோ உடனடியாக மூடிவிடத் தயங்க மாட்டேன். பொதுஜன அபிப்பிராயத்தைப் பற்றி நான் கவலைப் படவில்லை. ஆகையால், உஷாராயிருங்கள். சகோதர-சகோதரி உறவு முறைப்படியே நடப்பதாக நீங்கள் உறுதி கூறினல்தான், இந்தப் பள்ளிக்கூடத்தில் இன்னும் அதிகப் பெண்களைச் சேர்த்து, இந்தச் சோதனையைத் தொடர்ந்து நடத்துவேன். தான் ஆசிரமத்தில் சேரவிரும்புவதாக இன்று ஒருவர் என்னிடம்

சொன்னார். அவருக்கு 12 வயதில் ஒரு பெண் இருக்கிறாள். அந்த வயதுப் பெண் திருமணப் பருவத்தை எய்திவிட்டவள் என்றே கருதுகிறோம். இந்த விஷயத்தில் நீங்கள் உறுதி கூறவேண்டும். அப்போதுதான் அவருடைய பெண் இங்கு பத்திரமாக இருப்பாள் என்று அவருக்கு நான் உறுதி கூறமுடியும். நாம் செய்யும் சோதனை மிகவும் தரும சங்கடமானது. நான் சொன்ன விதிகள் ஒரு எழுத்துப் பிசகாமல் அப்படியே பின்பற்றப்பட்டால் தான் பெற்றோர்கள், ஆசிரியர்கள் இருவருமே கவலை இல்லாமல் இருப்பார்கள். முறை தவறி எதுவும் நடக்காமலிருப்பதற்காக ஆசிரியர்கள் மாணவர்களைக் கண்காணிக்க வேண்டியிருந்தால், இருவருக்குமே அது தீங்காகும்.

தன்னுடைய காம இச்சையைத் தீர்த்துக் கொள்ளாமல் இனி அடக்கிவைக்க முடியாது என்று யாராவது நினைத்தால், அவர் உடனே ஆசிரமத்திலிருந்து வெளியேறிவிட வேண்டும். அதனுடைய நல்ல பெயருக்கு அவர் இழுக்கு தேடித் தராமல் இருக்கட்டும். "உங்கள் கண்களை அடக்கியாள முடியாதென்று உங்களுக்குத் தோன்றினால், கண்களில் ஒரு ஊசியைக் குத்துங்கள்" என்று பைபிள் கூறுகிறது. அந்த நிலைமை ஏற்படாதென்றே நினைக்கிறேன். அப்படி ஏற்பட்டால் நான் ஸபர்மதி நதியில் குதித்துவிடுவேன்.

உங்களிடம் காம இச்சை இருந்தாலும், இல்லாவிட்டாலும், நீங்கள் யாவரும் நான் சொன்னவற்றை நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட பேதத்தை நாம் அழித்து விட முடியாது. இந்த வேற்றுமையை அனுசரிப்பதன் மூலம்தான் அதாவது பையன்கள் பெண்களைத் தொடாமலும், பெண்கள் பையன்களைத் தொடாமலும் இருப்பதன் மூலம் இந்த இச்சையை அடக்கியாள முடியும். இந்த இச்சையை அடக்கி பிரம்மச்சரியத்தை அனுஷ்டிபப்தற்கு நான் மிகவும் கஷ்டப்படவேண்டியிருந்தது. இந்த இச்சையை அடக்குவதற்கு என்னைப்போல் அவ்வளவு கஷ்டப்பட்டு உழைத்த இன்னொருவரை நான் பார்த்ததில்லை. இந்த இச்சையை ஒரு முறையாவது அனுபவித்தவர்களுக்கு அதை அடக்குவதென்பது மிகமிகக் கஷ்டம். ஆகையால், இந்தப் பழக்கத்தை நீங்கள் ஆரம்பிக்க வேண்டுமென்று கூறுகிறேன். கொஞ்சமாவது அந்த எண்ணம் தோன்றினால் உடனேயே அதை அடக்கிவிடுங்கள். இந்த இச்சையே ஏற்படாதவர்கள், அதை அடக்குவதற்கு அவ்வளவாகக் கஷ்டப்பட வேண்டியதில்லை. காம இச்சை எழுவதற்கான சந்தர்ப்பங்கள் ஏற்படாதவாறு அவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்து, ஜீவ தாதுவைக் காப்பாற்றி வைப்பவர்கள் மட்டுமே தேசத்திற்குச் சேவை செய்யத் தகுதி பெறுவர். பள்ளிக்கூட நாட்களில் பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்தால், பெண்கள்கூட இன்னும் நல்ல குடும்பப் பெண்களாகவும், தாய்மார்களாகவும் ஆவார்கள். தன்

கணவனுக்கு மட்டுமே சேவை செய்யும் ஒருவளைவிட வறுமையில் ஆழ்ந்து உழன்று கொண்டிருக்கும் நம் நாட்டு ஏழைகளுக்குச் சேவை செய்பவர், இன்னும் அதிக மரியாதைக்கு உரியவராவார்.

மற்ெருரு விஷயத்தையும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். எளிய ஆடைகளை அணிந்து கொள்ளுவது பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பதற்கு உதிவி செய்கிறது. ஆனல், இது கண்டிப்பான ஒருவிதியல்ல. ஏனெனில், கதர் அணிபவன் கூடப் பெரிய பாவியாக இருக்கலாம். படாடோபமாக ஆடையணிபவன் பிரம்மச்சாரியாகவும் இருக்கலாம். பிரம்மச்சாரி தன் வெளித்தோற்றத்தை கடவுளுக்கு மட்டும்தான் காட்டலாம். நாம் நிர்வாணமா யிருந்தால் கூட கடவுள் நம்மைப் பார்க்கிருர். வெளிப் பகட்டின் மூலம் நாம் ஏன் அழகுபடுத்திக் கொள்ள வேண்டும்? உண்மையான அழகு ஒருவனுடைய குணத்தில்தான் இருக்கிறது. நம்முடைய தார்மிக உயர்வின் மூலம்தான் மற்றவர்களைக் கவர வேண்டும்; வெளி அழகின் மூலம் அல்ல. உடலை மறைப்பதற்காக மட்டும்தான் ஆடைகள். ஆகையால், அருமையான பட்டுத் துணியைப் போலவே, முரட்டுக் கதர் துணியும் திருப்தியளிக்கக் கூடியதே. பெரியவர்கள் தாமே கதர் அணிய முடியாவிட்டாலும், பையன்களுக்கு அந்தப் பழக்கத்தைக் கற்றுக் கொடுக்க வேண்டும். உயர்ந்த ரகமான ஆடைகளை அணிவித்தால்தான் தன்னுடைய குழந்தை அழகாய் இருக்கிறதென்று நினைக்கும் ஒரு தாய் முட்டாள்தான். ஒருவருடைய அழகு அருமையான துணிகளினுல் எப்படி அதிகமாகும்? என்னுடைய பெண் பார்ப்பதற்கு அழகாக இருக்கிருள் என்பதற்காக அவளை மணந்து கொள்ள வேண்டுமென்று ஒருவன் வந்து கேட்டால், அவனைக் கண்டித்து அனுப்பிவிடுவேன். அவளுடைய குணங்களை விரும்பிக் கோருபவனுக்கே அவளை மணம் செய்து கொடுப்பேன். நீங்கள் அழகாகத் தோற்றமளிக்க விரும்பினுல், ஆடம்பர ஆடைகளை அணிந்து கொள்ளுவதற்குப் பதிலாக, உங்கள் ஒழுக்கத்தை வளர்த்துக்கொண்டு, ஏற்கனவே உள்ள நல்ல குணங்களையும் பலப்படுத்திக் கொள்ள வேண்டும். அப்போது நீங்கள் நிச்சயமாக அழகாக இருப்பீர்கள்; சென்ற இடமெல்லாம் உங்களுக்கு மதிப்பும் கிடைக்கும்.

நான் சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லிவிட்டேன். நான் சொன்னவை உங்களுக்குப் புரியவில்லையென்ருல், அவற்றை விளக்கிக் கூறும்படி பெரியவர்களையோ, ஆசிரியர்களையோ கேட்க வேண்டும். நீங்கள் யாவருமே இதைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்து நன்ருகப் புரிந்து கொண்டு, முடிந்த வரையில் செயலில் காட்ட வேண்டும். அதன் மூலம் பையன்களையும், பெண்களையும் ஒரே வகுப்பில் சேர்த்துப் படிக்க வைக்கும் என்னுடைய சோதனை வெற்றி பெறுவதற்கு வாய்ப்பளிக்க வேண்டும்.

# 3

# ஜூனகாடில் வெறித்தனம்

ஜூனகாட் கத்தியவாடிலுள்ள ஒரு முஸ்லிம் சமஸ்தானம். வீரர்களான கத்திவகுப்பினர் ஒரு காலத்தில் அங்கு வசித்தார்கள் என்பதால் அதற்குப் அந்தப் பெயர் வந்தது. வஜீர் பஹாவுத்தீன் என்பவர் ஸ்தாபித்த கல்லூரி ஒன்று அங்கே இருக்கிறது. அது நன்ருக நடத்தப்படும் ஒரு கல்லூரி. பெரும்பாலும் முஸ்லிம்களான பல ஸிந்தி அறிஞர்கள் அங்கே இருக்கிருர்கள். இந்தக் கல்லூரியில் படிப்புக்குக் கட்டணம் கிடையாது. சில நாட்களுக்கு முன்பு கத்தியவாடிகளல்லாத மாணவர்கள் யாவரும் 24 மணி நேரத்திற்குள் அந்தக் கல்லூரியிலிருந்து வெளியேறிவிட வேண்டும் என்று புதிய நவாப் திடீரென்று ஒரு உத்தரவு பிறப்பித்தார். பாவம், அந்த மாணவர்கள் எல்லோரும் அன்றைக்கே நிர்ப்பந்தமாக ரயிலில் ஏற்றப்பட்டு, ஸிந்துவுக்கு அனுப்பப்பட்டனர். மாணவர்கள் என்ன குற்றம் செய்தார்களென்று யாருக்கும் தெரியாது. கிலாபத் கிளர்ச்சிதான் பைத்தியக்காரத்தனமான இந்த உத்தரவுக்குக் காரணம் என்று ஒரு வதந்தி உலாவுகிறது.

என்னைப் பொறுத்தவரையில், வெளியேற்றத்தை நான் வரவேற்கிறேன். கிலாபத் கிளர்ச்சிக்கு எதிராக எந்தெந்த சக்திகள் அணிவகுத்து நிற்கின்றன என்பதை இந்த அநியாய உத்தரவு எடுத்துக் காட்டும். இந்தச் சமஸ்தானங்களே ஏகாதிபத்திய சர்க்காருக்கு உட்பட்டவை. ஆகையால், ஏகாதிபத்திய சர்க்காரே பெரிய தவறு செய்யும்போது, எந்தவிதமான ஆதிபத்திய உரிமைகளும் இல்லாத இந்த சமஸ்தானங்களை விட அதுதான் இன்னும் அதிக மோசமாகி விடுகிறது. அதிகாரமும், செல்வாக்கும் போய்விடுமே என்ற பயத்தில், இந்த சமஸ்தானங்கள் மனமுவந்து அநீதியின் கைப்பாவைகளாகி விடுகின்றன. ஏகாதிபத்திய சர்க்கார் எவ்வளவு பெரிய அநீதி இழைக்கிருர்கள் என்பது சுதேச சமஸ்தானங்களின் செய்கைகளில் இன்னும் நன்ருகப் பிரதிபலிக்கிறது. ஆகையால், சுதேச சமஸ்தானங்களிலுள்ள பிரஜைகளும், தற்காலிகமாக அங்கு வசிப்பவர்களும் இரட்டைக் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியவர்களாகி விடுகிருர்கள். ஆனல், பிரிட்டிஷ் மேலாதிக்கத்தின் கீழ் உள்ள சுதேச சமஸ்தானங்களின் நிலைமையைப்பற்றி இப்போது நான் விவாதிக்க விரும்பவில்லை.

இந்த நிலைமைக்கு ஒரு சுலபமான வழியைக் காட்ட வேண்டும் என்பதே என்னுடைய நோக்கமாகும். இந்த அசாதாரணமான உத்தரவை ஆட்சேபித்து அந்தக் கல்லூரியின் தலைமை ஆசிரியர் ராஜிஞமா செய்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. சாம்ராஜ்யத்தில் நீதியையும், பரிசுத்தத்தையும் காணவேண்டுமென்று விரும்புகிறவர்களின் மனப்பூர்வமான பாராட்டுதல்

களுக்கு அவர் உரியவராவார். ஆனல், கத்தியவாடி மாணவர்கள் தமது சமஸ்தானத்திற்கும், தோழர்களுக்கும் செய்ய வேண்டிய கடமை ஒன்று இல்லையா? தம்முடைய பலத்த ஆட்சேபணையைத் தெரிவித்துவிட்டு, அவர்கள் கும்பலாகக் கல்லூரியிலிருந்து வெளியேறிவிட வேண்டும் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். தம்முடன் வாசிக்கும் மற்ற மாணவர்களிடம் அனுதாபம் காட்டுவதற்காக அவர்கள் கல்லூரியிலிருந்து வெளியேறிவிட வேண்டும். இல்லாவிடில் அவர்கள் பெறும் இலவசக் கல்விக்கு ஒரு மதிப்பும் இல்லை. இப்போது கூட நவாப் சாகிபுக்கு புத்தி வராமலிருக்கலாம். அதைப்பற்றி அவர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. கல்லூரியிலிருந்து வெளியேறினல் அவர்கள் தம் கடமையைச் செய்தவர்களாவார்கள்.

வெளியேற்றப்பட்டுள்ள மாணவர்களுக்கு நான் சொல்லுவது இதுதான்: "தைரியத்தை இழக்காதீர்கள். உங்களை அவமதித்த ஒரு கல்லூரியில் திரும்பச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று நீங்கள் கெஞ்சக் கூடாது. நவாப் உங்களுக்குக் கொடுத்துள்ள சொற்பத் தொகையையும், பிரயாணச் செலவையும் கூட நீங்கள் திருப்பிக் கொடுத்துவிடலாம். அந்தப் பணத்தை வாங்கிக் கொள்ளுவது தவறுக்கு உடந்தையாக இருப்பதாகும். உங்களுக்கு வேண்டிய கல்வியை எல்லாம் ஸிந்துவிலேயே நீங்கள் பெறலாம்; இதற்காக நீங்கள் எந்தக் கல்லூரிக்குமே போக வேண்டியதில்லை. நம்முடைய பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அளிக்கப்படும் கல்வியைப் பற்றி நாம் அளவுக்கு மீறி பிரமாதப்படுத்திக் கொண்டிருக்கிறோம். நாம் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்பு மனிதர்களாயிருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இலக்கியத் துறையிலோ வேறு துறைகளிலோ முன்னேற்றம் பெறுவதற்கு இடையூருக உள்ள எல்லாக் கஷ்டங்களையும் சமாளிப்பதற்கு மனிதர்களுக்கு வேண்டிய சக்தியை இயற்கை கொடுத்திருக்கிறது.

—'எங் இந்தியா' – 7—7—1920

# 4
# அவர்களுடைய சோதனை

ரௌலட் சட்டக் கிளர்ச்சியின் போது மாணவர்களுக்கு நேர்ந்தவை இப்போது மீண்டும் நேர்ந்து கொண்டிருக்கின்றன, அப்போது கல்லூரியிலிருந்து வெளியேற்றப்பட்ட ஒருவர், தற்கொலை செய்து கொண்டுவிடலாமா என்று தோன்றுகிறதென எனக்கு எழுதியிருந்தார். இப்போது ஒரு மாணவர் பின்வருமாறு எழுதியிருக்கிறார் :

"......யைச் சேர்ந்த மாணவர்கள் தாயின் அழைப்பைக் கேட்டு ஓடி வந்தார்கள். 3௳ யன்று நாங்கள் ஹர்த்தால் அனுஷ்டித்தோம். துணிச்சலான இந்தச் செய்கைக்காக எங்களுக்குத் தலா இரண்டு ரூபாய் அபராதம் விதிக்கப்படுகிறது. ஏழை மாணவர்கள் தம்முடைய பல்வேறு விதமான உபகாரச் சம்பளங்களை இழக்கிறார்கள். தயவு செய்து தலைமை ஆசிரியரான ஸ்ரீ...அவர்களுக்கு எழுதுங்கள் அல்லது 'எங் இந்தியா' பத்திரிகையில் எழுதுங்கள். நாங்கள் குற்றவாளிகள் அல்லவென்றும், நாங்கள் எந்தக் குற்றத்தையும் செய்துவிடவில்லையென்றும் அவரிடம் சொல்லுங்கள். தாயின் குரலைக் கேட்டு, எங்களால் இயன்றவரையில் அவமானத்திலிருந்து அவளைக் காப்பாற்றினோம் என்று சொல்லுங்கள். நாங்கள் கோழைகளல்ல என்றும் அவரிடம் சொல்லுங்கள். தயவு செய்து எங்கள் உதவிக்கு வாருங்கள்."

தலைமை ஆசிரியருக்கு எழுத வேண்டும் என்ற வேண்டுகோளை நான் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவர் தன்னுடைய 'வேலையை' இழக்காமலிருக்க வேண்டுமானால், ஏதாவது ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளத்தான் வேண்டியிருக்குமென்று நினைக்கிறேன். கல்வி ஸ்தாபனங்கள் சர்க்காரின் உதவியுடன் நடத்தப்படும் வரையில், சர்க்காருக்கு ஆதரவாகத் தான் அவை உபயோகித்துக் கொள்ளப்படும். சர்க்காருக்கு விரோதமான பொதுஜன நடவடிக்கைகளில் கலந்து கொள்ளும் மாணவர்களோ, ஆசிரியர்களோ தாம் நீக்கப்படலாம் என்ற அபாயத்திற்கும் உட்படத்தான் வேண்டும். மாணவர்கள் மக்களுடன் சேர்ந்து கொண்டதை, தைரியமான நல்ல காரியம் என்றே தேசபக்தர்கள் நினைப்பார்கள். நாட்டின் அழைப்பைக் கேட்டு அவர்கள் வராமலிருந்தால், தேசபக்தியில்லாதவர்கள் என்ற இழிச்சொல்லுக்கு உள்ளாகியிருப்பார்கள். சர்க்கார் கண்ணோட்டத்துடன் பார்த்தால் அவர்கள் தவறுதான் செய்திருக்கிறார்கள்; அதனால் சர்க்காரின் கடும் அதிருப்தியைத் தேடி கொண்டிருக்கிறார்கள். மாணவர்கள் பொது ஜன இயக்கத்தை ஆதரிக்க விரும்பினால், படிப்பை இரண்டாம் பட்சமாகத் தான் கருத வேண்டும்; நாட்டின் நலன்களுக்கு முரணாக இருந்தால் படிப்பைத் தியாகம் செய்யத்தான் வேண்டும். 1920-லேயே இது எனக்குத் தெளிவாகப் புலப்பட்டது. பின்னர் நடந்த சம்பவங்

கள் என்னுடைய முதல் கருத்தை ஊர்ஜிதம் செய்திருக்கின்றன. என்ன நேர்ந்தாலும் நேரட்டும் என்று சர்க்கார் கல்லூரிகளி லிருந்து வெளியேறி விடுவதுதான் மாணவர்களுக்குள்ள பத்திர மானதும், கௌரவமானதுமான வழியாகும், அல்லது சர்க்காருக் கும், மக்களுக்குமிடையே முரண்பாடு ஏற்படும்போது எந்தச் சமயத்திலும் நம்மை வெளியேற்றட்டும் என்று தயாராக இருப் பது அடுத்தபடியாக உள்ள வழியாகும். சர்க்காருக்கு எதிரான போராட்டத்தில் அவர்கள் தலைவர்களாக இருக்க முடியா தென்றால், உண்மையான தொண்டர்களாகவாவது இருக்க வேண்டும். தேசத்தின் அழைப்பை அவர்கள் எவ்வளவு தைரியத் துடன் ஏற்றுக்கொண்டார்களோ அதே தைரியத்துடன் அதன் விளைவுகளையும் சமாளிக்கட்டும். அவர்கள் தம்மைச் சிறுமைப் படுத்திக் கொள்ள வேண்டாம். வெளியேற்றப்பட்ட பள்ளிகள், கல்லூரிகளில் திரும்பச் சேருவதற்காகத் தம்முடைய சுயமரியா தையைக் கைவிட்டுவிட வேண்டாம். முதல் சோதனையிலேயே அவர்கள் பணிந்துவிட்டால், அவர்களுடைய தைரியம் வெறும் 'சவடால்' என்றே மதிக்கப்படும்.

ஹர்த்தாலுக்கு முந்திய நாட்களில் மாணவர்கள் அந்நியத் துணிகளைக் களைந்துவிட்டு பெரும் அளவுக்கு கதர் ஆடைகளை வாங்கினார்கள் என்று அறிகிறேன். இது தற்காலிகமான ஒரு நடிப்பு என்று ஆகிவிடாமல் இருக்கட்டும். இந்த நாட்டில் அந்நியத் துணிகள் இருப்பது அந்நிய சர்க்காருக்குச் சமமானது என்றே நான் நினைக்கிறேன். இது விவாதமின்றி ஏற்றுக்கொள் ளப்பட வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' – 16—2—1928

# 5

# நம் முன்புள்ள பாதை

## 1

புது உலகத்தில் (அமெரிக்கா) குழந்தைகளிடையே குற்றங் கள் அதிகமாகி வருவதையும், பெண்கள் ரகசியமாகத் தமது இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதையும் பற்றிப் பத்திரி கைகளில் வந்த கோரமான செய்திகளைக் கத்தரித்து எடுத்து ஒரு நிருபர் எனக்கு அனுப்பியிருக்கிறார்.

ஒரு தாயார் தன்னுடைய 4-வயதுக் குழந்தையை தீக் குச்சி களை வைத்துக் கொண்டு விளையாடக் கூடாதென்று கண்டித் தாள். இதனால் அந்தப் பையன் தன் தாயாரைச் சுட்டுவிட் டானாம். போலீசார் வந்து கேட்டபோது, பையன் பயப்படவே

இல்லை. 'உங்களையும் சுட்டு விடுவேன்' என்றானும். பிரேத விசாரணை அதிகாரி கேட்ட கேள்விகள் அவனுக்குப் பொறுக்க வில்லை. எதிரே மேஜை மீதிருந்த கத்தியைத் தூக்கிக் கொண்டு அந்த அதிகாரியைத் தாக்க ஓடினான். அமெரிக்காவில் ஒரு சிறு பையனோ, பெண்ணோ ஏதாவது குற்றம் புரியாத நாளே கிடையா தாம். பெரும்பாலான அமெரிக்கக் கல்லூரிகளில் தற்கொலை சங்கங்கள், குற்றம் புரியும் சங்கங்கள் முதலியவை இருக்கின் றனவாம். மிகவும் உயர்தரமான கல்லூரிகளில் படிக்கும் பெண் கள்கூட ரகசியமாகக் காதல் களியாட்டங்களைத் தேடி ஓடுகிறார் களாம்—இதுதான் அதிலுள்ள மோசமான அம்சம்.

தமது வாசகர்களுக்கு ஏதாவது பரபரப்பளிக்கும் செய்தி களைக் கொடுக்கவேண்டும் என்ற இந்த யுகத்தில், உண்மையான செய்திகள் இல்லாத காலத்தில் பத்திரிகைகள் கற்பனைச் செய்தி களைக் கொடுக்க வேண்டியிருக்கின்றன. ஆகையால், இங்கே நான் கொடுத்துள்ள செய்திகளை அப்படியே நம்புவது கஷ்டமா யிருக்கிறது. இவை மிகைபடுத்தப்பட்டிருக்கலாம். இருந்தாலும் புது உலகத்தில் சிறுவர், சிறுமியர் செய்யும் குற்றங்கள் மிகவும் அதிகமாகிவிட்டன என்பதில் சந்தேகமில்லை. ஆகவே, இந்தக் குற்றங்களுக்குப் பொறுப்பான நாகரிகத்தைப் பற்றி நாம் உஷா ராக இருந்தாக வேண்டும். இம்மாதிரி சிறுவர்களின் குற்றங்கள் நடந்து கொண்டிருந்தும் கூட, மேற்கு நாடுகளில் ஒரு மாதிரி யான முற்போக்கான வாழ்க்கை நடந்து கொண்டுதான் இருக் கிறது என்பதை ஒப்புக்கொள்ளலாம். மேல் நாடுகளிலுள்ள விவேகிகள் இந்தத் தீமையை அறியாமலில்லை என்பதையும், அதைச் சமாளிக்க அவர்கள் தீரத்துடன் போராடி வருகிறார்கள் என்பதையும் கூட ஒப்புக்கொள்ளலாம். இருந்தாலும் இந்த நாகரித்தைக் கண்ணை மூடிக்கொண்டு நாம் பின்பற்ற வேண்டுமா என்பதை நாம் முடிவு செய்ய வேண்டும். அவ்வப்போது மேல் நாடுகளிலிருந்து வரும் கோரச் செய்திகளைப் பார்க்கும்போது நாம் யோசிக்கத்தான் வேண்டும். இப்போது நமக்குக் கிடைத் துள்ள புது அறிவைக் கருத்தில் கொண்டு, நமது நாகரிகத்தி லுள்ள குறைபாடுகளைக் களைந்து அதையே நாம் பின்பற்றுவது நல்லதல்லவா என்று நம்மை நாமே கேட்டுக்கொள்ள வேண்டும். மேல் நாட்டினருக்குத் தம்முடைய நாகரிகத்தைப் பற்றிப் பெரும் பிரச்னைகள் இருக்கின்றன என்றால், நமக்கும் அம்மாதிரி பிரச்னை கள் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை.

இந்த இரண்டு நாகரிகங்களில் எது உயர்ந்தது என்று மதிப்பிடுவது வீண் வேலையாக இருக்கக் கூடும். தமது சூழ்நிலைக் கேற்ற ஒரு நாகரிகத்தை மேல் நாட்டினர் உருவாக்கிக் கொண் டிருக்கலாம்; நமது நிலைமைகளுக்கேற்ற ஒன்றை நாம் உருவாக் கிக் கொண்டிருக்கிறோம். அந்தந்த இடங்களில் இரண்டும் நல்லவைதாம். ஆனால், ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்லலாம். நான் குறிப்பிட்ட குற்றங்கள் நம்மிடையே நடக்கவே நடக்காது.

நம்மிடையே உள்ள அடக்கமும், கட்டுப்பாடும்தான் இதற்குக் காரணம். மனிதன் தன்னுடைய தேவைகளை ஒரு அளவில்லாமல் பெருக்கிக் கொண்டிருப்பதுதான் இன்றைய நாகரிகத்தின் இயல்பாக இருக்கிறது. பழைய நாகரிகம் இந்தத் தேவைகளுக்குக் கண்டிப்பான ஒரு கட்டுப்பாடு விதித்திருந்தது. அற்ப சுகத்திற்காக நிரந்தரமான நன்மையை விலை கூறிவிடும் அபாயத்தில் நாம் இருக்கிறோம்.

'எங் இந்தியா' – 4—8—1927

# 6

# உங்களுடைய பொறுப்பை உணருங்கள்

## 1

[பெங்களூர் விஞ்ஞானக் கழக மாணவர்கள் காந்திஜிக்கு ஒரு பண முடிப்பு அளித்தார்கள். அங்கே காந்திஜி செய்த பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன:]

“இங்கே வருவதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது” என்றார் காந்திஜி பெருமூச்சு விட்டுக் கொண்டே. அவர் மேலும் பேசியதாவது. “பேச முடியாமல் பிரமித்து நிற்கவேண்டிய என்னைப் போன்ற ஒரு பட்டிக்காட்டானுக்கு இங்கு இடமில்லை. நான் அதிகமாகப் பேச விரும்பவில்லை. இந்தப் பெரிய ஆராய்ச்சி சாலைகள், மின்சார சாதனங்கள் யாவும் லட்சக்கணக்கானவர்களை நிர்ப்பந்தப்படுத்தி வேலை வாங்கியதன் பலன்களாகும். டாடாவின் முப்பது லட்சங்கள் வெளியே எங்கிருந்தோ வந்து விடவில்லை; மைசூரின் பங்கும் இங்கிருந்துதான் வந்தது. கிராமவாசிகளைச் சந்தித்து, ‘உங்கள் பணங்களையெல்லாம் கட்டிடங்கள் யந்திரங்களுக்காகச் செலவிடுகிறோம். உங்களுக்கு இதனால் ஒன்றும் பலன் ஏற்படப் போவதில்லை. ஒருக்கால் எதிர்கால சந்ததிகளுக்கு உதவியாய் இருக்கும்’ என்று சொன்னால், அவர்களுக்கு அது புரியாது. ஆனால், அவர்களைப் பற்றி நாம் கவலைப்படுவதேயில்லை. அவர்களைப் பற்றிக் கவலைப்படுவீர்களாயின், உங்களுடைய உள்ளத்தில் அவர்கள் பெரும் இடத்தை வகிக்கிறார்கள் என்பதைக் காண்பீர்கள். இந்த உணர்ச்சியை நீங்கள் நன்கு வளர்த்துக் காப்பாற்றினால், எந்தப் பாமர மக்களின் உழைப்பினால் நீங்கள் கல்வி பெற முடிகிறதோ, அந்த மக்களின் நலன்களுக்காக உங்கள் அறிவைப் பயன்படுத்திக் கொள்ளுவீர்கள்.

"தெருவில் உள்ள சாதாரண மனிதனிடமிருந்து எதிர்பார்ப்பதைவிட உங்களிடமிருந்து இன்னும் அதிகமாக எதிர்பார்க்கிறேன். 'நம்மால் முடிந்ததைச் செய்துவிட்டோம். இனி டென்னிஸ், பிலியர்ட்ஸ் ஆட்டத்திற்குப் போவோம்' என்று திருப்தியடைந்து விடாதீர்கள். ஒவ்வொரு நாளும் உங்களுக்கு ஏறிவரும் பெரிய கடன் சுமையைப் பற்றி அந்த விளையாட்டுக் கூடங்களில் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் எனக்கு அளித்த பண முடிப்புக்கு நன்றி செலுத்துகிறேன். என்னுடைய பிரார்த்தனையை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு அதைச் செயலில் நடத்திக் காட்டுங்கள். ஏழைப் பெண்கள் உங்களுக்காகத் தயாரிக்கும் துணிகளை அணிந்து கொள்ள பயப்படாதீர்கள். கதர் அணிந்து கொண்டால், முதலாளி வேலையிலிருந்து போகச் சொல்லிவிடுவாரோ என்று பயப்படாதீர்கள். நீங்கள் மனிதர்களாக வாழ வேண்டும். உங்களுடைய நம்பிக்கைகளைக் கைவிடாமல் தலை நிமிர்ந்து நிற்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன். வாயில்லாப் பூச்சிகளான மக்களிடம் உங்களுக்குள்ள அன்பும், ஆர்வமும், செல்வ வேட்டையில் அமுங்கிவிடாமல் இருக்கட்டும். உங்களுடைய கண்டுபிடிப்புகளெல்லாம், ஏழைகளின் நன்மைக்காக இருப்பவைகளாக இருந்தாலொழிய, ராஜகோபாலாச்சாரியார் வேடிக்கையாகச் சொன்னது போல், உங்களுடைய தொழிற்சாலைகளுக்கும், சைத்தானின் தொழிற்சாலைகளுக்கும் வேற்றுமை இராமற்போகும்.

—'எங் இந்தியா' – 21—7—1927

# 7

# பணிவு அவசியம்

[கராச்சி மாணவர்களின் கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரம் கீழே கொடுக்கப்பட்டுளது :]

மாணவர்கள் முதலில் கற்றுக் கொள்ள வேண்டியது பணிவேயாகும். அது இல்லாமல், அவர்கள் தமது படிப்பை நன்கு பயன்படுத்திக் கொள்ள முடியாது. அவர்கள் பெரிய பட்டங்களைப் பெறலாம், பெரிய பதவிகள் பெறலாம். ஆனால், அவர்கள் தம்முடைய அறிவை மனிதர்களுக்குச் சேவை செய்யப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினால், பணிவு மிகவும் அவசியமாகும். அவர்களிடையே கெட்டிக்கார மாணவர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், வெகு காலமாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் இந்திய கிராமவாசிகளின் நலன்களுக்காக இருப்பவர் ஒருவருமில்லை. மனிதனின் அறிவும், ஆன்மிக சக்தியும் சேவைக்காகத்தான் இருக்கின்றன. தன்னுடைய ஜீவனோபாயத்தைத் தேடுவதற்கு மனிதன் தன்னுடைய கைகளையும், கால்களையும் உப

யோகித்துக் கொள்ள வேண்டும் என்பதே உலகம் பூராவிலும் உள்ள லட்சியமாகும். புராதன காலங்களில் சட்ட ஆலோசனை கூறுபவர்கள், தம்மிடம் யோசனை கேட்க வருபவர்களிடம் கட்டணம் வாங்குவது கிடையாது. இப்போது கூட பாரிஸ்டர்கள் தமது கட்டணங்களை வசூலிப்பதற்குத் தமது கட்சிக்காரர்கள் மீது வழக்கு போட முடியாது. மாணவர்கள் தம் நாட்டுக்குச் சேவை செய்ய விரும்பினால், கானமயிலாடக் கண்டிருந்த வான் கோழியைப் போல், அவர்கள் துரைமார்களைப் பின்பற்றக் கூடாது. இந்த நாட்டில் ஒருவருடைய சராசரி வருட வருமானம் நாற்பது ரூபாய்தான் என்று லார்டு கர்ஸானே சொல்லியிருக்கிறார். அத்தகைய ஒரு நாட்டுக்கு நாம் சேவை செய்ய வேண்டியிருக்கிறது என்பதை மாணவர்கள் அறிய வேண்டும். ஐரோப்பிய மோஸ்தரில் படாடோபமாக வாழவேண்டும் என்ற ஆசைகளையெல்லாம் விட்டுவிட்டு, முரட்டுக் கதர்த் துணியுடன் அவர்கள் திருப்தியடைவதாயிருந்தால்தான் இந்தச் சேவையை அவர்கள் செய்ய முடியும். தமக்கு மாமனாராக வரப்போகிறவரிடமிருந்து பெரும் தொகை வரதட்சிணை வாங்குவதற்கும், பண்பாடு உள்ளவர்கள் என்ற முறையில் அவர்கள் வெட்கப்பட வேண்டும்.

—'ஹரிஜன்' – 27—7—1934

# 8

# கொடிகளும் பள்ளிக்கூடங்களும்

பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் கொடிகள் பறக்கவிடுவதைப்பற்றி எனக்கு இரண்டு கடிதங்கள் வந்திருக்கின்றன. சில பையன்கள் காங்கிரஸ் கொடியை ஏற்றுகிறார்கள்; ஆகையால், வேறு சிலர் லீக் கொடியை ஏற்றுகிறார்கள். இருவர் செய்வதுமே தவறாகும். காங்கிரஸ் கொடியை ஏற்றியதிலிருந்துதான் விஷமம் ஆரம்பமாயிற்று என்று எனது நிருபர்கள் கூறுகிறார்கள். இரு கொடிகளையுமே அனுமதித்திருந்தால் கூட, எதுவும் ஏற்பட்டிராது. இந்த மாதிரி விஷயங்களில் மாணவர்கள் தாமாக முன்னின்று ஒன்றும் செய்யக் கூடாது. கட்டிடங்கள் அதிகாரிகளுக்குச் சொந்தமானவை. தமது கட்டிடங்களில் எந்தக் கொடியைப் பறக்க விடலாம், எதைப் பறக்கவிடக் கூடாது என்பதை அவர்கள் முடிவு செய்ய வேண்டும். பையன்கள் தம் விருப்பப்படி நடந்து கொள்ள ஆரம்பித்துவிட்டால் குழப்பம்தான் ஏற்படும்; அத்துடன் மண்டைகளும் உடையலாம். இது மிகவும் மட்ட ரகமானதாக இருக்கும். இதனால் யாருக்கும் எவ்வித நன்மையும் ஏற்படாது. பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும் வகுப்பு வேற்றுமைகளைத் தீர்க்கும் ஸ்தாபனங்களாக இருக்க வேண்டும்; அவற்றை வளர்ப்பவைகளாக இருக்கக் கூடாது. பையன்களும்,

பெண்களும் தம்முடைய பள்ளிக்கூட நாட்களில் கட்டுப்பாட்டை வளர்த்துக் கொள்ளாவிட்டால், அவர்களுடைய கல்விக்காகச் செலவிடப்படும் பணமும், நேரமும் தேசத்திற்கு நஷ்டமேயாகும். லாகூர் சம்பவத்தில் ஒரே ஒரு நல்ல அம்சம்தான் இருக்கிறது. மௌலானா அபுல் கலாம் ஆஜாத் உடனடியாகத் தலையிட்டு, காங்கிரஸ் கொடியைப் பையன்கள் உயர்த்தியது தவறு என்று தீர்ப்பு அளித்ததுதான் அந்த நல்ல அம்சமாகும்.

சேவாகிராமம், 11—2—46 'ஹரிஜன்' – 17—2—1946

# 9

# மாணவர்களும் வேலை நிறுத்தங்களும்

பெங்களூரிலிருந்து கல்லூரி மாணவர் ஒருவர் பின் வருமாறு எழுதுகிறார் :

" 'ஹரிஜன்' பத்திரிகையில் நீங்கள் எழுதியிருந்த கட்டுரையைப் படித்தேன். அந்தமான் தினம் போன்ற வேலை நிறுத்தங்களில் மாணவர்கள் கலந்து கொள்ளுவது பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்."

மாணவர்களின் பேச்சுரிமை, நடமாட்ட உரிமை போன்றவைகளுக்குள்ள கட்டுப்பாடுகளை நீக்கவேண்டுமென்று நான் கோரியிருக்கிறேன். ஆனால், அரசியல் வேலை நிறுத்தங்கள், ஆர்ப்பாட்டங்கள் போன்றவைகளை நான் ஆதரிக்க முடியவில்லை. மாணவர்களுக்கு நிறைய பேச்சு சுதந்திரமும், அபிப்பிராய சுதந்திரமும் இருக்கவேண்டும். அவர்களுக்குப் பிடித்த எந்த அரசியல் கட்சியினிடமும் அவர்கள் பகிரங்கமாக அனுதாபம் தெரிவிக்கலாம். ஆனால், அவர்கள் படித்துக் கொண்டிருக்கும்போது அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபடும் சுதந்திரம் இருக்கக்கூடாது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். ஒரு மாணவன் தீவிரமான அரசியலில் ஈடுபட்டுக்கொண்டு, அதே சமயத்தில் தன் படிப்பையும் கவனிக்க முடியாது. எனினும், பெரிய தேசீய எழுச்சிகள் ஏற்படும் காலங்களில், இப்படித்தான் நடக்க வேண்டும் என்று திட்டவட்டமாக எதையும் விதிக்க முடியாது.

உண்மையில், இந்த நிருபர் எழுப்பியுள்ளது போன்ற கேள்வி காங்கிரஸ் மாகாணங்களில் எழ முடியாது. எந்த மாணவரும் ஏற்றுக் கொள்ள முடியாத கட்டுப்பாடு எதுவும் அங்கே இருக்க முடியாது. அவர்களில் பெரும்பாலோர் காங்கிரஸ் மனப்பான்மையுள்ளவர்களாகவே இருப்பார்கள். காங்கிரஸ் மந்திரிகளுக்கு தரும சங்கடம் விளைவிக்கக் கூடிய எதையும் அவர்கள் செய்யக் கூடாது. அவர்கள் வேலை நிறுத்தம் செய்

வதாயிருந்தால், மந்திரிகள் அப்படிச் செய்யும்படி சொல்ல வேண்டும். காங்கிரஸ் பதவியில் இல்லாமலிருந்தாலொழிய அல்லது அப்போதுள்ள சர்க்கார் மீது காங்கிரஸ் ஒரு சாத்விகப் போராட்டம் நடத்துவதாயிருந்தாலொழிய, மாணவர்களை வேலை நிறுத்தம் செய்யும்படி காங்கிரஸ் மந்திரிகள் சொல்ல முடியாது. அப்போது கூட, மாணவர்கள் தமது படிப்பை நிறுத்திவிட்டு வேலை நிறுத்தம் செய்ய வேண்டுமென்று முதலிலேயே அவர்களை அழைப்பது, நாம் சக்தியற்றுப் போய்விட்டோம் என்று ஒப்புக் கொள்ளுவது போலாகும். வேலை நிறுத்தங்கள் போன்ற ஆர்ப் பாட்டங்களுக்கு மக்கள் பொதுவாக காங்கிரசுக்கு ஆதரவு கொடுத்தால், கடைசிவரையில் மாணவர்களைப் பேசாமல் விட்டு விட வேண்டும். சென்ற யுத்தத்தின்போது, முதலில் மாணவர் களை அழைக்கவில்லை; கடைசியில்தான் அழைத்தார்கள். அப்போதும் கூடக் கல்லூரி மாணவர்கள் மட்டுமே அழைக்கப்பட் டார்கள் என்பதே என்னுடைய ஞாபகம். ஒரு பள்ளிக்கூட ஆசிரியரின் கடிதத்திற்கு செப்டம்பர் 18வ 'ஹரிஜன்' பத்திரிகை யில் நான் எழுதியிருந்த குறிப்பை இந்த நிருபர் திரும்பப் படிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். மாணவர்கள், ஆசிரியர்களின் அரசியல் உரிமைபற்றி அதில் என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறேன்.

ஆனல், அது சம்பந்தமாக மற்றெரு நிருபர் பின் வருமாறு எழுதியிருக்கிறர்:

"சம்பளம் பெறும் சர்க்கார் அதிகாரிகள், ஆசிரியர்கள், மற்றும் இதரர் கள் அரசியலில் கலந்து கொள்ள அனுமதித்தோமானல், அது நரகமாகி விடும். சர்க்காரின் கொள்கைகளை நிறைவேற்ற வேண்டியவர்கள் அதிகாரிகள்; அந்தக் கொள்கைகளைப் பற்றி சர்க்கார் அதிகாரிகளே விவாதிக்க ஆரம் பித்துவிட்டால், சர்க்காரையே நடத்த முடியாது. தேசீய நம்பிக்கைகள், அபி லாஷைகள், தேசபக்தி உணர்ச்சிகளுக்கு முழுவாய்ப்பு இருக்க வேண்டு மென்று நீங்கள் விரும்புவது சரிதான். ஆனல், உங்களுடைய நிலைமையை நீங்கள் நன்ருகத் தெளிவு படுத்தினலொழிய உங்களுடைய கட்டுரை தவருக அர்த்தம் செய்து கொள்ளப்படுமென்று அஞ்சுகிறேன்."

என்னுடைய நிலைமை தெளிவானது என்றே நான் நினைத்துக் கொண்டிருந்தேன். தேசீய சர்க்கார் இருக்குமிடங்களில், சர்க்கா ருக்கும், மாணவர்களுக்கும், அதிகாரிகளுக்குமிடையே முரண் பாடு ஏற்படுவது அரிது. கட்டுப்பாடின்மை எதுவும் கூடாது என்பதை அதில் எச்சரித்திருக்கிறேன். காங்கிரஸ் மந்திரிகள் மக்களிடையேயிருந்து வந்தவர்கள். அவர்களிடம் எந்த ரகசிய மும் கிடையாது. மாணவர்களின் மனப்பான்மை உள்பட எல்லாப் பொது நடவடிக்கைகளுடன் அவர்களுக்குத் தொடர்பு இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் முழு உதவியும் அவர்களுக்கு இருக்கிறது. மக்களின் விருப்பத்தை நிறைவேற்றும் கருவி என்ற முறையில் சட்டம், போலீஸ், ராணுவம் எல்லாவற்றையும்விட அது அதிக

மானது. அந்த ஸ்தாபனத்தின் பக்க பலம் இல்லாதவர்கள், மருந்து தீர்ந்து போன குழாய்க்கு ஒப்பானவர்கள் ஆவர். காங்கிரஸின் பக்கபலம் உள்ள மந்திரிகளுக்கு சட்டம், போலீஸ், ராணுவம் முதலியவைகளெல்லாம் உபயோகமற்ற பந்தங்கள் என்றே சொல்லலாம். காங்கிரஸ் ஸ்தாபனம் கட்டுப்பாடே உருவானது. ஆகையால், காங்கிரஸ் பதவியிலிருக்கும்போது, எல்லா இடங்களிலும் தன்னிச்சையான கட்டுப்பாடு இருக்க வேண்டும்; நிர்ப்பந்தமான கட்டுப்பாடு கூடாது.

—'ஹரிஜன்' – 2—10—1937

# 10

# பகிஷ்காரமும் மாணவர்களும்

ஒரு கல்லூரியின் தலைமை ஆசிரியர் பின் வருமாறு எழுதுகிறார்:

"பகிஷ்கார இயக்கத்தை நடத்துபவர்கள் மாணவர்களையும் அதற்குள் இழுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அரசியல் பிரசாரத்தில் மாணவர்கள் எடுத்துக் கொள்ளும் பங்கிற்கு யாரும் எந்த மதிப்பும் கொடுக்கப் போவதில்லை என்பது வெளிப்படை. மாணவர்கள் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விட்டுவிட்டு ஒரு ஆர்ப்பாட்டத்தில் சேர்ந்தால், அங்குள்ள போக்கிரிகளுடன் சேரவேண்டியிருக்கிறது; அந்தப் போக்கிரிகளின் அக்கிரமங்களுக்கெல்லாம் பொறுப்பேற்க வேண்டியிருக்கிறது. பல சமயங்களில் போலீஸ்காரர்களின் அடியை முதலில் அவர்களே வாங்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது. அத்துடன் பள்ளி, கல்லூரி அதிகாரிகளின் கோபத்திற்குள்ளாகி, தண்டனையையும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அவர்களுடைய கார்டியன்கள் மேற்கொண்டு படிப்புக்குப் பணம் கொடுக்க முடியாதென்று மறுத்துவிடக்கூடும். இதனால் அவர்களுடைய வாழ்க்கையே நாசமாகிவிடும். விஷய அறிவில்லாத விவசாயிகளுக்கு அறிவூட்டுவது, விடுமுறைக் காலங்களில் சுகாதார அறிவைப் பரப்புவது போன்ற உருப்படியான வேலைகளில் மாணவர்கள் கலந்து கொள்ளுவதில் அர்த்தமிருக்கிறது. ஆனால் தங்களுடைய பெற்றோர்களையும், ஆசிரியர்களையுமே மீறி, ஆட்சேபகரமான பேர்வழிகளுடன் தெருக்களில் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டு, சட்டம் அமைதியைக் குலைக்க உதவி செய்வதென்பது வருந்தத்தக்க காட்சியேயாகும். தங்களுடைய ஆர்ப்பாட்டம் இன்னும் பலன் அளிக்கத்தக்கதாக இருக்கவேண்டும் என்பதற்காக மாணவர்களைத் தம்முடைய நியாயமான வேலைகளிலிருந்து இழுக்க வேண்டாம் என்று அரசியல்வாதிகளைக் கேட்டுக் கொள்ளுவீர்களா? உண்மையில், இதன் மூலம் தம்முடைய ஆர்ப்பாட்டத்தின் மதிப்பைத்தான் அவர்கள் குறைத்துக் கொள்ளுகிறார்கள். ஏனெனில், இதெல்லாம் விஷயம் தெரியாத பையன்கள், சுயநலமிகள், முட்டாள்களான கிளர்ச்சிக்காரர்களின் வேலை என்ற பெயர் வந்துவிடக் கூடும்.

"இன்றைய அரசியலைப் பற்றி மாணவர்கள் தெரிந்து கொள்ளுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. முக்கியமான இன்றைய பிரச்னைகளைப் பற்றிப் பத்திரிகைகளில் வெளியாகும் கருத்துகளை ஆசிரியர்கள் மாணவர்களின் கவனத்திற்குக் கொண்டுவருவது நல்லது; அப்பிரச்னைகளைப் பற்றி மாணவர்களே ஒரு முடிவுக்கு வருவதற்கும் ஆசிரியர்கள் கற்றுக் கொடுக்கலாம். இதை நான் வெற்றிகரமாக நடத்திப் பார்த்திருக்கிறேன். ஆண், பெண் உறவுகள் பற்றிய விஷயங்களைக் கூட மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று பெர்டிரான்ட் ரஸ்ஸலும், மற்றவர்களும் கருதுகிறார்கள். ஆகையால், மாணவர்களுக்குத் தள்ளுபடி என்று எதுவும் இருக்கலாகாது. ஆனால், மாணவர்களுக்கோ, அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளுபவர்களுக்கோ எந்த பலனும் இல்லாமல், அவர்கள் கருவிகளாக உபயோகித்துக் கொள்ளப் படுவதைத் தான் நான் ஆட்சேபிக்கிறேன்."

மாணவர் உலகம் தீவிர அரசியலில் பங்கு எடுத்துக் கொள்ளுவதை நான் கண்டனம் செய்வேன் என்ற நம்பிக்கையில் அவர் இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறார். ஆனால், அவரை ஏமாற்றமடையச் செய்ய வேண்டியிருப்பதற்கு வருந்துகிறேன். 1920-21-இல் கல்லூரிகளிலிருந்தும், பள்ளிக்கூடங்களிலிருந்தும் மாணவர்களை வெளியே கொண்டு வருவதிலும், சிறைத் தண்டனை கிடைக்கக் கூடிய அரசியல் வேலையில் ஈடுபடும்படி அவர்களை ஊக்கிவிட்டதிலும் எனக்கு முக்கிய பங்கு இருந்தது என்பது அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். தம் நாட்டின் அரசியல் இயக்கத்தில் முக்கிய பங்கு எடுத்துக் கொள்ள வேண்டியது மாணவர்களின் தெளிவான கடமை என்று நான் நினைக்கிறேன். உலகம் பூராவிலும் அப்படித்தான் செய்கிறார்கள். துரதிருஷ்டவசமாக இந்தியாவில், அரசியல் உணர்வு என்பது சமீபகாலம் வரையில் ஆங்கிலக் கல்வி பெற்ற ஒரு சிலரிடையேதான் இருந்து வந்தது. இந்த நிலைமையில் மாணவர்களின் கடமை இன்னும் அதிகமானது. சீனாவிலும், எகிப்திலும் தேசீய இயக்கங்களைச் சாத்தியமாக்கியவர்கள் மாணவர்களேயாவர். இந்தியாவும் இதற்குச் சளைக்கக் கூடாது.

மாணவர்கள் போக்கிரிகளின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு விடக் கூடாது. போக்கிரிகளைக் கட்டுப்படுத்தும் ஆற்றலை அவர்கள் பெறவேண்டும். அகிம்சை விதிகளைப் பின்பற்ற வேண்டும் என்று அந்தத் தலைமை ஆசிரியர் வற்புறுத்தி யிருக்கலாம்.

'எங் இந்தியா' – 29—3—1926

# 11

# மாணவர்களின் கஷ்டம்

**கேள்வி :** நாங்கள் புனேவைச் சேர்ந்த மாணவர்கள். எழுத்தறிவிப்பு இயக்கத்தில் நாங்கள் பங்கு எடுத்துக்கொண்டிருக்கிறோம். நாங்கள் போகும் பகுதிகளில் குடிகாரர்கள் இருக்கிறார்கள். மக்களுக்கு நாங்கள் பாடம் சொல்லிக் கொடுக்கக் கூடாதென்று அவர்கள் பயமுறுத்துகிறார்கள். நாங்கள் ஹரிஜனங்களிடையே வேலை செய்கிறோம். அவர்கள் பயப்படுகிறார்கள். இந்தக் குடிகாரர்கள்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சிலர் சொல்லுகிறார்கள். அவர்களை நம் வழிக்குத் திருப்ப உங்களுடைய முறையைக் கையாள வேண்டும் என்றும் சிலர் கூறுகிறார்கள். நாங்கள் என்ன செய்ய வேண்டும் ?

**பதில் :** நீங்கள் நல்ல வேலை செய்துகொண்டிருக்கிறீர்கள். எழுத்தறிவிப்பு போன்ற இயக்கங்கள் பெரிய சீர்திருத்தத்தின் பகுதிகளாகும். குடிகாரர்களை, நோயாளிகளைப் போல் கருதவேண்டும். அவர்கள் நமது அனுதாபத்திற்கும், சேவைக்கும் உரியவர்கள் என்று நினைக்கவேண்டும். ஆகையால், அவர்கள் நிதானமாக இருக்கும் சமயங்களில் நல்ல விதமாக அவர்களிடம் பேச வேண்டும். அவர்கள் அடித்தாலும் முகம் கோணாமல் அதை வாங்கிக் கொள்ள வேண்டும். கோர்ட்டுகளில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளக்கூடாதென்று நான் சொல்லவில்லை. ஆனால், அப்படிச் செய்வது உங்களிடம் போதிய அளவு அகிம்சை இல்லை என்பதற்கு அடையாளமாக இருக்கும். நீங்கள் உங்களுடைய இயற்கைக்கு விரோதமாகப் போகக் கூடாது. நீங்கள் நல்ல விதமாகப் பேசுவது அவர்களுக்கு ஏறவில்லையென்றால், அதற்காக உங்களுடைய வேலை தடைப்படக் கூடாது. அப்போது சட்ட பூர்வமான நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். ஆனால், அதற்கு முன்பு மனப்பூர்வமாக மற்றெல்லா முயற்சிகளையும் செய்து பார்க்கவேண்டும்.

—'ஹரிஜன்' - 8—6—1940

# 12

# இலக்கியத்தில் ஆபாசம்

திருவாங்கூரிலுள்ள ஒரு உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் பின்வருமாறு எழுதுகிறார் :

"இப்போது திருவாங்கூரின் அரசியல் நிலைமை மிகவும் மோசமாயிருப்பதை நீங்கள் அறிவீர்கள். உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் கூட வேலை

நிறுத்தம், மற்றவர்களை மறியல் செய்வது போன்ற காரியங்களில் ஈடுபடுகிறார்கள். மாணவர்களின் வேலை நிறுத்தங்களை நீங்கள் ஆதரிப்பதாக மாணவர்களிடையே எண்ணம் இருந்து வருகிறது. இந்த விஷயமாக உங்கள் அபிப்பிராயத்தை மாணவர்களுக்கு விளக்கிக் கூறும் கடிதம் ஒன்றை நீங்கள் எனக்கு அனுப்பவேண்டுமென்று விரும்புகிறேன். இது நிலைமையைத் தெளிவுபடுத்தும்.''

மிகவும் நிர்ப்பந்தமான நிலைமை ஏற்பட்டாலொழிய சாதாரணமாக மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்யக்கூடாதென்று பல சமயங்களில் நான் எழுதியிருக்கிறேன் என்று நினைக்கிறேன். அரசியல் ஆர்ப்பாட்டங்களிலும், கட்சி அரசியல்களிலும் மாணவர்கள் கலந்து கொள்ளுவது முற்றிலும் தவறு என்றே நான் கருதுகிறேன். இத்தகைய எழுச்சி மாணவர்களின் படிப்பில் தலையிடுகிறது; எதிர்கால பிரஜைகள் என்ற முறையில் அவர்கள் நல்ல வேலை செய்வதற்குத் தகுதியற்றவர்களாகவும் ஆக்கிவிடுகிறது. ஆனால், ஒரு விஷயத்தில் மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்ய வேண்டியது அவர்களுடைய கடமையாகிறது. லாகூரிலுள்ள இளைஞர்கள் க்ஷேம நல சங்கத்தின் கௌரவ காரியதரிசியிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. பல்வேறு சர்வ கலாசாலைகளில் மாணவர்களின் பாட புத்தகங்களில் மிகவும் ஆபாசமானவைகளும், காம இச்சையைத் தூண்டிவிடக் கூடியவைகளுமான பகுதிகள் இருக்கின்றன. அதற்கு அந்தக் கடிதத்தில் அவர் நிறைய உதாரணங்கள் கொடுத்திருக்கிறார். அவற்றைப் படிப்பது மிகவும் வேதனையாக இருக்கிறது. அவை அங்கீகரிக்கப்பட்ட பாட புத்தகங்களிலிருந்தே எடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன; ஆனால் அவற்றை இங்கே திருப்பிக் கொடுத்து இப்பத்திரிகையை அசுத்தமாக்க நான் விரும்பவில்லை. நான் படித்த எந்தப் புத்தகத்திலும் இம்மாதிரியான ஆபாசங்களை நான் பார்த்ததே இல்லை. பாரபட்சமில்லாமல் சமஸ்கிருதம், பாரசீகம், ஹிந்தி ஆகிய மொழிகளின் கவிதைகளிலிருந்து உதாரணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வர்தாவிலுள்ள மஹிலா ஆசிரமத்தின் பெண்கள் முதலில் இதை என் கவனத்திற்குக் கொண்டுவந்தார்கள். டேராடூன், கன்யா குருகுலத்தில் படிக்கும் என்னுடைய மருமகளும் சமீபத்தில் இதை என் கவனத்திற்குக் கொண்டுவந்தாள். அவள் படிக்காதவள் அல்ல. ஆனால் அவளுடைய பாட புத்தகங்களிலுள்ள சில ஆபாசங்களைப்போல் அவள் வேறெங்கும் பார்த்ததில்லை. ஹிந்தி சாகித்திய சம்மேளனத்தின் அதிகாரிகளுக்கு இதைப்பற்றி எழுதியிருக்கிறேன். ஆனால், பெரிய ஸ்தாபனங்கள் மெதுவாகத்தான் நகரும். ஏக போக உரிமைகள் வளர்ச்சி பெற்றுவிடுகின்றன. ஆசிரியர்கள், பிரசுரகர்த்தர்களின் சுயநலம், சீர்திருத்தங்களுக்குக் குறுக்கே நிற்கிறது. இலக்கியம் என்ற கோயில் விசேஷ பூஜை கேட்கிறது. பரீட்சையில் தோல்வியடைந்தாலும் அடைகிறேன்; நான் அந்த ஆபாசப் பகுதிகளைப் படிக்கப்போவதில்லை என்று என்னுடைய மருமகள் கூறியதை நான் ஒப்புக் கொண்டேன். **லேசான**

முறையில் அவர் செய்யும் வேலை நிறுத்தம் இது ஆயினும், அவள் சம்பந்தப்பட்டவரைவில் அது நல்ல பலனைக் கொடுக்கக் கூடியதே. இது மாணவர்களின் வேலை நிறுத்தத்திற்கு நியாய மான ஒரு காரணமாகும். அத்துடன் மட்டுமில்லை. இத்தகைய புத்தகங்கள் தம்மீது திணிக்கப்படுவதை எதிர்த்துப் புரட்சி செய்ய வேண்டியது மாணவர்களின் கடமையுமாகும்.

ஒருவர் தனக்குப் பிடிக்கும் புத்தகங்களை வாசிக்க உரிமை இருக்க வேண்டும் என்பது வேறு; ஆனால், இளைஞர்களின் மனத்தில் மிருக இச்சைகளைத் தூண்டிவிடக் கூடியதும், பின்னர் எப்படியும் அவர்கள் தெரிந்து கொள்ளப்போகிற விஷயங்களைப் பற்றி இப்போதே தகாத முறைகளில் தெரிந்து கொள்ள ஆவல் அளிக்கக் கூடியதுமான புத்தகங்களை அவர்கள் மீது திணிப்பது வேறு. பெரிய சர்வகலாசாலைகளின் முத்திரைகளுடன், சாதாரண புத்தகங்கள் என்ற வேஷத்துடன் இவை வரும்போது விஷமம் இன்னும் அதிகமாகிறது.

அவசியமான சீர்திருத்தம் ஏற்படும்படி செய்வதற்கு, மாண வர்கள் சீரானமுறையில் வேலைநிறுத்தம் செய்வதுதான் துரித மான வழியாகும். அம்மாதிரி வேலை நிறுத்தத்தில் கூச்சல், ஆர்ப்பாட்டம் எதுவுமிராது. 'ஆட்சேபகரமான புத்தகங்களைப் படித்து எழுத வேண்டியிருக்கிற பரீட்சைகளை நாங்கள் பகிஷ் காரம் செய்வோம்' என்று மாணவர்கள் அறிவித்தால் மட்டும் போதும். ஆபாசத்தை ஏற்றுக்கொள்ள முடியாதென்று ஆட்சே பிப்பது தூய உள்ளமுடைய ஒவ்வொரு மாணவரின் கடமையு மாகும்.

ஆட்சேபகரமான புத்தகங்களையும், பகுதிகளையும் நீக்கி விடுவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுமாறு காங்கிரஸ் மந்திரி சபைகளை நான் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று சங்கம் விரும்புகிறது. அவர்களை மட்டுமில்லாமல், எல்லா மாகாணங்களிலுமுள்ள கல்வி மந்திரிகளையும் அவ்வாறே கேட்டுக் கொள்ளுகிறேன். மாணவர்களின் மனம் சரியான முறையில் உருவாகவேண்டும் என்பதில் எல்லோருக்கும்தான் அக்கறை உண்டு.

—'ஹரிஜன்' – 15—10—1938

# 13

# ஆரிய சமாஜமும் ஆபாச இலக்கியமும்

தனக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ள சில புத்தகங்களில் ஆபாசமான பகுதிகள் காணப்படுவதாக கன்யா குருகுலத்தில் படிக்கும் எனது மருமகள் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள் அல்லவா? இதைப் பற்றி 'ஆபாச இலக்கியம்' என்ற கட்டுரையில் நான் குறிப்பிட்டிருந்தேன். டேராடூன் கன்யா குருகுலத்தைச் சேர்ந்த ஸ்ரீ. தரும தேவ சாஸ்திரியும், கங்டி குருகுலத்தைச் சேர்ந்த ஆசாரிய தேவசர்ம அபயாவும் எனக்கு எழுதியிருக்கிறார்கள். இம்மாதிரி புத்தகங்களை ஆரிய சமாஜ அதிகாரிகள் ஆதரிக்கிறார்கள் என்பதே அக்கட்டுரையின் அர்த்தம் என்று சிலர் வியாக்கியானம் செய்வதாக அவர்கள் கூறுகிறார்கள். இரு நண்பர்களும் அந்த வியாக்கியானத்தை பலமாக மறுத்திருக்கிறார்கள். இந்த விஷயத்தில் குருகுல நிர்வாகிகள் மிகவும் கண்காணிப்புடன் இருக்கிறார்கள் என்றும், காளிதாஸனின் 'சாகுந்தலம்' நாடகத்தில் கூட சில பகுதிகளை நீக்கிய பிறகே அதை மாணவர்களுக்கு அனுமதித்ததாகவும் ஆசாரிய தேவசர்ம அபயா கூறுகிறார். ஆனால், நடந்தது இதுதான். சாகித்திய சம்மேளனப் பரீட்சைகளில் இம்மாதிரி புத்தகங்களை அனுமதிக்கிறார்கள். சமீபகாலமாக குருகுல நிர்வாகிகள் தமது மாணவர்களை இந்தப் பரீட்சைகளுக்கு அனுமதித்திருக்கிறார்கள். குருகுல நிர்வாகிகள் இந்த விஷயத்தை சம்மேளன அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டுவந்திருப்பதாகவும், ஆட்சேபகரமான பகுதிகள் உள்ள புத்தகங்களை வாபஸ் பெற்றுவிடுமாறு கேட்டிருப்பதாகவும் அறிகிறேன். மாணவர்களின் பாடபுத்தகங்களில் ஆபாசமான பகுதிகள் இருப்பதை எதிர்த்து அவர்கள் நடத்தும் போராட்டம் வெற்றி பெறும் வரையில், தம் முயற்சிகளை அவர்கள் நிறுத்த மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 12—11—1938

பகுதி ஒன்பது

# மொழிப் பிரச்னை

## 1

## போதனு மொழியும் அந்நிய மொழியும்

அந்நிய மொழியில் பாடங்கள் சொல்லிக்கொடுக்கப்படுவதால் நமது குழந்தைகளுக்கு மூளைச் சோர்வு ஏற்பட்டிருக்கிறது. அது அவர்களுக்கு அளவுக்கு மீறிய நிர்ப்பந்தத்தையும் விளைவித்திருக்கிறது; எல்லாவற்றையும் மனப்பாடம் பண்ணுபவர்களாகவும், சுயமாகச் சிந்திக்கவோ, செயல்படவோ தகுதியற்றவர்களாகவும் செய்துவிட்டது; தாம் பெறும் அறிவை மக்களுக்கோ, தம் குடும்பத்தினருக்கோ திருப்பிச் சொல்லிக்கொடுக்க முடியாதபடியும் செய்துவிட்டது. அந்நிய போதனு மொழி காரணமாக நமது குழந்தைகள் தம் சொந்த நாட்டிலேயே அந்நியர்கள் போலாகிவிட்டார்கள். இப்போதுள்ள முறையின் மிகவும் விபரீதமான அம்சம் இதுதான். அந்நிய போதனுமொழி, நமது தேச மொழிகளின் வளர்ச்சியைத் தடுத்துவிட்டது. ஒரு கொடுங்கோலனின் அதிகாரங்கள் எனக்கு இருந்தால், நமது பையன்களுக்கும், பெண்களுக்கும் ஒரு அந்நிய மொழியின் மூலம் கல்வி போதிக்கப்படுவதை இன்றே நிறுத்திவிடுவேன். இந்த முறையை உடனே மாற்றிவிட வேண்டுமென்றும், இல்லாவிட்டால் ஆசிரியர்களும், பேராசிரியர்களும் வேலையிலிருந்து நீக்கப்படுவார்களென்றும் உத்தரவிடுவேன். பாட புத்தகங்கள் தயாரிக்கப்படும் வரையில் நான் காத்துக் கொண்டிருக்கமாட்டேன். மாறுதலைத் தொடர்ந்து அவை தாமாக வரும். இது உடனடியாகத் தீர்வு காணப்பட வேண்டிய ஒரு தீமையாகும்.

—'எங் இந்தியா' – 1—9—1921

## 2

## ருசு தேவையில்லை

நாம், கல்வி என்று பெற்றதெல்லாம் ஆங்கிலத்தின் மூலம் தான். இல்லாவிட்டால், ஒரு நாட்டின் இளைஞர்கள் தம் நாட்டின் தன்மையைக் காப்பாற்ற வேண்டுமானுல் மிகவும் உயர்தரக் கல்வியைக்கூடத் தம் சொந்த மொழிகளிலேயேதான் பெற

வேண்டும் என்ற வெட்டவெளிச்சமான உண்மையை ருசுப்பித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இராது. மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு மொழியின் மூலம் இளைஞர்கள் கல்வி பயின்ருலொழிய, ஒரு நாட்டின் இளைஞர்கள் தம் நாட்டிலுள்ள மக்களுடன் உண்மையான தொடர்பு கொள்ள முடியாது என்பதற்கு ருசுவே தேவையில்லை. ஆயிரக்கணக்கான இளைஞர்கள் ஒரு அந்நிய மொழியையும், அதனுடைய சிறப்புச் சொற்களையும் கற்றுக்கொள்ளுவதில் தங்கள் காலத்தை வீணடிக்க வேண்டியிருக்கிறது. அவர்களுடைய அன்ருட வாழ்க்கையில் இதனுல் அவர்களுக்கு ஒரு பலனும் இல்லை. இதைக் கற்றுக்கொள்ளுவதற்காக அவர்கள் தம்முடைய தாய் மொழியையும், சொந்த இலக்கியங்களையும் புறக்கணிக்க வேண்டியிருக்கிறது. இதனுல் நாட்டுக்கு ஏற்படும் மகத்தான நஷ்டத்தை யார் கணக்கிட முடியும்? ஒரு மொழி வளர்ச்சி பெற முடியாது அல்லது அதன் மூலம் சிக்கலான கருத்துகளையோ, விஞ்ஞானம் பற்றிய விஷயங்களையோ வெளியிட முடியாது என்பதைப் போன்ற அவ்வளவு பெரிய மூடநம்பிக்கை வேறு எதுவும் கிடையாது. ஒரு மொழியைப் பேசுபவர்களின் தன்மை என்ன என்பதையே அந்த மொழி பிரதிபலிக்கிறது. அந்நியர் ஆட்சியினுல் எத்தனையோ தீமைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனுல், அந்நிய மொழியின் மூலம் கல்வி போதிப்பதைத் திணித்ததுதான் மிகப் பெரிய தீமை என்று சரித்திரம் கூறும். மக்களிடமிருந்து அவர்களை அது ஒதுக்கி வைத்துவிட்டது; அது நாட்டின் சக்தியை உறிஞ்சிவிட்டது; அத்துடன், கல்வியை அனுவசியமாக மிகவும் அதிகப் பணச் செலவுள்ளதாக்கிவிட்டது. இதை விடாப்பிடியாகத் தொடர்ந்து நடத்திக்கொண்டேயிருந்தால், நாட்டின் ஆன்மாவையே அது பறித்துவிடும். ஆகையால், கல்வி பெற்ற இந்தியா எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக அந்நிய மொழி போதனை என்ற மாயையிலிருந்து விடுதலை பெறுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்களுக்கும், மக்களுக்கும் நன்மையாகும்.

—'எங் இந்தியா' – 5—7—1928

# 3

# தேசீய மொழியும் லிபியும்

போதனு மொழி விஷயத்தில் கவனம் செலுத்தியது போல், ஒரு தேசீய மொழி விஷயத்திலும் நாம் கவனம் செலுத்த வேண்டும். ஆங்கிலம் தேசீய மொழியாக வேண்டுமானுல், அதைக் கட்டாய பாடமாக்க வேண்டும். ஆங்கிலம் தேசீய மொழியாக முடியுமா? இந்தக் கேள்வியை எழுப்புவது கூட

அறியாமையைக் காட்டுகிறதென்று கற்றறிந்த சில தேசபக்தர்கள் கூறுகிறார்கள். ஆங்கிலம் ஏற்கனவே அந்த ஸ்தானத்தை வகிக்கிறதென்று அவர்கள் கருதுகிறார்கள். சமீபத்தில் வைஸ்ராய் செய்த பிரசங்க மொன்றில் ஆங்கிலம் அந்த ஸ்தானத்தை வகிக்குமென்ற நம்பிக்கையை மட்டும் தெரிவித்திருக்கிறார். அவருடைய உற்சாகம் முதல் ரகத்தினரைப் போல் அவரை அவ்வளவு தூரம் இட்டுச் செல்லவில்லை. நாளுக்கு நாள் ஆங்கிலம் இன்னும் பெரிய ஸ்தானத்தை வகிக்குமென்றும், குடும்ப வட்டாரங்களிலும் அது பரவுமென்றும், கடைசியாக தேசீய மொழி என்ற அந்தஸ்தைப் பெறுமென்றும் அவர் நம்புகிறார். மேலெழுந்தவரியாகப் பார்த்தால் வைஸ்ராயின் கருத்து சரியானதுதான் என்று தோன்றும். நம்மிடையே உள்ள படித்தவர்களின் நிலைமையைப் பார்க்கும்போது, ஆங்கிலத்தை உபயோகிப்பதை நாம் நிறுத்திவிட்டால், நம்முடைய நடவடிக்கைகள் யாவுமே நின்றுவிடும் என்ற ஒரு உணர்ச்சி ஏற்படுகிறது. ஆனால், நன்கு யோசித்துப் பார்த்தால், ஆங்கிலம் ஒரு நாளும் தேசீய மொழியாக இருக்கவும் முடியாது, இருக்கவும் கூடாது என்பது விளங்கும். ஒரு தேசீய மொழிக்கு சோதனை என்ன?

1. உத்தியோக வர்க்கத்தினர் சுலபமாக கற்றுக்கொள்ளக் கூடியதாக அது இருக்க வேண்டும்.

2. இந்தியா பூராவும், மதம், வர்த்தகம், அரசியல் ஆகிய எல்லா நடவடிக்கைகளையும் அந்த மொழியின் மூலம் நடத்த முடிய வேண்டும்.

3. அது இந்தியாவிலுள்ள பெரும்பாலோர் பேசும் மொழியாக இருக்க வேண்டும்.

4. நாடு பூராவும் அதைச் சுலபமாகக் கற்றுக்கொள்ள இயல வேண்டும்.

5. இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்யும்போது பணம் அல்லது தற்காலிகமான அனுகூலங்களைக் கவனிக்கக் கூடாது.

மேலே குறிப்பிட்டுள்ள எந்த நிபந்தனையையும் ஆங்கில மொழி பூர்த்தி செய்யவில்லை. முதல் நிபந்தனைதான் கடைசியானதாக இருந்திருக்க வேண்டும். ஆயினும், வேண்டுமென்றேதான் அதற்கு நான் முதலிடம் கொடுத்திருக்கிறேன். ஏனெனில், அது ஒன்றுதான் ஆங்கிலத்திற்குப் பொருத்தமானதாயிருக்கும் போல் தோன்றுகிறது. ஆனால், இன்னும் நன்கு யோசித்துப் பார்த்தால், இப்போதுள்ள அதிகாரிகளுக்குக் கூட அது சுலபமான மொழியாக இல்லை என்பது புரியும். நமது நிர்வாக அமைப்பில், ஆங்கில அதிகாரிகளின் எண்ணிக்கை வரவரக் குறைந்து கொண்டேயிருக்கும் என்றே கருத வேண்டும். இறுதியில், வைஸ்ராயும், மற்றும் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலரும் மட்டுமே ஆங்கிலேயர்களாக இருப்பார்கள். இப்

போது பெரும்பான்மையோர் இந்தியர்களாகவே இருக்கிருர்கள். அவர்களுடைய எண்ணிக்கை இன்னும் அதிகமாக வேண்டும்.

அவர்களுக்கு எந்த இந்திய மொழியையும் விட ஆங்கிலம் கற்றுக்கொள்ளுவதுதான் அதிகக் கஷ்டம் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுவார்கள். இரண்டாவது நிபந்தனையைப் பார்ப்போம். பொது மக்கள் யாவரும் ஆங்கிலத்தில் பேச முடிந்தால் ஒழிய, அந்த மொழியின் மூலம் மத சம்பந்தமான நடவடிக்கைகளை நடத்துவதென்பது அசாத்தியமாகும். அந்த அளவுக்கு மக்களிடையே ஆங்கிலம் பரவுவதும் அசாத்தியமானதாகவே தோன்றுகிறது.

மூன்ருவது நிபந்தனையையும் ஆங்கிலம் திருப்தி செய்ய முடியாது. ஏனெனில், இந்தியாவிலுள்ள பெரும்பான்மையினர் அந்த மொழியைப் பேசவில்லை.

நாலாவது நிபந்தனையும் அப்படித்தான். ஏனெனில் அது இந்தியா பூராவும் சுலபமாகக் கற்றுக் கொள்ளக்கூடிய மொழியல்ல.

கடைசி நிபந்தனை சம்பந்தப்பட்டவரையில், இன்று ஆங்கிலத்திற்குள்ள அந்தஸ்து தற்காலிகமானதுதான். தேசீய விவகாரங்களில் ஆங்கிலத்திற்கு அவசியமே இராது என்பது தான் நிரந்தரமான நிபந்தனை. வெளி விவகாரங்களுக்கு அது நிச்சயமாக வேண்டியிருக்கும். ஆகையால், அது ராஜ தந்திரத் தேவைகளுக்கான ஒரு மொழியாயிருக்கும் என்பது வேறு விஷயம். அந்தக் காரியத்திற்கு அந்த மொழி தெரிந்திருக்க வேண்டியது அவசியமேயாகும். ஆங்கிலத்தினிடம் நமக்குப் பொருமை இல்லை. அது அளவு மீறிப் போகக் கூடாதென்றே சொல்லுகிருேம். அது வெளி விவகாரங்களுக்கான மொழியாயிருக்குமாதலால், நமது மாளவியாக்கள், சாஸ்திரியார்கள், பானர்ஜிகள் ஆகியோரை அதைக் கற்றுக் கொள்ளும்படி கட்டாயப்படுத்துவோம். இந்தியாவின் பெருமையை அவர்கள் உலகத்தின் மற்றப் பாகங்களில் விளம்பரப் படுத்துவார்கள் என்று நாம் நம்பியிருக்கலாம். ஆனல், ஆங்கிலம் இந்தியாவின் தேசீய மொழியாக இருக்க முடியாது. ஆங்கிலம் நமது மொழியாக முடியுமென்று நினைப்பதே மனிதத் தன்மையற்றது என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். அப்படியானல், அந்த ஐந்து நிபந்தனைகளையும் திருப்தி செய்யும் மொழி எது? ஹிந்தி எல்லா நிபந்தனைகளையும் திருப்தி செய்கிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

வடக்கே உள்ள ஹிந்துக்களும், முஸ்லிம்களும் பேசுவதும், தேவநாகரி அல்லது உருது லிபியில் எழுதுவதுமான மொழியைத் தான் நான் ஹிந்தி என்று குறிப்பிடுகிறேன். இந்த வியாக்கியானத்தைச் சிலர் ஆட்சேபித்திருக்கிருர்கள். ஹிந்தியும், உருதுவும் வெவ்வேறு மொழிகள் என்று கூறப்படுவது போல் தோன்றுகிறது. இது சரியான வாதமாகாது. இந்தியாவின் வடக்கு பாகங்களில் ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஒரே மொழியைத்தான் பேசு

கிறார்கள். படித்தவர்கள் தான் இதில் பாகுபாடு ஏற்படுத்தியிருக்கிறார்கள். படித்த ஹிந்துக்கள் ஹிந்தியை சமஸ்கிருத மயமாக்கி விட்டார்கள். ஆகையால், முஸ்லிம்கள் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. லக்ஷ்மணபுரியிலுள்ள முஸ்லிம்கள் தமது மொழியில் பாரசீகத்தை அதிகமாகப் புகுத்தி, ஹிந்துக்களுக்குப் புரிய முடியாமல் செய்துவிட்டார்கள். நான் வடக்கே வசித்திருக்கிறேன். ஹிந்துக்களுடனும், முஸ்லிம்களுடனும் நான் நெருங்கிப் பழகியிருக்கிறேன். எனக்கு ஹிந்தி அதிகமாகத் தெரியாதென்றாலும், அவர்களுடன் பேசுவதில் எனக்கு ஒரு கஷ்டமும் ஏற்படவில்லை. வடக்கே பேசப்படும் மொழிக்கு நீங்கள் என்ன பெயர் வேண்டுமானாலும் சொல்லுங்கள். உருது என்றாலும் ஹிந்தி என்றாலும் ஒன்றுதான். அதை உருது லிபியில் எழுதினால் அது உருதுவாயிருக்கும். அதையே தேவநாகரி லிபியில் எழுதினால் அது ஹிந்தியாக இருக்கும்.

லிபி சம்பந்தப்பட்டவரையில் ஒரு வேற்றுமை இருக்கிறது. இப்போதைக்கு முஸ்லிம் குழந்தைகள் உருது லிபியில்தான் எழுதுவார்கள்; ஹிந்துக்கள் பெரும்பாலும் தேவ நாகரியில் எழுதுவார்கள். ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் உருது லிபியை உபயோகிக்கிறார்கள். தேவநாகரி லிபி கூட அவர்களுக்குத் தெரியாது. அதனால் தான் 'பெரும்பாலும்' என்ற வார்த்தையை உபயோகித்தேன். ஆனால், ஹிந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்குமிடையே பரஸ்பரம் சந்தேகம் இல்லாத நிலைமை ஏற்படும் போது, சந்தேகத்திற்கான காரணங்கள் அகற்றப்பட்டுவிடும் போது, அதிக ஜீவனுள்ள லிபியே அதிகமாக உபயோகிக்கப்படும். ஆகவே, அது தேசீய லிபியாகிவிடும்.

இந்த ஐந்து நிபந்தனைகளையும் பூர்த்தி செய்யக் கூடிய வேறு எந்த மொழியும் கிடையாது. ஹிந்திக்கு அடுத்த படியாக வங்காளி மொழி வருகிறது. ஆனால் வங்காளிகளே வங்காளத்திற்கு வெளியே ஹிந்தியை உபயோகிக்கிறார்கள். இந்தியா பூராவிலும் ஹிந்துக்களும், முஸ்லிம் மௌல்விகளும் ஹிந்தி மொழியிலேயே மத சம்பந்தமான பிரசங்கங்களைச் செய்கிறார்கள். படிப்பு வாசனையில்லாதவர்கள் கூட அவர்கள் சொல்லுவதைப் புரிந்து கொள்ளுகிறார்கள். திராவிட நாட்டில் கூட ஹிந்தி பேசப்படுவதை நான் பார்த்திருக்கிறேன். சென்னையில் ஆங்கிலம் தெரிந்தால் போதும் என்று சொல்லுவது உண்மையல்ல. அங்கு கூட நான் ஹிந்தியை உபயோகித்திருக்கிறேன். ரயில்களில் சென்னையிலிருந்து வரும் பிரயாணிகள் ஹிந்தி பேசுவதைக் கேட்டிருக்கிறேன். இந்தியா பூராவிலும் உள்ள முஸ்லிம்கள் உருது பேசுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு மாகாணத்திலும் அவர்கள் நிறைய இருக்கிறார்கள். ஆகையால், ஹிந்திதான் தேசீய மொழியாகப் போகிறது. ராணுவத்திலுள்ள சிப்பாய்களுக்கு வேண்டிய சொற்களை ஹிந்தி அல்லது உருதுவில் தான் தயாரிக்க வேண்டியிருக்கிறது.

ஆகையால், ஹிந்தி ஒன்றுதான் தேசீய மொழியாக முடியும். சென்னையிலுள்ள படித்த வகுப்பினரிடையே இந்த விஷயத்தில் கொஞ்சம் கஷ்டம் இருக்கிறது. குஜராத், ஸிந்து, வங்காளம் முதலிய மாகாணங்களிலுள்ளவர்கள் அதைக் கற்றுக் கொள்ளுவது சுலபம். ஆனால், தமிழர்கள் விஷயம் அப்படியில்லை. அமைப்பு, இலக்கணம் ஆகியவற்றில் திராவிட மொழிகளுக்கும், சமஸ்கிருதத்திற்குமிடையே வேற்றுமை இருக்கிறது. ஆனால், இந்தக் கஷ்டம் படித்த வகுப்பினருக்கு மட்டும்தான். அவர்கள் தேச பக்தி உணர்ச்சியுடன் ஹிந்தி கற்றுக்கொள்ளப் போதிய முயற்சிகள் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்க நமக்கு உரிமையுண்டு. எதிர்காலத்தில் ஹிந்திக்கு ராஜாங்க அங்கீகாரம் கிடைக்கும்போது, மற்ற மாகாணங்களைப் போலவே சென்னையிலும் அது கட்டாய பாடமாக வைக்கப்படும். அப்போது சென்னைக்கும், மற்ற மாகாணங்களுக்குமிடையே தொடர்புகள் அதிகமாகும். திராவிட மக்களிடையே ஆங்கிலம் விரிவாகப் பரவவில்லை. ஆனால், ஹிந்தி வெகு சீக்கிரத்தில் பரவிவிடும்.

'காந்திஜியின் பிரசங்கங்கள், கட்டுரைகளி'லிருந்து–20—10—1917

## ஹிந்துஸ்தானியின் அவசியம்

நம்முடைய சோதனை வருடத்தில் ஒவ்வொரு மாணவரும் நூல் நூற்க வேண்டும் என்றும், ஹிந்துஸ்தானி கற்றுக் கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டிருந்தேன். இந்த யோசனையை ஏற்று நடந்து கொண்ட கல்கத்தா மாணவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன். ஹிந்துஸ்தானி தெரியாததால் மற்ற மாகாணங்களுடன் தொடர்பில்லாமல் துண்டிக்கப்பட்டிருப்பவை வங்காளமும், சென்னையும் தான். வேறு எந்த இந்திய மொழியையும் கற்றுக் கொள்ள வங்காளம் விரும்பவில்லை. திராவிடர்கள் ஹிந்துஸ்தானி கற்றுக்கொள்ளுவது கஷ்டமாக இருப்பதால், சென்னையில் அது முன்னேறவில்லை. சாதாரண வங்காளி ஒருவர் தினசரி மூன்று மணிநேரம் செலவிட்டால், இரண்டே மாதங்களில் ஹிந்துஸ்தானி கற்றுக் கொண்டுவிட முடியும்; திராவிட நாட்டைச் சேர்ந்தவர் அதே மாதிரி ஆறு மாதங்களில் கற்றுக் கொண்டுவிட முடியும். ஆனால், வங்காளியோ, திராவிட நாட்டுக்காரரோ அதே காலத்தில் அவ்வளவு ஆங்கிலம் கற்றுக்கொள்ள முடியாது. ஆங்கிலம் தெரிந்திருப்பது, ஆங்கிலம் தெரிந்த ஒரு சில அந்நியர்களுடன் தொடர்பு கொள்ளுவதற்குத் தான் உபயோகமாக இருக்கும். ஆனால், ஹிந்துஸ்தானி தெரிந்திருந்தால், ஏராளமான நம் நாட்டு மக்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ள முடியும். வங்காளிகளும், திராவிட நாட்டுக்காரர்களும் ஒரு அளவுக்கு ஹிந்தி கற்றுக் கொண்டு அடுத்த காங்கிரசுக்கு வருவார்கள் என்று நம்புகிறேன். மிகவும் அதிகமான பேர்கள் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு மொழியில் பேசினாலொழிய, நம்முடைய மிகப் பெரிய மகாசபை பாமர மக்களுக்கு உதாரண

*மாக விளங்க முடியாது. திராவிட நாட்டுக்ககாரர்ளின் கஷ்டம் எனக்குத் தெரிகிறது; ஆனால், தாய்நாட்டினிடம் அன்பு என்ற உணர்ச்சி உள்ளவர்களுக்கு எதுவுமே கஷ்டமில்லை.*

—'எங் இந்தியா' - 2—2—1921

## 22 கோடி மக்கள் அறிந்த மொழி

*நம்முடைய தேசீயப் பள்ளிக்கூடங்களில் நாம் பெற்றிருக்க வேண்டிய கல்வியை நீங்களும், நானும், நாமெல்லோருமே அசட்டை செய்துவிட்டோம். வங்காள இளைஞர்களோ, குஜராத்தி இளைஞர்களோ, தக்காணத்து இளைஞர்களோ மத்திய மாகாணத்திற்குச் செல்லுவதோ, ஐக்கிய மாகாணத்திற்குச் செல்லுவதோ, பஞ்சாபுக்குச் செல்லுவதோ, மற்றும் ஹிந்துஸ்தானி தவிர வேறு எதுவும் பேசாத இதர பகுதிகளுக்குச் செல்லுவதோ அசாத்தியமாகும். ஆகையால், உங்களுடைய ஒழிந்த நேரங்களில் நீங்கள் ஹிந்துஸ்தானியும் கற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். பாமர மக்களிடையே ஆங்கிலத்தைப் பொது மொழியாக்கிவிட வேண்டுமென்று நினைக்காதீர்கள். 22 கோடி இந்தியர்களுக்கு ஹிந்துஸ்தானி தெரியும்; அவர்களுக்கு வேறு எந்த மொழியும் தெரியாது. அவர்களுடைய உள்ளங்களை நீங்கள் கவரவேண்டுமானால், ஹிந்துஸ்தானி மொழி ஒன்றுதான் அதற்கு வழியாகும்.*

—'எங் இந்தியா'– 2—2—1921

## ஹிந்தி இலக்கிய வளம்

*ஹிந்தி இலக்கியத்தில் வளம் இல்லை என்று சொல்லுகிறீர்கள்; இன்றைய ஹிந்தியின் வறட்சியைப்பற்றிப் பேசுகிறீர்கள். ஆனால், துளஸிதாசரின் கவிதைகளை ஆழ்ந்து படித்தீர்களானால், உலகத்திலுள்ள மொழிகளில் அதற்கிணையான நூல் வேறு எதுவும் கிடையாது என்ற என்னுடைய கருத்தை ஒருக்கால் நீங்களும் ஒப்புக் கொள்ளுவீர்கள். அந்தப் புத்தகத்தைப்போல் வேறெந்தப் புத்தகமும் எனக்கு அவ்வளவு நம்பிக்கையை அளித்ததில்லை. எந்தப் பரிசோதனையிலும், பரீட்சையிலும் அது வெற்றி பெறும் என்றே நினைக்கிறேன். மொழி நயத்திலும் சரி, உதாரணங்களிலும் சரி, மதப்பற்றுதலிலும் சரி!*

—'எங் இந்தியா' - 9—2—1921

## ஹிந்துஸ்தானியும் தாய் மொழியும்

*தேசீய மொழியைப்பற்றிப் பிரசாரம் செய்வது, மாகாண மொழிகளின் நலன்களுக்கு முரணானதாக இருக்குமென அபிப்பிராயம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அறியாமைதான் அந்த பயத்திற்கு மூல காரணம். மாகாண மொழிகள் தாம் தேசீய*

மொழி என்ற மாளிகைக்கு அஸ்திவாரங்களாகும். இவை ஒன்றுக்கொன்று உதவியே யொழிய, போட்டியல்ல.

—'ஹரிஜன்' - 18—8—1946

## ஒரு பொது லிபி

நாம் ஒரே சமுதாயத்தினர் என்று சொல்லிக் கொள்ளுவதை ருசுப்பிக்க வேண்டுமானால், நம்மிடையே பொதுவான பல அம்சங்கள் இருக்கவேண்டும். நம்மிடையே எவ்வளவோ பிரிவினைகள் இருந்தபோதிலும், பொதுவான கலாசாரம் ஒன்றிருக்கிறது; பொதுவான பிரதிகூலங்கள் இருக்கின்றன. நாம் அணியும் ஆடைகளுக்குப் பொதுவான ஒரு துணி மிகவும் அவசியம் என்பதையும் நான் காட்ட முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். நமக்குப் பொதுவான ஒரு மொழியும் வேண்டும். ஏற்கனவே உள்ள நமது நாட்டு மொழிகளை அமுக்கி வைப்பதன் மூலம் அல்ல, அவற்றுடன் சேர்ந்து அந்த மொழி இருக்க வேண்டும். ஹிந்தியும், உருதுவும் கலந்த ஹிந்துஸ்தானி தான் அந்த மொழியாய் இருக்க வேண்டும் என்று பொதுவாக ஒப்புக் கொள்ளப்படுகிறது. நம்முடைய நாட்டு மொழிகளுக்குள்ள பல்வேறு லிபிகளே இதற்குப் பெரும் தடைகளாக இருக்கின்றன. பொதுவான உருது லிபியை நாம் ஏற்றுக்கொள்ள முடிந்தால், இந்தக் கனவை நனவாக்குவதற்குக் குறுக்கே நிற்கும் ஒரு பெரிய இடையூறை நீக்கி விடுவது சாத்தியமாக இருக்கும்.

பல லிபிகள் இருப்பது பலவிதங்களிலும் சங்கடமானது. அறிவு பெறுவதற்கு இது பெரும் தடையாய் இருக்கிறது. ஆரிய மொழிகளிடையே பொதுவான பல அம்சங்கள் இருக்கின்றன. ரவீந்திரநாத் தாகூரின் இணையற்ற சிருஷ்டிகள் தேவ நாகரி லிபியில் அச்சடிக்கப்பட்டிருந்தால், சிறிதளவு சமஸ்கிருதம் தெரிந்த பெரும்பாலோர் அதைப் புரிந்து கொள்ளுவதில் கஷ்டமே இராது. ஆனால், வங்காளி லிபி வங்காளிகளல்லாதாருக்குத் தெரியாது. அதே மாதிரி, வங்காளிகளுக்கு தேவ நாகரி லிபி தெரிந்திருந்தால், துளஸிதாசரின் அற்புதமான ஆன்மிகத் தன்மை வாய்ந்த எழுத்துகளையும், மற்றும் பல ஹிந்துஸ்தானி ஆசிரியர்களின் எழுத்துகளையும் அவர்கள் அனுபவிக்க முடியும். 1905-இல் நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்தபோது, கல்கத்தாவில் தலைமைக் காரியாலயம் உள்ள ஒரு சங்கத்தினிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. இந்தியா பூராவுக்கும் ஒரு பொதுவான லிபியை ஏற்படுத்த வேண்டும் என்பதே அந்தச் சங்கத்தின் நோக்கமாகும். அந்தச் சங்கத்தின் நடவடிக்கைகளைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால், அவர்களுடைய நோக்கம் போற்றத் தக்கது. ஒரு சில ஊழியர்களாக இருந்தாலும் உண்மையாக உழைப்பவர்களாயிருந்தால், இத்

துறையில் எவ்வளவோ செய்ய முடியும். இந்தியா பூராவுக்கும் ஒரு பொதுவான லிபி என்பது மிகவும் தொலைவிலுள்ள ஒரு லட்சியமாகும். மாகாணப் பற்றுதல் இருப்பது நல்லதுதான். ஆனால், தன் மாகாணத்தைத் தவிர வேறொன்றும் இல்லையென்ற பற்றுதல் தீங்கை விளைவிப்பதாகும். குஜராத்தில் பள்ளிக்கூடங்களில் கல்வி பயின்ற ஒவ்வொரு குழந்தைக்கும் குஜராத்தி, சமஸ்கிருதம் ஆகிய இரு லிபிகளும் தெரியும். தேவ நாகரிதான் பொதுவான லிபியாக இருக்கவேண்டும் என்பதற்கு ருசு எதுவும் அவசியம் இல்லையென்றே நினைக்கிறேன். இந்தியாவில் பெரும் பகுதியினருக்கு இந்த லிபி தெரியும் என்பதே முக்கியம். வளர்ச்சி பெருதவைகளும், எழுதப்படாதவைகளுமான எல்லா மொழிகளும் தியாகம் செய்யப்பட்டு, ஹிந்துஸ்தானி என்ற பெரிய பிரவாகத்துடன் இணைக்கப்பட வேண்டும் என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். பொது மொழியொன்றை நாம் வளர்க்க வேண்டும். பொது லிபியுடன்தான் இது ஆரம்பமாக வேண்டும். என் விருப்பப்படி விடுவதாயிருந்தால், மாகாணத்தில் வழக்கிலுள்ள லிபியைத் தவிர தேவநாகரி, உருது லிபிகளையும் கட்டாயமாகக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று விதிப்பேன். பல்வேறு மொழிகளிலுள்ள முக்கியமான புத்தகங்களை அப்படியே ஹிந்துஸ்தானியில் மொழி பெயர்த்து, தேவ நாகரி லிபியிலும் வெளியிடுவேன்.

—'எங் இந்தியா' - 27—8—1925

## ரோமன் லிபி

உருது, தேவநாகரி லிபிகளுக்குப் பதிலாக ரோமன் லிபியை ஏற்றுக்கொள்ளலாம் என்ற யோசனை எவ்வளவு கவர்ச்சியாக இருந்தாலும், இது மகத்தான ஒரு தவறாகும் என்றே நான் கருதுகிறேன். இப்படிச் செய்வது ஒரு தீமையிலிருந்து மற்றொரு தீமையில் விழுவதாகும்.

—'ஹரிஜன்' - 23—8—1947

# 4

# மற்ற மொழிகள்

பண்பாடு உள்ள ஒவ்வொரு இந்தியரும் தம்முடைய மாகாண மொழியைத் தவிர, ஹிந்துவாயிருந்தால் சமஸ்கிருதமும், முஸ்லிமாயிருந்தால் அரபு மொழியும் அறிந்திருக்க வேண்டும்; பார்ஸியாக இருந்தால் பாரசீக மொழியை அறிந்திருக்க வேண்டும். எல்லோரும் ஹிந்தி அறிந்திருக்க வேண்டும். சில ஹிந்துக்கள் அரபு மொழியும், பாரசீகமும் அறிந்திருக்கவேண்டும்; சில முஸ்லிம்களும், பார்ஸிகளும் சமஸ்கிருதம் அறிந்திருக்க

வேண்டும். வட இந்தியாவிலும், மேற்கு இந்தியாவிலும் உள்ள பலர் தமிழ் கற்றுக் கொள்ள வேண்டும். ஹிந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்குமிடையே இன்னும் அதிகத் தொடர்பு ஏற்படுவதற்கு, இரு லிபிகளையும் அறிந்திருக்க வேண்டியது அவசியமாகும்.

—'ஹிந்த் ஸ்வராஜ்' (1908)

## சமஸ்கிருத அறிவு அவசியம்

அந்தக் காலத்தில் நான் கொஞ்சம் சமஸ்கிருதம் கற்றுக் கொண்டேன். இல்லாவிட்டால் நம்முடைய புராணங்களில் நான் அக்கறை எடுத்துக் கொள்ளுவது கஷ்டமாயிருக்கும். அந்த மொழியை இன்னும் நன்ருகக் கற்றுக் கொள்ளவில்லையே என்று இப்போது மிகவும் வருந்துகிறேன். ஏனெனில், ஒவ்வொரு ஹிந்து பையனும், பெண்ணும் நல்ல சம்ஸ்கிருத அறிவு பெற்றிருக்க வேண்டும் என்பதைப் பின்னர் நான் உணர்ந்தேன்.

இந்தியாவில் உயர்தரக் கல்விக்கான எந்தப் பாடத் திட்டத்திலும், மாகாண மொழியைத் தவிர ஹிந்தி, சமஸ்கிருதம், பாரசீகம், அரபு, ஆங்கிலம் ஆகிய மொழிகள் இடம் பெற வேண்டுமென்று இப்போது நான் கருதுகிறேன். இவ்வளவு நீண்ட ஜாபிதாவைக் கண்டு யாரும் பயப்படவேண்டியதில்லை. நம்முடைய கல்வி முறை இன்னும் சீராக இருந்தால், அந்நிய மொழியின் மூலம் பாடம் கற்றுக் கொள்ள வேண்டுமென்ற அதிகப்படியான சுமை இல்லாதிருந்தால், இந்த மொழிகளையெல்லாம் கற்றுக் கொள்ளுவது கஷ்டமாகவே இருக்காது. ஒரு மொழியை ஆழ்ந்து அறிந்து கொள்ளுவது, மற்ற மொழிகளையும் அறிந்துகொள்வதைச் சுலபமாக்குகிறது.

'சுயசரித்திரம்' (1926)

## ஆங்கிலத்தின் ஸ்தானம்

ஆங்கிலம் சர்வதேச வர்த்தகத்திற்கான ஒரு மொழி, ராஜதந்திரத்திற்கான மொழி. அதில் பல இலக்கியச் செல்வங்கள் இருக்கின்றன. மேல் நாட்டினரின் சிந்தனைகளையும், கலாசாரத்தையும் அது நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறது. ஆகையால் நம்மில் ஒரு சிலருக்கு ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டியது அவசியம்தான். தேசத்தின் வர்த்தகத்தையும், சர்வதேச ராஜதந்திர விவகாரங்களையும் அவர்கள் கவனித்துக்கொள்ளலாம். மேல் நாட்டு இலக்கியம், சிந்தனை, விஞ்ஞானம் ஆகியவைகளிலுள்ள சிறந்த அம்சங்களையும் நம் நாட்டினருக்கு அவர்கள் அளிக்கலாம். அதுதான் ஆங்கிலத்தின் நியாயமான உபயோகமாக இருக்கும். ஆனல் இன்று ஆங்கிலம் நமது தாய் மொழிகளை விரட்டி விட்டு, நமது உள்ளங்களைப் பிடித்துக் கொண்டு விட்டது. ஆங்கிலேயர்களுடன் நமக்குள்ள சமத்துவமில்லாத உறவுதான் இந்த இயற்கையற்ற நிலைமைக்குக் காரணமாகும்.

ஆங்கில அறிவில்லாமலே இந்தியர்கள் அறிவுத் துறையில் உயர்ந்த வளர்ச்சி பெறுவது சாத்தியமாக இருக்க வேண்டும். ஆங்கிலம் தெரியாவிட்டால் உயர்ந்த வட்டாரங்களில் பழக முடியாதென்று நமது பையன்கள், பெண்களின் மனத்தில் ஒரு எண்ணம் உண்டாகும்படி செய்வது இந்திய ஆடவர்களையும், பெண்களையும் அவமதிப்பதாகும். இது சகிக்க முடியாத அவமானமாகும். ஆங்கில மோகத்தை விட்டொழிப்பது, சுயராஜ்யத்தின் அத்தியாவசியமான நிபந்தனைகளில் ஒன்று.

—'எங் இந்தியா' – 2—2—1921

## நிரந்தரமான போராட்டம்

ஆங்கிலத்திற்கும், ஹிந்திக்குமிடையே உள்ள இந்தப் போராட்டம் நிரந்தரமானது என்பதை நான் அறிவேன். மாணவர்கள் கூட்டங்களில் நான் பேசும்போதெல்லாம் ஆங்கிலத்தில் பேசும்படி கேட்கிறார்கள். இது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஆங்கில மொழி எனக்குப் பிடிக்கும் என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால், இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டிய மாணவர்கள், ஆங்கிலத்தை விட ஹிந்தியில் அதிக கவனம் செலுத்தினால் அந்தப் பணிக்கு இன்னும் அதிகத் தகுதி பெறுவார்கள் என்று நான் நம்புகிறேன். நீங்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்ளக் கூடாதென்று நான் சொல்லவில்லை; தாராளமாகக் கற்றுக் கொள்ளுங்கள். ஆனால், எனக்குத் தெரிந்த வரையில், அது லட்சக்கணக்கான இந்தியர்கள் தமது வீடுகளில் பேசும் மொழியாக இருக்க முடியாது. அது பல ஆயிரக்கணக்கானவர்கள் பேசும் மொழியாக இருக்கலாம்.

—'ஹரிஜன்' – 17—11—1933

## தோல்வி மனப்பான்மை

ஆங்கில மொழியினிடம் அதற்குரிய மதிப்பு எனக்கு உண்டு. ஆனால், தனக்கு உரிமையில்லாத இடத்தை அது பறித்துக் கொள்ளுவதாயிருந்தால், அதை நான் கண்டிப்பாக எதிர்க்கிறேன். ஆங்கிலம் இன்று உலக மொழியாக இருக்கிறது என்பது உண்மையே. ஆகையால், அதற்கு இரண்டாவது இஷ்டபாடமாக இருக்கும் ஸ்தானத்தைக் கொடுக்கலாம். அதுவும் பள்ளிக்கூடங்களில் அல்ல; சர்வகலாசாலைப் படிப்பின் போது தான். அது குறிப்பிட்ட சிலருக்குத்தான், பாமரமக்களுக்கல்ல. கட்டாய இலவச ஆரம்பக் கல்வியை இன்று நாம் அமல் நடத்த முடியாமலிருக்கும்போது, ஆங்கில போதனைக்கு எப்படி ஏற்பாடு செய்ய முடியும்? ஆங்கிலம் இல்லாமலேதான் ரஷியா விஞ்ஞானத் துறைகளில் தனது சாதனைகளையெல்லாம் செய்திருக்கிறது. ஆங்கிலம் இல்லாமல் முடியாது என்று நாம் நினைப்பதற்குக் காரணம், நம்முடைய அடிமை மனம் தான் அந்தத் தோல்வி மனப்பான்மையை ஒருக்காலும் நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

—'ஹரிஜன்' - 25—8—1946

# 5

# இந்தியாவின் கலாசார பாரம்பரியம்

நாம் மற்றவர்களுடன் கலக்காமல் ஒதுங்கி நிற்க வேண்டும் என்பதோ அல்லது நம்மைச் சுற்றிச் சுவர்களை எழுப்பிக்கொள்ள வேண்டும் என்பதோ என்னுடைய கருத்தல்ல. ஆனால், முதலில் நம்முடைய கலாசாரத்தைப் புரிந்து கொண்டு, அதன்படி நாம் நடக்க ஆரம்பித்த பிறகுதான் மற்ற கலாசாரங்களைப் பற்றி அறிய ஆரம்பிக்க வேண்டும் என்பதே என்னுடைய வாத மாகும். நம்முடைய கலாசாரத்தில் இருப்பதுபோல் அவ் வளவு பொக்கிஷங்கள் வேறு எதிலும் கிடையாது என்பதே என்னுடைய உறுதியான அபிப்பிராயம். அதை நாம் தெரிந்து கொள்ளவில்லை. அதைப் புரிந்துகொள்ள வேண்டியதில்லை யென்று நமக்குக் கூறப்பட்டிருக்கிறது. அதன் மதிப்பைக் குறைத்துப் பேசும்படியும் நாம் செய்யப்பட்டிருக்கிறோம். அநேக மாக அதன்படி நாம் வாழ்க்கை நடத்துவதையே நிறுத்திவிட் டோம். நடை முறையில் அதைப் பின்பற்றாமல், புத்திபூர்வமாக மட்டும் அதை அறிந்துகொள்ளுவது, பதம் செய்து வைக்கப்பட்ட பிரேதத்தைப் போன்றதேயாகும். ஒருக்கால் அது பார்ப்பதற்கு அழகாயிருக்கலாம்; ஆனால், உன்னதமான உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவதற்கு அதில் ஒன்றும் இராது. என் சொந்த கலா சாரத்தின் கோட்பாடுகளின்படி நான் நடந்துகொள்ளாமல் இருந் தால், அது தற்கொலைக்கு ஒப்பாகுமென்று என்னுடைய மதம் கூறுகிறது; அதே சமயத்தில் மற்ற கலாசாரங்களைச் சிறுமைப் படுத்துவதோ, அலட்சியம் செய்வதோ கூடாதென்றும் என்னு டைய மதம் தடை செய்கிறது.

—'எங் இந்தியா' - 1—9—1921

## பலவிதமான கலாசாரங்கள்

இந்தியாவில் பலவிதமான கலாசாரங்கள் நிலைத்துவிட்டன. அவை இந்தியரின் வாழ்க்கையை உருவாக்கியிருக்கின்றன. ஆனால், அவையே இந்தியச் சூழ்நிலையில் மாறுதல்களைப் பெற் றுள்ளன. இத்தகைய எல்லா கலாசாரங்களும் இணக்கமாக ஒன்றுபடுவதையே அது விரும்புகிறது. இந்த இணக்கம் சுதேசி ரகத்தில்தான் இருக்கும். அதன்படி ஒவ்வொரு கலாசாரத் திற்கும் அதற்குரிய நியாயமான ஸ்தானம் இருக்கும். அமெரிக் காவில் இருப்பதைப் போல் பெரும்பான்மையோரின் ஒரு கலா சாரம் மற்றவைகளை யெல்லாம் விழுங்கிவிடாது. அங்கு பல்வேறு கலாசாரங்கள் இணக்கமாக இருக்க வேண்டும் என்பது நோக்க மல்ல; இயற்கையற்ற, வலுக்கட்டாயமான ஒரு ஐக்கியமே அங்கு குறிக்கோளாக இருக்கிறது.

—'எங் இந்தியா' - 17—11—1920

## நன்மையா அல்லது சுமையா ?

நம்முடைய காலத்தின் கலாசாரம் உருவாகிக்கொண்டிருக்கிறது. இன்று பல்வேறு விதமான கலாசாரங்கள் ஒன்ருேடொன்று மோதிக்கொண்டிருப்பது போல் தோன்றுகின்றன. இவற்றையெல்லாம் ஒன்று சேர்ப்பதற்கு நம்மில் பலர் முயற்சி செய்து கொண்டிருக்கிருேம். தனித்து நிற்க விரும்பும் எந்தக் கலாசாரமும் நிலைத்து வாழ முடியாது. கலப்பற்ற ஆரிய கலாசாரம் என்று எதுவும் இன்று இந்தியாவில் இல்லை. ஆரியர்கள் இந்திய மண்ணில் பிறந்தவர்களா அல்லது நாம் விரும்பாமல் இங்கு வந்தவர்களா என்பதைப் பற்றி எனக்கு அதிக அக்கறை இல்லை. என்னுடைய மூதாதையர்கள் மிகவும் தாராளமாக ஒருவரோடொருவர் கலந்து வாழ்ந்து கொண்டிருந்தார்கள் என்பதும், அந்தக் கலப்புத்தான் இன்றைய தலைமுறை என்பதுமே எனக்கு முக்கியமாகத் தோன்றுகிறது. நாம் பிறந்த நாட்டுக்கோ அல்லது நம்மைச் சுமந்து நிற்கும் இந்தச் சிறிய பூமிக்கோ நாம் ஏதாவது நன்மை செய்கிருேமா அல்லது வெறும் சுமையாகத்தான் இருக்கிருேமா என்பதை எதிர்காலம் தான் கூற முடியும்.

—'ஹரிஜன்' – 9—5—1936



1944 மே 11-இல் ஜுஹுவில் (பம்பாய்) உள்ள காந்தி கிராமத்துக்கு காந்திஜி விஜயம் செய்தபோது திலகமிட்டு அவரை வரவேற்றனர்.



1945-இல் சேவாகிராமத்தில் திறக்கப்பட்ட அகில இந்திய
ஆதாரக் கல்விப் பயிற்சி முகாமில் காந்திஜி

பகுதி பத்து

# மாணவர் உலகம்

## 1

## மாணவர்களுக்கு புத்திமதி

### 1

(சென்னை ஒய். எம். ஸி. ஏ. கட்டிடத்தில் மாணவர்கள் வாசித்தளித்த உபசாரப் பத்திரத்திற்குப் பதிலாக காந்திஜி நிகழ்த்திய அரிய பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப் பட்டுள்ளன :)

அற்புதமான அந்த தேசீய கீதத்தை நீங்கள் பாடியதைக் கேட்டு நாம் எல்லோரும் எழுந்து நின்ளுேம். இந்தியத் தாயை வர்ணிப்பதற்குக் கவிஞர் தம்மால் முடிந்தவரையில் அடை மொழிகளை வாரிக் கொட்டியிருக்கிருர். இனிமையான புன்னகை புரிபவள், இன்சொல் பேசுபவள், மணம் கமழுபவள், சர்வ சக்தியுடையவள், நல்லதே உருவானவள் என்றெல்லாம் இந்தியத் தாயை அவர் வர்ணித்திருக்கிருர். பாலும், தேனும் வழிந்தோடும் நன்ளுடு, முதிர்ந்த கதிர்கள் நிறைந்துள்ள வயல்கள்கொண்ட நாடு, பழங்களும், தானியங்களும் நிறைந்த நாடு என்று கூறுகிருர். இதில் வாழும் மனிதர்களைப் பற்றி புராதனமான இந்த நாட்களிலிருந்துதான் கற்பனை செய்துகொள்ள வேண்டும் என்கிருர். உலகம் பூராவையும், மனித குலம் பூராவையும் ஆள் பலத்தின் சக்தியாலன்றி, உள்ளத்தின் வலிமையினுல் ஆட்கொள்ளும் நாடு என்று சித்திரித்திருக்கிருர். அந்தப் பாடலை நாம் பாட முடியுமா? 'அந்தப் பாட்டைக் கேட்கும் போது எழுந்து நிற்க எனக்கு ஏதாவது உரிமை இருக்கிறதா?' என்று என்னையே கேட்டுக் கொள்ளுகிறேன். நாம் அடைய வேண்டிய ஒரு லட்சியத்தைத்தான் அவர் சித்திரித்துக் காட்டினுர். அதிலுள்ள வார்த்தைகள் எதிர்காலத்திற்கான ஒரு கனவாகவேதான் இருக்கும். எதிர்காலத்தை உருவாக்கப் போகும் நீங்கள்தான் இந்தியத் தாயைப் பற்றி கவிஞர் வர்ணித்த வார்த்தைகளை மெய்யாக்க வேண்டும். இந்த வர்ணனை வார்த்தைகள் இன்று பெரும்பாலும் பொருத்தமற்றவை என்றே நான் நினைக்கிறேன். தம்முடைய தாய்நாட்டைப் பற்றி கவிஞர் கூறியவைகளை மெய்யாக்க வேண்டியது உங்களுடையதும், என்னுடையதுமான கடமையாகும்.

## உண்மையான கல்வி

அந்த லட்சியத்தை அடையத் தகுதியுள்ளவர்களாகச் செய்து, உங்களிடமுள்ள சிறப்பான அம்சங்களை வெளிக் கொணரக்கூடிய ஒரு கல்வியை சென்னை மாணவர்களாகிய நீங்களும், இந்தியா பூராவிலுமுள்ள இதர மாணவர்களும் பெற்றுவருகிறீர்களா? அல்லது சர்க்கார் சிப்பந்திகளையும், வர்த்தக ஸ்தாபனங்களின் குமஸ்தாக்களையும் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையாகிவிட்ட ஒரு கல்வியைப் பெற்று வருகிறீர்களா? நீங்கள் பெற்றுவரும் கல்வியின் நோக்கம் சர்க்கார் இலாகாக்களிலோ அல்லது மற்ற இலாகாக்களிலோ வெறும் வேலை பெறுவதுமட்டும் தானா? அதுதான் உங்களுடைய கல்வியின் நோக்கமென்றால், நீங்கள் கொண்டிருக்கும் லட்சியம் அதுதான் என்றால், கவிஞர் கற்பனை செய்துள்ள லட்சியம் ஈடேறாது என்றே அஞ்சுகிறேன். நான் தற்கால நாகரிகத்தைக் கண்டிப்பாக எதிர்ப்பவன் என்பதை நீங்கள் கவனிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இன்றைய நாகரிகத்தின் சுமையின் கீழ் அகப்பட்டுக்கொண்டு ஐரோப்பா தவிக்கிறதென்று உங்களுக்குத் தோன்றினால், அந்த நாகரிகத்தை நமது தாய் நாட்டிலும் பின்பற்றுவதற்கு முன்பு நீங்களும், உங்களுடைய பெரியவர்களும் ஒரு முறைக்கு இரு முறையாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். 'நம்மை ஆளுபவர்கள் அந்த நாகரிகத்தை நமது தாய் நாட்டுக்குக் கொண்டு வரும்போது நாம் என்ன செய்ய முடியும்?' என்று கேட்கிறார்கள். ஒரு விஷயத்தை நீங்கள் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருந்தாலொழிய, ஆளுபவர்கள் யாரும் அந்தக் கலாசாரத்தை இங்கு கொண்டுவந்துவிட முடியும் என்று நான் நம்பவே இல்லை; ஆளுபவர்கள் அந்தக் கலாசாரத்தைக் கொண்டுவந்தால் கூட, ஆளுபவர்களை நிராகரிக்காமலே கூட, அந்தக் கலாசாரத்தை நிராகரிக்கக்கூடிய சக்திகள் நம்முள்ளேயே இருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். (கரகோஷம்) பிரிட்டிஷார் நம்மிடையே இருக்கிறார்கள் என்பதைப் பல மேடைகளிலிருந்து நான் சொல்லியிருக்கிறேன். அவர்கள் ஏன் நம்மிடையே இருக்கிறார்கள் என்ற காரணத்தைப் பற்றி விவாதிக்க நான் தயாராக இல்லை. நமது நாட்டின் ரிஷிகளைப் பற்றிய விவரங்களை மதிப்பிற்குரிய நமது தலைவர் சொல்லக் கேட்டீர்கள். அந்த பாரம்பரியத்திற்கு ஏற்ப இந்தியா நடந்துகொண்டால் பிரிட்டிஷார் மூலம் உடல் வலிமையைப் பற்றியதல்லாத, அன்பை அடிப்படையாகக் கொண்ட ஒரு செய்தியை நாம் அனுப்ப முடியுமென்றே நான் நம்புகிறேன். பின்னர், ரத்தம் சிந்தாமல் ஆன்மிக சக்தியின் மூலமே நம்மை வென்றவர்களை நாம் வென்றுவிட முடியும். இன்று இந்தியாவில் நடந்துகொண்டிருப்பதைப் பார்க்கும்போது, அரசியல் கொலைகள், அரசியல் கொள்ளைகள் ஆகியவைகளைப்

பற்றி நமது அபிப்பிராயத்தை நாம் தெரிவிக்க வேண்டியது அவசியம் என்று நான் நினைக்கிறேன். இவையெல்லாம் முற்றிலும் வெளிநாடுகளிலிருந்து வந்த பழக்கங்கள்; இவை இங்கே வேரூன்ற முடியாது. ஆனால், மாணவர்களாகிய நீங்கள் இந்த மாதிரியான பயங்கரச் செயல்களுக்கு மனத்திற்குள்ளாகவோ அல்லது தார்மிக ரீதியாகவோ அங்கீகாரம் அளித்துவிடாமல் உஷாராய் இருக்க வேண்டும். சாத்விக எதிர்ப்பாளனாகிய நான் உங்களுக்கு இன்னொன்று சொல்லுகிறேன். உங்களை நீங்களே பயமுறுத்திக்கொள்ளுங்கள்; உங்களை நீங்களே சோதனை செய்து பார்த்துக்கொள்ளுங்கள்; எங்கு கொடுங்கோன்மையைக் கண்டாலும் எதிர்த்து நில்லுங்கள்; உங்களுடைய உரிமை மீறப்படுவதையும் எதிர்த்து நில்லுங்கள்; ஆனால் அதற்காக கொடுங்கோலனின் ரத்தத்தைச் சிந்தக்கூடாது. நம்முடைய மதம் போதிப்பது அதுவல்ல. நமது மதம் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டது. அன்பின் மூலம் அது செயல்படுகிறது. உங்களுடைய அண்டை அயலார்களிடமும், நண்பர்களிடமும் மட்டும் அன்புகாட்டுவதல்ல, உங்களுடைய விரோதிகளிடமும் அன்பு காட்டுவதும் அது செயல்படும் விதமாகும்.

இதைப் பற்றி இன்னொரு வார்த்தை. சத்தியம், அகிம்சையை நாம் பின்பற்றுவதாயிருந்தால், பயமின்மையையும் உடனடியாக கற்றுக்கொள்ள வேண்டும். நம்மை ஆளுபவர்கள தவறு செய்கிறார்கள் என்று நாம் கருதினால், ராஜ துரோகம் என்று கருதப்பட்டால் கூட, நமது அபிப்பிராயத்தை அவர்களுக்குச் சொல்லவேண்டியது நமது கடமை என்று நாம் நினைத்தால், ராஜ துரோகமே பேசுங்கள் என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஆனால், அதன் விளைவுகளையும் நீங்கள் அனுபவிக்கத் தயாராக இருக்க வேண்டும். விளைவுகளை அனுபவிக்க நீங்கள் தயாராகும் போது, நீங்கள் கூறுவதை சர்க்காரும் கேட்க வேண்டும் என்ற உரிமையை நீங்கள் பெற்றிருப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

## உரிமைகளும் கடமைகளும்

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள ஒவ்வொரு பிரஜையுடனும் சமத்துவம் கொண்டாடுவது சாத்தியம் என்று நான் நினைப்பதால், பிரிட்டிஷ் சர்க்காருடன் நான் சேர்ந்துவிடுகிறேன். அந்த சமத்துவம் இன்று கூட இருப்பதாகக் கருதுகிறேன். நான் ஒரு அடிமை நாட்டின் பிரஜையல்ல. நமது கடமையை இன்னும் நன்றாகச் செய்வதன் மூலம் நாம் விரும்புவதையெல்லாம் பெற முடியுமென்று நீங்கள் நம்பினால், உங்கள் கடமையைப்பற்றியும், அந்த ரீதியில் போராடுவதைப் பற்றியுமே சிந்தியுங்கள். கடவுள் ஒருவருக்கு மட்டும் பயப்பட்டால் போதும். என்னுடைய குருநாதர் ஸ்ரீ கோகலே நமக்கு அளித்துள்ள செய்தி இதுதான். நாட்டின் அரசியல் வாழ்வையும், அரசியல் ஸ்தாபனங்களையும், ஆன்மிகப் பாதையில் திருப்ப வேண்டியது என்பதே இந்தச்

செய்தியாகும். உடனே அதைச் செயலில் காட்ட நாம் முற்பட வேண்டும். மாணவர்கள் அரசியலிலிருந்து விலகி நிற்க முடியாது. மதத்தைப் போலவே அரசியலும் அவர்களுக்கு அத்தியாவசியமானதாகும். மதத்திலிருந்து அரசியலைப் பிரிக்க முடியாது. என்னுடைய கருத்துகள் உங்களுக்குப் பிடித்தமில்லாமல் இருக்கலாம் என்று எனக்குத் தெரியும். ஆயினும் என் ஆழ்ந்த உள்ளக் கிடக்கையைத்தான் நான் உங்களுக்குச் சொல்ல முடியும்; தென்னப்பிரிக்காவில் எனக்குள்ள அனுபவத்தின் மீது நான் கூற முடியும். அங்கிருந்த உங்கள் நாட்டினருக்கு இன்றைய கலாசாரம் தெரியாது; ஆனால், புராதன ரிஷிகளின் பலமும் அவர்களுடைய தவத்தின் சித்தியும் இருந்தது. ஆங்கில இலக்கியத்தைப்பற்றி அவர்களுக்கு ஒரு வார்த்தை கூட தெரியாது. ஆயினும் அவர்கள் தம் முழுத் திறமையையும் காட்டினார்கள். தென்னப்பிரிக்காவிலுள்ள கல்வி அறிவே இல்லாத நம் நாட்டினருக்குச் சாத்தியமாய் இருந்தது, இந்தப் புனித நாட்டிலுள்ள உங்களுக்கும் எனக்கும் பத்து மடங்கு அதிக சாத்தியமாக இருக்கும். அந்த பாக்கியம் நமக்குக் கிட்டுவதாய் இருக்கட்டும். (கரகோஷம்)

## 2

# குருகுலம்

[1915-இல் நிகழ்ந்த குருகுலத்தின் ஆண்டு விழாவின் போது காந்திஜி செய்த பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன :]

ஆரிய சமாஜத்திற்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். அதனுடைய சுறுசுறுப்பிலிருந்து பல தடவைகளில் நான் ஊக்கம் பெற்றிருக்கிறேன். சமாஜத்தின் அங்கத்தினர்களிடையே தன்னலத் தியாக உணர்ச்சி நிறைய இருப்பதை நான் பார்த்திருக்கிறேன். இந்தியாவில் நான் சுற்றுப் பிரயாணம் செய்த காலத்தில், நாட்டுக்கு நல்ல சேவை செய்யும் பல ஆரிய சமாஜிகளைப் பார்த்திருக்கிறேன். ஆகையால், உங்களிடையே வருவதற்கு மகாத்மாஜிக்கு (சுவாமி சிரத்தானந்தருக்கு) நான் கடமைப்பட்டிருக்கிறேன். அதே சமயத்தில் நான் ஒரு சனாதனி என்பதைத் தெரிவித்துக்கொள்ளுவது தான் நியாயம் என்றும் கருதுகிறேன். என்னைப் பொறுத்த வரையில் ஹிந்து மதத்தில் எல்லாம் அடங்கியிருக்கின்றன. அதனுடைய பரந்த நிழலில் எல்லாவிதமான நம்பிக்கைகளுக்கும் பாதுகாப்பு கிடைக்கிறது. ஆரிய சமாஜிகள், சீக்கியர்கள், பிரம்ம சமாஜிகள் ஆகியோர் தாங்கள் ஹிந்துக்கள் அல்லவென்று சொல்லிக்கொண்ட போதிலும், சீக்கிரத்தில் அவர்களும் ஹிந்து மதத்தில் இணைந்து, அதில் நிறைவு காண்பார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. மனிதனால் நடத்தப்படும் வேறு எந்த ஸ்தாபனத்

தையும் போலவே ஹிந்து மதத்திலும் குறைபாடுகள் இருக்கின்றன. இதில் சீர்திருத்தங்கள் செய்ய முயற்சிப்பதற்கு எந்த ஊழியருக்கும் வேண்டிய இடமிருக்கிறது; பிரிந்து செல்வதற்குக் காரணமே இல்லை.

## அச்சமற்ற உணர்ச்சி

இந்தியாவின் உடனடியான தேவை என்ன என்று நான் போகும் இடங்களிலெல்லாம் கேட்கிறார்கள். மற்ற இடங்களில் நான் சொன்ன பதிலையே இங்கும் சொல்லுகிறேன். பொதுவாகச் சொன்னால், சரியான ஒரு மத உணர்ச்சிதான் இன்று மிகவும் அவசரமான ஒரு பெரிய தேவையாகும். ஆனால், மிகவும் பொதுப் படையாக உள்ள இந்த பதில் யாருக்கும் திருப்தியளிக்காது என்று எனக்குத் தெரியும். ஆயினும், இது எல்லாக் காலத்திற்குமே பொருத்தமாக இருக்கக்கூடிய ஒரு பதிலாகும். மத உணர்ச்சி நம்மிடையே உறங்கிக் கிடப்பதால், நாம் நிரந்தரமான ஒரு பய உணர்ச்சியுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இம்மை, மறுமை இரண்டையும் பற்றி பயப்படுகிறோம். நமது புரோகிதர்கள், பண்டிதர்கள் முன்பு நம் மனத்தில் உள்ளதைச் சொல்லுவதற்குத் துணிவதில்லை. சர்க்கார் அதிகாரத்தைக் கண்டு கலங்கி நிற்கிறோம். இதன் மூலம் அவர்களுக்கோ, நமக்கோ நாம் நன்மை செய்யவில்லை. உண்மையைத் தம்மிடமிருந்து மறைக்க வேண்டுமென நம்முடைய அரசியல் ஆட்சியாளர்களோ, மதபோதகர்களோ விரும்ப முடியாதென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். "முடியாது" என்று நம் மனத்தில் தோன்றுவதைச் சொல்லுவதற்கு நாம் தயங்குகிறோமென்றும் மக்கள் பயமற்ற தன்மையை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் சமீபத்தில் ஒரு பம்பாய் கூட்டத்தில் லார்டு வில்லிங்டன் கூறினார். அச்சமின்மை என்றால் மரியாதையின்மை என்றோ, மற்றவர்களுடைய உணர்ச்சிகளை மதியாமை என்றோ அர்த்தமில்லை. நிரந்தரமானதும், உண்மையானதுமான எதையும் நாம் சாதிக்க வேண்டுமானால், முதலில் அச்சமின்மை அத்தியாவசியமானதாகும் என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். மத உணர்ச்சி இல்லாமல் இந்த மனப்பான்மையைப் பெற முடியாது. கடவுளுக்கு பயப்பட ஆரம்பித்தோமானால், மனிதனுக்கு பயப்பட மாட்டோம். நாம் மனத்தில் நினைப்பது அல்லது காரியத்தில் செய்வது ஒவ்வொன்றையும் பார்த்துக் கொண்டேயிருக்கும் தெய்விகத் தன்மையொன்று நம்முள்ளேயே இருக்கிறது; இத்தன்மை நம்மைக் காப்பாற்றி நேர்வழியில் நம்மை இட்டுச் செல்லுகிறது. இந்த உண்மையை நாம் உணர்ந்தால், கடவுளைத் தவிர உலகத்தில் வேறு எதற்கும் நாம் பயப்படமாட்டோம் என்பது தெளிவு. ஆளுபவர்களையெல்லாம் ஆளும் கடவுளிடம் பக்தி செலுத்துவது மற்றெந்த பக்தியையும் விட முக்கியமானது. இதனால் பக்திக்கே ஒரு விசேஷ அர்த்தமும் ஏற்படுகிறது.

## சுதேசியின் அர்த்தம்

இந்த அச்சமின்மையை நாம் போதிய அளவுக்கு வளர்த்து விட்டோமானல், உண்மையான சுதேசி இல்லாமல் நமக்கு விமோசனம் கிடையாது என்பதை உணருவோம். சுதேசி என்ற வார்த்தைக்கு ஆழ்ந்த அர்த்தம் இருப்பதாக நான் நினைக்கிறேன். நம்முடைய மத, அரசியல், பொருளாதார வாழ்வில் இதை அனுஷ்டிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். ஆகையால், சுதேசி என்பது குறிப்பிட்ட சமயங்களில் ஒரு சுதேசித் துணியை அணிந்து கொள்ளுவது மட்டுமல்ல. அதை எப்போதுமே நாம் அணிந்து கொண்டிருக்க வேண்டும். பொருமை அல்லது பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்ற உணர்ச்சி காரணமாக அல்ல. அது நம்முடைய அருமை நாட்டுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை யாகும். வெளிநாடுகளில் உற்பத்தி செய்யப்பட்ட துணிகளை நாம் அணிந்தால், நிச்சயமாக சுதேசி உணர்ச்சியை மீறியவர்க ளாகிறோம்; துணிகளைத் தைக்கும் விஷயத்தில் நாம் அந்நிய முறை களைப் பின்பற்றினுலும் சுதேசி உணர்ச்சியை மீறியவர்களா கிறோம். நாம் ஆடைகள் அணியும் விதத்திற்கும் நம்முடைய சூழ் நிலைக்கும் சம்பந்தம் உண்டு. பார்வை, அழகு ஆகியவைகள் சம்பந்தப்பட்டவரையில் கால் சராய், கோட்டைவிட நமது ஆடை எவ்வளவோ மேலானதாகும். மதத்தில் சுதேசி உணர்ச்சி என்பது மகோன்னதமான நமது சென்ற காலத்தை இந்தத் தலை முறையிலும் செய்து காட்டுவதாகும். ஐரோப்பாவில் உள்ள குழப்பத்தைப் பார்த்தால், நவநாகரிகம் என்பது இருள் நிறைந்த தீய சக்திகள்தாம் என்பது தெரிகிறது. ஆனல், புராதனமான நமது இந்திய நாகரிகம் தெய்விக சக்தியைத் துலக்கிக் காட்டு கிறது. நம்முடைய நாகரிகம் பெரும்பாலும் ஆன்மிகத் தன்மை வாய்ந்தது; இன்றைய நாகரிகம் பெரும்பாலும் லோகாயத மானது. உற்பத்தி சாதனங்கள், நாசகரத்தன்மை வாய்ந்த ஆயுதங்களைக் கண்டுபிடிப்பதையே இன்றைய நாகரிகம் குறி யாகக் கொண்டிருக்கிறது. ஆனல், நம்முடைய நாகரிகம் ஆன்மிக நியதிகளை ஆராய்வதையே முக்கியமாகக் கொண் டிருக்கிறது. சத்தியம், பத்தினித் தன்மை, எல்லா உயிர் களையும் பேணிக் காப்பது, பிறர் சொத்துக்கு ஆசைப் படாமல் இருப்பது, அன்றாட வாழ்க்கைத் தேவைக்கு அதிகமாக எதையும் சேகரித்து வைத்துக் கொள்ளாமல் இருப்பது ஆகியவை நேர்மையான வாழ்க்கைக்கு இன்றியமையாத அம்சங் களாகும் என்று நமது சாத்திரங்கள் விதித்துள்ளன. இவை இல்லாமல் பரம்பொருளை அறிவதென்பது அசாத்தியம் என்று அவை கூறுகின்றன. இரக்கம், பரிசுத்தமான அன்பு ஆகியவற் றைத் தன்னுள் கொண்ட அகிம்சைக் குணத்தை சரியான முறை யில் வளர்த்தால், உலகமே நம் காலடியில் கிடக்கும் என்று நமது நாகரிகம் துணிந்து சொல்லுகிறது. இந்த உண்மையைக் கண்டு பிடித்தவர் இதை ருசுப்பிப்பதற்கு எவ்வளவோ அருமையான உதாரணங்களைக் கொடுத்திருக்கிறார்.

## அகிம்சைக் கொள்கை

அரசியல் வாழ்வில் இதன் பலனைப் பரிசீலனை செய்து பாருங்கள். வாழ்வைப் போன்ற ஒரு பாக்கியம் வேறு எதுவும் இல்லையென்று நமது சாத்திரங்கள் கருதுகின்றன. நம்மை ஆளுபவர்களின் உயிர்களுக்கு எந்தவிதமான ஆபத்தும் இல்லை என்ற உத்தரவாதத்தை அவர்களுக்கு நாம் அளித்தால், அவர்களுடன் நம்முடைய உறவுகள் எப்படியிருக்கும் என்பதை யோசித்துப் பாருங்கள். நாம் செய்யும் காரியங்களைப்பற்றி அவர்கள் என்ன தான் நினைத்தாலும், அவர்களுடைய உயிர்களை நம்முடைய உயிர்களைப்போல் அவ்வளவு புனிதமாக நாம் கருதுவோம் என்ற நம்பிக்கை ஆளுபவர்களுக்கு ஏற்பட்டால், உடனே ஒரு பரஸ்பர நம்பிக்கை உணர்ச்சி தோன்றிவிடும். இரு தரப்பிலும் ஒரு நேச பாவம் ஏற்பட்டு, இன்று நமக்குக் கவலையளிக்கும் பல பிரச்னைகளுக்கு கௌரவமானதும், நியாயமானதுமான தீர்வு காண்பதற்கு வழி கோலிவிடும். அகிம்சையை நாம் அனுஷ்டிக்கும்போது, ஆரம்ப காலத்தில் எதிர்த் தரப்பினரும் அப்படியே இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஆனால் அதனுடைய இறுதிக் கட்டங்களில் எதிர்த் தரப்பிலும் அது ஏற்பட்டுவிடும். பிரிட்டிஷ் சர்க்காரிடம் நான் காட்டும் விசுவாசம் முற்றிலும் சுயநலத் தன்மை வாய்ந்தது. மகத்தான இந்த அகிம்சையை உலகத்தினரிடையே பரப்புவதற்கு பிரிட்டிஷாரைப் பயன்படுத்திக் கொள்ள நான் விரும்புகிறேன். ஆனால், நம்மை 'வென்றவர்களை' நாம் வென்ற பிறகுதான் இது சாத்தியமாகும்.

## ஆரிய சமாஜத்தின் வேலை

நான் இருமுறை குருகுலத்திற்கு விஜயம் செய்துவிட்டேன். ஆரிய சமாஜத்திலுள்ள சகோதரர்களுடன் எனக்கு முக்கியமான சில கருத்து வேற்றுமைகள் இருந்தபோதிலும் அவர்களிடம் எனக்கு உள்ளூற மதிப்பு உண்டு. ஆரிய சமாஜத்தினுடைய நடவடிக்கைகளின் மிகச் சிறந்த பலன் இந்த குருகுலத்தை ஏற்படுத்தி நடத்துவதாகும். இது முற்றிலும் மகாத்மாஜி முன்ஷிராமையே நம்பியிருந்த போதிலும், இது உண்மையிலேயே தன்னைத்தானே நிர்வகித்துக் கொள்ளும் ஒரு தேசீய ஸ்தாபனமாகும். இது சர்க்காரின் உதவியைக் கொஞ்சம் கூட நம்பியிருக்கவில்லை. இதன் கஜானாவில் பாக்கியசாலிகளான ஒரு சிலரிடம் வசூலித்த பணம் மட்டுமில்லை. புண்ய ஸ்தல யாத்திரை போவதுபோல் வருடாவருடம் கங்டிக்கு வந்து, இந்த தேசீயக் கல்லூரியின் பராமரிப்புக்காகத் தம்மாலியன்றதை மனமுவந்து அளிக்கும் பல ஏழைகளின் பணமும் நிறைந்திருக்கிறது. இங்கு ஒவ்வொரு ஆண்டு விழாவின் போதும் ஏராளமான பேர்கள் வந்து கூடுகிறார்கள். அவர்களை வரவேற்று, தங்க இடமளித்து, அவர்களுக்கு ஆகார வசதிகள் செய்யும் ஏற்பாடுகள் உயர்ந்த நிர்வாகத் திறமையைக் காட்டுகின்றன. சுமார் பத்தா

யிரம் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் கொண்ட இந்தக் கூட்டத்தை ஒரு போலீஸ்காரரின் உதவி கூட இல்லாமலும், ஆடம்பரமோ, கொஞ்சம்கூட நிர்ப்பந்தமோ இல்லாமலும் சமா ளிப்பதுதான் இதிலுள்ள மிகப் பெரிய அதிசயம். கூட்டத்தின ருக்கும், இந்த ஸ்தாபனத்தின் நிர்வாகிகளுக்குமிடையே உள்ள தொடர்பு பரஸ்பர அன்பையும், மதிப்பையுமே அடிப்படையாகக் கொண்டதா யிருக்கிறது. இதைப் போன்ற ஒரு பெரிய ஸ்தாப னத்தின் வாழ்நாளில் 16 வருடங்கள் என்பது பெரிய விஷய மில்லை. சென்ற இரண்டு மூன்று வருடங்களில் இன்று தேர்ச்சி பெற்று வெளியே சென்றவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்பதை இனிமேல்தான் பார்க்க வேண்டும். பலன்களைக் கொண்டுதான் பொதுமக்கள் மனிதர்களையோ, ஸ்தாபனங் களையோ மதிப்பிடுவார்கள். இதில் தோல்விகளுக்கு இடமில்லை. ஆகையால் இந்த குருகுலமும் சரி, மற்ற ஸ்தாபனங்களும் சரி இந்தத் தீர்ப்பைத்தான் எதிர்நோக்க வேண்டும். எனவே, இந்தக் கல்லூரியிலிருந்து வெளியேறி, முட்கள் நிறைந்த வாழ்க்கைப் பாதைக்குச் சென்றுள்ள மாணவர்களின் பொறுப்பு மிகப் பெரி தாகும். அவர்கள் உஷாராக இருக்க வேண்டும். இதற்கிடையே இந்தப் பெரிய சோதனையை ஆதரிப்பவர்கள் ஒரு விஷயத்தைக் கொண்டு திருப்தி அடையலாம். அதாவது மரத்திற்குத் தகுந் தாற் போல்தான் பழமும் இருக்கும் என்பது வாழ்க்கையில் மறுக்க முடியாத ஒரு உண்மையாகும். மரம் அழகாகத்தான் இருக்கிறது. உத்தமமான ஒரு மனிதன் அதற்கு நீர் பாய்ச்சு கிறான். பழம் எப்படி இருக்கும் என்பதைப்பற்றி ஏன் கவலைப் பட வேண்டும்?

## கைத்தொழில் பயிற்சி

இந்த குருகுலத்தின் நன்மையைக் கருதுபவன் என்ற நிலையில் கமிட்டிக்கும், பெற்றோர்களுக்கும் ஒன்றிரண்டு யோசனை கள் சொல்ல விரும்புகிறேன். குருகுலத்திலுள்ள பிள்ளைகள் தன் னம்பிக்கையுடையவர்களாகவும், தம்மைத் தாமே காப்பாற்றிக் கொள்பவர்களாகவும் ஆக வேண்டுமானால், அவர்களுக்கு முழுமை யான கைத்தொழில் பயிற்சி அவசியமாகும். இந்த நாட்டின் ஜனத்தொகையில் 85 சத விகிதம் விவசாயிகள். விவசாயிகளுக் குத் தேவையானவற்றை அளிக்கும் தொழில்களில் 10 சத விகி கத்தினர் ஈடுபட்டிருப்பார்கள். இந்த நிலைமையிலுள்ள நம் நாட்டில் ஒவ்வொரு இளைஞனுக்கும் விவசாயமும், கைத்தறி நெசவும் சுமாராகத் தெரிந்திருக்க வேண்டும் என்று நான் கருது கிறேன். ஆயுதங்களைச் சரியாக உபயோகிக்கத் தெரிந்து கொள்ளுவது, ஒரு துண்டுப் பலகையை நேராக அறுக்கக் கற்றுக் கொள்ளுவது, ஒரு நல்ல சுவர் எழுப்பத் தெரிவது ஆகியவற்றில் பயிற்சி பெறுவதால் அவனுக்கு ஒன்றும் நஷ்டமில்லை. இத்தகைய பயிற்சி பெற்ற ஒரு பையன் உலகத்துடன் நாம் எப்படிப் போராடுவது என்று கவலைப்படமாட்டான்; வேலையற்றும்

இருக்கமாட்டான். சுகாதார விதிகள், குழந்தைகள் பராமரிப்பு ஆகியவற்றிலும் குருகுலப் பையன்களுக்கு அவசியம் பயிற்சி அளிக்க வேண்டும். கண்காட்சியில் செய்யப்பட்டிருந்த சுகாதார ஏற்பாடுகள் கொஞ்சமும் திருப்திகரமாயில்லை. எங்கும் ஈக்கள் நிறைந்திருந்தன. வருடாவருடம் இங்கு வருபவர்களுக்கு சுகாதாரம் பற்றிய விதிகளைக் கற்றுக்கொடுக்கக் கிடைத்த ஒரு நல்ல சந்தர்ப்பத்தை நாம் இழந்துவிட்டோம். அதனால் இந்த வேலை பையன்களிடமிருந்து ஆரம்பமாக வேண்டும். கடைசியாக, குழந்தைகள் ஐரோப்பிய ஆடைகள் அல்லது நவீன சுகானுபவங்களைப் பின்பற்றிப் பாழாகிவிடாமல் கமிட்டியும் பெற்றோர்களும் பார்த்துக்கொள்ள வேண்டும். இவையெல்லாம் அவர்களுடைய பிற்கால வாழ்வைப் பாதிக்கும்; இவை பிரம்மச்சரியத்திற்கும் முரணானவை.

# 3

# பாவத்திற்குப் பிராயச்சித்தம்

(1917-இல் பகல்பூரில் நடைபெற்ற பதினேழாவது பீகார் மாணவர் மகாநாட்டில் காந்திஜி செய்த தலைமை உரையின் விவரங்களைக் கீழே காணலாம்.)

இந்த மகாநாட்டின் நடவடிக்கைகளைப் பிரதேச மொழியிலேயே நடத்துவதென்று நீங்கள் செய்துள்ள முடிவு மிகுந்த விவேகமானதாகும். இந்தப் பிரதேச மொழிதான் நமது தேசீய மொழியாகவும் இருக்கிறது. அதற்காக உங்களைப் பாராட்டுகிறேன். இந்த வழக்கத்தைத் தொடர்ந்து பின்பற்றுவீர்கள் என்றும் நம்புகிறேன். இது மற்றவர்களுக்கும் நல்ல உதாரணமாக இருக்கும்.

நமது தாய் மொழியை நாம் புறக்கணித்துவிட்டோம். அதை மரியாதைக் குறைவாகவும் நடத்தி விட்டோம். இந்தப் பெரிய பாவத்தின் பலனை நாம் அனுபவிக்கத்தான் வேண்டி யிருக்கும். இதனால் நமக்கும், நம்முடைய குடும்பத்தினருக்குமிடையே ஒரு சுவர் எழுப்பியதுபோல் ஆகிவிட்டது. இங்கு கூடியுள்ள யாவரும் இந்த உண்மையை ஒப்புக் கொள்வார்கள். பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் நாம் கற்றுக்கொள்ளுபவைகளை நமது தாய்மார்களுக்குச் சொல்லுவதில்லை, சொல்லவும் முடியாது. நாம் பெறும் அறிவை நம் வீட்டிலுள்ளவர்களுக்குப் புகட்ட முடியாது. இந்த மோசமான நிலைமை இங்கிலாந்திலோ அல்லது தாய் மொழியின் மூலம் கல்வி போதிக்கப்படும் வேறு நாடுகளிலோ காணப்படுவதில்லை. மாணவர்கள் வீட்டுக்குத் திரும்பிவரும்போது பள்ளிக்

கூடத்தில் தாம் கற்றுக் கொண்டவைகளைத் தம் பெற்றோர்களுக்குச் சொல்லுகிறார்கள். இந்த அறிவு கொஞ்சம் கொஞ்சமாக வீட்டிலுள்ள வேலைக்காரர்களுக்கும் மற்றவர்களுக்கும் பரவுகிறது. இவ்வாறாக பையன்கள் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்ளுபவைகளிலிருந்து மற்றவர்களும் கொஞ்சம் பயன் பெற முடிகிறது. ஆனால், நாமோவெனில் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்ளுவதை அங்கேயே விட்டுவிட்டு வந்துவிடுகிறோம். அறிவு என்பது, காற்றைப் போல் வெகு சீக்கிரத்தில் பரவ முடியும். ஆனால், ஒரு கருமி தன்னுடைய செல்வத்தை பூமிக்கு அடியில் புதைத்துவைப்பதுபோல், நம்முடைய அறிவை நாம் நமக்குள்ளேயே வைத்துக் கொண்டுவிடுகிறோம்; அதனுடைய அனுகூலங்கள் மற்றவர்களுக்குக் கிடைக்க முடியாமல் செய்துவிடுகிறோம். தாய் மொழியை அவமதிப்பது ஒருவன் தன்னுடைய தாயை அவமதிப்பது போல் அவ்வளவு கண்டிக்கத்தக்கதாகும். தாய் மொழியை அவமதிப்பவன் தேசபக்தன் என்று அழைக்கப் படுவதற்குத் தகுதியுடையவன் அல்ல. ஆழ்ந்த கருத்துகளையும் சிந்தனைகளையும் வெளியிடுவதற்குப் போதுமான அளவு நமது மொழிகள் வளம் பெற்றிருக்கவில்லை என்று பலர் சொல்லுகிறார்கள். ஆனால் அது மொழியிலுள்ள குறைபாடல்ல. ஒரு மொழியை வளம் பெறச் செய்வது, அந்த மொழியைப் பேசுபவர்களுடைய பொறுப்பாகும். ஆங்கில மொழியும் ஒரு காலத்தில் வளமற்றதாகத்தான் இருந்தது. அந்த மொழியைப் பேசுபவர்கள் முன்னேற்றமடைந்து தமது மொழியையும் அபிவிருத்தி செய்ய முயற்சி செய்தார்கள். அதனால் அதுவும் முன்னேற்றமடைந்தது. ஆங்கிலத்தின் மூலம்தான் உயர்ந்த சிந்தனைகளை வெளியிட முடியும் என்று நினைத்துக் கொண்டு, நம்முடைய மொழியை அபிவிருத்தி செய்யத் தவறிவிட்டோமானால், நாம் என்றென்றும் அடிமைகளாகவேதான் இருப்போம் என்பதில் சந்தேகமில்லை. எல்லாக் கருத்துகளையும், பல்வேறு விஞ்ஞான விவரங்களையும் வெளியிடுவதற்குத் தகுதியான விதத்தில் நமது மொழிகள் அபிவிருத்தி அடையவேண்டும்; இல்லாவிடில், தேசத்தில் மறு மலர்ச்சிக்குத் தேவையான புது அறிவை நாம் பெறமுடியாது.

1. நமது மக்களுக்குப் புது அறிவு அவசியமாக இருக்கிறது.

2. நம் மக்கள் அனைவரும் ஒருபோதும் ஆங்கிலத்தில் போதிய புலமை பெற முடியாது.

3. ஆங்கிலக் கல்வி கற்றவர்கள்தான் புது அறிவு பெற முடியுமென்றால், மக்களுக்கு அது ஒரு நாளும் கிடைக்காது.

துளசிதாசர் தனது உன்னதமான உணர்ச்சிகளை ஹிந்தி மொழியில் வெளியிட முடிந்தது. அவருடைய ராமாயணத்தைப் போல் அவ்வளவு ஆழ்ந்த கருத்துச் செறிவுள்ள புத்தகங்கள்

உலகத்தில் அதிகம் கிடையாது. நம் நாட்டிற்காக எல்லா வற்றையும் தியாகம் செய்துள்ள பண்டித மதன் மோகன் மாளவியா போன்ற ஒரு பெரிய தேசபக்தர் தன் கருத்துகளை ஹிந்தியில் தெரிவிக்கக் கஷ்டப்படுவதில்லை. அவருடைய ஆங்கிலம் வெள்ளியைப் போல் இருக்கிறது என்று சொல்லு கிறார்கள். ஆனல் அவருடைய ஹிந்தி தங்கத்தைப்போல் இருக் கிறது. இஸ்லாமிய மௌல்விகள் மிகவும் ஆழ்ந்த மதக் கருத்து களை மிகவும் சுலபமாக தம்முடைய தாய் மொழியிலேயே விளக்கிக் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். துளசிதாசரின் மொழி அப்பழுக்கில்லாதது, அழிவில்லாதது. இந்த மொழியில் நமது கருத்துகளை நாம் வெளியிட முடியவில்லை என்ருல், தவறு நிச்சயமாக நம்முடையதுதான்.

அந்நிய மொழியான ஆங்கிலத்தின் மூலம் கல்வி போதிக்கப் படுவதுதான் இந்த சங்கடத்திற்குக் காரணம் என்பது தெளிவு. இந்தப் பெரிய குறைபாட்டைப் போக்கும் முயற்சிக்கு நாம் எல்லோரும் உதவி செய்ய முடியும். இந்த விஷயத்தில் நம்முடைய கருத்து என்ன என்பதை மாணவர்கள் சர்க்கா ருக்குத் தெரிவிக்கலாம் என்று நான் நினைக்கிறேன். அவர்கள் இன்னென்றும் செய்யலாம், அதாவது நாம் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்பவைகளை ஹிந்தியில் மொழிபெயர்த்து அதன் மூலம் அந்த அறிவை வீட்டிலுள்ள மற்றவர்களிடையே பரப்ப லாம். நாம் ஒருவரோடொருவர் பேசும்போது தாய் மொழியில் தான் பேசுவது என்று உறுதி செய்து கொள்ளலாம். பீகாரைச் சேர்ந்த ஒருவர், அதே பீகாரைச் சேர்ந்த மற்றொருவருடன் ஆங்கிலத்தில் கடிதப்போக்கு வரத்துச் செய்வதைக் காண எனக்குச் சகிக்க முடியவில்லை. ஆயிரக்கணக்கான ஆங்கிலே யர்கள் ஒருவரோடொருவர் பேசுவதை நான் கேட்டிருக்கிறேன். அவர்களுக்கு மற்ற மொழிகளும் தெரியும். ஆனல் அவர்கள் தம்மிடையே பேசிக்கொள்ளும்போது அந்நிய மொழியை உபயோ கிப்பதை நான் கேட்டதேயில்லை. நம்மிடையே பேசிக்கொள்ளும் போது நாம் ஆங்கிலத்தில் பேசுவது போன்ற பெரும் தவறுக்கு ஈடான வேறு எதுவும் உலக சரித்திரத்திலேயே இல்லை.

சிந்தனை செய்யும் திறனை அளிக்காத கல்வியினல் ஒரு பலனும் இல்லை என்று வேதாந்தியான ஒரு கவிஞர் கூறியுள் ளார். ஆனல் மேற்குறிப்பிட்ட காரணங்களால் மாணவர்கள் தாமே சிந்தனை செய்யும் திறனை இழந்துவிட்டார்கள்போல் தோன்றுகிறது. அவர்கள் ஊக்கமிழந்து விட்டார்கள். விஷயங் களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் அவர்க ளிடையே காணப்படவில்லை. பெரும்பாலோருக்கு எதிலும் அக் கறை யிருப்பதாகத் தென்படவில்லை.

ஆங்கிலத்தை நான் வெறுக்கவில்லை. ஏனெனில், அதில் ஏராளமான நல்ல இலக்கியங்கள் இருக்கின்றன. ஆளுபவர் களின் மொழி ஆதலால், அது நிர்வாக மொழியாகவும் இருக்

கிறது, அறிவுக் களஞ்சியமாகவும் இருக்கிறது. ஆயினும், ஒவ்வொரு இந்தியரும் அதைக் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்றே நான் கருதுகிறேன். வேறு வழியில்லாததால் நமது குழந்தைகள் இப்போது ஆங்கிலம் படிக்கிறார்கள். நம்மிடையே பேசிக்கொள்ளும்போதும் சாத்தியமான சந்தர்ப்பங்களிலும் நமது தாய் மொழியையே உபயோகிக்க வேண்டும். ஒன்றுமட்டும் சொல்ல விரும்புகிறேன். நமது நாட்டில் தாய் மொழியின் மூலமே கல்வி புகட்டுவதற்கு மாணவர்கள் மட்டுமின்றி, மற்றவர்களும் உதவி செய்ய முடியும்.

இப்போதுள்ள உறக்கத்தைப் போக்கி, நாட்டிற்குச் சேவை செய்ய தாம் என்ன செய்ய வேண்டும் என்று பலர் என்னிடம் கேட்டிருக்கிறார்கள்; தங்களுடைய ஜீவனோபாயத்திற்கு என்ன செய்ய வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார்கள். இந்தக் கேள்விகளுக்குப் பதில் அளிப்பதற்கு முன்பு கல்வியின் நோக்கம் என்ன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியது அவசியமாகும். நன்னெறியை வளர்ப்பதுதான் கல்வியின் நோக்கம் என்று ஹக்ஸ்லி கூறியிருக்கிறார். வேதங்களையும், சாத்திரங்களையும் ஒருவன் அறிந்திருக்கலாம். ஆனால் அவன் தன்னைத்தானே அறிந்து கொள்ளாவிட்டால், எல்லா பந்தங்களிலிருந்தும் விடுபடும் சக்தியைப் பெறாவிட்டால் அவனுடைய அறிவினால் பலனில்லை என்று நமது ரிஷிகள் கூறுகிறார்கள். "தன்னையறிந்தவன் எல்லாவற்றையும் அறிந்தவனாகிறான்" என்றும் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இலக்கியக் கல்வி அறிவு இல்லாமலேயே தன்னை அறிவது சாத்தியமாகும். முகம்மது நபிகள் படித்தவரல்ல. ஏசுநாதரும் பள்ளிக்கூடம் போனதில்லை. ஆனால் இந்த மகான்கள் தம்மைத் தாமே அறியவில்லை என்று மறுப்பது அதிகப் பிரசங்கித்தனமாகும். இவர்கள் எந்தப் பரீட்சையிலும் தேர்ச்சி பெறாவிட்டாலும், அவர்களிடம் நாம் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறோம், அவர்களைக் கொண்டாடுகிறோம். அவர்களிடம் முழு அறிவு இருந்தது. அவர்கள் மகாத்மாக்கள், மகத்தான ஆன்ம சக்தி பெற்றவர்கள். ஆனால் சிந்தனையில்லாமல் அவர்களுடைய உதாரணத்தை நாம் பின்பற்ற முடியாது. அவர்கள் பள்ளிக்கூடத்திற்கே போகவில்லையே என்பதற்காக நாமும் பள்ளிக்குச் செல்லுவதை நிறுத்திவிட்டோமானால் ஒரு பலனும் ஏற்படாது. ஆனால் நன்னெறியை வளர்ப்பதன் மூலம்தான் தன்னைத்தானே அறிய முடியும் என்பதை நாம் அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளலாம். நன்னெறி என்றால் என்ன? அதன் அடையாளங்கள் என்ன? நன்னெறி யுள்ளவன் சத்தியம், அகிம்சை, பிரம்மச்சரியம், உடைமையின்மை, திருடாமை, அச்சமின்மை ஆகியவற்றைப் பின்பற்ற முயற்சிக்கலாம். அவன் தன்னுடைய உயிரையே கொடுக்கத் தயாராயிருப்பான், ஆனால் சத்தியத்தைக் கைவிட மாட்டான். தான் கஷ்டம் அனுபவிக்கத் தயாராயிருப்பான்; ஆனால் மற்றவர்களுக்குக் கஷ்டம் விளைவிக்க மாட்டான். தன் மனைவியின்மீது காமக் கண்களை வீசாமல் அவளுடன் ஒரு

நண்பனைப் போலவே கூட அவன் வாழ முடியும். இவ்வாருக நன்னெறியுள்ள ஒருவன் பிரம்மச்சரியத்தை அனுஷ்டித்துக் கொண்டு, தன் உடலின் சக்தியைக் காப்பாற்ற முயற்சிக்கிருன். அவன் திருடுவதில்லை; லஞ்சம் வாங்குவதில்லை; தன்னுடைய நேரத்தையோ, மற்றவர்களுடைய நேரத்தையோ அவன் வீணடிப்பதில்லை; போதிய காரணமில்லாமல் அவன் பணத்தைச் சேர்ப்பதில்லை; அவன் சுகம் தேடுவதில்லை; தன்னைத் திருப்தி செய்து கொள்ளுவதற்காக உபயோகமில்லாத காரியங்களைச் செய்வதில்லை; எளிய வாழ்க்கையிலேயே திருப்தியடைகிருன்.

நமது பள்ளிக்கூடங்களில் இந்தப் பலன்கள் கிடைக்காவிட்டால், மாணவர்கள், கல்வி முறை, ஆசிரியர்கள் ஆகிய மூவருமே அந்தத் தவறைப் பகிர்ந்து கொள்ளவேண்டும். ஆனல், தம்முடைய குணத்தில் உள்ள தவறுகளைப் போக்கிக் கொள்ளுவது மாணவர்களே செய்யக் கூடிய காரியமாகும். அவர்களுக்காக வேறு யாரும் இதைச் செய்ய முடியாது. ஆகையால், நான் முதலில் சொன்னதுபோல் கல்வியின் நோக்கம் என்ன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். நல்ல குணத்தையும், நெறியையும் வளர்த்துக் கொள்ள விரும்பும் மாணவன், எந்த நல்ல புத்தகத்திலிருந்தும் அதற்கான வழிகளைத் தெரிந்து கொள்ளலாம்.

கடவுள் உலகத்தில் நன்மையையும், தீமையையும் கலந்து தான் படைக்கிருர். ஆனல், நல்ல மனிதன் நல்லதை எடுத்துக் கொண்டு, கெட்டதைத் தள்ளிவிடுகிருன்.

துளஸிதாசர் ஒரு ராமபக்தர். ஆகையால், கிருஷ்ணனின் உருவத்தில் கூட அவர் ராமனைக் காண முடிந்தது. கிறிஸ்தவப் பள்ளிக்கூடங்களில் நமது மாணவர்களில் பலர் பைபிள் வகுப்புக்குப் போகிருர்கள்; ஆனல், சொல்லிக் கொடுக்கப்படும் விஷயங்கள் அவர்களுடைய மனத்தில் பதிவதில்லை. கீதையின் உபதேசங்களில் குற்றம் குறை கண்டு பிடிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் கீதையைப் படிப்பவன் அதில் குற்றம் குறைகளைக் காணக்கூடும். ஆனல், விடுதலை பெற விரும்புகிறவனுக்கு கீதை விடுதலைக்கான வழியைக் காட்டுகிறது. சிலருக்கு குர்-ஆனில் இருப்பதெல்லாம் தவருகப்படுகிறது; ஆனல் மற்றவர்கள் அதை ஊன்றிப் படித்து, உலகம் என்ற கடலை பத்திரமாகக் கடந்து விடுகிருர்கள். இந்தக் கண்ணேட்டத்துடன் இந்தப் பிரச்னையைப் பார்க்கும்போது, நாம் ஒரு விஷயத்தை எப்படி அணுகுகிருேம் என்பதைப் பொறுத்துத்தான் அதன் முடிவு இருக்கும் என்பது தெரிகிறது. ஆனல், பெரும்பாலான மாணவர்கள் கல்வியின் உண்மையான நோக்கத்தைப்பற்றிக் கொஞ்சமும் கவலைப்படுவதில்லை என்றே அஞ்சுகிறேன். பள்ளிக்கூடம் போவதென்பது ஒரு வழக்கமாக இருக்கிறது. ஆகையால் பள்ளிக்கூடம் போகிருர்கள். பின்னர் ஏதாவது வேலை பெறுவதற்கு உதவியாக இருக்கும் என்பதற்காகச் சிலர் போகிருர்கள். ஜீவனேபாயத்திற்கு ஒரு வழி என்று கல்வியைப்பற்றி

நினைப்பது, ஒரு தகுதியற்ற மனப்பான்மையைக் காட்டுகிறது என்றே நான் எண்ணுகிறேன். ஒருவனுடைய உடல்தான் ஜீவனோபாயத்திற்கான சாதனமாகும்; பள்ளிக்கூடம் நன்னெறியை வளர்ப்பதற்கான இடமாகும். உடலின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான ஒரு சாதனம் என்று பள்ளிக்கூடத்தைப் பற்றி நினைப்பது ஓர் அற்ப காரணத்துக்காக ஒரு எருமையைக் கொல்லுவதாகும். உடலுழைப்பின் மூலம்தான் உடலைக் காப்பாற்ற வேண்டும். இதற்கு ஆன்மாவை எப்படி உபயோகிக்க முடியும்? 'வியர்வை சிந்த வேலை செய்துதான் நீ சம்பாதிக்க வேண்டும்' என்று ஏசுநாதர் கூறியிருக்கிறார். கீதையும் இதையேதான் சொல்லுவதுபோல் தோன்றுகிறது. . இந்த உலகத்திலுள்ள மக்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் இந்த விதியைத்தான் பின்பற்றுகிறார்கள். உடலுழைப்பின் மூலம்தான் ஜீவனோபாயம் தேட வேண்டும் என்பதை ஆரம்பத்திலிருந்தே உணர வேண்டும். அதற்கு அவர்கள் வெட்கப்படக் கூடாது. இதனால் எப்போதும் நாம் மண்வெட்டியை சுமந்து நிற்க வேண்டும் என்று நான் சொல்வதாக அர்த்தமில்லை. வேறு தொழிலில் ஈடுபட்டிருந்தால் கூட இதைச் செய்வதில் தவறொன்றும் இல்லை என்பதையும், தொழிலாளர்கள் எந்த விதத்திலும் நமக்குத் தாழ்ந்தவர்கள் அல்ல என்பதையும் நாம் புரிந்துகொள்ள வேண்டியதுதான் முக்கியம். இதை நாம் லட்சியமாக ஏற்றுக்கொண்டால் ஜீவனத்திற்காக நாம் எந்தத் தொழிலைச் செய்தாலும் அந்த வேலை நாணயமானதாகவும் சுவாரஸ்யமானதாகவும் இருக்கும். அப்போது நாம் செல்வத்தின் அடிமைகளாக இருக்கமாட்டோம்; செல்வம்தான் நமக்கு அடிமையாகிறது. இந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டால், மாணவர்கள் உடலுழைப்பு செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். கல்வியை ஜீவனோபாயத்திற்கு ஒரு மார்க்கமாகக் கருதுபவர்களுக்காகவே இதையெல்லாம் சொன்னேன்.

கல்வியின் நோக்கம் என்ன என்பதை மாணவர்கள் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். இன்று முதல் பள்ளிக்கூடத்தை நன்னெறியை வளர்க்கும் இடமாக கருதுவதென்று அவர்கள் தீர்மானிக்கலாம். அப்படி உறுதிகொள்ளும் ஒரு மாணவனின் நடத்தை ஒரு மாதத்திலேயே திருந்திவிடும் என்பது நிச்சயம்.

உடலைப் பற்றி அதிகக் கவனம் செலுத்த வேண்டியதில்லை என்று பல மாணவர்கள் நினைக்கிறார்கள். இது பெரிய தவறாகும். ஒழுங்காக உடற்பயிற்சி செய்வது மிகவும் அவசியமாகும். திடமான சரீரம் இல்லாத ஒரு மாணவரிடம் என்ன எதிர்பார்க்க முடியும்? காகிதப் பையிலோ, அட்டைப் பெட்டியிலோ அதிக நேரம் பாலை வைத்திருக்க முடியாது. அதே மாதிரி காகிதம் போன்ற நமது மாணவர்களின் உடல்களில் கல்வி அதிக காலம் இராது. உடல்தான் உள்ளத்தின் இருப்பிடம். ஆகையால் அது புனிதமானது. அதை நாம் காப்பாற்ற வேண்டும். காலை

யிலும் மாலையிலும் தினசரி ஒன்றரை மணிநேரம் சுறுசுறுப்பாக நடப்பது நல்லது. இதற்குச் செலவிடும் நேரம் வீணாவதில்லை. உடல் பயிற்சியும் ஓய்வும், உடல், அறிவு இரண்டிற்கும் தெம்பு அளிக்கின்றன; விஷயங்களைச் சீக்கிரத்தில் தெரிந்துகொள்ளவும் உதவி செய்கின்றன. இந்தியா போன்ற ஒரு ஏழை நாட்டிற்கு அதிகச் செலவை உண்டாக்கும் ஹாக்கி, கிரிக்கெட் போன்ற விளையாட்டுகள் விரும்பத்தக்கவை யல்ல. அதிகச் செலவில்லாத சுவாரஸ்யமான நம்முடைய விளையாட்டுகளே நிறைய இருக்கின்றன.

மாணவனின் அன்றாட வாழ்க்கையும் குற்றமற்றதாய் இருக்க வேண்டும். சுத்தமான மனம் உள்ளவன்தான் உண்மையான ஆனந்தத்தை அனுபவிக்க முடியும். உலகாயதமான கேளிக்கைகளைக் கண்டு களிக்கும்படி அவனைக் கேட்பது அவனுடைய உண்மையான ஆனந்தத்தைப் பறிப்பதாகும். இன்னும் மேலே போக வேண்டுமென்று உறுதிகொண்டுள்ளவன் மேலும் மேலும் உயர்ந்துக் கொண்டேதான் போகிறான். சந்திரன் வேண்டுமென்று ஸ்ரீ ராமச்சந்திரன் கேட்டார். அவருடைய மனம் சுத்தமாக இருந்ததால் அது அவருக்குக் கிடைத்தது.

ஒரு விதத்தில் பார்த்தால் உலகம் மாயையாகத் தோன்றுகிறது; மற்றொரு விதத்தில் பார்த்தால் முற்றிலும் உண்மையானதாகத் தோன்றுகிறது. மாணவர்கள் உலகத்தை உண்மையானதாகவே கருத வேண்டும். ஏனெனில், அவர்கள் தமது சக்திகளை மனித வர்க்கத்தின் நன்மைக்காகச் செலவிட்டு, உலகத்தில் வீரச் செயல்கள் புரிய வேண்டியிருக்கிறது. உண்மையைப் புரிந்துகொள்ளாமல் உலகம் ஒரு மாயை என்றும், தான் அதைத் துறந்துவிட்டதாகவும் சொல்லிக்கொண்டு பிறகு தார்மிக நியதிகளைப் பொருட்படுத்தாமல் தன் விருப்பப்படி நடந்துகொள்ளுபவன் ஞானி அல்ல; அவன் சந்நியாசியாகவே இருந்தால்கூட தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளும் முட்டாளேயாவான்.

இனி தருமத்தைப் பற்றி கவனிப்போம். தருமம் இல்லையென்றால் அங்கு அறிவோ, செல்வமோ, ஆரோக்கியமோ இருக்க முடியாது. தருமம் இல்லையென்றால் வாழ்க்கை வறண்ட பாலைவனமாகியிருக்கும். அங்கு முன்னேற்றம் இருக்க முடியாது. நம்முடைய இன்றைய கல்வி முறையில் தருமத்தைப் போதிப்பதற்கு இடமில்லை. அது மணமகன் இல்லாத கல்யாணத்தைப் போல் இருக்கிறது. தருமத்தைப் பற்றிய அறிவில்லாமல் மாணவர்கள் பரிசுத்தமான ஆனந்தத்தை அனுபவிக்க முடியாது. இந்த அனுபவத்தைப் பெறுவதற்கு சாத்திரங்களைப் படித்து அவற்றைப் பற்றி நன்கு யோசித்து நடப்பது அவசியமாகும். காலையில் எழுந்தவுடன் ஒரு சிகரெட் குடிப்பதோ அல்லது உபயோகமில்லாத வீண் வம்படிப்பதோ யாருக்கும் எந்த நன்மையையும் செய்யாது. பறவைகள் கூட காலையிலும் மாலையிலும் ஆண்ட

வனின் திருநாமத்தைப் பாடுவதாக நாஸர் சொல்லியிருக்கிறார். ஆனால் நாம் தூக்கத்தில் நமது நேரத்தை வீணடிக்கிறோம். எப்படியாவது தருமத்தை அறிவது ஒவ்வொரு மாணவனுடைய கடமையுமாகும். இது பள்ளிக்கூடங்களில் சொல்லிக்கொடுக்கப்பட்டாலும், இல்லாவிட்டாலும் தருமத்தின் கோட்பாடுகளை மாணவர்கள் தம் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும் என்பதே என்னுடைய பிரார்த்தனையாகும். தருமம் என்றால் என்ன? அதைப் பற்றிய அறிவை எப்படிப் புகட்டுவது? இதைப் பற்றியெல்லாம் இங்கு விவாதிக்க நமக்கு அவகாசமில்லை. ஆயினும் அனுபவத்தைக் கொண்டு சொல்லுகிறேன். கீதையையும் ராமாயணத்தையும் கூர்ந்து படியுங்கள். ராமாயணம் உண்மையிலே அருமையான ஒரு நூலாகும். அதனுடைய போதனைகளைப் பயன் படுத்திக் கொள்ளுங்கள். ஆனால் தருமத்தின் ரகசியத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், இந்த இரண்டு புத்தகங்களையும் படிக்க வேண்டும் என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். தருமத்தையும் நீதியையும் அந்த நூல்கள் போதிக்கின்றன. கோடிக்கணக்கான மக்கள் இந்தப் புத்தகங்களைப் படித்து அவற்றைப் பின்பற்றி தம் வாழ்க்கையை உருவாக்கிக் கொள்ள முயற்சி செய்கிறார்கள். பரிசுத்தமான உள்ளத்துடன் அவர்கள் அதைப் படித்து அதிலிருந்து பெரும்பலத்தின் துணை கொண்டு தம் வேலைகளைச் செய்கிறார்கள். முஸ்லிம் மாணவர்களுக்கு குர்—ஆன் தான் சிறந்த புத்தகமாகும். ஹிந்துக்களும், முஸ்லிம்களும் பரஸ்பரம் ஒருவருடைய மத நூல்களை மற்றவர்கள் படித்து புரிந்துகொள்ள வேண்டும் என்று சிபாரிசு செய்கிறேன். இரு வகுப்பினரும் ஒருவரையொருவர் இன்னும் நன்கு தெரிந்து கொள்வதற்கு இது உதவியாக இருக்கும்.

மாணவர்கள் அரசியலில் கலந்து கொள்ளலாமா, கூடாதா என்று அடிக்கடி என்னிடம் கேட்டிருக்கிறார்கள். அரசியலை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று, அரசியல் சாத்திரம்; இரண்டாவது, அரசியல் செயல் முறை. மாணவர்கள் அரசியல் சாத்திரத்தைப் படிக்க வேண்டியது அவசியமேயாகும். ஆனால், அரசியல் செயல்முறையில் இறங்குவது அபாயகரமானதாக இருக்கும். அரசியல் கூட்டங்களுக்கு மாணவர்கள் போகலாம். ஆனால் அக்கூட்டங்களில் விவாதிக்கப்படும் பிரச்னைகளைப் பற்றி தம்முடைய கருத்துகளை தெரிவிக்கக் கூடாது. தம்முடைய படிப்புக்கு இடையூறாக இல்லாமலிருந்தால், மாணவர்கள் தொண்டர்களாகப் பணியாற்றலாம். மாணவர்கள் கட்சி அரசியலைத் தவிர்க்க வேண்டும். இந்த கோஷ்டி, அந்த கோஷ்டி என்று சேராமல் நடுநிலைமை வகித்து, எந்த வேற்றுமையையும் இல்லாமல் எல்லாத் தலைவர்களிடமும் மரியாதை காட்டக் கற்றுக் கொள்ள வேண்டும். தலைவர்களுடைய யோக்கியதைகள், தகுதி, முக்கியத்துவம் ஆகியவைகளைப் பற்றி விவாதிப்பது மாணவர்களின் வேலையல்ல. எங்கெங்கு நல்ல குணம் காணப்படுகிறதோ

அங்கு பணிவுடன் அதைக் கற்றுக்கொள்ளுவதுதான் அவர்களுடைய வேலை.

மூத்தவர்களிடம் மரியாதை காட்டி, அவர்கள் சொல்லுவதைக் கவனமாகக் கேட்டு சாத்தியமான சமயங்களில் அதைப் பின்பற்ற வேண்டியது மாணவர்களின் கடமையாகும். மற்றவர்களுக்கு மரியாதை காட்டக் கற்றுக் கொள்ளாதவன், அவர்களிடமிருந்து மரியாதையை எதிர்பார்க்க முடியாது. அகம்பாவ மனப்பான்மை மாணவர்களுக்கு ஏற்றதல்ல. இன்றைய இந்தியாவில் காணப்படும் ஒரு போக்கையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். வயதானவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அப்படி நடந்து கொள்ளுவதில்லை. இந்த நிலைமையில் மாணவர்கள் என்ன செய்வது? அவர்கள் தருமத்தை வளர்த்து அந்த உணர்ச்சியைப் பின்பற்ற வேண்டுமென்று விரும்புகிறேன். தருமமா, மூத்தவர்களுக்கு மரியாதையா என்ற சங்கடம் ஏற்படும்போது மாணவர்கள் பிரஹ்லாதனை ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். தனக்குப் பிடித்தமில்லாத ஒரு நிலைமையில் இந்தப் பையன் தன் தகப்பனாரின் கட்டளைகளை மீறினன். அதே மாதிரி அவசியம் ஏற்படும்போது நாமும் மரியாதையுடன் நமது மூத்தவர்களுக்குக் கிழ்ப்படிய மறுக்கலாம். இதற்கு அதிகமாக அவர்களிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ளுவது தவருகும்.

மாணவர்கள் நாட்டிற்கு எப்படி சேவை செய்யலாம் என்பது மற்ரெரு கேள்வியாகும். மாணவர்கள் கல்வி அறிவையும் பெற்றுக்கொண்டு, அதேசமயத்தில் தமது தேக ஆரோக்கியத்தையும் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். தேசத்திற்கு சேவை செய்ய இவ்விரண்டும் அவசியமாகும். நீங்கள் எல்லோரும் எளிதாகச் செய்யக் கூடிய ஒரு வேலையைச் சொல்லுகிறேன். மூன்ருவது வகுப்புப் பிரயாணிகளின் கஷ்டங்களைப்பற்றி பத்திரிகைகளுக்கு நான் எழுதிய கடிதத்தைப் பார்த்திருப்பீர்கள். உங்களில் பெரும்பாலோர் மூன்ருவது வகுப்பில்தான் பிரயாணம் செய்வீர்கள் என்று நினைக்கிறேன். பிரயாணிகள் ரயில் பெட்டிக்குள்ளேயே வெற்றிலே, பாக்கு போட்டுக் கொண்டு எச்சில் துப்புவதையும், வாழைப்பழம், ஆரஞ்சுத் தோல்களை அங்கேயே எறிவதையும் பார்த்திருப்பீர்கள். கக்கூஸை சரியாக உபயோகிக்காமல் அசுத்தமாக்கி விடுகிருர்கள். மற்றப் பிரயாணிகளின் சௌகரியத்தைக் கவனிக்காமல் பீடி, சிகரெட்டுகள் பிடிக்கிருர்கள்.

மாணவர்கள் பிரயாணம் செய்யும்போது, இத்தகைய காரியங்கள் தவறு என்பதையும், சுகாதாரத்திற்கு முரணனது என்பதையும் அந்தப் பிரயாணிகளுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். பெரும்பாலான பிரயாணிகள் மாணவர்கள் கூறுவதற்கு மதிப்புக் கொடுப்பார்கள். நமது பாமர மக்களுக்கு சுகாதாரம் பற்றிய விதிகளை விளக்கிக் கூறும் இந்த வாய்ப்புகளை அவர்கள் தவற விடக்கூடாது. ஸ்டேஷன்களில் கடைக்

காரர்கள் விற்கும் தின்பண்டங்கள் அநேகமாக அசுத்தமாக இருக்கின்றன. இம்மாதிரி அசுத்தங்களைப் பார்க்கும்போது, அது பற்றி ஸ்டேஷன் நிர்வாகிகளுக்குத் தகவல் கொடுக்கவேண்டியது மாணவர்களின் கடமையாகும். அவர்களுக்கு எழுதும்போது ஹிந்தியில் எழுத வேண்டும். நீங்கள் எழுதுவதை அவர்கள் கவனிக்காமலேயே இருந்துவிடலாம். ஆனால், இம்மாதிரி பல கடிதங்கள் வந்தால் அவர்கள் கவனிக்கத்தான் வேண்டியிருக்கும். அதிக சிரமமில்லாமல் இதைச் செய்யலாம்; இதனால் முக்கியமான பலன்கள் கிடைக்கும்.

வெற்றிலைப் பாக்கு, புகையிலை போடும் பழக்கங்களைப் பற்றியும் சொன்னேன். இந்த இரண்டும் அசுத்தமான, தீமையான பழக்கங்கள் என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். இந்தியாவில் ஏராளமான ஆண்களும், பெண்களும் இந்தக் கெட்ட பழக்கங்களுக்கு அடிமைகளாகி விட்டார்கள். இந்த அடிமைத்தனத்தை நாம் போக்க வேண்டும். இந்தியாவிற்கு விஜயம் செய்யும் ஓர் அந்நியர் நம்மைப் பார்த்தால் நாள் பூராவும் நாம் எதையாவது சாப்பிட்டுக் கொண்டேயிருக்கிறோம் என்றே நினைப்பார். வெற்றிலை போட்டுக் கொண்டால் ஆகாரம் ஜீரணமாகும் என்பதை ஒப்புக்கொள்ளலாம்; ஆனால், ஆரோக்கிய விதிகளின்படி உணவு உட்கொண்டால் இதனுடைய உதவி இல்லாமலே அது ஜீரணமாகிவிடும். மேலும் வெற்றிலையில் சுவை எதுவும் கிடையாது. புகையிலை போட்டுக் கொள்ளுவதையும் நிறுத்திவிட வேண்டும். மாணவர்கள் எப்போதும் தன்னடக்கத்துடன் இருப்பதற்குப் பழகிக் கொள்ள வேண்டும் புகை பிடிக்கும் வழக்கத்தை சமாளிப்பது சங்கடமானதுதான். இந்த விஷயத்தில் நம்மை ஆளுபவர்கள் ஒரு கெட்ட உதாரணத்தைக் காட்டிவிட்டார்கள். இடம், நேரம் என்று பார்க்காமல் புகை பிடிப்பது அவர்களுடைய வழக்கம். இதனால் அதை ஒரு நாகரிகமாக நாம் நினைக்க ஆரம்பித்து விட்டோம்; நமது வாய்களை புகை போக்கிகளாக ஆக்கிவிட்டோம். புகை பிடிப்பது பெரும் தீங்கு விளைவிக்கிறது என்பதை விளக்கி, தகுதி வாய்ந்த பலர் பல புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள்.

இந்த யுகத்தை நாம் கலியுகம் என்று கூறுகிறோம் மனிதர்களிடையே சுயநலம், ஒழுக்கமின்மை, போதை தரும் வஸ்துக்களைச் சாப்பிடுவது முதலியவை அதிகமாகும் போது, ஏசுநாதர் மீண்டும் இந்த உலகத்தில் ஜன்மம் எடுப்பார் என்று கிறிஸ்தவர்கள் நம்புகிறார்கள். இந்த நம்பிக்கையை எவ்வளவு தூரம் நாம் ஏற்றுக்கொள்ளலாம் என்று நான் சொல்லவில்லை. ஆயினும் கூட, புகையிலை, அபின், கஞ்சா போன்ற தீமைகள் இந்த உலகில் பெரும் அளவுக்கு மலிந்திருக்கின்றன என்றே நான் நினைக்கிறேன். அநேகமாக நாம் எல்லோருமே இவற்றில் சிக்கிக் கொண்டிருப்பதால், இந்தப் பழக்கங்கள் எவ்வளவு தீமையை விளைவிக்கின்றன என்பதை நாம் சரியாக மதிப்பிட முடியாது.

மாணவர்களாகிய நீங்கள் இந்த வழக்கங்களிலிருந்து விலகி நிற்க வேண்டும் என்பதே என்னுடைய பிரார்த்தனையாகும்.

நான் எதற்காக இந்த பிரசங்கங்களைச் செய்கிறேன்? எதற்காக நீங்கள் கேட்கிறீர்கள்? இந்தப் பிரசங்கங்களிலிருந்து நீங்கள் ஏதாவது கற்றுக்கொண்டு, அதை நடைமுறையில் பின்பற்ற வேண்டும் என்பதே இதன் நோக்கமாகும். பெஸண்ட் அம்மையாரின் உபதேசங்களைப் பின்பற்றுபவர்களில் எவ்வளவு பேர் இந்திய முறைப்படி ஆடை அணிந்து கொள்ளுகிறீர்கள், எளிய உணவைச் சாப்பிடுகிறீர்கள், அசுத்தமான பழக்கங்களை கைவிட்டிருக்கிறீர்கள்? அல்லது பேராசிரியர் யதுநாத் சர்க்காரின் யோசனையைப் பின்பற்றி உங்களில் எவ்வளவு பேர் உங்களுடைய கோடை விடுமுறையில், பணம் எதுவும் வாங்கிக் கொள்ளாமல் ஏழை மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறீர்கள்? இந்த மாதிரி பல கேள்விகளைக் கேட்கலாம். இப்போது பதில் சொல்ல வேண்டும் என்று நான் கேட்கவில்லை. ஆனால், இந்தக் கேள்விகளுக்கான பதில்களை உங்களுடைய மனச்சாட்சியினிடமே நீங்கள் சொல்லிக் கொள்ளலாம்.

உங்களுடைய அறிவின் மதிப்பு புத்தி பூர்வமாக நீங்கள் என்ன கற்றுக் கொண்டீர்கள் என்பதைப் பொறுத்திருக்கவில்லை; நீங்கள் எப்படி நடந்து கொள்ளுகிறீர்கள் என்பதையே பொறுத்திருக்கிறது. உங்களுடைய மனத்தை புத்தக அறிவைக் கொண்டு நிரப்பியதற்கு வெகுமதியாக ஏதாவது பணம் கிடைக்கலாம். ஆனால், நீங்கள் செய்யும் நல்ல வேலையின் மதிப்பு அதை விடப் பன்மடங்கு அதிகமானதாயிருக்கும். நீங்கள் கற்றுக் கொள்ளுவதையும் உங்களுக்குச் சரி என்று தோன்றுவதையும் செயலில் காட்ட வேண்டும் என்பதே என்னுடைய வேண்டுகோளாகும். அது ஒன்றுதான் முன்னேற்றத்திற்கு வழியாகும்.

## 4

# ஆங்கிலம் தேசீய மொழி ஆகமுடியுமா?

[4—2—1916-இல் காசி ஹிந்து சர்வகலாசாலை ஆரம்ப விழாவின்போது காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரம் வருமாறு :]

இந்த சர்வகலாசாலைக்கு வரும் இளைஞர்கள் தமது தாய் மொழிகளின் மூலம் கல்வி பெறச் செய்வதற்கு இங்கு ஏற்பாடு செய்யப்படும் என்று நம்பிக்கொண்டிருக்கிறேன். நம்மைக் காட்டும் பிரதிபிம்பம்தான் நம்முடைய மொழியாகும். சிறந்த சிந்தனைகளை வெளியிடுவதற்குப் போதிய அளவு நமது மொழிகள்

வளம் பெற்றிருக்கவில்லை என்று நீங்கள் சொல்லுவதாயிருந்தால், எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக நாம் இந்த உலகத்திலிருந்து ஒழிந்து விடுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நமக்கு நன்மையாகும் என்றே சொல்லுவேன். எந்தக் காலத்திலாவது ஆங்கிலம் இந்தியாவின் தேசீய மொழியாகக் கூடும் என்று கனவு காண்பவர் யாராவது இருக்கிறாரா ('இல்லை, இல்லை' என்ற கோஷங்கள்) தேசத்திற்கு ஏன் இந்தச் சுமை? புனவிலுள்ள சில பேராசிரியர்களிடம் நெருங்கிப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஒவ்வொரு இந்திய இளைஞனும், ஆங்கிலத்தின் மூலமே கல்வி அறிவு பெறுவதால் தன் வாழ்க்கையில் குறைந்த பட்சம் ஆறு வருடங்களையாவது இழந்துவிடுவதாக அவர்கள் என்னிடம் கூறினார்கள். நமது பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளிலிருந்து தேர்ச்சி பெற்றுவரும் மாணவர்களின் எண்ணிக்கையால் அதைப் பெருக்கிப் பாருங்கள். தேசத்திற்கு எவ்வளவு ஆயிரக்கணக்கான வருடங்கள் நஷ்டமாகியிருக்கின்றன என்பது அப்போது தெரியும். நம்மிடம் ஒரு காரியத்தைச் செய்வதற்கான சுய ஊக்கம் இல்லை என்பது நம்மீது உள்ள குற்றச்சாட்டாகும். நம்முடைய வாழ்க்கையில் முக்கியமான வருடங்களை ஒரு அந்நிய மொழியை கற்றுக் கொள்ளுவதிலேயே செலவிடுவதாயிருந்தால் சுய முயற்சி எப்படி இருக்கும். அந்நிய மொழியைக் கற்றுக் கொள்ளும் முயற்சியிலும் நாம் தோல்வியுற்று விடுகிறோம். நேற்றும் இன்றும் பேசியவர்களில் யாராவது ஸ்ரீ ஹிக்கின்பாதத்தைப் போல் அவ்வளவு சுலபமாக நம் கவனத்தைக் கவர முடிந்ததா? அப்படிச் செய்ய முடியாமல் போனது முன்னால் பேசியவர்களுடைய குற்றமல்ல. அவர்களுடைய பிரசங்கங்களில் நிறைய விஷயம் இருந்தது. அப்படி இருந்தும் அவர்கள் நம் கவனத்தை ஈர்க்க முடியவில்லை. இந்தியாவில் ஆங்கிலக் கல்வி கற்றவர்கள்தான் தலைமை வகிக்கிறார்கள் என்றும், தேசத்திற்கு வேண்டிய காரியங்களை எல்லாம் அவர்கள்தான் செய்கிறார்கள் என்றும் கூறப்படுவதை நான் கேட்டிருக்கிறேன். அது வேறுவிதமாக இருந்தால்தான் அக்கிரமமானதாக இருந்திருக்கும். ஆங்கிலக் கல்வி ஒன்றுதான் நாம் பெறும் கல்வியாகும். அதற்குப் பிரதியாக ஏதாவது காட்ட வேண்டாமா? சென்ற ஐம்பது வருடங்களாக நமது தாய் மொழிகளின் மூலம் நாம் கல்வி பெற்றிருந்தால் இன்று நிலைமை எப்படி இருக்கும்? இந்தியா சுதந்திர நாடாகியிருக்கும்; படித்தவர்கள் நம் நாட்டிலேயே அந்நியர்களைப் போல் இருக்கமாட்டார்கள்; மக்களின் உள்ளத்தைத் தொடும் விதத்தில் பேசுவார்கள்; பரம ஏழைகளிடையே வேலை செய்துகொண்டிருப்பார்கள்; சென்ற ஐம்பது வருடங்களில் அவர்கள் பெற்றதெல்லாம் தேசத்திற்கு ஒரு ஆஸ்தியாக இருந்திருக்கும். (கரகோஷம்) இன்று நமது சிறந்த சிந்தனைகளை நமது மனைவிமார்கள் கூடப் பகிர்ந்து கொள்ள முடிவதில்லை. பேராசிரியர் போஸ், பேராசிரியர் ராய் ஆகியவர்களின் அற்புதமான ஆராய்ச்சிகளைப் பாருங்கள். அவர்களுடைய ஆராய்ச்சிகள் பாமர மக்களின்

பொதுச் சொத்தாக இல்லாமல் இருப்பது ஒரு வெட்கக் கேடு அல்லவா?

இனி இன்னொரு விஷயத்தைப் பற்றிக் கவனிப்போம்.

சுய ஆட்சியைப் பற்றி காங்கிரஸ் ஒரு தீர்மானம் நிறை வேற்றியிருக்கிறது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும், முஸ்லிம் லீகும் உருவான யோசனைகளைக் கூறி தம் கடமையைச் செய்ய முன்வரும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் என்னைப் பொறுத்த வரையில், அவர்கள் என்ன யோசனைகளைக் கூற முடியும் என்பதில் எனக்கு அவ்வளவு அக்கறை இல்லை; மாணவர் உலகம் என்ன செய்யப் போகிறது, அல்லது பாமர மக்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்பதில் தான் எனக்கு அக்கறை. காகிதங்களில் திட்டம் போடுவதால் நமக்கு சுய ஆட்சி வந்துவிடாது. எவ்வளவுதான் பிரசங்கங்கள் செய்தாலும், அதனால் நாம் சுய ஆட்சிக்குத் தகுதியுள்ளவர்களாகி விடமாட்டோம். நம்முடைய நடத்தைதான் நம்மை அதற்குத் தகுதியுள்ளவர்களாக்கும். (கரகோஷம்) நம்மை நாமே ஆண்டு கொள்ளுவதற்கு நாம் எப்படி முயற்சி செய்து கொண்டிருக்கிறோம்? இன்று என் மனத்தில் தோன்றும் எண்ணங்களை வாய்விட்டுச் சொல்ல விரும்புகிறேன். நேற்று மாலை நான் ஸ்ரீவிசுவநாதர் ஆலயத்திற்குப் போயிருந்தேன். அந்த சந்துகளின் வழியாக நான் நடந்து போய்க்கொண்டிருந்தபோது எழுந்த எண்ணங்கள் இவைதான்: மேலேயிருந்து யாரோ ஒரு அந்நியர் இந்தப் புராதனமான கோயிலுக்குள் குதிப்பதாக வைத்துக் கொள்வோம். ஹிந்துக்களாகிய நம்மைப் பற்றி அவர் ஒரு அபிப்பிராயம் கூற வேண்டியிருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அப்போது அவர் நம்மைக் கண்டனம் செய்தால் அது நியாயமானதாக இராதா? இந்தப் புராதனமான கோயில் நம்முடைய ஒழுக்கத்தின் பிரதிபலிப்புத்தான் அல்லவா? ஒரு ஹிந்து என்ற முறையில் உணர்ச்சியுடன் நான் பேசுகிறேன். நமது புனிதமான கோயிலுக்குப் போகும் வழியிலுள்ள சந்துகள் இப்படி அசுத்தமாக இருப்பது சரியா? நமது கோயில் கூட விசாலமாகவும், சுத்தமாகவும் இல்லையென்றால் நமது சுய ஆட்சி எப்படி இருக்கும்?

சுய ஆட்சியைப் பற்றி நாம் நினைப்பதற்கு முன்பு, கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியிருக்கும் என்று காங்கிரஸ் அக்கிராசனர் கூறியதை நான் முற்றிலும் ஒப்புக் கொள்ளுகிறேன். ஒவ்வொரு நகரத்திலும் இரு பிரிவுகள் இருக்கின்றன; ஒன்று ராணுவத்தினர் இருக்கும் கண்டோன்மெண்ட், மற்றொன்று சாதாரண நகரம். சாதாரண நகரம் பெரும்பாலும் ஒரே அசுத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் நமது மக்கள் நகர வாழ்க்கைக்கு பழகியவர்கள் அல்ல. நகர வாழ்க்கையை நாம் விரும்பினால் கிராமத்தில் இருப்பதுபோல் இங்கு இருக்க முடியாது. மாடி வீடுகளில் வசிப்பவர்கள் மேலேயிருந்து தம்மீது வெற்றிலைப் பாக்கு எச்சிலைத்

துப்பிவிடுவார்களோ என்று பம்பாய் தெருக்களில் நடப்பவர்கள் பயப்பட வேண்டியிருந்தால் அது நல்லதா? நான் ரயில்களில் நிறைய பிரயாணம் செய்கிறேன். மூன்ருவது வகுப்புப் பிரயாணி களின் கஷ்டங்கள் எனக்கு நன்ருகத் தெரிகிறது. ஆனுல், இதற்கு ரயில்வே நிர்வாகத்தின் மீது குறை சொல்ல முடியாது. சுத்தமாய் இருப்பது பற்றிய ஆரம்ப விதிகளே நமக்குத் தெரிய வில்லை. ரயில் பெட்டிகளில் கீழே படுத்துத் தூங்குவார்களே என்ற நினைவே இல்லாமல் வண்டியில் எங்கு வேண்டுமாஞலும் துப்புகிருேம். சில சமயங்களில் உயர் வகுப்புகளில் பிரயாணம் செய்யும் மாணவர்களும் இப்படித்தான் நடந்து கொள்ளு கிருர்கள். இந்த விஷயங்களில் எல்லாம் நாம் சரியாக நடக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

இனி மற்ருெரு காட்சியைக் கவனிப்போம். நேற்றும் இன்றும் நமக்குத் தலைமை வகித்த மகாராஜாவும், மற்ற பேச் சாளர்களும் இந்தியாவின் வறுமையைப் பற்றி வலியுறுத்திப் பேசினுர்கள். ஆனுல் வைஸ்ராயினுல் அஸ்திவாரக்கல் நாட்டு விழா நடத்தப்பட்ட அந்தப் பெரிய பந்தலில் நாம் என்ன பார்த் தோம்? அது மிகவும் ஆடம்பரமானதாக இருந்தது; பாரிஸி லிருந்தே வரும் ஒரு பெரிய நகை வியாபாரிக்குக் கூட அது கண் கொள்ளாக் காட்சியாக இருந்திருக்கும். இப்படி ஆடம்பரமான ஆடை ஆபரணங்களை அணிந்துவரும் சீமான்களுடன் லட்சக் கணக்கான ஏழைகளை ஒப்பிட்டுப்பார்க்கிறேன். "இந்த நகை களையெல்லாம் நீங்கள் களைந்து, அவற்றை இந்தியாவிலுள்ள உங்கள் நாட்டு மக்களுக்கான தரும சொத்தைப் போல் வைத் திருந்தாலொழிய இந்தியாவிற்கு விமோசனம் கிடையாது" என்றே அவர்களிடம் சொல்லத் தோன்றுகிறது. (கரகோஷம்) நமது மன்னரிடம் நமக்குள்ள உண்மையான விசுவாசத்தைக் காட்டிக் கொள்வதற்காக நம்முடைய நகைப் பெட்டிகளை யெல்லாம் தேடி தலை முதல் கால் வரையில் அலங்காரம் செய்து கொண்டு வரவேண்டும் என்று மன்னரோ, லார்டு ஹார்டிஞ்சோ (வைஸ்ராய்) விரும்புவதாக நான் நினைக்கவில்லை.

இந்தியாவின் ஜனத்தொகையில் எழுபத்தைந்து சத விகிதத்தினருக்கு மேல் விவசாயிகள். ஒரு புல் முளைத்த இடத் தில் இரண்டு புல் முளைக்க வைப்பவர்கள் அவர்கள் தான் என்று ஸ்ரீ ஹிக்கின்பாதம் நேற்றிரவு நமக்கு அழகாக எடுத்துரைத்தார். ஆனுல், அநேகமாக அவர்களுடைய உழைப்பின் பலன் பூராவை யும் நாமே எடுத்துக் கொண்டுவிட்டால் அல்லது அதை மற்றவர் கள் எடுத்துக் கொள்ளும்படி விட்டுவிட்டால், அதில் சுய ஆட்சி உணர்ச்சி அதிகம் இருக்க முடியாது. விவசாயி மூலம்தான் நமக்கு விமோசனம் கிடைக்க முடியும். வக்கீல்களோ, வைத்தி யர்களோ, அல்லது பணக்கார நிலப் பிரபுக்களோ அதை வாங் கித் தரப்போவதில்லை.

கடைசியாக, இந்த இரண்டு மூன்று நாட்களாக நமக்கு மனக் கிளர்ச்சி அளித்துவந்த ஒரு விஷயத்தைப் பற்றிக் குறிப்பிடுவதும் என் கடமையாகும். காசியில் தெருக்களின் வழியாக வைஸ்ராய் போய்க் கொண்டிருந்தபோது நாமெல்லோரும் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். பல இடங்களில் துப்பறிபவர்கள் நிறுத்தப்பட்டிருந்தார்கள். இது நமக்குத் திகைப்பை அளித்தது. ஏன் இந்த அவநம்பிக்கை என்று நம்மை நாமே கேட்டுக்கொண்டோம். உயிருடனேயே பிணம்போல் வாழ்வதை விட லார்டு ஹார்டிஞ்சே கூட இறந்துவிடுவது நல்லதல்லவா ? இந்தத் துப்பறிபவர்களை நம்மீது சுமத்தவேண்டிய அவசியம் என்ன ? இந்தியாவில் இன்று ஏராளமான அராஜகவாதிகள் இருக்கிறார்கள். நானும் ஒரு அராஜகவாதிதான் ; ஆனால் நான் வேறு ரகத்தைச் சேர்ந்தவன். மற்றொரு ரகத்தினரும் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்களை நான் அணுகமுடிந்தால், இந்தியா தன்னை வென்றவர்களை வெல்ல வேண்டுமானால் அவர்களுடைய அராஜகத்திற்கு இந்தியாவில் இடமில்லை என்றே கூறுவேன். நாம் கடவுளுக்குப் பயந்து நடந்தால் மகாராஜாக்களுக்கோ, வைஸ்ராய்களுக்கோ, துப்பறிபவர்களுக்கோ, ஜார்ஜ் மன்னருக்கோ கூட பயப்படவேண்டியதில்லை. அராஜகவாதியின் நாட்டுப்பற்றை நான் பாராட்டுகிறேன். தன்னுடைய நாட்டுக்காகத் தன் உயிரையும் விடத் தயாராக இருக்கும் அவருடைய தீரத்தைப் பாராட்டுகிறேன். ஆனால் கொல்லுவது கௌரவமானதா என்று கேட்கிறேன். இத்தகைய முறைகளுக்கு எந்த சாத்திரங்களிலும் ஆதாரம் இல்லை. இந்தியாவின் விமோசனத்திற்காக ஆங்கிலேயர் வாபஸாவது அல்லது அவர்களை வெளியேற்ற வேண்டியது அவசியமென்று எனக்குத் தோன்றினால், அவர்கள் வெளியேறத்தான் வேண்டும் என்று அறிவிக்க நான் தயங்கமாட்டேன். அந்த நம்பிக்கையைக் காப்பாற்றுவதற்காக என் உயிரைவிடவும் தயாராக இருப்பேன். அது கௌரவமான ஒரு மரணமாக இருக்கும். வெடிகுண்டு வீசுபவன் ரகசியத் திட்டம் போடுகிறான் ; வெளியே வருவதற்கு பயப்படுகிறான் ; அகப்பட்டுக் கொண்டால் தன்னுடைய தவறான ஆர்வத்திற்கான விலையையும் கொடுக்கிறான்.

("மாணவர்களுக்கு" என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது)

# 5

# கல்வியும் கலால் வருமானமும்

கல்விப் பிரச்னையை எப்படித் தீர்ப்பது? துரதிருஷ்டவசமாக இந்த விஷயம் கலால் வருமான நஷ்டத்துடன் இணைந்திருக்கிறது. புதிய வரிகளை விதிப்பதற்கு வழி வகைகள் இருக்கின்றன என்பது உண்மையே. இந்த ஏழை நாட்டில் கூட புது வரிகளை விதிக்கலாம் என்பதை பேராசிரியர்கள் ஷாவும், கம்பாட்டாவும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். செல்வத்திற்கு இன்னும் போதிய அளவுக்கு வரி விதிக்கப்படவில்லை. இந்தியாவில் மிகவும் அதிகமான செல்வம் வைத்துக் கொண்டிருப்பது இந்திய மக்களுக்கு எதிராகச் செய்யப்படும் ஒரு குற்றமென்று கருதப்பட வேண்டும். ஆகையால், ஒரு அளவுக்கு மேல் அதிகப்படியான செல்வத்திற்கு உயர்ந்த பட்ச வரி என்ற வரம்பை எப்போதுமே தாண்ட முடியாது. இங்கிலாந்தில் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் உள்ள வருமானங்களுக்கு ஏற்கனவே 70 சதவிகிதம் வரையில் வரி விதிக்கப்படுவதாக அறிகிறேன். இந்தியாவில் ஏன் இன்னும் அதிகமாக விதிக்கக் கூடாது என்பதற்கு ஒரு காரணமும் இல்லை. இங்கும் ஏன் மரண வரி விதிக்கக் கூடாது? லட்சாதிபதிகளின் சொத்துக்களுக்கு தேசம்தான் வாரிசாக இருக்க வேண்டும். மாகாண சர்க்கார்கள் மரண வரி விதிக்க முடியாது என்ற காரணத்தினால் என்னுடைய வாதம் வலுவிழந்துவிடவில்லை.

ஆனால், ஒரு சமுதாயம் என்ற ரீதியில் பார்க்கும் போது, கல்வி விஷயத்தில் நாம் மிகவும் பின்தங்கியே இருக்கிறோம். பணத்தை நம்பித்தான் நாம் காரியங்கள் செய்ய வேண்டுமென்றால், நமது பொறுப்புகளை இந்தத் தலைமுறையில் நிறைவேற்ற முடியாது. ஆகையால், உருவான யோசனைகளைக் கூறுபவன் என்ற பெயர் போனாலும் போகட்டும் என்று துணிந்து இந்த யோசனையைச் சொல்லியிருக்கிறேன். அதாவது, கல்வி தன்னைக்கட்டிக்கொண்டு போவதாயிருக்க வேண்டும். கல்வி என்றால், குழந்தை அல்லது மனிதனின் உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றிலும் உள்ள சிறந்த அம்சங்களை வெளிக் கொணருவது என்ற அர்த்தத்தில் சொல்லுகிறேன். எழுத்தறிவு என்பது கல்வியின் ஆதியோ, அந்தமோ அல்ல. ஆண்களுக்கும், பெண்களுக்கும் கல்வி புகட்டுவதற்கான சாதனங்களில் ஒன்றுதான் அது. ஆகையால், குழந்தைக்கு முதலில் உபயோகமான தொழில் ஒன்றைக் கற்றுக் கொடுத்து, அக்குழந்தை பயிற்சி பெறும் காலத்திலிருந்தே உற்பத்தி செய்யக் கூடிய விதத்தில் உருவாக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இவ்வாறாக ஒவ்வொரு பள்ளிக்கூடமுமே தன்னைக்கட்டிக் கொண்டு போக முடியும். இந்தப் பள்ளிக்கூடங்களில் உற்பத்தி செய்யப்படு

பவைகளை சர்க்கார் வாங்கிக் கொள்ள வேண்டும் என்பது ஒரு நிபந்தனையாகும்.

இத்தகைய ஒரு கல்வி முறையின் கீழ் மனத்தையும், ஆன்மாவையும் உயர்ந்த முறையில் அபிவிருத்தி செய்வது சாத்தியம் என்று நான் கருதுகிறேன். இன்று செய்வது போல ஒவ்வொரு கைத் தொழிலையும் ஏட்டுப் பாடமாகக் கற்பிக்காமல், விஞ்ஞான முறைப்படி கற்றுக் கொடுக்க வேண்டும்; அதாவது ஒவ்வொரு முறையையும் பற்றி அது ஏன், எதற்காக, எவ்வாறு செய்ய வேண்டும் என்பதைக் குழந்தை தெரிந்து கொள்ளவேண்டும். சிறிது நம்பிக்கையுடன்தான் இதை எழுதுகிறேன். ஏனெனில் எனது நம்பிக்கைக்கு ஆதாரமாக என் அனுபவம் உள்ளது. ஊழியர்களுக்கு நூற்புப் பயிற்சி அளிக்கப்படும் இடங்களிலெல்லாம் இம் முறைதான் அநேகமாகப் பின்பற்றப்படுகிறது. நானும் இதே வழியில் பாதரட்சை தைப்பதும், நூற்பதும் கூடக் கற்றுக் கொடுத்திருக்கிறேன். இம்முறையின் கீழ் வரலாறு, பூகோளம் போதனை விலக்கல்ல. இத்தகைய பொது அறிவை வாய் வார்த்தையாகச் சொல்லித் தருவதுதான் சிறந்த முறை என்பதை நான் காண்கிறேன். படிப்பதையும், எழுதுவதையும் விட இம் முறையில் பத்து மடங்கு அதிக அறிவை ஒருவரால் போதிக்க இயலும். கோதுமைக்கும் உமிக்கும் உள்ள வேறுபாட்டை அறியும் தன்மையை மாணவன் பெற்ற பிறகு அவனுக்கு எழுத்துக்களைக் கற்றுக் கொடுக்கலாம். இது புரட்சிகரமான யோசனையே. ஆனால், இது கணிசமான உழைப்பை மிச்சப்படுத்தும். இது, நீண்டநாள் பயின்று நூற்பதை, ஒரு ஆண்டுக்குள் கற்றுக் கொள்ள மாணவனுக்கு வசதி செய்கிறது. இதனால் பல விதத்திலும் சிக்கனம் ஏற்படுகிறது. மேலும் மாணவன் கைத் தொழிலைப் பயிலும் போதே, கணக்கும் கற்றுக் கொள்கிறான்.

நான் ஆரம்பக் கல்வியை மிகவும் முக்கியமென மதிக்கிறேன். என்னுடைய திட்டப்படி, அது இப்போதைய "மெட்ரிகுலேஷனுக்கு" ஈடாக இருக்கும். அதில் ஆங்கிலம் மட்டுமே இராது. கல்லூரியில் பயின்றவர்கள் பூராவும் திடீரென்று தாங்கள் கற்றதையெல்லாம் மறந்துவிடுவதாக வைத்துக்கொள்ளுவோம். அப்போதும் கூட, முப்பதுகோடி மக்கள் இருள் கடலில் மூழ்கி இருப்பதால் நாட்டுக்கு உண்டான நஷ்டத்துடனும், உண்டாகிக் கொண்டிருக்கும் நஷ்டத்துடனும் ஒரு சில லட்சம் பட்டதாரிகளின் மறதியால் உண்டாகும் நஷ்டத்தை ஒப்பிட்டால் இது நஷ்டமே இல்லை எனலாம்.

நான், கல்லூரிக் கல்வியை புரட்சிகரமாக அமைத்து, நாட்டின் அவசியமான தேவைகளுக்கு இணக்கமானதாக்குவேன். யந்திரவியல் இஞ்சினீர்களுக்கும், மற்ற இஞ்சினீர்களுக்கும் பட்டங்கள் இருக்கும். அவர்கள் பலதரப்பட்ட தொழிற்சாலைகளுடன் சேர்ந்தவர்களாக இருப்பார்கள். இத் தொழிற்சாலைகள் தங்களுக்குத் தேவையான பட்டதாரிகளின்

பயிற்சிக்கான செலவை ஏற்க வேண்டும். இதன்படி, அரசாங்கத்தின் மேற்பார்வையின் கீழ், இஞ்சினீர்களைப் பயில்விப்பதற்கான கல்லூரியை டாட்டா கம்பெனியார் நடத்துவார்கள் என்று எதிர்பார்க்க வேண்டும்; பஞ்சாலைச் சங்கங்கள் தங்களுக்குத் தேவையான பட்டதாரிகளின் பயிற்சிக்கென ஒரு கல்லூரியை நடத்தும். இதே போல மற்றத் தொழிற்சாலைகளும் நடத்திக் கொள்ளலாம். வர்த்தகத் துறை இதற்கென்று கல்லூரிவைத்துக்கொள்ளும். பின்பு கலைகள், வைத்திய, விவசாயத் துறைகள் மிச்சமுள்ளன. பல தனியார் துறைக் கல்லூரிகள் தங்கள் செலவைத் தாங்களே சமாளிக்கும் நிலையில் உள்ளன. ஆகையால் அரசாங்கம் சொந்தக் கலைக் கல்லூரிகளை நடத்துவதை விட்டுவிடலாம். வைத்தியக் கல்லூரிகள் அத்தாட்சி பெற்ற மருத்துவமனைகளுடன் சேர்ந்ததாக இருக்க வேண்டும். பணக்காரர்களிடையில் இதற்கு மதிப்பு உள்ளது; அதனால் அவர்கள் வைத்தியக் கல்லூரிகளை ஆதரிக்க நன்கொடைகள் வழங்குவார்கள் என்று எதிர்பார்க்கலாம். விவசாயக் கல்லூரிகள் அவற்றுக்குரிய மதிப்புடன் இயங்க வேண்டுமெனில், சொந்த மூலதனத்தை ஆதாரமாகக் கொண்டதாக அமைய வேண்டும். சில விவசாயப் பட்டதாரிகளைப் பற்றிய வேதனை மிக்க அனுபவம் எனக்கு உண்டு. அவர்கள் அறிவு மேலெழுந்தவாரியானது. அவர்கள் செயல் அனுபவம் இராதவர்கள்.

இது வெறும் கற்பனைச் சித்திரம் அல்ல. நம்முடைய மனத்திலிருக்கும் சோம்பலைமட்டும் அகற்ற முடிந்தால், காங்கிரஸ் மந்திரிகளுக்கும், அதனால் காங்கிரசுக்கு முன்னாலிருக்கும் கல்விப் பிரச்னைக்கும் இது சிறந்த நியாயமும், அனுபவ சாத்தியமும் நிறைந்த தீர்ப்பாக இருக்கும். பிரிட்டிஷ் அரசாங்கம் சமீபத்தில் பிரகடனம் செய்ததை செவியில் தொனிப்பது போலவே உண்மையில் அர்த்தமுள்ளதாக இருந்தால், தங்கள் கொள்கையை நிறைவேற்ற சிவில் சர்விஸ் அதிகாரிகளின் செயல் திறனும், ஸ்தாபனத் திறனும் காங்கிரஸ் மந்திரிகளின் கைவசம் இருக்கும். திடீர் திடீரென்று மனம் மாறும் கவர்னர்களும் வைஸ்ராய்களும் வகுக்கும் கொள்கைகளைக் கூடச் செயல் படுத்தும் கலையைக் கற்றவர்கள் அதிகார வர்க்கத்தினர். மந்திரிகளும், நன்கு உருவாக்கப்பெற்ற, உறுதியான கொள்கையை வகுக்கட்டும்; அதிகார வர்க்கத்தினரும் தாங்கள் எடுத்துக் கொண்ட பிரமாணத்தைக் கடைப்பிடித்து, தாங்கள் தின்னும் உப்புக்கு உகந்த முறையில் நடந்துகொள்வார்களாக.

ஆசிரியர்கள் பிரச்னை பாக்கி இருக்கிறது. கல்வியில் தேர்ந்த ஆண்களையும் பெண்களையும் கட்டாய சேவையில் ஈடுபடுத்த வேண்டும் என்ற பேராசிரியர் கே. டி. ஷாவின் கருத்தை*

---

* கல்விப் பிரச்னை சம்பந்தமாகப் பல அரிய யோசனைகள் கூறி ஸ்ரீ கே. டி. ஷா எழுதிய கட்டுரை 31-7-1937 ''ஹரிஜனி''ல் வெளியாகியது. அக்கட்டுரையில் கண்ட கருத்தைப் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

அமலுக்குக் கொண்டுவர வேண்டும் என்பது எனது விருப்பம். அவர்கள் எந்தத் துறையில் தகுதி பெற்றிருக்கிறார்களோ, அப் பாடங்களை போதிக்க ஐந்து ஆண்டுகள் என்று வைத்துக் கொண்டு, அவர்களை அமர்த்திக்கொள்ளலாம். நாட்டின் பொருளாதார நிலைக்கேற்ப, அவர்கள் பராமரிப்புக்குரிய அளவுக்கு மேற்படாத ஊதியத்தில் அவர்களை அமர்த்த வேண்டும். உயர் தரக் கல்வித் துறையில் ஆசிரியர்களும், பேராசிரியர்களும் அதிகச் சம்பளம் கேட்பது நிற்க வேண்டும். கிராம ஆசிரியர்களுக்குப் பதில் இன்னும் அதிகத் தகுதி வாய்ந்த ஆசிரியர்கள் நியமிக்கப்பட வேண்டும்.

—'ஹரிஜன்' – 31—7—1937

# 6

# கல்விப் புதிர் !

நமது குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுவதற்கு உதவியாக மது வரி வருமானத்தைத் தவிர சர்க்கார் வேறு எதையும் நமக்கு விட்டு வைக்கவில்லை. புதிய அரசியல் சீர்திருத்தங்களில் இந்த உண்மைதான் மிகவும் குரூரமான ஒரு விந்தையாகும்! இது தான் கல்விப் புதிராக இருக்கிறது. ஆனால் அது நம்மைத் திடுக்கிட வைக்கலாகாது. நாம் அதற்குத் தீர்வு காண வேண்டும். அதனால் வேறு என்ன நேருவதாயினும் சரி, நாம் காணும் தீர்வு நமது மதுவிலக்குக் கொள்கையை விட்டுக்கொடுப்பதாக இருக்கக்கூடாது. மதுவகை வரிகளின் மூலம் கிடைக்கும் வருமானம் இருந்தாலன்றி, நமது குழந்தைகளின் கல்வி பாழ்படும் என்று நினைப்பது வெட்கக்கேடும் இழிவுமாகும். ஆனால் அத்தகைய நிலை எழுமாகில், குறைந்த தீமை என்று அதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். இப்பிரச்னை நம்மைத் திகைக்க வைக்கக் கூடாது. சிக்கனமானதும், அதே சமயத்தில் நமது பெருவாரியான கிராம மக்களின் தேவைகளுக்குத் தகுந்ததாகவும் உள்ளதொரு கல்வி முறையை வகுப்பதில் நமது கல்வி நிபுணர்கள் ஒன்றுபட வேண்டும்.

**கேள்வி :** அப்படியானால் மத்தியதரக் கல்வி என்று அழைக்கப் படுவதை நீங்கள் உண்மையாகவே ஒழித்துவிட்டு, கிராமப் பள்ளிகளிலேயே மெட்ரிகுலேஷன் வரையில் முழுக் கல்வியும் போதிப்பீர்களா ?

**காந்திஜியின் பதில் :** ஆம், நிச்சயமாக. தங்கள் சொந்தத் தாய் மொழியில் இரண்டொரு ஆண்டுகளில் கற்கக் கூடியதை, அந்நிய மொழியில் ஏழு ஆண்டுகளில் கற்கும்படி அப்பாவிச் சிறுவர்களை நிர்ப்பந்தப்படுத்துவதைத் தவிர, உங்கள் மத்தியதரக் கல்வி வேறு என்ன செய்கிறது? அந்நிய

மொழியில் பாடங்களைக் கற்றுக்கொள்ளும் பயங்கரக் கனவி லிருந்து குழந்தைகளை விடுவிக்க மனம் வைத்தால், குழந் தைகள் தங்கள் கைகால்களை லாபகரமான வழியில் பயன் படுத்துவதற்குக் கற்றுக் கொடுத்தீர்களானால், கல்விப் புதிர் அவிழ்ந்துவிடும். பிறகு முழு கலால் வருமானத்தையும் கொஞ்சமும் இரக்கமில்லாமல் துறந்துவிடலாம். முதலில் கலால் வருமானத்தைத் துறப்பதற்கு உறுதிகொள்ள வேண்டும். அப்புறம் கல்விக்கான வழிவகைகளைப் பற்றி யோசிக்க வேண்டும். இப்பெரும் நடவடிக்கையை எடுப் பதன் வாயிலாகக் கல்விச் சீர்திருத்தத்தை ஆரம்பம் செய் யுங்கள்.

—'ஹரிஜன்' – 21—8—1937

# 7

# சுய பலத்தில் நிற்கும் கல்வி

வருமானம் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, கல்வி இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, பூரண மதுவிலக்கை அடைந்தே தீருவதென்ற உறுதியான நம்பிக்கையுடன் துவங்க வேண்டும். அது போல, இந்தியக் கிராமங்களின் தேவைகளைக் கவனிப்பதென்றால், நமது கிராமக் கல்வி கட்டாயமாக்கப்படுவ தாக இருந்தால், அது சொந்த பலத்தைக் கொண்டு இயங்குவ தாக அமைய வேண்டும் என்ற உறுதியான நம்பிக்கையுடன் தொடங்க வேண்டும்.

என்னுள்ளத்தின் ஆழத்தில் முதல் நம்பிக்கை ஊன்றி யுள்ளது. எனக்கு மதுவிலக்கே ஒரு லட்சியமாகும். அதையே நான் மாபெரும் கல்விப் பயிற்சி என மதிக்கிறேன். ஆகையால், மதுவிலக்கின் வெற்றிக்காக, கல்வியை அடியோடு துறந்து விடுவேன். ஆனால் மற்றொரு நம்பிக்கை ஏற்படவில்லை. கல்வி சுய பலத்தின் மீது நிற்பதாக அமைய முடியும் என்று எனக்கு இன்னமும் நம்பிக்கை ஏற்படவில்லை.

அங்கும் கூட நீங்கள் உறுதியுடன் தொடங்க வேண்டு மென்று நான் விரும்புகிறேன். அப்பால் நீங்கள் அதை செயல் படுத்தும்போது வழிவகைகள் தானாகவே உங்களை நாடி வரும். மிகவும் வயதான காலத்தில் இந்த அவசியத்தைப்பற்றி விழிப் பேற்பட்டது குறித்து நான் விசனப்படுகிறேன். இல்லையெனில் நானே இந்த சோதனையை நடத்திப் பார்த்திருப்பேன். இப் போதும் கூட, ஆண்டவன் சித்தமிருந்தால் கல்வி சுயபலத்தைக் கொண்டு இயங்க இயலும் என்பதைக் காட்ட என்னால் இயன்ற தைச் செய்வேன். ஆனால், இத்தனை ஆண்டுகளாக வேறு பல பிரச்னைகள் என் காலத்தை எடுத்துக் கொண்டன. அவையும் இதைப்போல் முக்கியமானவையே. சேவா கிராமத்தில்

என்னுடைய வாசம்தான், என்னுடைய நம்பிக்கையை உறுதி செய்தது. குழந்தைகளின் மனத்தைத் தூண்டிவிட்டு, வளர்ப்ப தென்ற சிந்தனையில்லாமல் இதுகாறும் குழந்தைகளின் உள்ளத் தில் எல்லாவிதமான தகவல்களையும் அடைப்பதில் முனைந்திருந் தோம். இனி அதை நிறுத்திவிடுவோம். உழைப்பின் மூலம் குழந்தைக்குத் தகுந்த முறையில் கல்வி போதிப்பதில் முனைவோ மாக. ஒழிந்த வேளையில் ஈடுபடும் செயலாக இல்லாமல், அறிவுப் பயிற்சிக்கு பிரதான சாதனமென்று கருதி அதைச் செய்ய முற்படுவோமாக. பதினன்கு வயதான குழந்தை, அதாவது ஏழு ஆண்டுகள் கல்விப் பயிற்சியை முடிக்கும் குழந்தை, சம்பா திக்கும் சக்தி வாய்ந்தவனுக வெளிவர வேண்டும். இப்போதும் கூட, ஏழை மக்களின் குழந்தைகள் தங்கள் பெற்றோருக்கு உதவி யாகத் தாங்களாகவே முன்வந்து வேலை செய்கிறார்கள். நான் அவர்களுடன் சேர்ந்து வேலை செய்யாவிடில் என் பெற்றோர் எதை உண்பார்கள்? நான் உண்பதற்கு எதைக் கொடுப்பார் கள்? இந்த வளர்ச்சிதான் குழந்தைகளின் மனத்தில் ஊடாடிக் கொண்டிருக்கும். இதுவே ஒரு கல்விப் பயிற்சியாகும். அதே போல, அரசாங்கம் குழந்தைக்கான பொறுப்பை ஏழு வயதில் ஏற்றுக் கொள்கிறது; குழந்தையைச் சம்பாதிக்கும் உறுப் பினனுக குடும்பத்திடம் திருப்பித் தருகிறது; கல்வியைப் புகட் டும் அதே சமயத்தில் வேலையின்மையின் ஆணி வேரையும் அறுத்துவிடுகிறது. குழந்தைகளுக்கு ஏதாவதொரு தொழிலில் பயிற்சி இருக்க வேண்டும். இவ்விசேஷத் தொழிலின் அடிப் படையில் அவனது அறிவு, உடல் வளம், அவனது எழுத்து, அவனது கலை உணர்ச்சி போன்ற எல்லாவற்றிலும் பயிற்சி அளிப்பீர்கள். அவன் கற்கும் கைத்தொழிலில் அவன் நிபுணன் ஆகிவிடுவான்.

**கேள்வி:** கதரை உற்பத்தி செய்யும் கலையிலும் விஞ்ஞானத் திலும் ஒரு மாணவன் பயிற்சி பெற வருவதாக வைத்துக் கொள்வோம். அக் கைத்தொழிலில் தேர்ச்சி பெற ஏழு ஆண்டுக் காலமும் அவன் ஈடுபட வேண்டுமென்று நினைக் கிறீர்களா?.

**பதில்:** ஆம். அவன் அதை வெறும் யந்திரம் போலக் கற்க வில்லை எனில், ஏழு வருடமும் அதில் ஈடுபட வேண்டியது தான். வரலாறு அல்லது மொழிகள் பயிலுவதற்கு ஏன் அத்தனை ஆண்டுகள் வைக்கிறோம்? இப்பாடங்களைவிட, கைத் தொழில் பயிற்சி எந்த விதத்தில் குறைவானது? இப்பாடங்களுக்கு இதுவரை கொடுத்திருப்பதெல்லாம் செயற்கை முக்கியத்துவம்தான் அல்லவா?

**கேள்வி:** ஆனல் நீங்கள் பிரதானமாக நூல் நூற்பதையும், நெசவையும்பற்றித்தான் சிந்தித்து வருகிறீர்கள். பல நெசவுப் பள்ளிகளாக இப்பள்ளிக் கூடங்களை மாற்றுவது தங்கள் யோசனை போலும். ஒரு குழந்தைக்கு நெசவில்

திறமை ஏற்படாதிருக்கலாம்; ஆனால் வேறொன்றில் திறமை இருக்கக் கூடும்.

**பதில் :** உண்மைதான். அப்போது அவனுக்கு வேறொரு தொழிலை கற்றுத் தருவோம். ஒரே பள்ளி பல தொழில்களைக் கற்றுத் தராதென்பது உங்களுக்குத் தெரியும். இருபத்தைந்து மாணவருக்கு ஒரு ஆசிரியர் வீதம் இருக்க வேண்டும் என்பது என் யோசனை. ஆசிரியர்கள் கிடைக்கும் அளவுக்கு எத்தனை இருபத்தைந்து மாணவர் கொண்ட வகுப்புகள் அல்லது பள்ளிகள் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். மேலும் இதில் ஒவ்வொரு பள்ளியும் ஒவ்வொரு தனித்தனி தொழிலில் விசேஷப் பயிற்சி தருவதாக இருக்கலாம். அதாவது தச்சு வேலை, கருமான் பணி, தோல் பதனிடுதல் அல்லது பாதரட்சை தைத்தல் போன்ற தொழில்களில் பயிற்சி தருவதாக இருக்கலாம். ஆனால், ஒரே ஒரு உண்மையை மட்டும் மனத்தில் இறுத்திக் கொள்ள வேண்டும். இக் கைத் தொழில்கள் ஒவ்வொன்றின் மூலமும் குழந்தையின் மனத்தை வளர்க்கிறீர்கள் என்ற உண்மை கவனமிருக்க வேண்டும். இன்னொரு விஷயத்தையும் அழுத்திச் சொல்ல விரும்புகிறேன். நகரங்களை மறக்க வேண்டும்; கிராமங்களில் முனைய வேண்டும். கிராமங்கள் பெருங்கடல். நகரங்கள் அப்பெருங்கடலில் ஒரு துளியே. அதனால்தான் நீங்கள் செங்கல், சூளைத் தொழில் போன்ற பாடங்களைச் சிந்திப்பதற்கில்லை. மாணவர்கள் பொதுப் பணி இஞ்சீனீர்களாகவும், யந்திரவியல் இஞ்சினீர்களாகவும் வர வேண்டுமெனில், ஏழாண்டுப் பயிற்சி முடிந்த பிறகு இவ்வித உயர்தர விசேஷப் பயிற்சிகளுக்குரிய தனிப்பட்ட கல்லூரிகளுக்குப் போவார்கள்.

மேலும் மற்றோர் உண்மையையும் வலியுறுத்த விரும்புகிறேன். கைவேலைப் பயிற்சியிலிருந்து கல்வியைப் பிரித்து விட்டால், கிராமக் கைத் தொழில்கள்பற்றி மேலாக நினைக்க இடம் உண்டு. உடலுழைப்பு ஏதோ மட்டமானதென்று கருதப் படுகிறது. வர்ணாசிரம முறையைக் கேவலமாகத் திரித்துவிட்டதால், நூற்பாளர், நெசவாளர், தச்சர்கள், பாதரட்சை செய்வோர் போன்றவர்களை கீழ்த்தர வகுப்பினர் எனக் கருதலானோம். கைத்தொழில்கள், திறமையான தொழில்களிலிருந்து வேறுபட்டவை என்றும், மட்டமானதென்றும் கருதும் விஷச் சூழல் காரணமாகவே நம்மிடையில் சிறந்த தொழில் நிபுணர்கள் தோன்றவில்லை. அறிவுடைமை அனுபவித்து வந்த அதே சுயேச்சை அந்தஸ்துள்ளதாக இத்தொழில்களும் மதிக்கப் பெற்றிருந்தால், நம்முடைய கைவினைத் தொழிலாளரிடையில் மாபெரும் கண்டுபிடிப்பு மேதாவிகளைப் பெற்றிருப்போம்.

—'ஹரிஜன்' - 8—9—1937

# 8

# கல்வி ஸ்தாபனங்களின் பணி

தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதே தீங்கை விளைவிக்கக் கூடியது. மாணவர்கள் வேலை நிறுத்தம் என்பது அதைவிட மிகவும் மோசமானது. அந்த வேலை நிறுத்தம் நியாய மானதாக இருந்தாலும், அநியாயமானதாக இருந்தாலும் தீங்கு தான். இறுதியில் அதனுல் ஏற்படும் விளைவுகள், அதில் ஈடுபடு பவர்களின் அந்தஸ்து முதலியவைதான் அதற்குக் காரணம். தொழிலாளர்களைப் போலன்றி, மாணவர்கள் படித்தவர்கள். வேலை நிறுத்தங்களின் மூலம் அவர்கள் எந்த லாபமும் பெற முடியாது. தொழிலதிபர்களைப் போல் அன்றி கல்வி ஸ்தாபனங் களின் தலைவர்கள் தம் மாணவர்களுடன் முரண்பட்டுக் கொள் ளுவதில் எந்த அக்கறையும் இருக்க முடியாது. ஆகையால், மாண வர்கள் வேலை நிறுத்தம் என்பது மிகப் பெரிய விளைவுகளை உண்டாக்குகிறது. மிகவும் அசாதாரணமான நிலைமையில் தான் அத்தகைய நடவடிக்கைக்கு நியாயம் இருக்க முடியும்.

நன்கு நடத்தப்படும் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் மாண வர்கள் வேலை நிறுத்தம் செய்யும்படியான சந்தர்ப்பங்கள் மிகவும் அரிதாகவேதான் இருக்க வேண்டும். ஆயினும், அம்மாதிரி நிலைமைகளும் ஏற்படக்கூடும். உதாரணமாக, பள்ளிப் பிள்ளை களும், பெற்ருேர்களும் விரும்பிக் கொண்டாடும் ஒரு பண்டி கைக்கு ஒரு தலைமை ஆசிரியர் விடுமுறையளிக்க மறுத்தால், அன்று மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்வது நியாயமாயிருக் கும். இந்தியாவிலுள்ள மாணவர்கள் தேசத்திற்குத் தாம் செய்ய வேண்டிய கடமையை இன்னும் நன்ருக உணர ஆரம்பிக்கும் போது, இம்மாதிரி சந்தர்ப்பங்கள் இன்னும் அடிக்கடி ஏற்படும்.

ஆசிரியர் தொழில் என்பது மிகவும் கௌரவமானது. அத் தொழிலில் இருப்பவர் மரியாதைக்கு உரியவர். ஆனுல், கண்ணி யத்தை மீறி நடந்து கொண்ட ஒரு ஆசிரியருக்கு மரியாதை செலுத்துவதென்பது அசாத்தியமானதாகும்.

திட்டவட்டமான அரசியல் கருத்துகள் உள்ளவர்கள் அல் லது சர்க்காருக்குப் பிடிக்காத அரசியல் கூட்டங்களில் கலந்து கொள்ளும் மாணவர்கள் விஷயத்தில் சர்க்கார் கல்லூரிகளில் அளவுக்கு மீறி துன்புறுத்துதலும், உளவறிவதும் இருந்து வரு கின்றன. நியாயமற்ற இந்தத் தலையீடு உடனடியாக நிறுத்தப் பட வேண்டும். அந்நியர் ஆட்சியின் கீழ் திணறிக் கொண்டிருக் கும் இந்தியா போன்ற ஒரு நாட்டில், தேசீய சுதந்திரத்திற்கான இயக்கங்களில் மாணவர்கள் பங்கு கொள்ளுவதைத் தடுப் பது சாத்தியமில்லை. தங்களுடைய உற்சாகத்தை, படிப்புக்கு பாதகமில்லாத விதத்தில் அவர்கள் கட்டுப்படுத்திக் கொள்ள

வேண்டுமென்று மட்டும்தான் சொல்லலாம். சண்டை போட்டுக் கொண்டிருக்கும் கட்சிகளுடன் அவர்கள் சேரக்கூடாது. ஆனால், எந்த அரசியல் அபிப்பிராயம் தமக்கு உகந்தது என்று முடிவு செய்து, அதைத் தீவிரமாகப் பரப்பும் உரிமை அவர்களுக்கு இருக்க வேண்டும். வகுப்புகளில் சேரும் பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் கல்வியளித்து, அதன் மூலம் அவர்களுடைய ஒழுக்கத்தை உருவாக்க உதவி செய்வதுதான் கல்வி ஸ்தாபனங்களின் பணியாகும்; பள்ளிக்கூடத்திற்கு வெளியே அவர்களுடைய அரசியல் நடவடிக்கைகளிலோ ஒழுக்கத்திற்கு விரோதமான இதர நடவடிக்கைகளிலோ தலையிடக் கூடாது.

—'எங் இந்தியா' – 24—1—1929

# 9

# உயர்தரப் படிப்பைக் கைவிடலாம்

லட்சக்கணக்கான மக்கள் ஜீவனம் நடத்துவதே கஷ்டமாக இருக்கும்போது, பட்டினியால் லட்சக்கணக்கானவர்கள் மடிந்து கொண்டிருக்கும்போது, நம்முடைய உறவினர்களுக்கு அதிகப் பொருட் செலவில் கல்வியளிக்க வேண்டுமென்று நினைப்பது அக்கிரமமாகும். கல்லூரி அல்லது வகுப்பறையில் தான் மனம் விரிவடையும் என்பதில்லை. கடுமையான அனுபவத்தின் மூலமே அது ஏற்படும். உயர்தரக் கல்வி என்று சொல்லப்படுவதை நாம் கைவிட்டோமானால், உண்மையான உயர்தரக் கல்வியளிப்பதற்கும், பெறுவதற்கும் நாம் உண்மையான வழிகளைக் கண்டு பிடிப்போம். ஒவ்வொரு பையனும் தன் கல்விக்கு வேண்டியதைத் தானே சம்பாதித்துக் கொடுக்க வழியில்லையா, இருக்க முடியாதா? அம்மாதிரி வழி எதுவும் இல்லாமலிருக்கலாம். அத்தகைய வழி இருக்கிறதா, இல்லையா என்பது முக்கியமல்ல. அதிகப் பொருட் செலவில் கல்வி பெறுவதை நாம் நிறுத்திக் கொண்டோமானால், நம்முடைய சூழ் நிலைக்கேற்ற விதத்தில் உயர்தரக் கல்வி பெறுவதற்கு ஏதாவது ஒரு வழி கண்டுபிடிப்போம். லட்சக்கணக்கான மக்களுக்குக் கட்டுபடியாகாததை நாம் பெறுவதில்லை என்று உறுதியுடன் மறுப்பதுதான் பொன்னை விதியாகும். இப்படி மறுக்கும் சக்தி திடீரென்று நம்மிடம் வந்து குதித்துவிடாது. பாமர மக்களுக்குக் கிடைக்காத உடைமைகள் அல்லது வசதிகளை நாம் வைத்துக் கொள்ளுவதில்லை என்ற மனோபாவத்தை வளர்ப்பதுதான் முதல் காரியமாகும். அந்த மனோபாவத்திற்கு ஏற்றவாறு நாம் வாழ்க்கையைத் திருத்தியமைத்துக் கொள்ள வேண்டியது உடனடியாகச் செய்ய வேண்டிய அடுத்த காரியமாகும்.

—'எங் இந்தியா' – 24—6—1928

# 10

# தனக்குத்தானே கல்வி போதனை

பள்ளிக்கூடங்களுக்கும், கல்லூரிகளுக்கும் போனால்தான் அறிவு வளருமென்று நினைப்பது முற்றிலும் ஒரு மூட நம்பிக்கையாகும். பள்ளிகளோ, கல்லூரிகளோ ஏற்படுவதற்கு முன்பே உலகத்தில் திறமைசாலிகள் இருக்கத்தான் செய்தார்கள். தனக்குத்தானே கல்வி போதித்துக் கொள்ளுவதைப் போல் உன்னதமானதும், நிலையானதும் வேறு எதுவுமில்லை. அவசியமில்லாத அறிவைச் சேகரித்து வைத்துக் கொள்ளும் பாத்திரங்களாகவே கல்லூரிகளும், பள்ளிகளும் நம்மில் பெரும்பாலோரைச் செய்து விடுகின்றன. கோதுமையை விட்டுவிட்டு, தவிடு மாத்திரமே எடுத்துக் கொள்ளப்படுகிறது. பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் குறை கூற நான் விரும்பவில்லை. அவற்றிற்கும் உபயோகம் இருக்கிறது. ஆனால், அவற்றை மிகவும் பிரமாதப் படுத்திக் கொண்டிருக்கிறோம். அறிவைப் பெறுவதற்கான பல வழிகளில் அதுவும் ஒன்று.

—'எங் இந்தியா' – 25—6—1931

# 11

# ஒரு மாணவரின் சந்தேகம்

ஒரு மாணவர் கேட்கிறார் :

"மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ச்சி பெற்றவர் அல்லது பி.ஏ. பரீட்சையில் தேர்ச்சி பெறாத ஒருவருக்கு துரதிர்ஷ்டவசமாக இரண்டு, மூன்று குழந்தைகள் இருந்தால், ஜீவனத்திற்குத் தேவையானதைச் சம்பாதிப்பதற்கு அவர் என்ன செய்ய வேண்டும்? தன்னுடைய விருப்பத்திற்கு விரோதமாகவும், 25 வயது ஆவதற்கு முன்பும் கூட அவர் மணந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால், அவர் என்ன செய்ய வேண்டும்?"

தன்னுடைய மனைவியையும், குழந்தைகளையும் காப்பாற்றத் தெரியாதவன் அல்லது தன் விருப்பத்திற்கு விரோதமாக மணந்து கொள்ளுபவன் படித்த படிப்பு உதவாக்கரையானது என்பதே இதற்குப் பதிலாகும். என்ன செய்வதென்று தெரியாமல் திண்டாடும் மாணவனுக்கு உதவியாக இருக்கக் கூடிய விதத்தில் பதிலளிக்க வேண்டியதுதான். தன்னுடைய தேவை என்ன என்பதை அவர் சொல்லவில்லை. மெட்ரிகுலேஷன் படித்தவர் என்பதற்காக அவர் தன் தேவையை மிகவும் உயர்த்திச்

சொல்லாமலிருந்தால், சாதாரண ஒரு தொழிலாளியைப்போல் அவர் தன்னை பாவித்துக் கொள்ளத் தயாராயிருந்தால், அவர் தன் வாழ்க்கைக்குத் தேவையானதைச் சம்பாதித்துக் கொள்ளுவதில் ஒரு கஷ்டமும் இருக்க முடியாது. அவருடைய புத்திசாலித்தனம் அவருடைய கைகளுக்கும், கால்களுக்கும் உதவியாக இருக்கவேண்டும். தன்னுடைய புத்திசாலித்தனத்தை வளர்த்துக் கொள்ள வாய்ப்பு பெறாத தொழிலாளர்களைவிட அவர் நன்கு வேலை செய்ய முடியும். இதனால் ஆங்கிலம் கற்றுக் கொள்ளாத தொழிலாளிக்கு புத்திசாலித்தனமே இல்லையென்று சொல்லுவதாக அர்த்தமில்லை. துரதிர்ஷ்டவசமாக தொழிலாளர்கள் தம் மனத்தை அபிவிருத்தி செய்து கொள்ளுவதற்கு உதவியளிக்கப்பட்டதேயில்லை. உலகத்தில் வேறு எந்தப் பகுதியிலும் காணப்படாத பிரதிகூலத்தின் கீழ் படித்த போதிலும், பள்ளிக்கூடம் செல்லுபவர்களின் மனம் திறக்கப்படுகின்றது. ஆனால் இது கூட, பள்ளிக்கூட, கல்லூரி நாட்களில் பெற்ற வறட்டு கௌரவத்தினால் பாதிக்கப்பட்டுவிடுகிறது. மேஜை எதிரில் உட்கார்ந்து வேலை செய்தால்தான் சம்பாதிக்க முடியுமென்று மாணவர்கள் நினைக்கிறார்கள். ஆகையால், இந்தக் கடிதத்தை எழுதியவர் உழைப்பின் உயர்வை உணர்ந்து தன்னையும், தன் குடும்பத்தையும் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு அந்தத் துறையில் முயற்சி செய்ய வேண்டும்.

அவருடைய மனைவி தன் ஓய்வு நேரங்களில் ஏதாவது செய்து, குடும்ப வருமானத்தை ஏன் பெருக்கக் கூடாது? அதே மாதிரி, குழந்தைகள் ஏதாவது வேலை செய்ய முடியுமென்றால், அவர்களுக்கு ஊக்கமளிக்க வேண்டும். புத்தகங்களைப் படிப்பதால்தான் புத்திசாலித்தனத்தை வளர்க்க முடியும் என்ற முற்றிலும் தவறான எண்ணத்தைக் கைவிட வேண்டும்; விஞ்ஞான ரீதியில் தொழில் செய்யக் கற்றுக் கொள்ளுவதால் தான் புத்திசாலித்தனத்தை சீக்கிரத்தில் வளர்க்க முடியுமென்ற உண்மையை உணர வேண்டும். கைகளை அல்லது கருவியை ஏன் ஒரு குறிப்பிட்ட விதத்தில் உபயோகிக்க வேண்டும் என்று சொல்லிக் கொடுக்கப்படும் போதெல்லாம், உடனடியாக உண்மையான மனவளர்ச்சி ஏற்படுகிறது. படித்தவர்கள் சாதாரண தொழிலாளர்களுக்குச் சமமாகத் தம்மை பாவித்துக் கொள்ளத் தயாராயிருந்தால், படித்தவர்களிடையே வேலை இல்லாமை என்ற பிரச்னையைக் கஷ்டமில்லாமல் தீர்த்து விடமுடியும்.

—'ஹரிஜன்' - 9—1—1937

# 12

# வெளிநாட்டுப் படிப்புகள்

நமது மாணவர்கள் வெளிநாடுகளுக்குப் போவதை நான் எப்போதுமே ஆதரித்ததில்லை. அப்படிச் செல்லுபவர்கள் திரும்பி வரும்போது, இந்தியாவின் சூழ்நிலைக்குப் பொருந்தாதவர்களாக இருக்கிறார்கள் என்பதே என்னுடைய அனுபவமாகும். நாட்டின் சூழ்நிலையிலிருந்து தோன்றும் அனுபவம்தான் மிகுந்த வளமுள்ளது; வளர்ச்சிக்கு மிகவும் அதிகமாக உதவுவதும் அதுதான்.

—' ஹரிஜன் '–8—9—1946

# 13

# மாணவர்களும் அரசியலும்

கட்டுப்பாடான மாணவர் ஸ்தாபனம் ஒன்றிருந்தால், அது சேவைக்கான ஒரு மகத்தான கருவியாக இருக்க முடியும். அதனுடைய நோக்கம் ஒன்றே ஒன்றாகத்தான் இருக்க முடியும், அதாவது நல்ல வருவாய் அளிக்கும் உத்தியோகங்களைத் தேடிக் கொண்டிருப்பதல்ல, தாய் நாட்டின் சேவைக்குத் தயார் செய்து கொள்ளுவது என்பதே லட்சியமாக இருக்க வேண்டும். அவர்கள் அப்படிச் செய்தால், அவர்களுடைய அறிவு பெரிதும் வளரும். கிளர்ச்சி என்பது தமது படிப்புகளை முடித்தவர்களுக்குத்தான். தமது அறிவை வளர்த்துக் கொள்ளுவது ஒன்றுதான் படித்துக் கொண்டிருக்கும் போது மாணவர்களின் ஒரே வேலையாக இருக்க வேண்டும். இன்று நடைமுறையில் உள்ள கல்வித் திட்டம், இந்தியாவிலுள்ள பாமர மக்களின் நலன்களுக்கு விரோதமான முறையிலேயே உருவாக்கப்பட்டுள்ளது. இப்போதுள்ள கல்வி முறை தேசத்திற்குச் சிறிது உபயோகமாயிருந்திருக்கிறது என்று நிரூபிப்பது சாத்தியமே. ஆனால், அது சொற்பமானதேயாகும். அதைக் கண்டு யாரும் ஏமாந்து விடவேண்டாம். அது உபயோகமாக இருக்கிறதா என்பதற்குச் சோதனை இதுதான்: உணவு, உடை உற்பத்திக்கு அது பலனளிக்கத்தக்க விதத்தில் உதவி செய்திருக்கிறதா? ஒரு நாட்டில் அளிக்கப்படும் கல்வி அந்த நாட்டின் வளர்ச்சிக்கு உதவி செய்திருக்கிறதா என்பது, கண்ணெதிரில் காட்டக் கூடியதாக இருக்க வேண்டும். இந்தியாவில் கல்வி அந்த நோக்கத்தை நிறைவேற்றவில்லை என்பதை யார் மறுக்க முடியும்? ஆகையால், இப்போதுள்ள கல்வி முறையில் உள்ள குறைபாடுகளைக் கண்டுபிடித்து, கூடியவரையில் தம்மைப் பொறுத்தமட்டில் அவற்றை நீக்க முயற்சிப்பதுதான் அந்த ஸ்தா

பனத்தின் நோக்கமாயிருக்க வேண்டும். தம்முடைய சரியான நடத்தையின் மூலம் அவர்கள் கல்வி ஸ்தாபனங்களின் தலைவர்களைத் தம் கருத்துக்குத் திருப்ப முடியும். அப்படிச் செய்தால், அவர்கள் கட்சி அரசியலில் சிக்கிக் கொள்ளவே மாட்டார்கள். திருத்தியமைக்கப்படும் திட்டத்தில் நிர்மாண வேலைத் திட்டம் உரிய இடம் பெறுவது இயற்கையே. அவர்களுடைய செய்கை நாட்டின் அரசியலைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுவதற்கும் மறைமுகமாக உதவி செய்யும்.

நாட்டின் சுதந்திரப் போராட்ட காலத்தில், மாணவர்கள் கல்வியைப்பற்றி நான் சொன்னது மறக்கப்பட்டுவிட்டது போல் தோன்றுகிறது. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இருக்கும் போது மாணவர்கள் அரசியலுக்கு வரவேண்டுமென்று நான் அழைக்கவில்லை. சாத்திரீய ஒத்துழையாமையையே நான் போதித்தேன். இந்தக் கல்வி ஸ்தாபனங்களைக் காலி செய்து விட்டு, அவர்கள் சுதந்திரப் போராட்டத்தில் குதிக்க வேண்டு மென்று கூறியிருந்தேன். தேசிய சர்வகலாசாலைகள், பள்ளிக் கூடங்கள், கல்லூரிகள் ஏற்பட வேண்டுமென்றும் வற்புறுத்தியிருந்தேன்.

—'ஹரிஜன்' - 7—9—1947

# 14

# அரசியல் கட்சிகளும் மாணவர்களும்

9-ந்தேதி ஏற்பாடு செய்யப்படும் மாணவர் வேலை நிறுத்தம் கம்யூனிஸ்ட் மாணவர்களின் முயற்சியேயொழிய, காங்கிரஸ் மாணவர்களுக்கு அதில் சம்பந்தமில்லையென்று சில மாணவர்கள் எழுதியிருந்த கடிதத்தைப் பற்றி காந்திஜி குறிப்பிட்டார். உத்தேச வேலை நிறுத்தத்தில் காங்கிரஸ் மாணவர்கள் கலந்து கொள்ளாததை அவர் பாராட்டினார். ஆயினும், இம்மாதிரி வேலை நிறுத்தங்களைப்பற்றி தான் ஏற்கனவே கூறியிருப்பதை ஊர்ஜிதம் செய்தார். அதாவது, மாணவர்கள் சம்பந்தப்பட்ட வரையில், அவர்களுக்குக் கட்சி அரசியல் கூடாது. மாணவர்களிடையே சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட், காங்கிரஸ் என்ற பிரிவுகள் இருக்கக் கூடாது. அவர்கள் முற்றிலும் மாணவர்களாகவே இருக்க வேண்டும்; முடிந்தவரையில் அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்ற உறுதியுடன் இருக்க வேண்டும். அதுவும் மக்களின் சேவைக்காகவேயொழிய, உத்தியோகங்கள் பெறுவதற்கல்ல என்ற உறுதியுடன் இருக்க வேண்டும் என்றார் காந்திஜி.

—' ஹரிஜன் ' - 18—1—1948

## 15

# மாணவர் வாழ்க்கை

மாணவர்களின் வாழ்க்கை சந்நியாசிகளுடைய வாழ்க்கையைப் போன்றதாகும். ஆகையால், ஒரு பிரம்மச்சாரிக்கேற்றவாறு முழுமையான பரிசுத்தத்துடனும், ஒழுக்கத்துடனும் நீங்கள் வாழ்க்கை நடத்த வேண்டும். பழைய நாகரிகமும், புதிய நாகரிகமும் மாணவர்கள் மீது ஆதிக்கம் பெறுவதற்கு ஒன்றோடொன்று போட்டிபோட்டுக் கொண்டிருக்கின்றன. பழைய நாகரிகம் தன்னடக்கத்தை வற்புறுத்துகிறது. ஒரு மனிதன் மனமுவந்து எவ்வளவுக்கெவ்வளவு தனது தேவைகளைக் குறைத்துக் கொள்ளுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு உயர்ந்த வாழ்க்கைப் பாதையில் அவன் முன்னேற்றம் அடைகிறான் என்றும் கூறுகிறது. ஆனால், ஒருவருடைய தேவைகளை அதிகரித்துக் கொள்ளுவதுதான் முன்னேற்றம் என்று இன்றைய நாகரிகம் கூறுகிறது. தருமமான வாழ்க்கை நடத்துவதற்கும், அதர்மமான வாழ்க்கை நடத்துவதற்குமிடையே என்ன வேற்றுமை இருக்கிறதோ, அதே வேற்றுமை தன்னடக்கத்திற்கும், மனம் போன வாக்கில் போவதற்குமிடையே இருக்கிறது. தன்னடக்கத்தைப் போதிக்கும் முறை லோகாயதமான வாழ்க்கைக்கு ஒரு தாழ்ந்த ஸ்தானத்தை அளிக்கிறது; நமது சிந்தனைகள், உணர்ச்சிகள் முதலியவைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறது. நமது மக்கள் புதிய நாகரிகத்தினால் கவரப்பட்டு, பழைய நாகரிகத்தை உதறித்தள்ளிவிடுவார்களோ என்ற அபாயம் இப்போது இருக்கிறது. இந்த அபாயத்தைத் தவிர்க்க மாணவர்கள் எவ்வளவோ செய்ய முடியும். உதாரணமாக, இந்த சர்வகலாசாலையின் மாணவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைக் கொண்டுதான் மதிப்பிடப்படுவார்களேயொழிய, அவர்களுக்கு என்ன தெரியும் என்பதைக் கொண்டல்ல. ஆகையால், இந்த சர்வகலாசாலையில் தருமத்தைப் போதிப்பது, அதை நடைமுறையில் அனுஷ்டிப்பது ஆகியவைகளுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும். இந்த நோக்கம் நிறைவேறுவதற்கு மாணவர்கள் தமது மனப்பூர்வமான ஒத்துழைப்பை அளிக்க வேண்டும். தருமம் என்றால் என்ன? அதாவது, இந்தியாவில் நம்முடைய தனிப்பட்ட வாழ்வும், சமூக வாழ்வும் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றி முதலில் நாம் தெளிவாகப் புரிந்து கொண்டாலொழிய, அரசியல் சீர்திருத்தங்களினால் நமக்கு உண்மையான பலன் எதுவும் கிடைக்காதென்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். ஏனெனில், தருமத்தை ஸ்தாபிக்கப்போவது இந்த சீர்திருத்தங்கள் அல்ல; சீர்திருத்தங்களில் உள்ள குறைபாடுகளை எடுத்துக்காட்டி, அவற்றைப் போக்குவதற்கு உதவி செய்யக் கூடியது தருமம்தான்.

—'நவ ஜீவன்' – 29—1—1920

# 16

# யந்திர யுகம்

தக்ளி ஒன்றுதான் இருக்கிறது என்று அர்த்தமில்லை; ஆனால் அது ஒன்றைத்தான் எல்லோரும் பழகிக் கொள்ள முடியும். காகிதம் செய்தல், பனைவெல்லம் செய்தல் போன்றவைகளும் இருக்கின்றன. எந்தத் தொழில் எந்தப் பள்ளிக்கூடத்திற்கு மிகவும் ஏற்றதாயிருக்குமென்று கண்டுபிடிக்க வேண்டியது மந்திரிகளின் வேலையாகும். யந்திரங்களில் மோகம் கொண்டிருப்பவர்களுக்கு ஒரு எச்சரிக்கை விடுக்க விரும்புகிறேன்: யந்திரங்களுக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பதன் பலனாக மனிதர்களே யந்திரங்களாகிவிடக் கூடிய அபாயம் இருக்கிறது. யந்திர யுகத்தில் வாழவிரும்புகிறவர்களுக்கு என் திட்டம் பிரயோசனப்படாது; ஆனால், யந்திரங்களின் மூலம் கிராமவாசிகளை உயிர்வாழச் செய்ய முடியாதென்பதையும் உங்களிடம் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். உயிருள்ள 30 கோடி யந்திரங்கள் இருக்குமிடத்தில் உயிரற்ற புதிய யந்திரங்களைக் கொண்டு வரவேண்டுமென்று நினைப்பதில் அர்த்தமே இல்லை. சித்தாந்த ரீதியாக இத்திட்டம் எப்படியிருந்தபோதிலும், கல்வி ரீதியில் இது நல்ல திட்டம்தான் என்று டாக்டர் ஜாகிர் ஹுஸேன் கூறியது சரியல்ல. இந்தத் திட்டத்தின் விவரங்களைப்பற்றி அறிந்த ஒரு மாது என்னிடம் வந்திருந்தார். நான் வகுத்த திட்டத்திற்கும், அதன் செயல் முறை விவரங்களுக்குமிடையே மிகுந்த வேற்றுமை இருப்பதாக அவர் கூறினார். ஆனால், திருப்தி ஏற்பட்டாலொழிய அதை அவர் ஒப்புக் கொள்ள வேண்டுமென்று நான் கேட்கவில்லை. நம் மக்கள் உண்மையாக நடந்து கொண்டால், இந்த நாட்டில் அடிமைகளே இருக்கமாட்டார்கள்.

—'ஹரிஜன்' - 30—10—1937

# 17

# உங்கள் கடமையைச் செய்யுங்கள்

[வேலூர் மாணவர்கள் கூட்டத்தில் காந்திஜி செய்த பிரசங்கத்தின் விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:]

எனக்கு எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. ஆயினும், இந்தியா பூராவிலும் உள்ள மாணவர்கள் என்னிடம் காட்டும் அன்பு எனக்கு மிகுந்த மகிழ்ச்சியையும், ஆறுதலையும் அளித்து

வந்திருக்கிறது. என்னுடைய சுமையை மாணவர்கள் பெரும் அளவுக்குக் குறைத்திருக்கிறார்கள். தனிப்பட்ட முறையில் மாணவர்கள் என்னிடம் இவ்வளவு அன்பு காட்டியபோதிலும், அவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் இன்னமும் எவ்வளவோ இருக்கின்றன. நீங்கள்தான் எதிர்காலத்தின் நம்பிக்கை. நீங்கள் கல்லூரிகளிலிருந்தும், பள்ளிகளிலிருந்தும் வெளியே வந்த பிறகு, இந் நாட்டிலுள்ள ஏழைகளுக்குத் தலைமை தாங்கி நடத்துவதற்காகப் பொது வாழ்வுக்கு அழைக்கப்படுவீர்கள். ஆகையால், மாணவர்களாகிய நீங்கள் உங்கள் பொறுப்பை உணர்ந்து அதை இன்னும் உருவான விதத்தில் காட்ட வேண்டு மென்று விரும்புகிறேன். மாணவர்கள் தாம் படிக்கும் காலத்தில் பல உன்னத உணர்ச்சிகளைக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், படிப்புக் காலம் முடிந்தவுடன் இவை மறைந்துவிடுகின்றன. இது குறிப்பிடத்தக்கதும், அதே சமயத்தில் வருந்தத்தக்கதுமான ஒரு உண்மையாகும். அவர்களில் பெரும்பாலோர் தமக்கு ஏதாவது வேலை கிடைக்காதா என்று தேடிக்கொண்டிருக் கிறார்கள். இதில் ஏதோ தவறு இருக்கத்தான் வேண்டும். ஒரு காரணம் தெளிவாக இருக்கிறது. நமது கல்வி முறை சரியான தாக இல்லையென்பதை கல்வித்துறையில் சம்பந்தப்பட்ட ஒவ் வொருவரும் அறிந்திருக்கிறார். அது நாட்டின் தேவைகளுக்கேற்ற விதத்தில் இல்லை; அதிலும், ஓட்டாண்டியான இந்தியாவின் தேவைகளுக்குக் கொஞ்சமும் ஏற்றதாக இல்லை. அளிக்கப்படும் கல்விக்கும், வீட்டு வாழ்க்கை, கிராம வாழ்க்கைக்கும் எந்த சம்பந்தமும் இல்லாமலிருக்கிறது.

## இன்றியமையாத ஒரு நிபந்தனை

இப்போதுள்ள நிலைமையில், மாணவர்கள் என்ன செய்ய முடியும்? தேசத்திற்குத் தொண்டு செய்வதற்கு நாம் இன்னும் என்ன செய்யலாம் என்பதை நாம் பரிசீலனை செய்யவேண்டும். மாணவர்கள் தம்மைத்தாமே ஆன்ம சோதனை செய்து கொண்டு, தம்முடைய நற்குணங்களை வளர்த்துக் கொள்ளவேண்டும் என்பதே எனக்குத் தோன்றும் பதிலாகும்; மாணவர் உலகம் தனது கடமையைச் செய்ய வேண்டும் என்று, ஆர்வமுள்ள மற்ற பலருக்கும் தோன்றும் பதிலும் அதுவேயாகும். நல்ல கல்வி முறையைக் கட்டி வளர்ப்பதற்கு தனிப்பட்ட வாழ்வில் தூய்மை இருக்க வேண்டுமென்பது இன்றியமையாத ஒரு நிபந்தனையாகும். நான் ஆயிரக்கணக்கான மாணவர்களை நேரில் சந்தித்துக் கொண்டிருக்கிறேன். அவர்களுடன் கடிதப் போக்கு வரத்து செய்கிறேன். அவர்கள் தமது மனத்திலுள்ளவைகளையெல்லாம் ஒளிவு மறைவில்லாமல் என்னிடம் சொல்லுகிறார்கள். இதை யெல்லாம் பார்க்கும்போது, இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியிருக்கிறதென்பது தெளிவாகத் தெரிகிறது. நான் சொல்லுவது உங்களுக்கெல்லாம் நன்றாகப் புரிகிறதென்றே நம்பு கிறேன். மாணவன் என்ற வார்த்தைக்கு நமது மொழிகளில்

பிரம்மச்சாரி என்ற அழகான வார்த்தை ஒன்றிருக்கிறது. பிரம்மச்சாரி என்ற வார்த்தையின் அர்த்தம் என்னவென்பதை நீங்கள் அறிவீர்களென்றே நினைக்கிறேன். கடவுளைத் தேடுபவன், குறைந்த பட்ச காலத்தில் கடவுளுக்கு சமீபமாகப் போகக் கூடியவிதத்தில் நடந்து கொள்ளுபவன் என்பதே அதன் அர்த்தமாகும். உலகிலுள்ள பெரிய மதங்களிடையே பல வேறுபாடுகள் இருக்கலாம். ஆயினும், பரிசுத்தமற்ற ஹிருதயம் உள்ள ஆணோ, பெண்ணோ ஆண்டவன் சன்னிதியில் நிற்க முடியாது என்ற அடிப்படை உண்மை சம்பந்தப்பட்டவரையில் மதங்களிடையே கருத்து வேற்றுமை கிடையாது. நமது அறிவு, வேதபாராயணம், சமஸ்கிருத, லத்தீன், கிரேக்க மொழிகளில் புலமை ஆகிய எவ்வளவோ நமக்கிருக்கலாம். ஆனால் உள்ளத்தூய்மையை வளர்க்க அவை உதவி செய்யவில்லையென்றால் ஒரு பிரயோசனமுமில்லை. நல்லொழுக்கத்தை வளர்ப்பதே எந்தக் கல்வியின் நோக்கமுமாக இருக்கவேண்டும்.

## நம்பிக்கையை இழக்காதீர்கள்

ஷிமோகாவிலுள்ள ஆங்கில நண்பர் ஒருவர் என்னிடம் வந்தார். அவரை முன்பு எனக்குத் தெரியாது. இந்தியா உண்மையிலேயே ஆன்மிகத் துறையில் அபிவிருத்தி பெற்ற நாடாக இருந்தால், கடவுளை அறிய வேண்டும் என்ற ஆர்வம் மாணவர்களிடம் ஏன் காணப்படவில்லை? பகவத் கீதை என்றால் என்ன என்பதுகூடப் பல மாணவர்களுக்குத் தெரியவில்லை. இதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். என் மனத்திற்கு உண்மையானது என்றுபட்ட ஒரு சமாதானத்தை அவருக்குக் கூறினேன். அந்த சமாதானத்தை இப்போது உங்கள் முன்பு கூறப்போவதில்லை; அந்தப் பெரிய குறைபாட்டை மன்னிக்கப்போவதுமில்லை. இங்கு கூடியுள்ள மாணவர்களை மனப்பூர்வமாக ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதாவது, நீங்கள் ஒவ்வொருவரும் ஆன்ம சோதனை செய்துகொள்ள வேண்டும். நான் கூறும் கருத்துகள் சரியாய் இருந்தால், உங்களை நீங்களே திருத்திக் கொள்ள ஆரம்பிக்க வேண்டும். உங்களில் மிகப் பெரும்பான்மையோர் ஹிந்துக்கள் என்பதை நான் அறிவேன். மிக எளியதும், அழகானதும், உள்ளத்தைக் கவருவதென்று நான் கருதுவதுமான கீதையை நீங்கள் படித்துப் புரிந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். தம்முடைய உள்ளங்களைப் பரிசுத்தமாக்கிக்கொள்ள வேண்டுமென்பதற்காக, இந்த உண்மையைத் தேடிச் செல்லுபவர்களின் அனுபவம் என்னவெனில், கடவுளிடம் மனப்பூர்வமாக பக்தி செலுத்தினாலொழிய, அநேகமாக இது அசாத்தியமானதாயிருக்கும். ஆகையால், நீங்கள் என்ன செய்தாலும், கடவுளிடம் நம்பிக்கையை இழந்துவிடாதீர்கள். இதைப் பற்றி உங்களுக்கு நான் விளக்கிக் கூற முடியாது; ஏனெனில், இது காரண காரியங்களை மீறிய ஒன்றாகும். ஆனால், உண்மையான தாழ்மை உணர்ச்சியை

நீங்கள் வளர்க்க வேண்டும்; இவ்வளவு ஆச்சாரியர்கள், ரிஷிகள், மற்றும் பலரை மூட நம்பிக்கைக்காரர்கள் என்று உதறிவிடாமல், அவர்களுடைய அனுபவங்களைப் பின்பற்ற வேண்டும். இதை மட்டும் நீங்கள் செய்தால், நான் விரும்பும் மற்றவைகளெல்லாம் உங்களுக்குத் தெளிவாக விளங்கிவிடும். உங்களுடைய உண்மைக்கு இதையே நான் சோதனையாகக் கருதுவேன். கடவுளிடம் உங்களுக்கு உண்மையாகவே நம்பிக்கை இருந்தால், அவருடைய மிகவும் தாழ்மையான சிருஷ்டியினிடமும் கூட நீங்கள் உணர்ச்சி காட்டாமல் இருக்க முடியாது. கைராட்டினமோ, கதரோ, தீண்டாமையோ, பூர்ண மதுவிலக்கோ, குழந்தை விதவைகள், குழந்தை மணம் போன்ற சமூக சீர்திருத்தங்களோ எதுவாயிருந்தாலும், எல்லாம் ஒரே மூலத்திலிருந்துதான் தோன்றுகின்றன என்பதை அறிவீர்கள்.

இந்த ஒரு ஸ்தாபனத்தில் மட்டும் நீங்கள் 1400 பேர்களுக்கு மேல் இருக்கிறீர்களென்று அறிகிறேன். இந்த 1400 பேர்களும் தினசரி அரைமணி நேரம் நூற்றால், நாட்டின் செல்வத்தை எவ்வளவு பெருக்க முடியுமென்று யோசித்துப் பாருங்கள். இந்த 1400 பேர்களும் தீண்டாமைக்காக எவ்வளவு செய்ய முடியும் என்பதையும் யோசித்துப் பாருங்கள். இங்குள்ள 1400 இளைஞர்களும் ஒரு பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள முடியும். அதாவது, குழந்தைகளை மணந்துகொள்ளுவதில்லை என்று நீங்கள் உறுதி எடுத்துக்கொண்டால், உங்களைச் சுற்றியுள்ள சமூகத்தில் நீங்கள் எவ்வளவு பெரிய சீர்திருத்தம் செய்ய முடியுமென்பதை யோசித்துப் பாருங்கள். நீங்கள் 1400 பேர்களும், அல்லது உங்களில் கணிசமான பகுதியினர் உங்களுடைய ஓய்வு நேரத்தையோ அல்லது ஞாயிற்றுக் கிழமைகளில் ஒரு பகுதியையோ மதுவிலக்குக்காகச் செலவிடலாம். குடிப் பழக்கம் உள்ளவர்களிடையே நீங்கள் சென்று, அன்புடன் அவர்களுக்கு அதன் தீமையை எடுத்துச் சொன்னால், அவர்களுக்கும் நாட்டுக்கும் எவ்வளவு சேவை செய்தவர்களாவீர்கள்? உங்களுடைய மனத்தை மாற்றிக்கொண்டு, உங்களுடைய கண்ணோட்டத்தையும் மாற்றிக்கொண்டால் போதும். இதற்கு நீங்கள் வேறு எந்தப் பெரிய முயற்சியும் செய்ய வேண்டியதில்லை.

—'எங் இந்தியா' – 8—9—1927

# 18

# தேவையில்லாத விடுமுறை

(பச்சையப்பன் கல்லூரியில் காந்திஜி செய்த பிரசங்கத்திலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :)

தரித்திர நாராயணனுக்காக என்னிடம் நீங்கள் கொடுத்த பரிசுகளுக்கு நன்றி செலுத்துகிறேன்.

கைராட்டினத்தினிடம் உங்களுக்குள்ள அன்பைக் காட்டுவதற்கு இதுவே முதலாவதும், கடைசியானதுமான பணமுடிப்பாக இருந்துவிட வேண்டாம். உங்களுடைய அன்பைக் காட்டுவதற்கு இதுதான் கடைசிச் செய்கை என்ருல், எனக்கு மிகவும் தரும சங்கடமாக இருக்கும். இந்தப் பணத்தின் மூலம் உற்பத்தி செய்யப்படும் கதரை நீங்கள் உபயோகிக்கவில்லையென்ருல், அந்தப் பணத்தினுல் எனக்கு ஒரு பலனும் இல்லை. வாயளவில் சர்க்காவினிடம் அன்பு தெரிவிப்பதும், பெரிய மனித தோரணையில் என்னிடம் சில ரூபாய்களைக் கொடுப்பதும் சுயராஜ்யத்தைக் கொண்டு வந்துவிடாது. உழைத்துப் பாடுபட்டும் பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்களின் பிரச்னைகளையும் அது தீர்க்காது. உழைத்துப் பாடுபடும் மக்கள் என்று சொன்னேன். இது அவ்வளவு சரியானதல்ல. துரதிர்ஷ்டவசமாக ஆடைகள் விஷயத்தில் நமது ருசியை நாம் மாற்றிக்கொள்ளாததால், இவர்கள் வருடம் பூராவும் உழைத்துப் பாடுபடுவது அசாத்தியமாகிவிட்டது. வருடத்தில் நான்கு மாதங்களாவது அவர்களுக்குத் தேவையில்லாத விடுமுறையை அவர்கள்மீது சுமத்தியிருக்கிருேம். இது என்னுடைய கற்பனையல்ல. இந்த மக்களிடையே அனுபவம் உள்ள நம் நாட்டினர் கூறுவதை நீங்கள் நிராகரிக்கலாம். ஆனுல், பல ஆங்கில நிர்வாகிகளே இந்த உண்மையைக் கூறியிருக்கிருர்கள். இந்தப் பண முடிப்பை நான் எடுத்துக்கொண்டு போய், பட்டினி கிடக்கும் சகோதரிகளிடையே விநியோகித்தால், அதனுல் பிரச்னை தீர்ந்துவிடாது. அது அவர்களுடைய உள்ளத்தை இன்னும் ஏழ்மையானதாக்கிவிடும். அவர்கள் பிச்சைக்காரர்களாகி தருமத்தை நம்பி வாழும் பழக்கத்தை மேற்கொண்டுவிடுவார்கள். இவர்கள் தமக்கென்று சொந்தமான வீடுகளில் இருந்துகொண்டு வேலை செய்ய வாய்ப்பளிப்பதே நாம் செய்ய வேண்டியதாகும். நீங்கள் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய வேலை இது ஒன்றுதான். இது கௌரவமான வேலையாகும்; நல்ல வேலையும் கூட. ஒரு அணு என்ருல் உங்களுக்கு அற்பமாகத் தோன்றலாம். நாலைந்து மைல் நடந்து செல்வதற்குப் பதிலாக, ஒரு டிராம் வண்டியில் ஏறிக்கொண்டு உங்கள் நேரத்தைக் கழிப்பதற்கு இந்தக் காசை நீங்கள் செலவிடுவீர்கள். ஆனுல், இந்தக் காசு ஏழையான ஒரு சகோதரிக்குக் கிடைத்தால் அதனுல் பலன் ஏற்படுகிறது. அதற்கு அவள் உழைக்கிருள். தன் கையால் நூற்ற நூலைக் கொடுக்கிருள். அந்த நூல் மன்னர்களுக்கும், சீமான்களுக்கும் ஆடைகள் நெய்யத் தகுதியுள்ளதாகும். இந்த ஒரு விஷயத்தைப் பற்றியே உங்களிடம் நான் பேசிக்கொண்டிருக்கக் கூடாது. இதுவரையில் இல்லாவிட்டாலும், இனிமேலாவது கதரைத் தவிர வேறு எதையும் அணிவதில்லை என்ற உங்களுடைய உறுதிக்கு இது ஒரு அடையாளமல்லவென்ருல், உங்களுடைய இந்தப் பண முடிப்பு எனக்கு இடையூருக இருக்குமேயொழிய உதவியாக இராது.

நீங்கள் இந்தப் பண முடிப்பை எனக்கு அளித்திருக்கிறீர்கள். என்னைப் பாராட்டியிருக்கிறீர்கள். நீங்கள் கதரில் நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள் என்று நான் ஏமாந்துவிடாமல் இருப்பேனாக. நீங்கள் சொன்னபடி செய்ய வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்தியாவின் மணிகளாகிய நீங்கள் என்னை ஏமாற்றுவதற்காகத்தான் இந்தப் பண முடிப்பை அளித்தீர்கள், நீங்கள் கதர் அணிய விரும்பவில்லை, அதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லை என்ற பேச்சு வரக் கூடாது. தமிழ் நாட்டின் பிரமுகர்களில் ஒருவரும், என்னுடைய நண்பருமான ஒருவர் கூறியுள்ள ஜோசியத்தை மெய்ப்பித்துவிடாதீர்கள். நான் இறந்த பிறகு என் உடலை எரிக்க விறகு எதுவும் தேவையில்லை என்றும், இப்போது நான் விநியோகம் செய்துகொண்டிருக்கும் கைராட்டினங்களில் உள்ள மரமே அதற்குப் போதுமானதாக இருக்குமென்றும் அவர் சொன்னார். அவருக்கு சர்க்காவில் நம்பிக்கை இல்லை. சர்க்காவின் பெயரைச் சொல்லுபவர் என்னிடமுள்ள மரியாதைக்காகவே அப்படிச் சொல்லுகிறார்களென்றும் அவர் கூறினார். அது மனப்பூர்வமாக அவருடைய அபிப்பிராயமாகும். கதர் இயக்கம் அப்படிப் போய்விட்டால் அது ஒரு பெரிய விபரீதமாக இருக்கும். அந்த விபரீதத்திற்கும், குற்றத்திற்கும் நீங்கள் நேர் பொறுப்பாளிகளாக இருப்பீர்கள். அது தேசமே தற்கொலை செய்து கொண்டதைப் போன்றதாகும். சர்க்காவினிடம் உங்களுக்கு உயிர்த் துடிப்புள்ள நம்பிக்கை இல்லையென்றால், அதை நிராகரித்துவிடுங்கள். உங்களுடைய அன்புக்கு அது உண்மையான அடையாளமாயிருக்கும்; என் கண்களையும் நீங்கள் திறந்துவிட்டவர்களாவீர்கள். என் வழியே திக்குத் தெரியாமல் நான் இவ்விதம் கதறிக் கொண்டிருப்பேன்:- "நீங்கள் சர்க்காவை நிராகரித்ததன் மூலம் தரித்திர நாராயணனை நிராகரித்துவிட்டீர்கள்."

இந்த விஷயத்தில் ஏதாவது மாற்றமோ, ஜாலமோ இருப்பதாயிருந்தால், அதிலிருந்து எழக் கூடிய வேதனை, அவமானம், சிறுமை ஆகியவைகளிலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள், உங்களையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள். இது ஒரு விஷயம்தான். உங்களுடைய வரவேற்பில் இன்னும் பல விஷயங்கள் இருக்கின்றன.

## பிராம்மணீயம் அல்லது மிருகத்தனம்

குழந்தை மணம், குழந்தை விதவைகளைப்பற்றியும் அதில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். குழந்தை விதவைகளைப் பற்றி மாணவர்களிடையே பேசும்படி தமிழ் நாட்டு அறிஞர் ஒருவர் எனக்கு எழுதியிருக்கிறார். இந்தியாவின் மற்றப் பகுதிகளைவிட இந்த மாகாணத்திலுள்ள குழந்தை விதவைகளின் நிலைமை மிகவும் மோசமாயிருக்கிறதென்று அவர் கூறியுள்ளார். இவர் சொல்லுவது உண்மைதானென்று நான் சோதித்துப் பார்க்க முடிய

வில்லை. இதைப் பற்றி என்னைவிட உங்களுக்கு அதிகம் தெரிந்திருக்கவேண்டும். ஆனால், இங்கு கூடியுள்ள இளைஞர்களாகிய உங்களிடம் ஒரு அளவுக்கு கண்ணிய உணர்ச்சி இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்த உணர்ச்சி உங்களிடமிருந்தால், ஒரு யோசனை கூறுகிறேன். உங்களில் பெரும்பாலோர் மணமாகாதவர்கள் என்றே நினைக்கிறேன் ; பலர் பிரம்மச்சாரிகள் என்று நினைக்கிறேன். மாணவர்களைப் பற்றி எனக்குத் தெரியுமாகையால்தான் 'பலர்' என்று நான் சொல்ல வேண்டியிருக்கிறது. தன் சகோதரி மீது தன் காமக் கண்களை வீசும் ஒரு மாணவன் பிரம்மச்சாரியல்ல, விதவையல்லாத ஒரு பெண்ணை மணந்து கொள்ளுவதில்லையென்று நீங்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டும். விதவைப் பெண் கிடைக்கிறாளாவென்று நீங்கள் தேடிப் பார்க்க வேண்டும்; அப்படிக் கிடைக்காவிட்டால், நீங்கள் மணந்து கொள்ளவே கூடாது. அந்த பிரதிக்ஞையை எடுத்துக் கொண்டு அதை உலகத்திற்கு அறிவியுங்கள். பெற்றோர்களிடம் தெரிவியுங்கள், பெற்றோர்களில்லாவிட்டால் சகோதரிகளிடம் சொல்லுங்கள். பத்து, பதினைந்து வயதான ஒரு குழந்தையை மணந்து கொண்டு, கணவன் என்று சொல்லப்படுபவனுடன் வாழாமலே இருந்து திடீரென்று விதவை என்று அறிவிக்கப்பட்டால், அவள் விதவையே அல்ல. அது மொழியை துஷ்பிரயோகம் செய்வதாகும். ஹிந்து மதத்தில் 'விதவை' என்ற வார்த்தைக்குப் புனிதமான அர்த்தம் உண்டு. காலஞ்சென்ற ஸ்ரீமதி ரமாபாய் ரானடே விதவை என்றால் என்ன என்பதை அறிந்தவர் ; அவரைப் போன்ற உண்மையான ஒரு விதவையை நான் வணங்குகிறேன். ஆனால், ஒன்பது வயதான ஒரு குழந்தைக்குக் கணவன் என்பவன் எப்படியிருக்க வேண்டுமென்பது தெரியாது. அம்மாதிரி குழந்தை விதவைகள் இந்த மாகாணத்தில் இல்லையென்றால், என்னுடைய வாதத்திற்கு அர்த்தமில்லை. ஆனால், அம்மாதிரி குழந்தை விதவைகள் இருக்கிறார்களென்றால், இந்தச் சாபத்தை நம்மிடையேயிருந்து ஒழிப்பதற்காக, அத்தகைய ஒரு குழந்தை விதவையைத்தான் மணம் செய்து கொள்ளுவதென்று உறுதி கொள்ள வேண்டியது உங்களுடைய புனிதமான கடமையாகும். ஒரு தேசம் செய்யும் பாவங்களின் பலன்களெல்லாம் அதன் தலையிலேயேதான் வந்து வடியும் என்ற மூட நம்பிக்கை எனக்கு உண்டு. நம்முடைய பாவங்களெல்லாம் ஒன்று திரண்டு நம்மை அடிமைத்தனத்தில் ஆழ்த்திவிட்டதென்று நான் நம்புகிறேன். காமன்ஸ் சபையிலிருந்து அருமையான அரசியலமைப்பு ஒன்று உங்களுக்குக் கிடைக்கலாம். ஆனால், அந்த அரசியலமைப்பை நடத்தி வைக்கக் கூடிய ஆண்களும், பெண்களும் இல்லையென்றால், அதனால் ஒரு பிரயோசனமுமில்லை. தம்முடைய அடிப்படையான இயற்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள ஒரு விதவை விரும்புகிறாள். ஆனால், பலவந்தமாக அவள் தடுக்கப்படுகிறாள், அத்தகைய ஒரு விதவையாவது இருக்கும்வரையில், நம்மை நாமே ஆளக் கூடிய தகுதி நமக்கு இருக்கிறதென்று நாம் சொல்

லிக் கொள்ள முடியுமா? அல்லது 30 கோடி மக்களுக்குள்ள ஒரு நாட்டின் எதிர்காலத்தை உருவாக்கப் போகிறோம் என்றுதான் சொல்லிக் கொள்ள முடியுமா? இது மத சம்மதம் பெற்றதல்ல, மதத்திற்கு விரோதமானது. ஹிந்து மதத்தில் நன்கு ஊறியவன் என்ற முறையில் இதை நான் சொல்லுகிறேன். என்னிடமுள்ள மேற்கத்தி உணர்ச்சி காரணமாக நான் இப்படிப் பேசுகிறேன் என்று தவருக நினைத்துக் கொள்ளாதீர்கள். மாசற்ற இந்திய உணர்ச்சி என்னிடம் முழுமையாக நிறைந்திருக்கிறது. மேல் நாடுகளின் பல அம்சங்களை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்; ஆனல், இதையல்ல. இத்தகைய விதவை முறைக்கு ஹிந்து மதத்தில் சம்மதம் இல்லை.

குழந்தை விதவைகளைப் பற்றிச் சொன்னவைகளெல்லாம், குழந்தை மனைவிகளுக்கும் பொருந்தத்தான் வேண்டும். 16 வயதுக்குட்பட்ட ஒரு பெண்ணை மணந்து கொள்ளுவதில்லை என்ற அளவுக்கு உங்களுடைய இச்சையை அடக்கிக் கொள்ள முடியாதா? எனக்கு அதிகாரமிருந்தால் இந்தக் குறைந்தபட்ச வயதை 20 என்று விதிப்பேன். இந்தியாவில் கூட இருபது என்பது பால்யம்தான். பெண்கள் இப்படிப் பிஞ்சில் பழுத்தவர்களாயிருப்பதற்கு இந்தியாவின் சீதோஷ்ண ஸ்திதி கூடக் காரணமில்லை. நாம்தான் அந்த நிலைமைக்குப் பொறுப்பாளிகள். ஏனெனில், பரிசுத்தமானவர்களாகவும், தம்மைச் சுற்றி வீசும் புயலை சமாளிக்கக்கூடியவர்களாகவும் உள்ள 20 வயதான பெண்களை நான் அறிவேன். இந்த முறையைத் தாங்கள் பின்பற்ற முடியாதென்று சில பிராம்மண மாணவர்கள் கூறுகிருர்கள். 16 வயதுள்ள பிராம்மணப் பெண்கள் கிடைக்கமாட்டார்களென்றும், அந்த வயதுவரையில் பெண்களை மணம் செய்து கொடுக்காமல் வைத்திருக்கும் பிராம்மணர்கள் வெகு சிலரே என்றும், 10, 12, 13 வயதுக்கு முன்னதாகவே பிராம்மணப் பெண்களுக்கு மணமாகிவிடுகிறதென்றும் அவர்கள் கூறுகிருர்கள். அப்படியானல், பிராம்மண இளைஞர்களுக்கு நான் சொல்லுவது இதுதான்: "உங்களை நீங்களே அடக்கிக் கொள்ள முடியாதென்ருல், நீங்கள் பிராம்மணர்களாயிருந்தது போதும்."

குழந்தையாக இருந்த காலத்தில் விதவையான ஒரு 16 வயதுப் பெண்ணைத் தெரிந்து எடுத்துக் கொள்ளுங்கள். அந்த வயதான ஒரு பிராம்மண விதவை உங்களுக்குக் கிடைக்கவில்லையென்ருல், உங்களுக்குப் பிடித்தமான வேறு எந்தப் பெண்ணையாவது மணந்து கொள்ளுங்கள். 12 வயதுப் பெண்ணை பலவந்தப்படுத்துவதை விட, தன் சாதியை விட்டு வேறு சாதிப் பெண்ணை மணந்து கொண்ட பையனை ஹிந்து கடவுள் மன்னித்து விடுவார். உங்களுடைய மனம் பரிசுத்தமானதாக இல்லாமலிருக்கும்போது, உங்களுடைய இச்சைகளை நீங்கள் அடக்க முடியாமலிருக்கும்போது, நீங்கள் படிப்பற்றவர்களாகி விடுகிறீர்கள். நல்லொழுக்கம் இல்லாத கல்வி என்ன கல்வி? சொந்த வாழ்வில் பரிசுத்தம் இல்லாமலிருப்பது என்ன நல்லொழுக்கம்?

## புகை பிடிக்கும் தீமை

கள்ளிக் கோட்டை பேராசிரியர் ஒருவரின் வேண்டுகோளுக் கிணங்க சிகரெட் பிடிப்பது, காப்பி, தேநீர் குடிப்பது போன்ற பழக்கங்களைப் பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இவை வாழ்க்கைக்கு அத்தியாவசியமான தேவைகள் அல்ல. தினசரி பத்து கோப்பை காப்பி சாப்பிடுபவர்களும் இருக்கி ருர்கள். அவர்களுடைய தேகாரோக்கியத்திற்கோ அல்லது தமது கடமைகளைச் செய்ய கண் விழித்துக்கொண்டிருப்பதற்கோ இது அவசியமா? அவர்கள் கண் விழிப்பதற்கு காப்பியோ, தேநீரோ அருந்த வேண்டியது அவசிய மென்ருல், அதைச் சாப் பிடுவதற்கு பதிலாகத் தூங்கப் போகட்டும். இம்மாதிரி விஷயங் களுக்கு நாம் அடிமைகளாகிவிடக் கூடாது. ஆனால், காப்பியோ, தேநீரோ அருந்துபவர்களில் பெரும்பாலோர் அதற்கு அடிமை களாகியிருக்கிருர்கள். சுருட்டுகள், சிகரெட்டுகள் உள்நாட்டு சரக்குகளாயிருந்தாலும், வெளி நாட்டு சரக்குகளாயிருந்தாலும் தவிர்க்கப்பட வேண்டும். சிகரெட் குடிப்பது ஒரு போதை போன்றது; நீங்கள் குடிக்கும் சுருட்டுகளில் கொஞ்சம் அபினியும் இருக்கிறது. அது உங்களுடைய நரம்புகளுக்குள் புகுந்து கொண்டு, பின்னர் அதை விடவே முடியாமல் செய்துவிடுகிறது. மாணவர்கள் தம் வாய்களைப் புகை போக்கிகளாக்கி அவற்றை அசுத்தப்படுத்தலாமா? சுருட்டு, சிகரெட் பிடிப்பதையும், காப்பி, தேநீர் குடிப்பதையும் நிறுத்திவிட்டால், அதனல் எவ் வளவு மிச்சப்படுகிற தென்பதை நீங்களே அறிவீர்கள். டால்ஸ் டாயின் கதையொன்றில், ஒரு குடிகாரன் சுருட்டுப் பிடித்து முடியும்வரையில் தன்னுடைய கொலை செய்யும் நோக்கத்தை நிறுத்திவைக்கிருன். அதைப் புகைத்துவிட்டு புன்சிரிப்புடன் எழுந்து, "நான் எவ்வளவு பெரிய கோழை?" என்று சொல்லிக் கொண்டே கட்டாரியை எடுத்துக் கொலை செய்கிருன். டால்ஸ் டாய் அனுபவத்தைக் கொண்டு எழுதினர். சொந்த அனுபவம் இல்லாத எதையும் அவர் எழுத வில்லை. குடியைவிட, சுருட்டு, சிகரெட்டுகளைத்தான் அவர் அதிகம் ஆட்சேபிக்கிருர். அதனல் புகைபிடிப்பதைவிட குடிப்பது குறைந்த தீமை என்று நினைத்து விடாதீர்கள்.

—'எங் இந்தியா' – 15–9–1927

# 19

# சேவைக்கு நிபந்தனை

*உண்மையான அன்பை, சேவையின் மூலம்தான் காட்ட வேண்டுமே யொழிய பாராட்டுதல்களின் மூலம் அல்ல. தன்னைத் தானே பரிசுத்தப்படுத்திக்கொள்ளுவது ஒரு பூர்வாங்க வேலை, உண்மையான சேவைக்கு இன்றியமையாத ஒரு நிபந்தனை. சுயராஜ்யத்திற்குத் தயார் செய்துகொள்ளும் இந்த ஆண்டில் இந்த வேலையை நாம் மேற்கொள்ளுவதே சிறப்பாகும்.*

'*எங் இந்தியா*' - 14—3—1929

# 20

# மாணவர்கள் மகாநாடு

ஸிந்தி மாணவர்களின் ஆறுவது மகாநாட்டுக்கு ஒரு செய்தி அனுப்பும்படி கேட்டு, அச்சடிக்கப்பட்ட சுற்றறிக்கையொன்றை மகாநாட்டின் காரியதரிசி எனக்கு அனுப்பியிருந்தார்.

இந்தச் சுற்றறிக்கை சரியாக அச்சிடப்படவில்லை. அதில் பல தவறுகளும் காணப்படுகின்றன. மாணவர்கள் சங்கத்தி லிருந்து வந்துள்ள இந்தச் சுற்றறிக்கையில் இந்தத் தவறுகள் மன்னிக்க முடியாதவை. அதிலிருந்து பின் கண்ட பகுதியைத் தருகிறேன் :

"இந்த மகாநாடு சுவாரஸ்யமானதாகவும், விஷய அறிவு ஊட்டுவ தாகவும் இருக்க வேண்டும் என்பதற்கு நிர்வாகிகள் தம்மாலியன்ற முயற்சி களைச் செய்து வருகிறார்கள். கல்வி பற்றிய பல விவாதங்களை நடத்துவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். நீங்களும் உதவி புரிய வேண்டுமென்று கோரு கிறோம். ஸிந்துவில் பெண்களின் கல்வி விசேஷ பரிசீலனைக்குரியது. மாணவர் களின் இதர தேவைகளையும் நாங்கள் அறியாமலில்லை. போட்டி விளையாட்டுப் பந்தயங்களும், நாவன்மைப் போட்டிகளும் ஏற்பாடு செய்யப்படுகின்றன. இதனாலெல்லாம் மகாநாடு இன்னும் அதிக சுவாரஸ்யமுள்ளதாக இருக்கு மென்று நம்புகிறோம். நாடகம, சங்கீதம் முதலியவற்றை நாங்கள் விலக்கிவிட வில்லை. உருது, ஆங்கில நாடகங்களும் நடிக்கப்படும்."

மாணவர் உலகத்திற்கு நிரந்தரமான அக்கறையுள்ள ஒன்றை யாவது இதில் காண முடியவில்லை. நாடகம், சங்கீதம், விளை யாட்டுப் பந்தயங்கள் போன்ற நிகழ்ச்சிகள் மிகவும் தடபுடலாக நடந்திருக்குமென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. பெண்கள் கல்வியைப் பற்றி கவர்ச்சிகரமான பிரசங்கங்கள் வாசிக்கப்பட் டிருக்கு மென்பதிலும் சந்தேகமில்லை. ஆனால், அந்தச் சுற்ற றிக்கை சம்பந்தப்பட்டவரையில், வெட்கக் கேடான வரதட்சி

ணைப் பழக்கத்தைப் பற்றிய பேச்சையே காணோம். அந்தப் பழக்கத்திலிருந்து மாணவர்கள் இன்னும் விடுபடவில்லை. இதனால் ஸிந்தி பெண்கள் நரக வேதனை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. பெண்களைப் பெற்றவர்களுக்கும் அது பெரிய சித்திரவதையாக இருக்கிறது. மாணவர்களின் நல்லொழுக்கங்களைப் பற்றி மகாநாடு கவனிக்கும் என்று நினைப்பதற்கும் அந்தச் சுற்றறிக்கையில் ஒன்றும் காணப்படவில்லை. மாணவர்கள் அச்சமற்ற தேச சிற்பிகளாவதற்கு வழி காட்டவும் அந்த மகாநாட்டில் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. பல்வேறு ஸ்தாபனங்களுக்கு ஸிந்து மாகாணம் மிகத் திறமைசாலிகளான பேராசிரியர்களை அளிக்கிறது என்பது பெரிய கௌரவமேயாகும். ஆனால், நிறைய கொடுப்பவர்களிடமிருந்து தான் இன்னும் அதிகமாக எதிர்பார்க்கப்படுவது வழக்கம். குஜராத் வித்தியாபீடத்திற்கு அருமையான சக ஊழியர்களை அளித்ததற்காக ஸிந்தி நண்பர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். பேராசிரியர்களையும், கதர் ஊழியர்களையும் பெறுவதுடன்மட்டும் நான் திருப்தியடைந்துவிடப் போவதில்லை. ஸிந்துவுக்கு ஸாது வஸ்வானி இருக்கிறார். இன்னும் பல பெரிய சீர்திருத்தக்காரர்கள் இருக்கிறார்களென்றும் அவர்கள் பெருமைப்படலாம். ஆனால், ஸிந்துவின் ஸாதுக்களும், சீர்திருத்தக்காரர்களும் சம்பாதித்த தகுதியைப் பாராட்டுவதுடன் மாணவர்கள் திருப்தியடைந்துவிடப் போகிறார்களென்றால், யாதொரு பலனும் இல்லை. ஸிந்து மாணவர்களும் தேச சிற்பிகளாக வேண்டும். கண்ணை மூடிக்கொண்டு மேல் நாட்டினரைப் பின்பற்றுவது, அழகாக ஆங்கிலம் பேசும், எழுதும் திறமை பெற்றிருப்பது ஆகியவைகளெல்லாம் சுதந்திரக் கோவிலின் கட்டிடத்தை எழுப்புவதற்கு ஒரு துளியும் உதவியாயிராது. பட்டினி கிடக்கும் இந்தியாவுக்கு கட்டுபடியாக முடியாத ஒரு கல்வியை மாணவர் உலகம் பெற்றுக்கொண்டிருக்கிறது. இந்தக் கல்வியை மிக மிகச் சிலரேதான் பெற முடியும். ஆனால், மாணவர்கள் தம்முடைய ஜீவ ரத்தத்தை நாட்டுக்கு அளித்துத் தகுதி பெற வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். சீர்திருத்த விஷயங்களில் மாணவர்கள் முன்னோடிகளாக விளங்க வேண்டும். தேசத்திலுள்ள நல்ல அம்சங்களைக் காப்பாற்றி, சமூகத்தில் புகுந்துள்ள பல விபரீத வழக்கங்களை தாட்சண்யமின்றி அகற்ற வேண்டும்.

இம்மாதிரி மகாநாடுகளின் விளைவாக தம் முன்புள்ள பிரத்தியட்ச உண்மைகளை மாணவர்கள் உணர ஆரம்பிக்க வேண்டும். அந்நியச் சூழ்நிலையுடன் செயல்படும் வகுப்பு அறைகளில் சிந்திப்பதற்கு வாய்ப்புக் கிடைக்காத விஷயங்களைப் பற்றி அவர்கள் சிந்தனை செய்ய இந்த மகாநாடுகள் உதவிபுரிய வேண்டும். முற்றிலும் அரசியல் தன்மை வாய்ந்தவை என்று கருதப்படும் விஷயங்களைப் பற்றி இந்த மகாநாடுகளில் விவாதிப்பதற்கு அவர்களுக்கு முடியாமலிருக்கலாம். ஆனால், அரசியல் பிரச்னையைப் போலவே இந்தத் தலைமுறையினருக்கு அவ்வளவு

முக்கியத்துவம் உள்ள சமூக, பொருளாதாரப் பிரச்னைகளைப் பற்றி அவர்கள் ஆராய்ந்து விவாதிக்க முடியும், விவாதிக்கவும் வேண்டும். தேசத்தை அபிவிருத்தி செய்வதற்கான ஒரு வேலைத் திட்டத்தில் எந்தப் பகுதியையும் விட்டுவிட முடியாது. மாணவர்கள் ஒரு மாகாணம் அல்லது நகரம் அல்லது வகுப்பு அல்லது சாதி என்ற ரீதியில் சிந்திக்கக் கூடாது; ஒரு கண்டம் என்ற ரீதியில் சிந்திக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். இங்கு லட்சக் கணக்கான மக்கள் இருக்கிறார்கள். அவர்களில் தீண்டாதார், குடிகாரர்கள், போக்கிரிகள், விபசாரிகள் கூட இருக்கிறார்கள். இவர்கள் நம்மிடையே இருப்பதற்கு நம் ஒவ்வொருவருக்குமே பொறுப்பு உண்டு. முன் காலங்களில் மாணவர்களை பிரம்மச்சாரிகள் என்று கூறுவார்கள். அவர்களை மன்னர்களும், பெரியவர்களும் கௌரவித்தார்கள். தேசம் அவர்களைத் தானாகவே கவனித்துக் கொண்டிருந்தது. அதற்குப் பதிலாக அவர்கள் தேசத்திற்கு நூறு மடங்கு பலமுள்ள உள்ளங்களையும், மூளைகளையும், உடல் வலிவையும் அளித்தார்கள். இன்று வீழ்ச்சியுற்ற நாடுகளில் மாணவர்களே, எல்லாத் துறைகளிலும் தன்னலமற்ற சீர்திருத்தத் தலைவர்களாக இருக்கிறார்கள். அந்த நாடுகள் அவர்களையே நம்பியிருக்கின்றன. இந்தியாவிலும் அம்மாதிரியானவர்கள் இல்லை என்பதில்லை. ஆனால், மிகவும் குறைவாகவே இருக்கிறார்கள். பிரம்மச்சாரிகளின் அந்தஸ்துக்குத் தகுதியான விதத்தில் இம்மாதிரி கட்டுப்பாடான வேலைகளைச் செய்வதே மாணவர்கள் மகாநாட்டின் நோக்கமாக இருக்க வேண்டும்.

'எங் இந்தியா' – 9—6—1927

# 21

# மாணவர்கள் என்ன செய்யலாம் ?

## 1

சமூக சீர்திருத்தம், மதத்தின் பாதுகாப்பு ஆகியவற்றின் திறவு கோல்கள் மாணவர்களுடைய சட்டைப் பையில் இருக்கின்றன என்றே சொல்லலாம். சுயராஜ்யத்தின் திறவு கோலும் அவர்களிடம் தானிருக்கிறது. ஆனால் அசட்டை, அசிரத்தை காரணமாக அது அவர்களுக்குத் தெரியாமலிருக்கலாம். தர்மாஜ் மாணவர்கள் காட்டியுள்ள உதாரணம், தம்முடைய சக்தியை அவர்களுக்கு உணர்த்துமென்று நம்புகிறேன்.

'எங் இந்தியா' - 1—3—1928

## 2

மூன்று மாணவர்கள் பின்வருமாறு எழுதியிருக்கிறார்கள் : "நாங்கள் நாட்டுக்குச் சேவை செய்ய விரும்புகிறோம். எங்களுடைய சொந்த ஊரைவிட்டு வெளியே போகாமலும், படிப்பை விடாமலும் நாங்கள் என்ன செய்யலாமென்பதை, 'நவஜீவன்' பத்திரிகை மூலம் தெரிவியுங்கள்." இந்த மாணவர்கள் தம்முடைய பெயர்கள், வயது, விலாசங்கள் முதலியவற்றைக் கொடுத்திருக்கிறார்கள். "எங்களுடைய பெயர்களையும், விலாசங்களையும் வெளியிட்டுவிடாதீர்கள். எங்களுடைய விலாசங்களுக்கு நேரடியாகவும் நீங்கள் பதில் எழுதக்கூடாது. கடிதங்கள்கூடப் பெறமுடியாத நிலைமையில் நாங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்" என்று அவர்கள் கூறுகிறார்கள். இம்மாதிரி மாணவர்களுக்கு எந்தவிதமான யோசனையும் கூறுவது கஷ்டம் என்று நான் நினைக்கிறேன். தங்களுடைய கடிதங்களுக்கு பதில் பெறக் கூட உரிமையில்லாதவர்களுக்கு நான் என்ன சொல்ல முடியும்? ஆயினும் இதை மட்டும் கூறுவேன் : தன்னைத்தானே பரிசுத்தமாக்கிக் கொள்ளுவதுதான் ஒருவர் தன் தேசத்திற்குச் செய்யக்கூடிய சிறந்த சேவையாகும். அவர்களுடைய உள்ளங்கள் பரிசுத்தமாயிருக்கின்றனவா? அதற்கு அவர்கள் முயற்சி செய்திருக்கிறார்களா? மாணவர்களிடையே நிலவும் தீமைகளிலிருந்து அவர்கள் ஒதுங்கி நிற்க முடிந்திருக்கிறதா? அவர்கள் சத்தியமே பேசுகிறார்களா? தம்முடைய கடிதங்களுக்கு பதில் பெறுவதற்கே இவர்கள் பயப்படுகிறார்களே! இந்த நிலைமையில் மிகப் பெரிய கோளாறு ஏதோ இருக்க வேண்டுமென்றே தோன்றுகிறது. மாணவர்கள் பயத்தை விட்டொழிக்க வேண்டும். தம்முடைய பெரியவர்களிடம் தமது கருத்துகளை உறுதியுடனும், தைரியத்துடனும் எடுத்துச் சொல்ல அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் கதரை உபயோகிக்கிறார்களா, நூற்கிறார்களா? அப்படியானால் அவர்கள் தேச சேவையில் பங்கு கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லலாம். தம்முடைய ஓய்வு நேரங்களில் நோய்வாய்ப்பட்டுள்ள அண்டை வீட்டுக்காரரைக் கவனித்துக் கொள்கிறார்களா? அவர்கள் அசுத்தமாயிருந்தால் அல்லது தம் வீட்டைச் சுற்றி தெருக்களில் குப்பை கூளங்களிருந்தால், தாமே அதைச் சுத்தப்படுத்துகிறார்களா? இம்மாதிரி இன்னும் பல கேள்விகளைக் கேட்கலாம். இந்தக் கேள்விகளுக்கு அவர்கள் திருப்திகரமாக பதிலளிக்க முடிந்தால், இப்போதே கூட அவர்கள் தேசத்திற்குச் சேவை செய்துகொண்டுதானிருக்கிறார்கள் என்று சொல்லலாம்.

'நவஜீவன்' - 8—7—1928

## 3

சீனவில், மாணவர்கள் தான் முன்னின்று சுதந்திரப் போராட்டத்தை நடத்தினர்கள் என்று துணிந்து சொல்லலாம். உண்மையான சுதந்திரம் பெறுவதற்கு எகிப்தில் நடக்கும் போராட்டத்திலும் மாணவர்களே முன்னணியிலிருக்கிருர்கள். இந்தியாவிலுள்ள மாணவர்களும் அவர்களுக்குச் சளைத்தவர்களாயிருக்கக் கூடாது. சேவைக்காகவன்றி சுயநலத்திற்காக அவர்கள் பள்ளிகளுக்கோ, கல்லூரிகளுக்கோ போகக் கூடாது.

என்ன நேர்ந்துவிடுமோ என்ற பீதிதான் மாணவர்களுக்குள்ள பெரிய இடையூருகும். இந்த பயமெல்லாம் பெரும்பாலும் கற்பனைகளே. ஆகையால், பயத்தை விட்டொழிப்பதுதான் மாணவர்கள் முதலில் கற்றுக் கொள்ள வேண்டிய பாடமாகும். பள்ளிகளிலிருந்து வெளியேற்றி விடுவார்களோ, வறுமையில் உழல வேண்டியிருக்குமோ, சாகவேண்டியிருக்குமோ என்றெல்லாம் பயப்படுபவர்களால் சுதந்திரம் பெறவே முடியாது. வெளியேற்றிவிடுவார்களோ என்பதுதான் சர்க்கார் ஸ்தாபனங்களில் படிக்கும் மாணவர்களுக்குள்ள மிகப் பெரிய அம்சமாகும். தைரியம் இல்லாத அறிவு மெழுகு பொம்மையைப் போன்றது தான் என்பதை அவர்கள் உணர வேண்டும். அது பார்ப்பதற்கு அழகாயிருக்கும். ஆனல், உஷ்ணமான ஒரு பொருள் அதன் மீது பட்டால் போதும், உடனே உருகிவிடும்.

'எங் இந்தியா' – 12—7—1928

## 4

நாட்டில் மற்றத் துறைகளிலிருப்பதைப் போலவே மாணவர்களிடையேயும் ஒரு விழிப்பு உணர்ச்சியும், செயல்பட வேண்டும் என்ற ஆர்வமும் காணப்படுகின்றன. இது நல்ல சகுனம்தான்; ஆனல், இது எளிதில் ஒரு தீமையாகவும் மாறிவிடக் கூடும். கட்டுப்படுத்தி வைக்கப்படும் நீராவி, ஒரு யந்திரத்தை இயக்குவதற்குப் பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது. எவ்வளவோ பெரும் சுமைகளை ஏற்றிச் செல்லக் கூடிய அவ்வளவு பெரிய யந்திரத்தை அது இயக்குகிறது. ஆனல், அதைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வராவிட்டால் நீராவி ஒன்று வீணகப் போகிறது அல்லது நாசத்தை விளைவிக்கிறது. அதே மாதிரி, மாணவர்களிடமும், மற்றவர்களிடமும் காணப்படும் புதிய உற்சாகத்தை சரியான விதத்தில் சேகரித்து, பயன்படுத்தாவிட்டால் ஒன்று அது வீணகப் போய்விடும் அல்லது நம்மையே அழித்துவிடும். ஆனல், அதைச் சரியானபடி சேகரித்து, பயன்படுத்திக் கொண்டால், அபாரமான சக்தியை உற்பத்தி செய்யும்.

இப்போதுள்ள பிரிட்டிஷ் ஆட்சி முறையினிடம் எனக்கு அன்புமில்லை, மதிப்புமில்லை. அதை சைத்தானின் சிருஷ்டி என்று

நான் வர்ணித்திருக்கிறேன். அது அழிந்து, மறைந்து போக வேண்டுமென்றே நான் எப்போதும் விரும்பிவந்திருக்கிறேன். இந்தியாவிலுள்ள யுவர்களும் இதை அழிக்க முடிந்தால் மிகவும் நன்ருயிருக்கும். அத்தகைய சக்தியை வளர்த்துக் கொள்ளுவது முற்றிலும் மாணவர்களிடமேதானிருக்கிறது. தம்முள் குமுறிக் கொண்டிருக்கும் உணர்ச்சியை அவர்கள் கட்டுக்குள் அடக்கி வைத்துக் கொண்டு, சேமித்தும் வைத்திருந்தால், அதுவே நாம் சுதந்திரம் பெறுவதற்கான சக்தியை உற்பத்தி செய்துவிடும்.

எனக்குத் தெரிந்த வரையில், தாய் நாட்டின் விடுதலைக்காக இப்போது நடைபெற்றுவரும் சாத்விகப் போராட்டத்தில் மாணவர்கள் பங்கு கொள்ளவே விரும்புகிருர்கள். என்னுடைய மதிப்பீடு சரியானதல்ல என்றே வைத்துக் கொண்டாலும் கூட, நான் மேலே கூறியது அப்போதும் பொருந்தும். அதாவது போராட்டம், அகிம்சை வழியில் அமைதியாக நடந்தாலும், பலாத்காரம் நிறைந்ததாக இருந்தாலும், தார்மிக சக்தியுடன் அது நடத்தப்பட்டாலும், மிருகபலத்துடன் நடத்தப்பட்டாலும் நான் சொன்னது பொருந்தும். நாம் ஆயுதங்களின் உதவியுடன் போராடினுல் கூட, கட்டுப்பாட்டை அனுஷ்டிக்க வேண்டியதும், சக்தியை வீணடிக்காமல் சேர்த்து வைப்பதும் அவசியமாக இருக்கும். இஸ்லாமிய சரித்திரத்தில் கலிபாக்களும் கிறிஸ்தவர்களிடையே புனித யுத்தக்காரர்களும், சமீப கால சரித்திரத்தில் கிராம்வெல்லும், அவருடைய போர்வீரர்களும் பெரும் தியாகங்கள் செய்திருக்கிருர்கள். நமது காலத்திலிருந்தே உதாரணங்களை எடுத்துக் கொண்டாலும், லெனின், ஸன்-யாட்-ஸென் போன்ற மற்றும் பலர் யோகிகள்கூட வெட்கித் தலை குனியத்தக்க அளவுக்கு எளிய வாழ்க்கை நடத்தினுர்கள், போகங்களைத் துறந்தார்கள், இடையருத கண்காணிப்புடன் ஒரே நோக்கத்துடன் வேலை செய்தார்கள். அவர்களைப் பின்பற்றுபவர்கள் கூட அதே விசுவாசத்துடனும், கட்டுப்பாடுடனும் நடந்து கொண்டார்கள்.

நாமும் அம்மாதிரியே செய்ய வேண்டியிருக்கும். இது வரையில் நாம் செய்துள்ள தியாகம் மிக்க சொற்பமானதுதான். கட்டுப்பாடுடன் நடந்து கொள்ளுவதற்கான ஆற்றல் நம்மிடையே அதிகமாக இல்லை. எளிய வாழ்க்கை நடத்தும் விஷயமும் அப்படித்தான். லட்சியத்தில் நமக்குள்ள நம்பிக்கை இன்னும் மேலெழுந்தவாரியானதாகவே இருக்கிறது. நம்முடைய உறுதியும், செயல் திறனும் இன்னும் ஆரம்ப கட்டத்திலேயே இருக்கின்றன. இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறதென்பதை நமது இளைஞர்கள் உணரவேண்டும். இது வரையில் அவர்கள் என்ன சாதித்திருக்கிருர்களென்று எனக்குத் தெரியும். அதற்காக என்னிடமிருந்து அவர்களுக்கு எந்தவிதமான புகழுரையும் தேவையில்லை. ஒரு நண்பன் மற்ரெரு நண்பனை முகஸ்துதி செய்ய ஆரம்பித்தால், அவன் நண்பன்

அல்ல; நண்பன் என்ற அந்தஸ்தை அவன் இழந்துவிடுகிறான். குறைபாடுகளை எடுத்துக்காட்டி, அவற்றைப் போக்க உதவி செய்பவனே உண்மையான நண்பன்; அது அவனுடைய கடமையுமாகும்.

—'நவ ஜீவன்' - 3—1—1929

# 22

# இந்திய இளைஞர்களுக்கு

கல்லூரி மாணவர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"காங்கிரஸ் தீர்மானப்படி இந்த வருட முடிவுக்குள் நாம் டொமினியன் அந்தஸ்து பெறவேண்டும். ஆனால், இப்போது நாட்டிலுள்ள நிலைமையைப் பார்த்தால், நம்முடைய கோரிக்கைக்கு சர்க்கார் இணங்குவார்களென்று தோன்றவில்லை; அவர்கள் இணங்கமாட்டார்களென்பதும் நிச்சயம்.

"அப்படியானால் காங்கிரஸ் தீர்மானப்படி அடுத்த வருடம் முதல் நாம் பூர்ண ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டியிருக்கும். இளைஞர்களாகிய நாங்கள்தான் அதில் முதல் பங்கு எடுத்துக்கொள்ள வேண்டும். அப்போது நாங்கள் பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் விடவேண்டியிருக்குமா? அப்படியானால், இப்போதே அதை எங்களுக்குச் சொல்லிவிட்டால் என்ன? பள்ளிக்கூடத்தை விடுவதில் பெரிய கஷ்டம் எதுவும் இராது; ஆனால், கல்லூரிகளை விடுவதென்றால் கொஞ்சம் யோசிக்க வேண்டும். கல்லூரிகளை விட்டால், வருட ஆரம்பத்தில் மாணவர்கள் செலுத்திய பெரும் தொகையில் ஒரு பகுதியாவது அவர்களுக்குத் திரும்பக் கிடைக்குமா? இல்லாவிட்டால் அவர்களுக்கு மிகுந்த நஷ்டம் ஏற்படும்; பலருக்கு அது தாங்காது. பணமுள்ளவர்களுக்கு இதைப் பற்றிக் கவலையில்லாமலிருக்கலாம்; ஆனால், எங்களிடையே உள்ள ஏழைப் பையன்கள் பெரிதும் பாதிக்கப்படுவர்.

"ஆகையால், கல்லூரிகளை பகிஷ்காரம் செய்ய வேண்டியிருக்குமென்றால் மாணவர்களை முன்னதாகவே எச்சரித்துவிட வேண்டும்; அப்படிச் செய்தால் அவர்களுடைய பணமும், சக்தியும் வீணாகாமலிருக்கும்.

"இந்தக் கேள்விக்கு நீங்கள் பதிலளிப்பீர்களென நம்புகிறேன்."

இளமையின் நம்பிக்கைத் துடிப்பையோ, துணிச்சலையோ இக்கடிதத்தில் நான் காணவில்லை. ஒரு பனியாவின் கருமித்தனமும், சாவை சமீபித்துக் கொண்டிருக்கும் என்னைப் போன்ற ஒருவரின் அவநம்பிக்கையையுமே அதில் காண்கிறேன். சர்க்கார் டொமினியன் அந்தஸ்து அளிக்கமாட்டார்கள் என்ற முடிவுக்கு இந்த இளைஞர் எப்படிவந்தார்? சர்க்கார் எதையும் கொடுக்கப் போவதில்லையென்பதை அவர் மறந்துவிடுகிறார். நம்முடைய தியாகம், ஒற்றுமை ஆகியவற்றின் பலம் கொண்டுதான் நாம்

விரும்புவதைப் பெறுவோம். எதற்கும் கணக்குப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு பயந்தாங்கொள்ளிக்கு அசாத்தியமான தாகத் தோன்றுவது, இளமையின் அசைக்க முடியாத துணிச்சலின் முன்பு சாத்தியமானதாகவே தோன்ற வேண்டும். அசாத்தியமானதென்று தோன்றுவதை சாத்தியமானதாக்குவ தில்தான் இளமையின் தீரமும், கீர்த்தியும் இருக்கின்றன.

ஆனால், இளைஞர்களும், மற்றவர்களும் அசட்டையாகவே இருந்து கொண்டிருந்தால், இந்த வருட முடிவுக்குள் நாம் வெற்றி பெற முடியாதென்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். வெற்றி கிடைக்காவிட்டாலும் தைரிய சாலிகள் அதை வரவேற்க வேண்டும். ஏனெனில், போராடுவதற்கு அதன்மூலம் அவர் களுக்கு ஒரு வாய்ப்பு கிடைக்கும். போராட வேண்டியிருக்குமோ, இறுதியில் பின்வாங்க வேண்டியிருக்குமோ என்று பயந்து போராடுபவன் முன் செல்லமாட்டான்.

அது எப்படியிருந்தாலும், மாணவர்கள் பீதியடைவதற்குக் காரணமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. போராட்டமே இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். தற்காலிகமாக அவர்கள் விட்டு வரும் கல்லூரியில் இன்றைக்கோ, நாளைக்கோ அவர் களுக்கு உரிமை இருந்துதான் தீரும் என்பதை மறந்துவிடக் கூடாது. சுயராஜ்யத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கும் போது சம்பளப் பணம் நஷ்டமாகிவிடுமோவென்று பேசுவது தகாது. எவ்வளவோ பேர் தம்மிடமுள்ள எல்லாவற்றையுமே இழந்துவிடுவதாயிருக்கலாம். அப்படி இருக்கும்போது, வெறும் சம்பளப் பண நஷ்டத்திற்கு நாம் என்ன முக்கியத்துவம் கொடுக்க முடியும்?

இனி அந்த மாணவர் எழுப்பியுள்ள கேள்வியை கவனிப் போம். சர்க்கார் கல்லூரிகளையும், பள்ளிக்கூடங்களையும் விட வேண்டுமா, இல்லையா என்பதை இறுதியில் காங்கிரஸ் முடிவு செய்யும். என் விருப்பப்படி விடுவதாக இருந்தால், நிச்சயமாக பகிஷ்காரத்தையே நான் வற்புறுத்துவேன். பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் மூலம்தான் சர்க்கார் இந்த நாட்டில் தன் ஆட்சியை நடத்துகிறதென்பது வெட்டவெளிச்சமாயிருக்கிறது. குஜராத் வித்தியாபீடத்தில் ஆச்சாரிய ராமதேவ் செய்த பிரசங்கங்களில் ஆங்கிலேயர்களின் சாட்சியங்களைக் கொண்டே இதை ருசுப்பித் திருக்கிறார். ஆங்கிலேய எஜமானர்களின் கட்டளைகளை நிறை வேற்றுவதற்கான ஊழியர்களைத் தயார் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடனேயே சர்க்கார் இந்தக் கல்வி முறையை வகுத் திருக்கிறார்கள் என்பதை ருசுப்பித்திருக்கிறார். சர்க்கார் பட்டங்கள் பெறுவதற்காகக் கல்லூரிகளில் திண்டாடிக் கொண் டிருக்கும் ஆயிரக்கணக்கான இளைஞர்களின் நோக்கம் என்ன? ஏதாவது வேலை பெற வேண்டுமென்பதைத் தவிர அவர்களுக்கு வேறு ஒரு நோக்கமும் இல்லை. பட்டங்களின் மூலம் அறிவு பெற முடியாது; உழைத்துப் படிப்பதன் மூலம்தான் அதைப் பெற முடியும். பட்டங்கள் பெற வேண்டுமென்ற விருப்பத்திற்கு மூல

காரணம் வேலை பெறவேண்டும் என்ற ஆசைதான். சுயராஜ்யம் பெறுவதற்கு இது பெரிய இடையூறாகும். மாணவர்களிடையே ஒரு புதிய உணர்ச்சி தோன்றுவதை நான் காண்கிறேன். இதைக் கண்டு பலர் மகிழ்ச்சியடைகிறார்கள்; ஆனால், அது என் கண்களை மறைத்துவிடவில்லை. இந்த உணர்ச்சி தற்காலிகமான ஒன்றாகத் தான் இருக்கிறது; ஒரு அளவுக்கு அது மேலெழுந்தவாரியானதாகவும் இருக்கிறது. உண்மையான உணர்ச்சி தோன்றும் போது, சூரியகிரணங்களைப் போல் அது அவ்வளவு ஒளிவீசும். நம் மக்களிடையே அந்த உணர்ச்சி ஏற்படும்போது, எந்த மாணவனுக்கும் பள்ளிக்கூடமோ, கல்லூரியோ தேவைப்படாது. இப்போதைக்கு சர்க்காரின் கரன்ஸி நோட்டுகளைப் போல், அவர்களுடைய பள்ளிக்கூடங்களுக்கும், கல்லூரிகளுக்கும் செலாவணி இருக்கிறது. அந்த வலையில் விழாதவர்கள் யார்?

—' நவ ஜீவன்' – 14—4—1929

# 23

# இளைஞர்களே ஜீவ நாடி

[ஆக்ரா மாணவர்கள் காந்திஜிக்கு ஒரு வரவேற்பு அளித்தார்கள். அவருடைய லட்சியங்களில் தமக்கு நம்பிக்கை இருந்த போதிலும் அவற்றை நடைமுறையில் தங்களால் பின்பற்ற முடியவில்லையென்றும், ஆகவே தம் உள்ளங்களை அளிப்பதோடு நிறுத்திக் கொள்ளுவதாகவும் அவர்கள் வரவேற்பு உரையில் கூறியிருந்தார்கள். அவர்களிடையே காந்திஜி செய்த பிரசங்கத்திலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:]

நம் நாட்டு இளைஞர்கள் அம்மாதிரி கருத்தைத் தெரிவிப்பார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. மரணத்தின் நிழலில் வசித்துக் கொண்டிருக்கும் நான், நாட்டின் இளைஞர்களிடம் உதவி பெற முடியவில்லையென்றால், பின்னர் யாரைத்தான் நம்புவது? "எங்களுடைய உள்ளங்களை உங்களுக்கு அளிக்கிறோம்; ஆனால், உங்களுடைய லட்சியங்களை நிறைவேற்ற முடியாமலிருப்பதற்கு வருந்துகிறோம்" என்று இளைஞர்கள் சொல்லுகிறார்களே! இளைஞர்களே தேசத்தின் ஜீவநாடி. உப்பு தனது கரிப்பை இழந்துவிட்டால், தேசத்திற்கு வேறு என்ன நம்பிக்கை இருக்க முடியும்? எங்களால் முடியவில்லை என்று மாணவர்கள் கூறுவதைக் கேட்க நான் தயாராயில்லை. உங்களுடைய நல்லொழுக்கத்தைப் பேணி வளர்த்துக் கொண்டு, உங்களுடைய சிந்தனைகள், செய்கைகளை நீங்கள் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லையென்றால், உங்களுடைய படிப்பும், ஷேக்ஸ்பியர், வேர்ட்ஸ்வொர்த் ஆராய்ச்சியும் வீண்தான். தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்ளவும், உங்களுடைய இச்சைகளை அடக்கிக் கொள்ளவும் நீங்கள் கற்றுக்கொண்டு விட்டால், என்ன செய்வது என்று இப்படி ஏக்கம் அடைய மாட்டீர்கள்.

— 'எங் இந்தியா' – 19—9—1929

# 24

# மாணவர்களும் விடுமுறையும்

மாணவர்கள் தமது விடுமுறைக் காலத்தை எப்படிப் பயன் படுத்திக் கொள்ளுவது என்பதைப் பொறுத்த வரையில், அவர்கள் ஆர்வத்துடன் தம் வேலையை அணுகினுல், பல காரியங்களைச் செய்ய முடியுமென்பது நிச்சயம். அவற்றில் சிலவற்றைக் கூறுகிறேன்.

1. விடுமுறையின் ஒரு பகுதியில் நல்ல பாட திட்டத்துடன், குறுகியகால பகல், இரவுப் பள்ளிகளை நடத்துங்கள்.

2. ஹரிஜனங்கள் வசிக்கும் பகுதிகளுக்குச் சென்று அவற்றைச் சுத்தம் செய்யுங்கள். ஹரிஜனங்கள் உதவி செய்ய முன் வந்தால் ஏற்றுக் கொள்ளுங்கள்.

3. ஹரிஜனக் குழந்தைகளை அழைத்துக் கொண்டுபோய் ஊர்சுற்றிக் காட்டுங்கள். அவர்களுடைய கிராமத்திற்கு அருகாமையிலுள்ள காட்சிகளைக் காட்டுங்கள்; இயற்கையைப் புரிந்து கொள்ளக் கற்றுக் கொடுங்கள். தம்மைச் சுற்றியுள்ளவைகளில் அவர்களுக்கு அக்கறை ஏற்படும்படி செய்ய வேண்டும். அத்துடன் பூகோளம், சரித்திரம் பற்றியும் கொஞ்சம் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

4. ராமாயணம், மகாபாரதத்திலிருந்து எளிய கதைகளை அவர்களுக்கு வாசித்துக் காட்ட வேண்டும்.

5. சுலபமான பக்திப் பாடல்களைக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

6. ஹரிஜனப் பையன்களின் உடலில் உள்ள அழுக்கு, அசுத்தங்களைப் போக்க முற்பட வேண்டும். குழந்தைகள், வயதானவர்கள் இருவருக்கும் சுகாதாரம் பற்றிய ஆரம்ப விதிகளைச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

7. குறிப்பிட்ட பகுதிகளில் ஹரிஜனங்களுடைய நிலையைப் பற்றி விரிவான புள்ளி விவரங்கள் எடுக்க வேண்டும்.

8. நோய்வாய்ப்பட்டுள்ள ஹரிஜனங்களுக்கு வைத்திய உதவியளிக்க வேண்டும்.

ஹரிஜனங்களிடையே என்ன செய்யலாம் என்பதற்கு இவை சில மாதிரிகளாகும். இது அவசரமாகத் தயாரிக்கப்பட்ட ஜாபிதா. மாணவர்கள் யோசித்துப் பார்த்தால் இன்னும் பலவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம்.

ஹரிஜனங்களைப் போலவே சாதி ஹிந்துக்களுக்கிடையேயும் அவசியமாகச் செய்ய வேண்டிய சேவை ஒன்றிருக்கிறது. மாணவர்கள் அவர்களிடையே லேசாகத் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரம் செய்யலாம். இந்த விஷயத்தில் மிகுந்த அறியாமை நிலவுகிறது. இதைப் பற்றி நல்ல புத்தகங்களை விநியோகித்தால் அதை வெகு சுலபமாகப் போக்கிவிடலாம். யார் யார் தீண்டாமை ஒழிப்பை ஆதரிக்கிறார்கள், யார் எதிர்க்கிறார்கள் என்று கணக்கு எடுக்கலாம். அதே சமயத்தில் ஹரிஜனங்கள் அனுமதிக்கப்படாத கிணறுகள், பள்ளிக்கூடங்கள், குளங்கள், கோவில்கள் முதலியவைகளையும், அனுமதிக்கப்படுபவைகளையும்பற்றிக் குறிப்பு எடுத்துக் கொள்ளலாம்.

இந்தக் காரியங்களையெல்லாம் சீராகவும், விடாப்பிடியாகவும் செய்தால், பிரமிக்கத்தக்க பலன்கள் கிடைக்கும். ஒவ்வொரு மாணவரும் ஒரு குறிப்புப் புத்தகம் வைத்துக் கொள்ள வேண்டும். தான் செய்யும் வேலைகளை அதில் குறித்துக் கொள்ள வேண்டும். தாங்கள் செய்த வேலையின் பலன்களைப் பற்றி விடுமுறையின் முடிவில், தங்களுடைய மாகாணத்திலுள்ள தீண்டாதார் ஊழியர் சங்கத்திற்கு சுருக்கமான ஒரு அறிக்கை அனுப்ப வேண்டும். நான் சொன்ன யோசனைகளைப் பூராவாகவோ அல்லது சிலவற்றையோ மற்ற மாணவர்கள் ஏற்றுக் கொண்டாலும், ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், எனக்குக் கடிதம் எழுதிய மாணவர் தானும், தனது சகாக்களும் செய்த வேலைகளைப் பற்றி எனக்குத் தகவல் கொடுக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன்.

—'ஹரிஜன்' – 1—4—1933

# 25

# விடுமுறையை எப்படி பயன்படுத்திக் கொள்ளுவது?

**கேள்வி:** விடுமுறைக் காலத்தில் மாணவர்கள் என்ன செய்யலாம்? அப்போது அவர்கள் படிக்க விரும்பவில்லை; ஓயாமல் நூற்றுக் கொண்டேயிருந்தாலும் அலுப்புற்றுவிடுவார்கள்.

**பதில்:** நூற்பதில் அலுப்புத் தட்டினால், அதில் உள்ள கவர்ச்சியையும், அதனுடைய ஜீவசக்தியையும் அவர்கள் புரிந்து கொள்ளவில்லையென்பதையே அது காட்டுகிறது. நூற்கும் ஒவ்வொரு கஜ நூலும் தேசத்தின் செல்வத்தைப் பெருக்குகிறது என்பதைப் புரிந்து கொள்ளுவதில் என்ன கஷ்டம் இருக்கிறது? ஒரு கஜம் நூல் என்பது அதிகம் அல்ல. ஆனால், அது மிகவும் சுலபமான உழைப்பாதலால் சுலபமாக அதைப் பெருக்கிக் கொண்டே போகலாம். நூற்பதனால் கிடைக்கக்

கூடிய பலன்கள் நிறைய இருக்கின்றன. சர்க்காவின் அமைப்பை மாணவர்கள் நன்ருகப் புரிந்து கொண்டு, அதை சரியாக வைத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்ப வர்கள், நூற்பதில் ஒரு விசேஷக் கவர்ச்சியைக் காண் பார்கள். ஆகையால், மாணவர்களுக்கு வேறு எந்த வேலையை யும் கூற நான் மறுக்கிறேன். இன்னும் அதிக அவசரமான வேலையும் அவர்களுக்கு ஏற்படலாம். அப்போது அவர்கள் அந்த வேலையைக் கவனிக்கலாம். பக்கத்திலுள்ள கிராமங் களை நல்ல சுகாதாரமான நிலைமையில் வைத்துக் கொள்ளு வதற்கோ அல்லது நோயாளிகளைக் கவனித்துக் கொள் ளவோ, அல்லது ஹரிஜன் குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுக்கவோ அவர்களுடைய உதவி தேவைப் படலாம்.

—'ஹரிஜன்' - 1—6—1940

# 26

# மாணவர்களும் சத்தியாக்கிரகமும்

**கேள்வி:** சத்தியாக்கிரக இயக்கம் ஆரம்பிக்கப்பட்டால், மாண வர்கள் அதில் கலந்து கொள்ளக் கூடாதென்று ஏன் ஆட்சே பிக்கிறீர்கள்? அவர்கள் அதில் கலந்து கொள்ள அனுமதிக்கப் பட்டால், பள்ளிக்கூடத்தையும், கல்லூரியையும் விட்டுவிட்டு வந்து விடவேண்டுமென்று ஏன் வற்புறுத்துகிறீர்கள்? தம் முடைய நாடு யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் போது இங்கிலாந் திலுள்ள மாணவர்கள் பேசாமல் பார்த்துக் கொண்டா இருக் கிருர்கள்?

**பதில்:** பள்ளிகளிலிருந்தும், கல்லூரிகளிலிருந்தும் மாணவர்களை வாபஸ் பெறுவது அவர்களிடையே ஒத்துழையாமைத் திட்டத்தை ஊக்கிவிடுவதற்காகத்தான். இன்று அது நமது வேலைத் திட்டத்தில் இல்லை. சத்தியாக்கிரக இயக்கம் என் பொறுப்பில் இருந்தால், மாணவர்கள் பள்ளிகளையோ, கல் லூரிகளையோ விட்டு வரவேண்டுமென்று அழைக்கவும் மாட்டேன். அதற்கு ஊக்கமளிக்கவும் மாட்டேன். சர்க்கார் பள்ளிகள், கல்லூரிகளிலுள்ள மோகம் மாண வர்களுக்கு இன்னும் போகவில்லை என்பதை அனுபவத்தில் பார்த்திருக்கிறோம். இந்த ஸ்தாபனங்கள் தமது கவர்ச்சியை இழந்துவிட்டன என்பதே ஒரு லாபம்தான். ஆனல், அதை நான் பெரிதாக நினைக்கவில்லை. அந்த ஸ்தாபனங்கள் தொடர்ந்து நீடிக்கப் போகின்றனவென்ருல், அங்கிருந்து அவர்களை வாபஸ் பெறுவதால் அவர்களுக்கு ஒரு நன்மையு மில்லை; இயக்கத்திற்கும் அதனல் ஒரு உதவியும் இல்லை.

அப்படி அவர்களை வாபஸ் பெறுவது அகிம்சைக்கு ஏற்ற தாயிராது. இயக்கத்தில் சேரவிரும்புபவர்கள் பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் இறுதியாக முழுக்குப் போட்டுவிட வேண்டுமென்றும், போராட்டம் முடிந்த பிறகும் தேச சேவை செய்வதென்று உறுதி கொள்ள வேண்டுமென்றும் நான் கூறியிருக்கிறேன். இங்கிலாந்திலுள்ள மாணவர்களுடன் இங்குள்ள மாணவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. அங்கு தேசமே யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறது. நிர்வாகிகளே அந்த ஸ்தாபனங்களை மூடி விட்டார்கள். இங்கு அந்த ஸ்தாபனங்களின் தலைவர்களையும் மீறி மாணவர்கள் வெளியே வரவேண்டியிருக்கும்.

—'ஹரிஜன்' – 15—9—1940

## 27

# ஒரு கிறிஸ்தவ மாணவரின் புகார்

வங்காளத்திலுள்ள ஒரு பாதிரியார் கல்லூரியில் படிக்கும் கிறிஸ்தவ மாணவர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:

"கிறிஸ்தவ மதபோதனை செய்து, மத மாற்றம் செய்வதற்காகவே பாதிரியார் கல்லூரிகள் இருக்கின்றன. பைபிள், ஏசுநாதர், கிறிஸ்தவ மதம் முதலியவைகளைப் பற்றி பாதிரிமார் பேசுகிறார்கள். ஆனால், இந்தியாவுக்கு தேசீய முக்கியத்துவம் வாய்ந்த ஏதாவது ஒரு பிரச்னை வந்தால், ஆச்சரியப் படத்தக்க விதத்தில் அவர்கள் பிற்போக்காளர்களாக இருக்கிறார்கள். எங்கள் கல்லூரியில் ஒவ்வொரு வருடமும் ஒரு விருந்து நடப்பது உண்டு. செப்டம்பர் 7–ஆம் தேதி மாலை அம்மாதிரி விருந்தொன்று நடந்தது. கல்லூரி மாணவர்கள் கோஷ்டியாகச் சேர்ந்து 'வந்தே மாதரம்' பாடவேண்டுமென்பது முதல் நிகழ்ச்சி. ஒரு இந்திய தேசீய கீதத்திற்காக ஐரோப்பியர்கள் பத்து நிமிஷம் எழுந்து நிற்பது கஷ்டமாயிருக்குமென்றும் 'வந்தே மாதர கீதம்' பாடுவதை அனுமதித்தால், அதை தேசீய கீதமாகத் தாங்கள் உத்தியோக பூர்வமாக அனுமதிப்பது போலாகுமென்றும், அதற்குத் தாங்கள் தயாராயில்லை யென்றும் தலைமை ஆசிரியர் ஆட்சேபித்தார். மாணவர்கள் எவ்வளவோ வாதாடிப் பார்த்தும் பிரயோசனப்படவில்லை. மாணவர்கள் வேலை நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதே மாதிரி காங்கிரசும் சத்தியாக்கிரகத்தையும், ஒத்துழையாமையையும் ஆரம்பிக்க வேண்டும்; ஏனெனில் ஏகாதிபத்திய பிரிட்டன் நம்முடைய மனப்பான்மையை ஒரு நாளும் புரிந்துகொள்ளாது."

மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்வதை ஆட்சேபித்துக் கொஞ்ச காலமாக நான் நிறைய எழுதியிருக்கிறேன். அந்தக் கல்லூரியின் பெயர் எனக்குத் தெரியாது. பெயர் தெரிந்திருந்தால், அதன் அதிகாரிகளிடமிருந்து இதைப் பற்றிய விவரங்

களைக் கேட்டிருப்பேன். ஆகையால், இந்த மாணவர் கொடுத்துள்ள விவரங்கள் சரியானவை என்ற அடிப்படையிலேயே என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறேன். அந்த விவரங்கள் சரியானவைதான் என்ருல், அந்த வேலை நிறுத்தம் நியாயமானது தான். அது வெற்றிகரமாக நடந்திருக்கும் என்றும், நிர்ப்பந்தம் எதுவும் இருந்திராதென்றும் நம்புகிறேன். அந்த கீதம் தேசீய கீதமாயிருந்தாலும், இல்லாவிட்டாலும், அதை முடிவு செய்வது பாதிரியார்களின் வேலையல்ல. மாணவர்கள் அதை தேசீய கீதமாக ஏற்றுக் கொண்டிருக்கிருர்களென்பதே அவர்களுக்குப் போதுமானதாகும். பேராசிரியர்களும் ஆசிரியர்களும் தமது மாணவர்களின் நன் மதிப்பைப் பெற வேண்டுமானல், மாணவர்கள் விரும்பத்தகாத அல்லது ஒழுக்கக் கேடான நடவடிக்கைகளில் ஈடுபடாமலிருக்கும் வரையில், அந்த நடவடிக்கைகளில் அவர்களும் ஈடுபட வேண்டும்.

சிம்லா, 29—9—40 —'ஹரிஜன்' – 6—10—1940

# 28

# முதல் பிரச்னை

[1937 அக்டோபர் 22, 23 தேதிகளில் வர்தாவில் நடைபெற்ற கல்வி மகாநாட்டை ஆரம்பித்து வைத்து காந்திஜி செய்த பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன :]

அழைப்புகளை ஏற்றுக்கொண்டு மகாநாட்டுக்கு வந்த அனைவருக்கும் நன்றி செலுத்துகிறேன். தலைவர் என்ற முறையிலோ அல்லது அங்கத்தினர் என்ற முறையிலோ நான் எந்த முறையில் உங்களை அழைத்திருந்தாலும், நான் சமர்ப்பித்துள்ள திட்டங்களைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயங்களையும், யோசனைகளையும் கேட்பதற்காகவே, முக்கியமாக, இவற்றை எதிர்ப்பவர்களின் அபிப்பிராயங்களைக் கேட்பதற்காகவே அழைப்புகள் அனுப்பப்பட்டன. மனம் விட்டு, முழுமையாக விவாதம் நடத்த வேண்டுமென்பதே எனது விருப்பமாகும். ஏனெனில், எனது உடல் நிலையை முன்னிட்டு இந்த நண்பர்களை இந்த மகாநாட்டுப் பந்தலுக்கு வெளியே சந்தித்துப் பேசுவதற்கு எனக்கு சௌகரியப்படவில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தத் திட்டங்கள் ஆரம்பக்கல்வி, கல்லூரிக் கல்வி ஆகிய இரண்டையும் பற்றியவை. ஆனல், முக்கியமாக ஆரம்பக் கல்வி விஷயத்திலேயே நீங்கள் அதிக கவனம் செலுத்த வேண்டியிருக்கும். மத்தியதரக் கல்வியும் ஆரம்பக் கல்வியுடன் சேர்ந்ததேயாகும். ஏனெனில், 1915-லிருந்து நான் செய்த சுற்றுப் பிரயாணங்களின் போது பல கிராமங்களைப் பார்த்திருக்கிறேன். அங்குள்ளவர்களில் ஒரு மிகச் சிறு பகுதியினருக்கு ஆரம்பக் கல்வி

ஒன்றுதான் கிடைக்கிறது. பெரும்பாலும் எழுத்தறிவற்றவர்களாக உள்ள இந்த கிராமப் பையன்கள், பெண்களின் தேவைகளை முக்கியமாக கவனிக்க வேண்டும். நூற்றுக்கணக்கான கல்லூரி மாணவர்களை நான் சந்தித்திருக்கிறேன். அவர்களுடன் மனம் விட்டு விவாதித்திருக்கிறேன். அவர்களுடன் கடிதப் போக்குவரத்து நடத்தியிருக்கிறேன். அவர்களுடைய தேவைகள், பலவீனங்கள், அவர்கள் எந்த நோயினால் கஷ்டப்படுகிறார்கள் என்ற விவரங்களெல்லாம் எனக்குத் தெரியும். ஆயினும், கல்லூரிக் கல்வியைப் பற்றி எனக்கு அனுபவமில்லை. ஆனால், நீங்கள் ஆரம்பக் கல்வியின் தேவைகளைப் பரிசீலனை செய்வதுடன் நிறுத்திக்கொள்ள வேண்டும். ஏனெனில், இந்த முக்கிய விஷயத்திற்குத் தீர்வு கண்டுவிட்டால், கல்லூரிக் கல்வி விஷயமும் தீர்ந்துவிடும்.

## உடலுழைப்பு மூலம் கல்வி

இப்போதுள்ள ஆரம்பக் கல்வி முறை வீண் வியர்த்தம் என்பதுடனில்லாமல், அதனால் தீங்கு ஏற்படுகிறதென்பது நிச்சயம். பல பிள்ளைகள் தம் பெற்றோர்களுக்குப் பிரயோசனப்படுவதில்லை. தமது குடும்பத் தொழில்களையும் அவர்கள் இழந்துவிடுகிறார்கள்; கெட்ட பழக்கங்களைக் கற்றுக்கொண்டுவிடுகிறார்கள்; நகர்ப்புற வாழ்க்கை முறையைப் பிடித்துக்கொண்டுவிடுகிறார்கள்; எதையாவது கொஞ்சம் கற்றுக்கொண்டுவிடுகிறார்கள். ஆனால், அதை நிச்சயமாகக் கல்வி என்று சொல்ல முடியாது. தொழில் அல்லது உடலுழைப்பின் மூலம் கல்வியளிப்பதுதான் இதற்குப் பரிகாரம் என்று நான் கருதுகிறேன். தென்னாப்பிரிக்காவில் என்னுடைய பையன்களுக்கு இந்தப் பயிற்சியே அளித்தேன். மேலும், அங்கு டால்ஸ்டாய் பண்ணையில் எல்லா சாதி, மதங்களையும் சேர்ந்த பையன்கள் இருந்தார்கள். இவர்களில் சிலர் கெட்டிக்காரர்கள், சிலர் நடுத்தரம், சிலர் மோசம்,-இப்படியெல்லாம் இருக்கும். தச்சு வேலை, செருப்பு தைப்பது முதலிய வேலைகளில் இவர்களுக்குப் பயிற்சியளித்து எனக்கு அனுபவம் உண்டு. என்னுடைய பிள்ளைகளுக்கும், மற்றக் குழந்தைகளுக்கும் இதனால் ஒரு நஷ்டமுமில்லை. எனக்கோ, அவர்களுக்கோ திருப்தியளிக்கக்கூடிய ஒரு கல்வியை அவர்களுக்கு அளிக்க என்னால் முடியவில்லை. பல்வேறு அலுவல்கள் காரணமாக அதற்கு எனக்கு நேரமில்லை. இருந்தாலும், அதனால் அவர்கள் எதுவும் நஷ்டமடைந்துவிட வில்லையென்றே நினைக்கிறேன்.

எந்தத் தொழில் போதிக்கப்படுகிறது என்பதை நான் முக்கியமானதாகக் கருதவில்லை. எழுத்தறிவு, சரித்திரம், பூகோளம், கணிதம், விஞ்ஞானம் முதலிய எல்லாக் கல்வியுமே உடலுழைப்பின் மூலம் கற்றுக்கொடுக்கப்பட வேண்டுமென்பதே என் விருப்பம். மத்திய காலத்தில் வேறு எதுவுமே போதிக்கப்படவில்லை என்று ஆட்சேபிக்கலாம். ஆனால், கல்வியளிக்க

வேண்டும் என்ற நோக்கத்துடன் அப்போது தொழில்கள் கற்றுக் கொடுக்கப்படவில்லை. இந்தக் காலத்தில் சிலர் தமது பரம் பரைத் தொழில்களை மறந்துவிட்டார்கள். அதற்குப் பதிலாக குமஸ்தா வேலைக்குப் போய்விட்டார்கள். இதனால் அவர்களுடைய சேவை கிராமங்களுக்குக் கிடைக்காமற் போய்விட்டது. ஆகையால், எங்கு போனாலும், ஒரு சராசரி கிராமத்தில் திறமை சாலியான ஒரு தச்சு வேலைக்காரரையோ, கொல்லரையோ காண்பது கஷ்டமாகிவிட்டது. கைவினைத் தொழில்கள் அநேகமாக அழிந்து போய்விட்டன. கைராட்டினம் புறக்கணிக்கப் பட்டுவிட்டது. இது லங்காஷயருக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கு அபிவிருத்தி செய்யப்படுகிறது. ஆங்கிலேயர்கள் கைவினைத் தொழில்களை எவ்வளவு பிரமாதமாக அபிவிருத்தி செய்யக்கூடியவர்கள் என்பதை இன்று பார்க்கிறோம். கைத் தொழில்கள் பெருகுவது பற்றி எனக்கு சில கருத்துகள் உண்டு. இருந்த போதிலும் ஆங்கிலேயர்களின் இந்தத் திறமையை நான் குறிப்பிட வேண்டும்.

ஒரு தொழிலைப் பற்றிய பூராவிவரங்களையும் நடை முறையில் செய்து காட்டுவதுதான் இதற்குப் பரிகாரம். அதன் மூலம் கல்வியும் அளிக்கப்படுகிறது. உதாரணமாக, தக்ளி மூலம் நூற்கக் கற்றுக்கொடுப்பதாக வைத்துக்கொள்வோம். இதற்கு முன்பு பல்வேறு பருத்தி ரகங்கள், இந்தியாவின் பல்வேறு பாகங்களிலுள்ள பல்வேறுவிதமான மண்வளங்கள், கைவினைத் தொழில்கள் அழிந்துபோனது பற்றிய வரலாறு, அதன் அரசியல் காரணங்கள், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி, கணக்கு பற்றிய அறிவு முதலியவைகளெல்லாம் சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கும் என்றே நினைக்க வேண்டும். இந்தச் சோதனையை நான் என்னுடைய பேரப்பிள்ளையினிடமே செய்து பார்த்தேன். தனக்கு ஏதோ சொல்லிக்கொடுக்கப்படுவதாகவே அவன் நினைக்கவில்லை. ஏனெனில், அப்போதெல்லாம் அவன் சிரித்துக் கொண்டும், விளையாடிக்கொண்டும், பாடிக்கொண்டுமிருந்தான்.

தக்ளியின் சக்தியைப் பற்றி எனக்கு நன்கு தெரியும். மேலும், துணி உற்பத்தி செய்யும் தொழில் ஒன்றைத்தான் எல்லோருக்குமே கற்றுக்கொடுக்கலாம். தக்ளிக்காக ஒன்றும் செலவு செய்ய வேண்டியதுமில்லை. அதன் பிரயோசனமும் நன்கு ருசுப்பிக்கப்பட்டிருக்கிறது. நிர்மாண வேலைத் திட்டத்தை நாம் நிறைவேற்றிய அளவின் பலனாக ஏழு மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரிசபைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த மந்திரிசபைகளின் வெற்றியும், நிர்மாண வேலைத் திட்டத்தை நாம் எந்த அளவுக்கு நிறைவேற்றுகிறோம் என்பதையே பொறுத்திருக்கும்.

ஏழு வருடப் பயிற்சி திட்டமொன்றைப் பற்றி நான் யோசித்துள்ளேன். தக்ளி சம்பந்தப்பட்டவரையில், சாயம் போடுதல், மோஸ்தர்கள் தயாரித்தல் முதலியவைகள் உள்பட நெசவு

பற்றிய அனுபவ பூர்வமான அறிவு கிடைத்துவிடும். நாம் உற்பத்தி செய்யக்கூடியது பூராவையும் வாங்குவதற்கும் மார்க்கெட் தயாராக இருக்கிறது.

உடலுழைப்பின் மூலமின்றி கோடிக் கணக்கான நமது குழந்தைகளுக்குக் கல்வியளிக்க வேறு வழி கிடையாது என்பது எனது உறுதியான அபிப்பிராயம். இதற்கு, ஒரு ஆசிரியரின் செலவு என்ன ஆகும் என்று அறிய நான் ஆர்வம் உள்ளவனாக இருக்கிறேன். இதற்கு வேண்டிய வருமானம் கிடைக்கும் வரையில் அல்லது ராணுவச் செலவை வைஸ்ராய் குறைக்கும் வரையில் நாம் காத்துக் கொண்டிருக்க முடியாது. இந்த ஆரம்பக் கல்வியில் சுகாதாரம், சுத்தம், போஷாக்கு, தம் வேலைகளைத் தாமே செய்தல், வீட்டில் பெற்றோர்களுக்கு உதவி செய்தல் முதலியவைகளும் அடங்கியிருக்குமென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இந்தத் தலைமுறையைச் சேர்ந்த பையன்களுக்கு சுத்தம், சுயமுயற்சி முதலியவைகளைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை : தேக திடத்திலும் அவர்கள் மிக மோசமாயிருக்கிறார்கள். ஆகையால், பையன்களுக்கு சங்கீதம், அணி வகுப்பு முதலியவைகளின் மூலம் உடற்பயிற்சியளிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

## ஒரே வழி

இலக்கியக் கல்வியை நான் ஆட்சேபிப்பதாகப் புகார் சொல்லப்பட்டிருக்கிறது. இது சரியல்ல. அதை எந்த வழியில் அளிக்க வேண்டுமென்பதையே நான் காட்ட விரும்பினேன். தன்னைக்கட்டிக் கொள்ளும் அம்சமும் ஆட்சேபிக்கப்பட்டிருக்கிறது. ஆரம்பக் கல்விக்காக நாம் லட்சக்கணக்கில் செலவிட வேண்டியது போக, குழந்தைகளை இதற்காக நாம் பயன்படுத்திக் கொள்ளுவதா என்று கேட்கிறார்கள். குழந்தைகளைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள் என்ற புகார் சம்பந்தப்பட்டவரையில், ஒரு விபரீதத்திலிருந்து குழந்தையைக் காப்பாற்றுவது, குழந்தையின் மீது சுமையை ஏற்றுவதாகுமா என்றே கேட்கிறேன். விளையாடுவதற்கு தக்ளி ஒரு நல்ல பொருளேயாகும். அதனால் உற்பத்தியும் செய்ய முடிகிறது என்பதற்காக, அது விளையாட்டு சாமானாக இல்லாமற் போய்விடவில்லை. இன்று கூடக் குழந்தைகள் ஒரு அளவுக்குத் தமது பெற்றோர்களுக்கு உதவி செய்கிறார்கள். சேவா கிராமத்திலுள்ள குழந்தைகளுக்கு விவசாயத்தைப் பற்றி என்னை விட அதிகம் தெரியும். ஏனெனில், அவர்கள் தமது பெற்றோர்களுடன் வயல்களில் வேலை செய்திருக்கிறார்கள். குழந்தைகள் நூற்பதற்கும், விவசாய வேலைகளில் தமது பெற்றோர்களுக்கு உதவி செய்யவும் ஊக்கம் அளிக்கப்படுகிறது. அதே சமயத்தில் அவர்கள் தமது பெற்றோர்களுக்கு மட்டும் சொந்தமானவர்களல்லவென்றும், கிராமத்திற்கும், தேசத்திற்கும் கூட அவர்கள் சொந்தமான

வர்களென்றும், அவர்கள் பிரதியுபகாரம் செய்ய வேண்டுமென்றும் குழந்தைகளுக்கு அறிவுறுத்தப்படுகிறது. அது ஒன்றுதான் வழி. தானம் கொடுப்பது போல் குழந்தைகளுக்குக் கல்வியளிப்பதன் மூலம் அவர்களைச் செயலற்றவர்களாக்கிவிடக் கூடாது. தம்முடைய உழைப்பின் மூலம், தமது கல்விக்கு வேண்டியதைச் சம்பாதிக்கும்படி செய்தால் அவர்களுக்குத் தன்னம்பிக்கையும், தைரியமும் ஏற்படும்.

இந்த முறை ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகிய யாவருக்கும் பொதுவாயிருக்கும். மதக் கல்வி போதனையை ஏன் வற்புறுத்தவில்லை யென்று என்னைக் கேட்கிறார்கள். சுய முயற்சி என்ற அனுபவ பூர்வமான மதத்தை அவர்களுக்கு போதிக்கிறோம் என்பதே அதற்குக் காரணம்.

## கட்டாய சேவை

இப்படிப் பயிற்றுவிக்கப்பட்ட எல்லா மாணவர்களுக்குமே, அவசியமானால் சர்க்கார் வேலை வாய்ப்புகள் தேடித்தரக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஆசிரியர்கள் சம்பந்தப்பட்டவரையில், அவர்களைக் கட்டாய சேவைக்கு அழைக்க வேண்டுமென்று பேராசிரியர் ஷா யோசனை கூறியிருக்கிறார். இது எவ்வளவு உபயோகமானது என்பதற்கு இத்தாலியிலிருந்தும், மற்ற நாடுகளிலிருந்தும் உதாரணம் காட்டியிருக்கிறார். நாட்டுக்குச் சேவை செய்ய வேண்டிய அவசியத்தை முஸோலினி தன் நாட்டிலுள்ள இளைஞர்களுக்கு உணர்த்த முடியுமென்றால், நாமும் ஏன் அப்படிச் செய்யக் கூடாது? இளைஞர்கள் தமது வாழ்க்கையை ஆரம்பிப்பதற்கு முன்பு ஒரு வருட காலத்திற்கோ அல்லது அதற்கு அதிகமாகவோ கட்டாயமாக தேசத்திற்குச் சேவை செய்ய வேண்டுமென்றால், அதை அடிமைத்தனம் என்று சொல்லுவது நியாயமாகுமா? சென்ற 17 வருடங்களில் சுதந்திரப் போராட்டத்தின் வெற்றிக்கு இளைஞர்கள் எவ்வளவோ உதவி செய்திருக்கிறார்கள். தம் வாழ்க்கையில் ஒரு வருடத்தை தேசத்தின் சேவைக்கு அளிக்கும்படி அவர்களை தாராளமாகக் கேட்கலாம். இதற்காக சட்டமியற்ற வேண்டியிருந்தால், அது நிர்ப்பந்த சட்டமாக இராது. ஏனெனில், நமது பிரதிநிதிகளில் பெரும்பாலோரின் சம்மதம் இல்லாமல் அதை நிறைவேற்ற முடியாது.

ஆகையால். உடலுழைப்பின் மூலம் கல்வியளிக்கும் இந்தத் திட்டம் உங்களுக்குப் பிடித்திருக்கிறதாவென்பதைச் சொல்லுங்கள். என்னைப் பொறுத்தவரையில் அது தன்னைக்கட்டிக் கொண்டு போகிறதா என்பது அதனுடைய சக்திக்கு ஒரு சோதனையாக இருக்கும். ஏழு வருடப் பயிற்சி முடியும் போது, தமது கல்விக்காக ஆகும் செலவை மாணவர்களே சம்பாதித்துக் கொடுக்கக் கூடியவர்களாயிருக்க வேண்டும்.

கல்லூரிக் கல்வி என்பது பெரும்பாலும் நகர்ப் புறங்களிலுள்ளவர்களைப் பற்றிய பிரச்னையாகும். ஆரம்பக் கல்வியைப் போல் இது முழுத் தோல்வி என்று நான் சொல்லவில்லை; ஆனால், பலன்கள் ஏமாற்றமளிப்பவையாகவே இருந்திருக்கின்றன. பட்டதாரிகளில் யாரும் ஏன் வேலையற்றிருக்க வேண்டும்?

வினோபாவுக்குத்தான் தக்ளியில் மிகவும் அதிக அனுபவம் உண்டு. அதனால்தான் அதை நான் ஒரு பிரத்தியட்ச உதாரணமாகக் குறிப்பிடுகிறேன். இங்கு வந்திருக்கும் வினோபாவும் ஏதாவது ஆட்சேபணைகள் இருந்தால் அவற்றிற்குப் பதிலளிப்பார். காகா சாகிபும் ஆட்சேபணைகளுக்கு பதிலளிப்பார். ஆனால், அவருக்கு அவ்வளவு நடைமுறை அனுபவம் இல்லை. அதன் தன்மையைப் பற்றித்தான் அவருக்கு அதிகம் தெரியும். "வாழ்க்கைக்கான கல்வி" என்ற பெயரில் ஆம்ஸ்டிராங் எழுதியுள்ள ஒரு புத்தகத்தைப் பற்றி அவர் என்னிடம் கூறினார். முக்கியமாக, "கைகளுக்குப் பயிற்சி" என்ற அத்தியாயத்தை அவர் குறிப்பிட்டிருந்தார். காலஞ்சென்ற மதுசூதன தாஸ் ஒரு வக்கீல். ஆயினும், நமது கைகளையும், கால்களையும் உபயோகிக்காவிட்டால் நமது மூளைகள் மந்தமாகிவிடுமென்றும், அப்படியே வேலை செய்தால் கூட அவை சைத்தானின் இருப்பிடங்களாக இருக்குமென்றும் அவர் கருதினார். டால்ஸ்டாயும் தன்னுடைய பல கதைகளின் மூலம் இதையேதான் உணர்த்தியிருக்கிறார்.

## அகிம்சை அடிப்படை

தன்னைக்கட்டிக் கொள்ளும் ஆரம்பக் கல்வித் திட்டத்தின் அடிப்படைகளை கவனிக்கும்படி உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன். நம்மிடையே வகுப்புப் பூசல்கள் இருக்கின்றன. நம்மிடையே மட்டும்தான் இப்படி இருக்கிறதென்று அர்த்தமில்லை. இங்கிலாந்திலும் இத்தகைய பூசல்கள் இருக்கின்றன. இன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உலகத்தின் பரம விரோதியாக இருக்கிறது. வகுப்புப் பூசல்களையும் சர்வதேசப் பூசல்களையும் அகற்ற வேண்டுமென்று நாம் விரும்பினால், பலமுள்ள பரிசுத்தமான அஸ்திவாரத்துடன் நாம் ஆரம்பிக்க வேண்டும். நான் குறிப்பிட்டுள்ள கல்வி முறையைப் பின்பற்றி நமது இளம் தலை முறையினரைத் தயார் செய்ய வேண்டும். இத் திட்டம் அகிம்சையிலிருந்து தோன்றியதாகும். பூர்ண மது விலக்கை அமலுக்குக் கொண்டுவருவதற்கு இந்த வழியை நான் கூறினேன். வருமான நஷ்டம் இல்லையென்றால் கூட, நமது கஜானா நிறைந்திருந்தால் கூட, நமது பிள்ளைகளை நாம் நகர்ப்புற வழிகளில் திருப்பிவிட விரும்பவில்லையென்றால், இந்தத் திட்டம் தான் அதற்குச் சோதனையாகும். நமது கலாசாரம், நமது நாகரிகம், நம் நாட்டின் உண்மையான மேதை ஆகியவைகளுக்கு அவர்களை உண்மையான பிரதிநிதிகளாக்க வேண்டும். தன்னைக்கட்டிக் கொள்ளும் ஆரம்பக் கல்வியை

அளிப்பதன் மூலம் நாம் இப்படிச் செய்ய முடியும். ஐரோப்பா நமக்கு ஒரு உதாரணமாக இருக்க முடியாது. அவர்களுக்கு பலாத்காரத்தில் நம்பிக்கை இருக்கிறது; ஆகையால், பலாத்காரத்தின் அடிப்படையில் அவர்கள் தமது திட்டங்களை வகுக்கிறார்கள். ரஷியாவின் சாதனைகளைக் குறைத்துப்பேச நான் விரும்பவில்லை. ஆனால், அந்த அமைப்பு பூராவும் பலாத்காரத்தையும் நிர்ப்பந்தத்தையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. பலாத்காரத்தை விலக்கிவிடுவதென்று இந்தியா உறுதிகொண்டிருந்தால், நாம் பின்பற்ற வேண்டிய கட்டுப்பாட்டில் இந்தக் கல்வித் திட்டம் ஒரு அவசியமான பகுதியாகும். இங்கிலாந்தில் கல்விக்காக லட்சக்கணக்கில் செலவிடுவதாகச் சொல்லுகிறார்கள். அமெரிக்காவும் அப்படித்தான் செய்கிறது. ஆனால், அதெல்லாம் சுரண்டலின் மூலம் சம்பாதித்த செல்வம் என்பதை நாம் மறந்துவிடுகிறோம். சுரண்டலை அவர்கள் ஒரு கலையாக வளர்த்திருக்கிறார்கள். ஆகையால், அவர்கள் அவ்வளவு செலவில் கல்வி அளிக்கலாம். ஆனால், சுரண்டல் என்ற ரீதியில் நாம் சிந்திக்க மாட்டோம், சிந்திக்கவும் முடியாது. அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட இந்தக் கல்வித் திட்டத்தைத் தவிர நமக்கு வேறு வழி கிடையாது.

—'ஹரிஜன்' - 30—10—1937

## கல்வி மகாநாட்டில் தீர்மானங்கள்

இரண்டாவது, கடைசிநாள் கூட்டத்தில் மகாநாட்டில் பின்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:

1. தேசம் பூராவிலும், ஏழு வருடங்களுக்குக் கட்டாய இலவசக் கல்வி அளிக்கப்படவேண்டுமென்று இந்த மகாநாடு அபிப்பிராயப்படுகிறது.

2. போதனை மொழி தாய் மொழியாகவே இருக்க வேண்டும்.

3. இந்தக் காலத்தில் அளிக்கப்படும் கல்வி பூராவும் உடலுழைப்பு உள்ளதாகவும், உற்பத்தி செய்யக் கூடியதாகவும் இருக்க வேண்டும்; குழந்தையின் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு சொல்லிக் கொடுக்கப்படும் கைவினைத் தொழிலுக்கு சம்பந்தம் உள்ள விதத்திலேயே மற்ற திறன்கள் அபிவிருத்தி செய்யப்பட வேண்டும் என்று காந்திஜி கூறிய யோசனையை இந்த மகாநாடு அங்கீகரிக்கிறது.

4. இந்தக் கல்வி முறை கொஞ்சம் கொஞ்சமாக ஆசிரியர்களின் சம்பளங்களையும் சரிக்கட்டிக் கொண்டுபோகும் என்று இந்த மகாநாடு எதிர்பார்க்கிறது.

பின்னர் இந்தத் தீர்மானங்களுக்கிணக்கமாக ஒரு பாட திட்டத்தைத் தயாரிப்பதற்காக, மகாநாடு ஒரு கமிட்டியை நியமித்தது. ஒரு மாத காலத்திற்குள் இந்தக் கமிட்டி மகாநாட்டுத் தலைவருக்குத் தனது அறிக்கையை சமர்ப்பிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 30—10—1937

# 29

# மகாநாட்டின் முடிவு

கல்வி மகாநாட்டின் நடவடிக்கைகளை முடித்து வைத்து காந்திஜி பேசுகையில் குறிப்பிட்டதாவது: "எல்லோரும் மகா நாட்டிற்கு வந்து ஒத்துழைத்ததற்காக நான் நன்றி செலுத்து கிறேன். இன்னும் இம்மாதிரி மகாநாடுகளை நடத்த வேண்டியிருக் கும். ஆகவே, மேற்கொண்டும் உங்களுடைய ஒத்துழைப்பை நான் எதிர்பார்க்கிறேன். மாளவியாஜி எனக்கு ஒரு எச்சரிக்கைத் தந்தி அனுப்பியுள்ளார். ஆனால், இந்த மகாநாட்டில் இறுதி யானது என்று எதுவுமில்லை. யோசனைகளையும், ஆட்சேபணைகளை யும் தெரிவிக்கும்படி எல்லோரையும் கேட்டிருக்கிறேன். எதையும் அவசரத்தில் நிறைவேற்றிவிட வேண்டும் என்ற எண்ணம் எனக்குக் கிடையாது. தேசீயக் கல்வி, மதுவிலக்கு ஆகிய கருத்துகள், ஒத்துழையாமையைப் போலவே மிகவும் பழைய கருத்துகளேயாகும். ஆனால், நாட்டிலுள்ள மாறுபட்ட நிலை மையை உத்தேசித்து இந்த உருவத்தில் இந்தத் திட்டம் என் மனத்தில் உதித்தது"

'ஹரிஜன்' - 30—10—1937

## ஒரு அடி முன்னால்

கல்வி மகாநாட்டின் நடவடிக்கைகளைப் பற்றிய விவரங்கள் ஏற்கனவே வெளியாகியுள்ளன. பொது ஜனங்களுக்கும், முதல் மந்திரிகளுக்கும் என்னுடைய திட்டத்தை சமர்ப்பிக்கும் வேலையில் இது முக்கியமான ஒரு கட்டமாகும். அவ்வளவு மந்திரிகள் அதில் கலந்து கொண்டது ஒரு நல்ல சகுனம்தான். தன்னைக் கட்டிக்கொண்டு போவது என்ற அம்சத்தைப் பற்றித்தான் ஆட் சேபணைகளும், குறைபாடுகளும் கூறப்பட்டன. அதனால்தான் மகாநாட்டின் தீர்மான வாசகம் அவ்வளவு ஜாக்கிரதையாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. மகாநாடு ஒரு புதிய பாதையில் செல்ல வேண்டியிருந்தது என்பதில் சந்தேகமில்லை. அதற்கு முன் உதாரணம் எதுவும் இல்லை. இந்தக் கருத்து சரியானது தானா என்றால், நடைமுறையில் அது தானாக வேலைசெய்யும். தன்னைக் கட்டிக் கொண்டு போகும் அம்சத்தில் நம்பிக்கையுள் ளவர்கள்தான் அதைச் செயலில் நடத்திக் காட்டி ருசுப்பிக்க வேண்டும்.

பூரா ஆரம்பக் கல்வியையும், ஆங்கிலம் இல்லாத மத்திய தரக்கல்வியையும் ஒரு தொழிலின் மூலம் அளிக்கவேண்டுமென்ற விஷயத்தில் குறிப்பிடத்தக்க கருத்து ஒற்றுமை காணப்பட்டது. பையன்களையும், பெண்களையும் ஒரு தொழிலின் மூலம் முழுமை யாக வளர்ச்சி பெறச் செய்ய வேண்டுமென்றிருப்பதால், பள்ளிக் கூடங்கள் தொழிற்சாலைகளாக க்ஷீணித்துவிடும் அபாயம்

தானுகவே தவிர்க்கப்பட்டுவிடுகிறது. அவர்கள் பயிற்சி பெறும் தொழில்களில் போதிய அளவு தேர்ச்சி பெறுவதுடன், அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டிய மற்றப் பாடங்களிலும் போதிய தேர்ச்சி காட்ட வேண்டும்.

இந்தத் திட்டத்தை எப்படி நடைமுறையில் அமலாக்குவது? ஒவ்வொரு வருடமும் பையன்களும், பெண்களும் என்ன கற்றுக் கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுவார்கள் என்ற விவரங்களெல்லாம் டாக்டர் ஜாகிர் ஹுசேன் கமிட்டி அறிக்கையில் கூறப்பட்டிருக்கும்.

மகாநாட்டின் தீர்மானங்கள் ஏற்கனவே தெரிந்ததுதானே என்று ஆட்சேபணைகள் எழுப்பப்பட்டிருக்கின்றன. இது சரியான ஆட்சேபணைகள் அல்ல. கல்வித் துறையாளர்களுக்கு இது புரட்சிகரமான திட்டமாகவே தோன்றும். ஆகையால், இத்தகைய ஒரு திட்டத்தைப் பற்றி அபிப்பிராயம் கூறுமாறு நினைத்தவர்களையெல்லாம் அழைப்பதென்பது சாத்தியமில்லை. ஆசிரியர்கள் என்ற முறையில் தொழில் கல்வி போதிப்பதில் கொஞ்சமாவது சம்பந்தம் உள்ளவர்களைத்தான் அபிப்பிராயம் கூறுமாறு அழைக்க முடியும். தேசீயக் கல்வித் துறையில் வேலை செய்யும் சகபாடிகள் இந்தப் புதிய கருத்தை அனுதாபத்துடன் வரவேற்பார்களா என்பது எனக்கு தெரியாது. ஜாகிர் ஹுசேன் கமிட்டி அறிக்கையில் இந்தத் திட்டம் நன்ருக உருவம் பெறும். அது வரும்போது இன்னும் விரிவான முறையில் அதைப் பரிசீலனை செய்வதற்கு கல்வித் துறையாளர்கள் அழைக்கப்படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

சின்னஞ் சிறு பையன்களுக்கும், பெண்களுக்கும், ஆண்களைவிடப் பெண்கள் இன்னும் திறமையுடன் சொல்லிக் கொடுப்பார்கள். அவர்களிலும் கூட, மணமாகாதவர்களைவிடத் தாய்மார்கள் இன்னும் நன்ருகச் சொல்லிக் கொடுப்பார்கள் என்று மகாநாட்டில் பேசிய ஒருவர் வற்புறுத்திக் கூறினுர். மிகவும் புனிதமான ஒரு லட்சியத்திற்குத் தமது சேவையை அளிப்பதற்கு, அவகாசம் உள்ள, தேசபக்தியுள்ள பெண்களுக்கு இது ஒரு நல்ல வாய்ப்பாகும். ஆனுல், இந்தப் பணியை ஏற்றுக் கொள்ள அவர்கள் முன் வந்தால், முதலில் நன்ருகப் பூர்வாங்கப் பயிற்சி பெற வேண்டும். ஏதாவது வேலை செய்ய வேண்டுமே என்ற நிலைமையில் உள்ள பெண்கள் இதற்கு முன்வருவதால் பிரயோசனமில்லை. இதை, சேவை உணர்ச்சியுடனும் வாழ்க்கைப் பணியாகவும் கருதியே முன் வரவேண்டும். சுயநல உணர்ச்சியுடன் இதற்கு வந்தால் தோல்வியுறுவதுடன், பெரும் ஏமாற்றத்திற்கும் உள்ளாவார்கள். இந்தியாவிலுள்ள பண்புள்ள பெண்கள், குழந்தைகள் மூலம் கிராமவாசிகளுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டால், இந்தியாவின் கிராம வாழ்க்கையில் ஆடம்பரமில்லாத, அருமையான ஒரு புரட்சியைச் செய்தவர்களாவார்கள். இதற்கு அவர்கள் முன்வருவார்களா?

—'ஹரிஜன்' - 30—10—1937

# 30

# செயல் முக்கியம், வெறும் சிந்தனை அல்ல

டாக்டர் ஜி. எஸ். அருண்டேல் 'ஓரியண்ட்' சித்திர வாரப் பத்திரிகைக்கு கட்டுரையொன்று எழுதியிருக்கிறார். அதன் பிரதியை முன் கூட்டியே எனக்கு அனுப்பிவைத்திருக்கிறார். அதனுடன் சேர்த்து எனக்குப் பின் கண்ட கடிதமொன்றையும் அனுப்பியிருக்கிறார் :

"இந்நாட்டில் கல்வி இப்போது உண்மையானதாக இருக்கவேண்டு மென்றும், இதுவரை பல ஆண்டுகளாக இருந்து வந்தது போல செயற்கையாக இருக்கலாகாதென்றும் நீங்கள் விருப்பம் தெரிவித்திருக்கிறீர்கள். முப்பது ஆண்டுகளுக்கு மேலாக, இந்தியாவில் கல்வித் துறையில் செயல்பட்டு வந்தவன் என்ற முறையில் 'ஓரியண்ட்' சித்திர வாரப் பத்திரிகையில் வரவிருக்கும் எனது கட்டுரையொன்றைத் தங்களுக்கு அனுப்புகிறேன். ஓரளவுக்குத் தங்களுடைய கருத்துகளையே பிரதி பலிப்பதாக அது இருக்கக்கூடும். தேசீயக் கல்வித் திட்டமொன்று இருக்க வேண்டுமென்றும், அதை ஒவ்வொரு தேசீய மந்திரியும் தன் தன் மாகாணத்தில் சிறந்த முறையில் அமல் நடத்த வேண்டும் என்றும் நான் நினைக்கிறேன். ஏராளமான அளவுக்கு தனிப்பட்டவர்கள் அவ்விஷயமாக முயற்சி எடுத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். பொது மக்களும் அரசாங்கமும் சேர்ந்து பொதுவான முயற்சிகள் எடுத்துக்கொண்டு காலதாமதமில்லாமல் அவ்விஷயமாக மாபெரும் கொள்கைகளை வகுக்க வேண்டும். இது மிகவும் அவசரமானதென்று நான் கருதுகிறேன்."

இப்போது அவரது கட்டுரையிலிருந்து சில முக்கியமான பகுதிகளைக் கீழே தருகிறேன் :

"தேசீயக் கல்வியின் அடிப்படையாக அமைய வேண்டிய கொள்கைகளின் தன்மையை எடுத்துரைக்கப் போதுமான இடம் இங்கு எனககில்லை. ஆனால், கல்வி கற்கும் சிறுவர்கள், சிறுமியர்களைப் பொறுத்தவரையில், "பள்ளிக்கூடம்" என்றும், "கல்லூரி" என்றும் இருந்துவரும் அர்த்தமில்லாத வேறு பாட்டை படிப்படியாக ஒழித்துவிட வேண்டும்; "செயல்புரி" என்று வற்புறுத்துவதே முக்கியமானதாக இருக்க வேண்டும்.

"சிந்தனை எவ்வளவுதான் தூண்டிவிடப்பட்டாலும், அது செயலாகப் பரிணமித்தாலன்றி, மதிப்பில்லாததாகிவிடும். பெரும்பாலான நவீனக் கல்வி முறைகளில், அபாயகரமாகப் புறக்கணிக்கப்படும் உள்ளுணர்ச்சிகள் சம்பந்தமாகவும் அதைச் சொல்லலாம். இந்தியாவின் இளைஞர்கள் உழைப்பாளிகளாக இருப்பது அவசியம். இந்த உழைப்பாளிகளின் ஒழுக்கம் கல்வியால் வளம் பெற்றதாக இருக்க வேண்டும். நமது அறிவு உலகத்தில் உண்மைத் தகவல்கள் கிடையா என்பதையும், சம்பிரதாயங்கள் மட்டும் உண்டு என்பதையும் நினைவு கூரவேண்டும். நிச்சய நிலையிலிருந்து சந்தேக நிலைக்கு நகரும் மாபெரும் முன்னேற்ற நடவடிக்கையை விஞ்ஞானம் எடுத்துக் கொண்டது என்று சர் ஆர்தர் எடிங்டன் நன்றாகச் சொன்னார். ஆகையால்,

"உண்மைகள்" மாணவர்களின் மனத்தில் லேசாகப் படியும்படி செய்ய வேண்டும். தனி நபர்களுக்கும் சரி, நாடுகளுக்கும் சரி ஒரே பாதுகாப்பான அஸ்திவாரமென விளங்கும் ஒழுக்கத்தின் வளர்ச்சிக்காக, மற்றெல்லாவற்றுக்கும் மேலாக உண்மைகளைப் பயன்படுத்துமாறு கல்வி முறை இருக்க வேண்டும்.

"ஒழுக்கம் மட்டும் கிளர்ந்தெழத் தொடங்கிவிட்டால், செயல் புரியும் விருப்பம் தனக்கு ஆதரவான முறையிலும், தன்னல மறுப்பாகவும், இருவகையிலும் தீவிரமாகும். அன்னையான பூமி தேவிக்கு அருகில் இருக்க வேண்டும் என்ற விருப்பம் எழும், அதாவது விவசாய வேள்வியில் அன்னையைத் தொழும் விருப்பம் எழும்; எளிய தேவை, தூய விருப்பம் மூலம் பூமிதேவிக்குச் சுமையாக இராமல் வாழத் தோன்றும். பூமி தேவியின் எந்தக் குழந்தையும் நேரடியாக அவளிடமிருந்து வாழ்வைப் பெற முடியாத நிலை கூடாதென்று நினைக்கிறேன். நகரக் கல்விச் சாலைகளில் கூட, எல்லாக் கல்வியிலும், ஒரு பகுதி பூமாதேவியுடன் ஓரளவு நேரடியான தொடர்பு இருக்கச் செய்வேன்.

"இன்று பெரிதும் கல்வியைப் பலனற்றதாக்கிவிட்ட கல்விச் சம்பிரதாயங்களை யெல்லாம் நாம் அடியோடு விட்டொழித்துவிட வேண்டியதுதான். தேசீய மந்திரி சபைகளிலிருக்கும் சாதகமான இந்தச் சூழ்நிலையிலேயே, வெறும் படிப்பூட்டுவதல்லாத உண்மைக் கல்வி முறையை ஆரம்பித்துவிட வேண்டும். காலத்துக்கு ஒவ்வாத, பகுத்தறிவுக்கு ஒவ்வாத முறைகளில் நாம் சிறைப்பட்டுக் கிடக்கிறோம். ஆகையால், தன்னைக்கட்டிக் கொண்டு போகும் கல்வி முறையொன்றை காந்திஜி வகுத்திருப்பதை நான் மனமார வரவேற்கிறேன். அவர் கூறியுள்ள யோசனைக்கு இணங்க அவ்வளவு தூரம் நம்மால் செல்ல முடியுமாவென்று அவ்வளவு உறுதியாக என்னால் சொல்ல இயலாது. 'ஏழு வருடப் பயிற்சி முடிந்தபின், ஓர் இளைஞன் சம்பாதிக்கும் சக்தியுள்ளவனாக வெளியே அனுப்பப்பட வேண்டும்' என்பதை நான் பூரணமாக ஆதரிக்கிறேன். ஒவ்வொருவரும், ஓரளவுக்கு கல்வியின் மூலம் தன்னுடைய ஆக்கத் திறனை உணர்ந்து கொள்ள வேண்டுமென்று நினைக்கிறேன். ஏனெனில் அவன் ஆண்டவனாகக் கூடிய நிலையில் இருப்பவன்; ஆகையால் கடவுளின் உயர்ந்த இயல்பைப் பெற்றிருப்பவன்; அதாவது சிருஷ்டி சக்தியான செயல் திறன் படைத்தவன். இந்த சக்தியை எழுப்ப இயலாவிடில், கல்வியினால் ஆன பயன் என்ன? அப்படியானால் அது சந்தேகமின்றி வெறும் படிப்பாகுமே தவிர, கல்வியாகாது.

"தலையில் இருப்பது போலவே கையிலும் மூளை உண்டு. நெடுநாளாக தலையிலுள்ள அறிவு கொடுங்கோலனாக, நமது சர்வாதிகாரியாக இருந்து வருகிறது. புது ஏற்பாட்டின் கீழ், அது நமது பல ஊழியர்களில் ஒன்றாக இருக்க வேண்டும். எளிய வாழ்க்கைக்கு வழி செய்வதை யெல்லாம், இயற்கையின் அழகிய எளிமைக்கு அருகில் நம்மை இட்டுச் செல்வதை யெல்லாம், கைகளின் உழைப்பினால் வாழ உதவி புரிவதையெல்லாம் மேன்மையுறச் செய்ய நாம் பழக வேண்டும்; அதாவது எல்லாவிதமான உடலுழைப்பிலும், கலைஞர், கொல்லர், உழவர் ஆகிய எல்லோருடைய உடலுழைப்பிலும் நமக்குப் பயிற்சி இருக்க வேண்டும்.

"எனக்கு இவ்விதக் கல்வி புகட்டியிருந்தால், நான் இன்னும் அதிக இன்பமான, அதிகப் பயனுள்ள வாழ்க்கை வாழ்ந்திருப்பேன்."

சாதாரண மனிதன் என்ற முறையில் சாதாரண வாசகர்களுக்காக நான் சொல்லி வந்ததையே, கல்வி நிபுணர் என்ற முறையில், கல்வித் துறையினருக்காக, நாட்டின் இளைஞர்களை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருப்பவர்களுக்காக டாக்டர் அருண்டேல் சொல்லியிருக்கிறார். தன்னைக்கட்டிக் கொண்டு போகும் கல்வி முறையை அவர் ஜாக்கிரதையாக அணுகுவதைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. எனக்கு அத்தகைய முறைதான் உயிர்நாடியாகும். கடந்த நாற்பது ஆண்டுகளாக கண்ணுடிமூலம் எது இருள் சூழ்ந்ததாக எனக்குத் தோன்றியதோ, அதையே இப்போது சந்தர்ப்பச் சூழ்நிலைகளின் நிர்ப்பந்தத்தினால் மிகவும் தெளிவாகக் காணத் தொடங்கியுள்ளேன்.

இப்போதையக் கல்வி முறைக்கு எதிராக 1920-இல் நான் மிகவும் காரசாரமாகப் பேசிவந்தேன். நாட்டின் மகோன்னதமான சுதந்திரப் போராட்டத்தில் சக ஊழியர்களாகவும், என்னுடன் சேர்ந்து துன்புற்றவர்களாகவும் இருந்தவர்கள், இப்போது ஏழு மாகாணங்களில் மந்திரிகளாகப் பதவி யேற்றுள்ளனர். எனவே, மிகவும் குறைந்த அளவாவது செல்வாக்கை உபயோகிக்கும் வாய்ப்பை அடைந்துள்ள என்னால், அடி முதல் முடி வரையில் முற்றிலும் தவருக உள்ள இப்போதையக் கல்வி முறையை மாற்றும்படி வற்புறுத்தாமல் இருக்க முடியவில்லை. இப் பத்திகளில் போதுமான அளவுக்கு எதைத் தெரிவிக்க இயலாமல் போராடிக் கொண்டிருந்தேனே, அது இப்போது மின் வெட்டுப் போல என் மனத்தில் தோன்றியுள்ளது. அதன் உண்மையை நாளுக்கு நாள் நான் அதிகத் தெளிவாகக் காண்கிறேன். சுயநல நோக்கம் இல்லாதவர்களும், தங்களுடைய பகுத்தறிவு சுதந்திரமாக இயங்குவதில் இப்போதையக் கல்வி முறையைப் பற்றிய பழைய எண்ணங்களும், நோக்கங்களும் குறுக்கிடாமல் திறந்த உள்ளம் படைத்தவர்களுமான நாட்டின் கல்வி நிபுணர்கள், நான் வகுத்துள்ள இரண்டு யோசனைகளையும் ஆராய வேண்டுமென்று கோரத் துணிந்துள்ளேன். தொழில் நுணுக்கவகையிலும், சம்பிரதாயமான வழியிலும் நான் கல்வியைப்பற்றி முற்றிலும் அறியாதவன் என்ற காரணத்துக்காக, நான் சொல்லியும் எழுதியும் வரும் விஷயங்கள் மீது வெறுப்பு காட்டலாகாது என்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன். குழந்தைகளிடமிருந்தும், பாலருந்தும் பச்சைக் குழந்தைகளின் வாயிலிருந்தும், விவேகம் பிறப்பதாகச் சொல்லுவது உண்டு. அது கவிகள் மிகைபடக் கூறுவதாக இருக்கலாம். ஆனல், சிற்சில சமயங்களில் குழந்தைகளின் வாயிலிருந்து விவேகம் உதிக்கிறதென்பதில் சந்தேகமில்லை. நிபுணர்கள் அதற்கு மெருகேற்றி, சாத்திரீயமான உருவம் அமைத்துக் கொடுக்கிருர்கள். ஆகையால், நான் கூறியுள்ள யோசனைகளை

அவற்றின் தகுதியை முக்கியமாகக் கொண்டு பரிசீலனை செய்யும்படி கோருகிறேன். அந்த யோசனைகளை மீண்டும் இங்கு வெளியிடுகிறேன் :

1. இன்று ஆரம்பக் கல்வி, நடுத்தரக் கல்வி, உயர்நிலைக் கல்வி என்ற பெயரில் வழங்கிவரும் முறையின் ஸ்தானத்தில், ஏழு ஆண்டு காலமோ அல்லது இன்னும் நீண்ட காலமோ ஆரம்பக் கல்வி அளிக்கப்பட வேண்டும். இதில் "மெட்ரிகுலேஷன்" வரையில் உள்ள ஆங்கிலம் தவிர்த்த எல்லாப் பாடங்களுடனும், அறிவின் எல்லாத் துறைகளிலும் சிறுவர், சிறுமியரின் உள்ளம் வளர்ச்சி யடைவதற்குற்ற சாதனமாக கைத்தொழில் ஒன்றும் சேர்ந்திருக்க வேண்டும்.

2. இத்தகையக் கல்வி மொத்தமும் தன்னைக்கட்டிக்கொண்டு போவதாக அமைய முடியும்; அமைந்தேயாக வேண்டும். அதன் பிரத்தியட்ச நிலைக்கு தன்னைக்கட்டிக் கொண்டு போகும் அம்சமே உண்மையான உரைகல் ஆகும்.

—'ஹரிஜன்' – 2—10—1937

# 31

# பம்பாயில் ஆரம்பக் கல்வி

ஆரம்பக் கல்விப் பிரச்னையைக் குறித்து விவாதிப்பதில் நான் இதுவரையில் வேண்டுமென்றே கிராமங்களைப்பற்றி மாத்திரமே குறிப்பிட்டு வந்தேன். ஏனெனில், கிராமங்களில் தான் இந்தியாவில் உள்ள மக்களில் பெரும்பாலோர் வசிக்கின்றனர். கிராமங்களின் பிரச்னையை வெற்றிகரமாகத் தீர்ப்பது, நகரங்களின் பிரச்னையையும் தீர்ப்பதற்கு ஒப்பாகும். ஆனால் பம்பாய் நகரத்தின் ஆரம்பக் கல்விப் பிரச்னையில் அக்கறை கொண்ட நண்பர் ஒருவர் கீழ்க்கண்ட கேள்வியை எழுப்புகிறார்:–

"ஆரம்பக் கல்விக்கான நிதி வசதி அளிக்கும் விஷயத்தில் இப்போது காங்கிரஸ் மந்திரி சபை ஈடுபட்டுள்ளது. ஆரம்பக் கல்வி தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருக்க வேண்டுமென்ற கோஷம் இப்போது எங்கும் பரவியுள்ளது. ஆகையால், பம்பாய் போன்ற நகரத்தின் விஷயத்தில் இதை எப்படி, எந்த அளவுக்குச் செய்ய முடியும் என்பதை ஆராய்வது பயனுள்ளதாக இருக்கும் பம்பாய் நகர சபையில் கல்விக்கான வருடாந்திர வரவு செலவுத் திட்டம் ரூ. 35 லட்சத்துக்கும் ரூ. 36 லட்சத்துக்குமிடையே இருக்கும் என்று சொல்லப்படுகிறது. பம்பாயில் கட்டாய ஆரம்பக் கல்வியைக் கொண்டு வருவதற்கான திட்டத்தைத் தொடங்குமுன், மேற்கண்ட தொகையுடன் மேலும் பல லட்ச ரூபாய்களைக் கொண்டு பலப்படுத்திக் கொள்ள வேண்டும். இப்போது ஆண்டு ஒன்றுக்கு ஆசிரியர்களின் சம்பளத்திற்காக ரூ. 20 லட்சத்துக்கு மேலாகிறது; அதற்கு மேல் பள்ளிக்கூடங்களின் வாடகைக்காக ரூ. 4 லட்சம் போகிறது. இது ஒவ்வொரு மாணவனுக்கும் சராசரியில் ரூ. 40 முதல் ரூ. 42 வரை ஆகிறது. ஒரு மாணவன் அவனுடைய தொழிற்

பயிற்சி மூலம் இத் தொகையை சம்பாதிக்க முடியுமா? அவ்விதம் இயலா தென்றால், பின்பு எப்படி ஆரம்பக் கல்வி தன்னைக்கட்டிக்கொண்டு போவதாக இருக்க முடியும்? பம்பாய் நகரமும், அதன் குழந்தைகளும், ஆரம்பக் கல்விக்கு அடிப்படையாகத் தொழிற் பயிற்சியை மேற்கொள்வதன் மூலம் நன்மை அடைவார்களென்பதைப்பற்றி என் மனத்தில் சந்தேகமே கிடையாது. இப்போது இக்குழந்தைகள் தங்கள் ஆரம்பக் கல்விப் பயிற்சி முடிந்தபின் காட்டக் கூடியதெல்லாம் அதிக மதிப்புள்ளதன்று; நிச்சயமாக அவர்களைச் சிறந்த பிரஜை என்ற அந்தஸ்துக்குத் தகுதியுள்ள தாக்குவதுமன்று.''

நகரங்களில் ஆரம்பக் கல்விக்கு தொழிற் பயிற்சி அடிப்படையை ஏற்கும்படி சிபார்சு செய்ய நான் தயங்கவே மாட்டேன். பம்பாயில் இப்போது ஆரம்பக் கல்விக்காகச் செலவு செய்யப்படும் ரூ. 35 லட்சத்தில் மொத்தமுமில்லாவிட்டாலும், பெரும்பகுதி மிச்சப்படுவதற்கு அத்தகைய தொழிற்பயிற்சி வசதி செய்யும். பம்பாயில் குழந்தையொன்றுக்கு ஆரம்பக் கல்வி புகட்ட வருடாந்திரச் செலவு ரூ. 40 என்று வைத்துக்கொள்வோம். பம்பாய் நகரசபை ஒதுக்கும் கல்வி மான்யத்திலிருந்து 87,500 குழந்தைகள் கல்வி பெறுகிறார்கள் என்று அர்த்தம். பம்பாய் ஜனத்தொகை பத்து லட்சம் என்று வைத்துக் கொண்டால், பள்ளிக்கூடம் போகக் கூடிய வயது வந்த குழந்தைகள் குறைந்தபட்சம் ஒன்றரை லட்சம் இருக்கும். பள்ளிக்குச் செல்லும் வயது வந்த குழந்தைகளில் 62,000 பேருக்குக் குறையாமல், பம்பாய் நகரில் ஆரம்பக் கல்வி பெறாமல் போகிறார்கள் என்று அர்த்தமாகிறது. வீடுகளிலேயே தனியாகக் கல்வி கற்றுக் கொள்ளும் குழந்தைகள் 6000 பேர் இருப்பதாக வைத்துக்கொண்டு, மேற்கண்ட கணக்கிலிருந்து அதைக் கழித்துவிட்டால், இன்னும் ஆரம்பக் கல்வி வசதி பெறவேண்டிய குழந்தைகள் 56,000 பேர் இருப்பார்கள். இப்போதைய செலவு விகிதப்படி, இதற்கு ரூ. 22,40,000 தேவைப்படும். எனக்குத் தெரிந்தமட்டில், பிரளய காலத்துக்கு முன் இத்தொகை கிடைப்பது அரிது!

இந்தியாவில் இலவசக் கட்டாய ஆரம்பக் கல்வி முறை அமலில் இருக்கவேண்டும் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டவன் நான். குழந்தைகளுக்கு உபயோகமான கைத்தொழில் போதிப்பதால் மட்டுமே, அக்கல்வியை குழந்தைகளின் அறிவு, உடல், ஆன்மிக சக்திகளை வளர்க்கும் சாதனமாகப் பயன்படுத்துவதன் மூலமே, அந்த லட்சியத்தை அடைய இயலுமென்று கருதுகிறேன். கல்வி சம்பந்தமாக இம்மாதிரியான பொருளாதாரக் கணக்குகள் இழிவானவை என்றோ, அல்லது பொருந்தாதவை என்றோ எவரும் நினைக்கலாகாது. பொருளாதாரக் கணக்குப் போடுவதில் இழிவு எதுவும் இல்லை. உயர்ந்த தருமத்திற்கு உண்மையான பொருளாதாரம் எப்போதும் விரோதியல்ல; எல்லா உண்மையான தருமங்களும் அப்பெயருக்கேற்ற மதிப்புடன் விளங்குவதானால், அவை சிறந்த பொருளாதார முறைகளாகவும் இருக்க வேண்டும். பண தேவதை வணக்

கத்தைக் கற்பிக்கும். அதே சமயம் எளியோரைத் துன்புறுத்தி வலியோர் பணம் குவிக்க உதவியாக இருப்பதுமான பொருளாதாரம், துக்ககரமான போலி சாத்திரமேயாகும். அது மரணத்துக்கே காரணமாக இருக்கும். அதற்கு மாருக உண்மைப் பொருளாதாரம் சமூக நீதியை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும்; எளியோர் உட்பட எல்லோருக்கும் சமமான நலனை வளர்ப்பதாக இருக்கும்; கண்ணியமான வாழ்க்கைக்கு இன்றியமையாததாகவும் இருக்கும். பம்பாய் நகரம், அதன் குழந்தைகளுக்கு உபயோகமான தொழிலைப் போதித்து, ஆரம்பக் கல்விக்கான செலவை தாளுகவே தேடிக் கொள்ளக் கூடிய நிலைமையை உண்டாக்கினுல், நாடு முழுவதும் பின்பற்றக் கூடிய உன்னத எடுத்துக் காட்டாக அது விளங்குமென்று நான் துணிந்து சொல்லுவேன். ஒரு மாணவன் நாளொன்றுக்கு ஒரு கைத்தொழிலில் 4 மணி நேரம் வேலை செய்வதாக வைத்துக்கொள்ளலாம். மாதத்தில் 25 நாட்கள் பள்ளிக்கூடம் நடப்பதாக வைத்துக் கொள்ளலாம். மணிக்கு அரை அணு ஊதியமென்ருல், அவன் அல்லது அவள் பள்ளிக்கூடத்துக்காக மாதத்துக்கு ரூ. 3-2-0 சம்பாதிக்கலாம். தொழில் பயிற்சி, மாணவனுடைய மனத்தைச் சோர்வில்லாமலும் சூடிகையாவும் ஆக்கிவிடும்; அதே சமயத்தில் அவன் அல்லது அவளுடைய அறிவு வெளிப்படுவதற்கான சாதனமாகவும் இருக்கும். ஆனுல், ஆரம்பத்திலேயே குழந்தை மணிக்கு அரை அணு வீதம் தேடித் தரவேண்டும் என்று அர்த்தம் செய்து கொள்ள வேண்டாம். மொத்தம் 7 ஆண்டு காலத்தில் மணிக்கு அரை அணு வீதம் அவன் சம்பாதித்துக் கொடுப்பான்.

இம்மாதிரியான தொழில் பயிற்சி, கல்வியை மந்தமாக்கிவிடுமென்ருே அல்லது குழந்தையின் மனத்தை முடக்கிவிடுமென்ருே நினைப்பது முற்றிலும் மூட நம்பிக்கையாகும். திறமையான ஆசிரியர்களிடம் தொழில் போதனை பெறும்போது, குழந்தைகளின் முகங்களில் தவழ்ந்த ஒளியும் மகிழ்ச்சியும்தான் என்னுடைய நினைவுகளிலேயே இன்பம் தருவதாக இருக்கிறது. இதற்கு நேர் மாருக, திறமையில்லாத ஆசிரியர், தவருன வழியில் சொல்லித் தரும்போது, மிகவும் மனங் கவரும் விஷயம் கூட குழந்தைகளுக்கு சகிக்க முடியாததாகிவிடுவதை நான் கண்டிருக்கிறேன். நம்முடைய தேவைக்கேற்ற விதத்தில் எங்கிருந்து திறமைசாலிகளான ஆசிரியர்களைக் கொண்டுவருவது என்ற கேள்வி பிறக்கக் கூடும்? அவசியம் ஏற்படும்போது அத்தகையோரைக் கண்டு பிடிக்கும் ஆற்றலும் ஏற்படும். அதற்கு இதுதான் என்னுடைய பதிலாக இருக்கும். நமது கல்விக் கொள்கையில் சீரமைப்பு அவசியமென்பதை உணர்ந்துவிட்டோமாகில், அதைச் செயல்படுத்துவதற்கான சாதனங்களைக் கண்டுபிடிப்பதில் சிரமம் ஒன்றுமிராது. இப்போதையக் கல்வி முறைக்காகும் காலம், செலவு, அதை நடத்துவதற்கான ஆள்பலம் இவற்றில் ஒரு விகிதத்தை வைத்துக் கொண்டே, நமது பணிக்குத் தேவையான தொழில் போதகர்களையெல்லாம் எளிதில் பயிலுவிக்க இயலும்.

பம்பாயிலுள்ள கல்வி நிபுணர்களின் கமிட்டியொன்று, ஆர்வ மிருக்குமானால், ஆரம்பக் கல்வி முறைக்காக நான் சொல்லியுள்ள விதத்தில் திட்டம் வகுத்து, காலவிரயமின்றி அதை செயலுக்குக் கொண்டுவருவது சாத்தியமாக இருக்க வேண்டும். எனக்கிருப் பதைப் போன்று அவர்களுக்கும் அதில் அழியாத நம்பிக்கை இருக்க வேண்டுமென்பதே முக்கியம். இத்தகைய நம்பிக்கை, உள்ளத்திலிருந்து தான் வளரும். அதைப் பிறரிடமிருந்து பெற இயலாது. இவ்வுலகில் அழியாத நம்பிக்கையில்லாமல் எத்தகைய மாபெரும் சாதனைகளும் நிறைவேறியதில்லை.

நகரப் பள்ளிகளில் குழந்தைகளுக்குப் போதிக்கக் கூடிய தகுந்த தொழில் வகைகள் என்ன? இவ்விஷயத்தில் வரம்பு விதி யொன்றுமில்லை. ஆனால் என்னுடைய பதில் தெளிவானது. இந்தி யாவின் கிராமங்களை உயிர்ப்பிக்க நான் விரும்புகிறேன். இன்று நமது கிராமங்களெல்லாம், நகரங்களின் அனுபந்தங்களாக மட் டுமே இருக்கின்றன. நகரங்களால் சுரண்டப் படுவதற்கும், நகரங் களின் தயவையே நம்பியிருப்பதற்கும்தான் அவை இருக்கின்றன. இது இயற்கையானதல்ல. சுய நலத்துடன் கிராமங்களைச் சுரண்டு வதற்குப் பதிலாக, கிராமங்களிலிருந்து கிடைக்கும் பலத்துக்கும், போஷணைக்கும் பதிலாக போதுமான அளவுக்கு கிராமங்களுக்கு வழங்க வேண்டும் என்பதை நகரங்கள் உணரும்போதுதான் இரண்டுக்குமிடையில் சிறந்த, தார்மிகமான உறவு ஏற்படும். இம் மாபெரும், உன்னத சமூகச் சீரமைப்புப் பணியில் நகரக் குழந் தைகள் தங்களுக்குரிய பங்கை எடுத்துக் கொள்ள வேண்டு மெனில், அவர்கள் பயிலும் கல்வியின் மூலம் அவர்கள் பெறும் தொழிற் பயிற்சி, கிராமங்களின் தேவைகளுடன் நேரடியான தொடர்புள்ளதாக இருக்க வேண்டும்.

எனக்குத் தெரிந்தவரையில், பஞ்சடித்துத் தூய்மைப்படுத் துவது முதல் நூற்பது வரையில் உள்ள பல்வேறு பஞ்சு உற்பத்தி முறைகள் முழுவதும், வேறெதையும்விட இந்த சோத னைக்குப் பொருத்தமானவையென நான் நினைக்கிறேன். இன்றைக் கும் கூட கிராமங்களில் பருத்தி பயிரிடப்பட்டு, நகரங்களில் நூற்று, துணியாக்கப்படுகிறது. ஆனால் ஆலைகளில், ஆரம்பம் முதல் கடைசிவரையில் பருத்தி சங்கிலித்தொடர் போல பலவித முறைகளுக்கு உள்ளாகிறது. இம்முறைகளால் ஆள்பலம், மூலப் பொருள்கள், யந்திர சக்திக்கு உண்டாகும் பெரிய நஷ்டம் ஒரு பெரும் சோகக் கதையாகும்.

நூற்றல், பஞ்சடித்தல் போன்ற கிராமக் கைத்தொழில்களின் மூலம் ஆரம்பக் கல்வியைப் புகட்டுவது என்ற எனது திட்டம், அமைதியான சமூகப் புரட்சிக்கு அஸ்திவாரமாக இருக்க வேண்டும் என்றே வகுக்கப்பட்டுளது. இப்புரட்சியில் ஏற்படும் பலன்கள் மகத்தானவையாக இருக்கும்; நகரங்களுக்கும் கிராமங் களுக்குமிடையில் ஆரோக்கியமான, தார்மிகமான அடிப்படையில் நல்லுறவு ஏற்படுவதற்கும் வழியை உண்டாக்கும்; நமது கிராமங்

கள் மேன்மேலும் சீரழிவதைத் தடுக்கும்; ஏழை, பணக்காரன் என்ற இயற்கைக்கு மாறான பாகுபாடு இல்லாததும், ஒவ்வொரு வருக்கும் வாழ்வதற்குரிய ஊதியமும், சுதந்திரத்துக்கான உரிமையும் உறுதி செய்யப்பட்டதுமான நியாயமான சமூக நியதியை ஸ்தாபிக்கும். ரத்தப் புரட்சியுடன் கூடிய வர்க்கப் போராட்டத் தின் கோரங்கள் இல்லாமல் அல்லது பரந்த கண்டமான இந்தியா போன்ற நாட்டை யந்திர மயமாக்குவதால் உண்டாகும் ராட்சத முதலீட்டுச் செலவு இல்லாமல் இத்தனையும் சாதிக்கப் பெறும். அயல் நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் தொழிற் சாலைகளையோ அல்லது தொழில் நுட்பத் திறனையோ நிர்க்கதியாக நாம் நம்பி யிருக்க வேண்டிய நிலையும் ஏற்படாது. கடைசியாக, மிகவும் விசேஷத் திறமை வாய்ந்த நிபுணர்களை எதிர்பார்க்கும் அவசியம் இல்லாமல், பொது மக்கள் தங்கள் விதியைத் தாங்களே உரு வாக்கிக் கொள்ள சந்தர்ப்பம் ஏற்படும். ஆனால் யார் பூனைக்கு மணி கட்டுவது? நகர மக்கள் நான் கூறுவதற்குச் செவி சாய்ப் பார்களா? அல்லது என் குரல் எல்லாம் காட்டில் காய்ந்த நிலவு போல் வீணாகிவிடுமா? இந்தக் கேள்விகளுக்குப் பதில்கள், என்னை விட நகரங்களில் வசிக்கும் இக்கடிதமெழுதியவர் போன்ற கல்வித் துறையில் ஆர்வம் உள்ளவர்களையே பொறுத்திருக்கின்றன.

—'ஹரிஜன்' – 9—10—1937

# 32

# வெற்றிக்கு உரைகல்

ஒரு கைத் தொழிலின் மூலம் கல்வி பெறுவதன் சம்பந்த மாக காந்திஜி பேசுகையில் கூறியதாவது:

“ஒரு கைத்தொழிலின் மூலம் கல்வி புகட்டப்படுமானால், அதிலிருந்து நேரடியாகக் கிடைக்கும் பலன் அது தன்னைக்கட் டிக் கொண்டு போவதாக இருக்கும் என்பதே. ஆனால் வெற்றிக்கு உரைகல், தன்னைக் கட்டிக்கொண்டு போகும் தன்மையல்ல; சாத்திரீயமான முறையில் கைத் தொழிலை போதிப்பதால், மனிதரிடமிருக்கும் திறன் முழுவதும் வெளிப்படுவதேயாகும். எந்நிலையிலும், இதைத் தன்னைக்கட்டிக் கொண்டுபோகும் வண்ணம் மாற்றிவிடுவதாக வாக்களிக்கும் ஆசிரியரை நான் நிராகரித்துவிடுவேன். தம்முடைய திறமையை யெல்லாம் பயன் படுத்த மாணவன் கற்றுக் கொண்டுவிடும்போது, தன்னைக் கட்டிக் கொண்டு போவதற்கும் வழி பிறந்து விடும். நாளொன்றுக்கு 3 மணி நேரம் தன்னுடைய கைத்தொழிலில் பணியாற்றும் மாணவன், தன்னுடைய பராமரிப்புக்கு வருவாயைத் தேடிக் கொள்வது உறுதியென்றால், அப்பணியுடன் தன்னுடைய உள்ள

வளமையையும் ஆன்மிக வளர்ச்சியையும் சேர்த்துக் கொள்ளும் பையன் இன்னும் எவ்வளவு அதிகமாகச் சம்பாதிப்பான்!"

—'ஹரிஜன்' – 11—6—'39

# 33

# முடிவுகள்

இந்த ஆதாரக் கல்வி, நாட்டில் நம்மைச் சூழ்ந்துள்ள நிலையிலிருந்து வளர்ந்ததாகும். ஆகையால், சூழ்நிலையைச் சமாளிப்பதே இதன் நோக்கமாக இருக்கிறது. இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களிலும் அதன் கோடிக்கணக்கான மக்களிடையிலும் இச் சூழ்நிலை பரவியுள்ளது. அவர்களை மறந்தால், இந்தியாவையே மறப்பதாகும். இந்தியாவை அதன் நகரங்களில் காண முடியாது. எண்ணிக்கையற்ற கிராமங்களில்தான் இந்தியா உள்ளது.

ஆதாரக் கல்வியின் அடிப்படையான அம்சங்கள் பின் வருமாறு :

1. உண்மையான கல்வி என்பது தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருக்க வேண்டும். அதாவது இறுதியில் முதலீடு நீங்கலாக அது தன் செலவையெல்லாம் தானே சமாளிப்பதாக இருக்க வேண்டும். ஆனால் அதற்காகப் போடப்பட்ட மூலதனம் அப்படியே இருந்துவரும்.

2. இதில் கைத்திறன் கடைசி கட்டம் வரையில் கூட பயன்படுத்தப்படும்; அதாவது, ஒரு நாளில் ஏதாவதொரு பகுதி நேரத்தில், ஏதாவதொரு தொழிலில், மாணவனுடைய கைகள் வேலை செய்தவண்ணம் இருக்கும்.

3. கல்வி முழுவதும் மாகாண மொழியின் மூலமாகவே போதிக்கப்பட வேண்டும்.

4. இதில் தனித்தனி மதக் கல்விக்கு இடமிராது: ஆனால் அடிப்படையான பொது தருமம் பூரணமாக இடம் பெற்றிருக்கும்.

5. குழந்தைகள் அல்லது வயது வந்தவர்கள், ஆண் அல்லது பெண் எவருக்கு இக்கல்வி போதிக்கப்பட்டாலும், அது மாணவர்களின் வீடுகளுடனும் தொடர்பு கொண்டதாக இருக்கும்.

6. இக்கல்வி பயிலும் கோடிக்கணக்கான மாணவர்கள் தங்களை இந்தியா முழுவதற்கும் சொந்தமாகக் கருதுவார்களாதலால், அவர்கள் எல்லா மாகாணங்களுக்கும் பொதுவான ஒரு மொழியைக் கற்க வேண்டும். அத்தகைய பொதுவான மொழி நாகரி அல்லது உருது லிபியில் எழுதப்படும் ஹிந்துஸ்தானியாகவே இருக்க முடியும். ஆகையால் மாணவர்கள் இரு லிபிகளிலும் புலமை பெற வேண்டும்.

—'ஹரிஜன்' – 2—11—47

பகுதி பதினொன்று

# ஆசிரியர்கள்

## 1

## ஒரு விண்ணப்பம்

நான் பிரசாரம் செய்துவரும் ஆரம்பக் கல்வி முறையில் ஏறக்குறைய நம்பிக்கையுள்ள ஆசிரியர்கள் பலர் உள்ளனர். இது எனக்குத் தெரியும். ஏதாவதொரு கைத்தொழில் மூலம் இத்தகைய பயிற்சி அளிக்கும் சோதனைகளை சிலர் நடத்தி வருகிறார்களென்பதும் எனக்குத் தெரியும். இம்முறையில் நாட்டம் உள்ளவர்கள் இருக்கிறார்கள்; ஆனால் அவர்களையும் மீறிய சந்தர்ப்பங்கள் காரணமாக அவர்கள் ஆசிரியர் தொழிலிலிருந்து விலகி விட்டனர். நான் வெளியிட்டுள்ள இத்திட்டத்தை இப்போது காங்கிரஸ் மந்திரி சபைகள் ஆதரிப்பதாகத் தோன்றுகிறது. ஆகையால், இந்தச் சோதனையையொட்டித் தங்கள் சேவையைப் பயன்படுத்த முன்வருவோரின் பெயர்களைத் திரட்டுவது அவசியமாகியிருக்கிறது. இத்தகைய நண்பர்கள் தங்களுடைய பெயர்கள், தகுதிகள், தாங்கள் விரும்பும் ஊதியம் ஆகியவற்றையும், வேறு ஏதாவது நிபந்தனைகள் இருந்தால் அவற்றையும் எனக்கு அனுப்பி வைப்பார்களாக.

—'ஹரிஜன்' – 25—9—1939

## 2

## விண்ணப்பம் அனுப்புவோருக்கு

இப்பத்திகளில் வாராவாரம் நான் விவரித்துவரும் ஆரம்பக் கல்வித் திட்டத்தை ஏற்றுக்கொண்டவர்களும், அதை நடத்தத் தயாராக இருப்பவர்களுமான ஆசிரியர்களுக்கு நான் விடுத்த வேண்டுகோளுக்கு பதிலளித்து, எனக்கு தினமும் கடிதங்கள் வந்துகொண்டிருப்பதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். அக் கடிதங்களிலிருந்து, அதை எழுதியிருப்பவர்கள் என்னுடைய விண்ணப்பத்தின் கருத்தைப் புரிந்துகொள்ளவில்லை என்பது தெரிகிறது. லாபகரமான ஒரு கைத்தொழிலின் மூலம் ஆரம்பக்

கல்வி அளிப்பதில் முழு நம்பிக்கை இல்லாதவர்களும், முழு மனத்துடன் அதில் ஈடுபட முடியாதவர்களும், வெறும் ஜீவனோபாயமாக அதைக் கருதுபவர்களுமான எவரும் தேவையில்லை. அத்தகையோர் யாவருக்கும், நூற்புக் கலையில் முழுத் தேர்ச்சி பெறுவதுடன், அதற்குப் பூர்வாங்கமான முறைகளையெல்லாம் கற்றுத் தேற வேண்டுமென்றும் நான் யோசனை கூறுகிறேன். இதற்கிடையில் எல்லோருடைய பெயர்களையும் நான் பதிவு செய்துகொண்டு வருகிறேன். நாளடைவில் இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கான வழியில் அடைந்துள்ள முன்னேற்றம் பற்றி அவர்களுக்குத் தெரிவிப்பேன். திட்டத்தை ஏற்று, பரீட்சித்துப் பார்க்க வேண்டுமென்று ஏழு மாகாண சர்க்கார்களும் நினைத்தால், அதை முன்கூட்டி அறிந்து கொள்ளவேண்டுமென்பதே என் விண்ணப்பத்தின் நோக்கமாகும்.

—'ஹரிஜன்' – 9—10—1937

# 3

# ஆதாரக் கல்வித் திட்ட ஆசிரியர்களுக்கு

[ஆதாரக் கல்வித் திட்டத்தின் கீழ் ஆசிரியர்களாவதற்காக விண்ணப்பம் செய்துகொண்டவர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி ஹிந்துஸ்தானியில் நிகழ்த்திய உரையின் சாரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது :]

உங்கள் வாக்குறுதி திகைக்க வைப்பதாக இருக்கிறது. ஆதாரக் கல்வித் திட்டத்தின் கீழ் ஆசிரியர்களாவதற்காக 5000 மனுக்களுக்கு மேல் வந்திருப்பது தேசபக்திக்கான ருசுவாகி விடாது. உண்மையாக அவ்விதம் இருந்தால், எனக்கு சந்தோஷம்தான். இது, கல்வி கற்றோரிடையில் அல்லது ஓரளவு படித்தவர்களிடையில் காணப்படும் பயங்கரமான வேலையில்லாக் கஷ்டத்திற்கான அத்தாட்சியே யாகும். அரசாங்க வேலைக்கு இருக்கும் கவர்ச்சிக்கும்கூட இது ஒரு அத்தாட்சியாகும். சட்ட விரோதமான வழிகளில் சட்ட பூர்வமான சம்பளத்தை அதிகப்படுத்திக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையுடன் போலீஸ்காரர் அல்லது ஆசிரியர் பதவிக்கு மக்கள் மனுப் போடுவது எனக்குத் தெரியும். அத்தகைய நம்பிக்கை எதுவும் உங்களில் எவருக்கும் இல்லையென்றே நம்புகிறேன். எனக்கு எவ்வளவோ தேசாபிமானம் இருந்தும் கூட, மாதம் ரூ. 15 சம்பளத்துக்கு ஆசிரியனாக சேவை புரிய நான் முன்வருவேனா என்பது சந்தேகம்தான். பள்ளிக்கூடங்களில் மிச்சப்படும் லாபத்தை உங்களுக்கிடையில் பகிர்ந்து கொள்ளக்கூடும் என்ற எண்ணத்தையும் நீங்கள் உங்கள் மனத்திலிருந்து அகற்றிவிட வேண்டும். ஆகை

யால், இந்த ஒப்பந்தத்தைக் குறித்து வருந்துபவர்கள் எவரேனும் ஒருவர் உங்களிடையில் இருந்தால், உங்களை விடுவிக்குமாறு நீங்கள் மந்திரியைக் கேட்கலாம். உங்களை விடுவிக்கும்படி நானும் சிபாரிசு செய்கிறேன். இவ்வளவும் கூறிய பின்னரும், தங்கள் ஒப்பந்தத்தில் உறுதியாக இருப்பவர்களுக்கு என்னுடைய பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்கள் உறுதி மொழியின்படி நடப்பதற்கான பலத்தை உங்களுக்கு ஆண்டவன் அருள்புரிவாரென்று நம்புகிறேன்.

காங்கிரஸ் வேலைத் திட்டத்திற்கிணங்கவே இக்கல்வித் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். இப்போது அகிம்சையயையும், சத்தியத்தையும் அடிப்படையாகக் கொண்டு சுயராஜ்யம் பெற காங்கிரஸ் உறுதிகொண்டிருக்கிறது. ஆகையால் இந்த முக்கியமான பண்புகளை வளர்ப்பதே இத்திட்டத்தின் அடிப்படை ஆகும். உங்கள் மாணவர்களுடன் நீங்கள் அன்றாடம் கொள்ளும் தொடர்பில் இதையெல்லாம் காட்டவில்லையென்றால், நீங்கள் தோல்வியடைவீர்கள்; அதே போல் உங்கள் பள்ளிகளும் தோல்வியடையும். ஜெர்மனியில் ஹிட்லர் என்ன செய்கிறார் என்பது உங்களுக்குத் தெரியும். அவரது கொள்கை பலாத்காரமே; அதை அவர் மறைக்கவில்லை. அன்றொரு நாள், அவர்களுக்கு வாள்தான் ஆன்மா என்று சொன்னார்கள். அங்குள்ள சிறுவருக்கும், சிறுமியருக்கும் ஆரம்பம் முதல் பலாத்காரக் கலைதான் போதிக்கப்படுகிறது. கணக்குப் பாடத்தில்கூட பகைவனை வெறுப்பதற்கான வழிகளே போதிக்கப்படுகின்றன! அங்கே மாணவர்களின் மனத்தில் ராணுவ உணர்ச்சியை உண்டாக்கும் நோக்கத்துடனேயே உதாரணங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம். அவர்களுடைய கொள்கையை நாம் ஆமோதிப்பதானால், குழந்தைப் பருவத்திலிருந்தே பலாத்கார உணர்ச்சியை ஊட்டுவதன் அவசியத்தை நாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். இதேதான் இத்தாலியிலும் நடக்கிறது. அவர்கள் அவர்களுடைய கொள்கையில் ஒளிவு மறைவின்றி யோக்கியப் பொறுப்புடன் நடந்துகொள்வதைப் போலவே, நாமும் நமது கொள்கையில் யோக்கியப் பொறுப்புடன் நடந்துகொள்ள வேண்டும். நமது திட்டத்தில் உள்ள எல்லா நுணுக்கங்களுடனும் இத்திட்டம் செயல்படுமானால், இது இந்தியா முழுதும் பிரபலமடையுமானால், அமைதியான ஒரு புரட்சி ஏற்படும் என்பதிலும், அதன் பலனாக நாம் சுயராஜ்யம் அடைவது நிச்சயம் என்பதிலும் எனக்குச் சந்தேகம் கிடையாது.

—'ஹரிஜன்' – 30—4—1938

# 4

# அகிம்ஸை அடிப்படை

தேசீயக் கல்வி போர்டு புதிதாக அமைக்கப்பட்டது. அதன் கூட்டமொன்றில், புதுக் கல்வித் திட்டத்தின் உள் அர்த்தத்தையும், குறிக்கோளையும் காந்திஜி எடுத்துரைத்தார். இங்கும் கூட, அவரை ஆட்கொண்டிருந்த சோக உணர்ச்சி அவரது பேச்சில் வெளியாயிற்று. அவர் தமது பிரசங்கத்தின் முடிவில் பின்வருமாறு கூறினார்: "புதுக் கல்வித் திட்டம் ஆரம்பிக்கப் பட்டபோது, எனக்கு பூரணமாக சுயநம்பிக்கை இருந்தது. ஆனால் இப்போது அது குறைந்துவிட்டதாக நினைக்கிறேன். முன்பு என் வார்த்தைகளில் சக்தி இருந்தது. ஆனால் இன்று வார்த்தைகளில் அது இல்லையென்று தோன்றுகிறது. அந்த நம்பிக்கைக் குறைவுக்கு வெளியிலுள்ள நிலைமை எதுவும் காரணம் அல்ல, என்மன நிலையே காரணமாகும். எனது புலன்கள் செயலற்றுப் போய்விடவில்லை. என்னுடைய வயதை உத்தேசிக்கும்போது, என்னுடைய அறிவு நன்றாக வேலைசெய்கிறதென்றே கூற வேண்டும். நான் அகிம்சையில் நம்பிக்கை இழந்துவிடவுமில்லை. எப்போதுமிருப்பதைவிட அந்த நம்பிக்கை இப்போது அதிக ஒளியுடன் பிரகாசிக்கிறது. இருந்தாலும், தற்போது நான் சுயநம்பிக்கை இழந்தவனாக இருக்கிறேன். ஆகையால், நான் சொல்லுவது எதையும் அப்படியே ஏற்க வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். உங்கள் மனத்திற்கு நியாயமாக இருப்பதை மட்டும் ஏற்றுக்கொள்ளுங்கள். சரியான வழியில் இரண்டே பள்ளிகளை நடத்த முடிந்தாலும் கூட, நான் ஆனந்தக் கூத்தாடுவேன்."

இந்த உரையின் முன் பகுதியில் சரியான வழி என்ன என்பதை காந்திஜி குறிப்பிட்டார். அவர் கூறியதாவது: "சுதந்திரத்தைப் பெறுவதற்கும், நமது நோய்களையெல்லாம் தீர்த்துக் கொள்வதற்குமான பள்ளிக்கூடமாக, இப்பயிற்சிப் பள்ளியை நாம் உருவாக்க வேண்டும். நமது நோய்களுக்குள் முக்கியமானது நமது வகுப்புத் தகராறுகளே. இக்காரியத்துக்காக நாம் அகிம்சையில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும். ஹிட்லருடையதும், முசோலினியுடையதுமான பள்ளிகள் பலாத்காரத்தை அடிப்படையான கொள்கையாகக் கொண்டிருக்கின்றன. நம்முடைய கொள்கை அகிம்சை என்று காங்கிரஸ் கூறுகிறது. ஆகையால் நமது பிரச்னைகளுக்கெல்லாம் அகிம்சை முறையிலேயே தீர்வு காண வேண்டும். நமது கணக்கு, நமது விஞ்ஞானம், நமது வரலாறு எல்லாம் அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டிருக்கும். இப்பாடங்களிலுள்ள பிரச்னைகள்

அகிம்சை மணம் உடையதாகவே இருக்கும். ஜமியா-மிலியா-இஸ்லாமியாவில் ஸ்ரீமதி ஹலீத் எடிப் ஹனும் துருக்கி நாட்டைப் பற்றிப் பேசினர். அப்போது பொதுவாக வரலாறு, மன்னர்களின், அவர்களுடைய போர்களின் குறிப்புகளாக இருக்கின்றது என்றும், ஆனல் வருங்கால வரலாறு மனிதனுடைய வரலாருகவே இருக்கும் என்றும் நான் கூறினேன். இது அகிம்சை வரலாருக மட்டுமே இருக்க முடியும். பிறகு நாம் கிராமக் கைத் தொழில்களில் முனைய வேண்டுமேயன்றி, நகரக் கைத் தொழில்களில் அல்ல, அவற்றில் ஒரு பகுதி மட்டுமின்றி நமது ஏழு லட்சம் கிராமங்கள் பூராவும் உயிருடன் இருக்க வேண்டுமானல், நமது கிராமக் கைத்தொழில்களை உயிர்ப்பித்தே தீர வேண்டும். அக் கைத் தொழில்களின் வாயிலாக அறிவுக் கலைப் பயிற்சியைப் புகட்ட முடியுமானல், நாம் பெரும் புரட்சியை உண்டாக்கியவர்களாவோம். இதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். இதே நோக்கத்துடன் நமது பாட நூல்களும் தயாரிக்கப்பட வேண்டும்.

''நான் சொல்லிவருவதையெல்லாம் நீங்கள் கூர்ந்து ஆலோசிக்க வேண்டுகிறேன். உங்களுக்குப் பிடித்தமில்லாததை நிராகரித்துவிடலாம். நான் சொல்லுவது நமது முஸ்லிம் சகோதரர்களுக்குப் பிடிக்கவில்லையென்ருல், முன்பின் பாராமல் அவர்கள் அதை நிராகரித்து விடலாம். நான் கோரும் அகிம்சை பிரிட்டிஷாருடன் நடத்தும் போராட்டத்தோடு நின்றுவிடுவதன்று; நம்முடைய உள்நாட்டு விவகாரங்கள், பிரச்னைகள் விஷயத்திலும் பிரயோகிக்க வேண்டியதாகும்; அதாவது, அது உண்மையான, தீவிரமான அகிம்சையாகும். அதிலிருந்து உயிர் ததும்பும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை பிறக்கும். உதாரணமாக, ஹிட்லருக்கும், முசோலினிக்கும் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தைப் போல், பரஸ்பரம் பீதியிலிருந்து உதித்த ஐக்கியமாக அது இராது.''

'ஹரிஜன்' – 7—5—1938

# 5

# ஆதாரக் கல்வி ஆசிரியர்கள்

விவசாயிக்குக் கல்வி புகட்டும் நோக்கத்துடன் பல்கலைக் கழகப் பணியிலிருந்து விலகிக் கொண்டதாக பேராசிரியர் டாவ் சொன்னர்; அவர் ஆதாரக் கல்வித் திட்டத்தில் ஆழ்ந்த அக்கறை காட்டுபவர். ''இந்தத் திட்டத்தின் சாரமான கருத்து என்ன?'' என்று அவர் கேட்டார்.

''குழந்தையை ஒரு பூரண ஆண் அல்லது பெண்ணை உருவாக்கக் கூடிய ஒரு கிராமக் கைத்தொழிலைக் கற்பிப்பதே இதன் சாரமான உண்மையாகும்'' என்ருர் காந்திஜி.

"ஆனால் அதற்குற்ற ஆசிரியர்களைக் கண்டு பிடிப்பதே கடினமாக இருக்கிறது" என்று பேராசிரியர் டாவ் கூறினர். உடனே காந்திஜி சிரித்தார். "எங்களுக்கும் அவ்விஷயமாகக் கஷ்டமிருந்தது" என்றார் காந்திஜி.

"பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் கைத் தொழிலை கற்றுக் கொள்ள வேண்டுமா அல்லது கைத் தொழில் வினைஞர்கள் போதனைக் கலையைக் கற்க வேண்டுமா? உங்கள் கருத்தென்ன?" என்று பேராசிரியர் டாவ் கேட்டார்.

**காந்திஜி :** சராசரிக் கல்வி கற்ற மனிதன், சுலபமாகக் கைத் தொழிலில் தேர்ச்சி பெற இயலுமென்று எதிர்பார்க்கலாம். கல்வி கற்றவர் உங்களைப் போன்றவர் என்று வைத்துக் கொள்வோம். தச்சு வேலை போன்றதொரு தொழிலில் பயிற்சி பெறுவதற்கு ஆகும் காலத்தைவிட, நமது கைத் தொழில் வினைஞர்கள் அவசியமான பொதுக் கல்வியைப் பெற நீண்ட நாளாகும்.

**பேராசிரியர் டாவ் :** ஆனால் கல்வி பயின்ற ஒருவர் கொழுத்த உத்தியோகத்தையும், பணத்தையும் நாடுபவராக இருக்கிறார். அப்படியிருக்க அவருக்கு இதில் எப்படி அக்கறை உண்டாக முடியும்?

**காந்திஜி :** திட்டம் அப்பழுக்கற்றதாக இருந்து, கற்றவரின் மனத்துக்கும் கவர்ச்சியாக இருக்குமாயின், அதுவே கல்வி கற்ற இளைஞன் பண ஆசைக்கு இலக்காகிவிடாமல் தடுக்கவல்லதாக இருக்கும். கல்வி கற்ற இளைஞன் உள்ளத்தில் போதிய தேசாபிமானத்தை அதனால் எழுப்ப இயலாவிடில், அது தோல்வியுற்றே தீரும். எங்களுக்கு ஒரு அனுகூலம் இருக்கிறது. இந்திய மொழிகள் மூலம் கல்வி பயின்றவர்கள் கல்லூரிகளில் சேர இயலாது. அவர்களுக்கு இத்திட்டம் கவர்ச்சியுள்ளதாக இருப்பது சாத்தியமே."

—'ஹரிஜன்' – 27—8—1938

பகுதி பன்னிரண்டு

# புகார்களும் விளக்கங்களும்

## 1

## ஆதரவான அபிப்பிராயம்

"குழந்தைக்கு உபயோகமான கைத்தொழிலை விஞ்ஞான ரீதியிலும் கலாசாரத்தை யொட்டியும் கற்றுத் தரவேண்டுமென்றும், பயிற்சியைத் தொடங்குவதிலிருந்தே உற்பத்தி செய்ய வசதி அளிக்க வேண்டுமென்றும் நீங்கள் கூறும் யோசனையை நான் முற்றிலும் ஏற்றுக் கொள்ளுவதுடன், இதற்காகப் பணிவுடன் பரிந்து பேசவும் விரும்புகிறேன். இது புரட்சிகரமான யோசனை என்பதில் சந்தேகமில்லை. ஆயினும், அதை முழு மனத்துடன் ஆதரிக்கிறேன். தனி நலனுக்கும், தேசத்துக்கும் அதனால் உண்டாகும் தார்மிக, கலாசார, பொருளாதார மதிப்பு பிரமாதமாக இருக்கும். அது உழைப்பின் மேன்மையை வளர்ப்பதுடன், தன்னம்பிக்கையையும், வாழ்க்கையில் ஒழுங்கான நிர்மாணத் திறனையும் வளர்க்க வல்லது. குழந்தையின் அறிவு, உடல், ஒழுக்கம், கைத் தொழில் தேவைகளையெல்லாம் அபிவிருத்தி செய்வதே நமது நோக்கமாக இருக்க வேண்டும். கைத்தொழில் பயிற்சி மூலம் உற்பத்தித் துறையில் எல்லா முறைகளையும் தெரிந்து கொள்ளலாம். அதே சமயத்தில் எல்லாக் கைத்தொழில்களின் எளிய கருவிகளையும் உபயோகிப்பதில் குழந்தை அல்லது இளைஞனுக்கு செயல்முறைப் பயிற்சியும் ஏற்படும். இளம் தலைமுறையினருக்கு உற்பத்திப் பணியுடன் கூடிய கல்விப் பயிற்சி அளிப்பது நமது லட்சியமாக இருக்க வேண்டும். பொதுக் கல்விப் பயிற்சியுடன் உடலுழைப்பை இணைப்பதென்பதே இதன் பொருள்; இது, உடலுழைப்பை இணக்கமாகச் சேர்க்கக் கூடிய தொழில்களின் பிரதானப் பிரிவுகளைப் பற்றிய பரவலான கருத்தை ஊட்டும் நோக்கங் கொண்டதாகும். அறிவியல், ஒழுக்க முயற்சியுடன் கலந்த உடல் உழைப்பு ஆகியவை நமது கல்வியின் நோக்கமாக இருக்க வேண்டும். மூளை வேலைக்கும் உடல் உழைப்புப் பணிக்குமிடையில் வேறுபாடு இருக்கக் கூடாது.

"நமது ஆரம்பக் கல்வி முறையில் பின்வருவனவற்றைச் சேர்க்க வேண்டும் :

1. தாய் மொழி
2. கணக்கு
3. இயற்கை விஞ்ஞானம்
4. சமூக விஞ்ஞானம்

5. பூகோளம், சரித்திரம்
6. உடலுழைப்பு அல்லது தொழில் நுட்பப் பணி
7. உடற்பயிற்சிக் கலை
8. கலையும் இசையும்
9. ஹிந்துஸ்தானி

"ஆயினும், இங்கு ஒரே ஒரு கேள்வி எழுகின்றது. அதாவது குழந்தையின் கல்வி எந்த வயதில் துவங்க வேண்டும் என்பதே. ஐந்து அல்லது ஆறு ஆக இருந்தால், அவ்வயதில், உபயோகமான கைத்தொழிலை ஆரம்பிக்க இயலுமா? இதை கற்றுத் தருவதற்காகும் செலவு என்ன? எழுத்தறிவைப் பரப்புவதை விட இது சுலபமாகவும் செலவுக் குறைவாகவும் இருக்காது. கருவிகளை உபயோகிப்பதற்கு பிடிமானம் வேண்டும். அவற்றைக் கையாள்வதிலும், பொருள்கள் மீது அவற்றைப் பிரயோகிப்பதிலும் கை உறுதி வேண்டுமாதலால், 8 அல்லது 10 வயதில் கைத்தொழிலை நான் ஆரம்பிப்பேன். ஆனால், ஆரம்பக் கல்வி குறைந்தபட்சம் ஐந்து அல்லது ஆறு வயதில் ஆரம்பமாக வேண்டும். இதை விட அதிகக் காலத்திற்குக் குழந்தையைக் காத்திருக்க வைக்கலாகாது. நாம் கொடுக்க உத்தேசித்துள்ள கைத்தொழில் பயிற்சியுடன் கூட, குழந்தையை "மெட்ரிகுலேஷன்" வகுப்பு வரைப் படிக்க வைப்பதற்கான பத்து வருஷப் பள்ளித் திட்டம் நமக்கு வேண்டும். ஆயினும், இக்குழந்தைகள் செய்யும் பண்டங்களுக்கு அதிலும் ஆரம்ப காலத்தில் பொருளாதார மதிப்பு இருக்குமா அதாவது அவை விலை போகுமா என்பது சந்தேகமே. சுயேச்சை வர்த்தக முறையும், முற்போக்கான நாகரிகமும் நிலவும் நாட்டில் அப்பொருள்கள் விற்பனையாகக் கூடியதாக இரா; மேலும் அப்பண்டங்கள் கெட்டியாகவோ அல்லது குற்றம் குறையின்றி பூரணமானதாகவோ இரா. எனவே, அவற்றை விற்பனை செய்வது முடியாத காரியம். அரசாங்கம் அவற்றை வாங்குவதாக இருந்தால் அல்லது தாங்கள் செய்யும் உதவிக்குப் பதிலாக அவற்றைப் பெறுவதாக இருந்தால், அவற்றை வைத்துக் கொண்டு அரசாங்கம் என்ன செய்யும்? இம் முறைகளையெல்லாம் மேற்கொள்ளுவதை விட அரசாங்கம் குழந்தைகளின் கல்விக்காக நேரடியாகப் பணத்தைச் செலவிடுவதே மேலாக இருக்கும். 12 முதல் 16 வயது வரை உள்ள முன்னேற்றம் அடைந்த சிறுவர்கள் உற்பத்தி செய்த பொருள்கள், விற்பனைக்கு ஏற்றவையாக இருக்கக் கூடும். ஆகையால், அவை வருமானத்திற்குரிய ஒரு முக்கிய அம்சமாகிவிடும்.

"இதைக் காட்டிலும் நான் எழுத்தறிவுப் பிரச்னையை வேறொரு அடிப்படையில் வைத்து அதற்கு அவசியமான வரி விதிப்பையும், செலவினத்தையும் தைரியமாக மேற்கொள்ளுவேன்.

"ஆரம்பக் (அல்லது மத்திய தரக் கல்வி) கல்வித் துறையில் மேல் வகுப்புகளில் உபயோகமான கைத்தொழில் பயிற்சியளிப்பது முன்னேற்றகரமான முறையில் மேற்கொள்ளப்படும். அதை, குறைந்தபட்சம் ஓரளவுக்காவது தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக அமைக்க முயலவேண்டும். அனுபவம் ஏற்பட்ட பின், முழு அளவுக்குத் தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருக்க வேண்டும். சாத்தியமாயின், இதற்குப் பண்டங்களின் விற்பனையைக் கொண்டு செலவுகளை ஈடுசெய்து கொள்ளலாம். ஆனால், ஒரே ஒரு ஆபத்து மட்டும் நேராமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்; அதாவது உடல், உள்ளம், ஆன்மாவின் கலாசாரக் கல்விப் பயிற்சி ஆகியவை அடியோடு பொருளா

தார நோக்கத்துக்கும் பள்ளிக்கூட வரவு செலவுக்கும் உட்பட்டதாகிவிடக் கூடாது.

“ஆரம்பக் கல்வி ஆங்கிலம் நீங்கலாக இப்போதைய மெட்ரிகுலேஷன் தரத்துக்கு ஈடாக இருக்க வேண்டுமென்ற தங்கள் மற்றொரு யோசனையையும் நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனால், அதோடு ஹிந்துஸ்தானியையும் சேர்க்க வேண்டும் என்பேன். ஆரம்பக் கல்வி முறையில் மத்தியதரக் கல்வியையும் நீங்கள் சேர்த்திருக்கிறீர்கள் என்று அர்த்தமாகிறது. உங்களுடைய கருத்து, பூரணப் பள்ளிக் கல்வித் திட்டமாக அதாவது, பத்து ஆண்டுகள் திட்டமாக இருக்கிறது. இதோடு நான் மற்றொன்றையும் சேர்க்க விரும்புவேன். இதைத் தாய்மொழி மூலமாக மட்டுமே புகட்ட வேண்டும்; வேறு எந்த மொழியிலும் கூடாது. இது குழந்தையின் மனத்துக்கு சுதந்திரமளிக்கும்; மனத்தில் அறிவுப் பிரச்னைகளிலும், வாழ்க்கைப் பிரச்னைகளிலும் உயிரோட்டமுள்ள அக்கறையை உண்டாக்கிவிடும்; ஆக்கத் திறனுள்ள திருப்பத்தையும், நோக்கத்தையும் கொடுக்கும்.

“பண்டைக் காலத்தில் கல்வி பெரிதும் தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருந்ததென்பதை ஒப்புக்கொள்ளுகிறேன், நமது சமூக, பொருளாதார, அரசியல் அமைப்புகளும், கருத்தும் பண்டைக் காலத்தைப் போன்றதாக இருப்பதாயின், அதாவது சாதி, வர்க்கம் ஆகியவற்றை முக்கியமாகக் கொண்ட பொருளாதாரம், சமூகம், கொள்கை போன்ற பழைய குறுகிய மதிப்புகளுக்கு கட்டுப்பட்டவையாக இருக்குமாயின், பொதுவான முறையில் கல்வியைத் தன்னைக் கட்டிக் கொண்டு போவதாக அமைக்க முடியும். ஆனால், இன்று ஜனநாயக, தேசீய சோஷலிஸக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கை நம்மிடம் பரவியிருக்கையில், அவ்விதம் இருக்குமென எதிர்பார்ப்பதற்கில்லை. அதிகாரங்களும், வசதிகளும் கொண்ட ஒரே சமுதாய நிறுவன சக்தி, அரசாங்கமேயாகும். ஆகையால், அதுதான் இப்பணியை மேற்கொள்ள வேண்டும். செல்வாக்குடன் விளங்கிய பழைய கோஷ்டிகளான சாதி, வர்க்கம், தொழில், சங்கம், கல்லூரி, சர்ச் எல்லாம் தங்களுடைய சக்தி, அதிகாரம், வசதிகள் முதலியவற்றை இழந்துவிட்டன. பழைய காலத்தில் பொதுவாக நிலவியிருந்த கருத்துப்படி அவை இப்போது இருக்கவில்லை, மக்களுக்கும் இப்போது அவற்றில் நம்பிக்கையில்லை. எல்லாச் சமுதாய சக்தியும், அரசியல் கோஷ்டிகளிடம் மாறிவிட்டன; இந்தியாவிலும் கூட இந்த அரசியல் கோஷ்டி பொருளாதார, சமூக சக்தியாக விளங்குகிறது. ஆகையால், ஒரு புறம் பழமை, மறு புறம் புதுமை; ஒரு புறம் தத்துவம், மறுபுறம் செயல்; மற்றும் ஒரு புறம் குவியல் முறை, மறு புறம் பிரதேசவாரி முறை; – இத்தகைய இரட்டை சித்தாந்தங்கள் ஒன்றுபட்டு செயல்பட முடியாது.

“முன்னாளில் சர்வஜனக் கல்வி இல்லை; ஜனநாயக ஐக்கிய அரசாங்கம் இல்லை; தேசீய சமதரும நோக்கம் இல்லை.

“கல்விச் சேவைக்காக ஆள் திரட்டும் கருத்து இப்போது புதுமையானதல்ல; எனினும், அது பின்பற்றத்தக்கதேயாகும். மக்களின் கல்வியில் ஈடுபாடு உள்ள எல்லோரும் எழுத்தறிவு, பண்பாடு, கல்வி பரவுவதற்கு, புது அரசாங்கங்களுக்கு உதவி புரிய முன்வர வேண்டும் என்று காங்கிரசும், மாகாண மந்திரி சபைகளும் தங்கள் அதிகார தோரணையில் நாட்டின் அறி

வாளிகளுக்கு வேண்டுகோள் விடட்டும். புது அடிப்படையில் அது-வெறும் பொருளாதார, அரசியல் அடிப்படையில் மட்டுமல்ல, பொதுஜனத் தொடர்பையும் நிலைநாட்டும்; பொதுஜன சக்தியையும், அறிவையும் பலப்படுத்துவதற்கும் மக்களிடையே விழிப்பை உண்டாக்கும் உயர்ந்த நோக்கத்துக்கும் உதவியாக இருக்கும்.''

தொழில் மூலம் ஆரம்பக் கல்வி புகட்டுவது தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருக்க வேண்டும் என்பது பற்றி நான் முதல் தடவை எழுதியபோது, அவர்களுடைய கருத்துகளை அனுப்பிவைக்குமாறு கல்வித் துறையில் ஈடுபட்டுள்ள சக ஊழியர்களுக்கு அழைப்பு விடுத்திருந்தேன். அக் கோரிக்கைக்கு முதன் முதலாக பேராசிரியர் எஸ். வி. புண்டம்பேக்கர் தமது அபிப்பிராயத்தை அனுப்பினார். அவர்தான் நீண்ட, நியாய வாதத்துடன் கூடிய பதிலை அனுப்பினார். இடமில்லாததால், அதை இன்னும் முன்னதாகப் பிரசுரிக்க முடியாமற் போய் விட்டது. மேலே கண்டுள்ள விவரங்கள் அவரது அபிப்பிராயத்தில் மிகவும் பொருத்தமான ஒரு பகுதியாகும். சுருக்கமாக இருக்க வேண்டும் என்பதற்காக, எழுத்தறிவு, கல்லூரிக் கல்வி பற்றிய பகுதிகளை எடுத்துவிட்டேன். 22, 23 தேதிகளில் கூடவிருக்கும் மகாநாட்டில், தொழில் மூலம் தன்னைக்கட்டிக் கொள்ளும் ஆரம்பக்கல்வி பற்றிய விவாதமே பிரதானமாக இடம் பெறும்.

—'ஹரிஜன்' – 16—10—1937

## 2

# ஒரு அமெரிக்கரின் மன நிலை

தென்னிந்தியாவில் ஒரு கல்வி ஸ்தாபனத்தின் நிர்வாகத்தை வகிக்கும் டாக்டர் ஜான் டிபோயர், நீண்ட நாள் விடுமுறையில் போவதற்கு முன், வர்தாவுக்கு வந்தார். ஆதாரக் கல்வித் திட்டத்தை அவர் மிகவும் கவனமாக ஆராய்ச்சி செய்திருந்தார். அதனால் ஸ்ரீ அரியநாயகம், காகா சாகிப் ஆகியோருடன் உபயோகமான முறையில் அவர் அதுபற்றி விவாதித்தார். காந்திஜியுடனும் கூட சில நிமிஷ நேரம் பேசவேண்டுமென்று அவர் மிக்க ஆர்வம் உள்ளவராக இருந்தார். இத்திட்டத்தின் பின்னணியில் அகிம்சைக் கொள்கை இருப்பதால், அது தம்மை மிகவும் கவர்ந்ததாக அவர் கூறினார். ஆனால் பாடத் திட்டத்தின் அட்டவணையில் அகிம்சை பற்றி அதிகமாக எதுவுமே ஏன் குறிப்பிடப்படவில்லை என்பதை அவரால் அறிந்து கொள்ள முடியவில்லை.

''இது உங்களை ஏன் கவர்ந்ததென்பதற்கான காரணம் சரியானதுதான்'' என்று காந்திஜி அவரிடம் கூறினார். காந்திஜி மேலும் கூறியதாவது: ''ஆனால் பாடத் திட்ட அட்டவணை

முழுவதும் அகிம்சையை மையமாகக் கொண்டதாக இருப்பதென்பது முடியாத காரியம். அகிம்சையை ஜீவாதாரமாகக் கொண்டவரின் மூளையிலிருந்து அது உதித்தது என்பதை நினைவில் வைத்துக் கொள்வதே போதுமானது. இதை ஏற்போர் எல்லோரும், அகிம்சையை ஏற்றிருக்க வேண்டும் என்பதில்லை. உதாரணமாக, கமிட்டியின் அங்கத்தினர்கள் எல்லோரும் அகிம்சையை ஒரு சித்தாந்தமாக ஏற்றவர்களல்ல. சைவ உணவு அருந்துபவன் அகிம்சையில் நம்பிக்கை உள்ளவனாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. உடல் நலத்தைக் கருதி அவன் சைவ உணவு அருந்துபவனாக இருக்கலாம். அதைப் போலவே இத்திட்டத்தை ஏற்பவர்கள் எல்லோரும் அகிம்சையில் நம்பிக்கை உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்பதில்லை.”

**டாக்டர் :** அகிம்சையை முக்கியமாகக் கொண்ட வாழ்க்கைச் சித்தாந்தத்தின் அடிப்படையில் அமைந்திருப்பதால், இம்முறையுடன் எவ்விதத் தொடர்பும் கூடாதென்று நினைக்கும் சில கல்வி நிபுணர்களை நான் அறிவேன்.

**காந்திஜி :** எனக்கும் அது தெரியும். கதர் என்னுடைய வாழ்க்கைச் சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், கதரை ஏற்காத சில பிரமுகர்கள் இருப்பதை நான் அறிவேன். ஆனால், அதற்கு நான் என்ன செய்ய முடியும்? உண்மையில் அகிம்சையே இத்திட்டத்தின் ஹிருதயமாகும். அதை நான் எளிதில் ருசுப்பிக்க முடியும். ஆனால், நான் அவ்விதம் செய்தால், அதன் விஷயத்தில் பலருக்கு உற்சாகமே இராது. பசியால் வாடும் கோடிக்கணக்கான மக்கள் நிறைந்த நாட்டில், குழந்தைகளுக்கு இம்முறையைத் தவிர வேறு முறையில் கல்வி புகட்ட முடியாதென்ற உண்மையை, திட்டத்தை ஏற்போர் எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். எனவே, இத்திட்டம் அமலுக்கு வரத் தொடங்கினால், அதன் பலனாக ஒரு புதிய பொருளாதார ஒழுங்கு ஏற்படும். அதுவே எனக்குப் போதுமானது. அது போலவே ஒரு வாழ்க்கை முறையாக இல்லாவிட்டாலும், சுதந்திரத்தைப் பெறுவதற்கான முறையாகவாவது அகிம்சையை காங்கிரஸ்காரர்கள் ஏற்றுக் கொண்டிருப்பது எனக்குப் போதுமானது. இந்தியா பூராவும், அகிம்சையை ஒரு சித்தாந்தமாகவும், வாழ்க்கை முறையாகவும் ஏற்றுக் கொள்ளுமானால், உடனடியாக இந்தியாவில் நாம் குடியரசை ஸ்தாபித்துவிட முடியும்.

**டாக்டர் :** சரி, ஆனால் ஒரே ஒரு விஷயம் எனக்கு இப்போது விளங்கவில்லை. நான் ஒரு சோஷலிஸ்டு. அகிம்சையில் நம்பிக்கையுள்ளவன் என்ற வகையில் இத்திட்டம் எனக்கு மிகவும் பிடித்தமாக இருக்கிறது. ஆனால், சோஷலிஸ் என்ற வகையில், முழு உலகத்துடனும் இணைய வேண்டியவர்களாகவிருக்க, இத்திட்டம் இந்தியாவை உலகிலிருந்து

துண்டித்து அப்பால் கொண்டுபோய்விடும் என்று கருது கிறேன். உலகத்துடன் இணைவதை, சோஷலிஸத்தைப் போல் வேறு எந்தக் கொள்கையும் சாதிக்க முடியாது.

**காந்திஜி :** எனக்கு இதில் சிரமமொன்றுமில்லை. உலகம் பூராவி லிருந்தும் பிரிந்துபோக நாங்கள் விரும்பவில்லை. எல்லா நாடுகளுடனும் சுயேச்சையான பரஸ்பர உறவையே விரும்பு கிறோம்; ஆனால் இப்போதுள்ள கட்டாயமான பரஸ்பர உறவு போக வேண்டும். நாங்கள் சுரண்டப்படுவதை விரும்பவில்லை; வேறு எந்த நாட்டையும் நாங்கள் சுரண்டவும் விரும்பவில்லை. இத்திட்டத்தின் மூலம் எல்லாக் குழந்தைகளையும் உற்பத்தியாளராகச் செய்துவிடலாம் என்று எதிர்பார்க்கிறோம்; அதன் மூலம் நாட்டின் நிலை யையே மாற்றிவிட விரும்புகிறோம். ஏனெனில், அது நமது சமூக அமைப்பு பூராவிலும் ஊடுருவி நிலவும். ஆனால், இதற்கு உலகத்திலிருந்து பிரிந்து தனித்துப் போவதென்று அர்த்தமில்லை. சில பொருள்களை அவர்களால் உற்பத்தி செய்ய இயலாதாகையால், பிறருடன் பண்ட மாற்றுச் செய்து கொள்வதற்கு விரும்பும் நாடுகள் இருக்கக் கூடும்; அப் பண்டங்களுக்காக பிற நாடுகளை நிச்சயம் நம்பி யிருக்கும். ஆனால், அந்நாடுகளுக்குப் பொருள்கள் வழங்கும் நாடுகள் அவற்றைச் சுரண்டலாகாது.

**டாக்டர் :** பிறநாடுகளிலிருந்து எவையும் தேவைப்படாத அள வுக்கு உங்கள் வாழ்க்கையை எளியதாக்கிக் கொண்டு விட்டால், அவர்களிடமிருந்து நீங்கள் ஒதுங்கி நின்றவ ராவீர்கள். ஆனால் நீங்கள் அமெரிக்காவுக்கும் கூட பொறுப் பாளியாக இருக்க வேண்டும் என்பதே எனது விருப்ப மாகும்.

**காந்திஜி :** சுரண்டவும், சுரண்டப்படவும் இடமில்லாதிருந்தால் தான், நாங்கள் அமெரிக்காவுக்குப் பொறுப்பாளிகளாக இருக்க முடியும். ஏனென்றால், அப்போது அமெரிக்கா எங்களுடைய உதாரணத்தைப் பின்பற்றும். அதனால் எங்க ளிடையே சுயேச்சையான பரஸ்பர உறவு ஏற்படுவதில் கஷ்டமிருக்காது.

**டாக்டர் :** ஆனால் நீங்கள் எளிய வாழ்க்கையை விரும்பி, தொழில் மயமாக்குவதை நிறுத்திவிடுவீர்களே.

**காந்திஜி :** 3 கோடி மக்கள் வேலையற்று சோம்பிக் கிடக்கும் நிலையை உண்டாக்காமல் இருந்தால், 3 கோடி மக்களுக்குப் பதிலாக 30,000 மக்களின் உழைப்பைக் கொண்டு என் நாட்டின் தேவைகளையெல்லாம் பெற முடியுமானால், அதைப் பற்றி நான் கவலைப் படமாட்டேன். தொழிலாளர்களின் வேலை நேரத்தில் நாளொன்றுக்கு ஓரிரண்டு மணி அளவு

குறைவதற்கான தொழில் திட்டத்தை சோஷலிஸ்டுகள் கொண்டுவருவார்களென்று எனக்குத் தெரியும். ஆனால் அது எனக்கு வேண்டாம்.

**டாக்டர்:** அப்படியாயின் அவர்களுக்கு ஓய்வு நேரம் இருக்குமே.

**காந்திஜி:** ஹாக்கி விளையாடுவதற்கா ஓய்வு?

**டாக்டர்:** அதற்குமட்டுமல்ல; உதாரணமாக ஆக்கத் திறன் வாய்ந்த கைவினைப் பொருட்களையும் உற்பத்தி செய்வதற்காகத்தான்.

**காந்திஜி:** ஆக்கத்திறன் வாய்ந்த கைவினைப் பொருட்கள் உற்பத்தியில் அவர்கள் ஈடுபட வேண்டுமென்றுதான் நான் கூறுகிறேன். ஆனால், நாள் ஒன்றுக்கு 8 மணிநேரம் தங்கள் கைகளைக் கொண்டு உழைத்து அவர்கள் உற்பத்தி செய்ய வேண்டும்.

**டாக்டர்:** ஒவ்வொரு இல்லத்திலும் ஒரு ரேடியோவும், ஒவ்வொருவருக்கும் ஒரு மோட்டாரும் இருக்கக் கூடிய சமூக அமைப்பு நிலையை நீங்கள் விரும்பவில்லைபோலும். அதுதான் அமெரிக்க ஜனாதிபதி ஹூவரின் திட்டமாகும். அவர் விரும்பியது ஒன்றல்ல; ஒவ்வொருவருக்கும் இரண்டு ரேடியோக்களும், இரண்டு மோட்டார்களும் இருக்க வேண்டும் என்றார்.

**காந்திஜி:** எங்களுக்கு அத்தனை மோட்டார்கள் இருந்தால் நடந்துபோவதற்குக் கொஞ்சமும் இடமிராது.

**டாக்டர்:** நான் அதை ஒப்புக் கொள்கிறேன். எங்கள் நாட்டில் ஆண்டு தோறும் விபத்தினால் 40,000 பேர் உயிர் துறக்கிறார்கள். அதைப் போல மும்மடங்கு மக்கள் உடல் ஊனமடைகிறார்கள்.

**காந்திஜி:** எப்படியும் இந்தியாவிலுள்ள கிராமங்கள் எல்லாவற்றிலும் ரேடியோக்கள் அமைக்கப்படும் காலம் வரையில் நான் ஜீவித்திருக்கப் போவதில்லை.

**டாக்டர்:** அபரிமிதமான சுபிட்சத்திற்குக் காரணமான பொருளாதார நிலை ஏற்பட வேண்டும் என்ற ரீதியில் பண்டித ஜவாஹர்லால் நேரு சிந்திப்பதாகத் தோன்றுகிறதே.

**காந்திஜி:** எனக்குத் தெரிகிறது. அபரிமிதம் என்றால் என்ன? நீங்கள் அமெரிக்காவில் செய்வது போல, லட்சக்கணக்கான டன்கள் கோதுமையை அழிக்கும் திறமையல்ல.

**டாக்டர்:** ஆம், முதலாளித்துவத்தின் சாபத்தீடு அது. இப்போது அவர்கள் அழிப்பதில்லை; கோதுமையை உற்பத்தி செய்யாமலிருப்பதற்காக அவர்கள் விவசாயிகளுக்கு தொகை கொடுக்கிறார்கள்! முட்டைகளின் விலை குறைந்துவிட்ட

தென்பதற்காக, ஒருவர் மீது ஒருவர் முட்டைகளை வீசி விளையாடும் பொழுது போக்கில் மக்கள் ஈடுபட்டனர் !

**காந்திஜி :** அதுதான் நான் வேண்டாமென்று சொல்லுகிறேன். ஒவ்வொருவருக்கும் உணவு அருந்தவும், உடுத்தவும் நிறைய இருப்பதும், அவரவர் மனத்தைப் பக்குவப்படுத்துவதற்குப் போதிய கல்வி கற்பதற்கு வசதி செய்வதும்தான் அபரிமிதம் என்பதற்கு அர்த்தமென்றால் நான் திருப்தி அடைவேன். ஆனால் ஜீர்ணிக்க முடியாதவாறு அதிகமான பொருட்களை வயிற்றில் திணிக்கவும், நான் பலன் தரத்தக்க முறையில் உபயோகிக்கக் கூடாததுமான அதிகப்படிப் பொருட்களை உற்பத்தி செய்யவும் விரும்பமாட்டேன். அதே சமயம் இந்தியாவில் வறுமை, ஏழ்மை, துன்பம், அழுக்கு, புழுதி முதலியவை தாண்டவமாடுவதையும் நான் விரும்பவில்லை.

**டாக்டர் :** ஆனால் நீங்கள் தரித்திர நாராயணனைத் தொழுவதாகவும், வறுமையை வறுமைக்காகவே போற்றுவதாகவும் தமது சுயசரிதையில் பண்டித ஜவாஹர்லால் சொல்லுகிறாரே? "அவர் அவ்விதம் கூறியிருப்பது எனக்குத் தெரியும்" என்று காந்திஜி சிரித்துக்கொண்டே கூறினார் :

—'ஹரிஜன்' - 12—2—1938

# 3
# மதக் கல்வி

முஸ்லிம் நிருபர் ஒருவர் எழுதுகிறார் :—

"வர்தா திட்டம் சம்பந்தமாக, உருது பத்திரிகைகளில் கடந்த நான்கு மாதங்களாக அபிப்பிராயங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. எவரும் அறிக்கையை கவனமாகப் படித்ததாகவோ, அன்றி ஆதாரக் கல்விப் பிரச்னையைக் குறித்து சிந்தனை செய்ததாகவோ தோன்றவில்லை. மூன்று அம்சங்களைக் குறித்தே ஆட்சேபணைகள் எழுந்துள்ளன :

(அ) மத போதனை அடியோடு புறக்கணிக்கப்பட்டுள்ளது.

(ஆ) சிறுவரும், சிறுமியரும் ஒன்றாகச் சேர்ந்து படிக்க வேண்டும்.

(இ) எல்லா மதங்களுக்கும் மரியாதை காட்டும்படி கற்பிக்க வேண்டும்.

இந்த ஆட்சேபணைகள் உருது பத்திரிகைகளிலிருந்து திரட்டப்பட்டவையாகும்."

தனி மதக் கல்வி என்ற முறையில் மத போதனை, திட்டமிட்டே விலக்கப்பட்டுளது. ஒவ்வொரு மதத்திற்கென்றும் போதனைக்கு வகை செய்ய வேண்டியிருக்குமாதலால், அரசாங்க

மதமென்று ஒன்றிருந்தாலன்றி, மதபோதனைக்கு வழி செய்வது மிகக் கடினம், ஏன், இயலாதென்றே கூறலாம். இத்தகைய போதனையை வீட்டில் தருவதுதான் சிறந்தது. வீட்டிலோ அல்லது வேறு விதத்திலோ இத்தகைய போதனை பெறுவதற்கு அரசாங்கம் அவகாசம் தரவேண்டும். பள்ளிக்கூடத்திலுள்ள தங்கள் மதப் பிள்ளைகளுக்கு போதனை தர விரும்பும் மதத்தினர் தனிப்பயிற்சி அளிப்பதற்கு அரசாங்கம் வசதிகள் செய்து கொடுப்பதும் யோசிக்கத் தக்கதுதான். ஆனால், இத்தகைய போதனைக்கான செலவை அந்தந்த மதத்தினரே ஏற்க வேண்டும்.

கூட்டுக் கல்வி (சிறுவர், சிறுமியர் ஒரே வகுப்பில் வாசிப்பது) யைப் பொறுத்தவரையில், ஜாகிர் ஹுஸேன் குழு அதைக் கட்டாயப்படுத்தவில்லை. எங்கு பெண்களுக்குத் தனிப் பள்ளி வேண்டுமென்று கோருகிறார்களோ அங்கு அரசாங்கம் அதற்கான வசதி செய்து தரவேண்டும். கூட்டுக் கல்விப் பிரச்னை எதிர்கால முடிவுக்கு விடப்பட்டுள்ளது. காலப்போக்கிற்குத் தகுந்தபடி அது தானாகவே சரிக்கட்டிக் கொண்டுவிடும். நான் அறிந்த மட்டில், குழு அங்கத்தினர்கள் எல்லோரும் ஒரே மனத்தினராக இருக்கவில்லை. சொந்த முறையில் நான் திறந்த மனத்துடன் இருக்கிறேன். கூட்டுக் கல்விக்கு எதிரிடையாக உள்ளதைப் போலவே, அதற்குச் சாதகமான காரணங்களும் பொருந்துமென்று நான் நினைக்கிறேன். அது எங்கு பரீட்சை செய்யப்பட்டாலும் நான் அதை எதிர்க்க மாட்டேன்.

எல்லா மதங்களுக்கும் சம மதிப்பு அளித்து போதிக்க வேண்டியது அவசியம். இவ்விஷயத்தில் நான் அசைக்க முடியாத கருத்துக் கொண்டவன். அத்தகைய இன்பமான நிலையை நாம் எய்தும் வரையில், பலதரப்பட்ட வகுப்புகளிடையில் உண்மையான ஒற்றுமை உருவாகும் வாய்ப்பு ஏற்படுமென எனக்குத் தோன்றவில்லை. குழந்தைகளுக்கு, அவர்களுடைய மதம் தான் மற்ற மதங்களைவிட உயர்ந்ததென்றோ அல்லது அது ஒன்றே உண்மையான மதம் என்றோ போதிப்பதானால், பல்வேறு மதங்களைச் சேர்ந்த குழந்தைகளிடையில் நட்பு உணர்ச்சி வளருவதற்கு வழியே இராது. இத்தகைய தனி உணர்ச்சி நாட்டில் பரவினால் அதன் தவிர்க்க முடியாத விளைவால் ஒவ்வொரு மதத்துக்கும் தனிப் பள்ளி வைக்கவேண்டிய நிலை வந்துவிடும்; ஒவ்வொன்றும் மற்றொன்றைக் குறை கூறுவதற்கான சுதந்திரம் இருக்கும். இல்லையெனில், மதத்தைப்பற்றிக் குறிப்பிடுவது முற்றிலும் தடை செய்யப்பட வேண்டும். இத்தகைய கொள்கையின் விளைவு மனத்தினால் நினைக்கவும் கூட மிகவும் பயங்கரமாக இருக்கிறது. அடிப்படையான ஒழுக்க சீலங்கள் எல்லா மதங்களுக்கும் பொதுவானவை. குழந்தைகளுக்கு இதையெல்லாம் அவசியம் போதிக்க வேண்டும். வர்தா திட்டத்தின் கீழ் வரும் பள்ளிகளைப் பொறுத்தமட்டில், இதை போதுமான மதபோதனையாகக் கருத வேண்டும்.

—'ஹரிஜன்' - 16—7—1938

# 4

# சிக்கல்களைத் தீர்த்தல்

*பிரதிநிதிகள் காந்திஜியிடம் பல கேள்விகள் கேட்டனர். ஆதாரக் கல்வித் திட்டம் காலத்தின் சோதனைக்கெல்லாம் ஈடு கொடுத்து நிலைக்கக் கூடியதா? அல்லது தற்காலிக நிலையைச் சமாளிப்பதற்கான திட்டம் மட்டும்தானா? இவ்வாறு முதல் கேள்வியில் சந்தேகம் எழுப்பப்பட்டது. "இன்றோ அல்லது பின்னரோ கைத்தொழில்கள் முழுத் தொழில் மயமான நிலைக்கு இடங்கொடுக்க வேண்டியிருக்குமென்று பல பிரபல கல்வி நிபுணர்கள் தங்களுடைய கருத்தைத் தெரிவித்தனர். ஆதாரக் கல்வித் திட்டத்தின் கீழ் கல்வி கற்றதும், நீதி, சத்தியம், அகிம்சை அடிப்படையில் அமைந்ததுமான சமூகம், தொழில் மய யாகும் முறையில் கடுமையான நிர்ப்பந்தத்திலிருந்து தப்பிப் பிழைக்க முடியுமா?"*

**காந்திஜி அளித்த பதில் :** *இது காரியானுபவத்தை யொட்டிய கேள்வியல்ல. இது நமது உடனடியான வேலைத்திட்டத்தை பாதிப்பதல்ல. பல தலைமுறைகளுக்குப் பின் என்ன நடக்கு மென்பது, நம் எதிரில் உள்ள பிரச்னையன்று. நமது கிரா மங்களில் வசிக்கும் லட்சக்கணக்கான மக்களின் உண்மை யான தேவைகளைப் பூர்த்தி செய்வதாக இந்த ஆதாரக் கல்வித் திட்டம் இருக்கிறதா என்பதே பிரச்னை. ஒரு கிரா மம்கூட இல்லாத அளவுக்கு இந்தியா தொழில் மயமாகிவிடு மென்று நான் நினைக்கவில்லை. இந்தியாவில் கணிசமான பாகம் எப்போதும் கிராமங்கள் அடங்கியதாகவே இருக்கும்.*

**கேள்வி :** *சமீபத்தில் காங்கிரஸ் அக்கிராசனர் தேர்தலின் பலனாக காங்கிரஸ் கொள்கை மாறுமானால், ஆதாரக் கல்வித் திட்டத்துக்கு என்ன நேரிடும்?*

**பதில் :** *இந்தத் தவறான பீதிக்கு ஆதாரம் இல்லை. காங்கிரஸ் கொள்கையில் மாறுதல் ஏற்படுமாயின் அது ஆதாரக் கல்வித் திட்டத்தை எவ்விதத்திலும் பாதிக்காது. எதையாவது அது பாதிப்பதாக இருந்தால், உயர்தர அரசியலை மட்டுமே பாதிக்கும். நீங்கள் திரும்பியபின் ஆதாரக் கல்வி முறைப்படி உங்கள் மாணவர்களுக்குக் கற்றுத் தர இயலும் பொருட்டு, இங்கு 3 வாரம் பயிற்சி பெறுவதற்காக வந்திருக்கிறீர்கள். அதன் உத்தேச நோக்கத்தை நிறைவேற்றக் கூடிய முறை இது என்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்க வேண்டும்.*

*நாட்டைத் தொழில் மயமாக்குவதற்கான திட்டங்கள் முன்னால் வைக்கப்பட்ட போதிலும், இன்று காங்கிரஸ் அதன் முன்வைத்துக் கொண்டுள்ள லட்சியம், நாட்டைத் தொழில் மய மாக்குவதல்ல. பம்பாயில் தேசீய காங்கிரஸ் நிறைவேற்றிய*

தீர்மானத்திற்கேற்ப, கிராமக் கைத்தொழில்களைப் புதுப்பிப்பதே அதன் லட்சியமாகும். விவசாயியின் முன்னிலையில் நீங்கள் வைக்கக்கூடிய எந்த விரிவான, தொழில் மயமான திட்டத்தின் வாயிலாகவும் பொதுஜன எழுச்சியை நீங்கள் பெற முடியாது. அதனால், அவர்களுடைய வருமானத்தில் சல்லிக் காசுகூட சேராது. அதற்கு மாருக அ. இ. நூற்போர் சங்கமும், அ. இ. கிராமக் கைத்தொழில் சங்கமும் ஒருவருட காலத்திற்குள் அவர்களுடைய பெட்டிகளில் லட்சக்கணக்கான தொகையை நிரப்பி விடும். காரியக் கமிட்டிக்கோ, அன்றி மந்திரி சபைகளுக்கோ என்ன நேர்ந்தாலும் சரி, காங்கிரஸின் ஆக்க வேலைத் திட்டங்களுக்கு எவ்வித அபாயத்தையும் நான் எதிர்பார்க்கவில்லை. அவற்றை காங்கிரஸ் ஆரம்பித்தது என்ருலும், அவை நெடுநாளாக சுயேச்சையாக இருந்துவருபவை; அவை தங்களுடைய தகுதியைப் பூரணமாக நிரூபித்துள்ளன. ஆதாரக் கல்வித் திட்டம் இதிலிருந்து பிறந்ததே. கல்வி மந்திரிகள் மாறலாம்; இது நிரந்தரமாக இருந்து கொண்டிருக்கும். ஆகையால், ஆதாரக் கல்வியில் அக்கறை உள்ளவர்கள் காங்கிரஸ் அரசியல் குறித்து கவலைப்பட வேண்டியதில்லை. புதுக் கல்வித் திட்டம் அதன் சொந்தத் தகுதியால் வாழும்; இல்லையெனில் தகுதியின்மையால் சாகும்.

ஆனுல், இக்கேள்விகள் எனக்குத் திருப்தியளிக்கவில்லை. அவை ஆதாரக் கல்வித் திட்டத்துடன் தொடர்புள்ள நேரடியான கேள்விகள் அல்ல. அவை நம்மை முன்னேற்றப் பாதையில் கொண்டுபோகக் கூடியவையல்ல. அத்திட்டத்துடன் நேரடியான தொடர்புள்ள கேள்விகளை நீங்கள் கேட்கவேண்டுமென்று விரும்புகிறேன்; அப்போதுதான் நான் என்னுடைய அனுபவ பூர்வமான ஆலோசனையைக் கூறமுடியும்.

## 5

# அடிப்படையான கருத்து

கூட்டத்திற்குப் புறப்படுமுன், நண்பர் ஒருவர் காந்திஜியிடம் ஒரு கேள்வி கேட்டார். "தக்ளியுடன் சம்பந்தமில்லாத எந்த வார்த்தையையும் மாணவர்களுக்கு ஆசிரியர்கள் சொல்லக் கூடாதென்பது இத்திட்டத்தின் அடிப்படையான கருத்தா" என்று கேட்டார். இக் கேள்விக்கு பொதுக்கூட்டத்தில் காந்திஜி பதிலளித்தார். அப்போது அவர் கூறியதாவது :

"இவ்விதம் கேட்பது என்னை அவதூறு செய்வதாகும். ஏதாவதொரு அடிப்படைக் கைத் தொழிலுடன் போதனை முழுவதும் சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமென்று நான் சொன்னேன்.

இது உண்மைதான். 7 அல்லது 10 வயதுக் குழந்தைக்கு கைத் தொழிலை போதனை முறையாகக் கொண்டு அறிவூட்டும் போது, ஆரம்பத்தில் கைத் தொழிலுடன் சம்பந்தப்படுத்த முடியாத விஷயங்களையெல்லாம் விட்டுவிட வேண்டும். நாளுக்கு நாள் இம்மாதிரி செய்து கொண்டே போகும்போது, ஆரம்பத்தில் நீங்கள் விலக்கிய பல விஷயங்களை கைத்தொழிலுடன் சம்பந்தப்படுத்துவதற்கான வழி முறைகளை நீங்கள் கண்டுபிடிப்பீர்கள். ஆரம்பத்தில் இவ்விதம் விலக்கிவைக்கும் முறையைப் பின்பற்றி உங்களுடையதும், மாணவர்களுடையதுமான சக்தியை வீணுக்காமல் பாதுகாப்பீர்கள். இன்று நம்மிடம் பின்பற்றுவதற்குரிய நூல்கள் இல்லை; நமக்கு வழி காட்டுவதற்குரிய முன் சம்பிரதாயங்களும் இல்லை. ஆகையால் நாம் மெதுவாகவே செல்ல வேண்டும். ஆசிரியர்கள் எப்போதும் உள்ளம் சோர்வின்றி சுறுசுறுப்பாக இருந்துவர வேண்டும்; இதுதான் முதல் விஷயம். கைத் தொழிலுடன் சம்பந்தப்படுத்த இயலாதது ஏதேனும் குறுக்கிட்டால், அதற்காக சலித்து சோர்வடைந்துவிடக்கூடாது. நீங்கள் சம்பந்தப்படுத்த இயன்ற பாடங்களைக் கொண்டு மேலே செல்ல வேண்டும். மற்றொரு ஆசிரியர் சரியான வழியைக் கண்டு பிடித்து, அதை எப்படி சம்பந்தப்படுத்தலாம் என்பதை எடுத்துக்காட்ட நேரிடலாம். இவ்விதம் பலருடைய அனுபவங்களை எல்லாம் நீங்கள் ஒன்றுகத் திரட்டியபின், உங்களுக்கு வழி காட்டக்கூடிய நூல்கள் வரும். அதன் பின், உங்களைப் பின்பற்றுவோருடைய வேலை சுலபமாகிவிடும்.

"இந்த விலக்கல் முறையை வைத்துக்கொண்டு எவ்வளவு காலம் தள்ளுவது என்று நீங்கள் கேட்கலாம். 'வாழ் நாள் முழுவதும்' என்று நான் பதில் அளிப்பேன். கடைசியில் நீங்கள் முதலில் விலக்கிய பல விஷயங்கள் சேர்ந்து விட்டதைக் காண்பீர்கள்; சேர்க்கத் தகுதி வாய்ந்த எல்லாம் அநேகமாக சேர்ந்து விட்டதையும் காண்பீர்கள்; நீங்கள் கடைசிவரை விலக்க வேண்டியிருந்தவை யெல்லாம் மிகவும் மேலெழுந்தவாரியானவை, அற்பமானவை, விலக்கத் தக்கவை என்பதையும் காண்பீர்கள், இது என்னுடைய வாழ்க்கை அனுபவமாகும். நான் பல விஷயங்களைத் தவிர்க்காமல் இருந்திருந்தால், நான் செய்துள்ள பல காரியங்களை என்னுல் செய்திருக்கவே முடியாது.

"நமது கல்வியைப் புரட்சிகரமானதாக்கியே தீர வேண்டும். கைகள் மூலம் நமது மூளை கல்வி பெறவேண்டும். நான் கவியாக இருந்தால், இந்த ஐந்து விரல்களால் இயற்றக்கூடியதைப் பற்றி கவிதை எழுதியிருப்பேன். மூளைதான் எல்லாம், கைகால்கள் ஒன்றுமில்லை என்று ஏன் நினைக்க வேண்டும்? கைகளுக்குப் பயிற்சி தராதவர்கள், சாதாரண கல்வியின் தேய்ந்த பாட்டையில் போகிறவர்கள். தங்கள் வாழ்க்கையின் 'சங்கீதத்தை' இழந்தவர்கள். அவர்களுடைய அறிவாற்றல்கள் முழுவதும் பயிற்சி பெறுவதில்லை. அதன் முழு கவனத்தையும் ஈர்க்கும் வகையில், வெறும் புத்தக அறிவு மாத்திரம் குழந்தைக்குச் சுவை

யூட்டுவதில்லை. வெறும் சொற்களால் மூளைக்கு அலுப்பு ஏற்பட்டு விடுகிறது. அதனால் குழந்தையின் மனம் சுற்றித் திரிய ஆரம்பித்துவிடுகிறது. கைகள் இயற்றக் கூடாதவற்றைச் செய்கின்றன; கண்கள் காணத் தகாததைக் காண்கின்றன; செவிகள் கேட்கக் கூடாததைக் கேட்கின்றன. அவை எதைச் செய்தாக வேண்டுமோ, அதை அவை செய்வதில்லை, காண்பதில்லை, கேட்பதில்லை. சரியானதைத் தேர்ந்தெடுக்க அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கவில்லை. அதனால் அவர்கள் பெற்ற கல்வி பெரும்பாலும் அவர்கள் பாழாவதற்குக் காரணமாகிவிடுகிறது. நல்லது எது, கெட்டது எது என்று பாகுபடுத்தவும், நல்லதை ஏற்று, கெட்டதை விலக்கவும் நமக்குப் போதிக்காத கல்வி, கல்வி என்ற பெயருக்குத் தகுதியற்றதாகும்.

## கைகளின் மூலம் மனத்திற்குப் பயிற்சி

கைகளைக்கொண்டு மனத்துக்கு எப்படி பயிற்சி அளிப்பது என்பதை விளக்கும்படி, காந்திஜியிடம் ஸ்ரீமதி ஆஷாதேவி கேட்டார்.

காந்திஜி பதிலளிக்கையில் கூறியதாவது: "பள்ளிக்கூடங்களில் பின்பற்றப்படும் சாதாரணக் கல்வி முறையுடன் ஒரு கைத்தொழிலைச் சேர்க்க வேண்டும் என்பதே பழைய எண்ணமாகும். கல்வியிலிருந்து முற்றிலும் தனியாகக் கைத்தொழிலை எடுத்துக்கொள்வதே அதன் பொருள். நான் அதை ஒரு பெரும் தவறு என்றே நினைக்கிறேன். ஆசிரியர் கைத்தொழிலைக் கற்றுக் கொள்ள வேண்டும்; தன்னுடைய அறிவை அக் கைத்தொழிலுடன் இணக்கமாக அமைக்க வேண்டும்; இவ்வகையில் அவர் தேர்ந்தெடுத்த குறிப்பிட்ட கைத்தொழிலை போதனை முறையாகக் கொண்டு, மாணவர்களுக்குத் தன்னுடைய அறிவையெல்லாம் புகட்டுவார்.

"இதற்கு நூற்பதை உதாரணமாக வைத்துக்கொள்ளலாம். எனக்கு கணக்குத் தெரிந்தாலன்றி, தக்ளியில் நான் எவ்வளவு கஜம் நூல் நூற்றேன் அல்லது அது எத்தனை சுற்றுகள் ஆகும் அல்லது நான் நூற்ற நூலின் எண் என்ன என்பதையெல்லாம் நான் அறிவிக்க முடியாது. இவ்வாறு செய்வதற்கு நான் எண்களைக் கற்றுக்கொள்ள வேண்டும். மேலும் அதனுடன் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகியவற்றையும் கற்றுக்கொள்ள வேண்டும். சிக்கலான கணக்குகளைப் போடுவதற்கு "குறி எழுத்துக்களை" பயன்படுத்த வேண்டும்; அதன் பயனாக நான் அட்சர கணிதத்தையும் கற்றுக்கொண்டவனாகிறேன். இதிலும் கூட, ரோமன் எண்களுக்குப் பதிலாக ஹிந்துஸ்தானி எண்களை உபயோகிப்பதையே வற்புறுத்துவேன்.

"அதற்கு அடுத்தபடியாக க்ஷேத்திர கணிதத்தை எடுத்துக் கொள்ளலாம். தக்ளியின் சக்கரத்தைவிட, வட்டத்தைப் பற்றிய விவரங்களைக் கற்றுக்கொடுப்பதற்கு வேறு சிறந்தது என்ன

இருக்க முடியும்? யூக்ளிடின்* பெயரைச் சொல்லாமலேயேகூட, இவ்விதத்தில் வட்டத்தைப் பற்றிய எல்லாவற்றையும் நான் போதிக்க முடியும்.

"மறுபடியும், நூற்பதன் மூலம் பூகோளத்தையும், சரித்திரத்தையும் எப்படி என் குழந்தைக்குக் கற்றுத்தர முடியும் என்று நீங்கள் கேட்கலாம். சிறிது காலத்துக்கு முன் "பருத்தி மனித குலத்தின் கதை" என்ற நூலொன்றை நான் காண நேர்ந்தது. அதைப் படித்தபோது எனக்குப் புல்லரித்தது. அது ஓர் அற்புதமான கற்பனைக் கதையைப் போல் இருந்தது. பண்டைக்கால வரலாற்றுடன் அது ஆரம்பித்தது. பருத்தி முதலில் எப்போது பயிரிடப்பட்டது; எப்படி பயிரிடப்பட்டது; அதன் அபிவிருத்தியின் பல நிலைகள்; பலதரப்பட்ட நாடுகளிடையில் நடந்த பருத்தி வியாபாரம் ஆகியவற்றையெல்லாம் அந்த நூல் எடுத்துரைத்தது. பலதரப்பட்ட நாடுகளைப் பற்றிக் குழந்தைகளிடம் நான் குறிப்பிடும்போது, அந்நாடுகளின் வரலாறு, பூகோளம் முதலியவற்றை யெல்லாம் அவனுக்கு நான் எடுத்துரைப்பேன். பல்வேறு காலங்களில், யார் யாருடைய அரசாட்சியின் போது பல்வேறு வர்த்தக ஒப்பந்தங்கள் கையெழுத்தாயின? சில நாடுகள் பருத்தியும், சில நாடுகள் துணியும் இறக்குமதி செய்வதேன்? ஒவ்வொரு நாடும் தனக்குத் தேவையான பருத்தியை ஏன் சாகுபடி செய்துகொள்ள முடியாது? இது என்னை பொருளாதாரத்துக்கும், விவசாயத்தின் அடிப்படைகளுக்கும் கொண்டுபோய்விடும். பல்வேறு பருத்தி வகைகள், அவை விளையக்கூடிய மண்களின் தன்மை, அவற்றைப் பயிரிடும் முறை, அவற்றை எங்கிருந்து பெறுவது முதலியவற்றை யெல்லாம் அவன் தெரிந்துகொள்ளும் வண்ணம் நான் போதிப்பேன். இவ்விதமாக தக்ளியில் நூற்பது, என்னை கிழக்கிந்தியா கம்பெனி வரலாறு முழுவதையும் விவரிக்கும்படி செய்துவிடும். அவர்களை இங்கு கொணர்ந்தது யார்? அவர்கள் எவ்விதம் நம்முடைய நூற்புத் தொழிலை அழித்தார்கள்? இந்தியாவுக்கு அவர்களை வரச் செய்த பொருளாதார நோக்கம், பின்பு எப்படி அரசியல் ஆசை கொள்ளும்படி செய்தது? மொகலாயர், மராத்தியர் வீழ்ச்சிக்கும், ஆங்கிலேயர் ஆட்சி நிலைபெறுவதற்கும் இது எவ்விதம் காரணம் ஆகியது? பின்பு, நம் காலத்தில் எவ்விதம் பொதுஜன எழுச்சி உண்டாகியது? இவ்விதமாக புதுத் திட்டத்தின் கீழ் அளிக்கக்கூடிய கல்வியின் சாத்தியக் கூறுகளுக்கு முடிவே இல்லை. குழந்தையின் மனத்தையும் ஞாபக சக்தியையும் அனாவசியமாக வாட்டாமல், எவ்வளவு விரைவில் குழந்தை எல்லாவற்றையும் கற்றுக் கொள்ளும்?

"இக்கருத்தை இன்னும் விரிவாக எடுத்துரைக்கிறேன். நல்ல உயிரியல் நிபுணனாக வேண்டுமானால், உயிரியல் விஞ்ஞானி

---

* யூக்ளிட், கிரேக்க நாட்டில் பிறந்த கணித மேதை. அவர் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். குறிப்பாக, க்ஷேத்திர கணிதத்தில் அவர் உலக மேதையாகத் திகழ்ந்தார்.

உயிரியல் விஞ்ஞானத்தைத் தவிர இன்னும் பல விஞ்ஞானங்களைக் கற்க வேண்டியிருப்பது போலவே, ஆதாரக் கல்வியும், விஞ்ஞான முறையாகக் கருதப்படுமானல் முடிவில்லாத கல்வி முறைகளில் நம்மைக் கொண்டு செல்லும். தக்ளி உதாரணத்தை மேலும் சற்று விஸ்தரிப்போம். ஆசிரியராவதற்குப் பயிற்சி பெறும் மாணவர், நூற்புக் கலையின் யந்திரவியல் முறையில் புலமைபெற வேண்டியது அவசியமே. யந்திரவியல் முறையில் மட்டும் கவனத்தையெல்லாம் செலுத்துவதுடன், அதன் உணர்வியல் அம்சத்திலும் கவனம் செலுத்துவாராயின், தக்ளியிலும், அதன் பல்வேறு அம்சங்களிலும் அவரது முழு கவனமும் செல்லும். தக்ளி ஏன் பித்தளை வட்டமும், உருக்குக் கதிரும் கொண்டதாக இருக்க வேண்டுமென்று அவர் தம்மைத் தாமே கேட்டுக்கொள்வார். பழைய தக்ளியில் எப்படியோ வட்டம் செய்யப்பட்டிருந்தது. அதைவிட பூர்விகமான தக்ளி மரத்திலான கதிரில் மாக்கல் அல்லது களிமண் வட்டம் செருகியதாக இருக்கும். தக்ளி விஞ்ஞான ரீதியில் அபிவிருத்தி செய்யப்பட்டுள்ளது. எனவே, பித்தளையில் வட்டமும், உருக்கிலல் கதிரும் செய்வதற்கான காரணமும் உண்டு. அக்காரணத்தை ஆசிரியர்-பயிற்சி மாணவர் கண்டுகொள்ள வேண்டும். வட்டத்தின் விட்டம் எதற்காக ஒரு குறிப்பிட்ட அளவில் அமைய வேண்டும்? சற்று அதிகமாகவும் சற்றுக் குறைவாகவும் இல்லாமல் குறித்த அளவில் இருப்பதேன்? ஆசிரியர் இக்கேள்வியை எழுப்ப வேண்டும். இக்கேள்விக்குத் திருப்திகரமான பதில்களை அறிந்து அதன் கணிதத்தையெல்லாம் கண்டு கொண்டபின், பயிற்சி பெறும் ஆசிரியர்-மாணவர் நல்ல இஞ்சினீர் ஆகிவிடுகிறுர். தக்ளி அவருடைய காமதேனு ஆகிவிடுகிறது, அதாவது, அவர் விரும்பியதையெல்லாம் கொடுக்கும் பசுவாகிவிடுகிறது. இப்போதனை முறையின்மூலம் புகட்டக்கூடிய அறிவின் சாத்தியக் கூறுகளுக்கு எல்லையே இல்லை. நீங்கள் எந்த அளவு சக்தி, நம்பிக்கையுடன் பணி புரிகிறீர்களோ அதுதான் அவற்றிற்கு எல்லையாகும். நீங்கள் இங்கு மூன்று வாரங்களாக இருந்து வருகிறீர்கள். இத் திட்டத்தை நீங்கள் முழு மனத்துடன் ஏற்றுக்கொண்டிருப்பீர்களாயின், "இதைச் செய்வேன், இல்லையேல் சாவேன்" என்று உங்களுக்குள் நீங்கள் சொல்லிக்கொள்ள வேண்டும். அவ்விதமாயின் நீங்கள் இக்காலத்தை உபயோகமான முறையில் கழித்தவராவீர்கள்.

"எனக்கு இதைப்பற்றி நன்கு தெரியுமாதலால், நூற்பு உதாரணத்தை நான் விரிவாகச் சொல்கிறேன். நான் ஒரு தச்சனுக இருந்தால், தச்சு வேலை மூலம் இதையெல்லாம் என் குழந்தைக்குக் கற்றுத் தருவேன்; அல்லது அட்டைக் கலைஞனுகில் அட்டை வேலை மூலம் இதை யெல்லாம் புகட்டுவேன்.

"கற்பனைத் திறனுள்ளவர்களும், உண்மையான ஆர்வத்திஞல் தூண்டப்பெற்றவர்களும், தங்கள் மாணவர்களுக்குத் தாங்கள் போதிக்கப் போவதென்ன என்பதை நாளுக்கு நாள் சிந்தனை

செய்பவர்களுமான கல்விமான்கள்தான் நமக்குத் தேவை. இத்தகைய அறிவை பிரம்மாண்டமான புத்தகங்களிலிருந்து ஆசிரியர் பெற முடியாது. ஆசிரியர் தம் சொந்த அனுபவம், சிந்தனை ஆகியவற்றைப் பயன்படுத்தி, கைத்தொழிலின் உதவி கொண்டு தன் வாயினால் குழந்தைகளுக்கு அறிவு புகட்ட வேண்டும். இத்தகைய போதனா முறைக்கு, 'ஒரு புரட்சி ஆசிரியரின் மனப்போக்கில் ஒரு புரட்சி' என்பதே பொருள். இதுவரை பள்ளித் தணிக்கையாளரின் அறிக்கையே உங்களுக்கு வழி காட்டியாக இருந்துவந்துள்ளது. உங்கள் பள்ளிக்கு அதிகப் பணம் கிடைக்கக் கூடும் அல்லது உங்களுக்கே உயர்ந்த ஊதியம் கிடைக்கக்கூடும் என்பதற்காக, தணிக்கையாளர் விரும்பக் கூடியதை நீங்கள் செய்ய வேண்டுமென்று இருந்தீர்கள். ஆனால் புது ஆசிரியர் அதையெல்லாம் கவனிக்கமாட்டார். 'என் மாணவனைச் சிறந்த மனிதனாக நான் ஆக்கியிருந்தேனாயின், அவனுக்கு நான் செய்ய வேண்டிய கடமையை ஆற்றியவனாவேன்; அவ்விதம் செய்வதில் என்னுடைய ஆற்றல்களையெல்லாம் பயன்படுத்தி யுள்ளேன். எனக்கு அதுவே போதும்' என்று புது ஆசிரியர் கூறுவர்.

—'ஹரிஜன்'–18—2—1939

## 6

# கைத்தொழில் மூலம் ஆசிரியர் பயிற்சி

**கேள்வி :** ஆசிரியர்களான மாணவர்களுக்குப் பயிற்சியளிப் பதில் அவர்களுக்கு முதலில் தனியாக கைத்தொழிலைக் கற்றுக் கொடுத்துவிட்டு, பிறகு அக் கைத்தொழில் வாயிலாக போதனை செய்யும் முறையைச் சிறந்த ஆதாரத்தின் மீது சொல்லித்தருவது சிறந்ததல்லவா ? இப்போது, தங்களை ஏழு வயதுக் குழந்தையாக பாவித்துக் கொண்டு, கைத் தொழில் மூலம் கற்றதையே திரும்பக் கற்றுக் கொள்ளுமாறு ஆலோசனை கூறப்படுகிறது. இவ்வழியில் புதுத்தொழில் நுணுக்க முறையில் புலமை பெற்று, திறமை வாய்ந்த ஆசிரியர் ஆவதற்கு பல ஆண்டுகள் பிடிக்கும்.

**பதில் :** இல்லை, அதற்கு பல வருட காலம் ஆகாது. என்னிடம் வரும்போது ஆசிரியருக்கு நடை முறைக்குப் போதுமான அளவுக்கு கணக்கு, சரித்திரம், மற்ற பாடங்கள் பற்றிய அறிவு இருப்பதாக வைத்துக் கொள்வோம். அட்டைப் பெட்டிகளைச் செய்வதற்கோ அல்லது நூற்பதற்கோ நான் கற்றுத் தருகிறேன். அவர் அதில் ஈடுபடும்போது, குறிப் பிட்ட கைத்தொழில் மூலம் கணிதம், சரித்திரம், பூகோளம் முதலியவற்றைப் பற்றிய அறிவை அவர் எவ்விதம் பெற்றி

ருக்க இயலும் என்பதை அவருக்குக் காட்டுவேன். இவ்வண்ணம் தம்முடைய அறிவைக் கைத்தொழிலுடன் இணைப்பதற்கு அவர் கற்றுக் கொள்ளுகிறார். அவர் இதைப் பெறுவதற்கு நெடுநாள் ஆகாது. மற்றொரு உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடைய 7 வயது மகனுடன் நான் ஆதாரப் பள்ளிக்குப் போகிறேன். இருவரும் நூற்கக் கற்றுக் கொள்ளுகிறோம். அப்போது நான் ஏற்கனவே பெற்ற அறிவையெல்லாம் நூற்பதுடன் பிணைத்துக் கொள் கிறேன். பையனுக்கு எல்லாம் புதிது. எழுபது வயதான தந்தைக்கு எல்லாம் மறுபாடம்தான்; ஆயினும் அவரது பழைய அறிவை புதுச் சூழ்நிலைக்கு இணக்கமாக மாற்றிக் கொள்ள வேண்டும். இம்முறைக்குத் தம்மைத் தயார் செய்து கொள்ள அவருக்குச் சில வாரங்களுக்கு மேல் ஆகாது. இவ்வகையில், எட்டு வயதுக் குழந்தைக்குரிய இயல்பையும், அறிந்து கொள்ள வேண்டுமென்ற அக்கறையையும் ஆசிரியர் வளர்த்துக் கொண்டாலன்றி, அவர் வெற்று யந்திரம் போல் நூற்பவராக இருப்பதில் போய் முடியும். அதன் விளைவாக, அவர் புது முறைக்குப் பொருத்த மற்றவராகிவிடுவார்.

**கேள்வி :** மெட்ரிகுலேஷன் தேறிய சிறுவன், விரும்பும் பட்சத்தில் கல்லூரியில் போய்ச் சேர முடியும். ஆதாரக் கல்விப் பாடத் திட்டத்தைப் பெற்ற சிறுவனும் அதே போல் கல்லூரியில் சேர முடியுமா ?

**பதில் :** மெட்ரிகுலேஷன் தேறிய சிறுவனுக்கும், ஆதாரக் கல்வி பெற்றவனுக்குமிடையில் வேற்றுமை உண்டு. ஆதாரக் கல்வி பெற்றவன் தன்னுடைய கெட்டிக்காரத்தனத்தைச் சிறப்பாகக் காட்டுவான் ; ஏனெனில், அவனது ஆற்றல்கள் வளம் பெற்றவை. மெட்ரிகுலேஷன் மாணவன் சாதாரணமாக இருப்பது போல, ஆதாரக் கல்வி பெற்ற மாணவன் கல்லூரிக்குப் போனதும் ஒன்றும் தெரியாதவனாக இருக்கமாட்டான்.

**கேள்வி :** ஆதாரக் கல்விப் பள்ளியில் சேருவதற்கு குறைந்த பட்ச வயது ஏழு என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அது வருடத்தை அடிப்படையாகக் கொண்ட வயதாக இருக்க வேண்டுமா ? அல்லது மன வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட வயதாக இருக்க வேண்டுமா ?

**பதில் :** சராசரி குறைந்த பட்ச வயது ஏழாக இருக்க வேண்டும். ஆனால் சில குழந்தைகள் அதிக வயதினராக இருக்கலாம் ; சிலர் குறைந்த வயதினராக இருக்கலாம். உடல் சம்பந்தமான வயது, வளர்ச்சி சம்பந்தமான வயது என்று இருப்பதையும் கவனிக்க வேண்டும். ஏழு வயதில் ஒரு குழந்தை போதுமான உடல் வளம் பெற்றிருக்கலாம். அதனால் அது

கைத்தொழிலை மேற்கொள்ளக் கூடியதாக இருக்கும். மற்றொரு குழந்தை எட்டு வயதாகியும் கூட அவ்வாறு செய்ய இயலாமல் இருக்கலாம். ஆகையால், இதில் எவரும் கண்டிப்பான விதியை வகுக்க முடியாது. எல்லா அம்சங்களையும் ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும்.

உங்களில் பெரும்பாலோருக்கு சந்தேகங்கள் நிறைய இருப்பதை இக் கேள்விகள் காட்டுகின்றன. பணியில் புகுவதற்கு இது தவறான வழியாகும். நமது கோடிக்கணக்கான குழந்தைகளுக்கு வாழ்க்கைக்குரிய பயற்சியளிக்கத் தேவையானது, ஆதாரக் கல்வியில் உள்ள நம்பிக்கைதான். எனக்கிருப்பதைப் போலவே உங்களுக்கும் அத்தகைய நம்பிக்கை இருந்தால், உங்கள் பணி வளர்ச்சி பெறும். உங்களுக்கு அத்தகைய நம்பிக்கை இல்லையெனில், உங்களுக்குப் பயிற்சி யளித்தவர்பால் ஏதோ குறை இருக்கவேண்டும். உங்களுக்கு அவர்கள் எதைக் கற்பித்திருந்தாலும், கற்பிக்காவிட்டாலும், இந்த நம்பிக்கை உங்களுக்கு ஏற்படும்படி செய்திருக்க வேண்டும்.

# 7
# சில புதிர்கள்

**கேள்வி :** ஆதாரக் கல்வித் திட்டம் கிராம வாசிகளுக்கு என்று சொல்லப்படுகிறது. நகரவாசிகளுக்கு விமோசனமே கிடையாதா? அவர்கள் தேய்ந்துபோன பழைய வழியிலேயே போய்க் கொண்டிருக்க வேண்டியதுதானா ?

**பதில் :** இது பொருத்தமான கேள்வி, நல்ல கேள்வியும் கூட. இதற்கு நான் முன்னமே 'ஹரிஜன்' பத்திரிகையில் பதில் அளித்திருக்கிறேன். போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து. இப்போதே நம்முடைய கவளம் விழுங்க முடியாததாக இருக்கிறது. ஏழு லட்சம் கிராமங்களின் கல்விப் பிரச்னைக்குத் தீர்வு காண முடிந்தாலே இப்போதைக்குப் போதுமானது. கல்விமான்கள் நகரங்களைப் பற்றியும் சிந்திக்கிறார்கள் ; இதில் சந்தேகமில்லை. கிராமங்களுடன் கூடவே, நகரப் பிரச்னையையும் எடுத்துக் கொள்வதென்றால், நமது சக்திகள் சிதறுண்டுவிடும்.

**கேள்வி :** ஒரு கிராமத்தில் மூன்று பள்ளிகள் இருப்பதாகவும் அவை ஒவ்வொன்றும் வெவ்வேறு தொழிலை போதிப்பதாகவும் வைத்துக் கொள்ளலாம்; ஒன்றைவிட மற்றொன்றில் கல்வியறிவுக்கான வாய்ப்பு அதிகமாக இருக்கும். இவற்றில் எந்தப் பள்ளிக்குக் குழந்தை போகவேண்டும்?

**பதில் :** *தேவையைக் காட்டிலும் அதிகப்படியான இம்மாதிரி நிலை இருக்கலாகாது. ஒரு பள்ளிக்கு மேல் வைத்துக் கொள்ள இயலாதபடி பெரும்பாலான கிராமங்கள் மிகச் சிறியவை. ஆயினும், பெரிய கிராமங்களில் ஒரு பள்ளிக்கு மேல் இருக்கக்கூடும். இங்கு இரண்டு பள்ளிகளிலும் ஒரே கைத்தொழிலையே போதிக்க வேண்டும், ஆயினும், இதில் நான் திட்டவட்டமான விதி எதையும் ஏற்படுத்தக் கூடாது. இம்மாதிரி விஷயங்களில் அனுபவம்தான் சரியான வழி காட்டியாகும். செல்வாக்குடன் விளங்கக்கூடிய தகுதி எந்தெந்தத் தொழிலுக்கு உண்டு? மாணவரின் அறிவாற்றல்களை வெளிக்கொணரவல்ல சக்தி எந்தெந்தத் தொழிலுக்கு உண்டு? இதையெல்லாம் ஆராய வேண்டும். நீங்கள் தேர்ந்தெடுக்கும் கைத்தொழில் யாதாயினும், அது குழந்தையின் அறிவாற்றல்களை முழு அளவுக்கும் வெளிக்கொணரக் கூடியதாக இருக்க வேண்டும். அது கிராமக் கைத்தொழிலாக இருப்பதுடன், உபயோகமானதாகவும் அமைய வேண்டும்.*

**கேள்வி :** *குழந்தையின் உண்மையான தொழில் வேறு ஏதோ ஒன்று இருக்க நேரிடும். அப்படியிருக்க, ஒரு கைத்தொழிலைக் கற்பதில் குழந்தை எதற்காக ஏழு ஆண்டுகளை வீணடிக்க வேண்டும்? உதாரணமாக, ஒரு பாங்கரின் மகன் பிற்காலத்தில் ஒரு பாங்கித் தொழிலிலேயே ஈடுபடுவானென்று எதிர்பார்க்கும்போது, அவன் எதற்காக 7 வருடம் நூற்கக் கற்றுக்கொள்ள வேண்டும்?*

**பதில் :** *இது, புதுக் கல்வித் திட்டத்தைப் பற்றிய .மோசமான அறியாமையையே காட்டுகிறது. ஆதாரக் கல்வித் திட்டத்தின் கீழ் மாணவன், ஒரு கைத்தொழிலைக் கற்றுக் கொள்ளுவதற்காக மட்டும் போகவில்லை. தனது ஆரம்பக் கல்வியைப் பெறவே போகிறான்; கைத்தொழில் மூலம் மனத்துக்குப் பயிற்சி பெறவே போகிறான். சாதாரணப் பள்ளிக்கூடத்தில் ஏழு வருடம் பயிற்சி பெறுவோனைக் காட்டிலும், ஏழு வருடங்கள் புது ஆரம்பக் கல்விப் பயிற்சி பெறும் மாணவன் சிறந்த பாங்கர் ஆவான் என நான் கூற முடியும். பின்னவன் பாங்கி முறைப் பயிற்சிப் பள்ளிக்குப் போவானாயின், அவன் தடுமாற்றம் அடைவான். ஏனெனில், அவனுடைய ஆற்றல்கள் பூரணமான பயிற்சி பெற்றதாக இரா. புதுக் கல்வியெனில் சிறிதளவு இலக்கியக் கல்வி, சிறிதளவு கைத்தொழில் பயிற்சி அல்லவென்ற அடிப்படையான கருத்தை நீங்கள் உணர்ந்து கொள்ளும்படி நான் செய்வேனாயின், இன்றையப் பொழுதை நல்ல விதத்தில் கழித்ததாக நான் திருப்தி அடைவேன். ஒரு கைத்தொழிலின் மூலம் ஆரம்பக் கல்வி அளிப்பது, பூரணமான கல்வியாகும்.*

**கேள்வி :** ஒவ்வொரு பள்ளியிலும் ஒரு கைத்தொழிலுக்கு மேல் பல கைத்தொழில்கள் கற்றுக் கொடுப்பது சிறந்ததல்லவா? மாதந்தோறும், வருடந்தோறும் ஒரே வேலையைச் செய்து கொண்டிருந்தால் குழந்தைகளுக்கு அலுப்புத்தட்டிப் போக லாம் அல்லவா?

**பதில் :** ஒரு மாதம் நூற்புப் பாடத்துக்குப் பின், அவரது மாண வர்களுக்கு ஆசிரியர் அலுப்புத் தட்டக் கூடியவராகியதைக் கண்டால், நான் அவரை வேலையிலிருந்து நிச்சயமாக விலக்கி விடுவேன். ஒரே வாத்தியத்தில் புதுப் புது கீர்த் தனத்தை வாசிப்பது போல், ஒவ்வொரு பாடத்திலும் புதுமை இருந்துவரும். ஒரு கைத்தொழிலிலிருந்து மற்ரொரு தொழிலுக்கு மாறிக்கொண்டே இருந்தால், எங்கும் தனக் கொரு இடமில்லாமல் மரத்துக்கு மரம் தாவிக் கொண்டே இருக்கும் குரங்கைப் போலாகிவிடும் குழந்தையின் நிலை. விஞ்ஞான உணர்வுடன் நூற்றல் போதிக்கப்படும்போது, நூற்பதுடன் பல விஷயங்களைப் பற்றிய போதனையும் சேரு மென்று நான் முன்னமே காட்டியிருக்கிறேன். தானுகவே தன் சொந்த தக்ளியை செய்து கொள்ள குழந்தைக்குப் பயிற்சி தரப்படும்; திட்டம் சுற்றும் வட்டத்தையும் செய்யக் கற்றுக் கொள்ளும். ஆகையால், நான் தொடங்கிய விஷயத் துக்கே மீண்டும் போகலாம். விஞ்ஞான உணர்வுடன் கைத் தொழிலைப் போதிக்க ஆசிரியர் முற்படுவாராஞல், பல துறைகளிலும் மாணவர்கள் பயிற்சி பெறுவார்கள். இவை யெல்லாம் மாணவரின் திறமை முற்றிலும் வளர்ச்சி பெறு வதற்கு வழி செய்யும்.

—'ஹரிஜன்' – 4—3—1939

# 8

# மேஞட்டு இறக்குமதி அல்ல

[1937 அக்டோபரில், வர்தாவில் நடந்த ஆதாரக் கல்வி மகாநாடு நியமித்த குழுவின் அறிக்கையான 'ஆதார தேசீயக் கல்வி'யின் இரண்டாம் பதிப்புக்கு காந்திஜி வழங்கிய முன்னு ரையே கீழே கொடுக்கப்பட்டுள்ளது:]

டாக்டர் ஜாகிர் ஹுஸேனும், அவரது குழுவினரும் தயாரித் துள்ள ஆதார தேசீயக் கல்வி அறிக்கை, இந்தியாவிலும், வெளி நாடுகளிலும் மிகுந்த அக்கறையை உண்டாக்கி யிருக்கிறது. இதற்கு, இத்துண்டுப் பிரசுரத்தின் முதல் ஆயிரம் பிரதிகள் விற் பனையாகி விட்டதே தக்க சான்ருகும். இதைவிடக் கவர்ச்சிக் குறைவாக இருந்தாலும் இதற்குப் பொருத்தமான பெயர் கிராம

தேசீயக் கல்வி என்பதே ஆகும். "கிராமம்" என்பது, மேல் படிப்பு அல்லது ஆங்கிலக் கல்வியைத் தவிர்ப்பதாக இருக்கிறது. இச் சமயம் "தேசீயம்" என்பது சத்தியம், அகிம்சையைக் குறிக்கிறது. மேலிருந்து திணிக்கப்பட்ட கட்டுப்பாடுகள், குறுக்கீடுகள் இல்லாமல் சுதந்திரமான சூழ்நிலையில், குறிப்பிட்ட சில கிராமக் கைத்தொழில்களின் மூலம், கிராமக் குழந்தைகளின் அறிவாற்றல்கள் முழுவதையும் வெளிக் கொணரவல்ல முறையில் ஆசிரியர்கள் கிராமக் குழந்தைகளுக்குக் கல்வி புகட்ட வேண்டுமென்று திட்டம் வகுத்தவர்கள் எதிர்பார்க்கிறார்கள். இதுதான் 'கிராமக் கைத்தொழில்கள் மூலம்' என்பதன் பொருள். எனவே, இத் திட்டம் கிராமக் குழந்தைகள் கல்வியில் ஓர் புரட்சியேயாகும். இது எவ்விதத்திலும் மேனாட்டிலிருந்து இறக்குமதி செய்ததாகி விடாது. வாசகர்கள் இதை நினைவில் வைத்துக் கொண்டால், சிறந்த கல்வி நிபுணர்கள் ஒருமித்த கவனத்துடன் தயாரித்துக் கொடுத்த இத்திட்டத்தை நன்ருகப் புரிந்துகொள்ள முடியும்.

—'சேவா கிராமம்' – 28—5—1938

# 9

# ஸ்தல ஸ்தாபனங்கள் காட்டும் வழி

சென்ற வாரத்தில் மத்திய மாகாணங்கள், பேரார் ஸ்தல ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய மகாநாடு நடந்தது. அதில் பேசுவதற்காக அவர்கள் காந்திஜியை அழைத்திருந்தார்கள். காந்திஜி பேசுகையில் மகாநாட்டு உறுப்பினருள் ஒருவர் கேட்ட பொதுப்படையான கேள்வியொன்றுக்கு பதில் அளிப்பதுடன் நிறுத்திக் கொண்டார். ஆதாரக் கல்வித் திட்டம், நாட்டின் பொருளாதார அரசியல் முன்னேற்றத்துக்கு எந்த வகையில் உதவுவதாக இருக்கிறது என்பதே அந்தக் கேள்வியாகும். அதற்குப் பதிலளிக்கையில் காந்திஜி பின்வருமாறு கூறினார் :

"நீங்கள் என்னிடம் இக்கேள்வி கேட்டதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைப் பற்றிய சிந்தை ஏதுமின்றியே இப்போதைய ஆரம்பக் கல்வி முறை வகுக்கப்பட்டுளது என்று சொல்லுவதே அதற்கு நான் அளிக்கக் கூடிய பதில். ஆரம்பக் கல்விக்காக அரசாங்கம் செலவழிக்கும் பணத்திலிருந்து எவ்வித பலனும் கிடைப்பதில்லை. உயர்தரக் கல்வி என்றழைக்கப்படும் கல்வியிலிருந்து சுக்லாஜி* போன்ற ஒரு சில நிர்வாகிகள் கிடைக்கிருர்கள் என்பதற்காக, ஆரம்பக் கல்வி முறை மீது பணத்தை வாரி இறைப்பதற்கு எவ்

* மத்திய மாகாண முதல் மந்திரியாக இருந்த காலஞ் சென்ற பண்டித ரவி சங்கர சுக்லாவையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிருர்.

வித நியாயமுமில்லை. ஆங்கிலப் பட்டங்கள் பெற்றவர்கள் அல்லது ஆங்கிலம் கற்றவர்கள் இருந்தாலன்றி இந்தியாவின் நிர்வாகத்தை நடத்த முடியாது என்ற பரிதாபமான மூட நம்பிக்கையைத்தான் இது, வேதனையூட்டும் முறையில் எடுத்துக்காட்டுகிறது. இப்போதைய ஆரம்பக் கல்வி முறை வீணான மாபெரும் செலவு என்று கல்வி இலாகா டைரக்டர்களில் பலர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். மாணவருள் மிகவும் சொற்ப விகிதமே மேல் வகுப்புகளை அடைகிறார்கள். சொல்லிக் கொடுத்த எழுத்தறிவும் நிலைத்து நிற்பதற்கு வழியில்லை. பெருவாரியான கிராமங்களில் ஒரு சிறு துளி விகிதத்தையே இந்தக் கல்வி முறை தொடுகிறது. உதாரணமாக, இந்த ஆரம்பப் பள்ளிகள் கூட, மத்திய மாகாணத்தின் கிராமங்களில் ஒரு சிலவற்றிலேயே இருக்கின்றன. கிராமங்களில் இருக்கக்கூடிய ஒரு சில பள்ளிகளிலிருந்தும் கிராமங்களுக்கு எவ்வித பலனும் கிடைப்பதில்லை. எல்லாக் கல்வியும் கைத் தொழிலின் மூலம் அளிக்கப்படுமாதலால், புதுத் திட்டம் உறுதியான பொருளாதார அடிப்படையில் அமைந்திருக்கிறது எனலாம். இது கல்வியுடன் சேர்ந்த கைத்தொழில் என்பதில்லை; ஆனால் எல்லாக் கல்வியும் கைத்தொழிலின் மூலமே போதிக்கப்படும். ஆகையால் நெசவு மூலம் கல்வி கற்கும் சிறுவன், அத்தகைய கல்வி பெறாத சாதாரண நெசவாளியைவிட, நிச்சயம் சிறந்தவனாகவே விளங்குவான். ஒரு நெசவாளி பொருளாதார முறையில் வீண், அதாவது யாதொரு பயனுமில்லாதவர் என்று எவரும் சொல்ல முடியாது. புதுத் திட்டத்தின்படி பயிற்சி பெற்ற நெசவாளிக்கு, பலவகைக் கருவிகளும் தொழில் நுணுக்கங்களும் தெரிந்திருக்கும். அதனால் சாதாரண நெசவுத் தொழிலாளியைவிட அவர் மூலம் சிறந்த பலன்கள் ஏற்படும். ஸ்ரீமதி ஆஷா தேவி திரட்டிய உண்மைத் தகவல்களையும், புள்ளி விவரங்களையும் ஆராய்வதன் மூலம், கடந்த சில மாதங்களாக நடத்தி வந்த இத்திட்டத்தின் பொருளாதார பலன்களை நன்கு அறிந்து கொள்ளலாம். நாங்கள் எதிர்பார்ப்பதைக் காட்டிலும் மிகவும் அதிகமான பலன் ஏற்பட்டுள்ளது. தன்னைக்கட்டிக் கொண்டு போகும் கல்வி என நான் கூறுவதற்கு இதுதான் பொருள். "தன்னைக்கட்டிக்கொண்டு போகும்" என்றசொற்றொடரை உபயோகிக்கும்போது, அதிலிருந்து முதலீட்டுச் செலவெல்லாம் கிடைக்குமென்று அர்த்தமில்லை. ஆனால் மாணவர்கள் செய்யும் பொருட்களை விற்பதன் மூலம் ஆசிரியரின் ஊதியத்திற்காவது போதிய தொகை கிடைத்துவிடும் என்பதே பொருள். இதிலிருந்து ஆதாரக் கல்வி முறையின் பொருளாதாரத்தன்மை தானாகவே விளங்கும்.

"பின்னர், மற்றொரு அம்சம் உள்ளது, அதாவது, தேசீய எழுச்சியே. கிராமக் கைத்தொழில்கள் பற்றி குமரப்பா குழுவின் அறிக்கையைப் படித்திருப்பீர்களா என்று எனக்குத் தெரியாது. ஒருவரின் சராசரி வருட வருமானம் ரூ. 70 என்று வழக்கமாகச் சொல்லுவது உண்டு. ஆனால் மத்திய மாகாண கிராமங்களில்

வருட வருமானம் ரூ 12-லிருந்து ரூ. 14-க்கு மேல் இல்லை என்று ஸ்ரீ குமரப்பா ஆதாரங்களுடன் நிரூபித்திருக்கிறார். கிராமங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும்வகையில் ஆதாரக் கல்விக்கான நூற்றலும், மற்ற கிராமத் தொழில்களும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அதனால் கிராமக் கைத்தொழில்கள் மூலம் கல்வி கற்கும் சிறுவர்கள், தங்கள் அறிவைத் தங்கள் இல்லங்களில் பரப்ப வேண்டும். கிராமக் கைத் தொழில்களைப் புதுப்பிப்பதன் மூலம், கிராமவாசியின் சராசரி வருமானத்தை இரட்டிப்பாக்க முடியும் என்பதை இப்போது நீங்கள் காண்பீர்கள். நீங்கள் மக்களின் தொண்டர்களாகி, இப்புது முறையில் அக்கறை காட்டுவீர்களாயின், ஜில்லா போர்டுகளில் காணப்படும் பெரும்பான்மை சச்சரவுகள் கூட மறைந்துவிடும். நான் கூட்டத்துக்கு வந்துகொண்டிருக்கும் போது, ஒரு பள்ளியிலிருந்து கடிதம் ஒன்று வந்தது. தினந்தோறும் நான்கு மணி நேரம் வீதம் முப்பது நாட்கள் நூல் நூற்றதில் குழந்தைகள் ரூ. 75-க்கு மேல் சம்பாதித்ததாக அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 30 குழந்தைகள் மாதத்துக்கு ரூ. 75 சம்பாதித்தனென்றால், இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான ஆரம்பக் கல்விக் குழந்தைகள் எவ்வளவு சம்பாதிக்க இயலும் என்பதை நீங்களே சுலபமாகக் கணக்குப் போட்டுக் கொள்ளலாம்.

''இக் குழந்தைகளிடையில் வளரக் கூடிய தன்னம்பிக்கை, சமயோசித புத்தி, நாட்டின் வருமானத்தை தாங்கள் அதிகமாக்குகிறோம் என்ற பெருமை, ஏற்றத் தாழ்வான விநியோகப் பிரச்னைக்குத் தீர்வுகாண்கிறோம் என்ற உணர்வு முதலியவற்றின் பலன்களை எண்ணிப் பார்க்கவேண்டும். இதிலிருந்து தானாகவே அரசியல் விழிப்பு உண்டாகும். உள்ளூர் விவகாரங்களைப் பற்றியும், நமது ஊழல் பற்றியும், அவற்றை ஒழிக்கும் வழியைப் பற்றியும் குழந்தைக்குத் தெரிந்திருக்கும் என்று எதிர்பார்க்கிறேன். இத்தகைய அரசியல் கல்வியை நம்முடைய குழந்தை ஒவ்வொன்றும் பெற்றிருக்க வேண்டுமென விரும்புகிறேன். அது அவர்களுடைய அந்தஸ்தை ஓரளவுக்கு உயர்த்தும் என்பது உறுதி.

''நாட்டின் பொருளாதார, அரசியல் முன்னேற்றத்தை ஆதாரக் கல்வி முறை வளப்படுத்துவது நிச்சயம் என்பதை நான் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்திருக்கிறேன் என்று நினைக்கிறேன்.

''இவ்வளவும் சொன்னபிறகு, நான் உங்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன். நீங்கள் இங்கு வந்திருப்பதால், இக்கல்வி முறைபற்றி அறிந்து கொண்டு இதில் நம்பிக்கையுடன் திரும்புகிறீர்களா, இல்லையா என்பதை சுக்லாஜியிடமும், அரிய நாயகம்ஜியிடமும் தெரிவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இத்திட்டத்தை நியாயமான அளவுக்குப் பரீட்சித்துப் பார்த்தால், இன்னும் மூன்று மாத காலத்தில் பள்ளிகளுக்குப்

புத்துயிர் அளித்து, குழந்தைகளுக்குப் புது சக்தியும், புது வாழ்வும் ஊட்டிவிட்டதாக அறிவிக்க இயலும். ஒரு விதை ஓங்கி வளர்ந்து மரமாகப் பல ஆண்டுகள் செல்லும். ஆனால் நீங்கள் விதைக்கும் கல்வி வித்திலிருந்து விளையக் கூடிய பலன்கள் சில மாதங்களில் தெரிந்துவிடும். இந்திய மக்கள் முன்னிலையில் நான் மிகவும் எளிய திட்டங்களை வைத்திருக்கிறேன். அவை புரட்சி கரமான மாறுதல்களை இயற்ற வல்ல எளிய விஷயங்களே. அதாவது கதர், மதுவிலக்கு, கைத்தொழில் மூலம் புனருத்தாரணம், கைத்தொழில் மூலம் கல்வி போன்ற எளிய திட்டங்களையே வைத்திருக்கிறேன். இப்போதைய ஆட்சிபோதையிலிருந்து மீண்டாலன்றி நீங்கள் இந்த எளிய விஷயங்களை அறிந்து கொள்ளமுடியாது.

"நீங்கள் என்ன செய்வதாயினும், உங்களையே ஏமாற்றிக் கொண்டு, எங்களையும் ஏமாற்ற வேண்டாம். திட்டத்தின் பால் ஊக்கம் ஏற்படவில்லையெனில், தயவு செய்து தெளிவாக அதைச் சொல்லிவிடுங்கள்.

"முதலீட்டுச் செலவு குறித்து ஒருவார்த்தை. கூட்டங்களுக்காகச் செலவிடுவதைப்போன்று நீங்கள் செய்யப்போகும் முதலீட்டுச் செலவு, பலனில்லாத தண்டச் செலவு அல்ல. கருவிகளுக்காகவும், பொருள்களுக்காகவும் செலவிட வேண்டும்; இவை பல ஆண்டுகளுக்கு லாபகரமான உற்பத்திக்கு உதவியாக இருக்கும். கைராட்டினங்கள். கைத்தறிகள், பஞ்சடிக்கும் வில் முதலியவற்றில் முதலீடு செய்வீர்கள். இது பல மாணவர்கள் தொகுதிகளுக்கு உபயோகமாக இருக்கக் கூடியது. யந்திரத் தொழில் மயமாக்குவதெனில், ஏராளமான மூலதனச் செலவாகும்; யந்திரங்கள் ஏராளமாகத் தேய்ந்து போகும்; தேய்மான மதிப்பு குறையும். இப்போதைய திட்டத்தில் அது போன்றவை கிடையாது. உண்மையில், நன்கு திட்டமிடப்பட்ட கிராமப் பொருளாதார அமைப்பில் அதெல்லாம் தேவையில்லை.

"கடைசியாக ஒரு விஷயம். நமது அரசியல் முறையில் உடனடியாக நேரிடக் கூடிய மாறுதல்கள் பற்றி நீங்கள் கலவரமடைய வேண்டாம். மந்திரி சபைகள் வந்தவழியே போகும். குறுகிய கால நோட்டீஸில், அவர்கள் போக வேண்டியிருக்கும் என்பதற்கு இணங்கியே அவர்கள் வந்தார்கள். சமயம் வந்தால், அரசாங்கக் காரியாலயங்களிலிருந்து தாங்கள் சிறைக்கு அணிவகுத்துச் செல்ல வேண்டியிருக்கும் என்பது அவர்களுக்குத் தெரியும். புன்னகை மலர்ந்த முகத்துடன் அந்த மந்திரிகள் சிறைகளுக்குச் செல்லுவார்கள். ஆனால் உங்கள் வேலையும், உங்கள் வேலைத் திட்டமும் மந்திரி சபைகளை நம்பியிருக்கவில்லை. நீங்கள் வகுத்துள்ள வேலைத் திட்டம் உறுதியான அஸ்திவாரத்தின் மீது அமைந்திருந்தால், எத்தனை மந்திரிசபைகள் வந்தாலும், போனாலும் அது நிலைத்திருக்கும். ஆனால் அது உங்கள் பணியில் உங்களுக்கிருக்கும் நம்பிக்கையைப் பொறுத்

திருக்கிறது. சத்தியம் அகிம்சை என்ற கோட்பாட்டில் உறுதியான நம்பிக்கை இருக்கும் வரையில், காங்கிரசும், அதன் வேலையும் நிலைத்திருக்கும். நான் காங்கிரசைக் கடுமையாகக் கண்டித்திருக்கிறேன்; அதன் குறைபாடுகளை இரக்கமில்லாமல் வெளிப்படுத்தியிருக்கிறேன். ஆயினும், காங்கிரஸ் இன்னும் மதிப்புக்கு உரியதாக இருக்கிறது என்பதை நான் அறிவேன்.

"எல்லாவற்றையும் விட, ஒவ்வொன்றும் உங்களுடைய நம்பிக்கையையும், உறுதிப்பாட்டையும் பொறுத்திருக்கிறதென்பதைச் சொல்ல விரும்புகிறேன். மனமிருந்தால் வழி பிறப்பது நிச்சயம். இது நிறைவேற்றித் தீரவேண்டிய திட்டம்தான் என்று நீங்கள் மன உறுதியுடன் இருந்தால், எல்லாக் கஷ்டங்களும் மறைந்தொழியும். நம்பிக்கை மட்டும் ஜீவசக்தி நிரம்பியதாக இருக்க வேண்டும். கடவுளிடம் நம்பிக்கை இருப்பதாக ஆயிரக் கணக்கானவர் சொல்லுகிறார்கள். ஆனால் சிறிய அபாயத்தைக் கண்ட உடனேயே பயந்துகொண்டு ஓடுபவர்களாயின், அவர்களுடைய நம்பிக்கை உயிரற்ற வெறும் நம்பிக்கையே யாகும். நம்பிக்கையில் ஜீவசக்தி இருந்தால், ஒருவனது திட்டத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய அறிவும், சாதனங்களும் உண்டாகிவிடும். உங்களில் ஒவ்வொருவருக்கும் அத்தகைய நம்பிக்கை இருப்பதாகக் கூறுவதைக் கண்டு மகிழ்கிறேன். அது உண்மையாயின், உங்கள் மாகாணம் மற்ற மாகாணங்களுக்கு உன்னதமான ஒரு எடுத்துக்காட்டாக விளங்கும்."

—'ஹரிஜன்' – 28—10—1939

# 10

# தக்ளியும் விளையாட்டுப் பொம்மைகளும்

மார்ச்சு 31ஆ யன்று மாலை 5 மணிக்கு காதி யாத்திரை* முடிவடைந்தது. ஆனால் மாலைப் பிரார்த்தனைக்குப் பின், கேள்விகள் ஏதாவது இருந்தால் அவற்றிற்குப் பதிலளிக்க காந்திஜி சம்மதித்ததால், பலர் இரவிலும் தங்கிவிட்டனர். இங்கே கேள்விகளில் ஒன்றும், அதற்கு காந்திஜி அளித்த பதிலும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன :

**கேள்வி :** ஆதாரக் கல்வித் திட்டத்தில் தக்ளி பொருளாதார நோக்கத்துடன் அதாவது கல்வி தன்னைக்கட்டிக் கொண்டு போக வேண்டும் என்ற நோக்கத்துடன் சேர்க்கப்பட்டதா,

---

* வர்தா ஜில்லாவிலுள்ள கதர் அன்பர்கள் சேவா கிராமத்தில் கதர் யாத்திரை என்ற இந்த வருடாந்திர மகாநாட்டை நடத்தினார்கள். ஸ்ரீ வினோபாவின் யோசனைக்கு இணங்கவும் அவரது மேற்பார்வையிலும் இம்மகாநாடுகள் நடத்தப்பட்டன.

அல்லது கல்வியை இறுதி லட்சியமாகக் கொண்டு அது சேர்க்கப்பட்டதா?

பதில்: ஆதாரக் கல்வியில் சேர்க்கப்பட்ட எதுவும் ஒரே நோக்கத்துடன்தான் இருக்க முடியும். அதாவது கல்வி சம்பந்தமான நோக்கம்தான். கைத்தொழிலின் மூலம் குழந்தைகளின் உடல், அறிவு, ஒழுக்க வளர்ச்சிக்கு வழி செய்வதே ஆதாரக் கல்வித் திட்டத்தின் குறிக்கோள் ஆகும். கல்வி நோக்கத்தில் உறுதியானதும், போதிய அளவு சிறந்த முறையில் நிர்வகிக்கப்படுவதுமான எந்தத் திட்டமும் பொருளாதார முறையிலும் சிறந்ததாக இருக்கும் என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். பின்னால் உடையக் கூடியதான களிமண் பொம்மைகளைச் செய்வதற்கு குழந்தைகளுக்கு நாம் சொல்லித் தரலாம். அதுவும் அவர்கள் அறிவை வளர்க்கும். ஆனால் அவ்விதம் செய்வது, மிகவும் முக்கியமான தார்மிகக் கொள்கையைப் புறக்கணிப்பதாகும். அதாவது, மனிதனுடைய உழைப்பையும் பொருளையும், வீணக்கும் வழிகளில் அல்லது ஆக்க முறைக்கு விரோதமான வழிகளில் உபயோகிக்கலாகாது. ஒருவனது வாழ்க்கையில் ஒவ்வொரு விநாடியும் உபயோகமான முறையில் பயன்பட வேண்டும் என்ற நியதியை வலியுறுத்துவது பிரஜா அந்தஸ்துக்கான சிறந்த கல்வியாகும்; அதே சமயம் அது ஆதாரக் கல்வியைத் தன்னைக்கட்டிக் கொண்டு போவதாகவும் செய்கிறது.

—'ஹரிஜன்' – 6—4—1940

# 11

# இலக்கியமும் கைத்தொழிலும்

ஸ்ரீ நரஹரிபரீக் எழுதுகிறார் :

"நமது பெரும்பாலான கதர்ப் பள்ளிகளும், மற்றப் பள்ளிகளும் இலக்கியப் பயிற்சிக்கு அளிக்கப்படும் முக்கியத்துவம் முற்றிலும் தவறானதென்று நான் நினைக்கிறேன். கைத்தொழில் வேலைக்கென சில மணி நேரம் ஒதுக்கப் படுகிறது; இலக்கியப் பயிற்சிக்கென சில மணிநேரம் ஒதுக்கப்படுகிறது. புத்தகப் படிப்பினால் மட்டுமே அறிவைப் பெற முடியுமென்ற நம்பிக்கை நிலவி வருகிறது. ஆனால், புத்தகங்களைக் காட்டிலும் கைத் தொழில் மூலம் நமது மாணவர்களின் அறிவு அதிக முன்னேற்றம் அடைவது சாத்தியமென்றே நான் கருதுகிறேன். இப்பிரச்னையில் தங்களுடைய கருத்தை வெளியிட்டால் நன்றியுடையவனாக இருப்பேன்."

இதை எழுதியவர் சொல்லும் குறை நியாயமானது. இலக்கியப் பயிற்சி எனில், எப்போதும் அறிவு வளர்ச்சி என்று அர்த்தமில்லை. அடிப்படையில் அது நெட்டுருப்போடும் ஒரு காரியமே.

வேறு எந்தச் சித்திரத்தையும் போல, எழுத்து மூளையில் ஒரே விதமாகத்தான் பதிகிறது. ஆனால் இலக்கியப் பயிற்சி என்பது, வெறும் பாடமல்ல; அதைவிட மேம்பட்டது. இது கைத்தொழில் விஷயத்திலும் உண்மை. கைத்தொழில் அறிவு, வெறும் கைத் தொழிலுடன் நின்றுவிடுவதல்ல; அதன் விஞ்ஞானத்தைப் பற்றிய அறிவும் அதில் அடங்கும். அதன்பின் அறிவின் வளர்ச்சி உயர்நிலைப் பள்ளிகளையும், கல்லூரிகளையும்விட, மிகவும் அதிக மாகவும் துரிதமாகவும் இருக்கும். ஆகையால், கைத்தொழில் பயிற்சியை மட்டமாகக் கருதுவதோ, அல்லது பள்ளிக்கூட திட்டத்தில் அதற்கு இரண்டாம் தரமான அந்தஸ்தை வழங்குவதோ மிகவும் வருந்தத்தக்கது. புத்தகப் படிப்பு கண்ணைக் கெடுக்கின்றது; சிந்தனு சக்தியையும், கற்பனு சக்தியையும் குன்றச் செய்து விடுகிறது. கைத்தொழில்களையும், அவற்றின் விஞ்ஞானத்தையும் பயிலுவதில் இத்தகைய அபாயம் ஒன்றுமில்லை. இதற்கும் சில நூல்களைக் கற்க வேண்டியிருக்கும். ஆனால் இக்கல்வி கைத் தொழிலுடன் இணைக்கப் பெற்றிருக்கும்; ஆகையால், அறிவை ஆழ்ந்து பயன்படுத்த வேண்டியிருக்கும். நான் ஆதாரக் கல்விப் பயிற்சி என்று அழைப்பது இதைத்தான். இது அவ்வளவு உண்மையானதாகையால், நாளடைவில் இதற்குரிய மதிப்பைப் பெறும். இதற்கிடையில் நூலறிவுக்கும், கைத்தொழில் வேலைக் கும் பாகுபாடு எதுவும் செய்ய வேண்டாம். கைத்தொழிலை, கல்வியின் ஒரு பகுதியாகவே கருத வேண்டும். வேறு எந்தப் பாடத்தையும் போல அதற்கும் சம அந்தஸ்து இருக்க வேண்டும். இந்தத் தெளிவான உண்மையை, குறைந்தபட்சம் தேசீயப் பள்ளிகளிலாவது உணர்ந்துகொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' – 5—4—1942

# 12

# உடலுழைப்பும் அறிவு வளர்ச்சியும்

இங்கே உடலுழைப்புக்கு அளவு மீறிய முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது என்பது, உங்களில் ஒருவர் கூறிய குறை களில் ஒன்ருகும். உடலுழைப்பின் கல்வி அம்சம் மதிப்பு வாய்ந்தது என்பதில் நான் திடமான நம்பிக்கை கொண்டவன். இந்தியாவில் ஏகாதிபத்திய அதிகாரத்தை பலப்படுத்துவதற்கும் நிலை நிறுத்துவதற்குமே நமது இன்றையக் கல்வி முறை வகுக்கப்பட்டிருக்கிறது. அதன் கீழ் வளர்க்கப்பட்ட நீங்கள் அதில் ஒரு சுவையை வளர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். அதனுல் உடலுழைப்பு அருவருப்பாக இருக்கிறது. தெருக் கூட்டுவது எப்படி, கக்கூஸைச் சுத்தம் செய்வது எப்படி என்பதையெல்லாம் அரசாங்கப் பள்ளிகளிலோ அல்லது கல்லூரிகளிலோ மாணவ

ருக்குக் கற்றுக்கொடுக்க எவரும் கவலைப்படுவதில்லை. ஆனால் இங்கே உங்கள் பயிற்சியில் துப்புரவும், சுகாதாரமும் அடிப்படையாக இருக்கின்றன. தோட்டி வேலை ஒரு நளினமான கலைக்கு ஒப்பாகும். எனவே இதைப் பாடுபட்டுக் கற்க வேண்டும். எத்தகைய அறிவையும் பெறுவதற்கு, இடைவிடாத கேள்வி கேட்கும் பாங்கும், ஆரோக்கியமான ஆர்வமும் முதல் தேவையாகும். அறிவும் ஆர்வமும், பணிவினுலும் ஆசிரியரிடம் காட்டும் மரியாதையினுலும் பண்பட வேண்டும். அது ஆணவமாக இழி நிலையை அடைந்துவிடக் கூடாது. அறிவை ஏற்பதற்கான உள்ளத்துக்கு ஆணவம் பகை ஆகும். பணிவும், கற்க வேண்டுமென்ற ஆர்வமும் இல்லாவிடில் அறிவு ஏற்பட முடியாது.

அறிவை வளர்த்துக் கொள்வதற்கு, புத்திசாலித்தனமாக இயற்றப்படும் பயனுள்ள உடலுழைப்பு அமைதியான முறையாகும்? வேறுவிதத்தில் ஒருவர் அறிவுக் கூர்மையை வளர்த்துக் கொள்ளலாம். ஆனல் அது முழுமையான அறிவாக இருக்க முடியாது. அது ஏற்றத்தாழ்வான, தாறுமாருகச் சிதைந்த அறிவாகவே இருக்கும். அது ஒருவனை போக்கிரியாகவும் அயோக்கியனுகவும் செய்துவிடும். சமமாக வளர்ச்சி பெற்ற அறிவு ஏற்படுவதற்கு உடல், அறிவு, ஆன்மா எல்லாம் ஒரே சீராக வளம் பெற்றிருக்க வேண்டும். அதனுல்தான் இங்கு நமது பயிற்சித் திட்டத்தில் உடலுழைப்புக்கு நடுநாயகமான ஸ்தானத்தைக் கொடுத்திருக்கிறேம். சமூகத்துக்குப் பயன்படும் உழைப்பு மூலம் வளர்க்கப்பட்ட அறிவு தொண்டுக்கான ஒரு கருவியாகும். அது எளிதில் வழி தவற இடம் கொடுக்காது அல்லது தப்பு வழிகளில் இறங்கச் செய்யாது. இரண்டாவதாகக் கூறப்பட்ட நிலை சாபத்தீடு ஆகும். இந்த முக்கியமான அம்சத்தை நீங்கள் மனத்தில் இறுத்திக் கொண்டீர்களாயின், பயிற்சி பெறுவதற்காக உங்களை இங்கே அனுப்பிவைத்த அரசாங்கங்கள் செலவிட்ட தொகை வீணுகிவிடாது.

—'ஹரிஜன்' – 8—9—1946

# 13

# சிறப்பு அம்சங்கள்

ஏழாம் வகுப்பில் வாசிக்கும் ஒன்பது பையன்களை, காந்திஜியைக் காண்பதற்காக ஸ்ரீ அரியநாயகம் அழைத்துவந்தார். இந்தப் பையன்கள் சேவாகிராமம் ஆதாரப் பள்ளியில் ஒரு ஆண்டுப் பயிற்சியை ஏறக்குறைய முடித்தவர்கள் ஆவர். அவர்கள் சேவாகிராமத்திலிருந்தும், சுற்றுப் புற கிராமங்களிலிருந்தும் வந்த கிராமியச் சிறுவர்கள். வயல்களில் வேலை செய்பவர்களும், பள்ளியைக் கண்டிராதவர்களுமான மக்களை நாம்

பார்த்திருக்கிறோம். அவர்களுடன் ஒப்பிடும் போது, முதல் முயற்சியின் பலனாக உருவான இந்தப் பையன்கள் நம்பிக்கை அளிப்பவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் சுத்தமாகவும், நல்ல பழக்க வழக்கங்களில் பயிற்சி பெற்றவர்களாகவும், ஒழுங்காகவும், பண்பு அறிந்தவர்களாகவும் இருந்தனர். காந்திஜி அவர்களுடன் வேடிக்கையாகப் பேசினார். அவர்கள் ஆனந்தமாகச் சிரித்துக் கொண்டு அதில் கலந்து கொண்டனர்.

"ஆதாரப் பள்ளியில் ஏழு ஆண்டுப் பயிற்சி முடிந்த பின் வெளிவரும் பதினான்கு வயதுப் பையன் எப்படிப்பட்டவனாக இருக்க வேண்டும்?" அந்தப் பையன்களில் ஒருவன் துணிந்து காந்திஜியிடம் மேற்கண்டவாறு ஒரு கேள்வி கேட்டான்.

இச் சந்தர்ப்பத்தை விடாமல் அக்கேள்விக்கு காந்திஜி பதில் கூறினார். அவர் கூறியதாவது: "பையன்கள் விஷயத்தில் செய்ய வேண்டிய கடமையைப் பள்ளிக்கூடம் நிறைவேற்றியிருந்தால், பதினான்கு வயதுப் பையன்கள் உண்மை, தூய்மை, ஆரோக்கியம் உள்ளவர்களாக இருக்கவேண்டும்; கிராமப் பற்று உள்ளவர்களாக இருக்க வேண்டும்; அவர்களுடைய மூளையும் கைகளும் சம வளர்ச்சி பெற்றவையாக இருக்க வேண்டும்; அவர்களிடம் சூது வாது இருக்காது; அவர்களுடைய அறிவு கூர்மையாக இருக்கும்; பணம் சம்பாதிப்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படமாட்டார்கள்; தங்களை நாடிவரும் எந்த நேர்மையான பணியையும் தங்கள் கைகளால் செய்யக் கூடியவர்களாக இருப்பார்கள்; நகரங்களுக்குப் போக விரும்பமாட்டார்கள்; பள்ளியில் ஒத்துழைப்பையும், தொண்டையும் பாடமாகக் கற்ற அவர்கள், அதே உணர்ச்சியை தங்களைச் சுற்றிலும் பரப்புவார்கள்; அவர்கள் ஒருபோதும் பிச்சைக்காரர்களாகவோ, பிறர் உதவியை நாடும் புல்லுருவிகளாகவோ இருக்க மாட்டார்கள்."

—'ஹரிஜன்' - 8—9—1946

# 14

# மந்திரிகள் மகாநாட்டில் கேள்விகள்*

**கேள்வி :** சுயதேவைப் பூர்த்தி என்ற அடிப்படை இல்லாமல் ஆதாரக் கல்வியை நடத்த முடியுமா?

**காந்திஜியின் பதில் :** நீங்கள் நிச்சயம் முயன்று பார்க்கலாம். ஆனால், என்னுடைய யோசனையைக் கேட்பதாயின், நீங்கள் அடியோடு ஆதாரக் கல்வியை மறந்துவிடுவதே மேல் என்று

* 1946 ஜூலை 29, 30 தேதிகளில் மந்திரிகள் மகாநாடு புனா சபா மன்றத்தில் ஸ்ரீ பி. ஜி. கேர் தலைமையில் நடந்தது. காந்திஜி ஒரு மணி நேரத்துக்கு மேல் அம் மகாநாட்டு நடவடிக்கைகளில் கலந்து கொண்டார்.

தான் உங்களுக்குச் சொல்லுவேன். ஆதாரக் கல்விக்கு, தன்னிறைவு நிலை ஒரு பூர்வாங்கமான நிபந்தனை அல்ல. என்னைப் பொறுத்தமட்டில், அது மூலாதாரமான சோதனையே ஆகும். ஆரம்பம் முதற்கொண்டே ஆதாரக் கல்வி தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருக்கும் என்று அர்த்தமில்லை. ஆதாரக் கல்வித் திட்டத்திற்கான ஏழு வருட காலம் பூராவையும் கவனிக்குமிடத்து, வரவும் செலவும் சரிக்கட்டிக்கொண்டு போவதாக இருக்க வேண்டும். இல்லையெனில், தங்கள் பயிற்சி முடிவில் கூட, ஆதாரக் கல்வி மாணவர்கள் வாழ்க்கைக்குப் பொருந்தாதவர்களாக இருப்பார்கள். அது ஆதாரக் கல்விக்கே நேர்மாறானதாகும். சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியாத புதுத் திட்டம் உயிரற்ற உடல் போன்றதாகும்.

**கேள்வி:** அடிப்படைக் கைத் தொழில் மூலம் கல்வி புகட்டும் கொள்கையை நாங்கள் ஏற்றுக் கொண்டுள்ளோம். ஆனால் முஸ்லிம்கள் கைராட்டையை எதிர்க்கிறார்கள். பருத்தி விளையும் பகுதிகளில், நூற்பதை நீங்கள் வற்புறுத்துவது சரியாக இருக்கலாம். ஆனால் பருத்தி விளையாத பகுதிகளுக்கு அது பொருத்தமில்லை என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளலாகாதா? அத்தகைய இடங்களில், அதற்குப் பதில் வேறொரு கைத்தொழிலை, உதாரணமாக விவசாயத்தை மேற்கொள்ளக் கூடாதா?

**பதில்:** இது மிகப் பழைய கேள்வியாகும். கல்விக்குப் போதனை முறையாக அமையும் எந்த அடிப்படைக் கைத்தொழிலும் சர்வ ஜன சோதனையில் தேறுவதாக இருக்க வேண்டும். இந்தியா சுதந்திரம் பெறவும், இந்தியா அதன் சுய பலத்தைக் கொண்டே நிற்க வழி செய்யவும் ஒவ்வொரு இல்லத்திலும் கைராட்டினம் ரீங்காரம் செய்ய வேண்டுமென்று நான் 1908-ஆம் ஆண்டிலேயே முடிவு செய்துவிட்டேன். ஒரு கண்ணி பருத்தி கூட பயிரிடாவிட்டாலும், இந்தியாவுக்கும், ஏன் உலகம் பூராவுக்கும் துணிகளை ஏற்றுமதி செய்யும் நாடாக இங்கிலாந்து இருக்க முடியுமானால், அண்மையிலுள்ள மாகாணத்திலோ அல்லது மாவட்டத்திலோ பருத்தி தருவிக்க வேண்டியிருக்கிறதே என்பதற்காக, நமது வீடுகளில் ஏன் பஞ்சு நூற்கும் பணியை மேற்கொள்ளக் கூடாதென்று விளங்கவில்லை. உண்மையில், ஒரு காலத்தில் பருத்தி விளைவிக்கப்படாத இடம் இந்தியாவில் இருக்கவில்லை. "பருத்திச் சாகுபடி நிலங்கள்" என்று பாகுபடுத்தி, குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் பருத்தி பயிரிடுவதென்பது சமீபத்தில் ஏற்பட்ட, பொருத்தமில்லாத விளைவாகும். வரிகட்டும் ஏழைக்கும், இந்தியாவில் பஞ்சு நூற்பவனுக்கும் நஷ்ட முண்டாக்கும் வகையில் பருத்தி துணி உற்பத்தியாளர் நலனுக்காக அம்முறை திணிக்கப்பட்ட

தாகும். இன்றைக்கும் கூட கொட்டைப் பருத்திச் செடி இந்தியாவில் எல்லா இடங்களிலும் பயிராகிறது. நீங்கள் கூறுவது போன்ற வாதம், நமது முன் முயற்சி, நமது தொழில் முயற்சி, நமது சமயோசித புத்தி ஆகியவற்றுக்கான திறமையைக் குறை கூறுவதாக இருக்கிறது. ஒரு இடத்திலிருந்து மூலப்பொருள்களை மற்ருெர் இடத்துக்குக் கொண்டு போவதைச் சமாளிக்க முடியாத இடைஞ்சல் எனக் கருதுவதாயின், அது எல்லா உற்பத்திகளையும் கொன்றுவிடும். மேலும் அதற்கு மாற்று அம்மணமாக நிற்க வேண்டியதுதானென்ற நிலையில், சொந்த முயற்சியைக் கொண்டு ஒரு மனிதன் துணி தரித்துக் கொள்ளச் செய்வது கல்வியேயாகும். பருத்தி நூற்பதில் சம்பந்தமுள்ள பல வகை பக்குவ முறைகளிலும் அடங்கியுள்ள அறிவை அடிப்படையாகக் கொண்ட முயற்சி, மிகவும் உயர்ந்த போதனு மதிப்பு வாய்ந்ததாகும். உண்மையில், வேறு எந்தக் கைத்தொழிலும் செய்யாத வகையில் நூற்பதில் மனிதனுடைய முழுக் கல்வியும் அடங்கியுள்ளது. முஸ்லிம்கள் ஏதோ ஒரு மாயையில் சிக்குண்டிருப்பதால், அவர்களுடைய சந்தேகத்தை இன்று நம்மால் போக்க இயலாமல் இருக்கிறது. மாயையில் சிக்குண்டவர்களுக்கு மாயை முற்றிலும் உண்மையாகவே தோன்றும். ஆனல், நமது நம்பிக்கை தெளிவாகவும், உறுதியாகவும் இருக்கும் பட்சத்தில், நமது முறையை வெற்றிகரமாக நிரூபித்துக் காட்டினல், முஸ்லிம்கள் தாமாகவே நம்மிடம் வந்து நமது வெற்றியின் ரகசியத்தைப் போதிக்கும்படி கோருவார்கள். முஸ்லிம் லீகைவிட அல்லது வேறு எந்த முஸ்லிம் ஸ்தாபனத்தையும் விட ஏழை முஸ்லிம் பொது மக்களுக்கு கைராட்டை அதிகம் உதவியிருக்கிறதென்பதை அவர்கள் உணரவில்லை எனத் தோன்றுகிறது. வங்காளத்தில் நெசவாளிகளில் பெருவாரியானவர்கள் முஸ்லிம்களே. நூல் நூற்கும் முஸ்லிம் மாதர்கள், நெய்யும் முஸ்லிம்கள் ஆகியோரின் கை லாகவமும் கைத் திறமையும்தான் உலகிலேயே உயர்ந்த 'மஸ்லின்' துணி உற்பத்திக்குக் காரணம் என்பதையும், அதுதான் டாக்காவுக்கு உலகப்புகழ் ஏற்படும்படி செய்தது என்பதையும் மறந்துவிடக்கூடாது.

இது மகாராஷ்டிரத்துக்கும் பொருந்தும். ஒருவனுடைய சொந்தக் கடமையை இயற்றுவதில் முனைவதொன்றே, மாயைக்குச் சிறந்த மருந்தாகும். அலை பொங்கியெழும் கால வெள்ளத்தில் சத்தியம் ஒன்றே நிலைக்கும்; மற்றவையெல்லாம் வெள்ளத்தில் போய்விடும். என்னை எல்லோரும் கைவிட்டாலும் கூட, நான் தொடர்ந்து சத்தியத்தைக் கடைப்பிடித்தொழுக வேண்டும். இன்று என்னுடைய குரல் செவிடன் காதில் ஊதிய சங்காக இருக்கலாம்; ஆனல்

அது சத்தியத்தின் குரலாக இருந்தால், எல்லாக் குரல்களும் ஒடுங்கிய போதிலும், அக்குரல் மாத்திரம் கேட்டுக் கொண்டுதான் இருக்கும்.

# 15
# விஷச் சுழல்

"புதிய திட்டத்திற்கான திறமையுள்ள ஆசிரியர்களைப் பயிலுவிக்க சிறிது காலம் ஆகும். இதற்கிடையில் பள்ளிகளில் கல்வியை அபிவிருத்தி செய்ய என்ன செய்ய வேண்டும்?" இக் கேள்வியை ஸ்ரீ அவிஞசிலிங்கம் செட்டியார் ஆங்கிலத்தில் கேட்டார்.

இதற்காக காந்திஜி அவரைக் கிண்டல் செய்யவே எல்லோரும் சிரித்தனர். "ஹிந்துஸ்தானியில் பேச இயலாவிடில், நீங்கள் சொல்ல வேண்டியதைப் பக்கத்தில் இருப்பவர் காதில் ரகசியமாகச் சொல்லியிருந்தால், அவர் அதை உங்களுக்காக ஹிந்துஸ்தானியில் மொழிபெயர்த்துச் சொல்லியிருப்பாரே" என்றார் காந்திஜி. அவர் தொடர்ந்து கூறியதாவது :

"இன்றையக் கல்வி முறை இந்தியாவுக்கு சுதந்திரத்தைத் தேடித் தராது என்பதையும், அது இந்தியாவின் அடிமைத்தனத்தைத்தான் இன்னும் ஆழமாக வேரூன்றச் செய்யும் என்பதையும் நீங்கள் உணர்ந்து கொண்டால், ஆங்கிலத்தின் ஸ்தானத்துக்கு வேறு ஒன்று வந்தாலும், வராவிட்டாலும் கூட, அதற்கு ஊக்கமளிக்க மறுத்துவிடுவீர்கள். 'நயீ தாலீம்' (புதிய கல்வித் திட்டம்) கொள்கைகளின் எல்லை வரம்புக்குள் நீங்கள் செய்ய முடிந்ததையெல்லாம் செய்து, அதோடு திருப்தியடைவீர்கள். அந்த நிபந்தனைகளின் மீது மந்திரிகள் இருப்பதை மக்கள் விரும்பாவிடில், மந்திரிகள் விலகிவிடுவதே மேலானது. உயிரூட்டும் உணவைத் தர இயலவில்லை என்பதால் அல்லது அவ்வுணவு மக்களுக்கு ருசிக்கவில்லை என்பதால் விஷத்தை வழங்குவதற்கு அவர்கள் உடந்தையாக இருக்க முடியாது.

**கேள்வி :** நயீ தாலீமிற்கு பணம் தேவையில்லை, மனிதர் தேவை என்று சொல்லுகிறீர்கள். ஆனால் மனிதர்களுக்குப் பயிற்சி தர ஸ்தாபனங்கள் தேவை; ஆகையால் பணம் தேவை. இந்த விஷச் சுழலிலிருந்து மீள்வது எப்படி?

**பதில் :** இதற்குப் பரிகாரம் உங்கள் கையிலேயே இருக்கிறது. உங்களிடமிருந்தே இது ஆரம்பமாக வேண்டும். "தருமம் தன்னிடமிருந்தே ஆரம்பமாக வேண்டும்" என்று ஆங்கிலத்தில் ஒரு நல்ல பழமொழி உண்டு. பெரிய பிரபுவைப் போல சாய்வான நாற்காலியில் நீங்கள் அமர்ந்துகொண்டு, உங்களைவிட "சற்று மட்டமானவர்கள்" வேலைக்குத் தயாராக வேண்டு

மென்று எதிர்பார்த்தால், உங்களால் ஒன்றும் இயலாது. நான் பின்பற்றும் வழி அதுவல்ல. எவ்வளவு எளியதாயிருப்பினும், என்னிடமிருந்து, என்னை அடுத்துள்ள சூழ்நிலையிலிருந்து தொடங்குவேன். குழந்தைப் பருவத்திலிருந்தே இது என் வழக்கமாக இருந்துவருகிறது. இவ்விஷயத்தில் பிரிட்டிஷ் மக்களின் வாழ்க்கையிலிருந்து ஓர் உதாரணத்தை நாம் எடுத்துக் கொள்வோம். அவர்களில், நாம் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலர்தான் இந்தியாவுக்கு வந்து குடியேறினார்கள். பின்னர் தங்களுக்கென்று ஒரு சாம்ராஜ்யத்தையே உருவாக்கிக் கொண்டுவிட்டார்கள். அதன் அரசியல் அம்சத்தைவிட அதன் கலாசார அம்சம் இன்னும் பயங்கரமானது. அதனால்தான் இன்றைக்கும், தாய்மொழியைக் கூடப் புறக்கணித்து, அடிமை தனது விலங்குகளைத் தழுவிக் கட்டிக்கொள்வது போல ஆங்கிலத்தைக் கட்டித் தழுவும் அளவுக்கு ஆங்கில மோகம் நம்மை ஆட்கொண்டுள்ளது. இந்தியாவில் பிரிட்டிஷாரின் இன்றைய செல்வாக்கிற்குக் காரணமான நம்பிக்கை, முழு மனத்துடன் கூடிய ஈடுபாடு, தியாகம், விடா முயற்சி முதலியவற்றை எண்ணிப் பாருங்கள். மனமிருந்தால் வழி உண்டு என்பதையே இது காட்டுகிறது. என்ன நேரிடினும் சரி, கைவிடுவதில்லை என்ற திட சித்தத்துடன் செயல் புரிவோமாக. அப்பால் கஷ்டங்களெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் மறைந்துவிடும்.

# 16

# ஆங்கிலத்தின் ஸ்தானம்

**கேள்வி :** இத்திட்டத்தில் ஆங்கிலத்தின் ஸ்தானம் என்ன? அதைக் கட்டாய பாடமாக்க வேண்டுமா? அல்லது இரண்டாவது மொழியாக விருப்பப் பாடமாக மாத்திரமே போதிக்க வேண்டுமா?

**பதில் :** அதனிடம் குறைபாடுகளிருந்தாலும், என்னுடைய தாய்ப்பாலை நாடுவதைப் போலவே, என்னுடைய தாய் மொழியை நான் பற்றிக் கொள்வேன். அது ஒன்றே எனக்கு உயிர்ப்பால் ஊட்டும். ஆங்கிலத்தின் மீது எனக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. ஆனால் அது அதற்குரிய சொந்த ஸ்தானத்தில் இருக்க வேண்டும். ஏற்கனவே நான் குறிப்பிட்டிருப்பது போல், அதற்கு உரிமையில்லாத இடத்தில் அத்துமீறி வருமானால், நான் அதன் பரம விரோதியாக இருப்பேன்.

# 17

# தாய்மொழியும் ஆங்கிலமும்

கல்வித் துறையில் தொடர்புள்ள ஒருவர் பின்வருமாறு எழுதுகிருர் :

"நீங்கள் கண்காணிப்புடன் இல்லாவிட்டால் நகரப் பகுதிகளில் உள்ள ஆதாரக் கல்வி, கிராமங்களிலுள்ள கல்விக்கு மாறுபட்டதாக இருப்பதைக் காண்பீர்கள். உதாரணமாக, தாய் மொழிக்குத் தீங்கு நேரும்வகையில் ஆங்கிலம் கொண்டுவரப்பட்டு அதன் விளைவாக ஆங்கிலம் கற்றவர் உயர்ந்தவர் என்ற ஒருவித மனப்பான்மை வளரத் தொடங்கிவிடும்."

என்னுடைய திட்டம் கிராமங்களைக் கருத்தில் கொண்டு வகுக்கப்பட்டதென்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அதை விளக்குகையில், இத்திட்டத்தை நகரங்களில் உபயோகிக்கும்போது சில மாறுதல்கள் அவசியம் என்றும் சொல்லியிருந்தேன். கைத்தொழில்களை போதனு முறையாகப் பயன்படுத்துவதையொட்டியே அவ்விதம் குறிப்பிட்டிருந்தேன். ஆனல் ஆரம்பக் கல்வி கட்டத்தில் ஆங்கிலம் இடம் பெறக்கூடுமென்று நான் ஒருபோதும் எண்ணியதில்லை. ஆரம்பக் கல்வி, ஆங்கிலமில்லாத மெட்ரிகுலேஷனுக்குச் சமமாகவே வகுக்கப்பட்டுள்ளது. இதில் சந்தேகத்திற்கே இடமில்லை. குழந்தைகள் மீது ஆங்கிலத்தைத் திணிப்பது, அவர்களுடைய இயற்கையான வளர்ச்சி குன்றும்படி செய்வதுடன், அவர்களுடைய கற்பனு சக்தியையும் கொன்றுவிடக் கூடும், மொழியைக் கற்பதென்பது, அடிப்படையில் ஒருவனுடைய ஞாபக சக்தியை வளர்ப்பதாகும். ஆரம்பத்திலேயே ஆங்கிலம் கற்பதென்பது, குழந்தைக்கு அனுவசியமான ஒரு சுமையாகிவிடும். தாய்மொழியை இழக்கும் விதத்தில்தான் அவன் அதைக் கற்க நேரிடும். தாய்மொழி என்ற உறுதியான பாதையை அஸ்திவாரமாகக்கொண்டே குழந்தையின் வளர்ச்சி இருக்க வேண்டும். இது, கிராமக் குழந்தையைப் போலவே நகரக் குழந்தைக்கும் அவசியமென்று நினைக்கிறேன். துரதிருஷ்டவசமாக இந்தியா ஒன்றில்தான், தெளிவாகத் தெரிந்த இவ்விஷயத்தை வற்புறுத்த ருசுவும், விளக்கமும் தேவையாக இருக்கின்றன.

—'ஹரிஜன்' – 9—9—1939

# 18

# வைத்தியப் பயிற்சிக்கு இடம் உண்டா?

ஆஷா தேவி தம்முடைய தொண்டில் ஆழ்ந்தவர், அனாவசிய மாக என்னுடைய நேரத்தை வீணாக்க விரும்பாதவர். இருப்பி னும், நான் டில்லிக்குப் புறப்படுவதற்கு முன் ஐந்து நிமிஷநேரம் என்னைக் கண்டு பேசுவதற்காக அவர் வந்திருந்தார். தாலீமி சங்கத்தில் உள்ள ஆசிரியர்களுக்கு வைத்தியப் பயிற்சி பெற வேண்டியது அவசியமா? டாக்டர்களைப் போலவே அதே நான்கு அல்லது ஐந்து வருட வைத்தியப் படிப்பு தமக்கும் தேவையா? இதைப்பற்றி என் கருத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவே ஆஷா தேவி வந்திருந்தார். எவ்வளவுதான் முயன்ற போதினும், பழைய கல்வி முறையின் கீழ் எம். ஏ. பட்டம் பெற்ற ஆஷா தேவியைப் போன்றவர்கள், அதன் செல்வாக்கிலிருந்து அடி யோடு விடுபடுவது எவ்வளவு கடினம் என்பதை உடனே நான் உணர்ந்தேன்.

பெருமையடித்துக் கொள்ளக் கூடிய கல்லூரிப் பட்டம் எதுவும் எனக்கு இல்லை. உயர்நிலைப் பள்ளியில் நான் கற்ற சிற்றறிவுக்குக் கூட மதிப்பு வைப்பதை நான் மறந்து நெடு நாளா கிறது. இயற்கை சிகிச்சையின் ஊற்றில் திளைத்தவன் நான். எனவே, நான் அவரிடம் சொன்னேன் :

"எவ்விதம் உடலை திடமாக வைத்துக் கொள்வது, தாங் களும், தங்களுடைய சுற்றுப் புறமும் ஒவ்வொரு விதத்திலும் சுத்தமாக இருப்பதற்கு என்ன செய்வது என்பதை நமது குழந்தைகள் முதல் பாடமாக கற்றுக் கொள்ள வேண்டுமென்று நீங்கள் சொல்கிறீர்கள். உங்களுக்குத் தேவையான வைத்திய அறிவு முழுதும் இதில் அடங்கியிருக்கிறது என்று நான் உங்க ளுக்குச் சொல்லுகிறேன். நமது கல்வி கோடிக்கணக்கான கிராம வாசிகளுக்காக, அவர்களுடைய நன்மைக்காக உத்தேசிக் கப்பட்டதாகும். அவர்கள் இயற்கையைச் சார்ந்து வாழ்பவர்கள்; அப்படியிருந்தும் அவர்களுக்கு இயற்கை விதிகள் தெரியாது. தங்களுக்குத் தெரிந்த சிறிதளவு அறிவையும் அவர்கள் நடை முறையில் அனுசரிப்பதில்லை. கிராமவாசிகளின் பரிதாபகர மான நிலையைக் குறித்து நாம் அறிந்தவற்றிலிருந்து பிறந்ததே 'நயீ தாலீம்'. அதனால், நூல்களிலிருந்து நயீ தாலீமைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ள முடியாது. நாம் இதுவரை அறிந்த தனைத்தும் இயற்கையின் ஏட்டிலிருந்து பெற்றதாகும். அதே போல, நாட்டு வைத்தியத்தையும் இயற்கையிலிருந்துதான் கற்றுக் கொள்ள வேண்டும். ஆரோக்கியம், சுகாதாரக் கொள்கை களைக் கற்றறிந்து அவ்விதிகளுக்கேற்பவும், அதே சமயம் தகுந்த புஷ்டி உணவு முறைகளுக்கேற்பவும் நடக்க வேண்டும்; இதுவே

இயற்கை சிகிச்சையின் சாரமாகும். இவ்விதம் ஒவ்வொருவரும் தனக்குத்தானே டாக்டராக இருக்க முடியும். உயிர் தரிப்ப தற்காக உணவருந்தி, பஞ்ச பூதங்களான மண், நீர், ஆகாயம், சூரியன், காற்று ஆகியவற்றுடன் தோழமை கொண்டு, இவற் றுக்கெல்லாம் சிருஷ்டி கர்த்தாவான ஆண்டவனுக்குத் தொண்ட ஞக இருக்கும் எவரும் நோய்வாய்ப்படமாட்டார். அவர் அவ் வாறு வாழ்ந்தால், ஆண்டவனிடம் நம்பிக்கை பூண்டு நிம்மதியாக வாழ்ந்து சாந்தமாக இறப்பார். அவரது கிராமத்தின் வயல்களில் ஏதாவது மூலிகைகள் இருந்தால், அவற்றை அவர் உபயோகிக்க லாம். கோடிக்கணக்கான மக்கள் சிறிதும் முணுமுணுக்காமல் இம்மாதிரி வாழ்ந்து, மடிகிறார்கள். அவர்கள் டாக்டரைப் பற்றி அதிகமாகக் கேள்விப்பட்டிருக்கமாட்டார்கள். அவர்கள் டாக் டரை நேரில் பார்த்திருக்கமாட்டார்கள் என்பதும் நிச்சயம். நாம் உண்மையில் கிராம மனப்பான்மை கொண்டவர்களாக வேண்டும். கிராமக் குழந்தைகளும், வயதானவர்களும் நம்மிடம் வருகிறார்கள். உண்மையாக வாழ்வது எப்படி என்பதை நாம் அவர்களுக்கு போதிப்போம். சுகாதாரக் குறைவு, தவறான உணவை உட்கொள்வது, ஊட்டமின்மை ஆகியவைதான் நூற்றுக்கு 99 நோயாளிகள் துன்பப்படுவதற்குக் காரணமாகும் என்று டாக்டர்கள் உறுதியாகக் கூறுகிறார்கள். இந்த 99 சத விகிதம் பேருக்கு வாழும் கலையைப் போதித்தால், மீதியுள்ள ஒரு சத விகிதம் பேரை மறந்துவிட்டாலும் பாதகமில்லை. டாக்டர் சுசீலா நய்யாரைப்போன்ற தரும சிந்தை மிக்க வைத்தியர் அவர் களுக்குக் கிடைக்கலாம். அவர்களைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. இன்று சுத்தமான தண்ணீர், நல்ல நிலம், இளங் காற்று ஆகியவற்றை நாம் அறியோம். ஆகாயத்தின், சூரிய ஒளியின் அளவிலா மதிப்பு நமக்குத் தெரியாது. இந்தப் பஞ்ச பூதங்களையும் விவேகத்துடன் பயன்படுத்துவோமாயின், தகுந்த உணவை அருந்துவோமாயின், நாம் பல யுகங்கள் செய்ய வேண்டிய வேலையைச் செய்தவர்கள் ஆவோம். இந்த அறிவைப் பெறுவதற்கு நமக்குப் பட்டங்களோ அல்லது கோடிக்கணக்கில் பணமோ தேவையில்லை. நமக்கு வேண்டியதெல்லாம், ஆண்டவ னிடம் அழிவிலா நம்பிக்கையும், தொண்டு புரியும் ஆர்வமும், இயற்கையின் பஞ்ச பூதங்களையும் ஊட்டமளிக்கும் உணவையும் பற்றிய அறிவுமேயாகும். இதையெல்லாம் பள்ளிகளிலும், கல்லூரி களிலும் நேரத்தை வீணுக்காமலே பெற முடியும்.”

—'ஹரிஜன்' – 1—9—1946

# 19

# கல்வி நிபுணர்களிடையே

பாட்ணுவில் 1947 ஏப்ரல் மாதம் 22, 23 தேதிகளில் நடந்த ஹிந்துஸ்தானி தாலீமி சங்கக் கூட்டத்தில், அதன் அங்கத்தினர் களிடையே காந்திஜி தமது உள்ளத்திலிருப்பதைக் கொட்டிப் பேசினர். காந்திஜி கூறியதாவது :

"வரவு-செலவு திட்டம் பற்றி விவாதிக்கையில், எடுத்த எடுப்பிலேயே அரசாங்கத்தை நம்பியிருக்கும் மன நிலை உங் களுக்கு இருக்கக் கூடாது. நாம் கோரும் அளவுக்கு எவ்வளவும் தருவதற்கு அவர்கள் தயாராக இருப்பார்கள். ஆனால், அவர்களை நம்பியிருக்கத் தொடங்கிவிட்டால் அதோடு 'நயீ தாலீமு'க்கு முடிவு கட்டிவிட வேண்டியதுதான். மூன்று ஆண்டுகளுக்கான வரவு-செலவு திட்டம் சமர்ப்பிக்கப்பட்டுளது. அக்கால முடிவில் இவை முழுதும் தன்னைக்கட்டிக் கொண்டு போவதாக இருக்க வேண்டும். ஆதலால் அதற்கேற்ப வரவு செலவு திட்ட மதிப்பீடு களை அமைக்க வேண்டும். அக்கால முடிவில் அவர்கள் வெற்றி பெற முடியாவிடில் நாட்டின் முன்னிலையில் தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டும். தோல்வியை நன்கு உணர்ந்து கொண்டு விட்டால், தோல்வியே வெற்றியை எட்டுவதற்கான ஒரு படியாக இருக்கும்."

## உங்கள் எல்லைகளை உணருங்கள்

சென்னையில் ஹிந்துஸ்தானி தாலீமி சங்கம் பயிற்சிப் பள்ளி நடத்த வேண்டுமென்றும், அதற்கான செலவை சென்னை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளுமென்றும் சென்னைக் கல்வி மந்திரி ஸ்ரீ அவிஞசிலிங்கம் செட்டியார் கூறினர். அக்கோரிக்கையைப் பற்றிப் பேசுகையில், காந்திஜி குறிப்பிட்டதாவது :—"உங்க ளுடைய சக்திக்கு மீறிய பணிகளை நீங்கள் மேற்கொள்ளக் கூடாது. அவ்விதம் ஏற்றுக் கொண்டால் நீங்கள் உங்களுடைய சொந்த சக்தியை வீணுக்கிக் கொள்ளுவதுடன், சென்னை அரசாங் கத்தையும் தரும சங்கடத்திற்கு உள்ளாக்கியவர்களாவீர்கள். இன்று அதிகாரத்தை மேற்கொண்டுவிட்டதால், காங்கிரஸ் அரசாங்கங்களின் கைக்கு கோடிக் கணக்கில் தொகை வந்துள் ளது. தங்களிடம் போதுமான அளவுக்கு பணியை ஏற்கவும், வெற்றியை உறுதியாக்கவும் ஆசிரியர்கள் இருக்கும்பட்சத்தில், சாதக பாதகங்களை சீர்தூக்கிப் பார்த்து ஸ்தாபனத்தை நடத்த வேண்டியது சங்கத்தின் கடமையாகும். உங்களுடைய சக்தியின் எல்லையை அறிந்து கொள்வது நல்லது."

## மூன்று அம்ச அபிவிருத்தி

காந்திஜி தொடர்ந்து கூறினர் :

"நமது கல்வி முறை மனம், உடல், ஆன்மா ஆகிய மூன்றின் வளர்ச்சிக்கும் வழி செய்வதாக இருக்கிறது. சாதாரணக் கல்வி முறை மனத்தை மட்டுமே கவனிக்கிறது. 'நயீ தாலீம்' என்பது சிறிதளவு நூற்பு, சிறிதளவு குப்பைகளைப் பெருக்கி சுத்தம் செய்வது ஆகிய போதனையுடன் நின்றுவிடுவதல்ல; அவை எவ்வளவுதான் இன்றியமையாதவை என்றாலும், மேலே குறிப்பிட்ட மனம், உடல், ஆன்மா ஆகியவற்றின் ஒருமுகமான வளர்ச்சியை மேம்படுத்தினலன்றி, புதிய திட்டத்தினல் யாதொரு பலனுமில்லை. இன்று நான் வேறு பணியில் ஈடுபட்டிருக்கிறேன். எனினும், 'நயீ தாலீம்' ஒருபோதும் என் மனத்தை விட்டு அகலுவதில்லை."

## கதரின் ஸ்தானம்

'நயீ தாலீமி'ல் கதரின் ஸ்தானம் பற்றி அடுத்தாற்போல காந்திஜி எடுத்துரைத்தார் : "1908-ல் தென்னப்பிரிக்காவில் இருக்கும்போது என் மனத்தில் கதர் முக்கியமான ஸ்தானத்தைப் பெற்றது. இதைவிட சிறந்த சர்வ அம்ச கிராமக் கைத்தொழிலை அறிந்திருந்தால், கதர் அடிப்படையில் 'நயீ தாலீம்' அமைவதை நான் வலியுறுத்த மாட்டேன். எல்லோரும் நாள் தோறும் ஒரு மணி நேரம் நூல் நூற்ருல், இந்தியா அதன் தேவைக்கு வேண்டிய துணிகளையெல்லாம் உற்பத்தி செய்து கொள்ள முடியும். ஆனல், அதற்கு நாள் ஒன்றுக்கு ஆறு மணி நேரம் தேவைப்படுமானல், அப்பால் கதருக்கு இடமில்லை, ஏனென்ருல், மக்கள் செய்யவேண்டிய மற்ற அலுவல்களும் உள்ளன அல்லவா? அவர்கள் உணவு உற்பத்தி செய்ய வேண்டும்; சிறிதளவு அறிவுப் பணியும் செய்ய வேண்டும். நயீ தாலீமில் அடிமைகளை விரட்டுவதற்கு இடமில்லை. நூற்பில் ஈடுபடும் ஒரு மணி நேரமும், நூற்பாளரின் ஒரு மணி நேர சுயவளர்ச்சிக்கு ஒப்பாகும்."

## கதரும் ஆதாரக் கல்விக்குப் பின்பும்

"சையத் தெயின் சாகிப் ஆதாரக் கல்விக்கு மேல்படிப்புக் கட்டத்திலாவது, பஞ்சாலை முறைகளைச் சொல்லித்தர வேண்டும் என்ருர். அதை நான் ஏற்க முடியாது. ஆதாரக் கல்விக்கு மேல் படிப்பு கட்டத்திலும் கை நூற்பு போதனு முறைதான் சிறந்தது. எனவே, கோடிக்கணக்கான மாணவர்களுக்கு அவசியமான அந்தத் தொழிலில் விதி விலக்கு அளிக்க முடியாது. தக்ளி, துடைப்பம் பற்றித் தாம் எழுதிய கட்டுரையை நேற்று தேவ் பிரகாஷ் காட்டினர். அவர் எழுதியுள்ளது அத்தனையும் உண்மையாக இருந்தால், இவ்விரு முறைகளையும் கற்றுக் கொள்வதில்

மிகுந்த அறிவைப் பெற முடியும். இதை, ஆதாரக் கல்வி காலத்திற்குள் பூர்த்தி செய்ய இயலாது. எல்லோருடைய நன்மைக்கும் பொருந்தக்கூடிய வகையில் இந்த அத்தியாவசியக் கைத்தொழில்களின் விஞ்ஞானத்தையெல்லாம் உருவாக்கவில்லை. நம்மிடமுள்ள குறை இதுதான். பஞ்சாலை நூற்பு, நெசவுக்கு அடிப்படை தக்ளியும், கைத்தறியுமாகும். நம்மைச் சுரண்ட வேண்டியிருந்ததால், மேனாட்டில் பஞ்சாலைகளை உற்பத்தி செய்தார்கள். நமக்கு எவரையும் சுரண்ட வேண்டிய தேவையில்லை. ஆகையால், நமக்குப் பஞ்சாலைகள் தேவையில்லை; ஆனால் நமக்கு தக்ளி, கைத்தறி பற்றிய விஞ்ஞானம் தெரியவேண்டும். இதிலெல்லாம் நாம் மேனாட்டினரைக் காப்பியடித்தால், அது இந்தியாவுக்கும், உலகுக்கும் அழிவைத் தேடுவதாகும்.''

## கதரும் பஞ்சாலைகளும்

பள்ளிகளிலிருந்து வரும் பையன்கள் வேலைக்காகப் பஞ்சாலைகளை எதிர்பார்த்துக் கொண்டிப்பதால், கல்வி நிபுணர்கள் இக்கருத்தையொட்டிச் சிந்தை செய்வது சிரமமாயிருக்கிறது என்று டாக்டர் ஜாகிர் ஹுசேன் சொன்னார்.

அவருக்கு பதிலளிக்கையில் காந்திஜி கூறியதாவது : ''என் கருத்துக்கு இசைய அமைந்த பள்ளியில் தேறிவரும் பையன்கள் வேலைக்காகப் பஞ்சாலைகளை எதிர்பார்க்க மாட்டார்கள். உண்மையில் சொல்லப் போனால், கதரும், மில் துணியும் அடுத்தடுத்துள்ள இடங்களில் விற்கலாகாது. நமது பஞ்சாலைகள் தங்கள் துணிகளை இந்தியாவுக்கு வெளியில் விற்கவேண்டும். லங்காஷயரில் உற்பத்தியாகும் துணிகள் இங்கிலாந்தில் கிடைப்பதில்லை. அவை முழுவதும் வெளிநாடுகளுக்கே ஏற்றுமதி செய்யப்படுகின்றன. நமது பஞ்சாலைகளும் துணிகளை அயல் நாட்டுச் சந்தைகளில் நீண்ட காலத்திற்கு விற்க முடியாது.''

## நம்முடைய வழி

''ஆயினும், சுற்றிலும் சூழ் நிலை முழுவதும் பஞ்சாலைகள் பற்றிய பேச்சாகவே இருப்பதால், உங்களுடைய சங்கடத்தை என்னால் உணர முடிகிறது. நமது மந்திரிகளும்கூட பஞ்சாலைகளைப் பற்றியே பேசுகிறார்கள். நம்முடைய கொள்கைக்காக நாம் உயிரைக் கொடுக்க வேண்டும்; அதுதான் நமக்கு முன்னுள்ள வழி. கதரின் உண்மையில் நமக்கு நம்பிக்கை இருக்குமாயின், அதற்காக உயிர்வாழ வேண்டும்; அதைப் பரப்ப வேண்டும்; தேசீய நன்மைக்காக சரியான பணியையே செய்து கொண்டிருக்கிறோம் என்பதை மந்திரிகள் உணரும்படி செய்ய வேண்டும்.

'' காங்கிரஸ், ஹிந்துஸ்தானி தாலீமி சங்கத்தை அமைத்தது; ஆனால் அதில் எவ்வித அக்கறையும் காட்டவில்லை. அதே

போல, சர்க்கா சங்கமும் காங்கிரஸின் சிருஷ்டியே. ஆனால் காங்கிரஸ் அதில் அக்கறை காட்டி அதைத் தனது சொந்த மாக்கிக் கொள்ளவில்லை. இன்று இந்த நிறுவனங்களையெல்லாம் யார் கவனிக்கிறார்கள்? காங்கிரஸ்காரர்களும் சற்று பணமும், சற்று அனுபவமும் மட்டுமே இருந்தபோது நிர்மாண வேலைகளில் சிறிது கவனம் செலுத்தினார்கள். ஆனால் இன்று அரசாங்கம் முழுவதும் நமது கையில் இருக்கிறது. மந்திரிகளின் கைக்கு வந்த அதிகாரத்தை அவர்கள் இன்னும் ஜீரணித்துக் கொள்ளவில்லை. அதற்கு அவர்களுக்கு பல நாட்களாகும்."

## அதே செல்வாக்கில்லை

"நயீ தாலீமின் பணி ஒரு புதிய சமூக ஒழுங்கைப் பரப்புவதே என்பதைத் தாங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். அதிகாரம் வகிக்கும் மந்திரிகள் ஒருக்கால் சங்கத்தின் கருத்தைப் பரிபூரணமாகப் பகிர்ந்து கொள்ளவில்லை என்று தோன்றுகிறது. அரசாங்கமும், சங்கமும் இணக்கமாக நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள உதவ வேண்டும்; இல்லையெனில் சங்கம் மறைந்துவிட வேண்டும்" என்று காந்திஜியிடம் டாக்டர் ஜாகிர் ஹுசேன் கேட்டுக் கொண்டார். அவருக்குப் பதிலளிக்கையில் காந்திஜி கூறியதாவது: "முன்பிருந்தது போல, அவ்வளவு செல்வாக்கு இப்போது எனக்கு இல்லை என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அரசாங்கத்தின் அசிரத்தைக்காக அவர்களை நான் குறைகூறவில்லை. அவர்களுக்கு ஒரு ஸ்தாபனம் கிடைத்துள்ளது. அதை வைத்துக் கொண்டு அவர்கள் பணிபுரிய வேண்டும். நான் மந்திரியாக இருந்திருந்தால், நானும் இதைப்போலவே நடந்து கொண்டிருப்பேனோ, என்னவோ? ஆயினும், பண்டித ஜவாஹர்லாலுடனும், மற்றவர்களுடனும் இவ்விஷயங்களைப்பற்றிப் பேசி வருகிறேன். கல்வி நிபுணர்களின் கடமைகளிலொன்று விஷயங்களை விளக்குவதாகும் அல்லவா?"

**டாக்டர் ஜாகிர் ஹுசேன்:** "காங்கிரஸ் அதன் கல்விக் கொள்கைகளை மந்திரிகளுக்கு ஒருபோதும் விளக்கிக் கூறுவதில்லை. இதில்தான் குறையெல்லாம் இருக்கிறது. இங்கு வருவதற்கு முன் மௌலானா அபுல்கலாம் ஆஸாதைச் சந்தித்தேன். அவர் அனுதாபம் தெரிவித்தார்; சங்க அங்கத்தினர்களைச் சந்திக்க விரும்புவதாகக் கூறினார். அவரைப் பார்ப்பதென சங்க உறுப்பினர்கள் முடிவு செய்துள்ளனர்."

**காந்திஜி:** "ஆரம்பத்திலேயே உங்களை அரசாங்கம் அழைத்திருக்க வேண்டும். சங்கத்தின் மேற்பார்வையில் ஸ்ரீ சார்ஜண்ட் வேலை செய்யவேண்டும். அவர்கள் உங்களுக்கு அழைப்பு அனுப்ப வேண்டுமென்று அரசாங்கத்துக்கு நான் யோசனை கூறியிருந்தேன்."

## மதக் கல்வி

**டாக்டர் ஜாகிர் ஹுஸேன் :** "மதக் கல்வி சம்பந்தமாக நமது பள்ளிகளில், மதத்தை அறிந்தவர்கள் வந்து கற்றுக் கொடுப்பதற்கான வசதிகளைச் செய்து மதக் கல்விக்கான நேரத்தையும் ஒதுக்க வேண்டும். அனாவசியமாக அரசாங்கம் தலையிடுகிறது என்ற எண்ணம் ஏற்படாமல் தவிர்க்க வேண்டும். இவ்விஷயத்தில் அரசாங்கம் இதற்குமேல் எதுவும் செய்யக் கூடாது."

**காந்திஜி :** "இதைப் பற்றி நீங்கள் மௌலானா சாகிபுடன் பேசிக் கொள்ள வேண்டும். அரசாங்கம் மதக் கல்விக்கு வசதி செய்வதென்பதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. தவறான வகையைச் சேர்ந்த மதக் கல்வியைப் புகட்ட விரும்பும் சிலர் இருக்கக் கூடும். அவர்களை உங்களால் தடுக்க முடியாது. அவ்வாறு செய்ய முயன்றால், அதன் விளைவு இன்னும் மோசமாக இருக்கும். சட்டம், ஒழுங்கு அல்லது ஒழுக்கத்துக்கு பங்கமில்லாத வகையில், மதக் கல்வி புகட்ட விரும்புவோர் தமது சொந்தப் பொறுப்பில் அதைச் செய்யலாம். பொதுவானதும், எல்லாக் கட்சியினரும் சம்மதிக்கக்கூடியதுமான கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட தார்மிக முறைகளை மட்டுமே அரசாங்கம் கற்பிக்க முடியும். ஏனெனில், நமது அரசாங்கம் மதச் சார்பு எதுவும் இல்லாத அரசாங்கம் அல்லவா ?"

## அத்தாட்சிப் பத்திரங்கள்

ஆதாரக் கல்வியில் தேறிச் செல்லுவோருக்கு அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்குவதைப் பற்றிய பிரச்னை எழுந்தது. அதற்கு சுருக்கமான, திட்டவட்டமான பெயர் இருக்க வேண்டுமென்றும், சிறிதுகூட மிகைபடுத்தாமல், அபேட்சகரின் தகுதிகளைத் தெளிவான ஹிந்துஸ்தானியில் அத்தாட்சிப் பத்திரத்தில் குறிப்பிட வேண்டுமென்றும் காந்திஜி கூறினார். "ஒரு விஷயத்துக்கு ஆடம்பரமான பெயர் கொடுத்து, அதன் மதிப்பு அதற்கு ஈடாக இல்லையெனில், அதை வழங்குவோருக்கு அது பெருமை தருவதாக இராது" என்றார் காந்திஜி.

## கூட்டுக் கல்வி

தாலீமி சங்கத்தின் கூட்டுக் கல்விக் கொள்கை, சென்னைக்கு உகந்ததல்லவென்று சென்னைக் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியார் குறிப்பிட்டார். அவர் மேலும் கூறியதாவது : "குழந்தைகளிடையிலும், வயதானவர்களிடையிலும் கூட்டுக் கல்வி இருப்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. வயது வந்தவர்களுக்கு தங்களுடைய மனோ நிலை தெரியும். 15 அல்லது 16 வயது எதையும் எளிதில் நம்பும் பருவமாதலால், அப்போது கூட்டுக் கல்வி அளிப்பதை நான் ஆதரிக்கவில்லை. அந்த வயதில்தான்

பெரும்பாலோரான பெண்களும் பயிற்சிப் பள்ளிகளுக்கு வருகிறார்கள்.''

ஆனால் காந்திஜி அவரது கருத்தை ஏற்கவில்லை. ''உங்கள் பள்ளிக்கூடங்களில் கூட்டுக் கல்வியை வைத்துக் கொண்டு உங்கள் பயிற்சிப் பள்ளிகளில் வைத்துக் கொள்ளவில்லை என்றால், எங்கேயோ ஏதோ தவறு இருப்பதாகக் குழந்தைகள் நினைத்துக் கொள்வார்கள். தவறு ஏதாவது நேருவதாக இருப்பினும், எனது குழந்தைகளை அப்பள்ளிகளுக்குச் செல்ல நான் அனுமதியளிக்க வேண்டும். ஆண்-பெண் என்ற இந்த மனோபாவத்தை ஏதாவதொரு நாள் நாம் விட்டொழிக்க வேண்டியிருக்கும். மேனாட்டிலிருந்து நாம் உதாரணங்களைக் கொண்டுவரக் கூடாது. பயிற்சிப் பள்ளிகளிலும் கூட, ஆசிரியர்கள் புத்திசாலிகளாகவும், தூய்மையானவர்களாகவும், 'நயீ தாலீம்' உணர்ச்சி நிரம்பியவர்களாகவும் இருந்தால், எவ்வித அபாயமும் ஏற்படாது. ஏதோ தற்செயலாக சில நிகழ்ச்சிகள் நடப்பதாக வைத்துக் கொள்வோம். நாம் அவற்றைக் கண்டு பயந்து விடக்கூடாது. அவை எந்த இடத்திலும் நிகழக் கூடியவைதான். நான் இவ்விதம் துணிச்சலாகச் சொல்லிவிட்ட போதிலும், அதிலுள்ள அபாயங்களை நான் அறியாமலில்லை. பொறுப்பு வாய்ந்த மந்திரி என்ற முறையில் நீங்கள்தான் நன்கு யோசித்து, அதற்கேற்ப செயலாற்ற வேண்டும்.''

## கதரும் சுய ஆதரவும்

தன்னைக்கட்டிக் கொண்டு போகும் நிலைபற்றிப் பேசுகையில் வேறு சில தொழில்களைவிட, உதாரணமாக தச்சு வேலையைவிட நூற்பு, நெசவுத் தொழில் மிகக் குறைவான வருமானம் தரக் கூடியதாக இருக்கிறது என்று ஸ்ரீ ஜாஜூஜி சொன்னார். ஏழு ஆண்டுகள் பயிற்சிக்குப் பிறகும் கூட, ஆதாரக் கல்வி கட்டத்திலிருந்து தேறிவரும் மாணவர்கள் தன்னைத்தானே ஆதரித்துக் கொள்ளும் நிலையில் இருப்பார்களா என்பது சந்தேகம்தான் என்றும், சர்க்கா சங்க விகிதப்படி அவர்கள் நாளொன்றுக்கு ஆறு அல்லது எட்டு அணாதான் சம்பாதித்துக் கொள்ள முடியும் என்றும் அவர் கூறினார்.

காந்திஜி சொன்னதாவது:—'' நாம் பணத்தை மையமாக வைத்துக் கொண்டு சிந்திக்கலாகாது. நம் எல்லோருக்கும் துணி தேவையாக இருக்கிறது. ஆகவே, நமது நடவடிக்கைகளுக்கெல்லாம் கதர்தான் நடுநாயகமாக இருக்கிறது. ஏழு லட்சம் கிராமங்களுக்குத் துணி வழங்க வேண்டிய பிரச்னை நம்முன் உள்ளது. நெசவாளிகளுக்கு அதிகக் கூலி விகிதங்கள் கொடுத்து நமது நூல்களை நெய்து கொள்கிறோம். நூற்பு விஷயத்தில் சொன்னது போல, ஒவ்வொருவரும் நெசவும் கற்றுக் கொள்ள வேண்டுமென்று நான் வற்புறுத்தாதது எனது தவறு ஆகும். ஆயினும், அதற்காகச் செலவு செய்யும் நேரம் அதிகமில்லை

என்பதை நாம் கவனிக்க வேண்டும். நமக்குள்ள நேரம் முழுவதும் அதிலேயே ஈடுபடுவதாக இருந்தால், நாம் அவ்விஷயமாகப் புனராலோசனை செய்ய வேண்டியிருக்கும்.''

## அன்புப் பணி

''நயீ தாலீம் ஆசிரியர், கைத்தொழில் கல்வி நிபுணராக இருப்பார். ஊதியத்துக்காக மட்டும் அவர் அத் தொழிலில் ஈடுபட்டவராக இருக்கமாட்டார். சம்பளம் அல்லது ஊதியம் என்பது மோசமான சொல் ஆகும். அவர் பெறும் தொகைக்குத் தகுதி வாய்ந்த தொழிலாளியாக அவர் இருப்பார். அவரது மனைவி மக்களும் தொழிலாளிகளாகவே இருப்பார்கள். இம் முறையில்தான் உண்மையான கூட்டுறவு உதயமாகும். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் இவ்விதத்தில்தான் நயீ தாலீம் பரவ முடியும்.''

## விவசாயம்-ஆதாரக் கைத்தொழில்

''விவசாயத்தை ஏன் அடிப்படைக் கைத்தொழிலாக வைத்துக் கொள்ளக் கூடாது என்று சிலர் கேட்கிறார்கள். நூற்பதில் உள்ள கல்வி போதனைச் சாத்தியக் கூறுகள் இதில் இல்லை என்பதே எனது பதிலாகும். உதாரணமாக, நூற்பதிலுள்ள கைலாகவத்தை இது வளர்க்க முடியாது. தொழிலை போதிப்பது மட்டும் நயீ தாலீமின் அலுவல் அல்ல, அதன் மூலம் முழு மனிதனையும் உருவாக்குவதே அதன் நோக்கமாகும்.

''நான் விவசாயத்திலிருந்து ஆரம்பிக்காவிட்டாலும், கடைசியில் அது வந்தே தீரும். ஏனென்றால், புதிய கல்வியின் துறை விரிவானது. என் உத்தேசப் பள்ளியின் மாணவர்களும், ஆசிரியர்களும் தங்களுக்குத் தேவையானதையெல்லாம் ஒன்று சேர்ந்து தேடிக் கொள்ள வேண்டும். நயீ தாலீம் ஆசிரியர் முதல் தர கைத்தொழில் நிபுணராக இருக்க வேண்டும். அப்பால், கிராமத்திலுள்ள எல்லாக் குழந்தைகளும் பள்ளிக்கூடத்தைத் தாங்களாகவே நாடி வருவர். இவ்வாறாக, கல்வி தானாகவே இலவசமான சர்வஜனக் கல்வியாகிவிடும்.

''இன்று கிராமத்தில் பயிராகும் காய்கறிகள், கிராமவாசிகளின் உபயோகத்திற்குக் கிடைப்பதில்லை. இந்தியாவில் இன்றைய நிலைமை இதுதான். திருவாங்கூர் கிராமங்களில் உள்ளவர்கள் அங்கு காய்க்கும் தேங்காய்களைப் பயன்படுத்த முடியாது. அவை ஓரிடத்தில் திரட்டப்பட்டு, நகரங்களுக்கு அனுப்பப்படுகின்றன. எங்கு ஆதாரப் பள்ளிகள் வருகின்றனவோ அங்கெல்லாம் இந்த முரண்பாடுகள் மறைந் தொழியும். மேலும், இன்று அதிகப் பணம் கிடைக்கக்கூடிய அபினி, புகையிலை, பருத்தி முதலிய பயிர்களைச் சாகுபடி செய்கிறோம். ஆனால் நயீ தாலீம் முறையில் பயிற்சிபெற்றவர்கள், தங்களுக்குத் தேவையான உணவுப் பயிர்களையே சாகுபடி செய்வார்கள்.''

—'ஹரிஜன்' - 9—11—1947

பகுதி பதின்மூன்று

# ஆதாரக் கல்வி கண்ட முடிவுகள்

## 1

## நூற்பும் ஒழுக்கமும்

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கர்நாடகக் கிளைக் காரியதரிசி, குடியேற்றப் பள்ளிகளில் நடந்த நூற்புப் பயிற்சி பற்றிய பின்வரும் அறிக்கையை அனுப்பியிருக்கிறார்:-

''பீஜபூரிலும், கடாக்கிலும் உள்ள குடியேற்றங்களில் வேலையில்லாமல் இருக்கும் குடிகளுக்கு பஞ்சடித்தலும், நூற்பும் போதிக்க போதகர்களை அகில இந்திய நூற்போர் சங்கத்தின் கர்நாடகக் கிளை அனுப்பியிருப்பதாகப் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது. ஹூப்ளி குடியேற்ற மானேஜர் ரெவரண்ட் ஆர். என். அஷர் வில்ஸன், அக் குடியேற்றத்திலுள்ள இளங் குற்றவாளிகள் சீர்திருத்தப் பள்ளி சூபரின்டெண்டு ஸ்ரீமதி ஈ. டபிள்யு பிரிஸ்கோ இருவரும் அதைப் படித்தனர். ஹூப்ளி குடியேற்றத்தில் கூடத் தாங்கள் இப்பரீட்சையை முயன்று பார்த்தால் என்னவென்று அவர்கள் யோசிக்கலாயினர். ரெவரெண்ட் வில்ஸனும், ஸ்ரீமதி பிரிஸ்கோவும் காட்டிய உற்சாகமும், ஆர்வமும்தான் ஹூப்ளி குடியேற்றத்தில் இப்பணியை ஏற்கும்படி இக்கிளை ஸ்தாபனத்தைத் தூண்டியது.

''சிறுவர்களுக்கான இடைக்கால விடுதியில் நாங்கள் இப்பணியை மேற்கொண்டோம். 8 வயது முதல் 11 வயதுவரை எல்லா வயதுப் பிள்ளைகளுமாக 33 பேர் இந்த விடுதியில் இருந்தனர். சூபரின்டெண்டின் மேற்பார்வையில் இருக்க வேண்டும் என்பதற்காக, பையன்களின் போஷகர்களோ அல்லது போலீஸ்காரர்களோ, பையன்களை இந்த இடைக்கால விடுதியில் விட்டு வைத்தனர். ஓடுகாலித்தனம் அல்லது சில்லறைக் களவுகள் செய்யும் போக்கு காரணமாகவே பையன்கள் வழக்கம்போல் இவ் விடுதியில் விட்டு வைக்கப்பட்டனர். குழந்தைகளை நேர்வழிக்குக் கொண்டுவருவது, இடைக்கால விடுதியின் மானேஜர்களுக்கு இயற்கையாகவே கடினமாயிருந்தது. அவர்களில் பலர் ஓடிவிடுவார்கள்; அவர்களைத் தேடிப்பிடித்து மறுபடியும் விடுதிக்குக் கொண்டுவர வேண்டும். இந்தப் பையன்களை நகரிலுள்ள ஆரம்

பப் பள்ளிகளுக்கோ அல்லது உயர்தரப் பள்ளிகளுக்கோ அனுப்ப முடியாது; ஏனென்ருல், அவர்கள் ஓடிவிடுவார்களோ என்ற அச்சம் எப்போதும் இருந்துவந்தது. பையன்களின் மனத்துக்கும், உடலுக்கும் வேலை கொடுக்கக் கூடிய தகுந்த தொழில் எதையும் குடியேற்ற அதிகாரிகளால் கண்டுபிடிக்க இயலவில்லை.

"அதற்காக, அகில இந்திய நூற்போர் சங்கம் போதகர் ஒருவரை அங்கே அனுப்பி வைத்தது, அவர் பையன்களுக்கு மூன்றரை மாதகாலம் பயிற்சியளிக்கும் பணியில் ஈடுபட்டார். பருத்தியை சுத்தப்படுத்துவது, பட்டை போட்டு நூல் நூற்பது ஆகிய எல்லா முறைகளும் ஆந்திர முறையில் அனுசரிக்கப்படுகின்றன. 14 வயது முதல் 16 வயது வரையுள்ள வளர்ந்த பையன்கள் பயிற்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டனர். ஒவ்வொரு பையனும் நாளொன்றுக்கு 1200 கஜம் முதல் 1500 கஜம் வரையில் நூற்கிருன். நூலின் எண் 25 முதல் 30 வரை இருக்கிறது. சிறிது ஊதியத்துடன் கூடிய ஒழுங்கான வேலை செய்யத் தொடங்கியது முதல் சிறுவர்களின் நடத்தையில் மிகுந்த முன்னேற்றம் காணப்படுவதாக இடைக்கால விடுதியின் மானேஜர் எனக்குத் தெரிவித்திருக்கிருர். ஸ்ரீமதி பிரிஸ்கோவின் கடிதம் அதன் சம்பந்தமான எல்லாவற்றையும் அறிவிப்பதாக இருக்கிறது. எனவே, எதையும் சேர்த்துக் கூற நான் விரும்பவில்லை. பிரஸ்தாபக் கடிதத்தை இதோடு இணைத்துள்ளேன்."

எனக்கு வந்துள்ள சூபரின்டெண்டு ஸ்ரீமதி பிரிஸ்கோவின் கடிதம் சுவாரசியமானது. அது பின்வருமாறு:-

"எங்கள் சீர்திருத்தப் பள்ளியில் நாங்கள் நடத்திவரும் நூற்புப் பணியைப் பற்றி தங்களுக்குத் தெரிவிக்குமாறு அகில இந்திய நூற்போர் சங்கம் என்னைக் கேட்டுக் கொண்டுளது.

1. 1940 ஜனவரி மீ 15உ யன்று நூற்பு வகுப்பை ஆரம்பித்தோம்.

2. பையன்களின் வயது 14 முதல் 16 வரை உள்ளது. இதைச் செய்வதில் அவர்கள் எவ்வளவு ஆனந்தம் அடைகிருர்களென்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தோம்.

3. அவர்களுக்காக, செலவு ஏற்படக் கூடிய தொழில் எதையும் ஆரம்பிக்கும் சக்தி எங்களுக்கில்லை; அதனுல் அவர்கள் குறிப்பிட்ட வேலை எதுவுமின்றி சோம்பேறித்தனமாக உட்கார்ந்திருந்தனர். ஆனுல் இப்போது அவர்கள் மகிழ்ச்சியுடன் உள்ளனர்; சுறுசுறுப்பான வேலையில் ஈடுபட்டுள்ளனர். ஆகையால் ஓடிப் போக வேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்கு இல்லை என்று தோன்றுகிறது.

4. நாள் ஒன்றுக்கு சுமார் 5 மணி நேரம் வேலை செய்து, தலா நாள் ஒன்றுக்கு 2 அணு முதல் 2 அணு 6 பைகள் வரை சம்பாதிக்கிருர்கள். நூற்பு வேலையைத் துவக்க, முன் பணமாக தனி நபரால்

கொடுக்கப்பட்ட பணத்தைத் திருப்பித்தருகிறார்கள். அவர்கள் வருமானத்தில் சிறு பகுதி அவர்கள் கையில் கொடுக்கப்படுகிறது. மீதி, அவர்கள் கணக்கில் சேர்த்து வைக்கப்படுகிறது. அவர்கள் விடுதியிலிருந்து வெளியேறும் போது அவர்களிடம் அந்தத் தொகையைக் கொடுக்கும் பொருட்டு இவ்வாறு செய்யப்படுகிறது. சிறுவர்கள் விஷயத்தில் இது இவ்வளவு வெற்றிகரமாக நடந்து வருவதால், பெண்கள் சீர்திருத்த விடுதியிலுள்ள பெரிய பெண்களுக்கும் இவ்வாரத்திலிருந்து இப்போதனையை ஆரம்பித்துள்ளோம். இச் செய்தி உங்களுக்கு மகிழ்ச்சியளிக்குமென நினைக்கிறோம். அதனால் இக்கடிதத்தைத் தங்களுக்கு எழுதுகிறேன். நூற்புப் பணியில் ஈடுபட்டுள்ள சிறுவர்களின் புகைப்படமொன்றையும் அனுப்பியுள்ளேன். அவர்கள் இவ்வளவு மகிழ்ச்சியுடன் இருப்பதை நீங்கள் பாராட்டுவீர்கள்."

நூற்பது, நிதானத்தையும் ஒழுக்கத்தையும் வளர்க்கவல்லது என்பதை மேற்கண்ட கடிதம் நிரூபிக்கிறது. அதை ஊர்ஜிதம் செய்யக் கூடிய சான்றுகள் நிறைய உள்ளன. அவரது சோதனையின் முன்னேற்றம் பற்றி அவ்வப்போது ஸ்ரீமதி பிரிஸ்கோ தமது அறிக்கையைத் தொடர்ந்து அனுப்பிவருவாரென்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 4—8—1940

# 2

# பாலைவனத்தில் ஒரு சோலை

ஆதாரக் கல்வி பற்றி அரசாங்க அதிகாரிகள் சிந்திக்காமல் வெளியிட்டுள்ள பாதகமான விமர்சனம் ஒரு பாலைவனத்தைப் போல் இருக்கிறது. ஆனால் அதனிடையில் பீகார் கவர்னரின் ஆலோசகரான ஸ்ரீ ஈ. ஆர். ஜே. ஆர். கஸின்ஸ் பீகார் ஆதாரக் கல்விப் பள்ளிக்கூடங்களைப் பாராட்டி ஹிந்துஸ்தானி தாலீமி சங்கக் காரியதரிசி ஸ்ரீ அரியநாயகத்துக்கு அனுப்பியுள்ள பின் வரும் கடிதம் மனத்திற்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது :

"பெருமழை காரணமாக, ஆதாரக் கல்விப் பள்ளிகளைப் பார்வையிடச் செல்லும் எனது திட்டம் இடையில் தடைப்பட்டு விட்டது. இதைக் குறித்து நான் வருந்துகிறேன். ஆயினும் 27 பள்ளிகளில் 18 பள்ளிகளின் ஆசிரியர்களையும், மாணவர்களையும் என்னால் சந்திக்க முடிந்தது. பிருந்தாவனம்-ராமபுரம் பகுதியைச் சேர்ந்த 6 பள்ளிகளையும், கௌபிடோலா-பரூக்கியா பகுதியைச் சேர்ந்த 12 பள்ளிகளையும் பார்த்தேன். நான் கண்ட அனைத்திலும் எனக்கு மிகுந்த அக்கறை உண்டாயிற்று. ஏழு வகுப்புகளும் முடியும் வரையில் இந்தச் சோதனையைக் குறித்து முழு அளவுக்குத் தீர்ப்புக் கூற நம்மால் இயலாது. ஆயினும் மாணவர்களின் சுத்தம், அறிவு, தங்கள் பணியில் அவர்கள் காட்டும்

மகிழ்ச்சி எல்லாம் என் மனத்தைக் கவர்ந்தன. அதிலிருந்து சரியான வழியில்தான் நாம் செல்லுகிறோமென்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆதாரக் கல்விப் படிப்பு முழுவதையும் முடிக்கும் 14 வயதுக் குழந்தைகள், அதே வயதில் சாதாரணப் பள்ளிப் படிப்பை முடித்துள்ள குழந்தைகளுடன் ஒப்பிடுகையில் எவ்விதத்திலும் குறைந்தவர்களாக இருக்க மாட்டார்களென்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

"கிராம மக்களின் நல்லெண்ணத்தையும் அக்கறையையும் ஈர்ப்பதில் இப்பள்ளிகள் வெற்றிபெற்றுள்ளன என்பதில் சந்தேகமில்லை. இந்த நிலை நீடிக்கும் வரையில், இம்முறை வெற்றியடையத் தவறுவது என்பது சாத்தியமேயில்லை. இது தான் இதில் குறிப்பாக ஊக்கமூட்டும் அம்சமாகும். இது ஒன்றையே நான் மிகவும் முக்கியமாகக் கருதுகிறேன். பள்ளிக்கு இத்தகைய அருமையான விளையாட்டு மைதானத்தை வழங்குவதிலும், சாலைகளைப் போட்டுத் தருவதிலும், நான் கண்டவற்றுள் மிகப் பெரிதான சாரணர் படைக்கான சாதனங்களைக் கொடுப்பதிலும், எல்லாவற்றையும் விட குழந்தைகள் தவறாமல் பள்ளிக்கு வரவேண்டுமென்று வற்புறுத்துவதிலும் கௌபி டோலா-பருக்கியா கிராம மிராசுதாரர்களும், குடிமக்களும் காட்டிய பொதுநல உணர்ச்சி மிகவும் போற்றத்தக்கது. நான் செல்ல முடியாத மற்றப் பள்ளிகளிலும் இவ்விதமே பொது ஜனங்கள் மிகுந்த அக்கறை காட்டுவதாக என்னிடம் சந்தேகத்திற்கு இடமின்றி கூறியுள்ளனர். கிராம மக்களின் முயற்சிகள் சிறந்த பலனைக் கொடுக்குமென்று நம்புகிறேன். முன்பிருந்ததை விட, வருங்காலத்தில் கிராமங்கள் இன்னும் ஆரோக்கியமாகவும், கவர்ச்சிகரமாகவும், அறிவு நிலவும் இடமாகவும் விளங்கும் என்றும், பள்ளிக்கூடங்களில் சாதாரணக் கல்வியுடன் கூட வருங்கால கிராமப் பையன்கள் சுறுசுறுப்பு, புத்திக் கூர்மை, உடலுழைப்புத் திறன், ஆரோக்கியம், சுத்தம் போன்ற நல்ல இயல்புகளைப் பெறுவார்கள் என்றும் நம்புகிறேன்."

# 3

# கைவினை மூலம் கல்வி

பின்வரும் சுவாரசியமான புள்ளி விவரங்களை ஸ்ரீ ஆஷா தேவி அனுப்பியிருக்கிறார்.

"பீகாரைச் சேர்ந்த சம்பரான் ஜில்லா, பெட்டியா தாலுகாவில், அடக்கமான சிறு பகுதியில் உள்ள 27 ஆதாரப் பள்ளிகள் 1942 ஏப்ரல் மாதத்துடன் மூன்றாண்டுப் பணியை முடித்துள்ளன. இப்பள்ளியின் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது வகுப்பு

களின் 1941-42-ஆம் ஆண்டுக்கான வருடாந்திரப் பொருளாதாரக் குறிப்பு, ஆதாரக் கல்வியில் ஈடுபட்டுள்ள எல்லா ஊழியர்களுக்கும் உற்சாகமூட்டுவதாக இருக்கிறது. இந்தக் குறிப்பு, ஆதாரக் கல்வித் துறையின் மாதப் பத்திரிகையான "நயீ தாலீமி"ல் விவரமாகப் பிரசுரிக்கப்படும். ஆதாரக் கல்வியின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட எல்லோருக்கும் உதவியாக முக்கியமான தகவல்களின் சுருக்கத்தை இங்கே தருகிறோம். முதலாவது வகுப்பில் இந்த 27 பள்ளிகளிலும் சராசரி 70 சதவிகிதப் பையன்கள் ஆஜராயினர். இரண்டாவது வகுப்பில் 76 சதவிகிதம்; மூன்றாவது வகுப்பில் 79 சதவிகிதம். சராசரி தனி நபர் வருமானம் முதலாவது வகுப்பில் ரூ. 0-11-0; இரண்டாம் வகுப்பில் ரூ. 2-4-2; மூன்றாவது வகுப்பில் ரூ. 6-1-1. எல்லாப் பள்ளிகளிலும் 390 பையன்கள் 10,264 மணி நேரம் வேலை செய்தனர். அவர்களுடைய மொத்த வருமானம் முதலாவது வகுப்பில் ரூ. 267-8-6. எல்லாப் பள்ளிகளிலும் இரண்டாவது வகுப்பில் மொத்தம் 356 குழந்தைகள் 14,082 மணி நேரம் வேலை செய்தனர். அவர்களின் மொத்த வருமானம் ரூ. 804-13-8. மூன்றாவது வகுப்பில், எல்லாப் பள்ளிகளிலுமாக மொத்தம் 14,362 மணி நேர வேலையில் 319 குழந்தைகள் ஈடுபட்டனர். அவர்களின் மொத்த வருமானம் ரூ. 1,935-14-11; அதாவது முழு ஆண்டுக்கும் 1065 குழந்தைகளின் மொத்த வருமானம் ரூ. 3008-5-1. இப்பள்ளிகளில் சராசரி தலைக்கு அதிக பட்ச வருமானம் மூன்றாவது வகுப்பில் ரூ. 15-12-0 ; இரண்டாவது வகுப்பில் ரூ. 6-2-0 ; முதலாவது வகுப்பில் ரூ. 2-10-1. சராசரி அதிகபட்ச வேகம்: மூன்றும் வகுப்பில் கைராட்டையில் மணிக்கு 480 சுற்றுகள், தக்ளியில் 281 சுற்றுகள் ; இரண்டாவது வகுப்பில் கைராட்டையில் 350 சுற்றுகள், தக்ளியில் 242 சுற்றுகள் ; முதலாவது வகுப்பில் தக்ளியில் மணிக்கு 164 சுற்றுகள்."

அதனதன் இடத்தில் அவை முக்கியமானதாக இருந்தாலும், பலனையும், வருமானத்தையும் காட்ட இப்புள்ளி விவரங்கள் தரப்படவில்லை. கல்விக்கான குறிப்பில் பலனும், வருமானமும் இரண்டாம் பட்சமே. இளைஞனுக்குப் பயிற்சியளிக்கும் சாதனமாக கைத் தொழில்களுக்கிருக்கும் உயர்ந்த மதிப்பை நிரூபிக்கவே அவை கொடுக்கப்பட்டுள்ளன. பணி புரிவதில் விடா முயற்சி, அக்கறை, கவனம் ஆகியவை இல்லாவிட்டால், வேலை செய்திருக்க முடியாதென்பது இதிலிருந்து தெளிவாகிறது.

—'ஹரிஜன்' 21—6—1942

# 4

# புதிய பல்கலைக் கழகங்கள்

மாகாணங்களில் புது பல்கலைக் கழகங்களை ஸ்தாபிக்க வேண்டும் என்ற வெறி பிடித்திருப்பதாகத் தோன்றுகிறது. குஜராத்தியர்களுக்காக குஜராத் ஒரு பல்கலைக் கழகம் வேண்டுமென்று கோருகிறது. மராட்டியர்களுக்காக ஒரு சர்வகலாசாலை வேண்டுமென்று மகாராஷ்டிரமும், ஒரிஸ்ஸா, கர்நாடகம், அஸ்ஸாம் முதலிய மாகாணங்களும் ஒவ்வொன்றும் அவ்விதமே கோருகின்றன. செழுமையான மாகாண மொழிகளும், அவற்றை வழங்கும் மக்களும் முழு வளர்ச்சி பெறுவதற்கு இத்தகைய பல்கலைக் கழகங்கள் இருக்க வேண்டியது அவசியம் என்றே நான் நம்புகிறேன்.

ஆனால் அதே சமயம், லட்சியத்தை அடைவதற்கு அனாவசியமாக அவசரப்படுகிறோம் என்றே நான் அஞ்சுகிறேன். மாகாணங்களை மொழிவாரியாக அரசியல் முறையில் பிரிக்க வேண்டும்; இது முதல் படியாகும். அவை தனித் தனி நிர்வாகமாக அமைவதால், பல்கலைக் கழகங்கள் இல்லாதவிடத்தில் அவை ஏற்படுவதற்கு இயற்கையாகவே வழி பிறக்கும். பம்பாய் மாகாணத்தில் குஜராத்தி, மராத்தி, கன்னடம் ஆகிய மூன்று மொழிகள் நிலவுகின்றன. ஆகையால், அவற்றின் வளர்ச்சி தடைப்பட்டிருக்கிறது. சென்னையில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகள் நிலவுகின்றன. ஆந்திரப் பிரதேசத்தில் ஆந்திர பல்கலைக் கழகம் இருக்கிறது என்பது உண்மையே. எனினும், அது அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுத் தனி நிர்வாக உறுப்பாக இருந்தால் எந்த அந்தஸ்தைப் பெற்றிருக்குமோ, அந்த ஸ்தானத்தை அது தற்போது பெற்றிருக்கவில்லை என்று நினைக்கிறேன். இந்தியாவுக்கு அத்தகைய சுதந்திரம் இரண்டு மாதங்களுக்கு முன்புதான் கிடைத்தது. இதையே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைப் பற்றியும் கூறலாம். அந்தப் பல்கலைக் கழகத்தில் தமிழ் அதற்குரிய மதிப்புடன் திகழ்வதாக யார் சொல்ல முடியும்?

புதிய பல்கலைக் கழகங்களுக்குத் தகுந்த சூழ்நிலை இருக்க வேண்டும். தத்தம் மாகாண மொழிகள் மூலம் கல்வி போதிக்கும் பள்ளிகளும் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களின் ஊற்றுக்கால்களாக இருக்கவேண்டும். அப்போதுதான் அதற்கு உகந்த சூழ்நிலை உருவாகும். பல்கலைக் கழகம் சிகரமாக இருக்கிறது. உறுதியான அஸ்திவாரம் இருந்தால்தான் கம்பீரமான சிகரம் நிலைத்து நிற்க முடியும்.

அரசியல் துறையில் நாம் சுதந்திரம் பெற்றுவிட்டோம்; என்றாலும் மேனாட்டின் சூட்சுமமான ஆதிக்கத்திலிருந்து நாம் இன்னும் விடுபடவில்லை. மேனாட்டிலிருந்துதான் அறிவு கிடைக்குமென்று கூறும் நம் அரசியல்வாதிகளின் கோஷ்டிக்கு நான் சொல்லக் கூடியது ஒன்றுமில்லை. மேனாட்டிலிருந்து நன்மை எதுவுமே வராதென்று நம்புவதையும் நான் ஆதரிக்க முடியாது. இருப்பினும், இவ்விஷயத்தில் நாம் சரியான முடிவுக்கு வர இன்னமும் இயலவில்லை என்று அஞ்சுகிறேன். அந்நிய ஆதிக்கத்திலிருந்து அரசியல் சுதந்திரம் பெற்றுவிட்டவர்களாக நாம் இருந்தாலும், அந்நிய மொழி, அந்நிய சிந்தனை ஆகியவற்றின் சூட்சுமமான ஆதிக்கத்திலிருந்து நாம் விடுதலை பெற்றுவிட்டதாக எவரும் வாதிக்க மாட்டார்களென்று நம்புவோமாக. நாம் புதுப் பல்கலைக் கழகங்களைத் துவக்குவதற்கு முன்னால், நமது புத்தம் புதிய சுதந்திரமெனும் உயிர்க் காற்று நமது சுவாசப்பைகளில் நிரப்பப்பட வேண்டும் என்பது விவேகம் அல்லவா? நம் நாட்டிற்கு நாம் செய்ய வேண்டிய கடமை அதை உணர்த்தவில்லையா? பல்கலைக் கழகத்துக்கு அடுக்கடுக்கான மாளிகையும், தங்கம், வெள்ளி முதலிய பொக்கிஷங்களும் தேவையில்லை. அறிவு நிறைந்த பொதுஜன ஆதரவுதான் அதற்கு முக்கியமாக வேண்டும். பெரிய களஞ்சியத்தைப் போல் நமக்குத் தேவையான போது பயன்படுத்திக் கொள்ளுவதற்கான ஏராளமான ஆசிரியர்கள் வேண்டும். அதன் ஸ்தாபகர்கள் தீர்க்க தரிசனம் வாய்ந்தவர்களாக இருக்க வேண்டும்.

பல்கலைக் கழகங்களை ஸ்தாபிப்பதற்கான பணத்திற்கு ஏற்பாடு செய்வது, ஜனநாயக அரசாங்கத்தின் பணியல்ல என்று நான் நினைக்கிறேன். மக்களுக்குப் பல்கலைக் கழகங்கள் தேவைப்பட்டால், மக்களே நிதிகளை வழங்குவார்கள். அவ்விதம் ஏற்படும் பல்கலைக் கழகங்கள்தான் நாட்டுக்கு அணிகலன்களாக விளங்கும். நிர்வாகம் அந்நியர்கள் கையில் இருக்குமானால், மக்களுக்கு வருவதனைத்தும் மேலேயிருந்து வருவதாக இருக்குமேயன்றி, அஸ்திவாரத்திலிருந்து வருவதாக இராது. அதன் விளைவாக, அவர்கள் மேன்மேலும் பிறரை நம்பி வாழும்படி நேரும். பொது ஜன விருப்பத்தை பரந்த அடிப்படையாகக் கொண்டு அமைந்தால், ஒவ்வொன்றும் அஸ்திவாரத்திலிருந்து மேலோங்கிச் செல்லுவதாக இருக்கும். அதன் பலனை அது நிலைத்து நிற்கும். அது பார்ப்பதற்கு அழகாகவும், மக்களுக்கு பலம் அளிப்பதாகவும் இருக்கும். நல்ல நிலத்தில் ஊன்றிய விதை செழிப்பான பயிராக விளைவதுபோல, ஜனநாயக அமைப்பின் கீழ் கல்வியின் முன்னேற்றத்துக்காகப் போடும் பணம் பத்துமடங்காக மக்களிடம் திரும்புகிறது. ஆனால், அந்நிய ஆதிக்கத்தின் கீழ் ஸ்தாபிக்கப்பட்ட பல்கலைக் கழகங்கள் அதற்கு நேர்மாறான திசையில் ஓடுகின்றன. அதனால் வேறு எந்த விதமான பலனும் ஏற்படுவதற்கில்லை போலும். ஆகையால், இந்தியா புதிதாகக் கிடைத்த சுதந்திரத்தை ஜீரணித்துக் கொள்ளும் வரையில்,

இந்தியாவில் புதுப் பல்கலைக் கழகங்களை நிறுவுவதில் எவ்விதத்திலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது அவசியமாகும்.

இனி ஹிந்து-முஸ்லிம் பிரச்னையை எடுத்துக் கொள்வோம். இது நம்மை எங்கு கொண்டுபோய் விடுமோவென்று முன் கூட்டிச் சொல்லுவது கடினம்; அவ்வளவுக்கு இந்த விஷம் அபாயமான விதத்தில் பரவியிருக்கிறது. நினைக்கவும் முடியாதது நடந்துவிட்டதாகவும், யூனியனில் ஒரு தனி முஸ்லிம் கூட பத்திரமாகவும், கௌரவமாகவும் வசிக்க முடியாதென்றும், அதேபோல பாகிஸ்தானில் ஒரு ஹிந்துவோ, சீக்கியரோ வசிக்க முடியாதென்றும் வைத்துக்கொள்ளலாம். பின்பு நமது கல்வி விஷத் தன்மை வாய்ந்ததாக இருக்கும். அதற்குமாறாக, இரு நாடுகளிலும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும், மற்றும் பல மதத்தினரும் பரிபூரண பாதுகாப்புடனும், கௌரவத்துடனும் வாழ முடியுமானால், பின்பு இயற்கையாகவே நமது கல்வி முற்றிலும் இன்பமான உருவத்துடன் விளங்கும். நட்புடன் ஒன்றாக வாழ்ந்து வந்த பல மதத்தினரும் அழகிய பண்பையும் இணக்கத்தையும் உண்டாக்கியுள்ளனர். இது நிலைத்து நிற்கவும், மேன் மேலும் பலமடைந்து வளர்ச்சி பெறவும் நாம் முயற்சி செய்ய வேண்டும்; இல்லாவிடில், ஹிந்துஸ்தானத்தில் ஒரே ஒரு மதமே இருக்கும். அந்த நாளை நாடிச் சென்று, அந்தத் தனிப் பண்பாட்டுக்குத் திரும்பிப் போக வேண்டும். ஆனால், அத்தகைய சரித்திர பூர்வமான தேதியை நம்மால் கண்டுபிடிக்க முடியாமல் போகக் கூடும். அப்படிக் கண்டு பிடித்து, நாம் பின்னோக்கிச் சென்றோமெனில், அந்த ஆபாசமான காலத்திற்கு நமது கலாசாரத்தைக் கொண்டு சென்றவர்கள் ஆவோம்; அதன் காரணமாகப் பிரபஞ்சத்தின் கண்டனத்தைச் சம்பாதித்துக் கொண்டவர்கள் ஆவோம். உதாரணமாக, முஸ்லிம் சகாப்தத்தை அழிக்க நாம் வீணாக முயற்சி செய்வோமாயின், உலகிலேயே தனக்கு நிகரற்றதாக டில்லியில் விளங்கும் கம்பீரமான ஜும்மா மசூதியையோ, அல்லது அலிகாரில் உள்ள முஸ்லிம் பல்கலைக் கழகத்தையோ, அல்லது உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான தாஜ்மகால் ஆக்ராவில் இருப்பதையோ, அல்லது மொகலாயர் ஆட்சி காலத்தில் கட்டப்பட்ட டில்லி, ஆக்ரா கோட்டைகளையோ நாம் மறந்து விட வேண்டியதுதான்! இந்த நோக்குடன் நமது வரலாற்றையே மாற்றி எழுத வேண்டியிருக்கும். முரண்பாடான வாய்ப்புகள் சம்பந்தமாக நாம் சரியான முடிவுக்கு வருவதற்கு உதவக் கூடிய சூழ்நிலை இன்றைய தினத்தில் நிச்சயமாக இல்லை. இரண்டு மாதப் பிராயமே ஆன நமது சுதந்திரம், சரியான உருவைப் பெறப் போராடிக் கொண்டிருக்கிறது. முடிவில் எவ்வித உருக் கொள்ளும் என்பது நமக்குத் தெரியாது. இது திட்டவட்டமாகத் தெரியும் வரையில், இப்போதுள்ள பல்கலைக் கழகங்களில் சாத்தியமான மாறுதல்களை மட்டும் செய்து கொண்டு, சுதந்திர உணர்ச்சியைத் துரிதமாகப் பரப்பும் காற்றை இப்போதுள்ள கல்வி ஸ்தாபனங்களில் புகச் செய்வது மட்டுமே போதும். புது பல்கலைக் கழகங்

களை ஏற்படுத்துவதற்கான பக்குவம் வரும்போது, நாம் இவ் விதம் பெறும் அனுபவம் உதவியாக இருக்கும்.

புதுப் பல்கலைக் கழகங்களை ஸ்தாபிக்க, விவேகமான கால தாமதம் அவசியம் என்று கல்வி நிபுணர்கள் யாவரும் முடிவு செய் வார்கள் என்று நம்பப்படுகிறது.

—'ஹரிஜன்' -2—11—1947

# 5

# கல்லூரியில் வேலை நிறுத்தம்-1

கூர்ஜரக் கல்லூரியில் படிக்கும் சுமார் எழு நூறு மாண வர்கள் கல்லூரிக்குச் செல்லாமல் வேலைநிறுத்தம் செய்திருக் கிறார்கள். இந்த வேலைநிறுத்தம் இருபது நாட்களாக நடை பெற்றுவருகிறது. உள்ளூர் விஷயமென இனி இந்த வேலை நிறுத் தத்தைக் கருதுதல் கூடாது. தொழிலாளர் வேலை நிறுத்தமே தீங்கு விளைவிப்பதாகும். மாணவர்களின் வேலை நிறுத்தமோ, அது ஏற்பட நியாயமான காரணமிருந்தாலும் சரி, இல்லாவிட் டாலும் சரி, முந்தியதைவிட அதிகத் தீங்கு விளைவிப்பதாகும். ஏனெனில், இறுதியில் அதனால் ஏற்படும் விளைவு அவ்வளவு கெடுதியானது. தவிர, மாணவர்கள், கலாசாலை அதிகாரிகள் முதலியோரின் கௌரவத்தையும் அது பாதிப்பதாக இருக்கிறது. தொழிலாளர் கல்வி கற்றவர்கள் அல்ல. மாணவர்களோ, கல்வி கற்றவர்கள். அதோடுகூட, பொருள் சம்பந்தப்பட்ட தகராறு எதுவும் மாணவர்களின் வேலை நிறுத்தத்திற்குக் காரணமாக இருப்பதற்கில்லை. மாணவர்களுடன் முரண்பாடு காரணமாக கல்வி நிலைய அதிகாரிகளுக்கும் முதலாளிகளைப்போல் யாதொரு மிச்சமும் இல்லை. மேலும், மாணவர்கள் ஒழுங்குமுறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இருக்க வேண்டியவர்கள். ஆதலால் மாணவர்களின் வேலை நிறுத்தம் மிகுந்த பாதகத்தை விளைவிக்கக் கூடியது. மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்வதை அபூர்வமான சந்தர்ப்பங்களில்தான் நியாயமானதென்று கருதலாம்.

ஒழுங்காக நடக்கும் கல்வி நிலையங்களில் வேலை நிறுத்தம் செய்வதற்குரிய சந்தர்ப்பம் மாணவர்களுக்கு மிக அரிதாகவே இருக்கும். இருப்பினும் எத்தகைய சந்தர்ப்பங்களில் மாண வர்கள் வேலை நிறுத்தம் செய்யலாம் என்று முன் கூட்டியே முடிவு கட்டிவிட முடியாது.

கூர்ஜரக் கல்லூரி சம்பந்தமாக நான் அறிந்தவரையில் மாண வர்கள் வேலைநிறுத்தம் செய்யப் போதிய நியாயம் இருந்த தென்றே கருதுகிறேன். இந்த வேலைநிறுத்தம் சம்பந்தமான

உண்மையைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். சைமன் கமிஷன் பகிஷ்கார தினத்தன்று, இந்தியாவெங்குமே மாணவர்கள் கலாசாலைகளுக்குப் போகவில்லை; கூர்ஜரக் கல்லூரி மாணவர்களும் அவ்விதமே செய்தார்கள். கல்லூரிக்கு வராமலிருக்க ஆசிரியர்களிடம் அவர்கள் அனுமதி பெறவில்லை என்பது உண்மையே. நியாயமாகப் பார்த்தால், மாணவர்கள் செய்தது தவறுதான். கல்லூரிக்கு வராமல் நிற்பதற்கு முன், சம்பிரதாயத்திற்காகவாவது அவர்கள் ஆசிரியர்களிடம் அனுமதி கோரியிருக்க வேண்டும். எனினும் உலகம் எங்குமே மாணவர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள்! அவர்களுடைய உள்ளத்தில் உற்சாகம் கிளம்பிவிட்டால், பிறகு அதைக் கட்டுப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல. அவர்களின் உற்சாகத்தைக் கட்டுப்படுத்துவதைவிட, காற்றை எளிதாகக் கட்டுப்படுத்திவிடலாம்! இளங்கன்று பயமறியாது அல்லவா? பின் விளைவுகளைக் கருதாமல், காரியத்தில் இறங்கி விட்டார்கள். அதிகமாகச் சொன்னாலும் அவர்களைப்பற்றி இவ்வளவுதான் சொல்லலாம். மாணவர்களுக்கும் தலைமை ஆசிரியருக்கும் இடையே சமரசப் பேச்சுவார்த்தைகள் நடந்த பின்னர், தலைமை ஆசிரியர் இச் செயலை மன்னித்துவிட்டார். விரும்பினால், மாணவர்கள் தலைக்கு மூன்று ரூபாய் கட்டணம் செலுத்தி பரீட்சைக்கு வந்து எழுதலாம் என்றும் அனுமதியளித்தார். பெரும்பாலான மாணவர்கள் பரீட்சை எழுதுவார்களென்றும் அவ்விதம் பரீட்சை எழுதாத மாணவர்களுக்கு எவ்விதத் தண்டனையும் இராது என்றும் எல்லோரும் பொதுவாக நினைத்தார்கள். நிலைமை இப்படி இருக்கும்போது தலைமை ஆசிரியர் தமது வாக்குறுதியை மீறி, கட்டாயமாக எல்லோரும் தலைக்கு மூன்று ரூபாய் அபராதம் செலுத்தியே பரீட்சைக்கு வந்து எழுதவேண்டுமென்று அறிவித்தாராம். இது மாணவர்களுக்கு இயல்பாகவே கோபத்தை உண்டாக்கியது. எனவே, அவர்கள் கல்லூரிக்குச் செல்லாமல் வேலை நிறுத்தம் செய்தார்கள். அதற்குப் பின்னர் நடந்தது தெரிந்தது தான். இப்போதும் வேலை நிறுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. மாணவர்கள் மிகுந்த கட்டுப்பாட்டுடன் ஒழுங்கான முறையில் நடந்துகொள்ளுகிறார்கள் என்று வேண்டியவர்களும் வேண்டாதவர்களும் ஒருங்கே சொல்லுகிறார்கள்; கூர்ஜரக் கல்லூரித் தலைமை ஆசிரியர் தமது வாக்குறுதியை மீறிவிட்டாரென்றும் கூறுகிறார்கள். இவ்விதம் ஒரு தலைமை ஆசிரியர் நடந்துகொள்ளுவாராயின், அதை எதிர்ப்பது அக் கல்லூரி மாணவர்களின் கடமை யென்றே நான் கருதுகிறேன். ஆசிரியர் பதவி மிக்க மதிப்பு வாய்ந்தது; அதற்குரிய மரியாதையைப் பூரணமாகச் செலுத்த மாணவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்; ஆனால், வாக்குறுதி தவறிய ஆசிரியருக்கு மரியாதை செலுத்துவதென்பது முடியாத காரியம்.

மாணவர்கள் உறுதியாக இருந்தால், இந்த வேலை நிறுத்தத்திற்கு ஒரே ஒரு முடிவுதான் ஏற்படக் கூடும். ஆசிரியர் தமது

அக்கிரமமான அறிவிப்பை ரத்துசெய்துவிட்டு, அவர்களுக்கு, எவ்விதத் தண்டனையும் விதிப்பதில்லையென்று பூரணமாக வாக்களித்திருக்க வேண்டும். இதைத் தவிர வேறு வழி இருக்க முடியாது. உண்மையில், அரசாங்கத்தார் இந்தக் கல்லூரிக்கு வேறொரு தலைமை ஆசிரியரை நியமிப்பதுதான் எல்லாவற்றையும் விடப் பொருத்தமாக இருக்கும்.

மாணவர்கள் அரசியல் விஷயங்களில் உறுதியான கொள்கையுடையவர்களாக இருந்தாலும், அரசாங்கம் விரும்பாத அரசியல் கூட்டங்களிலே கலந்து கொண்டாலும் அரசாங்கத்துக்குக் கோபம் வருகிறது. அவர்கள் என்ன செய்கிறார்கள், என்ன பேசுகிறார்கள் என்பதைக் கண்டுபிடிக்க, அரசாங்கக் கல்லூரிகள் அதிகப் படியான உளவு வேலையில் ஈடுபடுகின்றன. இவை காரணமாக, மாணவர்களை அளவுக்குமீறித் தொந்தரவு செய்வதே அவற்றின் வேலையாய் இருந்து வருகிறது. நியாயமில்லாமல் இப்படி மாணவர்கள் விஷயத்தில் கலாசாலைகளின் அதிகாரிகள் தலையிடுவதை நிறுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. அந்நிய ஆதிக்கத்தின் கீழ் அகப்பட்டுக் கொண்டு அல்லல்படும் இந்தியா போன்ற நாட்டில், தேசத்தின் சுதந்திரத்திற்காகத் தோன்றும் இயக்கங்களில் மாணவர்கள் பங்கு கொள்ளுவதை ஒருவராலும் நிறுத்த முடியாது. படிப்புக்கு இடையூறு ஏற்படாவண்ணம் அவர்களுடைய உற்சாகத்தைச் சரியான பாதையில் செல்லவிடுவதே நாம் செய்யவேண்டிய காரியமாகும். மாணவர்கள் எந்தக் கட்சியிலும் சேரவேண்டாம்; எதிர்க் கட்சியுடன் போராடவும் வேண்டாம். ஆனால், தங்களுக்குப் பிடித்த அரசியல் கொள்கையைப் பின்பற்றவும், அதை வெளிப்படையாக எடுத்துப் பேசவும், அதைப் பின்பற்றவும் சுதந்திரம் இருக்கும்படியாக மாணவர்களை விட்டுவிடவேண்டும். அறிவைப் பெருக்குவதே பாடசாலைகளின் அலுவலாக இருக்க வேண்டும்; அந்த அறிவின் வளர்ச்சி மூலமாக, மாணவர்களுக்கு நல்லொழுக்கம் உண்டாகும்படி செய்ய வேண்டும்; பாடசாலைக்கு வெளியே, மாணவர்கள் அரசியலிலோ அல்லது நல்லொழுக்கத்துக்கு மாறுபடாத இதர காரியங்களிலோ ஈடுபட்டால், அதில் தலையிடுவது பாடசாலைகளின் வேலையல்ல.

ஆகையால், ஆமதாபாத் மாணவர்களின் வேலை நிறுத்தத்தால் ஏற்பட்டிருக்கும் இந்தப் பிரச்னையே இப்போது முதன்மையானது. ஆமதாபாத் மாணவர்களுக்கு, இதர மாணவர் நிலையங்களும் பொதுமக்களும் பரிவுடன் ஆதரவு அளிக்க வேண்டும். பள்ளிக்கூடம் செல்லும் சிறுவர், சிறுமியர்களைப்போலவே, பெற்றோருக்கும் இந்த வேலை நிறுத்தத்தில் அக்கறை இருக்கிறது. ஏனெனில், ஆமதாபாத் மாணவர்கள் தங்களைப் பராமரித்துவரும் பெற்றோர் முதலியவர்களின் சம்மதம் பெற்றே ஆரம்பம் முதல் வேலை நிறுத்தத்தை நடத்தியிருக்கிறார்களென்று அறிகிறேன்.

—'எங் இந்தியா' – 24—1—1929

# 6

# கல்லூரியில் வேலை நிறுத்தம்-2

ஆமதாபாத் கூர்ஜரக் கல்லூரி மாணவர்கள் ஊக்கம் குன்றாமல், இன்னும் கல்லூரி செல்லாமலே இருந்து வருகிறார்கள். அவர்களுடைய உறுதியும், அமைதியும், ஒற்றுமையும் பெரிதும் போற்றத்தக்கவை. இப்போதுதான் அவர்கள் தங்கள் வலிமையை உணர ஆரம்பித்திருக்கிறார்கள். ஏதாவது நல்ல ஆக்க வேலையில் அவர்கள் ஈடுபட்டால், இந்த வலிமையை இன்னும் அதிகமாக உணருவார்களென்று நான் தைரியமாகக் கூறுவேன். கல்வி நிலையங்கள் நம்மை மனிதர்கள் ஆக்குவதற்கு ஏற்பட்டவை ; நமது பாடசாலைகளும் கல்லூரிகளுமோ, நம்மை அடிமைகளாகவும், கோழைகளாகவும், சந்தேகப் பிராணிகளாகவும், உறுதியற்றவர்களாகவும் ஆக்கியிருக்கின்றன என்பது எனது உறுதியான கருத்து. மனிதத் தன்மை என்பது வெறும் மிரட்டலிலும், அசட்டுத் துணிச்சலிலும், 'சவடால்' தனத்திலும் இல்லை. சமூக, அரசியல் அல்லது வேறு எந்த விஷயமாயினும், நியாயமான கடமையை அஞ்சாமல் செய்து, அதனால் ஏற்படும் விளைவை ஏற்கச் சித்தமாயிருப்பதே மனிதத் தன்மையாகும். மனிதத் தன்மை செயலில்தான் இருக்கிறது, சொல்லில் இல்லை. மாணவர்கள் ஒருவேளை நீண்டகாலம் காத்திருக்கவேண்டியிருந்தாலும், அதற்காக, அவர்கள் உற்சாகத்தை இழந்து விடக் கூடாது. இப்படிக் காத்திருக்க வேண்டிய சந்தர்ப்பங்களில், பொதுமக்கள் இதில் தலையிட வேண்டியது கடமையாகும், அதன் பிறகு, இந்தக் கலாசாலை மாணவர்களின் நடவடிக்கை முற்றிலும் நியாயமானது என்பதை இந்தியா முழுவதுமுள்ள மாணவர்கள் எடுத்துக்காட்டும் காலமும் வரும். இந்தப் பிரச்னையைக் குறித்த எல்லா விவரங்களையும் தெரிந்து கொள்ள விரும்புவோர், ஸ்ரீ மாவ்லங்காரிடமிருந்து தெரிந்துகொள்ளலாம். ஆமதாபாத் மாணவர்கள் தங்களுடைய சொந்த உரிமைகளுக்காகப் போராடவில்லை; பொதுவாக, மாணவர் உலகின் கௌரவத்தை நிலைநாட்டவே போராடுகிறார்கள். இவ்வளவு தீரத்துடன் போராடுகிற மாணவர்கள், பொது மக்களின் பூரணமான ஆதரவுக்குப் பாத்திரமானவர்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஏதாவது தேசீய ஆக்கவேலைகளில் முனைந்து ஈடுபட்டால், பொதுஜன ஆதரவு அவர்களுக்குக் கட்டாயம் கிடைக்கும். காங்கிரஸ் வகுத்துள்ள திட்டம் பொருத்தமானதென்று தோன்றாவிட்டால், மாணவர்கள் அதைப் பின்பற்ற வேண்டாம். எல்லோரும் ஒன்று சேர்ந்து, தனித்த முறையில், ஏதாவது உருவான வேலையைச் செய்வதற்குத் தங்களிடம் ஆற்றல் உண்டு என்பதைக் காட்டுவதுதான் அவர்களது முக்கியமான வேலை. சரமாரியாகப் பிரசங்கங்கள் செய்யவும், பயனற்ற முறையில்

ஏதோ அந்தந்தக் காலங்களில் ஆர்ப்பாட்டங்கள் செய்யவும் நமக்குத் தெரியும். ஆனால், ஒருமைப்பாடு, ஒத்துழைப்பு, தைரியம், தளராத மன உறுதி இவற்றை அடிப்படையாகக் கொண்ட வேலைகளைச் செய்ய வேண்டிய காலங்களில், நாம் வலியிழந்து தோல்வியுற்றுவிடுகிறோம் என்று நம்மைப் பிறர் அடிக்கடி குறைகூறுகிறார்கள். இந்தக் குற்றச்சாட்டு உண்மை யில்லை என்பதை நிரூபிக்க இந்த மாணவர்களுக்கு ஒரு அருமை யான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தை அவர்கள் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளுவார்களாக. எக் காரணத்தை யொட்டியும் மாணவர்கள் நம்பிக்கை இழக்க லாகாது. இந்தக் கல்லூரி இந் நாட்டு மக்களின் சொத்து. நாம் சீர்கெட்டு, மானமற்று வாழாமல் மட்டுமிருந்தால், ஓர் அந்நிய அரசாங்கம், நமது சொத்தை இவ்வளவு நாள் வைத்துக் கொண்டிருக்க முடியுமா? தேசத்தின் சுதந்திரப் போராட் டத்தை நடத்துவது மாணவர்களின் கடமையாகவும் விசேஷ உரிமையாகவும் இருக்க, அந்தப் போராட்டத்தில் மாணவர்கள் கலந்து கொள்ளுவதே முற்றிலும் குற்றம் என்று அந்த அந்நிய அரசாங்கம் சொல்லிவர முடியுமா?

—'எங் இந்தியா'—31—1—1929

# 7
# நம்பிக்கைத் துரோகம்

பம்பாய் ஆக்டிங் கவர்னர் ஸர் எர்னெஸ்ட் ஹாட்ஸனை, கல்லூரி அதிகாரிகள் கல்லூரிக்கு அழைத்திருந்தார்கள். இந்த அழைப்பிற்கு இசைந்து கௌரவம் வாய்ந்த விருந்தினர் என்ற முறையில் வந்திருந்த கவர்னரை, அதிகாரிகள் கல்லூரியைச் சுற்றிக் காண்பித்தார்கள். அப்போது அவரை ஒருவன் கொல்ல முயன்றான். விருந்தினராக வந்திருந்தவரை அந்தக் கல்லூரி மாணவனே கொல்ல முயன்றது, கொடிய பாதகமான செய லாகும். தன்னுடைய வீட்டுக்கு வந்த விருந்தினரை, வீட்டுக் காரனே கொலை செய்தால் எப்படியோ, அப்படியேதான் இதுவும். கொடிய பகைவனாயிருந்தால்கூட, நம் வீட்டுக்கு விருந்தினனாக வந்துவிட்டால், அவனுக்கு எவ்விதத் தீங்கும் நேராமல் அவனைப் பாதுகாப்பதுதான் நமது கடமை. இது உல கம் முழுவதும் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு சாதாரண உண்மை. எனவே, இந்த மாணவன் செய்தது துரோகமான காரியம்; இந்த மாணவனின் சார்பில் சொல்லுவதற்கு ஓர் அற்ப சமா தானம்கூட இல்லை.

தெய்வச் செயலாக, கவர்னர் உயிர் தப்பினார். அவர் தப்பியது, இந்தியாவுக்கும், அதைவிட மாணவர் உலகிற்கும் நன்மையே. இது சம்பந்தமாக, எர்னெஸ்ட் ஹாட்ஸனுக்கும்,

இந்திய மக்களுக்குமே எனது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஹிம்சையில் நம்பிக்கை வைத்திருப்பவர்கள், மகிழ்ச்சியைத் தரத்தக்க இச்சம்பவத்திலிருந்து ஒரு சிறந்த நீதியைக் கற்றுக் கொண்டால் நலமாயிருக்கும். மகிழ்ச்சி தரத்தக்கதென்று ஏன் குறிப்பிட்டிருக்கிறேன் என்றால், கொலை செய்ய முயன்ற மாணவனைத் தவிர, வேறு யாருக்கும் இதனால் துன்பம் ஏற்பட வில்லை.

அந்த மாணவன் ஏதேனும் துன்பம் அனுபவித்தானா, அனுபவித்து வருகிறானா? அல்லது தன்னை வீரன் என்று எண்ணி ஏமாந்து வருகிறானா? மாணவர்களுக்கெல்லாம் இந்தச் சம்பவம் ஓர் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். எப்படிப் பார்த்தாலும், பாடசாலைகளும் கல்லூரிகளும் புனிதமான ஸ்தலங்களல்லவா? அங்கே புனிதமற்ற, இழிவான எந்தச் செயலுக்காவது இட முண்டா? பாடசாலைகளும் கல்லூரிகளும் தொழிற்சாலைகள். அங்கே சிறந்த பண்புவாய்ந்த மனிதத் தன்மை என்னும் அரிய பொருள் உற்பத்தி செய்யப்படுகிறது. குழந்தைகள் சிறந்த, பண்பு வாய்ந்த ஆடவராகவும் பெண்மணியாகவும் வர வேண்டு மென்ற விருப்பத்தினாலேயே, பெற்றோர் தங்கள் குழந்தைகளைக் கல்வி நிலையங்களுக்கு அனுப்புகிறார்கள். கொலை செய்வதற்குக் கூடத் தயங்கமாட்டார்கள் என்று மாணவர்கள் எல்லோரையுமே சந்தேகிக்கக் கூடிய நிலைமை ஏற்படுமானால், அதைவிட நமது நாட்டுக்குத் தீங்கு விளைவிப்பது வேறு ஏதேனும் உண்டா?

பகத் சிங்கிடம் காட்டும் பக்தி நம் நாட்டுக்குக் கணக்கிலடங் காத தீங்கு செய்திருக்கிறது, இன்னும் செய்து வருகிறது. பகத் சிங்கின் குணத்தைப்பற்றி நான் பல இடங்களிலிருந்து நம்பத் தகுந்த முறையிலே அறிந்திருக்கிறேன். அவருக்கு விதித்த மரண தண்டனையைக் குறைப்பதற்குச் செய்த முயற்சிகளிலும் எனக்கு நெருங்கிய தொடர்பு இருந்தது. இவற்றின் காரணமாக, கராச்சியில் பாரபட்சமின்றிக் கவனத்துடன் நிறைவேற்றிய தீர்மானத்தை நான் ஆதரித்தேன். ஆனால், நான் செய்த எச்சரிக் கையைக் கவனியாமல் காற்று வாக்கில் பறக்கவிட்டுவிட்டார்கள் என்பதைக் காண எனக்கு வருத்தமாயிருக்கிறது. பகத் சிங்கின் செயலானது, பிறரும் பின்பற்றத் தகுந்தது என்று எண்ணிப் பலர் கொண்டாடுகிறார்கள். அறிவில்லாமல் இந்தச் செயலைப் பாராட்டிக் கொண்டாடுகிற இடங்களிலெல்லாம், இறுதியாக ஏற்படும் பலன் முரட்டுத்தனமும் இழிவுமேயாகும்.

இந்த நாட்டில் காங்கிரஸ் இன்று சக்திவாய்ந்த ஒரு ஸ்தா பனமாக இருக்கிறது. ஆனால், காங்கிரஸ்காரர்கள் பகத்சிங் பக்தி யிலோ, எண்ணத்திலோ, சொல்லிலோ, அல்லது செயலிலோ நம்பிக்கை வைத்து அதற்கு ஊக்கமளிப்பார்களாயின், காங்கிர

னிடத்தில் பொது மக்களுக்கிருந்து வரும் ஈடுபாடு அறவே இல்லாது போய்விடும் என்று நான் அவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். காங்கிரசின் கொள்கையான அகிம்சையிலும், சத்தியத்திலும் பெரும்பான்மையோருக்குப் பற்றுதல் இல்லா விட்டால், காங்கிரஸ் அமைப்புத் திட்டத்தின் முதல் விதியை அவர்கள் மாற்றிவிடட்டும். நடைமுறைக்கேற்ற கொள்கை என்பதற்கும், திட்டவட்டமான சித்தாந்தம் என்பதற்குமுள்ள வேறுபாட்டை நாம் கொஞ்சம் உணர வேண்டும். நடைமுறைக் கேற்ற கொள்கையை மாற்றிக் கொள்ளலாம்; திட்டவட்டமான சித்தாந்தத்தை மாற்றிக்கொள்ள முடியாது. எனினும், அவற் றைப் பின்பற்றும்போது ஒன்றைப் போலவே மற்றொன்றும் வலிவுடையதாகும். ஆதலால், அகிம்சையை நடைமுறைக்கேற்ற கொள்கையாகக் கொண்டவர்களும், தங்களது ஹிம்சைச் செயலை மறைக்க, காங்கிரஸ் அங்கத்தினர் பதவியை ஒரு போர்வையாக வைத்துக்கொள்ளக் கூடாது. அப்படி வைத்துக்கொண்டால், மிக்க இழிவாக நடந்துகொண்டார்களென்ற பழிச் சொல்லுக்கு அவர்கள் ஆளாவார்கள். நாம் சுயராஜ்யத்தை நோக்கி முன்னேறுவதற்குப் பெரும் தடையாயிருப்பது, கொள்கையில் நமக்குப் போதிய நம்பிக்கை இல்லாமையே என்ற முடிவுக்குத் தான் கடைசியில் வர வேண்டியவனாயிருக்கிறேன். கொலை செய்ய முயன்ற இந்த முயற்சி அதிருஷ்டவசமாக வீணாகிவிட்டது. இது நமது கண்ணைத் திறந்து நமக்கு நல்ல அறிவைக் கொடுக்குமாக.

'இந்தக் கவர்னர் நமக்குச் செய்திருக்கும் இன்னல்களைப் பாருங்கள். ஷோலாப்பூரிலே நடந்த கொடுமைகளை எண்ணியும், ஒரு இந்தியரைத் தள்ளிவிட்டு, அவர் வரவேண்டிய கவர்னர் பதவிக்கு இவர் வந்துவிட்டாரென்பதை எண்ணியுமே மேற் சொன்ன மாணவர் கவர்னரைச் சுட முயன்றதாகச் சொல்ல வில்லையா' என்று படபடப்புள்ள சில இளைஞர்களும், வயதான வர்களும்கூட வாதம் செய்வார்கள். அதற்கு நான் சொல்லும் பதில் இதுதான்: 1920-ஆம் ஆண்டில், அகிம்சையும் சத்தியமுமே காங்கிரஸ் கொள்கைகள் என்று நாம் முடிவு செய்தபோது, இதை யெல்லாம் அறிந்தே அப்படி முடிவு செய்தோம். சர் எர்னெஸ்ட ஹாட்ஸனைப்பற்றிய கொடுமைகளை அந்தச் சமயம் நாம் அறிந் திருந்தோம். அரசாங்கம் இழைத்த கொடுமைகளுக்கும், செய்த இழிவான செயல்களுக்கும் பதிலாக நாமும் அவற்றினும் அதிகமான ஹிம்சை பொருந்திய செயல்களைச் செய்வது சரியான எதிர்ப்பாகாது. ஆனால், ஹிம்சையை அகிம்சையைக் கொண்டும், இழிவான அற்பத்தனத்தைச் சத்தியத்தைக் கொண்டும் எதிர்ப் பதே நமக்கு நன்மை பயப்பதாகுமென்று, 1920-ஆம் ஆண்டிலே, நீண்டநேர விவாதத்திற்குப்பின் ஒரு திட்டமான முடிவிற்கு வந்தோம்; அதற்கிணங்க தீர்மானமும் செய்தோம். எவ்வளவு தான் கொடுமைகள் புரிந்தவர்களாயினும், இயல்பாகவே அவர்கள் கெட்டவர்கள் அல்ல. இருப்பினும், தற்போதைய

ஆட்சித் திட்டத்துக்கு மனமுவந்தோ, அல்லாமலோ அவர்கள் பலியாகி விட்டமையால், அவர்கள் கொடுமை செய்பவர்கள்தான் என்று காங்கிரஸ் கண்டது. இந்த ஆட்சித் திட்டமானது நம்மில் உயர்ந்தவர்களென்று சொல்லத்தக்கவர்களையுமே கெடுத்துவிட்டது என்பதைக் கண்டோம். ஆகவே, இந்தத் திட்டத்தை வேரோடு களைந்து எறிவதற்காகவே அகிம்சை நெறியைக் கடைப்பிடிப்பதென்று வகுத்துக்கொண்டோம். முழு மனத்தோடு இதைப் பின்பற்ருவிடினும், அகிம்சையையும் சத்தியத்தையும் கடைப்பிடித்து இந்தப் பத்துவருட காலமாக நமக்கு நல்ல அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. அதிலிருந்து, நமது கொள்கை சாதாரண மக்களும் உணரும்படியான அளவுக்கு வெற்றியடைந்து விட்டதென்று தெரிகிறது. இதைத் தவிர, இந்த அனுபவம் நாம் சுதந்திரம் என்கிற கரைக்கு மிக்க சமீபத்திலும் வந்துவிட்டோம் என்பதையும் காட்டுகிறது. ஸர் எர்னெஸ்ட் ஹாட்ஸன் செய்த காரியங்கள் எவ்வளவு இழிவானவையாக இருந்தால் என்ன, அது வேறு விஷயம். அதன் காரணமாக கொலையும் நம்பிக்கைத் துரோகமும் கலந்த குற்றத்தின் கொடுமையைக் குறைத்துவிட முடியாது; ஒரு போதும் மன்னித்துவிடவும் முடியாது. இந்தக் குற்றம், சில மாணவர்களின் ஆர்ப்பாட்டத்தினல் மேலும் மோசமானதாகத் தோன்றுகிறது. இந்தியாவெங்குமுள்ள மாணவர்களும் ஆசிரியர்களும் கல்வி நிலையங்களைச் சீர்படுத்த முன்வருவார்களென்று நம்புகிறேன். நம்பிக்கைத் துரோகமான இந்த அக்கிரமச் செயலைக் கண்டித்து, வரப்போகும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமானது காங்கிரஸின் கொள்கை இன்னது என்பதை மீண்டும் சந்தேகமறத் தெளிவாகச் சொல்ல வேண்டும். இதுதான் அக் கூட்டத்தில் செய்ய வேண்டிய அவசியமான காரியம் என்று நான் கருதுகிறேன்.

அரசாங்கத்திற்கும் அதிகாரிகளுக்கும் ஒரு வார்த்தை. பழிவாங்குதல், அடக்குமுறை ஆகியவற்ருல் ஒரு காரியமும் நடைபெருது. ஹிம்சையோடு கூடிய இந்த அக்கிரமச் செயல்கள் இனிவரப்போகும் சம்பவங்கள் எப்படியிருக்கும் என்பதையே காட்டுகின்றன. அவ்வளவுதான். உடனடியாகக் குற்றம் செய்தவர்களை அவர்கள் தண்டிக்கலாம். ஆனல், வியாதியைக் குணப்படுத்த வேண்டுமென்ருல், அதன் அடிப்படையான காரணத்தைக் கண்டுபிடித்து அதைப் போக்க வேண்டும். அவ்விதமின்றேல், குணப்படுத்துதல் என்பது முடியாத காரியம். அவ்விதம் குணப்படுத்துவதற்கு வேண்டிய விருப்பமோ, அல்லது தைரியமோ இல்லையென்ருல், அந்த வேலையைத் தேச மக்களிடமாவது விட்டுவிடட்டும். அடக்குமுறை, பழிக்குப்பழி வாங்குவது என்ற நிலைகளைக் கடந்து, இந்திய மக்கள் முன்னேறிச் சென்றுவிட்டார்கள். தங்களுக்குள் இருக்கும் பலாத்காரவாதிகளை இந்திய மக்கள் தங்களுக்கேற்ற முறையில் சரியானபடி தண்டிப்பார்கள்.

—'எங் இந்தியா' – 30–7—1931

# 8

# மாணவர்களின் தருமம்

*பவநகர் சியாமளதாஸ் கல்லூரி மாணவர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய பிரசங்கத்தின் விவரங்களைக் கீழே காணலாம்:*

மாணவர்களின் தருமம் அல்லது கடமை என்பதுபற்றி இன்று நான் பேச வேண்டியவனாக இருக்கிறேன். தருமம் கடினமாக இருப்பதைப்போலவே எளிதாகவும் இருக்கிறது. ஹிந்து மதக் கொள்கையின்படி, மாணவன் ஒரு பிரம்மச்சாரி. மாணவனுடைய நிலை பிரம்மச்சரிய ஆசிரமத்தையே குறிக்கிறது. பெண்ணோடு வாழாதிருப்பது என்று அந்தச் சொல்லுக்குப் பொருள் கொள்ளுவது குறுகிய முறையில் பொருள் கொள்ளுவதாகும். மாணவனுடைய வாழ்க்கை அல்லது நிலை என்பதே அதற்குரிய அடிப்படையான பொருள் ஆகும். அதாவது, புலன்களை அடக்குவதென்பதே அதன் பொருள். புலன்களைக் கட்டுப்படுத்தி கல்வி கற்று அறிவை வளர்க்கிற காலம் முழுவதையும் நாம் பிரம்மச்சரிய ஆசிரமம் என்று சொல்லுகிறோம். வாழ்க்கையின் இந்தப் பருவத்தில் ஒருவர் பிறருக்குக் கொடுப்பது வெகு குறைவு; பிறரிடமிருந்து பெறுவதோ மிகவும் அதிகமாகும். முக்கியமாக, நாம் இந்த நிலையில் பெறுபவர்களாகவே இருக்கிறோம். பெற்றோரிடமிருந்தும், ஆசிரியர்களிடமிருந்தும், பொதுவாக பிரபஞ்சம் முழுவதிலிருந்துமே கிடைக்கக்கூடியவற்றையெல்லாம் நாம் இந்த நிலையில் பெற்றுக்கொள்ளுகிறோம். ஆனால், பெறுவதென்றால், திருப்பிக் கொடுப்பதென்றும் ஏற்படுகிறது. ஆகவே, இப்படி நாம் பெறுவதற்கெல்லாம் திருப்பிக் கொடுக்க வேண்டிய கடமையும் அதே சமயத்தில் ஏற்படுகிறது; உரிய காலத்தில் முழுக் கடனையும் வட்டிக்கு வட்டி சேர்த்துத் திருப்பிக் கொடுக்கிற கடமையும் கட்டாயமாக ஏற்படுகிறது. இது காரணமாகவே பிரம்மச்சரிய ஆசிரமத்தைச் சமய சம்பந்தமான கடமையென்று ஹிந்துக்கள் கருதுகிறார்கள்.

ஆன்மிகத் துறையில் பிரம்மச்சாரியின் வாழ்க்கையையும் துறவியின் வாழ்க்கையையும் ஒன்றுபோலவே கருதிவருகிறார்கள். உண்மையான பிரம்மச்சாரியாக இருப்பதற்கு, பிரம்மச்சாரி சந்நியாசியாக இருந்து தீர வேண்டும். ஹிந்து மதம் கூறுகிற நான்கு ஆசிரமங்களும் தற்காலத்தில் அவற்றின் புனிதத்தன்மையை இழந்துவிட்டன; பெயரளவில் மட்டுமே அவை இன்று விளங்கிக் கொண்டிருக்கின்றன. மாணவராக இருக்கும் பிரம்மச்சாரியின் வாழ்க்கை ஆரம்பத்திலேயே சீர்குலைக்கப்பட்டு விடுகிறது. இந்த நான்கு ஆசிரமங்களும் இன்று நடைமுறை வாழ்க்

கையில் இல்லை. எனவே, அந்த முறைகளை அனுசரித்து வாழும் படியும், அதிலிருந்து அறிவு பெறுமாறும் இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்களுக்கு எடுத்துச் சொல்ல இயலாத நிலையில் நாம் இருந்து வருகிறோம். ஆயினும், இந்த ஆசிரமங்களைத் தோற்று விக்கக் காரணமாயிருந்த லட்சியங்களை நாம் நாடிச் சென்று அவற்றை இன்றும் பின்பற்றலாம்.

மாணவர்களின் கடமை என்ன என்பதை இன்று நாம் தெரிந்துகொள்ளுவது எப்படி? லட்சியத்திலிருந்து விலகி, நாம் மிகவும் தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டோம். பையன்களைத் தவறான நெறியில் செலுத்துவதில் பெற்றோரே முன் அணியில் நிற்கிறார்கள்; செல்வமும் அந்தஸ்தும் அடைவதற்காகவே, குழந்தைகளுக்குக் கல்வி அளிக்க வேண்டுமென்று எண்ணுகிறார்கள். கீழ்த்தரமான நோக்கங்களுக்காகக் கல்வியும் அறிவும் விலைக்கு வாங்கப் படுகின்றன. மாணவனுடைய வாழ்க்கையில் இருக்கவேண்டிய அமைதி, தூய உள்ளம், ஆனந்தம் ஆகியவை அங்கு அறவே காணப்படவில்லை. உண்மையில் ஒரு கவலையுமில்லாதவர்களாக இருக்க வேண்டியிருக்க, கவலைகளும் சங்கடங்களும் இன்று நமது மாணவர்களைப் பிழிந்து வதைக்கின்றன. அறிவைப் பெற்று அதைத் தங்கள் சொந்தமாக்கிக் கொள்ளவேண்டியதுதான் அவர்கள் வேலை. எதை ஏற்றுக் கொள்ளுவது, எதைத் தள்ளுவது என்று பகுத்தறிய மட்டும் அவர்களுக்குத் தெரிந்திருந்தால் போதும். மாணவருக்கு இந்தப் பகுத்தறிவைப் புகட்டுவதே ஆசிரியரின் கடமையாகும். ஒரு பாகுபாடுமின்றி, எது வந்தாலும் ஏற்றுக்கொள்ளுவது என்று இருந்தோமானால், நாம் யந்திரங்களைப் போலாகிவிடுவோம். சிந்தித்துப் பார்க்கும் சக்தியையும், பகுத்தறிந்து கொள்ளும் சக்தியையும் நாம் பெற்றுள்ளோம். ஆகவே, மாணவராக இருக்கும் இக் காலத்தில், பொய்யையும் மெய்யையும், இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும், அசுத்தத்தையும் தூய்மையையும் பாகுபாடு செய்து கொள்ள நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால், மாணவன் செல்லும் நெறியானது, கெட்டதையும் நல்லதையும் பாகுபடுத்தி அறிவதென்ற கஷ்டத்துடன் மட்டும் நிற்கவில்லை; அதில் இன்னும் எத்தனையோ கஷ்டங்கள் வந்து குறுக்கே நிற்கின்றன. மாணவன் தன்னைச் சுற்றியுள்ள எத்தனையோ எதிர்ப்புகளோடு போராட வேண்டியவனாக இருக்கிறான். தனது குருவாகிய ரிஷியின் ஆசிரமத்திலும், அதையொட்டிய புனிதமான வாழ்க்கையிலும், பெற்றோரின் பராமரிப்பிலும் வாழவேண்டிய மாணவன், இன்று சீர்குலைந்துகிடக்கும் ஒரு குடும்பத்தின் மத்தியிலும், தற்காலக் கல்வித் திட்டத்தினால் ஏற்பட்டுள்ள செயற்கையான வாழ்க்கை முறையின் மத்தியிலும் வாழ்ந்துகொண்டு வருகிறான். ரிஷிகள் புத்தகங்களின்றியே தம் மாணவர்களுக்குக் கல்வி போதித்தார்கள்; சில மந்திரங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். மாணவர்கள் அவற்றைப் பேணி நினைவில் வைத்துக் கொண்டு, வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்தார்கள். தற்கால

மாணவனே புத்தகக் குவியலுக்குள் மூழ்கிக்கிடக்க வேண்டிய வனாக இருக்கிறான். இந்தப் புத்தகக் குவியல் அவனை மூச்சுத் திணறும்படி செய்துவிடுகிறது. நான் மாணவனாக இருந்த காலத்தில், ரெய்னால்ட்ஸ் எழுதிய நாவல்களைப் படிப்பது மாணவர்களுக்குள் நாகரிகம் என்று கருதப்பட்டது. நான் கெட்டிக்காரன் அல்ல. எனவே பாடப் புத்தகங்களைத் தவிர, வேறு புத்தகங்களை நான் படிப்பதில்லை; இதனால் ரெய்னால்ட்ஸ் நாவல்களைப் படிக்காமல் தப்பித்துக்கொள்ள நேர்ந்தது. ஆயினும், நான் இங்கிலாந்து சென்றிருந்தபோது, மதிப்பு வாய்ந்த மனிதர்கள் இந்த நாவல்களை வெறுத்து ஒதுக்குவதைக் கண்டேன். அவற்றைப் படிக்காததனால் நான் ஒன்றையும் இழந்துவிடவில்லை என்பதையும் தெரிந்து கொண்டேன். இதைப் போலவே, மாணவர்கள் தள்ள வேண்டிய விஷயங்கள், இன்னும் எத்தனையோ இருக்கின்றன. இவற்றில் பதவி மோகம் என்பது ஒன்று. இதைப்பற்றி நினைக்க வேண்டியவர் குடும்பத்தை நடத்துபவரேயன்றி, பிரம்மச்சாரியாக வாழ்க்கை நடத்தும் மாணவன் அல்ல. சொந்த நாட்டின் நிலைமையை உள்ளது உள்ளவாறே அறிந்து, தனது நாடு இன்று எவ்வளவு பெரிய நெருக்கடியைச் சமாளிக்க வேண்டியிருக்கிறதென்பதையும் உணர்ந்து, நாட்டுக்காகத் தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய மாணவன் தெரிந்துகொள்ள வேண்டும். உங்களில் பலர் பத்திரிகைகள் படிக்கிறீர்கள் அல்லவா? பத்திரிகை படிப்பதை அடியோடு நிறுத்திவிடும்படி நான் உங்களைக் கேட்கவில்லை; ஆனால், அன்று தோன்றி அன்று மறையும் இயல்புடைய விஷயங்களை நீங்கள் தள்ளிவிட வேண்டுமென்று விரும்புகிறேன். நிரந்தரமாக நமக்கு ஆர்வம் தரும் விஷயங்களைச் செய்திப் பத்திரிகைகளிலே காண முடியாது. மாணவர்களிடம் நல்லொழுக்கத்தை வளர்க்கச் செய்திப் பத்திரிகைகள் துணை செய்ய மாட்டா. இருந்தபோதிலும், மாணவர்களுக்கு அவற்றில் எவ்வளவு மோகம் இருக்கிறதென்பதை நான் அறிவேன். இது மிக்க பரிதாபமான, பயங்கரமான நிலையாகும். கல்வி சம்பந்தமாக நானே சில சோதனைகளைச் செய்து பார்த்திருக்கிறேன். அதனாலேதான் நான் இந்த ரீதியில் பேசுகிறேன். நான் செய்த சோதனைகளிலிருந்து கல்வியின் பொருள் என்ன என்பதைத் தெரிந்து கொண்டேன். நான் முதன் முதலாகக் கண்டு கொண்டது சத்தியாக்கிரகமும் ஒத்துழையாமையுமே. பிறகு, எனது சோதனைகளைத் தொடங்கினேன். இந்தப் புதிய சோதனைகளை நடத்தியதற்காக நான் சிறிதும் வருந்தியதில்லை. அன்றியும் அரசியல் சுதந்திரத்தை அடைவதற்காக மட்டும் இவற்றை நான் கையாளவில்லை. இவற்றைப் பின்பற்றும்படியாக மாணவர்களைத் தூண்டவும் நான் துணிந்திருக்கிறேன். ஏனெனில், இவை ஒரு தீங்கும் செய்யாதவை; இவற்றின் தத்துவங்கள் இன்று ராட்டினத்திலே பூரணமாக அமைந்துள்ளன. முதன்முதலாக ராட்டினத்தைக் கொண்டுவந்த போது, 'இந்த ராட்டினமா இந்தியாவுக்கு விமோசனம் அளிக்கப் போகிறது!' என்று எல்லோரும் சிரித்தார்கள், ஏளனம் செய்தார்கள். ஆனால், இன்னும் சிறிது காலத்

தில், அதை எல்லோரும் ஆனந்தத்துடன் வரவேற்பார்கள். காங்கிரஸ் அதை ஏற்றுக்கொண்டிருக்கிறது. வைஸ்ராய ரீடிங் பிரபுவுக்குக் கூட நான் அதைச் சிபாரிசு செய்கிறேன். அப்படி அவருக்குச் சிபாரிசு செய்வதில் எவ்வித நஷ்டமும் இல்லையென்று எனக்குத் தெரியும். அதனால் அவருக்குச் சிபாரிசு செய்ய நான் சற்றும் தயங்கவில்லை. அதை வேண்டாமென்று ரீடிங் பிரபு தள்ளிவிடுவாரானால், அதனால் நஷ்டம் அவருக்கேயன்றி எனக்கில்லை. கல்கத்தா பாதிரியாரை டில்லியில் சந்தித்துப் பேச நேர்ந்தபோது, ராட்டினத்தினாலேயே மக்களுக்கு விமோசனம் உண்டு என்ற செய்தியை அவரிடம் தெரிவிக்க நான் தயங்கவில்லை. கர்னல் மாடாக்குக்கும்* இந்த உபதேசத்தையே செய்தேன். கர்னல் மாடாக்கின் மனைவியார் இங்கிலாந்துக்குப் பிரயாணமானபோது, ஞாபகச் சின்னமாக ஒரு கதர்த் துண்டைக் கொடுத்து, கதர் தெரிவிக்கும் செய்தியை வீடுவீடாகப் பரப்பும்படி அவரைக் கேட்டுக் கொண்டேன்.

எந்தச் சந்தர்ப்பத்திலும், எந்தச் சமயத்திலும், ராட்டினத்தின் செய்தியை எடுத்துச் சொல்லுவதில் எனக்கு அலுப்புத் தோன்றவில்லை. ஏனெனில், அது தீங்கு எதுவும் செய்யாத அவ்வளவு நல்லதொரு சாதனம். ஆரோக்கியத்திற்குத் தீங்கு செய்யும் காரசாரமான உணவு ருசியாய் இருப்பதைப் போல ஆரோக்கியத்தை வளர்க்கும் நல்ல உணவில் ருசி இராதுதான். முதலில் மனத்திற்குக் கசப்பாயிருந்து இறுதியில் அமர நிலையை அளிக்கவல்ல பொருள்களையே உட்கொள்ளும்படி, கீதையில் அழியாத ஒரு வாக்கியம் ஆழ்ந்து சிந்திக்கவல்ல மக்களுக்கு உபதேசம் செய்கிறது. இன்று ராட்டினத்தையும், அது தரும் நூலையும் அப்படிப்பட்ட பொருளென்று கூறலாம். நூற்பதைவிடச் சிறந்த யக்ஞம் (தியாகம்) வேறு உண்டா? ராட்டினமே துன்பத்திற்குள்ளான உள்ளத்துக்குச் சாந்தியைக் கொடுக்கவல்லது; கவலையால் அல்லல்படும் மானவனுக்கு ஆன்மிகத் துறையில் ஆறுதல் அளித்து அவனுடைய வாழ்க்கையைச் செலுத்தவல்லது. செய்த காரியத்துக்குப் பலன் உடனடியாகவே ஏற்படவேண்டுமென்று எதிர்பார்க்கிற காலம் இது. இந்தக் காலத்தில் நமது நாட்டுக்குக் கொடுக்க இதைவிட நல்ல மருந்து என்னிடம் இல்லை. காயத்திரியைக் கூட அவ்வளவு பொருத்தமானதென்று சொல்ல முடியாது. காயத்திரியை நான் மகிழ்ச்சியோடு குறிப்பிடுவேன். ஆனால் உடனடியாக அதனால் பலன் கிடைக்குமென்று சொல்லுவதற்கில்லை. நான் இப்போது சொல்லுகிற ராட்டினத்தையோ, கடவுளுடைய

---

* 1924 ஜனவரி மாதம் 12–ஆம் தேதி இரவு புனாவிலுள்ள சாசூன் ஆஸ்பத்திரியில் காந்திஜிக்கு குடல் நோய் சம்பந்தமான அறுவை சிகிச்சை நடந்தது. கர்னல் மாடாக்தான் அறுவை சிகிச்சை செய்த டாக்டராவார். மிகவும் கவலைக்கு இடமாக இருந்த காந்திஜியின் உடல் நிலை அந்த சிகிச்சைக்குப் பின் குணமடைந்தது. அதிலிருந்து கர்னல் மாடாக்கிற்கும் காந்திஜிக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. டாக்டர் கர்னல் மாடாக்கையும் அவரது மனைவியையும் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

நாமத்தை உச்சரித்துக் கொண்டே நீங்கள் கடைப்பிடிக்கலாம். அதன் மூலம் உடனடியான பலனையும் நீங்கள் எதிர்பார்க்க முடியும். ஆங்கில நண்பரொருவர், ஒழிந்த பொழுது மகிழ்ச்சியோடு செய்வதற்குரிய வேலை என்ற அளவில், ராட்டினம் மிகச் சிறந்ததென்று தம் அறிவில் பட்டதாக எனக்குக் கடிதம் எழுதினர். 'நீங்கள் பொழுது போக்குக்காக ராட்டினம் சுற்றலாம். ஆனால், அது எங்களுக்கு எல்லாச் செல்வத்தையும் அளிக்கவல்ல கற்பக விருட்சமாக இருக்கிறது' என்று நான் அவருக்குப் பதில் அளித்தேன். மேல்நாட்டுப் பழக்கங்கள் பலவற்றில் எனக்கு விருப்பம் இல்லை. ஆனால் சிலவற்றைப் பார்க்கும்போது, எனக்கு மிக்க வியப்புண்டாகிறது. பொழுது போக்கிற்காக ஒழிந்த நேரத்தில் செய்யும் வேலை என்று மேல்நாட்டினர் சில வேலைகளில் ஈடுபடுகிறார்கள். இப்படி ஈடுபடுவதில் சிறந்த பொருள் இருக்கிறது. கர்னல் மாடாக் திறமை வாய்ந்த சத்திர வைத்தியர்; சத்திர வேலையில் அவருக்கு மிக்க ஆனந்தம் இருந்தது. ஆனால், அந்த வேலையிலேயே அவர் தம் நேரத்தை யெல்லாம் கழித்ததில்லை. தோட்ட வேலையில் அவருக்கு அதிக விருப்பம். தோட்ட வேலைக்காகத் தினம் இரண்டு மணி நேரம் அவர் ஒதுக்கி வைத்திருந்தார். இந்தத் தோட்ட வேலைதான் வாழ்க்கையில் ருசியையும் மகிழ்ச்சியையும் அவருக்கு உண்டுபண்ணியது.

ஆகவே, ராட்டினத்தைக் கைக்கொள்ளும்படி உங்களுக்குச் சிபாரிசு செய்கிறேன். பொழுது போக்கிற்கு ஏற்ற வேலை வேண்டுமானாலும் ராட்டினத்தை வைத்துக்கொள்ளுங்கள். உங்கள் வாழ்க்கையில் ருசியும் உற்சாகமும் ஏற்பட்டு அமைதியையும் ஆனந்தத்தையும் அடைய இதுவே தக்க சாதனம். பிரம்மச்சரிய வாழ்க்கை வாழ இது உங்களுக்கு உதவி புரியும். மாணவர்களுக்கு நம்பிக்கை என்பது மிகவும் முக்கியமான ஒரு விஷயமாகும். கேள்வி கேட்காமல் ஏற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன. ஆசிரியர் சொல்லுகிறார் என்பதற்காகவே, அவற்றை நீங்கள் ஏற்றுக் கொள்ளுகிறீர்கள். உதாரணமாக, க்ஷேத்திர கணித சம்பந்தமான பல உண்மைகளை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனினும் அவை நிர்ணயிக்கப்பட்டுள்ள உண்மைகள் என்று நான் நம்பினேன். இந்த நம்பிக்கை காரணமாக இன்று அவற்றை நான் புரிந்து கொள்ள முடிகிறது. அது மட்டுமல்ல. தற்சமயம் நான் செய்கிற வேலை எனக்கு எவ்வளவு எளிதாயிருக்கிறதோ, அவ்வளவு எளிதாகவே க்ஷேத்திர கணித ஆராய்ச்சியிலும் நான் ஈடுபட முடிகிறது. நம்பிக்கையோடு மட்டும் நீங்கள் ராட்டினத்தைச் சுற்றுவீர்களானால், ஒரு காலத்தில், இந்தக் கிழவன் சொன்னது அவ்வளவும் உண்மை என்பதைக் கண்டுகொள்ளுவீர்கள். இதில் சந்தேகமில்லை. சாத்திரங்களை நன்றாகக் கற்ற பண்டிதர் ஒருவர், கீதையில் உள்ள கீழ்க் கண்ட சுலோகம் ராட்டினத்திற்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது என்று கூறினர்:

"முயற்சி வீணாகியது என்ற பேச்சிற்கே இதில் இடமில்லை. இதனால் குற்றமோ, இடையூறோ எதுவும் ஏற்படுவதற்கில்லை. இந்த தருமத்தைச் சிறிதளவு மேற்கொண்டாலும், இது பேரபாயத்திலிருந்து மனிதனைக் காப்பாற்றுகிறது."*

—'எங் இந்தியா' – 29—1—1925

# 9
# கோபமும் கண்டனமும்

ஒரு வங்காளப் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"தாங்கள் சென்னை மாணவர்களிடையே பேசியபோது, மாணவர்கள் விதவைகளையே மணக்க வேண்டுமென்று அவர்களுக்குத் தாங்கள் கூறிய புத்திமதி, எங்களுக்குத் திகைப்பையும் திகிலையும் உண்டாக்கியிருக்கிறது. அதையொட்டி நான் தாழ்மையுடன் ஆனால் கோபத்துடன் இந்தக் கண்டனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"விதவைகள் வாழ்க்கை முழுவதும் பிரம்மச்சரிய விரதத்தை அனுஷ்டிக்கிறார்கள். இந்த விரதம் இந்தியப் பெண் குலத்துக்கு உலகத்திலேயே மிக உன்னதமான ஒரு நிலையை அளித்திருக்கிறது. தாங்கள் கூறும் இந்த அறிவுரையால் இந்த உயர்ந்த மனப்பாங்கு அழிந்துவிடத்தான் காரணமாக இருக்கும். தவிர, பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொண்டு அதன் மூலம் அவர்கள் ஒரே பிறவியில் முக்தி பெறுவதற்குள்ள சந்தர்ப்பங்களையும் அழிப்பதோடு, உலக இன்ப மென்ற நாற்றம் நிறைந்த பாதையில் விதவைகளை இது தள்ளிவிடும். எனவே, விதவைகளிடம் காட்டும் இம்மாதிரியான அதிக அனுதாபம் அவர்களுக்கே பெரிய தீமை செய்வதாகும். மேலும், மணமாகாமலிருக்கிற இளம் பெண்களுக்கு மணம் முடிப்பதென்பது தற்போது மிகவும் கஷ்டமானதாகவும் சிக்கலானதாகவும் இருக்கிறது. இந்த நிலையில் விதவைகளிடம் ஆழ்ந்த அனுதாபம் காட்டுவது மணமாகாத பெண்களுக்கும் அநீதி செய்வதாகும். மணம் சம்பந்தமாகத் தாங்கள் மேற்கொண்டுள்ள கொள்கை, ஆன்மா ஒரு உடலைவிட்டு இன்னொரு உடலைப் பெறுகிறது என்ற தத்துவம், மறுபிறப்பு, முக்தி ஆகிய ஹிந்து மதக் கொள்கைகளை அடியோடு தலைகீழாக்கிவிடும். சில சமூகங்களின் சமயக் கொள்கைகள் நமக்குப் பிடிப்பதில்லை. தங்களுடைய கொள்கை நமது ஹிந்து சமுதாயத்தையும் இந்தச் சமூகங்களின் நிலைக்குக் கொண்டுவந்துவிடும். நமது சமுதாயமும் இழிவான நிலைக்கு வந்துவிட்டதென்பது உண்மைதான். ஆனால், நாம் ஹிந்து மத லட்சியங்களில் நாட்டம்

---

* கீதையின் 2-வது அத்தியாயம் 40—ஆம் சுலோகத்தின் பொருளே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

கொண்டு அவற்றை அடைய இயன்றவரை முயன்று மேன்மை பெற வேண்டுமேயன்றி இதர சமுதாயங்களையும் அவற்றின் லட்சியங்களையும் உதாரணமாகக்கொண்டுவிடக் கூடாது. அகல்யாபாய், ராணி பவானி, பெஹ்ளா, சீதை, சாவித்திரி, தமயந்தி போன்றோரின் செயல்களே ஹிந்து சமுதாயத்திற்கு வழிகாட்டும். அவர்களின் சிறப்புக்கு ஏற்ப நாம் சமுதாயத்தை நடத்த வேண்டும். ஆகையால் இந்தச் சிக்கலான பிரச்னைகளைப் பற்றி அபிப்பிராயம் தெரிவிப்பதை நிறுத்திக்கொண்டு, எப்படி நடப்பது நல்லதென்று சமூகம் கருதுகிறதோ அப்படியே நடந்து கொள்ளும்படி சமூகத்தை விட்டுவிடுமாறு, தங்களை மிகத் தாழ்மையோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.''

ஆத்திரம் நிறைந்த இந்தக் கண்டனமானது என் மனத்தை மாற்றவும் இல்லை; நான் செய்த காரியத்திற்காக என்னை வருந்தும்படி செய்யவும் இல்லை. மன உறுதி கொண்ட விதவையையும், பிரம்மச்சரியம் என்றால் என்ன என்று தெரிந்து அதை அனுஷ்டிப்பதில் கண்ணுங்கருத்துமாயுள்ள விதவையையும் அவர்களுடைய நோக்கத்திலிருந்து வழுவும்படி எனது அறிவுரை செய்து விடாது. ஆனால், மணம் என்றால் இன்னது என்று தெரியாத இளம் வயதுப் பெண்கள் பலருக்கு மணம் ஆகியிருக்கிறது. நான் கூறிய அறிவுரைப்படி நடப்பார்களாயின், நிச்சயமாக அது அவர்களுக்கு ஒரு பெரிய ஆறுதலை அளிக்கும். மணம் என்றால் இன்னது என்று அறியாத சிறுமிகளை 'விதவை' என்று அழைப்பது, புனிதமான தொடர்புகள் உள்ள அச்சொல்லை மோசமான முறையில் துஷ்பிரயோகம் செய்வதாகும். மேற்சொன்ன ஆசிரியர் எந்த நோக்கத்தோடு எழுதியிருக்கிறாரோ அதே நோக்கத்துடன் தான், இந்நாட்டு இளைஞர்கள் மணந்தால் இந்த ''விதவைகளை'' மணக்க வேண்டும், இல்லையெனில் மணம் செய்துகொள்ளாமல் இருக்க வேண்டுமென்று நான் அவர்களுக்கு அறிவுறுத்துகிறேன். கைம்மையின் புனிதத் தன்மையைக் காப்பாற்ற விரும்பினால், குழந்தைப் பருவத்திலேயே வைதவ்யம் என்ற சாபத்தீட்டைக் களைந்துதான் ஆகவேண்டும்.

விதவைகள் பிரம்மச்சரிய விரதத்தை அனுஷ்டித்தால் மோட்சம் அடைவார்கள் என்பதற்கு அனுபவ பூர்வமான ஆதாரம் எதுவுமே இல்லை. இறுதியான பேரானந்த நிலையை அடைவதற்குப் பிரம்மச்சரிய விரதம் மட்டும் போதாது; வேறு பல விஷயங்கள் அவசியமாகும். மேலும், பலவந்தமாகப் புகுத்தப்பட்ட பிரம்மச்சரியத்தினால் ஒரு பயனும் இல்லை. ரகசியமாகத் தீய காரியங்களைச் செய்வதற்கு அது இடங்கொடுக்கிறது. ரகசியமாக நிலவும் தீச்செயல் சமுதாயத்தின் ஒழுக்கத்தையே சீர் குலைத்து விடுகிறது. நான் நேரில் கண்ட அனுபவத்திலிருந்தே இதை எழுதுகிறேன் என்பதை இந்த ஆசிரியர் அறிய வேண்டும்.

நான் கூறிய அறிவுரையின் பயனாக, கன்னி விதவைகளுக்கு அடிப்படையான நியாயம் வழங்கப் பெற்றால், நான் மிக்க மகிழ்ச்சி அடைவேன். இந்த விதவைகளுக்கு நியாயம் வழங்குவதன்

மூலம், சரியான பக்குவமடைவதற்கு முன்னரே மனிதனுடைய காம வெறியைத் தணிப்பதற்காக விற்கப்படாமல், பக்குவமான வயதும் அறிவும் வரும்வரை மணமாகாத மற்றப் பெண்கள் காத்திருப்பதற்குரிய சந்தர்ப்பத்தையும் அளித்தவர்களாவோம்.

ஓர் உயிர் மற்றொரு உடலில் புகுவது, மறுபிறப்பு, முக்தி போன்ற நம்பிக்கைகளுக்கு முரண்பட்ட மண சம்பந்தமான கொள்கை எதையும் நான் போதிக்கவில்லை. கோடிக்கணக்கான ஹிந்துக்கள், விதவை விவாகத்தைத் தடை செய்யவில்லை என்பதை வாசகர்கள் அறிய வேண்டும். இவர்களை யெல்லாம் தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தவர்களென்று அவ்வாசிரியர் இறுமாப் புடன் வர்ணிக்கிறார். மனைவியிழந்த கிழவர்கள் மறுமணம் செய் வது அந்த நம்பிக்கையில் குறுக்கிடுவதில்லையென்றால், ‘விதவை’ என்று நாம் தவறாகச் சொல்லுகிற இளம் பெண்கள் செய்து கொள்ளும் உண்மையான மணம் எப்படி இந்த அற்புதமான நம்பிக்கைக்கு மாறாக இருக்க முடியும் என்பது எனக்கு விளங்க வில்லை. ஓர் உயிர் மற்றோர் உடலில் புகுதலும் மறுபிறப்பும் எனக்கு வெறும் கொள்கைகள் மட்டும் அல்ல; நாள்தோறும் சூரியன் உதிப்பது எவ்வளவு வெளிப்படையான உண்மையோ, அவ்வளவு அக் கொள்கைகளும் எனக்கு உண்மையான விஷயங்கள் ஆகும் என்பதை இந்த ஆசிரியர் அறிந்துகொள்ள வேண்டும். முக்தி என்பது ஓர் உண்மை; அதை அடைவதற்கு நான் என்னால் இயன்றவரை முயன்றுவருகிறேன். முக்தியைப் பற்றிய சிந்தனையே, கன்னி விதவைகளுக்கு நாம் செய்துவரும் அநீதியை நான் மிகத் தெளிவாக உணரும்படி செய்திருக்கிறது. ஆண்மையற்ற நிலையில் உள்ள நாம், கொடுமைக்குள்ளான இந்த இளம் விதவைகளை, தெய்வத்தன்மை பொருந்திய சீதை போன்ற அழிவற்ற உத்தமிகளின் பெயரோடு ஒன்றுசேர்த்துப் பேசலாகாது.

ஹிந்து மதத்தில் உண்மையான கைம்மை பெரிதும் போற்றப் பட்டிருக்கிறது. இது நியாயமே. ஆனால், எனக்குத் தெரிந்த வரையில், விதவை மணம் வேத காலத்தில் அறவே தடுக்கப்பட் டிருந்தது என்பதற்குப் போதிய சான்று எதுவும் இல்லை. ஆனால், நான் எதிர்ப்பது உண்மையான கைம்மை நிலையை அன்று; அதனுடைய கோரமான போலி வேடத்தையே நான் எதிர்க் கிறேன். நான் குறிப்பிடுகிற இந்த இளம் பெண்களை, விதவைகள் என்று கருதாமலிருப்பதுதான் மேலானது. பெண்களிடம் மரியாதை காட்டும் இயல்பு ஒரு சிறிதேனும் அமைந்துள்ள ஒவ்வொரு ஹிந்துவும், இந்தப் பெண்களின்மீது சுமத்தப்பட்டுள்ள சகிக்க முடியாத சமுதாயக் கொடுமையை நீக்கக் கடமைப் பட்டவராவர். ஆதலால், ஹிந்துவாய்ப் பிறந்த ஒவ்வொரு இளைஞனும், விதவைகளென்று தவறாகச் சொல்லப்படுகிற மண மாகாத இந்தப் பெண்களைத் தவிர வேறு பெண்களை மணக்க

மறுத்துவிட வேண்டும்; இந்த புத்திமதியையே நான் அவர்களுக்குத் தாழ்மையோடு மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறேன்.

—'எங் இந்தியா' – 6—10—1927

# 10

# ஆங்கில் மாணவருக்கு

[வட்ட மேஜை மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக 1931-இல் காந்திஜி இங்கிலாந்துக்குச் சென்றிருந்தார் அல்லவா? அப்போது ஈட்டன் கல்லூரி மாணவர்களின் கூட்டத்தில் அவர்களுடைய கோரிக்கைக்கிணங்க "ஹிந்துக்களின் விருப்பம்" என்பது பற்றி காந்திஜி பேசிய விவரங்களைக் கீழே காணலாம் :]

இங்கிலாந்தில் உங்களுக்கும் பெரியதொரு ஸ்தானமுண்டு. பிற்காலத்தில், உங்களில் சிலர் பிரதம மந்திரிகளாகவோ அல்லது படைத்தலைவர்களாகவோ வரப்போகிறீர்கள். உங்களுடைய குணங்கள் உருவாகி வரும் இந்தச் சமயத்தில், நான் உங்களின் இதயத்தை ஊடுருவிச் செல்லப் பெரிதும் விரும்புகிறேன். இந்தச் சமயத்தில் உங்கள் இதயங்களில் இடம் பெறுதல் எளிது. பரம்பரையாகவே பொய்யானதொரு சரித்திரத்தை உங்களுக்குச் சொல்லி வந்திருக்கிறார்கள். அதற்கு மாறுபட்ட உண்மைகளை நான் உங்களிடம் தெரிவிக்கப் போகிறேன். பெரிய பெரிய அதிகாரிகளிடம் கூட பேதைமை குடிகொண்டிருப்பதை நான் காண்கிறேன். இது, அறிவுக் குறைவினால் ஏற்பட்ட பேதைமையன்று ; தவறான உண்மைகளை நம்புவதனால் ஏற்பட்ட பேதைமை யாகும். சாம்ராஜ்ய ஆசை உடையவர்களாக நான் உங்களை எண்ணவில்லை. ஆனால், வேறு பல சமுதாயங்களைச் சுரண்டி அதனால் வாழ்க்கை நடத்தும் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் அல்லவென்றும், உலகத்தின் அமைதியை வாள்கொண்டு பாதுகாக்க முற்படாமல், ஒழுக்கத்தின் சக்தியினால் பாதுகாப்பவர்கள் என்றும் எண்ணி, உண்மையான நிகழ்ச்சிகளை உங்களிடம் தெரிவிக்க விரும்புகிறேன். ஹிந்துக்களின் விருப்பம் என ஒன்றில்லை. எனது நாட்டின் விடுதலையைப் பொறுத்தவரை, உங்களைப்போலவே நானும் ஒரு ஹிந்து அல்ல. ஹிந்துக்களின் அபிப்பிராயத்தைத் தாங்கள் பிரதிபலிப்பதாகச் சொல்லிக்கொண்டு, ஹிந்து மகாசபைப் பிரதிநிதிகள் ஹிந்துக்களின் விருப்பம் என்பதாக ஏதோ சொல்லிவருகிறார்கள். அவர்கள் கூறும் கூற்றை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. தேசீயவாதிகளாக இருந்துகொண்டு அவர்கள் தேசீயப் பிரச்னைகளுக்கு முடிவுதேட விரும்பவில்லை. பெரும்பான்மையினர் ஹிந்து மகாசபையினரைப் பின்பற்றுகிறபடியால், சிறுபான்மையினரின் விருப்பத்தைப் பூர்த்திசெய்துவைக்க முன்வரும்படி, ஹிந்து மகாசபையினருடன்

நான் மன்றாடி வருகிறேன். அதற்கு அவர்கள் இசைந்தால், திடீ ரென்று மந்திர சக்தியினால் ஏற்படுவதுபோல, நிலைமை தெளி வடைந்து வழி காண ஏதுவாகும். பெரும்பான்மையினரான ஹிந் துக்களின் விருப்பம் எது, உணர்ச்சி எது என்பதை ஒருவருமே அறியார். அவர்களுடன் பல ஆண்டுகள் நான் கலந்து பழகி யிருக்கிறேன். ஆகையால், அவர்களின் விருப்பத்தை நான் நன்கு அறிவேன் என்று என்னால் உரிமையுடன் கூற முடியும். உத்தியோகத்தில் இவ்வளவு வேண்டும்; தேர்தலில் இவ்வளவு ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்ற சில்லறை விவகாரங் களில் அவர்கள் அக்கறை கொள்ளுவதில்லை. பெரிய பெரிய நகரங்களில்தான் வகுப்புவாதத்தின் தடபுடல்கள் அதிகம். அவற்றை லண்டன், அல்லது மேல் நாட்டு நகரங்களின் கையாட் கள் எனலாம். இந்திய நகரங்கள் யாவும் இங்கிலாந்திற்குக் கமிஷன் ஏஜண்டுகளாக இருந்துகொண்டு, உங்களுடன் சேர்ந்து இந்தியக் கிராமங்களைச் சுரண்டிக் கொள்ளையடிக்கின்றன. இந் தியாவின் விடுதலையாகிய பெரிய விஷயத்தை எண்ணும்போது, வகுப்புவாதம் அவ்வளவு முக்கியமன்று. இந்தியாவின் சுதந்திரப் பிரச்னையை பிரிட்டிஷ் மந்திரிகள் வேண்டாவெறுப்பாய் ஒதுக்கித் தள்ளிவிடுகிறார்கள். புரட்சி செய்யும் இயல்புடனும் அதிருப்தி யுடனும் இருந்துவரும் இந்தியாவோடு நீண்ட நாள் ஒத்துவாழ முடியாதென்பதை, பிரிட்டிஷ் மந்திரிகள் மறந்துவிடலாகாது. நாங்கள் புரட்சி செய்கிறோம் என்பது என்னவோ உண்மைதான். ஆனால் அது பலாத்காரமற்ற புரட்சியாகும். வகுப்புவாதம் என்ற நோய் சமூகத்தின் சில பகுதிகளை அரித்து வருவது உண் மையேயாயினும், அதைவிட இந்தியாவின் விடுதலை இன்னும் முக்கியமான விஷயம் ஆகும். அரசியல் திட்ட அமைப்பைத் திருப்திகரமான முறையில் சரிப்படுத்திவிட்டால், சமூக வெறுப்பு கள் உடனே தாமாகவே மறைந்தோடிவிடும். பிளவுபடுத்தி வைக்கும் அந்நியரின் வாள் நடுவிலிருந்து விலகிவிட்டால், பிரிந் திருக்கும் சமூகத்தினர் ஒன்றுபட்டுவிடுவார்கள். எனவே, ஹிந் துக்களின் விருப்பம் என ஒன்றில்லை. அப்படி ஒன்று இருக்கு மாயின், அதைக் கடலில் தள்ளிவிட வேண்டியது அவசியம். அந்தப் பிரச்னையை நீங்கள் ஆராய்வதால் உங்களுக்கு யாதொரு நலனுமில்லை. அதனுடைய நுணுக்கங்களை எல்லாம் மிகைபடுத் திச் சொல்ல நீங்கள் முனைந்துவிட்டால்,—நிச்சயமாக முனைவீர் கள் - நாங்கள் தேம்ஸ் நதியில் மூழ்கி நாசமாவதை நீங்கள் விரும் புவதாகவே முடியும்.

வகுப்புப் பிரச்னை முக்கியமல்ல. அதைப்பற்றிய கவலை உங் களுக்கு வேண்டியதில்லை என்று நான் சொல்லும்போது, நான் சொல்லுவது கடவுள் அறிய உண்மையாகும். கோடிக்கணக் கான மக்கள் பலாத்காரமின்மையை எப்படி ஏற்றுக்கொண்டுள் ளார்கள் என்பதையும், அவர்கள் எப்படி அதைப் பற்றிக்கொண் டிருக்கிறார்கள் என்பதையும் சரித்திரம் படிக்க விரும்பும்போது, படித்துப் பாருங்கள். காட்டில் வாழும் விலங்குகளைப் போல,

மனிதன் முரட்டுத்தனமாய் நடந்துகொள்ளுவதைப் படிக்காமல், மனிதனிடம் காணப்படும் சிறப்பு இயல்புகளை எல்லாம் ஆராய்ந்து பாருங்கள். வகுப்புத் தகராறுகளில் கலந்துகொள்ளுகிறவர்களை, பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருப்பவர்களுக்குச் சரியான உதாரணமாகச் சொல்லலாம். அவைகளை நீங்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டாம். யாருக்குமே தீங்கு செய்யாமல், நாட்டின் விடுதலைக்காக உயிரையே அர்ப்பணம் செய்யும் மனிதர்களை ஆராய்ந்து பாருங்கள். உயர்ந்த இயல்புடைய மனிதனை அதாவது அன்பு ததும்பும் மனிதனை நீங்கள் ஆராய்ந்து பாருங்கள். உங்கள் நாட்டினர் எங்களை ஆண்டு வருகிறார்கள் என்பதற்காக நீங்கள் கர்வங்கொள்ள வேண்டாம். எவரும் தம்மைத் தாமே அடிமைப்படுத்திக்கொள்ளுவதில்லை. எந்த ஒரு நாட்டினரும் இன்னொரு நாட்டினரை அடிமைப்படுத்தி அடக்கி ஆள்வது இயலாத காரியம். இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்குமிடையில் இருந்துவரும் தொடர்பு, பாவம் நிறைந்த ஒரு தொடர்பாக இருந்துவருகிறது; இயற்கைக்கு மிகவும் முரண்பட்ட தொடர்பாக இருந்துவருகிறது. சுதந்திரம் எங்களது பிறப்புரிமை; நாங்கள் அதை அடைய இயல்பாகவே எங்களுக்கும் உரிமை உண்டு. அதற்காக நாங்கள் பட்டிருக்கும் கஷ்டமும் இயற்றியிருக்கும் தவமும் கொஞ்சநஞ்சமல்ல. சுதந்திரத்தை அடைய வேண்டும் என்ற ஆசையோடு நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். வந்த காரியம் கைகூடி வர நீங்கள் எல்லோரும் ஆசி கூற வேண்டும். சுரண்டுகிற பாவத்திலிருந்து உங்கள் நாட்டினரை விடுதலை செய்து, ஒப்பற்றதொரு புகழை, வயது வந்ததும், உங்கள் நாட்டினருக்கு நீங்கள் தேடிக்கொடுக்க வேண்டும் என்பது என் விருப்பம். அதனால் மனித சமுதாயத்தின் முன்னேற்றத்துக்கு உதவியவர்கள் ஆவீர்கள்.

—'எங் இந்தியா'—12—11—1931

# 11

# சுயத் தூய்மை இன்றியமையாதது

இப்போது விதைக்கப்பட்டுள்ள இந்த விதை பிரிட்டிஷாரின் உணர்ச்சியைச் சாந்தப்படுத்தினாலும் படுத்தலாம்; அதன் விளைவாக மனிதர்கள் மிருகப் பாங்கு அடைந்து வருவது தடுக்கப்பட்டு நின்றுபோயினும் போகலாம். ஆங்கிலேயருக்குக் கோபம் வந்துவிட்டால், அது எவ்வளவு கொடுமையானதாய் இருக்கும் என்பதை பஞ்சாபிலே கண்டேன். எனக்குள்ள பதினைந்து வருட அனுபவத்தினாலும், சரித்திர வாயிலாகவும் அவர்கள் பல்வேறு இடங்களில் இழைத்துள்ள அட்டூழியங்களையும் அறிந்திருக்கிறேன். எங்கும் ஒரே மாதிரிதான். என்னால் கூடியவரை சகல சக்திகளையும் ஒன்றுதிரட்டி, இதைப் போன்ற காட்டுமிராண்டித்

தனம் இனிமேல் நடவாது தடுப்பதே எனது வேலை. எனது தேசத்தினர் படுகிற கஷ்டத்தைத் தடுப்பதைக் காட்டிலும், மனிதர்கள் காட்டுமிராண்டிகளாக மாறி வருவதைத் தடுப்பதில் எனக்கு அதிக ஈடுபாடு உண்டு. எங்கள் நாட்டினர் படும் அல்லல்களைப் போக்கவே நான் நாட்டம் செலுத்துவதாகச் சொல்லப்படுகிறது. கஷ்டப்படுவதற்குத் தாங்களே முனைந்து நிற்கும் மக்கள், தங்களை உயர்த்திக் கொள்ளுவதுடன், மனித சமுதாயத்தையுமே உயர்த்துகிறார்கள் என்பதை நான் அறிவேன். எதிரிகளை வெற்றிகொள்ளும் முயற்சிகளில் காட்டுமிராண்டித்தனமாய் நடந்து கொள்ளுகிறவர்களும், தங்களைவிட மெலிந்த நிலையிலுள்ள மனிதர்களையும் தேசங்களையும் சுரண்ட முயல்கிறவர்களும், தங்களை மட்டுமின்றி, மனித சமுதாயத்தையுமே கீழான நிலைக்குக் கொண்டுவந்து விடுகிறார்கள். மனித இயல்பை, வெட்கக் கேடான இழி நிலைக்கு உட்படுத்துவது எனக்கோ, அல்லது வேறு யாருக்குமோ விருப்பமானதன்று. நாமெல்லோரும் ஒரே கடவுளின் குழந்தைகளாயின், ஒரே தெய்விகப் பண்பு நமது உடல்களில் கலந்திருக்குமாயின், ஒவ்வொருவரும் செய்த, செய்கிற பாவத்திலும், - அவர் நம்மைச் சேர்ந்தவராயினும் சரி, அல்லது வேறு இனத்தைச் சேர்ந்தவராயினும் சரி, - நமக்கும் பங்குண்டு. மனிதனிடம் மிருகத்தன்மையைக் கிளறிவிடுதல் எவ்வளவு அருவருக்கத் தகுந்த செயல் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆங்கிலேயரில் எனக்குப் பல நண்பர்கள் உண்டு. இத்தகைய மிருக இயல்பை அவர்களிடம் காண நேரும் போது, நான் அடையும் அருவருப்பு அற்ப சொற்பமன்று. இந்தக் காட்டுமிராண்டித் தனத்தைப் போக்க நான் செய்து வரும் முயற்சியில், கூடுமானவரை உதவி செய்யவேணுமாய் உங்களை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தப் பிரச்னையை நன்கு அலசி ஆராய்ந்து பார்க்கும்படியும், உண்மை, பலாத்காரமின்மை இவற்றின் ஆற்றல்மீது உண்மையாகவே நம்பிக்கை இருக்குமாயின், கடவுளுக்குப் பயந்து இந்த இரண்டையும் தினசரி வாழ்க்கையில்-அரசியல் துறையில் மட்டுமின்றி, சகல துறைகளிலுமே — கடைப்பிடிக்கும்படியும், இந்திய மாணவர்களை நான் வேண்டிக் கொள்ளுகிறேன். இந்தத் துறையில் இறங்கி நீங்கள் செய்கிற எதுவும் நான் நடத்தும் போராட்டத்திற்கு உதவியாக இருக்கும். இந்திய மாணவர்களைப் போல உண்மையானவர்களை, நல்லவர்களைக் கண்டதில்லை என்று, உங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு பழகும் ஆங்கிலேயர்களும் ஆங்கிலப் பெண்மணிகளும் சொல்லும்படியாக நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். நமது தேசத்தார் செல்வது சரியான பாதை என்பதை எடுத்துக்காட்டுவதற்கு இது ஒரு கஷ்டமான காரியமா? 1920-ஆம் வருடம் நிறைவேறிய காங்கிரஸ் தீர்மானத்தில் 'சுயத்தூய்மை' என்ற சொல் காணப்படுகிறது. அந்த நிமிஷம் முதலே நம்மை நாமே பரிசுத்தப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று காங்கிரஸ் உறுதிகொண்டது.

சுயமாகத் தியாகம் செய்து, நம்மை நாமே பரிசுத்தப்படுத்திக் கொண்டால் நாம் விடுதலையடைய தகுதியுடையவர்களாவோம்; கடவுளும் நம் பக்கமிருப்பார். இதுவே உண்மையாயின், வேறு எது செய்யாவிட்டாலும், பரிசுத்த மனத்தோடு சுயமாகத் தியாகம் செய்ய முன்வருகிற ஒவ்வொரு இந்தியனும் பிறந்த தேசத்திற்கு உதவுகிறவன் ஆவான். தன்னைப் பலப்படுத்திக் கொள்ளவே காங்கிரஸ் இந்த வழிகளைக் கையாண்டிருப்பதாக நான் அபிப்பிராயப்படுகிறேன். எனவே சுதந்திரத்திற்காகப் போராட விரும்பும் ஒவ்வொரு மாணவனும் பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்தால் போதும். இதைத் தவிர அதிகமாக வேறு ஒன்றும் வேண்டியதில்லை. வெறுப்பு, சந்தேகம் இவற்றைக் கடந்ததாக, தேசத் தொண்டு செய்கிறவர்களின் சீலம் அமைந்திருக்க வேண்டும்.

# 12

# சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு அறிவுரை

[கொழும்பு சட்டக் கல்லூரியில் காந்திஜி பேசியபோது, "சட்டத் தொழிலை எப்படி புனிதப்படுத்தலாம்" என்ற கேள்விக்குப் பதில் அளிக்கையில் கூறியதாவது:]

இந்தக் கேள்வியைக் கேட்டதற்கு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். தகுந்த ஆதாரங்களுடன் இதற்கு என்னால் மறுமொழி கூற முடியவில்லை என்றால், வேறு யாராலுமே இதற்கு விடைகூற முடியாது. சட்டத் தொழிலில் நான் ஈடுபட்டு வாழ்க்கை நடத்திய காலத்தில், உண்மை, நேர்மை இரண்டையும் விட்டு நான் அணுவளவு கூட விலகியது கிடையாது.

சட்டத் தொழிலைப் புனிதப்படுத்துவது என்பதன் பொருள், பண வருவாயைக் குறைத்துக் கொள்ளுவது அல்ல. எப்பொழுதும் இதை நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். துரதிருஷ்டவசமாக, நிலைமை பெரும்பாலும் இப்போது அப்படித்தான் இருந்து வருகிறது. தேச நலனைக் கருதிச் சட்டத் தொழிலில் ஈடுபடுவதே அதைப் புனிதப்படுத்துவதாகும். தேச நலன் ஒன்றையே லட்சியமாகக் கொண்டு தங்கள் நுணுக்கமான சட்டத் திறன் அனைத்தையும் உபயோகித்து, தியாக வாழ்க்கை வாழ்ந்த புகழ்பெற்ற வழக்கறிஞர்கள் எல்லா நாடுகளிலுமே இருந்திருக்கிறார்கள். அதன் காரணமாக, வறுமைக்கு ஆளாக நேர்ந்த போதிலும், அவர்கள் அதற்காக வருந்தியதில்லை. இந்தியாவைப் பொறுத்தவரையில், மனமோகன கோஷை அப்படிச் சொல்லலாம். அவுரித் தோட்ட முதலாளிக்கு விரோதமாக அவர் வழக்கு நடத்தினார். உடல் நலத்தையும் பொருட்படுத்தாமல், ஏன் உயிரையுமே பொருட்படுத்தாமல் ஏழைக்

கட்சிக்காரர்களுக்காக அவர் அரும் பாடுபட்டார். தாம் பட்ட சிரமத்திற்காக ஏழைக் கட்சிக்காரர்களிடமிருந்து அவர் ஒரு தம்பிடிகூட வாங்கவில்லை. அவர் மிகவும் புத்தி நுட்பம் வாய்ந்த வழக்கறிஞர் என்பது மட்டுமல்ல, மிகப் பெரிய கொடை வள்ள லும் ஆவார். இந்தப் பெரியாரை நீங்கள் உதாரணமாகக் கொள்ள வேண்டும். இதைவிட நல்லதொரு நீதியை ஆசிரியர் ரஸ்கின் "கடையனுக்கும் கதிமோட்சம்" என்ற அவரது நூலில் சொல்லியிருக்கிறார். "ஒரு தச்சனுடைய வேலைக்கு ஒரு ஷில்லிங் கூடக் கிடைப்பதில்லை. அப்படியிருக்கும்போது ஒரு வக்கீல் பதினைந்து ஷில்லிங் வாங்குவது நியாயமா?" என்று அவர் கேட் கிறார். வக்கீல் வாங்கும் பணம் பெரும்பாலும் மிகவும் அதிக மாகவே இருக்கிறது. நானும் அப்படி அதிகமாகவே 'பீஸ்' வாங்கியிருக்கிறேன். அதிகமாக 'பீஸ்' வாங்கிய போதிலும், பொதுஜன ஊழியம் செய்வதற்குச் சட்டத் தொழில் எனக்குத் தடையாக இருந்ததில்லை.

இன்னொரு விஷயத்தையும் பற்றி நான் எச்சரிக்க விரும்பு கிறேன். தென்னாப்பிரிக்கா, இங்கிலாந்து முதலிய இடங்களி லும், அநேகமாக எல்லா இடங்களிலுமே, கட்சிக்காரர்களின் நலத்தை எண்ணி, விரும்பியோ விரும்பாமலோ, பொய் சொல்ல லாம் என்று வக்கீல்கள் கருதுகிறார்கள். கட்சிக்காரர் குற்ற வாளியாக இருப்பினும் அவர் சார்பாக வாதாடுவது வக்கீல்கள் கடமை என்று சொல்லும் அளவிற்கு ஒரு பிரபல ஆங்கில வக்கீல் வந்துவிட்டார்! நான் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. நீதிபதி களின் முன்னர் நடந்தவற்றை எடுத்துக்காட்டி, அவர்கள் உண் மையைத் தெரிந்துகொள்ள உதவிசெய்வதே வக்கீல்களின் கட மையாகும். அதை விட்டுவிட்டு, குற்றம் செய்திருப்பவனைக் குற்ற வாளி அல்ல என்று நிரூபிப்பது அவரது கடமை அல்ல. உங்கள் தொழிலின் கண்ணியத்தை நீங்கள்தான் பாதுகாக்க வேண்டும். உங்கள் கடமையை நிறைவேற்ற நீங்கள் தவறிவிடுவீர்களே யானால் மற்றத் தொழில்களின் நிலைமை என்னவாகும்? உண விற்கு உப்பு எவ்வளவு அவசியமோ, அதைப்போல, தேசத்திற்கு நீங்களும் முக்கியமானவர்கள்.

# 13

# தூய வாழ்க்கையின் அவசியம்

*[கண்டியில் உள்ள தர்மராஜ் கல்லூரியில் காந்திஜி நிகழ்த் திய பிரசங்கத்தின் விவரங்களே கீழே கொடுக்கப்பட்டுள்ளன.]*

நான் எவ்வளவோ அதிருஷ்டசாலி. உலகத்தின் எந்தப் பகுதிக்குப் போனாலும், சொந்த வீட்டில் இருப்பது போன்ற உணர்ச்சியே எனக்கு ஏற்படுகிறது. அங்கெல்லாம் சொந்த வீட் டில் நடந்துகொள்ளுவதைப் போலவே நான் நடந்து கொள்ளு

கிறேன். இந்த உணர்ச்சி இல்லாவிட்டால் தற்கொலை செய்து கொள்ளாமலே இறந்துபோக வேண்டிய நிலை வெகு காலத்திற்கு முன்னரே எனக்கு ஏற்பட்டிருக்கும்! பார்சி நண்பர்களைக் காண நேரும்போது, இந்த உணர்ச்சி எனக்கு இரட்டித்துவிடுகிறது. இதன் உண்மையை நீங்கள் உணர்ந்து கொள்வது கடினம். நான் விளையாட்டாகச் சொல்லுகிறேன் என்பதாக நீங்கள் நினைத்தாலும் நினைக்கக்கூடும். விளையாட்டாகச் சொல்லவில்லை; உண்மையாகவே சொல்லுகிறேன். தென் ஆப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் அநேக பார்சிக்காரர்களுடன் நான் நெருங்கிப் பழகியிருக்கிறேன். அவர்கள் என்னிடம் காட்டிய அளவற்ற அன்புக்கு எல்லையே இல்லை. இப்போதுகூட எனக்குப் பார்சி நண்பர்கள் பலர் இருக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம். பல பார்சி நண்பர்கள் எனக்கு உண்டு என்பதை நான் உங்களிடம் சொல்ல வேண்டியது அவசியம். இந்தியாவின் முதுபெரும் கிழவரான தாதாபாய் நவுரோஜி அவர்களின் பேத்திமார் மூவரும் என்னுடன் இருந்து, சிறந்த தொண்டுபுரிந்து வருகிறார்களென்பதைத் தெரிவிப்பதில் நான் மகிழ்ச்சியடைகிறேன்.

சொந்த விஷயத்தையும், குடும்ப விஷயத்தையும் பற்றிப் பேசியே நான் உங்கள் பொறுமையைச் சோதிக்கலாகாது. பண முடிப்பு கொடுத்ததற்காக எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

டிரினிட்டி கல்லூரியில் படிக்கும் சிறுவர்களுக்கு சமீப காலத்தில் என்ன சொன்னேனோ, அந்த விஷயத்தையே உங்களுக்கும் சொல்ல விரும்புகிறேன். தூய்மை, உண்மை என்ற பலமான அஸ்திவாரத்தின் மீது உங்களுடைய கல்வி உருவாக்கப்பட வேண்டும். அவ்வித அஸ்திவாரத்தைக் கொண்டிராத கல்வி முற்றும் பயனற்றதாகிவிடும். நீங்கள் யாவரும் தூய வாழ்க்கை வாழ வேண்டும். எண்ணம், பேச்சு, செயல் ஆகிய மூன்றிலும் நீங்கள் பரிசுத்தமானவர்களாக விளங்க வேண்டும். இல்லையேல். நீங்கள் எவ்வளவுதான் படித்திருந்தாலும் அதனால் பயனே இல்லை; உங்கள் வாழ்க்கை பாழடைந்துவிட்டதாகவே நான் சொல்லுவேன்.

ஒரு விஷயத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வரும்படி என்னைக் கேட்டுக் கொண்டார்கள். தூய்மை என்ற சொல், யாவற்றையும் விட முதலில் மனச் சுத்தத்தையே குறிக்கும். மனத்தில் இருப்பதே செயலாகவும் நடத்தையாகவும் வெளிப்படுகின்றன. வாயைச் சுத்தமாக வைத்துக்கொள்ள விரும்புகிற பையன், ஒருக்காலும் கெட்ட சொற்களைச் சொல்ல மாட்டான்.

புகை பிடிக்கும் பழக்கத்திற்கு ஆளான சிறுவர்களை நான் பார்த்திருக்கிறேன். இந்தக் கெட்ட பழக்கம் பர்மாவில் அதிகம். அதே போல இலங்கையிலும் இந்தப் பழக்கம் அதிகமாக இருக்கிறது. எங்குமே இந்தத் தீய பழக்கத்திற்கு

ஆளாகிப் பையன்கள் கெட்டுப் போகிறார்கள். பார்சிகளை நெருப்பு வழிபாடு செய்பவர்கள் என்று சொல்லுவதுண்டு. பார்சிகளோ நெருப்புத் தெய்வமாகிய சூரியனை, அதனுடைய மகத்தான தோற்றத்தில் வழிபட்டு, அதன் மூலம், கடவுளைக் காண்கிறார்கள். தவறாகவே அவர்களை அவ்விதம் அழைத்துவிட்டார்கள் போலும். உங்களைக் காட்டிலும் அதிகமாக நெருப்பு வழிபாடு செய்கிறவர்கள் (புகை பிடிப்பவர்கள்) வேறு யார் இருக்கிறார்கள் !

நல்ல பார்சிகளாக இருப்பவர்கள் பீடி, சிகரெட்டுப் பிடிக்க மாட்டார்கள். உங்கள் மேற்பார்வையில் இருந்துவரும் பையன்கள் இந்தக் கெட்ட பழக்கத்திற்கு ஆளாகித் தங்கள் வாய்களைக் கெடுத்துக்கொள்ளாமல் நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும்.

யாராவது புகை பிடிப்பவர்கள் இருந்தால், அந்தக் கெட்ட பழக்கத்தை இனி விட்டுவிடுங்கள். புகை பிடிப்பது மூச்சைக் கெடுத்துவிடும். இது அருவருப்பான ஒரு பழக்கமாகும். பீடி, சிகரெட்டுப் பிடிப்பவர்கள் ரயிலில் பிரயாணம் செய்யும்போது பக்கத்தில் யார் இருக்கிறார்கள் என்று கூடக் கவனிப்பதில்லை. பக்கத்தில் இருக்கிறவர்கள், புகை பிடித்துப் பழகாதவர்களாய் இருப்பினும் அதைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதே இல்லை. அவர்கள் வாயிலிருந்து வரும் புகையின் நாற்றம் பக்கத்தில் உள்ளவர்களுக்கு வெறுப்புத் தருவதாய் இருந்தபோதிலும், அதைக் கவனியாமல் புகை பிடித்துக் கொண்டே இருப்பார்கள்.

பார்வைக்குச் சிகரெட் மிகச் சிறிய பொருளாய்த் தோன்றலாம். ஆனால் வாயில் நுழைந்து வெளிவரும் போது சிகரெட்டுப் புகை நச்சுத்தன்மையுள்ளதாக மாறிவிடுகிறது. இது மட்டுமல்ல; பீடி, சிகரெட்டு பிடிப்பவர்கள் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் எச்சில் வேறு துப்பி விடுகிறார்கள்.

புகை பிடிப்பது ஒருவனுடைய அறிவை மந்தமாக்கிவிடுகிறது. டாக்டரிடத்தில் இதைப் பற்றிக் கேட்பீர்களாயின், நல்ல டாக்டர்களாய் இருப்பவர்கள், வயிற்றினுள் வரும் பிளவை நோய்க்கு இது அடிப்படையான காரணமென்றும், பல சமயங்களில் தீராத கொடிய நோயை இது உண்டுபண்ணிவிடுகிறதென்றும் சொல்லுவார்கள்.

பீடி, சிகரெட்டு பிடிப்பது உணவு வகையைச் சேர்ந்ததன்று. அப்படியிருக்கும்போது அதற்கு அவசியமென்ன ? பிறர் தூண்டிவிட்டதைக் கேட்டு புகை பிடிக்க ஆரம்பிக்கும்போது, முதன் முதலில் கொஞ்சம் ஆனந்தமாக இருக்கும். இதைத் தவிர இதனால் வேறொரு நலனும் இல்லை.

நல்ல பிள்ளைகளாக இருக்க விரும்பினால், பெற்றோருக்கும் ஆசிரியர்களுக்கும் கீழ்ப்படிந்து நடக்க விரும்பினால், நீங்கள் பீடி, சிகரெட்டு பிடிக்கிற பழக்கத்தை நிறுத்திவிடுங்கள். இதனால் மீதப்படும் பணத்தை தயவுசெய்து எனக்கு அனுப்பிவையுங்கள்.

இந்தியாவில் கோடிக்கணக்கான மக்கள் பட்டினியால் வருந்து கிறார்கள். அவர்களுக்கு நீங்கள் மீதப்படுத்துகிற பணம் பயன்படும்.

# 14

# யாழ்ப்பாண மாணவர் காங்கிரஸ்

யாழ்ப்பாணத்தில் நடந்த மாணவர் காங்கிரஸ் கூட்டத்தில் காந்திஜி பேசியதாவது:

உங்களுடைய அழகான வரவேற்புரைக்காக எனது நன்றி யைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த அழகிய தீவிற்கு என்னை வரவழைத்த பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொண்டீர்கள். அதற்குரிய பெருமை நியாயமாக உங்களைச் சார்ந்ததே. ஒரு காரியத்தை ஏற்று நடத்தும்போது பெருமை வருவதுடன், இடையூறு நேர்ந்துவிட்டால் அவதூறும் வரும் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

போதுமான அளவிற்கு உங்கள் காங்கிரஸைப்பற்றி எனக்குத் தெரியாது. அது மட்டுமல்ல; இங்கு என் பிரசங் கத்தைக் கேட்க வந்திருப்பவர்கள் எத்தகைய கொள்கையுடைய வர்கள் என்பதையும் நான் அறியேன். எனவே, இன்று உங்க ளுக்கு விசேஷமான செய்தி எதையும் தெரிவிப்பது எனக்கு மிகவும் தரும சங்கடமானதாக இருக்கிறது. இருந்தபோதிலும், உங்கள் சிறப்புவாய்ந்த தலைவர் உங்கள் காங்கிரசின் லட்சியத் தைப்பற்றி என்னிடம் தெரிவித்தார். அந்த லட்சியங்கள் சம்பந்த மாய், என் மனத்தில் தோன்றிய சில எண்ணங்களைத் தெரிவிக்க முயல்கிறேன்.

அவர் சொல்லியதை நான் சரியாகப் புரிந்து கொண்டிருப் பேனாயின், உங்கள் முதல் லட்சியம் புராதனப் பண்பாட்டைப் புதுப்பித்துச் சீர்படுத்துவதேயாகும். அப்படியாயின், புராதனப் பண்பாடு எது என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். புராதனப் பண்பாட்டைப் புதுப்பிக்கும்போது, ஹிந்துக்கள், பௌத்தர், கிறிஸ்தவர் ஆகியோரும், வேறு சமயத்தைச் சார்ந்த வர்களும் உற்சாகமாக அதில் கலந்துகொள்ள இடம் இருக்க வேண்டும். புராதனப் பண்பாடு என்பதை, ஹிந்து மாணவர் களுக்கு மட்டும் உரியதாக ஒதுக்கிவைக்க மாட்டீர்கள் என்று எண்ணியே நான் இவ்விதம் சொல்லுகிறேன்.

பௌத்த, கிறிஸ்தவ, முகம்மதிய, ஹிந்து மதங்களைச் சார்ந்த சகல மாணவர்களுக்குமே இந்த மாணவர் காங்கிரசில் இடம் உண்டு என்று நினைக்கிறேன். இதன் அங்கத்தினர் பட்டியலில், இன்று முஸ்லிம் மாணவர்களும் பௌத்த மாணவர்களும் இருப்ப தாகத் தெரியவில்லை. எனவே, நான் கூறும் வாதம் இங்கு

பொருத்தமில்லை என்று சொல்ல முடியாது. ஏனெனில், உங்களது முடிவான லட்சியம் சுயராஜ்யம் அடைவதென்பதே. நீங்கள் அடையவிருக்கும் சுயராஜ்யம், இலங்கையின் ஒரு பகுதியான யாழ்ப்பாணத்தில் வசிக்கும் ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய இரு மதத்தினருக்கு மட்டும் உரியதாய் இராமல் இந்தத் தீவில் வசிப்பவர்கள் அனைவருக்குமே பொதுவானதாக இருக்கப் போகிறது. அப்படியாயின் பௌத்த, முஸ்லிம் மாணவர்களுக்கும் காங்கிரசில் இடமுண்டு என நான் குறிப்பிட்டது பொருத்தமே யாகும். பொருத்தமானதே என்றால், எத்தகைய புராதனப் பண்பாட்டை நாம் புதுப்பிக்க வேண்டும் என்ற கேள்வி மீண்டும் எழுகின்றது. நாம் புதுப்பிக்க விரும்பும் பண்பாடு சகல மதத்தினருக்கும் பொதுவானதாக அமைய வேண்டும். நாம் புதுப்பிக்க விரும்பும் பண்பாட்டில் சந்தேகத்திற்கு இடமின்றி ஹிந்துக்களின் தொடர்பே மிகுதியாகக் காணப்படலாம். இருப்பினும், ஹிந்துக்களுக்கு மட்டும் உரிய ஒரு பண்பாடாக அதைச் செய்து விடலாகாது. புராதனப் பண்பாட்டைப் புதுப்பிக்க எண்ண முடையவர்களில் பெரும்பாலோர் ஹிந்துக்களாய் இருப்பதாலேயே, புதுப்பிப்பது ஹிந்துக்களின் போக்கை அனுசரித்ததாக இருக்குமென்று சொன்னேன். ஹிந்துக்கள் வாழும் தேசத்தை, நீங்கள் உங்கள் தாய்நாடாக எண்ணிப் பெருமை கொள்ளுகிறீர்கள். அப்படிப் பெருமை கொண்டு மகிழ்ச்சியடைவது நியாயமானதே.

ஹிந்து சமயப் பண்பாட்டில், பௌத்த சமயப் பண்பாட்டுக்கும் நிச்சயம் இடம் உண்டு என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். புத்தர் இந்தியருக்குள் இந்தியராயும், ஹிந்துக்களுக்குள் ஹிந்துவாயும் விளங்கினார். அதனாலேதான் அப்படிச் சொல்ல எனக்கு தைரியம் உண்டாகிறது. ஹிந்து சமயத்தை வெறுத்து ஒதுக்கிவிட்டு புதிய சமயம் ஒன்றை நிறுவினார் என்ற நம்பிக்கைக்குச் சான்று அவருடைய வாழ்க்கையில் எதுவுமே இல்லை. ஏசுநாதரை ஆசியாக்காரர் என்று எண்ணிவிட்டால் எனது வேலை இன்னும் எளிதாகி விடுகிறது. முகமது நபியும் ஒரு ஆசியாக்காரர்தான். எனவே, நாம் இப்போது ஆசியப் பண்பாடு எது, அல்லது புராதன ஆசியப் பண்பாடு எது என்று ஆராய வேண்டியவர்களாக இருக்கிறோம்.

புராதனப் பண்பாட்டில் எவை என்றென்றும் நிலைத்திருக்கும் தகுதிவாய்ந்ததாக விளங்கினவோ, எவை மேம்பாடுடையனவோ, அவற்றையே புதுப்பிக்கும் விருப்பம் உங்களுக்கு இருக்குமாயின், உங்களது போக்கு மேலே கூறிய சமய நெறிகளுக்கு முரண்பட்டதாக இருக்கக்கூடாது. எனவே, மகத்தான இந்தச் சமய நெறிகளுக்குப் பொதுப்படையாக உள்ள ஒரு உண்மை எது என்பதை நாம் கண்டுபிடிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். எது மகத்தானது, எது சிறப்பானது என்று ஆராய்ந்து பார்க்கும்போது, உண்மையும் அகிம்சையும்தான் அத்தகையவை என்று எனக்குத் தோன்றுகின்றன. மகத்தான

இந்த மதங்களுக்கு எல்லாம் இவையே பொதுவான அளவு கோலாக விளங்குகின்றன. நீங்களும் ஆராய்ந்து பார்த்தால், இறுதியில், என்னைப் போலவே மகத்தான இந்த மதங்களுக்கெல்லாம் பொதுவானதாய் விளங்கும் உண்மையையும் அகிம்சையையும் கடைப்பிடிக்க ஆர்வம் கொள்ளுவீர்கள்.

ஒரு காலத்தில் ஹிந்து மதத்தின் அம்சங்களாக சில பழக்க வழக்கங்கள் இருந்து வந்திருக்கின்றன. அவற்றை நீங்களும் நானும் மறந்தே போயிருப்போம். மறுபடியும் அவற்றில் பலவற்றை நீங்கள் புதுப்பிக்க விரும்ப மாட்டீர்கள் என்று எண்ணுகிறேன்.

காலஞ் சென்ற நீதிபதி ரானடே கூறிய ஒரு பெரிய விஷயம், இப்போது என் நினைவிற்கு வருகிறது. புராதனப் பண்பாட்டின் மறுமலர்ச்சியைப் பற்றிப் பேச நேர்ந்த சமயத்தில், அவர் இவ் விஷயத்தைச் சொன்னார். கூட்டத்துக்கு வந்திருப்பவர்களில் எவராலுமே நமது புராதனப் பண்பாடு எது என்று திட்டமாகச் சொல்ல முடியாது என்றார். ஒரு பண்பாடு தனது புராதனத் தன்மையை எப்போது இழந்ததென்பதையும், நவீனத் தன்மையை எப்போது பெற்றதென்பதையும் கூற முடியாதென்றார். அது மட்டுமல்ல, புராதனம் என்பதற்காக அறிவுள்ள மனிதன் எதையும் ஏற்றுக்கொண்டு விடமாட்டான் என்றும் சொன்னார். புராதனப் பண்பாடாயினும் சரி, அல்லது நவீனப் பண்பாடாயினும் சரி, பகுத்தறிவிற்கும் அனுபவத்திற்கும் அது பொருத்தமாக இருக்கிறதா என்று ஆராய்ந்துபார்க்க வேண்டும் என்று சபையோரிடம் தெரிவித்தார்.

இந்தத் தீவில் மட்டுமல்ல, உலகம் முழுவதிலுமே பிற்போக்கு சக்திகள் நம்மைச் சுற்றி உலவுகின்றன. எனவே, இந்தத் தீவின் தலையெழுத்தை நிர்ணயிப்பவர்களான மாணவர்களுக்கு, அதாவது மாணவர்களின் காங்கிரஸிற்கு நான் ஒரு எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். புராதனப் பண்பாட்டைப் 'புதுப்பிக்கிறோம்' என்று சொல்லி, அநேகர் பழைய காலத்து மூட நம்பிக்கைகளையும் மூடப் பழக்கவழக்கங்களையும் சிறிதும் தயக்கமின்றிப் புதுப்பித்துவிடுகிறார்கள். இது, இந்தியாவில் எனக்கு ஏற்பட்ட சொந்த அனுபவத்தின் மூலம் கண்ட உண்மையாகும்.

தீண்டாமை என்னும் பயங்கரமான கொள்கையை நியாயம் என்று சொல்லி நிலைநிறுத்த, செத்துப்போன புராதன சாத்திரங்களுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் உயிர்ப்பிச்சை கொடுத்து உதவி, அவற்றைச் சான்றுகளாகக் கூறுகிறார்கள். தேவதாசி முறையையும் நியாயம் என்று கூறி நிலைநிறுத்த, இப்போது முயன்றுவருகிறார்கள் என்பதை உங்களில் சிலர் அறிவீர்கள்.

புராதனப் பண்பாட்டை புதுப்பிக்கிறோம் என்று சொல்லிக் கொண்டு, தவறான நெறிகளில் சென்றுவிடலாகாது என்பதற்காகவே, நான் இந்த எச்சரிக்கை செய்ய வேண்டியதாயிற்று.

புராதனப் பண்பாட்டில் நான் மிகுந்த பற்றுதல் உடையவன். புராதனப் பண்பாட்டில் எவை என்றென்றும் நிலைபெற்று விளங்கத் தகுதி வாய்ந்தனவாயும், எவை உயர்ந்தனவாயும் இருக்கின்றனவோ, அவற்றையெல்லாம் சொந்த வாழ்க்கையில் நடைமுறையில் அனுசரிக்க நான் பெரிதும் முயன்றிருக்கிறேன். இதிலிருந்தே இந்த எச்சரிக்கையின் உட்கருத்தை நீங்கள் உணரக் கூடும்.

புராதனப் பண்பாட்டில் புதைந்து கிடக்கும் பொக்கிஷங்களை நான் தேடியலைந்தபோது, புராதன ஹிந்து மதத்தில் எவை நிரந்தரமாக இருக்கத் தகுதி வாய்ந்தனவோ, அவை அனைத்தும் புத்தர், முகம்மது நபி, ஏசு நாதர், சோராஸ்டர் ஆகியோர் போதித்தவற்றிலும் இருப்பதைக் கண்டேன். இவ்வாறு நான் காண நேர்ந்தது ஒரு மதிப்பிட முடியாத பாக்கியமேயாகும். எனவே, இவற்றை வாழ்க்கையில் கடைப்பிடிப்பது எளிதாயிற்று. புராதனமான ஹிந்து சமயக்கொள்கை ஒன்று, முஸ்லிம், அல்லது கிறிஸ்தவ சகோதரர்களுக்கு வெறுப்பு ஊட்டக்கூடியதாய் இருப்பின், உடனே என் மனத்தில் ஒருவித பரபரப்பு உண்டாகி, அந்தக் கொள்கை புராதனமானதா என்பதில் சந்தேகம் தோன்றிவிடும். இந்த ஆராய்ச்சியின் பயனாக உண்மை, அகிம்சை இரண்டுமே சிறந்தவை, மிகவும் புராதனமானவை என்ற தவிர்க்க முடியாத ஒரு முடிவிற்கு நான் வந்துள்ளேன். அகிம்சை, உண்மை என்ற இரு துறைகளிலும் வேலை செய்ததன் பயனாக இன்னொன்றையும் நான் கண்டேன். நவீன வாழ்வுக்கு உகந்ததாக இராமல், அதற்கு மாறுபட்டு இருக்கும் பழைய சம்பிரதாயங்களையும் புதுப்பிக்கலாகாது என்பதே அந்த உண்மை. சில சம்பிரதாயங்கள் மிகவும் நல்லவையாக இருக்கலாம். அந்தக் காலத்து வாழ்க்கைக்கு ஒருக்கால் அவை முற்றும் அவசியமானவையாகவும் இருந்திருக்கலாம். ஆனால் தற்காலத் தேவைகளுக்கு அவை அடியோடு முரண்பட்டனவாக இருக்கக் கூடும்; உண்மைக்கும் அகிம்சைக்கும் மாறுபட்டிராமலும் இருத்தல் கூடும்.

தேவதாசி முறை, குடி, தீண்டாமை போன்ற பழக்கவழக்கங்களையும், கருணை வடிவானவர், அன்புள்ளவர், மன்னிக்கும் இயல்புடையவர் என்று நாம் சொல்லுகிற கடவுளுக்கு ஆடுகோழிகளைப் பலியிடல் போன்றவற்றையும் தயவு தாட்சண்யமின்றி நாம் ஒதுக்கித் தள்ளிவிடுவோமாயின், லட்சியத்தை அடைவதற்கு உங்களுக்கும் எனக்கும் திறந்துவிடப்பட்டிருக்கும் பாதை எவ்வளவு எளிதாகிவிடுகிறது என்பதைக் காண்பீர்கள். அறநெறி உணர்ச்சிக்கு இவை அனைத்தும் பொருந்தவில்லையாதலால், வருத்தமும் தயக்கமும் ஒரு சிறிதுமின்றி, இவற்றை நாம் விலக்கிவிடலாம்; இவை யாவும் அழித்தல் வேலைத்திட்டம். இதே போல ஆக்கல் அதாவது நிர்மாண வேலைத்திட்டமும் உண்டு. அழித்தல் வேலைத்திட்டத்தைப்போல், நிர்மாண வேலைத்திட்டமும்

முக்கியமானதாகும். அத்திட்டத்தின் முக்கியமான பகுதி ராட்டினத்தில் நூற்பதேயாகும். ராட்டினத்தில் கடவுளின் கைகள் வேலை செய்கின்றன. மனித சமுதாயத்தில் மிகவும் கீழான நிலையில் உள்ளவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் ராட்டினம் தருகிறது என்பதனாலேதான் நான் அப்படி எண்ணுகிறேன். அதனாலேதான் எந்த நேரத்தில் பேசலாம், எந்த நேரத்தில் பேசக்கூடாது என்பதைக் கவனியாமல், எப்போதுமே அதைப்பற்றிப் பேசுகிறேன், எண்ணுகிறேன், நூல் நூற்கிறேன், வணங்குகிறேன்.

உலகில், முக்கியமாக இந்தியாவில் பசியால் வாடிவதங்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு அருகில் நம்மைக் கொண்டு நிறுத்தி, தோட்டிக்குச் சமமாக நம்மையும் ஆக்கக்கூடியது வேறு ஏதாவது ஒன்று இருக்குமாயின், ராட்டினத்தைக் கைவிட்டு விட்டு அந்தக் கணமே அதைப் பற்றிக்கொள்ள நான் சித்தமாயிருக்கிறேன். வெட்கமில்லாது பிச்சைப் பாத்திரத்தை ஏந்தி, வீடு வீடாய்ச் சென்று, "உங்களுக்கு மனமிருந்தால் ஏதாவது பாத்திரத்தில் போடுங்கள்" என்று நான் பிச்சை கேட்டுத் திரிவதன் கருத்து யாது என்பதை நீங்கள் இதன் மூலம் அறிந்திருக்கக் கூடும்.

# 15

# அறநெறி வாழ்க்கை

கொழும்பில் உள்ள ஸர்ஹிரா கல்லூரி மாணவர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசிய விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

தென்னாப்பிரிக்காவில் நான் இன்பத்தில் திளைத்திருந்த நாட்களை நீங்கள் நினைப்பூட்டினீர்கள். எனது வாழ்க்கையிலே எனது நாட்டு முஸ்லிம் நண்பர்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டு வாழ்ந்த காலம் என்று அந்த நாட்களைச் சொல்லிவிடலாம். 1893–ஆம் வருட ஆரம்பத்தில், மிகவும் உயர்ந்த, பண்பட்ட முஸ்லிம்கள் சிலரோடு பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர்களிடையே எனக்குச் செல்வாக்கும் உண்டு. எனவே, உங்களோடு கலந்து பழகும் பொருட்டு, நீங்கள் என்னை அழைத்ததைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை.

நான் கொழும்புக்குக் கப்பலேறுவதற்கு முன், டில்லியிலுள்ள ஜமியா கல்லூரிப் பேராசிரியர்களோடும், மாணவர்களோடும் கலந்து பழகியதை, இந்தியச் செய்திப் பத்திரிகையைப் படிக்கும் பழக்கமுடையவர்கள் படித்திருப்பீர்கள். இன்னும் வேறுபல நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள வேண்டியிருப்பதால், பிரசங்கம் புரிவதற்குப் போதிய அவகாசமில்லை.

எனவே டில்லியிலுள்ள பையன்களுக்குச் சொன்னவற்றையே உங்களுக்கு நான் இங்கு சுருக்கமாகச் சொல்லப் போகிறேன்.

இந்தப் பெரிய கல்லூரியில் நீங்கள் படிக்கும் படிப்பெல்லாம், பரிசுத்தமான ஒழுக்கம் என்ற அஸ்திவாரத்தின் மீது உருவாக்கப்பட வேண்டும். இல்லையேல், அதனால் யாதொரு நலனும் இல்லை.

சில ஆண்டுகளுக்குள்ளேயே நீங்கள் அடைந்திருக்கும் அற்புதமான முன்னேற்றத்தையும், உணர்ச்சியோடும் உற்சாகத்தோடும் இங்கு காரியங்கள் நடைபெறுவதையும் நீங்கள் வெளியிடும் பத்திரிகைகளின் மூலமாக நான் தெரிந்து கொண்டேன். இவற்றைக் கண்டு என்னால் ஆச்சரியப்படாமல் இருக்க முடியவில்லை. அஸ்திவாரக் கல்நாட்டு வைபவத்தின் போது, கவர்னருக்கு வாசித்துக் கொடுத்த அறிக்கையை இப்போதுதான் படித்தேன். நல்லொழுக்கம் என்ற அஸ்திவாரக் கல்லை நாட்டி, அதன்மீது கற்கள் கற்களாக அடுக்கி, இந்தக் கட்டிடத்தை நாம் கட்டி வருவோமாயின், எவ்வளவு சிறந்ததாக இருக்கும் என்று நான் எண்ணினேன். அந்த அஸ்திவாரத்தின் மீது நாம் கட்டிடத்தைக் கட்டுவோமாயின், பிற்காலத்தில் இந்தக் கட்டிடத்தைப் பார்க்கும்போது நமக்கு உவகையும் பெருமிதமும் உண்டாகும். ஒழுக்கம் என்பது சுண்ணும்பினாலும் கல்லினாலும் கட்டக்கூடிய பொருளன்று. ஒழுக்கம் என்பதைச் சொந்த முயற்சியினாலேயே கட்டவேண்டும். பிறருடைய உதவி கொண்டு கட்டிவிடலாம் என்பது இயலாத காரியம். புத்தகங்களின் பக்கங்களிலிருந்து ஒழுக்கம் என்பதை கல்லூரித் தலைவரோ அல்லது பேராசிரியர்களோ எடுத்து வழங்க முடியாது.

ஹிந்து மதம், கிறிஸ்தவ மதம் ஆகிய இன்னும் உலகிலுள்ள வேறு பல மதங்களையும் நான் ஆராய்ச்சி செய்து வந்தேன். அப்போது வேறுபாடுகள் பல இருப்பினும், அடிப்படையில் சகல மதங்களிலும் ஒற்றுமை நிலவியதைக் கண்டேன். உண்மையும் குற்றமற்றதன்மையும் அனைத்துக்கும் பொதுவானதாக அமைந்து இருக்கின்றன. பலாத்காரம் செய்யாமை, கொலை செய்யாமை ஆகிய இரண்டையுமே நான் குற்றமற்ற தன்மை என்று சொல்லுகிறேன். உண்மையையும் குற்றமற்ற தன்மையையும் பாதுகாக்க நீங்கள் முன்வருவீர்களாயின், பலமான அஸ்திவாரத்தின் மீதே உங்கள் வாழ்க்கை நடைபெறுகிறது என்ற உணர்ச்சி உங்களுக்கு ஏற்படும்.

தாராளமாகப் பணமுடிப்பு அளித்ததற்காக உங்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். இந்தியாவில் கோடிக்கணக்கான மக்கள் பசியால் வருந்துகிறார்கள். அவர்களுக்கு வேலை தேடிக் கொடுக்கும் பொருட்டு இந்தத் தொகை பயன்படுத்தப்படும். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லோரிடையேயும் வேலையில்லாமல் தவிப்பவர்கள் உண்டு. இந்த நன்கொடையைத் தந்து, பசியால் வருந்தும் கோடிக்கணக்கான

மக்களுடன் நீங்கள் ஒருவாறு தொடர்பு கொண்டுவிட்டீர்கள் எனலாம். இதைக் கண்டு கடவுள் மகிழ்ச்சி அடைவார். நீங்கள் கொடுத்த இந்தத் தொகை எதற்காக உபயோகப்படுத்தப்படும் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளாவிட்டால், நீங்கள் கொண்டுள்ள தொடர்பு வலிமையற்ற தொடர்பாகவே ஆகிவிடும். என் உடல் மீது கிடக்கும் துணியைப் போன்ற துணிகளை உற்பத்தி செய்யும் பொருட்டே இந்தப் பணம் உபயோகிக்கப்படும், இதனால், வேலையில்லாது தவிக்கும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேலை கிடைக்கும். இப்படி உற்பத்தி செய்த துணிக்குக் கதர் என்று பெயர். இதை வாங்கி அணிபவர்களை நீங்கள் காண இயலாவிட்டால், இந்தப் பணத்தினால் எவ்வித பலனும் இல்லை.

நமது நாகரிக வாழ்க்கையையும், நாகரிக மோகத்தையும் திருப்தி செய்து கொள்ளுவதற்கு ஏற்ற காலம் இது. இந்தியாவில் வசிக்கும் கோடிக்கணக்கான மக்களுடன் ஒரு நிரந்தரமான தொடர்பை நீங்கள் வைத்துக் கொள்ள விரும்பினால், நீங்கள் இனி கதர் அணிவீர்கள் என்பது நிச்சயம்.

# மகாத்மாவின் மணிமொழிகள்

[காந்திஜி, தமது சுயசரிதையில் கல்வி சம்பந்த மாகக் குறிப்பிட்டுள்ள விவரங்கள் முந்திய பகுதி களில் சேர்க்கப்படவில்லை. சுவைமிக்க அவ் விவரங்கள் 'கல்வி' என்ற தலைப்புடன் வெளியாகும் இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுலன்றி, இது நிறைவு பெற்றதாகாது. எனவே, சுருக்கமாகத் தொகுக்கப்பட்டுள்ள அவ் விவரங்களை, அதாவது காந்திஜி கல்வியை யொட்டிக் கூறியுள்ள மணி மொழிகளை இப் பகுதியில் காணலாம்:]

## 1

*எனக்குச் சுமார் ஏழு வயது இருக்கலாம். ராஜஸ்தானிக மன்றத்தில் உறுப்பினராவதற்காக என் தந்தையார், போர்பந்தரி லிருந்து ராஜ்கோட்டுக்குச் சென்றார். அங்கே என்னை ஓர் ஆரம்பப் பாடசாலையில் சேர்த்தார்கள். அந்த நாட்களில் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த உபாத்தியாயர்களின் பெயர்கள் உட்பட எல்லா விவரங்களுமே எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கின்றன. போர்பந்தரில் இருந்ததைப் போன்றே இங்கும் என்னுடைய படிப்பைப்பற்றி முக்கியமாக குறிப்பிடக் கூடியது எதுவுமில்லை. சாதாரண நடுத்தர மாணவனாகவே நான் இருந்திருப்பேன். இந்தப் பள்ளிக்கூடத்திலிருந்து நகரை அடுத் திருந்த ஒரு பள்ளிக்கு என்னை அனுப்பினார்கள். பன்னிரண்டு வயதாகிவிடவே பிறகு உயர்தரப் பள்ளியில் சேர்த்தனர். இந்தக் குறுகிய காலத்தில் என் ஆசிரியர்களிடத்திலோ, என் பள்ளித் தோழர்களிடத்திலோ ஒரு பொய்யேனும் எப்பொழுதும் நான் சொன்னதாக எனக்கு ஞாபகமில்லை. எனக்குக் கூச்சம் அதிகம்; யாருடனும் பேசமாட்டேன். என் புத்தகங்களும் என் பாடங்களுமே எனக்கு உற்ற தோழர்கள். சரியான நேரத்தில் பள்ளிக்கூடத்துக்குப் போய்விடுவது, பள்ளிக்கூடம் விட்டதும் வீட்டுக்கு ஓடி வந்துவிடுவது-இதுவே எனது அன்றாடப் பழக்கம். யாருடனும் பேசவே பிடிக்காதாகையால் உண்மையில் ஓட்ட மாகத்தான் வீடு வந்து சேருவேன். இல்லாவிட்டால் வழியில் யாராவது என்னைக் கேலி செய்துவிடுவார்களோ என்று பயம்.*

உயர்தரப் பள்ளியில் நான் படித்த முதல் ஆண்டில் பரீட்சையின்போது நிகழ்ந்த சம்பவம் ஒன்று உண்டு. அது இங்கே குறிப்பிடத்தக்கது. கல்வி இலாகா இன்ஸ்பெக்டர் ஸ்ரீ கைலஸ் அப்பள்ளிக்கூடச் சோதனைக்காக வந்திருந்தார். எழுத்துக் கூட்டி எழுதும் பயிற்சிக்காக அவர் எங்களுக்கு ஐந்து சொற்களைக்கூறி அவற்றை எழுதச் சொன்னார். அதில் ஒரு சொல் 'கெட்டில்' (Kettle) என்பது. அதை நான் தவருக எழுதிவிட்டேன். உபாத்தியாயர் தம் கால் பூட்ஸ் முனையால் என் காலைச் சீண்டித் தூண்டினார். நான் புரிந்துகொள்ளவில்லை. நாங்கள் பக்கத்துப் பையனைப் பார்த்துக் 'காபி' அடிக்காமல் பார்த்துக் கொள்ளுவதற்காகவே ஆசிரியர் அங்கே இருக்கிறார் என்று நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆகையால், என் பக்கத்துப் பையனின் சிலேட்டைப் பார்த்து அப்பதத்தின் எழுத்துக்களைக் காப்பியடிக்க அவர் என்னைத் தூண்டுகிறார் என்பதை நான் அறியவில்லை. இதன் பலன் என்னவெனில், என்னைத் தவிர மற்ற எல்லாப் பிள்ளைகளும் அப்பதத்தைச் சரியாக எழுதியிருந்தனர். நான் ஒருவனே முட்டாளாக இருந்துவிட்டேன். இந்த முட்டாள்தனத்தை நான் உணரும்படி செய்வதற்கு ஆசிரியர் பிறகும் முயற்சி செய்தார். ஆனால், அதனாலும் பயனில்லை. 'காபி' அடிக்கும் வித்தையை நான் என்றுமே கற்றுக் கொள்ள முடியவில்லை.

என்றாலும், என் ஆசிரியரிடம் நான் கொண்டிருந்த மதிப்பை இச்சம்பவம் கொஞ்சமும் குறைத்துவிடவில்லை. பெரியவர்களிடம் இருக்கும் குறைகளைக் காண்பதில் குருடனாகவே இருந்துவிடுவது எனது சுபாவம். இதே ஆசிரியரின் வேறு பல குறைபாடுகளையும் பின்னால் அறியலானேன். என்றாலும், அவரிடம் நான் வைத்திருந்த மதிப்பு மாத்திரம் குறையவே இல்லை. ஏனெனில், பெரியவர்களின் கட்டளைகளை நிறைவேற்றிவிட்டு, அவர்களுடைய செய்கைகளைக் கவனிக்காமல் இருந்துவிட நான் கற்றுக்கொண்டிருந்தேன்.

அதே காலத்தில் நடந்த மற்றும் இரு சம்பவங்கள் என் நினைவில் இன்றும் அப்படியே இருந்து வருகின்றன. என் பாடப் புத்தகங்களைத் தவிர வேறு எதையும் படிப்பதில் எனக்குப் பொதுவாக விருப்பம் இருந்ததில்லை. அன்றாடம் பாடங்களைச் சரிவரப் படித்துவிட வேண்டும். ஏனெனில், சரியாகப் படிக்காததற்காக ஆசிரியரின் கண்டன தண்டனைகளுக்கு ஆளாவது எனக்குப் பிடிக்காது என்பதுடன் அவரை ஏமாற்றவும் நான் விரும்பவில்லை. ஆகையால், பாடங்களைக் கட்டாயம் படித்துவிடுவேன். ஆனால், அவற்றில் அடிக்கடி என் புத்தி செல்லாது. இவ்வாறு பாடங்களையே சரியாக படிக்காமல் இருக்கும்போது மேற்கொண்டு வேறு புத்தகங்களைப் படிப்பது என்பதற்கே இடமில்லை. ஆனால் என் தந்தையார் வாங்கி யிருந்த 'சிரவணனின்

பிதிர் பக்தி நாடகம்' (இது சிரவணன் பெற்ரோரிடம் கொண்டிருந்த பக்தியைப் பற்றிய நாடகம்) என்ற புத்தகம் என் கண்ணில் எப்படியோ பட்டது. தீவிரமான சிரத்தையுடன் அப் புத்தகத்தைப் படித்தேன். அந்தச் சமயத்தில் எங்கள் ஊருக்குப் படங்களைக் காட்டுவோரும் வந்திருந்தார்கள். நான் பார்த்த படங்களில் ஒன்று கண்ணிழந்த தன்னுடைய தாய் தந்தையரைச் சிரவணன் கூடையில் வைத்துக் காவடியாகத் தோளில் சுமந்து கொண்டு போனதைக் காட்டுவது. அப்புத்தகமும் இப்படமும் என் மனத்தில் அழியாத முத்திரை போட்டுவிட்டன. 'நீ பின் பற்றுவதற்கு இது ஒரு சரியான உதாரணம்' என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். சிரவணன் இறந்ததால் புத்திர சோகத்தோடு பெற்ருேர் வருந்தி பிரலாபித்தது என் நினைவில் இன்னும் அப்படியே இருந்து வருகிறது. சோகம் மிகுந்த அந்த கீதம் என் உள்ளத்தை உருக்கிவிட்டது. என் தந்தை, எனக்காக வாங்கியிருந்த வாத்தியத்தில் அந்தக் கீதத்தை வாசித்தேன்.

மற்ளுெரு நாடக சம்பந்தமாகவும் இதே போன்ற ஒரு சம்பவம் உண்டு. ஏறக்குறைய அதே சமயத்தில், ஒரு நாடகக் குழுவினர் நடத்தி வந்த ஒரு நாடகத்தைப் பார்க்க என் தந்தையாரின் அனுமதி பெற்றேன். 'அரிச்சந்திரன்' என்ற இந் நாடகம், என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது. எத்தனை தரம் அதைப் பார்த்தாலும் எனக்குச் சலிப்பு ஏற்படாது. ஆனால், அதைப் போய்ப் பார்க்க எத்தனை தடவைதான் என்னை அனுமதிப் பார்கள்? அது சதா என் நினைவில் இருந்து வந்தது. எண்ணற்ற சமயங்களில் எனக்குள் நானே அரிச்சந்திரனுக நடித்திருப்பேன். 'அரிச்சந்திரனைப் போல எல்லோரும் ஏன் சத்திய சீலர்கள் ஆகக் கூடாது?' என்று அல்லும் பகலும் என்னை நானே கேட்டுக் கொள்ளுவேன். சத்தியத்தைக் கடைப்பிடிப்பதும், அதற்காக அரிச்சந்திரன் அனுபவித்த துன்பங்களையெல்லாம் அனுபவிப்பது மாகிய லட்சியமே ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கியது. அரிச்சந்திரனின் கதை, உண்மையிலேயே நடந்த ஒன்று என்றே நான் நம்பிவிட்டேன். அதை நினைத்துப் பல சமயங்களில் அழுதும் விடுவேன். அரிச்சந்திரன் சரித்திர புருஷனுக இருந்திருக்க முடியாது என்று என் பகுத்தறிவு இன்று எனக்குக் கூறுகிறது. என்னைப் பொறுத்தவரையில் அரிச்சந்திரனும் சிரவணனும் வாழ்வின் உண்மைகள். அந்த நாடகங்களைத் திரும்ப இன்று நான் படித்தாலும், முன்போலவே என் மனம் உருகிவிடும் என்பது நிச்சயம்.

## 2

எனக்கு மணமானபோது நான் உயர்நிலைப் பள்ளியில் படித்துக்கொண்டிருந்தேன் என்று முன்பே கூறியிருக்கிறேன். நாங்கள் அண்ணன் தம்பிமார் மூன்று பேரும் ஒரே பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருந்தோம். மூத்த அண்ணன்

